# முதல் பதிப்பின் முன்னுரை

**வா**ணிபம், வீரம் இரண்டாலும் ஆதிமுதல் சிறப்புற்ற நாடுகள் உலகத்தில் மூன்று. தமிழ்நாடு, சீனா, இங்கிலாந்து. இம்மூன்று நாடுகள் வாணிபத்தாலும் சிறப்புற்றன. வீரச் செயல்களாலும் புகழுற்றன.

ரோமாபுரி சாம்ராஜ்யம் வீரத்தில் சிறந்து விளங்கியது. பொருள் உற்பத்தியிலோ, வர்த்தகப் பெருக்கிலோ அது சிறப்புறவில்லை. தமிழகம், சீனா ஆகிய நாடுகளிலிருந்து பொருள்களை வரவழைத்துக் கொண்டது. தமிழகதத்தின் மிளகு அவர்கள் உணவுக்கு ருசியளித்தது. தமிழகத்தின் முத்து அவர்கள் மேனிக்கு அழகளித்தது. தமிழகத்தின் மெல்லிய பருத்தியாடை ரோமாபுரி மாதரின் மானங்காத்தது. இந்தக் கடைசிப் பணியில் இணைந்து கொண்டது சீனத்தின் இணையிலாப் பட்டு.

ரோமாபுரியினரும், இஸ்லாமியரும் பெரும் போர்களைப் புரிந்தார்கள். பல நாடுகளைத் தோற்கடித்தார்கள். தோல்வியுற்ற நாடுகளிலிருந்து பொருள்களைக் கொணர்ந்து தங்கள் வாழ்க்கையை வளப்படுத்திக் கொண்டார்கள். சிறப்புப் பொருள்களின் உற்பத்தியில் அவர்கள் பெரும் சுழியாகவே இருந்தார்கள்.

தமிழகமும், சீனாவும் வாணிபத்தில் வெற்றி கொண்டன. மேலை நாடுகளும் இடையேயிருந்த கீழை நாடுகளும் பெரும் வீர சரித்திரங்களைக் கடலிலும் தரையிலும் எழுதின. ஆதியிலிருந்து குப்ளேகான் வரை பெரும் வல்லரசுகள் சீனாவின் வீரசரித்திரத்தை எழுதின. அந்த நாட்டுக்குச் சென்ற பாதையே பட்டு வழி (Silk route) என்று அழைக்கப்பெற்றதென்றால் அதன் வாணிபச் சிறப்பைச் சொல்லவும் வேண்டுமா?

தமிழகத்தின் வீரத்தைப் பற்றியும், கடற்படைச் சிறப்பைப்பற்றியும் 'யவன ராணி', 'கடல் புறா' ஆகிய இரண்டு நாவல்களில் விவரமாக எழுதிவிட்டேன். நாவலந்தீவின் காற்சிலம்பின் முத்துப்பரல் போல் விளங்கும் இச்சிறு நாடு, வீரத்தில் எத்துணை சிறந்தது என்பதை அந்த இரு நாவல்களிலும் விவரித்தேன். ஆனால் தமிழகத்தின் முத்தைப்பற்றி எழுதவேண்டும் என்று நீண்ட நாளாக எனக்கிருந்த அவா அந்த இரண்டு நாவல்களில் பூர்த்தி பெறவில்லை. அதைப் பூர்த்தி செய்துகொள்ள 'ராஜ முத்திரையை' எழுதினேன்.

நான் எழுதிய நாவல்களுக்குச் சரித்திரக் குறிப்புகளைத் தேடியபோதெல்லாம், முத்தின் சிறப்பு கண்முன் தோன்றிக் கொண்டேயிருந்தது. தமிழகத்தின் சரித்திரத்தை எழுதிய ஒவ்வொரு பேராசிரியரும், இந்த நாட்டுக்கு வந்துபோன ஒவ்வொரு வெளிநாட்டு வாணிபரும், யாத்ரீகரும் இதைக் குறிப்பிடத் தவறவில்லை. அதுவும் பாண்டியநாடு முத்தால் சிறந்ததென்றும், முத்தால் வளர்ந்ததென்றும் அவர்கள் ஒவ்வொருவரும் குறிப்பிட்டிருக்கிறார்கள். முத்து எப்படி எடுக்கப்பட்டது, எப்படிப் பாதுகாக்கப்பட்டது, எப்படி உபயோகிக்கப்பட்டது என்பதை மார்க்கோபோலோ, ஏலியன் முதலிய வெளிநாட்டவர் விவரமாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

ஏலியன் முத்து எடுப்பை ஒரு கதை போலச் சொல்கிறார்: "யூக்ரடைடீஸ் ஆண்ட காலத்தில் ஸோரஸ் (சோழர்) என்ற அரச வம்சத்தினர் ஆண்ட ஒரு நகரம் இன்னும் இருக்கிறது. அந்த நகர மக்கள் பெரும் வலைகளை எடுத்துக் கொண்டு, கடலுக்குச் சென்று முத்து எடுப்பார்கள். முத்துச் சிப்பிகள் கூட்டம் கூட்டமாக நீந்தி வருமென்றும், தேனீக்களுக்கு ராணி இருப்பதுபோல, இந்த முத்து வர்க்கத்துக்கும் ஒரு தலைவி இருப்பதாகவும் தெரிகிறது. தலைவியின் சிப்பி மற்ற சிப்பிகளைவிடவும் பெரிதாகவும் அதிக வர்ண ஜாலங்கள் உள்ளதாகவும் இருக்கும்."



மார்க்கோபோலோவின் விவரணம் இன்னும் அதிகமாகவும் விளக்கமாகவும் இருக்கிறது. அவர் நேரில் இங்கு விஜயம் செய்து, இங்கு தங்கியிருந்தவராகையால் பல விஷயங்களை நேரில் பார்த்துச் சொல்லியிருக்கிறார். முத்தைப் பிடிக்க மன்னன் தலைமையில் முத்தெடுப்பாளர் செல்லும் விமரிசை, சுமார் நூறு படகுகள் ஏக காலத்தில் செல்லும் காட்சி, முத்தெடுக்கும் முறை இவை மிக விவரமாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றன, மார்க்கோ போலோவால். "முத்தெடுப்பதற்கு முன்பு மந்திரவாதிகள் படகுகளில் சென்று மந்திரமோதுவார்கள். அந்த மந்திரத்தின் விளைவாக மனிதரை விழுங்கும் பெரும் சுறா மீன்கள் அந்தப் பகுதியில் வாரா" என்ற பிரத்யேக விவரத்தையும் மார்க்கோபோலாவிடமிருந்துதான் அறிகிறோம்.

இதையெல்லாம் படித்ததும் அந்த முத்தை மூலக் கருவாக வைத்து ஒரு கதை எழுத நீண்ட நாளாக ஆசையிருந்தது. அந்த ஆசையை வின்செண்ட் ஸ்மித் தூண்டினார். "கி.பி. முதல் நூற்றாண்டிலேயே மதுரை அல்லது கூடல் பாண்டிய நாட்டுத் தலைநகராயிருந்தாலும், அதற்கும் முன்பு பண்டையத் தமிழகத்தில் கொற்கையே தென்னிந்திய நாகரிகத்தின் தொட்டிலாக இருந்தது. பாண்டிய மன்னனின் ஆட்சிபீடம் மதுரையில் இருந்த தென்றாலும், பாண்டிய நாட்டின் பட்டத்து இளவரசன் கொற்கையில்தான் வசித்தான். ஆகவே கொற்கை பாண்டிய நாட்டின் இரண்டாவது தலைநகராக இருந்தது. கொற்கையின் வாணிபத்தைச் சரிபார்த்து நடத்த அங்கு இளவரசன் ஆட்சி புரிந்தான். அவனுக்கெனத் தனி ராஜ முத்திரை இருந்தது. கோடரியும் யானையும் இணைந்த முத்திரை அது." என்ற விவரத்தையும் கொற்கை முத்தைப் பற்றி அவர் கூறியுள்ள விஷயங்களையும் படித்ததும் அது பற்றி ஒருநாவல் புனைய முடிவு செய்தேன்.

இந்த முடிவுக்குத் தமிழக சரித்திர வியாசர் உயர்திரு நீலகண்ட சாஸ்திரியாரின் நூல்கள் வழக்கம்போல் உதவின.

அவருடைய "History of the Pandian Kingdom" என்ற நூலிலும், "A History of South India" என்ற நூலிலும், அவர் முதலாம் ஜடாவர்மன் சுந்தரபாண்டியனைப் பற்றிக் கூறியுள்ள தகவல்கள், அவன் பெரும் சாம்ராஜ்யத்தைக் குறுகிய காலத்தில் ஸ்தாபித்த சிறப்பு இவை 'குமுதத்துக்கு அடுத்த கதை முத்தைப் பற்றித்தான்.' என்பதை நிர்ணயித்து விட்டன.

ஆகையால் பிறந்தது 'ராஜ முத்திரை'. கொற்கையின் பாண்டியப் பட்டத்து இளவரசனின் முத்திரையைச் சுமார் இரண்டரை ஆண்டுகளாகத் தமிழ் மக்கள் மனத்தில் பொறிக்க முயன்றிருக்கிறேன். என் மனத்தில் பதிந்த அந்த இன்ப முத்திரை மற்றவர் மனங்களிலும் பதிய வேண்டு மென்ற ஆவலால் இந்த 'ராஜமுத்திரை' உதயமாயிற்று.

மற்றையக் கதைகளைப்போலவே, இந்தக் கதையையும் பிரசுரித்து உதவிய 'குமுதம்' ஆசிரியருக்கு எனது நன்றி என்றுமிருக்கிறது.

இந்த நூலை நானே பதிப்பித்திருக்கிறேன், "இலக்கியப் பொழில்" என்ற பிரசுராலய முத்திரையில். இப்பொழுது எனக்கு மனச்சாந்தி அதிகமாகிவிட்டதால் முத்திரையை 'சாந்தி பிரசுரம்' என்று மாற்றி இருக்கிறேன். "உனக்கு ஏன் புத்தகம் போடும் தொல்லை? உன்னால் விற்க முடியுமா" என்று பலர் எச்சரித்தார்கள். எச்சரிப்புகளை நான் ஏற்கவில்லை. தமிழ் மக்கள் எனது பக்கம் இருக்கிறார்கள் என்ற அகந்தையோ, எதிலும் எனக்குள்ள துணிச்சலோ, எதிலும் நான் காட்டும் பிடிவாதமோ காரணம் எதுவேண்டுமானாலும் வைத்துக்கொள்ளுங்கள். பதிப்புச் சொந்தப் பதிப்பாக வெளிவந்திருக்கிறது.

நீரில் இறங்கிவிட்டேன். நீந்துவேனே தவிர மூழ்க மாட்டேன் என்ற நம்பிக்கை திடமாக இருக்கிறது. தமிழ் மக்கள் இதுவரை அளித்துள்ள ஆதரவுதான் நம்பிக்கைக்குக் காரணம்.



இந்த பெருநூலை மிகக் குறுகிய காலத்தில் முழு வேகத்துடன் அச்சிட்ட அச்சகத்தாருக்கு எனது நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஏப்ரல் 1970 — சாண்டில்யன்

சென்னை

## இந்நூலை உருவாக்குவதற்கு உதவிய வரலாற்று நூல்களின் பட்டியல்


1. PANDIYAN KINGDOM
   Sri K.A. Neelakanta Sastry, M.A.
2. A HISTORY OF SOUTH INDIA
   Sri K.A. Neelakanta Sastry, M.A.
3. FOREIGN NOTICES OF SOUTH INDIA
   Sri K.A. Neelakanta Sastry, M.A.
4. THE EARLY HISTORY OF SOUTH INDIA
   Mr. Vincent A. Smith, M.A. (Dubl.), M.R.A.S. etc.
5. PRE-PALLAVAN TAMIL INDEX
   Dr. N. Subramanian, M.A., Ph.D.
6. TRAVANCORE MANUAL
   Sri. V. Nagam Aiya, (Hist) S.
7. TAMIL LEXICON
8. கோயிலொழுகு
   ஸ்ரீ எம்பெருமானாரின் ஸ்ரீரங்கம் கோயில் நிர்வாக நூல்
9. பாண்டியர் வரலாறு
   சதாசிவ பண்டாரத்தார்
10. நாநார்த்த தீபிகை – ஒரு சொல் பல பொருள்
    திருநெல்வேலிக் கவிராயர் முத்துசாமிப் பிள்ளை

## ஆசிரியரின் பிற நூல்கள்

ராஜபேரிகை
ராஜதிலகம்
கடல் புறா I
கடல் புறா II
கடல் புறா III
ஜல தீபம் I
ஜல தீபம் II
ஜல தீபம் III
யவனராணி I
யவனராணி II
கன்னிமாடம்
மன்னன் மகள்
சேரன் செல்வி
கவர்ந்த கண்கள்
மலைவாசல்
ஜீவபூமி
மஞ்சள் ஆறு
மூங்கில் கோட்டை
மோகினி வனம்
இளையராணி
நீள்விழி
பல்லவ திலகம்
நாக தீபம்
விலைராணி
பாண்டியன் பவனி
சந்திரமதி
வசந்தகாலம்
உதய பானு
அவனி சுந்தரி
மங்கல தேவி
நிலமங்கை
ஜல மோகினி
கடல் ராணி
மலையரசி
மோகனச் சிலை
ராஜயோகம்
ராணா ஹமீர்
நீலவல்லி
நாகதேவி
ராணியின் கனவு
புரட்சிப் பெண்
செண்பகத் தோட்டம்
மதுமலர்
நங்கூரம்
மனமோகம்
மோகினி வனம்
இந்திர குமாரி
ராஜ்யஸ்ரீ

### அத்தியாயம் 1

# இளநங்கை

இளவேனிற் காலத்தின் இளமதி இரண்டே வாரங்களில் முழுமை பெற்று, கொற்கை மாநகரத்தின் முத்தங்காடியை மிகுந்த குளிர்ச்சியுடன் நோக்கினாலும், அவன் உள்ளத்தில் குளிர்ச்சியோ மகிழ்ச்சியோ இருக்கமுடியாதென்றும் முகத்திலுள்ள களங்கம் உள்ளத்திலும் கண்டிப்பாய் உறைந்திருக்குமென்றும், அந்த அங்காடியின் இடைவழியில் நிதானமாக நடந்துகொண்டே வானத்தை நோக்கி, கடைவீதியையும் நோக்கிய இளநங்கை திடமாக நம்பினாள். வானத்திலோடிய அந்த முழுமதி என்னதான் தண்ணொளி பெற்றிருந்தாலும் கொற்கையின் முத்தொளியின் எல்லையருகில்கூட அவன் வரமுடியாதாகையால், அவன் எப்படிப் பொறாமையின்றி, அந்த அங்காடியை உண்மைக் குளிர்ச்சியுடன் நோக்கமுடியும் என்று தன்னைக் கேட்டுக்கொண்ட இளநங்கை, முழுமதியின் கள்ளத்தனத்தைப் புரிந்துகொண்டுவிட்ட காரணத்தினாலோ என்னவோ கடையிதழ்களில் சற்று இளநகையையும் படரவிட்டுக் கொண்டான். இயற்கையளித்த வாய்ப்பால் மேலிருந்து இந்த மண்ணுலகத்தைப் பார்க்கும் வசதி பெற்ற வான்மதி, மேற்கே யவன நாட்டிலிருந்து கிழக்கே சீன நாடு வரை தினமொருமுறை பார்க்கிறானாகையால் அந்த நாடுகளில் எல்லாம் தன்னை நாடுபவர்களைவிடக் கொற்கை முத்தைத் தேடுபவர்கள் தான் அதிகம் என்பதை உணர்ந்திருப்பானென்பதும், அப்படி உணர்ந்தவன் கொற்கையின் முத்தங்காடியை முழு உள்ளத்துடன் பார்க்கமுடியாதென்பதும் சந்தேகமறத் தெரிந்திருந்தது இளநங்கைக்கு.

முழுமதி முழு உள்ளத்துடன்தான் அந்த மாநகரைப் பார்க்க முடியாதே தவிர, வேறு ஒருவித விபரீத மகிழ்ச்சி மட்டும் அவனுக்கிருக்குமென்று அந்த ஏந்திழை நம்பினாள். அநேக ஆண்டுகளுக்கு முன்னர், அந்த மாநகரத்தில் கடல் வாசலிலே மரக்கலங்கள் பலவும் ஆடி நின்று, உலகமே திரண்டு வாணிபம் நடத்திய காட்சியையும், பாண்டிய நாட்டு இளவரசன் தலைநகராக அது துலங்கிய மாட்சியையும், பின்பு பொருநையாற்றில் முகத்துவாரம் மண்ணடித்துப் போனதும், அந்த சிறப்பிலும் சிறிது மண்ணடித்து விட்டதையும் இணைத்துப் பார்த்து, அந்த முழுமதி மெல்ல உள்ளுக்குள் நகைத்துக் கொள்வானென்றும், பெரியவர்கள் மெலிந்தால் குதூகலிக்கும் சிற்றறிவாளர்களைப் போல, கொற்கை சளைத்தது கண்டு அவனும் மகிழ்ச்சியடைவானென்றும் எண்ணியதால் இளநங்கையின் வதனத்தில் சிறிது கோபத்தின் சாயையும் வளர்ந்தது. 'கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே' என்பதைப் போல, துறைமுக ஸ்திதியை இழந்து, நதியின் கீழோட்டத்தில் தள்ளியிருந்த காயல் பட்டணத்தின் தயவை எதிர்பார்த்திருந்த அந்தச் சமயத்திலும் கொற்கையின் வனப்பும், அங்காடிச் சிறப்பும் அதிகம் குறைந்துவிடவில்லையென நினைத்த இளநங்கை, ஆற்றில் மண்ணடித்து மரக்கலங்கள் உட்புகாவிட்டாலும், காயலில் இறங்கியவர்கள் கொற்கைக்கு வரத் தவறுவதில்லையென்ற காரணத்தால், எந்தப் புதுப்பட்டணம் வந்தாலும் இந்தப் பழைய மாநகரின் சக்தியை முழுவதும் உறிஞ்சமுடியாது என்று தனக்குள் சொல்லியும் கொண்டாள்.

பொருநையாற்றின் கரைமீதே வைக்கப்பட்டிருந்த முத்தங்காடியின் இடைவெளிகள் ஆங்காங்கு இருந்ததால், அந்த இடைவெளிகளிலொன்றில் வந்த இளநங்கை, சந்திர வெளிச்சத்தில் பளபளத்து அருவிபோல் ஓரத்திலும் நடுவிலும் ஓடிய அப்புண்ணிய ஆற்றுநீரிலும் கண்களை ஓட்டினாள். இளவேனிற் காலத்தில் சற்றே வற்றத் தொடங்கி விட்ட அந்த ஆறு மணவறையில் முதல்



நாளன்று கணவனை நெருங்கும் மணமகளைப் போலவே, வெட்கத்துடன் தனது நீராடையை மெல்லமெல்ல விலக்கி விட்டதால், மணல் திட்டுக்கள் ஆங்காங்கு புலனாகத் தொடங்கியதைக் கண்ட இளநங்கை அந்த அற்புதக் காட்சியில் தன் மனதைப் பறிகொடுத்தாள். தாரையின் கற்பைக் கெடுத்த கள்வன் வானக் கூரையிலிருக்கும்போதே பொருநை நீராடையை நீக்கிவிட்டாளே என்ற நினைப்பாலோ என்னவோ, சட்டென்று தனது முகத்தைத் திருப்பி அங்காடியைப் பார்த்துக்கொண்டே நடக்கத் தொடங்கினாள் அந்த அழகி.

இரவு இரண்டாம் சாமத்தையும் தாண்டிவிட்ட சமயம் அது. இருப்பினும் கொற்கை மாநகர் உறங்க மறுத்து இரவைப் பகலைப் போலவே அடித்துக் கொண்டிருந்தது. பொருநையின் கரையோரத்திலே பற்பல சதுரங்களாகவும் வளைவுகளாகவும் அமைக்கப்பட்டிருந்த அந்த முத்தங்காடியில், இரவு ஏறிவிட்ட அந்த நேரத்திலும், கும்பல் தாங்க முடியாததாயிருந்ததால் பல இடங்களில் ஒருவரையொருவர் இடித்துக்கொண்டு செல்ல வேண்டியதாயிருந்தது. அதன் பெயர் முத்தங்காடியே தவிர, அதில் முத்து மட்டுமல்ல விற்பனைக்கு வந்திருந்தது. மாணிக்கமும் மரகதமும், வைரமும் வைடூரியமும், வண்ண மலர்களும், மெல்லிய ஆடைகளும், அனைத்துமே பற்பலவிடங்களில் விற்பனையாகிக் கொண்டிருந்தன. விற்பனைப் பொருள்கள் மட்டுமல்ல பலதரப்பட்டுக் கிடந்தது, கடை வீதியில் உலாவிய மாந்தரும் பலதரப்பட்டுக் காட்சியளித்தார்கள். வைரம் போன்ற வெள்ளை யவனர்கள், மாணிக்கங்களைப் போலவே சிவந்து கிடந்த நாகர்கள், ஏதோ ஓரிரு கடைகளில் மட்டும் அபூர்வமாகக் கிடைத்த கருமாணிக்கம் போன்ற எகிப்தியர், கோமேதகத்தின் மஞ்சளை எப்படியோ சருமத்தில் பெற்றுவிட்ட சோனகர் என்ற சீன நாட்டவர், தங்கள் கடலில் கிடைக்கும் கருமாணிக்கம், முத்து, கோமேதகம், மலைகளில் கிடைக்கும் வைரம் ஆகிய பலவித மணிகளைப் போலவே பலவித வர்ணங்களைப் பெற்ற

பாரத நாட்டவர், இப்படிப் பலபடி கலந்து கிடந்த அந்த அங்காடிக் கூட்டம் உலகத்தின் பிரதிபிம்பம் போலத் திகழ்ந்தது.

கொற்கையின் அந்த முத்தங்காடியில் அதிக வாணிபத்தின் காரணமாகக் கூச்சல் பலமாகவும், நானாவிதமாகவும் இருந்தது. சீரிய குரலில் களத்துப் பேசிய யவனர்களும், கரகரத்த மந்த ஸ்தாயியில் பேசிய எகிப்தியரும், அராபியரும், கிள்ளை மொழியில் ஏதேதோ கேட்டுக் கொண்டிருந்த யவன மாதர்களும், அடக்கத்தாலும் நாணத்தாலும் கடைக்காரன் காதுக்கே சரியாகக் கேட்காதபடி விலைபேசி ஒருவரையொருவர் பார்த்துச் சிரித்துக்கொண்ட தமிழகப் பெண்களும், திருட்டு எதுவும் போகாதபடி பார்த்துக் கொள்ளச் சதா அப்படியும் இப்படியும் பாதக்குறடுகளும் காவல் ஆயுதங்களும் ஒலிக்க உலவிக்கொண்டிருந்த யவன பாண்டிய வீரர்களும், அனைவருமாகச் சேர்ந்து எழுப்பிய நானாவித ஒலிகள் ஆங்காங்கு எழுந்து, ஏதேதோ பலதரப்பட்ட முரட்டு வாத்தியங்களும் மென்மை இசைக் கருவிகளும் கலந்து சப்திப்பதைப் போன்ற பிரமையை ஏற்படுத்தின.

அந்தப் பிரமை இளநங்கையையும் ஆட்கொண்டிருக்க வேண்டும். பிரமை மட்டுமல்ல - பெருமையும் அவளை ஆட்கொண்டிருக்க வேண்டும். பாண்டிய நாட்டில் எது சீரழிந்தாலும் அறம் மட்டும் சீரழியாது என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள் அவள். அதற்கு அந்த அங்காடியே அத்தாட்சியென்பதில் சந்தேகமில்லையென்று நினைக்கவும் செய்தாள். 'இராமன் அரசாண்ட அயோத்தியில் எந்த நேரத்திலும் நன்றாக நகைகள் அணிந்த யௌவனப் பெண்கள் நடமாட முடியும்' என்று புராணம் சொல்லுவோர் சொல்லக் கேட்டிருந்த இளநங்கை, 'அந்த நகரை நான் பார்த்ததில்லை; ஆனால் கொற்கையைப் பார்க்கிறேன். இந்த அங்காடியில் நள்ளிரவு தாண்டிவிட்ட இந்தச் சமயத்தில் எத்தனை யௌவனப் பெண்கள், என்னென்ன நகைகளை அணிந்து உலாவு



கிறார்கள்! எத்தனை பயமற்ற, அறம் மிகுந்த மாநகர் இது! அயோத்தி இப்படித்தான் அந்தக் காலத்தில் இருந்திருக்க வேண்டும்!' என்று பலபலபடி தனக்குள் சிந்தித்துப் பெருமிதத்துடன் கடைவீதியிலே நடந்தாள் அவள். அந்தச் சமயத்தில் வெண்ணிற மேகமானது சந்திரனை மறைத்ததைப் பார்த்த இளநங்கை, பொருநையின் நீராடை நீக்கிய காட்சியைக் கண்டால், அறம் வளர்த்த பாண்டிய நாட்டில் தனது பதினான்கு கலைகளையும் அடியோடு ஒழித்துவிடும் தண்டனை கிடைக்குமென்று திகில்பட்டுத் தான் சந்திரன் அந்தத் திரையால் தனது வதனத்தை மூடிக்கொள்கிறானென்று நினைத்தாள்.

நள்ளிரவு தாண்டியும், அங்கு நிரம்பிய கூட்டம் கலைவதற்கான அத்தாட்சி எதுவும் காணாதது மட்டுமல்ல, மேலும் மேலும் மக்கள் வந்துகொண்டிருக்கும் நிலையே ஏற்பட்டுக் கொண்டிருந்தது. காயல் துறைமுகத்திலிருந்து மென்மேலும் பண்டங்கள் கொண்டுவரும் வண்டிகளின் சக்கரங்கள் உருளும் சப்தம் தொடர்ச்சியாகக் கேட்டுக் கொண்டிருந்ததன்றி, கிட்டத்தட்ட கூப்பிடு தூரத்துக்கப்பால் நின்ற வண்டிகளிலிருந்து பண்டங்களிறக்கும் பணிமக்கள் போட்ட கூச்சலும், அவர்கள் வேகநடை போட்டு வரும் போது கிளப்பிய 'உம்,' 'உம்' என்ற ஆயாச ஒலிகளும் அதிகப்பட்டுக் கொண்டிருந்தன. கடை வீதியிலிருந்த யவன தீபங்களுக்குக் கடைக்காரர்கள் மேலும் மேலும் எண்ணெய் விட்டுத் தூண்டிக் கொண்டிருந்ததாலும், ஆங்காங்கு பலவிடங்களில் பந்தங்கள் வேல்களுக்கிடையில் கட்டப் பட்டிருந்ததாலும், அவற்றுக்கு எண்ணெய் ஊற்றுவோரும் பக்கத்தில் எண்ணெய்க் கலங்களுடன் நின்று கடற்பஞ்சில் எண்ணெய் தோய்த்துத் தோய்த்து எடுத்துப் பிழிந்ததாலும், ஒளி அதிகமாகிக் கொண்டிருந்ததேயொழியக் குறைய வில்லை.

இந்த நிலையைக் கண்ட இளநங்கை, சாதாரணமாக மூன்றாம் ஜாமத்தில் மூடப்படும் கடைவீதி அன்று நான்காம் ஜாமம் வரை கண்டிப்பாய் நீடிக்குமென்பதைப்

புரிந்து கொண்டாள். ஏதோ புது மரக்கலங்கள் நாலைந்து வந்திருந்தால்தான் நள்ளிரவுக்குப் பின்பும் கூட்டம் வந்து கொண்டிருக்குமென்பதை அவள் உணர்ந்திருந்தாளாத லால், சீக்கிரம் தான் வாங்க வந்திருந்த இரண்டொரு பொருள்களை வாங்கிக் கொண்டு இல்லம் திரும்பத் தீர்மானித்து, முத்து விற்கும் கடைகளை மட்டுமே பார்வை யிட்டு நடந்தாள். எத்தனை நேரம் அங்காடியில் இருந்தாலும் அவளுக்குச் சலிப்பில்லாதது மட்டுமல்ல, மகிழ்ச்சியும் கூடத்தான். கொற்கை மாநகரையும் அந்த அங்காடியையும் அத்தனை தூரம் நேசித்தாள் அவள்.

இப்படிப் பலவகை எண்ணங்களுடனும் பெருமை யுடனும் மகிழ்ச்சிநடை நடந்த இளநங்கை, முத்தங்காடியின் மூன்று வளைவுகளைத் தாண்டியதும் பெரிதாக இருந்த கடையொன்றில் நின்று, அங்கிருந்த முத்துக் கூடைகளைக் கவனித்தாள். நீண்ட நேரம் அக்கூடையிலிருந்த முத்துக் களைப் பிடிப்பிடியாக எடுத்துத் துழாவித் துழாவிப் பார்த்தவள், தன்னைப் பல பெண்கள் இருபுறத்திலும் நெருக்கியும் தன் கைகளுக்குக் குறுக்கே கைகளை நீட்டிப் போட்டியிட்டும் முத்துக்களைப் பொறுக்கியும்கூட, அந்த இடித்தலுக்கும், இம்சைக்கும் சிறிதும் சளைக்காமல் முத்துக் கூடைகளைத் துருவித் துருவிப் பார்த்தாள். அவள் அப்படி முத்துக்களையெல்லாம் கிளறுவதைப் பார்த்த அங்காடிச் சொந்தக்காரியான பெண்ணும், "என்னம்மா! என்ன வேண்டும் உனக்கு? ஏன் எல்லாவற்றையும் கிளறுகிறாய்?" என்று வினவினாள் பொறுமை இழந்து.

இளநங்கை சற்றே கனிந்த முகத்துடன் அங்காடிப் பெண்ணை ஏறெடுத்து நோக்கி, "ஒற்றை முத்து வேண்டும்" என்று கேட்டாள்.

"இவற்றிலொன்றை எடுத்துக் கொள்வதுதானே?" என்று வினவினாள் அங்காடிப் பெண்.

"இவையெல்லாம் சிறுமீன் வயிற்று முத்துக்கள். இவை இரண்டாகவும் மூன்றாகவும் விளைபவை. ஒரே வயிற்றில்



ஒரே முத்தாக விளைந்த பெருமுத்து வேண்டும்" என்றாள் இளநங்கை.

அங்காடிப் பெண் அவளை வியப்புடன் ஏறெடுத்து நோக்கினாள். "அதை உன்னால் வாங்க முடியுமா?" என்றும் வினவினாள் சந்தேகத்துடன்.

இளநங்கை அதற்கும் பதில் நேரடியாகச் சொல்ல வில்லை. "இருந்தால் காட்டு பார்ப்போம்" என்றாள்.

அங்காடிப் பெண் பின்னாலிருந்த திரைக்குள் சென்று ஒரு முத்துச் சரத்தை எடுத்துவந்தாள். "இருப்பது இது தான். இதை வாங்க உன்னால் முடியாது. அரச குலத்தாரால் தான் முடியும். எதற்கும் இந்தா பார்த்து விட்டுப் போ" என்று இகழ்ச்சியுடன் கூறி, அந்தச் சரத்தை இளநங்கையிடம் நீட்டினாள்.

இளநங்கை அதைக் கையில் வாங்கி, சற்றே பின்னால் திரும்பி விளக்கொளியில் அதைப் பார்த்தாள். முத்துச் சரம், விளக்கொளியில் பளபளத்து அவள் கண்களுக்குப் பிரமை ஊட்டியதால், அதையே பார்த்துக் கொண்டிருந்தாள், பல விநாடிகள். பார்வை முத்துச் சரத்துடன் நின்றிருந்தால் இந்தக் கதை நிகழ அவசியம் இருந்திராது. அவள் கண்கள் முத்துச் சரத்துக்கு அப்பாலும் சென்றது. நேர் எதிர் சாரியிலிருந்த ஓர் உருவம் தன்னை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்ததைக் கண்டாள். அவ்வளவுதான். இளநங்கையின் கண்களில் விவரிக்க இயலாத அச்சம் சூழ்ந்தது. 'இந்தா முத்துமாலை' என்று சரேலென அங்காடிப் பெண்ணிடம் மாலையைக் கொடுத்துவிட்டு, வெகு துரிதமாகக் கும்பலில் மறைந்து நடந்தாள்.

அந்த உருவம் சற்று முறுவலித்தது. பிறகு அந்தக் கடைக்கு வந்தது. அடுத்த சில விநாடிகளில் இளநங்கை சென்ற திக்கை ஆராய்ந்தது. தூரத்தே கும்பலைத் தாண்டித் துரித நடைபோட்டுச் சென்றுகொண்டிருந்தாள் இளநங்கை. அந்த உருவத்தின் உதடுகளில் இளநகை அரும்பியது. அவளைத் தன் திருஷ்டியை விட்டு விலகாமல் வைத்துக் கொண்டே அவளைப் பின்தொடரவும் முற்பட்டது.

### அத்தியாயம் 2

# இளநங்கை நீரோட்டம்! இளங்காளை கண்ணோட்டம்!

முத்து வாங்க முயன்று, அந்த முயற்சிக்கு முடிவு காணாமல் கையில் வாங்கிய முத்துச் சரத்தையும் முத்துக் கடைப்பெண்ணிடமே கொடுத்துவிட்டு, எதிர்சாரியிலிருந்து தன்னை உற்று நோக்கிய உருவத்திடமிருந்து தப்ப, முத்தங்காடிக் கும்பலில் மறைந்து முழுவேகத்துடன் நடந்து விட்ட இளநங்கை, அங்காடி வளைவுகளில் பலவிடங்களில் புகுந்தும், திரும்பியும் சென்று, கடைசியாகப் பொருநை யாற்றின் பெருங்கரை மீதும் ஏறி, அவ்வாற்றுக்குள் இறங்கவும் செய்தாள். இருபெருங்கரைகளுக்கிடையே மணல் திட்டுகளையும், சமமணற்பரப்பையும் ஆங்காங்கு காட்டிக்கொண்டும், இருகரைகளின் ஓரத்திலும் நட்டநடுவிலும் மூன்றாகப் பிரிந்து நீரோட்டத்தைச் செலுத்திக் கொண்டும், சந்திர வெளிச்சத்தில் பளபளத்த பொருநை யாறு, அழகையெல்லாம் அள்ளிக் கொட்டிக்கொண்டிருந்தது. கடலை அணைய ஒரு காத தூரமேயிருந்த காரணத்தால், பொருநையாற்றின் நீரோட்டமும் கணவனைக் கண்டதும் வெட்க நடைபோடும் இள மனைவிமார்களின் மந்தகதியைப் போலத் தாறுமாறாகவும் இருந்ததால், நீர்க்கால்கள் சில இடங்களில் வளைந்தும் சில இடங்களில் நேராகவும் ஓடிக் கொண்டிருந்தன. முழுமதி வெளிச்சத்தில் தெரிந்த மணற்பரப்பும், முத்தங்காடியின் முத்துக்களின் இயல்பைப் பெற்றது போலும், ஒரு வேளை இந்த மணலைத்தான் பொருநை வாரிக்கொண்டு போய்க் கடலில் சேர்த்து முத்தாக அடிக்கிறானோ என்பது



போலும், இந்த முத்துச் சிர்வரிசையைக் கொண்டுசென்றும், திருப்தியில்லாததால்தான் கடலரசன் பொருநையின் மீது அலைகளைக் கோபத்துடன் அவள் கொண்டுவந்த சீரைத் திருப்பி, மணலை வாரியடித்து அவள் வேகத்தைத் தடைசெய்து விட்டானோ என நினைக்கத் தூண்டுவது போலுமிருந்தது, பொருநையின் அந்த இராக்காலத் தோற்றம். கணவன் சீற்றப்படும்போது ஏதும் செய்ய வகையறியாது திணறி முகம் கறுக்கும் பிறந்த வீட்டு உறவினர்களைப் போல, முத்தங்காடியிலிருந்த கரைக்கு எதிர்க்கரையிலிருந்த அடர்த்தியான தோப்பு இருட்டித்துக் கிடந்ததன்றி, அக்கரையிலிருந்த படித்துறையும் இரு சிறு மண்டபங்களும் கூடச் சந்திர வெளிச்சத்தில் அகப்பட்டுக் கொள்ளாமல் பரிதாபமாகக் காட்சியளித்தன. அந்தத் தோப்பையும் தாண்டி மேட்டுப்பாங்கான நிலத்தில் தெரிந்த கொற்கையின் கோட்டை மட்டும் நிலவில் வெளேரெனத் தெரிந்ததல்லாமல், அதன் இரண்டு மகுடங்களில் ஒளிவிட்ட இரு பெரும் தீபஜ்வாலைகள் செக்கச் செவேலென்று ஒளி வீசி, பொருநையை அனாதரவு செய்யும் கடலரசனை நோக்கித் தீவிழி விழிப்பது போலவும், அதர்மம் எதுவாயினும், செய்வது யாராயிருந்தாலும், கொற்கை அரசில் அனுமதிக்கப்பட மாட்டாது என வலியுறுத்துவது போலவும் இருந்தது.

பொருநையின் கரையில் வேகத்துடன் சரசரவென்று இறங்கிய இளநங்கை மட்டும் அன்று சாதாரண மன உணர்ச்சியுடனிருந்தால், மேற்சொன்னபடியெல்லாம் அவளும் கற்பனை செய்து பார்த்திருப்பாள். கரைமீது நாழிகைக் கணக்கில் நின்று எதிரே விரிந்த காட்சியில் கண்ணையும் மனத்தையும் பறிகொடுத்துமிருப்பாள். ஆனால் அவளுடைய இள இதயத்தில் அச்சம் புகுந்திருந்ததால், புத்தியில் கற்பனைக்கு இடமில்லா திருந்தது. கற்பனைக்குத்தான் இடமில்லையே தவிர, கடிதில் இருப்பிடத்தை அடையவேண்டுமென்ற அவசரத்துக்கு இடமிருந்ததால், கால்களின் வேகம் கடுமையாயிருந்தது.

வெகு வேகமாக ஆற்றின் மேட்டிலேறி இறங்கி, ஓரமாக ஓடிக்கொண்டிருந்த நீர் அருகே வந்ததும், சேலையை இரு கைகளாலும் தூக்கிப் பிடித்துக் கொண்டு இறங்கி, அந்த நீர் மாலையைத் தாண்டி நடந்தாள். இரண்டு ஓரங்களிலும் சரி, நட்ட நடுவிலும் சரி, நீரோட்டத்தின் ஆழம் முழங் காலளவே யென்பதை அவள் உணர்ந்தே யிருந்தா ளாதலால், அலட்சியமாக அளவுக்கு மேற்படாமல் வெகு பக்குவமாகச் சேலையை எடுத்துப் பிடித்துக் கொண்டு ஆற்று மணலில் நடந்தாள். கரையோரத்து நீர் அவள் காலில் நனைந்ததால் நட்டாற்று நீர் மாலைக்குச் செல்லு முன்பு இடையிலிருந்த வெண்மணல் உட்காலில் மட்டுமின்றிப் பாத விளிம்பிலும் பரவி அவள் அழகிய பாதங்களுக்கு முத்துச் சரங்களைப் போட்டது. அவ்வப் பொழுது எழும்பி, தோப்பிலிருந்து வந்த காற்றில் விர்ரென்று மணல் முத்துக்கள் கிளம்பி மேற்காலில் மட்டுமின்றிக் கைகளிலும் சுள்ளென்று தெறித்தன. சாதாரண சமயத்தில் அந்தக் காற்றளித்த இம்சைகூட இளநங்கைக்கு இன்பமாகவே இருந்திருக்கும். ஆனால் அந்த இரவில் பயந்து இல்லமோடும் அந்த வேளையில் அம் மணல் வீச்சு மட்டுமல்ல. காலில் ஒட்டிக்கொண்ட மணலுங்கூட பெரும் வேதனையையே தந்தன. அகம் புறம் இரண்டிலும் வேதனையுடன் மணலில் வெகு வேகமாக ஓடிய இளநங்கை, ஆற்றின் மத்தியிலிருந்த நீரோட்டத்துக்கு வந்ததும் மீண்டும் சேலையைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு முத்தங்காடியிலிருந்த கரையைத் திரும்பியொரு முறை நோக்கினாள். ஒரு வினாடி அவள் மனம் குதூகலித்தது. எதிர்க்கரையில் அந்த உருவத்தைக் காணாததால் சாந்திப் பெருமூச்சொன்றும் அவளிடமிருந்து வெளிவந்தது. ஆனால் அடுத்த வினாடி குதூகலமும், சாந்தியும் பெரும் பீதிக்கே இடம் கொடுத்தன. அந்தக்கரை மீதேறிய அந்த உருவம் வெகு நிதானமாக ஆற்றில் இறங்கவும் தொடங்கியது.

இளநங்கையின் இதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. சேலையை ஒரு கை தூக்கிப் பிடித்துக்



கொண்டிருக்க இன்னொரு கை அவள் இடையைத் தடவிப் பார்த்தது. வழக்கமாகத் தற்காப்புக்காக அவள் இடையில் செருகிக் கிடக்கும் சிறு கத்திகூட அங்கு இல்லை. அன்று முத்து வாங்குவதிலும், முத்தங்காடியின் பயமற்ற சூழ்நிலை யிலும் மனத்தை ஆழவிட்டிருந்த காரணத்தால்தான் தனது கத்தியைக் கொண்டுவரத் தவறிவிட்டதை உணர்ந்த இளநங்கை, தனது அறிவீனத்தை நினைந்து தன்னையே கண்டித்துக் கொண்டாள். அவள் உதடுகள் கோபத்தாலும், அச்சத்தாலும் லேசாகத் துடித்தன. ஒரு விநாடி பிறகு வெகு வேகமாக நீரில் இறங்கி, அந்த நீரோட்டத்தையும் தாண்டித் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே துரிதமாக ஓடினாள் அவள். அப்படி ஓடியபோதும் அவளுக்கு ஒரு விஷயம் மட்டும் புரியாத புதிராயிருந்தது.

பின்னால் தன்னைத் தொடர்ந்து வந்த இளங் காளைக்குத் தன்னைப் பிடிப்பது நோக்கமாயிருந்தால் அதற்கு தேவையான துரிதத்தை அவன் காட்டாததையும், வெகு நிதானமாகவே அவன் நீரில் இறங்கி நடந்ததையும், நீரைத் தாண்டி மணற் பரப்புக்கு வந்த பின்னும் ஒரே சீராகவும் சாவதானமாகவும் நடந்து வந்ததையும் கவனித்த இளநங்கை, 'என்னைப் பிடிப்பது நோக்கமில்லா விட்டால் இவன் ஏன் என்னைப் பின்பற்றி வருகிறான்?' என்று தன்னைத் தானே கேட்டுக்கொண்டு, அதற்கு விடை காணாமல் தவித்தாள். நின்று விடை காணத் துணிவு மில்லாததால், விடுவிடு எனக் கடுகிச் செல்லுவதிலேயே நாட்டத்தைக் காட்டினாள் அவள்.

இத்தனைக்கும் இளநங்கை அத்தனை அஞ்சும் சுபாவம் உள்ளவளும் அல்ல. அவள் துணிவைப் பற்றிக் கொற்கையில் அறியாதவர்கள் யாருமேயில்லை. கொற்கைக் கோட்டைக் காவலன் மகள் இளநங்கைக்கும், அச்சத்துக் கும் எந்தவிதச் சம்பந்தமும் கிடையாதென்பதைக் கொற்கை நகர மக்கள் சந்தேகத்துக்கிடமின்றி அறிந்திருந்தார்கள். அவள் துணையேதுமின்றியும் தந்தையிடம்கூடச் சொல்லாமலும் இராக்காலங்களில் கடைவீதிக்குச்

செல்வதும், காலங்கடந்து கோட்டைக்குத் திரும்புவதும் நகர மாந்தர் பலர் மட்டுமன்றிக் கோட்டைக் காவலரும் அறிந்தேயிருந்தார்கள்.

இரண்டொரு சமயங்களில் அவளிடம் விளையாட முயன்ற வீரவாலிபர் இருவரில் ஒருவனுக்குக் காலில் கத்திக் காயமும் இன்னொருவனுக்கு மண்டையில் சிலம்பக் காயமும் ஏற்பட்டதைக் கண்டபின்பு அவளிடம் யாரும் அனாவசிய விளையாட்டு எதையும் வைத்துக்கொள்வது கிடையாதென்பதும் அம்மாநகர் அறிந்த உண்மை. இந்தப் பெண்ணை ஏன் தகப்பன் கண்டபடி இராக்காலங்களில் உலாவ விடுகிறானென்று ஆரம்பத்தில் கேட்டவர்கள், இந்த இரு சம்பவங்களுக்குப் பிறகு அதைக் கேட்பதையும் நிறுத்திக் கொண்டார்கள். இவள் அழகிய பெண்ணுருவத்தில் வந்த ஆண் மகன்தானென்பதும் கோட்டைக் காவலனுக்கு ஆண் மகனில்லாத குறையை இளநங்கை கண்டிப்பாய்த் தீர்த்து விட்டாளென்பதும் கோட்டையிலிருந்த வீரர்கள் கருத்தாகவுமிருந்தது; மாநகர மக்கள் கருத்தாகவுமிருந்தது.

இப்படி அச்சத்தை லவலேசமும் அறியாத இளநங்கையின் இதயத்தில் இளவேனிற் காலத்தின் இளமதி தோன்றத் துவங்கிய நாளிலிருந்து அச்சம் உதயமானதன்றி, அந்த அச்சமும் சந்திரன் வளர்ச்சியைப் போலவே தினசரி வளரவும் துவங்கியது. அந்த அச்சத்தைத் துவக்கியவனும் அவளை அன்று தொடர்ந்து வந்த இளங்காளைதான். அதை வளர்த்தவனும் அவனேதான். இளமதி கண்ணுக்குத் தெரிந்த மூன்றாம் பிறையன்றுதான் அந்த வாலிபனும் அவள் கண்ணுக்குத் தெரிந்தான். சந்திரனுக்கு அவள் கற்பித்த அத்தனை மாகபெற்ற நடத்தையை அவனுக்கும் கற்பித்தாள் அவள், சந்திரன் எப்படி நீராடை நீக்கிய பொருநையைக் கள்ளக் கண்ணுடன் பார்த்தானோ, அப்படியே அந்த வாலிபனும் தன்னை அன்று பார்த்ததாகத் தோன்றியது.



இக் கதை துவங்கும் இரவில், எந்தப் படித்துறையை நோக்கி இளநங்கை ஓடிக்கொண்டிருந்தாளோ அதே படித்துறையைத் தாக்கியோடிய நீரில் அவள் அன்று துளைந்து கொணடிருந்தாள். பௌர்ணமியன்று வடிந்த அளவுக்கு பொருநை பதினொரு நாட்களுக்கு முன்பு வடியாததால் ஆற்றோரங்களில் கொஞ்சம் அதிகமாகவே நீராழம் இருந்ததன் விளைவாகச் சற்று நீந்தவும் முடிந்தது. இளநங்கையால் அப்படி மூழ்கி நீந்தித் தலைநிமிர்ந்த ஒரு சமயத்தில் தான் இளங்காளையொருவன் படித்துறையிலிருந்து சிறிது தூரத்திலிருந்த மண்டபத்தில் உட்கார்ந்து தன்னைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருப்பதை உணர்ந்தாள். அவள் முதலில் அவன் தன்னைத்தான் பார்க்கிறானா அல்லது வேறு யாரையாவது பார்க்கிறானா என்று சந்தேகப்பட்ட இளநங்கை மீண்டும் மூழ்கி நீந்திக் கரைக்கு வந்து படித்துறையில் உட்கார்ந்து கொண்டு மண்டபத்தை நோக்கினாள். அப்பொழுதும் அவன் அந்த இடத்தைவிட்டு அகலவுமில்லை; அவளை விட்டுக் கண்ணை எடுக்கவுமில்லை.

அந்தக் காலை நேரத்தில், அந்தப் படித்துறையில் அவள் மட்டும் தனிப்பட நீராடவில்லை. கோட்டையிலிருந்து வந்திருந்த பல பெண்களும் நீராடிக் கொண்டுதானிருந்தார்கள். அப்படியிருக்க, அவன் தன்னைத் தான் பார்க்கிறானென்று நினைப்பது பிரமையாகக் கூட இருக்கலாமென்று நினைத்தாள் அவள். அவன் ஏன் பொருநையின் அந்தக் காலையழகைப் பருகியிருக்கக் கூடாது என்றுகூட நினைத்தாள் முதலில். அன்று பொருநையின் அழகு அத்தனை சிறப்பாயிருந்தது.

அகத்தியர் தவங்கிடந்து, தமிழ்வடித்த பொதியமலையில் தோன்றி, பொருநையென்றும், தாமிரபரணியென்றும் பெயர் பெற்று கொடி போன்ற துடியிடை துவள மலைப் பாறைகளில் இறங்கி ஓடிவந்து, வளர்ந்து மரக்கலங்களையும் தாங்கும் மகோன்னத ஆழமும் அழகும் பெற்றதன்றி முத்தங்காடியைக் கரையில் தாங்கும் கீர்த்தியும் பெற்ற

அந்த மகாநதி, அன்று காலை வெய்யிலில் செந்நிறத்துடன் பளபளத்துத் தனது தாமிரபரணியென்ற சிறப்புப் பெயருக்குச் சான்று கூறிக்கொண்டிருந்தது, பொதியமலையில் இருந்து அது அடித்துக் கொண்டு வந்த சில காட்டுப் பூக்களும் பச்சிலைகளும் நீரோட்டத்தில் மிதந்தும் சுழன்றும் அதில் நீராடுவோருக்கு நோய் அண்டக் காரணம் இல்லையென்பதை நிரூபித்துக்கொண்டிருந்தன. அதற்கு வேறு நிரூபணம் தேவையானால் செழுமைகொண்ட மேனிகளுடன் படித்துறையில் நீராடிய பாவையர் அதை அளிக்கத் தவறவில்லை. தாமிரபரணி அவர்கள் மேனியையும் நன்றாகத் துலக்கிய தாமிரம் போலும் தாமிரம் கலந்த வெண்கலம் போலும் அடித்திருந்தது. அந்தச் சிவப்பையும் வெண்கல வெளுப்பையும் திருஷ்டியிலிருந்து மறைக்கவோ என்னவோ படித்துறைப் பாவையர் மேற்படியில் மஞ்சளரைத்துப் பூசிக் கொண்டிருந்தார்கள்.

அந்த பொதுவெளியில் நீராடிய அந்த மங்கையர்கள் தான் எத்தனை கெட்டிக்காரர்கள்! இடுப்பளவு நீரில் நின்று எப்படி ஒரு கால் மாற்றி ஒரு காலை எடுத்து மேற்படி வைத்து மஞ்சள் பூசிக்கொண்டார்கள்; எப்படி இடுப்பளவு ஆழத்தில் இறங்கியதும் சேலையின் ஒரு பகுதியை எடுத்துக் கழுத்தை வளைத்துச் சுற்றிக்கொண்டு, மீதிச் சேலையை நீரில் நெகிழ விட்டு அழகெதுவும் வெளித் துலங்காமல் சமாளித்துக்கொண்டு ஆடை தோய்த்து நீராடவும் செய்தார்கள்! அமுத கலசங்களை மூடி மறைக்கும் ஆற்றல் நூலில் இழையும் சேலைக்கும் காரில் பிறக்கும் நீருக்கும் மட்டுமன்றி நாணத்துக்கும் உண்டு என்பதை என்ன அற்புதமாகக் காட்டினார்கள் அந்தத் தமிழகத்து அழகிகள். அவர்கள் கழுத்துக்கும் முதுகுக்கும்தான் மஞ்சளை லாவகமாகப் பூசி விட்டார்கள். ஆனால் மார்புக்கு எப்படிப் பூசுவார்கள். அடேடே! கையில் கரையாத கெட்டி மஞ்சளுடன் நீருக்குள் கழுத்தளவு மறைந்துவிட்டது இதற்குத்தானா?



இப்படிப் பரமபக்குவமாக அழகை மறைத்தும் சிரித்துப் பேசியும் ஜாடையாகப் பரஸ்பரம் பார்த்துக் கொண்டும் நீராடிய அந்த பாவையரை ஆதரவுடன் அணைத்துச் சென்ற பொருநையுங்கூடப் படித்துறை கரைகளில் தாக்கித் தாக்கிக் களுக் களுக்கென்று சிரித்தாள். காலையில் படித்துறைக் கரைமீதிருந்த தோப்பிலிருந்து சிவ்வென்று ஆகாயத்தில் பறந்த பட்சி ஜாலங்களும், மேலிருந்து அவர்கள் அழகைப் பார்த்தன.

இத்தகைய பொருநையின் மகோன்னதக் காட்சியில் அந்த வாலிபன் தன்னைத்தான் பார்க்கிறானென்று தான் ஏன் நினைக்க வேண்டுமென்று முதலில் எண்ணித் தான் பார்த்தாள் இளநங்கை. ஆனால் ஏதோ மனத்தில் சந்தேகம் விழுந்துவிட்டால் மஞ்சள் பூசக் காலை எடுத்துப் படியில் வைத்தபோதும், நெற்றியிலும் கழுத்திலும் மஞ்சளணிய இரு கைகளையும் சற்றே தூக்கியபோதுங் கூடத் திரும்பத் திரும்ப இரு முறை அவனை நோக்கினாள். அந்த இரு முறையும் அவன் அவளை ஊன்றிப்பார்த்துக் கொண்டே உட்கார்ந்திருந்ததைக் கவனித்ததால் சீக்கிரம் நீராட்டத்தை முடித்துக் கொண்டு கோட்டையை நோக்கி மற்றப் பெண்களுடன் புறப்பட்டாள். சற்று தூரம் சென்றதும் திரும்பவும் ஒரு முறை மண்டபத்தை நோக்கினாள். அவன் எழுந்து அவளைப் பார்த்துக் கொண்டு நின்றிருந்தான். ஆனால் தொடர முற்படவில்லை.

மறுநாள் அவள் படித்துறைக்கு இதனாலேயே நீராட வரவில்லை. அதற்கு மறுநாள் வந்தபோதும் பழைய நிலைதான். அவள் வந்து படியிலிறங்கி நீரில் முழ்குவது வரையில் மண்டபம் காலியாகக் கிடந்தது. சேலை நனைந்து அவள் கலந்த வாசப்பொடியைப் பூச முற்பட்டபோது அவன் அதே இடத்தில் அமர்ந்திருந்தான். அன்றும் கால்களை எதிரே நீட்டி, பாதி மடித்துக் கைகளால் சுற்றி அவற்றைக் கட்டிக் கொண்டு அலட்சியமாக அமர்ந்து, அவளையே இமைகொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான். அன்று அவளுக்கு முதல் நாள் இருந்த நாணத்துக்குப் பதில் கோபமே ஏற்பட்டதால் அவனை அலட்சியம் செய்து

துளைந்து துளைந்து நீந்தி நீந்தி நீரில் விளையாடினாள். நல்ல வாளைமீன் போலவே வழவழத்து வளைந்து கொடுத்த அவள் சரீரமும் கால்களும் அந்தக் காலை நேர நீரில் பளபளத்தன. நீச்சலில் நீருக்குள் மாறி மாறி எழுந்த இரு கால்களும், உருண்டு சுழன்ற இடையும், மேல் பகுதிகளும், மலர் மாலைகள் போலும், சிறு தங்கக் கட்டி போலும் மலர்ச் செண்டுகள் போலும் யார் மனத்தையும் அள்ளும்படியான பிரமையை ஊட்டின. அப்படிச் சுழன்று காலடித்து நீந்தி விளையாடி மல்லாந்த நேரங்களில், இடையிடையே இளநங்கை அந்த இளங்காளை மீது மலர்க்கண்களை விசினாள்; மலர்க்கண்களைத்தான் விசினாளா? அல்லது மலர்க்கணைகளை வீசினாளா என்பது விளங்கவில்லை அவனுக்கு. வீசியது எதுவாயினும் சரி. அவன் அதே இடத்தில் அதே நிலையில் அமர்ந்திருந்தான். அன்று அவள் கோபத்துடன் கரையேறிக் கோட்டைக்குச் சென்றாள். ஆனால் கோட்டை வரையில்தான் கோபம் இருந்தது. பிறகு மெல்ல ஓர் அச்சம் இதயத்தில் புகுந்தது. அடுத்து பத்து நாட்களில் அச்சம் பலமடங்கு அதிகரித்து விட்டது.

அந்த வாலிபன் கேவலம் காமுகனல்ல என்பதைப் புரிந்துகொண்டாள் அவள். அவன் பார்வை திடமாயிருந்தது. உற்று மட்டும் பார்த்துக்கொண்டிருந்தானே யொழிய ஒரு நாளும் அவளருகே வரவோ பேசவோ முயலவில்லை அவன். மண்டபத்தில் உட்கார்ந்து உற்றுப் பார்த்துக் கொண்டு இருந்ததைத் தவிர வேறு குற்றமெதையும் செய்யவில்லை. பெண்களைத் துன்புறுத்துவதற்குத் தண்டனை இருந்தது பாண்டி நாட்டில். ஆனால் பார்ப்பதற்குத் தண்டனை இல்லை. பார்ப்பதிலும் கெடுதல் இருக்கத்தான் செய்கிறது. எப்படிப் பார்க்கிறான், ஏன் பார்க்கிறான் என்பதிலும் விஷயம் இருக்கிறது. ஆனால் பார்வையின் கருத்துக்கு நிரூபணம் வேண்டுமே. அது சுலபமா?

ஆகையால்தான் இளநங்கைக்கு அவன் போக்கு பெரும் அச்சத்தையும் சங்கடத்தையும் விளைவித்தது.



பெண்கள் குளிப்பதைப் பார்ப்பது பண்பாடல்லவென்பது அறிவீனனுக்குக் கூடத் தெரியும். அப்படியிருக்கப் பெண்களின் நீராட்டத் துறையில் தினம் உட்கார்ந்து உற்று உற்றுப் பார்ப்பவன் பண்பாடு கெட்டவனாகத்தான் இருக்கவேண்டுமென்று தீர்மானம் செய்துகொண்டாள் இளநங்கை. அதைப் பற்றித் தந்தையிடம் சொல்லலாமென்று முதலில் யோசித்தாளானாலும், பிறகு வாயை அடக்கியே கொண்டாள். 'அவன் பார்ப்பது உனக்கெப்படித் தெரியும்?' என்று அவர் கேட்டால் என்ன பதில் சொல்வது? என்று யோசித்து அதை மனத்திற்குள்ளேயே அடக்கிவிட்டாள்.

அடுத்த சில தினங்களில் தொடர்ந்து நீராடிய அவள் அந்த வாலிபன் தன்னைத்தான் கவனிக்கிறானென்பதைச் சந்தேகமறப் புரிந்துகொண்டதால், அந்தப் பௌர்ணமியன்று காலை கோட்டையிலிருந்த தனது நீராட்ட அறையிலேயே குளித்துவிட்டாள். அன்று முத்தங்காடி கூடும் நாளாகையாலும், அன்றே விற்பனை அதிகப்படு மாகையாலும் தான் நீண்ட நாளாக விரும்பிவந்த பெருமுத்து வாங்க அங்காடிக்குச் சென்றாள். அங்காடியில் அந்த வாலிபனை அவள் எதிர்பார்க்கவில்லை. எதிர்பார்க்காததற்குக் காரணம் உண்டு. அவன் அத்தனை நாளும் நீராடும் படித்துறை மண்டபத்தில் தென்பட்டானேயொழிய மாலையில் அவள் கொற்கையின் சாதாரணக் கடைவீதியில் உலாவியபோதெல்லாம் தென்படவேயில்லை. ஆகவே அச்சத்தை உதறி முத்து வாங்கும் ஆசையை மேற்கொண்டு முத்துச் சந்தைக்கு இரவில் வந்தாள். அங்கு அவனைக் கண்டதும் ஏற்பட்ட அச்சம் ஆற்றிலிறங்கிய பின்பும் அதிகப்பட்டதால் வெகு வேகமாக ஆற்றைக் கடந்து எதிர்ப்படிகளில் ஏறித் தோப்புக்குள் மறைந்தாள்.

தோப்பின் மறைவு அவளுக்கு ஓரளவு துணிவைக் கொடுத்ததால் தோப்பின் ஊடே மெல்லவே நடந்தாள். தோப்பின் விளிம்பை அணுகிய சமயத்தில் தூரத்தே இருந்த கோட்டையை ஏறெடுத்து நோக்கினாள். கோட்டைக்கு

வெளியே பந்தங்கள் உலாவிக்கொண்டிருந்தன. புரவி வீரர் நடமாட்டம் அதிகமாயிருந்தது. அந்த நிலைக்குக் காரணம் என்னவென்று அறியாமல் அவள் திகைத்துக்கொண்டிருந்த சமயத்தில் மேலும் திகைப்பூட்டும் சம்பவமொன்றும் நிகழ்ந்தது. அவள் கரங்களை இரு பக்கத்திலிருந்து இருவர் பிடித்தனர். இன்னொருவன் பின்னாலிருந்து அவள் வாயை இறுகப் பொத்தினான். பொத்தியவன் அவள் காதுக்கருகில் குனிந்து மெல்லச் சொன்னான். "சத்தம் போடாதே, உனக்கு எந்தத் தொந்தரவும் வராது, எங்களுக்கு உதவினால்" என்று.

அவள் பதில் சொல்ல அவள் வாயிலிருந்த கையை மெல்ல விலக்கவும் செய்தான் பின்னாலிருந்தவன்.

"எதற்கு உதவி?" என்று வினவினாள் அவள்.

"உன்னைப் பின்பற்றி வருகிறவனைப் பிடிக்க" என்றான் பின்னால் நின்றவன்.

முத்து வாங்க வந்த மோகனப்பாவை தன்னை உதறிக் கொண்டு சுற்றுமுற்றும் பார்த்தாள். தன்னைப்பற்றிய மூவர் தவிர வேறு சிலரும் தோப்பில் இருளில் மறைந்திருப்பதை அவர்கள் கைகால்கள் அசைந்த அரவத்திலிருந்து தெரிந்து கொண்டாள் அவள். 'ஒருவனைப் பிடிக்க இத்தனை பேர் எதற்கு?' என்று எண்ணி வியக்கவும் செய்தாள். படித் துறையில் அந்த இளங்காளையைக் கவர்ந்த அந்தப் பாவையின் இதயம் அவனை அணுகிக் கொண்டிருந்த ஆபத்தை நினைத்து ஒரு விநாடி அனுதாபப்பட்டது. ஒரு வினாடி அந்த அனுதாபம் மறைந்தது. அந்தக் கள்ளனுக்கு இந்தத் தண்டனை தேவைதான் என்று நினைத்த அவள், "சரி நான் என்ன செய்யவேண்டும்?" என்று வினவினாள். பின்னால் நின்றவனை நோக்கி.

அவன் அவள் காதில் சில வார்த்தைகளைச் சொன்னான். "பயங்கரம் பயங்கரம்! அவரைக் கொல்லவா போகிறீர்கள்?" என்று கூச்சலிட்ட அவள் வாய் மீண்டும் பலமாகப் பொத்தப்பட்டது. அதே சமயத்தில் தன்னை எதிர் நோக்கியிருந்த ஆபத்தை உணராமல், அந்த இளங்காளை மிக நிதானமாக அந்த இடத்தை அணுகிக் கொண்டிருந்தான்.

### அத்தியாயம் 3

# அவன் அளித்த பொருள்

மரங்களின் இருளில் மறைந்து நின்ற கொடியவர் களைப் பற்றியோ, அவர்கள் விளைவிக்கவிருந்த கொடுமையைப் பற்றியோ, கடுகளவும் அறியாமல் நிதான நடை போட்டு வந்து கொண்டிருந்த அந்த வாலிபனுக்கு, ஏற்படவிருந்த விபரீதத்தை நினைத்துக் கூவ முயன்ற கொற்கைக் கோட்டைக் காவலன் மகளின் வாயையும், பின்னாலிருந்தவன் கடுமையுடன் மூடியதன்றி, அவளைத் தோப்பின் விளிம்பிலிருந்து பின்னுக்கும் இழுத்துச் சென்றான். கால்களை மாற்றி மாற்றிச் சுமார் பத்துப் பதினைந்து அடிகள் வைத்து மரக்கூட்டத்தின் காரிருளுக்கு வந்தவுடன், இளநங்கையை நிறுத்திய அந்த மனிதன் அவள் வாயிலிருந்தும் கழுத்திலிருந்தும் கைகளை எடுக்காமலே, "இன்னொரு முறை நீ கூவமுயன்றால் அவன் பிணத்துடன் உன் பிணமும் இந்தத் தோப்பில் கிடக்கும்; நினைப்பில் வைத்துக்கொள்!" என்று அவள் காதுக்கருகில் மெல்லவும் கடுமையுடன் சொல்லிவிட்டு, வாயிலிருந்த கையை அகற்றினாலும் அவள் கழுத்தைச் சுற்றிய கையை மட்டும் அழுத்தி வைத்துக்கொண்டான். "இனி அவள் கைகளை விட்டு விடலாம். நான் பார்த்துக்கொள்கிறேன்" என்று அவள் கைகளைப் பிடித்துக்கொண்டிருந்த மற்ற இருவருக் கும் அவன் உத்தரவிடவே, அவர்கள் இருவரும் அவள் கைகளுக்கு விடுதலையளித்துச் சற்று விலகி நின்றார்கள். அவள் கழுத்தை அழுத்திப் பிடித்த வண்ணம் பின்னால் நின்ற மனிதன் மீண்டும் சொன்னான் இளநங்கையிடம். "சொல்வதை நன்றாகக் கேட்டுக்கொள். உன்னை இப்பொழுது விடுதலை செய்யப்போகிறேன். நீ மெல்ல

நடந்து தோப்பின் விளிம்பைத் தாண்டி, கோட்டைக்கும் தோப்புக்குமுள்ள இடைவெளி மேட்டில் முழு நிலவில் கோட்டையைப் பார்த்த வண்ணம் நின்றுகொண்டிரு. உன்னைத் தொடர்ந்து வருபவன் உன்மீதே கண்ணாகத் தோப்பின் எல்லையை அணுக முயல்வான். எல்லையை அணுக முயல்வானே தவிர எல்லையைத் தாண்ட மாட்டான். அவனைத் தோப்புக்குள்ளேயே நாங்கள் முடித்ததும், இரண்டு வாட்கள் ஒன்றுடன் ஒன்று தட்டப்படும். அந்த ஒலி கேட்டதும் நீ கோட்டையை நோக்கிச் சென்று விடலாம்" என்று இதைச் சொல்லிவிட்டு அவள் கழுத்திலிருந்த கையையும் எடுத்த அந்த மனிதன், "சரி நட, தோப்பைத் தாண்டியதும் சொன்னபடி செய். நான் சொன்னதில் சிறிது நீ தவறினாலும், உன்னைத் தொடர்ந்து வருபவனை எச்சரிக்கச் சிறிது அசைந்தாலும், உன் உயிர் அடுத்த வினாடி பெண்கள் மகிழ்ந்து பார்க்கும் சந்திரன் இருக்கும் வானை நோக்கிப் பறந்துவிடும். முழு நிலவு என்னதான் அழகுடையதானாலும் முதுகில் குறுவாள் பாய்ந்து குருதியோடிக் கிடக்கும் பெண்ணை அழகாகக் காட்டாது, புரிகிறதா?" என்று எச்சரித்துத் தனது நகைச்சுவையை நினைத்துச் சிறிது மெல்லவும் நகைத்தான். அது மட்டுமின்றி அவளை நடக்கச் செய்யத் தோப்பின் விளிம்பை நோக்கித் தள்ளியும்விட்டான்.

அப்படித் திடீரென்று அவன் தள்ளவே இளநங்கையின் முத்துப் பரல்கள் உள்ள காற்சிலம்பு சற்றே கலகலவெனச் சப்தித்தது. அந்தச் சத்தத்தைக் கேட்டதும் அவள் உள்ளத்தில் ஏதோ புது எண்ணம் உதித்ததை முகம் காட்டியதானாலும், அதை எந்தவிதத்திலும் மறைந்திருந்த கொடியவர்களுக்குக் காட்டாமலே மெல்லடி எடுத்து வைத்த கோட்டைக் காவலனின் மகள் தோட்டத்தின் விளிம்பை நாடிச்சென்றாள். விளிம்பைத் தாண்டி முழுநிலவு காய்ந்து கொண்டிருந்த மேட்டு நிலத்துக்கு வந்ததும், கொடியவர் தலைவன் கூறியபடி நிற்கவும் செய்தாள். கோட்டைக்கெதிரேயிருநத அந்த மேட்டு நிலத்தில் மேலிருந்து இறங்கிய மேனகைபோல் அழ



கெல்லாம் பொலிவுற முழுநிலவில் நின்ற இள நங்கையின் புறக்கண்கள் கோட்டை முன்னிலையில் உலாவிய முழு நிலவில் நின்ற இளநங்கையின் புறக்கண்கள் கோட்டை முன்னிலையில் உலாவிய பந்தங்களையும், அகக்கண்கள் பின்புறத் தோப்பில் நிகழவிருந்த கொடிய செயலையும் கண்டு கொண்டிருந்தாலும், பிற்பகுதியில் எந்த விநாடியிலும் ஏற்படவிருந்த நிகழ்ச்சியைப் பற்றியே மனம் எண்ணித் துடித்துக்கொண்டிருந்தது. அவள் அந்த நிலத்தில், நிலவில், நின்ற விநாடிகள் அதிகமில்லையா னாலும், அந்த விநாடி ஒவ்வொன்றும் அவளுக்குப் பெரும் வேதனையை அளித்துக் கொண்டிருந்ததால் அவள் ரத்தம் வெகு வேகமாகச் சுழன்றதன்றி இருதயமும் அளவுக்கு மீறிப் 'படக்படக்'கென்று அடித்துக்கொண்டது. இப்படி விநாடிகள் சில ஓடிய உடனேயே, திடீரென்று குனிந்து நோக்கிய இளநங்கை கால்களைத் தடவிவிட்டு ஒரு காலை நிலத்தில் சட்டென்று உதைக்கவும் செய்தாள். அவள் காற்சிலம்பு முத்துப்பரல்கள் திடீரெனச் சப்தித்தன. கண்ணிமைக்கும் நேரத்தில் மீண்டும் நிமிர்ந்து பழையபடி நின்றாள் அவள். அவள் குனிந்ததையும், காலைத் தடவினதையும் தட்டியதையும் பிறகு நிமிர்ந்து விட்டதையும் தோப்பிலிருந்தவர்கள் காணத்தான் செய்தார்கள். அவர்களில் ஒருவன் குறுவாளை எடுத்து வீசவும் முயன்றான். ஆனால் இளநங்கையின், வாயைப் பொத்தியவனும், அவள் செய்யவேண்டுவது என்ன வென்பதை விளக்கியவனுமான அவர்கள் தலைவன் கையமர்த்தித் தடுத்து, "காலில் எறும்போ வேறு பூச்சியோ ஏறியிருக்கவேண்டும். வேறு எதுவுமிருக்காது. எச்சரிக்கை செய்பவன் அத்தனை மெல்லக் காலைத் தட்ட மாட்டான். நீ அரவம் செய்யாதே" என்று கடிந்து கொண்டான். அதே சமயத்தில் சற்றுத் தூரத்தில் அந்த வாலிபன் நடந்து வரும் அரவம் கேட்கவே "உம், தயாராயிருங்கள், அதோ அந்த மரங்களுக்கிடையில் திட்டாக வெளிச்சம் இருக்குமிடத்திற்கு அவன் வந்ததும் குறுவாளை எறியுங்கள். ஒருவர்தான் எறிய வேண்டுமென்ப

தில்லை. நாலைந்து பேர் எறியலாம். நாலைந்து குறுவாளைத் தாங்கக்கூடியவன்தான் அவன். உம்! பிரிந்து மறைந்து நில்லுங்கள்" என்ற உத்தரவு இட்டான். அந்தக் கொடியவர்கள் தலைவன் சொற்படி பிரிந்தும், ஓரிருவர் மரக்கிளைகளில் ஏறி உட்கார்ந்தும் வெளிச்சம் விழுந்திருந்த இடத்தை உற்றுநோக்கிக் கொண்டிருந்தார்கள். விநாடிகள் பறந்தன. அந்த வாலிபன் மட்டும் அந்த இடத்தை அவர்கள் எதிர்பார்த்த துரிதத்தில் அடையவில்லை. மெல்ல மெல்லவே அந்தத் திட்டை நோக்கி வந்தான். அந்த இடத்திற்குள் காலை வைப்பதற்கு முன்பு அவன் முகத்தில் சிறிது புன்முறுவலும் உதயமாயிற்று. சரேலென்று திட்டாக இருந்த அந்த நிலவு இடத்தைச் சுற்றி வந்து இருளிலேயே மீண்டும் நடந்தான்.

அந்த நிலவுத் திட்டைச் சுற்றித் தாண்டியதும், அது வரை காட்டி வந்த நிதானமும், அலட்சியமும் அவனிடமிருந்து பறந்து, அவற்றினிடத்தை எச்சரிக்கையும் துரிதமும் ஆட்கொண்டுவிட்டதை, முகத்தில் சுருங்கிய புருவங்களும், திடீரெனப் பளிச்சிட்ட விழிகளும் நிருபித்தன. அதுவரை அழகாகச் சிரிப்பை உதிர்த்துக் கொண்டிருந்த அவன் விழிகள் திடீரென மிகப் பயங்கரமாகி அந்த முகத்துக்கும் ஒரு பயங்கரத்தை அளித்தன. அலட்சியமாக ஆடிய கைகள் இருப்புச் சலாகைகள் போல் நிமிர்ந்தன. துவண்டு உல்லாசமாக வந்த இடையும் இரும்புத் தகடென உரம் பெற்றது. அவன் உடல் முழுவதும் விறுவிறுப்பும் கெட்டியும் பெற்றதாய் ஏதோ ஓர் உருவம் நடந்து வருவது போல் அவன் நடக்கத் துவங்கிச் சில அடிகள் எடுத்து வைத்தான். அடுத்த விநாடி அந்தத் தோப்பில் இருவர், மார்புகளில் குறுவாள்கள் பாய்ந்ததால் எந்தவித ஓசையும் செய்யாமல் தட்தட்டென்று விழுந்தார்கள். மறுவிநாடி கத்திகள் உராயும் அரவம் அந்தத் தோப்பில் வலுத்தது. அந்த அரவத்தைக் கேட்டதும் மேட்டு நிலத்தில் நின்ற இளநங்கையின் இதயம் ஒருவிநாடி மகிழ்ச்சியடைந்தாலும், மறுவிநாடி பயப்படவே செய்தது. தன்னைத் தொடர்ந்து வந்த இளங்காளையை அந்தக்



கொடியவர்கள் எதிர்பார்த்தபடி கொலை செய்ய முடிய வில்லையென்பதால், ஒரு மகிழ்ச்சியும், ஆனால் பலபேர் இருட்டில் வளைத்துக் கொண்டால் ஒருவன் என்ன செய்ய முடியும் என்ற எண்ணத்தால் திகைப்பும் கொண்ட இளநங்கை தோப்பில் நடப்பதென்னவென்பதைப் பார்க்கச் சற்றே திரும்பினாள். அடுத்த விநாடி, அவள் இடையில் குறுவாளொன்று கனவேகமாகப் பறந்து வந்து பாய்ந்தது. நின்ற நிலையில் ஒரு விநாடி ஆடினாள் அவள். பிறகு நடக்க முயன்றபோது கால்கள் துவண்டன; கண்கள் இருண்டன. முழுநிலவொளியை ஏதோ திடீரெனப் பெரிய இருட்டு மூடியது போன்ற பிரமை ஏற்பட்டது அவளுக்கு. வேரில் கத்தரிக்கப்பட்ட பூங்கொடி போல் கண்களை மூடி மண்ணில் வீழ்ந்தாள் அவள். கண்கள் மூடியதும், அவள் புத்தியில் ஏதேதோ ஒளிகள் சில தென்பட்டுக் கொண்டி ருந்தன; ஏதேதோ ஒலிகளும் கேட்டன. தலையில் மத்தளம் அடிப்பது போலும், வாட்கள் தாக்குவது போலும் பல சப்தங்கள் கேட்டுக்கொண்டிருந்தன. நிலத்தில் விழுந்து நினைவு அரைவாசியிருக்கும்போது, சற்றே இரண்டொரு முறை அசைந்த இளநங்கையின் உடல் கடைசியில் அசைவற்றுக் கிடந்தது; சுரணை அடியோடு பறந்துவிட்டது.

அவள் கண் விழித்தபோது அந்த இளங்காளை அவள் பக்கத்தில் ஒரு காலைக் குத்திட்டு ஒரு காலை மடித்து உட்கார்ந்துகொண்டு உற்றுப் பார்த்துக்கொண்டி ருந்தான். மடித்துக் கிடந்த அவன் தொடையில் தன் தலை இருந்ததை உணர்ந்த இளநங்கை எழுந்திருக்க முயன்றாளா னாலும், இடையில் எடுத்த பெருவலி மீண்டும் அவன் தொடையிலேயே அவளைத் தள்ளிவிட்டது. அவள் கண் விழித்தது, எழுந்திருக்க முயன்றது, பிறகு வீழ்ந்தது. அனைத்தையும் கண்ட அந்த வாலிபன் அவளை நோக்கி, "அசங்க வேண்டாம். இன்னும் சில விநாடிகளில் நீங்கள் எழுந்திருக்கலாம்" என்று கூறினான்.

அவள் தனது கண்களை மீண்டும் உயர்த்தி அவனை நோக்கினாள். அவன் கண்களில் ஒரு விஷமச் சிரிப்பு

இருந்தது. தவிர அவள் கண்களைக் கவர்ந்து நிற்கும் ஆற்றலும் இருந்தது அவற்றுக்கு. அந்தக் கண்களுக்குடையவனைக் கண்டு அத்தனை நாள் தான் அஞ்சி ஓடிய காரணம் இளநங்கைக்கு விளங்கவில்லை. அந்தச் சில விநாடிகளில் கண்களை மீண்டும் தாழ்த்திக்கொண்டாள் அவள். கண்களைத்தான் தாழ்த்திக்கொண்டாளே தவிர, உணர்ச்சிகளை அவளால் கட்டுப்படுத்த முடியாததால் பெரிதும் சங்கடத்தில் அகப்பட்டுத் தத்தளிக்கவே செய்தாள். அவன் தொடை இருந்த கடினத்தைத் தலையின் ஸ்பரிசத்திலிருந்தே அறிந்து அவள், உண்மையில் அவன் கால்கள் இரும்பினால்தான் செய்யப்பட்டிருக்க வேண்டுமென்று நினைத்தாளானாலும், அவள் இடையை அழுத்திக் கொண்டிருந்த அவன் கரம் மட்டும் மிகமிருதுவாக இருந்ததை எண்ணிப் பார்த்து இந்தக் கரம் எப்படி வாளைப் பிடிக்கும் என்று வியந்தும் போனாள். இருப்பினும் இடுப்பை அழுத்திய அந்தக் கை அங்கிருந்த காயத்துக்கு மிகவும் ஆதரவளித்ததால், 'நல்ல வேளை! கையும் இவர் கால் போலிருந்தால் நான் ஒழிந்திருப்பேன்' என்று சொல்லிக் கொண்டாள் உள்ளூர.

அவள் மனத்திலோடிய எண்ணங்களைப் புரிந்து கொண்டாதனாலோ, என்னவோ அவன் சொன்னான்: "உங்கள் இடையிலிருந்த குறுவாளை எடுத்துவிட்டேன். காயத்தைக் கட்டிக் குருதியையும் நிறுத்திவிட்டேன். இன்னும் சில விநாடிகள் அழுத்திப் பிடித்தால் வெளியில் வந்த ரத்தம் காய்ந்து காயம் மூடிக்கொள்ளும். அப்புறம் நீங்கள் நடந்தாலும் எதுவும் ஆகாது" என்று.

இந்தச் சொற்களை அவன் வெகு சாதாரணமாகச் சொன்னாலும், அதில் அன்பு கனிந்துகிடந்ததை உணர்ந்தாள் இளநங்கை. 'இப்பேர்ப்பட்டவர் எதற்காகப் பெண்கள் நீராடும் துறைக்கு தினந்தோறும் வந்தார்? எதற்காக என்னை உற்று உற்றுப் பார்த்தார்? ஏன் என்னை அங்காடியிலிருந்து தொடர்ந்தார்?'' என்று பல கேள்விகளைத் தன்னுள் எழுப்பிக்கொண்டாள். மடியிலே தன்னைத் தாங்கிய அந்த வாலிபன் நடத்தை



கெட்டவனாயிருந்தால், தான் நிர்க்கதியாக நினைவிழந்திருந்த நேரத்தில் பல விபரீதங்கள் நேர்ந்திருக்கலாமென்றும் நினைத்ததால் அவனைப் பற்றித் தான் கொண்ட தவறான கருத்துக்கு வருந்தவும் செய்தாள். அந்தச் சமயத்தில் அந்த வாலிபன் அவளை மெல்லத் தன் தொடையில் லேசாகத் திருப்பி, "சற்று இருங்கள், காயத்தைக் கவனிக்கிறேன்" என்று அவள் இடையிலிருந்த கையை எடுத்துக் காயத்தைப் பரிசோதிக்க முற்பட்டான்.

அவன் காலில் லேசாகத் திருப்பப் பட்டதால் இளநங்கையின் முகம் கோட்டையை நோக்கிக் கிடந்தது. பின்புறத்தில் அவள் இடையை அவன் பரிசோதித்துக் கொண்டிருந்தான். இடையிலிருந்த தனது சேலை தயவு தாட்சண்யமின்றி இடைக்குக் கீழே நன்றாக இறக்கப் பட்டதையும், இடைக்கு மேல்புறத்து விலாவில் ஒரு கையையும் கீழே ஒரு கையையும் அந்த வாலிபன் வைத்துக் காயத்தின் கட்டைப் பரிசோதித்ததையும் உணர்ந்த இளநங்கையின் உயிர் வெட்க அலைகளில் அகப்பட்டுத் தத்தளித்தது. அவன் உள்ளங்கைகள் இரண்டும் இடைக்கு மேலும் கீழுமிருந்த மலர்ச்சதையில் நன்றாக ஒரு விநாடி பதிந்தன. பிறகு இருபுறமும் சதையை லேசாக அசைத்துப் பார்த்தன. விரல்கள் சதைகளில் அசைந்தும் பரவியும் ஏதேதோ பரீட்சைகளில் இறங்கின. பிறகு வயிற்றுப்புறம் ஒரு கையும் முதுகுப்புறம் ஒரு கையும் பதிந்து பரிசோதனை நடத்தின. கடைசியில் இடையைச் சுற்றிக் கட்டியிருந்த துணியை இரு கைகளும் சற்று இறுக்கின. இதை அடுத்து நிம்மதிப் பெருமூச்சொன்று அந்த வாலிபனிடமிருந்து வெளி வந்தது. "காயம் கட்டுப்பட்டு விட்டது? இனிப் பயமில்லை எழுந்திருங்கள்" என்று உத்தரவிட்ட அந்த வாலிபன் அவள் கைகளுக்கிடையில் தன் கைகளைக் கொடுத்து மெல்ல தூக்கியும் நிற்கவைத்தான்.

அப்படி நிறுத்தப்பட்ட இளநங்கை கீழிறங்கியிருந்த இடைச்சேலையைச் சரிப்படுத்திக்கொண்டாள். பிறகு அவனை ஒருமுறை ஏறெடுத்து நோக்கினாள். அவன் பார்வையில் எந்தவித மாறுதலுமில்லை. ஒரு பருவப்

பெண்ணைத் தொட்டுச் சிகிச்சை செய்து தூக்கி நிறுத்தியதால் ஏற்பட்டிருக்க வேண்டிய பதற்றமேதும் அவன் வதனத்தில் இல்லை. படித்துறையில் பார்த்த அதே பார்வைதானிருந்தது கண்களில். முகமும் சர்வசாதாரணமாகவேயிருந்தது. 'இவர் என்ன மரமா, கல்லா! இல்லை ஏற்கனவே மணமானவரா?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டாள். பிறகு, நிலத்தில் கண்களை ஓட்டி வினவினாள். "நீங்கள் அவர்களிடமிருந்து எப்படித் தப்பினீர்கள்?" என்று.

அந்த வாலிபன், சற்று யோசித்துவிட்டு, "பறவைகள் உதவின." என்று பதில் சொன்னான்.

மீண்டும் அவள் கால் கட்டை விரலால் தரையைக் கீறிக் கொண்டே, "பறவைகளா?" என்று வியப்புடன் வினவினாள்.

"ஆம்," என்றான் அந்த வாலிபன்.

"பறவைகள் பேசுமா?" என்று வினவினாள் இளநங்கை.

"அந்தத் துர்க்குணம் மனிதனுக்குத்தானிருக்கிறது. பறவைகளுக்கில்லை. ஆனால் அவை செய்தி சொல்லும்" என்று கூறினான் அவன்,

அவன் பேச்சு மேலும் மேலும் வியப்பை அளித்தது அவளுக்கு. "எப்படி?" என்று வினவினாள், வியப்பு குரலிலும் ஒலிக்க.

"தங்களுக்கு எதிரி மனிதன்தானென்பது பறவைகளுக்குத் தெரியும். விலங்குகளுக்குத் தெரியும். ஆனால் அவற்றுக்குத் தெரியாததும் ஒன்று உண்டு. மனிதர்களே மனிதர்களுக்கு எதிரி என்பதுதான் அது." என்று கூறிய அந்த வாலிபன், மேலும் தொடர்ந்து, "மனிதன் சமீபத்திலிருக்கும் போது பறவைகள் சங்கடப்படுகின்றன. மரங்களிலிருந்து சப்திக்கின்றன. இராக் காலங்களில் சிறகடித்து அவை கிளைகளிலிருந்து கிளைகளுக்குத் தாவுவதும் உண்டு. பட்சி சாத்திரம் அறிந்தவர்களுக்கு



அவற்றின் சலசலப்பு இயற்கையானதா, பயத்தினாலுண்டானதா என்பது தெரியும்" என்றும் சொன்னான்.

"நீங்கள் வந்தபோது...?" என்று இழுத்தாள் இளநங்கை.

"பட்சிகள் பயந்த ஒலிகள் கேட்டன. முதலில் நீங்கள் ஓடியதால் அந்த ஒலிகள் ஏற்பட்டிருக்க வேண்டுமென்று நினைத்தேன். ஆனால் நீங்கள் நிலவில் சென்று நின்றபோது அந்த ஒலிகள் நிற்கவில்லை, வேறு சிலர் தோப்பிலிருக்கிறார்களென்று தீர்மானித்துக்கொண்டேன். அந்தத் தீர்மானத்துக்கு வேறு அத்தாட்சியும் கிட்டியது."

"என்ன அது?"

"முத்துப் பரல்களின் ஒலி கேட்டது. பறவைகளோடு ஒரு பாவையும் எச்சரித்ததால், அந்த நிலவுத் திட்டில் நுழையவில்லை. அதைச் சுற்றி வளைத்துப் பின்புறம் வந்தேன். ஒருவனைத் திருப்பி என் குறுவாளால் குத்தினேன். பிறகு என் குறுவாளை மட்டுமின்றி அவன் குறுவாளையும் எடுத்துக் கொண்டேன்."

"அப்படியானால்...?"

"சத்தம் செய்யாமல் மறைந்திருந்தவர்கள் ஐந்து பேர் தோப்பில் கிடக்கிறார்கள். இனி அவர்களுக்குச் சத்தம் செய்யும் உத்தேசம் இல்லை."

"மொத்தம் ஐவர்தானா...?"

"இல்லை. வேறு சிலர் ஓடி விட்டார்கள். மூவராவது தப்பியிருக்க வேண்டுமென்பது எனது ஊகம்."

இளநங்கை அவனை வியப்புடன் நோக்கினாள். அவன் இடையில் அப்பொழுதும் அவள் பல முறை பார்த்த நீண்ட வாளிருந்தது. இடுப்பில் ஓர் அழகிய கோடாரி இருந்தது. அந்தக் கோடாரியை வியப்புடன் பார்த்த இளநங்கை "இதுதான் உங்கள் குறுவாளா?" என்று வினவினாள்.

"இல்லை, குறுவாள் அங்கு கிடப்பவனொருவன் மார்பிலிருக்கிறது. இது கோடாரி" என்றான் அந்த வாலிபன்.

"விநோதமான ஆயுதம்" என்றாள் இளநங்கை.

"ஆம். கட்டைகளை வெட்ட உதவும்" என்றான் புன்முறுவலுடன்.

"மிகச் சிறியதாயிருக்கிறதே!" என்றாள் அவள் இளநகை புரிந்து.

"கட்டை என்றால் மரக்கட்டையல்ல."

"பின்."

"மனித உடலுக்கும் கட்டை என்று பெயர் வேதாந்தத்தில்!"

"நீங்கள் வேதாந்தியா?"

"ஆம்."

"எப்படி?"

"என் உயிரையோ பிறர் உயிரையோ பெரிதாக மதிப்பதில்லை."

இதைக் கேட்ட அவள் நகைத்தாள். "நல்ல வேதாந்தம்" என்று கூறிவிட்டு, "வாருங்கள் கோட்டைக்குப் போகலாம், அங்கு சென்று பேசிக்கொள்ளலாம்" என்று அழைப்பும் விடுத்தாள்.

"இல்லை, இப்போது வருவதற்கில்லை. நீங்கள் செல்லுங்கள். நாளை உங்களைச் சந்திக்கிறேன்" என்றான் அந்த வாலிபன்.

"எங்கு? படித்துறையிலா?" என்று விஷமத்துடன் கேட்டாள் அவள்.

அவன் பதிலுக்கு நகைக்கவில்லை. ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தான். "இல்லை, கோட்டைக்கே வருகிறேன்" என்றான் முடிவில்.

"உங்கள் பெயர்? என் தந்தையிடம் சொல்ல வேண்டுமே" என்று கேட்டாள் அவள்.

அவன் சிறிது யோசித்துவிட்டு, இடைக் கச்சையி லிருந்து ஒரு பொருளை எடுத்து அவள் கையில் கொடுத்தான். "இதை உங்கள் தந்தையிடம் கொடுங்கள். அவர் புரிந்து கொள்வார்" என்று கூறிவிட்டு, விடுவிடு



வென்று தோப்புக்குள் சென்று மறைந்து விட்டான் அந்த வாலிபன்.

உயரமான அவன் சரீரத்தையும், கால்கள் பாவிப் பாவிச் சென்ற நிதானமான கம்பீரமான நடையையும் அவன் தோப்பில் மறையும்வரை பார்த்துக்கொண்டிருந்த இளநங்கை, பிறகு மெல்ல மெல்லக் கோட்டையை நோக்கி நடந்தாள். கோட்டையை அடைந்ததும் அந்த வாலிபன் கூறியபடி அவன் தந்த பொருளைத் தந்தையிடம் கொடுத்தாள். அதை கையில் வாங்கிப் பார்த்த அவள் தந்தையின் முகத்தில் மிதமிஞ்சிய பிரமிப்புப் படர்ந்தது. விழிகள் வியப்பால் வெளியே விழுந்து விடுவது போலிருந்தன. "எங்கே அவர்? எங்கே அவர்?" என்று இரைந்து வினவினார் கோட்டைக் காவலர். வினவினாரா கூவினாரா என்பதை இளநங்கையால் நிர்ணயிக்க முடிய வில்லை.

## அத்தியாயம் 4

# ராஜமுத்திரை

அந்த வாலிபன் தந்த பொருளைக் கண்டதும் தந்தை எதற்காகப் பிரமித்தார்; கூவினார் என்பதைப் புரிந்து கொள்ள முடியாததால் வியப்பு மிஞ்சிய தன் வேல் விழிகளை அவரை நோக்கி உயர்த்திய இளநங்கை, "ஏன் இப்படிப் பதட்டப்படுகிறீர்கள்?" என்று வினவினாள்.

கோட்டைக் காவலன் விழிகளும் வியப்பையே கக்கின. "ஏன், பதட்டப்படுகிறேனா?" என்று அவர் கேட்ட கேள்வியிலும் ஆச்சரியத்தின் எல்லை தெரிந்தது.

"ஆம்! இந்தப் பதக்கத்தைக் கையில் வாங்கியதும் ஏதோ நெருப்புத் துண்டத்தை ஏந்திவிட்டதுபோல் துடிக்கிறீர்களே?" என்று மீண்டும் கேட்டாள் இளநங்கை.

கோட்டைக்காவலர் அவளைப் பரிதாபத்துடன் பார்த்து விட்டு, "நீ குழந்தை, உனக்கு எங்கே இதைப் பற்றித் தெரியப்போகிறது?" என்று கூறினார். "சரி சரி! அது கிடக்கட்டும். இதை உன்னிடம் கொடுத்தவர் எங்கே?" என்று கேட்டு, அந்த வாலிபன் இருப்பிடத்தை அறிவதில் ஆவலைக் காட்டினார்.

"எனக்குத் தெரியாது" என்று பதில் சொன்னாள் இளநங்கை.

"தெரியாதா?"

"தெரியாது"

"பின் இது எப்படி உன் கையில் வந்தது?"

"அவர் இதைக் கொடுத்து உங்கள் கையில் கொடுக்கும் படி சொன்னார்."

"எந்த இடத்தில் சொன்னார்?"



"தோப்பின் விளிம்பில்."

"அங்குதான் அவரைச் சந்தித்தாயா?"

"நான் சந்திக்கவில்லை. அவர் என்னைத் தொடர்ந்து வந்தார்."

"இன்றா?"

"இல்லை. பத்து நாட்களாகவே தொடர்ந்து வருகிறார்."

தந்தையும் மகளும் இப்படிக் கேள்வி பதில்களை மாற்றிக் கொண்டபிறகு, தந்தையே சற்று அடங்கினார். சட்டென்று தாம் வினாக்களை விடுப்பதால் பயனேது மில்லை என்பதை உணர்ந்ததால், "நடந்ததைச் சொல்" என்று கடைசியாகக் கூறிவிட்டுத் தமது மஞ்சத்தில் அமர்ந்துவிட்டார். இளநங்கையின் இடுப்பில் ரத்தம் கசியா விட்டாலும், வலி மட்டும் அப்பொழுதும் இருந்து கொண்டிருக்கவே, ஒரு கையால் இடையின் அந்தப் பகுதியைத் தாங்கிக்கொண்டு, எதிரேயிருந்த மற்றொரு மஞ்சத்தில் உட்கார்ந்து கடந்த பத்து நாட்களாக நடந்த கதையை எடுத்துச் சொன்னாள். அவள் தந்தையும் அதை வெகு நிதானமாகக் கேட்டுக் கொண்டார். நடந்த விஷயங்கள் அனைத்தும் சொன்னாளென்று கூற முடியாது தான். அந்த இளங்காளை தன் இடையைக் கட்டியபோது, சேலையைக் கீழே தள்ளியது. படித்துறையில் தான் மஞ்சள் பூசும்போது மல்லாந்து நீந்திய போதும் கண்கொட்டாமல் பார்த்தது — இவற்றையெல்லாம் அவள் சொல்ல முடியுமா என்ன?

அவற்றைத் தவிர பொதுவாகச் சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லவே செய்தாள். மூன்றாம் பிறை முதற்கொண்டு அந்த வாலிபன் தன்னைக் கண்காணித்தது. முத்தங்காடியிலிருந்து தொடர்ந்துவந்தது. அவனைக் கொல்ல நடந்த முயற்சி, பிறகு தன் மீது கத்தி பாய்ந்து தான் மூர்ச்சையடைந்தது. அவன் சிகிச்சை செய்தது — இவற்றை மட்டும் பொதுப்படையாகச் சொன்னாள். அப்படிப் பொதுப்படையாகச் சொன்னபோதுகூடப் பல இடங்களில்

அவள் குரல் சங்கடப்பட்டது. சில இடங்களில் நெகிழ்ந்து பலவீனப்படவும் செய்தது. சாதாரண சமயமாயிருந்தால் கோட்டைக் காவலர், மகளின் தடுமாற்றத்தையெல்லாம் கவனித்திருப்பார். ஓரளவு அவள் மனோநிலையை உணர்ந்துமிருப்பார். அவருக்கு அப்போதிருந்த மனக் கிளர்ச்சியில், கையிலிருந்த பொருளைத் திருப்பித் திருப்பிப் பார்த்த பிரமையில், தமது மகளின் மன நெகிழ்ச்சியையோ குரல் உணர்ச்சியையோ சிறிதும் கவனிக்கவேயில்லை.

அவள் பத்து நாள் கதையின் பொது அம்சங்களைச் சொல்லி முடித்ததும், "அவர் எப்படியிருந்தார்? விவரமாகச் சொல்" என்று மட்டும் கேட்டார். ஏதோ குற்ற விசாரணை செய்யும் நீதிபதியைப் போல.

இளநங்கையின் வதனம் மிகவும் மென்மைப்பட்டது. அதில் ஒரு வெட்கமும் சூழ்ந்துகொண்டது. ஆகவே தலை குனிந்த வண்ணம் சொன்னாள், "அவரை நான் நன்றாகப் பார்க்கவில்லை. பொதுவில் பார்த்ததுதான்." என்று.

கோட்டைக் காவலர் அவள் உணர்ச்சிகளைப் பற்றிக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. அவள் தம் மகளென்பதைக்கூட மறந்துவிட்டதாகத் தோன்றியது, அவர் முகமிருந்த நிலை. "சரி, சரி, தெரிந்ததைச் சொல்" என்றார்.

அப்பொழுதும் இளநங்கை அந்த வாலிபனைப் பற்றி விவரிக்க விரும்பாததால், "ஏனப்பா, அவர்தான் நாளை இங்கு வருவதாகச் சொல்லியிருக்கிறாரே, அவரை நீங்கள் நேரிலேயே பார்க்கலாமே!" என்றாள்.

கோட்டைக் காவலர், அவள் கேள்வியையும் யோசனையையும் ரசிக்கவில்லையென்பதை அவர் முகம் காட்டியது.

"அதிருக்கட்டும். கேட்பதற்குப் பதில் சொல்" என்றார் கண்டிப்பான குரலில்.

இளநங்கை மஞ்சத்தில் சங்கடத்துடன் அசைந்தாள். பிறகு கோபத்துடன் கேட்டாள். "என் இடையில் அந்தக் கள்வர்கள் எறிந்த குறுவாள் காயம் பிராணனை



வாங்குகிறது. மருத்துவரைக் கூப்பிடக்கூட உங்களுக்கு
யோசனையில்லை. திரும்ப திரும்ப, பெயரைக்கூட சொல்ல
மறுத்த அவரைப் பற்றி விவரம் கேட்கிறீர்களே" என்று.

கோட்டைக் காவலர் அவள் கோபத்தை
லவலேசமும் லட்சியம் செய்யவில்லை. "காயத்தைப்
பார்த்தால் போகிறது. அவர்தான் கட்டியிருக்கிறாரே,
அந்தக் குறுவாளால் பிராணன் போகிறதாயிருந்தால் நீ
கோட்டை வரையில் நடந்து வந்திருக்கவும் முடியாது.
இங்கு உட்கார்ந்து கோபப்படவும் முடியாது. விஷயத்தைச்
சொல். அவர் எப்படியிருந்தார்?" என்று கோட்டைக்
காவலர் தயை தாட்சண்யமில்லாமல் கேட்டார்.

அதற்குமேல் தாமதிப்பதற்குக் காரணமில்லாததால்,
இளநங்கை சொன்னாள் சங்கடத்துடன், "அவர் நல்ல
உயரம். மெல்லிய உடல்தான். இருப்பினும் இரும்பு
என்பதை அவர் கட்டுப்போட்ட முரட்டுத்தனத்திலிருந்து
தெரிந்துகொண்டேன்" என்று.

உண்மையில் அந்த வாலிபன் கட்டுப் போட்டபோது
அவளுக்குச் சுரணையில்லை. அவன் தொடையில்
படுத்திருந்தபோது காலின் கடினத்தைத்தான் அறிந்தி
ருந்தாள். ஆனால் அதை எப்படிச் சொல்லுவாள் அவள்?
சிறிது மாற்றியே விஷயத்தைக் கூறினாள், தந்தை
விடாப்பிடியாகக் கேள்விகளைக் கேட்டதால்.

"உம்." என்று மேலே சொல்லும்படி ஊக்கினார்
தந்தை.

"கண்களில் பெரும் ஒளியிருந்தது. யாரையும்
ஊடுருவிப் பார்க்கும் சக்தி வாய்ந்த கண்கள்போல்
தோன்றின. இடையில் பெரும் வாளொன்றைக்
கட்டியிருந்தார்..." என்று இளநங்கை சிறிது தாமதித்தாள்.

கோட்டைக் காவலர் அவள் சொல்லும் ஒவ்வொரு
வார்த்தையையும் மனத்தில் பதியவைத்துக் கொண்டார்.
ஆகவே, ஏதும் பேசாமல் மௌனமாகவே இருந்தார்.
இளநங்கை மேலும் விவரிக்கத் தொடங்கி, "அவர் நெற்றி
யில் சூரியனைப்போல் திலகமிருந்தது. கழுத்தில் ஒரு வீரச்

சங்கிலி இருந்தது. அதற்கு ஒரு புதுவித முகப்பு இருந்தது. தூரத்தில் பார்த்ததால் அதன் விவரம் புரியவில்லை. ஆனால் ஒன்று மட்டும்..." என்று சிறிது நிறுத்தினாள்.

கோட்டைத் தலைவர் திடீரென்று உயிர் பெற்றவர் போல் தலையை நிமிர்த்தினார். "ஆனால் என்ன?" என்று வினவினார் துடிப்புடன்.

"வலது கையில் ஒரு பெரும் கங்கணமிருந்தது. மிக மஞ்சளாய் இருந்ததால் அது சுத்தத் தங்கமாயிருக்க வேண்டும். அதன் முகப்பில் ஒரு பெரும் முத்து இருந்தது" என்று கூறினாள் இளநங்கை.

"பெரும் முத்தா!" என்ற தந்தையின் கேள்வியில் ஆச்சர்யம், ஆவல் இரண்டும் ஒலித்தன.

"ஆம்," என்றாள் இளநங்கை.

"எத்தனை பெரியது?" என்று வினவினார் கோட்டைக் காவலர்.

"இத்தனை." என்று பரிமாணத்தை விரல்களைக் குவித்துக் காட்டிய இளநங்கை, "ஒன்று மட்டும் நிச்சயம், அத்தனை பெரிய முத்தை நான் இதுவரை பார்த்ததில்லை" என்றாள்.

"அங்காடியில் முத்துச்சரத்தைப் பார்த்ததாகக் கூறினாயே, அந்த முத்துக்களைவிடப் பெரியதா?" என்று வினவினார் அவள் தந்தை.

"பல மடங்கு பெரியது."

"நல்ல கனமிருக்குமா?"

"இருக்குமென்றுதான் தோன்றியது"

"என்ன எடையிருக்கும்?"

"எடை யார் போட்டது?"

"உனக்குத்தான் முத்துக்களைப்பற்றி எல்லாம் தெரியுமே. நீ முத்துப் பைத்தியமாயில்லாவிட்டால், தங்கத்தைக் கொட்டிக் கொட்டிக் கொடுத்து முத்துக்களை வாங்கி வாங்கி சேர்ப்பாயா பிரதி வருடம்? அது



கிடக்கட்டும் சொல், இந்த முத்தின் எடை எத்தனை யிருக்கும்?"

இளநங்கை சற்று யோசித்தாள். "யவனர் எடைப்படி பார்த்தால் ஒரு ஸாக்கியோவுக்குக் குறையாது" என்று கூறினாள் முடிவில்.

"இப்பொழுது புரிகிறதா உனக்கு?" என்று வினவினார் கோட்டைக் காவலர்.

"ஏதும் புரியவில்லை எனக்கு." என்றாள் அவர் மகள்.

கோட்டைக் காவலர் தன் மஞ்சத்தைவிட்டு எழுந்து அப்படியும் இப்படியும் அறையில் உலாவினார். பலகணி மூலம் வெளியே எட்டிப் பொருநையாற்றைச் சில விநாடிகளும், அதன் விளிம்பிலிருந்த தோப்பைச் சில விநாடிகளும் கவனித்தார். பிறகு உட்புறம் திரும்பி, "மகளே பாண்டிய நாட்டின் சதித் திட்டங்களை நீ அறியமாட்டாய். இந்தக் கொற்கை தோன்றிய நாளாக, பாண்டிய மன்னர் களின் இரண்டாவது தலைநகராக இது இருந்த நாளாக, அதாவது சுமார் ஐந்நூறு ஆண்டுகளாகச் சில முக்கிய வரம்புகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இன்று அதிக முக்கியத்துவமின்றி, ஆண்டுக்கு ஒருமுறை கூடும் முத்துச் சந்தையைத் தவிர, வேறு கும்பல் கூச்சலின்றி மாறிக் கிடக்கும் இந்தக் கொற்கை மாநகரம் ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் இந்த நாட்டின் பிரதான கடல் வாயிலாக இருந்தது. இங்கு நடந்தது உலக வாணிபம்; இந்த நகரம் இன்று பார்க்கும் சோனகர், யவனர், எகிப்தியர், அராபியர் ஆகியவர்களை விடப் பன்மடங்கு அதிகமாகப் பார்த்த காலம் அது. பொருநையின் முகத்துவாரம் இந்தக் கோட்டையிலிருந்து கூப்பிடு தூரத்திலிருந்த அந்த மகோன்னத நாளில், இன்று காயல் பட்டணத்து வாசலில் நிற்கும் உலக மரக்கலங்கள் இங்கு நின்று கொண்டிருந்தன. பிறகு கடல் பின்வாங்கி, தாமிரபரணியிலும் மண்ணடித்த பிறகு, காயல் துறைமுகப் பட்டணமாயிற்று. அந்தப் பழைய காலக் கொற்கையில் நடந்த முத்து வாணிபம் கணக்கில டங்காதது. பாரத நாட்டுச் செல்வமெல்லாம் கொற்கையின்

கடலில் கிடந்தது. அதை வாங்க, வாரியெடுத்துக்கொண்டு, போக வணிகர், திருடர், வீரர் அனைவருமே வந்தனர். வணிகருக்கு வசதியளிக்கப்பட்டது. வரம்புக்குட்பட்டு, திருடர் தண்டிக்கப்பட்டனர். வீரர்களுக்கு வாணிபமில்லை. பரிசு உண்டு. ஆனால், அன்றும் இன்றும் முத்துக்களைப் பற்றிய உச்ச வரம்பு ஒன்றுதான். சட்டதிட்டங்கள் ஒரே வகைதான். அந்தச் சட்டத்தின் முக்கிய விதி ஒன்று உண்டு." என்று உணர்ச்சியுடன் வார்த்தைகளை உதிர்த்தார்.

தந்தை பாண்டி நாட்டு முத்துக்களின் வாணிப வரலாற்றைப் பற்றிப் பெருமையுடன் கூறியதற்குக் காரணம் அவளுக்குத் தெரியும். ஆனால் சட்ட திட்டங்களைப் பற்றி அவர் ஏன் குறிப்பிட முயன்றார் என்பது அவளுக்குத் தெரியவில்லை. "அந்த முக்கிய விதி என்ன?" என்று வினவினாள்.

"அரை ஸாக்கியோ எடைக்கு மேற்பட்ட முத்து எதையும் யாரும் பாண்டி நாட்டிலிருந்து வெளியே கொண்டு செல்லக் கூடாது. அதற்கு மேற்பட்ட எடையுள்ள முத்துக்கள் மன்னர் பொக்கிஷத்துக்குத்தான் போக வேண்டும்" என்று கோட்டைத் தலைவர் மிக நிதானமாகவும் உறுதியுடனும் வார்த்தைகளை உதிர்த்த தன்றி மகளை உற்று நோக்கவும் செய்தார்.

இளநங்கையும் தனது கண்களை உயர்த்தி, தந்தையை பிரமிப்புடன் நோக்கினாள். இருவர் கண்களும் நீண்ட நேரம் சந்தித்துக் கிடந்தன. அதுவரை விளங்காத பல விஷயங்கள் இளநங்கைக்கு விளங்கவும் தொடங்கியதால் அவள் வதனத்தில் வியப்புப் படர்ந்தது. அவள் வாய், பேசும் சக்தியை இழந்து கிடந்தது.

மகளின் வியப்பைக் கண்ட கோட்டைக் காவலர் சிறிது நேரம் அவள் உணர்ச்சிக் கொந்தளிப்பு அடங்க இடம் கொடுத்துவிட்டு, "இந்தா, இப்படி வா" என்று அழைத்தார். அறையின் மூலையிலிருந்த விளக்கருகில் மகள் வந்ததும் "இப்பொழுதும் இதைப் பார்" என்று அந்த வாலிபன் தந்த பொருளை அவள் கையில் கொடுத்தார்.



ஏற்கனவே அவள் நிலவில் அதைப் பார்த்துக் கொண்டு தான் வந்திருந்தாள். இருப்பினும் அதை மீண்டும் கவனித்தாள். தங்கத்தால் கட்டை விரல் பருமனுக்குக் கோடரி போல் செய்யப்பட்டிருந்த தகட்டின் மேல் ஒரு யானை செதுக்கப்பட்டிருந்தது. அதன்மேல் ஒரு பெரும் முத்தும் ஐந்து சிறுமுத்துக்களும் மீனைப்போல் கைப் பிடியாகப் பதிக்கப்பெற்றிருந்தன. அந்தப் பதக்கம் புது விதமாயிருந்தது. அது கழுத்தில் அணியப் பயனற்ற தென்பதை அதில் கயிறோ, சங்கிலியோ கோக்க வழியில்லாதது, எடுத்துக் காட்டியது. கையில் கட்ட வேண்டுமானாலும் வேறு தங்க ஆபரணத்தில் புதைத்தால் தான் சாத்தியமென்பதையும் அவள் புரிந்து கொண்டாள். ஆகையால் மீண்டும் குழப்பத்துடன் தந்தையை ஏறெடுத்து நோக்கினாள்.

கோட்டைக் காவலர் சொன்னார், ஆழ்ந்த சிந்தனையுடன், "அது அபூர்வமான பொருள் மகளே! நீ ஓர் அபூர்வமான மனிதனைச் சந்தித்திருக்கிறாய்" என்று.

தந்தையின் குரலால் மேலும் குழப்பமே அடைந்த இளநங்கை கேட்டாள், "அபூர்வ மனிதரா?" என்று.

ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தார் கோட்டைக் காவலர்.

"அப்படியானால் இது!" என்று அந்தப் பொருளைக் காட்டி வினவினாள் இளநங்கை.

கோட்டைக் காவலர் உடனே பதில் சொல்லவில்லை. ஆழ்ந்த யோசனைக்குப் பின்பே வாயைத் திறந்தார். அவர் வாயிலிருந்து உதிர்ந்த ஒற்றைச் சொல், தொலை தூரத்திலிருந்து வருவதைப்போல் கேட்டது இளநங்கைக்கு. "ராஜ முத்திரை!" என்ற ஒற்றைச் சொல்லை ரகசியம், பயம், மரியாதை ஆகிய மூன்றும் கலந்தொலித்த குரலில் கூறினார் கோட்டைக் காவலர்.

## அத்தியாயம் 5

# பஞ்சணை நொந்ததடி

**த**ந்தையும் தானும் மட்டுமே தனித்திருந்த அந்த வேளையில், வேறு யாருமே உட்புகவோ ஒட்டுக் கேட்கவோ சாத்தியமில்லாத அந்த அந்தரங்க அறையில், 'ராஜ முத்திரை' என்ற சொல்லைத் தந்தை எதற்காக அத்தனை ரகசியமாகச் சொன்னார் என்பது புரியவில்லை கோட்டைக் காவலன் செல்விக்கு. அந்த வாலிபன் தந்த பொருளைக் கண்டதும் அவர் பிரமித்தது. அதுபற்றி விவரித்தபோது அவர் பதறியது. எல்லாமே விளங்காத விந்தையாயிருந்தது இளநங்கையின் இதயத்துக்கு. ராஜ முத்திரை என்று சொன்ன பிறகு அவர் தன்னை நோக்கிய நோக்கும் விசித்திரமாயிருந்தது அவள் புத்திக்கு. உண்மையில் அந்தப் பொருள் யாருடைய ராஜ முத்திரை யாகவும் இருக்க முடியாதென்பதை அவள் உணர்ந்தே இருந்தாள். "சோழர்கள் இலச்சினையாயிருந்தால் புலி பொறித்திருக்க வேண்டும். இப்பொருள் சேரமன்னர்களைச் சேர்ந்ததானால் வில்லும் அம்புமிருக்க வேண்டும். பாண்டிய மன்னர்கள் முத்திரையானால் பொறிக்கப்பட வேண்டியவை இரண்டே இரண்டு மீன்கள். இதில் கோடரி இருக்கிறது. யானை இருக்கிறது. ஒற்றை மீனிருக்கிறது. இதைக் கண்டு ராஜமுத்திரை என்கிறார்; மிரளுகிறார் தந்தை. இதற்குக் காரணமென்ன?" என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள் அவள்.

அவளுடைய தந்தையும் அந்தச் சில விநாடிகளில் தீவிர சிந்தனையிலேயே இறங்கியிருந்தார். தான் ராஜ முத்திரை என்று உண்மையை உதிர்த்த பிறகும்கூடத் தனது மகள் அதைப்பற்றி வியப்பைக் காட்டாதிருந்தது அவருக்கு



எந்த விதத்திலும் ஆச்சரியமாயில்லை. ஓராண்டு காலமாகப் பாண்டி நாட்டில் ஏற்பட்டுக் கொண்டிருந்த மாபெரும் மாற்றங்களை அக்கம் பக்கத்து அரசுகளே உணராதிருக்க, ராஜரீகத்தைப்பற்றி ஏதுமறியாத இளநங்கை என்ன புரிந்து கொள்ள முடியும் என்றே எண்ணினார் அவர். இருப்பினும் ராஜமுத்திரையைப்பற்றியோ அதைக் கொடுத்தனுப்பி யிருக்கும் வாலிபனைப்பற்றியோ அவள் ஏதாவது உளறி விட்டால் பேராபத்து நேர்ந்துவிடுமென்பதை அவர் உணர்ந்திருந்ததால், அப்படி ஏதும் நேரிடாது தடுக்க மகளை எச்சரிக்க முற்பட்டு விஷயத்தையும் விளக்க லானார். அதை முன்னிட்டுக் கவலையும் அன்பும் மிகுந்த குரலில், "மகளே! என்று அழைக்கவும் செய்தார்.

இளநங்கை மெல்லத் தன் விழிகளை உயர்த்தி அவரை நோக்கி, "ஏன் அப்பா?" என்று வினவினாள்.

"உன் சிந்தனையில் ஓடுகிற சந்தேகம் புரிகிறது எனக்கு" என்றார் கோட்டைக் காவலர் நிதானமாக.

"சந்தேகமா?" என்று ஏதும் சந்தேகமில்லாததுபோல் பாசாங்கு செய்தாள் இளநங்கை.

"சங்கடப்படாதே மகளே! உனக்கேற்பட்டுள்ள சந்தேகம் இன்று பாண்டிய நாடுள்ள நிலையில் யாருக்கும் ஏற்படுவது சகஜம்" என்ற கோட்டைக்காவலர், "இந்த ராஜ இலச்சினை இன்று எந்த மன்னருக்குமில்லையே? இதைப்போய் ராஜ இலச்சினை என்று கூறுகிறாரே தந்தை என்று வியக்கிறாய் நீ." என்றும் குறிப்பிட்டார்.

தன் மனத்திலிருந்ததை தந்தை அப்படியே சொல்லி விட்டதைக் கண்ட இளநங்கை பெருவியப்புக்குட்பட்டு, "ஆம், தந்தையே எனக்கு வியப்பாகத்தானிருக்கிறது." என்று ஒப்புக் கொண்டாள்.

கோட்டைக் காவலர் சற்றே நின்ற இடத்தில் அசைந்தார். பிறகு சொன்னார் மிக நிதானமாக, "மகளே! இந்த வியப்பு உனக்கு மட்டுமல்ல. இதைப் புதிதாகப் பார்க்கும் யாருக்குமே ஏற்படும். இதைப் பற்றிய விவரம்

பாண்டியரின் பண்டைக்காலச் சரித்திரத்துடன் தொடர்பு கொண்டது." என்று.

"பண்டைக் காலச் சரித்திரமா? அதைப்பற்றி இப்பொழுது என்ன? நிகழ்காலத்துக்கும் அதற்கும் என்ன சம்பந்தம்?" என்று கேட்டாள் இளநங்கை.

கோட்டைத் தலைவர் கண்களில் தீப்பொறி பறந்தது. "பெண்ணே! முட்டாள்கள் கேட்கும் கேள்வி இது. பண்டைக் காலமில்லாமல் நிகழ்காலம் ஏது? சரித்திர மில்லாமல் சமுதாய வளர்ச்சி ஏது? மிருகங்களுக்கும் மனிதனுக்கும் ஒரு வித்தியாசம்தானிருக்கிறது மகளே. அதுதான் வரலாறு. மனிதன் சரித்திரத்தையும் சம்பிர தாயங்களையும் சிருஷ்டித்திருக்கிறான். அவை ஒரு பெரும் சங்கிலித்தொடராக ஆண்டுகளில் வளர்ந்துகொண்டு போகின்றன. அறிவாளியாயிருப்பவன் அதன் ஆதியையும் பார்க்கிறான். தானிருக்கும் அன்றைய நிலையையும் பார்க்கிறான். அந்தப் பழைய பெருமைக்குத் தன்னை வளர்த்துக் கொள்ளப் பார்க்கிறான். அந்த வளர்ச்சியில் பழைய குறைகளை நிவர்த்தித்துக் கொள்ளவும் முயலுகிறான். சரித்திரம் இதற்கு உதவுகிறது. சரித்திரம் இதற்கு மட்டுமல்ல உதவுவது மகளே! சரித்திர நிகழ்ச்சிகளை வைத்துப் புலவர்கள் காப்பியங்களை இயற்றி யிருக்கிறார்கள். இல்லையேல் இந்நாட்டுக்குச் சிலப்பதி காரம் ஏது? கலிங்கத்துப்பரணி தானேது? சரித்திர நோக்கில் அறிவு விசாலப்படுகிறது. இலக்கியம் மலருகிறது. வேறெதிலும் இலக்கியம் மலருவதில்லை. இதையறியாத வர்கள் கோஷ்டியில் நீயும் சேரவேண்டாம். புத்திசாலியாக விஷயங்களைப் பார்," என்று விடுவிடுவென்று பேசிக் கொண்டுபோன கோட்டைத் தலைவர் சற்று நிதானித்து, "மகளே! உன்னைத் தொடர்ந்து வந்த வாலிபன் கைக் கங்கணத்திலிருந்த பெரிய முத்தைப்பற்றி நீ சாதாரணமாக நினைத்தாய். நான் பாண்டி நாட்டுச் சட்ட திட்டத்தை விளக்கியபின், அந்த முத்து அரச குலத்தைச் சேர்ந்தவரிடந்



தானிருக்கமுடியும் என்பதைப் புரிந்துகொண்டாயல்லவா?" என்று வினவினார்.

'புரிந்து கொண்டேன்' என்று சொல்வதற்குப் பதிலாகத் தலையை அசைத்தாள் இளநங்கை.

கோட்டைத் தலைவர் மேலும் கனவில் பேசுபவர் போல் பேசத் தொடங்கி, "அப்படி இதுவும் ஒரு பொருள் மகளே! இதன் சரித்திரம் மிகப் பழமைகொண்டது. சுமார் ஐந்நூறு ஆண்டுகட்கு முற்பட்டது."

இளநங்கை விஷயத்தை அறிந்துகொள்ளும் நோக்கத் திலிருந்ததால் ஏதும் பேசவில்லை. "சொல்லுங்கள் தந்தையே" என்றாள்.

"ஐந்நூறு ஆண்டுகட்கு முன்னால், பொருநையில் மணலடித்து மரக்கலங்கள் உட்புகமுடியாத நிலை ஏற்படுவதற்கு முன்னால் இந்தக் கொற்கை பெரும் துறை முகமாயிருந்ததென்று சொன்னேனல்லவா?" என்றார் கோட்டைக் காவலர்.

"ஆம், சொன்னீர்கள்," என்றாள் இளநங்கை.

"அந்த நாட்களில் பாண்டி நாட்டுக்கு இன்றி ருப்பதைப் போல் தலைநகரம் ஒன்றல்ல..."

"இரண்டா!"

"ஆம், இரண்டு, ஒன்று, மதுரை, இன்னொன்று இந்தக் கொற்கை."

"எதற்காக இரண்டு தலைநகரங்கள்? பாண்டி மன்னர் ஆட்சி பிரிந்து கிடந்ததா?"

"இல்லை ஆட்சி ஒன்றுதான். ஆனால் தலை நகரங்கள் இரண்டு மதுரை, மன்னரின் தலைநகர். கொற்கை, பட்டத்து இளவரசரின் தலைநகர். பாண்டி நாட்டுச் செல்வமெல்லாம் கொற்கையிலிருந்ததால், அந்தச் செல்வத்தை ஈடில்லா முத்து வாணிபத்தைப் பாதுகாக்கத் தேவையிருந்தது. அதற்காகப் பட்டத்து இளவரசர் கொற்கையில் இந்தக் கோட்டையில் வசித்தார். பாண்டி நாட்டின் பெரும் படைப் பிரிவு ஒன்றும் இங்கிருந்தது.

இந்தக் கோட்டையையும் முத்துக் கடலையும் முத்தங்காடியையும் யவன வீரர்கள் பாதுகாத்து வந்தனர். இன்று கூடக் கொற்கைக்கும் காயல் பட்டணத்துக்கும் இடையிலுள்ள சாலை பெரியதுதான். ஆனால் இதைவிடப் பன்மடங்கு பெரிய சாலைகள் சதா உருண்டோடும் ரதங்கள், புரவி வீரர்கள் கூட்டங்கள் இவை இருந்ததாகக் கூறப்படுகிறது, கொற்கையில். கொற்கையின் பொற்காலம் அது. அந்தக் காலத்தில் இங்கிருந்த இளவரசருக்குத் தனிப்பட்ட படைப் பிரிவு மட்டுமல்ல. விசேட அதிகாரங்கள் மட்டுமல்ல. தனி இலச்சினையும் இருந்தது..." என்ற கோட்டைத் தலைவர், தமது மகளை அர்த்த புஷ்டியுடன் நோக்கினார்.

"அந்த இலச்சினை...?" புரிந்து கொண்ட பாவனையில் கேட்டாள் இளநங்கை.

"நீ கையில் வைத்திருப்பது பாண்டி நாட்டின் இரண்டாவது ராஜமுத்திரை. இளவரசர்களின் பிரத்தியேக இராஜஇலச்சினை." என்றார் கோட்டைக் காவலர்.

"அப்படியா?" என்று வினவினாள் இளநங்கை. ஏதோ கேட்கவேண்டும் என்பதற்காக.

"ஆம் மகளே! கோடரியும் யானையும் கலந்த சின்னம் அந்தப் பழைய ராஜமுத்திரை.* அது மீண்டும் அமுலுக்கு வந்திருக்கிறது. பாண்டிநாட்டு மகர மீனையும் இணைத்து இது அமுலுக்கு வந்திருப்பது என்னையும் இன்னும் சிலரையும் தவிர யாருக்கும் தெரியாது. ஆனால் இத்தனை துரிதத்தில், இப்படி எதிர்பாராதவிதமாக, அதுவும் உன் மூலமாக என்னிடம் இது வரும் என்று நான் எதிர்பார்க்கவேயில்லை. அதுவும் இதைக் கொடுத்தனுப்பியிருப்பவர் பத்து நாட்களாகக் கொற்கையில் பகிரங்கமாக நடமாடிக் கொண்டிருப்பதும் கோட்டைப் பக்கம் தலை காட்டாதிருப்பதும் விந்தையாயிருக்கிறது" என்று கோட்டைக் காவலர் கவலையுடன் கூறினார்.

* The special crestor cognizance of the princes of Korkai was the battle axe often associated with the elephant – "Early History of India" By Vincent A. Smith, Page 407.



"யாரவர்?" என்று வினவினாள் இளநங்கையும் குழப்பத்துடன்.

"எனக்குத் தெரியவில்லை மகளே, யாரோ அரச குடும்பத்தைச் சேர்ந்தவர். இளவரசர்களில் ஒருவராகக் கூட இருக்கலாம். யாரென்பதை நாளைக் காலையில்தான் நாம் அறியமுடியும். அதுவும் அவர் சொன்னபடி கோட்டைக்கு வந்தால்," என்றார் கோட்டைக் காவலர்.

"வராவிட்டால்?" என்று கேட்டாள் இளநங்கை.

"வீரர்களை விட்டுக் கொற்கையைச் சல்லடை போட்டுச் சலிக்கவேண்டும்!"

"ஏன்?"

"அவரைக் காப்பது எனது கடமை. இந்த ராஜ முத்திரையைப் பார்த்தபின்பு அதை வைத்திருப்பவருக்குப் பணிந்து சொற்படி நடக்கவேண்டியது என் பொறுப்பு. அவர் யார்? ஏன் வந்திருக்கிறார்? இங்கு என்ன எதிர் பார்க்கிறார்? ஏதும் புரியவில்லையே மகளே! சரி சரி, நீ போய் உறங்கு. இன்னும் ஒரு ஜாமமிருக்கிறது. எப்படியும் நான் உறங்க முடியாது" என்றார் கோட்டைக் காவலர்.

இளநங்கை வேறு ஏதும் பேசாமல் தந்தையிடம் விடை பெற்றுக்கொண்டு தனது அறையை நோக்கி நடந்தாள். அறைக்குள் சென்றதும், அங்கு வாயிற்படியில் உறங்கிக் கொண்டிருந்த பணிமகளை எழுப்பாமலே தனது பஞ்சணையில் சென்று மெல்லப் படுத்தாள். படுத்தாளே தவிர உறக்கம் சிறிதும் பிடிக்கவில்லை அவளுக்கு. உலகத்திலேயே பெயர்போன மெல்லிய துணியில் இலவம் பஞ்சடைத்த இன்பப் பஞ்சணைதான் அது. அவளுக்குத் தலையிலும் முப்புறங்களிலும் கிடந்த அணைகளும் மென்மையாகவே இருந்தன. அலங்கார தீபத்தின் ஒளியும் மிக இன்பமாகவே இருந்தது. ஆனால் அத்தனை இன்பத்தையும் அவளால் சிறிதளவும் அனுபவிக்க முடியவில்லை. வேதனையே அவள் இதயத்தை வளைத்துக் கொண்டிருந்தது. சில சமயங்களில் வெட்கமும் சூழ்ந்து கொண்டது. அன்றிரவின் நிகழ்ச்சிகளையே அவள்

திரும்பத் திரும்ப எண்ணிப் பார்த்தாள். அந்த வாலிபனின் சிரிப்பு உதிர்த்த கண்கள் அப்பொழுதும் அவளைப் பார்த்து நகைத்தன. அவனது ஒரே சீரான பாதங்கள் அவள் இதயத்தின் மீதும் நடந்தன. அவன் தன்னை மடியில் போட்டுக் கொண்டு இடைக்குச் சிகிச்சை செய்ததை எண்ணியதும், அவள் முகம் மட்டுமல்ல, இதயம் கூடச் சிவந்தது. 'இடைக் காயத்தைப் பரிசோதிக்கக் கையை வைத்து அத்தனை அழுத்த வேண்டுமா? சேலையை அத்தனை தூரம்...' என்று எண்ணத் துவங்கி எண்ணத்தை அறுத்துக் கொண்டாள். 'அவன் யாராயிருக்கும்? இளவரச னாயிருப்பானா?' என்றும் கேட்டுக் கொண்டாள். 'எனக்கெப்படித் தெரியும்? தந்தையே குழம்புகிறாரே! அடடே! தந்தையிடம் சொல்ல மறந்துவிட்டேனே. அவர் இடையில் ஒரு பொன் கோடரி வைத்திருந்தாரே! அதைச் சொல்லவில்லையே நான்!' என்று ஏதேதோ உள்ளூர பேசிக் கொண்டு கண்களை மூடினாள். எதையும் நிவர்த்திக்கும் அசதி அவளை ஆட்கொண்டது.

அவள் கண்விழித்தபோது, பொழுது நன்றாக புலர்ந்திருந்தது. தூரத்திலிருந்த காயல் துறைமுகத்தில் எழுந்த அலைகளின் இரைச்சல் மிகக் கம்பீரமாகக் காதில் கேட்டது. தோப்பு மரங்களிலிருந்த நறுமலர்களைத் தாங்கி வந்ததால், கடற்காற்று உப்பின் வாசனையைத் தரவில்லை. நறுமணத்தையே தந்தது. அவள் கண்ணுக்கெதிரே இருந்த வளையத்தில் சிறு பறவைகள் இரண்டு உட்கார்ந்து ஆடிக் கொண்டிருந்தன. தோப்பிலிருந்து வந்த பறவைகளில் இரண்டு, சாளரத்தின் கட்டையிலும் உட்கார்ந்து 'கூகூ' என்று கூவி அவளை எழுந்திருக்கத் தூண்டின.

இளநங்கை கண்களை நன்றாகக் கசக்கி விட்டுக் கொண்டாள். பஞ்சணையில் புரண்டாள். பிறகு மெல்ல எழுந்திருந்து தலையணையில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டாள். அந்தச் சமயத்தில் பணிமகள் வெளியிலிருந்த படி, "அம்மா! அம்மா! எழுந்து விட்டீர்களா?" என்று அவசரத்துடன் வினவினாள்.



"எழுந்துவிட்டேன். வா உள்ளே" என்று இளநங்கை உத்தரவிட உள்ளே நுழைந்த பணிமகள், அவளைப் பார்த்து அசந்து நின்றுவிட்டாள் சில விநாடிகள்.

அவள் அப்படி நின்றதைப் பார்த்த இளநங்கை, "ஏனடி அப்படி விழிக்கிறாய்?" என்று கேட்டாள்.

"உங்கள் முகம் பேயறைந்த மாதிரி இருக்கிறது"

"இருக்கட்டுமே."

"சிறிதும் உறங்கவில்லையா?"

"இல்லை"

"ஏன்?"

"பஞ்சணை நொந்ததடி" என்று சொல்லி நகைத்தாள் இளநங்கை.

அந்த உற்சாகத்தில் பங்கு கொள்ள மறுத்த பணிமகள் சொன்னாள், "அம்மா! சீக்கிரம் நீராடி உடை மாற்றிக் கொள்ளுங்கள். நான் தலை சீவிச் சிங்காரிக்கிறேன்." என்றாள்.

"ஏன் எனக்குக் கல்யாணமா?" என்று கேட்டாள் இளநங்கை.

"எனக்குத் தெரியாது. சீக்கிரம் வரச் சொன்னார் உங்கள் தந்தை, அதுவும் நன்றாக அலங்கரித்துக் கொண்டு." என்றாள் பணிமகள்.

"என்ன அவசரமாம்?" என்று கேட்டாள் இளநங்கை.

"அவர் வந்திருக்கிறார்" என்ற பணிமகள் குரலில் அதிர்ச்சி இருந்தது.

"யார் அந்த அவர்!" சீற்றமிருந்தது இளநங்கையின் கேள்வியில்.

"இளவரசர்!" என்று பணிமகள் மிகப் பணிவுடன் கூறினாள்.

அத்தியாயம் 6

# மறைந்த பிணங்கள்

இளவரசர் என்ற சொல்லைக் கேட்டதுமே மிதமிஞ்சிய வியப்பு மண்டிய விழிகளைப் பணிமகள் மீது திருப்பினாள் இளநங்கை.

"என்ன! இளவரசரா? எந்த நாட்டு இளவரசர்?" என்று வினவவும் செய்தாள் குரலில் வியப்பு ஒலிக்க.

"எனக்குத் தெரியாது. தங்கள் தந்தை அவரை இளவரசர் என்று அழைத்தார். தங்களை உடனே அழைத்து வரும்படியும் அவசர அவசரமாக உத்தரவிட்டார். அது மட்டுமல்ல. உத்தரவைக் கேட்டுக்கொண்டு நகர முயன்ற என்னை மறுபடியும் விளித்து, 'இளநங்கை இளவரசர் முன்பு வரும்போது தனது நிலைக்குத் தகுந்தபடி வரட்டும்' என்றும் கூறினார். இவ்வளவுதான் நான் அறிந்தது." என்றாள் பணிமகள்.

அத்தனை தூரம் பணிமகள் விவரித்தும் துரிதப்படுத்தியும் கூட இளநங்கை அதிக துரிதத்தைக் காட்டாமல் நிதானமாகவே பஞ்சணையிலிருந்து எழுந்திருந்தாள். வந்துள்ள மனிதன் தன்னைப் பத்து நாட்களாகத் தொடர்ந்து வரும் வாலிபனென்பதில் அவளுக்குச் சிறிதும் சந்தேகமில்லை. தவிர அந்த வாலிபன் இளவரசனென்ன, மதுரையின் மன்னனாகவே இருந்த போதிலும் தான் துரிதப்பட வேண்டிய அவசியமில்லையென்று நினைத்தாள் அவள். ஆகவே எழுந்து இடையிலிருந்த காயக்கட்டில் நீர் படாமல் எச்சரிக்கையுடன் நீராட்டம் முதலிய காலைக் கடன்களை மிக நிதானமாகவே முடித்துக் கொண்டு, பணிமகளைத் தலை



சிவ அனுமதித்தாள். இளநங்கையின் நிதானம் பணிமகளின்
மனத்தைத் திக்கு திக்கென்று அடித்துக்கொள்ள வைத்த
தானாலும், வீண் தாமதமானால் கோட்டைக் காவலர் ஏது
சொல்வாரோ என்ற பயம் அவளைப் பிடித்ததானாலும்,
அவள் இளநங்கையைத் துரிதப்படுத்த ஏதும் செய்ய
முடியாதவளானாள். இளநங்கை சொற்படி நிதானமாகவே
அவள் நீண்ட கருங்குழலைச் சீவிப் பின்னலிட்டு முடித்து,
அதற்குண்டான ஒற்றை முத்துச் சரத்தையும் அதன்பின்
புறத்தில் வளைத்துச் சூட்டினாள். பிறகு தானே
திலகமிட்டுச் சாதாரண பஞ்சாடை புனைந்த இள
நங்கையைப் பார்த்து, "அம்மா! வேறு பட்டாடைகள்
இருக்கின்றனவே! அவற்றில் ஒன்றைக் கட்டிக் கொள்ளக்
கூடாதா?" என்று கெஞ்சினாள் அந்தப் பணிமகள்.

"ஏன் பஞ்சாடை கட்டினால் என்ன?" என்று
கேட்டாள் இளநங்கை.

"தங்கள் தந்தை..." என்று இழுத்தாள் பணிமகள்.

"தந்தை பட்டாடைதான் கட்டிக்கொண்டு வரச்
சொன்னாரா?" இளநங்கையின் கேள்வியில் கேலி இருந்தது.

"இல்லை, தங்கள் நிலைக்குத் தகுந்தபடி உடுத்து வரச்
சொன்னார்."

"அப்படித்தான் உடுத்தியிருக்கிறேன்."

"நீங்கள் கோட்டைக் காவலர் செல்வி அல்லவா?"

"ஆமாம்."

"கோட்டைக் காவலர் பாண்டி நாட்டின் பெரும்
படைத் தலைவர்கள் கோஷ்டியில் சேர்ந்தவர்?"

"ஆமாம்."

"அவர் மகள்."

"பட்டாடைதான் கட்ட வேண்டுமா?"

"இளவரசர் முன்பு போகிறீர்கள்?"

"பஞ்சாடை கட்டினால் அந்த மன்மதன் என்னைப்
பார்க்கமாட்டாரோ? போயும் போயும் ஆடையால்தானா
எனக்கு மதிப்பு? தவிர..."

"என்னம்மா?"

"தமிழகத்தின் ஆடைகளில் எதை ரோமாபுரியின் சிங்காரிகளும் யவன அழகிகளும் விரும்புகிறார்கள் தெரியுமா? பட்டாடையையல்ல. நமது தமிழகத்தின் இணையற்ற கண்ணாடி போன்ற மெல்லிய பஞ்சாடையை. அதைத் தான் அணிந்திருக்கிறேன் இன்று. இதன் உயர்வை அறிந்து கொள்ள அந்த இளவரசனுக்குப் புத்தியிருக்கிறதா, பார்ப்போம்!" என்று கூறிவிட்டு, பணிமகளை அழைத்துக் கொண்டு தந்தையின் அறையை நோக்கிச் சென்றாள்.

தந்தையின் அறைக்குச் சென்ற வழிமட்டுமல்ல, அவர் அறை வாசலிருந்த விதமும் விசித்திரமாயிருந்தது இள நங்கைக்கு. ஓர் இளவரசன் வந்தால் செய்ய வேண்டிய கட்டுக்காவல் மரியாதை எதையும் காணோம் தந்தை அறைக்குச் செல்லும் படிகளில். அறை வாயிலில் மருந்துக்குக் கூடக் காவலர் யாரையும் காணோம். இதனால் வியப்புற்ற இளநங்கை உடன் வந்த பணிமகளை நோக்கி, "செல்வி! இளவரசருக்கு வரவேற்பு பலமாயிருக்கிறதே!" என்று ஏளனம் சொட்டிய குரலில் வினவினாள்.

"ஆமம்மா! எனக்கும் வியப்பாகவே இருக்கிறது. சாதாரணமாக இருக்கும் காவலர் யாரையுமே காணோமே" என்றாள் பணிமகள்.

"ஒருவேளை வந்திருப்பவர் இளவரசரல்லவோ?" என்று வினவினாள் இளநங்கை.

"தந்தையே சொன்னாரே இளவரசரென்று!" என்றாள் பணிமகள் செல்வி.

அதற்குமேல் கேள்வி ஏதும் கேட்காமல் செல்வியை முன்போக விட்டுப்பின் தொடர்ந்தாள் இளநங்கை. முன் சென்ற செல்வி தன்வரவை அறிவிக்கவே, தந்தையின் அறைக்குள் நுழைந்த இளநங்கை தன் தந்தையுடன் அந்த வாலிபனும் சாளரத்தின் அருகில் நின்றிருந்ததைக் கவனித் தாள். அசாத்திய உயரத்தின் காரணமாக அவன் வளைந்து நின்றே சாளரத்துக்கு வெளியே எட்டிப் பார்க்க வேண்டி யிருந்ததைப் பார்த்து, 'அப்பா! எத்தனை உயரம்!' என்று



பிரமிக்கவும் செய்தாள். அத்தனை உயரமிருந்தும் பார்வைக்கு அந்த உயரம் விகாரத்தை அளிக்கவில்லை. நீண்ட கைகளும் கால்களும், மெல்லிய உடலும் அந்த உயரம் சரிதானென்பதை வலியுறுத்தின. அவள் உள்ளே நுழைந்ததும், சாளரத்திலிருந்து திரும்பிய அந்த வாலிபன், பத்து நாட்களாக அவள் பார்த்துப் பார்த்துப் பயந்திருக்கும் அந்த நிதானமான ஆராய்ச்சிப் பார்வையை அவள்மீது செலுத்தினான். அந்தக் கண்களை அவளும் பார்த்தாள். அவற்றிலிருந்தது உறுதியா, மென்மையா, கடினமா என்பதை அவளால் புரிந்துகொள்ள முடியவில்லை. அவன் மேலுதட்டில் சற்றே அரும்பு விட்டுக் கொண்டிருந்த மெல்லிய மீசை மட்டும் இல்லையானால், அவனைக் குழந்தையென்று மதிப்பிடத்தான் தோன்றுமென அவள் எண்ணினாள். ஆனால் அவன் இடையிலிருந்த அந்தத் தங்கக் கோடரியும், பெருவாளும், கண்களின் நிதானமும், அவன் குழந்தையல்லவென்பதைச் சந்தேகமற நிரூபித்தன. அவன் கண்களில் திடீரென எழுந்த ஓர் ஒளிவீச்சு, ஓர் ஆராய்ச்சிப் பார்வை, அவள் கண்களை நிலத்தில் நிலைக்க விட்டது.

அவளை ஒரு விநாடிதான் பார்த்தான், அந்த வாலிபன். அதற்குள் அவள் அழகிய கருவிழிகள், பின்னால் பின்னிக் கொண்டையிட்ட போதிலும், முன்னால் முரட்டுத்தனமாகச் சிதறி நின்ற இரண்டொரு கருங்குழ லிழைகள், கழுத்திலிருந்த சிறு முத்தாரம், அலட்சியத்துடன் ஒருமுறை குவிந்து அகன்ற பவள உதடுகள், வெண்கழுத்து, கீழோடிய சிற்றாடை, மறைத்தும் மறையாதிருந்த கால்களின் செழுமை, இவையனைத்தும் எடை போட்ட அவன், பத்து நாட்களாகக் காணாத ஒன்றை அன்று கண்டான். அதுதான் அவள் அணிந்திருந்த வெண்ணிறப் பஞ்சாடை. அதைக் கண்டதும் அவன் இதழ்கள் இளநகை கூட்டின. கோட்டைக் காவலர் தனது மகளை அவனுக்கு அறிமுகப்படுத்திய போதும், அந்த இளநகை தொக்கிக் கொண்டிருந்தது அவன் உதடுகளில்.

அதைக் கவனியாத கோட்டைக் காவலர், "இவள் என் மகள் இளநங்கை! அம்மா! இவர் இந்நாட்டு இளவரசர் ஜடாவர்மன் வீரபாண்டியத்தேவர்; பாண்டியப் பிரஜைகள் அனைவரின் வணக்கத்துக்கும் உரியவர்," என்றார்.

இளநங்கை, இம்முறை சற்று பயத்துடனேயே இளவரசனை ஏறெடுத்து நோக்கினாள். அப்படியொரு இளவரசன் பாண்டிய நாட்டில் உண்டு எனக் கேட்டதே இல்லை அவள். மதுரையில் ஓராண்டுக்கு முன்னால் அரியணை ஏறிய ஜடாவர்மன் சுந்தரபாண்டித் தேவரைப் பற்றி மட்டுமே அவள் கேள்விப்பட்டிருந்தாள். அவளென்ன, மக்களுக்கும் மன்னர் ஒருவரைப் பற்றித்தான் தெரியும். பாண்டிய மன்னர் குடும்பத்தில் அப்பொழுது பல பிரிவுகள் இருந்தன; பல இளவரசர்களும் இருந்தார்கள். யார் எவர் என்பதை மக்கள் அறிய வசதியுமில்லை; மக்களுக்கு அத்தகைய உணர்வுமில்லை.

பாண்டி நாடு பெரிதும் சீரழிந்த காலம் அது. இப்பொழுது மைசூர் என வழங்கும் ஹொய்சாள நாட்டு மன்னன் சோமேச்வரனும், சோழநாட்டு மூன்றாம் இராஜேந்திரனும், பல்லவனான கோப்பெருஞ்சிங்கனு மாகச் சேர்ந்து பாண்டி நாட்டை உருத் தெரியாமல் அடித்திருந்த காலம் அது. அந்தக் காலத்தில் பாண்டி நாட்டு மன்னர்களே இரண்டாம் பட்சமாகக் கருதப்பட்டார்கள். பாண்டி ராஜ பரம்பரையில் இளவல்களை யார் சட்டை செய்யப் போகிறார்கள்? இத்தகைய நிலையில் பாண்டியநாடு இருந்த சமயத்தில், கி. பி. 1251-ஆவது ஆண்டில், ஜடாவர்மன் சுந்தர பாண்டியன் மதுரையின் அரியணையில் ஏறினான். இளவயது முதல் அவன் எதிலும் காட்டிய அலட்சியத்தையும், எதிலும் முரட்டுத்தனமாக நடந்து கொள்ளும் சுபாவத்தையும் கவனித்த பாண்டிய நாட்டு மக்கள் அவன் காலத்தோடு பாண்டிய நாட்டு வரலாறு முடிந்துவிடும் என்றே கருதினார்கள். ஆனால் வரலாறு கூறிய கதை வேறு. அவன் வாள் சென்ற இடங்கள் பல. அவன் முத்திரை



பதிந்த இடங்கள் அனந்தம். அதற்குப் பூர்வாங்கமாகத்தான் ஜடாவர்மன் வீரபாண்டியன் கொற்கைக்கு வந்திருந்தான். இளவரசனை யாரும் எந்த விழாவிலும் பார்த்ததில்லையாகையால், அவன் கொற்கையில் சுற்றிக் கொண்டிருந்ததை யாரும் கவனிக்கவில்லை. அந்தப் பத்து நாட்களில் அவன் கைக் கங்கணத்திலிருந்த பெருமுத்தையும் அவன் இடையிலிருந்த சிறு பொன் கோடரியையும் தவிர அவனை இளவரசனாக நினைப்பதற்கு வேண்டிய படாடோபமெதுவும் அவனிடம் காணப்படவில்லை. சாதாரண வீரர் அணியும் உடையையே அவன் அணிந்திருந்தான். சாளரத்தருகில் அன்று காலை நின்ற போதும் அதே சாதாரண அங்கி, காலில் சுருட்டிக் கட்டப்பட்ட இடை வஸ்திரம் இவற்றைத்தான் அணிந்திருந்தான். காதில் மட்டும் இரண்டு சாதாரண பொன் வளையங்கள் இருந்தன. கழுத்தின் புலிநகத்தின்மீது எழுப்பப்பட்ட ஒரு முத்து மீன் தங்கச் சங்கிலியில் ஆடிக்கொண்டிருந்தது. அத்தகைய வீரச் சங்கிலியை அந்தக் காலத்தில் பலர் அணிந்திருந்தபடியால், அதிலிருந்தும் இளவரசனை மாற்றிக் காட்டக் கூடியது ஏதுமில்லை.

இளவரசனை ஏறெடுத்து நோக்கியபோது இத்தனை எண்ணங்களும் இளநங்கையின் இதயத்தில் ஓடின. அவள் எண்ணங்களை விநாடி நேரத்தில் ஊகித்துக்கொண்ட வீர பாண்டியன், கோட்டைக் காவலனை நோக்கி, "காவலரே! பாண்டிய மன்னரையே பலருக்குத் தெரியாது. புதிதாக ஏற்பட்டிருக்கும் இளவரசனை யாருக்குத் தெரியும்? உமது மகள் வியப்பதில் விந்தை ஏதுமில்லை," என்றான்.

இளநங்கை தனது தவறை உணர்ந்துகொண்டாள். ஒரு விநாடி தலை தாழ்த்தி வணங்கினாள். பிறகு சொன்னாள் வணக்கம் மிகுந்த குரலில், "அரசாங்க விஷயங்கள் எனக்கு அதிகம் தெரியாது. மன்னிக்கவேண்டும்." என்று.

"இப்போது வந்திருப்பவர் யாரென்பதைத் தெரிந்து கொண்டாயல்லவா?" என்று கேட்டார் கோட்டைக் காவலர் சீற்றத்துடன்.

"இப்பொழுதுதான் தெரிந்துகொண்டேன்" என்ற இளநங்கை, 'இப்பொழுதுதான்' என்பதைச் சற்று அழுத்திச் சொன்னாள்.

இளவரசன் இதழ்களில் இளநகை அரும்பியது. "இத்துடன் அதை மறந்துவிடுங்கள்" என்றான் அவன் லேசாக நகைத்து.

"ஏன்!" இக் கேள்வியுடன் இளநங்கையின் விழிகளும் அவனை ஏறெடுத்து நோக்கின.

"நான் இங்கு வந்திருப்பது யாருக்கும் தெரியாது! இனித் தெரியவும் கூடாது!" என்றான் வீரபாண்டியன்.

"என் பணிமகளுக்குத் தெரியும்?" என்றாள் இளநங்கை.

"உங்கள் தந்தை அவசரத்தில் சொல்லிவிட்டார். அவளிடமும் சொல்லி வையுங்கள். இதை யாரிடமும் வெளியிட வேண்டாமென்று" என்ற வீரபாண்டியன் குரலில் இனிமையுமிருந்தது; எச்சரிக்கையுமிருந்தது.

இளநங்கை ஏதும் புரியாமல் விழித்தாள். அவள் தந்தைகூடப் பிரமிப்பைக் காட்டினார். இளவரசன் சாளரத்திலிருந்து சற்று நகர்ந்து நின்று அவ் விருவரையும் ஒரு விநாடி நோக்கிவிட்டுச் சொன்னான்: "கவனமாய்க் கேளுங்கள் கோட்டைக் காவலரே! இளநங்கை! உங்களையுந்தான் சொல்கிறேன். மிகுந்த கவனத்துடன் கேளுங்கள். பாண்டிய நாட்டைப் பெரும் புயல் சூழ்ந்து வருகிறது. ஒன்று அதிலிருந்து பாண்டிய நாடு பிழைக்கும், அல்லது அழிந்து விடும். அந்தப் புயலை ஊதியெறிந்துவிடச் சபதம் செய்திருக்கிறார். மன்னர் ஜடா வர்மன் சுந்தரபாண்டியன். அந்தச் சரிதத்தின் முதல் முத்திரைதான் நான் நேற்று உங்களிடம் கொடுத்தனுப்பிய ராஜமுத்திரை. இந்த முத்திரையைப் பற்றிய செய்தி முக்கிய படைத் தலைவர்களுக்கெல்லாம் போயிருக்கிறது. இது பழங்காலத்தில் கொற்கையின் இளவரசர்களின் முத்திரையாயிருந்தது. பிறகு மறைந்தது, இப்பொழுது மீண்டும் அதற்குப் புத்துயிர் கொடுத்திருக்கிறார் பாண்டிய மன்னர். அந்த முத்திரை



என்னுடையது. அதற்கு எத்தனை தூரம் வலுக்கொடுக்க முடியும் என்பதிலிருக்கிறது பாண்டி நாட்டின் பிற்காலம்."

இதைச் சொன்ன இளவரசன் மற்ற இருவரையும் உற்று நோக்கினான். அவ் விருவர் முகத்திலும் குழப்பமே இருந்தது. அதைக் கவனித்த இளவரசன் மேலும் விளக்கினான். "பாண்டி நாட்டின் செல்வம் முத்துக்கள். பெரு முத்துக்கள் நாட்டைவிட்டுச் செல்லக்கூடாதென உத்தரவிருக்கிறது. ஆனால், சென்ற மூன்று மாதங்களில் கடலிலிருந்து எடுக்கப்பட்ட முத்துக்களில், இரண்டு லாகியோவுக்கு மேற்பட்ட எடையுள்ள முத்துக்களில் பாதி மன்னர் பொக்கிஷத்துக்கும் வரவில்லை: முத்தங்காடிக்கும் வரவில்லை. எல்லாம் களவு போய்விட்டன. யார் களவாடினார்கள், எப்பொழுது களவாடினார்கள் என்பது தெரியவில்லை. அதைக் கண்டுபிடிக்கவே மன்னர் என்னை அனுப்பியிருக்கிறார்" என்றான் வீரபாண்டியன்.

"களவைக் கண்டுபிடிக்க இளவரசன் வர வேண்டுமா?" என்று வினவினார் கோட்டைக் காவலர்.

"இது சாதாரணக் களவல்ல!" என்றான் வீரபாண்டியன்.

"வேறென்ன?"

"அரசியல் களவு, பாண்டி நாட்டில் கொற்கை முத்துத் தான் செல்வம். அதை விற்றால்தான் பொன் கிடைக்கும். பொன் கிடைத்தால்தான் பெரும் படை திரட்டலாம். நிர்வகிக்கலாம். அந்த அடிப்படையை நீக்கி விட்டால்?" இப்படிக் கேள்வி கேட்டான் இளவரசன்.

"அப்படியானால்..?" இளநங்கை தடுமாற்றத்துடன் கேட்டாள்.

"எதிரி நாடு ஏதோ இந்தக் களவில் சம்பந்தப்பட்டிருக்கிறது. அது எந்த நாடு என்பது தெரியவில்லை. அதைக் கண்டுபிடிக்க வேண்டுமானால் நான் இளவரசன் என்பது யாருக்கும் தெரியக்கூடாது. ஆனால் சிலருக்குத் தெரியும் என்று நினைக்கிறேன்" என்றான் வீரபாண்டியன்.

"யாருக்கு?" என்று நடுக்கத்துடன் கேட்டாள் இளநங்கை.

"நேற்று, காட்டில் என்னைச் சந்தித்தவர்களுக்கு!"

"ஆம், ஆம், தெரிந்திருக்கவேண்டும். உங்களைக் கொல்வதில் அத்தனை தீர்மானமாயிருந்தார்கள்!"

"பாண்டி நாட்டு எதிரிகள் கொற்கையில் உலாவுவதற்கு அதுவே அத்தாட்சி. கொல்லப்பட்டவர்களைப் பார்த்தால் அவர்கள் எந்த நாட்டவர்கள் என்பதை அறியலாம், எதற்கும் தோப்புப்புறம் போய் வருவோம்" என்ற வீரபாண்டியன் சொல்லுடன் செயல்படவும் தொடங்கி, கிளம்புவதற்கு ஆயத்தமானவன் இளநங்கையை நோக்கி, "நானும், உங்கள் தந்தையும் போய்வருகிறோம். நீங்கள் வரவேண்டாம். உங்கள் இடுப்புக்காயம் வீணாக நெகிழ்ந்து கொள்ளும். தவிர, அங்குள்ள காட்சி பெண்கள் காணக் கூடியதுமல்ல," என்றான்.

"இடுப்பின் காயத்தில் வலி எதையும் காணோம். எதற்கும் நானும் வருகிறேன்" என்ற இளநங்கை, வெளியிலிருந்த பணிமகளை அழைத்து, வந்திருப்பவர் இளவரசரென்பதைப்பற்றி யாரிடமும் மூச்சுவிடவேண்டாமென்று எச்சரித்துவிட்டு, தந்தையுடனும் இளவரசனுடனும் கிளம்பினாள். அம்மூவரும் கோட்டையை விட்டு, வெளியே வந்தபோது ஐந்து நாழிகைக்கு மேலாகிவிட்டதால் இளவெயில் பனிச்சென்றே அடித்துக்கொண்டிருந்தது. தோப்பின் மரங்கள் கிளைகளைக் காற்றில் ஆட்டி அவர்களுக்கு நல்வரவு கூறின. அந்தக் காலைநேர இயற்கையின்பத்தையெல்லாம் இளநங்கை அனுபவித்தாள். அப்படி அனுபவித்து நடக்கையில் பக்கத்தில் தன் தந்தைக்குச் சற்று அப்பால் வந்துகொண்டிருந்த வாலிபனைக் கடைக் கண்ணால் பார்த்தாள். அப்பொழுதும் அவன் நடை நிதானமாக ஒரே சீராக இருந்தது. தோப்பிலுள்ள பிணங்களைப் பார்க்கப்போகிறவன் நடையாக இல்லை அது. அவன் மிக நெஞ்சுரம் படைத்தவனாக இருக்க வேண்டுமென்று நினைத்துக்கொண்டாள் இளநங்கை.



இப்படி அவனைப் பற்றியே நினைத்துக்கொண்டு தோப்பை அடைந்த இளநங்கை, "அதோ, அந்த இடத்தில்தான் அவர்கள் மறைந்து நின்றிருந்தார்கள்" என்று தந்தைக்குக் காட்டுவதுபோல் இளவரசனுக்கும் இடத்தைக் காட்டினாள். இளநங்கையைவிட அந்த இடத்தை நன்றாக உணர்ந்திருந்த இளவரசன், சற்றே இதழ்களில் முறுவல் கூட்டி, மற்ற இருவரும் பின்தொடர முன்னே நடந்தான். தோப்பின் விளிம்புக்குச் சற்றே உள் தள்ளியிருந்த அந்த இடத்திற்குச் சென்ற அம்மூவரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர். அந்த இடத்தில் பெருவியப்பு காத்திருந்தது அவர்களுக்கு. அங்கு ரத்தக்கறைகள் மட்டுமிருந்தன, ஆனால் ஐந்து பிணங்களில் ஒன்று கூட இல்லை. மாயமாய் மறைந்துவிட்டன.

கோட்டைக் காவலரும் இளநங்கையும் வியப்புடன் இளவரசனை நோக்கினர். இளவரசன் முகத்தில் வியப்பு ஏதுமில்லை. அந்தப் பழைய நிதானம் மட்டுமே இருந்தது. சிறிது நேரம் சிந்தனையில் இறங்கிய இளவரசன், "நீங்கள் கோட்டைக்குச் செல்லுங்கள். இன்னும் இரண்டு நாழிகைக் குள் வருகிறேன்" என்று சொல்லிவிட்டுத் தோப்புக்குள் சென்றுவிட்டான்.

இளவரசன், சொற்படி இரண்டு நாழிகைக்குப் பிறகு கோட்டைக்குத் திரும்பிவந்தான்.

"பிணங்களைப்பற்றி ஏதாவது தெரிந்ததா?" என்று வினவினார் கோட்டைத் தலைவர், கவலையுடன்.

"பிணங்கள் மறைந்தவை மறைந்தவைதான். ஆனால் அவற்றின் சுவடு மறையவில்லை!" என்றான் இளவரசன்.

"பிணங்களுக்குச் சுவடா!" கோட்டைத் தலைவர் பிரமிப்புடன் கேட்டார்.

"ஆம், இதோ பாருங்கள்" என்று இளவரசன் கச்சையிலிருந்த ஒரு பதக்கத்தை எடுத்துக் கொடுத்தான்.

அதைக் கண்ட கோட்டைக் காவலர் மலைத்தார். "அப்படியானால் வீரரவி..?" என்று பயத்துடன் வினவினார்.

"கொற்கையில் இருக்கிறார்!" என்று சொன்னான் இளவரசன்.

"அப்படியானால்..?" அச்சம் ஒலித்தது கோட்டைக் காவலர் குரலில்.

"போர் மூளுவது நிச்சயம்!" என்றான் இளவரசன் மிகுந்த நிதானத்துடன்.

## அத்தியாயம் 7

# வீரரவி உதயமார்த்தாண்ட வர்மன்

இளவரசன் சின்னஞ்சிறு அறுந்த சங்கிலியில் ஆடிய அந்தப் பெரும் பதக்கத்தைத் தம்முன் நீட்டிய உடனேயே கோட்டைக் காவலரான வாணாதித்தர் அப் பதக்கம் யாருடையதென்பதைத் தீர்மானித்துக் கொண்டார். அதைக் கையில் வாங்கி இருபுறமும் திருப்பிப் பார்த்தவுடன் தமது தீர்மானத்தில் பிசகு எள்ளளவும் இல்லையென்பதையும் நிர்ணயித்துக் கொண்டார்.

பதக்கத்தில் இருந்த விலை மதிப்பற்ற வைரக்கற்களையும் அதன் நட்ட நடுவில் வில்லும் அம்புமாகத் தெரியும்படி பதிக்கப் பெற்றிருந்த நெருப்புப்போல் சிவந்து துலங்கிய மாணிக்கக் கற்களையும் கண்ட வாணாதித்தர், சில விநாடிகள் திறந்த வாயுடன் அப்படியே நின்றார். அரச இலச்சினைகளைப் பார்த்துப் பிரமிப்பதற்கென்றே அன்று விடியற்காலையில் தாம் கண் விழித்திருக்க வேண்டுமென்றும் தமக்குள் சொல்லிக்கொண்டார்.

பாண்டிய நாட்டு இரண்டாவது ராஜமுத்திரையைப் பார்த்துத் தாம் திகைக்க, சில ஜாமங்களுக்குள் மீண்டும் சேர நாட்டு இராஜ இலச்சினையைக் கண்டு திகைக்கும் நிலை தமக்கு ஏற்பட்டு விட்டதை நினைத்து, 'இந்த இரண்டு ராஜ இலச்சினைகளும் என்ன விபரீதங்களை விளைவிக்கப் போகின்றனவோ?' என்று உள்ளூரத் தம்மையொரு கேள்வியும் கேட்டுக் கொண்டார்.

வில்லும் அம்பும் இணைந்த சேர மன்னனின் இராஜ இலச்சினை பொறித்த அந்தப் பெரும் பதக்கத்தின் சிவப்பு மாணிக்கக் கற்கள் அவர் கண்களை எரித்து விடுவன போல்

பார்த்தன. அந்தப் பதக்கம் சேர மன்னனான வீரரவி உதய மார்த்தாண்டவர்மனுடையது என்பதில் எள்ளளவும் அவருக்குச் சந்தேகமில்லையாயினும், 'எப்படி ஒரு நாட்டு மன்னன் இன்னொரு நாட்டுக்குள் முன்னறிவிப்பில்லாமல் வரமுடியும்?' என்றொரு கேள்வியை எழுப்பிக்கொண்டு இளவரசனையும் ஏறிட்டு நோக்கினார் சந்தேகக் கண்களுடன்.

'போர் மூளுவது நிச்சயம்' என்று அறிவித்த பின்பும், பாண்டிய இளவலான வீரபாண்டியன் பார்வையில், எந்த விதமான மாறுதலும் இல்லாதிருந்ததையும், அவன் போரைப் பற்றிக் கூட சர்வசகஜமாகவே பேசியதையும் கண்ட வாணாதித்தர், தனது சந்தேகத்தைப் பகிரங்க மாகவே வெளியிட்டு, "இது சேர மன்னர் கழுத்திலணியும் பதக்கம் தான். சேரநாடு சென்றபோது பலமுறை நானே இது அவர் மார்பில் துலங்கியதைக் கண்டிருக்கிறேன். ஆனால், முன்னறிவிப்பின்றி அவர் கொற்கைக்கு வர முடியுமா? வருவதுதான் விவேகமா?" என்று கேட்டார்.

வீரபாண்டியன் நிதானமாகவே பதில் சொன்னான். "முன்னறிவிப்புடன் அவர் வருவதில் சில கஷ்டங்கள் இருக்கின்றன. ஆசை அதிகமாகும்போது எந்த மனிதனின் விவேகமும் குறையும். மார்த்தாண்ட வர்மனும் மனிதன் தான்" என்று.

"முன்னறிவிப்புடன் வருவதில் சேர மன்னருக்கு என்ன கஷ்டம்! இங்கு தக்க வசதிகளை நாங்கள் அவருக்குச் செய்து தரமாட்டோமா?" என்று வினவினார் கோட்டைக் காவலர்.

"அவருக்கு வேண்டிய வசதிகளை உங்களால் செய்து தரமுடியாது. அவருக்கு வேண்டியது பாண்டிய நாட்டு முத்துக்குவியல்? அதை இங்கு பகிரங்கமாக வந்து பெற முடியாது" என்றான் இளவரசன்.

"அப்படியானால், சென்ற மூன்று மாதமாகப் பெரு முத்துக்கள் களவு போவதற்கு...?" மேற்கொண்டு வாக்கியத்தை முடிக்காமல் சங்கடப்பட்டார் வாணாதித்தர்.



"மன்னர்கள் எடுக்கும்போது அதற்குக் களவு என்ற சொல் உபயோகப்படுத்தப்படுவதில்லை. கொற்கையைக் கைப்பற்ற வீரரவி நினைக்கிறார். பாண்டிய நாடு படை திரட்டும் நிலையில் இருக்கும்வரையில் அது நடவாது. படை திரட்ட மூலதனம், கொற்கையின் பெருமுத்துக்கள் தரும் வெளிநாட்டுத் தங்கம். ஆகவே, படை திரட்டும் அஸ்திவாரத்தை நீக்கிவிட முயல்கிறார் சேர மன்னர். இன்னும் கொஞ்ச நாள் பாண்டிய நாடு தொடர்ந்து தூங்கியிருந்தால், அவர் எண்ணமும் நிறைவேறியிருக்கலாம். பாண்டிய நாட்டு அரியணையில் இப்பொழுது ஏறியிருப்பது உறங்கும் புலியல்ல; விழித்திருக்கும் பெரும் சுறா மீன். புலி, வில், அம்பு அனைத்தையுமே விழுங்க வல்லது" என்று கூறும்போது, அவன் நிதானக் கண்கள் மட்டும் பயங்கரமாக மாறியதைக் கண்டார் வாணாதித்தர்.

அவர் மட்டுமல்ல அந்த மாற்றத்தைக் கண்டது. இளநங்கையும் கண்டாள். நிதானமும் சிரிப்பும் காட்டும் அந்தக் கண்கள் அத்தனைப் பயங்கரமாக மாறும் என்பதை அவள் அதுவரை ஊகிக்கக்கூட முடியவில்லை. வீரரவி உதய மார்த்தாண்டவர்மன் மட்டும் அந்தப் பார்வையைக் கவனித்திருந்தால், அந்த இடத்திலேயே பிராணனை விட்டிருப்பானென்றுகூடத் தோன்றியது அவளுக்கு. ஆனால் கண்களில் அந்தப் பயங்கரம், நெருப்பு வீசும் அந்த விபரீதப் பார்வை ஒரு விநாடி தான் இருந்தது. அடுத்த விநாடி அந்தக் கண்கள் அவளை நோக்கி நகைத்தன. பிறகு கோட்டைக் காவலரையும் சர்வநிதானத்துடன் நோக்கி, "தங்கள் செல்விக்கு இடைக்காயம் இருக்கிறது. அவரையும் நிற்க வைத்துக்கொண்டு நாம் இதை ஆராய்வானேன்? அவர் இளைப்பாறலாமே?" என்றும் கூறினான்.

இளநங்கையின் விழிகளில் கோபம் துளிர்த்தது. "நானிருப்பது உங்களுக்கு இடைஞ்சலாயிருந்தால் போய் விடுகிறேன்" என்றாள் இளவரசனை நோக்கி.

இளவரசனின் விழிகள் சிரிப்பை உதிர்த்தன. "நீங்களிருப்பதில் எந்த இடைஞ்சலுமில்லை எங்களுக்கு. உங்களுக்குக் காயம் வலிக்குமே என்பதற்காகச் சொன்னேன்" என்ற வீரபாண்டியன், மீண்டும் கோட்டைக் காவலரை நோக்கி, "சேர மன்னர் கொற்கையிலிருப்பது நிச்சயம் வாணாதித்தரே! அதில் எனக்குச் சந்தேகம் சிறிதும் இல்லை. அந்த இலச்சினையை அவரைத் தவிர வேறு யாரும் அணிய முடியாது" என்றான் திட்டவட்டமாக.

"அப்படியானால், அவரும் நேற்றிரவு தோப்பில் மறைந்திருந்தாரா கொலைகாரர்களுடன்?" என்று வினவினார் கோட்டைக் காவலர்.

"இல்லை" என்றான் இளவரசன் திடமாக.

"அப்படியானால் இந்தப் பதக்கம் எங்கு கிடைத்தது உங்களுக்கு?"

பதிலை உடனடியாகச் சொல்லவில்லை இளவரசன். "தோப்பின் மேற்குப் பகுதி கோட்டையைப் பார்த்திருக்கிறது. கிழக்குப் பகுதி எதைப் பார்த்திருக்கிறது?" என்று வினவினான் கோட்டைக் காவலரை நோக்கி.

வாணாதித்தர் வியப்புடன் நோக்கினார் இளவரசனை. "கிழக்குப் பகுதி ஓரளவுதான் கிழக்கு நோக்கிச் செல்கிறது. பிறகு தெற்கே திரும்பி இந்தக் கோட்டையின் தென்புறத்தில் முடிகிறது தோப்பு..." என்றவர் பேச்சைச் சட்டென்று நிறுத்தினார்.

"அந்த விளிம்பிலிருந்து ஒரு பெரும் மாளிகை" என்று முடித்தான் இளவரசன்.

"அதில் நீண்ட நாட்களாக யாருமில்லையே?"

"நீண்ட நாளாகப் பூட்டிக் கிடக்கும் பெரு மாளிகைகளுக்கு ஒரு பாதுகாப்பு உண்டு" என்று இளவரசன் சுட்டிக் காட்டினான்.

"என்ன பாதுகாப்பு?"

"அதை யாரும் கண்காணிக்க மாட்டார்கள்."

"ஆம்."



"தவிர, வட்டமாகச் சுழன்று நிற்கும் தோப்பின் விளிம்பில், இருப்பதாலும், கிட்டத்தட்ட இந்தக் கோட்டையின் பார்வையிலிருப்பதாலும், இந்தக் கோட்டையையும் எதிரிகள் அங்கிருந்து ஒரு கண் வைத்துக் கொள்ள முடியும்."

"அது சாத்தியம்தான்."

இளவரசன் சற்று நேரம் சிந்தனையில் இறங்கினான். பிறகு சொன்னான், கோட்டைத் தலைவரை நோக்கி, "நேற்றிரவு இக் கோட்டையில் வெளிச்சுவர் முன்பாகப் பந்தங்களும் விளக்குகளும் உலாவியதைப் பார்த்தேன்."

இந்தச் சமயத்தில் இளநங்கையும் கலந்துகொண்டு "ஆம், ஆம், நானும் பார்த்தேன்" என்று கூறினாள்.

கோட்டைத் தலைவர் சற்றுத் தயக்கத்துடன் பதில் சொன்னார்: "நேற்றிரவு கோட்டை மதிலோரமாகப் பத்துப் பதினைந்து பேர் மறைந்து பதுங்கிச் சென்றதாக மதில் மேலிருந்த காவலனொருவன் பார்த்து எச்சரித்தான். மற்ற வீரர்கள் பந்தங்களையும் விளக்குகளையும் கொண்டு அவர்களைத் தேடினார்கள்," என்ற அவர் "அவர்கள்தான் தோப்புக்குள் சென்று மறைந்து நின்றார்களா?" என்றும் கேட்டார்.

"இருக்காது. தோப்புக்குள் இருந்தவர்கள் அங்கு முன்பே இருந்திருக்கிறார்கள். அவர்களுக்கு உறுதுணையாக வேறு சிலர் உங்கள் கவனத்தைக் கோட்டையிலேயே நிலை நிறுத்த முயன்றிருக்க வேண்டும்" என்று கூறிய இளவரசன் மேலும் சொன்னான். "வாணாதித்தரே! இந்தப் பதக்கம் எனக்குத் தோப்பில் கிடைக்கவில்லை. தோப்பில் மறைந்திருந்தவர்களின் புரவியடிகள் எங்கும் பதிந்து கிடந்தன. அது மட்டுமல்ல. நான் சென்ற பின்பு நீண்ட நேரங் கழித்து, அந்தப் பிணங்களை அகற்ற மற்ற பலர் தோப்புக்குள் வந்ததால் உண்டான காலடிகளும் பதிந்து கிடந்தன. எந்தக் காலடியும் குளம்படியும் நேராகக் கிழக்கு நோக்கிக் காயல் பட்டணத்தின் திசையில் செல்லவில்லை. எல்லாம் தோப்பின் விளிம்புக்கு. அதாவது மூடிக் கிடக்கும் அந்தப் பெருமாளிகைப் பக்கமே சென்றன, அந்த

மாளிகைக்கு முன்னால் தோப்பு முடியும் இடத்தில்தான் அறுந்த சங்கிலியுடன் இந்தப் பதக்கம் கிடைத்தது. அது ஏன் அறுந்தது? அறுந்து விழும்படியான என்ன காரியத்தில் சேர மன்னர் ஈடுபட்டார்? என்பது விளங்கவில்லை எனக்கு. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். வீரரவி கொற்கையில் தான் இருக்கிறார். அதுவும் முத்தங்காடி கூடும் இந்த மாதங்களில் அவர் இங்கு வந்து மறைந்துறைவது பெரும் சந்தேகத்தை யளிக்கிறது எனக்கு. ஆகையால் முதலில் அவர் இருப்பிடத்தை அறியவேண்டும். கோட்டைப் பகுதியிலும், 'தோப்புப் பகுதியிலும் நடமாடியவர்கள் சேர வீரர்களாகத் தானிருக்க வேண்டும். அப்படியானால் அவர் எத்தனை வீரர்களுடன் வந்திருக்கிறார் என்பதும் கவனிக்கத் தக்கது. அவர் வீரர்கள் அதிகமென்றால் கொற்கையின் கோட்டைக்குக் கூட அபாயம்தான்'' என்று பேசிக் கொண்டு போன இளவரசன், சற்றுத் தன் பேச்சை நிறுத்திக் கோட்டைக் காவலரைக் கூர்ந்து நோக்கினான்.

கோட்டைக் காவலர் பிரமை பிடித்து நின்றார். இத்தனை பெரிய அபாயம் கொற்கையிலிருப்பது தமக்கு அடியோடு தெரியவில்லை என்பதை நினைக்க நினைக்க, அவருக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. ஆகவே பதிலேதும் சொல்லாமல் நின்றார்.

"கொற்கைக் கோட்டை வட்டாரத்தின் படை வீரர் எத்தனை பேர் இருக்கிறார்கள்?" என்று இளவரசனே வினவினான்.

"அதிகமில்லை. ஆயிரம் பேர் இருக்கலாம். பாதிப் படை மதுரைக்குச் சென்றுவிட்டது!" என்றார் கோட்டைக் காவலர்.

'அது தெரியும்' என்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்த வீரபாண்டியன் மீண்டும் சிந்தனையில் இறங்கினான். பிறகு அவன் இதழ்களில் பழைய இளநகை திரும்பியது. "உங்களுக்கு மிகவும் நம்பிக்கையுள்ள நான்கு வீரர்களைப் புரவிகளுடன் இன்றிரவு இரண்டாம் ஜாமத்தில் அந்தப் பெரு மாளிகைக்கு அனுப்பி வையுங்கள்.



அவர்கள் மாளிகைக்கு முன்புறமுள்ள தோப்பில் மறைந்திருக்கட்டும்" என்று கூறியவன், அத்துடன் அந்தப் பேச்சை முடித்துக் கொண்டு, "தங்கள் செல்வியாரின் காயத்தை மீண்டும் கட்டி விடுகிறேன். அவருக்கும் இன்றிரவு சிறிது வேலை இருக்கும்." என்று கூறினான்.

"இளநங்கைக்கா!" என்று வியப்புடனும், சிறிது அச்சத்துடனும் வினவினார் கோட்டைக் காவலர்.

"ஆம்" என்றான் இளவரசன் சர்வ நிதானமாக.

"என்ன வேலை?" என்று மீண்டும் கேட்டார் கோட்டைக் காவலர்.

"அரசாங்க வேலை" என்ற இளவரசன் புன்னகை புரிந்து, "அஞ்சவேண்டாம் கோட்டைத் தலைவரே! வீர பாண்டியனிருக்கும் வரையில் உமது செல்விக்குத் தீங்கு எதுவும் ஏற்படாது" என்று உறுதி கூறினான்.

அதற்குமேல் கோட்டைக் காவலரைப் பேசவிடாத வீரபாண்டியன், பணிமகளைக் கூப்பிட்டுச் சிறிது மெல்லிய துணியையும் சுடுநீரையும் கொண்டு வரச் சொல்லி அந்த அறையில் கோட்டைத் தலைவன் மஞ்சத்திலேயே இள நங்கையைப் படுக்க வைத்து, கட்டவிழ்த்துக் காயத்தைப் பரிசோதித்தான். பிறகு, தன் கச்சையிலிருந்து இரண்டு பச்சிலைகளை எடுத்துக் கசக்கி, அவற்றைக் காயத்தில் பொருத்தி மீண்டும் இழுத்துத் துணியால் கட்டி முடித்தான். "இனி இந்த பச்சிலை, காயம் ஆறிய பின்புதான் கீழே விழும். நீங்கள் நிம்மதியாக நடமாடலாம். பொருநையில் நீராடவும் செய்யலாம்" என்று கூறிவிட்டு, "மீண்டும் இரவு வருகிறேன், நீங்கள் புறப்படத் தயாராயிருங்கள்." என்றும் அவளை நோக்கிக் கூறினான்.

"எங்கு புறப்பட?" என்று வினவினாள் இளநங்கை.

"அந்தப் பெருமாளிகைக்கு" என்றான் இளவரசன்.

"அபாயமாயிற்றே."

"ஆம்"

"நானெப்படி அங்கு போகமுடியும்?"

"சிலர் அபாயத்துக்கே பிறந்தவர்கள். அவர்களில் நீங்களும் ஒருவர். உங்களை அபாயம் பத்து நாட்களாகவே தொடர்ந்திருக்கிறது. இன்று அது முற்றி முடிவுக்கு வரும் நாள். ஆகவே அதை எதிர்நோக்கி நீங்கள் செல்ல வேண்டும்" என்று இளவரசன், அபாயமான விஷயத்தை சர்வ சகஜமாகச் சொல்லிவிட்டுப் போனான்.

இளவரசன் அன்றிரவு இரண்டாம் ஜாமத்தில் வந்தான். அவன் சொற்படி புறப்பட இளநங்கை தயாராயிருந்தாள். கோட்டைக் காவலர் முகத்தில் ஈயாடவில்லை. கோட்டை வாயிலுக்கு வந்ததும் அவர் திகில் பன்மடங்கு அதிகமாகியது. புரவிவீரர் நால்வரைத் தோப்பு விளிம்பில் நிற்கும்படி உத்தரவிட்ட இளவரசன், இளநங்கையை மட்டும் தனித்து அந்த மாளிகைக்குச் செல்லும்படி உத்தரவிட்டான். "அதோ தெரிகிறது மாளிகையின் பின்புறம். பின்புறச் சுவரைச் சுற்றிச் சென்றால் அப்புறமிருக்கிறது முன்புறம். முன்புற வாசலில் தைரியமாக நுழையுங்கள். யாராவது, தடை செய்தால் வீரரவியின் பதக்கத்தைக் காட்டுங்கள்" என்று கூறினான் இளவரசன்.

"குழந்தையைத் தனியாக அனுப்புகிறீர்களே?" என்று திகிலுடன் கேட்டார் கோட்டைக் காவலர்.

"பாண்டிய நாட்டுப் பிரஜையின் ஒவ்வோர் உயிர், மானம் இரண்டிலும் இளவரசனுக்கு அக்கறை உண்டு" என்று கூறிய வீரபாண்டியன், அவளைச் செல்ல உத்தரவிட்டான். இளநங்கை தன் புரவியை மெல்ல நடத்திச் சென்றாள். கோட்டைக் காவலர் கோட்டை வாயிலில் நின்று அவள் போவதைப் பார்த்துக்கொண்டு நின்றார்.

வாணாதித்தர் தன் மகள் சென்ற திக்கை நோக்கிக்கொண்டு படபடக்கும் நெஞ்சுடன் நீண்ட நேரம் நின்றார்.

அவர் மனம் சுக்குநூறாக வெடித்துக்கொண்டிருந்தது. இளநங்கை மீண்டும் உயிருடன் வருவாளோ மாட்டாளோ, மானத்துடன் வருவாளோ மாட்டாளோ என்ற கேள்விகளும் அவற்றின் விளைவாக முளைத்த திகிலும் அவர் பார்வையைக்கூட மறைத்தது.



புரவியில் சென்ற இளநங்கையின் இதயமும் கிட்டத்தட்ட அவருடைய நிலையில்தானிருந்தது. இளநங்கை எத்தனையோ துணிவுள்ளவள்தான். ஆனால் இத்தகைய பயங்கர அலுவலில் இதுவரை அவள் சிக்கியதில்லை. ஆனால், அரசாங்கப் பணியை யாரும் மறக்கமுடியாதென்பதை உணர்ந்திருந்த காரணத்தால், வேறு வழியின்றி அந்த மாளிகையை நோக்கிப் புரவியை நடத்தினாள். அந்தப் பயங்கர மாளிகையும் மெல்ல மெல்ல நெருங்கியது. இளவரசன் சொற்படி அந்த மாளிகையின்முன் வாயிலை அடைந்த இளநங்கை, புரவியைவிட்டுக் கீழே மெதுவாக இறங்கினாள். பிறகு தன் இடுப்பிலிருந்த வீரரவியின் பதக்கத்தைக் கையில் எடுத்துக்கொண்டாள்.

அதை அவள் எடுத்து நிலவொளியில் பார்த்ததும், பின்னால் யாரோ நகைத்தார்கள். "அது தேவையில்லை. உங்களை எதிர்பார்த்துக் கொண்டுதானிருக்கிறோம்" என்ற சொற்களும் அந்த நகைப்பையொட்டி உதிர்ந்தன.

இளநங்கை சரேலெனத் திரும்பினாள் பின்புறம். பூர்ண ஆயுதந்தரித்த நான்கு வீரர்கள் பின்புறத்தில் நின்றிருந்தார்கள். ஆயுதந்தரிக்காத ஒருவரும் நின்றிருந்தார். அவரைப் பார்த்ததும் பெரும் திகைப்பை அடைந்தாள் இளநங்கை. சேர மன்னான வீரரவி உதயமார்த்தாண்டவர்மன் தனது அழகிய உதடுகளில் புன்னகை தவழ நின்றிருந்தான்.

## அத்தியாயம் 8

# திட்டத்தில் ஓர் ஊனம்

ஆயுதமேதும் தரிக்காமலும், விஷமப் பார்வை, புன்முறுவல், இவற்றுடன் தன் பின்னால் நின்ற வீரரவி உதய மார்த்தாண்டவர்மனைக் கண்டதும், ஓரளவு அச்சத்துக்கும் அதிக அளவு வியப்புக்கும் உள்ளான இளநங்கை சேர மன்னனைக் கூர்ந்து கவனித்தாள். அவனை அவள் அதற்கு முன்பு இரண்டொரு முறைகளே கொற்கை முத்து விழாவில் பார்த்திருந்தாலும், அவன்தோற்றமும் தோரணையும் மறக்க முடியாதிருந்த காரணத்தால், பார்த்ததும் அவனை அடையாளம் கண்டுகொள்வது பெருங்கஷ்டமாயில்லை அவளுக்கு. தமிழகத்திலுள்ள மிகுந்த அழகிய புருஷர்களில் ஒருவனென்றும், யாரையும் ஆழம் பார்க்கும் சிறந்த தந்திரசாலியென்றும் பெயர் பெற்றிருந்த சேர மன்னன் கலந்து கொள்ளாத விழா எதுவுமில்லையாகையால், அவனைச் சாதாரண மக்களே அடையாளம் கண்டுபிடிப்பதில் அதிகப் பிரயாசையில்லாதிருக்க, இரண்டு விழாக்களில் கோட்டைக் காவலன் மகள் என்ற முறையில் சிறிது நெருக்கத்திலேயே கவனிக்கும் வாய்ப்பைப் பெற்றிருந்த இளநங்கைக்கு அதில் என்ன கஷ்டமிருக்கப் போகிறது? ஆகவே அவனைப் பார்த்ததும் யாரென்று புரிந்துகொண்ட இளநங்கை சில விநாடிகள் பிரமைபிடித்து அவனைப் பார்த்தது பார்த்தபடியே நின்றாள்.

அன்று முழுமதி தேயத் தொடங்கிய முதல் நாளானாலும் முதல் ஜாமம் தாண்டி இரண்டாம் ஜாமம் ஓடிக்கொண்டிருந்ததால் முதல் நாளைப் போலவே வெள்ளை வெளேரென்று காய்ந்துகொண்டிருந்தது. அந்த முழு நிலவில் நடுத்தர உயரத்துடனும் சேர நாட்டு யானைத்



தந்தம் போலவே சிவப்புக் கலந்த வெண்மையான நிறத்துடனும் நின்ற வீரரவி, மிகுந்த அழகுடன் விளங்கினான். அவனது வட்ட முகத்தைத் தொட்டு நின்ற தலையின் கரேலென்ற மயிரிழைகள் அந்த முகத்தின் வெளுப்புக்கு ஒரு மாற்றத்தைச் சுட்டிக் காட்டியதன்றி, அந்த அழகைப் பல மடங்கு அதிகமாக எடுத்துக்காட்டவும் செய்தன. தோன்றுவது சிரிப்பா விஷமமா என்பதை நிர்ணயிக்க முடியாத அவன் அழகிய கருங்கண்களிலிருந்து ஒன்றை மட்டும் நிர்ணயிக்க முடிந்தது. அவன் அசாத்திய காமுகன் என்பதைக் கண்ணொளி சந்தேகமறப் புரிய வைத்தது. பார்ப்பதற்கு அவன் அதிகக் கச்சலுமில்லை, பருமனுமில்லை. இரண்டுக்குமிடையில் தேவையான பருமனேயிருந்த அவன் சரீரம் பெரிய வீரனுடைய சரீரமாகத் தெரியாவிட்டாலும், போரில் பல சமயங்களில் அவன் நேரிடையாகக் கலந்ததற்கு அவன் கைகளின் முனையிலிருந்த காய வடுக்கள் அத்தாட்சி கூறின. அழகும் வீரமும் கலந்த அவன் தோற்றத்திற்கெல்லாம் அடிப்படையாக, அவன் பெரிய அபாயமான மனிதனென்பதை அவன் முகம் சந்தேகமற எடுத்துக்காட்டியது. அவன் குரலில் இருந்த குழைவு, உதட்டில் தெரிந்த புன்முறுவல், அவன் நின்ற தோரணை, எல்லாவற்றிலுமே உறைந்து கிடந்தது அபாயக் குறி.

இப்படித் தன்னைக் கூர்ந்து அச்சத்துடனும் வியப்புடனும் கவனித்த இளநங்கையை நோக்கி மிகவும் பரிவுடன் கூறினான் வீரரவி: "நிலவு நன்றாகத்தானிருக்கிறது. இருப்பினும் இங்கேயே உங்களை நிற்கவைத்துப் பேசுவது முறையல்ல. உள்ளே சென்று பேசுவோம்" என்று.

இளநங்கை அவனையும் நோக்கி, சுற்றுப்புறங்களையும் நோக்கினாள். வெளேரென்ற நிலவில் அதிக வெளேரென்று தெரிந்த அந்தப் பெருமாளிகை பார்ப்பதற்கு மிக அழகாகயிருந்தது. அதைச் சுற்றியிருந்த மதிற்சுவரும், மதிற்சுவரில் அவனை நோக்கியிருந்த பெருவாயிலும், உள்ளேயிருந்த மாளிகையின் சுற்றுச் சுவர்களும் சாதாரணச்

சுவர்களாயிராமல் மிகவும் கனமாயிருந்ததையும் மதிற்சுவர் அளவுக்கு மீறிக் கனமாயிருந்ததையும் கவனித்த அவள், தேவையானால் அந்த மாளிகையைச் சின்னஞ்சிறு கோட்டையாக இரண்டொரு நாட்களுக்கு மாற்றிக் கொள்ள முடியுமென்று புரிந்துகொண்டாள். எதிரேயிருந்த கனத்த மதிற் கதவும், உள்ளே தெரிந்த மாளிகை முன் கதவும் அவள் ஊகத்தை ஊர்ஜிதம் செய்தன. மாளிகையின் ஒரே தள உப்பரிகை அமைப்புக்கூட, அது உப்பரிகை யாகவோ அல்லது வீரர் அம்பெறியும் தளமாகவோ உபயோகப்படும் வண்ணமிருந்ததையும் கவனித்த இளநங்கை, சேரமன்னன் காரணமாகவே அந்த மாளிகையில் தங்கி இருக்கிறான் என்பதையும், அந்த மாளிகைக்குள் தான் சென்றுவிட்டால் வெளிக் கிளம்புவது சுலபமில்லையென்பதையும் புரிந்துகொண்டாள்.

அவள் தன்னையும் பார்த்து, மாளிகையையும் பார்த்ததைக் கண்ட வீரரவி, "உங்கள் நினைப்பு சரிதான். இந்த மாளிகையைத் தாக்குவதோ கைப்பற்றுவதோ கடினம். இது எங்கள் மூதாதைகள் கட்டியது" என்று கூறியதன்றி, "வாருங்கள்! வந்தவர்களை வாயிலில் நிற்க வைத்துப் பேசுவது சேர மரபினர் பண்புக்கு முரணானது," என்று சொல்லி, அவளைத் தன்னைப் பின்பற்றி வருமாறு சைகை காட்டி முன் நடந்தான். அவளைத் தொடர்ந்து ஆயுதம் தாங்கிய வீரர்களும் நடந்தனர். மாளிகையின் ஆரம்பவாயிலான மதில்வாயிலை அவர்கள் நெருங்கியதும், அதன் கதவுகளிரண்டும் மந்திரத்தால் திறப்பதுபோல் திறந்து வழிவிட்டன. அதை உட்புறத்திலிருந்து திறந்த வீரர் இருவரும், வீரரவி சென்றதும், தலை தாழ்த்தி வணங்கி விட்டு, இளநங்கையும் மற்ற வீரர்களும் வந்ததும் கதவைப் பழையபடி மூடித் தாழிட்டனர். மதிலுக்கும் மாளிகையின் படிகளுக்குமிருந்த இடைவெளி வீரர் ஒருவர்கூட இல்லாமல், நிசப்தமாயிருந்தது. மாளிகையில் விளக்குகளும் ஏதுமில்லையாகையால், நிலவு வெளிச்சத்தைத் துணை கொண்டு சென்ற வீரரவியை மாளிகை முன் கதவுக்கு



அருகிலிருந்த தாழ்வாரத் தூண் நிழற்பாளங்கள் மறைத்தன. பிறகு அந்த முகப்புக் கதவுகளிரண்டும் மெல்லத் திறக்கவே உள்ளே விளக்குகள் இரண்டு பளிச்சிட்டன. மாளிகையின் முன் மண்டபம் இளநங்கையின் கண்களுக்கு எதிரே விரிந்தது.

பெரும் வளைவுக் கூறையுடனும் பிரும்மாண்டமான தூண்களுடனும் விளங்கிய அந்த முன் மண்டபத்துக்கு வீரரவியைத் தொடர்ந்து சென்ற இளநங்கை அந்தக் கூடத்தின் சிறப்பைக் கண்டு பெரிதும் பிரமித்தாள்; அதன் சுவர்களிலெல்லாம் சேரமன்னர்களின் வீரப் பிரதாபங்கள், போர்கள், முதலியன ஓவியங்களாகத் திகழ்ந்தன. பெரும் தூண்களிலிருந்த சிற்பங்களும் சேரநாட்டுக் கலாசாரத்தை வலியுறுத்தின. அபாயத்துக்குள் தலையிட்டு அந்தக் கூடத்துக்குள் நுழைந்த அந்த நேரத்திலும், அந்தக் கூடத்தின் அழகைக் கண்டு அவள் வியந்தாள். மாளிகையின் வெளிப்புறம்தான் பழுது பட்டுப் பழையதாகத் தெரிந்ததே யொழிய, உட்புறம் அவ்வப்பொழுது பழுதுபார்க்கப் பட்டிருப்பதை உணர்ந்த இளநங்கை முன் மண்டபத்தை. நாற்புறமும் சுற்றிப் பார்த்தாள். அவள் அப்படி ஆச்சரியத்தில் வசப்பட்டு நின்ற சில விநாடிகளில் மாளிகையின் முகப்புக் கதவு மூடப்பட்டது. அவளைத் தொடர்ந்த வீரர்களும் விலகி எட்டச் சென்றுவிட்டனர். அக் கூடத்தின் நட்ட நடுவிலிருந்த அரியணை ஒன்றில் அமர்ந்துகொண்ட வீரரவி எதிரேயிருந்த ஒரு மஞ்சத்தைக் காட்டி, "அமருங்கள்," என்றான்.

இளநங்கை சற்று தயங்கினாள். அதைக் கவனித்த வீரரவி குரலில் தேனொழுகக் கூறினான். "தயங்க வேண்டாம், அமருங்கள்," என்று.

இளநங்கை மெள்ள உட்கார்ந்தாள் அந்த மஞ்சத்தின் முகப்பில். அவள் இதயத்தில் அதுவரையிருந்த அச்சம் அடியோடு மறைந்துவிட்டது. தலைக்குமேல் ஓடிய வெள்ளம் சாணோடினாலும், முழம் ஓடினாலும் விளைவு ஒன்று தானென்பதைப் புரிந்துகொண்ட அவள் சேர

மன்னனைத் தைரியத்துடனேயே ஏறெடுத்து நோக்கி, ''என்னை என்ன செய்வதாக உத்தேசம்?'' என்று வினவினாள்.

"இத்தனை நாட்களாக என்ன செய்துகொண்டிருந்தேனோ அதைச் செய்வதாகத்தான் உத்தேசம்" என்றான். சேர மன்னன் புன்சிரிப்புடன்.

இளநங்கைக்கு அவன் சொற்களின் பொருள் புரியவில்லை. "இத்தனை நாட்களாக என்ன செய்துகொண்டிருந்தீர்கள்?" என்று வினவினாள் பதிலுக்கு.

"பெரு மீனைப் பிடிக்க விரும்புபவர்கள் என்ன செய்கிறார்கள்?" என்று வினவினான் வீரரவி.

"உங்கள் கேள்வியின் பொருள் விளங்கவில்லை எனக்கு" என்றாள் இளநங்கை.

"பெருமீனைப் பிடிக்க விரும்புபவர்கள் தூண்டிலில் சிறு புழுவைக் கட்டுகிறார்கள். அதை வீசியதும் அதை நோக்கிப் பெருமீன் வருகிறது. அது சிக்கிக் கொள்கிறது" என்று சூசகமாகக் கூறினான் வீரரவி.

இளநங்கை புரிந்துகொண்டாள். "அவரைப் பிடிக்க" என்று தொடங்கியவள் வார்த்தைகளை முடிக்கவில்லை.

"ஆம், பாண்டிய இளவரசனைப் பிடிக்க உன்னைத் தூண்டிற் புழுவாக உபயோகித்தேன்,'' என்ற வீரரவி நகைத்தான்.

"அவர் பத்து நாட்களாக இங்கிருப்பது உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டாள் இளநங்கை.

இவள் கேள்வியில் தொனித்தது வியப்பா, அச்சமா என்பது திட்டமாகப் புரியவில்லை சேரமன்னனுக்கு. அதைப் பற்றி, லட்சியம் செய்யாமல், "அவன் இங்கு வந்து இருபது நாட்களாகின்றன. அவன் வந்ததை அறிந்துதான் நானும் எனது தலைநகர் விட்டு இங்கு வந்தேன். அவன் வந்ததை என் ஒற்றர்கள் அறிவித்த நான்கு தினங்களுக்குள் இங்கு வந்து சேர்ந்தேன். முதலில் இளவரசன் வந்தால் கோட்டையில் தங்குவானென்று நினைத்தேன். அவன்



கோட்டையில் தங்கவில்லை. கோட்டையில் தங்கவில்லையே தவிர கோட்டைப்புறம் பலமுறை அவன் வந்ததை என் ஒற்றர்கள் பார்த்தார்கள். ஆனால், அவன் கோட்டையைச் சுற்றித் திரிந்தானேயொழிய அதில் நுழையவில்லை. அவன் இருப்பிடத்தையும் அவர்கள் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆகவே கோட்டையைக் கவனிக்கச் செய்தேன். இடையில் நாலைந்து நாட்கள் அவன் கொற்கையிலிருந்தே மறைந்து விட்டான். பிறகு திடீரெனப் பொருநைப் படித்துறை மண்டபத்தில் அவன் காணப்பட்டதாக ஒற்றர்கள் கூறினார்கள். அதன் பின்னர் அவன் தினந்தோறும் அந்தப் படித்துறைக்கு வந்தான். எங்கள் கண்காணிப்பு சுலபமாயிற்று. படித்துறைக்கு வந்தானே தவிர, தோப்புக்குள் உன்னைத் தொடர்ந்து ஒரு நாள் கூட வரவில்லை..." என்று சொல்லிக் கொண்டுபோன வீரரவியை இடைமறித்த இளநங்கை, "ஆம், ஆம், தொடரவேயில்லை,'' என்றாள்.

வீரரவி புன்முறுவல் கொண்டு சொன்னான். "தொடர்ந்திருந்தால் நடந்திருக்கக் கூடிய கதை வேறு. தோப்பு அடர்த்தியானது. பகல் வேளைகளில் வீரர்கள் மறைந்திருந்தாலே தெரியாது. ஆகவே, அவன் உங்களை ஒரு நாள் தொடர்ந்திருந்தாலும் எங்கள் வேலை சுலபமாயிருக்கும். ஆனால் அவன் ஒவ்வொரு நாளும் அந்த மண்டபத்திலேயே நின்றுவிட்டான். ஆகவே..." இந்த இடத்தில் சற்றுச் சொற்களை நிறுத்தி இளநங்கையை உற்று நோக்கினான் வீரரவி.

''கொலை செய்ய முடியவில்லை'' என்று வாசகத்தைப் பூர்த்தி செய்த இளநங்கை, வீரரவியை வெறுப்புடனும், இகழ்ச்சியுடனும் நோக்கினாள்.

அதே வெறுப்பையும் இகழ்ச்சியையும் நோக்கிய வீரரவி மேற்கொண்டு புன்முறுவலே செய்து, "என்னைக் கொலைகாரனென்று நினைக்கிறீர்களா? அல்லவே அல்ல. அவன் வீரனாக நேருக்கு நேர் வந்தால் போராடி

இருப்பேன். அல்லது வீரர்களை விட்டுச் சிறைசெய்து சேரநாடு கொண்டு சென்றிருப்பேன். அதற்கும் முயன்றேன். அவன் பலமுறை என் வீரர்கள் கையிலிருந்து நழுவி விட்டான். இருப்பிடம் தெரியாமல் மறைந்து உறைகின்றான். அவன் வந்திருக்கும் பணியும் வீரர்களுக்கான பணியல்ல. ஒற்றன் செய்யவேண்டிய வேலையை இளவரசன் செய்கிறான். ஆகையால் ஒற்றனைப் பிடிக்க வேண்டிய முறை, அழிக்க வேண்டிய முறை இவற்றை அவன் விஷயத்திலும் கையாளுகிறேன். ஒற்றனாயிருந்தாலும் அவன் பலமாயிருந்தவரையில் என்னால் அவனை அண்ட முடியவில்லை. பத்து நாட்களுக்கு முன்பு அவனுக்கு ஒரு பலவீனம் ஏற்பட்டது. அந்தப் பலவீனம் என் சக்தியாயிற்று" என்று கூறினான்.

எந்தப் பலவீனத்தை அவன் குறிப்பிடுகிறானென்பதை இளநங்கை உணர்ந்தே இருந்தாள்.

மேற்கொண்டு வீரரவியே விளக்கினான். "அவன் கொற்கையின் சிறந்த அழகியைச் சுற்றத் தொடங்கியது எனக்கு அனுகூலமாயிற்று. உன்னைச் சுதந்திரமாக உலவ அனுமதித்து அவனைப் பிடிக்க அல்லது ஒழிக்கத் தீர்மானித்தேன். அதற்கு நேற்றிரவு நல்ல வாய்ப்பு அளித்தது. ஆனால், என் வீரர்கள் தவறிவிட்டார்கள். வீரர்களில் ஐவரை இழக்கவும் இழந்தேன். இருப்பினும் எனக்குத் தெரியும் எப்படியும் அவன் அடுத்த முயற்சியில் இறங்குவானென்பது. அதற்காக எனது கழுத்துப் பதக்கத்தை நானே அறுத்து இந்த மாளிகைக்கு எதிரில் தோப்பின் விளிம்பில் போட்டு வைத்தேன். அடுத்தது என்ன நடக்குமென்று எனக்குத் தெரியும். பதக்கத்தின் துணைகொண்டு இங்கு வேவு பார்க்க யாராவது வருவார்களென்பதை அறிந்து இருந்தேன். ஆனால் இத்தனை அழகிய ஒற்றரை நான் எதிர்பார்க்கவில்லை" என்ற வீரரவி "இன்று நான் பெரும் பாக்கியம் செய்திருக்கிறேன். இன்று என்னிடம் சிக்கப்போவது பாண்டிய நாட்டு இளவரசன்



மட்டுமல்ல, கொற்கைக் கோட்டையும் என் கைவசமாகும்" என்று அறிவித்தான் சர்வசாதாரணமாக.

இளநங்கை ஆசனத்திலிருந்து துள்ளி எழுந்தாள் "கொற்கைக் கோட்டையா!" என்றாள் பிரமிப்புடன்.

"ஆம், இளநங்கை! கொற்கையின் கோட்டைதான். பாண்டிய மன்னனுடன் பகைமை கொண்டிருக்கும் சேர மன்னன், தன்னந்தனியாகப் பாண்டியர்களின் இரண்டாவது தலைநகரத்தை வேடிக்கை பார்க்க வந்திருக்கிறான் என்று நினைக்கிறாயா? இல்லை, இல்லை! சுமார் ஆயிரம் சேர வீரர்கள் இந்தக் கொற்கையில் மாற்று உடையில் திரிந்து கொண்டிருக்கிறார்கள். முத்தங்காடியிலேயே சுமார் ஐந்நூறு வீரர்கள் தினம் உலாவுகிறார்கள். முத்தங்காடியை இன்றுகூட நான் சூறையாடிவிட முடியும். கோட்டை தான் பெரும் பிரச்சினையாக இருந்தது. உன் வரவு அதையும் தீர்த்துவிட்டது. இப்பொழுது உன் காதலனும் வருவான். தந்தையும் வருவார். காதலன் தானாக வருவான். தந்தைஎன் அழைப்பை ஏற்று வருவார்!" என்று கூறி நகைத்தான் வீரரவி.

அவன் சொற்களைக் கேட்ட இளநங்கையின் விழிகளில் கோபம் துளிர்த்தது. "அவர்கள் இருவரும் வரும் வரை என்னை என்ன செய்ய உத்தேசம்?" என்று சீறினாள், நின்ற வண்ணம் சேர மன்னனை நோக்கி.

"என் விருந்தாளியாக இருக்கவேண்டும்."

"நான் இஷ்டப்படாவிட்டால்?"

"உன் இஷ்டத்தை மட்டும் கவனிக்கும் நிலையில் நான் இல்லை. என் இஷ்டத்தையும் கவனிக்க வேண்டியிருக்கிறது," என்று கூறிய சேரமன்னன், அரியணையில் சாய்ந்து கொண்டான்.

"உங்கள் இஷ்டத்தைப் பற்றி எனக்கு அக்கறையில்லை!"

"மன்னர்கள் இஷ்டத்தை எதிர்ப்பது விவேகமல்ல" என்ற சொற்கள் திடீரென அந்த மண்டபத்தை ஊடுருவின.

கவனித்துவிட்டதன்றி, தன்னை மறைமுகமாக எச்சரிப்பதையும் கேட்க, சேர மன்னனுக்கு அச்சத்துக்குப் பதில் வியப்பே பன்மடங்கு அதிகமாகப் பெருகியதாகையாலும் அவனும் வீரபரம்பரையில் பிறந்தவனாகையாலும், தனது வீரர்களைத் தூரத்திலேயே நிற்கும்படி சைகை செய்து விட்டு, "பாண்டிய இளவரசர் வீரத்தை மெச்சுகிறேன்; உங்கள் துணிவு என் நெஞ்சத்தைத் தொடுகிறது" என்று கூறினான்.

வீரரவி அரியணையிலிருந்து ஆரம்பத்தில் துள்ளி எழுந்தானானாலும் அவன் இரண்டே வினாடிகளில் நிதானப்பட்டு விட்டதையும், சகஜமாகப் பேச ஆரம்பித்து விட்டதையும் கண்ட இளநங்கை, அந்தச் சில விநாடிகளில் அவனைப்பற்றியும் நல்லெண்ணம் சிறிது கொண்டாள். இத்தனை வீரர்களாகவுள்ள தமிழக மூவேந்தர்கள் மட்டும் பேராசையும் பரஸ்பர பகையுமில்லாதிருந்தால் தமிழகம் எத்தனைப் பெருமையுடனிருக்க முடியும் என்று உள்ளூர எண்ணிக் கொண்டாள். ஆனால், அந்த எண்ணம் கணப் பொழுதில் விலகவே, கூறிய அறிவும் சீரிய வீரமும் கொண்ட அந்த இரு விரோதிகளும் அடுத்து என்ன செய்யப்போகிறார்களோ என்ற கவலையில் அவ்விருவர் மீதும் கண்களை ஓட்டினாள்.

வீரபாண்டியன் தன் சொந்த மாளிகையிலிருப்பது போலவே நடந்துகொண்டான். தூணில் சர்வ சாதாரண மாகச் சாய்ந்து நின்றவண்ணமே சேர மன்னனுக்குப்பதில் கூறினான்: "பெரு வீரரென்று பிரசித்தி பெற்ற சேர மன்னரால் பாராட்டப்படுவதற்கு நான் பெரும் பாக்கியம் செய்திருக்கவேண்டும். என் செய்கையைத் துணிவு என்று குறிப்பிடுவதை விடக் கடமை என்று குறிப்பிடுவது பொருந்தும்" என்று.

வீரரவி தனது விரோதியை ஒருகணம் கூர்ந்து நோக்கினான். "கடமையா! என்ன கடமை?" என்று வினவினான்.



"கொற்கையையும், கோட்டைக் காவலர் மகளையும் பாதுகாக்கும் கடமை. பாண்டிய நாட்டு இளவரசுப் பொறுப்பை ஏற்றியிருப்பதால் கொற்கையைக் காப்பாற்றக் கடமை இருக்கிறது. இளநங்கையை இங்கு நானே அனுப்பியதால் அவர்களைப் பாதுகாக்கும் கடமையுமிருக் கிறது" என்று சுட்டிக் காட்டினான் வீரபாண்டியன்.

"இந்த இரண்டும் சாத்தியமில்லை வீரபாண்டியரே. நீர் கொற்கையையும் காக்க முடியாது, தற்சமயம் இந்த இளநங்கையையும் காக்க முடியாது. இரண்டையும் காப்பதோ அழிப்பதோ என் கையில் இருக்கிறது," என்று வீரரவி மீண்டும் தனது மஞ்சத்தில் உட்கார்ந்து கொண்டான். "வேண்டுமானால் தாங்களும் அமரலாம்," என்று சற்று அருகிலிருந்த மஞ்சத்தையும் சுட்டிக் காட்டினான்.

"நிற்பதே சௌகரியமாயிருக்கிறது," என்ற வீரபாண்டியன், "சேர மன்னரே! திரும்பத் திரும்ப ஒரே விதமான தவறைச் செய்கிறீர்கள். அந்தத் தவறுதான் உங்கள் பலவீனம், உங்கள் திட்டத்தின் ஊனமும் அதுதான். அதுதான் உங்களை அழிக்கப்போகிறது," என்றும் கூறினான்.

"என்ன தவறு?" என்று சற்று நிதானத்தைக் கைவிட்டுக் கேட்டான் வீரரவி.

"நீங்களாகவே விஷயங்களை முடிவு செய்துகொள் கிறீர்கள். அதுவும் விஷயங்களைச் சீர்தூக்கிப் பார்க்காமல் பல முடிவுகளைச் செய்துவிடுகிறீர்கள்," என்றான் வீர பாண்டியன்.

"என்ன விஷயங்களை முடிவுசெய்தேன்?" வீரரவி எரிச்சலுடன் வினவினான்.

"கொற்கையில் மறைந்து திரியும் உங்கள் ஆயிரம் வீரர்களைக் கொண்டு முத்தங்காடியைச் சூறையாடிக் கொற்கைக் கோட்டையையும் பிடித்துவிட முடிவுசெய்து விட்டீர்கள். அடுத்தபடி நான் கோட்டைக் காவலர் மகளின் காதலன் என்று கூறினீர்கள். இப்படிப் படிக்குப்

படி தவறு செய்கிறீர்கள், மன்னரே! கொற்கையில் உங்கள் வீரர்கள் மட்டும்தான் மறைந்து திரிவதாக நினைக்கிறீர்கள். அது முதல் தவறு. இளநங்கையை நீராட்டத் துறையில் தினம் தினம் பார்த்து வந்ததால், என்னைக் காமுகனென்றும், காதலனென்றும் முடிவு செய்துகொண்டீர்கள். அது இரண்டாவது தவறு. நீராட்டத் துறையில் பெண்களைப் பார்ப்பதும், பிறகு தொடருவதும் சேர நாட்டுப் பண்பாயிருக்கலாம். ஆனால் பாண்டிய நாட்டுப் பண்பு அதுவல்ல!'' வீரபாண்டியன் இதை மிகத் தெளிவாகக் கூறினான்.

"பிறகு ஏன் இளநங்கையைத் தொடர்ந்தீர்கள், பிரதி தினமும்?" என்று வினவினான் வீரரவி,

"இதுவும் தவறு. நான் தொடராததைக் குறித்து நீங்களே சற்று முன்பு வருத்தப்பட்டீர்கள். கொற்கையையும் கோட்டையையும் என்னையும் பிடிக்கக் கோட்டைக் காவலர் மகளைத் தூண்டிற் புழுவாக உபயோகப்படுத்திய தாக நீங்களே அறிவித்தீர்கள் சற்று முன்பு. இதில் நீங்கள் செய்த தவறும் ஒன்று!"

"என்ன தவறு!"

"இளநங்கையைக் கருவியாக நீங்கள்தான் உபயோகப் படுத்தியதாக நினைத்தது தவறு. அப்படியே ஏன் மாற்றானும் உபயோகப்படுத்தியிருக்கக் கூடாதென்று சிந்திக்க வில்லை நீங்கள். என்னை இருமுறை உங்கள் வீரர்கள் கொல்ல முயன்றதிலிருந்தே உங்கள் எண்ணம் புரிந்தது எனக்கு. பிறகுதான் நான் கோட்டையைக் கண் காணிக்க முற்பட்டேன். அதை நீங்கள் தெரிந்து கொண்டதும் கோட்டைக் காவலர் மகளைப் பார்க்க வருவதுபோல் பொருநைப் படித்துறைக்கு வந்தேன். மீதி விஷயங்கள் உங்களுக்கே தெரியும்." என்று விளக்கிய வீர பாண்டியன் சற்றே இளநகை கூட்டினான்.

"அப்படியானால், நேற்றிரவு மட்டும் இளநங்கையைத் தொடர்ந்து தோப்புக்குள் ஏன் நுழைந்தீர்கள்?'' என்று வினவினான் வீரரவி சந்தேகத்துடன்.



"இரவில், அந்தத் தோப்பு வழியில் இவர்களைத் தனி யாகப் போகவிட இஷ்டமில்லாததால் தொடர்ந்தேன். தொடர்ந்தது ஒரு விஷயத்தில் நல்லதாயிற்று," என்ற வீர பாண்டியன் வீரரவியைக் கூர்ந்து நோக்கினான்.

இரு எதிரிகளின் கண்களும் ஒரு விநாடி கலந்தன. வீரரவியின் கண்கள் நிதானத்தை இழந்துகிடந்ததை இள நங்கை கவனித்தாள். வீரபாண்டியன் மட்டும் சர்வ நிதானத் துடனிருந்தான். சில விநாடிகள் வீரபாண்டியனைப் பார்த்த பிறகு வீரரவி கேட்டான், "என்ன நல்லதாயிற்று?" என்று.

"சேர மன்னரைச் சந்திக்க முடிந்தது," என்று கூறிய வீரபாண்டியன், "உங்களைச் சந்திக்கவே பலமுறை முயன்றேன். உங்களிருப்பிடம் தெரியவில்லை. எப்படியும் உங்களை அணுகத் தீர்மானித்தேன். ஆகவே, உங்கள் பதக்கத்தைக் கண்டதும் ஒரு முடிவுக்கு வந்தேன். இன்று எப்படியும் சந்தித்துவிட முடிவுசெய்தேன். என் முடிவு நீங்கள் செய்யும் முடிவுகளைப் போன்றதல்ல சேரமன்னரே. அது தவறுவதில்லை, நடக்கிறது!" என்று வலியுறுத்தியும் பேசினான்.

வீரரவி மீண்டும் மௌனம் சாதித்தான். பிறகு ஒரு முடிவுக்கு வந்து, "சந்தித்தாகிவிட்டதல்லவா? அடுத்தபடி என்ன செய்ய உத்தேசம்?" என்று வினவினான்.

வீரபாண்டியன் சற்றுச் சிந்தனையில் இறங்கினான். சிந்தனைக்குப் பிறகு சேர மன்னனை நோக்கிய அவன் விழிகளில் அனுதாபமும் மண்டிக் கிடந்தது. அந்த அனுதாபம் அடுத்தபடி உதிர்ந்த அவன் சொற்களிலு மிருந்தது. "சேர மன்னருக்குப் பாண்டிய நாடு எந்தத் தீங்கையும் விளைவிக்க இஷ்டப்படவில்லை. ஆகவே இரண்டு நிபந்தனைகளின் பேரில் உங்களைச் சேர நாடு போக என்னால் அனுமதிக்க முடியும்," என்றான் வீர பாண்டியன்.

இதைக் கேட்ட வீரரவியின் பிரமிப்பு எல்லை கடந்தது. பாண்டிய இளவரசனுக்குச் சித்தப் பிரமை ஏதுமில்லை என்பதை நிர்ணயித்துக்கொள்ள அவனைக் கூர்ந்து நோக்கினான். "இப்பொழுது அனுமதிக்கும் நிலை

யிலிருப்பது நீங்களா நானா?" என்றும் வினவினான் சேர மன்னன், பிரமிப்பைக் குரலிலும் காட்டி.

"நான் இந்த மாளிகைக்குள் வந்த பின்பு இத்தகைய சந்தேகம் உங்களுக்கு ஏற்படுவது இயற்கைதான். ஆகவே, உங்கள் சந்தேகத்தை நானே நிவர்த்திக்கிறேன். அந்த நிலையிலிருப்பது நான்தான். இன்றுமுதல் முத்தங்காடி பலமான பாதுகாப்பிலிருக்கிறது. எந்த விநாடியில் உங்கள் வீரர்கள் அங்கு சூறையாட முயன்றாலும், சுமார் இருநூற்று ஐம்பது யவனர்களாலும், ஐந்நூறு பாண்டிய வீரர்களாலும் அழிக்கப்படுவார்கள். கோட்டைக் காவலரும் இத்தனை நேரம் கோட்டையைப் பலப்படுத்தியிருப்பார். அவரிடம் ஆயிரம் வீரர்கள் இருப்பதாகச் சற்று முன்பு அவரே சொன்னார். தவிர பாண்டிய ஒற்றர்கள் வேறு சேர நாட்டுக்கும், பாண்டிய நாட்டுக்கும் இடையில் உள்ள எல்லையில் காவல் செய்கிறார்கள்," என்றான் வீர பாண்டியன்.

வீரரவியின் கண்களில் சீற்றம் தெரிந்தது. "இத்தனை யையும் நிறைவேற்ற இளவரசர் இந்த மாளிகையிலிருந்து வெளியேற வேண்டுமல்லவா?" என்று சீறி ஆசனத்திலிருந்து எழுந்தான் வீரரவி.

"ஆம்!" வீரபாண்டியன் பதில் நிதானமாகவே இருந்தது.

"எப்படி வெளியேறுவதாக உத்தேசம்?"

"அதைவிட வேறொரு கேள்வியைக் கேட்டிருக்க வேண்டும் நீங்கள்?"

"என்ன கேள்வி?"

"இந்த மாளிகைக்குள் எப்படி வந்தேன் என்பதைக் கேட்கவில்லையே!"

அப்பொழுதுதான் வீரரவிக்குப் பெரும் சந்தேகம் ஏற்பட்டது. தானறியாமல் வீரபாண்டியன் மாளிகைக்குள் வரமுடியுமானால், மற்றும் பலரும் வரமுடியும் என்ற எண்ணம் ஏற்படவே, வீரபாண்டியன் நின்ற இடத்தையும் அதற்குப் பின்னாலும் நோக்கலானான்.



அவன் பார்வை சென்ற இடங்களைக் கண்ட வீரபாண்டியன், "அதைரியப்பட வேண்டாம், மார்த் தாண்டவர்மரே! வேறு யாரும் என்னுடன் வரவில்லை. நான் தனியாகவே வந்திருக்கிறேன்," என்று தைரியம் சொன்னதுடன் நில்லாமல், "ஏன் தெரியுமா?" என்றும் வினவினான்.

"ஏன்?" ஆத்திரத்துடன் இரைந்தான் வீரரவி.

"பாண்டிய நாடு, சேர நாட்டுடன் போரை விரும்ப வில்லை. இந்த மாளிகையில் நீங்களிருப்பதை அறிந்த தல்லாமல், உங்கள் வீரர்களில் பெரும்பாலோர் முத்தங் காடியிலும் கொற்கை நகர்ப்புறத்திலும் திரிந்ததையும் அறிந்த எனக்கு, இங்கு நூறு வீரர்களை அழைத்து வந்து உம்மைச் சிறை செய்வது பெரும் காரியமல்ல. ஆனால் உங்களைச் சிறை செய்வதோ, சேர நாட்டுடன் பகைமை கொள்வதோ பாண்டிய மன்னர் நோக்கமல்ல. ஆகவே, நீங்கள் நாடு செல்ல அனுமதிக்கிறேன். ஆனால் இரண்டு விஷயங்களை நீங்கள் எனக்கு விளக்கவேண்டும்," என்றான் வீரபாண்டியன் அதிகாரம் பூர்ணமாகத் தொனித்த குரலில்.

"எந்த இரண்டு விஷயங்கள்?"-சீறினான் சேரன்.

இரண்டு விஷயங்கள் எவையென்பதை விளக்கினான் வீரபாண்டியன். அவன் கேட்ட கேள்விகள் இரண்டே தான். அவை கேள்விகளா, இதயத்தைப் பிளக்க வந்த கூர்வேல்களா என்பது புரியவில்லை வீரரவிக்கு. எல்லை யற்ற சினத்தின் வசப்பட்ட வீரரவி, "இவனைப் பிடித்து வெட்டிப் போடுங்கள்," என்று, தனது வீரர்களை நோக்கி மண்டபமே அதிரும்படி இரைந்தான். அதுவரை காத்திருந்த நாலைந்து வீரர்கள் மட்டுமின்றிக் கூடத்தின் தாழ்வாரத்தில் இருந்தும் பலவீரர்கள் வீரபாண்டியன்மீது உருவிய வாள்களுடன் பாய்ந்து வந்தார்கள். நாலைந்து குறுவாள்களும் மேலிருந்து அவன் முகத்தையும் மார்பையும் நோக்கிப் பறந்துவந்தன. இளவரசன், அழிந்துவிட்டா னென்ற நினைப்பில் இளநங்கை வீரிட்டு அலறினாள். அந்த அலறலைப் பெருமண்டபத்தின் சுவர்களும் தூண்களும் வாங்கி எதிரொலி செய்ததால் தூண்களும் சுவர்களும் கூட அலறும் பயங்கர ஒலிகள் எங்கும் சூழ்ந்தன.

## அத்தியாயம் 10

# மண்டபப் போர்

**வீ**ரரவியின் கோபாவேசத்தையும், அவன் வீரர்கள் துவங்கிய போராட்டத்தையும் கிளறிவிட்ட அந்தக் கேள்விகள் கனீரென்றும் நிதானமாகவுமே இளவரசனிடமிருந்து எழுந்தனவென்றாலும், அவை சேரமன்னன்மீது சாட்டிய குற்றங்கள் பயங்கரமானவையாகவே இருந்தன. "சேர மன்னரே! நீங்கள் இதுவரை கடத்திவிட்ட பாண்டிய நாட்டின் பெருமுத்துக்கள் எங்கே இருக்கின்றன? உமக்கு அந்தக் கடத்தலில் துணை செய்த சிங்கள மன்னனும் உம்மைப்போல் இங்குதான் மறைந்து திரிகின்றானா? சிங்களம் சென்றுவிட்டானா?" என்ற கேள்விகளைக் கேட்டான் இளவரசன் மிக நிதானமாகக் குற்றவாளியை விசாரிக்கும் நீதிபதியைப் போல. இதைவிட, 'நீதான் கள்வன்! உன் கூட்டாளி எங்கே?' என்று கேட்டிருந்தாலும் ஒன்றுதான். இப்படி ஒரு மன்னனைப் பார்த்துத் திருட்டுப் பட்டம் கட்டுவதே குற்றமாயிருக்க, அவனுக்கு ஒரு சகாவையும் நியமித்து வீரபாண்டியன் பேசியதைச் சாதாரண மனிதர்களே பொறுக்க முடியாதென்றால், சேர நாட்டு மன்னன் எப்படிப் பொறுக்க முடியும்?

ஆகவே, அதுவரை காட்டியிருந்த நிதானத்தை வீரரவி அடியோடு காற்றில் பறக்கவிட்டுத் தனது வீரர்களை விளித்து, "இவனை வெட்டிப் போடுங்கள்," என்று உத்தரவிட்டதைப் பெரும் விந்தையென்றோ, அடுத்து அவன் வீரர்கள் தடதடவென ஆயுதங்களை இளவரசன் மீது வீசிவிட்டதை அவசரச் செய்கையென்றோ கூற முடியாதல்லவா?



அந்த மண்டபத்திலிருந்த வீரர்களும், மண்டபத்தின் மேலே சுற்றிலும் வளைந்தோடிய உப்பரிகைத் தாழ்வாரத்திலிருந்த வீரர்களும் வாட்களை உருவிக்கொண்டு வீரபாண்டியன்மீது பாய்ந்துவிட்டதையும், சிலர் அவன்மீது குறுவாள்களை எறிந்துவிட்டதையும் கண்டதும் இளநங்கை பெரிதாக அலறியது ஒரு வினாடியேயானாலும், அந்த ஒரு வினாடியில் பிரமிக்கத்தக்க நிகழ்ச்சிகள் நடந்தேறின. தூணில் சாய்ந்துகொண்டிருந்த வீரபாண்டியன் தன் முகத்தின்மீதும் மார்புகளின்மீதும் சீறி வந்த குறுவாள்களிலிருந்து சட்டென்று உட்கார்ந்து தப்பியதன்றி, உட்கார்ந்தபடியே வெகு வேகமாகத் தூணைச் சுற்றி மறுபக்கம் சென்று மறைந்துவிட்டானாகையால், அவன் மீது குறிவைக்கப்பட்ட குறுவாள்கள் தூணின்மீது கணகணவென்று ஒலிகளுடன் மோதித் தரையில் நாலா பக்கமும் விழுந்து எங்கும் இரும்பொலிகளைக் கிளப்பின.

அந்த ஒலிகள் எத்தனை சீக்கிரம் கிளம்பி மறைந்தனவோ, அத்தனை சீக்கிரத்தில் தூணை ஒருமுறை சுற்றி உருவிய வாளுடன் எழுந்துவிட்ட பாண்டிய நாட்டு இளவரசன் தூணின் முன்பகுதிக்கு வந்து தனது நீண்ட வாளை இடது கையிலும், இடுப்பிலிருந்த கட்டாரியை வலது கையிலும் பிடித்துக் கொண்டு, அவனது கண்ணெதிரே கோடியிலிருந்தும் மாடிப் படியிலிருந்தும் ஓடி வந்துகொண்டிருந்த வீரர்களை ஒருமுறை நோக்கினான். அந்தச் சமயத்தில் அவன் முகத்தைப் பார்த்த இளநங்கை மட்டுமல்ல, வீரரவிகூட ஓரளவு அச்சம் கொண்டான். அந்த முகத்திலும் கண்களிலுமிருந்த அழகு அடியோடு மறைந்து, அழகின் இடத்தைப் பெரும் பயங்கரச் சாயை மறைத்துக் கொண்டது. எப்பொழுதும் நிதானத்தையும், லேசான நகைப்பையும் காட்டிய கண்கள் ஆடுகளை விழுங்க வரும் புலியின் கண்களைப்போல் பளிச்சிட்டன. அதுவரை சாதாரணமாக ஆடிக்கொண்டிருந்த கைகள் விறைத்து விட்டன போலிருந்தன பார்வைக்கு. உடம்பே உணர்ச்சியற்றதாகவும் இரும்பாக மாறி

விட்டதைப்போலும் தெரிந்தது. அகற்றி வைக்கப்பட்ட அவன் கால்கள் மெல்லியதாக இருந்தாலும் இருப்பு வார்ப் படங்களைப் போல் வளைவு ஏதுமின்றிக் காணப்பட்டன.

ஏதோ எமதூதன் நிற்பது போன்ற பிரமை ஏற்பட்டது வீரரவிக்கு. அச்சத்தை அறவே அறியாத வீரரவியின் உள்ளத்திலேயே அச்சமேற்படுத்தக்கூடிய அந்தப் பயங்கரப் பார்வையும் தோற்றமும் அவன் வீரர்களின் வேகத்தையும் ஒரு வினாடி தடுத்தது. அந்த ஒரு வினாடியில் சுரணை ஏதுமின்றி வெளிவந்தன வீரபாண்டியனின் சொற்கள். "யார் ஓர் அடி முன்னெடுத்து வைத்தாலும் சேர மன்னர் அதோ நிற்கும் இடத்திலேயே பிணமாகி விடுவார்," என்று மனிதன் பேசுவது போலல்லாமல், பிசாசு பேசுவதுபோல் பேசினான் இளவரசன்.

அந்தக் குரலைக் கேட்டே அச்சமுற்ற சேர வீரர்கள். மன்னனை நோக்கினார்கள். மன்னனுக்குப் பதில் வீரபாண்டியனே பதில் கூறினான்: "எனது இடது கையில்தான் வாளிருக்கிறது. வலது கையிலிருப்பது பொற் கோடரி. எந்த ஒரு வீரன் முன்னேறினாலும் உங்கள் மன்னன் கழுத்தில் அது பாய்ந்துவிடும். எனது நாட்டில் தனித்து அகப்பட்ட மன்னனைக் கொல்ல நான் இஷ்டப் படவில்லை," என்ற வீரபாண்டியன், "சேர மன்னரே! என் இரண்டு கேள்விகளுக்கு நீங்கள் கூறக்கூடிய பதில் உங்களையும் காப்பாற்றும்; உங்கள் நாட்டையும் காப்பாற்றும். இல்லையேல் பாண்டிய நாட்டு ராஜ முத்திரைமீது ஆணையாக உங்களையும் அழித்துவிடுவேன்; உங்கள் நாட்டையும் அழித்துவிடுவேன்" என்றான்.

பாண்டிய இளவரசனின் சொற்கள் வேகமாகவும் விபரீதக் குரலிலும் வெளிவந்து எதற்கும் எதிரொலி செய்யும் அந்த மண்டபத்தில் நாலா பக்கங்களிலும் எதிரொலி செய்ததால் ஏற்பட்ட பயங்கரச் சூழ்நிலையில் சேர மன்னனும் கூவினான்: "வெட்டுங்கள் அவனை, கையில் வாட்களை எதற்கு வைத்திருக்கிறீர்கள்? அழகுக்கா?"



அடுத்த வினாடி அந்த அழகிய மண்டபம் பிரளயமா யிற்று. வீரபாண்டியன்மீது எறியப்பட்ட குறுவாள்களில் பல அவன் திடீரெனச் சுழன்றமையால் பயனற்றுப்போனாலும், ஒன்று மட்டும் அவன் இடது தோளில் ஆழமாகப் பாய்ந்து விட்டது. அரியணைக்குப் பின்னால் வீரரவி மறைந்து விட்டானாதலால் பொற் கோடரியை உபயோகப்படுத்த முடியாமல் போயிற்று வீரபாண்டியனுக்கு. ஆகவே கோடரியை இடுப்பில் பழையபடி செருகிக்கொண்டு இடது கை வாளை வலது கைக்கு மாற்றிக்கொண்டு தான் சாய்ந்திருந்த தூணைவிட்டு எதிரே ஓடிவந்து வீரர்களை நோக்கி வாளை ஓங்கினான். அவன் வாள் சுமார் நாலைந்து வாள்களை ஏககாலத்தில் தடுத்தது. திடீரெனக் கீழிறங்கிப் பாய்ந்த அந்த வாளுக்கு இலக்காகி ஒரு வீரன் பெரிதாக அலறித் தரையில் சட்டென்று சாய்ந்தான்.

அந்தக் காட்சியைக் கண்ட இளநங்கையின் முகத்தில் வியப்பும் பயமும் ஒருங்கே உலாவின. தன்னைச் சிறை செய்து வீரரவியுடன் அழைத்து வந்த நான்கு வீரர்களைத் தவிர மாடித் தாழ்வரையிலிருந்து படிகளில் இறங்கி ஓடி வந்த வீரர்களையும் ஏககாலத்தில் சந்தித்து அவர்கள் வாட்களையெல்லாம் ஒரே சமயத்தில் தன் நீண்ட வாளால் வீரபாண்டியன் சந்தித்துவிட்டதையும், திடீரென்று அவன் வாளிறங்கி வீரனொருவன் மார்பில் பாய்ந்துவிட்டதால் ஒருவன் அலறி விழுந்துவிட்டதையும் பார்த்த இளநங்கை அந்தச் சமயத்தில் வீரபாண்டியன் பார்வையிலிருந்த கொடூரத்தைக் கண்டு வியந்தாள். அவள் வியப்பதற்கோ பயப்படுவதற்கோ அவகாசமேயில்லை. கண்ணிமைக்கும் நேரத்தில் வீரபாண்டியன் பின்வாங்கி மீண்டும் தன் வாளைப் பயங்கரமாகச் சுழற்றி எதிரி வீரர்கள் வாட்களைத் தடுத்தும், சீவியும் போரிட்டான். எதிரி வீரர்களின் வாட்கள் இரண்டு திடீரென ஆகாயத்தில் பறந்தன. மற்றுமிருவர் இளவரசன் வாள்பட்டுக் கதறினர். ஒருவனுடைய வலது கை சுரணையற்றுத் திடீரெனத் தொங்கி விட்டது. இரண்டு மூன்று வினாடிகளுக்குள், வீர பாண்டியன் போர்முறை

இன்னதென்று புரிந்துகொள்வதற்குள், நாலைந்து வீரர்கள் காயப்பட்டுவிட்டதால் அச்சமுற்ற வீரர்கள் மீண்டும் தங்கள் மன்னனை நோக்கினார்கள். மன்னன் மண்டபத்தில் காணப்படாததால் சற்று சிந்தித்த சேர வீரர்கள் ஐந்தாறு பேர் மீண்டும் வீரபாண்டியனை நோக்கி விரைந்தனர் உருவிய வாட்களுடன்.

அவர்கள் சிந்தித்த இரண்டு வினாடிகளில் வீர பாண்டியன் இளநங்கையிருந்த இடத்தை அணுகி அவள் கையைப் பிடித்துக் கரகரவென்று இழுத்துக்கொண்டு, மண்டபத்தின் வேறொரு தூணுக்காகச் சென்று மறைந்து கொண்டான்,

அந்தத் தூணை நோக்கியும் சேர வீரர்கள் ஐந்தாறு பேர் விரைந்தனர். அதே சமயத்தில் வாயிற்கதவு திறக்கப் பட்டு மற்றும் நான்கு வீரர்கள் வேல்களைத் தாங்கி நுழைந்தனர். தூணுக்குப் பின்பு மறைந்து நின்ற இளநங்கை வாயிலின்மூலம் வந்த வீரர்களை நோக்கினாள். அவர்கள் வந்ததும் தூணை நோக்கி வந்த வீரர்கள் சிறிது தாமதித்தனர். பிறகு அவ் வீரர்கள் அனைவரும் ஒன்று கூடி ஏதோ பேசிக்கொண்டார்கள். பிறகு ஒரு முடிவுக்கு வந்ததும் வாயில் கதவை இருவர் தாளிட்டு அங்கு வேல்களுடன் நின்றார்கள். வேல்களைத் தாங்கிய மற்றுமிருவர் மண்டபத்தின் மற்ற இரு கோடிகளில் வேல்களைத் தூக்கி எய்வதற்குப் பிடித்தவண்ணம் நின்றார்கள். மற்றவர்கள் தூணை நாலா பக்கத்திலும் நெருங்க முற்பட்டார்கள்.

எதிரிகளின் இந்தத் தாக்குதல் ஏற்பாட்டைக் கவனித்த இளநங்கை அச்சமுற்றாள். அவள் கையொன்று வீரபாண்டியனுடைய இடையைச் சுற்றிச் சென்று காய மடைந்த கையைப் பயத்துடன் பற்றியது. அந்த மலர்க்கை பற்றியதால் அவள் உள்ளத்திலிருந்து அச்சத்தை அறிந்த இளவரசன் மனம் ஒரு வினாடி இளகியதால், அவன் அஞ்ச வேண்டாம் என்று சொல்வதற்குப் பதில் அவள் கையை அழுத்திக்கொடுத்தான். அந்தக் கணத்தில் அவன் கை



மிகவும் மிருதுவாக இருந்ததனாலும், அடுத்த கணத்தில் அது இரும்பாகிவிட்டதை இளநங்கை உணர்ந்து கொண்டாள். அபாயம் சூழ்ந்திருந்தச் அந்தச் சமயத்தில் கூட அந்த இரும்புக் கரத்தை அவளால் ரசிக்க முடிந்தது. அந்த ரசனையின் காரணமாக அவள் சற்று ஆறுதலடைந் திருந்த விநாடியில் வீரபாண்டியன் குரல் பெரிதாக ஒலித்தது மீண்டும். "இந்தத் தூணைச் சூழ யாரும் முயல வேண்டாம். நேராகப் போருக்கு வாருங்கள். பக்க வாட்டில் வரும் எவன் உயிரும் கண் சிமிட்டும் நேரத்தில் பறந்துவிடும்" என்ற சொற்கள் மண்டபத்தை மிகப் பயங்கர மாக ஊடுருவின,

அந்தப் பயங்கர ஒலியால் சற்றே மருண்ட வீரர்களை மண்டபத்தில் எங்கிருந்தோ எழுந்த இன்னொரு ஒலி ஊக்கியது. "வீண் மிரட்டலைக் கண்டு அஞ்சாதீர்கள். ஒருவனை எதிர்க்க இத்தனை வீரர்கள் தேவையில்லை. எல்லோரும் சூழ்ந்து செல்லுங்கள். அவன் வெளியில் வந்ததும் ஒருவர் வேலெறிந்து கொன்றுவிடுங்கள்," என்று வீரரவியின் குரல் மிகுந்த அதிகாரத் தோரணையுடன் எங்கிருந்தோ அசரீரிபோல் வரவே, வீரர்கள் மீண்டும் செயல்பட முற்பட்டனர்.

தங்கள் அரசன் எங்கும் ஓடவில்லை. மண்டபத்தில் தானிருக்கிறான் என்ற துணிவும், ஆகவே தங்களுக்கு எப்படியும் மேற்கொண்டு உதவிவரும் என்ற நினைப்பும், அவர்களுக்கு வெறியை ஊட்டவே அவர்கள் தூணைச் சுற்றி அவனைச் சூழவே முற்பட்டார்கள். வீரரவியின் சொற்களைக் கேட்டு அவர்கள் முன்னேற முற்பட்டவுடன் இளநங்கையின் காதில் ஏதோ வார்த்தைகளைச் சொன்ன இளவரசன், அவளைவிட்டுத் தூணின் மறைவிலிருந்து வெளிவந்தான். ஒரு கோடரியுடனும், ஒரு வாளுடனும் தூணில் மறைந்தபோது காணப்பட்ட அவன் இடது கையில் இரண்டு குறுவாள்களிருந்ததைக் கண்டு பிரமித்த சேர வீரர்கள் அவன் உத்தேசம் என்னவென்பதைத் தீர்மானிக்கு முன்பாகவே தூணைச் சூழ முற்பட்ட நான்கு

வீரர்களில் இருவர்மீது அந்தக் குறுவாள்கள் பாய்ந்து விட்டன. இடது கையாலேயே வலப்புறமும், இடப்புறமும் குறுவாள்களை ஒன்றன்பின் ஒன்றாக வீசி இருவரை இளவரசன் மாய்த்து விட்டதாலும் அப்பொழுதுகூட அவன் அந்த இடது தோளில் பாய்ந்து பதிந்து கிடந்த தங்கள் குறுவாளை அகற்றாமல் குருதி தோளிலிருந்து கைவரையில் பாய்ந்து நனைந்துவிட்டதையோ, அந்தக் கைக்காயம் விளைத்த வலியையோ லட்சியம் செய்யாமல், அதே கையைக் குறுவாளெறிய உபயோகப்படுத்தியதையும் கண்ட சேரநாட்டு வீரர்கள் பேரச்சமுற்றனர். இருப்பினும் வீரரவியின் உத்தரவை மீறமுடியாத காரணத்தால் தூணை நெருங்கி விட்டனர்.

இடது தோளில் குத்தியவண்ணம் தொங்கிக் குருதியை ஓடவிட்ட குறுவாளைச் சிறிதும் பொருட்படுத்தாமலும், அந்த வலிக்காக முகத்தைச் சிறிதளவுகூடச் சுளிக்காமலும், பயங்கர விழிகளுடன் வலது கைப் பெருவாளைச் சுழற்றிக் கொண்டு வீரபாண்டியன் தங்களை நோக்கி வந்ததைப் பார்த்த வீரர்கள் அவன் முகத்தில் இரக்கக் களை ஏதுமின்றி அரக்கக் களை மூண்டு விட்டதையும் அவன் வாள் தங்கள் பலர் கண்கள் முன்பு திடீர் திடீரெனத் தோன்றுவதையும் கண்டு, அதிகநேரம் தாமதித்தால் விளைவு விபரீதமென்பதையும் புரிந்து கொண்டு, அவன்மீது வாட்களை ஓங்கிக் கொண்டு பாய்ந்தார்கள். சிலர் இரு புறங்களிலும் அவனைச் சூழவும் முயன்றார்கள். வீரபாண்டியனின் நீண்ட வாள் எதிரே போரிட்டவர்களை அப்புறம் இப்புறம் அகலவிடாமல் பல பகுதிகளில் திரும்பத் திரும்பப் பாய்ந்தது. இருபுறமும் சூழமுற்பட்டவர்கள் திரும்பப் பழைய நிலைக்குத் துரத்தப்பட்டார்கள். அவன் கையின் சுழற்சி ஏதோ யந்திரம் சுழல்வது போலிருந்ததேயொழிய மானிடனின் கரமொன்று இயங்குவதாகத் தெரியவில்லை அந்த வீரர்களுக்கு. சேர வீரர்கள் அதுவரை அறியாத போர்முறை அது. கால்களை லேசாகக் கூட வளைக்காமலும், பார்வையை ஒவ்வொரு



வீரன்மீதும் ஓட்டியும், வாளால் நான்காகவும் இரண்டாகவும் எதிரிகளின் வாள்களைத் தடுத்த வீரபாண்டியன் போர்முறையின் கை லாவகமும் புதுமாதிரியாயிருந்தது அவர்களுக்கு. அத்தகைய வாட்போர்முறைகளை அவர்கள் அதுவரை பார்த்ததில்லையாகையால் பிரமை தட்டி, சித்தம் தளர்ந்தே போரிட்டார்கள்.

எத்தனை வீரனாயிருந்தாலும் பத்துப் பன்னிரண்டு வீரர்களை ஒரே காலத்தில் எப்படி சமாளிக்க முடியும்? அவன் வாள் பாய்ந்து நாலைந்துபேர் தரையில் சாய்ந்து விட்டாலும் மீதி எண்மர் இருப்பதைக் கவனித்த இளநங்கை எந்த வினாடியிலும் இளவரசன் கொல்லப்படுவானென்பதை உணர்ந்திருந்ததால் அவன் சொன்னபடி தூணுக்கு மறைவிலிருக்க இஷ்டப்படாமல் தூணைச் சூழவந்து இளவரசன் குறுவாளால் மடிந்து கிடந்த ஒரு வீரனை மெள்ள அணுகி அவன் வாளை எடுக்கக் குனிந்தாள்.

வெகு ஜாக்கிரதையாகவே அவள் அக் காரியத்தைச் செய்வதில் முனைந்தாள். கூடத்தின் மாடிச் சாளரத்திலிருந்து நிலவொளி சிறிது உள்ளே பாய்ந்திருந்ததாலும், மண்டபத்தின் இரு விளக்குகளின் ஒளியும் விசிறிக் கிடந்ததாலும், அவற்றின் காரணமாகவே விழுந்த தூண் நிழல்வீசிருந்த இருட்டில் பதுங்கிச் சென்றாள் இளநங்கை விழுந்த வீரனை நோக்கி. வீரபாண்டின் சேர வீரர்களைத் தாக்கியதால் வாட்களின் ஒலிகள் எங்கும் பரவி நின்றதால், அவள் நடந்தபோது ஏற்பட்ட முத்துப்பரல் ஒலிகள் யார் காதிலும் விழவில்லை. மற்றவர்கள் போராடிக்கொண்டிருந்ததாலும், அவர்கள் வேறெதையும் கவனிக்க வாய்ப்பில்லையாகையாலும். தூண் நிழலில் அவள் சென்றதாலும், விழுந்துகிடந்த வீரனை யார் கண்ணிலும்படாமல் அவள் நெருங்கவும் முடிந்தது. நெருங்கிக் குனிந்து அவன் இடையிலிருந்த வாளையும் எடுத்துக் கொண்டாள். மிக மெதுவாக எடுத்து வாளை உருவி நிமிர்ந்ததும் விளக்கொன்றின் வெளிச்சம் திடீரென அவள்மீது பூராவாக விழுந்தது. "வாளைக் கீழே போடு. உன் மார்புக்கு நேரில்

எனது வேல் குறி வைக்கப்பட்டிருக்கிறது,'' என்று எச்சரித்தது வீரரவியின் குரல். ''வீரபாண்டியா! இளநங்கையைப் பலி கொடுத்து உன் உயிரை மீட்கும் அற்ப புத்தி உனக்கில்லையானாலும் உன் வாளை நீயும் கீழே எறிந்து விடு. இல்லையேல் உன் காதலியின் பிணத்தின் மீது நீ கதற வேண்டியிருக்கும்," என்றும் எழுந்தது வீரரவியின் குரல்.

மண்டபத்தை விஷம்போல் ஊடுருவிய அந்தச் சொற்கள் வந்த திசையை இளநங்கை இளவரசன் இருவருமே நோக்கினர். மண்டபத்தின் தூண்களுக்கு மேலேயிருந்த மாடித் தாழ்வரைக் கைப்பிடியின் அருகில் இடதுகையில் ஒரு விளக்கையும் வலது கையில் ஓங்கிய வேலையும் தாங்கி நின்றான் சேரமன்னன் வீரரவி உதயமார்த்தாண்டவர்மன். வீரபாண்டியன் அந்தக் கூர் வேலையும் நோக்கி இளநங்கை இருந்த இடத்தையும் நோக்கினான். வீரரவியின் வேல்நேராக இளநங்கை மார்பை நோக்கி இருந்தது. வீரரவியை மேற்கொண்டு எதிர்ப்பதில் அர்த்தமில்லையென்று புரிந்து கொண்ட வீரபாண்டியன் தனது வாளைக் கீழே எறிந்தான். "மன்னர் சொற்படி செய்" என்று இளநங்கைக்கும் உத்தரவிட்டான்.

இளநங்கையும் வாளைக் கீழே எறிந்தாள் வேறு வழியின்றி. அடுத்த வினாடி உத்தரவிட்டான் வீரரவி, "இனி அவன்மீது வேலெறிந்து கொன்றுவிடு" என்று மூலையிலிருந்த ஒரு வீரனை நோக்கி.

வீரன் தனது வேலை உயர்த்தி, வீரபாண்டியனின் மார்பைக் குறித்துக் கண்ணிமைக்கும் நேரத்தில் எறிந்து விட்டான். வீரபாண்டியன் தீர்ந்தானென்றே இளநங்கை நினைத்தாள். மிகுந்த அதிர்ச்சியால் அவள் தலை சுழன்றது. மயக்கமுற்று விழப் போனாள் அவள். இந்தச் சமயத்தில் அவள் சித்தத்தில் ஏதேதோ ஒலிகள் எழுந்தன. காதுகளில் ஏதேதோ ஒலிகள் விழுந்தன. என்ன ஒலிகள் அவை? அவளுக்குப் புரியவில்லை. ஆனால் தன்னை யாரோ பலவந்தமாகத் தூக்கிச்செல்வது மட்டும் அவளுக்குப் புரிந்தது.

## அத்தியாயம் 11

# லாபமும் நஷ்டமும்

**வீ**ரரவியின் உத்தரவுப்படி வீரனொருவன் எய்த வேலால் வீரபாண்டியன் மடிந்தே விடுவானென்ற அதிர்ச்சியில் மயக்கமுற்று மண்டபத்தின் தரையில் சாய்ந்து விட்ட இளநங்கையின் காதுகளில்தான் விழுந்தனவா அல்லது அவை நிதானமிழந்துவிட்ட புத்தியில் உதித்த கற்பனை ஒலிகளா என்பதைக் கூட உணரமுடியாத மயக்கத்திலிருந்தாள் கோட்டைக் காவலன் மகள். திடீரென யாரோ அலறிய குரல், வேல்கள் எங்கோ மோதியதால் கணீர் கணீரென ஏற்பட்ட ஒலிகள், பிறகு தடாலென்று பெரும் உலோகத் தண்டங்கள் தரையில் விழுந்துவிட்டது போன்ற டணார் டணார் என்ற வெண்கலச் சத்தங்கள், தடதடவென்று நாற்புறமும் யார் யாரோ ஓடும் காலடிச் சத்தங்கள், இவையனைத்தும் கேட்கவே செய்தன இளநங்கையின் புத்தியில். மயக்கமடைந்த நிலையில், மயக்கத்திலிருந்து விடுபடவும், கண்களைத் திறக்கவும்கூட முயன்று அவள் ஒரு பக்கம் புரள முற்பட்டதாகவும், ஆனால் கண்கள் விழிக்க மறுத்துவிட்டதாகவும் தோன்றியது அவளுக்கு. இந்த நிலையில்தான் அவளை யாரோ ஒருவர் பலவந்தமாகத் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு வெளியே நடக்கத் தொடங்கினார்.

யார் அது, அத்தனை ராட்சதத்தனமாக அவளைத் தூக்கி ஆட்டுக்குட்டி போல் தோளில் போட்டுக் கொண்டு நடப்பது? சுரணையிழந்த அவளுக்கு அதை மட்டும் புரிந்து கொள்ளப் புத்தி இடங்கொடுக்கவில்லை. சில விநாடிகள் இப்படிக் கழிந்த பிறகு அவள் புலன்கள் ஓரளவு புலப்படத் துவங்கியதால் தான் எங்கோ வெகுவேகமாகக் கொண்டு

செல்லப்படுவது மட்டும் புரிந்தாலும் கண்ணை விழித்துப் பார்க்கும் அளவுக்குச் சுயஉணர்வு வராததால் அவள் அந்தத் தோளின்மீது செயலின்றிக் கிடந்தாள். ஒருமுறை அவள் கால்களிலொன்று ஏதோ மரத்தின் மீது இடறியதாகவும், யாரோ கதவை மூடும் சத்தம் கேட்டதாகவும் தெரிந்தது அவளுக்கு. அதற்கு மேல் ஏதும் உணர முடியாததால் அவள் உடலும் உணர்வும் மீண்டும் துவண்டுபோயின. இப்படி எத்தனை நேரம் சென்றிருக்குமென்பது அவளுக்கே தெரியாது. ஆனால் மீண்டும் அரைவாசி சுரணை வந்தபோது தன்னைச் சுமந்து செல்லும் மனிதன் பெரும் ராட்சதனாயிருக்க வேண்டுமென்று அவள் நினைத்தாள். அவன் தன்னை மிக அனாயாசமாகத் தோளில் போட்டுக் கொண்டிருந்ததும், அவனது ஒரு கை மட்டும் தனது இரு கால்களையும் சேர்த்துப் பலமாகப் பிடித்துக் கொண்டிருந்ததும், அந்தக் கைகள் இருந்த இடத்திலிருந்து அவற்றை விட்டு விலகுவது சாத்தியமல்லவென்பதும் ஓரளவு புரிந்தது அவளுக்கு. இப்படிப் படிப்படியாகச் சுரணை வரப் பெற்ற அவள் தன் கண்களில் திடீரென ஏதோ சில்லென்று படவே சரேலென்று கண்ணைத் திறந்தாள். வீரபாண்டியனின் நகைக்கும் விழிகள் அவள் விழிகளைச் சந்தித்தன.

ஒரு காலை மடித்து உயர்த்தி ஒரு காலை நீட்டிக் கொண்டு, மடித்து உயர்த்திய முழங்காலின்மீது தனது இடது கையை வைத்து அக்கையின் குறுக்கே இளவரசன் தன்னைத் தாங்கிக் கொண்டிருந்ததையும், தனது கண்களில் குளிர்ந்த நீர் அடிக்கப்பட்டிருந்ததையும் கண்ட இளநங்கை அவன் கையிலிருந்து சரேலென எழுந்திருக்க முயன்று, முடியாமல் மீண்டும் சாய்ந்துவிட்டாள். வீரபாண்டியன் முகத்தில் ஏற்கனவேயிருந்த கவலையில் புன்முறுவலின் சாயையும் சிறிது ஓடியது. "அவசரப்பட வேண்டாம், இன்னும் சிறிது பொறுங்கள்" என்ற அவன் குரல் அனுதாபம் மண்டிக் கிடந்தது.

அயல் ஆடவன் ஒருவனின் கைக்கும் மடிக்கும் குறுக்கே கிடப்பது பெரும் சங்கடமாயிருந்தது



இளநங்கைக்கு. 'இவர் நாட்டைக் காக்கும் காவலர்தான். நாட்டின் குடிமகளான என்னைக் காக்கும் உரிமையும் இவருக்கு உண்டு. புரவலனாயிருந்தாலும் ஆண் ஆண் தானே?' என்று நினைத்த அவள் மனத்தில் பெருங் குழப்பம் ஏற்பட்டது. அந்தக் குழப்பம் எதனால் விளைந்தது? இன்பத்தாலா துன்பத்தாலா, ஆசையினாலா, அவமானத்தாலா, இஷ்டத்தாலா, கஷ்டத்தாலா? எதுவுமே திட்டமாகப் புரிந்துகொள்ள முடியவில்லை அவளால். இளவரசன் மடியில் தான் கிடப்பது சரியல்லவென்று மட்டும் தெரிந்தது அவளுக்கு. சரியில்லாததைத் தான் ஏன் சகிக்கவேண்டும்? அதுவும் சுரணை வந்த பிறகு ஏன் சகிக்க வேண்டும்? தரையில் கிடத்தச் சொல்லி ஏன் கேட்கக் கூடாது என்பதையெல்லாம் நினைத்துப் பார்த்தாளே யொழிய அதற்கான செயலெதிலும் இறங்கவில்லை அவள். செயலெதிலும் இறங்காத அவள் சிந்தை வேறு பல விஷயங்களைச் சிந்திக்க ஆரம்பித்தது.

'இவர் என்னைத் தூக்கித் தோள்மீது போட்டுக் கொண்டு வந்தபோது வழியில் யாராவது பார்த்திருப்பார்களா? தோப்பின் முகப்பில் நிறுத்தப்பட்ட நான்கு கோட்டை வீரர்களும் பார்த்திருந்தால் என்ன செய்வது? இது தந்தையின் காதுக்கு எட்டிவிட்டால்?' என்று இந்த வழிகளில் நினைத்த அவள் சிறிது அச்சத்துக்கு உள்ளானாள். மறுவிநாடி அந்த அச்சம் மறைந்து வெட்கமும் இன்பமும் தலைதூக்கின. 'ஆமாம்! இப்படி அவர் தோளில் ஒரு பெண்ணை எப்படித் தூக்கிப் போட்டுக்கொண்டார் தைரியமாக? அதுவும் நான் அவர் தோளில் குப்புறத்தானே கிடந்திருப்பேன்? என் கழுத்து, உடல்...சேசே!' இப்படி இரண்டொரு விநாடிகள் நினைத்து அவள் இன்பத்துக்கும் வெட்கத்துக்கும் உள்ளானதால் அவள் முகம் சற்றே சிவந்தது. அதுவரை வீரபாண்டியன் விழிகளைச் சந்தித்து நின்ற அவள் விழிகள் சட்டென்று மூடிக்கொண்டன.

வீரபாண்டியன் மனோநிலையும் சிறிது சங்கடத்தில் தானிருந்தது. அப்பொழுதும் இளவேனில் வெண்மதி தன்

கதிர்கள் முழுவதையும் அவள் முகத்தின் மீது பாய்ச்சி யிருந்ததால் வெட்கத்தால் அவள் முகம் சிவந்ததுகூடப் புரியவில்லை இளவரசனுக்கு. அவள் விழிகள் தன் விழிகளைச் சந்தித்ததும் அதுவரை ஏற்பட்ட சண்டை நிகழ்ச்சிகள், ஆபத்து அனைத்தும் அவன் புத்தியிலிருந்து மறைந்துவிட்டதன் விளைவாக அவன் மெள்ள மெள்ளத் தனது கையில் இருப்பது ஒரு பருவப் பெண் என்பதை உணரவும் முற்பட்டான். அன்றுவரை எந்தப் பெண்ணையும் தொட்டறியாத காரணத்தால் அன்றுவரை எதற்கும் நடுங்காத அவன் கைகளில் லேசான நடுக்க மொன்று கண்டு மறைந்தது. அதுகூட அவனுக்குப் பெரும் விந்தையாயிருந்தது. எத்தனையோ வீரர்களின் வேல்களுக்கு அஞ்சாத அவன் சித்தம் இளநங்கையின் முகத்தின் இரு கூர் வேல்களுக்கும், முழு நிலவுக்கும் அஞ்சிவிட்டதை நினைத்துப் பார்த்த அந்தப் பாண்டியவீரன், பெண்ணொருத்தி கிட்டி வந்துவிட்டால் வீரம் என்ற சொல்லுக்குப் பொருளில்லையென்றே முடிவு செய்தான்.

வெண்மதி ஆகாயத்திலிருந்தும் மூடிக் கிடந்த அவள் விழிகளைக் கண்ட இளவரசன், "கதிரவனைக் கண்டு மலரும் கமலங்கள் வெண்மதியைக் கண்டதும் மூடிக் கொள்வது இயற்கைதானே" என்று சொல்லிக்கொண்டு, "மூடியிருந்தாலென்ன திறந்திருந்தாலென்ன? தாமரையின் அழகு அழகுதான், அது கெடுவது இல்லை" என்று நெஞ்சத்தில் நினைத்தவண்ணம் தன் கையில் கிடந்த அவள் மீது கண்களை நன்றாக ஓட்டினான். வெண்மதியின் ஒளியில் அதிக வெண்மையாகிவிட்ட அவள் நுதலில் விளையாடிய இரண்டொரு குழலிழைகள் அந்த நுதலுக்கு எத்தனை அழகைக் கொடுத்தன என்பதைப் பார்த்த அவன் முகத்தில் இன்ப ரேகை விரிந்தது. அந்த நுதலை அடுத்து வளைந்து கிடந்த புருவங்கள், அவற்றுக்கும் கீழே இரண்டு கிளிஞ்சல்கள் போல் மூடிக்கிடந்த கண் இரப்பைகள், அளவோடு இருந்த நாசி இவையெல்லாம் அழகுதா னென்றாலும், செழுமிய அவள் கண்களும், செக்கச் செவே



லென்று தெள்ள அவிழ்ந்து அழைப்பன போலிருந்த அந்த உதடுகளும் அவனை அப்படியே பிரமிக்கச் செய்தன. அந்த உதடுகளும் அவனது நிதானத்தையும் உதறியிருக்க வேண்டும். சுவாதீனமாயிருந்த அவன் வலது கை அவள் மயக்கத்தைத் தீர்க்க முற்பட்டது போல், மறுபடியும் கீழேயிருந்து நீரை எடுத்து, அவள் முகத்தில் மெல்ல அவன் விரல்கள் தடவின.

அவன் கை குவித்து மீண்டும் நீரை எடுத்து வாயில் புகட்டியபின்பும் மீளாமல் உதடுகளிலேயே இரண்டு விரல்கள் தங்கிவிட்டதை உணர்ந்த இளநங்கை ஏது செய்வ தென்று அறியாமல் தத்தளித்தாள். அவளுக்கு அப்பொழுது முழு சுரணை வந்துவிட்டதால், அவள் உடலில் ஏதேதோ உணர்ச்சிகள் மின்னல்போல் பாய்ந்து சென்றன.

இளநங்கையின் சங்கடத்தை நிவர்த்திக்க முயன்ற இளவரசனின் செயல்கள் அவள் சங்கடத்தை உச்ச நிலைக்கே கொண்டுபோயின. முதுகுக்குக் குறுக்கே விழுந்து கழுத்துப் புறம் தவழ்ந்து தலையைத் தாங்கிய உறுதியான கையின் ஸ்பரிசமே அவளுக்கு வேதனையைத் தந்தது. அவள் கண்கள் மூடிக்கிடந்ததை எண்ணி அவன் நீரை எடுத்து உதடுகளில் புகட்டியபோதே நிதானத்துக்கு வந்திருந்தாள் இளநங்கை. "நீரைப் புகட்டியபின் கைக்கு என் உதடுகளின்மீது என்ன வேலை? விரல்களை அகற்றுவது தானே? ஆண் பிள்ளைகளை நம்பக்கூடாது. பெரும் திருடர்கள்," என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள் கொற்கையின் அழகி. அந்தச் சமயத்தில் அதரங்களை அசைப்பதற்கும் பயமாயிருந்தது அவளுக்கு. அதரங்களை அசைத்தால் அவை அந்த வாலிபன் விரல்களில் தவழுமே என்ற நினைப்பால் அப்படியே சுரணையற்றதுபோல் இருந்தாள் அவள். மீண்டும் அவன் இரண்டாம்முறை நீரை தெளித்தபோது புதிதாகக் கண் விழித்ததுபோல் நாற்புறமும் பார்த்தாள். அவளுக்குத் தான் இருக்குமிடம் புரிந்தது. தூரத்தில் தெரிந்த சிறு மண்டபமும் சற்றுத் தூரத்தே கேட்ட தோப்பு இலைகளின் சலசல

வென்ற சத்தமும் பொருநையாற்றங்கரையில் இருப்பதை வலியுறுத்தின அவள் சித்தத்துக்கு. அதுவும் அவன் படித் துறையின் அடிப்படையில் உட்கார்ந்திருப்பதையும் புரிந்து கொண்டாள் இந்தச் சமயத்தில் பொருநையின்மீதுகூடப் பெரும் கோபமேற்பட்டது. கோட்டைக் காவலன் மகளுக்கு. "பொருநை! எதற்காக இப்படிச் சத்தம் செய்யாமல் ஓடுகிறாய் நீ! இவருக்கு நீயும் உடந்தையா?" என்று சீற்றத் துடன் கேட்பதுபோல் மனத்திற்குள் மகிழ்ச்சியுடன் கேட்டுக்கொண்டாள். இதே படித்துறையில் இறங்கித் தான் நீராடியபோதெல்லாம் தன்னை உற்றுப் பார்த்துக் கொண்டு இளவரசன், உட்கார்ந்திருந்ததையும், காலை எடுத்து வைத்து மஞ்சள் பூசியபோது அவன் நோக்கி யதையும் நினைத்துப் பார்த்த இளநங்கை, "பொருநையும் இவருக்குக் கையாள்தான். சந்தேகமில்லை," என்று ஊர்ஜிதம் செய்து கொண்டாள். அப்பொழுதெல்லாம் இளவரசனைப் பார்த்து அச்சமுற்று ஓடியவள் இப்பொழுது எப்படி வீண் கேள்விகளைக் கேட்டுக்கொண்டு அவன் காலில் படுத்துக் கிடக்கிறாள் என்று கேட்டு நகைப்பது போல் பொருநைக் கரையிலிருந்த தோப்பு மரங்கள் காற்றில் இலைகளை அடிக்கடி சத்தப்படுத்திக் கலகலவென நகைத்தன.

அந்த நகைப்பின் விளைவாகவோ என்னவோ இள நங்கை இளவரசனிடமிருந்து எழுந்திருக்க முயன்றாள். ஆனால் இளவரசன் அவளை எழுந்திருக்கவிடவில்லை. "மெல்ல எழுந்திருங்கள். அதிர்ச்சியில் வரும் மயக்கம் எளிதில் விலகுவதில்லை" என்று கூறி அவள் இடையில் தன் கையைச் செலுத்திப் பத்திரமாகப் பிடித்துக் கொண்டான்.

அந்தப் போலி ஜாக்கிரதை அவளுக்கு நன்றாகப் புரிந்தது. அவள் பொருநையின் அழகைப் பார்ப்பது போல் நீரோட்டத்தை நோக்கிப் புன்னகை கொண்டாள். சிறிது நேரம் இருவரும் மௌனம் சாதித்தார்கள். அபாயம் நிச்சயமாக அதற்குள் தீர்ந்துவிடவில்லையென்ற பயம்



அவள் உள்ளத்தை ஆட்கொள்ளவே இளவரசனை நோக்கித் திரும்பி "வீரரவி?" என்று ஏதோ கேட்க முற்பட்டாள்.

இளவரசன் இதழ்களில் புன்முறுவல் தவழ்ந்தது. "தற்சமயம் இங்கு வரமாட்டான். நம்மைத் தொந்தரவு செய்யமாட்டான்" என்றான்.

இளநங்கை பொருநையிடமிருந்து தன் பெருவிழி களைத் திருப்பினாள். "ஏன் வரமாட்டான்? வீரரவியால் உங்களுக்கு...?" என்று வினவியவளை இடைமறித்த இளவரசன், "வீரரவியால் எனக்கு எந்தக் கஷ்டமுமில்லை; ஆனால் சிறு நஷ்டம் உண்டு, பெரும் லாபம் உண்டு" என்று கூறினான். அவன் குரலில் அந்தப் பழைய நிதானம், உறுதி இரண்டும் திரும்பிவிட்டன.

"என்ன நஷ்டம்? என்ன லாபம்?" என்று வினவினாள் இளநங்கை.

இளவரசன் அந்தப் பழைய நிதானமான உறுதியான குரலில் லாபத்தையும் விளக்கினான், நஷ்டத்தையும் விளக்கினான்.

அந்த விளக்கத்தைக் கேட்ட இளநங்கை அப்படியே பொருநையின் படியில் செயலற்று உட்கார்ந்து விட்டாள். பிறகு திடீரென்று எழுந்து ஓட முற்பட்டாள். இளவரசனின் இரும்புக்கை அவளை இழுத்து நிறுத்தியது. கையைப் பிடித்து இழுத்த இளவரசனை நோக்கித் திரும்பிய இள நங்கையை, "பேசாமல் உட்கார். மேலே ஆபத்திருக்கிறது, உம்!" என்று அதட்டியது அவன் குரல்.

## அத்தியாயம் 12

# முத்தும் பாண்டி நாடும்

இரவின் இரண்டாம் ஜாமம் அப்பொழுது முற்றி விட்ட காரணத்தால், பரஸ்பரம் உணர்ச்சிகளைப் பறி கொடுத்து பொருநையின் படித்துறையில் உட்கார்ந்திருந்த அவ்விருவரையும் அதிக சப்தமேதுமற்ற சூழ்நிலையே கவ்விக் கிடந்தது. படித்துறையின் கடைசிப் படியில் இருவரும் உட்கார்ந்திருந்ததால் அவர்கள் கால்களைப் பொருநையின் நீர்க்கரம், கல்யாண மணைமீதிருக்கும் மகளுக்கும், மருமகனுக்கும் பால் தொட்டு ஒற்றும் தாயைப் போல் சில்லென்று தொட்டுச் சென்றாலும், அந்தத் தாயின் நிலைபோலவே பொருநையும் சலசலப்பைச் சிறிதும் காட்டாமல் மௌனமாகவும் அமைதியுடனும் படிக்கடியில் ஓடினாள். படித்துறையைத் தொட்டுக் கொண்டு ஓரத்தில் ஓடியதாலும், ஓரத்தில் ஆழமும் முழங்காலிலிருந்து இடுப்பு வரையிலுமிருந்தாலும் அந்த இடத்தில் நீரின் சப்த மில்லையே தவிர, ஆற்றின் நடுவில் அரித்து ஓடிக் கொண்டிருந்த சிறுகால் மட்டும் சலசலவென்று சிறு சப்தத்தைக் கிளப்பி, மணப்பந்தலின் ஓரங்களில் நின்று வெட்கநகை நகைக்கும் சிறு பெண்ணின் மகிழ்ச்சி யொலியை நினைவூட்டியது. ஆற்றின் படித்துறைக்கு மேலேயிருந்த தோப்புகூட நிசப்தமாயிருந்தாலும் இடை யிடையே மெல்லிய காற்று கிளம்பி இலைகளை அசைத்த தால் சிறிது சப்தம் சிறிது நேரத்துக்கொரு முறை ஏற்படவே செய்தது. ஆற்றுக்கு அக்கரையிலிருந்த முத்தங்காடியில் மட்டும் பேரொலி அப்பொழுதுமிருந்து கொண்டி ருந்தாலும் அந்த ஒலி பொருநையின் பெரிய அகலத்தைத்



தாண்டி இக்கரை மட்டும் வராததால் பொருநைப் படியில் உட்கார்ந்திருந்த இருவரையும் ஏதும் பாதிக்கவில்லை.

ஒலி அதிகமாயிருந்தாலே அதிகமாகப் பாதிக்காத வேளை அது. உணர்ச்சிகள் எழுப்பிய பேரொலிகள் மற்ற ஒலிகள் புலனுக்குள் புகமுடியாத பொன்னான நேரம் அது. வாலிப வயதில் எல்லோருமே அனுபவிக்கும் அத்தகைய அபூர்வ நேரத்தில் பருவ வயதினரான அந்த இருவருமே அந்தச் சமயத்தில் தங்களை அணுகியிருந்த ஆபத்தை மறந்திருந்தார்கள். ஆகவே வீரரவியால் ஏற்பட்ட நஷ்டத் தையும் லாபத்தையும் வீரபாண்டியன் விளக்க முற்பட்ட போது பெரும் சங்கடமே அடைந்தாள் இளநங்கை.

"வீரரவியால் உங்களுக்கு என்ன லாபம்? என்ன நஷ்டம்?" என்று கேட்ட இளநங்கையின் இடையைத் தனது இடது கையால் அணைத்தவண்ணம், "எதை முன்னால் சொல்ல? லாபத்தைச் சொல்லவா? நஷ்டத்தைச் சொல்லவா?" என்று பதில் கேள்வி கேட்டான் இளவரசன்.

இளநங்கைக்கு அவன் கை தனது இடையில் அழுத்திக் கிடந்தது பெரும் சங்கடமாயிருந்தபடியால் அவன் உடனே பதில் சொல்ல சக்தியற்றவளானாள். இரண்டு விநாடி கழித்து, "ஏன் நஷ்டத்தைத்தான் சொல்லுங்களேன்" என்றாள்.

"பாண்டிய நாட்டின் பெரும் முத்துக்கள் இருக்கு மிடம் தெரியவில்லை. வீரரவி சொல்ல மறுத்துவிட்டான். தற்சமயம் முத்து கையைவிட்டுப் போய்விட்டதென்று நினைக்கிறேன். இந்த நஷ்டத்தைப் பாண்டி நாடு தாங்குவது மிகவும் கஷ்டம்" என்றான் வீரபாண்டியன்.

அந்த நஷ்டத்தைச் சொன்னபோதுகூட அவன் குரலில் அதிகத் துன்பம் தெரியவில்லை. அதைச் சாதாரண நஷ்டத்தை விளக்குபவன் போலவே விளக்கினான். ஆனால், அதைக் கேட்ட இளநங்கையின் இதயத்தில் மட்டும் பெரும் துன்பம் ஏற்பட்டது. "அந்த முத்துக்களைக் கண்டுபிடிக்கத் தானே பாண்டிய மன்னர் உங்களை இங்கு அனுப்பியதாகச் சொன்னீர்கள்!" என்று வினவினாள் துன்பம் கலந்த குரலில்.

"ஆம், அதற்காகத்தான் அனுப்பினார்" என்றான் வீர பாண்டியன்.

"அதை இனிமேல்..." என்று துவங்கிய இளநங்கையை இடைமறித்த இளவரசன், "கண்டுபிடிக்காத நிலை ஏதும் ஏற்படவில்லை. வீரரவி இன்னும் கொற்கையில் தானே இருக்கிறான்?" என்று கூறினான். எப்படியும் முத்துக்களைக் கண்டுபிடித்து விடலாம் என்ற உறுதி அவன் சொற்களிலும் குரலிலும் ஊறியிருந்ததை இளநங்கை கவனித்தாள். மேற் கொண்டு அவள் ஏதும் கேள்வி கேட்காவிட்டாலும் இளவரசனே கூறினான். "இன்று அவனை அவனது மாளிகையில் சந்திக்கும் வரையில் கொற்கையைப் பிடிக்கவும், முத்தங்காடியைச் சூறையாடவும் ஏற்பாட் டோடு அவன் வந்திருப்பானென்று எனக்குத் தெரியாது. ஆகையால்தான் அவனை உயிருடன் விட்டேன். இல்லையேல் இத்தனை நேரம் சேரநாடு மன்னனை இழந்திருக்கும்" என்று.

இளவரசனின் இந்தச் சொற்களைக் கேட்ட இள நங்கை வியப்பின் எல்லையை அடைந்தாள். விஷயத்தை அடியோடு தலைகீழாக மாற்றி இளவரசன் சொன்னதாகப் பட்டது அவளுக்கு. முத்தங்காடியைச் சூறையாட வீரரவி செய்திருக்கும் ஏற்பாட்டைத் தான் ஏற்கனவே அறிந்திருப்ப தாகவும், முத்தங்காடியில் தானும் யவன வீரர்களையும் பாண்டிய வீரர்களையும் பாதுகாப்புக்கு வைத்திருப்ப தாகவும் இளவரசன் சற்று முன்பு மண்டபத்தில் கூறியதை எண்ணிப் பார்த்தாள் இளநங்கை. தவிர மாடிக் கைப்பிடிக்கு அருகில் ஒரு கையில் விளக்கும் ஒரு கையில் வேலு மேந்தி வீரரவி நின்றதும், வாளைக் கீழே போடும்படி அவன் இளவரசனுக்கு உத்தரவிட, இளவரசன் வாளை எறிந்து விட்டதும், பிறகு வீரனொருவனை வேலெறிந்து இளவரசனைக் கொன்றுவிட வீரரவி கட்டளையிட்டதும், அவள் மனக்கண் முன்பு தத்ரூபமாக எழுந்திருக்கவே, 'வீரரவியை இவர் ஏதோ மாதிரிப் பேசுகிறாரே,' என்றும் நினைத்தாள் அவள்.



அவள் மனத்திலோடிய எண்ணங்களை இளவரசன் சந்தேகமறப் புரிந்து கொண்டிருக்கிறான் என்பதை அவன் அடுத்த சொற்கள் நிரூபித்தன. அவன் இதழ்களில் அந்த நேரத்தில் சிறிது புன்முறுவலும் அரும்பியது. அவள் இடையை அவன் கை அளவுக்கு மீறியே அழுத்தியது, அந்த நிலையில் அவன் பழைய மரியாதைச் சொற்களையும் கைவிட்டுச் சொந்தத்துடன் பேசவும் முற்பட்டு, "இளநங்கை! உன் சந்தேகம் சரியானதுதான். உண்மையில் முத்தங்காடியைப் பாதுகாக்க நான் எந்த ஏற்பாடும் செய்ய வில்லை. சாதாரணக் காவலைத் தவிர அதிகக் காவல் ஏதுமில்லை. இங்கே வீரரவியின் உள்ளத்தில் சற்று பயத்தை விதைக்கவும், அவன் சூறையாடுவதை முடிந்தால் தேக்கவுமே மண்டபத்தில் உண்மையைத் திரித்துக் கூறினேன். ஆனால் இன்னும் சிறிது நேரத்தில் முத்தங் காடிக்கான பாதுகாப்பைச் செய்துவிடுவேன். அதற்கான அவகாசத்தைப் பெறவே அங்கு ஒரு பொய்யைச் சொன்னேன். ஒன்று மட்டும் நிச்சயம். வீரரவி என்னைக் கொன்றாலொழிய இந்த முத்தங்காடியையும் சூறையாட முடியாது, கொற்கைக் கோட்டையையும் பிடிக்க முடியாது," என்று உறுதியுடன் கூறினான். மேலும் கேட்டான். "அவன் என்னைக் கொன்றுவிட முயன்றதும் உனக்குத் தெரியுமல்லவா?" என்று.

"ஆம், ஆம். உங்களை வாளைக் கீழே எறியச்செய்து நிராயுதபாணியிருக்கும்போது வேலெறிய உத்தரவிட்டான்," என்ற இளநங்கையின் பதிலில் ஆத்திரம் ஒலித்தது.

ஆனால் அவன் ஆத்திரத்தைக் கவனிக்காமலே சொன்னான் வீரபாண்டியன், "அதிலும் வீரரவி ஒரே ஒரு தவறு செய்தான்," என்று.

''என்ன தவறு?'' இளநங்கையின் கேள்வியில் மண்டபப் போரின் முடிவு மாறியதற்குக் காரணத்தைப் புரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவல் இருந்தது.

"என்னை வாளைக் கீழே எறியச் சொன்னான், உன் மார்புக்கு வேலைக் குறிவைத்து..." என்று இழுத்தான் இளவரசன்.

"ஆம். அதுதான் எனக்குத் தெரியுமே," என்றாள் இளநங்கை.

"வாளைத்தான் எறியச் சொன்னான்," என்று 'வாளைத்தான்' என்ற சொல்லில் அந்த 'தான்' பகுதியை நன்றாக அழுத்தி உச்சரித்தான் இளவரசன்.

இளநங்கை மௌனமாக இருந்தாள் ஒரு கணம். பிறகு கேட்டாள், "வேறு எதை எறியச் சொல்லவில்லை?" என்று.

"வாளைவிட அபாயமானதை."

"வாளைவிட அபாயமானதா?"

"ஆம்."

"எது அது?"

இளவரசன் அவள் இடையிலிருந்த தனது இடது கையை எடுத்து அவள் வலது கையை இழுத்துத் தனது வலது கையால் பிடித்துக் கொண்டான். பிறகு மிகவும் நிதானமும் பெருமையும் ஒலித்த குரலில் சொன்னான், "ராஜமுத்திரையை" என்று. அதைச் சொல்லி முடித்த சமயத்தில், நல்ல வேளை இளநங்கை அவன் முகத்தைப் பார்க்கவில்லை. பார்த்திருந்தால் பேயின் முகத்தைவிட அது பயங்கரமாக மாறியிருப்பதைக் கவனித்திருப்பாள். அந்தப் பயங்கர முகத்தைப் பார்க்காமல் அவன் பொருநையின் படித்துறையோர மந்தகதியைப் பார்த்துக் கொண்டிருந்தால் மீண்டும் கேட்டாள், "ராஜமுத்திரையையா?" என்று.

"ஆம்," இளவரசன் குரல் மிகக் கடினமாயிருந்தது அந்தப் பதிலைச் சொன்னபோது.

"ராஜமுத்திரையைத்தான் நீங்கள் என்னிடம் கொடுத்துத் தந்தையிடம் கொடுக்கச் சொன்னீர்களே?" என்று வினவினாள் அவள்.

"ஆம்."

"அதை நீங்கள் திரும்பப் பெற்றுக் கொள்ள வில்லையே?"

"இல்லையே."



"அப்படியானால்!" இளநங்கையின் கேள்வியில் சந்தேகம் ஒலித்தது.

வீரபாண்டியன் அவள் சந்தேகத்தை விளக்கினான். விளக்கியபோது அவன் குரல் மிகவும் கடுமையாயிருந்தது. "பெண்ணே! உன்னிடம் கொடுத்த ஆபரணத்தில் மட்டும் எனது முத்திரை இல்லை. அந்தப் பாண்டிய நாட்டு முத்திரை இப்பொழுது கொற்கையின் முத்திரை. பழைய வரலாறு காட்டும் குறிப்புப்படி பாண்டிய நாட்டு இளவரசனுக்கு ஏற்பட்ட தனி ராஜமுத்திரை அது. அதை நான் அந்தப் பொன்னும் முத்தும் கலந்த அந்தச் சின்னஞ் சிறு அடையாளத்தில் மட்டும் பொறித்தேனென்று நினைக்கிறாயா? இல்லை, இல்லை. என் கச்சையில் சதா நான் செருகியிருக்கும் கோடரியை நீ பார்த்திருக்கிறாயல்லவா? அதிலும் பொறித்திருக்கிறேன். அந்தத் தங்கக் கோடரியில் யானையும் செதுக்கப்பட்டிருக்கிறது. பார்ப்பதற்கு அது சிறு கோடரிதான். ஆனால் உயிரை மாய்க்க அதைவிடச் சிறந்த சாதனம் இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை. என் கை வேகத்தின் வீச்சுக்கெட்டும் எந்தத் திசையில் யாரிருந்தாலும் அவன் உயிரை உறிஞ்சக் கூடியது என் முத்திரை பொறித்த அந்தப் பொற்கோடரி. வீரரவி புத்திசாலியாயிருந்தால் முதலில் என் வாளைக் கீழே போடச் சொன்னதைவிட அந்தப் பொற்கோடரியை, என் ராஜ முத்திரையை, போடச் சொல்லியிருக்கவேண்டும்," என்ற வீரபாண்டியன் சொற்களில் வேகம் மிதமிஞ்சிக்கிடந்தது.

அவன் பொற்கோடரியைப் பற்றிப் பேசியபோது இருந்த வேகத்தைக் கண்டு நடந்திருக்கக்கூடியது என்னவென்பதை ஓரளவு உணர்ந்துகொண்ட இளநங்கை, "அப்படியானால் கோடரி..." என்று தயங்கிச் சொன்னாள் அந்த இரண்டு சொற்களையும்.

"வீரரவியின் தோளிலிருக்கிறது" என்று பதிலிறுத்தான் இளவரசன்.

"தோளிலா!" இளநங்கை புரிந்தும் புரியாததுபோல் கேட்டாள்.

"ஆம்." இந்த ஒரு வார்த்தைக்குமேல் பதில் சொல்ல வி ல்லை இளவரசன்.

அந்த மண்டபத்தில் நடந்த விபரங்களைச் சொல்ல மறுக்கிறான் என்பது அவளுக்குப் புரிந்திருந்தும் அவற்றை அறிந்துகொள்ளத் துடித்தாள் அவள். பத்துப் பன்னிரண்டு வீரர்களையும் அவர்கள் மன்னனையும் சமாளித்து அந்த மண்டபத்திலிருந்து மீள்வது சாதாரண மனிதன் செய்யக் கூடிய காரியமல்ல என்பதை அவள் சந்தேகமற உணர்ந் திருந்தாள். தவிர வீரரவி தனது வீரனை வேலெறிய உத்தர விட்ட பின்பு இளவரசனுக்குக் கிடைத்திருக்கக் கூடியது ஒரு விநாடியே என்பதிலும் அந்த ஒரு விநாடியில் இளவரசன் ஏதும் செய்ய முடியாதென்பதிலும் சந்தேக மில்லை அவளுக்கு. ஆகவே இளவரசனும் தப்பி, தன்னையும் தப்பவைத்த விந்தையை அறிய விரும்பிய இளநங்கை, "நடந்ததை விளக்கமாகச் சொல்லுங்கள்," என்று கேட்டாள். கேட்டது மட்டுமல்ல, அவன் கையில் சிறைப்பட்டு கிடந்த தனது கையைச் சிறிது சுழற்றவும் செய்தாள்.

வீரரவியையும் அவன் வீரர்களையும் சமாளித்த வாலிபனான வீரபாண்டியனுக்கு அந்த மலர்க் கையின் சுழற்சியிலிருந்து விடுபட முடியாததால் அவன் மென்ன விவரித்தான்: "அங்கு நடந்ததில் சொல்வதற்கு அதிகமில்லை. உண்மையில் அந்த மாளிகை நிகழ்ச்சி எனக்குத் தோல்விதான். அங்கிருந்த நிலையில் என் உயிரையும் உன் உயிரையும் காப்பாற்றுவதுதான் எனக்கு முக்கியமாயிருந்தது. ஆகவே வாளைக் கீழே போட்டவுடன் வீரரவியின் வீரன் வேலெறிவதற்கு முந்தியே என் இடையி லிருந்த கோடரியை எடுத்து வீரரவியின் வேல் பிடித்த தோளை நோக்கி எறிந்து விட்டேன். தோளில் கோடரி ஆழப்பாய்ந்துவிட்டால் எந்த வீரன்தான் என்ன செய்ய முடியும்? வீரனான வீரரவியின் வேல் தானாகக் கீழே வீழ்ந்தது. அடுத்தபடி குனிந்து வாளை நான் எடுத்துக் கொண்டேன். வீரரவி அதே சமயத்தில் கோடரி பாய்ந்த வேகத்தில் கைப்பிடியிலிருந்து விளக்குடன் குப்புற விழுந்



தாலாகையால் அவனைப் பிடிக்கவும் காக்கவும் வீரர்கள் ஓடினர். இடையில் கிடைத்த சில விநாடிகள் எனக்கும் பெரும் அவகாசமளித்தபடியால் என்னை நோக்கி வந்த வீரர்களிருவரை மலைநாடு அனுப்பாமல் மேல்நாடு அனுப்ப முடிந்தது. மண்டபத்தில் மூலைகளிலிருந்த இரு வெண்கல விளக்குகளை அணைத்து அவற்றைக் கீழே தள்ளவும் முடிந்தது. இதனால் சாளரத்தின் மூலம் பட்டை பட்டையாக இரண்டொரு இடங்களில் விழுந்த நிலவைத் தவிர மண்டபத்தில் இருள் கவிந்துவிட்டபடியால் உன்னை தூக்கிக்கொண்டு தப்பி வருவது பெரும் விந்தையல்ல கோட்டைக் காவலர் மகளே! அந்தச் சண்டையில் உன்னைக் காப்பாற்றியதைத் தவிர, வேறு குறிப்பாகக் கூறக் கூடிய செயல் ஏதுமில்லை. உன்னைத் தூக்கிக்கொண்டு ஓடி வந்தேன், கோழையைப்போல தோப்பின் விளிம்புக்கு. அங்கு நின்றிருக்கவேண்டிய நமது நான்கு வீரர்களும் இல்லை. இருவர் மாண்டு கிடந்தார்கள். வீரரவியின் ஆட்கள்தான் அவர்களைக் கொன்றிருக்க வேண்டும்! மற்ற இருவர் காணவில்லை. ஆகவே உன்னைத் தூக்கிக் கொண்டு தோப்பில் புகுந்து ஒளிந்து மறைந்து இங்கு வந்து சேர்ந்தேன். இந்தச் சண்டையில் முத்துக்களைக் கண்டு பிடிக்காதது ஒரு நஷ்டம். என் ராஜமுத்திரை சேரமன்னன் தோளில் தங்கிவிட்டது இன்னொரு நஷ்டம்." இப்படி மண்டப நிகழ்ச்சிகளை விவரித்த வீரபாண்டியன் பிறகு பெரு மௌனத்தில் இறங்கினான்.

இப்படி நடந்ததை இளவரசன் சொல்லக் கேட்ட இளநங்கையோ வியப்பின் ஆழத்தில் மூழ்கினாள். அவன் சொன்னதைவிடச் சொல்லாதது அதிகமென்பதை அவள் உணர்ந்தாள். ஒரே மனிதன், எதிரியின் பல வீரர்களுக் கிடையில் நின்று சமாளித்து, அவர்கள் வலையிலிருந்து தானும் மீண்டு, இன்னொரு பெண்ணையும் காப்பது சுலப மல்லவென்பதும், மின்னல் வேகத்தில் மண்டபத்தின் நிகழ்ச்சிகள் நடந்தேறியிருக்க வேண்டுமென்பதும் நன்றாகப் புரிந்தது இளநங்கைக்கு. மண்டபத்தில் நடந்தது அவள் மனக்கண்முன்பு விவரமாக எழுந்தது. வீரபாண்டியன் வாளைக் கீழே போட்ட மறுவிநாடி இடையிலிருந்த பொற்

கோடரியை எடுத்து மின்னல் வேகத்தில் வீசிவிட்டது, வீரரவி அலறி வீழ்ந்தது, வீரர்கள் அவனைத் தாங்க ஓடியது, வீரபாண்டியன் வாளெடுத்து வீரரை வெட்டி, வெண்கல விளக்குகளைச் சாய்த்து உருட்டி, தன்னை தூக்கிக்கொண்டு ஓடியது, அனைத்தும் அவளுக்கு விளங்கவே, மயக்கமாயிருந்த சமயத்தில் அவள் காதுகளில் விழுந்த பல ஒலிகளுக்குக் காரணமும் புரிந்தது அவளுக்கு. அத்துடன், இத்தகைய அசாதாரணச் செயலைச் செய்த இளவரசன் தனக்கு ஏற்பட்டதாகச் சொன்ன இருவித நஷ்டத்தைப்பற்றி அவன் துன்பப்படுவது எத்தனைப் பொருத்தம் என்பதையும் எண்ணியதால் பெருமூச்சு விட்டாள் அவள். ஆகவே அவளும் சிறிது மௌனம் சாதித்துவிட்டுக் கேட்டாள், "நஷ்டத்தைச் சொன்னீர்கள், லாபத்தைச் சொல்லவில்லையே!" என்று.

வீரபாண்டியன் இரு கைகளும் அவளைத் திடீரென்று சுற்றி வளைத்து அவள் உடலைத் தன்னை நோக்கித் திருப்பின.

முகமும் முகமும் எதிரும் புதிருமாக இருந்த நிலையில் அவன் கண்கள், அவள் கண்களைக் கூர்ந்து நோக்கின. அவன் உதடுகள், அவள் உதடுகளுக்கு வெகு அருகில் வந்து, "லாபம் இது" என்ற சொற்களை வெகு லேசாக உதிர்த்தன. அவன் முகத்தில் அந்தப் பயங்கரப் பேய்ப் பார்வை மறைந்திருந்தது. பழைய நிதானமான சாதாரணப் பார்வைகூட அப்பொழுதில்லை. இரவும் நிலவும் இளநங்கையுமாகச் சேர்ந்ததால், அவன் பார்வையில், செயலில், எண்ணத்தில் எல்லாவற்றிலுமே பெரும் மாறுதல் விளைந்திருந்தது. அவன் கைகள் அவளைச் சுற்றி இரும்பு வளையங்கள்போல் சென்றன. இளநங்கையின் உணர்ச்சிகளும் கொந்தளித்துக் கொண்டிருந்தன. அவற்றிலிருந்து விடுபட அவள் சட்டென்று திமிறிக்கொண்டு எழுந்திருந்து ஓட முயன்றாள். அந்தச் சமயத்தில்தான் இளவரசன் அவள் கையைப் பிடித்து இழுத்து, "உம்...மேலே ஆபத்து இருக்கிறது!" என்று எச்சரித்ததல்லாமல், அவளைப் பலவந்தமாக இழுத்துத் தன் அருகில் உட்கார வைக்கவும் செய்தான்.



அடுத்த விநாடி வீரபாண்டியன் நிலை அடியோடு மாறிவிட்டதை உணர்ந்தாள் இளநங்கை. இளவரசன் எதையோ உற்றுக் கேட்பதைப்போல் தோன்றியது. கோட்டைக் காவலன் மகளுக்கு அவன் என்ன செய்யப் போகிறான் என்பதை அவள் தீர்மானிக்கும் முன்பே அவளைக் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு பொருநை நீரில் இறங்கி விட்டான் இளவரசன். அடுத்த சில விநாடிகளில் தோப்பில் பேரரவம் கேட்டது. அவளுடன் இளவரசன் துரிதமாக நடந்தான், பொருநை ஓடிக்கொண்டிருந்த கிழக்குத் திசையை நோக்கி. இப்படிப் போய்க் கொண்டிருக்கும் போதே படித்துறைமீது தோப்பின் ஓரமாகப் பந்தங்கள் உலாவ ஆரம்பித்து விட்டதைக் கவனித்தாள் இளநங்கை. இளவரசன் சிறிது தூரம் கரையோரமிருந்த நீரிலேயே நடந்து சென்று, பிறகு திடீரென ஆற்றின் குறுக்கே அவளை இழுத்துக்கொண்டு ஓட ஆரம்பித்தான். "அதோ அதோ!" என்ற சொற்கள் ஆற்றின் கரையிலிருந்து எழுந்தன. பந்தங்கள் ஆற்றுக்குள் இறங்கவும் ஆரம்பித்தன.

இளவரசன் எதையும் கவனிக்காமல் இளநங்கையுடன் ஓடியவன் வெகு துரிதத்தில் எதிர்க்கரையை அடைந்து, அங்கிருந்த முத்தங்காடியின் கடைப் பகுதிகளின் பின்புறத்தட்டிகளின் வழியாகப் பதுங்கிப் பதுங்கிச் சென்றான். திடீரென ஒரு தட்டியின் முன்பு வந்ததும் அதைத் தன் கையால் பிரித்து அகற்றி இளநங்கையை உள்ளே செல்லச் சொல்லித் தானும் நுழைந்து, தட்டியைப் பழையபடி சரியாக அமைத்தான். உள்ளே முதலில் சென்ற இளநங்கை தலையை நிமிர்த்தினாள், அவ்வளவுதான்! செயலற்று நின்றுவிட்டாள். அவளை நோக்கிப் புன்முறுவல் செய்த முகத்தைப் பார்த்ததும், "நீயா நீயா!" என்று நிலை தடுமாறிச் சொற்களையும் உதிர்த்தாள். முத்துக்கும் பாண்டி நாட்டுக்கும், எத்தனை சம்பந்தமென்பது அப்பொழுதுதான் புரிந்தது அவளுக்கு.

அத்தியாயம் 13

# முத்து வலை

பொருநையாற்றின் குறுக்கே பரபரப்புடன் இழுத்து வரப்பட்டதால் இளநங்கையின் பக்குவமலர் உடல்பெரிதும் களைத்து, பெரு மூச்சும் துரிதமாக வந்துகொண்டிருந்த அந்த நேரத்திலும் எதிரே நின்ற உருவத்தைக் கண்டதும் அவள் உள்ளம் பெரும் பிரமிப்பை அடைந்ததன்றி அவள் பெருமூச்சைக்கூட ஓரளவு நிறுத்திவிட்டது. தோப்பிலிருந்த எதிர்க் கரையிலிருந்து பொருநையின் மற்றொரு கரைக்கு இளவரசன் தன்னை இழுத்துக்கொண்டு ஓடிவந்தபோது அந்த மற்றொரு கரையில் அவன் முத்தங்காடியில் குடையொன்றின் பின் தட்டியைப் பிரித்து உள்ளே நுழைவானென்பதையோ, அந்தத் தட்டியடைத்த கடையும் தனக்குத் தெரிந்த கடையாயிருக்குமென்பதையோ அவள் சிறிதும் சிந்திக்கச் சந்தர்ப்பமில்லாதபடியால் எதிரே நின்ற அந்தப் பெண்ணை வெறித்துப் பார்த்தாள். முதல் நாளிரவு தனக்கு முழு முத்து மாலையை எடுத்துக்காட்டி, "இதை அரச குலத்தாரால்தான் வாங்க முடியும். வேண்டுமானால் பார்த்துவிட்டுப் போ!" என்று அலட்சியமாகச் சொன்ன அதே முத்தங்காடிப் பெண் தன் எதிரே புன்முறுவலுடன் நின்றதன்றி, உள்ளே நுழைந்த இளவரசனுக்குக்கூடத் தலை வணங்காததையும் கண்டதும், அவள் இதயத்தில் அந்தப் பெண்ணைப்பற்றிச் சிறிது சந்தேகமும் எழுந்தது.

கேவலம் முத்துக் கடை வைத்திருக்கும் ஒரு பெண் பாண்டியநாட்டு இளவரசனும் கொற்கையின் அதிபதியுமான வீரபாண்டியனைச் சர்வ சகஜமாகத் தலையசைத்து வரவேற்றது பெரும் வியப்பாக இருந்ததால், இளநங்கை அப்பெண்ணையும் பார்த்து வீரபாண்டியனையும் ஒரு முறை ஏறெடுத்துப் பார்த்தாள். அந்தப் பெண்ணின் போக்கும் அங்கு வந்த காரணத்துக்கும் வீரபாண்டியன் ஏதாவது விளக்கம் தருவானென்று நினைத்த இளநங்கையை நோக்கி அவன் புன்முறுவல் செய்தானேயொழிய ஏதும் பேசவில்லை. ஆகவே இளநங்கையின் கண்கள் அந்தப் பெண்மீதே நிலைத்தன.

அந்தப் பெண்ணுக்கும் கிட்டத்தட்ட தன் வயதே இருக்குமென்பதையும், அவள் அழகும் அபரிமிதமாயிருந்ததையும் கவனித்த இளநங்கை, அவள் காதிலிருந்த இரண்டு மாணிக்க அணிகளையும் மூக்கிலிருந்த ஒற்றை முத்தையும் தவிர, வேறு ஆபரணங்களேதும் அவள் உடலில் இல்லாததையும் பார்த்தாள். அப்படி அதிக ஆபரணங்களில்லாதது அவள் அழகை இம்மியத்தனைகூடக் குறைக்கவில்லையென்பதைக் கவனித்த இளநங்கை, அந்த முத்துக் கடைக்காரி என்னதான் அழகியாயிருந்தாலும், இளவரசனைக் கண்டதும் தலைகூட வணங்காத அளவுக்கு அவளுக்கு ஆணவம் இருக்கக் கூடாதென்ற நினைப்பால், முகத்தில் சிறிது வெறுப்பையும் படரவிட்டுக் கொண்டாள்.

இளநங்கையின் இதயத்தில் ஓடிய எண்ணங்களை அந்த முத்தங்காடிப் பெண் எளிதில் உணர்ந்து கொண்டதை அவள் உதடுகளில் தவழ்ந்த இளநகை நிரூபித்தது. அந்தப் பெண் ஒருமுறை இளநங்கையை உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரையில் பார்த்தாள். பிறகு லேசாகச் சிரித்து விட்டு, "ஆண்களுக்கு எப்பொழுதும் எதற்கெடுத்தாலும் அவசரம், இல்லையா இளநங்கை?" என்று வினவவும் செய்தாள்.

கொற்கையின் பிரமுகர்கள்கூடத் துணிவுடன் உச்சரிக்க அஞ்சும் தன் பெயரை அத்தனை அலட்சியமாக அந்த முத்தங்காடிப் பெண் உச்சரித்ததன்றி, தன்னைப் பார்த்துச் சிரித்துக் கேள்வி கேட்கவும் முற்பட்டதைக் கண்டு வெகுண்ட இளநங்கை, சீற்றம் மிகுந்த கண்களை அந்தப் பெண்மீது நிலைநாட்டவும் செய்தாள். அந்தச் சீற்றத்தை லவலேசமும் லட்சியம் செய்யாத அந்தப் பெண்,

"உன் பெயர் எனக்கு எப்படித் தெரியும் என்று நினைக்கிறாயா?" என்று வினவினாள் சர்வசாதாரணமாக.

மற்றும் மரியாதையின்றி 'உன்' என்று துவங்கிய அந்தப் பெண்ணின் கேள்வியைக் காதில் வாங்கிக்கொண்டும் கூட என்ன பதில் சொல்வதென்பதை அறியாத இளநங்கை, "ஆம்" என்று உஷ்ணமான ஒற்றைச் சொல்லை உதிர்த்தாள் தனது உதடுகளிலிருந்து.

"உன் பெயரை அறிந்துகொள்ள நான் எந்த முயற்சியும் எடுக்கவில்லை. ஆனால்..." என்று பேச்சை வெகு லாகவமாக இழுத்துவிட்ட அந்தப் பெண் மீண்டும் லேசாக நகைத்தாள்.

இளநங்கை நகைக்கும் நிலையில் இல்லை. "ஆனால் என்ன ஆனால்?" என்று சீறினாள்.

"பத்து நாட்களாக ஒருவர் 'இளநங்கை இளநங்கை' என்று ஜபம் செய்துகொண்டிருந்தால் எப்படி அந்தப் பெயர் எனக்குத் தெரியாதிருக்க முடியும்?" என்று கேட்டாள் அந்தப் பெண்.

"பத்து நாட்களாக ஜபம் செய்கிறார்களா? யார் செய்கிறார்கள்? எதற்காக ஜபம் செய்கிறார்கள்?" என்ற சொற்கள் விதரணையின்றி வேகத்துடன் வந்தன இளநங்கையிடமிருந்து.

"யார் ஜபம் செய்கிறாரென்று தெரியும். எதற்காக என்று நீதான் சொல்லவேண்டும்," என்றாள் அந்தப் பெண்.

இளநங்கைக்கு அந்த ஜபம் செய்தவர் யாராயிருக்குமென்று தெரிந்துவிட்டது. இருப்பினும் கேட்டாள் ஆத்திரத்தோடு சங்கடமும் குரலில் ஒலிக்க, "யாரது?" என்று

"இதோ நிற்கிறாரே ஆந்தைபோல் விழித்துக்கொண்டு..." என்று இளவரசனைக் காட்டினாள் அந்தப் பெண்.

"இவரா! இவரா!" இந்தச் சொற்கள் இளநங்கையிடமிருந்து தடுமாறித் தடுமாறி வந்தன. அவள் கண்கள் இளவரசனைப் பார்க்கவும் பார்த்தன.



இளவரசன் முகத்தில் சங்கடமும் குழப்பமும் பிதமிஞ்சித் தாண்டவமாடின. அதில் சற்று முன்பிருந்த வேகம், உறுதி எல்லாமே மறைந்துவிட்டன. அவன் கண்களுக்குத் கண்களைச் சந்திக்கக்கூட அவன் கண்களைப் பக்கவாட்டில் செலுத்தி திராணியில்லாததால், கண்களைப் பக்கவாட்டில் செலுத்தினான் இளவரசன். அந்த இருவர் நிலையையும் கண்ட முத்தங்காடிப் பெண் நகைத்தாள். ஒரு மாபெரும் வீரன் மங்கை யொருத்தியின் வலையில் விழுந்துவிட்டால் அவன் வீரமெல்லாம் எத்தனை துரிதத்தில் பறந்துவிடுகிற தென்பதை எண்ணியதால் அவள் முகத்தில் வியப்பும் குடி கொண்டது. இப்படி வியப்பும் மகிழ்ச்சியும் கலந்த உணர்ச்சிகளை அடைந்த அந்த முத்தங்காடிப் பெண், "என்ன! பாண்டிய நாட்டு இளஞ்சிங்கம்கூட விழிக்கிறது. நான்தான் பத்து நாட்களாக இளநங்கை என்ற பெயரைத் திரும்பத் திரும்பப் பாடம் படித்தேனென்று சொல்கிறது தானே! வாயில் ஏதாவது அடைத்திருக்கிறதா?" என்று வினவினாள்.

அதற்குப் பிறகும் வாளாவிருப்பது தவறென்ற காரணத்தாலோ என்னவோ சொன்னான் இளவரசன், "ஆம். நான்தான் உங்கள் பெயரை இவளுக்குச் சொன்னேன்," என்று.

அந்த ஆறு சொற்களை மிகத் தட்டுத்தடுமாறி இளவரசன் சொன்னதும் அந்தப் பெண் மேலும் விடாமல், "பெயரை மாத்திரமா சொன்னீர்கள்? அவள் கருவிழிகள், கருங்குழல், சிறு மருங்கு..." என்று சொல்ல முயன்றதும் "சரி சரி, நிறுத்து" என்று அவளை அதட்டிய இளவரசன், கோபத்துடன் அவள் காதைப் பிடித்து இழுத்து அவள் வாயையும் பொத்தினான். "இவள் பெரும் வாயாடியாகி விட்டாள். எல்லாம் நான் கொடுத்த இடம். மன்னித்துக் கொள்ளுங்கள்," என்று இளநங்கையிடம் மன்னிப்புக் கேட்டான்.

இளநங்கையின் இதயம் எரிமலையாயிருந்தது தன்னெதிரிலேயே கேவலம் அந்தக் கடைக்காரியைத்

தொட்டு அவள் வாயையும் தன் கையால் பொத்தி வீரபாண்டியன் நடத்தையில் பெரிதும் சந்தேகம் கொண்டாள் அவள். அந்தப் பெண் வீரபாண்டியனைத் துரும்பென நடத்தியதையும், அவ்விருவர் சம்பாஷணையும் அரசன் குடிமகள் என்ற உறவில்லாமல் நிதானமிழந்திருந் தையும் கவனித்த அவள், "உங்களுக்கு இடைஞ்சலாக இங்கிருக்க விரும்பவில்லை. யாராவது துணை இருந்தால் கோட்டைக்குச் சென்று விடுகிறேன்," என்றாள்.

அந்த முத்தங்காடிப் பெண் மேலும் நகைத்தாள், "இப்படியே எப்படிக் கோட்டைக்குப் போக முடியும்?" என்றும் கேட்டாள்.

"ஏன் போக முடியாது?" என்று வினவினாள் இள நங்கை.

"ஆண்கள் அவசரக்காரர்கள் இல்லையா என நான் கேட்கவில்லை, முதலில்?"

"ஆம்." எரிச்சலுடன் வந்தது பதில்.

"உன்னை இளவரசர் அவசர அவசரமாகப் பொருநையின் தண்ணீரில் இழுத்து வந்திருக்கிறாரே?"

"ஆம்."

"புடவை பாதி நனைந்திருக்கிறதே!"

"ஆம், ஆம்."

"இந்த நனைந்த புடவையுடன் முத்தங்காடியில் நடந்து போனால்..."

அப்பொழுதுதான் தன் நிலையை உணர்ந்தாள் இள நங்கை. பொருநையின் நீராட்டப் படித்துறையை அணைந்த நீர்க்கால் சில இடங்களில் முழுங்காலளவும் சில இடங்களில் இடுப்பளவும்கூட இருந்ததால் அதைத் தாண்டிய நேரத்தில் தன் புடவை பெரிதும் நனைந்திருந்த தையும், கால்களிலும் அவற்றுக்கு மேலுங்கூட பல இடங்களில் ஒட்டிக்கொண்டிருந்ததையும் நினைத்துப் பார்த்து, "ஆம் ஆம், போக முடியாது, போக முடியாது," என்று கூறி அந்தப் பெண்ணைப் பரிதாபத்துடன் நோக்கினாள்.



அந்தப் பரிதாபப் போக்கு அந்தப் பெண்ணின் உள்ளத்தையும் கரைத்திருக்க வேண்டும். "அதோ அந்தத் தட்டிக்குப் பின்னால் என் அறை இருக்கிறது. அதில் போய் என் சேலைகள் இருக்கும். இதைக் களைந்து வேறு உடுத்திக் கொண்டு வா," என்று அருகிலிருந்த தட்டியைச் சுட்டிக் காட்டினாள் அந்தப் பெண்.

அதுவரை அந்தத் தட்டி, அடுத்த கடையின் அடைப்பென்று . நினைத்துக்கொண்டிருந்த இளநங்கை, அதை எப்படித் திறப்பதென்றறியாமல் அதைப் பிடித்து அசக்கிப் பார்த்தாள். "இரு இரு. இப்படித் திறக்க வேண்டும்," என்று தட்டியின் ஒரு மூலையிலிருந்த சிறு கம்பியை அழுத்தி இழுத்து அந்தப் பெண் தட்டியைத் திறந்துவிட, உள்ளே சென்றாள் இளநங்கை.

அந்தத் தட்டியின் உட்புறத்தை அடைந்ததும் பெரும் பிரமிப்புக்குள்ளானாள் கோட்டைக் காவலன் மகள். அங்கிருந்த இரண்டு சிறு கூடைகளில் ஓர் அரசையே விலைக்கு வாங்கிவிடக்கூடிய பெருமுத்துக்கள் கிடந்தன. கொடிகளில் சில சேலைகளும் இருந்தன. ஆண்கள் அணியும் உடைகளுமிருந்தன. அந்த ஆணுடைகள் வீர பாண்டியனுக்குத்தான் சொந்தமாயிருக்கும் என்று நினைத்த இளநங்கை, சாதாரண சமயமாயிருந்தால் வெறுப் புற்றிருப்பாள், அல்லது கோபத்தின் வசப்பட்டிருப்பாள். ஆனால் அந்த கடைக்குள் நுழைந்த வினாடியிலிருந்து ஏற்பட்ட பலவித உணர்ச்சிகள் அலைக்கழித்ததால் எதையும் நினைக்கச் சக்தியற்றவளாய், தனது நனைந்த சேலையை அவிழ்த்து அந்தப் பெண்ணின் சேலை யொன்றை அணிந்தாள். அப்படிச் சேலை அணியும் போதே இளவரசனை அலட்சியமாக நடத்தும் அவள் யாராயிருக்குமென்பதை எண்ணிப் பார்த்து விடை காணாமல் தவித்தாள். அவளென்ன வேவுகாரியா, ஆசை நாயகியா, இரண்டுமா என்று எண்ணிப் பார்த்து, எப்படி யிருந்தாலும் எதற்கும் ஓர் ஒளிவு மறைவு வேண்டு மென்பதை நினைத்ததால் பெரும் வெறுப்பே நிலவியது

அவள் இதயத்தில். அந்த வெறுப்புடனேயே அப் பெண்ணின் சேலையை அணிந்து வெளிவந்த இள நங்கையை அந்தப் பெண் மிகுந்த ஆச்சரியத்துடன் பார்த்தாள்.

"எப்படி?" என்று கேட்டாள் அவள், வீரபாண்டி யனை நோக்கி.

"பிரமாதம்!" என்றான் வீரபாண்டியன் பிரமிப்பால் குரல் சற்று நெகிழ.

"ஒன்று குறைகிறதல்லவா?" என்று மீண்டும் கேட்டாள் அந்தப் பெண்.

"ஆம்" என்றான் வீரபாண்டின்.

"சற்றுப் பொறுங்கள், கொண்டுவருகிறேன்," என்ற அந்தப் பெண் பக்கத்துத் தட்டியறைக்குள் ஓடி, கையி லொரு முத்துமாலையைக் கொண்டுவந்தாள்.

அதைக் கண்ட இளநங்கை சொல்லாவொண்ணா வியப்படைந்தாள். முதல் நாளிரவு அவள் பார்த்த அந்த முழு முத்துக்களின் மாலை அது; விலை மதிக்க முடியாதது. அதை அந்தப் பெண் ஆசையுடன் இளநங்கையின் கழுத்தில் அணிவித்துச் சற்று நகர்ந்து நின்று இளநங்கையை அழகு பார்த்து இளவரசனை நோக்கி, "இப்பொழுது எப்படி யிருக்கிறது?" என்று வினவினாள்.

"சாட்சாத்..." என்ற இளவரசனை இடைமறித்த அந்த முத்தங்காடிப் பெண், "முழுத் தகுதி இருக்கிறதல்லவா?" என்று வினவினாள்.

"இருக்கிறது, இருக்கிறது," என்றான் வீரபாண்டியன்.

இளநங்கைக்கு ஏதும் புரியவில்லை. அதுவரை இருந்த மயக்கத்தை உதறி அந்தப் பெண்ணைக் கோபத்துடன் நோக்கினாள். "யார் நீ? உனக்கும் இவருக்கும் என்ன சம்பந்தம்?" என்று சீறவும் சீறினாள்.

அந்தச் சீற்றத்தை அந்தப் பெண் சிறிதளவும் லட்சியம் செய்யவில்லை. "அதை அவரையே கேட்பது தானே?" என்றாள் அலட்சியமாக.



"யாரிவள்?" என்று சீற்றத்துடன் வினவினாள் இள நங்கை இளவரசனை நோக்கி.

இளவரசன் உடனடியாகப் பதில் சொல்லவில்லை. ஒரு முறை அந்த முத்தங்காடிப் பெண்ணை நோக்கினான். பிறகு இளநங்கையின்மீது அவன் கண்கள் நிலைத்தன. அந்தப் பழைய நிதானம் அவன் முகத்தில் திரும்பி விட்டதைக் கவனித்தாள் இளநங்கை. "இவளை உனக்கு அறிமுகம் செய்துவைக்க வேண்டிய அவசியமும், நேரமும் வந்துவிட்டது இளநங்கை. உங்களிருவர் கைகளிலும் பாண்டிய நாட்டின் முக்கியப் பணியை ஒப்படைக்க வேண்டிய காலமும் வந்துவிட்டது. ஆகவே, நீங்களிருவரும் ஒருவரையொருவர் நன்றாக அறிந்துகொள்வது நல்லது. உன்னை இவள் அறிவாள் இளநங்கை. ஆனால் இவளை நீ அறிய மாட்டாய்," என்று ஏதோ பெரும் மந்திரங்களை ஓதுபவனைப்போல் பேசிய வீரபாண்டியன், "இவள்..." என்று கூறி, சொல்லை முடிக்காமல் விட்டான்.

"இவள்?" இளநங்கையின் கேள்வி துரிதமாக வந்தது.

வீரபாண்டியன் பதில் சொன்னான். பதிலைக் கேட்ட இளநங்கை கற்சிலையென நின்றாள்.

"என்ன! என்ன!" இளநங்கை மீண்டும் இருமுறை கேட்டாள், நம்பமுடியாமல்.

"என் மகள்!" உறுதியுடனும் சந்தேகத்துக்குச் சிறிதும் இடமின்றியும் வந்தது வீரபாண்டியன் பதில் இரண்டாம் முறையாக.

யாரும் நம்புவதற்கு முடியாத பொய் அது. இருபத்தைந்து வயதுக்கு மேலே இருக்கமுடியாத இளவரசனுக்குத் தன் வயதையொத்து ஒரு பெண் இருக்க முடியாதென்று திண்ணமாகத் தெரிந்ததால், "பொய்! பொய்!" என்று கூவினாள் இளநங்கை.

இளவரசன் மெள்ள மெள்ள விளக்கம் தந்தான். அந்தப் பெண், பாண்டிய நாடு, முத்து மூன்றும் எத்தனை இணைந்து கிடந்தன என்ற விளக்கம் அது. அதைக்கேட்ட இளநங்கையின் திகைப்பு எல்லை கடந்தது. அக்கச்

சமயத்தில் தான் சிக்கியிருந்தது முத்துக்கடைத் தட்டிகளுக்கிடையில் மட்டுமல்லவென்பதையும், அந்தத் தட்டிகளுக்கிடையே பின்னப்பட்ட பெரும் ராஜீய வலையில் தான் மீளமுடியாமல் சிக்கிவிட்டதையும் உணர்ந்தாள் கோட்டைக் காவலன் மகள். பாண்டியநாடு இப்படியொரு முத்துவலையைத் தன்னைச் சுற்றி அத்தனை துரிதமாகப் பின்னிவிடும் என்பதை அறியாததால், அவள் பெரும் பிரமை பிடித்துப் பல வினாடிகள் நின்றுவிட்டாள்.

அத்தியாயம் 14

# அபாயப் பணியின் முதல் படி

முந்திய நாளிரவு தான் சந்தித்த முத்தங்காடிப் பெண் இளவரசனது மகளாக ஒருகாலுமிருக்க முடியாதென்ற எண்ணத்தால், "பொய்! பொய்!" என்று இளநங்கை கூவியதும் இளவரசன் ஓரளவு அனுதாபத்துடன் அவளை உற்று நோக்கினான். உள்ள நிலையை அவள் உணராதது அவனுக்கு எந்த விதத்திலும் வியப்பில்லாததால் அவன் அவளையும் நோக்கி முத்தங்காடிப் பெண்ணையும் நோக்கினான். அவன் பார்வையின் பொருளை அந்த முத்தங்காடி பெண் புரிந்துகொண்டிருக்கவேண்டும். "இன்னும் முத்தங்காடியில் ஜன நடமாட்டம் இருக்கிறது. நான் அதிக நேரம் உட்புறமிருப்பதில் அபாயமிருக்கிறது. நான் வெளியே சென்று கடையைக் கவனிக்கிறேன். நீங்கள் இந்தப் பெண்ணுக்கு விஷயத்தை எடுத்துச் சொல்லுங்கள்" என்று கூறிவிட்டு, கடையின் முன்புறத்துக்கும் பின்புறத்துக்கும் இடையேயிருந்த திரையை விலக்கிக் கொண்டு வெளியே சென்றாள்.

தனித்து விடப்பட்ட இருவரும் சில விநாடிகள் மௌனம் சாதித்தார்கள். வெளியே அப்பொழுது மிகுந்த ஜனநடமாட்டம், வியாபாரக் கூச்சல், காவலரின் எச்சரிக்கை ஒலிகள் ஆகியவற்றில் எதுவுமே அந்தச் சில விநாடிகளில் அவ்விருவர் காதிலும் விழவில்லை. இருவரில் இளநங்கையின் மனம் பெரும் பிரமிப்பிலும், குழப்பத்திலும் இருந்தது. சற்று முன்பு தானும் இளவரசனும் எதிரிகளுக்குத் தப்பிப் படித்துறையிலிருந்து ஓடி வந்ததையும் அவர்கள் தங்களை ஆற்றுக்குக் குறுக்கேயும் துரத்தியதையும் கூட அவள் மறந்தாள். அந்த வீரர்கள் ஏன் முத்தங்காடிக்குள்

வரக்கூடாது. இதே தட்டியைப் பிய்த்துக்கொண்டு, ஏன் உள்ளே நுழையக்கூடாது என்ற நினைப்புக்கூட இல்லை அவளுக்கு. அந்தச் சமயத்தில் அவள் நினைப்பில் நிலைத்த தெல்லாம், முத்தங்காடிப் பெண்ணுடன் இளவரசன் பழகிய விதமும், அந்தக் கடை உள்ளேயிருந்த தட்டி யறையின் அமைப்பும் பொருள்களும், கடைசியில் அங்காடிப் பெண்ணைத் தன் பெண் என்று இளவரசன் அறிவித்ததும் தான். அந்தப் பல விஷயங்களால் ஏற்பட்ட குழப்பத்தையும் பிரமிப்பையும் அகற்ற முடியாத கோட்டைக் காவலன் மகள் இளவரசனை ஏறெடுத்து நோக்கவும் சக்தியற்று நிலத்தை நோக்கினாள்.

எத்தனை நேரம் அவள் நிலத்தை நோக்கி நின்றிருந் தாளோ அவளுக்கே தெரியாது. உள்ளே குமுறிக் கொண்டிருந்த பல எண்ணங்களின் விளைவாக. ஆனால் தனது மோவாய்க் கட்டையில் இளவரசனின் கை படிந்து முகத்தை நிமிர்த்தியதும் சிறிது சுரணை வரப்பெற்றாள் அவள். நிமிர்ந்த அவள் முகத்தில் ஒளியிட்ட கண்களை இளவரசன் கண்கள் சந்தித்ததும், பூரணமாக உணர்வு வந்து விடவே அவள் இதழ்கள் ஏதோ கேள்வி கேட்க அசைந்தன.

அவளை எந்தக் கேள்வியும் கேட்க இளவரசன் அனுமதிக்கவில்லை. அவன் வலது கை அவள் மோவாய்க் கட்டையை நிமிர்த்திய நேரத்தில் இடக்கை அவள் இடையில் அழுத்திக் கிடந்தது. அவன் தேகம் அவள் பின்புறத்தில் நெருங்கியிருந்தது. அந்த நிலையில்கூட அவளுக்கு அதில் சந்துஷ்டியில்லை. தன்னைச் சுற்றிய மாய வலையை அறுத்து உண்மையை அறியத் துடித்தது அவள் மனம். அதை உணர்ந்த இளவரசன் அவள் கேட்குமுன்பே புன்முறுவல் காட்டி, "இளநங்கை! பாண்டி நாட்டு இளவரசனைப் பொய்யன் என்று துணிவுடன் முதல் முதலாக அழைத்தது நீ ஒருத்திதான்" என்று கூறினான்.

பின்னால் நின்று தன்னை நோக்கிக் குனிந்த இளவரசன் கண்களைச் சந்தித்த இளநங்கை ஏதோ சொல்ல வேண்டுமென்பதற்காகச் சொன்னாள்,



"பொய்யைப் பொய்யென்று சொல்வதற்குத் துணிவு எதற்கு? பொய் சொல்வது பாராளும் மன்னனாயிருந்தா லென்ன, பரதேசியாயிருந்தாலென்ன?" என்று.

"நான் சொன்னது பொய்யென்று உனக்கெப்படித் தெரியும்?" என்று வினவினான் இளவரசன்.

"உங்கள் வயதையும் அவள் வயதையும் ஒப்பிட்டுப் பார்த்தால் நீங்கள் சொல்வது பொய்யென்பதைக் குருடன் கூடச் சொல்லுவானே?" என்றாள் இளநங்கை குரலில் இகழ்ச்சியைக் காட்டி.

"அந்த வயதில் எனக்குப் பெண்ணிருக்க முடியாதா?"

"முடியும்-உங்களுக்கு ஐந்து அல்லது ஏழு வயதில் குழந்தை பிறந்திருக்குமானால்."

"அதில்லாவிட்டால்?"

"இத்தனை பெரிய பெண் இருக்க முடியாது."

"நிச்சயமாக?"

"ஆம், நிச்சயமாக."

இதைக் கேட்ட இளவரசன் லேசாக நகைத்தான். "எனக்குப் பிறந்தால்தான் எனக்கு மகளாக இருக்க முடியுமா?" என்று நகைப்பினூடே கேட்கவும் செய்தான்.

இளநங்கை அவனைச் சந்தேகத்துடன் ஏறிட்டு நோக்கினாள். விஷயத்தை விளக்க அவன் இத்தனை கேள்விகளைக் கேட்டிருக்கவேண்டிய அவசியமில்லை. சட்டென்று இரண்டொரு வார்த்தையில் விளக்கக்கூடிய விஷயம்தான் அது. இருப்பினும் அவன் காலதாமதம் செய்து குறுக்கும் நெடுக்குமாகக் கேள்விகளைக் கேட்டான். அந்த அனாவசியக் கால தாமதத்தின் காரணம் இளநங்கைக்கும் புரிந்திருந்தது. புரிந்திருந்தது மட்டுமல்ல, வேண்டியுமிருந்தது. அவ்விருவரும் நின்ற நெருக்கமான நிலையில் எத்தனை நேரத்தை ஓட்ட முடியுமோ அத்தனை நேரத்தை ஓட்ட இருவருமே இஷ்டப்பட்டதால் அவர்கள் நெருக்கமும் நீண்டது. காலமும் நீண்டது. பேச்சும் நீண்டது.

ஆகவே மேலும் பேச்சைத் தொடர்ந்த இளநங்கை கேட்டாள், "வேறு யாருக்குப் பிறந்தால் உங்களுக்கு மகளாக முடியும்?" என்று.

இளவரசன் இந்தக் கேள்விக்கு உடனடியாகப் பதில் சொல்லவில்லை. சற்றுநிதானித்தான். பிறகு அவளைத் தன் இரு கைகளாலும் திருப்பித் தனக்கு எதிரில் நிறுத்திக் கொண்டான். அந்த நிலை அவள் சங்கடத்தை அதிகப் படுத்தியது. இளவரசன் மெல்லக் கேட்டான், "மூத்தவனுக்குப் பெண்ணானால் இளையவனுக்கும் அவள் பெண்ணல்லவா?" என்று.

அந்த கேள்வியைக் காதில் வாங்கியதும் அவள் மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டாள். "அப்படி யானால் இவள்..." என்று சொற்கள் பயத்துடன் உதிர்ந்தன அவள் இதழ்களிலிருந்து.

"என் அண்ணன் மகள்! பாண்டிய மன்னர் சுந்தர பாண்டியத் தேவரின் மகள்!" இந்தச் சொற்களை மிக நிதானமாகவும், மிகுந்த மரியாதையுடனும் உதிர்த்தான் வீர பாண்டியன்.

இளநங்கையின் இதயத்தில் மெள்ள மெள்ள விரிந்தது உண்மை ஒளி. அதன் விளைவாக அவள் பேசும் சக்தியைக் கூட இழந்தாள் சில விநாடிகள். பிறகு சமாளித்துக் கொண்டு, "இளவரசி...பாண்டிய நாட்டு இளவரசி..." என்று கூறி மென்று விழுங்கினாள்.

"ஆம் இளநங்கை! பாண்டிய நாட்டின் இரண்டு இளவரசிகளில் இவள் இரண்டாமவள்," என்று விளக்கினான் வீரபாண்டியன்.

இளநங்கையின் கண்கள் அகல விரிந்தன. "பாண்டிய நாட்டு இளவரசி... முத்தங்காடியில்...ஒரு..." மேலே, சொல்ல முடியாமல் திகைத்தாள் வியப்பால்.

"வாணிபப் பெண்ணாக இருக்கிறாள்," என்று முடித்தான் வீரபாண்டியன், அவள் துவங்கிய வாசகத்தை.

"என்னால் இதை நம்ப முடியவில்லை," என்றாள் இளநங்கை.



"யாராலும் நம்பமுடியாததைச் செய்வதில்தான் பாண்டிய மன்னருக்குப் பிரியம்," என்று சுட்டிக் காட்டினான் இளவரசன்.

"இளவரசியைக் கட்டுக் காவலேதும் இன்றி வாணிபம் நடத்த அனுமதிப்பது முறையா?" இளநங்கையின் கேள்வியில் கோபமுமிருந்தது, வெறுப்பு மிருந்தது.

இளவரசன் கண்கள் அவளை நோக்கி நகைத்தன. "இளவரசனைத் துணையேதுமின்றி வேவு பார்க்கவும், முத்துத் திருட்டைக் கண்டுபிடிக்கவும் அனுப்புவது மட்டும் முறையா?" என்று வினவினான் இளவரசன்.

இளநங்கை அவனைக் கோபத்துடன் பார்த்தாள். "நீங்கள் ஆண்பிள்ளை" என்றாள் சீற்றத்துடன்.

இளவரசன் கண்களில் கனவு விரிந்தது. "பாண்டிய மன்னர் நாட்டுப் பணியில் இன வேற்றுமை, பால்வேற்றுமை, பதவி வேற்றுமை எதுவும் பார்ப்பது கிடையாது இளநங்கை. நீ தெரிவித்த இதே ஆட்சேபத்தை நானும் தெரிவித்தேன் அவரிடம். அவர் என்ன சொன்னார் தெரியுமா? 'தம்பி! நீ செல்வது பாண்டிய நாட்டுப் பணி. உனக்குத் துணைசெய்ய இவளும் வருகிறாள். பெரும் முத்து, அதாவது பெரும் தனம், பாண்டியநாட்டைவிட்டுப் போய்விட்டது. அதைக் கண்டுபிடிக்க முத்தங்காடியிலும் கண் வேண்டும். கொற்கையின் பிற இடங்களிலும் கண் வேண்டும். ஒரு கண் இவள். ஒரு கண் நீ. இந்தப் பணியில் நீ போனாலும் சரி, இவள் போனாலும் சரி பாதமில்லை. நாட்டு நன்மைக்குச் சாதாரண மக்கள்தான் சாகவேண்டு மென்பதில்லை. அரச குலத்தாரும் அழியலாம். தவறில்லை.' என்றார் பாண்டியத் தேவர். அது மட்டும் சொல்ல வில்லை அவர். 'பாண்டிய நாடு இப்பொழுது தன்னைக் காத்துக் கொள்ளவில்லையென்றால் அது அழிந்துவிடும். அந்த அழிவைத் தடுக்க நமது குலத்தையே பலி கொடுக்கலாம் தம்பி. ஆகையால் நீயும் இவளும் செல்லுங்கள். உயிரை பற்றிக் கவலைப்படாதீர்கள். அது

என்றாவது ஒருநாள் காரணமின்றிப் போய்விடும். அதற்கு முன்பு காரணத்தோடு நல்ல பணிக்குப் போவது தவறல்ல,' என்றும் சொன்னார். இதற்கு நான் என்ன பதில் சொல்ல முடியும்! இல்லை நீ அவர் முன்னிருந்தால் என்ன பதில் சொல்லியிருப்பாய்?" என்று வினவினான் வீரபாண்டியன்.

இளநங்கையின் கண்களில் வியப்புப் பெரிதும் விரிந்தது. அன்றுவரை சேர வீரரவியோ, சோமேசுவரனோ, சோழ ராஜேந்திரனோ உணராத பெரும் உண்மையொன்றை அவன் உணர்ந்துகொண்டான். வீரபுத்தியும் தியாக புத்தியும் கொண்ட ஒரு மகா புருஷன் பாண்டிய நாட்டில் உதயமாகிவிட்டான் என்ற உண்மை தான் அது. அத்தகைய ஒரு பெரு வீரனின் சில குணங்கள் அவனுக்கு இளையவனிடமிருப்பது அவளுக்குச் சிறிதும் விந்தையாயில்லை. பட்சிகளின் சப்தஜாலத்தைக் கொண்டே தோப்பில் வீரர் நடமாடுவதை உணர்ந்து கொள்ளக்கூடிய அசகாய சூரனைத் தம்பியாகவும், பொது ஸ்தலத்தில் சாதாரணக் கடைக்காரி போல் வாணிபம் செய்யும் துணிவுள்ள மகளையும் பெற்ற சுந்தர பாண்டியர் உண்மையில் இணையற்ற மகாபுருஷனாகத்தான் இருக்க வேண்டுமென்று தீர்மானித்தாள். மெள்ள மெள்ள வேறு பல விஷயங்களும் அவளுக்கு விளங்கலாயின. உள் தட்டியறைக் கொடியில் தான் பார்த்த விலை உயர்ந்த சேலைகளுக்கும், கூடைகளில் கண்ட விலையற்ற முத்துக்களுக்கும் காரணமும் புரிந்தது. கோட்டைக் காவலன் மகளுக்கு. முந்திய நாள் முழு முத்துக்கள் உள்ள மாலையை இளவரசி தனக்குக் காட்டியதற்கும் காரணம் தெரிந்தது அவளுக்கு. அரசர்கள் கூட வாங்க முடியாத அந்த முழு முத்துமாலை பாண்டிய மன்னரின் பொக்கிஷப் பெட்டியில் இருந்துதான் வந்திருக்க முடியுமென்பதை ஊகித்துக் கொண்ட இளநங்கை, சகலமும் விளங்கி விட்டதைப் பிரதிபலித்த கண்களுடன் வீரபாண்டியனை நோக்கினாள்.

அந்தச் சமயத்தில் வீரபாண்டியன் அவளை நோக்கிக் கூறினான்: "இளநங்கை! இதுவரை பெரும் சிக்கலில்



உன்னைச் சிக்கவைத்துவிட்டேன். உன்னை நான் பல நாட்களாகக் கவனித்து வருவது உனக்குத் தெரியும். காரணத்தை வீரரவியின் முன்பு தெளிவாகச் சொன்னேன். நான் உன்னைக் கண்காணித்து வந்ததையும் வீரரவியின் இருப்பிடத்தை அறிய உன்னை ஓர் ஆயுதமாக நான் உபயோகப்படுத்தியதையும் நீயும் அறிவாய். உன்னை நான் கண்காணித்தது இளவரசிக்கும் தெரியுமென்பதை அவள் பேசியதிலிருந்தே நீ புரிந்துகொண்டிருக்கலாம். ஆகவே நீதான் ஒரு முடிவு செய்யவேண்டும்."

இளநங்கைக்கு அவன் எதை முடிவு செய்யச் சொல்கிறான் என்பது புரியாததால், அவனைக் கேள்வி கேட்கும் பாவனையில் தனது விற்புருவங்களைச் சற்றே உயர்த்தினாள். அந்தப் புருவங்களின் எழுச்சிகூட மிக அழகாயிருந்தது அவன் முகத்துக்கு. அந்த அழகைப் பருகிய படியே வினவினான் வீரபாண்டியன், "எங்கள் பணியில் நீயும் பங்கு கொள்ள இஷ்டமா?" என்று.

இளநங்கையின் விழிகள் மகிழ்ச்சியுடன் மலர்ந்தன. "இந்தப் பணியில் இன்றும், நேற்றும் என்னைக் கேட்டுத் தான் ஈடுபடுத்தினீர்களா?" என்று வினவினாள் அவள்.

"இல்லை. தேவையிருந்ததால் உன்னைக் கேளாமலே உன்னைச் சிக்கவைத்தேன். இனியும் உன்னைச் சிக்க வைத்தால் நீ கடைசிவரை அரசியல் வலையில், இந்த முத்துக்களவு ஆராய்ச்சியில், அதனால் ஏற்படும் போர்களில் சிக்கிவிட நேரிடும். உன்னை அப்படிச் சிக்க வைக்க எனக்கு உரிமையில்லை. ஆகையால்தான் கேட்கிறேன். சொல் கோட்டைக் காவலன் மகளே! இந்த முத்து வேட்டையில், பெரும் அரசுகளுடன் மோதும் பணியில், என்னையும் பாண்டிய மன்னன் மகளையும் போல் நீயும் சிக்க இஷ்டமா! தீர யோசித்துச் சொல். இஷ்டமில்லையேல் இப்பொழுதும் கூட நீ விலகலாம்" என்றான் வீரபாண்டியன்.

இளநங்கை ஒரு விநாடிகூட யோசிக்கவில்லை. "இளவரசர், அரசர் மகள் இவர்கள் உயிரைவிடக்

கோட்டைக் காவலன் மகன் உயிர் அப்படியொன்று பிரமாதமல்ல" என்றான்.

"சரி, அப்படியானால் தயாராயிரு" என்றான் வீர பாண்டியன்.

"எதற்கு?" இளநங்கை கேட்டாள்.

"நீண்டதூரப் பயணத்துக்கு; மிக்க அபாயமான பயணத்துக்கு," என்றான் வீரபாண்டியன். அடுத்த விநாடி அவளை அணைத்து நின்ற கைகள் விலகின. இளவரசன் குரல் "முத்துக்குமரி, உள்ளே வா," என்று மெள்ள அழைக்கவும் செய்தது.

மீண்டும் திரை விலகியது. பாண்டிய மன்னன் மகள் உள்ளே நுழைந்தாள். அவள் வந்ததும் அரசகுமாரி என்றதால் தரையில் மண்டியிட்டு வணங்க முற்பட்ட இளநங்கையை அவள் மண்டியிட விடாமல் தடுத்தாள். பிறகு அவளை அணைத்துக்கொண்டு இளவரசன் முன்பு நின்றாள்.

"இளநங்கைக்கும் சம்மதம்" என்றான், இளவரசன் தனது அண்ணன் மகளை நோக்கி.

பாண்டியன் மகள் இளநங்கையை மகிழ்ச்சிக் கண்களுடன் நோக்கினாள். பிறகு அவளை அணைத்த வண்ணம் தட்டியறைக்குள் அழைத்துச் சென்றாள். வினாடிகள் பல ஓடின. இருவரும் வெளியே வரவில்லை. 'இத்தனை நேரம் என்ன செய்கிறார்கள்?' என்று சங்கடப் பட்ட இளவரசனின் காதுகளில் உள்ளிருந்த இரு மங்கைகளும் சிரிக்கும் ஒலி விழுந்தது.

'அபாயம் தலைக்குமேல் இருக்கும் சமயத்தில் சிரிப்பென்ன வேண்டியிருக்கிறது?' என்று எரிச்சல்பட்டுக் கொண்ட இளவரசன், அந்தப் பெண்களை அனுப்ப வேண்டிய அபாயப் பணியின் முதற்படியை உள்ளூர வகுக்கவும் தொடங்கினான்.

அத்தியாயம் 15

# வரலாற்றுப் பயணம்

தட்டியறைக்குள்ளிருந்து வந்த தருணிகளிருவரின் சிரிப்பொலியைக் கேட்டதும், "தலைக்குமேல் அபாயம் தாண்டவமாடும் சமயத்தில் சிரிப்பென்ன வேண்டியிருக் கிறது சிரிப்பு?" என்று இளவரசன் சினந்துகொண்டா னானாலும், உள்ளிருந்த கிள்ளைகள் இரண்டும் அந்த அபாயத்தைப் பற்றிச் சிறிதும் சிந்தித்ததாகவே தெரிய வில்லை. தட்டியறைக்குள் சென்றதுமே இளநங்கையைச் சற்று எட்ட வைத்துப் பார்த்துப் பூரித்த பாண்டிய நாட்டு இளவரசி, "முழுப் பொருத்தம் முழுப் பொருத்தம்!" என்று மகிழ்ச்சி பொங்க வாய் விட்டுச் சொற்களை உதிர்க்கவே இளநங்கை கேட்டாள், "என்ன முழுப் பொருத்தம்?" என்று.

முத்துக்குமரியின் அழகிய உதடுகள் லேசாகத் திறந்து முத்தைப்போல அழகான பற்களைச் சற்றே வெளிக் காட்டின. சொற்களும் முத்தென்று உதிர்ந்தன அவள் வாயிலிருந்து. இளநங்கையின் கழுத்தைச் சுட்டிக்காட்டிய முத்துக்குமரி, "அதோ அந்த முத்துமாலை எல்லோருக்கும் பொருந்தாது. உனக்கு அது பொருந்துகிறது. அதற்கு நீ பொருந்துகிறாய். அதை நீ அணிந்து நிற்கும்போது அசல் பாண்டிய நாட்டு ராணி போல் தோற்றமளிக்கிறாய்," என்று கூறினாள்.

அதைச் சொன்ன முத்துக்குமரியின் கண்கள் மகிழ்ச்சி யால் பனிச்சிட்டதைக் கண்ட இளநங்கை, "வீணாகப் புகழாதீர்கள், எதை அணிவித்தாலும் வான்கோழி மயிலாகி விடாது. முத்துமாலை எல்லோருக்கும் ராஜ கம்பீரத்தை அளித்துவிடாது," என்று கூறினாள்.

முத்துக்குமரியின் இதழ்கள் இளநகை பூத்தன. "நான் சொன்னது சரியாகப் போய்விட்டது!" என்றாள் பதிலுக்கு.

"எது சரியாகப் போய்விட்டது?" ஏதும் புரியாமல் வினவினான் இளநங்கை.

"நீங்கள் பாண்டிய நாட்டு அரசகுலம் என்பது" என்றாள் முத்துக்குமரி.

"எப்படிச் சரியாகப் போய்விட்டது?"

"நீங்கள் வான்கோழி, மயில் என்றெல்லாம் உவமை காட்டவில்லையா!"

"ஆம்."

"இதெல்லாம் பாண்டிய குலத்தில்தான் சகஜம்."

"எப்படி?"

"பாண்டிய அரசகுல மகளிர்க்குப் புலவர்களை வைத்துப் பாடம் சொல்லிக் கொடுக்கிறார்கள். ஆகவே, அரசகுல மகளிர் கவிதை உணர்ச்சியுடன் பேசுகிறார்கள்."

"புலவர்களிடம் மற்றவர்கள் படிக்கக் கூடாதா? நானும் தான் படித்தேன்."

"அப்படியா விஷயம்! சதி ஆரம்பத்திலிருந்தே நடக்கிறதா!" என்றாள் முத்துக்குமரி சற்றுக் கோபத்துடன்.

இளநங்கை பாண்டியன் மகளின் கோபத்தைக் கவனித்தான். "சதியா!' என்ன சதி?" என்று வினவினான்.

"என் சிறிய தந்தையைப் பிடிக்கும் சதி" என்றாள் முத்துக்குமரி.

"யார் செய்தது சதி?" இளநங்கை முகத்திலும் கோபம் உதயமாயிற்று.

"உன் தந்தை. கோட்டைக் காவலர் வானாதித்தர்" என்று பெருங்கோபத்துடன் கூறினாள் முத்துக்குமரி.

"என் தந்தை எந்தச் சதியையும் செய்யவில்லை. சற்று நிதானித்துப் பேசுங்கள் இளவரசி" என்ற இளநங்கையின் குரல் உஷ்ணமாயிருந்தது.



"உனக்குப் புலவரை வைத்துப் பாடம் சொல்லிக் கொடுக்கவில்லை?" என்று கேட்டாள் பாண்டிய ராஜ குமாரி.

"ஆம். சொல்லிக் கொடுத்தார்."

"குதிரை யேற்றமும் சொல்லிக் கொடுத்திருக்க வேண்டும்."

"ஆம். சொல்லிக் கொடுத்தார்."

"வாட் பயிற்சி?"

"அதுவும் அளித்தார்."

"இத்தனையும் அரச மகளிர் பழகுவது. சாதாரணப் பிரஜைகள் வீட்டு மகளிர் பழகுவதில்லை. இவற்றை ஏன் உன் தந்தை உனக்குப் பழக்கி வைத்தார்?" என்று கேட்டாள் பாண்டிய குமாரி.

இளநங்கையின் இதயத்தில் ஆத்திரம் ஆத்திரமாகப் பொங்கிக்கொண்டிருந்தது. "இதெல்லாம் சதியின் அம்சங்களா?" என்று சீறினான் அவன்.

இதைக் கேட்ட முத்துக்குமரி இளநங்கையின் அருகில் வந்து அவன் தோள்களைப் பிடித்துக்கொண்டு தனது கண்களை அவன் அழகிய விழிகளுடன் உறவாடவிட்டாள். "இத்தனை அழகும், வாய்த்திறனும், வாள் திறனும் கொண்ட ஒரு பெண்ணைச் சிறிய தந்தை முன்பு நிற்க வைத்தால் அவர் பிடிபடாமல் என்ன செய்வார்?" என்று கூறி அதுவரையிருந்த பொய்க் கோபத்தை உதறி நகைத்தாள்.

முத்துக்குமரி நடிப்பைவிட்டுத் தன்னைப் பார்த்து நகைத்ததைக் கண்ட இளநங்கை வெட்கம் பிடுங்கித் தின்றதால் முத்துக்குமரியின் கண்களைச் சந்திக்கவும் சக்தியற்றவனாகித் தனது கண்களை நிலத்தில் ஓட்டினான். முத்துக்குமரியின் ஒரு கை இளநங்கையின் இடையைச் சுற்றிச் சென்றது. இன்னொரு கை அவன் மோவாய்க் கட்டையைத் தூக்கியது. அந்த நிலையில் கேட்டாள் முத்துக்குமரி, "உங்களை இனி நான் மரியாதையாகத்தானே அழைக்க வேண்டும்?" என்று.

"ஏனாம்?" மெள்ள எழுந்தது இளநங்கையின் கேள்வி.

"நீங்கள் எனக்குச் சிற்றன்னையல்லவா?" என்றாள் முத்துக்குமரி.

இளநங்கை மெள்ள நகைத்தாள். "அப்படியானால் நீ என் குழந்தை" என்று சொல்லவும் செய்தாள்.

"ஆம்! என்றாள் முத்துக்குமரி.

"அப்படியானால் மடியில் படுத்துக்கொள்!" என்றாள் இளநங்கை.

"ஐயையோ! மாட்டேன்!"

"ஏன்?"

"சிறிய தந்தை கோபித்துக் கொள்வார்."

"எதற்காக?"

"அந்த மடி அவருக்குச் சொந்தம்."

இந்த இடத்தில் இளநங்கையும் நகைத்தாள். முத்துக்குமரியும் நகைத்தாள். இந்தச் சிரிப்பொலி காதில் விழுந்ததும் வெகுண்ட இளவரசன் தட்டியறைக்கு வெளியிலிருந்தே சீறினான். "சீக்கிரம் வாருங்கள். நேரமாகிறது புறப்பட." என்ற அவன் குரலைக் கேட்டதும் மீண்டும் சுய நிலைக்கு வந்த அந்தப் பெண்களிருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். இருவர் நகைப்பும் புன்முறுவலாகச் சுருங்கியதும், முத்துக்குமரி, "இளநங்கை! உங்களை" என்று துவங்கினாள்.

"உம். உங்களை எங்களையெல்லாம் வேண்டாம்," என்று எச்சரித்தாள் இளநங்கை.

"நீங்கள் என்..." என்றாள் முத்துக்குமரி விஷமத்துடன்.

"உறவினர்களாக ஆன பின்பு பார்த்துக் கொள்வோம். அதுவரையில் உங்களுக்கு நான்..." என்று துவங்கிய இளநங்கையை இடைமறித்த முத்துக்குமரி, "பார்த்தாயா நீ மட்டும் உங்களுக்கு என்று..." என்றாள்.

"இல்லை இல்லை, உனக்கு..." என்று நிருத்திக் கொண்டாள் இளநங்கை.



"சரி இளநங்கை" என்று கூறிய முத்துக்குமரி, "இனிப் புறப்படத் தயாராக வேண்டும். இப்படி வா. அந்தச் சேலையை அவிழ்த்துவிட்டு, அந்தக் கூடையில் இருக்கும் சாதாரண சேலையை அணிந்துகொள்", என்று, அந்த அறையின் மூலையிலிருந்து ஒரு கூடையைக் காட்டினாள். அந்தக் கூடையிலிருந்து சாதாரணச் சேலையொன்றை எடுத்து இளநங்கை அணிந்துகொண்டதும், தானும் ஒரு சேலையை அதிலிருந்தே எடுத்து அணிந்துகொண்ட முத்துக்குமரி இளநங்கையின் கழுத்தில் சற்று முன்பு தான் அணிவித்த முத்து மாலையைச் சிறிது நேரம் நோக்கினாள். பிறகு சொன்னாள், "இளநங்கை! அந்த முத்துமாலையை வெளிக்குத் தெரியாதபடி கச்சைக்குள் தள்ளிவிடு; சேலையையும் இழுத்துப் போர்த்துக் கொள்" என்று.

"ஏன், இதைக் கழற்றி விட்டாலென்ன?" என்று வினவினாள் இளநங்கை.

"வேண்டாம், அது பத்திரமான இடத்திலிருக்க வேண்டும். அதைக் கொண்டு ஒரு படையைத் திரட்டலாம்" என்றாள் முத்துக்குமரி.

"என் கழுத்து அத்தனை பத்திரமானதா?" என்று வினவினாள் இளநங்கை.

"ஆம், இளநங்கை. தமிழர்களுக்குள் எத்தனையோ பகை இருக்கிறது, பூசல்கள் இருக்கின்றன. இத்தனையிருந்தும் பெண்ணின் கழுத்தில் இருக்கும் ஆபரணத்தை அபகரிக்கும் அளவுக்கு அவர்கள் குணம் இறங்கவில்லை", என்று முத்துக்குமரி, "அது தவிர..." என்று துவங்கிச் சிறிது தயங்கினாள்.

"என்ன முத்துக்குமரி?"

"அந்த முத்துமாலை பெரிய ராணியாரின் நகைகளுள் ஒன்று."

"யார்? இளவரசரின்...?"

"தாயாருடையது."

இளநங்கையின் கண்களில் அச்சம் உதயமாயிற்று. "அதை நான்...நான்" என்று தட்டுத் தடுமாறிச் சொற்களை உதிர்த்தன அவள் உதடுகள்.

முத்துக்குமரியின் பதில் திடமாக வந்தது. "நீ தரித்துக் கொள்ள முற்றும் தகுதியுள்ளவள். சிறிய தந்தை அது உன் கழுத்தில் இருப்பதை விரும்புகிறார் என்பது முதல் தகுதியை அளிக்கிறது உனக்கு! இரண்டாவதாக நாட்டுக்கு நீ செய்ய முன் வந்திருக்கும் தியாகம், உனக்கு அடுத்த தகுதியை அளிக்கிறது. உன் கழுத்து எந்த ராணியின் கழுத்துக்கும் கீழானதல்ல, இளநங்கை. அதைத் தரித்துக் கொள், எடுக்காதே" என்ற முத்துக்குமரி, அதற்குமேல் ஏதும் பேசாமல் இளநங்கையைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு இளவரசன் இருந்த இடத்திற்கு வந்தாள்.

கூடப் பிறந்தவர்களைப்போல் ஒரே விதமான வாணிப உடையணிந்து தன்னெதிரே நின்ற அந்த இரு பெண்களையும் பார்த்த இளவரசன் இதழ்களில் திருப்திக்கு அடையாளமாகப் புன்முறுவலொன்று தவழ்ந்தது. "பாதகமில்லை, உங்களை இனி யாரும் சந்தேகிக்க மாட்டார்கள். கொஞ்ச நஞ்சம் சந்தேகம் ஏற்பட்டால், அதையும் தீர்க்க உங்களுடன் பத்து வணிகர்களையும் அனுப்புகிறேன்," என்றான் இளவரசன், அந்தப் புன்முறுவலின் ஊடே சிந்தனை செல்லும் பாதையையும் காட்டி.

முத்துக்குமரியின் கருவிழிகள் இளவரசனை ஏறெடுத்து நோக்கின. "நாங்கள் எங்கு செல்லவேண்டும்? எதற்காகத் துணை அனுப்புகிறீர்கள்?" என்று கேட்டாள் அவள்.

தட்டியறைக்குள் அந்தப் பெண்களிருவரும் இருந்த சமயத்தில் தனது அடுத்த திட்டத்தை உருவாக்கிக் கொண்ட வீரபாண்டியன் சொற்கள் தங்கு தடையின்றி வந்தன. "சென்ற இரண்டு நாட்களில் வெளிநாட்டுக் கப்பல்கள் நான்கு காயல் துறைமுகத்துக்கு வந்திருக்கின்றன.



ஆகவே வாணிபம் முத்தங்காடியில் இரண்டு நாட்களாக் வலுத்திருக்கிறது. அதன் விளைவாக, இங்கு வாங்கப்பட்ட வெளிநாட்டு மாற்றுப் பண்டங்கள் உள்நாடு செல்லும்" என்றும் சுட்டிக் காட்டினான்.

அந்தச் சாதாரண விஷயத்தை இளவரசன் ஏன் சொல்கிறானென்று புரியவில்லை இரு பெண்களுக்கும். வாணிபம் நடந்தால் மாற்றுப் பண்டங்கள் உள் நாட்டுக்குச் செல்வது சகஜம்தானே என்று இருவரும் நினைத்தார்கள். அவர்கள் நினைப்பை ஊகித்துக்கொண்டே வீரபாண்டியன் சொன்னான். "உள்நாட்டுப் பண்டங்களைக் கொண்டு செல்லும் வணிகர்கள் பொழுது புலருவதற்கு முன்பு கிளம்புவார்கள். அவர்களோடு நீங்களும் கிளம்புங்கள். உங்களுக்குத் துணையாக நமது வீரர்களில் சிலர் வணிகர் வேடமணிந்து உங்களுடன் வருவார்கள்," என்று.

புரிந்து கொண்டதற்கு அடையாளமாகப் பாண்டியன் மகள் தலையசைத்தாள். சரியாகப் புரியாததால் இளநங்கை கேட்டாள், "இந்தத் துணையுடன் நாங்கள் எங்கு செல்லவேண்டும்?" என்று.

வீரபாண்டியன் சிறிதளவும் யோசிக்காமல் பதில் சொன்னான், "பொதியமலைக்கு" என்று.

"பொதிய மலைக்கா?" என்று வினவினாள் இளநங்கை வியப்புடன்.

அவள் வியப்பைக் கவனித்த இளவரசன், "இதில் வியப்பதற்கு என்ன இருக்கிறது!" என்று கேட்டான்.

"முத்துக் களவு இங்குதான் நடக்கிறது. எதிரிகளும் இங்குதானிருக்கிறார்கள். ஆக நாங்கள் பொதிய மலையில் எதைக் கண்டுபிடிக்கப் போகிறோம்?" என்று கேட்டாள் இளநங்கை.

"முத்துக் களவைக் கண்டுபிடிக்கும் பொறுப்பு என்னுடையது. எதிரிகளைச் சமாளிக்கும் பொறுப்பும் என்னுடையது. உங்களிருவருக்கும் அந்த பொறுப்பில்லை. நீங்களிருவரும் பாண்டிய அரசாங்கத்தின் பணிமக்கள். பாண்டிய அரசாங்க அலுவலுக்காக நான் கையாளும்

ஆயுதங்கள். ஆகவே கேள்வி எதையும் கேட்கவேண்டாம், சொல்வதைக் செய்யுங்கள்," என்ற வீரபாண்டியன் குரலே அந்தச் சமயத்தில் புதிதாயிருந்தது இளநங்கைக்கு. அது காதலன் குரலுமல்ல. அரசாங்கத் தளபதியின் அதிகாரமும் கண்டிப்பும் அந்தக் குரலில் தொனித்தன. அந்தத் தொனியைக் கேட்ட முத்துக்குமரி தலை வணங்கி நின்றாள். இளநங்கை மட்டும் வீர பாண்டியனை ஏறெடுத்து நோக்கினாள்.

வீரபாண்டியன் முகம் கம்பீரத்தின் சின்னமாயிருந்தது. அவன் விழிகளில் ஓர் உறுதியும் அதிகாரமுமிருந்தன. மீண்டும் பழைய தொனியிலே சொற்களை உதிர்த்தான் வீர பாண்டியன். "நான் அனுப்பும் வீரர்களுடன் நீங்களிருவரும் பொருநையின் கரையோரப் பாதையில் மேற்கு நோக்கிச் செல்லுங்கள். ஒரு நாள் பயணத்துக்குப் பின்பு பொதியமலையின் அடிவாரம் வரும், அங்குள்ள அகத்தியர் குடிலில் இரவு கவியும்வரை தங்குங்கள். இருள் நன்றாக மூண்டு மக்கள் உறங்கும் நேரம் வந்ததும் பயணத்தை மீண்டும் துவங்கி மலை மீது செல்லுங்கள். மலையின் முதல் பீடபூமியில் இருக்கிறது நமது காவல் படையொன்று. அதன் தலைவனைச் சந்தியுங்கள். அவனுக்கு ஓர் ஓலை தருகிறேன். அதை கொடுத்துவிடுங்கள் அவனிடம்," என்று உத்தரவிட்டான் வீரபாண்டியன்.

"அந்தப் பீடபூமிக்குப் பெயர்?" என்று வினவினாள் முத்துக்குமரி.

"முன்பு பெயர் ஏதுமில்லை. இப்பொழுது மன்னர் ஒரு பெயர் தந்திருக்கிறார்," என்றான் வீரபாண்டியன்.

"என்ன பெயரோ?" என்று வினவினாள் முத்துக்குமரி.

"கொட்டுந்தளம்," என்றான் வீரபாண்டியன்.

"விந்தையான பெயர்" என்றாள் இளநங்கை.

"காரணப்பெயர்" என்றான் வீரபாண்டியன். காரணப் பெயர் என்று சொன்னது மட்டுமல்லாமல்



காரணத்தை விளக்கவும் செய்தான். அவன் விளக்கத்தைக் கேட்ட மங்கையரிருவரும் எத்தகைய பேராபத்தை நாடிச் சொல்கிறோமென்பதைப் புரிந்துகொண்டார்கள். ஆனால் தனது முன் இருக்கும் பெரும் அரசபணியை மட்டுமே நினைத்த வீரபாண்டியன் அவர்கள் பெண்கள் என்பதையோ, அவர்களைத் தான் பேராபத்தை நோக்கி அனுப்புவதைப் பற்றியோ சிறிதும் கவலைப்படாமல், அவர்களை அனுப்புவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யத் தட்டிக்குப் பின்புறமாக வெளியே சென்று, சுமார் ஒரு நாழிகை கழித்துத் தன்னுடன் வேறு ஒருவனையும் அழைத்துக்கொண்டு திரும்பி வந்தான். "இந்த இருவரும் உன்னுடன் வருகிறார்கள். கொட்டுந்தளம் அழைத்துச் சென்றதும் அங்குள்ள நமது காவற்படைத் தலைவனிடம் இவர்களை ஒப்படைத்துவிட்டு நீ மட்டும் நாளை கழித்து மறுதினம் திரும்பிவிடு," என்று கூறினான் அந்த மனிதனிடம். "இனி நீங்கள் செல்லலாம்." என்று கூறி அவர்களுக்கு வழி விட்டும் நின்றான். வந்த மனிதனை இருவரும் பின் தொடர்ந்து சென்றார்கள். அவர்கள் பயணம் துவங்கியது; சாதாரணப் பயணமல்ல அது. தமிழகத்தையே தொடர்ச்சியாகப் போர்களில் சிக்கவைத்த ஈடு இணையற்ற வரலாற்றுப் பயணம் அது.

அத்தியாயம் 16

# அருவி அழைத்தது; ஆபத்தும் அழைத்தது !

இளநங்கையும் முத்துக்குமரியையும் கொட்டுந் தளம் செல்லும்படி பணித்து அவர்களுக்குத் துணை செல்ல வேறு ஒருவனையும் வெளியிலிருந்து அழைத்துவந்த இளவரசன், "இவர்களைக் கொட்டுந்தளத்திலுள்ள காவற் படைத் தலைவனிடம் ஒப்படைத்துவிட்டு நீ திரும்பிவிடு," என்று அவனுக்கு உத்தரவிட்டதைக் கேட்ட மங்கையரிருவரும், இளவரசன் ஏனிந்த உத்தரவுகளைப் பிறப்பிக்கிறான் என்பதை அறியமாட்டாமல் திகைத்தனர்.

முத்துக் கனவு கொற்கையில் நடந்திருக்க, வீரரவி உதய மார்த்தாண்டவர்மனும் அவன் வீரர்களும் முத்தங் காடியையும் கொற்கைக் கோட்டையையும் குறையாடத் திட்டமிட்டுக் கொற்கையிலே தங்கியிருக்க, தங்களை இளவரசன் தூரத்திலுள்ள பொதியமலை அகத்தியர் குடிலுக்கும் பீடபூமியான கொட்டுந்தளத்துக்கும் அனுப்பும் காரணமென்ன என்பதை யோசித்தும் ஏதும் புரியாததால் ஒரு வினாடி குழப்பத்துடன் வீரபாண்டியனையும் பார்த்து, வந்த மனிதனையும் பார்த்தனர்.

வந்தவனோ வயது முதிர்ச்சியில்லாதவன். இளவரசனுக்கும் குறைந்த வயதுள்ள வாலிபன். அவன் முகத்தில்கூட இளவரசனுக்கிருந்த கம்பீரமோ உறுதியோ இல்லாததன்றி கண்களும் கல்மிஷமின்றி, சதா சிரிப்பை உதிர்த்துக் கொண்டிருந்தன. மொத்தத்தில் பார்வைக்கு அவன் பொறுப்பேதுமற்ற விளையாட்டுப் பிள்ளையைப் போல் இருந்தானேயன்றி, பெரும் பணிகளை நிறைவேற்றவல்ல



ஆற்றல் அவனுக்கிருந்ததாகத் தெரியாததால், அவனை இரு பெண்களும் சற்று சந்தேகத்துடனேயே பார்த்தார்கள்.

அவர்கள் பார்வையில் தொக்கி நின்ற எண்ணத்தைப் புரிந்துகொண்டதாலோ என்னவோ அந்த வாலிபன் இதழ்களில் புன்முறுவலொன்று லேசாக ஒரு வினாடி தோன்றி மறைந்தது. மறுவினாடி பணிக்குச் செல்லும் வீரனின் கடமைக் குரலில் அவனிடமிருந்து சொற்கள் உதிர்ந்தன. "இளவரசி புறப்படுவதாயிருந்தால் அடியவன் காத்திருக்கிறேன்" என்று கூறினான் அவன். அத்துடன், தன் அழகிய கருங்குழல் சிறுமுடி முன்விழ தலையையும் லேசாகத் தாழ்த்தினான் வணக்கத்திற்கு அறிகுறியாக.

முத்துக்குமரி வீரபாண்டியனை ஏறெடுத்து நோக்கினாள் ஒருமுறை. அவன் முகம் உணர்ச்சியற்றுக் கிடந்தது. பணிமக்களை ஏவிய பின்பு அதிகாரியிருக்கும் நிலையிலேயே அவனிருந்தானே தவிர, இளவரசியின் சிறிய தந்தையென்ற முறையிலோ, இளநங்கையிடம் சிந்தையைப் பறிகொடுத்தவன் என்ற முறையிலோ அவனில்லாததைக் கண்டாள் முத்துக்குமரி. அவன் தோரணையை இளநங்கை முன்னதாகவே புரிந்துகொண்டுவிட்டதால் முத்துக் குமரிக்கு முன்பாகவே அவள் அந்த வாலிபனைப் பின் தொடர ஓர் அடி எடுத்து வைத்தாள். அவளைச் சற்றே தடுத்த முத்துக்குமரி கேட்டாள் இளவரசனை நோக்கி, "இவர் யாரென்று சொல்லவில்லையே நீங்கள்?" என்று.

இளவரசன் ஒரு வினாடி முத்துக்குமரியை நோக்கினான். "பாண்டிய சாம்ராஜ்யத்தின் முக்கிய ஆயுதங்களில் ஒன்று" என்று கூறவும் செய்தான்.

"இவர் மனிதரல்லவா? ஆயுதமா?" என்று கோபத்துடன் கேட்டாள் முத்துக்குமரி, இளவரசன் தன்னிடம் ஏதோ மறைக்கிறானென்ற கோபத்தில்.

"ஆம், ஆயுதம்தான்." திடமாக வந்து வீரபாண்டியன் பதில். அந்தப் பதிலில் உஷ்ணமும் இருந்தது, பயணம் தாமதமாகிறதென்ற காரணத்தால்.

"அப்படியானால் மனிதரில்லையா இவர்?" என்று கேட்டாள் முத்துக்குமரி கோபம் தணியாமல்.

"சில சமயங்களில் மனிதர்தான்."

"மற்றச் சமயங்களில்?"

"பணிபுரியும் ஆயுதம்."

"அப்படியா?"

"என்ன ஆயுதமோ? வேலா? அம்பா?"

"அம்பு."

"எனப்படி?"

"எய்பவன் நான்," என்று வீரபாண்டியன் அவர்கள் செல்லலாம் என்பதற்கு அறிகுறியாகத் தலையால் குறிப்பும் காட்டினான்.

அதற்குமேல் பேசுவதில் ஏதும் பயனில்லை என்பதை உணர்ந்த முத்துக்குமரி அந்த வாலிபனைப் பின் தொடர்ந்தாள். அந்த வாலிபனும் முத்துக்குமரியும் பின் தட்டி வழியாக வெளியே சென்றதும் இளவரசன் தனித்திருந்ததை நோக்கிய இளநங்கை, "கொட்டுந்தளத்துக்குச் சென்று ஓலையைக் கொடுத்த பின்பு நாங்கள் என்ன செய்யவேண்டும்?" என்று வினவினாள்.

"நான் கொடுத்துள்ள ஓலையில் கொட்டுந்தளத் தலைவனுக்கு விரிவான உத்தரவிருக்கிறது," என்று கண்டிப்புடன் சொன்ன இளவரசன், இளநங்கையின் முகத்தில் விளைந்த கோபக் களலை அணைக்கும் எண்ணத்துடன் மேலும் சொன்னான்; "இளநங்கை! கொற்கையில் பல நிகழ்ச்சிகள் ஏற்பட்டு வருகின்றன. நான் முத்துக் களவை மட்டும் எதிர் பார்த்து வந்தேன். ஆனால் மேலும் பல சிக்கல்கள் பல வல்லரசுகளின் கரங்கள் தென்படுகின்றன இங்கே. இவற்றைச் சமாளிக்க என்னால் முடியுமோ முடியாதோ தெரியாது. ஆனால் மிகுந்த எச்சரிக்கையும் ரகசிய ஏற்பாடுகளும் தேவையாகிறது. பாண்டியநாடு இந்தச் சிக்கல்களிலிருந்து மீள வேண்டுமானால். ஆகையால்தான் உங்களிடம் எதையும்



சொல்ல என்னால் முடியவில்லை. ஒன்று நிச்சயம். உங்களுடன் கூட வருபவன் வாலிபனாயிற்றே, பார்வைக்கு விளையாட்டுப் பிள்ளையாயிருக்கிறானேயென்று நினைக்க வேண்டாம். நான் உங்களுடனிருந்தால் எப்படியோ அப்படித்தான் அவன் உங்களுக்குத் துணை வருவதும். அஞ்சாமற் செல், சீக்கிரம் நாம் சந்திப்போம்," இதைச் சொன்னதன்றி அவளுக்குத் தைரியமூட்டுவதற்காக அவளருகில் வந்து அவள் தோள்மேல் இரு கைகளையும் வைத்து ஒருமுறை அவளை உற்று நோக்கிவிட்டு வெளியே அனுப்பினான்.

இள நங்கை அதே தட்டி மூலம் வெளியே வந்ததும் அங்கு முத்துக்குமரியுடன் தயாராக நின்றிருந்த வாலிபன் தன்னுடன் வரும்படி அவர்களிருவருக்கும் சைகை செய்து முன் சென்றான். பொருநையின் கரையோரமே, முத்தங் காடியின் ஒரு சாரிக் கடைகளின் பின்புறமே அவர்களை அழைத்துச் சென்ற அந்த வாலிபன், தன் தோளிலிருந்த பெருந்துணியை எடுத்து வணிகர்கள் கட்டும் முண்டாசு போல் தலையில் லேசாகச் சுற்றிக்கொண்டு, கூடவந்த பெண்களிருவரையும் முக்காடிட்டுக் கொள்ளும்படி வேண்டிக் கொண்டான்.

அவன் சொற்படி கேட்க மறுத்த முத்துக்குமரி, "நாங்கள் வணிகர் உடைதான் அணிந்திருக்கிறோம். தவிர, தமிழக வணிகப் பெண்கள் முக்காடு போடும் வழக்கம் கிடையாது", என்று சுட்டிக்காட்டினாள்.

அவன் அதற்கு ஏதாவது மறுமொழி கூறுவானென்றோ அல்லது சொல்கிறபடி செய்யவேண்டுமாறு பிடிவாதம் பிடிப்பானென்றோ எதிர்பார்த்திருந்தால் முத்துக்குமரி ஏமாந்து போனாள் என்றுதான் சொல்லவேண்டும். அந்த வாலிபன் எந்தவிதமான ஆட்சேபணையும் கிளப்பவில்லை; பதிலும் சொல்லவில்லை. பேசாமல் முன் நடந்தான். சுமார் இரண்டு நாழிகைகள் பொருநைக் கரையோரமாகவும், அதைச் சற்று தூரத்தில் வந்து கலந்து கொண்ட கொட்டுந்தளச் சாலை வழியாகவும் அவ்விரு

வரையும் அழைத்துச் சென்ற அந்த வாலிபன், கரையோரங்களிலும் சாலையிலுமிருந்த கூட்டங்களின் ஊடே நுழைந்தும் இடித்துக் கொண்டும் கஷ்டப்பட்டுப் பயணம் செய்து அந்தப் பெருஞ் சாலை ஓரத்தில் கூடாரமடித்தும், கூடாரமேதும் அடிக்காமலும் தங்கியிருந்த வணிகர் கூட்டங்களிடம் வந்தான். அங்கிருந்த கூடாரங்களொன்றில் நுழைந்து மங்கையரிருவரையும் உள்ளே வரச்சொன்ன அந்த வாலிபன், அங்கிருந்த ஒரு தனியறைக்குள் சென்று இரண்டு பெரும் கூடைகளை எடுத்து வந்து அவ்விருவரிடமும் கொடுத்து, "ஆளுக்கொன்று எடுத்துக் கொண்டு வாருங்கள்." எனக்கூறி கூடாரத்துக்குள்ளிருந்த பத்துப் பதினைந்து வணிகர்களையும், "உம்..கிளம்புங்கள்" என்று அதட்டினான்.

அந்த வாலிபன் உள்ளே நுழைந்ததுமே மிகுந்த மரியாதையுடன் எழுந்து நின்ற அந்தப் பத்து பதினைந்து வணிகரும், அவன் உத்தரவிட்டதும் பயணத்துக்குச் சித்தமாக வெளிக் கிளம்பினர். சாலை மரங்களில் கட்டப்பட்டிருந்த புரவிகள் அவிழ்க்கப்பட்டதன்றி, இருபெரும் புரவி வண்டிகளும் பூட்டப்பட்டுப் பயணத்துக்குச் சித்தம் செய்யப்பட்டன. வண்டிகளில் பெரும் கூடைகளும் மூட்டைகளும் ஏற்றப்பட்டதும் வண்டிகளுக்கு முன்னும் பின்னும் காவலாக வணிகர்கள் சென்றனர். அந்த வாணிகர் கூட்டத்தின் முன் பகுதியின் நடுவில் இரு பெண்களையும் புரவியில் வரச்செய்த அந்த வாலிபன், தான் மட்டும் தனது புரவியில் ஏறி முன்னால் வழிகாட்டிச் சென்றான். முத்துக்குமரி அவன் ஏறியிருந்த புரவியைக் கண்டதும் பெருவியப்புற்றாள். அந்தப் புரவி அவளுக்குப் பெரிதும் பழக்கமான புரவிதான். வீரபாண்டியன் வீரத்தை மெச்சி, பாண்டிய மன்னர் பரிசாக அளித்த பெரும் புரவி அது. வீரபாண்டியனைத் தவிர வேறு எவரையும் அண்டவிடாததும் பரம துஷ்ட மிருகமெனப் பிரசித்தி பெற்றதுமான அந்தச் சாம்பல் நிறப்புரவி, விளையாட்டுப் பார்வையும் பால் முகமும் உள்ள அந்த வாலிபனை



எப்படிச் சுமக்கிறது என்பதை எண்ணி வியப்பின்மேல் வியப்பெய்தினாள் அவள். தவிர வேறு யாருக்கும் அந்தப் புரவியைக் கொடுக்காத இளவரசன் இந்த வாலிபனுக்கு மட்டும் ஏன் அதை அளித்தார் என்பதும் புரியவில்லை அவளுக்கு எப்பொழுது இளவரசன் அந்தப் புரவியின்மீது ஏற வாலிபனுக்கு அனுமதியளித்தாரோ அப்பொழுதே, அந்த வாலிபன் சிறிய தந்தையின் நெருங்கிய நண்பனாக இருக்க வேண்டுமென்ற முடிவுக்கு வந்தாள் முத்துக்குமரி. அந்த வாலிபன் அப் புரவிமீது சர்வசாதாரணமாக அமர்ந்திருந்தது அவளுக்கு வியப்பை மட்டுமின்றி ஒரு சந்தேகத்தையும் அளித்தது. அந்தப் புரவியையே சமாளிக்கத் தக்க வாலிபன் முகத்தில் விளையாட்டுக் குறியும் அனுபவ முதிர்ச்சியின்மையும் தெரிந்தாலும், உண்மையில் அவன் கைதேர்ந்த புரவி வீரனாக இருப் பானென்ற சம்சயம் மெள்ள மெள்ள அவள் இதயத்தில் உதயமாயிற்று.

அவள் சம்சயம் உண்மையென்பதற்கு அவன் நடத்தையே அன்று மாலைக்குள் சான்று கூறியது. அன்று பூராவும் வணிகர் கூட்டத்துக்கு உணவருந்தவும் இளைப்பாறவும் இருமுறை மட்டுமே சிறிதளவு அவகாசம் தந்த அந்த வாலிபன், பயணத்தைத் துரிதமாக நடத்தினான். பொருநையின் கரையோரச் சாலையிலேயே அக் கூட்டத்துடன் அன்று முழுவதும் பயணம் செய்த இளநங்கையும் முத்துக்குமரியும் வழியெங்கிலும் அதிகக் காவல் இல்லாததைக் கவனித்தனர். அந்த நிலையில் பாண்டிய நாட்டின் அந்தப் பகுதியைச் சேரர் தாக்குவது மிக எளிதென்று அவ்விருவருக்கும் புரிந்ததால், அவர்களிருவர் இதயங்களிலும் கவலை பெரிதும் துளிர்விடலாயிற்று. என்னதான் கொட்டுந்தளத்தில் காவற்படையிருந்தாலும், பொதியமலை தாண்டினால், சேரநாடு காட்சியளிக்கும் அத்தனை சமீப எல்லையில் அடியோடு காவலின்றி இருந்ததால் முத்துக்குமரி இளநங்கையை நோக்கி, "இளநங்கை! அவரைக் கேள். இங்கு ஏன் காவலில்லையென்று?" எனக் கூறினாள்.

இளநங்கை தன் புரவியைச் சற்று முன்செலுத்தி "வணிகரே! வணிகரே!" என்று கூவியழைத்தாள் அந்த வாலிபனை.

அந்த வாலிபன் புரவியைச் சற்று நிறுத்திப் பின்னடைந்து, "ஏன்?" என்று வினவினான்.

"இந்தச் சாலையில் காவல் ஏதுமில்லையே?" என்று கேட்டாள் இளநங்கை.

"இல்லை." ஒற்றைச் சொல்லி பதில் வந்தது அந்த வாலிபனிடமிருந்தது.

"ஏன்?"

"எனக்கெப்படித் தெரியும்?"

"இளவரசி கேட்கிறார்கள்."

"யாரது இளவரசி?"

"என்னுடன் வருகிறார்களே அவர்கள்."

"அவர்கள் இளவரசியா!" வியப்பைக் காட்டினான் குரலில் அந்த வாலிபன்.

இதைச் சற்றுப் பின்னிருந்து கேட்ட முத்துக்குமரிக்கு ஆத்திரம் பொத்துக்கொண்டு வந்தது. முன்னுக்குக் குதிரையைச் செலுத்தி, "ஏன், என்னைப் பார்த்தால் யாரென்று தெரியவில்லையா உங்களுக்கு?" என்று வினவினாள் கோபத்தைப் பூரணமாகக் குரலில் காட்டி.

"எப்படித் தெரியும்?" என்றான் அந்த வாலிபன் அவளைத் திரும்பி நோக்கி.

"இளவரசி புறப்படுவதாயிருந்தால் அடியவன் காத்திருக்கிறேன் என்று கூறவில்லை நீங்கள் முத்துக் கடையில்?" என்று கேட்டாள் முத்துக்குமரி.

"ஆம். கேட்டேன். அப்பொழுது நீங்கள் இளவரசி அந்தத் தட்டிக் கடையை விட்டுப் புறப்பட்ட பின்பு அதை மறந்துவிட்டேன்," என்றான் அந்த வாலிபன்.

"ஏன்?" சீறினாள். முத்துக்குமரி

"மறந்து விடும்படி இளவரசர் உத்தரவு" என்று அந்த வாலிபன் சற்றுக் கடுமையுடன் கூறியதன்றி, "நீங்களும்



மறந்துவிடுவது நல்லது. கிட்டத்தட்டப் பொதியமலை அடிவாரத்துக்கு வந்துவிட்டோம். இருட்டுவதற்குச் சற்று முன்பே அகத்தியர் குடிலை அடைந்துவிடுவோம். ஏதும் பேசாமல் வாருங்கள். இப்பொழுது பெருத்த அபாயத்துக்குள் நுழைகிறோம். கொட்டுந் தளத்துக்கும் அகத்தியர் குடிலுக்கும் இடையே உள்ள தூரம் அதிகமில்லை. ஆனால் அந்தக் குறைந்த தூரத்தில் பெருத்த அபாயமிருக்கலாம். ஆகவே, கேள்வி ஏதும் கேட்காமல். நீங்கள் யாரென்பதைப் பறை சாற்றாமல், பேசாமல், வாருங்கள்," என்று கண்டிப்புடன் கூறிய அந்த வாலிபன், மீண்டும் முன்னே செல்லப் புரவியைத் தூண்டினான்.

முத்துக்குமரியின் சினம் எல்லை கடந்தது. இளநங்கையின் மனம் வியப்பின் வசப்பட்டு கிடந்தது. சாதாரண ஊழியனுக்கு எத்தனை திமிர் என்று இருவருமே நினைத்து ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

அவர்கள் நினைப்பைப்பற்றிக் கடுகளவும் எண்ணாமல் பயணம் செய்த அந்த வாலிபன், மாலை மறைந்து இரவு கவிந்த சமயத்தில் பொதியமலைமீது ஏற முற்பட்டான். சிறிது தூரம் ஏறியதும் வணிகர் கூட்டத்துக்கு ஏதோசைகை செய்யவே கூட்டம் பல திசைகளில் பிரிந்து மலைச் சரிவுகளில் இறங்கியது. பார வண்டிகள் இரண்டை மட்டும் மேலே ஓட்டிச் செல்ல உத்தரவிட்டான் அந்த வாலிபன். பெண்களிருவரையும் தன்னுடன் வரச்சொல்லி மலைச் சரிவில் துரிதமாகப் புரவியை இறங்கவிட்டான். அந்தச் சரிவில் வேகமாகச் சென்றும் நின்றும் திரும்பியும் பாதை காட்டியும் அந்தப் பெண்கள் புரவியில் தடுமாற்றமேதும் இல்லாமல் தன்னைத் தொடர்ந்துவர வழிசெய்த வாலிபன், அகத்தியர் குடிலை அடைந்ததும், தான் புரவியிலிருந்து இறங்கி அவர்களையும் இறங்கச் சொல்லி அவர்கள் அகத்தியர் குடிலின் ஒரு மூலையின் தங்க ஏற்பாடு செய்தான். பிறகு, மீண்டும் புரவிமீது ஏறிய அந்த வாலிபன், "நீங்கள் இந்த இடத்தில் பயமின்றி இருக்கலாம். இன்னும் ஒரு நாழிகை கழித்து வருகிறேன். எக்காரணத்தை

முன்னிட்டும் இந்த இடத்திலிருந்து வெளியேற வேண்டாம்,'' என்று கண்டிப்பான உத்தரவிட்டுச் சென்றான்.

ஆண்மகன் சொல்லுக்குப் பெண் பணியவதாயிந்தால் ஆபத்து ஏது? கதை தானேது? அந்தப் பெண்களிருவரும் அவன் சொல்லுக்குப் பணியவில்லை. சூழ்நிலையும் பணிய அவர்களை அனுமதிக்கவில்லை. சற்றுத் தூரத்தேயிருந்த அகத்தியர் அருவி அவர்களை அழைத்தது. அருவி மட்டு மல்ல, ஆபத்தும் அழைத்தது. அதில் நீராடச் சென்று உடைகளைக் களைந்த அந்த இருவரையும் அருவியின் மேலேயிருந்த பெரும் பாறையில் படுத்திருந்த ஓர் உருவம் ஊன்றிக் கவனித்துக் கொண்டிருந்தது.

## அத்தியாயம் 17

# போதாத சீலையும் போதாத காலமும்

முழுமதி கழிந்து முழு நாட்கள் இரண்டு ஓடிவிட்ட தாலும், நான்கு நாழிகைகட்குப் பிறகே தேய்மதி தோன்ற வேண்டியிருந்ததாலும், ஆரம்ப இரவு அதிகக் கருமை யிட்டுப் புகுந்து, தமிழளித்த அகத்தியருக்குக் கல்யாணக் கோலத்துடன் காட்சியளித்த அகத்தீசுவரர் கொலுவிருந்த அந்தச் சிறு குடிலுக்கும் குடிலைச் சுற்றியிருந்த பொதிய மலை உச்சிகளுக்கும் ஒரு பெரும் கம்பீரத்தையும் அச் சுறுத்தும் தன்மையையும் அளித்திருந்தது. அக்கம் பக்கத்திலும் பின் புறத்திலும் ஆகாயத்தை அளாவி எழுந்திருந்த பெரும் மலைகளின் மடியில் ஒரு பெரும் பாறையின்மீது நிர்மாணிக்கப்பட்டிருந்த சிறு பிரகாரமும் வெளிமண்டபமும் பத்துப் பன்னிரண்டு பேர் தங்குவதற் கான வசதியுடனிருந்தன.

வெளி மண்டபத்தைத் தாண்டியதும் உள்ளிருந்த சிறு பிராகாரம் பக்கங்களிலும் பெரும் பாறைகளால் மூடப் பட்டிருந்ததன் விளைவாக, அப்பிராகராத்தில் மையிருட்டுக் கவிந்து அக்கம்பக்கத்தில் நிற்பவர்கள் ஒருவரையொருவர் அறியமுடியாத நிலையைச் சிருஷ்டித் திருந்தது. அத்தனை கடுமையான இருள் குடில் பிராகராத்தின் பக்கங்களில் அதிகமிருந்தாலும் கர்ப்பக் கிரகத்தில் மூல விக்கிரத்தின் பக்கத்திலிருந்த ஒற்றைச் சிறு விளக்கு வீசிய லேசான ஒளி மட்டும், பிற்காலத்தில் மக்களின் மயர்வு எனும் இருளைக் கிழித்த தமிழ்ப் பிர பந்தங்களின் கருவூல அறிவொளியைப் போல, முன் மண்டபத்தின் இருட்டைக் கிழித்துக் கொண்டிருந்தது.

பாறை மீதிருந்த அச்சிறு குடிலில் முன்புறத்திலும் எழுந்த மலைப் பகுதிகள் அக்காரிருளில் கன்னங் கரேலென்று காட்சியளித்ததால் ஏற்பட்ட பயங்கரத்தைத் தவிர, அவ்வப்பொழுது மலைக் காடுகளிலிருந்து வந்து கொண்டிருந்த புலிகளின் உறுமலும், பல்வேறு பட்சிகள் கிளப்பிய சப்தங்களும், மலைக்காட்டு மரங்களை ஊடுருவி அசைந்த காற்றின், உச், உச் என்ற கோரக் கூச்சலும் செவி புகுந்ததால், அந்தச் சூழ்நிலை திடமான இதயத்துக்குக் கூடப் பெரும் ஆட்டங் கொடுக்கக் கூடியதாய் அமைந்திருந்தது. இத்தகைய சூழ்நிலையில் அக்குடிலுக்குச் சில அடிகள் தள்ளியிருந்த அகத்தியர் அருவி வேறு 'சோ' வென்ற பேரொலி கிளப்பி, உள்ள பயங்கரத்தை உச்சாணிக்குக் கொண்டு போவதில் முனைந்திருந்தது.

இந்தச் சூழ்நிலையில் அமைந்திருந்த அக் குடிலை அடைந்ததும் சுற்றும் முற்றும் பார்த்த அம்மங்கையரிருவரையும் நோக்கிய அந்த வாலிபன் அவர்களைப் புரவியை விட்டு இறங்கச் சொல்லித் தானும் இறங்கினான். அவர்கள் புரவியைப் பக்கத்திலிருந்த இரண்டு பாறைகளில் கட்டி விட்டுத் தன் புரவியை மட்டும் கட்டாமல் அதன் முதுகைச் செல்லமாகத் தட்டிக் கொடுத்துவிட்டு, "இப்படி வாருங்கள்" என்று அகத்தியர் குடிலின் படிகளிருக்குமிடத்தைக் காட்டி மிகுந்த ஜாக்கிரதையுடன் அவர்களை அழைத்துச் சென்றான். குடிலின் முன்மண்டபத்தை அடைந்ததும் உள்ளே கர்ப்பக்கிரகத்தில் காட்சியளித்த அகத்தியர் மூல விக்கிரகத்துக்குத் தெண்டனிட்டு எழுந்திருந்த அந்த வாலிபன், மங்கையரிருவரையும் நோக்கி, "இங்கு புலி, பாம்பு இவற்றின் பயம்தான் உண்டு. வேறு பயமில்லை. புலியும் பாம்புங்கூட அகத்தியர் மண்டபத்துக்குள் வருவதில்லை. நீங்கள் ஏறிவந்த படிகளில்தான் படுத்திருக்கும், நீங்களாக அவற்றைத் தொந்தரவு செய்யாத வரை அவை ஏதும் உங்களைத் தொந்தரவு செய்யாது. இங்கேயே தங்கியிருங்கள். நான் கூடிய சீக்கிரம் வந்து விடுகிறேன். எதற்கும் இந்த இடத்தைவிட்டு வெளியே



செல்லவேண்டாம்," என்று கூறிவிட்டு அவ்விடத்திலிருந்து செல்லக் கிளம்பினான்.

அந்த இருட்டுக்கோ, அந்த மலைகள் விரித்த பேரச்சத்துக்கோ, தனித்து இருப்பதற்கோ, அந்த மங்கையரிருவரும் அஞ்சவில்லையென்றாலும் ஏதோ ஒரு தனித்த இடத்தில் தங்களைத் தங்கவிட்டு அவன் ஏன் செல்கிறான், செல்லுமிடம் எது, என்ற விவரங்களைப் புரிந்துகொள்ள விரும்பினார்களாதலால், அவ்விருவரில் இளநங்கையே அவனை நோக்கி, "வீரரே! நீங்கள் எங்கு செல்கிறீர்கள்? எதற்குச் செல்கிறீர்கள்? எப்பொழுது வருவீர்கள்? இவை பற்றி ஏதும் சொல்லவில்லையே..." என்று மெல்லக் கேட்டாள்.

"கொட்டுந்தளம் வரை சென்று வருகிறேன்; அதைப் பற்றி இளவரசர் உங்களிடம் சொல்லவில்லையா?" என்று வினவினான் அந்த வாலிபன்.

இந்த இடத்தில் முத்துக்குமரி சற்றுக் கோபத்தைக் காட்டினாள். "இல்லை. இளவரசர் எங்களிடம் எதுவும் சொல்லவில்லை. உங்கள் பெயரைக்கூடச் சொல்லவில்லை. உங்களுடன் போகச் சொன்னார். வந்தோம். அவ்வளவு தான், " என்று கோபம் ஒலித்த குரலில் கூறவும் செய்தாள்.

இதைக் கேட்ட அந்த வாலிபன் சிறிது சங்கடத்துக்குள்ளானான். பாண்டிய நாட்டு இளவரசியிடமோ அல்லது கோட்டைக் காவலர் மகளிடமோ எதையுமே சொல்லாமல் தன்னுடன் அனுப்பிவிட்டதைப்பற்றி, அவ்விருவரும் சினங்கொண்டால் அதில் தவறேதுமில்லையென்று நினைத்ததால், அந்தச் சினத்தை ஆற்றும் வகையில் பேசத் தொடங்கி, "என் பெயர் அப்படியொன்றும் பிரமாதமானதல்ல. சுத்தமான தமிழ்ப் பெயரும் அல்ல," என்றான் குழப்பத்துடன்.

அவன் பதில் இரு மங்கையருக்கும் வியப்பை அளித்ததால் இளநங்கையே கேட்டாள், "நீங்கள் தமிழரல்லவா!" என்று, வியப்பு குரலில் ஒலிக்க.

"ஒருவகையில் தமிழன்தான்" என்றான் அந்த வாலிபன் மெல்ல நகைத்து.

"ஒருவகையில் தமிழன் என்பது பெரிய விசித்திரம்," என்றாள் முத்துக்குமரி

"இதில் விசித்திரமேதுமில்லை, நான் தமிழ் நாட்டில் பிறக்கவில்லை. பிறந்தது சிங்களம், இருந்தது கடாரம், இருப்பது தமிழகம், மூதாதையர் தமிழர்" என்று விவரித்தான் அந்த வாலிபன்.

அவன் விசித்திர வாழ்க்கையைக் கேட்ட முத்துக்குமரி பிரமித்தாள். "உங்கள் பெயர்?" என்று வினவினாள்.

அந்த வாலிபன் சற்றுச் சிந்தித்தான். அவன் முகத்தில் விளையாட்டுக் களையும், சிறுபிள்ளைத்தனமும் பெரிதும் சுடர்விட்டன. கடைசியாகச் சொன்னான், "இந்திரபானு," என்று.

அப் பெயரை கேட்ட இளநங்கை வியப்பைக் காட்டவில்லை. ஆனால் முத்துக்குமரியின் இதயத்தில் பெரும் பிரமிப்பு மட்டுமின்றி வியப்பும் படர்ந்தது. நடுக்கத்துடன் அவள் நாவிலிருந்து சொற்கள் உதிர்ந்தன. "அப்படியானால் நீங்கள் சந்திரபானுவின்..." என்று இழுத்தாள்.

"மகன்" என்று முத்துக்குமரியின் வாசகத்தை முடித்த அந்த வாலிபன், "நான் யார் என்பது அத்தனை முக்கியமல்ல. தற்சமயம் நான் வீரபாண்டியத் தேவரின் அடிமை. அவர் சொற்படி கேட்கவேண்டியவன். உங்களைக் கொட்டுந்தளத்துக்கு அழைத்துச் செல்ல எனக்கு உத்தரவு. கொட்டுந்தளத்தைப்பற்றி உங்களுக்கு இளவரசர் சொன்னாரோ என்னவோ எனக்குத் தெரியாது. இந்தப் பொதிய மலைக் கூட்டத்துக்கு இடையேயுள்ளது சிறு சமவெளித் தட்டு, பீடபூமி. அதற்கு இப்பொழுது கொட்டுந்தளம் என்று பெயரிட்டிருக்கிறோம். அந்தக் கொட்டுந்தளத்தில் பெரும் முரசுகள் நான்கு இருக்கின்றன. சிறு காவல் படையும் இருக்கிறது. ஆனால் அந்தக் காவல்படை பெரும் எதிர்ப்புகளைச் சமாளிக்க வல்லமையுள்ளதல்ல. கொட்டுந்தளத்திலிருந்து மேற்கே எழும்பும் மலையின் அடுத்த பகுதியில் பாண்டியர்களின் கோட்டையொன்று இருக்கிறது. படை



யெடுப்புக் காலங்களில் இங்குள்ள முரசுகளைக் கொட்டினால் அங்குள்ள பாண்டியர் கோட்டையில் கேட்கும். உடனே கோட்டை எச்சரிக்கை அடைந்துவிடும். அந்த முரசுகளைப் பாண்டிய மன்னர் சுந்தர பாண்டியத் தேவர் அமைத்திருக்கிறார். பழுதடைந்த அந்தப் பழைய கோட்டையையும் புதுப்பித்திருக்கிறார். அங்கும் ஒரு சிறு படை இருக்கிறது. சேரநாட்டின் இந்த எல்லை மிக ரகசிமாகப் பலப்படுத்தப்படுகிறது. இன்னும் கொட்டுந் தளமும் சரி, மேலேயுள்ள பாண்டியர் கோட்டையும் சரி பூரணவலுவுள்ளவையல்ல. இந்த இரண்டு இடங்களிலும் இன்னும் சேரர் படையின் ஆபத்து இருந்துகொண்டிருக்கிறது. மலைப்பகுதிகளில் வரப் பல குறுக்குவழிகளைச் சேரர் கையாளுகிறார்கள். இத்தகைய அபாய இடத்துக்கு உங்களை ஏன் அனுப்பியிருக்கிறார் இளவரசர் என்பது எனக்குத் தெரியாது. ஆனால் உங்களை ஜாக்கிரதையாகக் கொட்டுந்தளக் காவற்படைத் தலைவனிடம் அழைத்துச் செல்லும்படி மட்டும் உத்தரவிட்டிருக்கிறார். முதலில் இங்கிருந்து கொட்டுந்தளம் செல்லும் பாதையில் எதிரி நடமாட்டம் எப்படியிருக்கிறது என்பதைப் பார்த்து வருகிறேன். எக்காரணத்தை முன்னிட்டும் இந்தக் கோவிலிலிருந்து நகராதீர்கள்," என்று எச்சரித்துவிட்டு, கோவிலின் படிகளில் இறங்கித் தனது புரவிமீது தாவி மலைச் சரிவில் ஏறிச் சென்றுவிட்டான்.

அவன் விவரித்துச் சொன்ன விஷயங்களைக் கேட்ட இரு மங்கையரும் வெவ்வேறு உணர்ச்சியால் பீடிக்கப்பட்டிருந்தனர். கொட்டுந்தளம் என்ற பெயர் ஏற்பட்ட காரணத்தையும், அங்குள்ள அபாயத்தையும் ஏற்கனவே இளவரசன் குறிப்பிட்டிருந்தாலும், இத்தனை தீவிர அபாயம் சூழ்ந்த இடம் அது என்பது அப்பொழுதுதான் புரிந்தது இளநங்கைக்கு. அதைப் பாண்டியன் மகளும் புரிந்து கொண்டுதானிருந்தாள். இருப்பினும் முத்துக்குமரிக்குப் பேராச்சரியத்தை அளித்தது ஆபத்தைப்பற்றி அவனளித்த விவரங்களல்ல, அவன் பெயரைப்பற்றித்தான் அவள் பெரு வியப்புக் கொண்டிருந்தாள். ஆகையால்,

அவன் சென்றதும் இளநங்கை அங்கிருந்த ஆபத்தைப் பற்றி விவரிக்க முற்பட்ட போது, முத்துக்குமரி மட்டும் அந்த வாலிபனைப் பற்றியே பேச முற்பட்டாள்.

"இளவரசி..." என்று துவக்கிய இளநங்கைக்குப் பதில் சொல்லவில்லை முத்துக்குமரி, மௌனமாகவே இருந்தாள்.

"ஏன் கோபமா? பேசமாட்டேனென்கிறீர்களே?" என்று மீண்டும் வினவினாள் இளநங்கை.

"ஆம்." கோபத்துடன் வந்தது பதில் முத்துக்குமரியிடமிருந்து.

"என்ன கோபமோ?"

"நீ இளவரசி என்றழைத்தால் பதில் சொல்ல மாட்டேன் இனிமேல்."

"பின் எப்படி அழைப்பதாம்?"

"உனக்கொரு தங்கையிருந்தால் எப்படி அழைப்பாய்?"

"முத்துக்குமரி என்றழைப்பேன். அல்லது முத்து என்று அழைப்பேன்; குமரி என்றுகூட அழைப்பேன்."

"அப்படி அழை என்னையும்."

"அது சரியா?"

"சரிதான். சம வயதினரே அப்படி அழைத்துக் கொள்ளலாம். நான் உனக்கு ஓரிரண்டு வயது சிறியவளாயிருப்பேன். தவிர சிற்றன்னை..." என்று இழுத்தாள் முத்துக்குமரி.

"உம் உம்." எச்சரிக்கையுடன் எழுந்தது இளநங்கையின் குரல். அதிலிருந்தது கடுமையா வெட்கமா என்பது புரியவில்லை முத்துக்குமரிக்கு.

"அப்படியானால் சொல்கிறபடி கேள்" என்றாள் இளவரசி.

"சரி, சொல்,"

"அப்படி வா வழிக்கு. இனி அழைக்க வேண்டிய முறை...?"

"முத்துக்குமரி."



"அது சரி."

"முத்துக்குமரி!"

"உம்."

"இந்த வாலிபர் சொன்ன விஷயங்களைக் கேட்டாயா?"

"கேட்டேன்."

"நிலைமை பயங்கரமாயிருக்கிறதே."

"இருந்தாலும் பரவாயில்லை."

"ஏன்?"

"சிறிய தந்தை பலமான துணையையும் அனுப்பிருக்றாரே!"

இளநங்கை விந்தைக் கண்களைத் திருப்பினார்கள் முத்துக்குமரி மீது. "என்ன! பலமான துணையா!" என்று கேட்கவும் செய்தாள் வியப்புடன்.

"ஆம்!" என்றாள் முத்துக்குமரி உறுதியுடன்.

"இந்த வாலிபரா பலமான துணை?" இளநங்கையின் கேள்வியில் நம்பிக்கையின்மை ஒலித்தது.

"ஆம்!"

"எப்படி?"

"அவர் பெயர் என்ன சொன்னார் கவனித்தாயா?"

"கவனித்தேன்."

"என்ன கவனித்தாய்? சொல் பார்ப்போம். அவர் பெயர்...?" என்று முத்துக்குமரி, என்ன காரணத்தாலோ அந்தப் பெயரை உச்சரிக்க மறுத்தாள்.

இளநங்கையின் முகத்தில் வியப்புக் குறி படர்ந்தது. உள்ளே ஏதோ ஓர் எண்ணம் எழுந்தது. அதை வெளிக்குக் காட்டாமல் சொன்னாள், "இந்திரபானு" என்று.

"அது மட்டுமல்ல இளநங்கை. அவர் தந்தையின் பெயர் சந்திரபானு என்றும் சொன்னார்." என்று குறிப்பிட்டாள் முத்துக்குமரி.

"ஆமாம். அதற்கென்ன?"

"அதற்கென்னவா? சந்திரபானு* யார் என்று தெரியாது உனக்கு? கேள்விப்படவில்லை?"

"இல்லை."

"கடார தீபகற்பத்தின் கடைப் பகுதியை ஆளும் சிற்றரசர். அவர் மகனொருவன் பெருவீரனென்று நமது அரண்மனை வட்டாரங்களில் வதந்தி உலாவுகிறது."

இதைச் சொன்ன முத்துக்குமரி மேற்கொண்டு பேசாமல் மௌனம் சாதித்தாள். இளநங்கைக்குச் சந்திரபானுவைப் பற்றியோ இந்திரபானுவைப் பற்றியோ ஏதும் தெரியாததால் அவளும் மௌனமாகவே இருந்தாள். அவர்கள் மௌனத்தைக் கிழிக்கவோ என்னவோ நான்கு நாழிகைகள் கழிந்ததும் வானத்தில் சந்திரன் முக்காலே அரைக்கால் உருக்கொண்டு உதயமானான்.

அகத்தியர் குடிலிலிருந்து அந்த நிலவுக் காட்சியைக் கண்ட மங்கையரிருவரின் பிரமிப்பு எல்லை கடந்தது. எந்தத் தீமையிலும் ஒரு நன்மையுண்டு என்பதுபோல எந்த அபாயத்திலும் ஓர் அழகும் இன்பமும் உண்டு என்பதற்கு அறிகுறியாகத் திகழ்ந்தது சுற்றுப்புறமும். காடடர்ந்து மேலெழுந்த மலைப் பகுதிகளுக்கு விநோதமான ஒரு மெருகை அளித்தது அந்த வெண்ணிலவு. அந்த நிலவு அழைக்கவே உள்ளிடத்தை விட்டு வெளி மண்டபத்துக்கு வந்த அந்த மங்கையரிருவரும் கண்ணெதிரே விரிந்த சுற்றுப் புறத்தின் பயங்கரம் கலந்த அழகைக் கண்டு சிருஷ்டி விசித்திரம் எத்தனை மகத்தானது, அதில் மனிதன் பங்கு எத்தனை குறைந்தது என்பதைப் புரிந்துகொண்டனர்.

வானக்கூரை மலையுச்சிகளைத் தொட்டுக்கொண்டிருந்ததால் சந்திர வெளிச்சத்தில் உச்சிகள் மயக்கந் தரும் வெண்மை பெற்றன. உச்சிப் பாறைகளை அணைத்துக் கிழிறங்கிய சரிவிலிருந்த பெரும் காட்டு மரங்களின் பசுந்தழைத்

* சந்திரபானு மலேசியாவின் ஒரு பகுதியை ஆண்டவன். அவன் மகன் பிற்காலத்தில் சிங்களத்தின் ஒரு பகுதியை ஆண்டான். வீரபாண்டியனுக்கு அடிபணிந்தான்— A History of South India by Neelakanta Sastry. Page 208.



தலைகள் பகற் காலத்தில் காட்டும் நல்ல பச்சையைக் காட்டாமல் வெண்மை கலந்த பச்சையைக் காட்டின. சற்றுத் தூரத்தே தெரிந்த அகத்தியர் அருவி அந்த இரு மங்கையருக்கும் தகளி காட்டியது; பளபளத்தது.

இக் காட்சியைக் கண்ட இருமங்கையரும் நீண்ட நேரம் பிரமித்து நின்றார்கள். இருவரையும் அந்த அருவி பலமுறை கண் சிமிட்டி அழைக்கவே அம்மங்கையர் பேசாமல் படிகளில் இறங்கி நடந்து தங்கள் புரவிகளின் அருகில் வந்து, புரவிகளில் தொங்கிய தோற்பைகளிலிருந்து ஆளுக்கொரு நீராடும் சீலையை எடுக்கவும் செய்தார்கள். அதன் பின்னர் இருவரும் கைகோத்துக் கொண்டு அருகில் இருந்த இடத்தை நோக்கி நடந்தார்கள்.

அருவி அவர்களைப் பார்த்து நகைத்தது; வாவென்று அழைத்தது. இருவரும் தங்கள் சேலைகளை நெகிழவிட்டு நீராடும் சீலைகளை அணிந்தார்கள். நீராடும் சீலை போதாத சீலைகள்தான். அத்துடன்தான் நீராடச் சென்றனர் அந்த இரு பெண்களும். போதாத சீலைகளை அணிந்த அந்த அணங்குகளிருவரையும் போதாத காலமும் வெகு துரிதமாக அணுகிக் கொண்டிருந்தது. ஆகவே அவர்கள் அருவிக்கு வந்ததையும், மாற்றுடையணிந்து அவர்கள் நீரில் புகுந்ததையும் கவனித்தது மேலே பாறையிலிருந்த ஓர் உருவம். அந்த இரு மங்கையரும் அருவி நீரில் மறைந்ததும் அந்த உருவம் பாறையில் எழுந்து நின்று பின் பகுதியை நோக்கி வலது கையை மும்முறை விசிறியது. மற்றும் நால்வர் மறைவிலிருந்து வெளிவந்தார்கள். பாறைமீது முதலில் படுத்திருந்த உருவம் அருவியில் நீராடிக் கொண்டிருந்த இரு மங்கையரையும் சுட்டிக்காட்டி, சற்று தூரத்தே இருந்த அகத்தியர் குடிலையும் சுட்டிக்காட்டியது.

## அத்தியாயம் 18

# காதலெனும் பித்து !

அகத்தியர் அருவி விழும் இடத்தின் மேலே சற்றுத் தள்ளி எழுந்திருந்த பெரும் பாறையில் தொக்கி நின்ற அபாயத்தைப் பற்றிச் சிறிதும் அறியாமலே வெண்மதியின் கண்ணொளியில் தகளி காட்டிய அருவியின் அழகில் மயங்கி, நின்றவண்ணமே தங்கள் சேலைகளைக் களைய முற்பட்ட அந்தப் பெண்களிருவரையும் சுற்றுப்புறமிருந்த பெரும் மலைகள் அனுதாபத்துடன் பார்த்தன. எங்கிருந்தோ உறுமிய ஓரிரு புலிகளும் காட்டுக்கிடாவும் கூட அந்தச் சமயத்தில் மிக ஈனசுரத்தைக் கிளப்பியதல்லாமல் ஆந்தையொன்றும் அப சகுனத்துடன் அலறியது. இருக்கும் அபாயத்தைப் பற்றிச் சிந்திப்பது மனித இதயத்தின் சுபாவமில்லையாகையால், இளநங்கையும் முத்துக்குமரியும் தங்கள் ஆடைகளைக் களைவதிலும் அருவி நீருக்குள் நுழைந்து பயண அலுப்பைத் தீர்த்துக் கொள்வதிலுமே முனைந்திருந்ததன்றி, அந்த சில விநாடிகளில் அனைத்தையும் மறந்து, மெல்ல ஒருவரை யொருவர் பார்த்து நகைத்துக்கொள்ளவும் செய்தனர்.

அந்த இருவர் நகைப்பிலும் ஆயிரம் அர்த்தங்கள் இருந்தன. இளநங்கை தனது நீராட்டச் சீலையை உடலைச் சுற்றி வளைத்து, உட்புறத்தில் இடது கையிட்டுச் சேலையின் இடை முடிச்சை அவிழ்த்து, அதை நெகிழவிட்ட லாவகத்தைப் பார்த்த முத்துக்குமரி, "யாருமில்லாத இடத்திலும் எச்சரிக்கை பலமாகத்தானிக்கிறது," என்று கூறி இளநங்கையை நோக்கி நகைத்தாளானாலும், அவளும் அத்தனை எச்சரிக்கையுடனேயே தனது சேலையையும் நீக்கினாள். இப்படி நீராட்டச் சிறு சீலைகளால் தங்கள்



உடல்களைப் போர்த்து மறைத்து, உட்புறமாகச் சேலையை நெகிழவிட்ட இரு கால்களாலும் திரட்டி எடுத்து ஒருபுறம் ஒதுக்கிவிட்ட அவ்விருவரும், முகவாய்க் கட்டையைத் தாழ்த்தி மார்புக்கும் முகவாய்க் கட்டைக்குமிடையே நீராட்டச் சீலையின் ஒரு பகுதியை இடுக்கிக்கொண்டு, இருகைகளால் கச்சைகளையும் நீக்கிக் கொண்டனர். பிறகு உடுத்திய அந்தச் சிறு சீலையை மார்பைச் சுற்றி பிணைத்துக் கொண்டு தலையையும் அவிழ்த்து விட்டுக் கொண்டு அருவியை நோக்கிச் சென்றனர். அருவியும் அவர்கள் தன்னை அணுகுமுன்பே நீர்த்திவலைகளை அவர்கள் மீது சுள்சுள்ளென்று வீசி, 'வராதீர்கள்! போய் விடுங்கள், மேலே ஆபத்திருக்கிறது!' என்று எச்சரித்தும் கூட, அதைப் பற்றிச் சிறிதும் லட்சியம் செய்யாமல் இருவரும் ஒருவர் கையை இன்னொருவர் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு அருவிக்குள் நுழைந்தனர்.

அகத்தியர் அருவியென்ற பெயரில் பெருவேகத்துடன் வீழ்ந்து கொண்டிருந்த பொருநையின் அந்த நீர்வீழ்ச்சி அந்த இரு மங்கையர்மீதும் வெகு வேகத்துடன் பிரவாகித்து அவர்களின் அழகிய உடல்களை ஆசையுடன் தழுவிச் சென்றமுறை, பொருநை அன்னை தனது மகளிர் இருவரைக் குளிப்பாட்டுவதில் எத்தனை ஆனந்தப்படுகிறாள் என்பதை நிரூபித்தது. சற்றே பரந்து வீழ்ந்த அந்த அருவியின் அகன்ற கரங்கள் அவ்விருவரையும் முழுவதும் தழுவ முடியவில்லையானாலும், அவர்கள் நின்றிருந்த பகுதியில் பிரிந்து வீழ்ந்த பகுதியில் நன்றாகத் தவழச் செய்தன. வழுவழுத்த அவ்விரு பெண்களின் உடலைத் தழுவிய ஆனந்தத்தால் பிரிந்த அந்தப் பகுதியை நோக்கி, அவ்விடத்துக்கு வரமுடியாத பகுதி சர்ரென்று கரகரப்புக் கூச்சல் போட்டுக்கொண்டிருந்தது. சற்று நேரத்துக்கொரு முறை லேசாகப் பரந்து அவர்கள் இருக்குமிடத்தை எட்டிப் பிடிக்கவும் முயன்று தோல்வியடைந்து கொண்டிருந்தது. அவ்விரு மங்கையரின் குழல்களைத் தடவி அகற்றிவிட்டு பொருநை யன்னை தனது குழந்தைகளின் உடல்கள் பூராவையும் ஆதரவுடன் தழுவினாள். அருவியின்

வேகமான நீர்க்கால்கள் பிடிவாதம் செய்யும் குழந்தையின் ஆடைகளைக் கழற்றி நீராட வைக்க முனையும் அன்னையின் விரல்களைப்போல் அந்த இருவர் மார்புகள் மீதிருந்த சிலைமுடிச்சுக்களையும் அவிழ்க்க முனைந்தனவென்றாலும், நீராடிய அந்த இரு பெண்களும் அன்னைக்குச் சிறிதும் இடம் கொடாமல் முடிச்சுக்களை இறுகப் பிடித்துக்கொள்ளவே செய்தனர். இடைக்குக் கீழிருந்த ஆடைகளையும் இறுகப் பிடித்துக் கொண்டும் சிரித்துக் கொண்டும் பரஸ்பரம் அணைத்துக்கொண்டும் நீராடிய அந்தப் பெண்களின் இயற்கை உடல்களைத் தொட்டுத் தேய்த்து நீராட்டப் பொருநை முயன்று இறுதியில் வெற்றி பெற்றாளானாலும், அந்த வெற்றிக்குச் செயற்கைச் சீலைகள் பெரும் தடங்கலாகவே இருந்தன. இப்படி அருவி நீக்க முயன்றும், கரங்கள் மறைக்க முயன்றும் நீண்ட நேரம் அருவியில் பரஸ்பர அணைப்பில் நீராடிய அந்த மங்கையரிருவரும் கடைசியில் நீரைவிட்டு வெளிவர மனமில்லாமலே வந்தனர். வெளியே வந்தபோதும் பரஸ்பர அணைப்பிலேயே வந்த அந்த இருவரில் முதலில் தன்னை விடுவித்துக்கொள்ள முயன்ற முத்துக்குமரி, "விடு இளநங்கை! இன்னும் எதற்கு நான்!" என்றாள்.

போதாத சீலை உடலை அரைகுறையாய் மறைக்க சொட்டச் சொட்ட ஒட்டி நின்ற அழகுகளை நன்றாக எடுத்துக்காட்ட வெண்ணிலவில் அப்சரஸ் போல் நின்ற முத்துக்குமரியை நோக்கிய இளநங்கை புன்முறுவல் கொண்டாள். அத்துடன் கேட்டாள், "என்ன கேட்டாய் முத்துக்குமரி?" என்று.

"இன்னும் நானெதற்கு? விட்டுவிடலாமே என்றேன்" என்றாள் முத்துக்குமரியும் சிரித்துக்கொண்டு.

இளநங்கை அந்த அழகியின்மீது மீண்டும் கண்களை நிலைக்க விட்டுக்கொண்டு, "உன்னை விட மனமில்லை! மறுபடியும் அணைத்துக் கொள்ளலாம் போலிருக்கிறது," என்றாள்.

"ஏன் இளநங்கை?"



"அத்தனை அழகாயிருக்கிறாய் முத்துக்குமரி."

"இன்றைக்கு என்ன திடீரென்று அழகு வந்துவிட்டது எனக்கு? நீ ஏற்கெனவே பார்த்த அழகுதானே!"

"ஒருமுறை பார்த்து அலுத்துவிடுவதல்ல அழகு முத்துக்குமரி. நாளுக்கு நாள், நிமிஷத்துக்கு நிமிஷம், விநாடிக்கு விநாடி, புதுப்புதுத் தோற்றங்களை, கற்பனைகளைத் தருவதுதான் அழகு."

"இப்பொழுது புதுப்புதுக் கற்பனை தோன்றுகிறதாக்கும் உனக்கு!"

"ஆம் முத்துக்குமரி. உன்னை முதல் முதல் முத்துக் கடையில் பார்த்துக் கேட்டபோது உன் அழகை அனுபவிக்கும் ஆற்றல் என் கண்களுக்கு இல்லை. அப்பொழுது..." என்று இளநங்கை சற்றுப் பேச்சை நிறுத்தினாள். அவள் யோசனை அந்த நிகழ்ச்சியை நோக்கி ஓடியது. அன்று அவள் மனத்தை அச்சம் கவ்வி நின்றதால் அழகைக் கவனிக்கக் கண்களுக்குத் திராணியில்லை என்பதைப் புரிந்து கொண்டாள். அச்சுறுத்தியவனைப் பற்றியும் நினைத்தாள் அவள். அந்தத் தருணத்தில் அந்த அச்சுறுத்தியவன் பிறகு எப்படி அமுதமானான் தன் சிந்தைக்கும் மனத்துக்கும் என்று எண்ணிய, அவள் 'இப்பொழுது ஆடை உடலைச் சரியாக மறைக்க முடியாமல் ஒட்டி நின்று உள்ளதைக் கள்ளத் தனமாகக் காட்டும் இந்த நிலையில், அவர் பார்த்தால் என்ன நினைப்பார்?' என்றும் எண்ணிப் பார்த்தாள். அவள் அழகிய முகத்தில் வெட்கத்தின் ரேகை சற்றே படிந்தது.

இளநங்கை திடீரென்று பேச்சைப் பாதியில் நிறுத்தி விட்டதையும், யோசனையில் ஆழ்ந்துவிட்டதையும் கவனித்த முத்துக்குமரி அதற்குக் காரணத்தையும், ஊகித்துக் கொண்டாள். இளநங்கையின் வதனத்தில் திடீரெனப் படர்ந்த வெட்கத்தின் சாயையைக் கண்டதும் அந்த ஊகம் உறுதிப்பட்டுவிடவே, "சரிதான். நான் நினைத்தது சரியாகப் போய்விட்டது," என்றாள் தனது இதழ்களைத் திறந்து முத்துக்களை காட்டி நகைத்து.

முத்துக்குமரியின் நகைப்பினாலும் சொற்களாலும் சுய நிலை அடைந்து இளநங்கை கேட்டாள், "எது சரியாகப் போய்விட்டது?" என்று. அவள் குரலில் சற்றுக் கோபம் ஒலித்தது.

முத்துக்குமரிக்கு அந்தக் கோபத்துக்குக் காரணம் தெரிந்திருக்கவே, அவள் அதைச் சிறிதும் லட்சியம் செய்யாமலே, "நான் நினைத்தது சரியாகப் போய்விட்டது!" என்று கூறினாள் மீண்டும் நகைத்து.

"என்னை நினைத்தாய்? என்ன புரிந்துவிட்டது உனக்கு?" என்று சீறினாள் இளநங்கை.

"முத்துக் கடையைப் பற்றிச் சொல்லவில்லையா நீ?" முத்துக்குமரியின் கேள்வியில் ஏளனம் ஒலித்தது.

"சொன்னேன்".

"முத்துக் கடையைப் பற்றி நினைத்ததும் என்னை நினைத்தாய்..."

"ஆமாம்."

"பிறகு உனக்கேற்பட்ட அச்சத்தைப் பற்றி நினைத்தாய்..."

"நினைத்தேன். அதில் என்ன தவறு?"

"அதிலும் தவறில்லை. அச்சத்தை உண்டாக்கியவரைப் பற்றி நினைத்ததிலும் தவறில்லை." இதைச் சொன்ன முத்துக்குமரி பெரிதாக நகைத்தாள்.

"முத்துக்குமரி!" இளநங்கையின் குரல் மிகக்கடுமையாயிருந்தது.

முத்துக்குமரி அதற்குச் சிறிதும் அடங்காமலே, "அவரைப்பற்றி நினைத்ததும் இப்பொழுது இருக்கும் நிலை சிந்தனையில் புகுந்துவிட்டது. அவர் இந்தக் கோலத்தில் பார்த்தால் என்ன நினைப்பார்? என்ன சொல்வார்? இப்படியெல்லாம் கற்பனை ஓடுகிறது..." என்று சொல்லிக் கொண்டு போனாள். அவள் வாசகத்தை முடிக்கு முன்பாகவே அவளைத் தாவிப் பிடிக்க முயன்ற இளநங்கை,



"இப்படி வா உன்னை என்ன செய்கிறேன் பார்?" என்று அவள் கையை இறுகப் பிடித்தாள்.

"என்ன செய்வாய்? ஏதோ செய் பார்ப்போம்?" என்று முத்துக்குமரி, கையைத் திமிறிக் கொண்டு ஓட முயன்று தன்னைத் துரத்திய இளநங்கையிடமிருந்து தப்பி தாவித் தாவிப் பாறைகளில் குதித்தாள். கொற்கையைச் சதா சுற்றியவளும், ஓட்டம் பிடிகளில் நிகரற்றவளுமான இளநங்கையும் அவளைப் பிடிக்கப் பாறைகளில் தாவிச் சென்றாள். கடைசியில் பிடிக்கப்போகையில் முத்துக்குமரி காலிடறிக் கீழே விழப்போகவே அவளைத் தன் இரு கைகளாலும் தழுவிப் பிடித்தாள். பிடித்த வேகத்தில் அவளும் பாறையில் விழுந்தாள். தன்னை அணைத்துப் பாறையில் தன் பக்கத்தில் விழுந்த இளநங்கையைக் கண்ட முத்துக்குமரி, "அப்பப்பா! இத்தனை முரட்டுப் பிடியைச் சிற்றப்பா எப்படிச் சகிப்பார்?" என்று சொற்களைச் சிரிப்புக்கும், ஓடியதால் ஏற்பட்ட பெரு மூச்சுக்கும் இடையே உதிர்த்தாள்.

"இன்னொரு தடவை உன் சிறிய தந்தையின் பேச்சை எடுத்தாயோ...?" என்று எச்சரித்த இளநங்கை முத்துக்குமரியைச் சுட்டுவிடுவது போல் பார்த்தாள்.

"என்ன செய்வாய்?" என்று கேட்டாள் முத்துக்குமரி.

"என்ன செய்வேனோ எனக்கே தெரியாது," என்றாள் இளநங்கை கோபத்துடன்.

"எனக்குத் தெரியும்." முத்துக்குமரியின் பேச்சில் ஏளனம் தொனித்தது.

"தெரிந்தால் சொல்லேன்."

"சிறிய தந்தையிடம் ஓடிவிடுவாய்."

"உம் உம்."

"என்னைப் பார்த்து உறுமிப் பயனில்லை. உண்மையின் சக்தி மகத்தானது."

"அது எனக்குத் தெரியும்."

"என்ன தெரியும்?

"உண்மையின் சக்தி."

"எங்கே அந்தச் சக்தியைக் காட்டு பார்க்கலாம்."

இதைக் கேட்ட இளநங்கை, அந்தப் பாறையில் முத்துக் குமரியை அணைத்தபடி படுத்தவள், அவள் காதுக் கருகில் சென்று இரண்டொரு வார்த்தைகளைக் கூறினாள். அந்தச் சொற்களைக் கேட்ட முத்துக்குமரி இளநங்கையை நோக்கி மிரள மிரள விழித்தாள். அவள் முகம் பெரிதும் சிவந்தது. "சேசே! இது பைத்தியக்காரத்தனம். நான் அவரை..." என்ற அவள், மேற்கொண்டு பேச முடியாமல் தவித்தாள். இளநங்கையைத் திமிறிக்கொண்டு எழுந்தும் உட்கார்ந்தாள்.

இளநங்கையும் அவள் பக்கத்தில் அமர்ந்து கொண்டாள்.

"ஆம் முத்துக்குமரி! அது பைத்தியக்காரத்தனம் தான்" என்று கூறினாள் ஆழ்ந்த குரலில்.

முத்துக்குமரி நிலத்தை நோக்கியவண்ணமே கேட்டாள், "எது பைத்தியக்காரத்தனம்?" என்று. அவள் குரல் மிக மிருதுவாக இருந்தது.

"காதல்!" என்றாள் இளநங்கை.

"காதலா!" முத்துக்குமரி வியந்தது போல நடித்தாள். ஆனால் குரலில் வியப்புத் தெரியவில்லை. வெட்கம் கலந்த மகிழ்ச்சிதான் தெரிந்தது.

"ஆம் காதல்தான். அது எப்பொழுது வருகிறது, ஏன் வருகிறது என்பது தெரிவதில்லை. திடீரென்று வருகிறது. எதிர்பாராத இடத்திலிருந்து, எதிர்பாராத காலத்தில் எதிர் பாராத முறையில் வருகிறது. சிலருக்குக் கைகூடுகிறது. சிலருக்குக் கைகூடுவதுமில்லை. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம், அது வந்தபின் பெண்களைச் சுயநிலை இழக்கச் செய்து பைத்தியமாக அடித்துவிடுகிறது," என்றாள் இளநங்கை.

முத்துக்குமரி பதிலேதும் சொல்லவில்லை. மௌன மாகவே உட்கார்ந்திருந்தாள். இளநங்கையே மேற்கொண்டு



சொன்னாள். "முத்துக்குமரி! அந்தப் பைத்தியம் ஏற்பட்டவுடன் பெண்களின் நிலையிலும் செயலிலும் கூட வாய்விட்டுச் சொல்ல முடியாத எண்ணங்களை உற்பத்தி செய்கிறது. ஆனால் ஒன்று மட்டும் இதிலெல்லாம் வெளிச்சம். காதலை மறைத்துவிடப் பெண்கள் பார்க் கிறார்கள், அது முடிவதில்லை. அவர்கள் முகத்தில் உண்மையை எழுதிப் பட்டயம் கட்டி விடுகிறது. ஊருக் கெல்லாம் அவர்கள் ரகசியம் புரிந்து விடுகிறது. முத்துக் குமரி! இந்த நிலையிலிருந்து நான்தான் விடுபட முடியுமா? நீதான் விடுபட முடியுமா?"

இதைச் சொன்ன இளநங்கையின் முகத்தில் ஆழ்ந்த சிந்தனை படர்ந்து நின்றது. உதடுகள், லேசாகப் புன் முறுவல் காட்டின. முத்துக்குமரி மௌனத்தின் உருவாக விளங்கினாள். அவள் உள்ளம் மட்டும் ஆசைக் கனலைக் கக்கிக் கொண்டிருந்தது. விளையாட்டு முகமொன்று அதில் எழுந்து எழுந்து அவளை நிலைகுலையச் செய்தது. "சே! சே! இருக்காது ஒருகாலும் இருக்காது. பார்த்து ஒருநாள் ஆகவில்லை. அதற்குள் காதலாவது!" என்று தன்னைத் திருத்திக்கொள்ள முயன்றாள். அந்தத் திருத்தம் வெறும் ஏமாற்றம் என்பது அவளுக்கே புரிந்துவிட்டதால், 'காதல் என்பது வெறும் பைத்தியக்காரத்தனம். சந்தேகமில்லை. பித்துத்தான். சமய சந்தர்ப்பம் இல்லாமல் திடீரென மனிதனைப் பற்ற வல்லது' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள். அந்த எண்ணத்தை அதிகம் ஊன்றவிடக் கூடாதென்ற நினைப்பால் எழுந்திருக்கவும் செய்தாள். "நாம் வந்து நேரமாகிறது. அகத்தியர் குடிலுக்குப் போவோம். அவர் வந்து காத்திருக்கப் போகிறார்," என்று சொல்லவும் செய்தாள்.

இந்திரபானுவின் பெயரைச் சொல்லாமல் முத்துக் குமரி 'அவர்' என்று குறிப்பிட்டதை எண்ணி உள்ளூர நகைத்துக் கொண்ட இளநங்கையும் எழுந்திருந்தாள். இரு வரும் சேலைகளை முறைப்படி அணிந்து கூந்தலைத் துவட்டி உதறி நுனி முடிப்புப் போட்டு, நீராட்டச் சேலை

களைப் பிரிந்து கையில் எடுத்துக்கொண்டு அகத்தியர் குடிலுக்கு வந்து சேர்ந்ததும் அதன் படிமுகப்பில் திகைப் படைந்து நின்றார்கள். அங்கிருந்த அவர்கள் புரவி களிரண்டும் காணவில்லை. "எங்கே நமது புரவிகள் முத்துக் குமரி?" என்று வினவினாள் இளநங்கை.

முத்துக்குமரி சுற்றும் முற்றும் பார்த்தாள். "எங்கும் பார்க்க வேண்டாம். இங்கு பாருங்கள் தேவி" என்ற மரியாதைக் குரலைக் கேட்டு நிமிர்ந்து படிகளில் உச்சிகளைப் பார்த்த முத்துக்குமரி மட்டுமின்றி இளநங்கையும் திக் பிரமை அடைந்தாள். படிகளில் உச்சியில் திடமான நான்கு பேர் நின்று கொண்டிருந் தார்கள். அவர்களிருவர் கைகளில் தங்கள் புரவிகளிலிருந்த பைகளிலிருந்ததை மங்கையரிவரும் கவனித்தார்கள்.

அவர்கள் கண்கள் சென்ற திசையைப் பார்த்த அந்த நால்வரில் தலைவனாகக் காணப்பட்டவன் சொன்னான்; "உங்கள் பைகளை நாங்கள்தான் சுமந்து வரவேண்டும். நாம் செல்லுமிடத்திற்குப் புரவிகள் தேவையில்லை. புரவிகள் செல்வது கடினம்," என்று. அவன் குரலில் அதிகாரம் தொனிக்கவில்லை. ஆனாலும் கண்டிப்பு இருந்ததைக் கவனித்தாள் முத்துக்குமரி. ஆகவே "எங்களை எங்கு அழைத்துச் செல்ல உத்தேசம்?" என்று வினவினாள் சீற்றத்துடன்.

"சொல்ல அனுமதியில்லை." சர்வசாதாரணமாக வந்தது தலைவன் பதில்.

"நாங்கள் வர மறுத்தால்?" என்று கேட்டாள் இள நங்கை கோபத்துடன்.

"விருப்பமில்லாத பணியைச் செய்யவேண்டும்" என்றான் தலைவன்.

"என்ன பணி அது?" என்று கேட்டாள் இளநங்கை.

"உங்களைப் பலவந்தமாகத் தூக்கிச் செல்லும் பணி." என்றான் அந்தத் தலைவன்.

முத்துக்குமரியின் இதயத்தில் இளநங்கை சற்று முன்பு விளக்கிய காதலெனும் பித்து தலைதூக்கவே, "எங்கள்



துணைவருக்கு இது தெரிந்தால் உங்கள் கதி என்னவாகும் தெரியுமா?" என்று சீறினாள் முத்துக்குமரி.

பதிலுக்கு நகைத்தான் அந்தத் தலைவன். அத்துடன் சொன்னான், "உங்கள் துணைவருக்கும் தெரியும்," என்று.

இளநங்கை, முத்துக்குமரி இருவரும் பேரதிர்ச்சி யடைந்தார்கள். "என்ன அவருக்கும் தெரியுமா! நம்பமுடிய வில்லை" என்றார்கள் இருவரும் ஏககாலத்தில்.

"நீங்களும் அவரிருக்குமிடம்தான் போகிறீர்கள். அவரையே நேரில் கேட்டுக் கொள்ளலாம்," என்றான் தலைவன்.

இதைக் கேட்ட இளநங்கையின் இதயத்தில் கோபச் சூறாவளி எழுந்தது! முத்துக்குமரியின் இதயத்தின் நிலை அவளுக்கே புரியவில்லை. வெடித்துவிடும் நிலைக்கு வந்து கொண்டிருந்தது. 'காதல் பித்துத்தான். அதைவிடச் சாதல் மேலானதுதான்' என்று தனக்குள் அலறிக் கொண்டாள் பாண்டியநாட்டு இளவரசி. எதிரியிடம் தன்னைக் காட்டிக் கொடுக்கும் அளவுக்கு இந்திரபானு மோசக்காரனாக இருப் பான் என்பதை அவளால் நம்பவே முடியவில்லை.

## அத்தியாயம் 19

# சீலை கனத்தது, சிந்தையும் கனத்தது

**சொ**ன்னபடி பின்தொடராவிட்டால் தங்களிருவரையும் பலவந்தமாகத் தூக்கிவர உத்தரவாயிருக்கிறதென்றும், அந்த உத்தரவு தங்களுக்குத் துணைவந்திருக்கும் இந்திரபானுவுக்கும் தெரியுமென்றும், அகத்தீசுவரர் கோவில் படிகளின் உச்சியில் நின்ற வீரர்கள் தலைவன் கூறியதும் பெரும் திகைப்பு, ஏமாற்றம், கோபம் ஆகிய உணர்ச்சிகளால் பீடிக்கப்பட்ட முத்துக்குமரியின் முகம் நன்றாக விசிறப்பட்ட நெருப்புத் துண்டம்போல் ஒளிவிட்டது.

விளையாட்டு முகத்தாலும், தனது சிறிய தந்தையின் நம்பிக்கைக்குரியவனென்ற காரணத்தாலும், யாரும் உட்கார முடியாத அந்தச் சாம்பல் நிறப் புரவியில் திடமாக உட்கார்ந்து வந்ததாலேயே தன்னால் வீரரென்று நிர்ணயிக்கப் பட்டதாலும், தன் நெஞ்சத்தில் ஒரே நாளில் மெல்ல மெல்லப் புகுந்துகொண்ட இந்திரபானு, தங்களை எதிரிகளிடம் காட்டிக் கொடுக்கும் புல்லனாயிருக்க முடியுமென்று நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை முத்துக்குமரியால். கொட்டுந் தளத்துக்கும் அகத்தியர் குடிலுக்கும் இடையே உள்ள மலைப்பகுதியில் ஆபத்து அதிகமென்று தங்களை எச்சரிக்கை செய்த அந்த வாலிபன், எதிரிகள் கருத்து என்னவென்று தெரிந்ததும் ஏன் தங்களைக் காக்க ஓடிவரவில்லையென்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டாள் முத்துக்குமரி. எதிரே நின்ற நான்கு வீரர்களைப் பற்றியோ, அவர்களால் விளைந்துள்ள அபாயத்தைப்



பற்றியோ சிறிதும் அஞ்சவில்லை சுந்தரபாண்டியன் மகள். சேர வீரர்கள் உலாவியதால் பெருத்த அபாயத்திற்குள்ளாயிருந்த கொற்கையின் முத்தங்காடியிலேயே சிறிதளவும் பயமின்றி உட்கார்ந்திருந்தவளும், அபாயமிருப்பது தெரிந்தே பாண்டிய மன்னனால் கொற்கைக்கு அனுப்பப் பட்டவளுமான பாண்டியன் பைங்கிளிக்குப் பயமென்ற அச்சம் சற்றும் இதயத்துக்குள் நுழையவில்லையானாலும், இந்திரபானுவின் துரோகச் செயல் மட்டும் அவள் இதயத்தைப் பெரிதும் உருக்கவே செய்தது.

இத்தகைய உணர்ச்சியால் முத்துக்குமரி பீடிக்கப் பட்டதை, அவள் கால்களின் பெருவிரல்கள் கீழிருந்த பாறையில் கோடுகளை இழுக்க முயன்றதிலிருந்தும், உடல் லேசாகத் துடித்ததிலிருந்தும் புரிந்துகொண்ட இளநங்கை, அந்த உணர்ச்சிகளின் காரணத்தையும் எத்தகைய கஷ்டமுமின்றிப் புரிந்துகொண்டாள். பயத்தையும் அழகையும் நிலவொளியில் ஒருங்கே விசிறி நின்ற அந்தப் பொதியமலைப் பிராந்தியத்தில்கூட, வீரபாண்டியனின் அலட்சிய முகமும், விஷமச் சிரிப்பைச் சதா உதிர்க்கும் விழிகளும் தன் இதயத்தில் புகுந்து தன்னை அலட்டுவதை நினைத்துப் பார்த்த இளநங்கைக்கு, முத்துக்குமரியின் மனோநிலையைப் புரிந்து கொள்வது பெரும் கஷ்டமாயில்லாததால், அவள் கையை, தன் கையுடன் சேர்த்து இறுக்கிப் பிடித்துக் கொண்டாள். அவள் விரல்களுடன் தன் விரல்களையும் பின்னி நெறித்து, அதிகப் பதட்டமேதையும் காட்ட வேண்டாமென்று சாடையாக எச்சரிக்கையும் விடுத்தாள்.

இப்படிச் சில விநாடிகள் அக்கம் பக்கத்தில் மௌனமாக நின்ற அவ்விருவரையும் படிகளின் உச்சியில் நின்ற வீரர்களின் தலைவன் உற்று நோக்கிவிட்டு, "இளம்பலாமா?" என்று மரியாதைக்கு ஒரு கேள்வியும் விடுத்து, மற்ற வீரர்கள் தொடர அவர்களை நோக்கி இறங்கவும் செய்தான்.

அடுத்த விநாடி மேலிருந்து வந்த வீரர்கள் அவர்களைச் சூழ்ந்து வர, மங்கையரிருவரும் அகத்தீசுவரர்

கோயிலின் கடைசிப் படியிலிருந்து திரும்பி இறங்கி நடக்க முற்பட்டனர். நடக்க முற்பட்ட சில வினாடிகளுக்குள் தங்களைச் சிறை செய்ய வந்திருப்பவர்கள் அந்த நான்கு வீரர்கள் மட்டுமல்லவென்பதையும் புரிந்துகொண்டனர்.

அவர்கள் படிகளை விட்டு இறங்கிப் பத்தடிகள் நடந்த உடனேயே, அகத்தீசுவரர் கோயிலுக்கு மறுபுறம் மறைத்து வைக்கப்பட்ட புரவியைப் பிடித்துக்கொண்டு மற்றுமிருவர் அவர்களுக்குச் சற்றுத் தூரத்தில் நடக்க முற்பட்டதை அந்த இருவரும் கண்டார்கள். அவர்களை மட்டு மல்ல அவர்கள் கண்டது. சற்றுத் தூரத்திற்கொருமுறை பெரிதாக எழுந்திருந்த பெரும் பாறைகளின் மறைவில் இரண்டிரண்டு பேர்களாக மறைந்திருந்த சுமார் பத்துப் பன்னிரண்டு வீரர்கள், திடீர் திடீரென்று வெளிப்போந்து, தங்களைச் சிறை செய்த வீரர்களுக்கு உதவும் வகையில் கூட்டத்துடன் கலந்து கொண்டதைக் கவனித்த பெண்க ளிருவரும் அந்த வீரர்களிடமிருந்து தப்ப வழியேதுமில்லை என்பதையும் அறிந்து கொண்டனர். வீரர்கள் மரியாதைக் காக நாலடி தள்ளி நடந்தாலும், தங்களை ஓரளவு சூழ்ந்தே வந்ததால், தங்களுக்குள் எந்தவித உரையாடலும் சாத்திய மில்லையென்பதையும் புரிந்துகொண்டதால் மௌன மாகவே நடந்து சென்றனர். பாண்டியர் மரபில் பிறந்த காரணத்தால் அச்சமென்பதை முத்துக்குமரி அறியவில்லை யானாலும், அதிகமாக அரண்மனையை விட்டு வெளிவராமலேயே காலங் கழித்ததன் காரணமாக, இந்த வெளிநடப்பும் அனாதரவான நிலையும் பெரும் கசப்பைத் தந்ததால், சுற்றிலும் எழுந்த பொதிய மலையின் பேரழகை அவளால் ரசிக்க முடியவில்லை.

ஆனால் இளநங்கையின் மனோநிலை நேர்மாறாயிருந் தது. இரவிலும் பகலிலும் அநாயாசமாக முத்தங்காடியை யும் கொற்கை மாநகரையும் சுற்றிப் பழக்கமுள்ளவளும், இயற்கையின் அழகை நுகர்வதிலும், அதைக் கவிநோக்குடன் காணக்கூடிய கண்களைப் படைத்தவளுமான கோட்டைக் காவலன் மகள், பயணம் துவங்கிய சில நிமிடங்களில்



ஆபத்தையும் தான் சிறைப்பட்டவள் என்பதையும் அறவே
மறந்தாள். மலையின் அழகை, சுற்றிலும் அடர்ந்திருந்த
காடுகளில் வனப்பை, எட்டச் சத்தம் போட்டுப் பளபளத்த
அருவியின் எழிலைக் கண்டு பிரமை கொண்டாள்.
வானத்தில் உலாவிய சந்திரனை விட்டு அவனை அடுத்
திருந்த மலையுச்சியின்மீது தவழ்ந்த வெண்ணிற மேகமும்,
காட்டு முகப்புகளில் அதிமாக உருத்தெரியாமல் வெண்மதி
யின் நிலவு காரணமாக வெளுத்தவைபோல் கிடந்த
வண்ண மலர்களும் அவள் மனத்தை இன்ப உலகத்துக்குக்
கொண்டு போயின. அந்த எண்ணங்களுடன் நடந்து
சென்றவள், சட்சட்டென்று நின்று, வழியில் உதிர்ந்திருந்த
மலர்களில் சிலவற்றை எடுத்துத் தானும் கூந்தலில் செருகிக்
கொண்டு முத்துக்குமரியின் கூந்தலிலும் செருகினாள். ஒரு
மலரை முகர்ந்து பார்த்து, "அப்பாடி! என்ன மணம்!"
என்று உணர்ச்சி வசப்படவும் செய்தாள்.

அந்த மலை, அந்தக் காடு, மலர்கள், ஏன் வழியில்
உதிர்ந்த தழைகள்கூட அவளுக்குப் பேரின்பமளித்தன. காடு
கள் பார்வைக்கு அடர்த்தியே தவிர, கொற்கையின் தென்
கரைத் தோப்பின் அடர்த்தி, பொதியமலைக் காடுகளில்
இல்லையென்று தன்னுள் சொல்லிக்கொள்ளவும்
செய்தாள். கொற்கைத் தோப்பை நினைத்ததால் பற்பல
இன்ப நினைவுகள் அவள் உள்ளத்தில் புகுந்தன.
பொருநையில் தான் நீராடியது, நீர்க்கரை மண்டபத்தில்
உட்கார்ந்து இளவரசன் தன்னை வெறித்து வெறித்துப்
பார்த்தது, முத்தங்காடியிலிருந்து தன்னைத் தொடர்ந்து
வந்து தோப்பு விளிம்பில் தான் சுரணைகெட்டுக் கிடந்த
போது தனக்குச் சிகிச்சை செய்தது எல்லாம் அவள் மனக்கண்
முன்பு எழுந்து அவளுக்குச் சொல்லவொண்ணா இன்ப
வேதனையை அளித்தன. 'இரு முறை அவர் என்னைத்
தொட்டார்; இரண்டு முறையும் சிகிச்சை செய்யத்தான்
தொட்டார்; இரண்டு முறையும் அவர் மடியில் கிடந்தேன்.
சுரணை வந்தபோது சிகிச்சை செய்தது நினைவிருக்கிறது.
சுரணை இல்லாதபோது..." என்று எண்ணமிட்ட இள
நங்கையின் உடலில் பெரும் இன்பவேதனை ஊடுருவிச்

சென்றது. 'சே சே! இருக்காது. அவர் மிகவும் பண்புள்ளவர். நிராதரவாகக் கிடப்பவளிடம் அவருக்கு அனுதாப உணர்ச்சி மட்டும் தான் இருந்திருக்கும். வேறு உணர்ச்சி இருந்திருக்காது. அவர் பண்பாடு வேறு உணர்ச்சிகளுக்கு இடம் தராது, என்று இளவரசனுக்குப் பரிந்து பேசுவது போல் தன் எண்ணங்களில் எழுந்த வினாக்களுக்குத் தானே பதில் கூறிக் கொண்டாள்.

அத்தனையிலும் அவள் உள்ளூர இன்னொரு எண்ணமும் ஓடியது. 'இவர் பண்புகெட்ட தனமாக நடந்து கொண்டிருந்தாலும், தனக்கு ஆட்சேபணையிருக்காது' என்பது போன்ற ஒரு கள்ள எண்ணமும் அவள் கருத்தில் உலாவியது. கருத்தில் உலாவியதே தவிர, அதை மனம் ஒப்புக்கொண்டதாகக் காட்டிக்கொள்ளவில்லை. அப்படியே மனமும் ஒப்புக்கொண்டாலும் உதடு உரைக் காது என்பதை அவள் உணர்ந்துகொண்டாள்.

இப்படி நினைத்த அவளுக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. 'சே சே! நான் என்ன இப்படி மாறிவிட்டேன். நான் மாறிவிட்டேனா அல்லது அவர் என்னை மாற்றி விட்டாரா? மனம் விரும்பும் புருஷனுடைய ஸ்பரிசத்துக்கு இத்தனை பலமா? என்று தனக்குள் கேள்வியும் கேட்டுக் கொண்டாள். கடைசியில் ஒரு முடிவுக்கும் வந்தாள். 'எப்படியும் பெண் ஜன்மம் பலவீனமான ஜன்மம்தான். அதன் காரணமாகத்தான் வாலைப்பருவத்தில் பெற்றோர் பாதுகாப்பு வைக்கப்பட்டிருக்கிறது. கொற்கையில் இஷ்டப் படி என்னைச் சுற்றவிட்டது தந்தையின் தவறு' என்றும் முடிவு செய்தாள். ஆனால் அந்த முடிவும் அவளுக்குத் திருப்தியாய் இல்லை. பெற்றோர் கட்டுப்பாடு தன்னைக் கோட்டைக்குள் அடைத்திருந்தால், இளவரசனைத் தான் எப்படிச் சந்தித்திருக்க முடியும் என்று நினைத்தாள் இள நங்கை.

'கோட்டைக்குள் நான் அடைந்திருந்தால் இளவரசர் என்னைப் பார்த்திருக்க மாட்டார்; பார்த்திராவிட்டால் தொடர்ந்திருக்க மாட்டார்; தொடர்ந்திராவிட்டால் வீர



ரவியின் எண்ணங்கள், ஏற்பாடுகள், கொற்கையின் ஆபத்து, எதுவும் அவருக்குத் தெரிய நியாயமில்லை. இவை தெரியா விட்டால், பாண்டிய நாட்டின் கதி அதோகதிதானே?' என்று கேட்டுக்கொண்டு, பாண்டிய நாட்டின் நலனுக்காக யாவது தாங்கள் சந்தித்ததும், தங்களுக்குள் ஏற்பட்ட இதர நிகழ்ச்சிகளும் நியாயம் என்று சொல்லிக்கொண்டாள். ஆனால் இத்தனை நியாயம் கற்பித்ததற்கு உண்மைக் காரணம் பாண்டிய நாட்டு நலனோ, சேரநாட்டு நலனோ, ஏன் உலகத்தின் நலனோகூடக் காரணமில்லையென்பதைப் புரிந்துகொண்டாள். இருந்தாலும் புரியாததுபோல் பாசாங்கு செய்தாள். காதலின் சக்தி அவளுக்கு நன்றாகப் புரிந்தது. "பற்பல பாசாங்குகளும், பொய்யும், சுய எண்ணங்களையே ஏமாற்றிக் கொள்வதும் ஆகிய இத்தனையும் சேர்ந்த பெரும் மர்மம் இந்தக் காதல்,' என்று காதலைக் கடிந்து கொள்ளவும் செய்தாள்.

இத்தகைய நினைப்புகளுடன் அவள் நடந்து சென்ற தால் தானும் பாண்டியன் மகளும் மெள்ள மலைச்சரி வொன்றில் ஏறிச் செல்வதையோ, அப்படி ஏற வேண்டியிருந்ததால் பெருமூச்சு விட வேண்டியிருந்ததையோ இளநங்கை உணரவில்லை. தங்கள் புரவிகளிரண்டையும் பிடித்துக்கொண்டு இரு வீரர்கள் முன்பு சென்றதால் அந்தப் புரவிகளின் குளம்புகள் இடறிவிட்ட சிறுகற்கள் சரிவில் ஓடிவந்து தங்கள் கால்களில் பட்டதையும்கூட அவள் கவனிக்கவில்லை. தாங்கள் மலையின்மீது ஏறஏற, மலைப் பாதை குறுகுவதையும், நான்கு நான்கு பேராகச் சென்ற வீரர்கள் இருவர் இருவராக வரிசையாகச் செல்லவேண்டிய அவசியம் ஏற்பட்டதையும்கூட அவள் உணரவில்லை. முத்துக்குமரி அதைப்பற்றித் தெரிவித்தபின்பு தான் அவள் சுயநினைப்புக்கு வந்தாள். முத்துக்குமரியும் அப்படித் தீவிர சுயநினைப்புக்களுடன் நடக்கவில்லையென்றாலும், இந்திர பானு மீதிருந்த அவள் சிற்றம் காதல் உணர்ச்சிகளை அடக்கியிருந்ததால் மலை ஏறஏறப் பாதை குறுகுவதையும் காடு நன்றாகத் தங்களை நெருங்குவதையும் அவளால்

உணரமுடிந்தது. அதை அறிவிக்க அவள் இளநங்கையின் கையை அழுத்திக் கொடுக்கவே, சுரணை பெற்ற இளநங்கை சுற்றும் முற்றும் பார்த்து, "பாதை மிக நெருக்க மாயிருக்கிறதே?" என்றாள் சற்று உரக்க.

அவர்களுக்கு முன்பு நடந்த காவலர் தலைவன் சற்றுத் திரும்பி, "ஆம் இன்னும் கால்காதம் இப்படி இருக்கும். பிறகு சமவெளி வந்துவிடும். இதில் வருவது கொஞ்சம் கஷ்டம்தான்," என்றான்.

"ஏன், வேறு பாதையில்லையா நீங்கள் செல்லுமிடத் திற்கு?" என்று வினவினாள் இளநங்கை.

"இருக்கிறது," என்றார் வீரர் தலைவன்.

"பின், ஏன் அந்தப் பாதையில் போகவில்லை?" என்று வினவினாள் இளநங்கை, அதிகாரம் தொனித்த குரலில்.

வீரர்கள் தலைவன் முகத்தில் வியப்புக் குறி விரிந்தது. அவன் திரும்பியவண்ணம் முன்னேறிக் கொண்டே சொன் னான்; "இது குறுக்குப் பாதை, சீக்கிரம் போய்ச் சேரலாம்" என்று.

"சீக்கிரம் எங்கு போய்ச் சேரவேண்டும்?" என்று மீண்டும் கேட்டாள், இளநங்கையும் மலைச்சரிவில் அநாயசமாக ஏறிக்கொண்டே,

"அதுதான் முன்பே சொன்னனே?" தலையை முன் புறம் திரும்பிக்கொண்டு, இளநங்கையைப் பாராமலே பதில் சொல்லிக்கொண்டு, முன்னேறினான் வீரர்கள் தலைவன்.

"என்ன சொன்னீர்கள்!" என்று இளநங்கை கேட்டாள்.

"போனதும் புரிந்துகொள்வீர்களென்று" எனக் கூறிய வீரர் தலைவன் லேசாக நகைத்தான்.

அவன் நகைப்பு இளநங்கைக்கு மட்டுமின்றி முத்துக் குமரிக்கும் ஆத்திரமூட்டியதென்றாலும், அவ்விருவரும் ஏதும் செய்யக்கூடிய நிலையில் இல்லாததால், அகத்தில் எரிச்சலுடனும், புறத்தில் மௌனத்துடனும் மலைச்சரிவில் ஏறினார்கள். அதற்குப் பிறகு அவ்விருவரும் யாருடனும்



பேசவில்லை. அவர்கள் முன்னும் பின்னும் இருவர் இருவ ராகச் சாரியாக வந்த வீரர்களும் அந்தப் பாதையில் ஏறுவதையே குறிக்கோளாகக் கொண்டு துரிதத்தைக் காட்டினார்கள். அவர்கள் தாமதப்பட்ட சமயங்களில் வீரர் தலைவன், "உம் உம்...சீக்கிரம்..." என்று இரைந்து துரிதப் படுத்தினான்.

அவன் துரிதப்படுத்தியபோது அவன் குரலில் லேசாகப் பயம் தொனித்ததை இளநங்கை கவனித்தாள். ஆனால் அதற்குக் காரணம் மட்டும் விளங்கவில்லை அவளுக்கு. அவன் அனாவசியமாகக் கிலியடைவதாகவே தோன்றியது அவளுக்கு. அந்த ஒற்றையடி மலைப் பாதையில் சுற்றிலும் காடுகளடர்ந்த பாதுகாப்பில், யாரும் அவர்களை அணுகுவது சாத்தியமில்லையென்பதையும், அணுகுவதானால் சமவெளியில் அணுகினால்தான் பயனுண்டு என்பதையும் புரிந்துகொண்ட அவள், வீரர்கள் தலைவன் ஏன் அச்சப்படுகிறான் என்பதை உணர முயன்று முடியாமல் தவித்த சமயத்தில் அவன், "சற்று நில்!" என்று கூறி வீரர்களைச் சட்டென்று நிற்கவைத்தான். பிறகு எதையோ சில வினாடிகள் உற்றுக் கேட்டான். துஷ்ட மிருகங்களின் உறுமல்களைத் தவிர வேறெதுவும் காதில் விழாததால், "சரி, நடவுங்கள்" என்று உத்தரவிட்டான்.

வீரர்கள் நடந்தனர். அடுத்த நாலைந்து நிமிடங்களில் அவன் மீண்டும் வீரர்களை நிற்கச் சொன்னான். பிறகு இரு புறங்களிலுமிருந்த காடுகளில் வலதுபுறக் காட்டை உற்று நோக்கினான். சிறிது நேரம் எதையோ உற்றுக்கேட்டான். "எனக்கு என்ன மனப்பிரமையா?" என்றும் இரைந்து கேட்டான்.

"என்ன கேட்கிறீர்கள்?" என்று வினவினான் பக்கத்தி லிருந்த வீரன்.

"குதிரைக் காலடிச் சத்தம் ஏதாவது கேட்டதா உனக்கு?" என்று வினவினான் வீரர் தலைவன்.

"இல்லை," என்ற வீரன், "உங்களுக்குக் கேட்டதா?" என்று வியப்புடன் பதிலுக்கு ஒரு கேள்வியையும் போட்டான்.

"ஆம், கேட்டது," என்றான் வீரர் தலைவன்.

பக்கத்திலிருந்து வீரன் மெல்ல நகைத்தான். அதைக் கண்ட வீரர்கள் தலைவன் குரல் கடுமையுடன் எழுந்தது, "என்ன நகைக்கிறாய்?" என்று.

"நீங்கள் நோக்கிய பகுதியில் புரவி ஏறமுடியுமா?" என்று மரியாதை நிரம்பிய குரலில் வினவினான் வீரன்.

"முடியாது," வீரர் தலைவன் பதிலில் குழப்பமிருந்தது.

மிகவும் கரடுமுரடான பாறைகள் குத்துக் குத்தாகவுள்ள மலைக்காட்டுப் பகுதியில் மனிதர்களே தொற்றிக் கொண்டு ஏறவேண்டியிருக்க, அதில் புரவியில் யாரும் வர முடியாது என்பது அவனுக்கு நன்றாகவே தெரிந்திருந்தது. இருப்பினும் ஏதோ ஒருவகைச் சந்தேகம், அச்சம் அவன் இதயத்தைச் சூழ்ந்திருக்க வேண்டும். ஆகவே, அடுத்தபடி பயணத்தை மிகுந்த எச்சரிக்கையுடன் நடத்தினான். அப்படி நடத்திக்கொண்டேயிருக்கையில் சட்டென்று பக்கத்துக் காட்டுக்குள் ஓடினான். அவன் நிற்க உத்தர விடாததால் முன்னால் சென்ற வீரர்கள் சென்று கொண்டிருந்தார்கள். அவன் பக்கத்திலிருந்த வீரனும் மற்றவர்களும் நின்றார்கள். பக்கத்துக் காட்டில் 'டக் டக்' என்ற குதிரைக் குளம்படி ஒலிகள் இப்பொழுது சற்றுத் தெளிவாகவே கேட்டன. ஆனால் திடீரென்று நின்று விட்டன.

அந்த ஒலிகள் முத்துக்குமரியின் காதிலும் இளநங்கையின் காதுகளிலும்கூடத் தெளிவாக விழுந்தன. அவை நின்றதையும் அவர்கள் கவனித்தார்கள். அந்த இரவில் மனிதரே நடக்கமுடியாத அந்தக் காட்டு இருட்டுக்குள் புரவிமீது யார் வரமுடியும் என்று அவர்களும் தங்களைக் கேட்டுக்கொண்டனர்.

சற்று நேரத்தில் காட்டுக்குள்ளிருந்து வந்த வீரர்கள் தலைவன், "சரி சரி நடவுங்கள். புரவிக் குளம்படியல்ல அது. பெரும் காட்டு ஆடு ஒன்றின் குளம்பு ஒலி, எட்டித் துரத்தி விட்டேன்," என்றான்.



அவன் சொன்னது சரியாக இருக்க வேண்டுமென்றே புலப்பட்டது இளநங்கைக்கும். பிறகு புரவிக் குளம்பு ஒலி எதுவும் கேட்கவில்லை. அடுத்த இரண்டு நாழிகைக்குள் வீரர் கூட்டம் அந்த மங்கையர் இருவருடன் அந்த மலையிலிருந்த பீடபூமியை அடைந்தது. வீரர்கள் தலைவன் அவர்களை அந்தப் பீடபூமியிருந்த விடுதி ஒன்றுக்கு அழைத்துச் சென்று ஓர் அறையில் தங்க வைத்ததன்றி, "இப்படி அமருங்கள்," என்று அங்கிருந்த இரு ஆசனங்களை சுட்டியும் காட்டி விட்டு வெளியேறினான். சில விநாடிகளில் திரும்பி வந்து, "தங்களில் யார் இளநங்கை என்பது?" என விசாரித்தான்.

"நான்தான்," என்றாள் இளநங்கை.

"தலைவர் இதை உங்களிடம் கொடுக்கச் சொன்னார். இன்னும் சற்று நேரத்தில் இங்கு வந்து உங்களைச் சந்திப்பதாகச் சொன்னார்," என்று கூறி, அவளிடம் பட்டுச் சீலையில் சுற்றியிருந்த ஏதோ ஒன்றைக் கொடுத்துவிட்டுச் சென்றான்.

அவன் தந்த அந்தப் பட்டுச் சீலை கனத்தது. சீலை மட்டுமல்ல, கையில் வாங்கியதும் அவள் சிந்தையும் கனத்தது. வெகு வேகமாகப் பிரித்தாள் அந்தச் சீலையை. உள்ளிருந்த பொருளைப் பார்த்தாள். பிரமித்தாள். ஆபத்து எல்லை மீறி விட்டதைச் சந்தேகமற உணர்ந்து கொண்டாள்.

அத்தியாயம் 20

# துரோகி

அகத்தீசுவரர் கோயிலிலிருந்து தங்களைச் சிறை செய்து அழைத்து வந்த வீரர்கள் தலைவன் கொடுத்த சீலைச்சுருளைக் கையில் வாங்கியதும் அது கனத்திலிருந்தே அதன் உள்ளிருந்த பொருள் என்னவென்பதை ஊகித்துக் கொண்ட இளநங்கையின் சிந்தையும் கனத்ததென்றால் அதற்குக் காரணம் இருக்கவே செய்தது. சீலையால் மூடப் பட்டிருந்தபோதிலும், அது கையில் கனத்ததைக் கண்ட இளநங்கை கையினால் அதைத் தடவிப் பார்த்ததுமே உள்ளிருப்பது என்னவென்பதை நிர்ணயித்துக் கொண்டாள். அந்த நிர்ணயத்தின் விளைவாகப் பெருமூச்சும் விட்டாள். ஆனால் அந்தப் பெருமூச்சு ஆசுவாசப் பெரு மூச்சல்ல; வேதனையிலிருந்து விளைந்த பெருமூச்சு. துக்கத்திலிருந்து எழுந்த சோக சுவாசம் ஆகும்.

சீலை பிரிக்கப்பட்டதால் பகிரங்கப்பட்டு மடியில் கிடந்த அந்தப் பொருளைப் பார்த்த இளநங்கை ஆரம்பத்தில் விடுத்த பெருமூச்சைக் கூட உணர்ச்சிப் பெருக்கால் சில விநாடிகளில் அடக்கிக்கொண்டாள். அவள் மடியில் கிடந்தது, வீரபாண்டியன் இடைக் கச்சையில் காட்சியளித்த தங்கக் கோடரி. எந்தத் தங்கக் கோடரியைக் கொற்கையின் சேரர் மாளிகை மண்டபப் போரில் வீசியெறிந்து, வீரரவியிடமிருந்து தன்னை இளவரசன் காப்பாற்றினானோ, எந்தக் கோடரி வீரரவியின் தோளில் புதைந்து தங்கிவிட்டதால் தனது கோடரி நஷ்டமாகி விட்டதென்று பொருநைப் படித்துறையில் தனக்கு வீரபாண்டியன் விளக்கினானோ, அந்தக் கோடரி தன் மடியிலிருந்து தன்னை நோக்கி விழிப்பதைக் கண்டாள் இள



நங்கை. அது மட்டுமல்ல, அந்தக் கோடரியின் பட்டையில் செதுக்கப்படிருந்த யானையும், மீனுங்கூட தன்னை நோக்கிப் பரிதாபத்துடன் பார்ப்பதாகப் பட்டது அந்தப் பைங்கிளிக்கு. பாண்டிய நாட்டு இளவரசர்களின் ஆதி முத்திரையின் அம்சங்களான கோடரியும் யானையும் பிற்கால முத்திரையான மீனும் தன்மடியில் இணைந்து கிடப்பதைக் கண்ட இளநங்கையின் எண்ணங்கள் பலபடி விரிந்தன. அந்தக் கோடரி மடியில் விழுந்து கிடந்தது, ராஜமுத்திரையே தனது மடியில் விழுந்து கிடப்பதாகத் தோன்றியதா, அல்லது அந்த முத்திரையினால் அதிகாரம் செலுத்தபவனும் முத்திரைக்கு உரியவனுமான வீரபாண்டியனே விழுந்து கிடப்பதாகத் தோன்றியதா என்றுகூட நிர்ணயிக்க முடியவில்லை கோட்டைக் காவலன் மகளுக்கு.

அந்த ராஜமுத்திரையைக் கண்டதால் ஏற்பட்ட பெரும் பீதி அவளைச் சற்றுக் குழப்பத்திலேயே ஆழ்த்தியிருந்தது. மண்டபப்போரில் வீரபாண்டியன் வீசிய கோடரி கொட்டுந்தளத்துக்கு வந்திருக்க வேண்டுமானால் வீரரவியும் கொட்டுந்தளம் வந்திருக்க வேண்டுமென்று நினைத்தாள் இளநங்கை. 'அப்படியானால் கொட்டுந்தளத்திலிருந்த பாண்டியர் காவல் படை என்னவாயிற்று? அந்தப் படையின் தலைவனிடம் ஓலை கொடுக்கச் சொன்னாரே, இளவரசர்! அதை யாரிடம் கொடுப்பது?' என்று தன்னைத் தானே கேட்டுக்கொள்ளவும் செய்தாள். தன் மடியில் பத்திரப் படுத்தியிருந்த இளவரசன் ஓலை இருக்கிறதா என்று மடியைத் தடவியும் பார்த்துக்கொண்டாள். ஓலை பத்திரமாயிருந்தது. ஆனால் பயன்? பயனேதுமில்லை என்பதைப் புரிந்துகொண்ட இளநங்கை மீண்டும் பெருமூச் செறிந்தாள்.

முத்துக்குமரி பெருமூச்செறியவுமில்லை: வேறு உணர்ச்சி எதையும் காட்டவுமில்லை. கோடரியைப் பார்த்த வுடனேயே அவளுக்கு விஷயம் ஓரளவு புரிந்துவிட்டது. மண்டபப் போரின் விவரங்கள் அவளுக்கு முழுவதும்

தெரியாதென்றாலும், தெரிந்துகொள்ள அவகாசமில்லையென்றாலும், ஒன்று மட்டும் தெளிவாகத் தெரிந்தது அவனுக்கு. இளவரசன் கோடரியை வேறு ஒருவன் அனுப்புவதானால், அதில் ஏதோ மோசம் இருக்கிறதென்பது மட்டும் தெளிவாகத் தெரிந்தது அவனுக்கு. 'விரோதிகளிடம் ராஜ முத்திரை சிக்கிவிட்டது. அதை அவர்கள் உபயோகப்படுத்தப் பார்க்கிறார்கள்' என்று தீர்மானித்துக் கொண்ட அவன், இளநங்கையை நோக்கி, கோடரியைச் சுட்டிக் காட்டிக் கேட்டான், "இதற்கு என்ன அர்த்தம்?" என்று.

இளநங்கை தன் சோகக் கண்களை முத்துக்குமரி மீது திருப்பினாள். "இளவரசர் கட்டளையை நாம் நிறைவேற்ற முடியாதென்று அர்த்தம்!" என்றாள் இதய சோகம் உதடுகள் உதிர்த்த சொற்களிலும் தொனிக்க.

"ஏன் முடியாது?" என்று கேட்டாள் முத்துக்குமரி.

"இளவரசர் கொட்டுந்தளக் காவற்படைத் தலைவனிடம் ஓலையைக் கொடுக்கச் சொன்னார். இங்கிருப்பது பாண்டியர் காவற் படையல்ல; எதிரிகள் காவற்படை," என்றாள் இளநங்கை.

அது முத்துக்குமரிக்கும் தெரிந்தே இருந்தது. அவர்கள் கொட்டுந்தளத்தில் நுழைந்தபோது அவன் அதைப் புரிந்து கொண்டான். கொட்டுந்தளத்தில் அவளும் இளநங்கையும் நுழைந்தபோது நள்ளிரவிருக்கும். அந்த நள்ளிரவில் அந்த மலைச் சமவெளி அற்புதமாகக் காட்சியளித்தது. நாற்புறமும் மலைகள் சூழ இடையேயிருந்த சமவெளியின் பரப்பு அதிகமில்லாவிட்டாலும், ஒரு சாதாரணப் படைப் பிரிவு தங்குவதற்கு வேண்டிய நிலப்பரப்பு இருக்கவே செய்தது. அந்த நிலப்பரப்பில் கட்டியிருந்த சிறுசிறு விடுதிகளும் ஓரிரு பெரு விடுதிகளும் நீண்ட தூரம் விட்டுவிட்டு மலைச்சரிவில் சிலவும், சமபூமியில் சிலவுமாகக் கட்டப்பட்டிருந்த படியால் சில கண்களுக்குத் தென்பட்டன, சில தென்படவில்லை. ஆனால் எங்கும் வீரர்கள் உலாவிக் கொண்டிருந்ததையும், கொட்டுந்தளக் காவல் பலமாகவே இருந்ததையும், மலைச்சரிவில் இறங்கி பீடபூமிக்குள் வந்த



இளநங்கையும் முத்துக்குமரியும் கண்டதால், அங்கு பாண்டியர் படை இல்லை என்பதையும், நடமாடியவர்கள் எதிரி வீரர்கள் என்பதையும் புரிந்துகொண்டார்கள்.

அத்தகைய ஒரு விபரீதம் விளைந்த சமயத்தில் கூட அந்த மலைப் பூமியும், விடுதிகளும், எங்கோ ஓரிரு இடங்களில் எரிந்து கொண்டிருந்த பந்தங்களும், பார்ப்பதற்குப் பெரும் ரம்மியமாக இருந்தன. மனிதக் கூட்டங்களுள்ள நகரங்களிலிருந்து பெரிதும் எட்டி நின்ற பீடபூமியின் கம்பீரம் பெரும் அச்சத்தையும் அதனிடம் ஒரு கௌரவத்தையும் அளிப்பதாயிருந்தது. அடிக்கடி சுற்றுப் புறக்காடுகளிலிருந்து கேட்ட புலிகளின் உறுமல், மனிதன் மனிதனைப் பயமுறுத்தினாலும் மனிதனையும் பயமுறுத்தும் ஜீவராசிகளைக் காரணமாகவே கடவுள் படைத்திருக்கிறார் என்பதை நிருபித்தன. இப்படி அழகையும் அச்சத்தையும் அள்ளிக் கொட்டிய பீடபூமியில் நுழைந்த பின்பும் ஏதோ ஒரு நம்பிக்கை இளநங்கைக்கும் இருந்தது. முத்துக்குமரிக்கும் இருந்தது. எத்தனை துரிதமாக வீரரவி கொற்கையிலிருந்து கிளம்பியிருந்தாலும் அது வீரபாண்டியனுக்குத் தெரியாமலிருக்காது என்ற எண்ணம் இளநங்கைக்குத் திடமாயிருந்ததால், 'அது தெரிந்தவுடன் அவரும் பயணமாகிவிடுவார். பயணப்பட்டு இங்கு வந்துவிட்டால் அப்புறம் வீரரவி பெரும் படை வைத்திருந்தாலும் பயனில்லை' என்று தன்னைத் திடப்படுத்திக் கொண்டாள்.

ஆனால், முத்துக்குமரியின் எண்ணம் இந்திரபானுவை நாடி நின்றது. தாங்கள் சிறைப்படப் போவது இந்திரபானுவுக்குத் தெரியும் என்று தங்களைச் சிறை செய்த வீரர்களின் தலைவன் சொன்னதை அவள் நம்பவேயில்லை. விளையாட்டு முகமுள்ளவனும், வீரபாண்டியன் நம்பிக்கைக்குப் பெரிதும் பாத்திரமானவனுமான இந்திரபானு எதிரிகளிடம் தங்களைக் காட்டிக் கொடுக்கும் இழிகுணம் உள்ளவனல்ல என்று தீர்மானமாயிருந்தான் அவன். அது மட்டுமல்ல; தாங்கள் மலைமீது

ஏறி வந்தபோது காட்டுக்குள் கேட்டது உண்மையில் புரவியின் குளம்புச் சத்தமேயென்றும், வீரர்கள் தலைவன் நினைத்தது போல் காட்டு ஆட்டின் காலடிச் சத்தமில்லை என்றும் திடமாக நம்பினாள் அவள். 'அப்படி அது புரவியின் குளம்புச் சத்தமானால் அந்தப் புரவி சிறிய தந்தையின் சாம்பல் நிறப்புரவிதான். அதில் இந்த விளையாட்டுப் பிள்ளைதான் வந்திருப்பார்' என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள் அவள்.

இரு மங்கையரும் இப்படித் தங்கள் அபிமான வீரர்களை எண்ணித் திடப்பட்டுக் கொண்டிருந்ததால் எப்படியும் தப்பி விடலாமென்ற துணிவுடனிருந்தார்கள். அந்த நினைப்பை இளநங்கையே முதலில் வெளியிட்டாள், "எப்படியும் கொட்டுந்தள நிலை இளவரசருக்குத் தெரிந்து விடும், தெரிந்தபின் அவர் வாளாவிருக்க மாட்டார்," என்று.

"ஏன்?" முத்துக்குமரி ஏதோ கேட்க வேண்டுமென்பதற்காகக் கேட்டாள்.

"மேலுள்ள பாண்டியர் கோட்டைக்கு முரசு கொட்டி எச்சரிக்கை கொடுக்கும் தளமல்லவா இது?" என்றாள் இளநங்கை.

"ஆம், ஆம்," என்று எங்கோ நினைத்துக்கொண்டு முத்துக்குமரி ஆமோதித்தாள்.

இளநங்கை கையிலிருந்த பொற்கோடரியை எடுத்துக் கொண்டு, வீரன் கொடுத்த சிலைச்சுருளைத் தூர எறிந்தாள். பிறகு அதை ஒரு கையில் வைத்துக்கொண்டு இன்னொரு கையால் அதன் கூர்மையைப் பரிசோதித்து, "அப்பாடி! என்ன கூர்மை!" என்று வியக்கவும் செய்தாள்.

எதிரிகள் வசம் சிக்கிவிட்டோம் என்ற சமயத்திலும் அந்த இரண்டு பெண்களும் அந்தக் கோடரியை அழகு பார்த்தனர். முதலிலிருந்த அச்சம் தீரவே அதைப்பற்றி விவாதிக்கவும் முற்பட்டார்கள். அந்தத் தர்க்கத்தைத் துவக்கிய இளநங்கை, "முத்துக்குமரி! இதை இளவரசர் உபயோகித்துப் பார்த்திருக்கிறாயா?" என்று கேட்டாள்.



"இல்லை," என்றாள் முத்துக்குமரி.

"நானும் பார்த்ததில்லை. ஆனால் இதில் இளவரசருக்குள்ள நம்பிக்கை மிக அதிகம். இதைக் கொண்டுதான் வீரரவியை வீழ்த்தினார்." என்றாள் இளநங்கை.

"இல்லை. வீழ்த்தவில்லை," என்ற சொற்கள் இளநங்கையின் சொற்களைத் தடை செய்தன. இரு பெண்களின் கண்களும் கோடரியிலிருந்து அச்சொற்கள் வந்த திசைக்குத் திரும்பின.

வாயிற்படியில் நின்ற வீரரவி அவர்களைச் சில விநாடிகள் பார்த்தான். பார்த்தது மட்டுமல்ல, ரசித்தான் என்பதையும் அவன் கண்கள் காட்டின. பிறகு, அவன் அழகிய முகத்தில் சற்றே துயரச் சாயை படர்ந்தது. அந்தச் சாயையை அகற்றாமலே அறைக்குள் வந்த வீரரவி மங்கையரிருவரையும் நோக்கி, "நான் உட்காரலாமா? தோளில் காயம் ஆறவில்லை இன்னும். ரத்தம் சேதப்பட்டதால் பலவீனமுமிருக்கிறது," என்றான்.

இளநங்கை அவன் போர் அங்கிக்குள் வலது தோள் சற்றே உயர்ந்திருந்ததைக் கண்டு அதற்குப் பலமான கட்டு போடப்பட்டிருந்ததை உணர்ந்து கொண்டாள். அவள் கண் சென்ற திசையைக் கவனித்துப் புன்முறுவல் கொண்ட வீரரவி, "கோடரி விளைவித்த காயம் ஆழ்ந்தது. ஆகவே கட்டு பலமாகப் போட வேண்டியதாயிற்று," என்று கூறிக் கொண்டே எட்ட இருந்த ஒரு மஞ்சத்தில் உட்கார்ந்து கால்களை நன்றாக நீட்டியும் கொண்டான். பிறகு இளநங்கையை நோக்கிச் சொன்னான்: "கோட்டைக் காவலர் மகளே! இது எதிர்பாராத சந்திப்புதான் உனக்கு-அது மட்டுமல்ல, இங்குள்ள நிலையும் பாண்டிய நாட்டு இளவரசனும் எதிர்பாராத நிலைதான். இந்தக் கொட்டுந்தளம் இப்பொழுது என் கைவசமிருக்கிறது. இதற்கு நான் தான் தற்சமயம் தலைவன். ஆகையால் நீ என்னிடம் எதையும் ஒளிக்கவேண்டாம்."

"எதைக் குறிப்பிடுகிறீர்கள்?" என்று அலட்சியமாகக் கேட்டாள் இளநங்கை வீரரவியை நோக்கி.

"உதாரணமாக..." வீரரவியின் அழகிய உதடுகள் சற்று நிதானித்தன.

"உம் சொல்லுங்கள்..." என்றாள் இளநங்கை.

வீரரவி அவளை எந்தவித உணர்ச்சியுமின்றி ஏறிட்டு நோக்கிவிட்டு, "உதாரணமாக, இளவரசன் கொடுத்த ஓலையை ஒளிக்க வேண்டாம். என்னிடம் கொடுத்து விடலாம்," என்றான்.

இதைக் கேட்ட இளநங்கைக்கு மட்டுமல்ல, முத்துக் குமரிக்கும் தூக்கி வாரிப் போட்டது. 'வீரரவி என்ன மந்திர வாதியா?'' என்று நினைத்தன்றி, பரஸ்பரம் பார்த்துக் கொள்ளவும் செய்தனர்.

அதைக் கண்ட வீரரவி மெல்ல நகைத்தான். "இதில் மந்திரமெதுவும் இல்லை இளநங்கை. அரசாங்க விஷயங்களை மந்திரத்தால் தீர்க்க முடியாது. அவற்றுக்குத் தேவை ஆராயும் அறிவு, சிறிது முன்னோக்கு, சற்றே தந்திரம் இவைதான்" என்று சுட்டிக் காட்டினான். அத்துடன் நிற்காமல் மேலும் சொன்னான் வீரரவி உதயமார்த்தாண்ட வர்மன். "மண்டபத்திலிருந்து வீரபாண்டியன் தப்பியதும், அவன் அடுத்தபடி கொட்டுந்தளத்தைக் கெட்டிப்படுத்தி நான் மலைநாடு செல்வதைத் தடுக்க முயல்வானென்று ஆராய்ந்து கூறியது என் அறிவு. அவனுக்கு முன் இதை நான் கைப்பற்றுவதுதான் முறையென்பதைச் சுட்டிக் காட்டியது எனது முன்னோக்கு. அதுபற்றி நான் கையாண்ட தந்திரம் மித்திர பேதம். மீதியை அது விளைவித்தது."

இதைச் சொல்லிய வீரரவி சற்றுப் புன்முறுவல் கொண்டான். "நான் சொன்னதில் மற்றதெல்லாம் புரிந்திருக்கும் உங்களுக்கு. ஆனால் புரியாதது ஒன்று, அதாவது என் தந்திரம் மித்திர பேதம் புரியவில்லை, உங்களுக்கு" என்ற வீரரவி "அதையும் பாருங்கள்", என்று தனது இரு கைகளையும் இலேசாகத் தட்டினான். உள்ளே



நுழைந்து தலை வணங்கிய இந்திரபானு, "மன்னவா! அடுத்து என்ன கட்டளை?" என்று வினவினான்.

வீரரவி இந்திரபானுவையும் பார்த்து, அவன் வரவால் அதிர்ச்சியடைந்து ஆசனத்தை விட்டு எழுந்து விட்ட இரு பெண்களையும் ஒரு விநாடி பார்த்தான். பிறகு, "இந்திர பானு! நாளைக் காலையில் நாம் இங்கிருந்து பயணமாகிறோம் சேர நாட்டுக்கு; இவர்களிருவருக்கும் வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்துப் பயணத்துக்குத் தயார் செய். முடிந்தால் இவர்களிடமுள்ள ஓலையை வாங்கி வா," என்று உத்தரவிட்டு வெளியே சென்றான். எத்தனை சாதாரணமாக வந்தானோ, அத்தனை சாதாரணமாக நிதானமாக வெளியே சென்றான்.

அவன் சென்றதும், இந்திரபானுவை மங்கையரிவரும் சுட்டுவிடுவதுபோல் பார்த்தனர். ஆனால் இந்திரபானுவின் முகத்தில் எந்தக் குழப்பமோ பயமோ இல்லை. அந்தப் பழைய விளையாட்டுக் குறியே இருந்தது. "உணவுக்கு நேரமாகிவிட்டது. சிறிது பால் வேண்டுமானால் வரவழைக்கட்டுமா? அருந்திவிட்டு நீங்கள் சயனிக்கலாம்." என்றான் இந்திரபானு.

அவன் குரலில் மாறுதலில்லை; கண்களில் கள்ளப் பார்வையில்லை. வீரபாண்டியனிடம் எத்தனை அடக்கமாக நடந்து கொண்டானோ, அத்தனை அடக்கமாக கடமையைச் செய்பவனாக, அவன் வீரரவியின் ஆதிக்கத்திலும் நடந்துகொண்டதைக் காண இரு மங்கையருக்கும் ஏற்பட்டது வியப்பா, எரிச்சலா? அவர்களுக்கே விளங்கவில்லை. ஆனால் ஆரம்பத் திகைப்பு நீங்கியதும் முத்துக் குமரியின் வாயிலிருந்து, "அட துரோகி!" என்ற சொற்கள் சீறி வந்தன.

அதை இந்திரபானு ஆட்சேபிக்கவில்லை. பதிலுக்குக் கடிந்து கொள்ளவுமில்லை. "பால்..." என்று மீண்டும் துவங்கினான்.

"உன் கையால் பால் அருந்துவதைவிட விஷம் அருந்துவேன்" என்றாள் முத்துக்குமரி மிகுந்த சீற்றத்துடன்.

"அது இங்கு சுலபத்தில் கிடைக்காது. எதற்கும் முயன்று பார்க்கிறேன்," என்று கூறி நகைத்துவிட்டு வெளியே சென்றான் இந்திரபானு.

முத்துக்குமரி இளநங்கையை நோக்கினாள். இளநங்கை கற்சிலையென நின்றிருந்தாள்.

### அத்தியாயம் 21

## முத்திரை மோதிரம்

சுந்தரபாண்டியன் மகளின் சுடுவிழி நோக்கையோ அவள் சுந்தர உதடுகள் உதிர்த்த சுடுசொற்களையோ சிறிதும் லட்சியம் செய்யாமலும் எள்ளி நகையாடியும் இந்திரபானு சென்றுவிட்டதும், அந்தப் பாண்டிய ராஜபுத்திரி மட்டுமின்றிக் கோட்டைக் காவலன் செல்வியும் கூட திகைப்பும் வியப்பும் ஒருங்கே இதயத்தைக் கவ்வ நின்றனர். இந்திரபானுவின் எதிர்பாராத விபரீதத் திருப்பத்துக்கு அவ்விரு பெண்களுக்கும் காரணம் ஏதும் புரியாததால், அவன் சென்ற பிறகும் அவ்விருவரும் பல விநாடிகள் பேசாமல் நின்ற இடத்திலேயே நின்றுவிட்டதால், அந்த விடுதியின் வாயிற் கதவை வீரனொருவன் சாத்தி வெளியில் தாளிட்டதைக்கூட அவர்கள் கவனிக்கும் நிலையில் இல்லை. பல விநாடிகளுக்குப் பிறகே ஓரளவு சுரணையை முதலில் வரவழைத்துக்கொண்ட இளநங்கை, முத்துக்குமரியின் மனோ வேதனையின் தன்மையையும் வேகத்தையும் புரிந்து கொண்டாளாதலால், அவளை அணுகி அவள் தோள்மீது கையை வைத்து, "முத்துக்குமரி இப்படி வா. மஞ்சத்தில் உட்கார்", என்று கூறி அணைத்து அழைத்துச் சென்று சற்றுத் தள்ளியிருந்த மஞ்சத்தில் உட்கார வைத்தாள். பிறகு வாயிலை நோக்கிச் சென்று கதவை உட்புறம் தாளிட்டு விட்டுத் தானும் இளவரசியின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள். தனது வலது கையை அவள் தோள்மீது செலுத்திக் கழுத்தைச் சுற்றி வளைத்து ஆதரவுடன் அணைக்கவும் செய்தாள்.

இளநங்கை காட்டும் பரிவுக்குக் காரணம் முத்துக் குமரிக்கு நன்றாகப் புரிந்தே இருந்தது. தன் மனத்தைத் தொட்ட இந்திரபானு பாண்டிய நாட்டுத் துரோகியாகத் திரும்பிவிட்டதால் தன் மனம் சுக்கு நூறாக உடைந்து கொண்டிருப்பதை இளநங்கை உணருவது பிரமாதமல்ல வென்பதை அவள் அறிந்துகொண்டிருந்தாலும், தன் எண்ணங்களை வாய்விட்டுச் சொல்லத் திராணியின்றி மௌனமே சாதித்தாள். இளநங்கையும் நொந்த அவள் மனத்தை மேலும் நோகச் செய்ய இஷ்டப்படாததால் இந்திரபானுவைப் பற்றியோ கொட்டுந்தள விவகாரங் களைப் பற்றியோ ஏதும் பேசாமல், "முத்துக்குமரி! அப்படியே சற்று நேரம் மஞ்சத்தில் படுத்துக் கொள். இரவின் மூன்றாம் ஜாமம் துவங்கிவிட்டது," என்று கூறினாள்.

முத்துக்குமரி அந்த உபசரணைக்கு உடனே பதில் சொல்லவில்லை. சற்றுப் பொறுத்துக் குனிந்த தலை நிமிராமலே கூறினாள். "இளநங்கை! எனக்கு உறக்கம் வர வில்லை." என்று.

இளநங்கை அவள் முதுகைத் தடவிக் கொடுத்தாள். பிறகு தைரியம் ததும்பிய குரலில், "முத்துக்குமரி! அரச மகளிர் தைரியத்தைக் கைவிடுவது விரும்பத்தக்கதல்ல. இங்கு நாம் எதிர்பார்த்து வந்தது அபாயத்தைத்தானே?" என்று வாதிக்கவும் முயன்றாள்.

அத்தனை ஆபத்திலும் இளநங்கை காட்டிய உறுதி, அரச மகளும் அச்சத்தை அதிகமாக அறியாதவளும், ஆபத்தை முன்னிட்டே தந்தையால் கொற்கை முத்தங்காடிக்கு அனுப்பப்பட்டவளுமான முத்துக் குமரியைப் பெரும் வியப்பிலாழ்த்தியபடியால் அவள் சொன்னாள், "இளநங்கை! நான் கைவிட்டது தைரியமல்ல," என்று.

"வேறென்ன முத்துக்குமரி?" என்று வினவினாள் இளநங்கை, இதயம் குழைந்ததால் குரலும் குழைய.



"மனம்." முத்துக்குமரியின் பதில் வேதனையுடன் வந்தது.

"மனமா?" தெரிந்தும் தெரியாததுபோல் கேட்டாள் இளநங்கை.

"தெரியாததுபோல் ஏன் பாசாங்கு செய்கிறாய்? காதலெனும் பித்தைப்பற்றி அகத்தியர் அருவிக்கருகில் நீ சொல்லவில்லையா?" இதையும் நிலத்தை நோக்கிய வண்ணமே கூறினாள் முத்துக்குமரி.

"பொதுப்படையாகச் சொன்னேன்", என்றாள் இளநங்கை.

"இல்லை, இல்லை. பொய் சொல்லாதே. புரிந்து தான் சொன்னாய்."

"சரி. அதற்கு இப்பொழுது என்ன செய்யவேண்டு மென்கிறாய்?"

"ஒன்றும் செய்யவேண்டாம். நீ படுத்துக்கொள். எனக்கு உறக்கம் வராது. உறக்கம் மனநிம்மதியில் வருவது, எனக்கு மனநிம்மதியில்லை.

"எனக்கு மட்டும் இருக்கிறதா?"

"உன் நிலை வேறு."

"என்ன வேறு?"

"உன் நிலை எதிரிகள் செய்யக்கூடிய தீங்கைப் பற்றியது., என் கவலை அதுவல்ல."

"வேறெது?"

"நமக்கு வேண்டியவர்கள் என்று நினைத்தவர்கள் செய்துள்ள தீங்கைப் பற்றியது." இதைச் சொன்ன முத்துக் குமரி மேலே பேசவில்லை.

இளநங்கை சில விநாடிகள் மௌனமாயிருந்தாள். பிறகு முத்துக்குமரியின் தோள்களைப் பிடித்துப் பலவந்த மாக மஞ்சத்தில் படுக்கவைத்துத் தானும் படுத்துக் கொண்டாள். இப்படி அக்கம்பக்கத்தில் படுத்துக் கிடந்த அவ்விருவர் எண்ணங்களும் கொற்கையிலிருந்து கொட்டுந் தளத்துக்கும், கொட்டுந் தளத்திலிருந்து கொற்கைக்குமாக

மாறிமாறி வட்டமிட்டு வியக்கத்தக்க விதம் வெகு துரிதமாகத் தொடர்ந்துவிட்ட நிகழ்ச்சிகளை அலசிக் கொண்டிருந்தன. அந்த அலசல் மேலும் மேலும் குழப்பத்தையே விளைவித்ததன்றித் தெளிவைச் சிறிதும் அவளுக்குக் காட்டவே இல்லை. மனம் அலசிய அந்த அலசலை முதன் முதலாகப் பகிரங்கமாகவும் அலசத் தொடங்கிய இளநங்கை, "முத்துக்குமரி?" என்று அழைத்துப் பக்கத்தில் படுத்திருந்த அந்தப் பாண்டியன் பைங்கிளியின் மீது கையை வைத்தாள்.

"ஏன் இளநங்கை!" அசையாமல் மல்லாந்து படுத்த படியே கேட்டாள் முத்துக்குமரி.

"எனக்குப் பல விஷயங்கள் புரியவில்லை, என்றாள் இளநங்கை.

உண்மையில் முத்துக்குமரிக்கும் பல விஷயங்கள் புரியவில்லைதான். இருப்பினும் தன் குழப்பத்தைக் காட்டிக் கொள்ளாமல் கேட்டாள் இளநங்கை, "உன் சிறிய தந்தை தானே நம்மை இங்கு அனுப்பினார்?" என்று.

"அதிலென்ன சந்தேகம்? புரியாததற்கு அதில் என்ன இருக்கிறது? உன்னிடம்தானே ஓலையைக் கொடுத்தார்?"

"ஆம். முத்துக்குமரி! ஆனால் அவர் ஓலை கொடுத்த போது கொட்டுந்தள நிலைமை தெரியாமலா கொடுத்திருப் பார்?" என்று வினவினாள் இளநங்கை.

"தெரிந்து நம்மை வீரரவியின் கைகளில் பிடித்துக் கொடுக்க ஏற்பாடு செய்திருப்பாரென்று எண்ணுகிறாயா?" முத்துக்குமரியின் இக் கேள்வியில் வெறுப்பு எழுந்தது.

அந்த வெறுப்பைக் கவனித்தும் லட்சியம் செய்ய வில்லை இளநங்கை. அவள் உள்ள நிலையைப் புரிந்து கொள்ள இஷ்டப்பட்டாள். "வீரரவி நமக்கு முன்னால் இங்கு வந்திருக்கக்கூடுமென்று அவருக்குத் தெரிந்திருக்க முடியாது. வீரரவியின் தோளில் கோடரி எறிந்த வீர பாண்டியர் என்னைத் தூக்கிக் கொண்டுவந்து பொருநைப் படிகளில் மறைந்த பிறகுதான் உன் முத்துக்கடைக்கு வந்திருக்கிறார். படுகாயப்பட்டு மாடித் தாழ்வாரத்திலிருந்து



மண்டபத்துக்குள் விழுந்த சேர மன்னன் நமக்கு முன்பு கொட்டுந்தளம் சேர்வானென்று அவர் ஊகித்திருக்க முடியாது. ஏனென்றால், கொற்கைக் கோட்டையைப் பிடிக்கவும், முத்தங்காடியைச் சூறையாடவும், தான் ஏற்பாடு செய்துவிட்டதாக அவரிடம் சேர மன்னனே சொன்னான். ஆகவே, அவர் பயணத்தை எதிர்பார்த்திருக்க மாட்டார் இளவரசர். ஆனால்..."

இளநங்கை சொல்லை முடிக்குமுன்பு முத்துக்குமரி குறுக்கிட்டு, "வேறு எதை எதிர்பார்க்கவேண்டும்?" என்று கேட்டாள்.

"கொட்டுந்தளம் பாண்டியர் வசமில்லையென்பதை எதிர்பார்த்திருக்க வேண்டும். அவர் கொற்கை வந்து பதினைந்து நாட்களுக்கு மேலாகிறது. ஒரு நாள் பயணத்தில் இருக்கும் கொட்டுந்தள நிலைமை மாறியிருந்தால் அவருக்குத் தெரிந்திருக்கவேண்டும். அக்கம்பக்கத்தில் ஏன் தங்கள் எல்லையில் நடக்கும் விவகாரங்களை அறிய ஒற்றர்கள்கூடவா இல்லை பாண்டிய நாட்டில்?" என்று வினவினாள் இளநங்கை.

பாண்டிய ஆட்சி முறையை இளநங்கை கடிந்து கொண்டதாகப்பட்டது முத்துக்குமரிக்கு. ஆகவே உஷ்ணத் துடன் பதில் சொன்னாள் அவள் "ஏன் இல்லை? ஒற்றர் கள் நிரம்ப இருக்கிறார்கள். அரசர் மகளான நானும், தம்பியான வீரபாண்டியரும்கூடக் கொற்கையில் வேவு பார்க்க வரவில்லையா?" என்று.

"ஆம், ஆம். வந்திருக்கிறீர்கள். நீங்கள் வேவுபார்த்த பயன் சேர மன்னனே நாடுவிட்டுக் கொற்கைக்கு வந்து அதைப் பிடிக்க ஏற்பாடு செய்கிறான். ஏற்கெனவே தன் நாட்டு எல்லையிலுள்ள கொட்டுந்தளத்தையும் பிடித்துக் கொள்கிறான். முக்கிய செய்தி கொண்டு வந்த நம்மையும் சிறை செய்கிறான். இதெல்லாம் விசித்திரமாயில்லை?"

"ஆம், ஆம்!"

"அது மட்டுமல்ல. இங்கில்லாத படைத் தலைவனுக்கு ஓலை தருகிறார் இளவரசர், உயிர்

நண்பரென்று. இல்லை இல்லை, அவர் என்ன சொன்னார், 'என் ஆயுதம், அம்பு' என்று சொன்னாரல்லவா? அந்த ஆயுதம் எதிரியின் ஆயுதமாகிறது. இது..."

"விசித்திரமானதுதான்."

"அது மட்டுமல்ல முத்துக்குமரி! அகத்தியர் குடிலுக்கும் கொட்டுந்தளத்துக்கும் இடையே உள்ள தூரம் அதிக மில்லையானாலும், ஆபத்து அதிகமென்று கூறி நம்மை அங்கு தங்க வைத்துச் சென்ற இளவரசரின் உயிர் நண்பர் உண்மையில் கொட்டுந்தள நிலைமையை எப்பொழுது அறிந்தார்? அப்பொழுது அறிந்திருக்க முடியாது. கொற்கையில் இளவரசரே அறியாததை அங்கிருந்த இவர் மட்டும் எப்படி அறிவார்? இல்லை, இங்கு வந்தபின் அறிந்திருக்கிறார், அறிந்ததும் உடனே ஒருவர் மாறிவிட முடியுமா?"

இதைக் கேட்ட முத்துக்குமரி மஞ்சத்தில் எழுந்து உட்கார்ந்து சந்தேகப் பார்வையொன்றை இளநங்கைமீது வீசினாள். "இருப்பினும் மாறியிருப்பதை நாமே பார்க்கிறோமே," என்றாள் அந்தச் சந்தேகம் குரலிலும் தொனிக்க.

இளநங்கையின் கண்கள் முத்துக்குமரியின் கண்களைச் சந்தித்தன. "நாம் பார்ப்பதெல்லாம், நேரில் கேட்பதெல்லாம் உண்மைதானா?" என்று சொற்களையும் உதிர்த்தாள்.

"இதில் நாம் அறியாதது ஏதோ இருக்கிறது என்று நினைக்கிறாயா இளநங்கை? ஒருவேளை இந்திரபானு சந்தர்ப்பத்தை முன்னிட்டு மாறியதாக நடிக்கிறாரா?" என்று கேட்டாள் முத்துக்குமரி. அவள் சொற்களில் நம்பிக்கை ஒலித்தது.

"நடிக்கலாம். நடிக்காமலுமிருக்கலாம். ஆனால் இளவரசரையும் மீறிய நிகழ்ச்சிகள் கொற்கையிலும் கொட்டுந்தளத்திலும் ஏற்பட்டிருக்கின்றன என்பது மட்டும் நிச்சயம்," என்று கூறிய இளநங்கை, மஞ்சத்திலிருந்து எழுந்து சென்று அறை மூலையில் எரிந்து கொண்டிருந்த விளக்கைச் சிறிது இறியவைத்துவிட்டுப் படுத்துக் கொண்டாள். முதல்



யாமமும் முடியும் சமயம் நெருங்கிக் கொண்டிருந்தது. வெளியே காவல்காரர்கள் நடமாட்டமும், சற்றுத் தூரத்தில் பாறைகளில் துள்ளி ஓடிய பொருநையின் இரைச்சலும் மட்டும் கேட்டுக்கொண்டிருந்தன. அவர்கள் தங்கியிருந்த விடுதிக்குப் பின்புறத்தில் பெரிதாகக் கிளம்பியிருந்த மலைச் சரிவுக் காடுகூட அமைதியாயிருந்தது. அவ்விருவர் மனம் மட்டுமே அமைதியாயில்லை.

இருவரும் அக்கம்பக்கத்தில் மௌனமாகப் படுத்துக் கிடந்தனர். எப்படியும் காலையில் பயணம் துவங்குமென்பதையும், தாங்கள் பொதியமலையின் காட்டுப் பாதையில் சேரநாடு கடத்தப்படுவது திண்ணமென்பதையும் எண்ணமிட்டு, எண்ணமிட்டு வேதனைப்பட்டுக்கொண்டே மெள்ள நகரும் நேரத்தை எண்ணிக்கொண்டிருந்தனர்.

திடீரென்று இளநங்கை கேட்டாள், "முத்துக்குமரி! என்னிடம் உன் சிறிய தந்தை கொடுத்த ஓலையிருக்கிறதல்லவா!" என்று.

"ஆமாம்," என்றாள் முத்துக்குமரி, இதை எதற்காகக் கேட்கிறாள் இளநங்கை என்பது புரியாமல்.

"அதை வாங்கிவரச் சேரமன்னன் இந்திரபானுவுக்கு உத்தரவிட்டதைக் கவனித்தாயா?"

"கவனித்தேன்."

"முடிந்தால் வாங்கி வா என்றான் சேரமன்னன்."

"ஆமாம்."

"இந்திரபானுவும் என்னிடம் ஓலையைக் கேட்கவில்லை."

"ஆம்."

"இருவருக்கும் ஓலையில் சிரத்தையிருப்பதாகத் தெரியவில்லை."

"ஆமாம்."

"இளநங்கை மீண்டும் மௌனம் சாதித்தாள். பிறகு சட்டென்று முத்துக்குமரியைப் பலவந்தமாகப் படுக்க வைத்து, "சற்று இரு," என்று ரகசியமாகச் சொன்னாள்.

தாங்களிருவரும் தனித்திருந்த அந்த நேரத்தில் ரகசி மென்ன வேண்டிருக்கிறது என்று சினந்து கொண்ட முத்து குமரியை அசக்கிய இளநங்கை, "முத்துக்குமரி! உற்று கேள்," என்றாள்.

முத்துக்குமரி உற்றுக் கேட்டாள். பின்னே இருந் மலைச்சரிவில் காட்டுப் பாதையில் கேட்பது போல குதிரைக் குளம்படி ஒலி 'டக்டக்' என்று ஒரே சீராக கேட்டது. இருமங்கையரும் ஒருவரையொருவர் பார்த்து கொண்டு உற்றுக் கேட்டனர். அந்தக் குளம்படி ஒலி அவர்கள் விடுதிக்குப் பின்புறமிருந்த சாளரத்தருகில் வந்ததும் நின்றது. பிறகு சாளரம் மெல்ல இருமுறை தட்டப் பட்டது. இளநங்கை ஒரு கணம் மௌனம் சாதித்தாள் மீண்டும் சாளரம் மெல்லத் தட்டப்பட்டது. இம்முறை சற்றுத்தைரியத்துடன் சாளரத்தை அரைவாசி திறந்த இள நங்கையின் காதில், "அந்த ஓலையைக் கொடுங்கள்," என்ற சொற்கள் விழுந்தன.

அந்தச் சொற்களைக் கேட்பது யாரானாலும் சாளரத்தின் பின்புறத்தில் மறைந்து நின்றதால் கண்ணுக்கு புலப்படவில்லை. ஆகவே இளநங்கை கேட்டாள், "யார் நீங்கள்?" என்று.

பதிலுக்கு ஒரு கை மட்டும் உள்ளே வந்தது. அதன் கையில் ராஜமுத்திரை பொறித்த ஒரு மோதிரம் பளபளத் தது. "நேரமில்லை! ஓலையைக் கொடுங்கள்," என்றது மறைந்து நின்ற உருவம்.

ராஜமுத்திரைக்குப் பணிந்தாள் இளநங்கை. மடியி லிருந்த ஓலைச்சுருளை எடுத்துக் கொடுத்தாள். அதை வாங்கிய கரம் ஒருவிநாடி மறைந்தது. பதிலுக்கு வேறொரு ஓலைச்சுருளைச் சாளரத்தின் மூலம் உள்ளே எறிந்தது பிறகு சாளரம் சாத்தப்பட்டது. 'டக்டக்' என்ற புரவிக் குளம்படிகளிலிருந்து, வந்த மனிதன் மலைச்சரிவில் ஏறிச் செல்வதை உணர்ந்தாள் இளநங்கை.

## அத்தியாயம் 22

# வேறு பாதை

மூன்றாம் ஜாமத்தில் முத்திரை மோதிரம் தரித்த அந்தக் கரம் முழு வேகத்துடன் உள்ளே ஓலையொன்றை வீசி எறிந்துவிட்டுச் சாளரத்தையும் மூடிவிட்டுச் சென்றதும், ஓலையை எடுத்ததுக்கொண்ட இளநங்கை உடனடியாக அந்த ஓலையைப் பிரித்துப் படிக்காமல் கன வேகத்துடன் மீண்டும் சாளரக் கதவைத் திறந்து வெளியே கண்களை ஓட்டி, அத்தனை மர்மமாக வந்து சென்றது யாரென்பதை அறிய முயன்றாள். அவள் காட்டிய ஆர்வத்தையும் பரபரப்பையும் முத்துக்குமரியும் காட்டி, அவள் தோளுடன் தனது முக வாய்க்கட்டையை இணைத்துக் கன்னத்துடன் கன்னமிழைத்து வெளியே நோக்கினாள். இருப்பினும் இருவரும் ஏதும் கண்டறிய இயலாது போயிற்று.

கிருஷ்ணபட்சத்து மூன்றாம் ஜாம சந்திரன் பொதிய மலைப் பிராந்தியமெங்கும் பேரொளி பரப்பிக்கொண்டிருந் தானானாலும், கொட்டுந்தளத்தின் அமைப்பின் காரணமாக அவன் எல்லா இடங்களிலும் தனது அரசைச் செலுத்துவது சாத்தியமில்லாது போகவே, அந்தப் பீடபூமியில் சில இடங்களில் அதிக வெளிச்சமும் சில இடங்களில் அதிக இருட்டுமே நிலவி, நல்லதும் பொல்லாததும் கலந்த மனித வாழ்க்கை போலிருந்தது அந்த மலைச்சமவெளிப்பகுதி. மலைச்சரிவுகளில் அடர்த்தியான காடுகளிருந்ததால் அங்கெல்லாம் இருட்டியிருந்தது. இடையே இயற்கை விட்டுக் கொடுத்த தாலும், மனித செயற்கை வெட்டி வீழ்த்தியதாலும் மரங்களேதுமில்லாத காரணத்தால் நல்ல வெளிச்ச மிருந்தது. அந்தப் பீடபூமியின் விடுதிகள் பெரும் பாலும்

மலைச்சரிவுகளிலேயே கட்டப்பட்டிருந்ததால் விடுதிகளுக்கு முன்பக்கம் வெளிச்சமும் பின்பக்கம் பெரும் இருட்டுமிருந்தது. அத்தகைய பின்புறப் பகுதியை நோக்கி இளநங்கையின் திறந்த சாளரமும் இருந்ததால், அவளாலோ அவள் தோளில் முகத்தைத் தாங்கி நின்ற முத்துக்குமரி யாலோ எதையும் சரியாகக் காணமுடியவில்லை.

சாளரம் திறந்த பகுதியில் காட்டு மரங்கள் மிக அடர்த்தியாக வானத்தை அளாவி நின்றமையால் கொட்டுந்தளத்தின் அந்தப் பகுதியை அவை நிலவிலிருந்து குடை பிடித்துத் தடுத்துவிட்டதன் காரணமாக இருட்டே அங்கு அதிகமாயிருந்தது. அந்த மரங்களின் இலைகளின் இடுக்குகளில் நுழைந்து அடிப்பகுதியின் ஒவ்வோரிடங்களில் சிறுசிறு வெள்ளி நாணயங்களாக விழுந்திருந்த நிலவுத் திட்டுக்கள்கூட அந்த இருநங்கையரின் பார்வைக்கு எந்த வித உதவியும் செய்ய இயலவில்லை. கண் எனும் இந்திரியத்தின் உபயோகமற்ற தன்மையை அவ்விருவருமே அந்தச் சில நிமிடங்களில் உணர்ந்து கொண்டார்கள். செவி மட்டுமே அவர்களுக்கு உதவியது. 'டக்டக்' என்று ஓரே சீராகப் பின்னாலிருந்த மலைச்சரிவுக் காட்டில் ஏறிக் கொண்டிருந்த புரவியின் குளம்பொலி மட்டும் அவர்களுக்குத் திட்டமாகக் கேட்டது.

நீண்ட நேரமாக அந்த ஒலியைக் கேட்டுக்கொண்டே சாளரத்தருகில் இருவரும் நின்றிருந்தார்கள். அந்தக் குளம்பொலிகளிலிருந்து அந்தப் புரவி வளைந்து வளைந்து செல்வதும், சிக்கலான இடங்களில் சற்று நின்று விடுவதும்கூட அவர்களால் நன்றாக உணரமுடிந்தது. அந்தப் பகுதியிலிருந்த இருட்டையும், அடர்ந்த மரங்களையும், பாறைகள் குத்துக் குத்தாக இருந்த மலைச்சரிவையும் சிறிதளவு அவர்களால் பார்க்க முடிந்ததன் காரணமாக அத்தகைய பிராந்தியத்தில் புரவிமீது செல்லக் கூடியவன் சாதாரண வீரனாயிருக்க முடியாதென்றும், சதா அந்த மலைப்பகுதியில் பயணம் செய்து பழகியவனாயிருக்க வேண்டுமென்றும் அவ்விருவரும் தீர்மானித்த படியால், அவன் யாரென்றும்



அறியக் கண்களால் முடியாதபடியால் சித்தத்தால் முயன்று பார்க்க முற்பட்டனர்.

அத்தகைய சிந்தனையிலாழ்ந்த இளநங்கை ஏதேதோ சிந்தித்தும் ஒரு முடிவுக்கு வரமுடியாததால், "முத்துக்குமரி! உன்முகத்தை என் தோளிலிருந்து எடு, சாளரத்தைச் சாத்துகிறேன்," என்று சொல்லிக்கொண்டே, ஆதரவுடன் அவள் முகவாய்க் கட்டையைத் தன்கையால் அகற்றி விட்டுச் சாளரத்தை மீண்டும் நன்றாகத் தாளிட்டாள்.

பிறகு அந்த வீரனெறிந்த ஓலையை எடுத்துக் கொண்டு விளக்கடிக்காகச் சென்று இழிந்திருந்த விளக்கை மீண்டும் தூண்டிவிட்டு ஓலையைப் பிரித்துக் கண்களை அதில் ஓட்டினாள். முத்துக்குமரியின் அழகிய விழிகளும் ஓலையை ஆராய்ந்தன. நான்கே வரிகள் தானிருந்தன.

'நாளைக்கு நீங்கள் சேரநாடு செல்ல அவசியமிருக்காது. ஆகவே தைரியமாயிருங்கள். எந்தக் காரணத்தை முன்னிட்டும் தப்ப முயலாதீர்கள். அதற்காக யார் உதவியையும் நாடாதீர்கள். படித்தவுடன் இதை எரித்துவிடுங்கள்.'

இவ்வளவுதான் ஓலையிலிருந்தது. அடியில் ராஜ முத்திரை பொறிக்கப்பட்டிருந்தது. கையொப்பம், ஊர் பெயர் எதுவுமே இல்லை.

அச் சிறுவோலையை இரண்டு மூன்று முறைகள் திரும்பத் திரும்பப் படித்த இளநங்கை முத்துக்குமரியை ஏறிட்டு நோக்கிவிட்டுக் கேட்டாள், "முத்துக்குமரி! இதை யார் எழுதியிருக்க முடியும்? கையெழுத்திலிருந்து உனக்கு ஏதாவது தெரிகிறதா?"

முத்துக்குமரி குழப்பம் நிறைந்த கண்களை இளநங்கையை நோக்கி உயர்த்தி, "எனக்கு மட்டும் எப்படித் தெரியும்? உன்னைப் போல்தானே நானும்?" என்று பதில் கூறினாள்.

"இல்லை முத்துக்குமரி. எனக்கும் உனக்கும் வித்தியாசம் உண்டு. நீ பாண்டியத் தலைநகரில் இருந்தவள்." என்று இழுத்தாள் இளநங்கை.

"தலைநகரில் இருந்தாலென்ன?" என்று வினவினாள் முத்துக்குமரி.

"உன் தந்தை, சிறிய தந்தை இவர்கள் கையெழுத்து உனக்குத் தெரியுமல்லவா?" என்று கேட்டான் இளநங்கை.

"அவர்கள் கையெழுத்து மட்டுமென்ன? அரண்மனையின் ஓலையெழுதுவோர் குறிப்புகளைக் கூடப் பார்த்திருக்கிறேன். மிகவும் அந்தரங்கமான ஓலைகள் சிலவற்றை நானும் எழுதியதுண்டு," என்று கூறிய முத்துக்குமரி, "இதோ பார்," என்று தன் வலது கைக் கட்டை விரலையும் ஆள்காட்டி விரலையும் இளநங்கையின் கண்களுக்கு முன்பாக நீட்டினாள்.

அடிக்கடி எழுத்தாணியைப் பிடித்ததால் சற்றே காய்த்துப் போயிருந்த அந்த இரு விரல்களின் நுனிகளைப் பார்த்துத் தலையசைத்த இளநங்கை, "அப்படியானால் இந்த ஓலையிலுள்ள எழுந்து யார் எழுதியதென்று தெரியவில்லையா உனக்கு?" என்று வினவினான்.

முத்துக்குமரி மீண்டும் ஓலையை ஊன்றிக் கவனித்தாள். பிறகு, தெரியவில்லை, என்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தாள். அப்பொழுதும் திருப்தியடையாத இளநங்கை, "இது உன் சிறிய தந்தையின் கையெழுத்து இல்லையே?" என்று வினவினான்.

"இல்லை, அவர் எழுத்துப் பெரியதாயிருக்கும். உறுதியாகவும் இல்லை. ஓலையில் எழுத்தாணி பலமாகப் புதைந்திருக்கும். அதோ அந்தக் கீறல்கள் இருக்காது," என்று ஓலையில் இடையே எழுத்தாணி கீறியிருந்த இரண்டு இடங்களைச் சுட்டிக் காட்டினாள் முத்துக்குமரி.

"சரி. உன் தந்தையின் கையெழுத்தாயிருக்குமா?"

"இருக்காது. அவர் எப்பொழுதாவது எழுதுவார். அதுவும் அவசரமாக எழுதுவார். எந்த எழுத்தும் நேராக இருக்காது. அவரே சொல்வார், 'எழுத்தாணிக்கும் எனக்கும் ராசி இல்லை. வாளுக்கும் எனக்கும்தான் ராசி என்று."



இளநங்கை ஒரு முடிவுக்கு வந்தவன் போல் முத்துக்குமரியைப் பார்த்தான். "முத்துக்குமரி! இப்பொழுது புரிந்து விட்டது எனக்கு," என்று சொல்லவும் செய்தான்.

"என்ன புரிந்து விட்டது?" ஆவலுடன் கேட்டாள் முத்துக்குமாரி.

"இந்த ஓலையிலுள்ளது..."

"உம்..."

"அவர் கையெழுத்து."

"எவர் கையெழுத்து!"

"உன்னுடையவர் கையெழுத்து."

முத்துக்குமரியின் முத்து விழிகள் அந்தச் சிறு விளக்கிலும் பளபளத்தன. "என்ன உண்மையாகவா?" என்று வினவினாள், குரலில் அன்பு பெருக.

"ஆமாம்," என்று திட்டமாகக் கூறினான் இளநங்கை. "வேறு யாரும் இருக்கமுடியாது முத்துக்குமரி. நம் நலனில் அக்கறையுள்ளவர்கள் உன் தந்தை, சிறிய தந்தை, இந்திர பானு இம்மூவர். இம் மூவரில் இருவர் கையெழுத்தல்ல ஓலையில் கண்டது. ஆகவே இது இந்திரபானுவின் எழுத்துத்தான்..." என்று சொல்லிக்கொண்டு போன இளநங்கையை முத்துக்குமரி இடைமறிக்க முயன்றாள். "இரு இரு! குறுக்கிடாதே. துரோகியான இந்திரபானு இதை எப்படி எழுதியிருக்க முடியும் என்று நினைக்கிறாய். அவர் துரோகியல்லவென்று நினைக்கிறேன். ஏதோ சந்தர்ப்பத்தை முன்னிட்டுத் துரோகியாக நடிக்கிறார். அவர் கையிலிருந்த முத்திரை மோதிரம், ஒன்று அரசுக்குச் சொந்தம். அல்லது சிற்றரசருக்குச் சொந்தம். மூன்றாமவரிடத்தில் இத்தகைய மோதிரம் இருப்பது அசாத்தியம். அப்படியிருக்குமானால் அவ்விருவரில் ஒருவர் கொடுத்திருக்கவேண்டும். இளவரசரே கொற்கையில் என்னிடம் சொன்னார் இத்தகைய ராஜமுத்திரை முக்கியமான தளபதிகளுக்கு அனுப்பப்பட்டிருப்பதாக. இங்கு இந்திர பானுவைத் தவிர இளவரசருக்கு அந்தரங்கத் தளபதி யாரிருக்கிறார்கள்?" என்றான் இளநங்கை.

இளநங்கையின் பேச்சு முத்துக்குமரியின் மனதில் பாலெனப் பாய்ந்தது. 'எப்படியாவது இந்திரபானு துரோகியாயிருக்கக் கூடாது' என்றே விரும்பினாள், பாண்டியகுமாரி. இளநங்கை காட்டிய காரணங்கள் சரியாக இருக்குமென்றே பட்டது அவளுக்கு. இருப்பினும் சந்தேகத்துடன் கேட்டாள், "இளநங்கை! அப்படியானால் அவர் நம்மிடம் பேசிய முறை, நடந்து கொண்ட முறை எதுவுமே சரியாயில்லையே?" என்று.

"வீரரவியின் கண்கள் அங்கிருக்குமென்று அவர் எச்சரிக்கையாயிருந்திருக்கலாம்," என்றாள் இளநங்கை.

"சரி! இப்பொழுது சாளரம் வரை வந்தவர் தன் முகத்தைக்காட்டி இந்த ஓலையைக் கேட்டிருக்கலாமே? எச்சரிக்கையாயிருக்கும்படி ஜாடை காட்டினால் நாம் வாயைத் திறக்கவா போகிறோம்?" என்று வினவினாள் முத்துக்குமரி.

அந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல இயலவில்லை இளநங்கையால். ஆனால் அவள் மனம் மட்டும் சொல்லிற்று, இந்திரபானு குற்றவாளியல்லவென்று. ஆனால் திடுதிப்பென்று வீரரவி இந்திரபானுவை நம்புவ தெப்படி யென்பதும் வியப்பாயிருந்தது கோட்டைக் காவலன் மகளுக்கு. அதனால் அவள் மௌனமே சாதித்தாள். "எதற்கும் காலை நேரம் விடை தரும்." என்று மட்டும் கூறிவிட்டு ஓலையில் கண்டபடி அதை விளக்கின் சுடரில் எரித்தாள்.

எரித்த சாம்பலை நன்றாகக் கையில் வைத்துப் பொடி செய்து விளக்கின் எண்ணெயில் கலந்து உருத்தெரியாமலும் அடித்தாள். பிறகு முத்துக்குமரியை அழைத்துக்கொண்டு மஞ்சத்தில் படுத்தாள். எத்தனை ஆபத்தாயிருந்தாலும் அலுப்பு விளைவிக்கும் உறக்கம் அந்த இருவரையும் ஆட்கொண்டது. விடிந்தது தெரியாமல் இருவரும் உறங்கினார்கள்.

கொட்டுந்தளத்தின் உதயகாலம் வெகு இன்பமா யிருந்தது. இரவின் துஷ்ட மிருகங்களின் உறுமல்கள்



மறைந்து, காட்டுப் பட்சிகளின் இன்ப ஒலிகள் அந்தப் பீடபூமிப் பிரதேசத்தை ஆட்கொண்டன. வெளியே ஏற்பட்டுக் கொண்டிருந்த அதிகப்படி மனித அரவம் பொருநையின் இராக்கால ஓசையை சிறிதே மந்தமாக்கி யிருந்ததால் அதன் ஓட்டம் கூட இன்பச் சுருதி கூட்டியது. இத்தனை இன்ப ஜாலங்களும் அசைக்க முடியாத அந்த இரு மங்கையரின் உறக்கத்தை, வாயிற்கதவில் ஏற்பட்ட இரண்டு தட்டல்கள் அசைக்கவே இளநங்கை முதலில் சாளரங்களைத் திறந்து விட்டுப் பிறகு வாயில் கதவையும் திறந்தாள்.

வாயிற்படியில் தயாராக நின்ற இரண்டு பணிப்பெண் கள் இளநங்கைக்கும், முத்துக்குமரிக்கும் தலை தாழ்த்தினர். அவர்கள் இருவர் கைகளிலும் சகோட யாழும், மகர யாழும் இருந்ததைக் கண்டு வியந்த இளநங்கை, அவர்கள் மீது வியப்பு விரிந்த தனது விழிகளை ஓட விட்டாள். "மன்னிக்க வேண்டும். உங்களிருவரையெழுப்ப உதயராகங்களை இசைத்துப் பார்த்தோம். நீங்கள் துயிலெழாதிருக்கவே கதவைத் தட்டினோம்," என்று ஒரு பணிப்பெண் சொல்ல இன்னொருத்தி அதை ஆமோதித்துத் தலையை மட்டும் ஆட்டினாள்.

இளநங்கைக்கு அதுமட்டும் விந்தையாயில்லை. அந்த முதற்படியிலிருந்து அடுத்தடுத்து நடந்த எல்லா அலுவல் களும் விந்தையாகவே இருந்தன. அரச மகளிருக்கு நடக்க வேண்டிய அத்தனை உபசரணைகளும் நடந்தன. அன்று காலைப் பொழுது பூராவும் வந்த இருபணி மக்களும் மஞ்சங்களைத் தட்டினார்கள், அறைகளைச் சுத்தம் செய்தார்கள். நீராட்டத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்கள். புதுப்புதுப் பட்டாடைகளையும் கொண்டு வந்திருந்தார்கள். ஸ்நானத்துக்கு இரண்டு வீரர்களை விட்டுப் பொருநை நீரை அண்டாக்களில் நிரப்பச் சொன்னதும், அவற்றில் வாசனைக் கலவைகளைத் தெளித்த பணிமகளில் ஒருத்தி, "தேவி! உன்னே நீராட்டத் துக்கு எல்லாம் சித்தம், வருகிறீர்களா?" என்றாள்.

இன்னொருத்தி இளநங்கையையும் முத்துக்குமரியையும் அந்த விடுதியின் பின்புறமிருந்த நீராட்ட அறையில் நீராடச் செய்து, பொன் தட்டுகளில் பழங்களும் ஒட்டக் காய்ச்சிய ஆவின் பாலும் பரிமாறினாள். பிறகு அவர்கள் இருமங்கையர்களின் குழல்களையும் காற்றில் உலர்த்தி, சிக்கெடுத்து வாசனைத் தைலம் தடவி வாரியும் விட்டார்கள்.

முத்துக்குமரி அரண்மனையிலிருந்தால் எத்தனை ராஜோபசாரம் நடக்குமோ, அத்தனை உபசாரம் அவளுக்கு மட்டுமன்றி, அந்த உபசரணைகளை அதிகமாக அனுபவித்தறியாத இளநங்கைக்கும் நடந்தது. இருமங்கையரும் முதலில் இந்த உபசரணைகளை ஏற்க மறுத்தாலும் பணிமகளிருவரும் அவர்கள் முன்பு தலைவணங்கி, "நீங்கள் மறுத்தால் எங்கள் தலை போய்விடும்," என்று பயத்துடன் கூறியதால், அவர்கள் இஷ்டப்படியெல்லாம் அந்த இருமங்கையரும் ஆடவேண்டியதாயிற்று.

இப்படி நீராட்டம், காலை உணவு முதலியன முடிந்த சிறிது நேரத்திற்கெல்லாம் இரண்டு சிவிகைகள் வாயிலில் வந்து நின்றன. அந்தச் சிவிகைகள் வந்ததும், உள்ளே நுழைந்த இந்திரபானு இளநங்கையை நோக்கி, "அம்மா! சிவிகைகள் வந்து விட்டன கிளம்புங்கள்," என்றான்.

"எங்கு?" என்று வினவினாள் இளநங்கை.

முத்துக்குமரி வாய்விட்டு ஏதும் கேட்கவில்லை. ஆனால் அவனை நோக்கிய அவள் கண்கள் மட்டும் பல கேள்விகளைக் கேட்டன. அவற்றுக்கெல்லாம் அவன் விடை சொல்லவில்லையே தவிர ஒன்றுமட்டும் சொன்னான். "உங்களைச் சேர நாடு அழைத்துச் செல்ல சேர மன்னர் உத்தரவிட்டிருக்கிறார். அங்குதான் அழைத்துச் செல்கிறேன். இதை நேற்றிரவே உங்களுக்குத் தெரிவித்தேனல்லவா!" என்று சற்று இரைந்தும் கடுமையுடனும் கூறினான்.

முத்துக்குமரி அவனை எரித்து விடுபவள் போல் பார்த்தாள். அதைக் கண்ட அவன் இதழ்களில் இகழ்ச்சி



கை விரிந்தது. "நான் பாண்டியர் பக்கமிருந்து சேரர் பக்கம் மாறிவிட்ட துரோகியென்று நீங்கள் கருதினால் அதில் தவறில்லை அரச குமாரி. ராஜதந்திரம், அரசியல் அவசியம். இவை இரண்டும் இத்தகைய புரட்டுக்களை அனுமதிக் றது. பாண்டியர்கள் சிங்களத்தில் விளைவித்திருக்கும் மைகளைப் பற்றிய வரலாற்றை நீங்கள் உணர்ந் இருந்தால்— நீங்களென்ன, வீரபாண்டியனாவது உணர்ந் இருந்தால்— சிங்களத்தின் வட எல்லையை ஆள்பவன் பரம விரோதிகளான பாண்டியர்களின் நண்பனாயிருக்க முடியாதென்று தெளிவுற்றிருக்கலாம். அத்தனை தெளிவு வீரபாண்டியனுக்கு இருந்திருந்தால் நீங்கள் இன்று என் கையில் சிக்கியிருக்க மாட்டீர்கள்" என்று சீறிவிட்டு, "இப்படி வா," என்று வெளியிலிருந்த காவலர்கள் இருவரை விளித்து. "இவர்கள் கூடைகளையும், பைகளையும் எடுத்துக் கொள்ளுங்கள்" என்றான்.

இரு வீரர்கள் பைகளையும் கூடைகளையும் எடுத்துக் கொள்ள, வேறு வழியின்றி வாயிலில் தயாராயிருந்த சிவிகைகளில் இளநங்கையும், முத்துக்குமரியும் ஏறவே, சிவிகைகள் மலைப்பாதையை நோக்கிப் புறப்பட்டன. அந்தச் சிவிகைகள் சென்றதைச் சற்று தூரத்திலிருந்து பார்த்த வீரரவி பெரு மகிழ்ச்சியடைந்தது மட்டுமல்ல, சிவிகைகளை அனுப்பிவிட்டுத் தன்னை அணுகி வந்த இந்திரபானுவை நோக்கி, "இந்திரபானு! இனிச் சேர நாட்டில் மன்னனுக்கும் அடுத்தபடி ஒருவன் உண்டென் றால் அவன் நீதான். உன் தன்னலமற்ற சேவையை நான் பாராட்டுகிறேன்," என்று கூறி, மிகுந்த குதூகலத்துடன் அவன் முதுகில் தட்டியும் கொடுத்தான்.

வீரரவியின் இதயத்தில் எத்தனை மகிழ்ச்சி இருந்ததோ, அத்தனை வேதனையுடன் சேரநாடு பயணப் பட்ட இரு மங்கையரும் தனித்தனிச் சிவிகைகளில் இருந்தபடியால் சிற்சில சமயங்களில் சிவிகைகளின் திரைகளை விலக்கி எட்டிப் பார்த்துக்கொள்ள முடிந்தாலும், பரஸ்பரம் பேசும் வசதி சிறிதும்

இல்லாததால், மௌனத்துடன் இதயத்தில் பற்பல எண்ணங்கள் அலைமோதவும் சென்று கொண்டிருந்தார்கள்.

சிவிகைகளைத் தூக்கிவந்த ஆட்களுக்கிடையே ஹூங்காரச் சப்தங்களைத் தவிர வேறெந்தச் சப்தமும் காதில் விழாததால் அந்த ஹூங்காரங்கள் தங்கள் மனத் துன்பங்களையே பிரதிபலிப்பதாக அந்த இரு மங்கையரும் எண்ணினார்கள். சுமார் ஒரு ஜாமம் இப்படிக் காடடர்ந்த மலைப்பாதையில் மேற்கு நோக்கிப் பயணம் நடந்ததும், சட்டென்று சிவிகையாட்கள் சிவிகைகளைக் கீழே வைத்துச் சிறிது சிரமபரிகாரம் செய்து கொள்ளவே, இரு மங்கையரும் சிவிகைகளிலிருந்து கீழே இறங்கிச் சுற்றுமுற்றும் பார்த்தார்கள். இருவர் பார்வையிலும் வியப்பு விரிந்தது. முத்துக்குமரி வியப்புடன் சந்தேகமும் கலந்த குரலில், "இது..." என்று துவங்கினாள்.

"சேரநாட்டுப் பாதையல்ல. வேறு பாதை," என்று முடித்தாள் இளநங்கை.

அத்தியாயம் 23

# காட்டுக் கோட்டை அதிசயம்

பொதியமலைக் கூட்டத்துக்கிடையேயிருந்த குறுகிய பாதையில் சிவிகைகளிரண்டும் இறக்கப்பட்டவுடன், அவற்றிலிருந்து வெளிப்போந்த இளநங்கையும் முத்துக் குமரியும் கண்ணுக்கெட்டிய தூரம் வரை பரந்து கிடந்த மலைகளையும் வனாந்தரங்களையும் பார்த்துப் பிரமித்தனர். மலையுச்சிகள் தெரிந்தன. மலைகள் மீது ஏதோ இரண்டோர் இடங்களில், படுத்திருக்கும் பெரும் பாம்புகள் போல் வளைந்து கிடந்த பாதைகளைத் தவிர வேறு பயண மார்க்கங்கள் எதுவும் காணப்படவில்லை.

அடர்த்தியான காடுகள் எங்குமிருந்தாலும், பகல் நேரமாதலால் துஷ்டமிருகங்களின் அரவமேதும் காதில் விழவில்லை. இருப்பினும் வழிநெடுக அபாயமிருப்பது மட்டும் நிச்சயமென்பதற்கு நிரம்ப அறிகுறிகள் இருந்தன. சிவிகைகள் இறக்கப்பட்ட இடத்திலிருந்து சற்றுத் தூரத்தில் தெரிந்த ஒரு பாதையில் தொங்கிக் கிடந்த காட்டாட்டு எலும்புக்கூடு ஒன்று துஷ்ட மிருகங்களின் அருகாமையைச் சுட்டிக் காட்டியது. சிவிகையிலிருந்து சற்றுத் தள்ளி, பாதைக்கருகிலிருந்த பொடியான கூழாங்கற்கள் அகன்றிருந்த மாதிரியிலிருந்து அங்கு பெரும் புலியொன்று அடியெடுத்து வைத்திருக்கிறதென்பதும் சந்தேகமறத் தெரிந்தது. சுற்றுப் புறமிருந்த நிலைமையைக் கண்டதுமே, தாங்கள் செல்லும் பாதை சாதாரண மனித சஞ்சாரத்துக்காக ஏற்பட்ட பாதையல்லவென்பதை உணர்ந்து கொண்டாள் இளநங்கை. அத்தகைய உணர்வின் விளைவாக மீண்டும் தன் கண்களை ஒருமுறை சுற்றவிட்டாள். கொஞ்ச நஞ்சமிருந்த சந்தேகம் விலகிடவே சரேலென்று அவள்

தனது பின்புறமிருந்த பாறையில் லேசாக ஒரு காலை வைத்து ஏறிப் பின்புறத்தின் நிலையைக் கவனித்தாள். பிறகு எதிரேயிருந்த பெரும் மலையுச்சியொன்றையும் கவனித்தாள்.

உச்சிவேளை நெருங்கிவிட்டதால், அந்த மலையுச்சி கதிரவனொளியால் தாக்கப்பட்டு வெள்ளை வெவே ரென்று கண்ணாடி காட்டவே, இளநங்கையின் கண்கள் ஓரளவு கூசவும் தொடங்கின. நெற்றியின் நடுப்பாகத்துக்குத் தனது இடது கையை உயர்த்திக் கண்களுக்கு வெளிச்சத்திலிருந்து பாதுகாப்பளிக்கக் கூரையிட்டு, மீண்டும் அந்தப் பெரும் மலையுச்சியை ஆராய்ந்தாள். அந்த ஆராய்ச்சியின் பயனாகப் பெரிதும் குழம்பிய மனத்துடன் பாறையிலிருந்து காலை எடுத்துவிட்டு முத்துக்குமரியை நோக்கினாள்.

இளநங்கையின் மனத்திலேற்பட்ட சந்தேகம் முத்துக் குமரிக்கும் ஏற்பட்டுத்தானிருந்து. இத்தனைக்கும் அவள் அந்த மலைப் பகுதியைப் பார்த்ததே கிடையாது. அரண்மனைச் செல்வியாக வளர்ந்துவிட்ட காரணத்தால் அவள் பாண்டிய அரசின் கோட்டைகளைப் பற்றி ஓரளவு தந்தை சொல்ல அறிந்ததுண்டே யொழிய, நேரிடையாக இத்தகைய இடங்களைக் காணும் வாய்ப்பை அடைந்த தில்லை. அப்படியில்லாதிருந்தபோதிலும் தங்களை வீரர்கள் கொண்டு வந்திருக்கும் பாதை வேட்டுவரும், இதர காட்டு வாசிகளும் செல்லும் காட்டுக் குறுக்குப் பாதைகளிலொன்றே தவிர, சேர நாட்டுக்குச் செல்லும் பழக்கமான பாதையாயிருக்க முடியாதென்ற தீர்மானத் துக்கு முத்துக்குமரி வர அதிக நேரம் பிடிக்கவில்லை. அந்தப் பாறையில் புரவிகள் செல்வதோ ஆயுதவண்டி களைக் கொண்டு போவதோ சிறிதும் சாத்தியமில்லை யென்பதைச் சிவிகையிலிருந்து இறங்கியவுடனே அவள் புரிந்து கொண்டாள். சிவிகைகளைத் தாங்கி வந்தவர்களும் காவல் வீரர்களுமாகச் சேர்ந்து சுமார் இருபது பேரும் கூட அந்த மலைப் பாதையின் முரட்டுத் தனத்துக்கு ஈடு



கொடுக்க முடியாமல் தூரத்தில் உட்கார்ந்துவிட்டதைக் கவனித்த முத்துக்குமரி, தாங்கள் செல்வது சேர நாட்டுப் பாதையல்ல வென்பதை உணர்ந்து கொண்டதும், அதைத் திடப்படுத்திக் கொள்ள இளநங்கையை ஏறெடுத்து நோக்கி, "இது..." என்று துவங்கினாள். "சேர நாட்டுப் பாதையல்ல; வேறு பாதை" என்று இளநங்கையின் பதில் தயக்கமின்றி வந்ததும், முத்துக்குமரியின் இதயத்தில் பிரமிப்பு அதிகமாயிற்று.

அந்தப் பிரமிப்பின் விளைவாகச் சிறிது நேரம் பேசாமல் நின்றுவிட்ட முத்துக்குமரி, "அப்படியானால் இது எங்கு செல்கிறது?" என்று தாங்கள் வந்த பாதையைக் கண்களால் சுட்டிக் காட்டிக் கேட்டாள்.

இளநங்கை அவளுக்கு உடனே பதில் சொல்ல வில்லை. அவள் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு, பாதையிலிருந்து சற்று விலகி நடந்து காட்டு மரங்களின் நிழலுக்குள் சென்று அங்கிருந்து பாறையொன்றில் உட்கார்ந்து, முத்துக்குமரியையும் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டாள். பிறகு சொன்னாள், "முத்துக்குமரி! இந்தப் பாதை எங்கு போகிறதென்று நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை என்னால். ஆனால் ஒன்று நிச்சயம். இது சேர நாட்டுக்குப் போகாது" என்று.

"அது மட்டும் எப்படி நிச்சயமாகத் தெரியும்?" என்று வினவினாள் முத்துக்குமரி.

இளநங்கை சொன்னாள், "முத்துக்குமரி! பொதிய மலைப் பிராந்தியம் எனக்குப் புதிதல்ல. கொட்டுத்தளம் என்ற புதிய பெயரை இப்பொழுது உன் தந்தை சூட்டி யிருக்கலாம். அங்கு முரசுகளையும் வைத்திருக்கலாம். ஆனால் அந்தப் பீடபூமி நீண்ட நாட்களாக இருந்து வருகிறது. எத்தனையோ முறை நானும் என் தந்தையும் என் பணி மக்களும் இந்தப் பகுதிகளுக்கு வேட்டையாடவும் வனபோஜனத்துக்கும் வந்திருக்கிறோம். அகத்தியர் மலைத் தட்டான கொட்டுத்தளத்திலும் தங்கியிருக்கிறோம். இந்த மலைக்கூட்டங்களிடையே இருக்கும் சந்தனக் காட்டிலும்

தங்கியிருக்கிறோம் இந்த மலைப்பகுதியில் சேரநாடு செல்லப் பத்திரமான வழி ஒன்றுதானுண்டு. அது நாமிருக்கும் இடத்துக்குப் பின்புறமிருக்கிறது."

இதைச் சொல்லிச் சற்று நிதானித்த இளநங்கை, தனது தலையை லேசாகப் பின்புறம் திருப்பி எதையோ உற்றுக் கேட்டாள். "ஆம்! ஆம்! பின்புறம் தானிருக்கிறது" என்று மீண்டும் சொன்னாள்.

முத்துக்குமரிக்கு இளநங்கை எப்படி அத்தனைத் திட்ட மாகச் சொல்கிறாள் என்பது புரியாமல் போகவே, "எதை உற்றுக் கேட்டாய் இளநங்கை? எந்த ஆதாரத்தின் மேல் அத்தனைத் திட்டமாகச் சொல்கிறாய்?" என்று வினவினாள்.

"உன் தலையை லேசாகப் பின்புறம் திருப்பி உற்றுக் கேள்!" என்றாள் இளநங்கை பதிலுக்கு.

முத்துக்குமரி தனது தலையைத் திருப்பிக் காதை நன்றாகத் தீட்டிக்கொண்டு கேட்டாள். பிறகு இளநங்கை யைப் பார்த்து, "ஏதோ நீர் விழுவதுபோல் ஒலிக்கிறது காதில்," என்றாள்.

"ஆம். நமக்குப் பின்புறம் சுமார் கால் காதத்தில் நீர் வீழ்ச்சியொன்று இருக்கிறது," என்றாள் இளநங்கை.

"கால் காத தூரத்திலா?" முத்துக்குமரியின் சொற்களில் வியப்பு ஒலித்தது.

"ஆம். முத்துக்குமரி,"

"அத்தனை தூரத்திலிருக்கும் நீர்விழ்ச்சியின் ஓசை இங்கு கேட்குமா?"

"கேட்கும். இங்கு மனித அரவமில்லை. சுற்றிலும் நிசப்தமான காடு. தவிர மலைப் பாறைகளும் ஒலியைத் தாங்கித் தூக்கிக் கொடுக்கும்."

"அது அத்தனை பெரிய நீர்வீழ்ச்சியா?"

"இல்லை. சுமாரான நீர்விழ்ச்சிதான். பாணர் அருவி யென்று அதை அழைக்கிறார்கள். அதன் பக்கத்தில்தான் சேரநாட்டுப் பாதை போகிறது. பாதையின் ஒருபுறத்தில்



சந்தனக் காடு. இன்னொரு புறத்தில் தேவதாரு மரங்கள் நிரம்ப உண்டு. ஏலச் செடிகளும் மண்டிக் கிடக்கும்."

பாணர் வீழ்ச்சியைப்பற்றியோ சந்தனக் காட்டைப் பற்றியோ அந்தச் சமயத்தில் முத்துக்குமரிக்குச் சிரத்தை இல்லையாகையால், "அப்படியானால் நம்மை இப்பொழுது எங்கு கொண்டு போகிறார்கள்?" என்று வினவினாள்.

"அதை விசாரிப்போம்" என்று இளநங்கை தங்களைத் தூக்கிவந்த சிவிகையாள் ஒருவனைச் சைகை செய்து தனக் கருகாமையில் வரவழைத்தாள். "மீண்டும் எப்பொழுது புறப்படுவீர்கள்?" என்று விசாரிக்கவும் செய்தாள்.

"இளைப்பாறக் கொஞ்சம் அவகாசம் தேவை. மலைப் பாதை மிக முரடாயிருக்கிறது. சிவிகையைத் தாங்கிச் செல்வது கஷ்டமாயிருக்கிறது," என்றான் சிவிகை ஆள்.

"ஏன் வேறு நல்ல பாதை இல்லையா?" என்று வினவினாள் இளநங்கை.

"இருக்கிறது. காவலர் இந்தப் பகுதியில் தான் அழைத்து வந்தார்கள்," என்றான் சிவிகைக்காரன்.

"இது எந்தப் பாதை? எங்கு செல்கிறது?" என்று விசாரித்தாள் இளநங்கை.

"எனக்குத் தெரியாது தேவி. இந்தப் பாதையில் நான் வருவது இதுதான் முதல் தடவை," என்றான் அந்த ஆள்.

"தெரிந்த யாரையாவது கூப்பிடு," என்று உத்தர விட்டாள் இளநங்கை.

சிவிகை ஆள் மற்ற ஆட்கள் உட்கார்ந்திருந்த இடத் துக்குச் சென்று ஏதோ விசாரித்துவிட்டுத் திரும்பி வந்து, "அவர்கள் யாருக்கும் தெரியவில்லை தேவி!" என்று கூறினான்.

இளநங்கையின் கண்களில் கோபம் உதயமாயிற்று. "யாருக்கும் தெரியாவிட்டால் எதற்காக இங்கு தூக்கி வந்தீர்கள்?" என்று சீறினாள் சொற்களில் கனல் தெறிக்க.

சிவிகை ஆள் மௌனமாகி நின்றான். "நாங்கள் யாரென்றாவது உங்களுக்குத் தெரியுமா?" என்று மீண்டும் சீறினாள் இளநங்கை.

"தெரியாது தேவி," மிகப் பணிவுடன் வந்தது அந்த ஆளின் பதில்.

"ஏன் தூக்கி வந்தீர்களென்பது தெரியாது; எங்கு தூக்கிச் செல்கிறீர்களென்று தெரியாது. யாரைத் தூக்கிச் செல்கிறீர்கள் என்று தெரியாது. பின் என்னதான் தெரியும் உங்களுக்கு!" என்று இரைந்தாள் கோட்டைக் காவலன் மகள்.

சிவிகை ஆள் பதிலேதும் சொல்ல முடியாமல் திருதிரு வென்று விழித்துக்கொண்டு நின்றான். சிவிகை தூக்குவோனை இளநங்கை விசாரித்ததைத் தூரத்தில் இருந்து கவனித்துக்கொண்டிருந்த காவலரிலொருவன், அவளை அணுகி வந்து தலைவணங்கி, "தேவிக்கு ஏதாவது தேவையானால் என்னைக் கேளுங்கள். சிவிகை ஆள் விஷயமறியாதவன்," என்று கூறினான்.

அவனை ஏறிட்டு நோக்கிய இளநங்கை, அவன் உடையிலிருந்தே அவன் சேரநாட்டவன் என்பதை உணர்ந்து கொண்டதால் மிக வெறுப்புடன் அவனை நோக்கினாள். "நாம் எங்கு செல்கிறோம் என்பது தெரியவேண்டும்," என்று கூறவும் செய்தாள் உஷ்ணத்துடன்.

சேரநாடு அழைத்துச் செல்லும்படி உத்தரவு. அது உங்களுக்கும் தெரியுமென்று படைத்தலைவர் சொன்னார்," என்றான் சேரவீரன் மிகுந்த பணிவுடன்.

அதுவரை வாளாவிருந்த முத்துக்குமரி கேட்டாள் சினத்துடன், "எந்தப் படைத்தலைவர்?" என்று.

"கொட்டுத்தளப் படைத்தலைவர்," என்றான் சேர வீரன்.

"யாரவர்?" என்றாள் முத்துக்குமரி சந்தேகத்துடன்.

"இந்திரபானு, புதிதாக வந்தவர். ஆனால் சேர மன்னரால் நன்கு மதிக்கப் பெற்றவர்," என்றான் சேரவீரன்.

"எத்தனை நாளாக அவர் கொட்டுத்தளத்துக்குத் தலைவரானார்?" என்று சீறினாள் முத்துக்குமரி.



"எனக்குத் தெரியாது தேவி; இன்று காலையில் தான் மன்னர் என்னை அழைத்து, "இதோ இந்த இந்திரபானு தான் இங்கு உங்கள் தலைவர். அவர் உத்தரவுப்படி நடவுங்கள்" என்று கூறினார். அடுத்த ஒரு நாழிகைக்குள் புதுப்படைத் தலைவரின் உத்தரவு வந்தது. சிவிகைகளுடன் நாங்கள் கிளம்பினோம்." என்றான் சேரவீரன்.

அவன் உண்மையைச் சொல்வதாகவே தோன்றியது இருமங்கையருக்கும். அத்துடன் முத்துக்குமரி தனது கேள்வியினை நிறுத்திக்கொண்டாள். ஆனால் இளநங்கை மட்டும் கேட்டாள். "இது சேரநாடு செல்லும் பாதையா?" என்று.

சேர வீரன் பதில் விந்தையாயிருந்தது. "தெரியாது?" என்றான் அவன்.

"தெரியாதா?" இளநங்கையின் கேள்வியில் வியப்பு மிதமிஞ்சிக் கிடந்தது.

"ஆம் தேவி, இந்தப் பாதையில் இதுவரை நான் வந்த தில்லை" என்றான் சேரவீரன்.

"மற்ற யாருக்காவது தெரியுமா?" என்று வினவினாள் இளநங்கை.

"யாருக்கும் தெரியாது?"

"அப்படியானால் கண்மூடித்தனமாக அழைத்துப் போகிறீர்களா?"

"இல்லை புதுப்படைத் தலைவர் உத்தரவு திடமாயிருக்கிறது. இந்தப் பாதையில் சென்றால் வடக்கே வேறொரு பாதை திரும்புமாம். அதைப் பற்றிச் செல்லும்படி உத்தரவு."

"சென்றால்?"

"நாம் போய்ச் சேரவேண்டிய இடம் வரும்," என்ற சேரவீரன், மேற்கொண்டு எதுவும் சொல்லாமல், "நீங்கள் இளைப்பாறியது போதுமென்றால் கிளம்புவோம்," என்றான்.

"எங்களுக்கு அசதி எதுவுமில்லை. சிவிகை ஆட்கள் வேண்டுமானால் இளைப்பாறட்டும்," என்றாள் இளநங்கை.

சேரநாட்டு வீரன் அதற்குமேல் சிவிகை ஆட்களை உட்கார விடவில்லை. சிவிகைகளில் மங்கையரிருவரையும் ஏறச்சொல்லி, சிவிகைகளை எடுக்கச் சொன்னான். ஆங்காங்கு உட்கார்ந்த மற்ற வீரர்களையும் கிளப்பி, புறப்பட உத்தரவிட்டான்.

அந்த மலைப்பாதையில் சிவிகைகள் மீண்டும் ஊர்ந்தன. முக்கியும் முனகியும் சிவிகையாட்கள் சிவிகைகளைத் தூக்கிச் சென்றார்கள். மலை ஏற்றம் அதிகமாக அதிகமாகக் காடும் நெருக்கமாயிற்று. சிவிகைச் சிலையை நீக்கிப் பார்த்த இளநங்கை பாணா அருவியிலிருந்து விலகி நீண்ட தூரம் தாங்கள் வடக்கே வந்து விட்டதை உணர்ந்தாள். சுமார் ஒரு ஜாமப் பயணத்துக்குப் பிறகு மலைப்பாதை மீண்டும் ஏதோ பள்ளத்தாக்கில் இறங்கிச் சென்றது. அந்தப் பாதையில் இறங்கிப் பக்கத்திலிருந்து சிறு சுனையருகில் வந்ததும் சிவிகைகளை இறக்கி, உணவருந்த ஆட்களுக்கும் மற்றக் காவலருக்கும் அவகாசமளித்த சேரவீரன் இளநங்கையை அணுகி "தேவி நீங்களும் உணவருந்தலாம். இந்தச் சுனையை விட்டால் இனி சுனை ஏதாவது உண்டோ இல்லையோ தெரியாது. நேரமும் ஏறிவிட்டது," என்றான்.

உணவருந்தும் நிலையில் இரு மங்கையரும் இல்லை. எதுவும் தேவையில்லையென்று கூறிவிட்டு, சிவிகையிலிருந்து சற்றுத் தள்ளி இருவரும் உட்கார்ந்தனர். ஆட்கள் உணவருந்தியதும் மீண்டும் பயணம் துவங்கியது மெள்ள மெள்ள மாலைப் பொழுதும் நெருங்கியது. சிவிகைகள் பள்ளத்தாக்கு ஒன்றில் இறங்கி இன்னொரு மலையில் ஏறுவதாகத் தோன்றியது இளநங்கைக்கு. இரவு மூள்வதற்கான அறிகுறிகள் எங்கும் தோன்றின. மாலை நேரத்திலேயே சிவிகைச் சீலையைத் தள்ளிப் பார்த்த இளநங்கை, அகத்தியர் உச்சியென அழைக்கப்பட்ட பொதியமலைப் பேருச்சி சிவிகைகளுக்குப் பின்புறத்தில் இருப்பதைக்



கண்டாள். "அப்படி யானால் திரும்பவும் கொட்டுந்தளமா போகிறோம்!" என்று தன்னைத்தானே இருமுறை கேட்டுக் கொண்டு விடைகாணாமல் தவித்தாள். மேற்கொண்டு சிந்திக்கவும் முயலாமல் சிவிகைத் தலையணையில் சாய்ந்து கொண்டாள்.

இருள் மூள அறிகுறிகள் தோன்றியதுமே காட்டுக் குச்சிகளைக் கொண்டு பந்தங்களைத் தயார் செய்தான் சேர வீரன். முன்னும் பின்னும் பந்தங்கள் எரிய, பயணம் மறுபடியும் அரைஜாமம் நடந்தது. அந்த அரை ஜாம முடிவில் நிலைமை திடீரென மாறியதை இளநங்கை, முத்துக்குமரி இருவருமே உணர்ந்தார்கள். திடீரென எங்கிருந்தோ ஒரு புரவி வீரர் வரும் ஒலிகள் கேட்டன. அடுத்த சில நிமிஷங்களில் சிவிகைகளை எதிர்கொண்ட புரவி வீரர்கள் நால்வருடன் சேரவீரன் ஏதோ பேசினான். மீண்டும் பயணம் துவங்கியது.

இம்முறை சற்றுத் துரிதமாகவே பயணம் நடந்தது. சிவிகை ஆட்கள் முழுமூச்சுப் பிடித்தும் ஹூங்காரத்தைப் பலமாகப் போட்டும் ஓடினார்கள். இப்படி அரை ஜாமம் சென்றதும் எங்கும் மனிதநடமாட்டமும் அரவமும் கேட்டது. திடீரெனப் பலமாக சுவர்களுக்குள் சிவிகைகள் நுழைந்தன. அடுத்த இரண்டொரு விநாடிகளில் கீழே சிவிகைகள் இறக்கவும் பட்டன. சிவிகைகளிலிருந்து வெளிவந்த இருவரும் ஒரு பலமான கோட்டைக்குள் தாங்கள் கொண்டுவரப் பட்டிருப்பதை உணர்ந்தார்கள். அவர்களைத் தொடர்ந்து வரச் சொல்லி சைகை செய்து சேரவீரன் கோட்டை நடுவிலிருந்து பெருவீடுதிக்கு அவர்களை அழைத்துச் சென்றான்.

அந்த வாயிலைக் கண்டதும் இளநங்கை, முத்துக்குமரி இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். வாயிலில் கட்டியிருந்தது இந்திரபானுவுக்கு வீரபாண்டியனால் அளிக்கப்பட்ட சாம்பல் நிறப்பெரும் புரவி. "நான் என்ன சொன்னேன்? இந்திரபானு துரோகியாயிருக்க முடியாதென்று சொல்லவில்லையா?" என்று

இளநங்கை வாய் விட்டுக் கேட்கவில்லை முத்துக்குமரியிடம். ஆனால் அவள் அழகிய விழிகளில் விரிந்த மகிழ்ச்சியில் அந்தக் கேள்வி தொக்கி நின்றது. இந்திரபானுவைக் காணப்போகிறோம். என்ற மகிழ்ச்சியால் உள்ளம் குதூகலிக்க அந்த விடுதி வாயிற்படியைச் சற்று முன்னதாகவே கடந்தாள் முத்துக்குமரி. ஆனால் வாயிற்படியைத் தாண்டியதும் கற்சிலையென நின்றாள். இளநங்கையும் பேசும் சக்தியை, ஏன் காலை எடுத்து மற்றோர் அடி எடுத்து வைக்கும் சக்தியைக்கூட இழந்தாள். உள்ளே இருந்தது இந்திரபானுவல்ல. வீர பாண்டியனுமல்ல. இரு மங்கையரும் முற்றும் எதிர்பாராத மூன்றாவது மனிதனொருவன் உள்ளிருந்த மஞ்சத்திலிருந்து எழுந்து அவர்களை வரவேற்றான். தாங்கள் காண்பது கனவல்லவென்பதை நிர்ணயித்துக் கொள்ளவோ என்னவோ இளநங்கையும், முத்துக்குமரியும் ஒருவர் கையை ஒருவர் இறுகப் பிடித்துக் கொண்டனர். அந்த காட்டுக் கோட்டையில் விரிந்தது அத்தனை பெரிய அதிசயம்.

அத்தியாயம் 24

# எம்மண்டலமும் கொண்டருளிய பெருமாள்

பொதியமலைக் கூட்டத்தின் பெரியமலைச் சரிவொன்றில் அமைக்கப்பட்டிருந்ததும், காடு சுற்றிலும் அடர்த்தியாயிருந்ததன் விளைவாகத் தூரப்பார்வைக்குத் தெரிந்தும் தெரியாமல் இருந்ததும், நெடுநாட்களாக யாரும் உபயோகப்படுத்தாததால் ஓரளவு பாழடைந்து காணப்பட்டதுமான அந்தக் கோட்டையின் நடுவிடுதியின் முகப்புக் கூடத்தில், தங்கள் எதிரே எழுந்து நின்றவனைக் கண்டதும் மங்கையர் இருவரும் பெருவியப்புற்று ஒருவர் கையை இன்னொருவர் பற்றிப் பிரமித்து நின்றார்களென்றால் அதற்குக் காரணம் இருக்கவே செய்தது. சிறிது பிரமிப்புக்குப் பிறகு இளநங்கையை உதறிவிட்டு எதிரே நின்றவனை தெளிந்த பின்னும் நின்ற இடத்திலேயே நின்றுவிட்டாளென்றால் எத்தனை எதிர்பாராத மனிதனை அவர்கள் சந்தித்திருக்க வேண்டும்! அவர்கள் அந்தக் கோட்டையில் சந்தித்தது மிகவும் எதிர்பாராத அற்புத மனிதன்தான். பாண்டிய மன்னன் ஜடாவர்மன் சுந்தர பாண்டியன் அவர்கள் முன்பு முறுவல் தவழும் முகத்துடன் நின்றுகொண்டிருந்தான்.

பாண்டிய மரபுக்குள்ளேயே மிகச் சிறந்த வீரன் என்று வரலாற்று ஆசிரியர்கள் அனைவராலும் ஒப்புக்கொள்ளப் பட்டவனும், அரசாள ஆரம்பித்த சில ஆண்டுகளுக்குள்ளாகவே பாண்டிய அரசைப் பேரரசாக்கி, அதன் சிறப்பை உச்சிக்குக் கொண்டு சென்றவனும், சதா போர்த்

தினவுள்ளவனும், அந்தப் போர்த் தினவின் விளைவாக* முடுகூரிலிருந்து சிங்களத்தின் வட எல்லை வரையில் பல பேரரசர்களைப் புறமுதுகு கண்டவனும், அப்படி அடைந்த பெரு வெற்றிகளின் காரணமாக †'எம்மண்டலமும் கொண்டருளிய பெருமாள்' என்று தமிழிலும் ††'ஸமஸ்த ஜகதாதார சோமகுல திலக' என்று வடமொழியிலும் சிறப்பு விருதுகளைப் படைத்தவனும், திருவரங்கனுக்கும், தில்லைப் பெருமானுக்கும் விமானப் பொன் வேய்ந்ததால், 'பொன் வேய்ந்த பெருமான்' என்று பிரசித்தி பெற்றவனுமான ஜடாவர்மன் சுந்தரபாண்டியன், அன்று அந்தக் காட்டுக் கோட்டையில் சர்வசாதாரணப் படைத்தலைவனாக, அந்த மங்கையர் முன்பு நின்றான். பிற்காலத்தில் பல அரசுகளை வெற்றிகொண்டு வீழ்த்திய ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் அன்று அந்தக் காட்டுக் கோட்டையில், தனது அரசின் ஆரம்ப காலத்தில் பலரும் பிடித்து அடக்க முயன்ற ஒரு சிங்கம்போல் காட்சி அளித்தானேயன்றி, எம்மண்டலமுங் கொள்ளப்போகின்ற பெருமாளாகக் காட்சி அளிக்கவில்லை. ஆனால், அந்தச் சமயத்திலும் பெரும் சிங்கத்தின் கம்பீரப் பார்வை, அச்சமற்ற தன்மை இரண்டும் அவன் முகத்தில் சுடர்விட்டன.

சுந்தரபாண்டியன் நல்ல உயரத்துடன் அந்த விடுதியின் கூரையே தலையில் இடித்துவிடும்போல் நின்றிருந்தான். காட்டுக் கோட்டை விடுதிக்குள்ளே தனித்திருந்த அந்த சமயத்திலும் மார்பை மட்டும் மறைத்த சின்னஞ்சிறு இருப்புவலைப் போர் அங்கியை அணிந்துகொண்டு, எந்தச் சமயத்திலும் போருக்குத் தயாராய் இருப்பவன்போல் காட்சி அளித்தான், பாண்டிய மன்னன். அந்த அங்கியைத்

* முடுகூர் என்பது ஆந்திராவில் நெல்லூருக்கு அருகில் உள்ளது. தென்னாட்டுப் போர்க் களங்கள் — பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரை அவர்கள் இயற்றியது. பக்கம் 268.

† ஸ்ரீரங்கம் கோயில் வரலாற்று நூல் 'கோயிலொழுகு' பக்கம் 8.

†† சதாசிவப் பண்டாரத்தார் எழுதிய 'பாண்டியர் வரலாறு' – பக்கம் 128.



தவிர, இடையிலிருந்த உடை, சர்வசாதாரணமாகப் புரவி ஏறும்போது மன்னர்கள் உடுக்கும் சல்லடம். அந்த சல்லடக் கச்சையில் செருகப்பட்டிருந்த குறுவாளின் பரிமாணத்தை அதன் உறையின் அகலத்திலிருந்தே தெரிந்துகொள்ள முடிந்ததால், அத்தனை பெரிய வாளை எடுத்து வீசக் கூடியவன் சாதாரண வீரனாய் இருக்க முடியாதென்று தெள்ளெனத் தெரிந்தது. அவன் அமர்ந்திருந்த மஞ்சத்தில் பஞ்சணையில்லை. வெறும் காட்டு மரத்தால் செய்யப்பட்டிருந்த அந்த மஞ்சத்தில் ஒரு கோடியிலிருந்த இரண்டு தலையணைகளும் பாமர மக்கள் தலையணைகளைப்போல் முரட்டுத் துணிகளால் தைக்கப்பட்டிருந்தமையால், அவை பாண்டிய மன்னனுக்கும் சுகபோகங்களுக்கும் அதிக சம்பந்தமில்லை என்பதை நிரூபித்தன. சுகபோகங்களுக்கும் மன்னனுக்கும் அதிக சம்பந்தமில்லாவிட்டாலும் போருக்கும் அவனுக்கும் தொடர்பு மிக நெருங்கிய தென்பதை விளக்க, அந்த முகப்புமண்டபம் பூராவும் பல்வகைப் போர்க்கலங்கள் நிரம்பிக் கிடந்தன.

சுகபோகாதிகள் எதுவுமே காணாத இடத்தில், போர்க் கருவிகள் சுற்றிலும் இருந்ததால், பார்ப்பதற்குச் சுகத்திற்குப் பதில் அச்சத்தையே தந்த சூழ்நிலையில் எழுந்து, நெடுமாலென நின்ற சுந்தரபாண்டியன் கண்கள் அந்த இரு மங்கையரையும் பார்த்து ஒரு வினாடி நகைத்தன. நகைத்த கண்களைப் பார்த்த நங்கையர் இருவரும் இருவகை உணர்ச்சிகளுக்கு இலக்காயினர். தந்தையைத் திடீரென்று பார்த்ததால் முத்துக்குமரிக்கு ஆரம்பத்தில் ஏற்பட்ட வியப்பு மேலும் விரிந்ததன்றி அவள் வேறெவ்வித உணர்ச்சிக்கும் ஆளாகவில்லை. ஆனால் பெரு விழாக்களில் ஓரிரு முறையே மன்னனைப் பார்த்திருந்த இளநங்கையின் இதயத்தில் மட்டும் பற்பல எண்ணங்கள் எழுந்து உலாவின. அதிக உயரமென்று தான் கருதிய வீர பாண்டியனைவிட அதிக உயரமாக மன்னன் நிற்பதைப் பார்த்த இளநங்கை, 'அப்பா என்ன உயரம்!' என்று பிரமித்தாள். வீரபாண்டியனைப்போல் மன்னன் உயரமாய்

இருந்தானே யொழிய மற்ற விஷயங்களில் சகோதரர் இருவருக்கும் பல வேற்றுமைகள் இருந்ததையும் அவள் கவனித்தாள். சுந்தரபாண்டியன் முகமும் வீரபாண்டியன் முகத்தைப் போலவே விசாலமாய் இருந்தாலும், வீரபாண்டியன் முகத்தில் சதா காணப்பட்ட ஓர் அலட்சியம், சுந்தரபாண்டியன் முகத்தில் இல்லை என்பதையும், அதில் ஓர் ஆழ்ந்த சிந்தனை படர்ந்து கிடந்ததையும் கண்டாள். அந்த முகத்தின் வளைந்த பெரும் புருவங்களும் தீர்க்கமான நாசியும், அகன்று நின்ற பெரும் உதடுகளும் மன்னனின் மாபெரும் உறுதிக்கு அத்தாட்சி யாய் இருந்ததையும், அவன் கண்கள் வீரபாண்டியன் கண்களைப் போலவே விஷமச் சிரிப்பை உதிர்த்தாலும், அதில் ஒரு சிங்கத்தின் சீறிய பார்வை, வேகம் இரண்டும் மண்டிக் கிடந்ததால், நகைத்த பார்வையும் சற்று அச்சுறுத்தும்படியாய் அமைந்திருப்பதையும் பார்த்தாள் இளநங்கை. அவன் கைகளிலும், தோள்களிலும் கால் களிலும் தெரிந்த பல காயங்கள் மன்னன் சதா போர்த் தினவுள்ளவன் என்பதைப் பறை சாற்றுகின்றன என்பதைப் புரிந்து கொண்டாள் அவள்.

இத்தனையிலும் ஒன்று மட்டும் தெளிவாகத் தெரிந்தது அவளுக்கு. மன்னனது பார்வை எத்தனை அச்சுறுத்தும் பார்வையாயிருந்தாலும் சில வேளைகளில் வீரபாண்டியன் பார்வையில் விளையும் பயங்கரமும் கொடுமையும் அதில் விளையாதென்ற உண்மைதான் அது. சுந்தரபாண்டியன் காட்டில் நடுவே இருந்த அந்தப் பழைய கோட்டையில் நின்றபோதும் மாமணி மண்டபத்தில் அடிபணிய வரும் குறுநில மன்னர்களை எதிர்கொள்ள நிற்கும் மண்டலாதிபதி போலவே நின்றான். பிற்காலத்தில் பெரும் வல்லரசுகளைக் கவிழ்க்கும் தோரணை, யாரையும் கவிழ்க்காத அந்தச் சமயத்திலும் இருந்தது. ஜடாவர்மன் சுந்தர பாண்டியனிடம், அவன் நின்ற தோரணையில் ஆட்சி இருந்தது. அவன் எளிமையில், உடையில் எதையும் தாங்கவல்ல உறுதி இருந்தது. சூழ்நிலையில் போர் இருந்தது.



பார்வையில் வேகம், அதிகாரம், பிற்காலத்தைப்பற்றிய ஏதோ ஓர் எதிர்ப்பார்ப்பு, மூன்றும் இருந்தன.

அத்தகைய எண்ணங்கள் ஓட, வியந்து நின்ற இளநங்கையையும் நோக்கித் தன் மகளையும் நோக்கிய பாண்டிய மன்னன், "முத்துக்குமரி! இளநங்கை வியக்கத் தான் காரணம் இருக்கிறது. உனக்கென்ன, நீ ஏன் அங்கேயே நின்றுவிட்டாய்?" என்று சர்வ சாதாரணமாக வினவினான்.

மன்னரின் அந்த இரண்டு மூன்று சொற்கள், இரு மங்கையரையும் ஆரம்ப அதிசயத்திலிருந்து அன்றைய உண்மை நிலைக்கு இழுக்கவே, இளநங்கையின் கையிலிருந்து தனது கையை விடுவித்துக் கொண்ட முத்துக் குமரி மெல்லத் தன் தந்தையை அணுகினாள். மகளை இருப்புவலை அங்கிமறைத்த மார்பில் அணைத்துத் தலையைத் தடவிக் கொடுத்த சுந்தர பாண்டியன், இளநங்கையை நோக்கிப் புன்முறுவல் செய்து, "வா இளநங்கை! இதோ இந்த மஞ்சத்தில் உட்கார். சீக்கிரம் உங்கள் இருவரையும் உங்கள் விடுதிக்கு அனுப்பி வைக்கிறேன்." என்று கூறினான்.

இளநங்கை கனவில் நடப்பதுபோல் மன்னனை நோக்கி நடந்தாள். எதற்கும் அஞ்சாமல் சஞ்சரிக்கும் அவள் மனமும் கால்களும் அன்று அந்த மகாவீரன் முன்பு சஞ்சரிக்க முடியாமல் பெரிதும் திண்டாடின. உதடுகளும் பேசச் சக்தி யற்றுவிட்டன. இந்த நிலையில் மெல்ல நடந்து அரசனுக்குப் பக்கத்திலிருந்த மஞ்சத்துக்குச் சென்று, அதில் தொப்பென்று உட்கார்ந்தாள் கோட்டைக் காவலன் மகள். தான் அமர்ந்திருந்த பெருமஞ்சத்தில் மகளுடன் உட்கார்ந்திருந்த சுந்தரபாண்டியன், இளநங்கையை நோக்கிச் சிரித்துக்கொண்டே கேட்டான். "நாம் மூவரும் இப்படி அக்கம் பக்கத்தில் அமர்ந்திருப்பது ஒரு தனிக் குடும்பம் அமர்ந்திருப்பது போல் இல்லையா இளநங்கை?" என்று.

இளநங்கை மன்னனின் கண்களை ஒரு வினாடிதான் சந்தித்தாள். பிறகு தலையைக் கீழே குனிந்து கொண்டாள்.

மன்னன் சொற்கள் மேலுக்குச் சாதாரணமாய் இருந்தாலும் அவன் பற்பல பொருள்களைப் பொதித்துப் பேசுவதுபோல் தோன்றியது, அவளுக்கு. ஒருவேளை வீரபாண்டியனுக்கும் தனக்கும் ஏற்பட்டுள்ள உறவு, மன்னனுக்கும் தெரிந்திருக்குமோ என்று உள்ளூர சந்தேகப்பட்டாள் அவள். 'சே சே! இருக்காது! சில நாட்களில் ஏற்பட்ட நிகழ்ச்சி, அதுவும் இரண்டே நாட்களுக்கு முன்பு ஏற்பட்ட நெருக்கம், இதற்குள் எப்படி மன்னனுக்குத் தெரிய முடியும்?' என்று தனக்குள் கேள்வி எழுப்பிச் சமாதானமும் செய்துகொண்டாலும், மன்னனின் சிங்கக் கண்கள் சிரித்த முறை, சதா அவற்றில் துளிர் விட்டு மின்னிய ஒளி, அவளுக்குச் சமாதானத்தை அளிக்கவில்லை. மன்னன் மேற்கொண்டு கேள்வி கேட்டால் என்ன பதில் சொல்வது என்று அறியாததால், அவள் குனிந்த தலையை நிமிரவும் சக்தியற்றவளானாள்.

சக்தி மட்டும் இருந்திருந்தால், அவள் பல கேள்விகளைக் கேட்டிருப்பாள். 'நாங்கள் சேரநாட்டுக்குப் பயணப் பட்டது உங்களுக்கு எப்படித் தெரியும்? எப்படி எங்களை இவ்விடம் கொண்டுவந்தீர்கள்? இளவரசரின் சாம்பல் நிறப் புரவி இங்கு எப்படி வந்தது? நீங்கள் இங்கு எப்பொழுது வந்தீர்கள்? நேற்று இரவு முத்திரை மோதிரம் காட்டி என்னிடமிருந்து ஓலையைப் பெற்றது யார்? இந்திர பானு நல்லவனா, அயோக்கியனா?' என்று இப்படிப் பல கேள்விகள் அவள் உதடுகளிலிருந்து உதிர்ந்திருக்கும், ஆனால் மன்னனின் முன்னிலையில் அவள் ஏதும் பேசச் சக்தியற்றவளானாள். அவள் இருந்த இடத்தின் சூழ்நிலையே ஓர் அச்சத்தையும், எச்சரிக்கையையும் விளைவித்தது.

இளநங்கைக்குத்தான் இந்த அச்சம் என்பது இல்லை, பெண் என்ற முறையில் தந்தையுடனே நெருங்கி உட்கார்ந்திருந்த முத்துக்குமரிக்குக்கூட அவனிடம் இருந்த தந்தை என்ற பாசத்தைவிட அரசன் என்ற பயம் அதிகமாயிருந்தது. அத்தனை வருடங்களில் எத்தனையோ முறை அவள் தந்தையுடன் ஒரே மஞ்சத்தில் அமர்ந்திருக்கிறாள்.



எத்தனையோ முறை கொஞ்சியிருக்கிறாள். கெஞ்சியிருக்கிறாள். வாதித்தும் இருக்கிறாள். ஆனால் அத்தனை உரையாடலிலும் அவள் பேச்செல்லாம் முக்கால் வாசி தந்தை என்ற முறையில் அமைந்தது கிடையாது. முக்கால்வாசி, பாண்டியநாடு, மக்கள், செல்வம், சிறப்பு இவைபற்றியும், சிற்சில வார்த்தைகள் மட்டும் சுற்றத்தைப் பற்றியுமே இருந்துவந்தது அவள் அனுபவம். ஆகவே, அவனுடன் அமர்ந்தபோதெல்லாம் அரசனுடன் அமர்ந்த சுரணை அவளுக்கு இருந்ததேயொழிய, தந்தையுடன் அமர்ந்த சிந்தனை இருந்ததில்லை. அந்தக் காட்டுக் கோட்டை விடுதியிலும் அந்த நிலையே உருவாயிற்று.

அவர்கள் பயணத்தைப் பற்றி இரண்டொரு வார்த்தைகளே பேசி விசாரித்த சுந்தரபாண்டியன், நாட்டு விவகாரத்துக்கு வந்தான். "முத்துக்குமரி! எப்படியும் நீங்கள் சௌக்கியமாக இந்த இடத்துக்கு வந்து சேர்ந்தது பற்றி மகிழ்ச்சியடைகிறேன். இளநங்கையை அழைத்துக் கொண்டு வெளியே போ. அங்குள்ள காவலர் உங்கள் இருப்பிடத்தைக் காட்டுவார்கள். உணவு அருந்தி இளைப் பாறுங்கள்,'' என்று கூறித் தானும் மஞ்சத்தைவிட்டு எழுந்திருந்தான்.

முத்துக்குமரி பதில் ஏதும் சொல்லாமல் எழுந்திருந்தாள். பிறகு நிதானித்தாள். அவள் நிதானித்ததைக் கண்ட சுந்தரபாண்டியன், "ஏன் குமரி! ஏன் தயங்குகிறாய்?" என்று வினவினான். அந்த வார்த்தைகளைச் சொன்னதும் அவன் கண்கள் பளபளத்ததைச் சற்றுத் தள்ளி நின்ற இளநங்கை கண்டாள். பெண்ணிடம் அவனுக்குப் பெரும் பாசம் என நினைத்தாள். பாசமல்ல அது என்பதைப் பிறகே உணர்ந்தாள்.

முத்துக்குமரிக்கும் மன்னனுக்கும் நடந்த உரையாடலில் கடைசிப் பகுதி அவளைத் தூக்கிவாரிப் போட்டது.

"நல்லவேளை பயணம் முடிந்தது," என்றாள் முத்துகுமரி பெருமூச்சு விட்டு.

"முடியவில்லை. ஆரம்பம்," என்றான் பாண்டிய மன்னன்.

"ஆரம்பமா!"

"ஆம்!" திட்டவட்டமாக வந்தது மன்னன் பதில்.

"அடுத்த பயணம்...?"

"சேரநாட்டுக்கு," என்றான் பாண்டிய மன்னன்.

முத்துக்குமரி, இளநங்கை இருவருமே மன்னனை வியப்புடன் நோக்கினார்கள்.

சுந்தரபாண்டியன் கம்பீரமாக நிமிர்ந்து நின்றான். "அடுத்த வாரம் என் படைகள் சேர நாட்டை நோக்கி நகரும். சேரநாடு அழிக்கப்படும்," என்ற அவன் சொற்கள், அந்த முகப்பு மண்டபத்தில் பெரிதாக எதிரொலி செய்தன. அவன் சிங்கக் கண்கள் பேரொளி வீசின. அவன் அன்றே எம்மண்டலமும் கொண்டருளிய பெருமானாகி விட்ட தோரணை, அவன் நின்ற நிலையில், பார்த்த பார்வையில், சொற்களின் வேகத்தில், கனவில், தெரிந்தது.

அத்தியாயம் 25

## முழங்கிய முரசுகள்

சித்திரைத் திங்கள், மூலநட்சத்திரத்தில் பிறந்தவனும் சிங்கப்பார்வை உள்ளவனும், சித்தத்தில் அச்சத்தைச் சிறிதளவும் அறியாதவனுமான சுந்தரபாண்டியன், "சேரநாடு அழிக்கப்படும்," என்ற சொற்களை வேகத்துடனும், கனல் விரிந்த கண்களுடனும் சொல்லி முடித்த மாத்திரத்தில், 'நீங்கள் செல்லலாம்', என்பதற்கு அறிகுறியாக முத்துக்குமரியையும் இளநங்கையையும் நோக்கித் தனது வலது கையை அசைத்தான்.

நீண்ட நாட்கள் காணாத, பல அபாயங்களுக்குள்ளான சொந்தப் பெண்ணை ஏதோ சாதாரணப் படைவீரனைப் போகச் சொல்வதைப் போல் சுந்தர பாண்டியன் ஜாடை காட்டியதைக் கண்டு வியப்பதா அல்லது அவனை வெறுப்பதா என்று புரியாமல் அவனை மீண்டும் நோக்கிய இளநங்கை தலையில் கலைந்து கிடந்த அவள் குழலையும், முரட்டுப்போர் ஆடையையும் கனவுப் பார்வையையும் கண்டதும், குடும்பம் சம்பந்தப்பட்ட வரையில் மன்னன் வெறும் மரம் என்று முடிவு செய்து கொண்டாள். ஆனால் தந்தையை நன்றாக உணர்ந்திருந்தவளும், அவன் மனப் போக்கு அவ்வப்போது எப்படித் திரும்பும் என்பதை அறிந்திருந்தவளுமான முத்துக்குமரி மட்டும் தந்தை நிலையையும், அவன் கையசைத்ததையும் கண்டதும் வேறு வார்த்தையேதும் பேசாமல் வாயிற்படியை நோக்கித் திரும்பி நடந்தாள். இளநங்கை மௌனமாக அவளைப் பின் தொடர்ந்தாள்.

வாயிற்படியை அவ்விருவரும் தாண்டியதும், பெரு முன்னேற்பாடு செய்யப்பட்டது போலக் காரியங்க நடந்தன. இரண்டு வீரர்கள் அவர்களை எதிர்கொண் "இப்படி வரவேண்டும்" என்று கூறி வழிகாட்டி அ விடுதியிலிருந்து சற்றுத் தள்ளியிருந்த வேறொரு விடுதிக் அவ்விருவரையும் அழைத்துச் சென்றார்கள்.

அந்த விடுதியில் அதிக சௌகரியங்கள் இல்லை யென்றாலும், தாங்கள் தங்குவதற்கு வேண்டிய வசதிக செய்யப் பட்டிருப்பதையும், தங்களுடைய கூடைகளு பைகளும் முன்னதாகவே அந்த விடுதியின் அறையி வைக்கப்பட்டிருந்ததையும், பயண அலுப்புத் தீரத் தாங்க நீராடக்கூட ஏற்பாடு செய்யப்பட்டிருந்ததையும் கவனித் இளநங்கை, பெரும் போர்களில் ஈடுபட்டுள்ள பாண்டி மன்னன் சின்னஞ்சிறு காரியங்களில் கூட நுட்பமா கவனம் செலுத்தும் திறனுடையவரென்பதைப் புரிந் கொண்டாள். அவர்களை அழைத்துச் சென்று அந் விடுதியில் விட்ட வீரன் நீராட்ட அறையில் அண்டா களில் நீர் நிரப்பப்பட்டிப்பதாகவும், நீராட்டத்தை முடித்துக் கொண்டால் வெகு சீக்கிரம் உண வருமென்றும் கூறிச் சென்றான்.

அந்தச் சிறு விடுதியின் முகப்பு அறையையும் மற் இரண்டு தாழ்வரைகளையும் பார்வையிட்ட இளநங்கை அது வீரர்கள் தங்குவதற்காக ஏற்பட்ட விடுதியே தவிர, நீண்ட காலத்துக்குக் குடும்பங்கள் தங்குவதற்காக ஏற்பட்ட விடுதியல்லவென்பதை உணர்ந்துகொண்டாள். பிறகு முத்துக்குமரியுடன் நீராட்டத்தை முடித்துக்கொண்டு விடுதியின் வாயிலுக்கு வந்தாள். அந்த விடுதி மலைச் சரிவின் மேற்பகுதியில் கட்டப்பட்டிருந்ததால், கோட்டை பூராவையுமே பார்க்க முடிந்தது அவளால்.

அந்தக் கோட்டை அப்படியொன்றும் பெரிதல்ல அதனுள்ளே ஐம்பதுக்குக் குறைந்த வீடுகளே இருந்ததைக் கவனித்த இளநங்கை, அது ஓர் எல்லைப்புறப் பாதுகாப்புத் தளமே தவிர, நீண்ட போரையோ, முற்றுகையையோ



தாங்கவல்லதல்ல வென்பதையும் புரிந்துகொண்டாள். கோட்டை மதில் பெரிதாகவும், உள்ளிருந்த சுமார் ஐம்பது வீடுகளையும் புரவிக் கூடங்களையும் வளைத்து ஓடியதா னாலும் பெரும்படை ஏதாவதொன்று அதைச் சூழ்ந்து கொண்டால் உள்ளிருக்கும் படை பதினைந்து நாட்களுக்கு மேல் சமாளிக்க முடியாதென்பதை புரிந்துகொண்டாள். ஆனால் அந்தக் கோட்டை மலைச்சரிவில் கட்டப் பட்டிருந்ததாலும், அதைச் சுற்றிலும் காடு அடர்த்தியாயிருந்த தாலும் அதைச் சூழ்வது மட்டும் அதனை சுலபமல்லவென் பதை உணர்ந்துக்கொண்ட இளநங்கை, "எப்படியும் இந்தக் கோட்டை அதிக வலுவுள்ளதல்ல. இங்கு எதற்காகப் பாண்டிய மன்னர் உறைகின்றார்? அதிகப்படியாக இங்கிருந்தால் ஆயிரம் வீரர்களுக்கு மேல் இருக்கமுடியாது. அந்த ஆயிரம் வீரர்களைக் கொண்டு சேர நாட்டை எப்படி அழிப்பார்?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டாள். மன்னன் அதிகப்படியாகக் கனவு காண்பதாகவே பட்டது. அவளுக்கு, ஆனால், கடைசியில், "கனவு காண்பதற்குத் தகுந்த இடம்தான் இது," என்று மட்டும் சொல்லிக் கொண்டாள் கொற்கைக் கோட்டைக் காவலன் மகள்.

விடுதியின் முகப்பில் நின்ற அவள் கண்கள் முன்பு பெரும் கனவுலகமாகவே அக்கோட்டை விரிந்தது. இரவில் கோட்டையின் மூலைகளிலும் நடுவிலும் தெரிந்த பெரும் பந்தங்கள் காற்றில் அசைந்து அசைந்து எதிரிகளை விழுங்கத்துடிக்கும் தீ நாக்குகளெனத் துடித்தன. அவளிருந்த விடுதிக்குப் பின்புறத்தில் ஓர் அருவி சலசல வென்று ஓடிக்கொண்டிருந்ததுகூடக் கொற்கைக் கோட்டைக் காவலர் மகளின் காதில் விழுந்தது. கோட்டையை அணைத்துப் பிறர் கண்களிலிருந்து பாதுகாப்பதுபோல் பெரிதாக எழுந்து கோட்டையை நோக்கித் தலைகளைக் கவித்துக் கொண்டிருந்த மரங்களி லிருந்த மலர்கள் ஒன்றிரண்டு மட்டும் கண்ணுக்குப் புலனாயின. அப்பொழுதே வானத்தில் உதயமாகிய நான்காம் தேய்பிறை மதி, தனது வெண்மைக் கிரணங்களால் அந்தக் கோட்டையை முழுதுமே

ஆக்கிரமித்து அக்கோட்டை தன் வமிசத்தைச் சேர்ந்தது என்று உரிமை கொண்டாடியது. சொத்து தனது என்ற காரணத்தால் அந்த பழுதுபட்டுப் போன கோட்டை விடுதியின் பூச்சு சரிந்த இடங்களையும் தடவிக்கொடுத்து அவற்றுக்கும் மெருகு கொடுத்துக் கொண்டிருந்தது. சுற்றிலுமிருந்த மலைகளும், எதிரே மிக உயர எழுந்து வெண்மதிக் கிரணத்தில் பளபளத்த அகத்தியர் பேருச்சியும் இளநங்கையின் கண்களுக்கு மட்டுமல்லாமல், இதயத்துக்கும் பேரின்பத்தை ஊட்டின.

கொற்கையின் முத்தங்காடியிலும், பொருநையின் கரையிலும் இரவில் நிலவில் உலவும் பழக்கமுள்ள இளநங்கைக்கு அந்தக் காட்சி பேரின்பத்தை அளித்ததானாலும், அவள் பக்கத்தில் நின்றிருந்த முத்துக்குமரியால் அதை அதிகம் ரசிக்க முடியவில்லை. அடுத்து வரப்போகும் போர்களைப் பற்றியும், இந்திரபானுவைப் பற்றியுமே அவள் நினைத்துக் கொண்டிருந்தாள். தந்தையிடம் பேசிய குறுகிய காலத்தில் இந்திரபானு யார் என்னவென்பதைப் பற்றி விசாரிக்கத் துடித்தாளானாலும், அவளுக்கு என்ன காரணத்தாலோ நா எழவில்லை. மறுநாளாவது அதற்கடுத்த நாளாவது தந்தையை அதைப்பற்றித் துணிந்து கேட்டுவிடுவதென்று தீர்மானித்த முத்துக்குமரிக்கு அந்த வாய்ப்பும் கிடைக்கவில்லை.

அடுத்த இரண்டு நாட்கள் இளநங்கை அந்தக் கோட்டைப் பகுதியையும் சுற்றுப்புறத்தையும் நன்றாகச் சுற்றிப் பார்த்தாளானாலும், முத்துக்குமரி அவளுடன் செல்லாமல் தனக்களிக்கப்பட்ட விடுதியிலேயே தங்கினாள். விடுதிக்குப் பின்னால் ஓடிய அருவியில் இளநங்கை நீராட அழைத்தும் அவள் செல்லவில்லை. அவள் மனச் சலனத்தை இளநங்கை அறிந்தேயிருந்தபடியால் முத்துக் குமரியை அவள் வற்புறுத்தவில்லை. இரண்டு நாட்களாக முத்துக்குமரியின் சார்பாக இளநங்கையே முயன்று பார்த்து மன்னனைச் சந்திக்க முடியவில்லை. அவனிருந்த விடுதிக்கு மறுநாள் சென்ற முத்துக்குமரியிடம் மன்னர் அவசர அலுவ



லாகக் கோட்டையிலிருந்து வெளியே சென்றுவிட்டதாகக் கூறினார்கள்.

"எங்கு சென்றார்?" என்று வினவினாள் பாண்டியன் மகள்.

"தெரியாது தேவி, " என்று பதில் வந்தது வீரர்களிடமிருந்து.

அதனால் வெகுண்டு திரும்பிய முத்துக்குமரிக்கு ஆறுதல் கூறிவிட்டு, அன்று மாலை இளநங்கையே சென்று மன்னன் எங்கு சென்றானென்று சாமர்த்தியமாக விசாரித்தாள். ஆனால் அவள் சாமர்த்தியம் வீரர்களிடம் பலிக்கவில்லை.

"தெரியாது தேவி, " என்ற பதிலை ஒரே சீராக எல்லா வீரர்களும் கிளிப்பிள்ளை போலவே கூறினார்கள்.

தாங்களிருந்த விடுதியிலிருந்து மன்னன் விடுதியைப் பார்ப்பது எளிதாகையால், அதன்மீது கண் வைத்தால் மன்னன் வரும்போதோ, போகும்போதோ கண்டு பிடித்து விடலாமென நினைத்தாள் இளநங்கை. ஆனால், அவள் நீண்ட நேரம் இரவில் கூட கண் விழித்துப் பார்த்தாள். சுந்தரபாண்டியன் வருவதோ, போவதோ தெரியவில்லை. கோட்டைக் கதவு அடிக்கடி கிரீச்சிட்டுத் திறந்து இரவிலும், பகலிலும் பலரை உள்ளேயும் வெளியேயும் விட்டுக் கொண்டிருந்தது. அந்தக் கிரீச்சுச் சத்தம் கேட்டபோதெல்லாம் இளநங்கை வெளியே ஓடிப்போய்ப் பார்த்தாள். பலர் வந்தார்கள். பலர் போனார்கள். ஆனால் சுந்தரபாண்டியன் மட்டும் அவள் கண்களில் தென்படவில்லை. மூன்று நாட்கள் கழித்தே அவர்களிருவரும் மன்னனைச் சந்திக்க முடிந்தது. அப்பொழுதும் மன்னன் அவர்களிருந்த விடுதிக்கு வரவில்லை. தானிருந்த விடுதிக்கே கூப்பிட்டனுப்பினான்.

அவன் விடுதிக்குச் சென்ற இளநங்கையும், முத்துக்குமரியும் முகப்பு மண்டபத்தில், ஆயுதங்கள் நிரம்பிய அதே சூழ்நிலையில் அவனைச் சந்தித்தார்கள். அன்று மன்னன் முகத்தில் சிந்தனை பெரிதும் படர்ந்து

கிடந்தது. அத்தனை சிந்தனையிலும் அவன் இதழ்களில் லேசாகப் புன்முறுவல் துளிர்த்திருந்தது.

அவன் அருகில் அழைத்தும்கூடச் சற்றுத் தள்ளியிருந்த மஞ்சத்தில் உட்கார்ந்த முத்துக்குமரியை நோக்கிய சுந்தரபாண்டியன் சிங்கக் கண்களில் சிந்தனை அகன்று சிரிப்பு லேசாக உதிர்ந்தது. "கோபமா குமரி?" என்ற அரசன் தனது மஞ்சத்திலிருந்து எழுந்து இரண்டடி நடந்து அவள் அமர்ந்திருந்த மஞ்சத்தை தனது இருகைகளாலும் சரசரவென்று இழுத்துத் தனது மஞ்சத்தருகில் கொண்டுவந்தான்.

அப்பொழுதும் முத்துக்குமரி பேசவில்லை. மன்னன் இளநங்கையை நோக்கிக் கேட்டான். "இளநங்கை! முத்துக் குமரிக்கு என்ன கோபம்?" என்று.

இளநங்கை மெள்ளப் புன்முறுவல் காட்டினாள். "தந்தையைக் காணவில்லையே என்ற கோபம்," என்றும் கூறினாள்.

"இங்கிருப்பவன் தந்தையல்லவே," என்றான் சுந்தரபாண்டியன், துன்பப் புன்முறுவலுடன்.

"வேறு யார்?"

"பாண்டிய நாட்டு அரசன்," என்றான் சுந்தர பாண்டியன்.

இளநங்கையின் கண்கள் மன்னனைக் கூர்ந்து நோக்கின. அவன் உண்மையைச் சொல்வதாகவே தோன்றியது அவளுக்கு, இருப்பினும் கேட்டாள் இளநங்கை, "அரசனுக்கும் குடும்பம் உண்டல்லவா? மனைவி மக்கள் உண்டல்லவா? பாசம் உண்டல்லவா?" என்று.

சுந்தரபாண்டியனின் சிங்க விழிகளும் அவளைப் பதிலுக்குக் கூர்ந்து நோக்கின. அவன் பதிலும் திட்டவட்டமாகவும், விரிவாகவும் வந்தது. "உண்டு இளநங்கை! குடும்பமல்ல குடும்பங்கள் உண்டு, மனைவிமார்கள் அதிகமில்லையானாலும், மக்கள் நிரம்ப உண்டு. பாண்டிய நாட்டிலுள்ள அத்தனை குடும்பங்களும், என் குடும்பங்கள்; அத்தனை மக்களும் என் மக்கள். அவர்களுக்கு உணவு,



உடை, பாது காப்பு அத்தனையும் அளிக்கும் தந்தை நான். எனக்கென்று தனிக்குடும்பம் கிடையாது. நாட்டிலுள்ள மக்களுக்கு உழைக்கும் அளவுக்கு அரண்மனை நலனுக்கும் உழைக்க முடியும். ஆனால் இப்பொழுது அது சாத்தியமில்லை," என்ற சுந்தரபாண்டியன், "உங்களுக்கு இங்கு வசதி ஏதும் குறைவில்லையே?" என்று வினவினான்.

"இல்லை," என்றாள் இளநங்கை. அதற்குமேல் மன்னன் முன்பு ஏதும் பேசச் சக்தியற்றாள் இளநங்கை.

மன்னனே அவள் கருத்தை அறிந்திருக்க வேண்டும். ஆகவே கேட்டான் இளநங்கையை நோக்கி, "ஏதோ என்னைக் கேட்க விருப்பம் போலிருக்கிறது உங்களுக்கு" என்று.

இளநங்கை சற்றை துணிவுகொண்டு, "ஆம், பல விஷயங்களைப்பற்றிக் கேட்கவேண்டும்" என்றாள்.

அதற்கு மன்னனிடமிருந்து வந்த பதில் விசித்திரமாயிருந்தது. "இன்னும் இரண்டே நாள் பொறுக்கமுடியுமா?" என்று வினவினான் மன்னன்.

"முடியும்" என்றாள் இளநங்கை.

"இன்றிலிருந்து மூன்றாம் நாள் மாலை கதிரவன் மலை வாயிலில் விழுந்ததும் உங்கள் சந்தேகங்கள் அனைத்தும் நீங்கும், அத்தனைக்கும் பதில் கிடைக்கும்," என்ற மன்னன், காவலரை விளித்து உணவு கொண்டுவரச் சொல்லி அவர்களுடன் அருந்தினான்.

பிறகு அவர்கள் விடைப் பெற்றுக் கொண்டபோது மட்டும் மகளின் தோள்மீது கையை வைத்தவண்ணம் வாயிற்படி வரையில் நடந்துவந்து, "குமரி!" என்றான் ஆசையுடன்.

அந்தக் குமரியென்ற வார்த்தையைச் சொன்னபோது, அவன் கண்களில் பேரானந்தம் விரிந்ததைக் கண்ட இளநங்கை, உண்மையில் மகளிடம் மன்னனுக்கு மிகுந்த ஆசை இருப்பதாக நினைத்தாள். அதைப்பற்றி மீண்டும் தங்கள் விடுதியில் பிரஸ்தாபித்து, "குமரி என்று கூறப்பிடும் போது

உன்னை எத்தனை ஆசையாகக் கூப்பிடுகிறார் தந்தை!" என்று முத்துக்குமரியிடம் கூறினாள்.

"உனக்கு மன்னரைப் புரியாது!" என்றாள் முத்துக்குமரி கோபத்துடன்.

"இதில் புரியாததற்கு என்ன இருக்கிறது?"

"அவர் குமரி என்னும்போது குமரிமுனையை நினைக்கிறார். முத்து என்னும்போது கொற்கை முத்தை நினைக்கிறார். அந்த இரண்டையும் இணைத்துத்தான் எனக்குப் பெயரையும் சூட்டியிருக்கிறார். அந்த இரண்டையும் நினைத்துத்தான் ஆனந்தப்படுகிறார்," என்றாள் முத்துக்குமரி.

இளநங்கை வியப்பின் எல்லையை அடைந்தாள். மன்னன் வேறு, பாண்டியநாடு வேறு அல்ல என்பதை உணர்ந்தாள் அவள். ஆகவே தங்கள் கேள்விக்கு மன்னன் மூன்றாவது நாள் மாலையில் பதில் சொல்வதாகக் கூறினானே? எப்படிக் கூறுவான், என்ன கூறுவான் என்றும் எண்ணி வியந்தாள் அவள்.

மூன்றாம் நாள் மாலை பதில் கிடைத்தது குறித்த நேரத்தில், மன்னனிடமிருந்தல்ல. மற்றொருவன் பதிலைக் கொண்டுவந்தான். அவன் பதிலைக் கொண்டு வந்த சமயத்தில் கோட்டைக்கப்பால் தொலைவிலிருந்து பெரும் முரசுகள் சப்தித்தன. அடுத்த அரை ஜாமத்தில் கோட்டைக் கதவு திறக்கப்பட்டது; புரவிகள் பல பேரொலி கிளப்பிக் கொண்டு கோட்டைக்குள் பாய்ந்து வந்தன.

## அத்தியாயம் 26

# புரவி சோதனை, இளவரசி வேதனை

**பா**ண்டிய நாட்டு மக்கள் குடும்பங்களுக்கும் தன் சொந்தக் குடும்பத்துக்கும் எந்த விதமான வித்தியாசத்தையும் கற்பிக்காதவனும், சமநோக்குள்ளவனும், எம்மண்டலமும் கொண்டருளப் போகின்றவனுமான சுந்தரபாண்டியத் தேவனை இரண்டாம் முறையாகச் சந்தித்துப் பேசியதிலிருந்து சரியாக மூன்றாவது நாள் மாலை இளநங்கையின் பல கேள்விகளுக்கு விடை கிடைத்ததானாலும், அந்த விடை அத்தகைய மனிதன் மூலம் அத்தகைய சூழ்நிலையில் கிடைக்குமென்பதை எதிர்பார்க்கவேயில்லை. கோட்டைக் காவலன் மகள் மலைச்சரிவிலிருந்த விடுதித் தாழ்வரையிலிருந்து வழக்கம் போல அன்றும் அவள் சுற்றிலும் எழுந்திருந்த மலைப்பிராந்திய எழிலைப் பருகிக்கொண்டிருந்தாள். கிருஷ்ணபட்சம் நன்றாக ஏறி விட்டதன் விளைவாகச் சுற்றிலுமிருந்த மலையெழுச்சிகள் கன்னங்கரேலென்றும், பயங்கரமாகவும் காட்சியளித்தன. சந்திரனில்லாத வானமும் தான் மலைகளின் கருமைக்குக் குறையவில்லை யென்பதைச் சுட்டிக்காட்டக் கருமை தட்ட முயன்றும் நட்சத்திரங்கள் பல ஒளி விட்டதன் காரணமாக அந்த முயற்சியில் தோல்வியே அடைந்துகொண்டிருந்தது. அதன் தோல்வியைக் குறைத்துக் காட்டவோ என்னவோ அடிக்கடி இரண்டொரு மேகங்கள் குறுக்கே ஓடிச் சில நட்சத்திரங்களை மறைத்தன. இன்னும் சில மேகங்கள் மலையுச்சியில் தொக்கி நின்று விண்ணை வேடிக்கை பார்த்தன.

சுற்றிலும் இருள் விளைவித்த பயங்கரச் சூழ்நிலையைச் சிறிதும் லட்சியம் செய்யாத அந்தச்

சிறுகோட்டை, பந்தங்கள் பலவற்றையும் விளக்குகள் பலவற்றையும் தாங்கிக்கொண்டு, எந்தச் சூழ்நிலையிலும் அச்சமெய்தாத சுந்தரபாண்டியனைப் போலவே ஜொலித்துக் கொண்டிருந்தது. மாலை நெருங்கியதுமே கொளுத்தப்பட்ட பந்தங்கள் இரவு மூண்டதும் அதிக வெளிச்சத்தைப் பெற்றதைக் கண்ட இளநங்கை, "இந்த கோட்டையை அதோ அந்த மலையுச்சியிலிருந்து பார்த்தால் இதுவே இந்த மலைகளுக்கு நடுவே ஒரு தனி விளக்குப்போல் தெரியுமே," என்று அந்தக் காட்சியைத் தன் அகக்கண்களால் கண்டாள். இளவேனிற் காலத்தின் அந்த இரவு, மலை சூழ்ந்த அந்தப் பகுதியில் சின்னஞ்சிறு தென்றலையும் கிளப்பிப் பேரின்பத்தை அளித்துக் கொண்டிருந்ததை அனுபவித்த இளநங்கை, தானிருக்கும் நிலை, நாட்டு நிலை, அனைத்தையுமே மறந்து இன்பப் பெருமூச்சு விட்டாள். அந்த இன்பப் பெருமூச்சை அவள் இருமுறை விட்டு வாங்கிய நேரத்தில் எங்கிருந்தோ முரசுகள் மெள்ள முழங்கின.

முதலில் ஒற்றை முரசு கிளப்பிய மெல்லிய ஒலியுடன் வேறு மூன்று முரசுகள் ஒலியும் ஒவ்வொன்றாகக் கிளம்பிச் சேர்ந்துகொண்டன. முதலில் ஒற்றை முரசும் பிறகு இரண்டு முரசுகளும் அடுத்தபடி மூன்றும் கடைசியாக நான்கு முரசுகளும் ஒலிக்க முற்பட்டதன்றி, ஒலியில்கூட அந்தகைய தொடர்ச்சியான ஓர் அபிவிருத்தி இருக்கவே செய்தது. ஆரம்பத்தில் ஒலிகள் மெல்ல மெல்லக் கேட்டாலும் பிறகு அவை பெரிதும் கனத்து அந்த மலைப்பகுதியை ஊடுருவி வந்தன. அந்த விந்தையைக் கண்ட இளநங்கை பெரிதும் வியந்தாள். அவை கொட்டுத்தளத்தின் முரசுகள் என்பதில் அவளுக்குச் சிறிதும் சந்தேகமில்லை. ஆனால் இரு மலை எழுச்சிகளுக்கு அப்பாலிருக்கும் கொட்டுந்தளமுரசுகள் எப்படி அத்தனை திட்டமாக, பெரிதாக, விவரமாக அவ்வளவு தூரத்துக்குக் கேட்கின்றன என்பது மட்டும் புரியவில்லை அவளுக்கு. ஆனால் ஒன்று மட்டும் புரிந்து கொண்டாள் கோட்டைக் காவலன் மகள். கொட்டுந்தள



முரசுகளை அமைத்தவன் எவனானாலும் அவன் மலைகளின் நுணுக்கங்களையும், பூதத்துவ சாத்திரத்தையும், ஒலி வீச்சு நுட்பங்களையும் உணர்ந்தவனாயிருக்க வேண்டுமென்ற உண்மைதான் அது. தமிழர்கள் எப்படி அந்த நுட்பக் கலைகளில் சிறந்து விளங்குகிறார்களென்பதைக் கண்டும் நினைத்தும் பரவசப்பட்ட இளநங்கை, தனது இனத்தைப் பற்றிப் பெருமிதம் கொண்டாள்.

அந்தப் பெருமிதத்துக்குச் சுருதி கூட்டுவதுபோல் கொட்டுந்தளமுரசுகளின் ஒலி வரவரப் பலப்பட்டது. அந்த ஒலி வந்த திசையில் கண்களைத் திருப்பி நின்ற இளநங்கை திடீரென்று அந்தத் திசையில் வேறு ஓர் ஒலியும் கேட்டதைக் கண்டு திகைப்புற்று நின்ற இடத்திலேயே நின்று விட்டாள். சில விநாடிகள் நின்றதும் அந்த ஒலி பலப்படவே, "குமரி! இங்கு வா! இங்கு வா," என்று உள்ளேயிருந்த முத்துக்குமரியையும் வெளியே அழைத்தாள். இளநங்கை அப்படிப் பதற்றத்துடன் அழைத்ததால், உள்ளேயிருந்து விடுவிடுவென்று வெளித் தாழ்வரைக்கு வந்த முத்துக்குமரி, "என்ன இளநங்கை! ஏன் அழைத்தாய்?" என்று வினவினாள்.

இளநங்கையின் கண்கள் எச்சரிக்கையுடன் அவளை நோக்கித் திரும்பின. "உஷ்! சத்தம் போடாதே, உற்றுக் கேள்," என்றாள்.

முத்துக்குமரியின் செவிகளில் அப்பொழுது முரசொலிகள் நன்றாக விழுந்ததால், "உற்று எதற்காகக் கேட்கவேண்டும், முரசொலிதான் நன்றாகக் கேட்கிறதே," என்றாள் இளநங்கையை நோக்கி.

"முரசொலிகளையல்ல நான் சொல்வது. அதோ அந்த் திசையில் கவனத்தைத் திருப்பிக் கேள்," என்ற இளநங்கை, சொன்னதோடு நில்லாமல், அவள் தோளைப் பிடித்தும் அந்தத் திசையை நோக்கித் திருப்பினாள்.

முத்துக்குமரி அவள் சுட்டிக் காட்டிய மலைப் பகுதியை நோக்கிக்கொண்டு நின்றிருந்தாள். சில விநாடிகளில் அவள் காதிலும் அந்த ஒலி விழவே அவள்

வியப்புடன் இளநங்கையை நோக்கித் திரும்பி, "ஆமாம் இளநங்கை! அதே ஒலிதான்," என்று கூறினாள் குரலிலும் வியப்பு மிதமிஞ்சி ஒலிக்க.

அவள் அப்படிச் சொல்லி நின்ற சமயத்திலும் பிறகு கொட்டுந்தள விடுதிக்குப் பின்புறமும் கேட்ட அதே புரவியின் குளம்பொலி திட்டமாகவும், 'டக்டக்' என்று ஒரே சீராகவும் கேட்கலாயிற்று. அதிலேயே மனதையும் காதையும் கொடுத்து நின்ற மங்கையரிருவரும் அந்த ஒலி வரவரக் கிட்டே நெருங்குவதையும், துரிதப்பட்டு விட்டதையும் உணர்ந்து கொண்டதால், அந்தக் குதிரையை நடத்துபவன் யாராயிருந்தாலும், அவன் புரவி வேகத்தை அதிகப்படுத்தி விட்டானென்பதையும் அத்தகைய இருட்டில் மலைக்காட்டுப் பாதையில் குதிரையைச் செலுத்தக் கூடியவன் அசாதாரண மனிதனாக இருக்க வேண்டுமென்பதையும் தீர்மானித்துக் கொண்டார்கள்.

அவர்கள் அதைப்பற்றிச் சிந்தனைகளைப் பலபடி எழுப்பிக் கொண்டிருந்த சமயத்தில், அந்தப் புரவியின் குளம்படி வேறு பல புரவிக் குளம்படிகளுடன் கலந்து விட்டதை உணர்ந்தார்கள். சற்று நேரத்திற்கெல்லாம் புரவிகளின் குளம்பொலிகள் மிக வலுத்து விட்டதன்றி அத்தனை இருட்டிலும் மலைப்பாதையில் புரவிகள் பல பாய்ந்து வருவதும் புலனாயிற்று. அடுத்த சில நிமிடங்களில் கோட்டைக் கதவுகள் பலமாகத் திறக்கப் படப் புரவிகள் பல வெகு வேகத்துடன் கோட்டைக்குள் பாய்ந்து வந்தன. அதிலிருந்த தலையாய புரவி மன்னனின் சாம்பல் நிறப் புரவிதானென்பதை உணர்ந்த மங்கையரிருவரும் பிரமித்தார்களென்றால், அதில் வந்த வீரனைக் கண்டதும் இருவரும் பேரதிர்ச்சி மட்டுமல்ல பெருங்குழப்பமும் அடைந்தனர். அந்தப் புரவி மீது ஆரோகணித்து, மற்ற வீரர்களுக்கெல்லாம் முன்பாகக் காற்றைப்போல் கோட்டைக்குள் பாய்ந்து வந்த வாலிபனின் முகத்தை முதலில் இளநங்கையே கண்டாள். கோட்டைப் பந்தங்களொன்றின் வெளிச்சம் அந்த வாலிபனின் முகத்தில்



விழவே முத்துக்குமரியின் கையைச் சற்று வலிக்கவே பிடித்த இளநங்கை, "குமரி! அதோ பார்! அதோ பார்! பார்! பார்" என்று கையால் அவனைச் சுட்டிக் காட்டினாள்.

முத்துக்குமரியின் அழகிய விழிகள் அவனை உற்று நோக்கின. விரிந்தது வியப்பா, மகிழ்ச்சியோ, வெறுப்பா என்று தீர்மானிக்க முடியாத உணர்ச்சிச் சாயையொன்று அவள் முகத்தில் விரிந்தது. புரவியிலிருந்து கீழே அநாயாசமாகக் குதித்த அந்த வாலிபன், புரவிக் கடிவானக் கயிறுகளைப் பக்கத்திலிருந்த வீரனிடம் எறிந்துவிட்டுச் சுற்றுமுற்றும் ஒரு விநாடி நோக்கினான். மலைச் சரிவிலிருந்த மங்கையர் மீது அவன் திருஷ்டி விழவே, விடுவிடு என்று அந்த விடுதியை நோக்கி அதி உல்லாசமாக நடந்தும் வந்தான். அவன் வருகையைக் கவனித்த முத்துக்குமரி சட்டென்று தன் உடலைத் திருப்பிக்கொண்டு உள்ளே சென்றுவிட்டாள். துரிதமாக விடுதிக்கும் கோட்டை நடுப்பகுதிக்கும் உள்ள இடைவெளியைத் தாண்டி விடுதியின் படிகளில் ஏறி வந்த வாலிபனை இளநங்கையே எதிர்கொண்டாள். "வாருங்கள்! இப்பொழுது எங்களை எங்குகொண்டு செல்ல வந்திருக்கிறீர்கள்?" என்று வினவினாள் சினத்துடன்.

இந்திரபானுவின் விளையாட்டு முகத்தின் கண்களும் விளையாட்டு நகைப்பை உதிர்த்தன. ஒரு விநாடி இளநங்கையையும் நோக்கி உட்புறத்தையும் நோக்கிவிட்டு, "முறை சரிதான்," என்றும் கூறி விஷமப் புன்முறுவலும் செய்தான்.

இளநங்கைக்கு அவன் விளையாட்டு வேப்பங்காயாயிருந்தாலும் அவனிடமிருந்து பல விஷயங்களை அறிய விரும்பிய அவள், "எந்த முறையைக் குறிப்பிடுகிறீர்கள்?" என்று உணர்ச்சிகளை உள்ளடக்கிக்கொண்டு வினவினாள். கொட்டுந்தளத்திலேயே அவன் குற்றமற்றவனென்று நினைத்த இளநங்கைக்கு, அப்பொழுதும் அந்த நினைப்பு மாறாததால் அவனைத் தாழ்வரையின் கட்டையில்

உட்காரும்படி சைகை செய்து, தானும் ஒருபுறம் அமர்ந்து தூணொன்றில் சாய்ந்துகொண்டாள்.

இந்திரபானு உட்காராமல் அவளை நோக்கி நின்று கொண்டே சொன்னான், "அரண்மனை முறையைச் சொன்னேன்," என்று.

"அரண்மனை முறையா எனக்கு விளங்கவில்லை," என்றாள் இளநங்கை.

"அரண்மனையில் அரசகுமரிகளைப் பார்ப்பது பெரும் கஷ்டம். அப்படிப் பார்க்க வாய்ப்பிருந்தாலும், முதலில் அவர்கள் தோழிகளைச் சந்தித்து அவர்கள் அனுமதி பெற்றுப் பிறகுதான் பார்க்கமுடியும்," என்று கூறிய இந்திரபானு மெல்ல நகைத்தான்.

அவன் துடுக்குத்தனம் இளநங்கையைப் பிரமிப்பில் ஆழ்த்தியது. முத்துக்குமரி உள்ளே சென்று விட்டதையே அவன் குறிப்பிடுகிறானென்பதைப் புரிந்துகொண்டாலும், புரியாததுபோல் பாசாங்கு செய்த இளநங்கை, "விளக்க மாகச் சொல்லுங்கள்," என்று உத்தரவிட்டாள்.

புரவியிலிருந்து இறங்கியபோது, இந்தத் தாழ்வரையில் தங்களை மட்டுமின்றிப் பாண்டிய குமாரியையும் பார்த்தேன். நான் வருவதற்குள் உள்ளே மறைந்துவிட்டார் கள். இனி நீங்கள் அனுமதித்தால்தான் நான் அவர்களைப் பார்க்கமுடியும்," என்றான் இந்திரபானு.

அவன் குரலில் பெரும் விஷமம் இருந்ததையும் மேலுக்கு அதில் மரியாதை தொனித்தாலும், உண்மையில் உள்ளூர அவன் தங்களைப் பார்த்து நகைக்கிறானென்ப தையும் புரிந்துகொண்ட இளநங்கை, "அப்படித்தான் வைத்துக் கொள்ளுங்கள் வீரரே! உங்களுக்கு அரச குமாரியைப் பார்க்க அவசியம் இருக்கிறதா?" என்று வினவினாள் உஷ்ணத்துடன்.

"இல்லை, எந்த அவசியமுமில்லை. உங்களைத்தான் பார்க்கச் சொன்னார் மன்னர்," என்றான் இந்திரபானு.



இளநங்கையின் விழிகளில் பெருவியப்பு விரிந்தது. "என்ன மன்னரா!" என்று வினவினாள், வியப்பு குரலிலும் ஒலிக்க.

"ஆம்!" இந்திரபானு விளையாட்டாகவே பதில் சொன்னான்.

"உண்மையாக மன்னரைச் சந்தித்தீர்களா?" என்று வினவினாள் இளநங்கை.

"சந்திக்காவிட்டால் அந்தப் புரவி எனக்கேது?" என்று கேட்டான் இந்திரபானு, சற்றுத் தூரத்தில் வீரனொருவன் பிணைத்திருந்த சாம்பல் நிறப் புரவியைச் சுட்டிக்காட்டி.

தானும் முத்துக்குமரியும் வந்த நாளன்று சாம்பல் நிறப்புரவி கோட்டையிலிருந்தது நினைவுக்கு வரவே, "ஆம்! ஆம் இந்தப் புரவி இங்குதானிருந்தது," என்றும் கூறினாள்.

இந்திரபானுவின் கண்கள் திடீரெனப் பளிச்சிட்டன. "அப்படி சகஜமாக நினைக்கவேண்டாம் தேவி. இதன்மீது எல்லோரும் ஆரோகணிக்க முடியாது. மன்னர், இளவரசர் நான் மூவர்தான் இதன்மீது அமர முடியும். அதுவும் புரவியை எனக்கு இளவரசர் அறிமுகப்படுத்தியிருப்பதால் தான் நான் ஏறவும் அது அனுமதிக்கிறது" என்றான் இந்திரபானு பெருமையுடன்.

"புரவி அனுமதிக்கிறதா?" என்று கேட்டாள் இளநங்கை.

"ஆம் தேவி! அது அரபு நாட்டு சாதிப் புரவி. ஓரே மனிதனுக்குத்தான் அடிமையாயிருக்கும். அவன் அனுமதித் தால்தான் பிறரை ஏறவிடும். முதலில் மன்னர் இதை ஆண்டுவந்தார். பிறகு இளவரசருக்கு அறிமுகப்படுத்திப் பரிசாகக் கொடுத்தார். இளவரசர் எனக்கு அறிமுகப் படுத்தினார்" என்றான் இந்திரபானு. அத்துடன் மேலும் சொன்னான். இல்லையெனில், கொட்டுந்தளத்தில் நானும் மன்னரும் இதை மாறி மாறி உபயோகித்திருக்க முடியாது. உங்களை வீரரவியின் வீரர்கள் சிறை செய்து வந்தபோது உங்களுக்குத் தீங்கு எதுவும் நேராதிருக்க உங்கள்மீது ஒரு கண்ணை வைத்துக்கொண்டு மன்னர் மலைக்காட்டில்

வந்திருக்க முடியாது. பிறகு உங்களை விடுதியின் இரவில் சந்தித்து, நான் ஓலை வாங்கியிருக்கவும் முடியாது."

இதைக் கேட்ட இளநங்கை நீண்ட நேரம் அவனைப் பிரமித்துப் பார்த்துக்கொண்டிருந்தாள். பிறகு சொன்னாள் "நீங்கள் சொல்வதெல்லாம் விசித்திரமாயிருக்கிறது. வீரரே! உங்கள் செய்கைகளும் விசித்திரமாயிருக்கின்றன உங்களை இளவரசருடன் முதலில் பார்க்கிறேன். பிறகு வீரரவியுடன் பார்க்கிறேன். இப்பொழுது மன்னர் கோட்டையில் பார்க்கிறேன். நீங்கள் நண்பரா, துரோகியா? நீங்கள் யார் பக்கம் இருக்கிறீர்கள்? ஏதும் புரியவில்லை எனக்கு" என்று.

இந்திரபானுவின் விளையாட்டு முகத்தில் அனுதாபம் லேசாகத் துளிர்விட்டது. "என்னைத் துரோகியென்று இளவரசி சொன்னது உங்களுக்கு நினைப்பில்லையா?" என்று வினவினான் கடைசியில்.

"ஆம் நினைப்பிருக்கிறது."

"அதுதான் உண்மை.

"எப்படி?"

"நான் கொற்கையில் புறப்படும்போது சேர மன்னனுக்குத் துரோகி, கொட்டுத்தளம் வந்தவுடன் பாண்டிய நாட்டுக்குத் துரோகி. இப்பொழுது கொட்டுந்தளம் பாண்டியர் வசமாகிவிட்டதால், நான் மீண்டும் சேரனுக்கே துரோகியாகிவிட்டேன்" என்றான் இந்திரபானு.

இளநங்கை அவனைக் கூர்ந்து நோக்கினாள். சந்தர்ப்பவாதியென்று ஒரு வீரன் தன்னைச் சொல்லிக் கொள்வது பெருவியப்பாயிருந்தது அவளுக்கு. "சமயோசிதப்படி நடப்பீர்களா நீங்கள்?" என்று வினவவும் செய்தாள் அவள்.

"முன்னேற இஷ்டப்படுபவனுக்கு அதுதான் முக்கிய லட்சணம் தேவி," என்றான் இந்திரபானு. அவன் விளையாட்டு முகத்தில் எந்தவித வெட்கமோ, பயமோ தெரியவில்லை, இதைச் சொன்னபோது.



"பல விஷயங்களை நான் உங்களைக் கேட்கவேண்டியிருக்கிறது" என்று துவங்கிய இளநங்கையை இடையில் வெட்டிய இந்திரபானு "தேவி நாலைந்து நாழிகைக்கு என்னை மன்னியுங்கள். நீண்ட தூரம் பயணம் செய்து வந்திருக்கிறேன். நீராடி வேற்றுடை உடுத்து வருகிறேன்" என்று கூறி விடை பெற்றுக்கொண்டு சென்றான்.

அவன் களைத்திருக்கிறானென்பதை அவன் முகத்தில் கொட்டிய வியர்வையிலிருந்தே புரிந்துகொண்ட இளநங்கை அவனுக்கு மறுப்பு ஏதும் சொல்லவில்லை. அவன் போக்கு ஏதும் அவளுக்குப் புரியவில்லையே தவிர அவன் துரோகியாகப் புலப்படவில்லை அவளுக்கு. ஆனால் முத்துக்குமரி அப்படி நினைக்கவில்லை. "இங்கு யாரையோ காட்டிக் கொடுக்கத்தான் வந்திருக்கிறார் இவர். இவர் சொன்னதெல்லாம் பொய்!" என்றாள் இளநங்கையிடம்.

"அப்படியா!" என்று கேட்டாள் இளநங்கை, முத்துக்குமரியின் ஆவேசத்தைத் தடுக்கமுடியாமல்.

"ஆம். புரவியைப்பற்றிச் சொன்னதிலிருந்து அத்தனையும் பொய். புரவியை அறிமுகம் செய்துவைக்க வேண்டுமாம். மூன்று பேர்தான் ஏற முடியுமாம்," என்று சீறிய முத்துக்குமரி மேலே எதுவும் பேசவில்லை.

நாழிகைகள் ஓடின.

இந்திரபானு சொன்னபடி ஐந்து நாழிகையில் வரவில்லை.

"நான் என்ன சொன்னேன்? அவர் வர மாட்டார். சொல்வதெல்லாம் பொய். இங்கு வா. முதலில் பொய்யை நிரூபிக்கிறேன்," என்று இளநங்கையின் கையைப் பிடித்து இழுத்து வந்து வெளித்தாழ்வரையில் நிற்கவைத்தாள் முத்துக்குமரி.

"இங்கேயே இரு இளநங்கை. அந்த மூன்று பேரைத் தவிர யாரும் ஏற முடியாத புரவியை நான் ஏறிக் காட்டுகிறேன். இந்தக் கோட்டையின் நடுவிடத்தில் எத்தனை

முறை வலம் வருகிறேன் பார்" என்று கூறிவிட்டு விடுவிடு என்று படிகளில் இறங்கி ஓடினாள்.

தூரத்தில் வெளியிடத்துப் புல்லில் கட்டப்பட்டிருந்த சாம்பல் நிறப் புரவியை நடுவெளிக்கு இழுத்து வந்தாள் பிறகு கடிவாளக் கயிற்றைப் பிடித்து ஒரே தாவில் அதன் மீது ஏறினாள். அவ்வளவுதான் அந்தப் புரவி திடீரென்று துள்ளி எழுந்தது. உடலை இருமுறை பேயாட்டமாக ஆட்டியது

இருமுறை பெரிதாகக் கனைத்து, மூன்றாம் முறை ஆகாயத்தை நோக்கித் துள்ளி விர்ரென்று சுழன்று உடலை ஒருமுறை உலுக்கவே, முத்துக்குமரி பலமாக அதன் முதுகி லிருந்து வீசியெறியப்பட்டாள்.

அது இருமுறை சுழன்றபோது பயத்தின் வசப்பட்ட அவள் தன்னைக் குதிரை விசிறியதும் தரையைத் தொட்டால் தனது எலும்புகளின் இரண்டு மூன்றாவது உடைந்துபோகும் என்று தீர்மானித்து அச்சத்துடன் புரவி முதுகிலிருந்து தரையை நோக்கிப் பறந்தாள்.

ஆனால், அடுத்த வினாடி அவளை இரு வலிய கரங்கள் தாங்கிக்கொண்டன. இந்திரபானுவின் விளை யாட்டுவிழிகள் அவள் விழிகளைச் சந்திக்கவும் செய்தன.

"மன்னனைச் சேர்ந்த யாரையும் சோதிக்க முயல்வது ஆபத்து தேவி" என்ற அவன் சொற்கள் அவளை நோக்கி குற்றம் சாட்டின. அப்படி குற்றம் சாட்டிய பின்பும் திமிற முயன்ற இளவரசியை அசையவிடாமல், கேவலம் ஆட்டுக் குட்டியைத் தூக்குவதுபோல் தூக்கிக்கொண்டு மலைச் சரிவிலிருந்து விடுதியை நோக்கி வேகமாக நடந்தான் அந்த விளையாட்டுப் பிள்ளை.

அத்தியாயம் 27

# பொன்னிறக் கால்கள், பொலிவுற்ற முகம்

மன்னனின் சாம்பல் நிறப் புரவியால் மிக முரட்டுத் னமாக வீசியெறியப்பட்ட முத்துக்குமரியைத் தனது இரு கைகளிலும் தாங்கிப் பிடித்துக்கொண்டு, மன்னரைச் சேர்ந்த யாரையும் சோதிக்க முயல்வதில் ஆபத்து இருக் றதென்று உணர்த்திக்கொண்டும், கேவலம் சின்னஞ்சிறு ஆட்டுக்குட்டியைத் தூக்குவதுபோல் தூக்கிக்கொண்டும் எதிரேயிருந்த விடுதியை நோக்கி நடந்த இந்திரபானு, விடுதியின் படிகளில் அவளைக் கீழே போடாத குறையாகச் சரேலென்று இறக்கிவிட்டான். அவன் அப்படி இறக்கு முன்பாகவே விடுதித்தாழ்வரையிலிருந்து கீழே இறங்கி ஓடி வந்த இளநங்கை முத்துக்குமரியைச் சேர்த்து அணைத்துக் கொண்டாள். "வா குமரி! தாழ்வரைக்கு வந்து சற்று உட்கார்ந்து கொள்!" என்று அன்புடன் ஆறுதல் கூறிப் படிகளின்மீது ஏற்றி அழைத்தும் சென்றாள் கோட்டைக் காவலன் மகள். அப்படிச் சென்ற அந்த இருவரையும் போகவிட்ட இந்திரபானுவும் சிறிது நேரம் கழித்து அவர் களைத் தொடர்ந்து சென்றான்.

அவன் தொடர்ந்து வருவதை முத்துக்குமரி நாலைந்து படிகள் ஏறியதுமே உணர்ந்தவளானாலும் அவன் தலையைத் திருப்பிப் பார்க்கக்கூடச் சக்தியற்றவளானாள். பகிரங்கமாகப் பல வீரர்களுக்கு முன்னால் தன் வீரத்தைக் காட்ட முயன்று அவமானப்பட்டதை நினைத்து, அவள் மனம் குன்றிப்போயிருந்தது. அத்துடன் விளையாட்டுப் பிள்ளை போலவும், அதிக பலமில்லாதவனைப் போலவும்

மேலுக்குத் தோற்றமளித்த இந்திரபானுவின் புஜபலம் அவளுக்கு ஆச்சரியத்தையும் அளித்திருந்தது. புரவி தன்னை வீசியெறிந்ததும், விநாடி மாத்திரத்தில் அவன் தன்னை அப்படியே தாங்கிக்கொண்டது, கோட்டையின் வீரர்களுக்கு முன்பாகத் தான் என்ன திமிறியும் விடாமல் சிறு குழந்தையைப் போலத் தன்னைத் தூக்கி வந்தது இவற்றை நினைத்துப் பார்க்கப் பார்க்க வியப்பு மட்டுமின்றி இன்பம் கலந்த வேதனையும் அவள் இதயத்தைச் சூழ்ந்துகொண்டதால், அவள் தலையைச் சிறிதும் நிமிர்த்தாமலே படிகளில் ஏறித் தாழ்வரைக் கைப்பிடிப்பில் உட்கார்ந்துகொண்டாள். அவள் பக்கத்தில் அமர்ந்து கொண்ட இளநங்கைக்கு அவள் இதய வேதனை புரிந்திருந்தபடியால் இளநங்கையும் மௌனமே சாதித்தாள் பல விநாடிகள். அந்த மௌனத்திலும் கூட கோட்டையின் நடுவெளியில் நடந்த நாடகம் அவள் மனக்கண் முன்பு தோன்றவே, அதைத் திரும்பப் புத்தியில் புரட்டிப் பார்த்து பெரும் பிரமிப்படைந்தாள். விடுதி தாழ்வரையிலிருந்து கீழேயிருந்த நடுவெளிக்கு முத்துக்குமரி ஆத்திரத்துடன் படிகளில் இறங்கி ஓடியது, அவள் புரவியை அவிழ்த்ததும் வீரர் சிலர் பிரமித்து நின்றது, அதே சமயத்தில் மன்னர் தங்கியிருந்த விடுதி முனைப்பிலிருந்து இந்திரபானு அம்புபோல் பாய்ந்து வந்தது, புரவி பேயாட்டம் ஆடுகையில் அவன் புரவியை உற்றுப் பார்த்துக்கொண்டே சென்றது, புரவி பாண்டியன் மகளை விசிறியதும் வெகு வேகமாகப் பாய்ந்து தரையில் மண்டியிட்டு உட்கார்ந்து அவளைப் பற்றிக்கொண்டு எழுந்தது - இவையனைத்தையும் சொப்பனத்தில் பார்ப்பது போல் பார்த்த இளநங்கையும் ஏதும் பேசாமலே உட்கார்ந்திருந்தாள். அந்த இரு மங்கையரின் மனக் கிளர்ச்சிகளையும் உளைச்சல்களையும் உணர்ந்துகொண்டு அவர்கள் எதிரில் நின்ற இந்திரபானுவே பேச்சுக்கொடுக்கத் தொடங்கி, "கொற்கைக் கோட்டைக் காவலரின் செல்வி கேட்க வேண்டிய கேள்வியைக் கேட்டால் அடிமை பதில் சொல்லத் தயாராயிருக்கிறேன்" என்றான் உணர்ச்சி ஏதுமற்ற வறண்ட குரலில்.



விளையாட்டுப் பிள்ளையெனத் தான் அதுவரை நினைத்து வந்த இந்திரபானுவின் குரல் அந்தச் சமயத்தில் கடினமாயிருந்ததையும், பெரும் படைத்தலைவன் சாதாரண வீரனை நோக்கிக் கட்டளையிடும் முறையில் அவன் கேள்வியும் அமைந்திருந்ததையும் அவன் உபயோகித்த அடிமையென்ற சொல்லில் பணிவுக்குப் பதில் கேலித்தனமே இருந்ததையும் கவனித்த இளநங்கை, "கேட்பதற்கு ஏதுமில்லை வீரரே! நீங்கள் அரசகுமாரியைக் காத்ததற்கு நன்றி" என்று மட்டும் கூறினாள்.

இந்திரபானுவின் உணர்ச்சியற்ற குரல் மீண்டும் ஒலித்தது. "அரசகுமாரியைக் காப்பாற்றியது என் கடமை, அதற்கு நன்றி தேவையில்லை. நீங்கள் பல விஷயங்களை அறிந்துகொள்ள விரும்புவதாக மன்னர் என்னிடம் சொன்னார். உங்களுக்கு விளக்கம் தரும்படியாய் உத்தரவாகியிருக்கிறது," என்று உதிர்ந்தன உணர்ச்சியற்ற சொற்கள் அவன் உதடுகளிலிருந்து.

இளநங்கை பதிலேதும் சொல்லாததால், இந்திரபானு படிகளை நோக்கிச் செல்லத் துவங்கினான். "இருங்கள் வீரரே!" என்ற இளநங்கையின் சொற்கள் அவனை மீண்டும் திரும்ப வைத்தன. "கேளுங்கள் தேவி!" என்று ஊக்கினான் அவன்.

இளநங்கை தன் பக்கத்திலிருந்த முத்துக்குமரியை ஒரு விநாடி நோக்கினாள். முத்துக்குமரி குனிந்த தலை நிமிராமல், உட்கார்ந்திருக்கவே. இளநங்கையே இந்திரபானுவை நோக்கிச் சொன்னாள், "கொற்கையிலிருந்து புறப்பட்ட நாளாக உங்கள் போக்குப் புரியாத புதிராயிருக்கிறது வீரரே!" என்று. அதற்குமேல் சொல்ல அவள் தயங்கினாள்.

இந்திரபானு அவளுக்கு உடனே பதில் சொல்லவில்லை. தாழ்வரைக் கோடிக்குச் சென்று அகத்தியர் பேருச்சியை உற்று நோக்கினான். பிறகு அங்கிருந்தே அதைக் கையால் சுட்டிக் காட்டி, "தேவி! பொதியமலைக் கூட்டத்தின் அந்தப் பேருச்சியைப் பார்த்தீர்களா?" என்று வினவினான்.

இளநங்கை தான் இருந்த இடத்திலிருந்தே கடுமையாகவும் கம்பீரமாகவும் எழுந்து நின்ற அந்த மலையுச்சியைக் கவனித்தாள். "ஆம், பார்த்தேன்," என்றும் சொன்னாள் சற்றுப் பயத்துடன்.

அவள் குரலில் இருந்த பயத்தை இந்திரபானு கவனிக்கவே செய்தான். அவளை மெல்ல அணுகிச் சொன்னான், "அந்த உச்சிக்கு அகத்தியர் உச்சி என்று பெயர்" என்று.

"அது தெரியும் எனக்கு" என்றாள் இளநங்கை, தெரிந்த விஷயத்தை எதற்காக அவன் திரும்பச் சொல்கிறானென்பதை அறியாமல்.

இந்திரபானு விளக்கினான். "தேவி! அந்த உச்சி நமக்கு நன்றாகத் தெரிகிறது இங்கிருந்து. அருகிலிருப்பது போலும் தோன்றுகிறது. ஆனால் அது அருகிலில்லை தேவி. அது இருப்பது தொலைதூரம். அதில் என்ன இருக்கிறது, எப்படி இருக்கிறது என்பதையும் இங்கிருக்கும் நாம் அளவிட முடியாது," என்று கூறிய இந்திரபானுவின் சொற்களில் பெரும் பணிவு நிரம்பிய உணர்ச்சி ஊடுருவி நின்றது.

"ஆம் வீரரே," என்றாள், இளநங்கை அவனை மேலும் பேச்சுக்குத் தூண்ட.

"அந்த உச்சியைப் போலத்தான் பாண்டிய மன்னரும் நமக்கு அருகிலிருப்பது போலிருக்கிறார். சர்வ சாதாரணமாக நம்முடன் அளவளாவுகிறார். ஆனால் அவரை நாம் புரிந்து கொள்ள முடியாது தேவி! அருகிலிருப்பது போலிருந்தாலும் தூரத்தேயிருப்பதும், பார்வைக்குச் சாதாரணமாக இருந்தாலும் நம்மால் புரிந்து கொள்ள முடியாததும், பெரும் கம்பீரத்துடன் நிற்பதுமான அகத்தியர் மலையுச்சி எப்படியோ அப்படித்தான் மன்னர்; அவர் எண்ணங்களை அளவிட நம்மால் முடியாது. அதோ, அந்த உச்சி நெடுந்தூரம் பல விஷயங்களைப் பார்ப்பதுபோல் மன்னரும் பார்க்கிறார். அந்த நோக்குடன் நாமும்



பார்த்தால்தான் அவர்போக்கு புரியும்" என்ற இந்திரபானுவின் குரலில் உணர்ச்சி அலைகள் பெரிதும் புரண்டன. "தேவி! மன்னரை, மன்னர் செயல்களை, அவரை அண்டியவர்களின் போக்கைப் புரிந்துகொள்ள முயலாதீர்கள். புரிந்துகொள்ள முயன்றால் புரவிமீது ஏறிய பாண்டிய ராஜபுத்திரியின் கதிதான் அனைவருக்கும் ஏற்படும். மன்னரைச் சேர்ந்தவர்கள் குறிப்பிட்ட விஷயங்கள் ஏன் நடக்கின்றனவென்று கேட்பது கிடையாது. வீரபாண்டியரே இதுவரை கேட்டதில்லை. மற்றவர் யார் கேட்க?" என்னும் சொற்களை உதிர்த்த இந்திரபானு, சில விநாடிகள் நிதானித்து மீண்டும் உணர்ச்சி எழுச்சி பெற்றதால் சற்று இரைந்தே ஒலித்த குரலில் சொன்னான்.

"தேவி! தமிழகத்தின் வரலாற்றில் முக்கியப் பகுதியொன்றில் நாம் இன்று வாழ்கிறோம். வரலாறு மாறப் போகிறது தேவி. அந்த மாற்றத்தைச் சிருஷ்டிக்க இதுவரை வரலாறு காணாத பெரும் லட்சிய புருஷர் தோன்றியிருக்கிறார். இன்னும் சில வருஷங்களில் தமிழகம் பெரும் வீரச் செயல்களைக் காணப்போகிறது. அதன் பூர்வாங்க நிலையில் இன்று நாமிருக்கிறோம். ஒரு மகாவீரன் தலைமையில் இன்று வீரபாண்டியரும், நானும், இன்னும் பல வீரரும் தமிழக வரலாற்றுக்குப் புதுப்பாதையை அமைத்து வருகிறோம். அந்தப் பாதையை அந்த மகாவீரர் ஏன் அமைக்கச் சொல்கிறார், எந்த முறையில் அமைக்கச் சொல்கிறார், எந்த வழியில் அமைக்கச் சொல்கிறார் என்று கேட்பதில் அர்த்தமில்லை. நம் அறிவையும் மீறியவர் மன்னர் என்பதைப் புரிந்து கொள்வது நல்லது. நாங்கள் அவரைப் புரிந்து கொள்ளக் கூட முயல்வதில்லை. பணி புரிகிறோம்; அவ்வளவுதான். நன்றாகச் சிந்தித்துப் பாருங்கள். வீரபாண்டியரை, தனக்குப் பின்பு அரியணையில் ஏறக்கூடிய இளவரசரை, 'கொற்கைக்குப் போய் முத்துக் களவைக் கண்டுபிடி' என்று உத்தரவிடுகிறார் பாண்டிய மன்னர். அவர் பதில் பேசாமல்

பணியாற்றச் செல்கிறார். சொந்த மகளை முத்துக் கடை வணிகத் தொழிலுக்கு ஏவுகிறார். பிறகு என்னைத் திடீரெனக் கொட்டுந்தளத்தில் சந்தித்து, "பெண்களிருவரும் அகத்தியர் குடிலில் இருக்கட்டும். கொட்டுந்தளம் கைமாறி விட்டது. திடீரென வீரரவி இங்கு தோன்றி, கொட்டுந்தளத்தை வசப்படுத்திக் கொண்டு விட்டான். நீ அவனுடன் சேருவதாகப் பாசாங்கு செய்," என்று உத்தர விடுகிறார். உங்களை இருக்கச் சொல்லி நிலைமையறிந்து வரச்சென்றவன் எதிரியிடம் போகிறேன். கொட்டுந் தளத்துக்கு வணிகர்களாக வந்தவர்கள் பாண்டிய வீரர்கள் என்பதை அறியாத வீரரவி உங்களைச் சேரநாடு கடத்திச் செல்ல முயல்கிறான். நானே அதற்கு உதவுகிறேன் மன்னர் உத்தரவுப்படி. ஆனால் சேர வீரர்களை உங்களுக்குத் துணை அனுப்புகிறேன். புரிகிறதா தேவி,"

இளநங்கைக்குச் சகலமும் புரிந்தது. கொட்டுந் தளத்தின் நிலை சாசுவதமில்லாமல் கைமாறுவதையும் சேரரும் பாண்டியரும் அதைப் பிடித்துத் தங்கள் வசமிருத்த முயன்றிருக்கிறார்களென்றும், அந்தச் சிக்கலில் தாங்களும் சிக்கிக் கொண்டதாகவும் புரிந்து கொண்டாள்.

இந்திரபானு மேலும் சொன்னான்; "வீரபாண்டியர் உங்களைக் கொட்டுந்தளத்துக்கு அனுப்பிய போது, அது நமது கையில் இருப்பதாக நினைத்தே அனுப்பினார். ஆனால் அது நமது சேரநாட்டுக்கு அருகிலிருப்பதால் ஆபத்து நேரக் கூடும் என்பதையும் அறிந்தே அனுப்பினார். அவர் கோடரிவீச்சுக்கு இலக்கான வீரரவி வெகு துரிதமாகக் காயத்துடன் கொட்டுந்தளம் கிளம்பு வானென்றோ, நமக்கு முன்னர் அதைப் பிடித்திருப்பா னென்றோ அவருக்குத் தெரியாது. அதில் ஏமாந்தோம். ஆனால் வீரரவி எதைச் செய்வான், எப்படிச் செய்வான் என்பதை நிர்ணயிப்பது கஷ்டம் தேவி. எதற்கும் துணிந்தவன் சேரமன்னன். யாரும் அறிய முடியாத வித்தகன். இல்லையேல், மன்னனிடமிருந்து தப்ப முடியுமா அவனால்?"



"தப்பிவிட்டானா சேர மன்னன்?" என்று கேட்டாள் இளநங்கை.

"ஆம் தேவி! நேற்றிரவு மன்னர் திடீரென இங்கிருந்து வந்து சேர மன்னர் இருப்பிடத்தையே முப்பது வீரர் களுடன் சூழ்ந்துகொண்டார். சேரமன்னன் போரிடுவா னென்று நினைத்தார். ஆனால் போர் ஏதும் நடக்கவில்லை. அவன் இருப்பிடத்திலிருந்து எப்படியோ தப்பிச் சென்று விட்டான். கொட்டுந்தளத்திலிருந்து அவன் வீரர் இருநூறு பேரும் மறைந்துவிட்டார்கள். சேரர் மலை நாட்டவர் மலைகளில் போவதும் வருவதும் அவர்களுக்குச் சகஜம். நம் வீரர்களால் அது முடிவதில்லை. கொட்டுந்தளத்தை இப்பொழுது கைப்பற்றிவிட்டோம். முரசுகள் உங்கள் காதில் விழுந்திருக்குமே?" என்றான். இந்திரபானு சற்று நிதானித்துவிட்டு "தேவி பாண்டிய மன்னர் சிறுபடையுடன் பெரும் காரியங்களைச் சாதிக்க முயல்கிறார். ஆகையால் இடையே சிறிது கஷ்டங்கள் ஏற்படுகின்றன. இன்னும் ஒரு சந்தேகம் ஏற்படலாம் உங்களுக்கு. அதையும் தீர்த்துக் கொள்ளுங்கள்," என்று தனது இடது கையை நீட்டினான் அவள் முன்பு.

அந்தக் கையில், அவள் கொட்டுந்தளத்தில் கண்ட ராஜமுத்திரை மோதிரம் பளபளத்தது.

இளநங்கை அவனை ஏறிட்டு நோக்கினாள். "பாண்டிய ராஜகுமாரியும், நானும் உங்களைச் சந்தேகித் தோம்", என்று மன்னிப்புக் கோரும் பாவனையில் கூறினாள்.

"உங்கள் நிலையில் நானிருந்தாலும் சந்தேகித்திருப் பேன் தேவி. நீங்களும் நானும், ஏன் வீரபாண்டியரும் கூடப் பாண்டிய மன்னரின் ஆயுதங்கள். நம்மை மன்னர் உபயோகிக்கிறார். பாண்டிய அரசைப் பேரரசாக்க. அதற்குப்பணிவதும், காரணம் கேட்காமல் நடப்பதும் நமது கடமை, தேவி," என்று கூறிவிட்டு, இந்திரபானு விடுவிடு வென்று சென்றுவிட்டான்.

இளநங்கை முத்துக்குமரியைப் பிடித்து ஓர் உலுக்கு உலுக்கினாள். "என்ன அப்படியே பிரமித்து உட்கார்ந்து விட்டாய்?" என்றும் கேட்டாள்.

முத்துக்குமரி தலை நிமிர்ந்து அவளை நோக்கினாள். 'பிரமித்தது நானல்ல. அந்த அதிகப் பிரசங்கத்தைக் கேட்டுக் கொண்டிருந்த நீதான் பிரமித்தாய்," என்றும் கூறி உள்ளே எழுந்து சென்றாள், பாண்டியன் மகள்.

அன்றிரவு முத்துக்குமரிக்கு உறக்கம் சிறிதும் பிடிக்க வில்லை. படுக்கையில் நீண்ட நேரம் சிந்தனை வசப்பட்டுக் கிடந்தவளின் காதுகளில் விடுதிக்குப் பின்னால் ஓடிக் கொண்டிருந்த மலையருவியின் சத்தம் சலசலவெனக் கேட்டுக்கொண்டிருந்தது. அந்தச் சலசலப்பைப் போலவே சலனப்பட்டுக் கிடந்த தன் மனத்தைத் திருப்பித் திடப் படுத்திக்கொள்ள எழுந்து மெல்ல மெல்ல விடுதியின் படிகளில் இறங்கி விடுதியைச் சுற்றிச் சென்று, பின்னா லிருந்த மலைச்சரிவுக்கு வந்தாள். தூரத்தே எரிந்து கொண்டிருந்த கோட்டைப் பந்தம் ஒன்றில் அருவி நீர் பளபளத்துக் கொண்டிருந்தது. அதனருகிலிருந்த பாறையில் உட்கார்ந்துகொண்ட முத்துக்குமரி தன் கால்களை அருவியில் அளையவிட்டுக்கொண்டாள். சீலை, அருவி நீரில் நனையாதிருக்கக் கால்களுக்குமேலே சீலையை நன்றாக இழுத்துக்கொண்டாள். பந்தத்தின் வெளிச்சத்தில் அவள் கால்கள் பொற்கால்களாகப் பொலிவுற்றன. சற்றுத் தூரத்தில் நின்ற ஓர் உருவம் கண்கொட்டாமல் தன்னைப் பார்ப்பதை அறிந்திருந்தால், சீலையை அப்படி எடுத்து மடித்திருக்கமாட்டாள் அவள். தனது பொன்னிறக் கால் களைக் கண்டு அந்த உருவத்தின் முகம் பொலிவுற்றதைக் கண்டிருந்தால் வெட்கத்தால் அவள் பிராணனே போயிருக்கும். ஆனால் அதற்கெல்லாம் இடங்கொடுக்காத அந்த உருவம் மெள்ள மெள்ள அவளை அணுகிவந்தது.

அத்தியாயம் 28

## விதி உதிர்த்த சொற்கள்

பகல் பல விஷயங்களைப் பட்டவர்த்தனமாக்கிவிடு கிறது. ஆனால் இரவு எழுதும் ரகசியச் சித்திரங்கள் எத்தனையோ விதம். மனத்தை உளைக்கும் சித்திரங்களும் உண்டு. மயக்கும் சித்திரங்களும் உண்டு. மங்கையரிருவரும் தங்கியிருந்த விடுதிக்குப் பின்னிருந்த மலையருவியின் தோற்றம் மயக்கும் சித்திரமாக அமைந்திருந்தது. விடுதிக்குப் பின்னால் சற்றுத் தூரத்திலிருந்த கோட்டைச் சுவருக் கருகில் நாட்டப்பட்டிருந்த ஒற்றைப் பந்தத்தின் ஒளி அந்த அருவியின் ஒரு பகுதியில் மட்டும் விழுந்திருந்ததால் அந்தப் பகுதி மட்டும் பொன்னொளி பெற்றும், மலைக் கற்கள் மீது தாவியோடியதால் சலனப்பட்ட நீர்நிலையில் தானும் சலனப்பட்டும் ஜாலவித்தைக் காட்டிக்கொண்டிருந்தது. அருவி ஓடிய சில இடங்களில் மலை நன்றாகக் குடையப்பட்டிருந்ததால் அந்த இடங்கள் முழங்காலளவு ஆழமுள்ளதாயிருந்தாலும், அருவிநீர் பளிங்கு போலிருந்த தன் விளைவாக, அடியிலிருந்த கூழாங்கற்கள் பந்த வெளிச்சத்தில் பளபளத்துத் தங்கக் கட்டிகளைப் போல் ஜொலித்துப் பார்ப்பதற்குப் பெரு மயக்கத்தை அளித்தன.

அருவி ஓரத்திலிருந்து பாறை மீதமர்ந்து முழங்காலுக்கு மேலிருந்த மேடையில் ஆடையை எடுத்து முடித்துத் திணித்து அந்தப் பொன்னிற அருவி நீரில் கால்களை அளையவிட்ட முத்துக்குமரிக்குச் சுரணை மட்டுமிருந்தால், சிந்தனை மட்டும் பலபடி சிதறாதிருந் தால், நீருக்குள்ளிருந்த தங்கக் கட்டிகளுக்கும் தன் தங்கக் கால்களுக்கும் உள்ள ஒற்றுமையைப்பற்றி நினைத் திருப்பாள். ஆனால் அதற்கெல்லாம் எண்ணங்கள் இடம்

கொடுக்காததால், கால்களின்மீது துள்ளித் தாக்கி ஓடிய அருவி நீரை வெறித்துப் பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருந்தாள்.

அந்த ஒற்றுமையைப்பற்றி நினைக்க அவளுடைய எண்ணங்கள் இடம் கொடுக்கவில்லையே தவிர சற்றுத் தூரத்தே பக்கத்திலிருந்து சிறிது விலகி மரத்தடியின் நிழலில் நின்றிருந்த இந்திரபானுவின் எண்ணங்கள் இடம் கொடுக்கவே செய்தன. அவன் கண்கள் அந்தப் பொன்னிறக் கால்களையே உற்று நோக்கிக் கொண்டிருந்ததால் அவன் நின்றிருந்த சிறு சந்தனமரத்தின் நறுமணத்தை நுகரக்கூட நாசி திறனற்றதாயிற்று. அவள் விடுதியிலிருந்து கிளம்பியதைச் சற்று தூரத்திலிருந்து கவனித்த இந்திரபானு, அவளை அணுகமுயலாமல் தூரம் கொடுத்தே நடந்து அவளைப் பின்பற்றி வந்தானானாலும், அவள் அருவியை நோக்கிச் சென்றதும் கிட்டே, நெருங்கமுடியாமல் எட்ட இருந்த சந்தன மரத்தடியில் நின்றுவிட்டான். அருவிக்கரைப் பாறையில் அவள் உட்கார்ந்து சீலையையும் முழங்காலை நோக்கி எடுத்ததும் அவன் மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டான். அரசகுமாரியின் கால்களைப் பார்ப்பதுகூடப் பண்பாட்டுக்குக் குறைவென்ற காரணத்தால் கண்களை வேறு திசையில் திருப்பவும் முயன்றான்.

முயற்சிக்கு மனம் இடம் கொடுக்கவில்லை. கண்களும் அவன் இஷ்டப்படி வளைந்து கொடுக்க இஷ்டப்படவில்லை. அந்தப் பொன்னிறக் கால்கள், மாசுமருவற்று நன்றாக இழைக்கப்பெற்றுப் பழுப்பேறிய தந்தம்போல் வழவழத்திருந்த அந்தக் கால்களில், அழகிய சருமம் வைரகண்டியைப் போல வளைந்துகிடந்த கணுக்கால்கள், பங்கயத் தளிர் போன்ற விரல்கள், கணுக்கால்களுக்கு மேலே இயற்கை தீட்டி எழுப்பிய சித்திரம் போன்ற ஆடுசதை, இவையனைத்திலும் அவன் கண்கள் திரும்பத் திரும்ப உறைந்தன. அருவி நீருக்குள் தங்கக்கட்டிகள் போல் பளபளத்த கூழாங்கற்களை அவன்



கண்களும் கவனிக்கவே செய்தன. இருப்பினும் அந்தப் பொன்னிறக் கால்களை நோக்கினால் அவை வெறுங் கூழாங்கற்களே என்று நினைத்தான் இந்திரபானு.

அவளிருந்த சந்தன மரத்தடியிலிருந்து அவளை அவன் பக்கவாட்டில்தான் பார்க்க முடிந்ததென்றாலும், அதிலும் எத்தனையோ இன்ப ஜாலங்கள் தெரிந்தன அவன் கண்களுக்கு. அவள் மடியில் நன்றாக மடித்து திணித்திருந்த சேலையிலிருந்தே அவள் உடல்கட்டு பரம வாளிப்பாக அமைக்கப்பட்டிருக்கிறதென்பதைப் புரிந்து கொண்டான் இந்திரபானு. அவள் தீவிர சிந்தனையில் தலை குனிந்து, முதுகு குனிந்து, அந்தப் பாறையில் உட்கார்ந்திருந்த கோலம், கைதேர்ந்த ஓவியினால் சிருஷ்டிக்கப்பட்ட சிலையை நினைவுறுத்தியது அந்த வாலிபனுக்கு; அவள் கைகள் மடியில் பின்னிக் கிடந்தாலும், முதுகு குனிந்திருந்தாலும் கிடைத்த காட்சியால் சற்றே நிலைகுலைந்த இந்திரபானு, மேலும் தான் அப்படி மறைந்து நிற்பது தவறென்ற காரணத்தாலும், தனக்கு ஒரு கடமையும் இருக்கிறதென்ற நினைப்பாலும் மெள்ளமெள்ள அரசகுமாரியை அணுகினான்.

அவன் வந்ததை உணரக்கூடச் சக்தியற்ற நிலையில் முத்துக்குமரி பாறைமீது உட்கார்ந்திருந்தாள். அவள் மனம் பூராவும் அப்பொழுது இந்திரபானுவைச் சுற்றியே வட்டமிட்டுக் கொண்டிருந்தது. அவன் இத்தனை நேரம் என்ன செய்துகொண்டிருப்பான் என்றும் ஆராய்ந்து கொண்டிருந்தது. 'என்ன அலட்சியமாக என்னைப் பிடித்தார்! என்ன அலட்சியமாக தூக்கிக் கொண்டுவந்து விடுதியின்படிகளில் தொப்பென்று போடாக் குறையாக இறக்கினார்!' என்று ஆராய்ந்தான் முத்துக்குமரி. 'என்ன திமிறியும் அவர் ஏன் என்னை விடாமல் அத்தனை முரட்டுத் தனமாகப் பிடித்தார்?' என்றும் கேட்டுக் கொண்டாள். இந்திரியங்களை உட்புறம் செலுத்தாமல், அவன் வெளிப்புறம் செலுத்தியிருந்தால் அருகில் வந்து நின்றுகொண்டிருந்த இந்திரபானுவிடமே அந்தக்

கேள்வியைக் கேட்டிருக்கலாம். ஆனால் எண்ணங்கள் உட்புறம் திரும்பியிருந்தன. எண்ணங்கள் திரும்பியதால் பார்வையும் உட்புறம் திரும்பிக் கிடந்தது. வெளியே பார்த்த கண்ணுக்குப் பார்வையில்லை.

பார்வை வரச் சிறிதுநேரம் பிடித்தது. இந்திரபானு தன்னைத் திமிறத் திமிறத் தூக்கி வந்தபோது, அவன் விரல்கள் தனது இடது கைமீது அழுந்தப் பதித்து கிடந்ததால் அந்த இடம் விரல் விரலாகக் கன்றியிருந்ததை நினைத்த முத்துக்குமரி, அந்த இடத்தை வலது கையால் தடவிக் கொடுத்துக்கொண்டாள். அவை எப்படிப் பதிந்து கிடக்கிறதென்பதைப் பார்க்கத் தனது முகத்தையும் திருப்பினாள். கன்றியிருந்த கையைப் பார்க்கத் திரும்பிய கண்களுக்கு எதிரே வேறொரு கை தெரியவே திடுக்குற்ற அவள் கண்கள் மேலெழுந்து நோக்கின; இந்திரபானுவின் விளையாட்டுக் கண்கள் அந்தக் கண்களைக் கவர்ந்து நிறுத்தின. கண்களைத் தன்பால் இழுத்துக்கொள்ளும் சக்தியை அறவே இழந்தாள் பாண்டியன் குமரி. அவன் ஆண்மை அவளுக்கு ஓரளவு அச்சத்தை அளித்தது. அந்த அச்சத்தால் முழங்காலுக்கு மேல் மடிந்து கிடந்த சேலையை எடுத்து விட்டுக் கால்களை மறைக்க வேண்டிய சுரணையைக்கூட இழந்தாள். ஒரு விநாடிக்குப் பிறகுதான் அந்த அவசியப் பணியையும் செய்தாள் அவள். அந்த அச்சம் அவளுக்கே வியப்பாயிருந்தது. சேவலம் என் தந்தையிடம் பணிபுரியும் இவருக்கு நான் ஏன் அஞ்ச வேண்டும் என்று தன்னைத் தானே கேட்டுக்கொண்டாள். தைரியத்துடன் அவனை நோக்கவும் முயன்றாள். ஆனால் மனம் தைரிய உணர்ச்சிக்கு இடம் கொடுக்கவில்லை. அச்சத்துக்கே இடம் கொடுத்தது. அந்த அச்சத்தில் இன்பம் பெரிதும் கலந்து கிடந்தது. என் கால்களை அவர் எத்தனை நேரம் பார்த்திருப்பாரோ என்ற எண்ணம், அச்சம், இன்பம் இவற்றுடன் வெட்கத்தையும் இணைத்துவிட்டது.

அந்த வெட்கத்தால் அவள் சங்கடப்பட்டு அசைந்தாள். 'சேச்சே! இதென்ன பைத்தியம்' என்று



தன்னைக் கடிந்தும் கொண்டாள். அந்த நிலையில் வேறொரு நிலையும் அவள் எண்ணத்தில் எழுந்தது. காதலெனும் பித்து எப்படியென்பதை அகத்தியர் அருவிக் கருகில் இளநங்கை விளக்கியதை அவள் எண்ணிப்பார்த்தாள். அந்தப் பித்து ஏற்பட்டால் பெண்களின் சுயநிலை அடியோடு சிதறிப் போகிறதை நினைத்துப் பெரும் வியப்பும் கொண்டாள். இதயத்தில் எண்ணங்கள் பல ஓடினாலும், பேசும் சக்தியும் அந்தப் பாறையை விட்டு எழுந்திருக்கும் சக்தியும் தன்னிடமிருந்து அடியோடு போய்விட்டதென்பதைப் புரிந்து கொண்டாள் பாண்டியன் மகள். ஆகவே இரண்டும் செய்ய மாட்டாமல் உள்ளம் தவிக்க, உடல் இன்பத்தால் துடிக்க உட்கார்ந்தது உட்கார்ந்தபடியே இருந்தாள். இந்திரபானுவின் பார்வையில் சிக்கிக் கிடந்த தனது விழிகளை விடுவித்துக் கொண்டு மீண்டும் அருவியைப் பார்த்தாள். "உன் உறுதி இத்தனைதானா?" என்று சலசலவென்று ஓடிய அந்த அருவி அவளைப் பார்த்துக் கலகலவென நகைத்தது.

அந்த அச்சத்திலிருந்து, அந்த வெட்கத்திலிருந்து, அந்தச் சக்தியிலிருந்து இந்திரபானுவே அவளை மீட்க முற்பட்டான். உண்மையில் அவன் உள்ளமும் உணர்ச்சி அலைகளில் சிக்கித்தான் கிடந்தது. அரசின் நிலை எதுவாயிருந்தாலும் சமாளிக்கவல்ல இந்திரபானு அந்தப் பெண்ணரசியின் சமீபத்தில் செயலற்றே நின்றான். அவள் அங்க அமைப்பு ஒவ்வொன்றும் அவனுக்குப் பெரு வேதனையையும், மன விகாரத்தையும் தந்தது. இருப்பினும் மெள்ளச் சமாளித்துக்கொண்டு, "அரசகுமரி!" என்று மெள்ள அழைத்தான்.

அருகில் தன் தலைக்கு மேலிருந்து வந்த அந்தச் சொல்லைக் காதில் வாங்கிய முத்துக்குமரிக்கு அவனைக் கடித்துக் குதறி விடவேண்டுமென்று தோன்றினாலும், உதடுகள் மெள்ளவும் இனிமையாகவும், "உம்!" என்ற ஒலியை மாத்திரமே உதிர்த்தன.

"இரவில் நீங்கள் இப்படித் தனித்து வருவது சரியல்ல" என்ற இந்திரபானுவின் சொற்களில் மென்மையும் கடுமையும் கலந்திருந்தது.

முத்துக்குமரியின் மனம் புரட்சி செய்தது. "நான் என்ன செய்யவேண்டுமென்று சொல்ல இவர் யார்?' என்று நினைத்து, 'அது என் இஷ்டம்," என்றாள் அவளும் கடுமையுடன்.

"நம் இஷ்டம் என்பது எதுவுமே கிடையாது." என்றான் இந்திரபானு மெதுவாக.

இதைச் சொன்னபோது அவன் தனக்கு வெகு அருகில் வந்துவிட்டதையும், அவன் ஆடைகூட அவன் விரல்கள் பதிந்து கன்றிக் கிடந்த தனது கையின்மீது உராய்வதையும் பார்க்காவிட்டாலும் உணரவே செய்தாள் முத்துக்குமரி; அதனால் ஏற்பட்ட மனக்கிளர்ச்சியையும் அடக்கிக்கொண்டு கேட்டாள்," ஏன் கிடையாது?" என்று.

இந்திரபானுவின் கண்கள் தன் விரல்கள் பட்டுக் கன்றியிருந்த அவள் இடது கையைக் கவனித்தது. அவன் முகத்தில் சற்று வேதனைகூடப் படர்ந்தது. அந்த வேதனை குரலில் ஒலிக்கக் கூறினான், "அரசகுமாரி! இந்தக் கோட்டையின் பாதுகாப்பு விதிகள் அப்படி," என்று.

முத்துக்குமரி அவனைப் பார்க்காமலே கேட்டாள் ஏளனத்துடன், "பெண்களைத் தொடருவதும், தனித்திருக்கும்போது உரையாட வருவதும் அந்த விதிகளில் ஒன்றா?" என்று.

இந்திரபானுவின் இதழ்களை அவள் அப்பொழுது பார்க்கவில்லை. பார்த்திருந்தால் அவற்றில் பெரும் விஷமப் புன்னகையொன்று படர்ந்திருந்ததைக் கவனித்திருப்பாள். "இராக்காலத்தில் காவல் வீரர்களைத் தவிர யாரும் விடுதிகளைவிட்டு வெளியில் உலாவக் கூடாதென்று விதியிருக்கிறது. அது மட்டுமல்ல..." என்று இழுத்தான் இந்திரபானு.

"வேறென்ன இருக்கிறது?" என்று சீறினாள் முத்துக்குமரி.



"அப்படி யாராவது உலாவினால் அவர்களைக் கண்காணிக்கவும் விதியிருக்கிறது."

"கண்காணித்த பின் என்ன செய்வீர்கள்?"

"திரும்ப விடுதிக்குச் செல்ல உத்தரவிடுவோம்."

"திரும்ப மறுத்தால்?"

"சாதாரண வீரர்களாயிருந்தால் சிறை செய்வோம்."

"பெண்களாயிருந்தால்?" இதைக் கேட்ட முத்துக்குமரி தலை நிமிர்ந்து அவனை நோக்கினாள்; 'என்ன செய்து விடுவாய் நான் திரும்ப மறுத்தால்?' என்று கேட்பது போலிருந்தது அந்தப் பார்வை.

இந்திரபானுவின் கண்கள் அவளைப் பார்த்து நகைத்தன. பிறகு அவன் கண்கள் அவள் கையில் பதிந்திருந்த தனது விரல்களின் அடையாளங்களைக் கவனித்தன. பதிலை அவன் சொல்லிவிட்டான் என்பதை அவள் புரிந்துகொண்டாள். 'சற்று முன்பு தூக்கியதுபோல் தூக்கிக்கொண்டு விடுதியில் போட்டுவிடுவேன்' என்று சொல்வது போலிருந்தது அவன் பார்வை; அதனால் பெரிதும் வெகுண்ட அவள் பகிரங்கமாகவே கேட்டாள், "திரும்பவும் தொட்டுத் தூக்க உங்களுக்குத் துணிவுண்டா?" என்று.

இந்திரபா்னு அவளை விஷமப் பார்வையாகப் பார்த்தான். "கடமைக்குத் துணியாதவன் வீரனல்ல அரசகுமாரி," என்று கூறி, தான் அதற்கும் துணிந்தவனென்பதை மறைமுகமாகச் சுட்டிக் காட்டினான். அந்தத் துணிவுக்கு அத்தாட்சியாக, அந்தப் பாறையின் பக்கத்தில் தரையிலிருந்த மற்றொரு சிறு பாறாங்கல்லில் உட்கார்ந்து, தனது விரல்கள் பதிந்த அவள் கையைத் தன் கையால் பிடித்துப் பரிசோதிக்கவும் செய்தான். "இந்த இடம் கன்றிவிட்டது அரசகுமாரி! மிகவும் வருத்தமாக இருக்கிறது எனக்கு. ஆனால் எனக்கு வேறு வழியில்லை. நீங்கள் மிகவும் திமிறினீர்கள்," என்று கூறினான்.

அவன் தைரியத்துடன் தன் கையைப் பிடித்தது பெரும் வியப்பாக இருந்தது அவளுக்கு, என்னதான் பெரிய

வீரனாயிருந்தாலும், தனது உத்தரவின்றி எப்படி அவன் தன் கையைப் பிடிக்கலாம் என்று எண்ணினாலும் வேண்டா மென்று சொல்லத் தனக்குத் தெம்போ இச்சையோ இல்லாததைக் கண்டு உள்ளூர வியந்தாள் முத்துக்குமரி. இருப்பினும் வெளிக்குக் கோபத்தைக் காட்டி அவனைப் பார்த்தாள். அவன் உட்கார்ந்திருந்த பாறை உயரமாகவும் அவள் அமர்ந்திருந்த பாறை தாழ்வாகவும் இருந்ததால் கிட்டத்தட்ட அவள் தோளுக்குக் கீழேயே அவன் தலை யிருந்தது. அந்த நிலையில் அவள் கேட்டாள், "புரவி என்னை விசிறி விட்டதல்லவா" என்று.

"ஆம்" என்றான் இந்திரபானு.

"நீங்கள் தாங்கிப் பிடித்தீர்கள்..." என்றாள் மீண்டும் முத்துக்குமரி.

"ஆம்."

"பிடித்த பிறகு எல்லோர் முன்னிலையிலும் என்னைத் தூக்கிக்கொண்டு போவானேன்?"

"விடுதியில் விட,"

"விடுதிக்கு நான் நடந்து போகமாட்டேனா?"

"அதிர்ச்சியில் நடக்க முடியுமோ முடியாதோ என்ற சந்தேகம்."

"இஷ்டமில்லாமலா நான் திமிறினேன்? "

"ஆம். திமிறினீர்கள்."

"அப்பொழுதாவது இறக்கிவிடுவதுதானே!"

"அப்பொழுது எனக்கு இஷ்டமில்லை," இதைச் சொன்ன இந்திரபானு அவளை நோக்கிப் புன்முறுவல் கொட்டினான்.

உங்களிஷ்டம் என்று தனியாக உண்டா இந்தக் கோட்டையில்?" என்று வினவினாள் முத்துக்குமரி.

"பிடிவாதம் என்று வைத்துக்கொள்ளுங்கள்," என்றான் இந்திரபானு பதிலுக்கு.

"பிடிவாதமா?"



"ஆம்! அந்தப் புரவிமீது ஏறுவது அபாயமென்று எச்சரிக்கை செய்தேன். பிடிவாதத்தால், நீங்கள் ஏறினீர்கள், நீங்கள் விழுந்தபோது, பதில் பிடிவாதம் நான் காட்டினேன். ஆனால் அரசகுமாரி..." என்ற இந்திரபானு தயங்கினான்.

"ஆனால்..." அவள் கண்களில் பளிச்சிட்டன.

"உங்களைக் கீழே இறக்க எனக்கு மனமில்லை," என்று சொன்ன இந்திரபானு, அவள் கையில் தன் விரல்கள் பதிந்த இடங்களை வருடினான். அந்த வருடலில், அவன் கையின் வெப்பத்தில் அவள் இளகினாள். அவனை நோக்கி நன்றாகத் திரும்பினாள் அவள். அவனை நோக்கிக் குனிய வும் செய்தாள்.

அவள் மூச்சு பெரிதாகவே வந்தது. "அரசகுமாரி..." என்று அவன் நா தழுதழுத்தது.

"அரச - வேண்டாம்..." என்று அவள் முணுமுணுத் தாள் அவன் காதில்.

"குமாரி..."

"உம்..."

"இது சரியல்ல," என்று அவன் உதடுகள் கூறிக் கொண்டேயிருக்கையில் அவன் கை அவள் இடையில் தவழ்ந்தது.

"எது சரியல்ல?" அவள் பாறையில் நெகிழ்ந்தாள்.

"இந்த நிலை..."

"ஏன்?"

"எதிரேயிருப்பது போர்."

"ஆம்."

"நாமிருப்பது அரண்."

"ஆம்."

"இதையும் இதிலுள்ளவர்களையும் பாதுகாப்பது மன்னர் எனக்கு இட்டிருக்கும் உத்தரவு."

"உத்தரவை நிறைவேற்றுங்கள்," என்ற அவள் பாறை யில் சற்றே சரிந்தாள்.

இன்னும் அதிகமாகச் சரிந்தால் நிலைதவற அவசியம் இருந்ததால் இரு கைகளாலும் அவள் இடையைப் பிடித்துப் பாறையிலேயே அவளை இருத்திய இந்திரபானு கூறினான்: "அந்த உத்தரவை நிறைவேற்றவே நான் இன்று உறங்கவில்லை. உங்கள் விடுதிமீது ஒரு கண் வைத்திருந்தேன். வைத்திருந்தது நல்லதாயிற்று," என்று.

"ஆம், ஆம், நல்லதாயிற்று," என்று கூறி நகைத்தாள் முத்துக்குமரி, தன்னைச் சுற்றிச் சிறை செய்திருந்த அவன் கைமீது கண்களை ஓட்டி.

இந்திரபானு பெரும் சங்கடத்துக்குள்ளானான். "குமாரி! 'இந்தக் கோட்டை பெரும் மலைகளுக்கிடையேயிருந்தாலும், இது பெரும் பாதுகாப்பென்று நினைக்க வேண்டாம். இங்கும் சேரவீரர் நடமாட்டம் இருக்கிறது. அவர்கள் மலைவாசிகள். எந்த நேரத்திலும் எதிர்பாராத வகையில் புரவிகளுடன் வந்து நம்மைத் தாக்கலாம். ஆகையால்தான் இரவும் பகலும் எச்சரிக்கையாயிருக்க வேண்டும்," என்று கூறினான். அவளுக்கு ஏதாவது நேர்ந்துவிட்டால் என்ன செய்வது என்ற அச்சத்தாலோ என்னவோ அவள் இடையை அழுத்தியும் பிடித்தான்.

"நான் எச்சரிக்கையாயிருக்க மாட்டேன்," என்றாள் முத்துக்குமரி.

"ஏன்?"

"என்னைக் காக்க ஒருவர் இருக்கிறார்.

"ஆம் குமாரி! உன்னைக் காக்க நானிருக்கிறேன். இந்திரலோகத்துக்கு உன்னைக் கொண்டு போனாலும் அங்கும் தொடர்ந்து வருவேன்," என்று ஆவேசத்துடன் கூறிய இந்திரபானுவை ஆனந்தக் கண்களுடன் நோக்கினாள் அவள். அவன் சாதாரணமாகச் சொன்ன வார்த்தைகள் அவை. ஆனால் அந்த வார்த்தைகள் எத்தனை உண்மையென்பதை அந்த இரண்டு நாட்கள் நிரூபித்தன. அவை விதி உதிர்த்த சொற்கள் என்பதை



இந்திரபானுவே பின்னால் உணர்ந்துகொண்டான். ஆனால் அன்று அந்தப் பந்தத்தின் வெளிச்சத்தில் அவள் பொன்னிற மேனியைச் சுற்றிக் கைகள் ஓடி ஆராய்ந்த நிலையில், தன் சொற்களுக்கு அத்தனை உண்மை உண்டென்று அவன் நினைக்கவில்லை. பெரும் விபரீதம் ஏற்படுவதற்கு முன்னிருந்த ஆனந்த நிலையில் அந்தக் காதலிருவரும் அன்றிரவு கட்டுண்டு கிடந்தார்கள்.

அத்தியாயம் 29

# காத்திருந்தவன்

சொற்கள் சிலவற்றை உதடுகள் உதிர்க்கும்போது அவற்றுக்குக் காரண காரியம் இல்லையென்று நினைக்கிறோம். அசந்தர்ப்பமாக அகாரணமாக ஏற்பட்ட வெற்றுச் சொற்கள் அவை என முடிவும் கட்டுகிறோம். ஆனால் காலம் அவற்றுக்குக் காரணத்தையும் கற்பிக்கிறது, காரியத்தையும் கற்பிக்கிறது. அப்பொழுது புரிந்து கொள்கிறோம். சொல்லோ, செயலோ நம் வசத்தில் இல்லை என்பதை. நம்மையும் மீறிய சக்தியொன்று நமது நாவையும் இயக்குகிறது என்பதை உணர்ந்துகொள்கிறோம். அதை விதி என்ற இரண்டெழுத்துச் சொல்லால் குறிப்பிடுகிறோம். ஆத்திகன் இதை எப்பொழுதும் ஒப்புக் கொள்கிறான். ஏதோ ஒரு காலத்தில், ஏதோ ஒரு சமயத்தில் இதை அனைவருமே புரிந்துகொள்கிறார்கள். ஆனால் குறிப்பிட்ட காலத்தில் தேவைப்பட்ட சமயத்தில் புரிந்துகொள்கிறவர்கள் மிகக் குறைவு. புரிந்துகொள்ள சூழ்நிலையோ, சொந்த அறிவோ இடங்கொடுப்பதில்லை.

பாறை மீதமர்ந்திருந்த பாண்டிய குமாரியின் இடையை இரு கைகளாலும் பற்றியிருந்த இந்திரபானுவின் நிலையும் அந்த இரவில் அப்படித்தான் தடம் புரண்டு கிடந்தது. அவன் அறிவெல்லாம் பாறையிலிருந்த அந்த அரிவையிடத்தில் லயித்துக் கிடந்தது. சூழ்நிலையோ பெரும் மாய வலையென அவனை வளைத்திருந்தது. அந்த நிலையில்தான் சொன்னான் இந்திரபானு, "உன்னை இந்திரலோகத்துக்குக் கொண்டுபோனாலும் அங்கும் உன்னைத் தொடர்ந்து வருவேன்" என்று, அவளுக்கு அந்தச்



சொற்கள் இந்திரபோகமாக இருந்தன. 'கட்டுக்காவல் மிகுந்த அந்தக் கோட்டைக்குள் யார் வரமுடியும், யார் தூக்கிக்கொண்டு போகப் போகிறான். எதற்காக இந்திரபானு தன்னைக் கப்பாற்ற வேண்டும்' என்றெல்லாம் அவள் தன்னைக் கேட்டுக் கொள்ளவில்லை. யாரோ எதிரி தன்னைத் தூக்க வந்து விட்டது போலும், இந்திரபானு அவனிடமிருந்து தன்னை மீட்க வந்து விட்டது போலும் அவள் எண்ணினாள். அனாவசிய வேகத்துடன் அவன் உதிர்த்த சொற்கள் அவளை இளக வைத்திருந்தன. சொற்களின் வேகத்தை மீறும் வகையில் சுற்றிவந்த கைகளின் முரட்டுப்பிடி அவளுக்குப் பேரானந்தத்தை அளித்தது. அந்தக் கைகள் தன்னை அப்படியே இறுக்கி நொறுக்கிவிட்டால்கூட இன்பமாயிருக்கும் போலிருந்தது, பாண்டியன் மகளுக்கு.

வேகத்துக்கு இலக்கான முத்துக்குமரியின் நிலையை விட மோசமான நிலையிலிருந்தான் வேகத்துக்குக் காரணமான இந்திரபானு. தனது கைகள் இறுக்கிக் கொண்டிருந்த அவள் இடையின் மென்மை, தன் உணர்ச்சிகளை ஒரே சுழலாகச் சுழற்றுவதை இந்திரபானு உணர்ந்தான். வாளேந்தியதால் கறுத்துவிட்ட தன் கைகளால் இடைக்கு ஏற்படக்கூடிய இம்சையைவிட, வழுவழுத்த அந்த இடையால் தன் கைகளுக்கும் சிந்தனைக்கும் ஏற்படக்கூடிய உபத்திரவம் அதிகமென்பதை அந்தச் சில விநாடிகளில் புரிந்துகொண்டான் அந்த வாலிபன். இம்சைக்கும் இன்பத்துக்கும் வித்தியாசம் அதிகமில்லையென்பதும் தெளிவாகத் தெரிந்தது அவனுக்கு. அவள் பாறையில் உட்கார்ந்திருந்தாலும் அவன் பக்கவாட்டில் அவள் கால்களுக்கடியில் உட்கார்ந்திருந் தாலும் அவள் முழந்தாளுக்கு மேலிருந்த கால் பகுதியில் இழைந்திருந்த தனது கன்னத்தின் மூலமும், இடையே இறுக்கிய கைகளின் மூலமும், உணர்ச்சிகள் மின்னல் வேகத்தில் தன்னை ஊடுருவுவதை உணர்ந்தான்

சந்திரபானுவின் மகன். இத்தகைய ஓர் அபூர்வ மலருக்கு ஆபத்து உண்டாக முடியும் என்ற எண்ணமே அவன் சிந்தைக்குப் பெரு வேகத்தைக் கொடுத்தபடியால்தான் அவன் அந்த வார்த்தைகளைச் சொன்னான். இந்திர லோகம் என்று அவன் குறிப்பிட்டதற்குக் காரணம் தொலை தூரத்திலுள்ள ஏதோ ஓர் இடத்தைக் குறிப்பிட வேண்டுமென்பதற்காகவே தவிர வேறில்லை. உண்மையை மட்டும் ஆராய அவனுக்குச் சக்தியிருந்தால் இந்திரலோகம் அத்தனை தூரத்திலில்லை என்பதைப் புரிந்து கொண்டிருப்பான். அறிவின் சுழற்சி அந்த எண்ணத்திற்கு இடம் கொடுக்கவில்லை.

ஆனால் அவன் கைகளின் பிடிக்கு ஆளாயிருந்த முத்துக்குமரி மட்டும் அதைப் புரிந்துகொண்டாள். இந்திர லோகமென்றால் அது இந்திரபானு இருக்குமிடத்தில் தானிருக்க முடியுமென்பதை அவள் புரிந்துகொண்டாள். இந்திரதனுசு ஏதாவதிருக்க முடியுமானால் அது அவன் கைகளாகத் தானிருக்க முடியும் என்று நினைத்தாள். மின்னல் என்று ஏதாவது ஒன்றிருக்குமானால், அதன் சக்தி பூராவும் தனது பக்கத் தொடையில் பட்டுக்கொண்டிருந்த அவன் கன்னத்தில் மூலம் உடலெங்கும் பாய்ந்து பளிச்சிடுவதைப் புரிந்துகொண்டாள். அதற்கு மேல் பாறையில் தங்கியிருக்க இயலாமல் அவன் கைகளையும் மீறி நெகிழ்ந்து தரையில் இறங்கினாள். அந்தப் பெரும் பாறைக்கு அருகேயிருந்த தரையும் கரடு முரடாகத் தானிருந்தது. பாறையிலிருந்து சரிந்து அவள் அதில் உட்கார்ந்தபோது நன்றாக இந்திரபானுவின் கை வளையத்துக்குள் இறங்க நேரிட்டபடியால், சிந்தனை அதைப்பற்றி ஓடியதே தவிர, கீழிருந்த முரட்டுத் தரையைப்பற்றி ஓடவில்லை. இந்திரபானுவின் கரங்கள் அவளைத் திடீரென்று தரையில் இறங்கவிடாமல் மெள்ளப் பிடித்து உட்கார வைத்தன. அப்படி இறங்கிய முறையில் அவள் அழகிய உடல் அவன் கைகளிலும், மார்பிலும் அசப்பில் பட்டதாலும் அவனுக்கு விவரிக்க இயலாத வேதனையை அளித்தன.



பாறையிலிருந்து இறங்கிய முத்துக்குமரி தனது அழகிய கால்களை அருவியில் நன்றாக நீட்டிக் கொண்டாள். அந்தக் கால்களின் அழகைப் பருகிய இந்திர பானு அவற்றிலொன்றைத் தன் இரு கைகளாலும் மெல்லப் பிடித்தான். அவன் கைவிரல்கள் அந்தக் கால் விரல்களுக் கிடையே நுழைந்து பின்னிக்கொண்டன. அதைக் கண்ட முத்துக்குமரி சொன்னாள், "உம், உம் வேண்டாம். விடுங்கள் காலை" என்று.

இந்திரபானு அவள் காலைவிட மறுத்தான், "ஏன் விட வேண்டும்?" என்று விசாரித்தான், அவள் காலழகைப் பார்த்துக்கொண்டே,

"அடிமைகள் தான் காலைப் பிடிப்பார்கள்," என்றாள் முத்துக்குமரி.

இந்திரபானு தலை நிமிரக்கூட இல்லை. அவன் குனிந்து அவள் காலைப் பார்த்துக்கொண்டிருந்ததால் அவன் முதுகு முத்துக்குமரியின் உடலுக்குக் குறுக்கே பாய்ந் திருந்தது. சிறிது விழுந்திருந்த அவன் குழலையும் வளைந்த முதுகின் உரத்தையும் கண்ட முத்துக்குமரி, அத்தகைய ஓர் ஆண் மகன் குழந்தைபோல் தன் காலைப் பிடித்திருப் பதைக் கண்டு புன்முறுவல் கொண்டாள். ஆனால் அந்த ஆண் மகன் தலை நிமிராமலே பதில் சொன்னான்: "சரி யாகச் சொன்னாய் குமரி," என்று

"என்ன சரியாகச் சொன்னேன்?" என்று வினவினாள் முத்துக்குமரி மெல்லிய குரலில்.

"அடிமைகள்தான் காலைப் பிடிப்பார்களென்று சொன்னாயல்லவா?" என்ற இந்திரபானு, அவள் பாதத்தின் அடித்தளத்தைச் சற்றே அழுத்தினான்.

"ஆம்" என்றாள் முத்துக்குமரி மெள்ளக் காலை இழுத்துக் கொள்ள முயன்று.

"அடிமைதான் இப்பொழுதும் காலைப் பிடிக்கிறான்," என்றான் இந்திரபானு, நீரில் துளைத்துக் கொண்டிருந்த மற்றொரு காலையும் பிடித்து இணைத்துக் கொண்டு.

"நீங்கள் அடிமையா?"

"ஆம்!"

"எப்படி அடிமை?"

"இருவகைகளில் அடிமை."

"அதிலும் இருவகை உண்டா?"

"உண்டு."

"எப்படிச் சொல்லுங்கள் பார்ப்போம்?"

"நீ பாண்டிய மன்னன் மகள். நான் அவரிடம் அடிமையாயிருக்கிறேன்."

"அதனால்?"

"அரசனுக்கு அடிமை அப்படியானால் அரசகுமாரிக்கும் அடிமை தானே?"

"இதிலும் பரம்பரை உண்டா?"

"பரம்பரை எதில் இல்லை?"

இதைக் கேட்ட முத்துக்குமரி இன்பநகை நகைத்தாள். தனக்குக் குறுக்கே வளைந்திருந்த முதுகில் ஒரு கையையும் வைத்தாள் ஆதரவுடன். அந்த நிலையில். "சரி சரி, இன்னொரு வகை?" என்று மெள்ள வினவினாள்.

"அழகுக்குச் சிலர் அடிமையாகிறார்கள்..." என்று இழுத்த இந்திரபானு அவள் பாதங்களைக் கன்றிப்போகும் படி பிடித்தான்.

முத்துக்குமரியின் உள்ளமும், உடலும் ஆனந்த வெள்ளத்தில் அழுந்திக் கிடந்தன. "ஊஹூம் ஆரம்பித்து விட்டீர்களா?" என்றாள் பொய்க் கோபத்துடன்.

"என்ன ஆரம்பித்துவிட்டேன்?" என்று ஏதும் புரியாமல் வினவினான் இந்திரபானு.

"ஆண் பிள்ளைகளின் வேலையை..."

"என்ன அது?"

"பெண்களைப் புகழ்வது. பிறகு..."

"பிறகு?"

"அது கிடக்கட்டும்."



"எது?"

"எதுவாயிருந்தாலென்ன? புகழ ஆரம்பித்துவிட்டீர்கள். அழகுக்கு அடிமையா?"

"ஆம் சந்தேகமாயிருக்கிறதா?" என்ற இந்திரபானு சரேலென்று நிமிர்ந்தான். அதை எதிர்பார்க்காத முத்துக்குமரியின் முகத்தில் அவன் தலை மோதவே, "அப்பா!" என்று அவள் சாய்ந்திருந்த தனது கன்னத்தைப் பிடித்துக் கொண்டாள். அடுத்த விநாடி அவன் கைகள் அவள் கன்னங்களிரண்டையும் அழுந்தப் பிடித்தன. அவன் கண்கள் அவள் கண்களை ஊடுருவிப் பார்த்தன. உள்ளத்தையே அவன் பார்ப்பது போலிருந்தது அவளுக்கு. "பலமாகப் பட்டுவிட்டதா குமரி?" என்று அவன் அனுதாபத்துடன் உதிர்த்த சொற்கள் அரைகுறையாக அவள் காதுகளில் விழுந்தன.

"இல்லை," என்று பொய் சொன்னாள் அவள்.

அவன் கைகளை மெல்லக் கன்னத்திலிருந்து நீக்கிப் பார்த்தான். ஒரு கன்னம் நன்றாகச் சிவந்திருந்தது. "பலமாகத்தான் இடித்திருக்கிறது," என்று பயந்து பதைபதைக்கச் சொன்னான். பிறகு அவன் அவளை ஏதும் கேட்காமல் பாறைமீது சார்த்தி இரண்டு கன்னங்களையும் கைகளால் லேசாக இழைத்தான். "இன்னொரு கன்னத்தில் ஏதுமில்லை," என்றாள் முத்துக்குமரி சங்கடத்துடன்.

"இல்லாததுதான் தவறு." என்று சொல்லிக்கொண்டே இந்திரபானு இரு கன்னங்களையும் வருடிக் கொடுத்தான்.

"தவறா? என்று கேட்டாள் அவள் அவன் கண்களைப் பார்த்துக்கொண்டே.

"ஆம், ஒரு கன்னம் மட்டும் சிவந்திருந்தால் பார்ப்பவர்கள் காரணம் கேட்பார்கள்."

"அதற்காக இன்னொரு கன்னத்தையும் இழைக்கிறீர்களா?"

"ஆம்."

"புரிகிறது."

"என்ன புரிகிறது!"

"உங்களைப் பொய்யர் என்று நினைத்திருந்தேன்."

"இப்பொழுது?"

"திருடரும்கூட என்று புரிகிறது."

"திருடனா?"

"ஆம். திருட்டுத்தனத்தை மறைக்கத்தானே இன்னொரு கன்னத்தை இழைத்துச் சிவக்க அடிக்கிறீர்கள்?" என்று உதடுகளில் புன்னகை காட்டினாள் முத்துக்குமரி.

இந்திரபானு சங்கடத்துடன் நெகிழ்ந்தான். "கன்னத்தைச் சிவக்கச் செய்ய முயற்சி தேவை. ஆனால் இவற்றைச் சிவக்க அடிக்க முயற்சி ஏதும் தேவையில்லை," என்று அவன் உதடுகளைத் தொட்டுக் காட்டினான்.

"நீங்கள் கவி போலிருக்கிறது?" என்றாள் முத்துக்குமரி.

"கவிக்கு வேண்டியது இருக்கிறதல்லவா?"

"எது?"

"பெண்."

"பெண்ணா?"

"ஆம். முக்கால்வாசிக் கவிகள் பெண்ணைத்தான் வர்ணித்து எழுதியிருக்கிறார்கள். ஆனால்..." இங்கு நிதானித்தான் இந்திரபானு.

"ஆனால்?"

"நீ வர்ணனைக்கு அப்பாற்பட்டவள் முத்துக்குமரி."

இதற்குமேல் அவன் பேசவில்லை. அவளும் மௌனமாகவே இருந்தாள். கோட்டையின் இரண்டாவது ஜாம சங்கு பிடிக்கப்பட்டது. அதனால் சுரணை வந்த இருவரும் எழுந்து நின்றார்கள். "இரண்டாவது ஜாமம் முடிந்து விட்டது..." என்றாள் முத்துக்குமரி பயத்துடன்.

"ஆம்," என்றான் இந்திரபானுவும். அவன் குரலிலும் அச்சமிருந்தது.



"சரி, நான் வருகிறேன்," என்று கிளம்பினாள் முத்துக்குமரி.

இந்திரபானு பதில் சொல்லவில்லை. அவள் மெள்ள நடந்தாள். நாலடி சென்றதும் இந்திரபானு, "குமரி" என்று அழைத்தான்.

அவள் திரும்பினாள். அவள் முகமும் பொற்சிலையின் முகமென ஜொலித்தது பந்தத்தின் ஒளியில். "ஏன்?" என்ற உதடுகளும் மயக்கின.

"நாளைக்கும் இங்கு?" கேள்வி அவன் வாயில் உறைந்தது.

"வரமாட்டேன்"

"ஏன்?"

"யாரோ தூக்கிக்கொண்டுபோகப் போகிறார்கள் இந்திரலோகத்துக்கு, அங்கு வாருங்கள்," என்று சொல்லி நகைத்துவிட்டுச் சென்றாள் அவள்.

அவள் சென்ற திசையையே பார்த்துக்கொண்டே நீண்ட நேரம் இந்திரபானு நின்று கொண்டிருந்தான். அவள் உருவம் கண்ணுக்கு மறைந்த பின்பும் அவள் சிரிப்பு மட்டும் அவன் காதில் ஒலித்துக் கொண்டிருந்தது. மறுநாள் அவள் கண்டிப்பாய் வருவாள் என்பதை அவன் உணர்ந்திருந்தான். அந்த உணர்வே அவனுக்குப் பேரின்பத்தை அளித்தது. அடுத்த நாள் ஏற்படப் போகும் சந்திப்பையும், அதனால் கிட்டக்கூடிய இன்பத்தையும் நினைத்துக் கொண்டே அவன் தனது இருப்பிடம் நோக்கி நடந்தான்.

அவன் நினைத்தபடி மறுநாள் முத்துக்குமரி வரத்தான் செய்தாள். காலம் தாழ்த்தாதபடியும் வந்து சேர்ந்தாள். இந்திரபானு தனக்காகக் காத்திருப்பானென்ற எண்ணத்தில் சற்று வேகமாக வந்தாள். ஆனால் இந்திரபானு காத்திருக்கவில்லை அவளுக்காக. அதே இடத்தில் வேறொருவன் காத்திருந்தான்.

## அத்தியாயம் 30

# மறுநாள் இரவில்

ஆசையால் உள்ளம் உந்த, அலைந்த நடை போட்டு அருவிக்கரைப் பாறைக்கருகில் வந்த அழகி முத்துக்குமரி அங்கு தனக்காகக் காத்திருப்பவனைக் கண்டதும் அதிர்ச்சியும், ஏமாற்றமும் ஒருங்கே கொண்டாள். விளையாட்டுப் பிள்ளையும் வீரனுமான இந்திரபானுவுக்குப் பதில் சாதாரண வீரனொருவன் அவ்விடத்தில் நின்று கொண்டிருந்தான். அவள் எதிர்பார்த்த வாலிபனுக்குப் பதில் சற்றும் எதிர்பாராத வயோதிகனொருவன் நின்று கொண்டிருந்தான். பளிச்சிடும் கண்களுக்குப்பதில் பஞ்சடைந்த கண்கள் அவளை நோக்கின. அங்கிருந்த மனிதனைக் கண்டதும் முத்துக்குமரியின் கண்களும் மனமும் பஞ்சடைந்துவிடும் நிலைமையை எய்தின.

எத்தனையோ கஷ்டப்பட்டு, எத்தனையோ பொய் சொல்லி அவன் இடத்தை அன்றிரவு அடைய வேண்டியிருந்ததால் அவள் ஏமாற்றம் எல்லை மீறியிருந்தது. முந்திய நாளிரவு நேரங்கெட்ட வேளையில் மலைச்சரிவு விடுதிக்குத் திரும்பியதுமே அவள் இல்லாத பொய்யெல்லாம் சொல்லி இளநங்கையைத் திருப்தி செய்ய வேண்டியிருந்தது. இந்திர பானுவிடமிருந்து பிரியா விடை பெற்று அவள் விடுதியை அடைந்ததும் இளநங்கை உறங்கியிருப்பாள் என்று சிறிது நேரம் வெளித்தாழ்வாரத்திலேயே நின்று கதவையும் பார்த்துக் கோட்டைப்புறத்தையும் பார்த்தாள், கோட்டைப் புறம் காவலர் நடமாட்டத்தாலும் எச்சரிப்பு ஒலிகளாலும் உயிர்த் துடிப்புடன் இருந்தாலும் விடுதி மட்டும் நிசப்தமாயிருப்பதைக் கண்டு சற்றுத் துணிவுடனே கதவை மெள்ளத் திறந்து உள்ளே நுழைந்த முத்துக்குமரி திகைத்துப்



பல விநாடிகள் நின்றுவிட்டாள். உள்ளே விளக்கு மங்கலாக எரிந்து கொண்டிருந்தாலும் பளிச்சிடும் கண்களுடன் ஆசன மொன்றில் இளநங்கை உட்கார்ந்திருந்தாள். கதவு திறந்ததுமே இளநங்கையின் அழகிய விழிகள் முத்துக்குமரி மீது குற்றம் சாட்டும் தோரணையில் எழவே செய்தன.

பெரும் சங்கடத்தால் முத்துக்குமரி ஒரு விநாடி நின்ற இடத்தில் அசைந்துவிட்டு மெள்ளத் கதவை மூடினாள். பிறகு அடிமேலடி எடுத்துவைத்து உட்புறம் வந்தாள். இளநங்கை ஏதும் பேசாவிட்டாலும், உள்ளம் உறுத்தியதன் விளைவாக முத்துக்குமரியே பேசமுற்பட்டு, "சற்று நேரமாகிவிட்டது" என்று அர்த்தமில்லாமல் ஏதோ சொன்னாள். இளநங்கை அப்பொழுதும் பேசவில்லை. அவள் கண்கள் மட்டும் மேற்கொண்டு கேள்விகளை வீசின. அந்தக் கேள்விக்குப் பதில் சொல்லும் முறையில் "பின்புறம் உள்ள அருவிக்கருகில் போயிருந்தேன்," என்று கூறினாள் பாண்டியன் மகள்.

"அங்கு இத்தனை நேரம் என்ன செய்து கொண்டிருந்தாய்!" என்று எழுந்தது இளநங்கையின் கேள்வி.

"எதுவும் செய்யவில்லை. அருவியைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்து இருந்தேன்," என்றாள் முத்துக்குமரி.

"என்னைத் துணைக்குக் கூப்பிட்டால் நானும் வந்திருப்பேனே. தன்னந்தனியாகச் செல்வது அபாயமல்லவா?" என்று இளநங்கை மீண்டும் வினவினாள்.

"இங்கென்ன அபாயமிருக்கிறது! கோட்டையில் ஏராளமான வீரர்கள் இருக்கிறார்கள். பாதுகாப்பும் பலமாயிருக்கிறதே?" என்றாள் முத்துக்குமரி அலட்சியமாக.

ஆனால் அது உண்மை அலட்சியமல்ல வென்பதை இளநங்கை எளிதில் புரிந்துகொண்டாள். முத்துக்குமரியின் கசங்கிக்கிடந்த சேலையையும் கன்றிக்கிடந்த கன்னங்களையும் நுழைந்த உடனே பார்த்துவிட்ட இளநங்கை, "உன் கன்னம் ஏன் சிவந்து கிடக்கிறது, "என்றொரு கேள்வியையும் வீசினாள்.

அந்தக் கேள்வி முத்துக்குமரியைத் திடுக்கிடச் செய்தாலும் அவள் மெல்லச் சமாளித்துக் கொண்டு, "இரண்டு கைகளையும் நீண்டநேரம் கன்னத்தில் ஊன்றிக்கொண்டு உட்கார்ந்திருந்தேன்" என்று சமாதானம் சொன்னாள்.

பெண் சொல்லும் பொய் பெண்ணுக்குத் தெரியுமாதலால், அதை இளநங்கை அடியோடு நம்பவில்லை. இருப்பினும் மன்னன் மகளை அத்து மீறிக் கேள்விகள் கேட்கக்கூடாதென்று தீர்மானித்து, "குமரி! இக்கோட்டையைச் சுற்றிலுங்கூடச் சேரர் ஆபத்திருப்பதாகச் சொல்லுகிறார்கள். ஆகவே நீ தனித்து எங்கும் போகாதிருப்பது நல்லது. அருவிக்குச் செல்லும்போதுகூடத் துணை இருக்கட்டும்," என்று எச்சரிக்கை மட்டும் செய்தாள். அத்துடன் அன்றிரவு இருவரும் மேற்கொண்டு எதுவும் பேசாமல் படுத்துக் கொண்டார்கள்.

படுத்துக் கொண்டார்களே தவிர இருவருக்கும் நீண்ட நேரம் உறக்கமே வரவில்லை. இருவர் மனக்கண் முன்பும் இரு ஆடவர்களின் உருவங்கள் எழுந்து உறக்கத்தைக் கெடுத்தன. ஆகவே மறுநாள் காலை இரு பெண்களும் அயர்ந்த உடல்களுடனும், சிவந்த கண்களுடனுமே எழுந் திருந்தார்கள்.

அன்று முழுவதும் ஏதேதோ சிந்தனைகளுடன் பொழுதைப் போக்கிய முத்துக்குமரி, இரவு வந்ததும் எப்படி இளநங்கை அறியாமல் தான் அருவிக்கரையை அடைய முடியும் என்பதைப்பற்றி யோசிக்கலானாள். முந்திய நாளிரவே தனக்காகக் காத்துக்கொண்டிருந்த இளநங்கை கண்டிப்பாய் அன்றிரவு உறங்கமாட்டாள் என்பதை உணர்ந்திருந்த முத்துக்குமரி அவளை வேறு வகையில் ஏமாற்றத் திட்டமிட்டாள். ஒரு விநாடி, 'ஏன் உண்மையைச் சொல்லி விட்டாலென்ன? அவரை நான் காதலிப்பது அவளுக்கும் தெரிந்ததுதானே?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டாள். இருப்பினும் நாணம் அவள் எண்ணத்துக்குக் குறுக்கே நின்றது. 'சே சே! எப்படிச் சொல்வேன் இதை? உடன் பிறந்தவளாய் இருந்தாலும்



சொல்ல முடியுமா? காதலின் நிகழ்ச்சிகளில், ரகசியம், திருட்டுத்தனம் உண்டு என்பதுதான் ஏற்பட்டுவிட்டதே?' என்று தனக்குள் சொல்லி நகைத்தும் கொண்டாள். ரகசியமும் திருட்டுத்தனமும் இல்லாவிட்டால் காதலில் என்ன சுவையிருக்கிறது? என்றும் தன்னைக் கேட்டுக் கொண்டாள் முத்துக்குமரி. 'என்னைக் கேள்வி கேட்கிறாளே இளநங்கை? இவள் மட்டுமென்ன? சிறிய தந்தையை வளைத் திருப்பவள்தானே?' என்று அவள்மீதும் குற்றம் சாட்டினாள்.

இத்தகைய எண்ணங்களால் வேறு வகையில் தனது காரியத்தைச் சாதித்துக் கொள்ள முயன்று அதற்கு அடுத்த நாளிரவில் ஆரம்ப காலத்திலேயே அடியும் போட்டாள். இருவரும் பெயருக்கு உணவருந்திக் கொண்டிருந்த சமயம் அது. "இளநங்கை! நான் இன்றும் போகப் போகின்றேன் அருவிக்கரைக்கு..." என்று மெள்ளத் துவங்கினாள் முத்துக்குமரி.

"ஏன்? இன்றும் இந்திரபானு உன்னைத் தொட்டுத் தூக்கினாரா? அல்லது விடுதிப் படியில் தொப்பென்று போட்டாரா? இன்று யார் மேல் கோபம்" என்று வினவினாள் இளநங்கை குரலில் ஏளனம் ஒலிக்க.

முத்துக்குமரியின் எண்ணம் முந்திய நாள் நிகழ்ச்சிகளை நோக்கி ஓடியது. 'தொட்டார்; தூக்கவில்லை' என்று சொல்லலாம் போலிருந்தது அவளுக்கு. அதனால் உள்ளம் சிரிக்க, உதடுகள் மட்டும் பொய்க் கோபம் கொள்ள, "எப்பொழுதும் இதுதான் உனக்கு? கோபமிருந்தால்தான் அருவியிடம் போக வேண்டுமா?" என்று வினவினாள்.

"காதலிருந்தாலும் போகலாம்," என்றாள் இளநங்கை நகைத்து.

முத்துக்குமரிக்குத் திக்கென்றது மனம். ஒருவேளை இளநங்கை தனது ரகசியத்தை ஊகித்துவிட்டாளோ என்று எண்ணி, "அதெல்லாம் உனக்குத் தெரியும்" என்றாள் வேடிக்கையாக.

"எது?"

"அருவிக்கரை, ஆற்றங்கரை இங்கெல்லாம் போவது எதற்கென்று?"

"என்ன சொல்லுகிறாய்? ஆற்றங்கரையா?"

"பொருநைக்கரை."

"என்ன!"

"அங்கொருவர் உன்னைத் தினம் வேவு பார்த்ததாகக் கேள்வி. வேவு பார்த்தாரோ, வேறு என்ன பார்த்தாரோ எனக்குத் தெரியாது."

"முத்துக்குமரி!" அதட்டினாள் இளநங்கை.

ஆனால் அந்த அதட்டல் பொய் அதட்டல் என்பதைப் புரிந்துகொண்ட முத்துக்குமரி உணவைப் பாதியிலேயே முடித்துக் கைகழுவிக் கொண்டு, இளநங்கையிடம் அவள் தோள்மீது கையை வைத்துக்கொண்டு, "இளநங்கை!" என்று, அன்பு சொற்களில் சொட்ட அழைத்தாள்.

"ஏன்?" என்று வினவினாள் இளநங்கை.

"நீ தினமும் பொருநைக்குப் போனாய் நீராட. அமைதியை நாட. எத்தனையோ ஆபத்திருந்தும் உன்னை ஒருவர் கண்காணிப்பதை அறிந்துங்கூடப் போனாயல்லவா?" என்று வினவினாள் முத்துக்குமரி.

"ஆம்"

"அப்படிதான் நானும் போகிறேன்."

"உன்னை அவர் வேவு பார்க்கிறாரா?"

"இல்லை. தனிமையை நாடிப் போகிறேன்! அங்கு உட்கார்ந்திருப்பது எனக்கு ஆறுதலாயிருக்கிறது."

"எனக்குப் பயமாயிருக்கிறது குமரி."

"ஒன்றுக்கும் பயப்படாதே. அவர் இந்த விடுதியின் மீதும் நமது நடமாட்டத்தின் மீதும் ஒரு கண் வைத்தேயிருப்பாரென்று உனக்குத் தெரியாதா?"

அதை அறிந்தே இருந்தாள் இளநங்கை; ஆகவே எதற்கும் எச்சரிக்கையாயிருக்கும்படிக்கும், அச்சமிருந்தால்



உடனே காவலருக்குக் குரல் கொடுக்கும்படியும் கூறி விடை கொடுத்தாள் முத்துக்குமரிக்கு. இத்தனை கஷ்டத்தில் விடைபெற்று அருவிப் பாறைக்கருகில் தனித்து வந்த முத்துக்குமரி அங்கு நின்று கொண்டிருந்தவனைக் கண்டதும் பெரிதும் வெகுண்டாள். அவள் வெகுண்டதைக் கண்ட அந்த வயோதிக வீரன் தலைதாழ்த்தி அவளை வணங்கி, "சொன்னபடி படைத்தலைவர் வரமுடியவில்லை. மன்னிக்கச் சொன்னார்," என்று மிகுந்த பணிவுடன் கூறினான்.

"ஏன் வரமுடியவில்லை?" என்று சீறினாள் முத்துக்குமரி.

இந்திரபானு வராதது மட்டுமின்றி, தனக்குப் பதில் விவரம் சொல்ல இன்னொருவனை அனுப்பியதும் விந்தையாயிருந்தது பாண்டியன் பைங்கிளிக்கு. ரகசியமாக வைத்திருக்க வேண்டிய சந்திப்புக்குத் தூதன் எதற்கு என்றும் சிந்தித்தாள் அவள்.

அவள் மனத்திலோடிய அனைத்தையும் அந்த வயோதிகன் புரிந்து கொண்டிருக்கவேண்டும். அவன் சொன்ன பதிலில் சகலத்துக்கும் விடையிருந்தது. "வேறு அலுவலுக்கு மன்னர் உத்தரவிட்டபடியால் படைத்தலைவர் கோட்டையை விட்டுச் சென்றுவிட்டார். இன்னும் இந்தப் பகுதியில் எதிரிகள் நடமாட்டம் இருப்பதாலும், இந்தப் பகுதி தன்னந்தனியாக அதிகக் காவலில்லாமல் இருப்பதாலும், நீங்கள் இங்கு தனித்திருப்பது உசிதமல்லவென்று படைத்தலைவர் கருதுகிறார். ஆகையால்தான் என்னை அனுப்பினார்," என்றான் அந்த வீரன்.

"நான் இங்கு வரப்போது அவருக்கு எப்படித் தெரியும்?" என்று வேண்டுமென்ற கேட்டாள் முத்துக்குமரி.

"நேற்று நீங்கள் தனித்து உட்கார்ந்திருந்ததைப் பார்த்துத் தாம் எச்சரித்ததாகவும், இருப்பினும் நீங்கள் வரப்போவதாகப் பிடிவாதம் செய்வதாகவும் கூறினார் படைத்தலைவர். அப்படி நீங்கள் வரும் பட்சத்தில் உங்களுக்குக்

காவலாகத் தானும் வருவதாகக் கூறினாராமே?" என்றான் அந்த வீரன்.

இதைக் கேட்ட முத்துக்குமரி உள்ளூர நகைத்துக் கொண்டாள். தனக்குச் செய்தியை அனுப்புவதிலும் எத்தனை சாமர்த்தியமாக நடந்துகொண்டிருக்கிறான் இந்திரபானு என்பதை எண்ணிப் பெருமகிழ்ச்சி கொண்டாள். இருப்பினும் அவன் வராதது ஏமாற்றத்தையும் துன்பத்தையும் அளிக்கவே, "மீண்டும் என்று வருவார் படைத்தலைவர்?" என்று வினவினாள்.

"நாளை மாலை வந்துவிடுவார்,"

"மன்னர் எப்பொழுது வந்தார் கோட்டைக்கு?"

"இன்று மாலை."

"வந்தவுடன் படைத்தலைவரை அனுப்பி விட்டாரா?"

"ஆம்."

முத்துக்குமரி சற்று யோசித்துவிட்டு விடுதியை நோக்கித் திரும்பினாள். அவளை நோக்கிவந்த வீரன் சொன்னான் பணிவுடன்: "நீங்கள் இங்கு தங்க வேண்டு மென்றால் இருக்கலாம். அவருக்குப் பதில் நான் காவலிருக்கிறேன்."

கிழவனின் காவல் பிடிக்காததால், "வேண்டாம். நானே வருகிறேன்," என்று சொல்லிவிட்டு விடுதி நோக்கி நடந்து சென்றாள் முத்துக்குமரி.

அன்று வேதனையுடன் சென்ற முத்துக்குமரி மறு நாளிரவை எதிர்பார்த்து ஒரு நாளைக் கழித்தாள். ஓர் இரவும், ஒரு பகலும் ஒரு யுகமாயிருந்தது அவளுக்கு. மறுநாள் இரவும் முதல் நாளிரவு போலவே கிளம்பிய முத்துக்குமரியை இளநங்கை தடுக்கவில்லை. போகிற காரணத்தை அவள் சந்தேகத்துக்கிடமின்றிப் புரிந்து கொண்டதால் மறுத்து எதுவும் பேசவில்லை.

முத்துக்குமரி அன்றும் பெரும் மகிழ்ச்சியுடனேயே சென்றாள். அவள் சென்றதைப் பார்த்துக்கொண்டிருந்த



இளநங்கை தனது பஞ்சணையில் மல்லாந்து கிடந்தாள். நேரம் வெகு துரிதமாக ஓடிக் கொண்டேயிருந்தது. நீண்ட நேரம் முத்துக்குமரி வரவேயில்லை.

வெள்ளி முளைத்ததும் முத்துக்குமரி வராதிருக்கவே சந்தேகமடைந்த இளநங்கை, விடுதியின் பின்புற ஓடையை நோக்கிச் சென்றாள். அங்கும் முத்துக்குமரி இல்லாது போகவே மன்னனிருந்த விடுதிக்கு வெகு வேகமாகவே ஓடினாள். அங்கிருந்த காவலரிடம் முத்துக்குமரியைக் காணவில்லையென்ற விஷயத்தைச் சொன்னதும் கோட்டை முழுவதுமே விழித்துக்கொண்டது. எங்கும் வீரர்கள் ஓடினார்கள். கோட்டை சல்லடை போட்டுச் சலிக்கப்பட்டது. முத்துக்குமரியை எங்கும் காணவில்லை. சுவடு தெரியாமல் மறைந்துவிட்டாள். அவள் மட்டுமல்ல மறைந்தது; அன்று மாலை கோட்டைக்குத் திரும்பிய இந்திர பானுவும் மறைந்துவிட்டானென்பதை வெகு விரைவில் உணர்ந்து கொண்டாள் இளநங்கை.

## அத்தியாயம் 31

# குருதி பாய்ந்த கோடரி

**வி**ண்மீன்கள் முதல் ஜாம முடிவைக் காட்டியவுடனேயே வெளியேறிய முத்துக்குமரி வெள்ளி முளைத்த பின்பும் விடுதி திரும்பாது போகவே வேதனை நிறைந்த இதயத்துடன் அருவிக்கரைக்கு விரைந்த இளநங்கை அங்கும் இளவரசியைக் காணாததால் வேகத்துடன் மன்னர் விடுதியை அடைந்து அங்கிருந்த காவலரிடம், "இளவரசியைக் காணவில்லை," என்ற இரண்டே சொற்களை நெஞ்சு படபடக்க உதடுகள் துடிக்கக் கூறினாள்.

அடுத்த வினாடி காவலரில் ஒருவன் பக்கத்திலிருந்த கொம்பை எடுத்துப் பலமாக மும்முறை ஊதினான். இன்னொருவன் இளநங்கையை அழைத்துக்கொண்டு விடுதிக்குள் சென்றான். கொம்பு ஊதல் ஒலியால் அப்பொழுதே கண் விழித்த பாண்டிய மன்னன் வினாக்களை விடுக்கும் பாணியில் சற்றே உயர்ந்த புருவங்களுடனும், தூங்கி வழிந்த நேரத்திலும் வேல்களெனப் பளிச்சிட்ட சிங்கக் கண்களுடனும் இளநங்கையை வரவேற்றான்.

எதிர்பாராத பெரும் அபாயம் நேரிடும் சமயங்களில் மட்டுமே கொம்புகள் எச்சரிக்கையாக ஊதப்படுமென்பதை உணர்ந்திருந்த இளநங்கை, அப்படிக் கொம்புகள் ஊதப்பட்ட பின்பும் எந்தவித அவசரத்தையோ துடிப்பையோ காட்டாமல் சுந்தரபாண்டியன் தன்னை வரவேற்றதைக் கண்டு, விஷயத்தை அவன் உணராததாலேயே அத்தகைய நிதானத்தைக் காட்டுகிறானென்று



நினைத்தாள். அத்தகைய செய்தியை எப்படி உரைப்பதென்று அறியாமல் சங்கடப்பட்டு முகத்தில் கலவரத்தைக் காட்டி நின்றாள். சுந்தர பாண்டியனின் சீரிய கண்கள் அவளைக் கூர்ந்து நோக்கின. படுக்கையேதுமில்லாத மரமஞ்சத்தில் சயனித்திருந்த சுந்தர பாண்டியன், அப்பொழுதுதான் விழித்து எழுந்து உட்கார்ந்திருந்தானாதலால், அவன் மேலுடை சற்று விலகி அவன் அகன்ற மார்பில் இரண்டு மூன்று வாட்பயிற்சிக் காயங்களைக் காட்டிக்கொண்டிருந்தது. தலையின் குழலும் முரட்டுத்தனமாக முகத்தில் சிதறிக் கிடந்தது. அந்த நிலையில் சுந்தரபாண்டியன் கேட்டான், "என்ன இளநங்கை, என்ன விஷயம்?" என்று.

விடுதிக் காவலரிடம் பதைபதைத்துச் சொன்ன அதே செய்தியை மதுரைக் காவலனிடம் சொல்லச் சக்தியற்றுப் போயிருந்த இளநங்கையின் உதடுகளில் சொற்கள் வேகத்துடன் வர மறுத்தன. பெண் காணவில்லையென்று தந்தையிடம் சொல்லும் தைரியமில்லாததால் அந்தத் தையல் சிறிது தயங்கவே செய்தாள்.

ஏதோ விபரீதம் நேர்ந்திருக்கிறதென்பதை இளநங்கை வந்தவுடனேயே பாண்டிய மன்னன் உணர்ந்து கொண்டான். எந்த நிலையையும் சூசகங்களைக் கொண்டே எடை போடவல்ல பெரும் திறன் கொண்ட பாண்டிய மன்னன் வெளியே அபாயத்தை உணர்த்த கொம்புகள் ஊதப்பட்டதிலிருந்தும், அதைத் தொடர்ந்து இளநங்கை உடல் துடிக்க, முகத்தில் கலவரம் ததும்ப, உள்ளே நுழைந்ததிலிருந்தும் விரும்பத்தகாத ஏதோ ஒரு விபரீதம் நேர்ந்திருக்கிறதென்பதைப் புரிந்துகொண்டு விட்டானாதலால், "இளநங்கை! தைரியமாகச் சொல்! என்ன நடந்தது?" என்று இரண்டாம் முறை வினவினான்.

அந்தக் கேள்வியை அவன் கேட்ட பொழுது கூட அவன் குரலிலோ, நிலையிலோ எந்தவிதப் பதற்றமும் இல்லாதிருந்தாலும் இளநங்கைக்கும் நிதானம் சிறிதும் வாராது போகவே "இளவரசி...இளவரசி..." என்று துவங்கி மேலே ஏதும் சொல்ல முடியாமல் மென்று விழுங்கினாள்.

"என்ன முத்துக்குமரிக்கு?" என்று வினவினான் சுந்தர பாண்டியன் மஞ்சத்தைவிட்டு எழுந்திராமலே.

"காணவில்லை?" உயிரைப் பிடித்துக்கொண்டு அந்த வார்த்தையை உதிர்த்தாள் இளநங்கை. அதைச் சொன்ன பின்பு அவளுக்கிருந்த வேதனை அதிகமாகவே, நிற்கும் சக்தியில்லாமலே பக்கத்திலிருந்த மஞ்சத்தில் சென்று அரசன் அனுமதியில்லாமலே உட்கார்ந்தும் கொண்டாள்.

எந்தத் தந்தைக்கும் அதிர்ச்சியைத் தரும் அந்தச் செய்தி எம்மண்டலமும் கொண்டருளவிருந்த பாண்டிய பெருமாளுக்குப் பெரும் அதிர்ச்சியைத் தருமென்றோ, அவன் துள்ளி எழுவானென்றோ, கோபத்தால் கூச்சலிடுவானென்றோ இளநங்கை நினைத்திருந்ததால் அவள் பெரும் ஏமாற்றமே அடைந்தாள். சுந்தரபாண்டியன் மஞ்சத்தை விட்டு எழுந்திருக்கக்கூட இல்லை. மடித்திருந்த ஒரு காலை மட்டும் கீழே எடுத்துத் தொங்கவிட்டுத் தரையில் ஊன்றியதைத் தவிர வேறு அசைவு எதுவும் அவனிடம் காணப்படவில்லை. அவன் புத்தி மட்டும் தீவிர சிந்தனையில் ஈடுபட்டிருந்ததை முகம் காட்டியது. அவன் சிங்க விழிகள் மட்டும் ஒருமுறை அவளைக் கூர்ந்து நோக்கின. "அவள் காணாதது உனக்கு எப்பொழுது தெரியும்?" என்று ஒரு கேள்வியும் மன்னனிடமிருந்து எழுந்தது சர்வ சகஜமாக.

அவன் நிதானம் பெரும் எரிச்சலைத் தந்தது இளநங்கைக்கு. "முதலில் இளவரசியைத் தேடச் சொல்லுங்கள். பிறகு என்னை விசாரிக்கலாம்," என்றாள்.

"அந்தப் பணி துவங்கிவிட்டது," என்றான் சுந்தர பாண்டியன்.

"எந்தப் பணி?" என்று வினவினாள் இளநங்கை.

"என் மகளைத் தேடும் பணி."

"தேட நீங்கள் உத்தரவிடவில்லையே?"

"தேவையில்லை. இந்த விடுதிக் காவலனிடம் நீ சொன்னாயல்லவா என் மகள் காணவில்லையென்று?"



"சொன்னேன்."

"உடனே கொம்பு ஊதப்பட்டது."

"ஆம்."

"கோட்டை விழிக்க, எங்கும் எச்சரிக்கையாயிருக்கக் கொம்பு ஊதப்படுகிறது. தவிர, உன்னிடம் விஷயத்தை அறிந்த காவலன் என் உத்தரவுக்குக் காத்திருக்க மாட்டான். இத்தனை நேரம் வீரர்களை ஏவியிருப்பான் கோட்டைப் புறத்தைச் சல்லடை போட்டுச் சலிக்க, உற்றுக் கேள்," என்றான் வீரபாண்டியன்.

வெளியே வீரர் நடமாட்டம் பலமாகக் கேட்டது. எங்கும் எச்சரிக்கைக் கூச்சலும், பதில் கூச்சலும் கேட்டன. கோட்டைக் கதவுகள் திறக்கப்பட்டு வெளியே புரவிகள் பாய்ந்து செல்லும் ஒலிகளும் இளநங்கையின் காதில் விழுந்தன. கண்ணிமைக்கும் நேரத்தில் கோட்டைக்கு உயிர்த் துடிப்பை உண்டாக்கிவிடக் கூடிய அத்தனை திறமையுடன் பாண்டிய மன்னன் படை நிர்வாகத்தை அமைத்திருக்கிறானென்பதைப் புரிந்துகொண்ட இள நங்கை பிரமித்தாள். கொற்கையில் தன் தந்தையின் நிர்வாகமும் சிறந்ததுதானென்றாலும் இத்தனை துரிதமாகக் கோட்டை வீரர் செயல்பட முடியாதென்பதை இளநங்கை உணர்ந்து கொண்டாள். ஆதலால், எப்படியும் முத்துக்குமரி அகப்பட்டுவிடுவாளென்று எண்ணினாள். அந்தத் தைரியத்தில் அரசன் கேட்ட கேள்விகளுக்குப் பதில்களையும் தங்கு தடையின்றிக் கூறினாள்.

"முத்துக்குமரி எங்கிருந்து மறைந்தாள்? விடுதியிலிருந்தா?" என்று வினவினான் சுந்தரபாண்டியன்.

"இல்லை" என்றாள் இளநங்கை, தயக்கம் குரலில் ததும்ப.

"வேறெங்கு மறைந்தாள்?" என்று வினவினான் மன்னன்.

"அருவிக்கரைக்குச் சென்றாள் இரவின் ஆரம்பத்தில்," என்றாள் இளநங்கை.

பாண்டிய மன்னன் முகத்தில் சந்தேகச் சாயை சற்றே படர்ந்தது. "இன்றிரவு மட்டும்தானா?" என்று வினவினான் அவன்.

"இல்லை. இரண்டு நாட்களாகவே போகிறான்," என்று இளநங்கை கூறினாள். அவள் குரலில் அச்சமிருந்தது. இதை ஏன் முன்பே கூறவில்லையென்றோ, ஏன் அவனைத் தனித்து அனுப்பினாயென்றோ மன்னன் வினவினால் என்ன பதில் சொல்வதென்ற அச்சமிருந்தது அவள் சொற்களில்.

"எதற்காகப் போகிறான்?" என்றான் சுந்தர பாண்டியன் மீண்டும்.

என்ன பதில் சொல்வதென்று அறியாமல் திகைத்த இளநங்கை, "அங்கு உட்கார்ந்து அருவியைப் பார்த்தால் மனத்துக்கு அமைதியாய் இருப்பதாகக் கூறினான்," என்று கூறினாள், உண்மையைச் சொல்ல இஷ்டப்படாமல்.

பாண்டியன் விழிகள் அவளைக் கூர்ந்து நோக்கின. அவன் கேள்வியும் திட்டமாக வந்தது. "அதை நீ நம்பினாயா?" என்று வினவினான் மன்னன்.

"இல்லை", என்று ஒப்புக்கொண்டாள் இளநங்கை, மன்னன் கண்கள் தன்னை ஊடுருவியதால் எதையும் மறைக்க முடியாதென்ற காரணத்தால்.

"வேறெதற்குச் சென்றான்?" என்று மீண்டுமொரு கேள்வியை வீசினான் பாண்டியன் மன்னன்.

இளநங்கை பதில் சொல்லவில்லை. பதில் சொல்ல மனம் துணியவில்லை. பேசாமல் தலைகுனிந்து உட்கார்ந்திருந்தாள். மன்னனிடம் ஓரளவு வெறுப்பும் கொண்டாள் அவள் அந்தச் சில நிமிடங்களில். 'மகள் காணவில்லையென்றதும் துடித்தெழுந்து ஓடித் தேடாமல் இங்கு உட்கார்ந்து நிதானமாக விசாரணை செய்யும் இவர் என்ன தந்தை?' என்று அலுத்தும் கொண்டாள். இருப்பினும், முத்துக்குமரிக்கும், இந்திரபானுவுக்குமிருந்த நட்பைப்பற்றி அரசனிடம் சொல்ல அவளுக்குத் துணிவு வரவில்லை.

ஆனால், மன்னனின் அடுத்த கேள்வி அவளைத் திடுக்கிடவைத்தது. "இந்திரபானுவைச் சந்திக்கச் சென்றாளா?" என்று வினவினான் சுந்தரபாண்டியன் சர்வ சாதாரணமாக.



இளநங்கையின் குனிந்த தலை திடுக்குற்று எழுந்தது. அவள் அழகிய விழிகளில் அச்சம் மிதமிஞ்சிச் சொட்டிற்று. பதில் சொல்ல உதடுகள் மறுத்தன. ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் ஆட்டினாள் கோட்டைக் காவலன் மகள். அதற்குமேல் பாண்டிய மன்னன் என்ன சீறுவானோ என்று அவனை ஏறெடுத்து நோக்கவும் தயங்கினாள்.

சுந்தரபாண்டியன் எந்தவிதப் பதற்றத்துக்கும் உள்ளாகவில்லை. இரு கைகளையும் ஒருமுறை தட்டினான். உள்ளே நுழைந்த காவலனை நோக்கி, "இந்திரபானுவை இங்கு அனுப்பு," என்று உத்தரவிட்டான்.

அந்த உத்தரவை ஏற்றுத் துரிதமாக வெளியே ஓடிய காவலன் சிறிது நேரத்துக்கெல்லாம் ஓடிவந்து, "படைத் தலைவரை விடுதியில் காணவில்லை," என்றான்.

இந்தச் செய்தியைக் கேட்ட இளநங்கையின் இதயத்தில் அச்சம் நூறு மடங்காகியது. ஆனால், பாண்டிய மன்னன் மட்டும் எவ்வித உணர்ச்சியையும் முகத்தில் காட்டாமல், "இளவரசியைத் தேடுவதோடு இந்திர பானுவையும் தேடச் சொல்," என்று உத்தரவிட்டு, "சரி இளநங்கை! நீ உன் விடுதிக்குச் செல்; செய்தி ஏதாவது கிடைத்தால் சொல்லியனுப்புகிறேன்," என்றான்.

இளநங்கை தனது ஆசனத்தைவிட்டு எழுந்த மன்னனை நோக்கினாள். மன்னன் முகத்தில் சிந்தனை தீவிரமாயிருந்தது. மன்னன் உணர்ச்சிகளை நன்றாகக் கட்டுப்படுத்தியிருந்தாலும், திடமாக மஞ்சத்தில் அவன் உட்கார்ந்திருந்தாலும், புருவங்கள் இரண்டு மூன்று முறை சுளித்ததிலிருந்து அவன் மனத்தில் மகள் மறைவால் வேதனை நிரம்பிக் கிடந்ததைப் புரிந்து கொண்ட இளநங்கை, அவ்விடத்தைவிட்டு நகராமலே நின்றாள். பிறகு துவங்கினாள், "மன்னவா! நானும் இங்கு இருக்கிறேன்," என்று அவனுக்கு ஆதரவு சொல்லும் முறையில்.

துன்பப் புன்முறுவலொன்று சுந்தரபாண்டியனின் வீர வதனத்தில் படர்ந்தது. "தேவையில்லை இளநங்கை! பகையும், போரும் பல துன்பங்களைத் தருகின்றன. அவற்றைத் தாங்கவே மன்னன் இருக்கிறான். நீ போ உன் இடத்துக்கு," என்றான் மன்னன்.

இளநங்கை ஒரு வினாடி தயங்கினாள். பிறகு சென்றாள் தன் விடுதி நோக்கி. விடுதியை அடைந்த பின்பும் விடுதிக்குள் நுழையாமல் கோட்டைப் புறத்தைப் பார்த்துக் கொண்டே வெளித் தாழ்வரையில் உட்கார்ந்திருந்தாள். கோட்டையில் எங்கும் பரபரப்பா யிருந்தது. ஆயுதம் தாங்கிய காவலர் எல்லா இடங்களிலும் நடமாடினார்கள். கோட்டைக்குள்ளிருந்த எல்லா விடுதி வாயில்களிலும் பந்தங்கள் கொளுத்தப்பட்டதால் எங்கும் வெளிச்சம் அதிகமாயிருந்தது. கோட்டையின் கதவுகள் அடிக்கடி பெரும் சத்தத்துடன் திறந்து மூடின. வீரர்கள் பலர் புரவிகளில் அமர்ந்து வெளியே பாய்ந்து சென்று சுற்றுப் புறங்களை ஆராய்ந்து கொண்டிருந்தனர்.

அந்த மலைப்பகுதியின் காலைப் பொழுது வழக்கம் போல் மிக இன்பமாகவே இருந்தது. பட்சி ஜாலங்கள் எங்கும் கூவின. காலையின் குளிர் காற்று மிக இன்பமாக வீசியது. பல மலர்களின் நறுமணம் கதம்ப வாசனையாக வந்து கொண்டிருந்தது. ஆனால் அத்தனை இன்பமும் வேதனையையே அளித்தது இளநங்கைக்கு. அந்த வேதனையுடனேயே அன்று காலைப் பொழுதைக் கழித்தாள் அவள். காவலர் கொண்டுவந்த காலை உணவைக்கூட அருந்தவில்லை இளநங்கை.

பகல் உச்சிவேளைக்கு மன்னனிடமிருந்து வந்த வீரனொருவன் இளவரசியை எங்கும் தேடியாகிவிட்ட தென்றும், இளவரசியோ, இந்திரபானுவோ சென்ற இடம் தெரியவில்லையென்றும் அறிவித்தான்.

சட்டென்று இளநங்கைக்கு ஒரு யோசனை தோன்றவே, "மன்னனின் சாம்பல் நிறப் புரவி இருக்கிறதா?" என்று வினவினாள்.



"இருக்கிறது தேவி. அது மட்டுமல்ல. எல்லாப் புரவிகளும் இருக்கின்றன. ஒரு புரவிகூடக் குறையவில்லை," என்று வீரன் கூறினான்.

அதற்கு மேல் அவனை ஏதும் கேட்கவில்லை இளநங்கை. 'புரவியும் கொண்டு சொல்லவில்லையென்றால் இருவரும் நடந்தா சென்றிருக்கிறார்கள்? ஏன் செல்ல வேண்டும்? ஒரு வேளை இந்திரபானு மீண்டும் எதிரிபக்சம் திரும்பி விட்டானா? அப்படியானால் இளவரசி அபகரிக்கப் பட்டாளா? ஒருவேளை இந்திரபானுவின் மறைவுக்கும் இளவரசி காணாமற் போனதற்கும் சம்பந்த மில்லாதிருக்குமோ?' என்று பலபடி தன்னைக் கேள்வி கேட்டுக் கொண்ட இளநங்கை, பெரும் குழப்பத்துட னிருந்தாள்.

அன்று முழுவதும் மேற்கொண்டு அவளுக்குச் செய்தி எதுவும் கிடைக்கவில்லை. அன்றிரவில் தான் ஏதோ புலன் கிடைத்தது. அந்தப் புலன் யாருமே எதிர்பாராத பெரும் விபரீதத்தை உணர்த்தியது. அந்தப் புலனைக் கொண்டு வந்தவனைக் கண்டதும் பேரதிர்ச்சியுற்றாள் இளநங்கை. அன்றிரவின் ஆரம்பத்தில் திடீரென மன்னனால் அழைக்கப் பெற்ற இளநங்கை மன்னன் விடுதிக்குச் சென்றதும் முற்றிலும் எதிர்பாராத ஒரு மனிதனைக் கண்டாள். ஒரு பொருளையும் கண்டாள். மன்னனுடன் நின்றிருந்த மனிதன் அவளிடம் ஒரு கோடரியை நீட்டினான். "இதை நீ இதற்கு முன்பு பார்த்திருக்கிறாயா?" என்று அதிகாரத் தோரணையிலும் வினவினான்.

அந்த மனிதனைக் கண்டே பிரமித்த அவள் கோடாரியைக் கண்டதும் மிதமிஞ்சிய திகைப்பினால் திலைத்து நின்றுவிட்டாள் பல வினாடிகள். அவள் உதடுகள் பயத்தால் துடித்தன. அந்த மனிதன் அவளை அதிர்ச்சிக் குள்ளாக்கினான். அந்தக் கோடாரி அவளை அச்சுறுத்தியது. ஆனால் அதில் படிந்திருந்த ரத்தக் கறை அவளை அடியோடு நிலைகுலையச் செய்துவிட்டதால் விழித்த கண்கள் விழித்தபடி நீண்ட நேரம் நின்று விட்டாள் இளநங்கை.

## அத்தியாயம் 32

# குறிப்பாலுணர்த்துதல்

இரவின் ஆரம்பத்தில் பாண்டிய மன்னனால் அழைக்கப் பெற்று அவன் விடுதிக்குச் சென்ற இளநங்கை அந்த விடுதியின் முன்கூடத்தில் மன்னனை நோக்கிய வண்ணம் நின்றிருந்த உயர்ந்த உருவத்தைக் கண்டதும் பல விநாடிகள் அசைவற்று நின்றுவிட்டாள். அவள்தான் அசைவற்று நின்றுவிட்டாளே தவிர அவள் உணர்ச்சிகள் ஒரு நிலையில் நிற்காமல் பெருவேகத்துடன் உடலில் சுழல ஆரம்பிக்கவே, தன்னைச் சமாளித்துக் கொள்ளப் பக்கத்திலிருந்த ஒரு தூணைத் தனது இடது கையால் பிடித்துக் கொண்டாள். அவள் வரும்வரை வாயிற புறத்துக்கு முதுகைக் காட்டிக் கொண்டு மன்னனிடம் பேசிக் கொண்டிருந்த வீரபாண்டியன், அவள் காலடி ஓசை கேட்டதுமே திரும்பியதால் இளநங்கை கண்களும் அவன் கண்களும் ஒரு கணம் சந்திக்கவும் செய்தன. அவன் கண்களில் அன்று அந்தப் பழைய நகைப்பு இல்லை. அவன் நின்ற தோரணையிலும், நிதானத்திலும்கூட ஒரு கடுமை இருந்தது. எதிரிகளை எதிர்க்கும்போது மிகப் பயங்கரமாக மாறும் முகமும், கழுகுப் பார்வை வீசும் கண்களும் அன்று அத்தனை பயங்கரமாக இல்லையென்றாலும், முகம் இரும்பினால் செய்தது போல் உணர்ச்சியற்றுக் கெட்டிப்பட்டிருந்தது. அவன் கன்னச் சதைகள்கூடச் சிறிதும் இளகாமல் இரும்பு போலிருந்ததையும், வேல்முனைக் கண்கள் தன்னை நோக்கியதையும் கண்ட இளநங்கை இளவரசன் இதயத்தில் சினம் மூண்டு கிடக்கிறதென்பதை மிகத் தெளிவாகத் தெரிந்து கொண்டாள்.



அவளை ஒரு விநாடியே கவனித்த இளவரசன், அந்த விநாடியிலும் பழைய உறவையோ தொடர்பையோ சிறிதும் காட்டாமலும், ஏதோ ஒரு குற்றவாளியைப் பார்ப்பது போலும் பார்த்தான். தனது கையிலிருந்த கோடரியை அவளிடம் நீட்டி, "இதை நீ இதற்கு முன்பு பார்த்திருக்கிறாயா?" என்று கேட்ட கேள்வியிலும், அன்பின் ஒலி சிறிதுமின்றிக் குற்றவாளியை விசாரிக்கும் தோரணையே இருந்ததைக் கண்ட கொற்கைக் கோட்டைக் காவலன் மகள் 'கடமை என்று வரும்போது பாண்டிய மன்னனும் சரி, அவர் தம்பியும் சரி, பழைய உறவைப் பற்றிச் சிறிதும் சிந்திப்பது கிடையாது. இருவரும் உணர்ச்சியற்ற இரும்புத் துண்டங்கள்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

அவள் நினைப்புக்குச் சான்று கூறும் தோரணையிலும் குரலிலுமே கோடரியை நீட்டி அந்தக் கேள்வியைக் கேட்டான் வீரபாண்டியன். அதைக் கையில் வாங்கிப் பார்க்கவேண்டிய அவசியம் ஏதுமில்லை யென்றாலும் சம்பிரதாயத்துக்காக வாங்கிக்கொண்டு அதன்மீது தனது கண்களை ஓடவிட்டாள் இளநங்கை. அந்தக் கோடரியும் அதில் படிந்த இரத்தக் கறையும் அவளைப் பெரிதும் நிலைகுலையச் செய்தமையால், ஒரு விநாடி பேசாமலேயிருந்த இளநங்கை மெள்ளத் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, "இதை எப்படி நான் மறக்க முடியும்?" என்று மெள்ளக் கூறினாள்.

"நான் கொற்கையில் வீரரவியின்மீது எறிந்த கோடரி இவ்விடத்திற்கு எப்படி வந்தது?" என்று மீண்டும் வினவினான் வீரபாண்டியன்.

"என் மூலம் வந்தது."

"உன் மூலமா!"

"ஆம். வீரரவியே என்னிடம் அனுப்பினான், தான் தப்பி விட்டதை எனக்கு உணர்த்த." என்றாள் இளநங்கை.

"எங்கே?"

"கொட்டுந்தளத்தில்."

"பிறகு இந்தக் கோடரி உன்னிடம் தானிருக்கிறது?"

"ஆம்."

"வேறு யாரிடமும் கொடுக்கவில்லையா?"

"இல்லை. தனியாக என் உடைகளில் மறைத்து வைத்திருந்தேன்."

"ஏன்?"

இந்தக் கேள்வியை வீரபாண்டியன் கேட்டதும் இள நங்கையின் கண்கள் அவனை நோக்கி நகைத்தன. 'எப்பேர்ப்பட்ட அறிவாளிகளும் சில சமயங்களில் முட்டாள்களாகி விடுகிறார்கள்' என்று தீர்மானித்தாள் இளநங்கை. பொருநைத் தோப்பு முகப்பில் நிலவொளியில் அவன் மடியில் கிடந்து சிகிச்சை பெற்ற சமயத்தில் முதன் முதலாக அதைத் தான் பார்த்தது, பிறகு அதை அவன் வீரரவியின்மீது எறிந்து தன்னைத் தூக்கி வந்தது, அதன் பின்னர் பொருநைக் கரையில் உட்கார்ந்து பொற்கோடரி நஷ்டத்தைப்பற்றி அவன் விவரித்தது ஆகிய அனைத்தையும் எண்ணிப் பார்த்த இளநங்கை, தங்கள் இருவரையும் இப்படிப் பலபடி இணைத்ததும் அவன் இலச்சினை பதித்ததும், தன்னைக் காத்ததுமான அந்தக் கோடரியை வீர பாண்டியனாகவே பாவித்து, அவள் தன் சீலையில் சுருட்டி மறைந்திருக்க, அதைப்பற்றி விவரம் கேட்டால் தான் என்ன பதில் சொல்ல முடியும் என்று எண்ணினாள் வானாதித்தன் மகள்.

அவள் தயக்கம் வீரபாண்டியன் உணர்வைச் சற்று இந்த உலகத்துக்குக் கொண்டு வந்திருக்க வேண்டும். அவள் அழகிய விழிகளில் துளிர்த்த நகைப்பொலி அவன் புத்தியின் இருளையும் சிறிது கிழித்திருக்க வேண்டும். ஆகவே, அவன் தன் கேள்வியின் காரணத்தை விளக்க முற்பட்டு, "வேறு யார் கையிலும் இது கிடைக்கக் கூடாதென்பதற்காக மறைத்து வைத்திருந்தாயா?" என்று வினவினான்.

"ஆம்," என்றாள் இளநங்கை, அவன் சமாளித்துக் கொள்ள முயல்வதை எண்ணி, உள்ளூர நகைத்துக் கொண்டு.



வீரபாண்டியன் சிறிது நிதானித்துவிட்டுச் சொன்னான், "இருப்பினும் இது வேறொருவருக்குக் கிடைத்திருக்கிறது; உபயோகிக்கப்பட்டும் இருக்கிறது," என்று.

இளநங்கை அந்த பொற்கோடரியை ஒரு கையில் தாங்கி இன்னொரு கையால் அதன் பிடியைத் தடவிக் கொடுத்தாள். அதன் களைத்த வார்ப்படத்தில் பொறித்திருந்த ராஜமுத்திரையை மட்டும் அவள் தொடவில்லை, அதில் குருதி படிந்திருந்த காரணத்தால், அந்தக் குருதிக் கறையை நோக்கிய அவள், "ஆம்" என்று ஆமோதிக்கும் பாவனையில் தலையை ஆட்டினாள்.

வீரபாண்டியன் விளக்கினான்: "இந்தக் கோட்டையி லிருந்து கால் காத தூரத்தில் இது கிடந்தது. மஞ்சள் வெயிலில் இது பளபளத்துக் கிடந்தபடியால் தூரத்திலேயே இதை நான் பார்க்க முடிந்தது. கலப்படமில்லாத பசும் பொன்னால் செய்யப்பட்டதாகையால் இது பெரிதும் பளபளக்கவே நான் இதை நாடி என் புரவியைச் செலுத்தினேன். நடுப்பாதையில் இது கிடந்தது..."

இந்த இடத்தில் சற்று நிதானித்த வீரபாண்டியன் மன்னனிருந்த இடத்தை நோக்கி இரண்டடி நடந்து மன்னன் மஞ்சத்திலிருந்த ஒரு கிழிந்த சீலையை எடுத்து வந்து இளநங்கையிடம் நீட்டி, "இது பக்கத்திலிருந்த ஒரு முட் புதரில் மாட்டிக் கொண்டிருந்தது," என்றும் கூறினான்.

இளநங்கை அந்தச் சீலைக் கிழிசலைக் கையில் வாங்கி நோக்கினாள். "இது முத்துக்குமரி அணிந்திருந்த சீலையின் முந்தானைதான். சந்தேகமில்லை. இதை உடுத்துக்கொண்டு தான் அவள் அன்று அருவிக்கரைக்குச் சென்றாள்," என்று கூறவும் செய்தாள்.

வீரபாண்டியன் மேலும் கேட்டான், "இளவரசி இந்திரபானுவைச் சந்திக்கத்தான் அருவிக்குச் சென்றா ளென்று உனக்குத் தெரியுமா?" என்று.

"தெரியும்," என்றாள் இளநங்கை திடமாக,

"எப்படித் தெரியும்? உன்னிடம் சொன்னாளா?" என்று வீரபாண்டியன் வினவினான்.

இளவரசி மறைந்து கோட்டையே அல்லோல கல்லோலப்படும் அந்த நிலையிலும் இளநங்கையின் இதழ்கள் இளநகை கூட்டின. முரட்டுத்தனமாக வீரபாண்டியன் கேட்கும் கேள்விக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் ஒரு விநாடி அவள் விழிக்கவும் செய்தாள். பிறகு சொன்னாள், "என்னிடம் சொல்லவில்லை, இருப்பினும் தெரியும்," என்று.

"சொல்லாவிட்டாலும் தெரியும் என்பது விசித்திரமில்லையா?" என்று வினவினான் வீரபாண்டியன்.

"பெண்களைப் பற்றி ஆண்கள் உணரமுடியாத பல விசித்திரங்களில் இதுவும் ஒன்று," என்று பதில் கூறினாள் இளநங்கை.

அதுவரை மௌனமாக மஞ்சத்தில் அமர்ந்து இருவர் சம்பாஷணையிலும் தலையிடாத சுந்தரபாண்டியன் எழுந்திருந்து, தனது தம்பியின் பக்கத்தில் வந்து நின்றுகொண்டு இளநங்கையை நோக்கி, "இளநங்கை! தம்பி இப்படியெல்லாம் விசாரிக்கிறானே என்று கோபப்படாதே. என் மகள் மறைந்து போனதற்கு இந்திரபானுதான் காரணமா என்று தெரியவில்லை. இருவரும் காணவில்லை என்பதுதான் தெரிந்திருக்கிறது. அவள் அருவிக்கரைக்குச் சென்றதாக நீ கூறும் மூன்று நாட்களில் முதல் நாள் இந்திரபானு இங்கு இருந்திருக்கிறான்; மறுநாள் இல்லை; மூன்றாம் நாள் இருந்திருக்கிறான். ஆகையால் அவள் மறைவுக்கு அவன்தான் காரணமா அல்லது வேறு யாராவது காரணமா என்று ஆராயப் பார்க்கிறான் தம்பி" என்று விளக்கினான்.

அதை அவள் அறிந்தே இருந்தாள். இருப்பினும் நேரிடையாக முத்துக்குமரி சொல்லாத விஷயங்களுக்கு அத்தாட்சி காட்டவும் முடியாதாகையால் இளநங்கை சொன்னாள், "மன்னவா! பெண்கள் மற்றப் பெண்ணின் நடவடிக்கைகளைப் பல குறிப்புகளைக் கொண்டு



உணருவார்கள். அது எப்படி என்று சொல்ல இயலாது. சொன்னாலும் ஆண்மக்கள் புரிந்துகொள்ள முடியாது. ஆகையால்தான் என்னால் விளக்கமுடியவில்லை. ஆனால் இளவரசி சென்றது இந்திரபானுவைச் சந்திக்கத்தான். அதில் சந்தேகம் வேண்டாம்."

அவள் குரலிலிருந்த உறுதியைக் கவனித்த அண்ணனும், தம்பியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். பிறகு மன்னன் வீரபாண்டியனை நோக்கிச் சொன்னான், "அப்படியானால் உன் ஊகம் சரிதான் தம்பி," என்று.

"என்ன ஊகம்?" என்று வினவினாள் இளநங்கை ஆவலுடன்.

"முத்துக்குமரி இருக்கும் இடத்தில் இந்திரபானுவும் இருக்கிறான் என்று நினைக்கிறான் தம்பி," என்று மன்னன் கூறினான்.

இளநங்கை வீரபாண்டியனை நோக்கி, "அப்படியானால் முத்துக்குமரியை இந்திரபானு தூக்கிச் சென்று விட்டாரென்று முடிவுகட்டி விட்டீர்களா?" என்று வினவினாள்.

வீரபாண்டியன் கண்கள் அவள் இதயத்தையே ஊடுருவுவதுபோல் கூர்ந்து பார்த்தன. "அப்படி முடிவு கட்டினால் அது தவறாகுமா?" என்று பதிலுக்கு ஒரு கேள்வியைக் கேட்டான் அவன்.

"ஆம்," திட்டமாக வந்தது இளநங்கையின் பதில்.

"என்ன அத்தனை திட்டமாகச் சொல்கிறாய்?" என்று வினவினான் இளவரசன்.

"இந்திரபானு இளவரசிக்குக் கனவில்கூடத் தீங்கு நினைக்கமாட்டார்," என்று இளநங்கை மீண்டும் வலியுறுத்தினாள்.

"என்ன காரணம்?"

"உலகத்தின் மாபெரும் சக்தி."

"என்ன சக்தி அது?"

"பெண்ணிடம் ஆணை ஈர்க்கும் சக்தி. ஒரு பெண்ணிடம் உயிரை வைத்திருப்பவன் எக்காரணத்தைக் கொண்டும் அவளுக்கு தீங்கு விளைவிக்கமாட்டான். அதுவும் இரண்டு உள்ளங்கள் இணைந்துவிடும்போது...?"

"அப்படியானால் இளவரசியும்..."

"ஆம்."

"அத்தாட்சி?"

இளநங்கை இதழ்கள் இகழ்ச்சியுடன் மடிந்தன. "உங்களுக்குத் தெரியாத விஷயங்களைப் புரிந்துகொள்ள முயலாதீர்கள் இளவரசே," என்றும் கூறினாள் அவள் இகழ்ச்சியுடன்.

"அத்தாட்சியின்றி வேறு எந்த வகையில் இளவரசியின் மனத்தை நீ புரிந்துகொண்டாய்" என்று வினவினான் வீரபாண்டியன்.

"இலக்கணம் என்பது ஒன்று உண்டு," என்று இழுத்தாள் இளநங்கை.

"ஆம். தெரியும்" என்றான் வீரபாண்டியன்.

"அதில் குறிப்பாலுணர்த்துதல் என்றொரு வகை உண்டு."

"உண்டு".

"பெண்கள் தங்கள் கருத்தை அப்படித்தான் உணர்த்துவார்கள். ஆண்களைப்போல் பட்டவர்த்தனமாகப் பேச மாட்டார்கள்."

அதற்குமேல் வீரபாண்டியன் அவளை விசாரிக்கவில்லை. மன்னனும் விசாரணை போதுமென்ற காரணத்தால், 'இளநங்கை! நீ போ உன் விடுதிக்கு,' என்றான். இளநங்கை போகத் திரும்பினாள். அவளுடன் செல்ல வீரபாண்டியனும் அடியெடுத்து வைத்தான். சுந்தர பாண்டியன் குரல் அவனைத் தடுத்தது. "நீ எங்கே போகிறாய் தம்பி?" என்று கேட்டான் மன்னன்.

"இன்னும் சிறிது ஆராய்ச்சி இருக்கிறது" என்றான் வீரபாண்டியன் சற்றே தலையைத் திருப்பி.



"ஆராய்ச்சியா?" மன்னன் கேள்வியில் வியப்பிருந்தது.

"ஆம். அருவிக்கரையைப் பார்க்கவேண்டும்."

"அதை நம் வீரர்கள் பார்த்துவிட்டார்களே."

"இருப்பினும் நானும் ஒருமுறை பார்க்கிறேன். பிறகு கோடரி கிடந்த இடத்தையும் பார்க்கவேண்டும்."

"இந்த இருட்டிலா!"

"ஆம்."

"கோட்டைக்கு வெளியே தனியாகப் போகப் போகிறாயா?"

"ஆம்."

இதற்குமேல் மன்னன் பேசவில்லை. ஆபத்து என்றால் வீரபாண்டியனுக்குப் பரம இன்பம் என்பதை அவன் உணர்ந்திருந்தான். அது மட்டுமல்ல. தம்பியை வெளியே செல்லத் தூண்டியது எது என்பதையும் அவன் உணர்ந்து கொண்டான். இளநங்கை வெளியே செல்ல அடியெடுத்து வைக்குமுன்பு வீரபாண்டியனைக் கண்ணிமைக்கும் நேரம் பார்த்ததை மன்னன் கண்டான். 'சரி. இலக்கணம் துவங்கிவிட்டது. இளநங்கையும் குறிப்பாலுணர்த்திவிட்டாள்,' என்று உள்ளூர நகைத்துக் கொண்டான். சுந்தரபாண்டியன் அவர்களிருவரும் வெளியே செல்வதைப் பார்த்துக் கொண்டே தனது விடுதிக்கு வெளியே வந்தான். இருவரும் தமது விடுதி நோக்கிச் சென்றாலும் விடுதிக்குள் நுழையாமல் மலைச் சரிவில் ஏறி அருவியிருந்த பின்புறம் செல்வதைப் பார்த்து நின்ற சுந்தரபாண்டியன், 'தம்பிக்கும் பலவீன மேற்பட்டு விட்டது' என்று தனக்குள் வருந்தினான்.

அடுத்த அரைஜாம நேரம் தம்பி பெரும் பலவீனத்தில் இருந்தான். இளநங்கை குறிப்பாலுணர்த்திய விவரங்கள், விதங்கள், விஷயங்கள், அவனை அடியோடு திணற அடித்து விட்டன.

## அத்தியாயம் 33

# இதயத்தின் இன்பக் காற்று

இளநங்கை வீசிய ஒரே பார்வையில், அவள் இமைகளின் ஒரே ஓர் இமைப்பில், எதற்கும் அசையாத தம்பியின் இதயம் அசைந்துவிட்டதையும், அவன் அவள் பின்னால் ஓடி விட்டதையும் கண்ட சுந்தரபாண்டியன், ஆண் மக்களின் பலவீனத்தை நினைத்துத் தன் மனத்தில் பெரிதும் கசந்து கொண்டான். சதா பாண்டிய அரசைப் பேரரசாக உருவாக்குவதைத் தவிர வேறு சிந்தனையில்லாதவனும் வாழ்க்கையில் பெண்களை இரண்டாம் பட்சமாகவே வைத்திருந்தவனுமான பாண்டிய மன்னன், இளநங்கையும் தம்பியும் எதிரிலிருந்த விடுதிக்குள் நுழையாமல் அதைச் சுற்றிச் சென்றதைக் கண்டதும்; இகழ்ச்சிப் புன்முறுவலொன்றை ஒரு வினாடி இதழ்களில் கூட்டிவிட்டுப் பிறகு சிந்தனையிலாழ்ந்தவனாய் மீண்டும் தனது விடுதிக்குள் சென்று விட்டான். மன்னன் சிந்தனைகள் நாட்டுச் சூழ்நிலைப் பற்றியும், முத்துக்குமரியின் மறைவு பற்றியும், பலபடி சிதறிக் கொண்டிருந்ததென்றால், அவன் தம்பியின் சிந்தனை மட்டும் ஏதோ ஒரு வழியில் லயித்துக் கிடந்தது. அதே நேரத்தில். விடுதியிலிருந்து பாண்டிய மன்னன் பல விஷயங்களைப்பற்றிச் சிந்தித்தான். பேசவில்லை. தம்பி வீர பாண்டியனோ பல விஷயங்களைப் பற்றிப் பேசினான். சிந்திக்க முடியவில்லை. அத்தகைய விபரீத நிலையில், பெரும் பலவீனத்தில், இளநங்கையுடன் வீரபாண்டியன் அவளிருந்த விடுதியைச் சுற்றி அருவிக்கரையை நோக்கி நடந்து சென்று கொண்டிருந்தான்.

மன்னன் விடுதியிலிருந்து கிளம்பியது முதல் அவனை அதிகமாகத் திரும்பிப் பார்க்காத இளநங்கை, ஏதாவது



ஓரிரு பதில்கள் சொல்வதற்கு மட்டுமே இரண்டு மூன்று முறைகள் திரும்பிப் பார்த்தாளானாலும், அந்த இரண்டு மூன்று முறைகளிலும் வீரபாண்டியன் நிலைகுலைந்தே போனான். தானிருந்த விடுதியை அடைந்ததும் அதைச் சுற்றிச் செல்ல முயன்ற இளநங்கை அவனைத் திரும்பி நோக்கி, "அருவி பின்புறமிருக்கிறது" என்று கூறிவிட்டு மேலே நடந்தாள்.

வீரபாண்டியன் அந்தப் பார்வையிலும் ஓர் இன்ப அருவி, ஓர் அமுத தாரை இருந்ததைக் கண்டானாகையால் எதுவும் பேசாமல் அவளைப் பின்பற்றிச் சென்றான். ஆனால் அவன் எழில்கள் அவனிடம் ஏதேதோ பேசின. அவனை நோக்கி நகைத்தன, அவனை ஈர்த்தன.

மலைச்சரிவிலிருந்து அந்த விடுதியைச் சுற்றிச் சென்று மலை ஏற்றத்தில் ஏறத் தொடங்கிய இளநங்கையின் கால்கள் கற்களில் மாறி மாறி ஊன்ற முற்பட்டதால் அவள் இடை அசைந்து அசைந்து தோள்களும் மாறி மாறி இயங்கிய தாலும், கால்கள் ஊன்றிய அதிர்ச்சியினாலோ என்னவோ தலையிலிருந்த இரண்டு செண்பகப் பூக்களிலொன்று தெறித்துத் தரையில் விழுந்தாலும், ஏதோ இந்திரலோக விந்தைகளைக் காண்பதுபோல் அவள் பின்புற எழிலசைவுகளைக் கண்டுகொண்டிருந்த வீரபாண்டியனின் புத்தி, அவளைத் தவிர வேறெதையும் நினைக்கும் ஆற்றலை இழந்து கிடந்தது. கீழே விழுந்த அந்தச் செண்பக மலரைக் கூட அவன் ஏதோ செய்யத்தகாத காரியத்தைச் செய்பவன் போல் திருட்டுத்தனமாக எடுத்துத் தன் கச்சையில் செருகிக் கொண்டான். விடுதிக்கு வலப்புறத்தில் மலைச்சரிவில் ஏறி விடுதிக்குப் பின்புறம் வந்த பின்பும், அங்கு தங்களைப் பார்ப்பவர்கள் யாருமில்லையென்பதை உணர்ந்த பின்பும் கூட வீரபாண்டியன் ஏதும் பேசச் சக்தியற்றிருந்தான். விடுதியில் பின்புறத்தில் சற்றுத் தூரத்திலிருந்த பந்த வெளிச்சம் வீசியதால் அதிலிருந்து சற்றுத் தள்ளியிருந்த அருவி இருட்டைக் கிழிக்கும் இந்திராஸ்திரம்போல மலையைக் கிழித்து. பனிச்சென்று ஒளிவீசி ஓடிக்

கொண்டிருந்ததென்றாலும் இயற்கையின் அந்த இந்திர ஜாலத்தைக் கூட அவன் ரசிக்கவில்லை.

இளநங்கை பேசாமல் நடந்து அருவியை நோக்கிச் சென்றாள். அவள் அருவிக்கும் பந்தத்துக்கும் இடையே வந்ததும் அவள் மேனி அந்தப் பந்தத்தின் ஒளியில் எப்படிப் பொன்னெனப் பிரகாசித்தது என்பதை மட்டுமல்ல வீர பாண்டியன் கண்டது; பந்தத்தின் ஒளிவீச்சுக்குள் புகுந்ததும் அவள் சற்றே திரும்பியபோது அவள் கழுத்துக்கு அந்த ஒளி பெருமெருகு கொடுத்ததல்லாமல், அடுத்து எழுந்து நின்ற எழிலுக்கும் எத்தனை ஏற்றத்தை அளித்தது என்பதையும் கண்டதால், மேலே ஓர் அடிகூட எடுத்து வைக்காமல் நிலைத்து நின்றுவிட்டான் வீரபாண்டியன். இடையே சில நாட்கள் காணாவிட்டாலே புதுவேகம் கொடுக்கும் பெண்ணினத்தின் அற்புத அழகுகள் அவனை இழுத்து அலைத்துத் திணற அடித்துக்கொண்டிருந்த அந்தச் சமயத்தில், ஒவ்வோர் அங்க அசைவினாலும், அவ்வப் போது வெளிப்பட்ட அங்கலாவண்யங்களாலும் மனம் ஒரு நிலையில் நில்லாமல் பலவீனப்பட்டுவிட்ட வீரபாண்டியன் நின்ற இடத்திலேயே நின்று எதிரே அருவியை நோக்கி மெல்லடி எடுத்து வைத்துச் சென்றுகொண்டிருந்த இளநங்கையைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

இளநங்கையின் மனம் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்து கிடந்தது. பின்னால் வரும் இளவரசனின் நிலை அவளுக்கு நன்றாகப் புரிந்திருந்தாலும், அவன் வேகமும், வேட்கையும் அவளுக்கிருந்தாலும், அந்த வேட்கையையும், வேகத்தையும் சிறிதும் வெளிக்குக் காட்டாமலே அவள் மெல்ல நடந்து அருவிக்கருகிலிருந்த பாறையில் உட்கார்ந்துகொண்டாள். அதே பாறையில் முதல் நாளிரவும அதற்கு முன்போறு நாளிரவும் முத்துக்குமரி அமர்ந்திருக்கிறாளென்பதை அறியாமலே அருவிக்கருகில் சற்று உயரமாயிருந்த இடம் அது என்ற காரணத்தால் அந்தப் பாறையில் அமர்ந்த இளநங்கை, தலைகுனிந்து அருவியைப் பார்த்துக்



கொண்டிருந்தாளானாலும் அதில் அவள் எண்ணங்கள் லயிக்க மறுத்தன. கண்பார்வை முன்னே சென்றாலும் இதயத்தின் கூரிய கண்கள் பின்புறம் திரும்பியிருந்ததால் சில வினாடிகளின் தாமதத்துக்குப் பிறகு வீரபாண்டியன் மீண்டும் தன்னை நோக்கி வருவதைப் புரிந்து கொண்டாள்.

வீரபாண்டியன் நடை பழையபடி நிதானமாக ஒரே சீரான நடையாய் இருந்தாலும் அதில் அன்று மட்டும் சிறிது தயக்கமிருப்பது தெரிந்தது இளநங்கைக்கு. பந்தத்தின் வெளிச்சம் அவன் முதுகுப்புறம் இருந்ததால் தன்னுடைய பெரிய நிழலொன்று எதிரேயிருந்த அருவியில் விழுந்து நீரில் அல்லாடிக் கொண்டிருந்ததைக் கண்ட இளநங்கை, ஆயிரம் வெளி உறுதியிருந்தாலும் பெண்கள் பாடு இந்த விவகாரங்களில் அல்லாட்டம்தான் என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள். அவளுக்குப் பின்புறம் வந்து சற்று ஒதுங்கிய வண்ணம் நின்று அருவி நீரில் ஆடிய அவளது நிழலாட்டத்தைக் கண்ட வீரபாண்டியன் அப்படி நினைக்கவில்லை... அந்த நிழலாட்டங்கூடத் தன் இதயத்தை எத்தனை தூரம் ஆட்டிவைக்கிறதென்பதை எண்ணிப் பார்த்தான். அதனால் வியப்பும், அவள் உட்கார்ந்திருந்த நிலையால் மலைப்பும் அடைந்த உள்ளத்துடன், அவளுக்குப் பின்புறம் நன்றாக வந்து நின்ற அவனும் நீரின் சலனத்தையும் நிழலின் சலனத்தையும் கவனித்தான்.

வீரபாண்டியன் கை அவள் தோளில் பலமாக உட்கார்ந்திருந்தது. அத்தனை புஜபலத்திலும் அவன் மனம் மட்டும் பெரிதும் பலவீனப்பட்டுக் கிடந்ததால், அருவியில் விழுந்து ஒன்றுக்கொன்று இணைந்து ஒரே உருவாகிவிட்ட தங்களிருவர் நிழலின் ஒன்றிய தன்மையையும் கண்டு அவன் புத்தி பலவிதக் கற்பனைகளைக் கிளப்பியிருந்தது. ஒருமுறை அவன் சற்றுத் தூரத்திலிருந்த கோட்டை மதில் சுவருக்கு அப்பாலிருந்த மலையையும் பார்த்து, அருகிலிருந்த அருவியையும் பார்த்தான். இரண்டும் பேரழகை அந்த இருளிலும் அள்ளிக் கொட்டின. தூரத்தே எழுந்த இரு மலை உச்சிகளும், எதிரே ஓடிய அருவியின்

பளபளப்பும், அருவிக்கு அப்பாலிருந்த இரண்டு மூன்று புஷ்பச் செடிகளிலிருந்து உதிர்ந்த மலர்களும் பார்ப்பதற்குப் பெரும் பிரமையாக இருந்தாலும், இளநங்கையின் வனப்பில் இல்லாதது அவற்றில் என்ன இருக்கிறது என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டான். "மலையுச்சிகள், அருவியின் பளபளப்பு, மலர்களின் இதழ்கள், இதழ்களின் வழவழப்பு, மலரில் ஊறும் தேன், எது இல்லை இங்கு?" என்று வினவினான் வீர பாண்டியன். மலரிலும் மென்மையான அவள் இதழ்களில் ஊறிய நீரின் விளைவாக உதடுகள் சிவந்து பளபளத்ததைப் பந்தத்தின் வெளிச்சத்தில் அவன் பார்த்தான். அதன் விளைவாக அவன் கைப்பிடி அவள் தோளில் அதிகமாக இறுகியது. வலித்தது அவளுக்கு. அந்த வலி வேண்டியும் இருந்தது.

இப்படி நீண்டநேரம் வீரபாண்டியன் பேசாமலே நின்றதாலும், அவன் பின்னால் நின்றது பெரும் வேதனையாயிருந்தாலும், ஏதாவது பேச்சுக் கொடுக்க வேண்டுமென்பதற்காக இளநங்கை அருவியைப் பார்த்த வண்ணம், "முத்துக்குமரி இங்குதான் இரண்டு நாட்களாக வந்து கொண்டிருந்தாள்" என்றாள்.

வீரபாண்டியன் பதில், "உம், உம்" என்று மட்டும் வந்தது. அந்த 'உம் உம்'மில் பெண் காணாமற் போய்விட்ட வேதனையில்லை. அந்தச் சந்தர்ப்பத்திலிருந்த நிலையின் விளைவாகச் சங்கடம் மட்டும் ஒலித்தது.

"நேற்றுப் போனவள் திரும்பவில்லை" என்றாள் இளநங்கை மேலும்.

"எப்பொழுது உன்னிடமிருந்து விடை பெற்றுச் சென்றாள்?"

"இரவு முதல் ஜாமத்தின் முடிவில்."

"'பிறகு அவளை நீ பார்க்கவில்லை" என்றான் வீர பாண்டியன். ஏற்கெனவே மன்னனின் முன்பு சொல்லியாகிவிட்ட விஷயத்தை எதற்காக வீரபாண்டியன் மீண்டும் கேட்கிறான் என்பது புரியவில்லை இளநங்கைக்கு.

"இல்லை," என்று பதில் சொன்னாள் இளநங்கை.



"அவள் நீண்ட நேரம் வராததால் இங்கு வந்து பார்த்தாய்?"

"ஆம்."

"இங்கு ஏதாவது விசேஷமாகச் தெரிந்ததா?"

"விசேஷமென்றால்?"

"யாராவது தூக்கிச் சென்றதற்கு அறிகுறி? சண்டை நடந்ததற்கு அறிகுறி!" என்று கேள்விகளை உதிர்த்த வீர பாண்டியன் உதடுகள் அவள் காதுக்கருகில் உலாவின.

"ஒன்றும் தெரியவில்லை," இளநங்கை இப்படிப் பதில் சொன்னாள். உண்மையில் அப்பொழுது அவளுக்கு ஒன்றுமே தெரியவில்லை. வீரபாண்டியனுக்குக்கூட எதுவும் தெரியவில்லை. அவன் கேட்ட கேள்விகளுக்கும் ஈடுபட்ட செயல்களுக்கும் சம்பந்தமில்லாதிருந்தது. எந்த அபாயமிருந்தாலும், எந்த முக்கிய அலுவலிருந்தாலும், எல்லாவற்றையும் மறைத்துவிடக்கூடிய திரைக்குள் இருந்தார்கள் அவர்களிருவரும். பல நாள் பார்க்காத பதற்றம், சமயம் அகப்பட்டதால் ஏற்பட்ட சலனம், வேட்கையால் விளைந்த வேகம் எல்லாம் அவ்விருவரிடையும் பொய்யையும், உண்மையையும் கலந்து நிறுவியிருந்தன. அருவிக்கரைக்கு வந்தது முத்துக்குமரியைப் பற்றிய ஆராய்ச்சிக்கு. கேட்கப்பட்ட கேள்விகள் எல்லாமே அவளைப்பற்றி. இவையனைத்தும் வியாஜம்; பொய். அவர்களை ஈர்த்தது அனைவரையும் ஈர்க்கும் உலக மாயை. பேசியவை உணர்ச்சிகள். ஆராய்ச்சியோ ஆவல் தூண்டிய இடங்கள். இவை உண்மை; பிரத்தியட்சம்.

திடீரென, "இளநங்கை அதோ பார்! அதோ பார்" என்று கூறினான் வீரபாண்டியன். அந்த வேகத்தில் அவளை இறுகப் பிடித்து அணைத்துத் தூக்கியும் நிறுத்தினான். இளநங்கை அவன் கை நீட்டிய இடத்தைப் பார்த்தாள். "ஆம். ஆம்," என்று பயத்துடன் உதிர்ந்தன அவள் சொற்கள். இதயத்தின் இன்பக் காற்று அச்சத்தின் வீச்சுக்கும் பெரு மூச்சுக்கும் இடமளித்தது.

## அத்தியாயம் 34

# வீரபாண்டியன் ஆராய்ச்சி

அருவியின் ஓரத்தில், மலையின் மெல்லிய இன்பக் காற்றில், பந்தத்தின் பொன்னிற ஒளியில், பலப்பல விஷயங்களை மேலுக்குப் பேசிக்கொண்டிருந்தாலும், உள்ளே உணர்ச்சிகள் புரண்டதன் விளைவாக ஏற்பட்ட கைகளின் லேசான அசைவு, இடையின் நெகிழ்ச்சி, ஏறிட்டுப் பார்த்த ஒரே ஒரு சமயத்தில் உதயமான உதடுகளின் வெட்கமடிப்பு ஆகிய பல குறிப்புகளால் தனது இதய தாபத்தையெல்லாம் வீரபாண்டியனுக்கு உணர்த்திக்கொண்டிருந்த இளநங்கை பாண்டிய மன்னன் முன்பு வெளியிட்ட குறிப்பிலக்கணத்துக்குப் பெரு விளக்கம் தந்தாளானாலும், அத்தனை இலக்கணமும் வீரபாண்டியனால் சுட்டிக்காட்டப்பட்ட பொருளைக் கண்டதும் பறந்தே விட்டது. அப்படிப் பறந்து விட்டதால், வீரபாண்டியன் அவளை இறுகப் பிடித்து அணைத்துத் தூக்கிய சமயத்தில் இன்ப உணர்ச்சிகளுக்குப் பதிலாக பெரும் வியப்பும் அச்சமும் கலந்த பிரமையே அவளை ஊடுருவலாயிற்று. அந்த அச்சமும் வியப்பும், 'ஆம் ஆம்' என்ற அவள் சொற்களில் மட்டுமின்றி அவள் அழகிய நாசியிலிருந்து கிளம்பிய பெருமூச்சிலும் பிரதி பலித்தன. அருவிக்கரையோரமாக இரண்டு சிறு கற்களுக்கிடையில் பளிச்சிட்ட ஒரு பெருமுத்தை வைத்த கண் வாங்காமல் பார்த்த இளநங்கை, அது தமிழர் கடலில் கிடைக்கும் இணையற்ற முத்துக்களில் ஒன்றென்பதையும் ஏகவிலையுள்ள தென்பதையும் தெரிந்து கொண்டாளானாலும், அது அங்கு எப்படி வந்ததென்பதைப் புரிந்துகொள்ள முடியாததால் வீரபாண்டியனை ஏறிட்டு நோக்கினாள்.



அவளைச் சுற்றிக் கிடந்த வீரபாண்டியன் கைகள் நன்றாக ஒருமுறை இறுகிப் பிறகு சட்டென்று அவள் அழகிய உடலைத் தன் பிணைப்பிலிருந்து விடுவித்தன. அவன் கால்கள் கம்பீர நடை நடந்து, முத்து விழுந்து கிடந்த இடத்துக்குச் சென்றன. அந்த முத்துக்கருகில் சென்றதும் அதை உடனே கையில் எடுக்காமலே சில விநாடிகள் உற்றுப் பார்த்த பிறகு, ஏதோ புரிந்துகொண்டு விட்டவன் போல் தலையை அசைத்த வீரபாண்டியன், அதை எடுத்துத் தனது இடதுகை கட்டை விரலாலும் ஆள்காட்டி விரலாலும் ஏந்தி, பந்த வெளிச்சத்தில் தூக்கிக் காட்டி ஆராய்ந்தான். பிறகு அருகில் வந்து நின்ற இளநங்கையிடமும் அதைக் காட்டி, "இதைப் பார் இளநங்கை! இதிலிருந்து உனக்கு என்ன புரிகிறது" என்றும் வினவினான்.

இளநங்கை ஏற்கனவே முத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாளானாலும் அதைப்பற்றி ஏதும் தெரிந்துக்கொள்ள இயலாததால் வீரபாண்டியனை ஏறெடுத்து நோக்கி, "நல்ல பெரிய முத்து," என்று மட்டும் சொன்னாள்.

இடது கையில் முத்தைப் பிடித்துப் பந்த வெளிச்சத்தில் நன்றாகத் திருப்பிய வீரபாண்டியன், "முத்துப் பெரிதென்பது மேலாகப் பார்க்கும்போது தெரிகிறது. வேறென்ன தெரிகிறது?" என்று வினவினான்.

"வேறெதுவும் தெரியவில்லை. பெரிய முத்து. அரை லாகியோவுக்கு மேல் எடையிருக்கும். ஆகவே அரசர்களோ பெரும் தனவந்தர்களோ அணியக்கூடியது என்றுதான் தெரிகிறது," என்றாள் இளநங்கை.

வீரபாண்டியனின் கண்கள் வெகு திட்சண்யத்துடன் பிரகாசித்தன. "அது சரி இளநங்கை! இதற்கும் முத்துக் குமரி காணாமற்போனதற்கும் என்ன சம்பந்தம் தெரிகிறது உனக்கு?" என்று வினவினான், இளவரசன் ஏதோ உண்மையைக் கண்டுபிடித்துவிட்ட குரலில்.

மீண்டும் அவன் கையிலிருந்த பெருமுத்தின்மீது தனது பெருவிழிகளை இளநங்கை நாட்டினாளானாலும், அவளுக்கு ஏதும் விளங்காது போகவே, அவள் அவன்மீது

நன்றாகச் சாய்ந்து நின்றாள். "எனக்கேதும் தெரியவில்லை" என்று உண்மையையே சொன்னாள்.

அவள் காற்றுப் பட்டாலும் உணர்ச்சிவசப்படக் கூடிய வீரபாண்டியன், அவள் தன்மீது சாய்ந்து நின்ற அந்தச்சமயத்தில் அடியோடு உணர்ச்சியற்றிருந்தான்.

அவன் உடல் பெரும் இரும்பாகிவிட்டதை அவன் மீது சாய்ந்த விநாடியே புரிந்துகொண்ட இளநங்கை, வீர பாண்டியன் உள்ளத்தில் கோபத்தின் வேகம் உதயமாகி விட்டதைப் புரிந்துகொண்டாள். அவன் முகத்தை நோக்கிய அவள் அதன் கடினத் தன்மையைக் கண்டதும் வீரபாண்டியன் அடியோடு விரும்பாத ஒரு நிகழ்ச்சியை அந்தப் பெருமுத்து நிருபிக்கிறதென்பதைப் புரிந்து கொண்டாலும், அவளிருந்த நிலையின் காரணமாக அதைப்பற்றி ஏதும் கேட்கத் துணிவு வரவில்லை அவளுக்கு.

வீரபாண்டியனே சொன்னான் உணர்ச்சியற்ற, வறண்ட குரலில், "இந்த முத்து புதிய முத்தல்ல," என்று.

இளநங்கையின் கையொன்று அவன் கையுடன் இணைந்தது. "புதியதல்லவா?" என்ற சொல்லும் உதட்டி லிருந்து மெல்ல உதிர்ந்தது.

"அல்ல, புதிய முத்தல்ல. இதன் அடியைப் பார்," என்ற வீரபாண்டியன் அந்த முத்தை ஒரு முறை உருட்டி விரலொன்றால் அந்த இடத்தைத் தட்டியும் காட்டினான். அத்துடன் மேலும் சொல்லவும் செய்தான். "இந்த அடிப் பகுதியில் முத்து முழுவெண்மையாக இல்லை; லேசாக மஞ்சள் ஏறியிருக்கிறது. அதுமட்டுமல்ல; அதிலுள்ள மஞ்சளும் முத்தைப்போலவே மிகப் பழையது," என்று.

இளநங்கை பதிலேதும் சொல்லவில்லை. முத்து விஷயத்தில் அவளுக்கும் பெரும் பைத்தியம் உண்டு. முத்தங்காடியை இரவிலும் பகலிலும் சுற்றுவதிலும், பெருமுத்துக்களை முடிந்த அளவில் வாங்கிச் சேர்ப்பதிலும் ஆவலுள்ளவள் தான் இளநங்கை. முத்துக்களின் தரம், அளவு, சுபாவம் இத்தனையும் அறிந்தவள்தான். ஆனால் தனது ஆராய்ச்சிக்கும், கண்ணுக்கும் புலப்படாத ஏதேதோ



விஷயங்களை வீரபாண்டியன் சொல்வதைக் கேட்டுப் பிரமித்தாலும் மேலும் ஏதும் சொல்ல வகையில்லாமல் அவனையே பேசத்தூண்டி, "இத்தனையும் எப்படித் தெரிகிறது உங்களுக்கு?" என்றாள்.

'முத்தைப்பற்றி இத்தனைக்கூடத் தெரியாவிட்டால் முத்துக் கள்ளர்களைப் பிடிக்கப் பாண்டிய மன்னன் என்னை அனுப்புவாரா?' என்று தன்னைத்தானே யோசித்துக் கொண்ட வீரபாண்டியன், "இது பல நாட்கள் அணியப் பட்டுப் பிறகு கழற்றி வைக்கப்பட்ட முத்து. அதனால் அடியிலுள்ள மஞ்சள் கறை அப்படியே இருக்கிறது. பெண்கள் பூசும் மஞ்சள் கறைதான் லேசில் அழியாது. ஆகவே, இந்த முத்து ஏதோ ஒரு பெண்ணின் மார்பில் தவழ்ந்தது. அதிலுள்ள மஞ்சளில் பட்டுப்பட்டுக் கறை படிந்திருக்கிறது; சந்தேகமில்லை. இது ஒரு காலத்தில் முத்துக்குமரியால் உபயோகப்படுத்தப்பட்டதுதான். ஆனால் இது ஏன் இங்கு வந்தது? வெகு நாட்கள் அணியாத இந்த முத்தை, கின்னுக் கம்பியில் தொங்கிக் கிடந்த இதை, ஏன் முத்துக்குமரி இந்த இடத்துக்கு எடுத்துவந்தாள் என்பதுதான் எனக்குப் புலப்படவில்லை" என்று கூறினான்.

"கின்னுக் கம்பியில் தொங்கிக் கிடந்ததா?" என்று வினவினாள் இளநங்கை.

"ஆம். மதுரையில் முத்துக் கட்டும் முறையில் அது ஒன்று: முத்தை அதிகமாகத் துளைக்காமல் நல்ல பொற் கம்பியை வட்டமாக வளைத்து இருமுனைகளும் முத்தின் பக்கத்தில் சற்றே ஊடுருவும்படி பொருத்துவார்கள். அப்படி இணைக்கப்படும் தனி முத்துக்களை எந்த ஆபரணத்திலும் எந்த முறையிலும் கம்பியை நீக்கி இணைக்கலாம்," என்று விளக்கிய வீரபாண்டியன், "இதோ பார் இளநங்கை, இந்த முத்தின் இரு பக்கங்களில் கம்பி நுழைந்த வடு இருக்கிறது," என்று இரண்டு சிறு புள்ளிகளையும் காட்டினான்.

இளநங்கை வியப்புடன் அந்தப் புள்ளிகளைப் பார்த்து வீரபாண்டியனையும் பார்த்தாள். "அப்பப்பா!

உங்களுக்கு எத்தனை கூரிய பார்வை!" என்று வியப்புடன் சொற்களையும் மெல்ல உதிர்த்தான்.

"பல நாட்களாக அணியாத முத்தைத் தனது ஆபரணத்தில் என்ன காரணத்தாலோ எடுத்து அணிந்து கொண்டு வந்திருக்கிறாள் முத்துக்குமரி. இங்கு எதிர்பாராத விபத்து அவளுக்குக் காத்திருக்கிறது. ஆகவே முத்தைக் கழற்றி எறிந்திருக்கிறாள் நமக்கு வழிகாட்ட. மிகச் சாமர்த்தியமாக எதிரி அறியாமல் இதைச் செய்திருக்கிறாள் என் மகள். இதை வளைத்திணைத்திருந்த பொற்கம்பியும் இங்கு எங்காவது கண்டிப்பாய் இருக்கும்," என்று கூறிய வீரபாண்டியன், அடி மேலடி எடுத்து வைத்து நடந்து பந்த வெளிச்சம் வந்த இடங்களிலெல்லாம் கண்ணை ஓட விட்டான். அவன் ஊகித்தது சரியாகவே இருந்தது. அவனைத் தொடர்ந்து சென்ற இளநங்கையின் கண்களுக்கே தென்பட்டது அந்த முத்துக்கம்பி, "அதோ இருக்கிறது," என்று சுட்டிக் காட்டினாள் இரண்டு கூழாங் கற்களுக்கிடையில் கிடந்த அந்தக் கம்பியை.

அதைக் கையில் எடுத்த வீரபாண்டியன் அதை ஒரே ஒரு விநாடி பார்த்துவிட்டு, அதை முத்தின் துவார வடுக்களில் பிணைத்துப் பொருத்திக் குண்டலம் போல் ஆக்கி இளநங்கையிடம் காட்டி, "பார்த்தாயா!" என்று வினவினான். அவன் கை விரல்களிலாடிய அந்த முத்துக் குண்டலத்தைப் பார்த்த அவள் பெருவியப்பெய்தினாள். பொற்கம்பிகளுக்கிடை ஆடிய சமயத்தில், அந்த முத்து வெண்மையுடன் இன்னும் பல ஒளிகளை வெளியிட்டது. அப்படிப் பளபளத்த முத்தை அவளிடம் காட்டிவிட்டுச் சிறிது ஏதோ யோசித்த வீரபாண்டியன், "இளநங்கை! இப்படி வா," என்றழைத்துக் கழுத்தில் சுழன்று மார்புக் கிடையில் சென்றிருந்த பொற் சங்கிலியை இழுத்து, முத்துக் கம்பியின் ஒருபுறத்தை நீக்கி சங்கிலிக்குள் கோத்து மீண்டும் அதைப் பழையபடி பொருத்தினான்.

பிறகு முத்தைப் பற்றியோ வளையத்தைப் பற்றியோ சிந்திக்காமல் அருவிக் கரையோரம் நடந்து கோட்டை



மதில் சுவர் வரையில் சென்றான். மதிலையும் மதில் சுவருக்கு அடியிலிருந்த பெரும் துவாரத்தின் மூலம் வந்து கொண்டிருந்த அருவி நீரையும் நீண்ட நேரம் ஆராய்ந்தான். பிறகு திடீரென மதிலை நோக்கி ஓடி அதன்மீது தாவி ஏறிக் கோட்டைக்கு வெளியே குதித்தான்.

நீண்ட நேரம் வீரபாண்டியனைக் காணவில்லை. அவனை அழைக்கவோ வேறு ஏதும் நினைக்கவோ திராணியில்லாமல் நின்று கொண்டிருந்தாள் இளநங்கை. முத்துக்குமரி அபகரிக்கப்பட்டது விஷயமாக அவனுக்கு ஏதோ புலன் கிடைத்த விட்டதென்பதை அவள் உணர்ந்தாளானாலும், அது என்ன புலன், அதிலிருந்து என்ன தெரிந்து கொண்டான் இளவரசன் என்பது புரியாததால், எதிர்பார்ப்பு நிறைந்த சிந்தனையுடன் நின்று கொண்டிருந்தாள், இளநங்கை அருவிக் கரையின் ஓரத்தில். நீண்ட நேரம் கழித்து மீண்டும் கோட்டைச் சுவர் வழியாக ஏறிக் குதித்து உள்ளே வந்த வீரபாண்டியனின் முகம் பார்ப்பதற்குக் கல்லாயிருந்தது. அவன் மனதின் கடுங் கோபத்தை அந்த முகத்திலிருந்தே புரிந்துகொண்ட இளநங்கை கேட்டாள், "ஏதாவது புலன் கிடைத்ததா?" என்று.

"கிடைத்தது புலன் ஒன்றல்ல, பல," என்ற வீரபாண்டியன் குரலில் கடுமை இருந்தது.

"என்ன புலன்கள்?" என்று வினவினாள் இளநங்கை.

"முத்துக்குமரி இங்கு வந்து காத்திருக்கிறாள் இந்திர பானுவுக்காக. அப்பொழுது அந்தக் கோட்டைச் சுவருக்குக் கீழுள்ள அருவித் துவாரத்தின் வழியாக ஒருவன் உள்ளே வந்து அவளைப் பின்புறமாகக் கட்டிப் பிடித்துத் தூக்கியிருக்கிறான். பிறகு அவளைக் கோட்டைச் சுவர் வழியாக வெளியே உள்ள ஒருவனிடம் கொடுத்திருக்கிறான்." என்று கூறினான் வீரபாண்டியன்.

இளநங்கையின் பிரமிப்பு உச்சநிலைக்குச் சென்றது. "என்ன! நேரில் அத்தனையும் பார்த்த மாதிரி சொல்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

'நேரில் பார்க்க வேண்டிய அவசியமில்லை இளநங்கை. இங்குள்ள அடையாளங்கள் அனைத்தையும்

சொல்கின்றன. அதோ அந்த பந்த வெளிச்சம் இந்தப் பிராந்தியம் பூராவும் விழுவதால், அருவிக் கரைக்கருகில் யாரிருந்தாலும் உன் விடுதிக்குப் பின்புறமுள்ள மரத்திடம் வரும்போதே நன்றாகத் தெரியும். ஆகவே மரத்தடியிலேயே யாராவது மறைந்திருந்தாலொழிய முத்துக்குமரியை ஏமாற்றிருக்க முடியாது. ஆகவே, அருவிக்கரைக்கு அவள் வரும்போது யாருமில்லை. பின்புதான் அந்த மனிதனும் வந்திருக்க முடியும். ஒன்று அவன் உள்ளேயிருந்து வரலாம். அல்லது வெளியிலிருந்து வரலாம். உள்ளிருந்து வரவில்லை. சுவருக் கருகிலுள்ள அருவிக்கரையில் ஈரம் சொட்டச் சொட்ட - யாரோ நடந்திருக்கிற அடிச்சுவடு தெரிகிறது. பகலாயிருந்தால் துணி ஈரம் அதிகமாகச் சொட்டி விட்டாலும் அந்தச் சுவடு மறைந்திருக்கும். ஆனால் இன்னுமிருக்கிறது. அதுமட்டுமல்ல, முத்துக்குமரியை அவன் பிடித்தவுடன் அவள் திமிறியிருப்பதும் பாறைக் கருகில் தெரிகிறது. சரிவு பெற்ற கூழாங்கற்களுக்குக் கீழேயுள்ள பொடி மண்ணில் காலடிகள் தெரிகின்றன, சந்தேகமில்லை. முத்துக்குமரி பலவந்தமாகத் தூக்கிச் செல்லப்பட்டிருக்கிறாள். அந்த நிலையில் எதிரி அறியாமல் இந்த முத்தையும் கம்பியையும் கழற்றி நழுவவிட்டிருக் கிறாள். நான் இதைக் கண்டால் தொடர்ந்து வருவேனென்பது அவளுக்குத் தெரியும். இத்தனையும் புரிகிறது எனக்கு. ஆனால் ஒன்று மட்டும் புரியவில்லை", என்றான் வீரபாண்டியன்.

அவன் விவரணத்தைக் கேட்டுப் பிரமித்துப் போன இளநங்கை, "என்ன புரியவில்லை?" என்று வினவினாள்.

"நான் இப்பொழுது இங்கு வருவேனென்பது அவளுக்கு எப்படித் தெரிந்தது?" என்று வினவினான் வீர பாண்டியன்.

"மன்னர் சொல்லியிருப்பார்," என்றாள் இளநங்கை.

"ஒருகாலும் சொல்லிருக்க மாட்டார். நான் வரு வதைப் பெரும் ரகசியமாக வைத்திருக்கும்படி அவருக்கு ஓலை எழுதியிருந்தேன். வேறு எப்படியோ தெரிந்திருக்



றது அவளுக்கு. வேறு யாரோ இதை அறிந்திருக்கிறார்கள் கோட்டைக்குள் ஒரு புல்லுருவியிருக்கிறான்."

இளநங்கையின் இதயம் துடித்தது. "அப்படியா! இத்தனை பாதுகாப்புள்ள கோட்டையில் யார் வேவு பார்க்க முடியும்? அதுவும் அரசரை வேவு பார்க்க முடியும்? ஒரு வேளை..."

"என்ன இளநங்கை...?" என்று வினவினான் வீர பாண்டியன்.

"இந்திரபானு..."

அதே சந்தேகம் வீரபாண்டியனுக்கும் உதித்திருக்க வேண்டும். "இருக்கும் நிலை இந்திரபானுவுக்கு விரோத மாகத்தான் இருக்கிறது. ஆனால் முழுதும் ஆராயாமல் தீர் மானிக்க முடியாது. வா - போவோம்" என்று சொன்ன வீர பாண்டியன் அவளை அழைத்துக்கொண்டு அவள் விடுதிக்கு வந்து சேர்ந்தான். "உள்ளே போ இளநங்கை," என்றான்.

"நீங்கள்?"

"மன்னரைப் பார்க்கப் போகிறேன்."

இதைக் கூறிவிட்டு வெகுவேகமாக மன்னனிருந்த விடுதிக்குச் சென்று உள்ளே நுழைந்த வீரபாண்டியன், சில விநாடிகளுக்கெல்லாம் வெளிவந்து புரவி லாயத்தை நோக் கிச் சென்றான். அடுத்த விநாடி சாம்பல் நிறப் புரவியில் ஆரோகணித்த பாண்டிய இளவல் கோட்டைக்கு வெளியே பாய்ந்து சென்றான்.

அவள் நடவடிக்கை அத்தனையையும் இளநங்கை தனது விடுதித்தாழ்வரையிலிருந்தே பார்த்துக்கொண்டு நின்றாள். சுற்றிலும் ஆபத்திருக்கிறதென்பதை அருவிக் கரையில் வீரபாண்டியன் தந்த விளக்கத்திலிருந்து புரிந்து கொண்டதால், அவன் ஆபத்தை நோக்கிச் செல்கிறா னென்பதை அறிந்து துன்பப் பெருமூச்சு விட்டாள். உண்மையில், அந்தச் சமயத்தில் வீரபாண்டியன் அவளும் உணராத, முற்றிலும் எதிர்பாராத பேராபத்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்தான்.

அத்தியாயம் 35

# இன்னொரு பெண்ணும் இருக்கிறாள் !

நேர்முகமாக மன்னனாலோ இளவரசனாலோ அறிமுகப் படுத்தப்பட்டாலொழிய, யாரையும் முதுகிலிருந்து விசிறிவிடும் மூர்க்க குணமுள்ள சாம்பல்நிற விசித்திரப் புரவியின்மீது ஆரோகணித்து வெகுவேகமாகக் கோட்டையிருலிருந்து வெளியே சென்ற வீர பாண்டியனையே நீண்ட நேரம் தனது விடுதித் தாழ்வரையிலிருந்து கவனித்துக் கொண்டிருந்த இள நங்கையின் இதழ்களிலிருந்து சோகப் பெருமூச்சொன்று வெளிவந்தது. கோட்டையில் பிரகாசித்த விளக்குகளின் காந்தி அருகிலிருந்த காரணத்தாலோ என்னவோ ஓர் அந்தகாரமாகக் கோட்டைக்கு வெளியே தெரிந்த மலைப் பகுதியைப் பார்த்த இளநங்கை, அந்த அந்தகாரத்தில் என்னென்ன ஆபத்துகள் இளவரசனுக்குக் காத்திருக் கின்றனவோ என்று எண்ணி ஏங்கினாள்.

அவன் மார்பின் நடுவில் அப்பொழுதும் உறுத்திக் கொண்டிருந்த பெருமுத்து இன்பமே அளித்ததென்றாலும், அதைத் தனக்குச் சூட்டியவன் ஆபத்தை நோக்கிச் செல் கின்றானே என்பதால் துக்கமும் அவள் இதயத்தை ஆட் கொள்ளவே, அவள் அழகிய மார்பகம் பெருமூச்சில் விம்மி விம்மித் தாழ்ந்தது.

கோட்டைக்குள்ளேயே யாரோ ஒற்றன் இருந்துதான் முத்துக்குமரியின் மறைவுக்கு உதவியிருக்க வேண்டுமென்று இளவரசன் கூறியதை நினைத்துப் பார்த்த இளநங்கை அதே புல்லுருவி இப்பொழுது இளவரசனுக்கு ஏன் தீங்கிழைக்க



மாட்டானென்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டாள். முத்துக்குமரியைப்பற்றி வெளியே செய்தி அனுப்ப வல்லவன் இளவரசன் வரவைப்பற்றி எச்சரிக்கை விடுவது கஷ்டமில்லையென்பதையும் அவள் ஊகித்துக்கொண்ட தால் அவள் நெஞ்சத்தின் அச்சம் உச்சத்துக்குச் சென்றது. இப்படியே நினைத்து நினைத்து நெஞ்சுருகி வெளித் தாழ்வரையில் நீண்ட நேரம் நின்றிருந்த இளநங்கை கடைசியாகப் பஞ்சணையின் அமைதியை நாட உட்புறம் சென்றாள்.

அவள் எண்ணியிருந்த ஆபத்தெல்லாம் இருக்கிறதா இல்லையா என்பதைப்பற்றிச் சிறிதும் கவலைப்படாமலே கோட்டையைவிட்டு வெளியே சென்ற வீரபாண்டியன், சாம்பல்நிறப் புரவியை மலைப்பாதையில் வெகு வேகமாகச் செலுத்தினான். சாதாரணமாகவே மூர்க்கமாகச் செல்லும் சுபாவமுள்ளதும், எசமான் இச்சையை அறியக்கூடியமான அந்தப் புரவி அன்று மலையின் ஏற்றத்தைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் பாய்ந்து சென்றது. அதன்மீது ஆரோகணித்தபடியே சூழ்நிலையைக் கவனித்தான் இளவரசன். அந்த மலைப் பகுதிகள் அவனுக்குப் புதிதல்ல வென்றாலும், அவனுடைய அன்றைய பார்வையில் பெரும் நிட்சண்யமும், ஆராய்ச்சியும் துலங்கியது. அக்கம்பக்கத்தி லிருந்த இரண்டு மலையுச்சிகளையும், அவற்றினிடையே இரண்டு மலைகளிலும் ஓடிய பாதைகளையும் ஒருமுறை கவனித்தான்.

இருள் கவிந்திருந்த அந்த நேரத்திலும் அவன் புறக் கண் மட்டுமின்றி அகக் கண்களும் நன்றாகத் திறந்திருந்த படியால், அக்கம்பக்கத்தில் கேட்ட சிறு ஓசைகளைக்கூட அவன் காதுகள் வாங்கிப் புத்திக்கு அனுப்பிக் கொண்டிருந்தன. இருளின் கருமையால் நக்ஷத்திரங்கள் அதிக வெளிச்சம் பெற்றுவிடவே, அந்த மலைப்பகுதியில் குறுக்கே ஓடிய பாதைகள் மட்டுமின்றி அக்கம்பக்கத் திலிருந்த புதர்களின் உச்சியும் காட்டு மரங்களின் உச்சியும் தெரியவே செய்தன.

சுமார் கால்காத பயணம் முடியும் தருவாயில், வீர பாண்டியன் குனிந்து குதிரையின் காதில் ஏதோ சொல்லவே அது தனது வேகத்தைத் தளர்த்திக்கொண்டு ஒரே சீராக 'டக்டக்' என்று கேட்ட தன் குளம்பு ஒலிகளுடன், திட்டமாகவும் நிதானமாகவும் மலைப் பாதையில் நடக்க முற்பட்டது.

அதன் குளம்புகளில் பட்டு, சரிவில் உருண்டோடிய கூழாங் கற்களுடைய வழவழப்போ இடையிடையே செங்குத்தாக நின்ற மலைக்கற்களின் எழுச்சியோகூட அதன் நிதான நடையைத் தடை செய்யவில்லை. புரவியும் அதன் மீது அமர்ந்திருந்தவனும் ஒரே திட்டத்தில் ஒரே ஊக்கத்தில் ஒரே நிதானத்தில் இருந்ததன்றி, இருவர் எச்சரிக்கையும் சற்றும் தளராததாயிருந்திருக்க வேண்டும்.

கால் காத தூரம் தாண்டியதுமே, சட்டென்று லேசாகக் கனைத்த சாம்பல் நிறப் புரவி பாதையில் சட்டென்று நின்றது. அதனால் எச்சரிக்கை அடைந்து விட்ட வீரபாண்டியன், சட்டென்று தன்னிரு கால்களையும் புரவியின் வயிற்றில் அழுத்திக்கொண்டு சற்று விறைத்து உட்கார்ந்ததன்றி, எந்த இடத்திலிருக்கிறோமென்பதையும் கவனித்துப் பெரு வியப்படைந்தான். "ஆம். இந்த இடத்தில் தான் குருதி பாய்ந்த என் கோடரி கிடந்தது. உனக்கெப்படித் தெரியும் அது?" என்று புரவியைக் கேட்கவும் செய்தான். புரவியிடம் பதிலேதும் எதிர்பார்க் காத வீரபாண்டியன், அதிலிருந்து கீழே இறங்கி நட்சத்திர மளித்த வெளிச்சத்திலேயே அந்தப் பகுதியில் முன்னும் பின்னும் நடந்து ஆராயத் தொடங்கினான்.

இரண்டொரு முறை அந்த மலைப்பாதையில் முன்னும் பின்னும் நடந்ததன்றி, பாதையிலிருந்து சற்றுத் தூரத்திலிருந்த பெரும் பாறையொன்றில் ஏறி நின்று சுற்றுப் புறத்தைக் கவனிக்கவும் தொடங்கினான். அந்தப் பாதையை அடுத்திருந்த பாதை கோட்டைக்குச் சென்றிறங்கிக் கொண்டிருந்தது. அந்தப் பாதையின் சரிவை ஒட்டிக் கிடந்த பள்ளத்தாக்கிலிருந்து மற்றொரு மலை



எழும்பி நின்றதால் இரண்டுக்குமிடையிலிருந்த பள்ளத் தாக்கும் மலைச்சரிவுகளும் நேராகக் கோட்டை வாயிலுக்குச் சென்றிறங்கிக் கொண்டிருந்தன.

பாதையை அடுத்து ஒரு பக்கத்தில் பெரும் காடும் புதர்களுமிருந்தாலும், இன்னொரு புறத்தில் சற்று தூரத்துக்குப் பழுப்பான ஏதும் விளையாத பாறாங்கல்லே இருந்ததைக் கவனித்தான் வீரபாண்டியன். அது மட்டுமல்ல அவன் கவனித்தது, எந்த இடத்தில் தான் கோடரியைக் கண்டானோ அந்த இடத்திலிருந்து சற்றுத் தள்ளி லேசாக வேறொரு பாதை பிரிந்து அடர்ந்த காட்டுக்குள் செல்வதை யும் கவனித்ததால் அவன் சிந்தை தீவிர யோசனையிலிறங் கியது. மீண்டும் பலமுறை அதுவரை தான் காணாத அந்தப் புதுப் பாதையைக் கவனித்தபிறகு, தானிருந்த பாதையை விட்டு இறங்கித் தனது புரவி நின்றிருந்த இடத்துக்கு வந்தான். எந்த இடத்தில் தான் கோடாரியை எடுத்தானோ அந்த இடத்தில் புரவி தன் முன்னங்கால்களின் குளம்புகளால் கீறிக் கீறிக் கூழாங்கற்களைப் பாதைச் சரிவில் உருட்டிக் கொண்டும் நின்றது. ஏனப்படிப் புரவி சலனப்படுகிறது என்பதை அறிய அந்த இடத்துக்கு வந்து பாதையை உற்றுப் பார்த்த வீரபாண்டியன், புரவியின் குளம்புகள் கீறிய இடத்தில் ஒரு தனிப் பதக்கம் புரண்டு கிடப்பதைக் கவனித்து அதைக் கையில் எடுத்து உற்றுப் பார்த்தான். நட்சத்திர வெளிச்சத்தில் அதைப் பார்த்ததுமே, அவன் முகத்தில் பெருவியப்பும் யோசனையும் மண்டியதன்றி, "விஷயம் வர வரத் தீவிரமாகிக் கொண்டு வருகிறது," என்று அவன் உதடுகளும் சொற்களை உதிர்த்தன.

சிறிது நேரம் அந்தப் பதக்கத்தை உற்றுப் பார்த்து விட்டுத் தனது கச்சையில் வைத்துக்கொண்ட வீரபாண்டியன், பாறையில் நின்றபோது தனது கண்களுக்குத் தெரிந்த பாதையைப் பிடிக்கப் பக்கவாட்டிலிருந்த காட்டுக்குள் நுழைந்து சென்றான். அந்தப் பாதை அவன் ஏற்கெனவே காணாத பாதை. கோட்டைக்குச் செல்லும் பாதையிலிருந்து விலகிப்

பக்கவாட்டின் முகப்பைச் சிறிது தூரம் தாண்டிய பின்பே அந்தப் பாதை சரியான முறையில் துவங்கியது. யாருக்கும் அந்த இணைப்புப் பாதை தெரியக் கூடாதென்பதற்காகவே அதைச் செப்பனிட்டவர்கள் முகப்பு மரங்களை வெட்டாமல் விட்டார்களென்பதைப் புரிந்து கொண்டான் வீரபாண்டியன். கோட்டைக்குச் செல்லும் பாதையின் ஒரு பகுதியில் மரங்கள் சிறிது தூரம் மறைவு கொடுக்கப் பிரகு பிரிந்த அந்தப் பாதை எதிர் மலையிலிருந்த வேறொரு பழைய பாதையுடன் இணைவதைப் பார்த்த வீரபாண்டியன், "சரி சரி. முன்னேற்பாடு பலமாகத் தானிருக்கிறது," என்று சொல்லிக்கொண்டே அந்தப் பாதையில் சிறிது தூரம் நடந்தான்.

அவனைத் தொடர்ந்து ஒரே சீராக டக் டக்கென்று ஒலி கிளம்பி நடந்துவந்த சாம்பல் நிறப் புரவி மீண்டுமொரு முறை நின்றுவிட்டது. அது நின்றுவிட்டதால் அதன் குளம் பொலியும் நின்றுவிடவே, திடீரெனத் திரும்பிப் பார்த்த வீரபாண்டியன் அப்புரவி அந்தப் பாதையைவிட்டு விலகிப் பக்கத்திலிருந்த அடர்ந்த காட்டுப் பகுதியை நோக்கித் திரும்பி உள்ளே நுழைய முற்பட்டதைக் கண்டு வியப்படைந்தான். பிறகு திடீரென்று அவனும் அதன்பின் சென்று அதன் கடிவாளக் கயிறுகளை கையால் பிடித்துக் கொண்டான்.

எங்கும் இருட்டும் பயங்கரமும் சூழ்ந்து கிடந்தாலும் பட்சிகள் மட்டும் ஏதேதோ கூச்சலிட்டுக் கொண்டிருந்தன. அந்தக் கூச்சலை ஒரு முறைக்கிருமுறையாகக் காதில் வாங்கிக்கொண்ட வீரபாண்டியன் முகம் பயங்கரமாக மாறத் தொடங்கியது. சிரிக்கும் அழகிய விழிகளில் கழுகுப் பார்வை படர்ந்தது. இடையிலிருந்த வாளை மெல்ல உருவி வலது கை பிடித்துக் கொண்டது. அத்துடன் புரவியை அதே இடத்திலேயே நிற்க வைத்துவிட்டு மெள்ளக் காட்டுக்குள் நுழைந்து சென்றான் இளவரசன்.

அபாயம் ஏற்படும் சமயங்களில் ஏற்படும் அரக்க உணர்ச்சி அவனுக்கு அன்றும் ஏற்பட்டிருந்தது.



எதிரேயிருந்த மூன்று புதர்கள் மிக அடர்த்தியா யிருந்தன. அவற்றிலொன்றுக்கு அப்பால் சிறு வெளிச்ச மொன்று தெரிந்தது. அந்த வெளிச்சத்தை நோக்கிச் சென்ற வீரபாண்டியன், மற்றொரு புதரின் மறைவில் நின்ற வண்ணம் எதிரே மெள்ள எரிந்துகொண்டிருந்த விளக்கை நோக்கினான். அந்த விளக்கின் அமைப்பைக் கண்டதும் முகத்தில் விவரிக்க இயலாத பெருவியப்பு படர்ந்தது. அந்த வியப்பு ஒரு விநாடியே நிலைத்தது. அந்த விளக்கருகில் உட்கார்ந்திருந்த இருவரைக் கண்டதும் அந்த வியப்பு மறைந்துவிட்டது. இருவரும் பெருவீரர்கள் அல்ல வென்பதையும் சாதாரணக் கள்ளர்களே யென்பதையும் அவர்களைப் பார்தத மாத்திரத்தில் புரிந்து கொண்ட வீரபாண்டியன், அவர்கள் என்ன பேசுகிறார்களென்பதை உற்றுக் கேட்கத் தொடங்கினான்.

கள்ளர்களிலொருவன் சந்தேகத்துடன் கேட்டான் மற்றவனை, "அவர் இன்னும் வரவில்லையே? வருவாரா மாட்டாரா?" என்று.

"வருவார். வராவிட்டால்..." என்ற மற்றொரு கள்வன் வராவிட்டால் விபரீதம் நேரிடும் என்பதைக் குரலொலியாலேயே உணர்த்தினான்.

"ஏன் இத்தனை நேரம் வருவதற்கு?" என்று வினவினான் முதல் கள்வன்.

"கோட்டையைவிட்டு வெளியே வருவது சுலபமென்று நினைக்கிறாயா?" என்று வினவினான் மற்றவன்.

"சுலபமில்லை. இருப்பினும் அடிக்கடி வந்து போகிறவர்தானே? இத்தனை நாள் தாமதப்பட்ட தில்லையே?" என்று சந்தேகத்துடனேயே பேசினான் முதல்வன்.

அவர்கள் சம்பாஷணை மிக ரசமாயிருந்தது வீர பாண்டியன் செவிகளுக்கு. அவர்கள் சாதாரணக் கள்வர்களாயிருந்தாலும், அவர்களை இயக்கும் ஒரு பெரிய கள்வன் கோட்டைக்குள்ளிருக்கிறானென்பதைப் புரிந்து

கொண்ட வீரபாண்டியன், அவர்கள் எதிர்பார்த்த மனிதனைத் தானும எதிர்பார்த்துப் புதர் மறைவில் மண்டியிட்டு உட்கார்ந்தான். அதிக நேரம் காத்திருக்க அவசியமில்லாதிருந்தது. திடீரென்று காலடிகள் கள்ளர்கள் உட்கார்ந்திருந்த இடத்துக்குப் பின்புறமாகக் கேட்டன. அந்தக் காலடிகளிலிருந்து சுமார் நாலைந்து பேர்கள் வருவதைப் புரிந்துகொண்ட வீரபாண்டியன், 'இவர்கள் ஒருவனை எதிர்பார்க்க ஏன் பலர் வருகிறார்கள்?' என்று வினவிக் கொண்டான். அந்தக் கேள்வியை அவன் தன்னைக் கேட்டுக் கொண்ட சமயத்தில் திடீரென மற்ற காலடி ஒலிகள் நின்றன. ஒருவர் மட்டும் கள்ளர்கள் இருக்கு மிடத்தை நோக்கி வருவது புரிந்தது.

அப்படி வந்தவன் அடர்த்தியான மரங்களிலிருந்த மறைவிலிருந்து வெளிப்போந்து கள்ளர்களுக்கருகில் வந்ததும் விளக்கின் ஒளி அவன் முகத்தில் நன்றாக விழுந்தது. அந்த முகத்தைப் பார்த்ததும் பிரமித்துப் போனான் வீரபாண்டியன். தாடியும் மீசையும் உடைய அந்த வயோதிகன், அத்தகைய துணிகர வேலையில் ஈடுபடுவானென்பதை அந்த விநாடி வரையில் எண்ணிப் பார்க்கவில்லை வீர பாண்டியன். அந்த வயோதிகன் முகம் ஏற்கெனவே எங்கோ பார்த்த முகமாகத் தோன்றவே சிறிது சிந்தனையில் ஆழ்ந்தான் வீரபாண்டியன். திடீரென அவன் முகத்தில் பெரும் பிரமிப்புப் படர்ந்தது. அதனால் ஏற்பட்ட பிரமை இளவரசனுக்கு நீங்கு முன்னமே அவனை அதிக சிரத்தையில் ஆழ்த்தக்கூடிய சம்பாஷணை வயோதிகனுக்கும், கள்ளர்களுக்கும் துவங்கியது.

கள்ளரில் ஒருவன் கேட்டான், "பணம் எங்கே?" என்று.

"வேலை இன்னும் முடியவில்லை," என்றான் வயோதிகன்.

"பெண்ணைத்தான் தூக்கி வந்தாயிற்றே?" என்றான் இன்னொரு கள்வன்.



"ஒரு பெண்ணைத்தானே தூக்கி வந்தீர்கள்," என்று வயோதிகன் நகைத்தான்.

"ஒரு பெண்ணைத்தானே நீங்கள் காட்டினீர்கள்?" என்றான் கள்வன்.

"இப்பொழுது இன்னொரு பெண்ணைக் காட்டுகிறேன்," என்றான் வயோதிகன்.

"இந்த அபாய வேலையில் எங்கள் உயிர் போகலாம். ஒரு முறை கோட்டைக்குள் நுழைவதே கஷ்டமாயிருந்தது. இன்னொரு முறையும் எல்லோரும் தூங்குவார்களா?' என்றான் இரண்டாமவன்.

"முதல் பெண்ணை நீங்கள் சாமார்த்தியத்தால் தூக்கி வரவில்லை. இரண்டாமவளைத் தூக்கி வரவும் உங்கள் யுக்தி தேவையில்லை. திட்டம் வகுக்க நானிருக்கிறேன். நீங்கள் ஆயுதங்களாயிருந்தால் போதும்," என்று வலியுறுத்தினான் வயோதிகன்.

"நாங்கள் மறுத்தால்?" முதல் கள்வன் கோபத்துடன் கேட்டான்.

"என்னுடன் நான்கு வீரர்கள் வந்திருக்கிறார்கள்." இதைச் சொன்ன வயோதிகன் கண்களில் கொலைக் குறி மண்டிக் கிடந்தது.

இதை இரண்டு கள்வர்களும் கவனித்தார்கள். அதனால் அச்சத்தின் வசப்பட்ட ஒரு கள்வன் கேட்டான். "இந்தப் பெண்ணை எப்பொழுது தூக்கி வரவேண்டும்?" என்று.

கிழவன் பதில் திட்டமாக வந்தது. "இப்பொழுதே; இன்றிரவே," என்ற சொற்கள் உற்சாகத்துடனும் திடத்துடனும் கிழவன் உதடுகளிலிருந்து வந்தன. எப்படி அந்தப் பெண்ணைத் தூக்கி வரவேண்டும் என்ற திட்டத்தையும் விளக்க முற்பட்டான் வயோதிகன்.

## அத்தியாயம் 36

# செண்பகப் பூ

எதிரேயிருந்த புதருக்கருகில் கள்வர்கள் வைத்திருந்த விளக்கினிடம் வந்தவுடனேயே, அந்தக் கிழவன் யாரென்பதைப் புரிந்துக்கொண்ட வீரபாண்டியன் பெரு வியப்படைந்தான் என்றால், அதற்குக் காரணம் இருக்கவே செய்தது. தான் பாண்டிய நாட்டுப் படைவீரரின் உடையணிந்து கோட்டைக்குள் நுழைந்த சமயத்தில், மன்னன் விடுதியின் முன்பாகக் காவல் புரிந்து கொண்டிருந்த அந்த வயோதிகனே எதிரியின் கையாள் என்பதை வீரபாண்டியன் நினைத்துக் கூடப் பார்க்காததால், கிழவனின் உண்மைச் சொரூபம் வெளியானதும், 'இந்த வயதில் இத்தகைய செயலில் ஈடுபடுவதற்கு இவனுக்கு என்ன துணிச்சல் இருக்க வேண்டும்?' என்று தனக்குள் சொல்லிக்கொண்டான் இளவரசன். அவனது வயோதிகமும், சாதாரணமாக அவன் முகத்தில் பிரதிபலித்த போலி சாத்விகப் பார்வையுமே கோட்டைக்குள்ளிருந்த சகலரையும் ஏமாற்றியிருக்க வேண்டும் என்று தீர்மானித்தான் வீரபாண்டியன். எந்த வீரனையும் சற்று எட்டப் பார்க்கும்போதே எடைபோட்டு விடவல்ல தன் அறிவைக் கூடப் பயனற்றதாக அடித்த அந்தக் கிழவன் லேசுபட்டவனாயிருக்க முடியாதென்று தீர்மானித்துக் கொண்டதால், அவனை மிகுந்த எச்சரிக்கை யுடன் சமாளிக்க வேண்டும் என்ற உறுதியும் கொண்டான் வீரபாண்டியன்.

வீரபாண்டியன் எதிரிலுள்ள மற்றொரு புதரில் ஒளிந்து கொண்டிருப்பதை அறியாத வயோதிக வீரன், கள்வர்களை நோக்கிச் சொன்னான், "முன்னால் நீங்கள்



தூக்கிச் சென்ற பெண் எந்த விடுதியிலிருந்தாளோ அந்த விடுதியிலேயே இவளும் இருக்கிறாள். அவள் எந்த இடத்தில் வந்து தனது காதலனைச் சந்திக்கிறாளோ அங்குதான் இவளும் சந்திக்கிறாள்," என்று.

"இவளுக்கும் காதலன் இருக்கிறானா?" என்று வினவினான் கள்வர்களில் ஒருவன்.

"இருக்கிறான். ஆனால் முந்தியவனைப்போல் சிறு பிள்ளையல்ல அவன். கூரிய அறிவுடையவன். அதுமட்டு மல்ல; கூரிய வாளையும் உடையவன். கூரிய கோடரி ஒன்றுமிருக்கிறது அவனிடம்," என்றான் கிழவன்.

"கோடரியா?" சற்று அலட்சியத்துடன் கேட்டான் கள்வன்.

"அதை அத்தனை அலட்சியமாக நினைக்க வேண்டாம். அவன் கண்ணுக்கெட்டும் தூரத்தில் நீ எங்கிருந்தாலும் அது உன்மீது பாய்ந்துவிடும். அதைவிட அபாயமான ஆயுதத்தையோ, அதை எறிபவனைவிட அபாயமான மனிதனையோ நான் பார்த்ததில்லை. இம்முறை காரியம் முன்புபோல் அத்தனை எளிதா யிருக்காது," என்று எச்சரித்தான் கிழவன்.

"அந்த மனிதன் இருக்கும்போதா நாம் பெண்ணைத் தூக்கப் போகிறோம்? கோட்டை உறங்கும் போது தானே நாம் இதைச் செய்யப்போகிறோம்?" என்று கேட்டான் கள்வர்களில் இன்னொருவன்.

கிழவன் முகத்தில் சற்றுக் கடுமை படர்ந்தது. "கோட்டை உறங்கும்; இவன் உறங்கமாட்டான். அவன் கழுகுக் கண்களிலிருந்து யாரும், எதுவும் தப்புவது கடினம். ஆகவே, இம்முறை நாம் மிகுந்த எச்சரிக்கையுடனிருக்க வேண்டும்" என்று சற்றுப் பயத்துடனேயே முதலில் பேசிய கிழவன், பிறகு உற்சாகத்தை வரவழைத்துக்கொண்டு பேசலானான். "இப்பொழுது முதல் ஜாமம் முடிந்து விட்டது. நான் இங்கிருந்து சென்றதும் மூன்றாம் ஜாம ஆரம்பத்தில் ஒரு சிறு விளக்கைப் பழைய இடத்தில், அதாவது மதகு மூலம் கோட்டைக்குள் அருவி

புகுமிடத்திலுள்ள கோட்டைச் சுவரில் அசைக்கிறேன். நீங்களிருவரும் பழையபடி உள்ளே வாருங்கள்..." என்று சொல்லிக் கொண்டே போன கிழவனை இடைமறித்த கள்வனொருவன், "நாங்கள் இருவருமா?" என்று வினவினான் வியப்புடன்.

"ஆம்." கிழவன் குரல் திட்டமாக இருந்தது.

"போன தடவை ஒருவர் தானே வந்தோம்?"

"அந்தப் பெண் வேறு; இவள் வேறு."

"என்ன வித்தியாசம் இருவருக்கும்?"

"இவளைப் பெண் என்று சொல்லுவதைவிட ஆண் என்று சொல்வது பொருந்தும். அதிக முன் எச்சரிக்கையில்லாவிட்டால் இவளைப் பிடிப்பது கஷ்டம். இவளுக்குச் சிலம்பம், வாட்போர், மற்போர் எல்லாம் தெரியும்."

"பெரிய முரடா?"

"அசாத்திய முரடு. கொற்கையில் இரண்டு மூன்று வாலிபர்கள் கால் முறித்திருக்கிறது. கொலை இன்னும் செய்யவில்லை. செய்ய முடியாதென்பதல்ல. அவளுக்கு வாய்ப்பு வரவில்லை. அந்த வாய்ப்பை நாம் அளிக்க வேண்டாம்." இதைச் சொன்ன கிழவன் கண்களிலும் சிறிது அச்சம் உதயமாயிற்று.

இதைக் கேட்ட கள்வர்களும் பயந்தார்கள். "மிக அபாயமான வேலை," என்றான் ஒருவன்.

"அபாயமில்லாமல் பணம் ஏது?" என்று சீறிய கிழவன், "ஆனால் உங்கள் அபாயத்தைப் பெரிதும் குறைக்கிறேன். நீங்கள் வருவதற்குள் அவள் மூர்ச்சையற்றுக் கிடப்பாள். சுவருக்கு அப்பால் கொண்டு வருவதுதான் உங்கள் பொறுப்பு" என்றும் கூறினான்.

"மூர்ச்சையாகக் கிடப்பாளா?" என்று வினவினான் ஒரு கள்வன்.

"ஒருத்தி காணாமற்போன இடத்துக்கு மற்றொருத்தி வருவாளா?" என்று வினவினான் இன்னொருவன்.



"நான் வரவழைக்கிறேன், அதற்கு வசதி இருக்கிறது," என்று தன் தலையை விரலால் தட்டிக் காட்டிய கிழவன், "போன தடவை வந்தவளின் காதலனும் வெளியே சென்றுவிட்டான். அந்தப் பெண்ணிடம், அவள் காதலன் மறுநாள் அருவிக்கருகில் சந்திப்பானென்று கூறி வரவழைத்தேன். இவளிடம் வேறுமுறை கையாளப் போகிறேன். அறிவு சம்பந்தமான செயல்களை எனக்கு விட்டுவிடுங்கள். வெறும் உடல் கொழுப்பினால் செய்யக்கூடிய அலுவல்களை நீங்கள் செய்தால் போதும்," என்றான்.

"இப்பொழுது என்ன சொல்லி அந்தப் பெண்ணை அழைத்து வருவீர்கள்?" என்று வினவினான் முதல் கள்வன்.

"அந்தக் கவலை உங்களுக்குத் தேவையில்லை. சரியாக மூன்றாம் ஜாமம் முடிந்ததும், மதகில் மூழ்கி உள்ளே வாருங்கள்," என்று உத்தரவிட்ட கிழவன், "நான் சொல்வது புரிந்ததா?" என்று வினவினான்.

புரிந்தென்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்த கள்வர்களிருவரை நோக்கி, "அவளையும் இதே இடத்துக்குக் கொண்டு வாருங்கள். இங்கு முன்புபோல் பத்துப் புரவி வீரர்கள் இருப்பார்கள். அவர்களிடம் அவளை ஒப்படையுங்கள்," என்றான் கிழவன்.

"முதல் பெண்ணைப் போல் இவளும் சண்டையிட்டுத் தப்பியோட முயன்றால்?" என்று வினவினான் ஒரு கள்வன்.

"அவளை வாயில் துணியடைத்து மட்டும் தூக்கி வந்தோம். அவளுக்குச் சுரணையிருந்தது. இவளுக்கு இருக்காது," என்று கிழவன் விளக்கினான்.

"சரி, உங்கள் ஆணைப்படி இம்முறை செய்து விடுகிறோம். அடுத்தபடி இம்மாதிரிப் பணி எங்களால் முடியாது. இது முடிந்தவுடன் பணமுடிப்பு எங்களிடம் வரவேண்டும்," என்றான் ஒரு கள்வன்.

"பணமுடிப்புக்கு நீங்கள் காத்திருக்க வேண்டியதில்லை. பெண்ணை இங்கு கொண்டு வந்தவுடன், இங்குள்ள வீரர்களிலொருவன் பணமுடிப்பைத் தயாராக

வைத்திருப்பான். பெண்ணை இங்கு கொண்டுவந்து சேர்ப்பதுடன் உங்கள் பணி முடிந்துவிடுகிறது. இம்முறை மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்து கொள்ளுங்கள். வீரபாண்டியன் எப்பொழுது எங்கிருப்பான் என்பதைச் சொல்ல முடியாது," என்றான் கிழவன்.

அந்தப் பெயரைக் கேட்டதும் இரு கள்வர்களும் திடுக்கிட்டுக் கலவரம் நிரம்பிய விழிகளைக் கிழவன் மீது நிலைக்க விட்டார்கள். "என்ன! வீரபாண்டியரா! அவரா இதில் சம்பந்தப்பட்டிருக்கிறார்?" என்று கேட்டான் ஒரு கள்வன் திகிலுடன்.

"ஆம்." கிழவன் திடமாகச் சொன்னான்.

"வீரபாண்டியர் சம்பந்தப்பட்ட விஷயமானால் பெரும் ஆபத்தாயிற்றே?" என்றான் மற்றொரு கள்வனும் பயத்துடன்.

"ஆபத்தில்லாமல் நீங்களிருவரும் விளையாடவா பொன் முடிப்புத் தருகிறோம்? அல்லது நீங்கள் பெரும் புலவர்களா, சேரமன்னனிடம் பொற்கிழி பெற?" என்று வினவினான் கிழவன்.

"சேர மன்னரா!" என்று வாயைப் பிளந்தான் ஒரு கள்வன்.

"ஆம்."

"நேற்று வந்தவர் சேர நாட்டவராகக் காணப்பட வில்லையே!"

"இல்லை."

"அவர்..." என்ற கள்வனை எரிக்கும் விழிகளால் பார்த்தான் கிழவன். "இரவில் எதுவும் பேசாதே," என்ற பழமொழியையும் உதடுகளிலிருந்து உதிர்த்தான். "உங்களிடம் நாட்டு நடப்புகளைப் பேசவும், அரசர் படைத் தலைவர்கள் ஆகியோரைப் பற்றி விவாதிக்கவும் நாங்கள் இங்கு வரவில்லை," என்றும் அதட்டிய கிழவன், சொன்னபடி செய்யுங்கள். வழக்கம்போல் உங்களுக்குத் துணையும் அதிகமிருக்கும். இருபது வீரர்களுக்குக் குறையாமல் உங்களுக்கு உதவுவார்கள்," என்று கூறிவிட்டு, அத்துடன் அங்கிருந்து கிளம்பினான். அவன் சொன்னதைப் பார்த்துக் கொண்டே நின்ற கள்வர் இருவர் முகத்திலும் பயத்தின் சாயை பலமாகப் படந்து கிடந்தது.



வீரபாண்டியன், மறைந்த இடத்தைவிட்டு நகரவே யில்லை. கிழவனும் அவனுடன் வந்தவர்களும் ஏதோ பேசும் அரவம் மட்டும் சற்றுத் தொலைவில் கேட்டது அவன் காதுகளுக்கு. அதற்குப் பிறகு அவனுடன் வந்த நாலைந்து பேர் ஒரு திக்கிலும் கிழவன் மட்டும் கோட்டையை நோக்கியும் செல்வதைக் குதிரைக் குளம்பொலிகளால் உணர்ந்த வீரபாண்டியன், மெல்லத் திரும்பி ஓசைப்படாமல் நடந்து தனது புரவியிருக்குமிடம் வந்து பல விநாடிகள் அங்கேயே நின்றான். கள்வரிருவரும் விளக்கை அணைத்து விட்டதையும் பிறகு அவர்கள் மீண்டும் கோட்டைப் பாதையை நோக்கிச் சென்று விட்டதையும் உணர்ந்த வீரபாண்டியன், ஒருமுறை மரங்களின் அடைப்பிலிருந்து வெளிவந்து ஆகாயத்தை நோக்கினான். அங்கிருந்த விண்மீன்களின் நிலையைக் கவனித்து, 'சரி, சரி! நிரம்ப அவகாசமிருக்கிறது. இப்பொழுதுதான் இரண்டாம் ஜாமம் துவங்கியிருக்கிறது,' என்று தனக்குள் சொல்லிக்கொண்டான். பிறகு தனது புரவி மீது ஏறி மீண்டும் கோட்டைப் பாதையில் செல்லாமல் எதிர்மலைக்குச் சென்ற பாதையை ஆராய்ந்துகொண்டு சென்றான். அப்படிச் சென்ற சமயத்தில், அவன் முகத்தில் தீவிர சிந்தனை மட்டுமிருந்ததேயன்றிக் கோபமோ, கோபம் துளிர்க்கும் சமயத்தில் ஏற்படும் அந்தப் பயங்கரப் பார்வையோ இல்லை. முகத்தில் ஒரு குழப்பம் மட்டும் லேசாக இருந்தது. சற்று முன்பு தான் கண்டெடுத்த பதக்கத்தைக் கச்சையிலிருந்து எடுத்து இரண்டு மூன்று முறை திருப்பித் திருப்பிப் பார்த்தான். 'இதுதான் சிறிது சங்கடத்தை அளிக்கிறது. இது உண்மையானால் பாண்டிய மன்னன் எந்தப் பக்கம் திரும்புவார்? மேற்கிலா? வடக்கிலா?' என்று திரும்பத் திரும்பக் கேட்டுக்

கொண்டான். பிறகு எதிரே எழுந்து நின்ற மலையைக் கவனித்தான். 'அங்குதான் எங்கோ கோட்டையாறு கிளம்ப வேண்டும்', என்றும் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டான்.

அந்தச் சமயத்தில் அந்த இடத்தில் தான் பேராபத்திலிருந்ததை உணர்ந்து கொண்டான் பாண்டிய இளவரசன். அந்தப் பகுதியில் சேரர் படையால் நிர்வகிக்கப்படும் கள்வர்கள் மட்டுமல்ல - சேரர் படைப் பிரிவுகளும் இருக்க வேண்டுமென்பதைச் சந்தேகமறப் புரிந்துகொண்டான் அவன். கள்வர்களைச் சேரவீரர்கள் பணமுடிப்புடன் சந்திப்பார்கள் என்று கிழவன் சொன்னதால், எந்தப் பகுதியிலும் அவர்களிருக்கலாமென்பதையும், எந்தச் சமயத்திலும் அவர்களால் தான் வளைக்கப்படலாமென்பதையும் அறிந்திருந்தான் அவன். அத்தகைய அபாய நிலையிலிருந்தும், இளநங்கையின் நிலையும் பெரிய ஆபத்திலிருந்தும், அதைப் பற்றியெல்லாம் சிந்திக்காமல் மலையையும் கோட்டையாற்றைப் பற்றியும் சிந்தித்துக் கொண்டும் சென்றான்.

வீரபாண்டியன் சிந்தனை இந்த நிலையிலிருக்க, இளநங்கையின் சிந்தனை மட்டும் வீரபாண்டியன் மீதே லயித்திருந்தது. கோட்டையை விட்டுச் சென்ற அவன் என்ன ஆபத்திலிருக்கிறோனோ என்ற திகிலே அவளை வாட்டிக் கொண்டிருந்ததால், பஞ்சணையில் வேதனை நிரம்பிய உள்ளத்துடன் புரண்டு கொண்டிருந்தாள். இன்ப சமயங்களில் துரிதமாகத் துள்ளியோடிவிடும் நேரம் அந்தத் துன்ப நிலையில் ஏனோ வெகு தாமதமாக ஓடிக் கொண்டிருந்தது.

நேரத்தை அவள்தான் ஓட்டிக்கொண்டிருந்தாள். அப்படி மெல்ல நகர்ந்த நேரமும் இரண்டாவது ஜாமத்தை முடித்த சமயத்தில் கிழவன் மெள்ள மன்னனிருந்த விடுதிக் காவலிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு இளநங்கையின் விடுதி நோக்கிச் சென்று மெள்ளக் கதவைத் தட்டினான். ஏற்கெனவே விழித்திருந்ததால் வெகு வேகமாக



வந்து கதவைத் திறந்த இளநங்கை, "என்ன வேண்டும் உனக்கு?" என்று வினவினாள்.

கிழவன் புன்முறுவல் காட்டினான். "எனக் கெதுவும் வேண்டாம். வேண்டுவது வேறொருவருக்கு" என்றான்.

அவன் சொல்வதைப் புரிந்துகொண்டாள் இளநங்கை. "அவர்..." என்று துவங்கினாள்.

"இளவரசர் வந்துவிட்டார்."

"அப்படியா!" என்று இளநங்கை மகிழ்ச்சிப் புன்முறுவல் காட்டினாள்.

"நாளை அதே இடத்தில் சந்திப்பதாகச் சொன்னார்," என்றான் கிழவன்.

"அப்படியா?"

"ஆம்."

"இன்று?"

"வெளியே போய்வந்த களைப்பால் உறங்கச் சென்று விட்டார். ஆனால் வெளியிலிருந்து ஒன்று கொண்டு வந்தார். உங்களிடம் கொடுக்கச் சொன்னார்," என்ற கிழவன், அதுகாறும் தன் கையில் மறைத்து வைத்திருந்த செண்பகப் பூ ஒன்றை அவளிடம் நீட்டினான்.

மிகுந்த மகிழ்ச்சியுடன் அதை வாங்கிக்கொண்ட இளநங்கை அதை ஒரு விநாடி பார்த்தாள். பிறகு ஆசையுடன் நாசியால் முகர்ந்தாள். "அப்பா! என்ன வாசனை!" என்று சொற்களை உதிர்த்து முடிக்க முயன்றாள். சொற்களைச் சொல்லி முடிக்கவில்லை அவள் 'வாசனை' என்ற சொல் குழறி வந்தது வாயிலிருந்து. கண் பெரு இருட்டாக இருட்டியது. விழ இருந்த வாணாதித்தன் மகளை வயோதிகன் வெகு லாகவமாகப் பிடித்துத் தூக்கிக் கொண்டு விடுதிக்குள் சென்றான்.

## அத்தியாயம் 37

# நீ யாரென்பது எனக்குத் தெரியும்!

செண்பகப் பூவை முகர்ந்ததும், மரத்திலிருந்து உதிர்ந்துவிட்ட மற்றொரு செண்பகப் பூவைப்போலச் சாய்ந்து விழப்போன இளநங்கையைக் கீழே விழாமல் தாங்கிப் பிடித்து இருகைகளிலும் ஏந்தியவண்ணம் உள்ளே நுழைந்த அந்த வயோதிக வீரன், வாயிற்கதவை மெள்ள இடது காலால் தள்ளி மூடிவிட்டுச் சென்றதன்றி, கையிலிருந்த பூங்கொடியை உள்ளிருந்த பஞ்சணையில் படுக்க வைத்ததும், மீண்டும் வாயிற்புறம் வந்து அந்தக் கதவை ஓசைப்படாமல் தாளிட்டுக் கொண்டும் சென்றான். பஞ்சணையில் கிடந்த பைங்கிளியை உற்று நோக்கிவிட்டு விடுதியின் பின்புறம் சென்று புறக்கடைச் சுவரை ஆராய்ந்தான்.

பாதுகாப்பை முன்னிட்டு அந்தப் பின்புறச் சுவரில் வாயிற்படி ஏதும் வைக்கப்படாததாலும், மற்றவர்கள் செல்வதுபோல் வாயில் வழியாக விடுதியைச் சுற்றிச் செல்ல முடியாதாகையாலும், வயோதிகன் அந்தச் சுவருக்கருகிலிருந்த இரண்டு மூன்று பாறைகளை உருட்டி நிற்க வைத்து அதில் ஏறிப் பார்த்தான். அடுப்புப்போல் வைக்கப்பட்ட இரு பாறைகளின்மீது மூன்றாவது பாறை திடமாக நின்றதையும் அதன்மீது ஏறியதும் பின்புறத்தில் எட்ட இருந்த மரமும் அருவியும் பந்தமும் நன்றாகத் தெரிவதையும் கவனித்த வயோதிகன் திருப்தியுடன் கீழே இறங்கினான். பிறகு உள்ளே வந்து இளநங்கையை ஒருமுறை அசக்கிப் பார்த்து விட்டுப் பரம திருப்தியுடன் மீண்டும் வாயிற் கதவைத் திறந்து மூடிக்கொண்டு வெளியே வந்து படிகளில்



இறங்கிச் சென்றான். அங்கிருந்த நிலையையும் பார்த்து விட்டு விண்மீன்களையும் நோக்கினான்.

மூன்றாம் ஜாமம் அப்பொழுதுதான் துவங்கியிருந்தது. அதனால் நிம்மதிப் பெருமூச்சுவிட்ட வயோதிகன், மன்னன் விடுதியிலிருந்து கிளம்பி நேராக இளநங்கை விடுதியைக் கடந்து செல்லுமுன்பு, சற்றுத் தூரத்திலிருந்த ஒரு காவலனிடம் பேச்சுக் கொடுத்தான். "என்னை விடுதியின் பின் புறக் காவலுக்கு போட்டிருக்கிறார்கள். மன்னர் விடுதியில் இருவர்தான் காவலிருக்கிறார்கள். நீயும் பார்த்துக்கொள்" என்று கூறினான் கிழவன்.

வீரன் முகத்தில் வியப்பு துளிர்த்தது. "விடுதிக்குப் பின் புறம் காவல் எப்பொழுதும் கிடையாதே," என்று கூறினான் வியப்பு குரலில் ஒலிக்க,

"மன்னன் மகள் காணாதுபோன பிறகு காவல் போட்டிருக்கிறார்கள்," என்று கூறிய கிழவன் பெரு அலுப்புடன் செல்பவனைப் போல நிதானித்து இளநங்கையிருந்த விடுதியைச் சுற்றிப் பின்புறம் சென்றான். 'சரி, சந்தேகம் ஏதாவது ஏற்படுமானால் அதை விலக்கியாகிவிட்டது. இனி யாரும் பார்க்கவும் மாட்டார்கள், தேடவும் மாட்டார்கள்' என்று தனக்குத்தானே கூறிக் கொண்ட கிழவன் விடுதியின் பின்புறம் சென்றதும் நிதானத்தைக் கைவிட்டுப் பெரும் சுறுசுறுப்பைக் காட்டினான்.

வெகு துரிதமாக நடந்து சென்று மரத்தடியின் பொந்தில் மறைத்து வைத்திருந்த அகல் விளக்கை எடுத்து மதில்சுவருக்குப் பக்கத்திலிருந்த பந்தத்தில் கொளுத்தி, சுவர்மீது வைத்து இருமுறை அசக்கினான். சற்று நேரம் நிதானித்து எதையோ உற்றுக் கேட்டபின் அவன் முகத்தில் திருப்தி நிலவியது. பிறகு அருவிக்கருகில் சென்று மதகுமூலம் குபுகுபுவென்று வந்து உள்ளே பாய்ந்து கொண்டிருந்த நீர்க்குழிக்குப் பக்கத்தில் நின்றான். அவன் அதிக நேரம் காத்திருக்க அவசியமில்லாதிருந்தது. அந்த

மதகுத் துவாரத்தின்மூலம் ஒருவர் பின்னொருவராக இருவரும் வந்தார்கள்.

அவர்கள் அருவியின் வேகத்தில் புரண்டு எழுந்திருந்ததும் தன் பின்னால் அவர்களை வரச்சொல்லி, இளநங்கையிருந்த விடுதியின் பின்புறம் வந்ததும் அங்கு இரண்டு பாறைகளை அவர்களை அடுக்கச் சொல்லி, "நீங்கள் இங்கேயே இருங்கள். நான் அவளைக் கொண்டு வருகிறேன். சத்தம் சிறிதும் செய்யவேண்டாம்" என்று கூறிவிட்டு, அப்பாறைகள் மீது ஏறி அடுத்த பக்கத்தில் தான் ஏற்கெனவே அடுக்கியிருந்த பாறை வழியாக இறங்கிச் சென்றான். அடுத்த இரண்டு மூன்று நிமிடங்களுக்குள் இளநங்கையைத் தூக்கிவந்த கிழவன் பாறைமீது ஏறி, "உம்...பிடியுங்கள்" என்று அவர்களிடம் இளநங்கையைக் கொடுத்தான்.

அவர்கள் அந்த புஷ்பச் சுமையை வாங்கி மறுபுறம் இறங்கியவுடன் சுவர் ஏறிக் குதித்துத் தானும் இறங்கிய வயோதிகன் இளநங்கையைத் தூக்கிக்கொண்டு அவர்களைத் தன்னுடன் வரும்படி சைகை செய்து அருவிக் கரையை நோக்கி மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்தான். அருவிக்கரைக்கு வந்ததும் கள்வரிலொருவனைச் சுவரேறி வெளியே குதிக்கும்படி உத்தரவிட்டு, இன்னொரு கள்வனை மதில்மீதேறி நிற்கச் சொல்லி இளநங்கையைத் தான் வாங்கி உயர்த்தினான். அவளை மதில் மீதிருந்தவன் வாங்கிக் கீழே கொடுக்க அங்கிருந்த கள்வன் வாங்கிக் கொண்டான். மற்றவனும் சிரமப்பட்டு அப்புறம் குதித்துவிடவே மதில்மீது தொங்கி நின்ற கிழவன் அவர்களைப் போகும்படி சைகை செய்துவிட்டுப் பழையபடி மன்னன் விடுதிக்கு வந்து, வாயில் காவல் முடிந்துவிடவே, நேராகக் காவலர் விடுதிக்குச் சென்று தனது படுக்கையில் படுத்து நன்றாக உறங்கினான்.

முதல்நாளிரவு பூராவும் விழித்திருந்த காரணத்தால் நீண்டநேரம் உறங்கிவிட்ட வயோதிக வீரன் கதிரவன் உதித்து நான்கு நாழிகைக்குப் பிறகே எழுந்திருந்தான். நேரம்



அதிகமாகிவிட்டதைச் சாளரத்தின் மூலம் உடலில் பட்ட சூரிய கிரணத்திலிருந்து அறிந்து கண்ணைக் கசக்கிக் கொண்டு படுக்கையிலேயே சிறிது நேரம் உட்கார்ந்து யோசித்தான்.

பிறகு எழுந்து சென்று காலைக் கடன்களை முடித்துக் கொண்டு காவல் உடையணிந்து காவலர் விடுதியிலிருந்து வெளியே வந்தான். கோட்டையைச் சுற்றிலும் ஒருமுறை கண்ணை ஓட்டிய கிழவன் முகத்தில் மேலும் திருப்தியே நிலவியது. இளநங்கை காணாமற்போனதைக் குறித்துப் பெரும் குழப்பமும், கலவரமும் கோட்டையில் இருக்குமென்று எதிர்பார்த்த கிழவன் அக்கோட்டையின் அமைதியைக் கண்டு வியந்தான். இத்தகைய காவல் புலிகளைக் கொண்டு பாண்டிய மன்னன் என்ன காரியத்தைச் சாதிக்கப் போகிறான் என்று தனக்குள் இகழ்ச்சியுடன் சொல்லியும் கொண்டான். இரவில் காணாது போனவளை நான்கு நாழிகைக்குப் பிறகும் தேட முற்படாத மன்னனின் திட்சண்யத்தைப் பற்றி அலுத்துக் கொண்டான் கிழவன். "சரி, அவர்கள் அறிந்து கொள்கிற போது, அறிந்து கொள்ளட்டும்," என்று தனக்குள் சொல்லிக் கொண்டு, காவல் விடுதியிலிருந்து படிகளில் இறங்கி மன்னன் விடுதியை நோக்கி நடந்தான்.

வழக்கம்போல் கோட்டை மிகுந்த சுறுசுறுப்புடன் காணப்பட்டது. புரவிகள் நடைப் பழக்கத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டுக் கொண்டிருந்தன. இன்னும் சில காவல் வீரர்கள் புரவிகள் மீதமர்ந்து வேகமாகக் கோட்டையின் பல பகுதிகளில் அணிவகுக்கவும், போர் பயிற்சி செய்யவும் சென்று கொண்டிருந்தார்கள். இத்தனையும் கிழவனுக்குப் பூரண உற்சாகத்தை அளித்தன. ராஜநடை நடந்து மன்னன் விடுதிக்கு வந்தான்.

மன்னன் விடுதியை அவன் அடைந்ததும், அங்கு அவன் முற்றும் எதிர்பாராத பணியொன்று காத்திருந்தது. அவனை மன்னர் அழைத்ததாக அங்கிருந்த காவலன் கூறவே, உள்ளே சென்ற கிழவனை மஞ்சத்தில்

உட்கார்ந்திருந்த மன்னன் புன்முறுவலுடன் வரவேற்று "உன் பெயரென்ன?" என்றான்.

"முஞ்சன்!" என்றான் வயோதிகன், திடீரென மன்னன் தன் பெயரைக் கேட்பதன் காரணம் அறியாமல்.

"முஞ்சனா!" என்ற மன்னன், "வடநாட்டுப் பெயராகத் தெரிகிறது," என்று கூறினான். மன்னன் முறுவல் அதிகமாக விரிந்தது.

"ஆம். நான் வடநாட்டவன்தான்," என்றான் வயோதிகன் சற்றுச் சங்கடத்துடனும், சந்தேகத்துடனும்.

"மிக்க மகிழ்ச்சி." மன்னன் மகிழ்ச்சி எல்லை கடந்து தெரிந்தது அவர் முகத்தில்.

கிழவனுக்கு மெல்லப் பயம் துளிர்த்தது. "எதற்கு மகிழ்ச்சி மகாராஜா?" என்று வினவினான் அவன்.

"நமக்குச் சேவை புரிய வடநாட்டிலிருந்து நீ வந்ததைக் குறித்து," என்றான் மன்னன்.

கிழவன் சங்கடம் அதிகமாயிற்று. "வயிறு வளர்க்க எங்கு சென்றாலென்ன?" என்ற கிழவன் சொற்களை இடை மறித்து மன்னன், "எதைச் செய்தாலென்ன?" என்று முடித்தான்.

கிழவன் நிமிர்ந்து நன்றாக நின்றுகொண்டான். அவன் உள்ளத்தில் என்ன குழப்பமோ பயமோ இருந்தாலும் அது முகத்தில் தெரியவில்லை. "மகாராஜா! எதற்கு அழைத்தீர்கள் என்னை?" என்று கேள்வியைத் தொடர்ந்தான் பணிவு நிறைந்த குரலில்.

சுந்தரபாண்டியன் சிறிது சிந்தித்துவிட்டுக் கேட்டான். "நீ வயோதிகன் ஆனதால் அரச குடும்பத்து ரகசியங்களை வெளியிடாதிருக்க முடியுமென்று நினைக்கிறேன்," என்று.

கிழவன் உள்ளத்தில் சிறிது சாந்தி நிலவியது. "முடியும்", என்றான்.

"அப்படியானால் ஒன்று கேட்கிறேன். நமது விடுதியில் நீ காவலிருக்கும் சமயங்களில் எதிர் விடுதியைப் பார்க்க முடியுமல்லவா?"



"முடியும்."

"இளநங்கையும், என் தம்பியும் விடுதிக்குப் பின்புறம் இராக்காலத்தில் செல்வதைப் பார்த்திருக்கிறாயா?"

"மகாராஜா!"

"உம்...பதில் சொல்லு, பயப்பட வேண்டாம்."

"எப்போதோ ஒருமுறை பார்த்திருக்கிறேன்."

"இல்லை. பலமுறை போயிருக்கிறான். நேற்றிரவும் போயிருக்கிறான்."

"இல்லை மகாராஜா."

"எப்படித் தெரியும் உனக்கு?"

"நேற்றிரவு நான்தான் இங்கு காவலிருந்தேன்."

"அதனாலென்ன?"

"அங்கு ஏற்கனவே இளவரசி காணாமல் போய் விட்டதால் அந்த விடுதியின் மீதும் கண் வைத்திருப்பேன். யாரும் விடுதியிலிருந்து செல்லவில்லை. தவிர..." என்று சொன்னதும் கிழவனுக்குப் பெரும் சந்தேகம் ஏற்பட்டது. "மகாராஜா! நேற்றிரவு வீரபாண்டியார் இங்கில்லையே வெளியே சென்றாரே" என்றான் குழம்பிய குரலில்.

"சென்றது உண்மை. பிறகு திரும்பிவிட்டான். நீ காவல் செய்கிற லட்சணமும் அந்த விடுதிமீது கண் வைக்கிற லட்சணமும் இதுதானா?" என்று சீறிய மன்னன், "சரி சரி! நீ போய் இளநங்கையை அழைத்து வா!" என்றும் உத்தரவிட்டான்.

கிழவன் திருதிருவென ஆந்தைபோல் விழித்தான். மன்னன் இட்ட விசித்திர ஆணையை நினைத்துக் கலங்கவும் செய்தான். இளநங்கை காணாத விஷயத்தை மற்றவர்கள் மூலம் மன்னன் அறியத் தான் போட்ட திட்டம் படுதூளாகி விட்டதையும், அதையும் தானே சொல்ல வேண்டி வந்த நிலையையும் நினைத்துக் குழப்பத்துடன் வெளியே சென்றான்.

பெருங்குழப்பத்துடன் மன்னனின் விடுதிப் படிகளிலிருந்து இறங்கி விடுதிக்கு மெல்ல மெல்ல

நடந்துசென்ற கிழவனுக்கு அந்த விடுதியிலும் ஓர் ஆச்சரியம் காத்திருந்தது. அவன் அந்த விடுதியின் படிகளில் ஏறிக்கதவைத் திறந்தவுடனேயே, "யார் அது?" என்ற அதட்டலான குரல் உள்ளிருந்து கேட்டது.

அந்தக் குரலைக் கேட்டு அசைவற்று நின்றுவிட்டான் கிழவன். அது இளநங்கையின் குரல்! அதில் எந்தவித ஆயாசமோ, அதிர்ச்சியோ இல்லை. அதைக் கேட்டுச் செயலற்று நின்றுவிட்ட கிழவனிருந்த இடத்துக்கு இளநங்கையே எழுந்து வந்தாள். அன்று அவள் புத்தம்புது உடை உடுத்தியிருந்தாள். கையிலும் ஒரு செண்பக மலரை வைத்துக்கொண்டு அதை முகர்ந்த வண்ணம் வெளியே வந்தாள்.

கிழவன் மனோநிலை விவரிக்க இயலாதிருந்தது. ஏதோ பிசாசைப் பார்ப்பதுபோல் அவளை வெறித்துப் பார்த்தான் கிழவன். "மன்னர்..." என்று சிறிது சிரமத்துடன் துவங்கினான்.

"என்ன மன்னருக்கு!" சர்வ சகஜமாக கேட்டாள் இளநங்கை.

"உங்களை அழைத்துவரச் சொன்னார்" என்றான் கிழவன்.

"ஏதாவது விசேஷமுண்டா?"

"தெரியாது."

மேற்கொண்டு கேள்வி ஏதும் கேட்காமல் அவனைப் பின் தொடர்ந்தாள் இளநங்கை. அவளை அழைத்துக் கொண்டு மன்னன் விடுதிக்குள் நுழைந்த கிழவன் மலைத்து நின்றான் வாயிற்படியில்.

"உள்ளே வா" என்ற மன்னன் குரல் அவன் கால்களை உள்ளிழுத்துச் சென்றது.

மன்னனுக்கருகில் வீரபாண்டியனும் உட்கார்ந்திருந் தான். அவர்களுக்கருகில் இருந்த இரண்டு ஆசனங்களில் ஒன்றில் இளநங்கை உட்கார்ந்தாள்.

"நீங்களும் உட்காருங்கள்" என்று வீரபாண்டியன் இன்னொரு மஞ்சத்தைக் கிழவனுக்குக் காட்டினான்.



"நான்..." என்று இழுத்தான் கிழவன்.

"யாரென்பது எனக்குத் தெரியும்" என்ற வீர பாண்டியன் உதடுகளில் புன்முறுவல் விரிந்தது. இடைக் கச்சையிலிருந்த ஒரு பதக்கத்தை எடுத்துக் கையில் வீர பாண்டியன் சுண்டிக் காட்டியதும், பெரும் பீதி கிழவன் உள்ளத்தைச் சூழ்ந்து கொண்டது. வீரபாண்டியன் கைகளில் வைத்து ஒருமுறைக்கிருமுறையாக அந்தப் பதக்கத்தைச் சுண்டிக் கையில் பிடித்தபோது, தனது உயிரையே அவன் பிடிக்கிறானென்பதைப் புரிந்துகொண்ட தால் பீதி பெரிதும் வளர்ந்தாலும், அதைக் கூடியவரை வெளிக்குக் காட்டாமல் அடக்கிக் கொண்டான் அந்த வயோதிகன். அது மட்டுமல்ல. அப்பொழுதும் ஏதும் அறியாதவன்போல் நடித்த கிழவன், "நீங்கள் சொல்வது விளங்கவில்லை. நான் யாரென்பது உங்களுக்குத் தெரியுமென்பதும் விசித்திரமில்லை. நான் மன்னர் விடுதியின் காவலன்," என்று கூறினான்.

இளவரசன், தன்னிடம் சிக்கிக்கொண்ட அந்தச் சமயத்திலும் கிழவன் தைரியத்துடன் உண்மையை மறைக்க முயல்வதைக் கண்டு ஆச்சரியம் மேலிட்டவனாய்ச் சொன்னான், "கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே!" என்று.

கிழவன் திடுக்கிட்டான். "என்ன சொல்கிறீர்கள்?"

வீரபாண்டியன் ஒரு விநாடி ஏதோ சிந்தித்தான். "நீங்கள் அந்தத் தாடியையும், மீசையையும் எடுத்து விட்டால் நாம் சௌகரியமாகப் பேசலாமல்லவா?" என்று கடைசியில் வினவினான்.

"இளவரசே!"

"பதற வேண்டாம். உங்களை முதலில் பார்த்தபோதே நான் புரிந்துகொண்டேன் உமது வேஷத்தை. பாம்பின் கால் பாம்பறியுமல்லவா? ஒரு வேவுகாரன் இன்னொரு வேவுகாரனைப் புரிந்துகொள்வது கஷ்டமா?" என்றும் கூறி நகைத்தான் வீரபாண்டியன்.

கிழவன் திக்பிரமை பிடித்து நின்றான்.

அத்தியாயம் 38

# பாண்டியர் விருந்து

**வீ**ரபாண்டியன் சொற்களால் திக்பிரமை பிடித்து நின்றுவிட்ட கிழவனைக் கண்ட சுந்தரபாண்டியன், எரிகிற கொள்ளியை ஏறத் தள்ளுவதுபோல், "வீரரே! அந்தத் தாடி மீசையை அகற்றி உமது வேஷத்தைக் கலைப்பது சுலபமல்ல வென்பதும், சிறிதுநேரம் பிடிக்குமென்பதும் எனக்குத் தெரியும். வேஷத்துக்கு உபயோகப்படும் அரிதாரத்தையும் காட்டுக்கள்ளிப் பசையையும் நீக்குவது எளிதல்ல. தவிர, இந்த வேஷமெல்லாம் நாள்தோறும் போடுவதும் கஷ்டம். பத்து நாட்களுக்கொருமுறைதான் கலைக்கலாம். பழைய காலத்தில் நீண்ட நாட்கள் அரசிலிருந்து வெளியேறிய மன்னர்கள் புறநாட்களில் மறைந்துறையவும், திரும்ப நாட்டுக்கு வந்து நகர சோதனை புரியவும் இத்தகைய மாறு வேஷங்கள் பயன்பட்டன. இப்பொழுது அதே வேடம்..." என்று கூறிய மன்னனை இடைமறித்த வீரபாண்டியன், "...படைத் தலைவர்களுக்கு உபயோகப்படுகிறது," என்றான்.

"அதுவும் வேவு பார்ப்பதற்கு," என்றான் மன்னன்.

"பெண்களைத் தூக்குவதற்கும் பயன்படுகிறது," என்று வீரபாண்டியன் தன் கருத்தை வெளியிட்டான்.

"கள்ளத்தனம்" என்று மன்னன் கடிந்துகொண்டான்.

"அதனால்தான் கள்ளர்கள் உதவி தேவையாயிருக்கிறது" என்றான் வீரபாண்டியன்.

"கள்ளர்களையும், வீரர்களையும் பிரிப்பது இந்தப் பகுதியில் கஷ்டமாயிருக்கிறது" என்றான் மன்னன்.

"அது மட்டுமல்ல..."

"வேறென்ன தம்பி?"



"சேரர்களையும் போசளரையும் பிரிப்பது கஷ்டம்."

"ஏனப்படி?"

"சேரர்களுக்காகப் போசளர்கள் எந்த ஈனமான தொழிலையும் செய்யத் தயாராயிருக்கிறார்கள்."

"பெண் திருடுவது உட்பட."

இப்படி அண்ணனும் தம்பியும் மாறி மாறிப் பேசப் பேசத் திகைப்பை உதறி எரிச்சலை அடைந்துவிட்ட கிழவன், "பாண்டிய மன்னரே!" என்று சீறினான் குறுக்கிட்டு.

பாண்டிய மன்னன் அதைக் கவனித்ததாகவே தெரியவில்லை. தம்பியை நோக்கியே சொன்னான் அவன், "தம்பி! வரவர உலகத்தில் எல்லாம் தலைகீழாகிக் கொண்டு வருகிறது" என்று.

"எப்படி அண்ணா?" என்று வினவினான் வீர பாண்டியன் மிகுந்த அக்கறையுடன்.

"உலகத்தில் கிழவன் குமரனாக விரும்புவதுதான் சகஜம்," என்று இழுத்தான் மன்னன்.

"ஆமாம்."

"குமரன் கிழவனாக விரும்புவதைக் கேட்டதுமில்லை; பார்த்ததுமில்லை."

"இப்பொழுது கேட்கிறோம். பார்க்கிறோம்."

"கேட்கிறோமா?"

"ஆம். கேட்காவிட்டால் எப்படிப் பார்க்க முடியும்?"

இதைக் கேட்ட மன்னன் நகைத்தான். வீரபாண்டிய னும் அந்த நகைப்பில் கலந்து கொண்டான். தீவிரமான சந்தர்ப்பத்தில், மகள் அபகரித்துச் செல்லப்பட்ட நிலையில், இருவரும் இவ்விதம் தன்னைப்பற்றிச் சுட்டிச் சிரித்துப் பேசியதைச் சகிக்க முடியாத கிழவன், "வீரபாண்டியரே! நகைப்பதற்கு இது சமயமல்ல," என்று கூவினான்.

அவன் முகத்தில் திகைப்பு அடியோடு மறைந்து சீற்றம் மண்டிக் கிடந்தது. அதைக் கவனித்த வீரபாண்டியன் அவனை நோக்கி நன்றாகத் திரும்பினான். "போசளப்

படைத் தலைவரே! இந்தக் குரலால்தான் நீர் கெட்டீர் இதை நான் வந்தவுடனேயே கேட்டேன். கிழவேஷம் போடுகிறவர், இருபத்தைந்து ஆண்டுக் குமரன் குரலில் பேசுவது பொருந்தாது பாருங்கள். வயதுக்குத் தக்க குரலை அமைத்துக்கொள்ளவேண்டும். வேவுப்பயிற்சியில் இது முதல்படி. இதைக் கூடப் புரிந்துகொள்ளாமல் நீர் எப்படி வேவுத்தொழிலில் ஈடுபட்டீர்? நவநந்தர்களை அழித்த சாணக்கியனின் சீடர்களும்தான் வேடந்தரித்தார்கள். ஆனால் இப்படி அகப்பட்டுக் கொள்ளவில்லை. காரணம் தெரியுமா?" என்று வினவினான் சர்வசாதாரணமாக.

போசளர் படைத்தலைவன் பதில் சொல்லவில்லை. அவன் முகத்தில் ஆத்திரமே சுடர் விட்டது. வீர பாண்டியனே தொடர்ந்து சொன்னான்; "அங்கே வேவு காரர்களை இயக்கியவன் பெரும் அறிவாளி, சாணக்கியன் இயக்கினான். அது மட்டுமல்ல. சாணக்கியன் முனிவன்; தர்மமறிந்தவன் பெண்களைத் தூக்கவும், கள்ளத்தனம் செய்யவும் அர்த்தசாஸ்திர அறிவை உபயோகப்படுத்த வில்லை. உம்மை இங்கு அனுப்பியவன் காமுகன். ஏற்கெனவே முத்தைக் களவு செய்தவன். அதுவே குற்றம். இப்பொழுது அரசகுமாரியையும் கடத்திச் சென்றிருக் கிறான். அது பயங்கரமான இரண்டாவது குற்றம். தர்மத்துக்கும் அவனுக்கும் சம்பந்தம் கிடையாது. பாண்டிய அரசகுமாரியின் உடலில் ஊசிமுனையளவுக்குத் தீங்கிழைத் தாலும் அவன் நாடு எரியும். அவனைக் கொல்லமாட்டேன். பிடித்து உயிருடன் பாண்டிய நாட்டுக் கழுகுகளுக்கு..." இதற்குமேல் வீரபாண்டியன் பேசவில்லை. இதைச் சொன்ன அவன் முகம் பேய் முகமாக மாறிவிட்டதைப் போசளர் படைத்தலைவன் கவனித்தான். வீரபாண்டி யனின் எழில்மிகுந்த நகைப்புச் சொட்டும் விழிகளில் பிணங்கொத்தும் கழுகுகளின் பார்வை படர்ந்துவிட்ட தையும் அவன் பார்த்தான். அதுவரை நடுங்காத அவன் உடலும் ஒருமுறை லேசாக நடுங்கியது. தன் கதி அதோகதிதானென்பதைத் தீர்மானித்துக்கொண்ட



போசளர் படைத்தலைவன் சிலையென நின்றான், இளவரசன் உக்ர அக்னியின் முன்னிலையில்.

ஆனால் திடீரென அந்த அக்னி அணைந்தது. வீரபாண்டியன் விழிகளில் மீண்டும் சாந்தம் நிலவியது. "படைத்தலைவரே! காவலர் இல்லம் சென்று உமது வேஷத்தைக் கலைத்து வாரும். பகல் போஜனவேளையின் போது மீதி விஷயங்களைப் பேசுவோம் உம்மிடம் நான் அறியவேண்டிய விஷயங்கள் சில இருக்கின்றன," என்றும் கூறி, அவன் செல்லலாமென்பதற்கு அறிகுறியாகக் கையையும் அசைத்தான்.

போசளர் படைத்தலைவன் சிறிது நேரம் அசைவற்று நின்றான். பிறகு திரும்பிச் செல்ல முற்பட்டான். அவன் நாலடி நடந்ததும், "சிங்கணா!" என்று வீரபாண்டியன் விடுத்த அழைப்பு அவன் நடையைச் சட்டென்று தேக்கியது. அவன் திரும்பி வீரபாண்டியனை நோக்கினான். "ஏன்?" என்று வினவவும் செய்தான்.

"அருவிக்கரைச் சுவர்ப் பகுதியிலும் காவலிருக்கிறது," என்று சுட்டிக் காட்டினான் வீரபாண்டியன்.

அவன் அதை எதற்காகச் சுட்டிக் காட்டுகிறானென் பதைப் புரிந்துகொண்ட சிங்கணன், "சரி," என்று மட்டும் சொல்லி மேலே நடக்கத் துவங்கினான்.

"இன்னொரு விஷயம்." வீரபாண்டியன் குரல் அவன் நடையை மீண்டும் தேக்கியது.

"என்ன?"

"நீங்கள் யாரென்பது பாண்டிய வீரர்களுக்குத் திட்ட மாகத் தெரியாது."

"சரி."

"இருப்பினும், நீங்கள் தப்ப முயன்றால் உடனடியாக என்னையோ, மன்னரையோ கேட்காமலே தக்கது செய்யும் படி வீரர்களுக்கு உத்தரவிட்டிருக்கிறேன்," என்ற வீரபாண்டியன், அவன் செல்லலாமென்பதற்கு அறிகுறி யாகத் தலையை அசைத்தான்.

'தக்கது,' என்று வீரபாண்டியன் குறிப்பிட்டது எது என்பதைச் சந்தேகமறப் புரிந்துகொண்ட சிங்கணன், மெல்ல மன்னன் விடுதிப் படிகளில் இறங்கிக் காவலர் அறைக்குள் சென்றதும் கதவைச் சாத்திக்கொண்டு கதவுக் கெதிரில் நின்று தனது வேஷத்தை கலைக்கத் தொடங்கினான். சற்று எட்ட இருந்த ஒரு பாத்திரத்திலிருந்து எண்ணெயை மெள்ள எடுத்துக் கன்னங்களிலும் முகவாய்க் கட்டையிலுமிருந்த தாடியிலும் அனாவசியமாகப் பெரிதாயிருந்த மீசையிலும் தடவினான். பிறகு எண்ணெயை ஆள்காட்டி விரலால் அழுத்தி அழுத்திச் சருமத்துக்குள் இறக்கிப் பொய் ரோமங்களை மெல்ல மெல்லப் பிய்த்து எடுத்தான். மாறுவேட சாத்திரப்படி அமைக்கப்பட்டிருந்த அந்தப் பொய்த்தாடி மீசைகளை எடுப்பது உண்மையில் பெரும் கஷ்டமாகவே இருந்தது சிங்கணனுக்கு. இருப்பினும் மெள்ளப் பொறுத்துக்கொண்டு வேடத்தை அறவே நீக்கிப் பழைய நிலைக்குத் தனது முகத்தைக் கொண்டுவந்த சிங்கணன், தனது வாலிப முகத்தைப் பார்த்து மகிழ்ச்சிப் பெருமூச்சு விட்டான். 'சே சே! வீரனுக்கான வேஷமல்ல நான் போட்டது. இந்த முகத்தைப் போயும் போயும் சேரனுக்காக நான் ஏன் வீணாக அடித்துக் கொண்டேன்?' என்றி சிறிது அலுத்துக்கொள்ளவும் செய்தான். பிறகு முகத்தை நன்றாகச் சுகந்தப் பொடிகளைக் கொண்டு கழுவினான். பிறகு நீராடும் உத்தேசத்துடன் அருவியை நோக்கிச் சென்றான்.

நீராடும் உத்தேசத்துடன் அறையைவிட்டு வெளியே வந்து காவலர் விடுதியிலிருந்து கிழிறங்கிய சிங்கணன் கோட்டைப் பகுதியைச் சுற்றுமுற்றும் பார்த்தான். எங்கும் காவல் பலமாயிருந்தது. கிழவனாக உள்ளேசென்று குமரனாக வெளியே வந்த சிங்கணன், காவல் புரிந்துகொண்டு புரவிகளை இழுத்து நடந்தும், ஈட்டிகளையும் வாட்களையும் கூர்பார்த்துக்கொண்டும் பலவித அலுவல்களில் ஈடுப்பட்டிருந்த வீரர்கள் தன்னைக் கவனித்தாலும், அதை எள்ளளவும் காட்டிக்கொள்ளாமல் கவனிக்காதவர்கள்



போலவே நடந்துகொண்டதைக் கவனித்தான். தான் காவலர் விடுதியிலிருந்து கோட்டைக்குக் குறுக்கே நடந்த போதோ, இளநங்கை விடுதியைச் சுற்றி அருவியை நோக்கிச் செல்ல முயன்ற போதோ, யாரும் தன்னைக் கவனிக்காதது போல் தோன்றினாலும் அத்தனைக் கண்களும் தன்னைக் கவனிக்கின்றன வென்பதைச் சந்தேகமறப் புரிந்துகொண்ட சிங்கணன், பாண்டிய சகோதர்கள் படைகளை நிர்வகிக்கும் திறமையை எண்ணிப் பெரிதும் வியந்தான். தான் உறங்கிய மூன்றரை ஜாமத்துக்குள் வீரபாண்டியன் கோட்டைப்புறம் முழுவதையும் தன்னைப் பற்றி எச்சரித்தது எப்படிச் சாத்தியம் என்று எண்ணி ஏதும் புரியாமல் பிரமித்த சிங்கணன் அந்தப் பிரமிப்புடனேயே அருவியில் நீராடினான். பிறகு மீண்டும் தனது அறைக்குள் வந்து திலகமிட்டு, படைத்தலைவனுக்குரிய ஆடைகளையும் பெரு வாளையும் அணிந்து கம்பீர நடை நடந்து மன்னன் விடுதிக்குச் சென்றான்.

மன்னன் விடுதியை அவன் அடைந்தபோது நல்ல உச்சிவேளை, கதிரவன் உஷ்ணம் மிக அதிகமாயிருந்தது. அந்தக் கோட்டைப் பகுதிகளில் மலைப்பாறைகள் உஷ்ணத்தை வாங்கி விசிறியதன் விளைவாக, அத்தனை வெப்பத்தையும் லட்சியம் செய்யாமலும், தண்டனை எதுவாயிருந்தாலும் ஏற்றுக்கொள்ளும் திடசித்தத்துடனும் மன்னர் விடுதியில் நுழைந்த சிங்கணன், உள்ளேயிருந்த ஏற்பாட்டைக் கண்டு திகைத்தான். பஞ்சணையில்லாத மர மஞ்சத்தில் மன்னன் அமர்ந்திருந்தாலும், பெரும் மன்னனைப்போல் தன்னை வரவேற்க ஏற்பாடு பலமாயிருந்ததைப் போசளர் படைத்தலைவன் கவனித்தான். மன்னன் மஞ்சத்தை அடுத்த இரண்டு மஞ்சங்கள் விலைஉயர்ந்த பாண்டிய நாட்டு விரிப்புகளால் மூடப்பட்டிருந்தன. இடையே இருந்த மற்றொரு மஞ்சத்தில் தங்கத் தட்டுகளில் உணவு வகைகள் பரிமாறப் பட்டிருந்தன. காவலர் மூவர் பொற்கிண்ணங்களைத் தாங்கி மேலும் பரிமாறத் தயாராக நின்றார்கள்.

இதையெல்லாம் கவனித்துப் பிரமித்த சிங்கணனை, "வாருங்கள் அமருங்கள்" என்று உபசரித்த வீரபாண்டியன், அவன் அமர்ந்ததும் தானும் ஒரு மஞ்சத்தில் அமர்ந்து கொண்டான். பிறகு போஜனம் பரிமாறப்பட்டதும் மன்னனனுடனும் இளவரசனுடனும் அவனும் உணவருந்தினான். உணவு உள்ளே செல்வது பெரும் கஷ்டமாயிருந்தது போசளர் படைத்தலைவனுக்கு. பெரும் விபரீதத்துக்கு முன்னோடி என்பதைப் புரிந்துகொண்டதால் ஏதோ ஒப்புக்கு ஓரிருகவளம் அன்னத்தையும் இரண்டு பழங்களையும் உண்டு நீரருந்தினான். ஆனால் மன்னனோ, வீரபாண்டியனோ எதைப் பற்றியும் யோசிக்காமல் நன்றாக உணவருந்தியதையும், சில வேளைகளில் இருவரும் சில பதார்த்தங்களைக் குறிப்பிட்டு ரசித்துப் பேசியதையும் கண்ட சிங்கணன் அவர்கள் மனோநிலையை நினைத்துப் பெரிதும் ஆச்சரியப் பட்டான். இருவரும் உணர்ச்சியற்ற மரக்கட்டைகளாயிருந்தாலொழிய, பெண்ணும் போய, போரும் துவங்கவிருக்கும் நிலையில் உணவை ரசித்து அருந்த முடியாதென்று தனக்குள் சொல்லிக்கொண்டதன்றி அவர்களை வெறுப்புடன் நோக்கினான். அதுமட்டுமின்றி தன் நிலையில் அவர்களில்லையென்பதையும் புரிந்து கொண்டான். பலியிடுவதற்கு முன்பு ஆட்டுக்கு எப்படி உணவளித்து உபசாரம் செய்வார்களோ அப்படித் தனக்கு உபசாரம் நடக்கிறதென்பதை அறிந்துகொண்ட சிங்கணன், பொற் பாத்திரத்தில் கை கழுவி மஞ்சத்தில் மல்லாந்து உட்கார்ந்து கொண்டான்.

பாண்டிய சகோதரரிருவரும் நிதானமாக உண்டு முடித்துக் கைகழுவி வீரர்கள் நீட்டிய பட்டுத் துண்டுகளில் கைவாய் துடைத்த பின்பு வீரர்கள் போஜனத் தட்டுக்களை எடுத்துச் சென்றார்கள். அதற்குப் பிறகு வீரபாண்டியன் போசளனை நோக்கித் திருப்பிக் கேட்டான், "படைத்தலைவருக்கு உணவு திருப்திதானே?" என்று.



"பாண்டியர் விருந்தைக் குறை சொல்ல முடியுமா?" என்று கேட்டான் சிங்கணன் தைரியத்துடன்.

அவன் தைரியத்தை வீரபாண்டியன் மட்டுமல்ல ஜடாவர்மனான சுந்தரபாண்டியனும் மெச்சினான். வீரபாண்டியன் மெச்சியதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் அசைத்தான். "உங்கள் பாராட்டுதலுக்கு நன்றி," என்று மன்னன் வாய்விட்டுச் சொன்னான்.

அடுத்த விநாடி வீரபாண்டியனின் கழுகுக் கண்கள் சிங்கணனை நோக்கின. "பாண்டியர் விருந்தைக் குறை சொல்ல முடியாதென்றீர்கள் சிங்கணரே! நீர் ஒழுங்காக நடந்துகொண்டால், பாண்டியர் நீதியையும் குறைசொல்ல முடியாது. நீர் இந்தக் கோட்டையிலிருந்து உயிருடன் வெளியே செல்வதா இல்லையாவென்பது உம்மையே பொறுத்திருக்கிறது. நான் சொல்வதைக் கவனமாய்க் கேளுங்கள்," என்ற அவன் சொற்கள் மிகுந்த கம்பீரத் துடனும் திட்டமாகவும் ஒலித்தன. திடீரென அவன் குரலில் ஏற்பட்ட மாறுதல் சிங்கணனுக்கும் சிறிது அச்சத்தை விளைவித்தது. ஆனால், அவன் சொற்கள் தொகுத்த கதை வியப்பின் உச்சிக்குக் கொண்டு சென்றது சிங்கணனின் சித்தத்தை.

## அத்தியாயம் 39

# வீரபாண்டியனின் விவரணம்

**சி**ங்கத்தின் குகைக்குள்ளேயே புகுந்து விளையாட முற்படுபவனைப்போல், பாண்டியன் கோட்டைக்குள்ளேயே வந்து வேவுத் தொழிலும், கன்னியைத் திருடும் கள்ளத் தொழிலும் புரிந்தவனும், நேருக்கு நேர் அகப்பட்டுக் கொண்ட தருணத்திலும் அச்சத்தை உதறிவிட்டவனுமான சிங்கணனின் சித்தத்தையே உளைக்கும் சீரிய குரலில் சொன்னான் வீரபாண்டியன். "நான் சொல்வதை நன்றாய்க் கேளுங்கள் சிங்கணரே! தவறு ஏதாவதிருக்கும் பட்சத்தில் சிறிதும் தயங்காமல் திருத்துங்கள். பாண்டியர் அரியணையில் எனது சகோதரர் சுந்தரபாண்டியத்தேவர் ஏறிச் சில மாதங்களுக்குள்ளாகவே பெரும் வல்லரசுகள் பாண்டிய நாட்டின் மீது பார்வையைத் திருப்பலாயின. பாண்டிய நாட்டில் மன்னர் முடிசூடிய சில மாதங்களுக்குள்ளாக நடந்த வீர விளையாட்டுப் போட்டிகளும், அவ் வகுப்புகளும் பாண்டியர் எழுச்சிக்கு அறிகுறிகள் எனத் தவறாகப் பொருள் கொள்ளப்பட்டன. அவர் முடிசூடிய இரண்டாம் ஆண்டிலேயே பாண்டிய நாட்டுக்குப் படை திரட்டப் பயன்படும் ஒரே செல்வமான முத்து பெருமளவில் மறையவும் தொடங்கிற்று. முதலில் அது சாதாரணக் களவென்று தீர்மானித்தோம். பிறகுதான் அதில் அரசுகள் சம்பந்தப்பட்டிருப்பது தெரியவந்தது. பாண்டிய நாடு பிழைத்திருக்க வேண்டுமானால் களவு போன முத்தைத் திரும்பப் பெறுவதும், மேற்கொண்டு முத்துக்களவைத் தடுப்பதும் அவசியமாயிற்று. அதை முன்னிட்டுப் புலன் விசாரிக்க என்னையும், தன் மகள் முத்துக்குமரியையும் பாண்டிய மன்னர் கொற்கைக்கு



அனுப்பினார். அங்குதான் சேரன் முத்தைக் களவு செய்ததும், அவனுக்குச் சிங்களமன்னன் உதவியதும் தெரிந்தது. பாண்டியர்களைத் தலையெடுக்காமல் அடிக்க இரண்டு நாடுகள் முயல்வதை அங்கு அறிந்தேன். இங்கு வந்தபின் சேரன் துவக்கியுள்ள சிறந்த பணியில் போசளரும் சேர்ந்திருப்பதை உணர்ந்தேன். அந்த உணர்வு முதலில் இல்லை எனக்கு. ஆனால் இது அறிவித்தது."

இதைச் சொல்லி, கச்சையிலிருந்து முந்திய நள்ளிரவு காட்டுப் பாதையில் எடுத்த பதக்கத்தை நீட்டினான் சிங்கணனிடம். "இந்த வீரப் பதக்கத்தில் போசள மன்னன் முத்திரை இருந்ததைக் கவனித்ததும் நான் பிரமித்தேன். கன்னட நாட்டில் இருக்கவேண்டிய போசளரும், பாண்டிய நாட்டைச் சீரழிக்கப் புகுந்துவிட்டார்கள் என்பதைப் புரிந்துகொண்டேன். தவிர இத்தகைய வீரப்பதக்கம் எல்லோருக்கும் அளிக்கப்படுவதல்ல. சிறந்த வீரத்தொழில் புரிவதற்கே அளிக்கப்படுவதாதலால் பெருவீரன் யாரோ முத்துக்குமரியின் களவில் சம்பந்தப்பட்டிருக்கிறானென் பதை அறிந்துகொண்டேன்," என்ற வீரபாண்டியனை இடைமறித்த சிங்கணன் கேட்டான். "பதக்கம் வழியில் கிடந்ததைக் கொண்டு பதக்கத்துக்குடையவன் களவில் சம்பந்தப்பட்டிருக்கிறானென்று எப்படிச் சொல்ல முடியும்?" என்று.

வீரபாண்டியனின் விழிகள் யோசனையுடன் தரையில் தாழ்ந்தன. அவன் முகத்திலிருந்த சிற்றங்கூட மறைந்து விட்டது. அடுத்த சில விநாடிகளில் அவன் சொற்கள் நிதானமாகவும் விஷயத்தைச் சர்ச்சை செய்யும் தர்க்க வித்வானின் குரலிலும் வெளிவந்தன. "பதக்கம் சாதாரண நிலையில் விழுந்திருந்தால் இத்தகைய அனுமானத்துக்கு இடமில்லை. ஆனால் பதக்கம் இரண்டு கற்களுக்கிடையில் அழுந்திக் கிடந்தது. அதன் கூரிய முனை என் புரவியில் காலில் இடறி, புரவி மலைப்பாதையைக் கீறியிரா விட்டால் அதை நான் பார்த்தேயிருக்க மாட்டேன். ஏதோ சண்டை ஏற்பட்டு அதில் பதக்கம்

சிதறி நீண்டதூரம் போய் விழுந்திருக்கிறது. நடக்கும்போது கச்சையிலிருந்து தவறி விழும் பதக்கம் ஏதாவது ஒருபுறமாக விழுந்திருக்குமே தவிர வேகத்துடன் இருகற்களுக்கிடையில் வந்து சிக்கியிருக்காது. அதுமட்டுமல்ல. இந்தப் பதக்கத்தின் ஒரு புறம் நன்றாக வளைந்துமிருக்கிறது," என்று சுட்டிக் காட்டினான் வீரபாண்டியன்.

"அதனால்?" சிங்கணன் குரலில் வியப்பு இருந்தது.

"புரவியின் குளம்புக்குடியிலும் இது சிக்கியிருக்கிறது. அதுமட்டுமல்ல, முதல் நாள் குருதி பாய்ந்த என் கோடரி கிடந்த அதே இடத்துக்குச் சற்றுத் தூரத்திலேயே இதுவும் கிடந்தது. அதிலிருந்து ஊகித்துக்கொண்டேன் முத்துக் குமிரியை நீங்கள் சுலபமாகத் தூக்கிச் செல்ல முடிய வில்லை என்று. அதுமட்டுமல்ல, என்ன நடந்ததென்பதையும் நான் திட்டமாகச் சொல்லவும் முடியும், கேளுங்கள்," என்ற வீரபாண்டியன் நேரில் பார்த்ததைப் போல் விஷயங்களை விவரிக்கவும் தொடங்கினான். "எந்த நிலைமையிலும் முன் கூட்டி ஆராயக்கூடிய சேரமன்னன் எப்படியோ உம்மைப் பாண்டியர் படையில் சேரவிட்டிருக்கிறான். பாண்டியர் உடையில் சேரரும், சேரர் வேஷத்தில் பாண்டியரும் ஒருவரையொருவர் வேவு பார்க்க முயலுவது இப்பொழுது சில நாட்களாகவே நடந்துவரும் விவகாரம். அந்த நல்ல முறையின் பயனாக நீர் கொட்டுந்தளத்திலேயே எங்கள் படையில் சேர்ந்திருக்கிறீர்.." என்ற வீரபாண்டியன் பேச்சில் மீண்டும் குறுக்கிட்ட சிங்கணன், "கொட்டுந் தளத்திலா?" என்று வினவினான்.

"ஆம். இது சிறு கோட்டை. இந்த இடத்தில் படை சேர்க்கும் முயற்சி ஏதும் நடக்கவில்லை. யாரும் சேர்க்கப் படவும் இல்லை. ஆகையால் நீங்கள் சேர்ந்திருந்தால் கொட்டுந்தளத்தில்தான் சேர்ந்திருக்கவேண்டும். அதுவும் சேரர் வேடத்தில் சிவிகைகளைக் கொண்டுவந்த கூட்டத்தில் நீரும் சேர்ந்திருக வேண்டும்," என்று வீரபாண்டியன் சிங்கணனை ஏறெடுத்து நோக்கினான்.

சிங்கணன் உதடுகள் வியப்பால் விரிந்து கிடந்தன. வீரபாண்டியன் சொன்னது முற்றிலும் சரியாயிருந்ததைக்



கண்டு பிரமித்தான் அவன். வீரபாண்டியன் அந்தப் பிரமிப்பைக் கவனித்துவிட்டு, "இதில் பிரமிப்பதற்கு எதுவும் இல்லை. கொட்டுந்தளம் ஒன்றுதான் அடிக்கடி கை மாறியிருக்கிறது. அங்குதான் சேரமன்னனும், இந்திரபானுவும் ரகசியமாக ஆள் சேர்க்க முற்பட்டிருக்கிறார்கள். உளவு ஆள் நுழைய வேண்டுமானால் இடம் அது ஒன்றுதான். ஆகவே வேவுகாரன் யாராயிருந்தாலும், அவன் அங்குதான் சேர்ந்திருக்க வேண்டுமென்று தீர்மானித்தேன். அப்படிச் சேரனால் தூண்டப்பட்டுக் கொட்டுந்தளத்திலேயே இந்திர பானுவுடன் சேர்ந்துவிட்ட நீர் இங்கு வந்ததோ, மன்னர் விடுதிக்குக் காவலனாக மாறியதோ பெரும் வியப்பல்ல. அப்படி இங்கு வந்து புகுந்த பிறகு சேர மன்னன் கையிலிருந்து தப்பிவிட்ட முத்துக்குமரியையும், இளநங்கையையும் சேரனிடம் திரும்பவும் சேர்க்க முற்பட்டீர். இந்த மலைப்பகுதிகள் சேரநாட்டுக்கும், பாண்டிய நாட்டுக்கும் எல்லையாயிருப்பதாலும், இங்கு சேர வீரர்கள் நடமாட்டம் அதிகமாகையாலும், கோட்டை அவர்கள் பார்வையில் சதா இருப்பது சகஜமாகையாலும் இங்கிருந்து அவர்களுடன் தொடர்பு கொண்டீர். ஆனால் நீர் கையாண்ட முறை மிகப் பழைய முறை. விளக்கை அசைக்கும் முறை பழைய முறை. அதனால் வந்த விபரீதம் தான் உமது நிலை" என்று விளக்கிய வீரபாண்டியன், மேலும் சொன்னான்: "இங்கு வந்தது முதல் நீர் முத்துக்குமரியும், இளநங்கையும் தங்கிய விடுதி மேல் கண் வைத்திருக்கிறீர். இந்திரபானுவும் பாண்டிய குமரியும் அருவிக்கரை சென்றதைப் பார்த்திருக்கிறீர். இந்திரபானு அரசர் உத்தரவால் கோட்டையைவிட்டு வெளியே சென்ற தினம். இந்திரபானுவுக்கு பதில் நீர் அவளைச் சந்தித்து மறுநாள் அருவிக்கரை வரும்படி இந்திரபானு சொன்னதாகக் கூறியிருக்கிறீர். முத்துக் குமரியைக் கடத்த அருவிக்கரையே சிறந்த இடம் என்பதை நீர் அறிந்து கொண்டீர். காதலர்களுக்கு அது மறைவிட மானால், கள்வர்களுக்கும் அது தகுந்த இடமென்பதை உணர்ந்து கொண்டீர். முத்துக்குமரியை அங்கு சந்தித்து மறுநாள் இந்திரபானு அங்கு வருவதாகச் சொன்ன பிறகு

அவள் விடுதிக்குச் சென்றாள். ஆனால் நீர் அந்த இடத்திலிருந்து மரத்தடியிலிருந்த விளக்கை எடுத்து ஏற்றி நேற்றுப் போல் அதற்கு முந்திய நாளுக்கு முந்திய நாளும் அடையாளம் காட்டி உமது நண்பர்களை அழைத்திருக்கிறீர். வந்த நண்பர்களிடம் முத்துக்குமரியை அபகரிக்கும் திட்டத்தை விளக்கியிருக்கிறீர். மறுநாளும் விளக்கசைத்து, சமயத்தை அறிவிப்பதாகக் கூறியிருக்கிறீர். திட்டப்படி காரியம் நடந்தது. உமது ஏற்பாட்டின்படி முத்துக்குமரி மறுநாள் அதே அருவிக்கரையில் இந்திர பானுவுக்காகக் காத்திருக்கிறாள். அருவி மதகு மூலம் உள்வந்த கள்வனொருவன் அவளைப் பின்புறம் அணுகி வாயைப் பொத்தியிருக்கிறான். அதற்குமுன்பே அவளைத் தொடர்ந்து வந்து மரத்து நிழலில் நின்ற நீரும் அவளை அணுகி வாயில் துணியடைத்துத் தூக்க முற்பட்டிருக்கிறீர். ஆனால் முத்துக்குமரியை அத்தனை எளிதில் தூக்கமுடிய வில்லை. அவள் திமிறியிருக்கிறாள். சண்டையிட்டிருக் கிறாள். அருவிக்கரை கூழாங் கற்கள் சண்டைக்கு அடையாளமாகச் சிதறியிருக்கின்றன. இராக்காலமானதால் மதகில் மூழ்கி வந்தவன் உடையும் நிரம்ப நீரை மதில் பக்கத்தில் சொட்டியிருந்தது. ஆகவே சண்டை அருவிக்கரைப் பாறையருகிலிருந்து மதில் சுவர்வரை நடந்திருக்கிறது. முத்துக்குமரி கள்வனிடமிருந்தும் உம்மிடமிருந்தும் இருமுறை திமிறி ஓடியிருக்கிறாள். இருந்தும் இரு ஆடவர்கள், அவர்களிலொருவர் பெரும் படைத் தலைவர், இவர்களிடமிருந்து தப்ப அவளால் முடியவில்லை. ஆகவே தனது ஆபரணப் பெரு முத்தொன்றைக் கழற்றி வீசியெறிந்துவிட்டாள் முத்துக் குமரி. அந்த முத்தும், கிள்ளுக் கம்பியும் எனக்கு அகப்பட்டன. அவை விடுத்த செய்தியைப் புரிந்து கொண்டேன். பிறகுதான் கோட்டையில் இருந்தவர்களைக் கவனித்தேன். அப்பொழுதும் உம்மீது சந்தேகம் இல்லை எனக்கு. ஆகவே, நான் வந்தபோது வழியில் குருதி பாய்ந்த என் கோடரி கிடந்த இடத்துக்குச் சென்று ஆராய்ந்தேன். அந்த இடத்தில் நடந்தது என்னவென்பதும் எனக்குப்



புரிந்தது..." இந்த இடத்தில் சிறிது நேரம் வீரபாண்டியன் பேச்சை நிறுத்தினான்.

சிங்களன் முகத்தில் பயத்துக்குப் பதில் வியப்பு விரிந்து நின்றது. அவன் வாயிலிருந்து "உம்," என்ற சொல் மட்டும் வெளிவந்தது.

வீரபாண்டியன் தீவிர சிந்தனையில் இறங்கி நடந்ததை நேரில் பார்த்தவன்போல் பேசினான். "அருவியிலிருந்து மதில்மேலாக முத்துக்குமரியைத் தூக்கிக் கொடுத்த பிறகு நீரும் காவலர் இல்லம் திரும்பவில்லை. திரும்பி வந்து உமது புரவியை எடுத்துக்கொண்டு மன்னர் ஆணையிட்டதாகச் சொல்லி, கோட்டையைவிட்டு வெளியே சென்றிருக்கிறீர். மலைப்பாதையில் நீர் முத்துக் குமரியைத் தூக்கிச் சென்ற கள்வர்களைக் கலந்துகொண்டு, சேர வீரர்களிடம் முத்துக்குமரியைச் சேர்ப்பிக்க முற்பட்ட சமயத்தில் மீண்டும் சண்டை நடந்திருக்கிறது. முத்துக்குமரி எப்படியோ மறுபடியும் திமிறியிருக்கிறாள். இடையில் மறைத்து வைத்திருந்த எனது பொற்கோடரியை எடுத்து வீசியிருக்கிறாள். அந்த வீச்சில் ஒருவன் படுகாயப்பட்டிருக் கிறான். அவன் கோடரியைப் பிடுங்கி எறிந்துவிட்டு முத்துக் குமரியைத் தூக்கிச் சென்ற வீரர்களுடன் போயிருக்கிறான். அங்கிருந்த அவசரத்தில் எப்படியும் சீக்கிரம் கோட்டை திரும்ப வேண்டுமென்ற பயத்தில் நீர் அந்தக் கோடரியை எடுக்கக்கூட முயலவில்லை. வேகமாக உமது புரவியில் திரும்பிவிட்டீர். யாருக்கும் தெரியாமல் நீர் காரியத்தை முடித்துவிட்டதாக மனப்பால் குடித்தீர். இந்திரபானுவும் காணாமற் போய்விட்டதால் கோட்டையின் கவனமும் உம்மீது திரும்பவில்லை. உண்மையில் என் சகோதரரும் இந்திரபானுவையே சந்தேகித்தார்," என்ற வீரபாண்டியன் "என்ன அண்ணா?" என்று வினவினான்.

சுந்தரபாண்டியன் முகம் சர்வ சாதாரணமாயிருந்தது. பெண் அபகரிக்கப்பட்ட அந்த நிலையிலும், அபகரித்தவன் எதிரே உட்கார்ந்திருந்த அந்தச் சந்தர்ப்பத்திலும், மன்னன்

எந்த உணர்ச்சியையும் காட்டவில்லை. "ஆம்," என்று ஒரே வார்த்தையை மட்டுமே சொன்னான்.

"பார்த்தீர்களா சிங்கணரே! நீர் எல்லோரையும் ஏமாற்றிவிட்டீர். சந்தர்ப்பங்களும் உமக்கு அனுகூலமாயிருந்தன. ஆனால், இருவரை நீர் ஏமாற்ற முடியவில்லை," என்றான் வீரபாண்டியன்.

"இருவர் யார்?" இக் கேள்வியைக் கேட்ட சிங்கணன் குரல் வறண்டு கிடந்தது.

"ஒருவன் இந்திரபானு; இன்னொருவன் நான்," என்றான் வீரபாண்டியன்.

"இந்திரபானுவா!" சிங்கணன் வாயைப் பிளந்தான் வியப்பால்.

"ஆம். விளக்கு அசைத்து அடையாளம் காட்டுவது பழையமுறை என்று சொல்லவில்லையா? பழையதில் பலமும் இருக்கிறது பலவீனமும் இருக்கிறது. இது பலவீனமுள்ளது. முத்துக்குமரியை அபகரித்த தினத்தில், உமது சகோதரக் கள்வர்களை அழைக்க நீர் விளக்கு அசைத்த சமயத்தில் வெளியே மன்னர் அலுவலாகச் சென்றிருந்த இந்திரபானு கோட்டையை நெருங்கி வருகிறான். விளக்கு அசைவைக் கண்டதும் அது அருவிக்கரைப்பகுதி என்பதை உணர்ந்து, கோட்டைக்குள் விரைந்து வந்து புரவியைக் கொட்டடியில் கட்டிவிட்டு அருவிக்கரைக்கு விரைகிறான். அங்கே எதுவும் தெரியாததால் மதில் கவர்ப்பக்கம் பார்க்கிறான். நனைந்த உடையிலிருந்து கொட்டிய நீரைப் பார்த்ததும் மதிலேறி அடிச்சுவடுகளைப் பின்பற்றிப் போகிறான். முத்துக்குமரி பத்துப் பதினைந்து சேர வீரர்களிடையே திமிறுவதை மலைப்பாதையில் பார்க்கிறான். சண்டை அங்கு பயனற்றது என்பதை அறிந்து, முத்துக்குமரியைச் சேரர்கள் தூக்கிச் சென்ற பக்கமே அவனும் தொடர்ந்து செல்கிறான். இப்பொழுது முத்துக்குமரி இருக்குமிடத்தில் இந்திரபானுவும் இருக்கிறான். ஆகவே முத்துக்குமரிக்கு எந்த ஆபத்துமில்லை. இனி அவளைவிட்டு இளநங்கையின் விவகாரத்துக்கு வருவோம்



இங்கு நான் சொல்லவேண்டியது அதிகமில்லை. நான் உமது பதக்கத்தைப் பார்த்ததும் அங்கிருந்த அடிச்சுவடுகளைக்கொண்டு பக்கப்பாதையில் சென்றேன். உமக்கும் கள்வர்களுக்கும் நடந்த சம்பாஷணையைக் கேட்டேன். அங்கு ஒலித்த உமது குரலிலிருந்து உமது போலி வேடத்தைப் புரிந்துகொண்டேன். தவிர இளநங்கையை நீர் மயக்கமுறச் செய்து தூக்கிவரப் போட்ட திட்டத்தையும் கேட்டேன். என் வழி முறையை நான் வகுத்துக் கொண்டேன். நீர் திருப்தியுடன் உறங்கச் சென்றதும் எனது ஏற்பாட்டின்படி காரியங்கள் நடந்தன," என்றான் வீரபாண்டியன்.

"என்ன ஏற்பாடு அது? என்னை ஏன் அருவிக் கரையில் சிறை செய்யவில்லை?" என்றான் சிங்கணன்.

"உம்மைச் சிறை செய்திருந்தால் உமது தோழர்கள் என்னிடம் சிக்கியிருக்கமாட்டார்கள்."

"கள்வர்களா?"

"இல்லை. பாண்டியர் பெண்களைச் சேரநாடு கொண்டு செல்ல சதா மலைப்பாதைக்கருகே காட்டுப் பகுதியில் மறைந்துறையும் சேரநாட்டுச் சிறுபடை."

"என்ன?" சிங்கணன் குரலில் அச்சம் ஒலித்தது.

"நீர் கோட்டைக்குள் வந்ததும் இங்குள்ள ஐம்பது வீரர்களை நீர் நேற்று கள்வர்களைச் சந்தித்த இடத்துக்கு அனுப்பினேன். அங்கிருந்த சுமார் எழுபத்தைந்து சேர வீரர்கள் அணுகுவது யாரென்பதை உணரு முன்பே வளைத்துக் கொல்லப்பட்டார்கள். இளநங்கையைக் கள்வர்களிடமிருந்து பெற சேர வீரர்களுக்குப் பதில் பாண்டியர் வீரர்கள் அங்கு காத்திருந்தார்கள். அதனால் இளநங்கையும் கிடைத்தாள். உமது ஏற்பாட்டின்படி கள்வர்களுக்காக சேரவீரர் கொண்டு வந்திருந்த பொன் முடிப்பும் கிடைத்தது," என்ற வீரபாண்டியன், "ஆனால் அந்த முடிப்பிலிருந்தது பொற்காசுகளல்ல; முத்துக்கள். அதுவும் எங்களிடமிருந்து திருடப்பட்ட முத்துக்களில் கடுகளவு," என்று கூறினான்.

சிங்கணன் முகத்தில் கிலி படர்ந்தது. "அத்தனை சேர வீரர்களும் கொல்லப்பட்டார்களா?" என்றான்.

"ஆம்."

"பயங்கரக் கொலை, சண்டையை எதிர்பாராத வீரர்களைச் சூழ்ந்து கொல்வது போருமல்ல, வீரமுமல்ல," என்றான் சிங்கணன்.

"திருடர்களிடம் மன்னர்கள் போரிடுவது தர்ம சாத்திர வழக்கமல்ல. திருடர்களைப் பிடிப்பது, கொல்லுவது, இது தான் வழக்கம்!"

"அப்படியானால் எனக்கும் அந்தத் தண்டனை தானா?"

"அது உம்மைப் பொறுத்திருக்கிறது."

"என்னைப் பொறுத்திருக்கிறதா?" என்று பிரமிப்புடன் கேட்டான் சிங்கணன்.

"ஆம்."

"நான் என்ன செய்ய வேண்டும்?" என்று மீண்டும் சந்தேகத்துடன் வினவினான் சிங்கணன்.

செய்ய வேண்டியதைச் சொன்னான் வீரபாண்டியன். சிங்கணன் முகத்தில் திகில் பெரிதாகப் படர்ந்தது. "அதை விட என்னை நீங்களே கொன்றுவிடலாமே!" என்று வெறுப்பும் சோகமும் சொட்டிய குரலில் பதிலிறுத்தான்.

## அத்தியாயம் 40

# போர்க் கவிதை

சிங்கணன் கோட்டையிலிருந்து உயிருடன் வெளியே செல்லவேண்டுமானால் என்ன செய்ய இணங்க வேண்டுமென்பதை வீரபாண்டியன் எடுத்துச் சொன்னபோது அவன் முகத்தில் உணர்ச்சிப் பெருக்கு இல்லை. வீரபாண்டியனின் கண்களிலும், அவன் உட்கார்ந்திருந்த தோரணையிலுங்கூட அமைதியே நிலவிக் கிடந்தது. முகத்தில் சீற்றமில்லை; கண்களில் அந்தக் கழுகுப் பார்வை யில்லை. உடல் இரும்பாக இறுகவில்லை.

பரம அமைதியுடன் சிங்கணன் தப்புவதற்கான நிபந்தனையை எடுத்துச் சொன்னான் பாண்டிய நாட்டு இளவரசன். ஆனால் அதைக் கேட்ட சிங்கணன் மனத்தில் அச்சம் பெரிதும் நிலவியது. வீரபாண்டியனின் அத்தனை அமைதிக்குப் பின்னால் பெரும் வஞ்சமும், விஷமமும் இருக்கிறதென்று தீர்மானித்த சிங்கணன் என்ன பதிலுரைப்பது என்று தெரியாமல்கூட நீண்ட நேரம் விழித்தது விழித்தபடியே உட்கார்ந்து விட்டான். வீரபாண்டியன் பேச ஆரம்பித்த போதிருந்த நிலை அவன் பேச்சை முடித்தபோது இல்லை சிங்கணனுக்கு.

உண்மையில் தேனொழுகும் குரலில் தனது நிபந்தனையைச் சொல்லத் துவங்கினான் பாண்டிய இளவல். சொல்லுமுன்பு தனது ஆசனத்தில் நன்றாகச் சாய்ந்து உட்கார்ந்து கைகளின் விரல்களை ஒன்றுடன் ஒன்று கோத்தும் கொண்டான். சிங்கணனை ஏறெடுத்து நோக்கிய கண்களில் விபரீதம் ஏதுமில்லை. ஏதோ தீவிர சிந்தனை மட்டுமிருந்தது. "சிங்கணரே! நான் முன்பே

சொன்னேன், பாண்டியர் விருந்தைப் போன்றதுதான் பாண்டியர் நீதியுமென்று. விருந்தை எத்தனை நேர்மையுடனும் ருசியுடனும் நாங்கள் படைக்கிறோமோ, அத்தனை நேர்மையுடனும் ருசியுடனும் நீதியையும் படைக்கிறோம். வியாதியுள்ளவனுக்கு விருந்து ருசிக்காதது போல், எங்களிடம் விரோதமுள்ளவர்களுக்கு எங்கள் நீதியும் ரசிப்பதில்லை. உங்கள் சம்பந்தமாக நாங்கள் செலுத்தத் தீர்மானித்திருக்கும் நீதியும் உம்மால் விரும்பத் தக்கது. ஏற்கத் தக்கதும்கூட. ஆனால் அதை விரும்புவதும் ஏற்பதும் உமது இஷ்டத்தைப் பொறுத்தது. இதில் எந்த வலுக்கட்டாயமுமில்லை...'' என்ற வீரபாண்டியன் சிங்கணனையும் நோக்கிவிட்டுத் தனது சகோதரனையும் நோக்கினான்.

சிங்கணன் தலைவிதியைப்பற்றி எந்த அக்கறையும் காட்டாமலும் அதிகமாக அதைப்பற்றிச் சிந்திக்காமலும் ஏதோ ஒரு நாடகத்தை வேடிக்கை பார்ப்பதுபோல் உட்கார்ந்திருந்த ஜடாவர்மன் சுந்தரபாண்டியன், "ஆம் தம்பி. கட்டாயம் ஏதுமில்லை. அவர் இஷ்டத்துக்கே விட்டுவிடுவோம்," என்றான்.

மேலும் நிபந்தனையை விவரிக்கத் தொடங்கிய வீர பாண்டியன், "கேட்டீரா சிங்கணரே! இதில் கட்டாயம் ஏதுமில்லை. மன்னரே ஒப்புக்கொண்டு விட்டார். தவிர, நீர் செய்ய ஒப்புக்கொள்ள வேண்டிய விஷயமும் அப்படிப் பிரமாதமானதல்ல; நியாயத்துக்கும் தர்மத்துக்கும் உகந்தது," என்றான்.

சிங்கணனின் முகத்தில் சந்தேகச் சாயை படர்ந்தது. வீரபாண்டியன் பூர்வபீடிகை வேறு ஏதோ பெரும் ஏற்பாட்டுக்கு அடிப்படையென்பதைப் புரிந்துகொண்டான். ஆகவே சொன்னான், "நியாயத்துக்கும், தர்மத்துக்கும் கட்டுப்படுவதில் போசளர்களுக்கு எந்தவித ஆட்சேபமுமிருக்காது. இருப்பினும் விவரமாகச் சொல்லுங்கள்" என்று.

"நீங்கள் நியாயத்தை ஒப்புக் கொள்வீர்களென்று தெரிந்ததால்தான் உம்மை இங்கு வரவழைத்துப் பேச



கிறேன். நியாயமற்ற, தர்மமற்ற செய்கைகளில் சம்பத்தில் நீர் ஈடுபட்டிருந்தாலும், அவை வீரரான உமது மனத்தை வாட்டி வதைக்கிறதென்பதில் எனக்கு எந்தவிதச் சந்தேகமுமில்லை. பெண் களவிலும் பொருள் களவிலும் சம்பந்தப் படுவதோ, சம்பந்தப்படுபவருடன் சகவாசம் கொள்வதோ வீரர்களுக்கு எத்தனை கஷ்டமென்பதை நான் உணர்வேன். ஆகையால் சொல்கிறேன். நீர் செய்த தவறுக்கு, அநீதிகளுக்குப் பரிகாரம் செய்யுங்கள்," என்றான் பாண்டியன்.

வீரபாண்டியன் விஷயத்துக்கு நேரே வராமல் சுற்றி வளைத்துப் பேசியது அவனுக்குப் பெரும் எரிச்சலையும் ஓரளவு பயத்தையும் தரவே, "பரிகாரத்தைச் சீக்கிரம் சொல்லுங்கள்," என்றான் சங்கடத்துடன்.

குரலைத் தாழ்த்தி, "பரிகாரமொன்றும் பெரும் பரிகாரமில்லை. நியாயத்தைத்தான் செய்யச் சொல்லுகிறேன். எங்கள் பொருளைத் திரும்ப எங்களிடம் சேர்த்து விடவேண்டும்," என்றான் வீரபாண்டியன்.

சிங்கணன் பிரமித்தான், "என்ன! உங்கள் பொருளை உங்களிடம் சேர்ப்பிப்பதா? என்ன பொருளைக் குறிப்பிடுகிறீர்கள்? பாண்டிய இளவரசியையா? முத்துக் குவியலையா?"

"இரண்டையும்தான்," என்று மன்னன் குறுக்கே புகுந்தான்.

"மன்னவா?"

"என்ன சிங்கணரே?"

"இது சாத்தியமா?"

"இங்கிருந்து கொண்டு போவது சாத்தியமானால் அங்கிருந்து கொண்டு வருவதும் சாத்தியம்தானே?" என்று மன்னன் புன்முறுவல் செய்தான்.

"முத்துக் குவியலைக் கடத்தியது நான் அல்லவே?" என்றான் சிங்கணன் சீற்றத்துடன்.

இந்தச் சமயத்தில் வீரபாண்டியன் குரல் குறுக்கே புகுந்தது. "அங்குதான் உமக்கு அதிர்ஷ்டம் அடிக்கிறது," என்றான்.

சிங்கணன் முகத்தில் சீற்றம் மறைந்து இகழ்ச்சி மண்டியது. "அதிர்ஷ்டமா?" என்று அவன் கேட்ட ஒற்றைச் சொல் கேள்வியில் இகழ்ச்சி ஒலித்தது.

"ஆம், அதிர்ஷ்டந்தான். ஒன்றை முடிக்கப்போனால் இன்னொன்றும் கிடைக்கிறது."

வீரபாண்டியன் காட்டிய குதூகலம் வேப்பங்காயாக இருந்தது சிங்கணனுக்கு "எதை முடிக்கப் போகிறேன்? எது கிடைக்கிறது?" என்று வினவினான் வெறுப்பு நிரம்பிய குரலில்.

"முத்துக்குமரியை மீட்கப் போகிறீர்..."

"நானா,"

"ஆம்."

"சேரனிடத்திலிருந்தா!"

"ஆம்."

"மீட்டால்!"

"அவனிடம்தான் முத்தும் இருக்கிறது. இரண்டையும் மீட்ட பெருமை உம்மைச் சாரும். உமது பெயர் பாண்டியர் வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படும்."

சிங்கணன் அத்தனை ஆபத்திலும் ஆத்திரத்திலும் நகைத்தான். "வீரபாண்டியரே! உமக்கு இந்தப் பணி பரம சுலபமாகத் தோன்றுகிறது."

"உமக்கும் அப்படித்தான் தோன்ற வேண்டும்," என்றான் வீரபாண்டியன்.

"ஏன்?"

"இங்கிருந்து முத்துக்குமரியைக் கொண்டு போனதை எத்தனை லாவகமாகத் திட்டமிட்டுச் செய்தீர்! அந்த அறிவு. முன்யோசனை, திட்டம், வேடம் எல்லாமே அவளைத் திருப்பிக்கொண்டு வரவும் உபயோகப்படு மல்லாவா?"

"நான் சேரநாடு சென்றால் சேரன் என்னை உயிருடன் விடுவானென்று நினைக்கிறீரா?"



"ஏன் விடமாட்டான்? அவனுக்கு எத்தனை சிறந்த சேவை புரிந்திருக்கிறீர்?"

இதைக்கேட்ட சிங்கணன் சிறிது சிந்தனையிலிறங் கினான். பிறகு சொன்னான்: "வீரபாண்டியரே! உமக்குச் சேரனை நன்றாகத் தெரியும். நீர் மலைக்காட்டில் உமது வீரர்களைக்கொண்டு சூழ்ந்து கொன்று போட்ட சேரப் படைப்பிரிவைப் பற்றி நாளைக்குள் சேரனுக்குத் தகவல் எட்டிவிடும். அந்தப் படை பலியானதற்கு எனக்கு என்ன வெகுமதி கிடைக்கும் தெரியுமா? மரண தண்டனைதான் கிடைக்கும்."

வீரபாண்டியனும் சிறிது சிந்தித்தான். "உயிர் போய் விடும் என்கிறீர்!"

"ஆம். சந்தேகமே வேண்டாம்" என்றான் சிங்கணன்.

"இதில் நீர் தீர்மானம் செய்யவேண்டியது ஒன்றிருக் கிறது. சேரன் படைப் பிரிவை இழந்ததற்காக உம்மைக் கொலை செய்வான். நாங்கள் முத்துக்குமரி களவுக்காக உம்மைக் கொலை செய்வோம். இதில் எந்த மரணம் விரும்பத்தக்கது?" என்று வீரபாண்டியன் மேலும் சொன்னான்: "சிங்கணரே! வீரர்களுக்கு மரணம் எந்த விநாடியிலும் நிச்சயம். ஆகையால் வீரனாயிருப்பவன் மரணத்தைக் கண்டு அஞ்சுவதில்லை. ஆனால் மரணத்துக்குப் பின் தனது நிலை என்னவென்பதைப்பற்றி மட்டும் சிந்திக்கிறான். நீர் சேரநாடு சென்று உயிரிழந்தால், ஒரு பெண்ணைக் களவாடிய, வெறுக்கத்தக்க, நாளை மக்கள் எள்ளி நகையாடக்கூடிய கேவலமான குற்றத்துக் காக உயிரிழப்பீர். எப்படி உயிரிழப்பது சிலாக்கியமென்று நினைக்கிறீர்?"

இதைச் சொன்ன வீரபாண்டியன் குரலில் அனுதாபம் பெரிதுமிருந்ததைப் போசளத் தண்டநாயகன் கவனித்தான். அந்த அனுதாபம் சுந்தரபாண்டியன் முகத்திலும் படர்ந்து கிடந்தது. அந்த இரு சகோதரர் களையும் அவன் நீண்ட நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். முத்தை இழந்து, மகளை இழந்து நிற்கும்

அந்த வேதனையிலும் இன்னொரு வீரனின் அவல நிலையைக் கண்டு பரிதாபப்படும் அந்த இரு சகோதரர்களையும் பார்த்துப் பார்த்து, "இப்படியும் இருவரா?" என்று பிரமிப்பில் ஆழ்ந்தான்.

வீரபாண்டியன் சொன்னதில் உண்மை பெரிதுமிருந்தது அவனுக்குத் தெள்ளெனப் புரிந்திருந்தது. இருப்பினும் சேரன் பக்கத்தில் நின்று எந்த உதவியும் புரியுமாறு போசள மன்னன் வீரசோமேசுவரன் ஆணையிட்டிருப்பதை எண்ணிப் பெருமூச்செறிந்தான். இருப்பினும் கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தவனாய்த் தனது ஆசனத்திலிருந்து எழுந்து நின்றுகொண்டு, "வீரபாண்டியரே! உமது ஆணை எதுவாயிருந்தாலும் சரி, நிறைவேற்றுகிறேன். சொல்லுங்கள். ஆனால் உயிருக்குப் பயந்து நாலிதைச் செய்யவில்லையென்பது நினைவிலிருக்கட்டும். முத்துக் களவை நான் செய்யவில்லை. அதைப்பற்றி எனக்கு அக்கறை இல்லை. பெண் களவெனும் ஈனத் தொழில் செய்திருக்கிறேன். அதைச் சரிசெய்யப் பார்க்கிறேன். சொல்லுங்கள். நான் செய்ய வேண்டியதென்ன?" என்று வினவினான். அவன் குரலில் உறுதியிருந்தது. அவன் ஒரு முடிவுக்கு வந்து விட்டானென்ற ஒலியுமிருந்தது.

வீரபாண்டியன் அவனைத் தன்னருகில் வரச் சைகை செய்து கச்சையிலிருந்து ஓர் ஓலையை எடுத்து அவன் கையில் கொடுத்தான். ஓலையைப் பிரித்துப் பார்த்த சிங்கனன் அதில் செய்தி ஏதுமில்லாததையும் சில கோடுகளும் குறிகளும் ஊரின் பெயர்களுமிருந்ததையும் கவனித்தான். முதலில் அவனுக்கு ஏதும் விளங்கவில்லையானாலும், ஊன்றிப் பார்க்கப் பார்க்கப் பல விஷயங்கள் புரிந்தன. அவன் முகத்தில் சொல்லவொண்ணா வியப்பு விரிந்தது. அந்த வியப்பைப் பூர்ணமாகப் பிரதிபலித்த குரலில், "வீரபாண்டியரே! மன்னவா!" என்ற சொற்கள் வெளிவந்ததன்றி. அவன் கண்களும் அந்த இரு சகோதரர்களையும் வியப்பு உதிர மாதி மாறிப் பார்த்தன.



முரட்டுக் குழல்கள் முகத்தில் தொங்கிய தனது முகத்தை ஆமென்பதற்கு அறிகுறியாக அசைத்தான் சுந்தரபாண்டியன். வீரபாண்டியன் இதழ்களில் இளநகை அரும்பி நின்றது.

"இதில் பாண்டிய இளவரசியை மீட்பதுபற்றி ஏதுமில்லையே?" என்றான் சிங்கணன்.

"வெளிப் பொருளாக இல்லை," என்றான் வீரபாண்டின்.

"உட்பொருளாக இருக்கிறதா?"

"ஆம்."

"இதென்ன கவிதையா?"

"இதுவும் ஒருவிதக் கவிதைதான். புனைந்தவரும் புலவர்தான்."

"யாரந்தப் புலவர்?"

பதிலுக்குச் சுந்தரபாண்டியனைச் சுட்டிக்காட்டிய வீரபாண்டியன் கூறினான்; "மதுரை, சங்கப் பலகைக்கும் புலவர்களுக்கும் இருப்பிடமில்லையா சிங்கணரே? அதை ஆளும் பாண்டியமன்னர் புலவராக இருப்பதிலோ, கவிதை வடிப்பதிலோ வியப்பு என்ன இருக்கிறது? உமது கையிலிருக்கும் ஓலையும் உட்பொருள் கொண்டது. கவிதையை வடிப்பது. ஆனால் அது சாதாரணக் கவிதையல்ல; போர்க்கவிதை. அந்தக் கவிதை வெகு சீக்கிரம் பேரிடிபோல் ஒலிக்கும். சேரநாட்டில் அதைப் பாடுவோர் வீரர். பக்கவாத்தியங்கள் முரசு, கொம்பு, சங்கு முதலியன. இந்தக் கவிதையை அரங்கேற்றி வைக்கும் பொறுப்பு உம்முடையது. நீர் இன்றே சேரநாட்டை நோக்கிச் செல்லும். அந்த ஓலையில் குறிப்பிட்டுள்ள அம்புகள் காட்டும் வழியில், அதில் குறிப்பிட்டிருப்பது போல் நடந்து கொண்டால் உமக்கு எந்தவித ஆபத்தும் நேரிடாது. உம்முடன் என் வீரர்கள் இருவரையும் அனுப்புகிறேன்," என்று வீரபாண்டியன் மிகுந்த உணர்ச்சியுடன் கூறினான்.

"இருவர் எதற்கு?" என்று சிங்கணன் கேட்டான்.

அதற்கான காரணத்தையும் சொன்னான் வீர பாண்டியன். "முத்துக்குமரி எந்த இடத்தில் இருக்கிறாளோ அந்த இடத்தில் இந்திரபானுவும் இருக்கிறானென்பதை முன்னமே சொன்னேன் உங்களுக்கு. இந்த இரண்டு வீரர்களின் சேர்க்கை உம்மிடம் இந்திரபானுவுக்கு இருக்கும் கோபத்தை விரட்டும். உமக்குப் பெருவீரனொருவன் உதவியும் சேர நாட்டில் கிடைக்கும். உங்கள் பணியை நிறைவேற்றுவது சுலபமாகும்," என்று கூறினான்.

வீரபாண்டியன் வெகு சாமர்த்தியமாகத் தன்னைச் சேர நாட்டிலும் அப்புறம் இப்புறம் திரும்பவொட்டாமல் வடித்துவிட்டதை உணர்ந்துகொண்டான். மீண்டும் சில விநாடிகள் சிந்தித்தான். பிறகு கேட்டான். "நான் எப்பொழுது பயணப்படவேண்டும்?" என்று.

"இன்று மாலை,' என்றான் வீரபாண்டியன்.

"சரி. நான் தயாராயிருக்கிறேன்,' என்று கூறிவிட்டு அங்கிருந்து வெளியே சென்றான் சிங்கணன்.

அவன் சென்றதும் சுந்தரபாண்டியன் தம்பியை நோக்கி, "அந்த இரண்டாவது ஓலை எங்கே?" என்று வினவினான்.

கச்சையிலிருந்து மற்றோர் ஓலையை எடுத்து நீட்டினான் வீரபாண்டியன்.

"இந்தக் கவிதை சரியாயிருக்கிறது. எதுகை, மோனை எல்லாமே சரி,"' என்று சிலாகித்தான் சுந்தரபாண்டியன்.

இரு சகோதரர்களும் ஒருவரையொருவர் புரிந்து கொண்டதற்கு அறிகுறியாகக் கலந்தே நகைத்தார்கள். அந்தச் சிரிப்பில் போர்க் கவிதையின் பறை, சங்கு, கொம்பு எல்லாமே ஒலித்தன.

அத்தியாயம் 41

# வெற்றி அலைகள்

போசளத் தண்டநாயகனான சிங்கணன் வெளியே சென்றதும், வீரபாண்டியனிடமிருந்து இரண்டாவது ஓலையை வாங்கிப் பார்த்துக் குதூகலத்துடன் ஆமோதித்த ஜடாவர்மன், தம்பியுடன் கலந்து வாய்விட்டு நகைத்த நன்றி, திரும்பவும் இருமுறை அந்த ஓலையை ஊன்றிக் கவனிக்கவும் செய்தான். அதிலிருந்த கோடுகளும், குறிகளும், ஊர்ப் பெயர்களும் வீரபாண்டியன் திட்டத்தைச் சந்தேகமின்றி விளக்கவே, மன்னன் சற்றுக் குழப்பம் முகத்தில் படரக் கேட்டான்: "தம்பி! உன் திட்டம் இத்தனை சரியாக அப்பழுக்கில்லாமல் அமைந்திருக்க, என்னை எதற்காக ஓர் ஓலை தயாரிக்கச் சொன்னாய்?" என்று.

வீரபாண்டியன் மூத்தவனை ஏறெடுத்து நோக்கி விட்டு, "அண்ணா! மூத்தவருக்கு மாற்றுத் திட்டம் தயாரிப்பது தம்பிக்கு அழகில்லை. தவிர, மன்னர் திட்டம் தயாரிப்பதால் அதற்கு பணியவேண்டிய ஒரு வேலைதான் குடிமகனுக்கு உண்டு. எந்தக் கொள்கையைக்கொண்டு பார்த்தாலும் நான் செய்தது சரியல்ல. இருப்பினும் உங்கள் ஓலையைக் கண்டபின் சில பலவீனங்கள் தெரிந்தன. திருத்தவேண்டியது இளவரசு பட்டத்தை ஏற்றுள்ள என் கடமையாகிவிட்டது," என்று கூறினான்.

சுந்தரபாண்டியன் தன் கூரிய கண்களைத் தம்பி மீது நிலைக்கவிட்டான் சில விநாடிகள். பிறகு கேட்டான், "சரி தம்பி! அப்படியானால் என் ஓலையை நீ வெளியிலேயே எடுத்திருக்க வேண்டாமே?' என்று.

"அதற்கும் உபயோகமிருந்ததால் எடுத்தேன்," என்று பதில் கூறினான் வீரபாண்டியன்.

"என்ன உபயோகம்?" சுந்தரபாண்டியன் குரலில் வியப்பு ஒலித்தது. "என் திட்டத்தை நீ புறக்கணித்து விட்டாய். பிறகு அந்த ஓலைக்கு என்ன உபயோகமிருக்க முடியும்?" என்று கேட்டான் மன்னன்.

"பயன்படாத திட்டம் எதிரியிடம் போவதில் நமக்கு அனுகூலமில்லையா?"

"எதிரியா?"

"ஆம். சேரமன்னன்."

"சேரமன்னனுக்கா என் ஓலையை அனுப்பப் போகிறாய்?"

"நான் அனுப்பப்போவதில்லை. அதுவே போய்ச் சேரும்."

சுந்தரபாண்டின் விழிகள் திடீரெனப் பளிச்சிட்டன. "அப்படியா! அப்படியா நினைக்கிறாய் நீ?" என்று வினவினான் வியப்புடன்.

"ஆம் அண்ணா: சிங்கணனுக்கு உயிர்பிச்சை கொடுத்துச் சேரர்பால் திருப்பி, பொதியமலையில் பொருநை உற்பத்தியாகும் இடத்திற்கு நேர் மேற்கில் உள்ள மலைச்சரிவுக்கு சேரனை அழைத்து வரும்படி சிங்கணனை இயக்க நீங்கள் திட்டமிட்டிருக்கிறீர்கள். உங்கள் ஓலையிலுள்ள அம்புக்குறி இந்தக் கோட்டையிலிருந்து கிளம்பி, பொருநையின் உற்பத்தி நிலைக்குச் சென்று அதையும் தாண்டி, மேற்கில் நேராக சேரநாட்டில் இறங்கி நின்றுவிடுகிறது. சேரர்படை வரவேண்டிய இடத்தையும் சிங்கணன் செல்லவேண்டிய மார்க்கத்தையும்கூடக் குறிகள் போட்டுக் குறிப்பிட்டிருக்கிறீர்கள்..." இதைச் சொன்ன வீரபாண்டியன் மன்னனை உற்று நோக்கினான்.

"ஆம் தம்பி, அதுதான் திட்டம் மலைச்சரிவின் கீழ் சேரப்படைகளும் மேலே என் புரவிப்படையும் நின்றால் என்புரவிப் படை அம்புபோல் இறங்கி சேரன் படைகளை ஊடுருவ முடியுமல்லவா?" என்று வினவினான் மன்னன்.



"முடியும், உங்கள் திட்டப்படி சேரன் நடந்தால்."

"ஏன் நடக்க மாட்டான்?" அதை நடத்தி வைக்கச் சிங்கணன் இல்லையா?"

"உங்களிடமிருந்து தப்பிய பிறகு சிங்கணன் உங்களுக்கு அனுகூலமாக நடக்க வேண்டிய அவசியமென்ன?"

"இதுவரை அவன் செய்ய ஒப்புக்கொண்டதெல்லாம்..."

"'அவசியத்தை முன்னிட்டு. சிங்கணனை நான் சிறிதும் நம்பவில்லை. தவிர, சுதந்திரமாக நடக்க அவனுக்கு உரிமையும் இருக்கிறது. சிங்கணன் பெரிய தண்டநாயகன். அவன் ஏன் இங்கு வேவுகாரனாக வந்தான்? பெண்ணை ஏன் களவாட உதவினான்? தன் கண்ணியத்தையும், பெயரையும் குறைத்துக்கொள்ளும் நடவடிக்கைகளில் ஏன் இறங்கினான்?"

"ஏன்?"

"பாண்டிய ராஜ்ய விஸ்தரிப்பைப்பற்றி நான் எத்தனை கனவு காண்கிறேனோ, நீங்கள் என்ன கனவு காண்கிறீர்களோ அத்தனை கனவைப் போசள சாம்ராஜ்ய விஸ்தரிப்பில் சிங்கணனும் காண்கிறான். ஆகவே, உங்கள் ஓலைத்திட்டத்தை அவன் நிறைவேற்ற மாட்டான். மாற்றுத் திட்டம் தயாரிப்பான். அப்படியே உங்கள் திட்டத்தை ஏற்றுக்கொண்டாலும் நீங்கள் எதிர்க்க முடியாத சேரர்படைபலம் மலையடிவாரத்துக்கு வரும்."

இதைக்கேட்ட சுந்தரபாண்டியன், சிறிது சிந்தனையில் இறங்கினான். பிறகு தம்பியை நோக்கி, "ஆமாம் தம்பி! நான் சமாளிக்க முடியாத படை பலம் என்று ஒன்றிருக்கிறதா?" என்று வினவினான். அந்தக் கேள்வியை அவன் கேட்டபோது, பாண்டியன் குரலில் சிறிது வருத்தமும் தெரிந்தது இளவரசனுக்கு.

பெரும் சாம்ராஜ்யத்துக்கு அடிகோலிக் கொண்டிருந்தவனும், மகாவீரனுமான தன் அண்ணன் மனம் லேசாகப்புண் பட்டுவிட்டதை அறிந்த வீரபாண்டியன்

மிகுந்த பணிவு தொனித்த குரலில் கூறினான். "அண்ணா! போரில் ஆற்றல், தந்திரம் இரண்டும் முக்கியம்தான். அந்த இரண்டும் உங்களிடம் நிரம்ப உண்டு. ஆனால் நமது படைபலம் மிகக்குறைவு. இந்தப் பகுதியில் மூவாயிரம் வீரர்களுக்குமேல் திரட்ட முடியாது. எதிரி சுமார் பதினாயிரம் வீரர்கொண்ட படைபலத்துடன் வருவான். நாம் மலைப்பகுதியில் செல்வதால் புரவிப் படையும் காலாட் படையும்தான் கொண்டு செல்லமுடியும். ஆனால் எதிரி யானைப்படை, ரதப்படை, புரவிப்படை இத்தனையுடன் வந்து மலையடிவாரச் சமவெளியில் நம்மை எதிர்கொள்வான். அந்த நிலையில் வீரமும், ஆற்றலும் போர்முடிவை நிர்ணயிக்காது. படைகளின் தொகை, வகை, இரண்டும்தான் நிர்ணயிக்கும். தவிர, சேரரின் யானைப்படை, மிக வலுவுள்ளது," என்று சுட்டிக் காட்டினான்.

சுந்தரபாண்டியன் மறுபடியும் சிந்தனையிலிறங்கினான். இத்தனையும் அவன் ஏற்கெனவே எதிர்பார்த்த அம்சங்கள்தான். இருப்பினும் மலைச்சரிவில் வேகமாகப் பாய்ந்து செல்லும் புரவிப்படை, எதிரியின் அணிவகுப்பை அம்புபோல் உட்புகுந்து கிழித்துவிட முடியுமென்றும், அப்படிக்கிழித்து, எதிரியின் படையை இரண்டாக்கி விட்டால் தனித்தனியாக இருகூறுகளையும் சமாளிக்க முடியுமென்றும் அவன் திட்டமிட்டிருந்தான். ஆகவே அதைப் பற்றி அவன் தம்பியைக் கேட்க முற்பட்டு, "எதிரியின் படை இரண்டு கூறாக உடைக்கப்பட்டால், நாம் அந்த இரண்டு கூறுகளில் ஒன்றை முதலில் அழிக்க முடியாதா?" என்றான்.

"அழிக்க முடியும். ஆனால் அந்த இரண்டு கூறுகளும் மீண்டும் ஒன்றுபட்டால் இடையே நாம் சிக்கிக்கொள்வோம்," என்றான் வீரபாண்டியன். "புரவிப்படை வேகமாக இயங்கமுடியும். யானைப்படை ரதப்படைகளுக்கு அது சாத்தியமில்லை. யானைப்படை ஒருமுறை கலைத்தால் கலைந்ததுதான். திரும்பி அதைச் சேர்த்து அணிவகுப்பது நடவாத காரியம்," என்று சுட்டிக் காட்டினான் மன்னன்.



"உண்மை. ஆனால் சேரன் யானைப்படையை முன்னணியில் நிறுத்தாது, பின்னணியில் நிறுத்தினால் என்ன ஆகும்? நீங்கள் எதிரியின் புரவிப்படையை ஊடுருவியதும் உங்களை யானைப்படைச் சுவர் வழி மறைக்கும். அதைப் பிளக்க முற்பட்டால் வெறி பிடித்த யானைகள் நமது புரவிப்படைமீது சீறிவரும்..." என்ற வீரபாண்டியன் வாசகத்தை முடிக்காமல் விட்டான்.

இளையவன் வாசகத்தை முடிக்கவில்லையே தவிர மூத்தவன் முடித்துக்கொண்டான் மீதியை. யானைச் சுவருக்கு முன்னால் புரவிப்படைத் தாக்குதல் நிற்கமுடியாதென்பது அவனுக்குத் தெரிந்திருந்தது. யானைகளை எப்பொழுதும் காலாட்படையைக் கொண்டுதான் சமாளிக்க வேண்டும். தூரத்திலுள்ள யானைகள் மீது எய்யப்படும் அம்புகள், எறியப்படும் வேல்கள், இவையே யானை அணிவகுப்பைக் கலைத்து வெறிபிடித்து ஓடச் செய்யும் என்பதை அவன் அறிந்திருந்ததால், தம்பியின் ஆட்சேபணையில் பெரும் பொருள் இருப்பதை உணர்ந்து கொண்டான். பிறகு மீண்டும் தம்பி கொடுத்த ஓலையைப் பார்த்தான். "எதிரி என்ன செய்வான் என்பதுபற்றி உன் ஊகம் சரியானால் உன் திட்டம் சரியானதுதான். இந்த முறையையே நாம் கடைப் பிடிப்போம்," என்றுகூறி அந்த இரண்டாவது ஓலையைத் தன் விரலால் தட்டியும் காட்டினான்.

வீரபாண்டியன் தனது ஆசனத்திலிருந்து எழுந்து தலை தாழ்த்தினான். அண்ணனை நோக்கி, "அண்ணா! பாண்டியர் படைபலம் அதிகமாயிருந்தால், உங்கள் திட்டம்தான் சரியானது. துரிதமாக முடியக்கூடியதும்கூட. ஆனால் படை திரட்ட நமக்குச் செல்வமில்லை. இருந்த செல்வத்தைச் சேரன் களவாடி விட்டான். இருக்கும் படையோ மதுரையிலும், கொற்கையிலும், இந்தச் சிறு கோட்டையிலுமாகப் பிரிந்து கிடக்கிறது. இந்த நிலையில் சக்தியை விட யுக்தியைப் பயன்படுத்துவதைத் தவிர வேறு வழியில்லை," என்று கூறினான்.

சுந்தரபாண்டியன் தம்பியின் மனத்திலுள்ளதைத் தெளிவாகத் தெரிந்து கொண்டதால் ஆமோதித்ததற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான். அத்துடன் சொன்னான்: "தம்பி! உன் நதியும், என் நதியும் நேர் எதிராக ஓடுகின்றனவே," என்று.

"ஆம் அண்ணா," என்றான் வீரபாண்டியன், தன் ஓலையில் கிறப்பட்டிருந்த இரு நதிகளையும் நோக்கி.

"நான் பொருநையின் உற்பத்தி நிலையை வைத்துத் திட்டமிட்டேன்," என்றான் வீரபாண்டியன்.

"நான் கோட்டாற்றின் உற்பத்தி நிலையை வைத்துத் திட்டமிட்டேன்," என்றான் சுந்தரபாண்டியன்.

"எனது நதி கிழக்கே ஓடுகிறது...

"எனது மேற்கே ஓடுகிறது."

"இப்படி நாம் மாறுபட்டு நிற்கலாமா?"

"மாறுபடவில்லையே."

"எப்படி?"

வீரபாண்டியன் சொன்னான் மன்னனை நோக்கி, "அண்ணா! இரண்டு நதிகளின் உற்பத்தி ஸ்தானங்களுக்கும் இடையில் இந்தக் கோட்டையிருக்கிறது. இதில்தான் நாமிருக்கிறோம். இருவருக்கும் சேரநாடு புகுவதுதான் உத்தேசம். நீங்கள் பொருநை நதியின் ஆரம்ப இடத்திலிருந்து அப்புறம் சென்று சேர நாட்டிலிறங்கப் பார்க்கிறீர்கள். நான் கோட்டையாற்று ஆரம்பத்திலிருந்து அதன் கரையோரமே மேற்கே சென்று சேரநாட்டில் புகப் பார்க்கிறேன். இரண்டும் செய்யலாம்."

"எப்படி இரண்டும் செய்வது?" மன்னன் குரல் சந்தேகத்துடன் ஒலித்தது.

"நீங்கள் உங்கள் திட்டப்படி பொருநையின் ஆரம்ப இடத்தைத் தாண்டி மலைச்சரிவில் இறங்குங்கள்."

"சரி."

"ஆனால் சேரர் படையுடன் கைகலக்காதீர்கள்."

"கைகலக்காமல்?"



"மலைச் சரிவு ஓரமாக வடக்கு நோக்கிச் செல்லும் பாதையிருக்கிறது."

"ஆம்."

"அந்தப் பாதை* கோட்டையாற்றுக் கரையில் வந்து முடிகிறது."

"ஆம். அங்கு வரச் சொல்கிறாயா?"

"இல்லை. பாதிதூரம் வந்ததும் திரும்பி மலைக்காடுகளில் மறைந்து பழைய இடத்துக்குச் சென்று விடுங்கள்"

"சென்று விட்டால்?"

"நான் சேரனைச் சந்திக்கிறேன்."

"எங்கு?

"கோட்டையாற்றுக் கரையில்."

சுந்தரபாண்டியன் துள்ளி எழுந்தான் ஆசனத்திலிருந்து. "மிகத் துணிகரமான திட்டம் தம்பி! ஆனால் இது ஓலையில் இல்லையே. இரண்டு ஆறுகளையும், நமது படைகள் நிற்க வேண்டிய இடங்களையுந்தானே குறிப்பிட்டிருக்கிறாய்?" என்று உணர்ச்சியுடன் கேட்கவும் செய்தான்.

மன்னன் உணர்ச்சியும், குரலில் தொனித்த பாராட்டுதலும் வீரபாண்டியன் வதனத்தில் பெருமிதத்தைப் படர வைத்தன. "போரின் அரிச்சுவடியை உங்களிடம் கற்ற என் திட்டத்தை நீங்கள் பாராட்டுவது எனக்குப் பெருமையை அளிக்கிறது. நீங்கள் போர் முன்னணியில் ஒரே திசையில் ஒரே இடத்தில் இரண்டு வேல்களையும் ஊன்றி வைத்தீர்கள். நான் இரண்டு தனித்த இடங்களில் இரண்டு வேல்களையும் ஊன்றினேன். இதுதான் வித்தியாசம் இரண்டு வேல்களும் ஒன்றையொன்று நோக்கிய வண்ணம் தென்திசையிலும் வடதிசையிலும் நிற்கின்றன. இடையே நிற்கிறது சேரன் பெரும் சேனை. முடிவு..." என்று வாசகத்தை இடையில் நிறுத்தினான் வீரபாண்டியன்.

* இப்பொழுது கொட்டாரக்கரா என்று மலையாளத்திலும் அழைக்கப் படுகிறது.

"முடிவு?" சுந்தரபாண்டியன் கேள்வி கம்பீரத்துடனும் மகிழ்ச்சியுடனும் ஒலித்தது.

"சேரர் அழிவு பாண்டிய சாம்ராஜ்ய ஸ்தாபனத்தின் முதல் படி," என்று வீரபாண்டியன் குரல் கம்பீரத்துடனும் அமைதியுடனும் ஒலித்தது.

சுந்தரபாண்டியன் தம்பியை ஆவலுடன் தழுவிக் கொண்டான். அந்த மகாவீரன் தழுவலாலும் பாராட்டுதலாலும் பெருமிதத்துடன் சிறிது சங்கோஜமும் அடைந்த வீரபாண்டியன் மெள்ள தன்னை விடுவித்துக்கொண்டு "அண்ணா! இன்று சிங்கணன் செல்லட்டும். இன்றிலிருந்து மூன்று நாட்கள் கழித்து நாம் கிளம்புவோம்," என்றான்.

"சரி தம்பி! அதற்கான ஏற்பாடுகளைச் செய்," என்று மன்னன் உத்தரவிட வீரபாண்டியன் வெளியே சென்றான்.

வீரபாண்டியன் உள்ளூர வகுத்துக்கொண்ட திட்டப்படி சிங்கணனுக்கு எந்தவிதச் சந்தேகமும் ஏற்படாத முறையில் நடந்துகொண்டான். வேவுகாரனென்று பிடிக்கப் பட்டதால் மற்ற பாண்டிய வீரர்களின் தொல்லை ஏற்படாதிருக்கத் தானே அவனைக் கோட்டையிலிருந்து அழைத்துச் சென்று மலைப்பாதையிலிருந்து அந்தப் பழைய காட்டுப்பாதை பிரியும் இடம் வரையில் சென்று அவனிடமிருந்து விடை பெற்றான்.

இருவரும் பிரியும் தருவாயில் சிங்கணன், "வீர பாண்டியரே! எனக்கு உயிரை அளித்திருக்கிறீர்கள். இந்த உதவியை! நான் என்றும் மறக்கமாட்டேன். சமயம் வரும் போது அத்தகைய உதவியை நானும் புரிவேன்," என்றான் நன்றி ததும்பும் கண்களுடன்.

வீரபாண்டியன் இதழ்களில் இளநகை அரும்பியது. "அந்தச் சமயம் வராதிருக்க ஆண்டவன் அருள் புரியட்டும். இப்பொழுது ஓலையில் கண்ட திட்டப்படி..." என்ற வீரபாண்டியன் நிதானித்தான்.

"சேரனைத் தந்திரத்தால் மலையடிவாரத்துக்கு அழைத்து வருகிறேன்," என்று கூறித் தனது புரவியை



மலைப்பாதையில் திருப்பிக் கொண்டு சென்றான் சிங்கணன்.

அவன் உருவம் மேலேயிருந்த மரங்களுக்கிடையில் மறையுமட்டும் காத்திருந்த வீரபாண்டியன், கோட்டையின் மற்றொரு புறத்தே எழுந்த சைய பருவதத்தை ஏறெடுத்து நோக்கினான். "அங்கே இருக்கிறது எனது வெற்றி நதி," என்று கூறி மகிழ்ச்சி முகத்தில் பெரிதும் நிலவத் தனது புரவியைக் கோட்டை நோக்கித் திருப்பினான். அவன் உள்ளத்தில் வெற்றியின் மகிழ்ச்சி அலைகள் எழுந்து எழுந்து மோதிக்கொண்டிருந்தன.

## அத்தியாயம் 42

# சித்திரமும் கைப் பழக்கம்

**சி**ங்கணனைச் சேர நாட்டுப் பாதையில் செல்ல விட்டு, தனது திட்டத்தில் பூர்ண நம்பிக்கையுடனும் மகிழ்ச்சி துள்ளிய மனத்துடனும் வீரபாண்டியன் கோட்டைக்குத் திரும்பியபோது, இருட்டு நன்றாக ஏறிவிட்டதால் கோட்டையெங்கும் தீபங்களும், தீப்பந்தங் களும் ஜொலித்துக் கொண்டிருந்தன.

சிங்கணன் கோட்டையைவிட்டு அகன்றதால், ராகு அகன்றபின் ஒளிவிடும் முழுமதியைப் போலப் புது மெருகுடன் பிரகாசித்த அந்தக் கோட்டையைத் தூரத்தில் கண்டதுமே இளவரசன் மகிழ்ச்சி வசப்பட்டானானாலும், முத்துக்குமரி அந்தச் சமயத்தில் எப்படியிருக்கிறாளோ, என்ன துன்பங்களை அனுபவிக்கிறாளோ என்ற வேதனையும் அந்த மகிழ்ச்சியுடன் கலந்து, மகிழ்ச்சிக்கு ஓரளவு களங்கத்தையே கற்பித்ததால், ஓரிரு முறைகள் கோட்டையை நோக்கித் துன்பப் பெருமூச்சும் விட்டான் அந்த மாவீரன். மகிழ்ச்சியில் வேதனை கலந்துவிட்ட காரணத்தால், தனக்கு வணங்கிய கோட்டைக் காவலரைக் கவனியாமலே உள்ளே நுழைந்த இளவரசன், மலைச்சரிவு விடுதித் தாழ்வரையில் நின்ற இளநங்கை மீதுகூடக் கண்ணை ஓட்டாமலே புரவியை நடத்திக் கொண்டு மன்னன் விடுதி நோக்கிச் சென்றான்.

விடுதிக்குள் நுழைந்த பின்பும் இதயத்தில் வேதனை யிருந்ததால், அங்கிருந்த மஞ்சத்தில் அமர்ந்து காவல னொருவனை விளக்கும், எழுது கருவிகளும் கொண்டுவரப் பணித்தான். காவலன் கொண்டு வந்த பதம் செய்த பெரு



ஓலைத் துண்டுகளில் ஒன்றை எடுத்து அதில் எழுத்தாணி யால் கோடுகளை அப்படியும் இப்படியும் இழுத்துக் குறிகளும் போடலானான். அவன் முகத்தில் விளைந்திருந்த தீர்க்காலோசனையைக் கண்ட காவலன் மூச்சுக்கூட விடாமல் யவனர் விளக்கு ஒன்றைப் பக்கத்தில் தூக்கிப் பிடித்துக் கொண்டு நின்றானென்றால், சற்று நேரம் பொறுத்துப் பக்கத்து அறை ஒன்றிலிருந்து வெளியே வந்த மன்னன்கூட அவன் யோசனைக்கு இடைஞ்சல் விளைவிக்காமல் அடிமேலடி எடுத்து வைத்து வெளியே சென்றுவிட்டான்.

சிந்தனை சித்தத்தைக் கவ்வி நின்றதால் அண்ணன் வந்து சென்றதைக்கூடக் கவனியாமல் முதல் ஓலையில் சில கோடுகளை இழுத்துக் குறிகள் போட்ட வீரபாண்டியன், அடுத்தபடியே அடுத்த ஓலையிலும் ஏதேதோ வரையலானான்.

இப்படி ஒன்றன்பின் ஒன்றாக ஐந்து ஓலைப்பட்டை களில் ஏதேதோ கோடுகளையும் வீரபாண்டியன் வரைந்து முடிக்கக் கிட்டத்தட்ட அரை ஜாம நேரம் ஆகிவிட்ட தானாலும், அந்தநேரம் ஓடியதைச் சிறிதும் கவனிக்காமலே தனது ஒவ்வோர் ஓலையையும் கீறிக் கோடுகள் போட்டு முடிக்க நீண்ட நேரம் பிடித்தது அவனுக்கு. ஒவ்வொரு கோட்டையும் குறிகளையும் தீர்க்காலோசனைக்குப் பின்பே அவன் வரைந்தானாதலால் நேரம் அதிகமாக ஓடி விட்டதோ, பின்னால் விளக்குப் பிடித்து நின்ற காவலன் மாறிவிட்டதோ ஏதும் தெரியவில்லை இளவரசனுக்கு. அவன் தானே தனக்கு சிருஷ்டித்துக் கொண்ட தனி உலகத்தில் வாழ்ந்து கொண்டிருந்தான். பொருநையும் கோட்டாறும் சேரநாட்டு மலைகளும் கலந்த பெரு உலகம் அது. பெரு உலகம் மட்டுமல்ல போருலகமும் கூட.

அவன் குறிவைத்த இடங்களில் மனத்திலேயே அவன் நடத்திக்கொண்ட பெரும் அணிவகுப்புகளும், போர்களும் பேரொலியை அவன் சித்தத்தில் கிளப்பிக் கொண் டிருந்தன. இந்தப் போர் விவரங்கள் இதயத்தைச்

சூழ்ந்துவிட்டதால் முத்துக்குமரியைப் பற்றி ஆரம்பத்தி லிருந்த மனவேதனை சிறிது மறைந்துவிடவே, இளவரசன் உதடுகளில் சிறிது புன்சிரிப்பும் உதயமாயிற்று. அந்தப் புன்சிரிப்பு முகத்திலும் படர்ந்து, கண்களிலும் சிதறியது. ஐந்தாவது ஓலையை அவன் வரைய ஆரம்பித்தபோது அந்தப் புன்சிரிப்பு சிறிது அதிகமாக விரியவும் செய்தது. திடீரென அவன் எழுத்தாணி ஐந்தாவது ஓலையில் பரபரப்புடன் நடமாடியது.

ஓலைமீது அதன் நடனம் முடிந்ததும் சற்று மெல்ல நகைக்கவும் செய்த வீரபாண்டியனை, "ஆம்" என்று சிறிய சப்தமொன்று சட்டென்று நிமிர வைத்ததால், வீரபாண்டியன் நகைப்பு நின்றது. தலை திரும்பியது, கண்களில் சற்றுப் பயமும் படர்ந்தது.

எதற்கும் அசையாத வீரபாண்டியன்கூட அந்த நிலையில் சற்று அசைந்தான். என்றும் குழம்பாத அவன் முகமும் அந்தச் சில வினாடிகளில் குழம்பி நின்றது. அவன் பின்னால் யவனர் விளக்கின் சங்கிலியை ஏந்திப் பிடித்த வண்ணம் இளநங்கை நின்றிருந்தாள்.

வீரபாண்டியன் அவளைப் பார்த்துப் பார்த்துப் பெரிதும் பிரமித்தான். கையில் விளக்கேந்தி, முகத்தில் விளைந்திருந்தது உண்மைக் கோபமா, பொய்க் கோபமா என்று யாரும் ஊகிக்க முடியாத நிலையில் நின்றிருந்தாள் அவள். அவள் விளக்கேந்தி நின்ற நிலையில் யவன நாட்டு விளக்குப் பதுமை போலிருந்தாளேயன்றி, வானாதித்தன் மகளாக, கொற்கை முத்தங்காடியைச் சுற்றும் விஷமக் காரியாகக் காட்சியளிக்கவில்லை. அன்று காலையில் அவள் தலையில் சூடிய செண்பகப் பூ வதங்கியிருந்தாலும் வாசனையைப் பெரிதும் கிளப்பியதால் அந்த வாசனை அந்த முன் மண்டபம் பூராவுமே பரவிக் கிடந்தது. 'இள நங்கையின் வரவைக் கவனிக்காவிட்டாலும் இந்த வாசனையையாவது நான் முகர்ந்திருக்க வேண்டுமே, ஏன் முகரவில்லை? என் நாசியும் முகரும் சக்தியை இழந்துவிட்டதா?' என்று தன்னைத்தானே கேட்டுக்



கொண்டான் அந்த இளங்காளை. அவன் கண்கள் அவளை கட்டமிட்டன.

இளங்காளையின் பார்வையால் இளநங்கை சற்றே நெகிழ்ந்தாள். சற்று சங்கடத்துடன் "இளவரசர் ரசிகர் என்பது தெரிகிறது," என்று உஷ்ணத்துடன் கூறவும் செய்தாள்.

அந்த உஷ்ணத்தைக் கவனிக்கவில்லை இளங்காளை. உதடுகளின் செழுமையையும், நீரோட்டத்தையும், அசைவையும் கவனித்தான். உதடுகள் இகழ்ச்சியுடன் கோடிகளுக்கு இழுபட்டபோது புஷ்டிக் கன்னங்களில் விழுந்த குழிகளையும் கவனித்தான். ஒருமுறை தலையை லேசாகச் சாய்த்துத் தன் தோள்மீது விழுந்து கிடந்த அவள் சேலை முந்தானையையும் பார்த்தான். கேவலம் அந்தச் சேலை, உயிரற்ற பொருள், எத்தனை உயிர்த்துடிப்புடன் இயக்கித் தன்னைப் பெரும் புரட்டாகப் புரட்டிவிடுகிறது என்பதை எண்ணி வியக்கவும் செய்தான்.

"ஆராய்ச்சி பலமாயிருக்கிறது," என்ற சொற்கள் மீண்டும் வெளிவந்தன அவள் உதடுகளிலிருந்து.

"ஆமாம்," என்றான் வீரபாண்டியன், ஏதோ சொல்ல வேண்டுமென்பதற்காக.

"என்ன ஆமாம்?" என்று கேட்டாள் அவள்.

"ஆராய்ச்சி."

"எதைப்பற்றி?"

"போரைப்பற்றி."

"போரைப்பற்றியா?"

"ஆம்."

"அதற்கு இதை வரைய வேண்டுமா?" என்ற இள நங்கை, அவன் மடியில் விழுந்த ஐந்தாவது ஓலையை எடுத்து நீட்டினாள்.

இளவரசன் அவளை நோக்கித் திருட்டுவிழி விழித்தான். இளநங்கையின் கண்களில் கனல் பறந்தது. "பெண்களைப் பற்றிச் சித்திரம் வரைய எத்தனை நாளாகக்

கற்றுக்கொண்டீர்கள்?" என்ற சொற்களை உதிர்த்த இளநங்கை, வெகு வேகத்துடன் ஐந்தாவது ஓலையை அவன் கண்கள் முன்பாகக் கோபத்துடன் திணித்தாள்.

இளவரசன் அதற்கு நேரிடையாகப் பதில் சொல்லவில்லை. "நீ எப்பொழுது வந்தாய்? காவலனிடமிருந்து விளக்கை எதற்காக வாங்கிக்கொண்டாய்?" என்று வினவினான் சங்கடத்துடன். அந்தச் சங்கடத்துடன் சங்கடமாக அவள் இடையிலும் தனது கையைச் செலுத்தினான்.

"கையை எடுங்கள்," என்றாள் இளநங்கை.

"ஏன்?" என்று வினவினான் இளவரசன்.

"சித்திரமெழுதத் தடங்கலாயிருக்கும்," என்றாள் அவள் கோபத்துடன்.

"இருக்காது." இளவரசன் குரலில் விஷமம் ஒலித்தது.

"ஏன்?"

"மனத்திலிருந்து உருவத்தை எடுத்து வரைய வேண்டியதில்லையே இப்பொழுது?"

"என்ன சொல்கிறீர்கள்?"

"எதிரே நிற்பதால் பார்த்தே வரையலாம்."

"ஏன், சித்திரத்தில் புலியோ நீங்கள்?"

"இல்லை, மீன்."

"மீனா!"

"ஆம். புலி சோழர் சின்னம். மீன்தான் எங்கள் சின்னம். புலியைவிட மீன் வலுவுள்ளது."

"மீனா!"

"ஆம்," என்று அவள் கண்களைச் சுட்டிக் காட்டிய வீரபாண்டியன், "இந்த மீன்களுக்குள்ள விஷம் புலியிடத்தில் கிடையாது," என்று கூறி அவளை உற்று நோக்கினான்.

இளநங்கை மெல்ல வினக்குகளுடன் அவனை நோக்கிக் குனிந்தாள். "இத்தனை நேரம் சித்திரக்காரராக



இருந்தீர்கள். இப்பொழுது கவிஞராகவும் ஆகிவிட்டீர்கள்," என்றாள்.

"இரண்டுக்குமே நீதானே காரணம்!"

இளநங்கை அவன் தலைமீது குனிந்தபடி முணுமுணுத்தாள், "நான் காரணமா? நானா காரணம்?" என்று.

"ஆமாம். உன்னை நினைத்து அடிக்கடி இத்தகைய ஓலைகளில் உன் உருவத்தை வடித்திருக்கிறேன். அந்தக் கைப்பழக்கத்தால் சித்திரத்தில் தேர்ந்தேன்."

"உம்...அப்புறம்?"

"உன்னை அடிக்கடி நினைத்து நினைத்து உவமை காணமுயல்வேன். பாடிக் கூடப் பார்ப்பேன். செந்தமிழும் நாப்பழக்கமல்லவா? கவிஞனுமானேன்..." என்ற வீர பாண்டியனை இடைமறித்த இளநங்கை, "அதுமட்டுமல்ல," என்றாள் அவன் காதில்.

"வேறென்ன?"

"பைத்தியமுமானீர்கள்."

"நானா பைத்தியம்?"

"பைத்தியமில்லாவிட்டால் நான்கு ஓலைகளில் போர்த்திட்டத்தைக் குறியிட்டுக் கோடிட்டு, ஐந்தாவது ஓலையில் ஒரு பெண்ணின் உருவத்தை வரைவீர்களா! அதுவும் அந்தப் பெண் நான் என்றும் சொல்கிறீர்கள்..." என்ற இளநங்கை, "நான் இத்தனை மோசமாகவா இருக்கிறேன்? அதுவும் இப்படியா இருக்கிறேன்...?" என்று அதிக வெட்கத்துடனும் சங்கடத்துடனும் ஓலையிலிருந்த உருவத்தைக் காட்டினாள்.

இளவரசன் அவளுக்குப் பதிலேதும் சொல்லவில்லை. அவனது கை அவள் இடையில் வருடியது.

"கைகள் சும்மா இருக்கட்டும்," என்று எச்சரித்தாள் இளநங்கை.

"இருக்காது," என்ற வீரபாண்டியன் குரல் கனவுலகத்தில் இருப்பவன் குரலாக ஒலித்தது.

"ஏன்?"

"சித்திரமும் கைப்பழக்கம்."

"அதனால்?"

"நீ பெண் சித்திரம், கை பழகுகிறது."

"நன்றாகயிருக்கிறது!"

"நீ செந்தமிழ்.... ஆகையால்...."

"நாவும் பழகும் போலிருக்கிறதே?"

"ஆம் இளநங்கை, நாவும் பழகும். இப்பொழுது என் நா உதிர்க்கும் சொற்கள் பெரும் கவிதை, தமிழ்கூறு நல்லுலகத்தில் புதுயுகமொன்றை, புதுச் சரித்திரத்தைச் சிருஷ்டிக்கப்போகிறது!" என்று வீரபாண்டியன் கனவுலகத்திலிருப்பவன்போல் காட்சியளித்தான். "ஆம் ஆம். அது தான் வழி. சேரனை உன்னைக் கொண்டே ஒழிக்கிறேன்," என்று கூறிய வீரபாண்டியன், இளநங்கையின் கையிலிருந்த அந்த ஐந்தாவது ஓலையை வாங்கி, அதிலிருந்த பெண் உருவைப் பார்த்தான். பிறகு மடியில் கிடந்த எழுத்தாணியை எடுத்து வேறு சில கோடுகளை அதன்மீது இழுத்து, "இளநங்கை! இது எப்படி....?" என்று வினவினான்.

இளநங்கை அதைப் பார்த்துப் பிரமித்தாள். அவள் கண்கள் ஓலையில் நிலைத்து நின்றுவிட்டன பல வினாடிகள். "எதற்காக இதை இப்படி...?" என்று கடைசியில் திணறிக் கேட்கவும் செய்தாள்.

சித்திரத்தின் மாற்றம் சொன்ன கதை ஒரு புதுக்கதை. ஓலையில் முதலில் சாதாரண அரைகுறை ஆடையுடன் காட்சியளித்த பெண்ணுருவத்துக்குக் குறுக்கிலும் நெடுக்கிலும் சில கோடுகளை வீரபாண்டியன் வரைந்து விட்டதால் அது ராணுவ உடை உடுத்தியதுபோலும் இடையில் வாளைச் செருகிக் கொண்டது போலும் காட்சியளித்தது. தவிர அதன் கையிலும் பெரும் வேல் உருவெடுத்தது. தலையில் ஒரு கவசமும் துலங்கியது. இப்படிப் பெண்ணுக்குப் போர்க் கோலம் அணிவித்த வீரபாண்டியன், "இந்த வீரப்பெண் எப்படியிருக்கிறாள்?" என்று வினவினான்.



"மிக அழகாயிருக்கிறாள்," என்றாள் இளநங்கை மகிழ்ச்சி குரலில் தொனிக்க.

"உன்னை நீயே பாராட்டிக் கொள்கிறாயா? அது சரி. அதுவும் நல்லதுதான். ஆனால் செயலில் எப்படி, பார்ப்போம்," என்றான் அவளை நன்றாக ஒரு கையால் அணைத்துக் கொண்டு.

இளநங்கை ஏதும் புரியாத கண்களை அவன்மீது திருப்பினாள். "செயலா!" என்றாள் வியப்புடன்.

"ஆம்." வீரபாண்டியன் குரல் மகிழ்ச்சியுடன் ஒலித்தது.

"என்ன செயல்?"

"போர்ச் செயல்."

"போர்ச் செயலா?"

"ஆமாம். உனக்குத்தான் வாட்போர் தெரியும். வேலெறியத் தெரியும், சிலம்பாடவும் தெரியும்."

"தெரிந்தாலென்ன?"

"இதெல்லாம் போருக்குத் தேவையானவை? இனி நீ கற்க வேண்டியது ஒன்றுதான்."

"என்ன?"

"படைகளை நடத்த வேண்டியது."

"அவள் கண்கள் பிரமிப்பை உதிர்த்தன. "என்ன! என்ன! நானா! படைகளை நடத்துவதா?"

"ஆம்," என்ற வீரபாண்டியன் மேலும் சொன்னான்: "இருமுறை வீரரவி உன்னை களவாடப் பார்த்தான். ஆகையால் உன்னைக்கொண்டு அவனை ஒழிப்பதுதான் முறை. தவிர இளநங்கை, இந்திரபானுவும் இல்லை இப்பொழுது. எனக்கொரு துணைத் தலைவன் வேண்டாமா?" என்று.

இளநங்கையின் விழிகள் விழித்தது விழித்தபடி நின்றன. "உங்கள் புத்தி சுவாதீனத்தில் தானிருக்கிறதா?" என்று வினவினாள்.

"இல்லை. நீ அருகிலிருக்கும் போது சுவாதீனத்தில் இருப்பதில்லை. ஆனால் இந்த ஒரு விஷயத்திலிருக்கிறது," என்றான் வீரபாண்டியன் திடமாக.

"மன்னர்..." என்று மென்று விழுங்கினாள் இளநங்கை.

"ஒப்புக்கொண்டு விட்டார்" என்ற சொற்கள் அவர்களிருவரையும் தூக்கிவாரிப் போடவைத்தன.

இருவரும் ஒருவரிடமிருந்து மற்றொருவர் பிரிந்தெழுந்து விலகி நின்றனர். அவர்களுக்குப் பின்னால் சுந்தரபாண்டியன் மந்தகாச வதனத்துடன் நின்றுகொண்டிருந்தான்.

அத்தியாயம் 43

# பத்தினி ஆட்சியும் பாண்டியன் கனவும்

பரஸ்பரப் பிணைப்பிலிருந்து பிரிந்து நின்ற வீரபாண்டியனும் இளநங்கையும், மன்னன் அங்கு வந்து சிறிது நேரமாகியிருக்க வேண்டுமென்பதை அவன் மந்தகாச வதனத்தாலும் நகைப்பை உதிர்த்த செங்கக் கண்களிலிருந்தும் புரிந்துகொண்டதால் பெரும் சங்கடத்துக்குள்ளாகி, என்ன சொல்வதென்றறியாமல் மௌன விரதத்தையே கடைப்பிடித்தனர். அவர்கள் சங்கடத்தைக் கண்ட மன்னனே அவர்களை நோக்கி வந்து தனது மரமஞ்சத்தில் அமர்ந்து, "தம்பி! எங்கே, அந்த ஓலைகளைக் காட்டு, போர்த்திட்டத்தை நானும் உணர்ந்து கொள்கிறேன்," என்று கையை நீட்டினான்.

வீரபாண்டியன் அண்ணனை நோக்கிச் சற்றுத் திருதிருவென்று விழித்துவிட்டு ஐந்தாவது ஓலையைக் கையில் மடக்கி மறைத்துக்கொண்டு முதல் நான்கு ஓலைகளை மட்டும் மன்னனிடம் கொடுத்தான். மன்னன் நிதானமாக அந்த ஓலை ஒவ்வொன்றையும் ஆராய்ந்தான். அதிலிருந்த கோடுகளையும் குறிகளையும் பார்த்து, சிற்சில சமயங்கள், "நன்று, நன்று!" என்று சிலாகித்துச் சிரக்கம்பமும் செய்தான். சுமார் ஒரு நாழிகைக்கு மேலாகவே அந்த நான்கு ஓலைகளையும் ஒவ்வொன்றாக ஆராய்ந்து சில மாறுதல்கள் செய்து தம்பியிடம் நீட்டிய சுந்தரபாண்டியன், "தம்பி! நீ எதிரியைச் சந்திக்க உத்தேசித்து இருக்கும் இடங்கள், அவன் பின்வாங்கவோ, எதிர்த்துத் தாக்கவோ கூடிய வழிகள், எல்லாமே சரியாக

இருக்கின்றன. நமக்குள்ள குறைந்த படை பலத்தில் பெருங்காரியத்தைச் சாதிக்க உன் திட்டத்தைத் தவிர சிறந்தது வேறில்லை," என்று கூறவும் செய்தான்.

"அண்ணா! தங்களுக்குத் தெரியாததை நான் எதுவும் குறிப்பிடவில்லை ஓலைகளில். நாம் இருவரும் தென்மேற்கிலும் வடமேற்கிலும் எதிரியைச் சந்திக்கப் போவதால், எதற்கும் குறிப்புகளிருக்கட்டுமென்றே ஓலைகளில் திட்டத்தை வரைந்தேன்," என்றான் வீரபாண்டியன் தலைவணங்கி.

"சரி, ஐந்தாவது ஓலையைக் கொடு, " என்று சுந்தர பாண்டியன் சர்வசாதாரணமாகக் கையை நீட்டினான் தம்பியை நோக்கி.

வீரபாண்டியன் கை ஓலையை இறுக மூடிக் கொண்டது. "ஐந்தாவது ஓலையா?" என்று ஏதோ புரியாததுபோல் கேட்டான் வீரபாண்டியன்.

"ஆம். தம்பி! ஐந்தாவது ஓலை," என்றான் மன்னன் முகத்தில் எந்த உணர்ச்சியையும் காட்டாமலே.

"அண்ணா!"

"ஏன் தம்பி?"

"அதற்கும் திட்டத்துக்கும் சம்பந்தம் எதுவுமில்லை."

"தம்பி!"

"ஏன் அண்ணா?"

"இது வரையில் நமக்குள் எந்த ரகசியமும் கிடையாது..."

"ஆம்."

"இப்பொழுது மாத்திரம் எதற்கு?"

வீரபாண்டியன் பெரும் சங்கடத்துக்குள்ளானான். "அண்ணா! அந்த ஓலையில் திட்டத்தைப்பற்றி ஏதுமில்லை. ஏதோ கைக்கு வந்தபடி கிறுக்கியிருக்கிறேன்," என்றும் கூறினான் சங்கடம் குரலிலும் ஒலிக்க.

சுந்தரபாண்டியன் அதற்கும் மசியவில்லை. "அந்தக் கிறுக்கலை நானுந்தான் பார்க்கிறேன்," என்று கையை



மறுபடியும் நீட்டவே செய்தான். வேறு வழியின்றி வீர பாண்டியன் நீட்டிய ஐந்தாவது ஓலையை வாங்கிப் பல கோணங்களில் அதைப் பார்த்த சுந்தரபாண்டியன், "தம்பி! நீ சொன்னது முற்றிலும் சரி, முற்றிலும் சரி," என்று சிலாகித்தான்.

வீரபாண்டின் பதிலேதும் சொல்லாமல் இளநங்கை யைப் பார்த்தான். இளநங்கை தரையை நோக்கினாள். மெல்ல முறுவலும் காட்டினாள். சுந்தரபாண்டியன் கண்களை ஓலைமீது நாட்டியவாறு, "தம்பி! நீ சொன்னது சரி. சித்திரமும் கைப்பழக்கம். தெரியாமலா நமது பெரியோர்கள் அப்படிச் சொன்னார்கள்? ஆனால் தம்பி! இந்தக் கைப்பழக்கம் உனக்கு மதுரையில் கிடையாதே. கொற்கை வந்த சொற்ப காலத்திற்குள் ஏற்பட்டு விட்டதா?" என்றும் வினவினான்.

வீரபாண்டியனுக்குச் சங்கடத்திலும் சிறிது கோபம் துளிர்விட்டது. "என்னைப் பார்த்து நகைக்கிறீர்களா? அண்ணா?" என்று வினவினான், குரலில் உஷ்ணம் தெரிய.

"இதில் நகைக்க என்ன இருக்கிறது? சித்திரத்தை முதல் தரமாக எழுதியிருக்கிறாய். ஆனால் இதற்கும் மூல உருவத்துக்கும் பெருவித்தியாசமிருக்கிறது," என்று கூறிய சுந்தரபாண்டியன் இளநங்கையை ஏறெடுத்து நோக்கினான். "இளநங்கை! வாழ்வில் ஒரே நோக்கம் பரஸ்பர அன்புடையவர்களுக்கு இருப்பது சிலாகிக்கத்தக்கது. தம்பி பெருவீரன். அவனுக்குப் போர்ப் பழக்கமுள்ள பெண் கிடைப்பது பாண்டிய பரம்பரையில் அதிர்ஷ்டம், முக்கியமாக என் அதிர்ஷ்டம்," என்றும் கூறினான்.

இளநங்கை தன் அழகிய விழிகளை ஏறெடுத்து மன்னனை நோக்கினாள். முழுவுத் தோள்களுடனும் விசாலமான மார்புடனும் யாரையும் அச்சுறுத்தும் சிங்கக் கண்களுடனும் அவயவமெங்கும் வீரம் சொட்டக் காட்சியளித்த மன்னனைப் பார்த்து, "மன்னவா! இவர் ஏதோ விளையாட்டுக்குக் கிறுக்கிய ஓலை அது—" என்று ஏதோ சொல்ல முயன்றாள்.

அவளை இடைமறித்த சுந்தரபாண்டியன், "இளநங்கை! அரசகுல இளவல்களின் விளையாட்டில் நல்லதும் விளைவதுண்டு, துன்பமும் விளைவதுண்டு. அலமஞ்சன என்ற ரவிகுல இளவரசனின் விளையாட்டில் துன்பம் விளைந்தது. பாண்டிய இளவலின் இந்த விளையாட்டில் தமிழினத்துக்குப் பெரு நன்மை விளையும். தமிழகத்தில் முதல் பெண்மணி ஆயுதந் தரிக்கட்டும், படைகளை நடத்தட்டும், புதுமைக்கும் புரட்சிக்கும் பாண்டிய நாடு வித்திடட்டும்," என்றான்.

"ஆனால்..." இளநங்கை மீண்டும் ஏதோ சொல்ல முயன்றாள்.

சுந்தரபாண்டியன் ஒரு தந்தை பெண்ணை நோக்குவது போல் நோக்கிக்கொண்டே அவள் சொற்களை இடையிலேயே வெட்டிக் கூறினான்: "இளநங்கை! உன்னையும் என் தம்பியையும் பார்க்கையில் என் மனம் பூரிக்கிறது. நீங்களிருவரும் போர்க்கோலம் பூண்டு புரவிகளில் செல்வதைப் பார்க்க என் மனம் துள்ளப் போகிறது. சேரநாட்டுக்கும் இதற்குங்கூட ஒரு சம்பந்தம் உண்டு...", இந்த இடத்தில் மன்னன் கண்களில் கனவு விரிந்தது. அவன் மேலும் தொடர்ந்தான். "பெண்ணே! சேர நாடு தற்சமயம் தாய் வழி அரசு உடையது. சேர நாட்டில்தான் பத்தினித் தெய்வத்தின் முதல் பிரதிஷ்டை நடந்தது. மதுரையை எரித்த கண்ணகிக்குக் கோவில் கட்டிய சேரநாட்டையும் ஒரு பெண் ஏன் எரிக்கக் கூடாது? பெண்வழி அரசு நடக்கும் சேரநாட்டை ஒரு பெண் ஏன் வெற்றி கொள்ளக்கூடாது? அப்படித்தான் நடக்க வேண்டும். தம்பியின் கையைத் தெய்வந்தான் இந்தச் சித்திரத்தைத் தீட்ட வைத்தது. இந்திரபானுவின் பதவியை இன்று முதல் நீ வகிப்பாய். அதற்கான உத்தரவுகள் இன்று பிறப்பிக்கப்படும். நாளைக் காலைக்குள் நீ கோட்டை வீரர்களுக்கு அறிமுகமாவாய்." இதைச் சொன்ன மன்னன் நிதானித்தான். அவன் கண்கள் இளநங்கையையும் தாண்டி, வாயில் வழியாக வெளிப் பரப்பைக் கவனித்தன. பெரும் கனவு அவற்றில் தெரிந்தது.



மன்னனின் உணர்ச்சிப் பெருக்கையும், சொற்களில் தொனித்த வேகத்தையும் கண்களில் விரிந்த கனவையும் கண்ட காதலரிருவரும் பிரமித்து நின்றனர். மன்னனின் சொற்கள் ஓரளவு அச்சத்தைக்கூட விளைவித்தன இளநங்கையின் இதயத்துக்கு. "மன்னா! இதற்கு நான் தகுதியல்ல..." என்ற வார்த்தைகள் அவளிடமிருந்து உதிர்ந்தன.

மன்னன் உடனே பதில் சொல்லவில்லை. கடைசியில் "ஏன்?" என்று வினவினான்.

"பெண்களின் இடம் வீட்டுக்குள்," என்றாள் இளநங்கை.

"அவசியம் வரும்போது வெளியிலும் இடம் உண்டு," என்றான் சுந்தரபாண்டியன்.

"எந்த அவசியம்?" என்று வினவினாள் இளநங்கை.

"வைகையும் பொருநையும் புரண்டு மதுரைக்குள்ளும் கொற்கைக்குள்ளும் வந்தால், பெண்கள் வீட்டுக்குள் இருக்க முடியாது; வெளியில் வந்தாக வேண்டும். வெள்ளத்தை எதிர்த்து எதிர்நீச்சுப் போடவேண்டும். எதிரிகள் படையெடுத்து ஊருக்குள் புகுந்துவிட்டால் வெளியே வந்து போரிடாமல் என்ன செய்வது?"

"இது அப்படிப்பட்ட சமயமல்லவே?"

"அப்படிப்பட்ட சமயம்தான்."

"எப்படி?"

"நமது படைபலம் எதிரியின் படைபலத்தில் மூன்றிலொரு பங்குகூடக் கிடையாது. நமக்கிருப்பது சிறுபடை. படைகளை நடத்தும் திறன் வாய்ந்தவர் மூவர். நான், தம்பி, இந்திரபானு மூவர்தான். ஒருவர் இப்பொழுது இல்லை. இந்த நிலையில் படையெடுப்பு நம்மீது வந்து, தற்காத்துக் கொண்டாலே பெரிய விஷயம். நாம்போய் எதிர்ப்பதென்பது பெரும் ஆபத்து. வெற்றியுடன் முடிந்தால் பெரும் சாதனை!"

"ஆம்."

"இளநங்கை! பாண்டியன் ஒரு சிறு படையுடன் சென்று சேரனை வெற்றிகொண்டான் எனச் சரித்திரம் நம்மைப் பாராட்டப்போகிறது பார்,"* என்று மிகுந்த வேகத்துடனும் உற்சாகத்துடனும் கூறினான் பாண்டிய மன்னன்.

தீர்க்க திருஷ்டியுடன் மன்னன் அன்று சொன்ன சொற்களை இளநங்கை நம்பவில்லை. ஏதோ தன்னை ஊக்குவதற்கு மன்னன் அப்படிச் சொல்வதாகவே எண்ணினாள். ஆகவே ஏதும் பேசாமல் தலைதாழ்த்தி வணங்கி அவனிடமிருந்து விடை பெற்றுக்கொண்டாள். "தம்பி! படைத்தலைவியை விடுதியில் விட்டு வா. நாளை முதல் அவளுக்கு வேண்டிய அணிவகுப்பு முறைகளைப் போதிக்க ஆரம்பித்து விடு," என்று கூறினான்.

மன்னன் ஒரு வேளை தன்னைப் பார்த்து நகைக்கிறானோ என்று ஒரு விநாடி வீரபாண்டியனுக்குத் தோன்றினாலும், மன்னன் முகத்தை ஊன்றிப் பார்த்ததும் கொஞ்ச நஞ்சமிருந்த சந்தேகமும் பறந்துவிட்டது வீரபாண்டியனுக்கு. ஆகவே அவனும் தலைவணங்கி இளநங்கையைத் தொடர்ந்தான்.

இளநங்கையின் இதயம் அன்று பெரும் குழப்பத்தி லிருந்ததால் அவள் ஏதும் பேசாமலே முன்னால் நடந்தாள். ஏதோ பெரும் கனவொன்று தன்னைச் சூழ்ந்துகொண்டு விட்டதாக நினைத்தாள் அவள். 'பெண், கவசம் பூண்டு படைகளை நடத்துவதாவது!' என்று தன்னைத்தானே மீண்டும் மீண்டும் கேட்டுக்கொண்டாள். ஒரு முறை தலை நிமிர்ந்து கோட்டைப் பகுதியைப் பார்த்து, "இத்தனை வீரர்களும் பெண்ணுக்கு அடங்கி நடப்பார்களா?" என்றும் உள்ளத்தில் ஒரு கேள்வியை எழுப்பிக்கொண்டாள்

* 'Sundara Pandia proceeded with a Small force against the Chera King Veeraravi Udaya Marthanda Varman and destroyed him and his forces after ravaging Malainadu' – A History of South India by Prof. K.A. Neelakanta Sastry – Page 207.



இத்தகைய நினைப்புகளுடன் தனது விடுதியை அடைந்த அவள் உள்ளே புகாமல் விடுதித் தாழ்வரையிலேயே உட்கார்ந்துகொண்டாள். அவளைத் தொடர்ந்து வந்த வீரபாண்டியன் அவளுக்குப் பின்புறம் நின்றான்.

முன்புறம் கோட்டைக் காவலர் உலாவ, பின்புறம் காதலன் நிற்க, தாழ்வரையில் அமர்ந்திருந்த இளநங்கை கேட்டாள், "இதென்ன வேடிக்கை?" என்று.

அவள் உள்ளத்தில் ஓடும் எண்ணத்தைப் புரிந்து கொண்ட வீரபாண்டியன் சொன்னான். "இதில் வேடிக்கை எதுவுமில்லை. எனக்குப் புதிதாக உதித்த யோசனை. அரசர் அனுமதியும் கிடைத்துவிட்டது," என்று.

"மன்னர்...?" என்று ஏதோ கேட்க முயன்றாள் அவள்.

"அவர் முகத்தைத்தான் நீ பார்த்தாயே. அதில் விளையாட்டா இருந்தது?"

"இல்லை. இல்லை. பெருங் கனவுதானிருந்தது."

"பின் ஏன் சந்தேகம்?"

"என் பொறுப்பு?"

"மன்னர் கனவை நனவாக்குவது."

"என்ன அது? சேர நாட்டை வெற்றிகொள்வதா?"

"அதுவும் ஒன்று.

"வேறு எது?"

"பத்தினித் தெய்வத்தின் ஆட்சியை சேரநாட்டிலும் நடக்கச் செய்வது?"

எப்படி?"

"'மதுரையில் நடந்தபடி, அவளுக்குச் சிலம்பு இருந்தது."

"சேரநாட்டை எரிக்கச் சொல்கிறீர்களா?"

"நான் சொல்லவில்லை. அதுவே எரியும்."

"ஏன்?"

"பெண்ணுக்கு அநீதி விளைவித்த நகரங்கள் எல்லாமே வரலாற்றில் எரிந்திருக்கின்றன. இலங்கை

எரிந்தது. மதுரை எரிந்தது. இப்பொழுது சேரன் தலைநகர் எரியப்போகிறது. முத்துக்குமரியைச் சேரன் அபகரித்திருக்கிறான் என்பது நினைவு இருக்கட்டும்," என்று உணர்ச்சிப் பெருக்குடன் சொற்களை உதிர்த்த வீரபாண்டியன், "இன்றிரவு உணவருந்தி இளைப்பாறு இளநங்கை. நாளைக் காலையிலிருந்து உனக்குப் பயிற்சி ஆரம்பம்," என்று சொல்லி, விடுவிடு என்று படிகளில் இறங்கிச் சென்றான்.

"படையெடுப்பு, பத்தினி ஆட்சி, என்ன கோரம்! என்ன கோரம்!" என்று முணுமுணுத்துக்கொண்டாள் இளநங்கை.

## அத்தியாயம் 44

# பயிற்சி

மலைச்சரிவு விடுதியிலிருந்து வீரபாண்டியன் சென்ற பிறகு மங்கை இளநங்கையின் மனம் மீளாச் சிந்தனையில் ஆழ்ந்தது. கொற்கையின் முத்தங்காடியில் உலாவிய நாள் முதலாகத் தன் வாழ்வில் திடீர்திடீரென ஏற்பட்ட பல திருப்பங்களை எண்ணி எண்ணிப் பார்த்து இன்னும் எத்தனை திருப்பங்களிருக்குமோ, எத்தகைய திருப்பங்களிருக்குமோ என்று ஏங்கினாள். அத்தனை ஏக்கத்திலும், தான் இனிச் செய்யப்போகும் பணியில் சதா வீரபாண்டியன் அருகிலேயே இருக்க முடியும் என்ற எண்ணம் சிறிது மகிழ்ச்சியையும் அளித்தது கொற்கைக் கோட்டைக் காவலன் மகளுக்கு. வீரபாண்டியன் தன் உருவத்தை முதலில் ஆடையின்றிக் கோயில் தூண் சிற்பங்கள் போல் ஓலையில் வரைந்ததையும், பிறகு தலையில் கவசமும் இடையில் கச்சையும் போர்க்கலங்களும் தீட்டி, தன்னைப் பாண்டிய சேனையின் உபதளபதியாக அடித்து விட்டதையும் நினைத்து, 'ஆமாம், என்னை முதலில் எழுதியபடி எழுத, என்ன துணிவு அவருக்கு?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொள்ளவும் செய்தாள். அந்தக் கேள்வி அவள் முகத்தில் வெட்கத்தை விரித்தது. இதழ்களில் நாணம் நகை கூட்டியது. அந்த நாணத்துடன், மறுநாள் முதல் தான் பாண்டியப் படைகளின் உபதளபதி என்ற நினைப்பும் ஏற்படவே, அதற்குத் தான் தகுதிதானா என்று ஆத்ம சோதனை செய்யவும் முற்பட்டாள் அவள்.

கொற்கைக் கோட்டைத் தலைவரான வாணாதித்தர் அவளை மகளைப் போல வளர்த்ததும் உண்மை;

அவளுக்குப் போர்ப் பயிற்சி அளித்ததும் உண்மை. அதில் அவள் திறமையுடன் முன்னேறியதும் உண்மை. ஆனால் படைகளை அவள் ஒரு நாள் நடத்த நேரிடும், போருக்குச் செல்ல நேரடும் என்று அவர் கனவில் கூடக் கருதியதில்லை. பருவமடைந்த பிறகு அவள் கொற்கை வீதிகளிலும் முத்தங் காடியிலும் திரிவதைக்கூட ஆட்சேபித்தார். "அம்மா! என்ன இருந்தாலும் நீ பெண் என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்" என்று பல முறை சொல்லியும் இருக்கிறார். அந்த எச்சரிக்கையை மலைச்சரிவு விடுதியில் உட்கார்ந்த அந்த இரவிலும் நினைத்துப்பார்த்த இளநங்கை, 'அப்பா! உங்கள் இஷ்டத்துக்கு நேர்விரோதமான காரியம் இங்கு நடக்கிறதே. மன்னரும் இளவரசரும் என்னைத் தளபதியாக்க முயலுகிறார்களே. இதற்கு என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று கேட்டுக் கொண்டாள் உள்ளூர.

இத்தகைய பல நினைப்புகளால் உறக்கம் பிடிக்காமலும் உண்ணாமலும் இரண்டாவது ஜாமம்வரை மஞ்சத்தில் நெஞ்சக் கிளர்ச்சியுடன் உட்கார்ந்திருந்த இளநங்கை கடைசியாகப் படுக்கவும் செய்தாள். ஆனால் படுக்கையும் உறக்கத்தை அளிக்கக் கூடியதாயில்லை. கண்ணைத் திறந்திருந்த பொழுது உள் கூரையோ உள்ளிருந்த மற்றச் சூழ்நிலையோ கண்ணில் படவில்லை! வெளிப்புறமும் காவல் வீரர்களும் கோட்டை மதில்களும் புலப்பட்டன. கண்ணை மூடினாலோ கொற்கையில் பொருநைப் படித்துறையையும் வீரபாண்டியன் தன் நீராட்டத்தைப் பார்த்த காட்சியையும், சற்று முன்பு அவர் தன்னை எழுத்தாணி கொண்டு ஓலையில் வடித்ததையும் காண நேர்ந்தது. கண் மூட்டமும் திறப்பும் ஒரேவிதமாக இம்சை செய்ய நாழிகைகளை ஓட்டிய இளநங்கை, அசதி மிகுதியால் இரவின் கடைசி ஜாமத்தில் நன்றாக உறங்கிவிட்டாள்.

உறக்கம் விழித்தபோது பொழுது விடிந்து நான்கு நாழிகைக்கு மேலாகிவிட்டதால், கோட்டைப் பகுதியில் பெரு வெளிச்சம் வீசுவதைச் சாளரத்தின் மூலம் கண்டாள்



அந்தக் கூட்டழகி. அவள் எழுந்து மஞ்சத்தில் உட்கார்ந்து கண்களைத் துடைத்து மயிரைக் கோதிவிட்டுக் கொண்டு வெளிக்கதவின் தாளைத் திறந்தாள். திறந்ததும் பெரும் பிரமிப்புக் காத்திருந்தது அவள் கண்களுக்கு. கதவை ஒட்டிப் பூர்ண கவசத்துடன் நின்றிருந்த காவலர் தலைகளை நன்றாகத் தாழ்த்தி அவளை வணங்கினர். இளநங்கையின் கண்கள் அவர்களையும் தாண்டி விடுதியிலிருந்து இறங்கி ஓடிய படிகளுக்குச் சென்றன. அங்கும் இருவர் வாட்களை உருவியவண்ணம் நின்றிருந்தனர். இளநங்கைக்கு விஷயம் விநாடியில் புரிந்துவிட்டது. தான் அரசகட்டளைப்படி உபதளபதியாகிவிட்டதைப் புரிந்துகொண்டாள் அவள். வீரபாண்டியன் அது விஷயத்தில் காலந் தாழ்த்தவில்லை. யென்பது சந்தேகமறப் புரிந்தது அவளுக்கு. அடுத்து நடந்த ஒவ்வொரு காரியமும் வீரபாண்டியன் சுறுசுறுப்புக்கு அத்தாட்சி கூறியது.

வீரர்கள் வணக்கத்துக்கு லேசாக தலையசைத்துவிட்டுச் சென்ற இளநங்கை விடுதியின் பின்புறம் சென்று காலைக் கடன்களை முடித்து நீராடிப் புத்தாடையணிந்து முன் தாழ்வரைக்கு வந்ததும், இரு காவலர்களில் ஒருவன் உள்ளிருந்த சிறு பீடமொன்றை அவள் உட்கார வெளியே கொணர்ந்து போட்டான். அதில் அவள் அமர்ந்ததும், அவன் உள்ளே சென்று, சிறிது நேரத்தில் பாத்திரத்தில் பால் காய்ச்சி ஒரு தட்டில் வைத்துப் பயபக்தியுடன் அவளிடம் நீட்டினான். அவள் பால் அருந்திப் பாத்திரத்தைக் கொடுத்ததும், அதை உள்ளே கொண்டு சென்ற மற்றொரு காவலன் அவளுக்கு ஒரு வாள், ஒரு சிறுகோடரி இரண்டையும் கொண்டுவந்து நீட்டியதன்றி, அவள் அணிந்து கொள்ளப் போர்ச் சல்லடமொன்றும் கொணர்ந்தான். அந்தப் போர்க் கருவிகளையும் சல்லடத்தையும் கவனித்த இளநங்கை வேறு எதுவும் பேசாமல் உள்ளே போய் உடையணிந்து, வாளை இடையில் கட்டி, கச்சையில் கோடரி செருகிக்கொண்டு வெளியே

வந்தாள். அவள் வெளியே வந்ததும் வீரனொருவன் செய்த சைகை விளைவாகத் தூரத்திலிருந்த முரசு ஒன்று பலமாக ஒலித்தது. அதையொட்டி இளநங்கை விடுதிப் படிகளில் இறங்கி நடந்தாள். அதேசமயத்தில் மன்னர் விடுதியிலிருந்து இளவரசன் பூர்ண கவசத்துடன் வெளிவருவதையும் கவனித்தாள். அதன் விளைவாகச் சற்றே சலனப்பட்ட சித்தத்துடனும், தளர்ந்த கால்களுடனும் நடந்தாள் கோட்டைக் காவலன் மகள்.

அவள் நடையை வீரபாண்டியனும் கவனித்திருக்க வேண்டும். ஆகவே, அவள் மன்னர் விடுதியை அணுகியதும் படிகளில் இறங்கி அவளைச் சந்தித்த வீரபாண்டியன், "இளநங்கை! நீ இப்பொழுது பாண்டிய நாட்டின் உபதளபதி. கொற்கை வீதிகளில் சுற்றும் கோட்டைக்காவலன் மகளல்ல. உன்னிடம் உறுதியுள்ள நடையை எதிர்பார்க்கிறேன்," என்று வீரர்கள் முன்னிலையிலேயே கண்டிப்பு நிறைந்த குரலில் கூறினான். அவன் கண்டிப்பு அவள் கோபத்தைக் கிளறியது. "நான் பெண்" என்று கோபத்துடன் பதில் கூறினாள் அவள்.

"அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை," என்ற வீரபாண்டியன் குரலில் கண்டிப்பு அதிகப்பட்டதே தவிரக் குறையவில்லை.

"கவலையில்லையா?"

"இல்லை."

"ஏன்?"

"படையில் சேர்பவர்களுக்குச் சில நடைமுறைகள் உண்டு."

"இருக்கலாம். அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை." இதைச் சொன்ன இளநங்கையின் கண்களில் தீப்பொறி பறந்தது.

வீரபாண்டியன் கண்களில் உணர்ச்சியேதுமில்லை. வறண்ட பார்வையை அவள்மீது வீசினான். "கவலையிருக்க வேண்டும்," என்று கரகரத்த குரலில் கூறினான்.



"ஏன்?" என்று மீண்டும் சீறினாள் இளநங்கை.

"படை வீரர்களுக்குச் சில விதிகள் உண்டு. விதிகளை மீறினால் தண்டனையும் உண்டு," என்று வீரபாண்டியன் சுட்டிக்காட்டினான்.

"என்ன தண்டனை?"

"அது அவ்வப்போது தெரிவிக்கப்படும். நல்ல சுடும் வெய்யிலில் ஒரு ஜாமம் நிற்கவைப்போம். குற்றம் கடுமையானால் கொக்குப் பிடிக்கச் சொல்லுதல், கோதண்டம் கட்டுதல், இவையும் உண்டு.

இளநங்கை திடுக்கிட்டுப் போனாள். இந்தக் கடுமையான தண்டனைகளைத் தன் தந்தை விதித்தே பார்த்திருக்கிறாள் அவள். இத்தகைய தண்டனைகள் விதிக்கப்பட்டால் நிச்சயம் தன்னால் தாங்க முடியாதென்ற நினைவுக்கும் வந்தாள். 'இதனால்தான் சாதாரணமாகப் பெண்களை இத்தகைய பணிக்கு அனுமதிப்பதில்லை போலும்?'' என்று தன்னைக் கேட்டுக்கொள்ளவும் செய்தாள். அந்தச் சமயத்தில் தன் விஷயத்தில் வீரபாண்டியன், அடியோடு மாறி விட்டதையும் கவனித்தாள். அதனால் அவள் சிறிது துன்பத்தின் வசத்திலும் சிக்கினாள். ஆனால் அதைப்பற்றிச் சிறிதும் கவனிக்காத வீரபாண்டியன் சொன்னான்: "இளநங்கை! படைகள் கட்டுத்திட்டங்களால்தான்'' சரியாக இயங்க முடியும். ஆகையால்தான் படை வாழ்க்கை கடுமையான வாழ்க்கையாகிறது. இதில் சேர விரும்புவோர் தங்கள் ஆசாபாசங்கள், சுகதுக்கங்கள், இவற்றைப் பெரிதும் கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டியதாயிருக்கிறது. தவிர, வீரர்கள் சரியாகப் பணிபுரிய வேண்டுமானால், தலைவர்கள் முதலில் சரியாக இருக்கவேண்டும். உபதளபதியான நீ முதலில் சரியாக நடக்கவேண்டும்."

இளநங்கை சிறிது தன் கோபத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டாள். "என்ன சரியாக நடக்கவில்லை நான்?" என்றும் வினவினாள்.

வீரபாண்டியன் அத்தனை வீரர்களுக்கும் எதிரில் அவள் கால்களைப் பிடித்து வளைந்திருந்த முழந்தாளை நிமிர்த்தி, "இப்படி நில். கால்கள் வளையக்கூடாது. நடை கம்பீரமாகவும் நேராகவும் இருக்கவேண்டும்" என்று கூறியதன்றி, "முகத்தை இப்படி உயரத் தூக்கு," என்று முகவாய்க் கட்டையைப் பிடித்தும் நிமிர்த்தினான்.

அந்த நிலையில் இளநங்கை மிகக் கம்பீரமாக நின்றாள். சற்றுஎட்ட நின்று அவள் நிலையைக் கண்ட வீரபாண்டியன் "இப்பொழுது சரியாக இருக்கிறது. வா என்னுடன்" என்று கூறியவாறு, அவள் பக்கத்தில், அவள் கொற்கையிலேயே கண்டு மகிழ்ந்த அந்த ஒரே சீரான நிதான நடையுடன் நடந்து சென்றான். அவளும் அவனுக்குச் சரியாகச் சிறிது கஷ்டப்பட்டே நடந்தாள். ஆண்மகனைப் போல் நடப்பது, அவளுக்குப் பிடிக்கவில்லைதான். இருப்பினும், வீரபாண்டியனின் கண்டிப்புக்குப் பயந்து, கம்பீரமாக, நிதானமாக, ஒரே சீராக அணிவகுப்பில் செல்லும் படைவீரனைப் போல நடந்தாள் அந்த அழகுப் பாவை.

கோட்டை மத்தியில், கோட்டையிலிருந்த ஆயிரம் பேருள்ள படையும் திரண்டு நின்றிருந்தது. அந்தப் படைக்கு வீரபாண்டியன் இளநங்கையை அறிமுகப்படுத்தினான் சில சொற்களில். "கொற்கைக் கோட்டைக் காவலன் மகன் பாண்டியப் படையின் உபதளபதியாக நியமிக்கப் பட்டிருப்பது உங்களுக்குக் காலையிலேயே அறிவிக்கப் பட்டிருக்கிறது. இனி இவர் இடும் ஆணை என் ஆணை. இவரிடமிருந்து உங்களுக்குக் கிடைக்கும் உத்தரவுகளில் கொற்கை இளவரசனின் ராஜமுத்திரை இருக்கும். கோடரியும் யானையும் இணைந்த முத்திரை அது. அதைப் பொறிக்க இவருக்கு இலச்சினை இன்று அளிக்கப்படும்" என்று சில வார்த்தைகள் இரைந்து உதிர்த்த வீரபாண்டியன், "இப்பொழுது உபதளபதி புரவியேற்றத்தைப் பார்வையிடுவார்,' என்று கூறித் தனது வலது கையை உயர்த்தினான்.



அவன் பக்கத்திலிருந்தவன் முரசைப் பலமாக அடித்தான். திடீரென அம்புகள்போல் அணிவகுத்த வீரர்கள் பாய்ந்து சிதறினர். அடுத்த சில நிமிடங்களில் அவர்கள் புரவி ஏறி வரிசையாகச் சென்றனர். சுமார் ஐந்நூறு புரவி வீரர்கள் முதலில் சாதாரண நடை நடத்தினர் புரவிகளை, பிறகு புரவிகள் சிறு ஓட்டம் ஓடின. கடைசியில் கோட்டை மத்தியில் சுழன்று சுழன்று பறந்தன. அதன்மீது இருந்த வீரர்களின் வாட்கள் ஆகாயத்தில் சுழன்றன. புரவிகள் பலபடி குறுக்கும் நெடுக்குமாகப் பாய்ந்தன. சக்கரமாகச் சுழன்றன. குதிரைகள் கனைப்பும் வீரர்கள் போர்க் கூச்சலும் அந்தக் கோட்டையின் மத்தியைப் போர்க்களமாகவே அடித்தன.

அந்தப் போர்ப் பயிற்சியைப் பிரமித்த கண்களுடன் பார்த்துக்கொண்டு நின்றாள் இளநங்கை. இத்தனை மகா வீரர்களை இயக்கத் தனக்கு என்ன யோக்கியதை என்று நினைத்தாள். ஆனால் அந்த யோக்கியதைக்கான பயிற்சி அடுத்த ஜாமத்தில் துவங்கியது. வீரபாண்டியன் தன் வாளை உருவி, அவளையும் வாளை உருவிக் கொள்ளச் சொல்லி கோட்டை நடுவில் நல்ல வெயிலில் அவளுடன் போராடினான். பல புதுப்புது அடி வரிசைகளைப் போதிக்கவும் செய்தான். பிறகு புரவி ஏற்றப் பயிற்சியும் சிறிது நேரம் அளித்தான். அவளுக்கே புரவி ஏற்றம் தெரியும். இருப்பினும் வீரபாண்டியன் அளித்த பயிற்சி அவளுக்குப் புதுமையாயிருந்தது. புரவியைத் திருப்பும் முறை, பாய வைக்கும் முறை, பெரும் இடைஞ்சல்களைத் தாண்டவைக்கும் முறை, இவை ஒவ்வொன்றிலும் புதுமையையும், இணையிலாத் திறமையையும் வீரபாண்டியன் காட்டினான். அந்தத் திறமையை அவளுக்கு அளிப்பதிலும் ஆர்வம் காட்டினான். அந்தப்பயிற்சிக் காலத்தில் அவள் பெண் என்பதையே மறந்தான் வீரபாண்டியன். சாதாரண வீரன் ஒருவனை நடத்தும் கண்டிப்புடனும், முரட்டுத்தனத்துடனும் நடத்தினான். பகல் உச்சி வேளையில் பயிற்சியை முடித்து அவளை விடுதி

செல்லவிட்ட வீரபாண்டியன், "உபதளபதி, இன்னும் ஒரு நாழிகைக்குள் உணவை முடித்துக்கொண்டு மன்னர் விடுதிக்கு வந்து சேர்," என்று கூறிவிட்டுச் சென்றான்.

வீரபாண்டியன் அளித்த போர்ப் பயிற்சியால் மிகுந்த களைப்புடன் தனது இல்லம் வந்த இளநங்கை, ஆயாசத்தைப் போக்கிக்கொள்ள அருவிக்குச் சென்று குளிர்ந்த நீரில் நீராடினாள். பிறகு அவசர அவசரமாக உடை உடுத்திக் கொண்டு உணவு முடித்து மன்னர் விடுதிக்கு வந்தாள். முன் மண்டபத்தில் மன்னர் இல்லை. வீர மஞ்சத்தில் ஓலைகள் பல கிடந்தன! எழுத்தாணிகள் இரண்டிருந்தன. கடுக்காய் மையும், வெண் பஞ்சாடைத் துண்டுகளும் இருந்தன. அதையெல்லாம் பார்த்தவண்ணம் உட்கார்ந்த இளநங்கையை நோக்கிக் காலம் தாழ்த்தாமல் சொன்னான் வீரபாண்டியன். "இளநங்கை! போர்களின் வெற்றி போர் அரங்கத்தில் மட்டுமல்ல நிர்ணயிக்கப்படுவது, மன்னர் விடுதிகளிலும், படைத்தலைவர் விடுதிகளிலும்கூட நிர்ணயிக்கப்படுகின்றன. சரியாகச் சேர்க்கப்படும் படையைப் போல, சரியாக வகுக்கப்படும் திட்டமும் வெற்றிக்கு அவசியம்," என்று கூறிவிட்டு ஓலைகள், எழுத்தாணிகள், பஞ்சாடை, மை, கோழியிறகு இவற்றின் துணைக் கொண்டு உத்தரவுகளைத் தீட்டுதல், இலச்சினை பதிவித்தல், திட்டங்களை வகுத்தல் இவற்றையும் போதித்தான். "இந்தா, இலச்சினை பொறிக்க இதை வைத்துக்கொள்" என்று தன் மடியிலிருந்து முத்திரை மோதிர மொன்றையும் எடுத்து அவள் கையில் அணி வித்தான். அந்த மோதிரத்தைக் கண் கொட்டாமல் பார்த்தாள் இளநங்கை. பெருவிலையுள்ள வைரங்கள் கொண்ட அது கோடரி, யானை, மீன் மூன்றையும் இணைத்த சித்திரமாக அமைந்திருந்தது. "இதை இப்படிப் பொறிக்க வேண்டும்," என்று வீரபாண்டியன் அவள் கையைத் திருப்பி மோதிரத்தின் வைரங்கள் ஓர் ஓலையில் படும்படி அழுத்தி எடுத்தான். அந்த ஓலையில் கோடரி, யானை, மீன் கலந்த இலச்சினை விழுந்ததைக் கண்ட



இளநங்கை முதலில் அதிசயித்தாள். பிறகு புரிந்து கொண்டாள். ஓலையைத் துளைப்பதற்காகவே வைரங்கள் பெரிதாக அமைக்கப்பட்டுக் கூர்மையாகவும் ராவப் பட்டிருக்கின்றனவென்று.

இலச்சினை பொறிப்பதுபற்றிக் கூறிய பிறகு சொன்னான் வீரபாண்டியன். "இன்று கொற்கைக்கும், கொட்டுந்தளத்திற்கும் அங்குள்ள வீரர்களில் பாதிப் பேரை இங்கு அனுப்ப உத்தரவு அனுப்பிவிடு. மதுரையிலிருந்து மட்டும் ஆயிரம் பேர் கொண்ட புரவிப் படையைக் கேள்," என்று கூறிவிட்டு எழுந்து சென்றான். அவன் கட்டளைப்படி. நங்கை. அதைத் தன் தந்தைக்கே எழுத வேண்டி வந்ததை நினைத்து மெல்ல நகைத்தும் கொண்டாள். அன்று முதல் அவள் கட்டளை அங்கு கொடிகட்டிப் பறந்தது. அவள் பயிற்சியும் இடைவிடாது தொடர்ந்தது. நான்கு நாள் கழித்து அதைக் கண்டு பாண்டிய மன்னனே பெரிதும் மகிழ்ந்தான்; "தம்பி! இந்தப் பெண் நல்ல சூடிகை!" என்றும் சிலாகித்தான்.

வீரபாண்டியன் அதற்குப் பதில் சொல்லவில்லை. "மன்னவா! படைகள் தயாராகிவிட்டன. புறப்படத் தங்கள் அனுமதி தேவை," என்றான்.

"எப்பொழுதும் புறப்படப் போகிறாய் தம்பி?" என்று வினவினான் மன்னன்.

"மதுரையிலிருந்தும், கொற்கையிலிருந்தும் வீரர்கள் வந்துவிட்டார்கள். உங்கள் உத்தரவு கிடைத்தால் நாளையே புறப்படுகிறேன்," என்றான் வீரபாண்டியன்.

பாண்டியன் உத்தரவு கொடுத்தான். மறுநாள் பாண்டியன் படை புறப்பட்டது சேரநாட்டை நோக்கி. இரு கூறுகளாகப் பிரிந்து இரு கூர்வேல்களைப்போல் சேர நாட்டை நோக்கி நகர்ந்தது.

## அத்தியாயம் 45

# முதல் மோதல்

காட்டுக் கோட்டையிலிருந்து சேரநாட்டை நோக்கி நடந்த பாண்டியப் படையின் பிரிவொன்றின் முகப்பில், வீரபாண்டியனருகில் புரவி மீதமர்ந்து சென்ற இளநங்கையின் இதயத்தில் பிரமிப்பு, கவலை, அச்சம் ஆகிய மூன்று உணர்ச்சிகளும் எழுந்து தாண்டவமாடிக் கொண்டிருந்ததால், அவ்வப்பொழுது திரும்பி நோக்கிய வீரபாண்டியனின் ஆசைக் கண்களைக்கூட அவள் கண்கள் சந்திக்க மறுத்தன.

உபதளபதியாகிய மூன்றாம் நாளே தான் பெரும் படையை நடத்திச் செல்லவேண்டிய அவசியம் நேரிட்டதை நினைத்து நினைத்து அவள் பிரமித்துக் கொண்டிருந்ததால், பக்கத்தில் கேட்ட வீரபாண்டியனின் சாம்பல் நிறப் புரவியின் ஒரே சீரான குளம்பொலியோ பின்னே அணிவகுத்துத் தொடர்ந்து வந்துகொண்டிருந்த வீரர்களின் புரவிகள் திட்டமாக எழுப்பிய குளம்படிச் சத்தமோ அவள் காதில் விழவில்லை. சுமார் இரண்டாயிரம் வீரர்கள், அவர்களில் பாதிப்பேர் புரவிப் படையினர், மலைப் பாதையில் தன்னையும் வீரபாண்டியனையும் வரிசையாகத் தொடர்ந்து வருவதும், அந்த வரிசை பெரும் மலைப்பாம்புபோல் பாதை வளைவுகளில் வளைந்து வளைந்து திரும்புவதும் கண்கொள்ளாக் காட்சியாகவே இருந்தது அவளுக்கு. ஒருமுறை அந்தப் பெரு வளைவைத் திரும்பிப் பார்க்கவும் செய்தாள் அவள். ஆனால் அந்தக் காட்சி அவளுக்கு ஆனந்தத்தை அளித்ததா, கவலையையும் அச்சத்தையும் அளித்ததா என்பது அவளுக்கே புரியவில்லை.



இந்தப் பெரும்படை வளைவு அவளுடைய மூன்று நாள் உழைப்பால் ஏற்பட்டதென்பதை அவள் உணர்ந்தே இருந்தாள். ஓலைகளில் தான் பதித்த வைர மோதிர ராஜ முத்திரையின் அடையாளமும் உத்தரவுகளுமே, அந்த வீரர்களை இரண்டே நாட்களில் காட்டுக் கோட்டையில் கூட்டிவிட்டதென்பதை அவள் அறிந்திருந்தாலும், அந்த வீரர்களுக்குத் தலைமை தாங்கி வந்த படைத்தலைவர்களெல்லாம் தனக்குத் தலை வணங்கியதை அந்தச் சமயத்தில் அவள் நினைத்துப் பார்த்தாலும், அத்தனை வணக்கத்துக்குத் தான் உரியவளா என்ற சந்தேகம் மட்டும் அந்தச் சமயத்திலும் இருந்தது இளநங்கைக்கு.

உபதளபதியான அன்றிலிருந்தே, வீரபாண்டியன் உத்தரவுப்படி அவள் ஓலைகளில் உத்தரவுகளைத் தீட்டினாள். போர்ப் பயிற்சியை இடைவிடாது பெற்றாள். படைகள் அணிவகுப்பையும் அன்றாடம் பார்த்து அவற்றைத் திருப்பும் முறைகளையும், படைகளை மோத வைக்கும் வகைகளையும் அறிந்தாள் அதுமட்டுமல்ல. அந்த ஒவ்வோர் அலுவலிலும் பெரும் தேர்ச்சியையும் அறிவையும் கூடக் காட்டினாள்.

இருப்பினும், அந்த மூன்று நாளும் அவள் பிரமிப்பிலும் அச்சத்திலுமே ஆழ்ந்திருந்தாள். காதலனாய் இருந்த வீரபாண்டியன் போர் என்ற நினைப்பு ஏற்பட்ட வினாடி முதல் வெறும் யந்திரமாக மாறிவிட்டதையும், தானொரு பெண் என்பதைக்கூட மறந்து தன்னை நடத்தியதையும் நினைத்தாள். காட்டுக் கோட்டை வெளிப் பரப்பில் படைகளைத் திருப்பும் முறைகளைப் போதித்த போதும், அணிவகுப்பின் போதும் அவன் பலமுறை தன்னைப் பலர் முன்னிலையில் அதட்டியது. கையைப் பிடித்து முரட்டுத்தனமாக இழுத்து, “இப்படிச் செய்” என்று சீறியது முதலானதை நினைத்துப் பார்த்த அவள் போர் வந்தால் அவன் மனிதனல்லவென்று முடிவு செய்தாள்.

இத்தனையிலும் அவன் போர் அலுவல்களில் காட்டிய வேகம் அவளுக்குப் பெரும் பிரமிப்பாயிருந்தது.

இரவில் உச்சி வேளைக்குத் தன்னை விடுதிக்குச் செல்ல அனுமதித்த பின்பும் அவன் படை வீரர் இருக்குமில்லங்களுக்குச் சென்றதையும், சதா கோட்டையில் மூலை முடுக்குகளில் உலாவியதையும் பார்த்திருந்தாளாகையால், அவனுக்குப் போர் என்றால் உறக்கம் அவசியமா என்ற சந்தேகம் கூட அவளுக்கு ஏற்பட்டிருந்தது. தவிர தன் ஓலை உத்திரவுகளுக்குப் பணிந்து, கொட்டுந்தளத்திலிருந்தும், கொற்கையிலிருந்தும் மதுரையிலிருந்தும் படைகள் கால தாமதமில்லாமல் வந்து கொணடிருந்தாலும், அத்தனை சமயங்களிலும் வீரபாண்டியன் முன்னின்று வரவேற்றதும், தன்னைக் கூப்பிட்டனுப்பி அந்தப் படைகளுக்கு இருக்க இடமளிக்க உத்தரவிட்டதும் பெருவியப்பாயிருந்தது அவளுக்கு.

இப்படிப் படைகளை வரவேற்று, இருக்க இடமளித்து, பிறகு அணிவகுத்துப் பயிற்சி பார்த்த நேரம் போக, மீதி தாங்களிருவரும் தனித்திருந்த நேரங்களிலும் வீரபாண்டியன் படைகளைப் பிரிக்க வேண்டிய முறைகளைப் பற்றியும், தாக்க வேண்டிய இடங்களைப் பற்றியும் ஓலைகளில் படம் வரைந்து தனக்கு விளக்கிக் கொண்டிருந்ததையும் நினைத்துப் பார்த்த அவள், அத்தனை வீராவேசமுள்ளவனுக்கு வீரபாண்டியன் என்று பெயர் வைத்தது எததனை பொருத்தம் என்றும் எண்ணினாள்.

புதிதாக ஏற்பட்ட உபதளபதிப் பதவியால் இப்படிப் பிரமிப்பு ஏற்பட்டதன்றி, தினசரி அதிகரித்துக்கொண்டு வந்த பொறுப்பின் காரணமாக கவலையும் அச்சமும் அதிகமாகிக் கொண்டு வந்தது அவளுக்கு. அவள் கவலையையும் அச்சத்தையும் வீரபாண்டியனும் கவனித்திருந்தானாகையால் இரண்டாம் நாளில் இருவரும் தனித்து அரசு விடுதியிலிருந்த சமயத்தில் கேட்டான், "இளநங்கை! கவலை உன் மனத்தை வாட்டுகிறதாகத் தெரிகிறதே!" என்று. அச்சம் என்ற சொல்லை அவன் உபயோகப்படுத்தவில்லை. அவள் மனம் புண்படும் என்ற காரணத்தால்.



அவன் கேள்விக்கு இளநங்கை உடனடியாகப் பதில் சொல்லவில்லை. தனது மடியில் அவன் விசிறியிருந்த இரண்டு ஓலைகளிலிருந்த கோடுகளைப் பார்த்தாள். சில விநாடிகள். பிறகு பதிலுக்குக் கேட்டாள். "குருவியின் தலையில் பனங்காயை வைத்தால் குருவி மகிழ்ச்சியுடனா இருக்கும்?" என்று.

வீரபாண்டியன் விழிகள் அவளைக் கூர்ந்து நோக்கின. "குருவிமீது யாரும் பனங்காயை வைக்க மாட்டார்கள். பனம்பழத்தையும் அதைவிடக் கனமான வஸ்துக்களையும் அனாயசமாகத் தூக்கிச் செல்லக் கூடிய ராஜாளியிடம் தான் பெரும் பொறுப்புகள் ஒப்படைக்கப் படும்" என்று அவன் உதடுகள் சொற்களை உதிர்த்தன.

அவன் சொற்களின் பொருளைப் புரிந்துகொண்ட அவள் சொன்னாள், "என் சக்தி எனக்குத் தெரியும்?" என்று.

"அவரவர் சக்தி அவரவர்க்குத் தெரிவது துர்லபம். தங்கள் சக்தியை அதிகமாக மதிப்பிடுபவர்கள் உண்டு. குறைவாக மதிப்பிடுபவர்களும் உண்டு. சரியாக மதிப்பிடுபவர்கள் மிகச் சொற்பம். பெரிய மகான்களே இதில் தவறியிருக்கிறார்கள்" என்று சுட்டிக்காட்டினான் வீரபாண்டியன்.

"மகான்கள் தவறுகிறார்களா? சுய மதிப்பீட்டிலா?" இளநங்கையின் கேள்வியில் வியப்பிருந்தது.

"ஆம் இளநங்கை" என்று வீரபாண்டியன் திட்டமாகக் கூறினான்.

"நீங்கள் சொல்வது விசித்திரமாக இருக்கிறது" என்றாள் வாணாதித்தர் மகள்.

"இலங்கைக்கு நெருப்பு வைத்த மாவீரனான அநுமானுக்கே சுயசக்தி தெரியவில்லை. அதை இன்னொருவர் சொல்லித்தான் தெரிய வேண்டியிருந்தது" என்று புராண உவமை காட்டிய வீரபாண்டியன் மேலும் சொன்னான்: "இளநங்கை! படைகளை நடத்துவதற்குத் தேவையான திறமை உனக்கில்லையென்றால் நான் அந்தப்

பணிக்கு உன்னைத் தேர்ந்தெடுத்திருக்க மாட்டேன். போர் விஷயத்தில் என் காதல்கூட குறுக்கே நிற்காது. அதன் இன்ப ஒலிகள்கூட என் மதியை மயக்காது. ஏனென்றால் போர் ஒருநாட்டின் சக்தியை நிர்ணயிக்கிறது. அதில் தனி மனிதர் ஆசாபாசங்களுக்கு இடமில்லையென்பதை நானறிவேன். ஆகவே போர் உடையில் இல்லாதபோதும், இருக்கும் போதும் நீ என் உபதளபதியென்பதை நினைவில் வைத்துக் கொள்" இதை மிகக் கண்டிப்புடன் சொன்னான் வீர பாண்டியன். அதே கண்டிப்புடன் நடந்து கொள்ளவும் செய்தான்.

படைகள் புறப்படும் அன்று காலை சந்தித்த போது கூட அவன் படைகளைப் பிரிக்கும் முறை பிரிந்து செல்ல வேண்டிய முறை முதலியவற்றைப் பற்றியே அவனிடம் பேசினான். அப்பொழுது சுந்தரபாண்டியனும் இருந்தான். "இளநங்கை, படையை முழுவதும் கணக்கிட்டதில் நாலாயிரம் வீரர்கள்தான் தேறுகிறார்கள். இவர்களில் இரண்டாயிரம் வீரர்களுடன் மன்னர் செல்வார்" என்றான் வீரபாண்டியன்.

இளநங்கை தலையை அசைக்க வேண்டுமென்பதற் காக அசைத்தான். சுந்தரபாண்டியன் பதிலேதும் சொல்ல வில்லை. வீரபாண்டியன் கையிலிருந்த கோடுகளைக் கவனித்துக் கொண்டிருந்தான். அதைப்பற்றியும் இளநங்கை யிடம் விளக்கினான் வீரபாண்டியன். "இந்தக் கோட்டை யிலிருந்து கால்காத தூரத்தில் பாதை இரண்டாகப் பிரிகிறது. ஒன்று சேரநாட்டுத் தென்பகுதிக்குச் செல்கிறது. இன்னொன்று வடமேற்கில் சென்று கோட்டாற்றில் கலந்து சேரநாட்டு வடபகுதியில் இறங்குகிறது. இந்தப் பாதையில் நாம் செல்லுகிறோம். நமது படை முதலில் செல்லும். இரண்டு நாள் கழித்து மன்னர் கிளம்புவார்."

"இரண்டு நாள் கழித்தா?" என்று வினவினான் இளநங்கை.

"ஆம், நாம் கோட்டாற்றின் உற்பத்தி நிலையைப் பிடிக்க இரண்டு நாட்கள் ஆகும். அங்கிருந்து கோட்டாற



றுக் கரை ஓரமாகச் சென்று கோட்டாற்றுக் கரைக் கோட்டையை அடைய இன்னும் இரண்டு நாட்கள் ஆகும்." என்று சுட்டிக் காட்டினான் வீரபாண்டியன்.

"அதனால்?" ஏதும் விளங்காமல் கேட்டான் இளநங்கை.

"நாம் கோட்டாற்றுக் கரைக்குச் செல்வதைச் சேர நாடு அறிய இரண்டு நாட்கள் பிடிக்கும். அதை நோக்கிச் சேரன் படை நகர்ந்த பிறகு இங்கிருந்து மன்னர் கிளம்பினால் மன்னர் சேரநாட்டுத் தென் எல்லைக்குள் இறங்கும் போது சேரனின் பெரும்படை கோட்டாற்றுக் கரையில், அதாவது சேரநாட்டு வடஎல்லையில் இருக்கும். மன்னர் படை தனது எல்லையில் மலைச்சரிவுக் காட்டில் காத்திருப்பது சேரனுக்குத் தெரியாது. சேரன் அங்கு படை இருப்பது தெரியாமல் வடக்கே நம்மை நோக்கி வருவான். அவன் நாமிருக்கும் இடம் வந்ததும் முதன் முதலாக அவனுடன் நாம் கை கலப்போம். இதற்கிடையில் மன்னர் சேரநாட்டின் விளிம்பைச் சூறையாடுவார்..." என்ற வீர பாண்டியன் கோரப் புன்முறுவல் கோட்டினான்.

அவன் திட்டம் இளநங்கைக்குப் புரிந்தது. முதலில் கோட்டாற்றுக் கரைக்குச் சேரனை இழுத்துப் பின்னர், அவன் நாட்டை மன்னர் சூறையாடினால், கோட்டாற்றுக் கரையில் அவனை முறியடித்த பின்னர், தலைநகர் நோக்கி மீளுவான். அப்பொழுது அவனை மன்னர் இடைமறித்துத் தாக்குவார். திட்டமெல்லாம் சரிதான். ஆனால் இந்தச் சிறு படையைக் கொண்டு கோட்டாற்றுக் கரைக் கோட்டை யைப் பிடிப்பதெப்படி என்று நினைத்தான். அவன் நினைப்பைக் கவனித்த வீரபாண்டியனின் கோர நகை அதிகமாக விரிந்தது. "எப்படியென்பதை நீயே பார்க்கப் போகிறாய்" என்று அவன் அந்த நகைப்புக்கிடையே கூறினான். அத்துடன் "சரி இளநங்கை! இன்று மாலை நீ புறப்படத் தயாராயிரு" என்று கூறி அவனை அனுப்பி விட்டான். பிறகு மன்னனுடன் போர்த் திட்டத்தைப் பற்றி விவாதித்தான். இளநங்கைக்கு ஏற்பட்ட சந்தேகம் மன்னனுக்கும் ஏற்பட்டதால் அதையும் தீர்க்க வேண்டிய

தாயிற்று வீரபாண்டியனுக்கு. "இளநங்கை கேட்டதில் அர்த்தமிருக்கிறது தம்பி!" என்றான் மன்னன்.

"சேரப்படையை இரண்டாயிரம் வீரர்களைக் கொண்டு பிடிப்பது எப்படி என்றுதானே?" என்று வினவினான் வீரபாண்டியன்.

"ஆம் தம்பி" என்றான் மன்னன்.

"இப்பொழுது அந்தக் கோட்டையில் அதிகப் படை இருக்காது." என்று கூறினான் வீரபாண்டியன்.

"எப்படி அத்தனை நிச்சயமாகச் சொல்கிறாய்?" என்று வினவினான் மன்னன்.

பதிலுக்கு கச்சையிலிருந்து ஓர் ஓலையை எடுத்து மன்னனிடம் நீட்டிய வீரபாண்டியன், "இப்படிப் பல ஓலைகளை வேவுக்காரர்களிடம் கொடுத்துச் சேர நாட்டில் உலாவவிட்டிருக்கிறேன்" என்றான்.

ஓலையைப் பார்த்த மன்னன் விழிகள் வியப்பால் மலர்ந்தன. "என்ன தம்பி! நான் சேரநாட்டை நோக்கிப் படையெடுக்கப் போவதைத் திட்டமாகக் குறிப்பிட்டிருக்கிறாயே?" என்றான் வியப்புக் குரல் பலமாக ஒலிக்க.

"ஆம், அண்ணா! நீங்கள் சேரநாட்டுத் தலைநகருக்குக் கிளம்பிவிட்டதாகக் குறிப்பிட்டிருக்கிறேன். ஆகவே அங்கு உங்களைச் சேரன் முதலில் எதிர்பார்ப்பான். கோட்டாற்றுக் கரையில் அதிகப் படைகளை அனுப்ப மாட்டான். இரண்டு நாள் கழித்து நான் கோட்டாற்றுக் கரையை நோக்கிச் செல்லுவதை அறிந்ததும் படைகளை அங்கு அனுப்புவான். அந்தப் படைகள் வருவதற்குள் கோட்டை என் வசமிருக்கும். கோட்டையைச் சேரன் படைகள் முற்றுகையிட்டு நிற்கும். அந்தச் சமயத்தில், பலவீனப்பட்ட சேர நாட்டு முகப்பை நீங்கள் எதிர்ப்பீர்கள். எங்கு திரும்புவதென்று சேரன் படை திணறும்" என்றான் வீரபாண்டியன்.

சுந்தர பாண்டியனுக்குப் போர்த் திட்டம் புரிந்தது. "இருப்பினும் முற்றுகையிட்டிருக்கும் சேரர் பெரும் படையை எப்படிச் சமாளிப்பாய்?" என்று வினவினான்.



"அதற்கும் திட்டமிருக்கிறது அண்ணா" என்ற வீர பாண்டியன் மன்னனுக்கு அந்தத் திட்டத்தையும் விவரித்தான். அதைக் கேட்ட சுந்தரபாண்டியன் தலையை அசைத்து அதை ஆமோதித்தான். "மிகத் துணிகரமான திட்டம் தம்பி. தேவி மீனாட்சியின் அருளால் வெற்றி படைய வேண்டும்," என்றான்.

அன்று மாலை, வீரபாண்டியன் உத்தரவுப்படி காட்டுக் கோட்டையில் இரண்டாயிரம் வீரர்கள் அணி வகுத்து நின்றார்கள். கதிரவன் சாயும் வேளையில் பூர்ண கவசமணிந்து வீரபாண்டியனும், இளநங்கையும் புரவிகளில் ஆரோகணித்துப் படை நடுவுக்குச் சென்றனர். தாரைகள் முழங்கின; முரசுகள் சப்தித்தன. தனது விடுதித் தாழ்வரையிலிருந்த ஜடாவர்மன் கையை உயர்த்தி ஆசி கூறினான். வீரபாண்டியன் புரவியும், இளநங்கையின் புரவியும் அக்கம் பக்கத்தில் நகர்ந்தன கோட்டை வாயிலை நோக்கி. அவர்களுக்கு இரண்டாகப் பிரிந்து வழிவிட்ட புரவிப்படை அவர்களுக்குப் பின்னால் மெல்லமெல்ல ஒன்று சேர்ந்தது. பிறகு ஒரே கூறாகத் தொடர்ந்தது. புரவித் தொடருக்குப் பின்னால் காலாட்படை தொடர்ந்தது.

அப்படிப் படைகளை அழைத்துச் சென்ற வீர பாண்டியன் அடுத்த இரண்டு நாட்கள் இடைவிடாது பயணம் செய்து மூன்றாம் நாள் காலையில் கோட்டாற்றின் உற்பத்தி நிலைக்கு வந்து படைகளைத் தங்க அனுமதித்தான். அன்று சற்று இளைப்பாறிக் காலைக் கடன்களை முடித்துக்கொண்டதும், "இளநங்கை! இன்று முதல் நாம் கோட்டாற்றின் - இக்கரையோரமே சென்று கோட்டாற்றுக் கரைக் கோட்டையை அடைவோம். எனது திட்டங்கள் சரியானால், நாம் இன்னும் இரண்டு நாட்களில் சேரநாட்டுக் கோட்டையில் இருப்போம்" என்றான்.

இளநங்கை அதைச் சிறிதும் நம்பவில்லை. இரண்டாயிரம் வீரர்களைக் கொண்டு ஒரு பெரும் கோட்டையைப் பிடிப்பது சாத்தியமில்லையென்றே எண்ணினாள். தவிர, அன்று முதல் வீரபாண்டியன்

பிறப்பித்த உத்தரவுகளும் பெரு விபரீதமாயிருந்தன. தான் கோட்டாற்றுக் கரைக் கோட்டையை நோக்கி வருவதைப் பகிரங்கப்படுத்த ஒற்றர்களையும் கோட்டாற்றுப் பிராந்தியம் பூராவுக்கும் அனுப்பினான். இதனால் வெகுண்ட இளநங்கை, "திடீரென்று ரகசியமாகத் தாக்காமல் எதிரியை எச்சரிப்பது விவேகமா?" என்றும் கேட்டாள்.

"எதிரியைப் பொறுத்தது" என்று பதில் கூறினான் வீரபாண்டியன்.

"எதிரி...?" என்று ஏதோ கேட்க முற்பட்டாள் இளநங்கை.

"கோட்டையிலிருந்து வெளியே வந்து நம்மை நதி இறங்கும் மலைச்சரிவில் சந்திப்பான்..." என்றான் வீரபாண்டியன்.

"கோட்டைக் காவலை விட்டு வெளிவர அவனுக்குப் பைத்தியமா?" என்று வினவினாள் இளநங்கை கோபத்துடன்.

வீரபாண்டியன் அவளை நோக்கிப் புன்முறுவல் செய்தான். "பொறுத்துப் பார்" என்றும் கூறினான்.

அவன் எதிர்பார்த்ததுதான் சரியாயிருந்தது. நான்காவது நாள் அவர்கள் கூட கோட்டாற்றுக்கரை நகரின் முகப்பை அணுகுமுன்பாகவே மலைச்சரிவில் சேரன் படை காத்திருந்தது. முதல் மோதல் அங்கேயே ஏற்பட்டது. ஆனால் எத்தனை பயங்கர மோதல் அது!

## அத்தியாயம் 46

# பயங்கரப் பெண்

கேரளத்தில் இன்று உள்ள கொட்டாரக்கரா என்ற சிற்றூரும், அதிலிருந்து சில மைல் தூரத்திலுள்ள கொல்லம் என்ற துறைமுகமும், பாண்டிய நாட்டின் காயலும் கொற்கையுமிருந்த நிலையில் இருந்தன. காயல் துறைமுகமாகவும் கொற்கை அதன் அங்காடியாகவும் கிழக்குக் கடலுக்கு இருந்தது போலவே, மேற்குக் கடலுக்குக் கொல்லம் துறைமுகப் பட்டினமாகவும் கொட்டாரக்கரா என்ற கோட்டாற்றுக்கரை அதன் அங்காடியாகவும் விளங்கி வந்தன. பண்டை நாளில் காயலுக்கும் கொற்கைக்கும் பாண்டிய நாட்டிலிருந்த முக்கியத்துவம் கொல்லத்துக்கும் கோட்டாற்றுக் கரைக்கும் சேரநாட்டில் இருந்துவந்தது. மேற்குக் கடல் வாணிபத்தின் அங்காடியா யிருந்த காரணத்தால் பெரும் காவலுடனும் சிறப்புடனும் விளங்கிய கோட்டாற்றுக்கரை, பலமான கோட்டையுடனும் காவலுடனும் விளங்கி வந்ததென்றால் அதில் வியப்பில்லையல்லவா? அத்தகைய பலமான கோட்டையை இரண்டாயிரம் வீரர்களைக் கொண்டு கைப்பற்றி விடலாமென வீரபாண்டியனிட்ட திட்டத்தைப் பற்றி இளநங்கை சந்தேகங்கொண்டாளென்றால் அதிலும் ஆச்சரியப்படுவதற்கு என்ன இருக்கிறது?

இருப்பினும் மலையடிவாரத்தில் நின்றிருந்த சேரர் படையைக் கண்டதும் இளநங்கையின் இதயத்திலிருந்த சந்தேகங்கூட ஓரளவு குறையத் தொடங்கியது. கீழேயிருந்த சேரன் படை அவள் எதிர்பார்த்தது போல் பெரும் படையாயிருந்தாலும், அதன் அணிவகுப்பு மலைச்சரிவில் இறங்கும் புரவிப்படையின் வேகத்தைத் தாங்கக்கூடிய

நிலையில் இல்லையென்பதை உணர்ந்தாள் இளநங்கை. சேரன் படையில் சுமார் நாலாயிரம் வீரர்கள் இருந்தாலும், அவற்றில் பெரும்பாகம் புரவிப் படையாயிருந்ததை அவள் கவனித்தாள். தவிர மீதியுள்ள சுமார் ஆயிரம் காலாட்களும் புரவிப்படையின் இரு பகுதிகளிலும் பிரித்துநிற்க வைக்கப் பட்டிருப்பதையும் பார்த்துப் பெரும் பலவீனமான அணிவகுப்பை எதிரி செய்திருப்பதை உணர்ந்தாள்.

அவள் கண்கள் சென்ற திசைகளையெல்லாம் கவனித்த வீரபாண்டியன் புன்முறுவல் கொண்டான். "உப தளபதி! முதல் போரில் இறங்கு முன்பாகவே படை அணிவகுப்பை எடை போடப் புரிந்துகொண்டாயே!" என்ற பாராட்டுச் சொற்களும் அவன் உதடுகளிலிருந்து உதிர்ந்தன.

அதுவரை மலையடிவாரத்தில் நின்ற சேரன் படைப் பிரிவை நோக்கிக்கொண்டு நின்ற இளநங்கை தன் விழிகளை வீரபாண்டியனை நோக்கித் திருப்பினாள். தனது சாம்பல் நிறப் பெரும் புரவியின் பக்கங்களில் முழந்தாள்களை ஊன்றி சற்று எழுந்து நின்ற வீரபாண்டியன் வதனம் பார்ப்பதற்குக் கண்கொள்ளாக் காட்சியாய் இருந்தது அவளுக்கு. அப்பொழுது மாலை நேரம் அணுகிக் கொண்டிருந்ததால் கடலில் மூழ்க யத்தனித்துக் கொண்டிருந்த கதிரவனின் மஞ்சள் கிரணங்கள் அவன் கவசங்களில் தாக்கிப் பதிலொளி கிளப்பியதால், அந்தப் பிரதிபலிப்பு அவன் முகத்திலும் ஜொலித்துக் கொண்டிருந்தது. அந்த அக்கினிக் கொழுந்தில் விரிந்த அவன் கழுகுப் பார்வையும், பயங்கர முகமாறுதலும், முகத்தின் அழகுக்குக் கழுகின் வேகத்தையும் பார்வை யையும்கூட அளித்திருந்தது. சிறு பட்சிகள் மீது இறங்கத் தயாராயிருக்கும் பெரிய வல்லூறு போல் கீழேயிருந்த சேரர் படையை எடை போட்டான் பாண்டிய இளவரசன். அப்படிச் சில விநாடிகள் எடை போட்டு அவளை நோக்கித் தன் கழுகுக் கண்களை திருப்பிய வீரபாண்டியன் சொன்னான்: "உபதளபதி! நீ! நினைத்தது சரி. எதிரி



காலாட் படை நடுவில் நிறுத்தி புரவிப்படையை இரு தூண்களாகப் பிரித்துப் பக்கங்களில் நிறுத்தியிருக்க வேண்டும்" என்று.

"மலைச்சரிவில் வேகமாக இறங்கும் புரவிகள்மீது அம்பு எய்து கொல்ல தரையில் மண்டியிட்டு உட்கார்ந்து வில் வளைத்து அம்பு தொடுக்கும் காலாட்படை உதவும். அதை எதற்காகப் பக்கவாட்டில் நிறுத்தியிருக்கிறான் எதிரி?" என்று வினவினாள் இளநங்கை.

"எதிரிக்கு நமது பலம் தெரிந்திருக்கிறது" என்று கூறினான் வீரபாண்டியன்.

"ஆம், ஆம்," என்று கூறினாள் இளநங்கை.

"ஒற்றர்களைக் கொண்டு நானே தெரியப்படுத்தி னேன் இரண்டு நாட்களுக்கு முன்பு" என்று வீரபாண்டியன் நினைவுறுத்தினான் அவளுக்கு.

"கோட்டாற்றுக் கரைமீது இளைப்பாறுகையில் முன்னோடிகளை அனுப்பினீர்களே? அதுதான் தெரியுமே எனக்கு."

"அதன் உபயோகம் இப்பொழுது தெரிகிறதா?"

"என்ன உபயோகமோ?"

"இரண்டாயிரம் வீரர் கொண்ட சிறு படை எதிரியின் பெரும் படையை நேர்முகமாகத் தாக்கும் என்று எந்தப் படைத் தலைவனும் எதிர்பார்க்கமாட்டான். சிறு படை எப்பொழுதும் இரு கூறாகப்பிரிந்து பக்கவாட்டுகளில் தாக்கும் என்பதுதான் சம்பிரதாயப் போர். சம்பிரதாயத்தை நாம் சிறிது மாற்றுகிறோம்." இதைச் சொன்ன வீரபாண்டியன் இளநங்கையை உற்று நோக்கினான்.

அப்பொழுது அவன் போர்முறை அவளுக்குப் புரிய வில்லை. ஏதும் விளங்காத பார்வையை அவன்மீது வீசினாள். "நீங்கள் சொல்வது விளங்கவில்லை." என்றாள்.

வீரபாண்டியன் அவள் கண்களுடன் தனது கண்களை நன்றாக உறவாட விட்டுக் கூறினான். "உபதளபதி! நமது படை இருகூறாகப் பிரிந்து

பக்கவாட்டுகளில் இறங்கித் தாக்கும் என்று எதிர் பார்க்கிறான் எதிரி. அது சம்பிரதாயப் போர். அதனால் தான் பக்கவாட்டுகளில் வில் வீரரை நிறுத்தி வைத்திருக்கிறான். நமது படைகள் பிரிந்து மலைச் சரிவில் இறங்கித் திரும்பிப் பக்கவாட்டுகளில் வருமானால், எதிரி காலாட்படையினர் மண்டியிட்டு வில்வளைத்துப் புரவிகளின் வயிறுகளில் அம்பெறிவார்கள். புரவிகள் அலறி விழும். வீரர்கள் உருண்டு புரளுவார்கள். அந்தச் சமயத்தில் எதிரியின் புரவிப்படை இரண்டாகப் பிரிந்து மலைச் சரிவில் உருண்டு எழுந்திருக்க முயலும் வீரர்கள்மீது பாய்ந்து விடும். அப்பொழுது முடிவு ஒன்றுதான். நமது படை அழிந்துவிடும். இதுதான் வழக்கம்."

அந்த விளைவை நினைத்துப் பார்க்கவும் அஞ்சினாள் இளநங்கை. "அப்படியானால் நாம் என்ன செய்யப்போகிறோம்?" என்றும் வினவினாள் அச்சத்துடன்.

வீரபாண்டியன் புரவியில் நன்றாக அமர்ந்து நிமிர்ந்தான். பிறகு கூறினான் "பழக்கத்தை மாற்றப் போகிறோம்?" என்று.

"அப்படியானால்..." என்று துவங்கிய இளநங்கை வாசகத்தை முடிக்கவில்லை. வீரபாண்டியனின் துணிகரத் திட்டம் அவளுக்கு மெல்லப் புலனாகியது.

"நமது புரவிப்படை நேராக மலைச் சரிவில் வேகத்துடன் இறங்கும்..." என்றான் வீரபாண்டியன்.

"உம்!" இளநங்கை மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டாள். உபதளபதியாகப் படைக்குத் தலைமை வகித்து நடத்தும் முதல் போர் தனக்கு அது என்று நினைப்பினால்.

"மலைச்சரிவு இறக்கம் நமக்கு அதிக வேகத்தைத் தரும். அந்த வேகத்துடன் இறங்கினால் நமது புரவிப் படையின் தாக்குதலை எதிரியின் புரவிப்படை தாங்க முடியாது. நாம் இறங்கும் வேகத்திலேயே தாக்கி அதைப் பிளந்துவிட வேண்டும்" என்று கூறிய வீரபாண்டியன் மேற்கொண்டு அவளுடன் சம்பாஷணையில் இறங்காமல் உத்தரவுகளைப் பிறப்பித்தான்.



"உபதளபதி! நமது புரவிப் படை இப்பொழுது லேசாக இரண்டாகப் பிரியும். சிறிது நேரம் இறங்காமல் காலம் தாழ்த்தும். எதிரி தனது திட்டம் சரிதானென்று நினைப்பான். ஒரு பிரிவின் தலையில் நீயும், இன்னொன்றின் தலையில் நானும் நிற்போம். அப்படிப் பிரிந்த வண்ணமே மெல்ல நமது இரு பிரிவுகளும் சில அடிகள் மலைச் சரிவில் இறங்கும். பிறகு, திடீரென நாமிருவரும் ஒன்று சேர்ந்து பாய்ந்து இறங்குவோம். எதிரியின் படையை நோக்கி. இதே சமயத்தில் நமக்குப் பின்னாலிருக்கும் படைகளும் ஒன்று பட்டுக் கோட்டை வாசலை இடிக்கும். பெரும் மரத்தூண் போல் எதிரிமீது மோதும். நாமிருவரும் எதிரிப் படை மீது விழுந்ததும், நான் படையை ஊடுருவிச் சென்று விடுகிறேன். நீ விளிம்பிலேயே நின்று போரிடு. நான் எதிரிப் படையை ஊடுருவிச் சென்றபின் திடீரெனத் திரும்பித் தாக்குவேன். உன் படைப்பிரிவு முன் விளிம்பிலும் என் படைப் பிரிவு பின் விளிம்பிலும் இருக்க, இடையே சேரன் புரவிப்படை அகப்பட்டுக் கொள்ளும். கதவுகளுக்கிடையில் அப்பளம்போல் நொறுங்கிவிடும்" என்றான் வீர பாண்டியன்.

இளநங்கை அவன் உத்தரவைப் புரிந்து கொண்டதற்கு அடையாளமாகத் தலையை அசைத்தாள். அதன் பின்பு தனக்குப் பின்னாலிருந்த காலாட்படைத் தலைவனொருவனை அழைத்துச் சொன்னான் வீரபாண்டியன். "புரவிப் படை இறங்கிப் பாதி தூரம் சென்றதும் காலாட்படை இரு பிரிவாகப் பிரிந்து மலைச்சரிவுகளில் இறங்கி எதிரியின் இரு பக்கங்களிலு முள்ள காலாட்படையுடன் போரிடட்டும். இதனால் காலாட்படையுடன் காலாட்படை மோதும். புரவிப்படை யுடன் புரவிப்படை மோதும். புரிகிறதா?"

புரிந்துகொண்டதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான் காலாட்படைத்தலைவன். கடைசியாக இளநங்கையை நோக்கிய வீரபாண்டியன், "இளநங்கை! உன் முதல் போர் இது! இதில் வீரவாகை நீ சூடிவிட்டால் உன்

பெயர் வரலாற்றில் நிலைக்கும்'' என்று அன்புடன் கூறினான். எதிரிப் படைகளைக் கண்ட பிறகு முதல் முதலாக அவன் தன் பெயரைச் சொல்லி அழைத்ததை உணர்ந்த இளநங்கை, "இன்னும் நான் பெண் என்பதை நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறார்" என்று தனக்குள் கூறிக்கொண்டாள். அந்த நினைப்பு அவளுக்குப் பெரும் இன்பத்தை அளித்தது. அந்த இன்பம் இணையற்ற பலத்தையும் அளித்தது. காதலனின் பக்கத்தில் நின்று போராடும் பாக்கியம் தனக்கு ஏற்பட்டதை நினைத்துப் பெருமிதம் அடைந்த இளநங்கை, வீரபாண்டியன் வாளை உயர்த்திய அதே சமயத்தில் தன் வாளையும் உயர்த்தினாள்.

அந்த இருவர் வாட்களும் உயர்ந்ததும் கொம்புகள் ஊதின. முரசுகள் ஆர்த்தன. புரவிப் படை இரண்டாகப் பிளவுபட்டு மெல்ல மெல்ல மலைச்சரிவில் இறங்கியது. ஒரு பிரிவின் தலையில் இறங்கிக் கொண்டிருந்த இளநங்கை கதிரவன் மறைந்து விட்டதையும், இருள்சூழ முயலுவதையும் கண்டாள். எதிரியின் புரவிப்படை பெரும் சுவர்போல அவள் கண்களுக்கெதிரே காட்சியளித்தது. அப்படையினர் இருள் சூழுமுன்பாக முன்னெச்சரிக்கையுடன் பந்தங்களையும் ஆங்காங்கு கொளுத்திக் கொண்டதையும் கவனித்தாள்.

வீரபாண்டியனின் சாம்பல் நிறப் புரவி ஒரே நிதானமான நடையுடன், பொதிய மலைக்காட்டில் கேட்ட அதே சீரான குளம்பொலியுடன் மலைச்சரிவில் இறங்கியது. அந்த நிதானத்திலேயே இளநங்கையும் தன் புரவியை இறக்கினாள். இப்படிச் சில அடி தூரம் இரு பிரிவுகளாகப் பாண்டியப் படை இறங்கியதும், வீரபாண்டியன் வாள் ஆகாயத்தில் திடீரென எழுந்து மும்முறை ஆடியது. கொம்புகள் பீறிட்டு அலறின. இளநங்கை தனது புரவிப் படைக்கு வாட்சைகை செய்து, வீரபாண்டியனின் புரவியுடன் தன் புரவியை இணைத்தாள். பிரிந்த பாண்டியப் படை கூடிய விநாடியில் வெகு வேகத்துடன் மலைச்சரிவில் பாய்ந்து சென்றது.



அடுத்து நிகழ்ந்தது பெரும் பயங்கரம். பாய்ந்து வரும் பாண்டியப் புரவிப் படையை எதிர்க்கப் புரவிப் படையைத் தவிர வேறு மார்க்கமில்லாததால் புரவிகளிலிருந்து வேல்களை எறிய உத்தரவிட்டான் சேரர் படைத்தலவன். சில வேல்கள் பறந்தவுடனேயே இறங்கிவிட்ட பாண்டியப் படை பெருவேகத்துடன் எதிரியுடன் மோதிவிட்டது.

படைகள் மோதிய வேகத்தால் சற்றே தளர்ந்த எதிரியின் புரவிப்படை, பூகம்பத்தால் பீடிக்கப்பட்ட கட்டிடம் போல் ஒருமுறை உலுங்கி விரிசல் கொடுத்தது. வீரர்களை வெட்டியும், வேலால் தாக்கிப் புரவிகளிலிருந்து வீழ்த்தியும் உட்புகுந்து விட்ட வீரபாண்டியன் எதிரியின் படையை ஊடுருவிச் சென்றான். இளநங்கையும் உருவிய வாளாலும் வேலாலும் எதிரிப் படையின் ஒரு பகுதியைத் தாக்கினாள். அந்தப் போர் அவளுக்குக் கன்னி முயற்சி, புது அனுபவம். தன்னந்தனியே வாளையும் வேலையும் அவள் கையாண்டு, கொற்கையின் துஷ்ட வாலிபர்களைச் சமாளித்திருக்கிறாள். கொற்கைப் படைப் பயிற்சியிலும் பங்கு கொண்டிருக்கிறாள். ஆனால் இத்தகைய பயங்கரப் போரில் அவள் ஈடுபடுவது முதல் தடவை. அதற்கு அவளை வீரபாண்டியன் பலமாகத் தயார் செய்திருந்தான். எதிரி தாக்கும்போது குதிரையைத் திருப்பும் முறை, வாளையும் வேலையும் உபயோகப்படுத்தும் முறை, அனைத்தும் போதித்திருந்தான். ஆனாலும் அனுபவத்தில் அவை வருவது இப்பொழுதுதானே?

இருப்பினும் பயிற்சியை நன்றாகப் பயன்படுத்தினாள் இளநங்கை. அவள் மார்பையும் முகத்தையும் காத்த இரும்புக் கவசத்தின்மீது தாக்கிய வேல்களையும் வாட்களையும் லட்சியம் செய்யாமல், எதிரியின் புரவிப் படையைத் தாக்கினாள். வீரபாண்டியன் உத்தரவுப்படி விளிம்பிலேயே நின்று தனது படைகளைத் தாக்க உத்தரவிட்டாள். சுமார் இரண்டு நாழிகைக்குள் வீர பாண்டியன் எதிரிப் படையை ஊடுருவிக் கடைசிவரை

சென்று திடீரெனத் திரும்பினான். அவன் படைப்பிரிவுக்கும் இளநங்கையின் படைப்பிரிவுக்கும் இடையே சேரர் புரவிப்படை அகப்பட்டுக் கொண்டது.

போர் மும்முரமாக நடந்தது; புரவிகள் ஈட்டிகள் தாக்கி அலறி விழும் ஒலிகளும், வாட்களும் ஈட்டிகளும் உராயும் ஒலிகளும், காயமுற்று விழும் வீரர்களின் மரண ஓலங்களும் பெரும் பயங்கரத்தை விளைவித்தன. புரவிப் படை போராட முற்பட்ட சிறிது நேரத்துக்குள் கைகலந்த காலாட்படையின் கோஷம்வேறு வானைப் பிளந்தது. இருள் மூண்டு விட்டதால் பந்தங்களின் ஜ்வாலைகள் கூடப் பயங்கரமாகத் தெரிந்தன.

அரை ஜாமத்திற்குள் எதிர்பாராதவிதமாக முறியடிக்கப்பட்ட எதிரிப்படை, கோட்டைக்குப் பின்வாங்க முயன்றும் பயனில்லை. பின்புறத்தில் மீண்டும் சுழன்று சென்ற வீரபாண்டியன் புரவிப்படை அவர்களைத் தேக்கித் தாக்கியது. ஆகவே கோட்டைத் தலைவன் சமாதானச் சங்குகளை ஊதப் பணித்தான். அந்தச் சங்கொலிகள் கேட்டதும் சேரர் படையின்பகுதி போர் நிறுத்தம் செய்தது. புரவியின்றி நாலைந்து வீரர்களுடன் நடந்துவந்த எதிரிப் படைத்தலைவனைப் புரவி மீதிருந்தே சந்தித்த வீரபாண்டியன், "உங்கள் பெயர்?" என்று வினவினான்.

"விஜயவர்மன்," என்று பதில் கூறினான் கோட்டைத் தலைவன்.

"விஜயவர்மரே! நீங்கள் பெரும் வீரர்; சம்பிரதாயப் படி போர் நடந்திருந்தால் உங்களை நான் வென்றிருக்க முடியாது." என்றான் வீரபாண்டியன்.

எதிரியின் பாராட்டுகளைக் கேட்ட விஜயவர்மன் கண்கள் வியப்புடன் வீரபாண்டியனை ஏறிட்டு நோக்கின. "நன்றி," என்ற ஒற்றைச்சொல் துயரத்துடன் உதிர்ந்தது அவன் நாவிலிருந்து. அத்துடன் அவன் கூறினான், "கோட்டைக் கதவுகளைத் திறக்க உத்தரவிட்டு விட்டேன்," என்று.



வீரபாண்டியன், "நீங்களும் புரவியொன்றில் ஏறி வாருங்கள்" என்று கூறிவிட்டு, இளநங்கையை நோக்கித் திரும்பி, "உபதளபதி! சரணடைந்தவர்களைக் காவல் செய்ய ஏற்பாடு செய். பிறகு நீயும் புறப்பட்டுக் கோட்டைக்கு வா. கோட்டைத் தலைவன் மாளிகையில் என்னைச் சந்தி," என்று உத்தரவிட்டுத் தன் புரவியைத் திருப்பினான கோட்டையை நோக்கி.

அப்பொழுதுதான் இளநங்கையை நோக்கிய விஜயவர்மன் வாயைப் பிளந்தான். "இது...இது" என்று தடுமாறவும் செய்தான்.

புரவியைச் சற்றுத் தேக்கிய வீரபாண்டியன் புன்முறுவல் செய்து, "பெண்தான், இருப்பினும் பயங்கரப் பெண். இவன் போராடியதைத்தான் நீங்கள் பார்த்திர்களே!" என்று கூறிப் பெரிதாக நகைத்துவிட்டுக் கோட்டையை நோக்கிப் புரவியை நடத்தினான்.

பாண்டியப் படையின் உபதளபதி ஒரு பெண்ணென்று அறிந்ததும் சிலையெனச் சில விநாடிகள் நின்ற விஜயவர்மனும் தன்னைச் சமாளித்துக்கொண்டு புரவியொன்றில் ஏறி வீரபாண்டியனையும் அவன் வீரர்களையும் தொடர்ந்து சென்றான். சென்ற நிலையிலும், "உண்மை, பயங்கரப் பெண்தான்" என்று சொல்லிக் கொண்டே சென்றான்.

## அத்தியாயம் 47
# சிகிச்சை

கோட்டாற்றுக்கரைத் தலைவனான விஜயவர்மன், தான் பெண்ணென்றறிந்ததும் தன்னை நோக்கி வாயைப் பிளந்து பிரமித்ததை எண்ணிப் பார்த்த இளநங்கை போர்க்களத்தில் புரவி மீதமர்ந்திருந்த அந்தச் சமயத்திலும் புன்முறுவல் கொண்டாள். தன்னைப் பயங்கரப் பெண்ணென்று வீரபாண்டியன் சொல்லிப் போனதை நினைத்ததும் அவளுக்குச் சிறிது ஆத்திரம் வந்த தென்றாலும் அந்த ஆத்திரத்திலும்கூட இன்பம் கலந்து தானிருந்தது. தனக்குப் பயங்கரப் பட்டத்தை அளித்து விட்டு நூறு வீரர்களும், விஜயவர்மனும் பின் தொடரக் கோட்டையை நோக்கிச் சென்றுகொண்டிருந்த வீரபாண்டி யனைச் சிறிது நேரம் நின்ற இடத்திலிருந்தே உற்று நோக்கினாள். கேவலம், படை அணிவகுப்பினாலும் தாக்க வேண்டிய முறையை முன்னோக்கி வகுத்துக்கொண்ட தாலுமே அரை ஜாமத்திற்குள் போரை வெற்றிகரமாக முடித்துக் கொண்ட வீரபாண்டியன், கோட்டையை நோக்கிச் சென்ற அந்தத் தருணத்திலும் எந்தவிதப் பதற்றத்தையும் காட்டாததையும், போரில் அசுரத்தனமாகப் பாய்ந்த அவன் சாம்பல் நிறப் புரவிகூட வழக்கமான நிதானமான ஒரே சீரான அந்தப் பழைய நடையைப் போட்டுக்கொண்டு சென்றதையும் கவனித்த அந்த வீரப் பெண்மணி, புரவிக்கும் எசமானனுக்குமுள்ள ஒற்றுமையை நினைத்து வியப்புப் பார்வையொன்றையும் அந்தத் திசையில் வீசினாள்.

முதலில் விஜயவர்மன், அடுத்தபடி வீரபாண்டியன், பின்னால் சுமார் நூறு புரவி வீரர்கள் பந்தங்களின் ஒளியில் சென்றுகொண்டிருந்த நிலையில், வீரபாண்டியன் உரு[illegible] மட்டும் அதிக உயரமாகத் தெரிந்ததைக் கண்ட இளநங்[illegible] 'மனிதர்களில் இவர் உயர்ந்தவர்தான். சந்தேகமில்ல[illegible] என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள். பிறகு [illegible] அலுவலைக் கவனிக்கப் புரவியைத் திருப்ப[illegible] போர்க்களத்தைக் கவனித்தாள். மலைச்சரிவின் கீழேயுள் சமநிலத்தில் போர் நடந்திருந்தாலும் அவள் எதி[illegible] படையின் முன் விளிம்பிலேயே தாக்கித் தேக்கிவிட்ட[illegible] விளைவாக மலைச்சரிவின் முனையில் நின்றிருந்தபடியா[illegible] எதிரே விரிந்த படுகளத்தை நன்றாகப் பார்வையி[illegible] முடிந்தது அவளால். ஆங்காங்கு பாண்டிய வீரர்க[illegible] தங்கியிருந்த பந்தங்களின் வெளிச்சத்தில் அந்தப் படுகள[illegible] கோரக் கதையைச் சொல்லியது.

வேல் தாக்கி மாண்ட வீரர்களின் சடலங்கள் [illegible] மல்லாந்து கிடந்ததன்றி விழித்த கண்ணை வானை நோ[illegible] யும் வெறித்துப் பார்த்துக்கொண்டு கிடந்தன. வாள் தாக்[illegible] புரவியிலிருந்து கீழே உருண்டு விட்ட சிலர் பூமியை முத்தமிட்டுக் கொண்டிருந்தனர். புரவிகள் சில வேலா[illegible] தாக்குண்டு விழுந்தாலும் உயிர் போகாமையால் உயிருக்[illegible] மன்றாடிக் கால்களைப் பயங்கரமாக உதைத்து[illegible] கொண்டிருந்தன. சட்டென்று சாய்ந்து விட்ட வீரர்களி[illegible] குருதி பாறைகள்மீது தெளித்து பந்த வெளிச்சத்தி[illegible] பயங்கரச் சிவப்பைக் காட்டின. சில புரவிகள் மர[illegible] கனைப்புக் கனைத்தன. வீரர் சிலர் படுகாயமுற்றதா[illegible] ஆங்காங்கு முனகிக்கொண்டிருந்தனர். இன்னும் சில[illegible] எழுந்திருக்க முயன்று முடியாமல் தொப்பென்று விழுந்[illegible] கொண்டிருந்தனர். ரத்தமும் குரூரமும், கொலையு[illegible] இம்சையும் கலந்த அந்த படுகளக் காட்சி இளநங்கையி[illegible] இதயத்தில் பெரு வேதனையைத் தந்தது.

இருப்பினும் கடமையைச் செய்யவேண்டி[illegible] காரணத்தால் தனது புரவி வீரர்களில் சிலரை அழைத்[illegible] நிராயுதபாணிகளாய் நின்ற எதிரி வீரர்களை ஒன்[illegible] திரட்டும் படிக்கும், காயமடைந்தவர்களை ஒருபுற[illegible]

சேர்க்கும் படிக்கும் உத்தரவிட்டாள். அவள் உத்தரவுப்படி சுற்றிலும் புரவிகள்மீது வளைய வந்த வீரர்கள் எதிரிப் படையில் இறவாமல் மிகுந்தவர்களைத் திரட்டிப் புரவி வளையத்துக்குள் இருத்தினார்கள். காலாட்களை விட்டுக் காயமடைந்தவர்களை ஒருபுறம் தூக்கிச் சேர்க்க வைத்தார்கள். இந்த ஏற்பாடுகள் நடக்கக் கிட்டத்தட்ட ஒரு ஜாம நேரம் பிடித்ததால் அதற்குள் கோட்டைக்குள்ளிருந்து காயமடைந்தவரைத் தூக்கிச் செல்லப் பாரி வண்டிகளும் வரவே, அவற்றில் காயமுற்றோரைத் தூக்கிச் செல்லப் பணித்த இளநங்கை சிறைப்பட்ட எதிரிப்படையினருடன் தன் படையை நடத்திக்கொண்டு கோட்டையை நோக்கிச் சென்றாள்.

அவள் கோட்டைக்குள் நுழையும்போது போர் முடிந்து ஒன்றரை ஜாமமே ஆகியிருக்குமென்றாலும், அந்த ஒன்றரை ஜாமத்திற்குள் கோட்டைக்குள் எத்தனை கெடுபிடியைப் பாண்டிய இளவரசன் ஏற்படுத்தி விட்டானென்பதைக் கண்ட இளநங்கை மேலும் பிரமிப்புக்கே உள்ளானாள். கோட்டையின் வாயிற்கதவுகள் இரண்டும் நன்றாகத் திறந்திருந்தாலும் அவள் கோட்டை வாயிலை அணுகியதும் அவற்றைக் காத்து நின்ற புரவி வீரர்கள் இருவர் கொம்புகளை எடுத்துப் பலமாக ஊதினார்கள். மற்றும் அணிவகுத்து நின்ற புரவி வீரர்கள் வாட்களைத் தாழ்த்தி உபதளபதிக்கு வணக்கம் செலுத்தினார்கள். புரவி வீரர் அணிவகுப்புக்குள் நுழைந்து பத்து அடிகள் அவள் சென்றதும் ஒரு புரவி வீரன் அவளைச் சந்தித்து, "நீங்கள் என் பின்னால் வரவேண்டும்" என்றான்.



"எங்கு?" என்று வினவினாள் இளநங்கை அந்த உத்தரவைக் கேட்டதால் சற்றே சினந்து,

"படைத் தலைவர் இருக்குமிடத்திற்கு," என்று திட்டமாகக் கூறினான் அந்த வீரன்.

"சிறைபிடிக்கப்பட்டவர்கள்...?" என்று வினவினாள் இளநங்கை.



"அவர்களைக் கவனிக்க ஏற்பாடாகிவிட்ட
என்றான் வீரன்.

அவன் அவ்விதம் சொல்லிக்கொண்டிருக்கும் போ
சிறைப்பட்டவர்கள் வரிசையாகக் கோட்டையின்
பகுதிக்கு நடத்திச் செல்லப்படுவதைக் கண்ட இளநங்
"யார் உத்தரவின்மேல் இவர்களை அழைத்
செல்கிறீர்கள்?" என்று சீறினாள்.

"படைத்தலைவர் உத்தரவு" மிகுந்த உறுதியுடனு
அடக்கத்துடனும் பதில் வந்தது பக்கத்தில் புரவி மீதிரு
வீரனிடமிருந்து. "தாங்கள் வந்தால் அழைத்துச் செல்
சித்தமாயிருக்கிறேன்!" என்றும் கூறிய அந்த வீரன் புரவி
எதிரேயிருந்த தெருவழியாகத் திருப்பவும் செய்தான்.

அவனுடன் வாதிப்பதில் பயனில்லை என்ப
உணர்ந்த இளநங்கை ஏதும் பேசாமல் புரவி வீரனை
தொடர்ந்தாள். இரண்டு மூன்று உள்ளரண்களை
தாண்டிச் சென்ற இளநங்கைக்கு அந்தக் கோட்டை
பலம் நன்றாகப் புரிந்தது. கொற்கைக் கோட்டையின் ப
அதற்கில்லையென்றாலும் அதுவும் அப்படிச் சப்பைய
கோட்டையல்ல வென்பதையும், அதன் காவலும் அப்
அற்பமானதல்லவென்பதையும் புரிந்துகொண்ட
சச்சதுரமான அந்தக் கோட்டாற்று நகரத்தைச் சு
மதிலரண்கள் நான்கிருந்ததையும், வாயில்களும் ஒன்
கொன்று நேராக இல்லாமல் ஒரு வாயிலைத் தாண்டிய
சுவர் தென்பட்டுப் பிறகு சற்றுச் சுற்றிய பின்பே அடு
வாயில் தெரிந்ததையும் கண்ட இளநங்கை, பலம
எதிர்ப்பை எதிர்பார்த்தே அந்த அரண்கள் அமைக்
பட்டிருப்பதைப் புரிந்து கொண்டாள். கோட்டாற்றுக் க
நல்ல அகல நீளமுள்ள பெரும் நகரமாயிருந்தது. உள்
கடை வீதிகளும், வீடுகளும், படைவீடுகளும் சாதார
மக்கள் இல்லங்களும் நெருக்கமாகவும் இருந்தன. மக்
கூடிய வரையில் பயமில்லாதவர்களாய் இருந்ததை
போரை முடித்து உள்ளே நுழையும் வீரர்களைப் பார்
ஆங்காங்கு மக்கள் வீட்டுமுனைப்புகளிலும், உப்பரி

களிலும் நின்றதையும் கவனித்த இளநங்கை, வீரர்களான மக்களே அன்று தோற்கடிக்கப்பட்டார்களென்பதை உணர்ந்து சிறிது வருத்தமும் கொண்டாள்.

இப்படி ஊரை அளவிட்டுக்கொண்டே வந்ததால் பயண அவகாசத்தைக் கூடக் கவனிக்காத இளநங்கையைக் கூட வந்த வீரன் எச்சரித்து, "உபதளபதியவர்களே, தளபதியின் இல்லம் வந்தாகிவிட்டது." என்று உணர்த்திய பின்பே தலையைத் தூக்கி எதிரேயிருந்த பெருமாளிகையின் மீது கண்ணை ஓட்டினாள் அவள். அம்மாளிகையே ஒரு கோட்டைமாதிரியிருந்ததையும் அதன் வாயிலிலும் பல வீரர்கள் காத்து நிற்பதையும் அறிந்த இளநங்கை தனது புரவியை விட்டு இறங்கி அம்மாளிகையின் படிகளில் ஏறிச் சென்றாள். அவள் உள்புகுந்தபோது, மாளிகைப் படிகளில் நின்ற வீரர்கள் தலை வணங்கியதையோ, வாட்களைத் தாழ்த்தியதையோ கவனிக்காமல் பிரமிப்புடன் நடந்து உள்ளே சென்றாள். மாளிகையின் முன் கூடத்துக்கு வந்ததும் அங்கும் அவளைச் சந்தித்த இரு வீரர்கள் அவளுக்கு வழி காட்டி உப்பரிகைககு அழைத்துச் சென்றனர். உப்பரிகையின் அகலமான பெரும் படி வரிசையில் ஏறிச் சென்ற இளநங்கை படியின் உச்சியில் வீரபாண்டியன் தனக்காகக் காத்திருப்பதைக் கண்டதும் சிறிது நிதானித்தாள். மேற்படியிலிருந்த வீரபாண்டியன் அவள் நிதானத்தைக் கண்டு முறுவலித்துப் பிறகு அவளுடன் வந்த காவலர்மீது கண்ணைத் திருப்பியதும் அவர்களிருவரையும் தனிமையில் விட்டுக் காவலர் திரும்பச் சென்றனர்.



வீரபாண்டியன் இரண்டு படிகள் இறங்கி வந்து அவள் கைகளைப் பிடித்துக்கொண்டு, "இளநங்கை வா! என்னுடன்" என்று அவளை எதிர்கொண்டு இருபடிகளையும் ஏறி உப்பரிகைத் தாழ்வரை வழியாக அழைத்துச் சென்றான். அந்த உப்பரிகையின் தாழ்வரையில் இரு பெரும் அறைகளே இருந்ததைக் கண்ட இளநங்கை அவனை ஏறெடுத்து நோக்கி, "இது...?" என்று ஏதோ கேட்க முயன்றும், அவனுடன் தான் தனித்திருப்பதை நினைத்துப்



பயத்தாலோ நாணத்தாலோ பேசமுடியாமல் மெ
விழுங்கினான்.

"கோட்டைத் தலைவன் மாளிகை, இதுதான்
தங்குவதற்குச் சிறந்த இடம்," என்று கூறிய வீரபாண்டி
"இப்படி வா! இதைப் பார்!" என்று அவளை அழை
கொண்டு தாழ்வரையின் வெளியிடத்துக்குச் சென்று
முற்றும் காட்டினான்.

அங்கிருந்து அந்த நகரம் பூராவும் நன்றாகத் தெ
தன்றிக் கோட்டையையும் தாண்டி மலைச்சரிவையும் க
முடிந்தது அவளால். "பார்த்தாயா? இங்கிருந்
நாமறியாமல் கோட்டையிலுள்ள எந்தப் பகுதிய
எதுவும் நடக்க முடியாது. அது மட்டுமல்ல, கிழ
புறத்திலோ மேற்குப் புறத்திலோ எதிரி வந்தால் அ
கால் காத தூரத்திலிருக்கும்போதே நமக்குத் தெரி
ரகசியமாக இந்தக் கோட்டையை யாருமே அ
முடியாது" என்று வீரபாண்டியன் அவளுக்குச் சுட
காட்டினான்.

'அதுதான் இந்தக் கோட்டையின் பலவீ
என்றாள் இளநங்கை.

"அது எனக்குத் தெரியாதா?" என்ற வீரபாண்டி
புன்முறுவல் கொண்டான்.

இளநங்கை சட்டென்று தன் விழிகளை அவன
திருப்பினாள். "அதனால்தான்..." என்று இழுத்தாள்.

"நாம் இங்கு வருவதை முன்பாகவே எதிரி
தெரியப்படுத்தினேன். அவனே கண்டுகொள்ளக் கூ
தைத் தெரியப்படுத்துவதில் நமக்கு என்ன நஷ்டம்?" எ
வினவிய வீரபாண்டியன், "இளநங்கை வா! கவசத்
கழற்றி உன் காயங்களைப் பரிசோதிக்கிறேன்" என்று
அவள் தோளைத் தன் கையால் பிடித்துத் திரு
இரண்டறைகளில் ஒன்றுக்கு அவளை அழைத்
சென்றான்.

அவளுக்காக அவன் ஏற்பாடு செய்திருந்த அ
விசாலமாயிருந்தது. அந்த அறையைத் தாண்டிச்

அடிகள் தள்ளி நீராட்ட அறையொன்றும் இருந்தது. அவளுடன் முதலறைக்குள் நுழைந்த வீரபாண்டியன் தன் இரு கைகளாலும் அவள் தலைக்கவசத்தைக் கழற்றி எடுத்தான். கவசத்தை எடுக்கும்போது அதில் சிக்கிக்கிடந்த அவள் குழல்களிரண்டொன்றுகூட அறுந்து போகாமல் மிக எச்சரிக்கையுடன் சிக்கல்களை நீக்கிக் கவசத்தைக்" கழற்றி அவள் தலையைக் கோதி விட்டான். அவன் எச்சரிக்கை கண்டு புன்முறுவல் கொண்ட இளநங்கை, "ஆமாம்! உங்கள் கவசத்தை நீங்கள் கழற்றவில்லையே?" என்று வினவினாள்.

"உன் காயங்களைக் கவனித்த பிறகு கழற்றுகிறேன்." என்று கூறிய வீரபாண்டியன் அவள் மார்பிலிருந்த இரும்புக் கவசத்தின் பூட்டுகளையும் நீக்கித் திறந்து மார்பை உற்று நோக்கினான். "மார்பில் ஒரே ஒரு காயம் இருக்கிறது. கழுத்திலும் காயம் சற்று ஆழ இருக்கிறது. ரத்தம் நின்று விட்டது பாதகமில்லை. நீ நீராடிவிட்டு வா. பிறகு வந்து பார்க்கிறேன்" என்று கூறிய வீரபாண்டியன் பக்கத்திலிருந்த தனது அறைக்குச் சென்றான்.

போரில் போகாத பிராணன் அவன் மார்பு அங்கியைக் கழற்றுகையில் போய்விடும் போலிருந்தது இளநங்கைக்கு. அவன் மெல்ல மார்பங்கியின் பூட்டுகளைத் திறந்து நீக்கிக் கழற்றியதும் உற்று உற்றுப் பார்த்ததும் சங்கடம் தாங்கவில்லை அவளுக்கு. "கோபத்திலும் கழுகுப் பார்வை. காமத்திலும் கழுகுப் பார்வை இவருக்கு. என்ன அப்படி உற்று உற்றுப் பார்ப்பது?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்ட இளநங்கை, கைகளைத் தட்டி வீரனொருவனை அழைத்து, "நீராட வேண்டும், அண்டாவில் நீர் நிரப்பு." என்றாள்.

"நீர் நிரப்பியிருக்கிறது. தாங்கள் நீராடலாம்," என்றான் உள்ளே வந்த வீரன்.

"யார் நிரப்பச் சொன்னது உன்னை?" என்றாள் இளநங்கை, நிரப்பச் சொன்னது யாரென்பது தெரிந்திருந்தும்.

"படைத்தலைவர்" என்றான் வீரன்.

"ஊஹூம்..." என்று உறுமினாள் இளநங்கை காரணமில்லாமல்.





"வாசனைப் பொடிகளும் வைத்திருக்கிறேன் என்றான் வீரன்.

இளநங்கைக்குக் கோபம் பீறிட்டுக்கொண்டு வந்த "மஞ்சள் பொடி வைக்கவில்லையா?" என்று சீறினாள்.

"வைத்திருக்கிறேன்." என்று கூறித் தலை வணங்கி வீரன், "அதோ அந்தப் பேழையில் பட்டுச் சீலைகள் கூ இருக்கின்றன." என்றான்.

இளநங்கை அவனிடம் பதிலேதும் பேசாம விடுவிடு என்று நடந்தாள். நீராட்ட அறைக்குச் சென் நீராட்டத்தை முடித்துக் கொண்டாள். அவ முகத்திலிருந்த கீறல்களும், கழுத்து மார்புப் புண்களு வாசனைத் திரவியங்கள் பட்டதும் எரியத் தொடங்கி தைக் கூட லட்சியம் செய்யாமல் நீராடி முடித்துத் தன அறைக்குத் திரும்பிய இளநங்கை, அறைக் கோடியிலிருந் பேழையை எடுத்துப் பட்டுச் சீலையொன்றை அணிந் தலையை உதறிக் கோடரி முடிச்சொன்றையு போட்டுக்கொண்டு மஞ்சத்திலமர்ந்து கொண்டாள். அவ நீராடி முடித்த மூன்று நாழிகைகள் கழித்து, இடுப்பிலொ பட்டு வேட்டியும் தோளிலொரு சரிகைத் தகடியையு போட்டுக்கொண்டு கையிலொரு சிறு கிண்ணத்துட மணமகன்போல் உள்ளே நுழைந்த வீரபாண்டியனி அழகு அவளைப் பிரமிக்க வைத்தது. அவன் கையிலிருந் தங்கக் கிண்ணத்தை அவள் பார்த்து, "இது எதற்காக என்று அதிசயித்தாள்.

அவள் முகத்தில் நிரம்பி வழிந்த வியப்பைக் கண் வீரபாண்டியன், அதைப் பற்றிக் கவலைப்படாம மஞ்சத்தில் வந்து முகப்பில் உட்கார்ந்துகொண் "படுத்துக்கொள்" என்று உத்தரவிட்டான்.

"எதற்காக?" என்ற இளநங்கையின் குரலில் வெட் மும், கோபமும் கலந்து ஒலித்தன.

"சிகிச்சை செய்ய வேண்டும்." என்ற வீரபாண்டிய கிண்ணத்தை ஒரு பக்கத்தில் வைத்து அவளைப் பலவந் மாகப் படுக்க வைத்து, சிகிச்சையைத் தொடங்கினான்.

## அத்தியாயம் 48

# பஞ்சும் நெருப்பும்

**ம**ஞ்சள் பூசி அப்பொழுதுதான் நீராடியிருந்ததால் மிக மங்கலமாகத் தங்க மெருகு ஏறி ஒளிவிட்ட மதிவதனத்தில் நிஜ நாணமும், பொய்க் கோபமும் துலங்கக் காட்சியளித்த அந்தப் பேரழகியின் அழகிய உடலைக் கையால் பலவந்தமாகச் சாய்த்து மஞ்சத்தில் படுக்க வைத்த பாண்டிய இளவரசன், அவளை ஒருக்கணிக்கும் வண்ணம் திருப்பி இடைச்சேலையையும் சிறிதே நெகிழ்த்தினான். அதனால் பெரிதும் சங்கடப்பட்டு நெளிந்த இளநங்கை, “உம்! உம்! இது எதற்கு?” என்று வினவினாள் சங்கடம் குரலிலும் ஒலிக்க.

“காயத்துக்கு மருந்து போட” என்று கூறிய வீர பாண்டியன் அவள் இடைச் சருமத்தில் கை வைத்துப் பரிசோதித்தான்.

ஒருக்கணித்துத் திரும்பிய இளநங்கை வேறு பக்கம் பார்த்து உள்ளூர நகைத்துக் கொண்டாள். அந்த இடத்தில் காயமேதுமில்லையென்பதையும், ஏற்கெனவே கொற்கைத் தோப்பு முகப்பில் கயவர்கள் எறிந்த குறுவாட் காயத்தின் வடு மட்டுமே அங்கிருந்ததையும் அவள் உணர்ந்திருந்த போதிலும், அதைப்பற்றி ஏதும் சொல்லவில்லை. வீரபாண்டியன் கை தனது சேலை பிரிந்த இடத்தில் இடையின்மீது அழுந்துவதையும், அவன் விரல்கள் பழைய வடுவை வருடுவதையும் உணர்ந்ததால் மேலும் உள்ளூர நகைத்துக் கொண்டு வெளிப்படையாகச் சொன்னாள்: “அது வடு; காயமல்ல” என்று.





வீரபாண்டியன் கண்கள் அந்த வடுவை ஆசையு
பார்த்தன. முதன்முதலாக அவள் அழகிய மேனி
தொடத் தனக்கு வாய்ப்பளித்த காயத்தின் வடு என்ற
அவனுக்கு அதனிடத்தில் தனிப்பாசமும் இருந்தது. த
அந்த வழவழத்த சருமத்தில் காய்ந்து போயிருந்த வடு
வழவழத்துத் திருவிளக்கொளியில் பார்ப்பதற்கு
அழகாயிருந்தது. அதைத் தன் விரல்களால் வருடிய
பாண்டியன் நினைப்புக் கோட்டாற்று கரையிலிரு
பொருநை நதிக் கரைக்கும், தோப்பு விளிம்புக்கும் ஓடி

அன்று விண்மதியின் தண்ணொளியில் மண்
கிடந்த அந்த மாமலர் இன்று பஞ்சணையில் விழு
கிடந்தாலும், அந்த மோகன அமைப்பில் மட்டும் எந்த
வேறுபாடுமில்லையென்பதை அவன் இதயம் உணர்ந்
கண்கள் அவள் அழகிய உருவம் பூராவிலும் சஞ்சரித்
கோடாலி முடிச்சிட்ட குழலும், அதன் கீழே எ
ஒருபுறத்துத் தோளும், தோளிலிருந்து பக்கவாட்டில் நீ
கிடந்த மலரினும் மென்மையான கையும், அந்தக் கை
முடிவில் கணுக்கையையொட்டிக் கீழே குறுகியிற
இடையும் அவனைப் பெரும் சஞ்சலத்துக்கு ஆளாக்
கழுத்தின் சிறு பகுதியும், இடையின் ஒரு பகுதி
கணுக்காலும் அதற்குக் கீழுள்ள பகுதியுமே சே
மறைக்காத இடங்களென்றாலும், அவற்றைவிட சே
மறைத்த இடங்களைப் பற்றிய ஊகம் அவனுக்குப் பெ
இன்பக் கற்பனைகளையும் வேட்கையையும் தூண்
விட்டது. இத்தகைய நினைப்புகளுடன் கையை இ
பக்கத்து வடுவில் வைத்துப் பிரமித்து உட்கார்ந்து வி
வீரபாண்டியனை, இளநங்கையின் குரல் சற்று எழுப்பி
“அந்த இடத்தில் காயம் இல்லை, வடு” என்று மீண்
வலியுறுத்தினாள் அவள்.

“ஆமாம், ஆமாம், மறந்து விட்டேன்” என்று கூ
அவன் அவளை மல்லாந்து படுக்கும்படி கையா
திருப்பினான்.

மஞ்சத்தில் மல்லாந்து படுத்ததால் அவள் கண்
அவன் கண்களுடன் கலந்தன. அவள் இதழ்களில் லேசா

புன்முறுவலொன்று விரிந்து கிடந்தது. ஒரு கணமே அவனை நோக்க முடிந்தது அவளால். பிறகு பக்கவாட்டில் பார்வையைத் திருப்பிக்கொண்டாள்.

வீரனான வீரபாண்டியன் இதயத்திலும் அந்தச் சமயத்தில் ஒருவித அச்சம் சூழ்ந்துகொண்டது. அவள் மனம் தன்னிடம் லயித்திருப்பதை உணர்ந்திருந்தாலும், அவள் தனிமை தனக்குக் கிடைத்தற்கரிய வாய்ப்பை அளித்திருந்தாலும், கிட்டக்கிடந்த அந்த மலர் தொட்டவுடன் நன்றாக மலர்ந்துவிடக் காத்திருந்தாலும், ஏதோ விவரிக்க இயலாத பயம் அவனைக் கவ்விக் கொண்டதால், அவனும் அவள் கண்களிலிருந்து பார்வையை வேறு பக்கம் திருப்பிக் கொண்டான் சில விநாடிகள். இத்தனை பயத்துக்கும் காரணம் இணையற்ற இந்து சமுதாயம் வளர்த்த பெரும் பண்பாடு என்பதை அவன் மனம் எடுத்துரைத்தது. கைக்கெட்டிய கனியானாலும் கட்டுத் திட்டங்களுக்கு அடங்கியே அதைப் பறிக்க வேண்டுமென்ற நியதியை இந்து சமுதாயமும் அறக் கோட்பாடுகளும் ஏற்படுத்தியது, பெண்களுக்கும் ஆண்களுக்கும் எத்தனை சிறந்த பாதுகாப்பு என்று வீரபாண்டியன் அந்த சில வினாடிகளில் நினைத்துப் பார்த்தான். பயமற்ற தன் மனத்திலும் தன் கைப்படுவதை எதிர்பார்க்கும் அந்த ஏந்திழையின் இதயத்திலும், சமுதாயக் கட்டுப்பாடு என்ற அரண் சுற்றி நிற்பதால் விளைந்த அச்சத்தை எண்ணிப் பார்த்த வீரபாண்டியன் அந்த வேளையில் தமிழர் பண்பாட்டையும், இந்து மதச் சிறப்பையும், அது வகுத்த கட்டுப்பாடுகளில் நிலை பெற்றுள்ள கற்பின் திடத்தையும் நினைத்துப் பூரித்தான்.

அவனுடைய இத்தனை நினைப்பையும் அச்சத்தையும், மஞ்சத்தில் மல்லாந்து கிடந்த அந்த எழில் மங்கையின் எழுச்சிகளும், சுழற்சிகளும் வினாடிக்கு வினாடி சுக்கு நூறாக உடைக்க முயன்று கொண்டிருந்தன. அவன் கண் முன்பே விக்கித்துக் கிடந்த அவள் பரந்த முகம், செவ்விய உதடுகள், பக்கத்தில் சாய்ந்து நாணப்பார்வை பார்த்த





கண்கள், வெண் கழுத்து முதலியவை அவன் உணர்
களை உளைத்ததால் வீரபாண்டியன் பெருமூச்சு விட்டா
பிறகு அந்த உணர்ச்சிகளிலிருந்து விடுபட, கிண்ண
லிருந்த பச்சிலை எண்ணெயைச் செம்பஞ்சில் தோய்த்
பிழிந்தெடுத்து, அவள் கன்னத்தில் வாள் லேசா
கீறியிருந்த காயத்தில் தடவினான். பச்சிலைச் ச
காயத்தில் பட்டதும் சிறிது எரியவே, "உம்..." என்று மு
சுளித்தாள் இளநங்கை.

"இரு, இரு, அசங்காதே. கொஞ்சம் எரியத்த
செய்யும். இருப்பினும் காயம் நாளைக்குள் ஆறிவிடு
என்ற வீரபாண்டியன், பஞ்சை வைத்துவிட்டுத்
விரலாலும் அழுத்தித் தடவிக் காயத்துக்குள்
எண்ணெயை ஊட்டினான்.

அப்பொழுது சற்று அதிகமாகவே எரிச்சலெடுத்
லும் அவன் விரல் பட்டது ஏதோ பெரும் ஆறுத
யிருந்ததால் இளநங்கை வலியைப் பொறுத்
கொண்டாள். பழைய மந்தகாசம் முகத்தில் மீண்
விரிந்தது.

அந்த மந்தகாசத்தைக் கண்ட வீரபாண்டியன் கவ
சற்றுத் தளர்ந்தது. "இப்பொழுது எரிச்சலில்லையா?" எ
வினவினான்.

"இல்லை" சங்கடத்துடன் சொன்னாள் இளநங்
"அப்பொழுது எரிந்ததா?" எரிச்சலெடுக்குமெ
தெரிந்தும், வேறு உணர்ச்சிகளை அகற்றக் கே
கேட்டான் வீரபாண்டியன்.

"இல்லை."

"ஏன்?"

"பஞ்சு பட்டதால் எரிந்ததோ என்னவோ?"

"விரலால் தடவினால்...?"

"அத்தனை எரிச்சலில்லை."

"சரி, அப்படியானால் பஞ்சு வேண்டாம்," எ
கூறிய வீரபாண்டியன் செம்பஞ்சை எடுத்துச் செ

சற்றுத் தூரத்தில் எரிந்து கொண்டிருந்த குத்துவிளக்கின் விளிம்பில் வைத்துவிட்டுத் திரும்பியதும் மஞ்சத்துக்கு வந்து உட்கார்ந்து கொண்டு கழுத்துக் காயத்துக்கும் எண்ணெயை விரலிலேயே தோய்த்துத் தடவினான்.

அவன், தலையை நன்கு குனிந்து கழுத்தின் இரு காயங்களையும் பரிசோதித்ததால், அவன் தலை முடிக் குழல்கள் சில அவள் கண்கள் மேலும் கன்னத்திலும் விழுந்து கிடந்தன. எண்ணெயை விரல்களில் தோய்த்து எடுத்துக் கொண்டுவர அவன் தலையைத் தூக்கி மீண்டும் தாழ்த்தித் தடவ முயன்றபோது, அவன் கன்னமொன்றும் அவள் மோவாய்க் கட்டையின்மீது உராய்ந்ததால் பெருஉணர்ச்சிகள் அவளை ஊடுருவி உலுக்கிக் கொண்டிருந்தன. அவன் கழுத்துக்குள் நன்றாகக் குனிந்து எண்ணெய் தடவி எரிச்சலை ஆற்ற ஊதிய பொழுது அவன் உதடுகளே காயத்தில் படிந்து விடுமோ என்று நினைத்த அவள் இதயம் வெகு வேகமாக அடித்துக் கொண்டது.

அந்த வெண்மையில் செவேலென்று தெரிந்த கத்திக் காயங்கள் அனைத்தும் அவனுக்குப் புது சொர்க்கத்தைச் சிருஷ்டித்துக் கொண்டிருந்தன. அவள் சற்று முன்பு தேய்த்திருந்த நீராட்டப் பொடியின் நறுமணம் வேறு கழுத்திலிருந்து கிளம்பி அவன் நாசியில் புகுந்து அவனைச் சித்திரவதை செய்தது. அந்த நிலையில் அவள் மெல்ல நெளிந்ததால் கழுத்தில் எண்ணெய் தடவிய அவன் வலக்கையின் விரலொன்று அவள் மார்பிலும் பட்டு விட்டதால் இருவர் நிலையும் உறுதியும் அடியோடு குலைந்து போகும் கதியை அடைந்தன.

அவன் உணர்ச்சிகள் பலவகையில் சிதறிக் கிடந்ததால் கழுத்துப் புண்ணுக்குப் பச்சிலை எண்ணெய் தடவிய சமயத்தில் அவன் சரிகைத் தகடு நழுவி அவள் மார்புமீது விழுந்து விட்டதைக்கூட அவன் கவனிக்கா விட்டாலும், அவள் கவனிக்கவே செய்தாள். தகடு சரிந்து விழுந்துவிட்டதால் அவன் விசாலமான மார்பும், பெரும் தோள்களும் நன்றாக வெளிப்போந்து அவன் எத்தனை





பெரிய மகாவீரன் என்பதை அவளுக்கு எடுத்து காட்டவே, புன்முறுவல் கோட்டினாள்.

அதைக் கவனித்த வீரபாண்டியன் சட்டென்று தகடியை எடுத்துத் தனது மடியில் போட்டுக்கொண்டு, "சா சரி, அடுத்த காயத்தை பார்ப்போம்" என்று அவ மேலாடையை நீக்கப் போனான்.

அவள் மேலாடையை நன்றாகப் போர்த்து கொண்டு, "வேண்டாம், அதற்கு நானே சிகிச்சை செய்து கொள்கிறேன்," என்றாள்.

"உன்னால் முடியாது,"

"ஏன்?"

"மார்புக் காயம் அபாயமானது."

"எனக்கே சரியாகச் சிகிச்சை செய்யத் தெரியும்."

"உனக்குத் தெரியாது. அதற்கு அனுபவம் வேண்டும்

"உங்களுக்கு அனுபவம் அதிகம் போலிருக்கிறது."

"ஆமாம்."

"எத்தனை பெண்களுக்கு அந்த இடத்தி காயத்துக்குச் சிகிச்சை செய்திருக்கிறீர்கள்?" அவ கேள்வியில் கோபமிருந்தது, கேலியும் இருந்தது.

அப்பொழுதுதான் அவள் சொன்னதன் பொருளை புரிந்துகொண்ட வீரபாண்டியன் ஒருகணம் விழித்தான் பிறகு கூறினான்: "பெண்களுக்குத்தான் சிகிச்சை செய் வேண்டுமென்பதில்லை."

"பிறகு யாருக்குச் செய்திருக்கிறீர்கள்?" என்று கேட்டாள் அவள்.

"பல வீரர்களுக்குச் செய்திருக்கிறேன். ஏன் சற் முன்பு..."

"சொல்லுங்கள், உம்...?"

"என் புரவிக்கு."

"சாம்பல் நிறப் புரவிக்கா!" இளநங்கையின் குரலி வியப்பு ஒலித்தது.

"ஆம்."

"அதைக் கவனிக்க வீரர்கள் இல்லையா?"

"வீரர்களிடம் அந்தப் பணியை விடுவதில்லை, நான்."

"அப்படியானால்.... புரவியும் நானும் ஒன்றா?"

"புரவி, மனைவி, வாள் மூன்றும் ஒன்றுதான். இந்த மூன்றையும் பிறர் தொட ராஜபுத்திரர் அனுமதிப்பதில்லை. நானும் அனுமதிக்க விரும்பவில்லை."

"நான் இன்னும் உங்கள் மனைவியாகவில்லையே?"

"அதற்குத் தடங்கல் ஏதுமிருப்பதாக எனக்குத் தெரியவில்லை." என்று கூறிய வீரபாண்டியன், மேற்கொண்டு பேச்சை வளர்த்தாமல் அவள் மேலாடையை நீக்கி மார்புக் காயத்தைக் கவனித்தான். இரு விரல்களால் காயத்தை நன்றாகப் பிரித்து அதன் ஆழத்தையும் கவனித்தான். கவசத்தின் இடைவெளியில் பாய்ந்துவிட்ட வேலின் ஆழம் சற்று அதிகமாகவே இருந்தாலும், அது எலும்பு எதையும் முறிக்கவில்லையென்பதை அறிந்து ஆசுவாசப் பெருமூச்சு விட்ட வீரபாண்டியன் பச்சிலை எண்ணெயை எடுத்து அதில் சொட்டவிட்டு மெல்ல மெல்ல உள்ளே இறக்கினான்.

எண்ணெய் படபட எரிச்சல் அதிகமாகியதால் அவள் இருமுறை, "உம்...உம்" என்று முனகினாள். எரிச்சலை அடக்க அவன் வாயால் மெல்ல மெல்ல ஊதினான். காயத்தைப் பிறகு இரு விரல்களால் இறுக்கி நிறுத்தி, கிண்ணத்தின் அடியிலிருந்த ஒரு பச்சிலைத் துண்டையும் அதன்மீது வைத்து, "இன்னும் இரண்டு வினாடிகளுக்குள் காயத்தில் இது இரும்பாகப் பிடித்துக் கொள்ளும். பிறகு எரிச்சல் பறந்து விடும்," என்று அவளுக்கு ஆறுதல் வார்த்தையும் கூறினான். எரிச்சல் மெல்ல மெல்ல அடங்கியது. எரிச்சலடங்கிய பிறகு அவன் தன் கைகளைப் பஞ்சில் துடைத்துக் கொண்டான்.



திரும்பி அவளருகில் அமர்ந்த அவன் அவளை இன்பத்துடன் பார்த்தான். அவள் கண்கள் அவன் கண்களுடன் கலந்தன. "போதும்," என்று அவள் வாய் கூறியது மெல்ல.



"எது போதும்?" என்று அவன் அவளை நோக் குனிந்தான்.

சற்று முன்பு அவன் குத்துவிளக்கு விளிம்பில் வை விட்டு வந்த செம்பஞ்சு பக்கத்திலிருந்த தீச்சுடரில் பிடித் கொண்டது. அதைக் கவனித்த அவள் உதடுக "பஞ்சையும் நெருப்பையும் பக்கத்தில் வைக் கூடாதென்று பெரியவர்கள் தெரியாமல் சொல்லவில்ல என்றாள்.

ஆனால் மூதுரையைப் பற்றி அந்த மூர்க்கன் அந் சமயத்தில் கவனிக்கவில்லை. அவனுக்கு எதுவுமே அந் சமயத்தில் காதில் விழவில்லை. "கதவு திறந்திருக்கிற என்ற அவள் எச்சரிக்கை முணுமுணுப்பைக்கூடக் காது கேட்கத் திரணியற்றுக் கிடந்தன. காதல் செயல்படும் பே காதுகள் எப்படிச் செயல்படும்?

## அத்தியாயம் 49

# விரும்பத்தகாத விசேஷம்

மறுநாள் கதிரவனின் எழுச்சியைக் குறிக்கும் காலைத் தாரைகள் ஊதப்பட்ட பின்னரே கண் விழித்துக்கொண்ட இளநங்கை, உதயகால சங்கங்களின் ஒலி தன் காதில் விழாததைக் குறித்துப் பெரும் வியப்படைந்தாள். கருக்கலிலேயே துடிப்புடன் எழுந்திருக்கும் பழக்கமுள்ள இளநங்கைக்கு அன்று தான் அடித்துப்போட்ட மாதிரி உறங்கி விட்டதை நினைக்க நினைக்க வியப்பு மட்டுமல்ல அவள் நெஞ்சத்தில் விளைந்தது, இன்பங் கலந்த வெட்க வேதனைகளும் விளைந்து கொண்டிருந்தன. முந்திய இரவின் நெகிழ்ச்சியையும் பின் விளைந்த நிகழ்ச்சியையும் எண்ணிப் பார்த்ததால் சிறிது பயங்கூட உள்ளத்தைப் பிடித்துக் கொண்டிருந்தது அவளுக்கு. இத்தனைக்கும் முறைக்கு மீறிய எதையும் செய்யவில்லை அவள். க்ஷத்திரியர்களுக்கு அளிக்கப்பட்ட அறமுறை எதையும் மீறவில்லை அவள். குடும்பத்தின் கண்ணிலும், உலகத்தின் கண்ணிலும், தமிழ்ப் பெருஞ் சமுதாயத்தின் கண்ணிலும் கண்ணியமெனக் கருதப்படாத எதையும் செய்யவில்லை அவள். காந்தருவம் அனுமதிக்கப்பட்ட விதி; அதை அனுஷ்டிப்பதில் களங்கமேதுமில்லை அவளுக்கு. இத்தனை சமூக, சரித்திர, இலக்கிய அறவழிச் சான்றுகள் அவள் நடத்தைக்கு அனுகூலமாயிருந்துங்கூட, தான் செய்யத்தகாத எதையோ செய்துவிட்டது போன்ற அச்சமொன்று அவள் இதயத்தை ஊடுருவி நின்றது!

அந்த அச்சத்தின் காரணமாகவோ என்னவோ அவள் மீண்டும் பஞ்சணையில் புரண்டு படுத்துத் தலையணையில் முகத்தைப் புதைத்துக்கொண்டாள்.





அப்படிப் புதைத்த முகத்தை மீண்டும் ஒரு புறம் திருப்
சற்று எட்ட இருந்த மற்றொரு மஞ்சத்தைக் கவனித்தா
அதன் மீது வீரபாண்டியன் சரிகைத் தகடி அலங்கோலம
விழுந்து கிடந்ததைக் கண்டதும் மீண்டும் நாண
அவளுக்கு இதயத்தைக் கவ்விக் கொண்டது. 'சரிகை
தகடியைக் கண்டு நான் எதற்கு அஞ்சவேண்டும்? அ
உயிரற்ற உடைதானே?' என்று தனக்குள் சொல்
கொண்டாள். ஆனால் தான் சம்பந்தப்பட்டவரைய
அந்த உடை உயிரற்றதல்லவென்பதும், வீரபாண்டிய
உடல் சம்பந்தத்தினாலேயே அது தனக்கு நாணமூட்
திறனைப் பெற்றிருக்கிறதென்பதும் உள்ளூரத் தெரிந்
அவளுக்கு. காதல் என்பது பித்து என அகத்தி
அருவிக்கருகில் தான் முத்துக்குமரிக்குச் சொன்
எத்தனை சரியென்பதை மஞ்சத்தில் படுத்திருந்த அந்
சமயத்தில் அவள் நன்றாகப் புரிந்துகொண்டாள். "அ
பித்து இல்லையானால் சடப் பொருள்களிடம் எனக்கு ஏ
அச்சமேற்படுகிறது?" என்று தன்னைக் கேட்டுக்கொண்
அந்தச் சரிகைத் தகடியை நோக்கினாள்.

தகடியில் ஓடியிருந்த சரிகை காலை வெளிச்சத்
மின்னி அவளை நோக்கி நகைத்துக் கொண்டிருந்தது. ச
அப்பாலிருந்த குத்துவிளக்கு அணைந்து கிடந்தது. அத
விளிம்பிலிருந்த செம்பஞ்சு கருகிக் கிடந்தது. செ
இரவில் பஞ்சையும் நெருப்பையும் அக்கம் பக்கத்
வைப்பதைப் பற்றித் தான் சொன்னது நினைவுக்கு வந்
அவளுக்கு. பழமொழி சரியென்றாலும் அந்த உவ
தனக்குப் பொருந்தாது என்பதை உணர்ந்த இளநங்
இளநகை பூத்தாள். "செம்பஞ்சு அந்தச் சுடர்பட்டுக் க
விட்டது; ஆனல் நான் கருகவில்லை. ஏதோ புத்துண
ஒன்று என்னை ஊடுருவிச் செல்கிறது. ஒரு மன நிறை
இருக்கிறதே?" என்று தன் உணர்ச்சிகளை அலசி இன்பு
அடைந்தாள். பிறகு எழுந்திருக்க முயன்று ஒருக்கணித்
கையை மடித்துக் கன்னத்தில் ஊன்றிக்கொண்டு தன் உட
நிலையைக் கவனித்தாள். உடல் துவண்டு தனக்கு அ

இருந்தாலும் அந்த அசதியே இன்பமாயிருப்பதை நினைத்துப் பார்த்தாள். கலைந்து தாறுமாறாகக் கிடந்த ஆடைகூட அழகாயிருப்பதாகத் தோன்றியது அவள் கண்களுக்கு. ஆணின் ஸ்பரிசத்தில் எத்தனை பிரமிப்புகள் இருக்கின்றன என்று எண்ணி வியந்தாள் அவள்.

எத்தனை நேரம் வேண்டுமானாலும் இப்படியே தன்னை அலசிக்கொள்ளும் மனோபாவம்தான் அன்றைய காலையில் இருந்தது அவளுக்கு. பஞ்சணையைவிட்டு எழுந்திராமலே புரளும் புத்திதான் இருந்தது கொற்கைக் கோட்டைக்காவலன் மகளுக்கு. ஆனால் அதற்கு இடங் கொடாத குரலொன்று வெளியிலிருந்து கேட்டது. மூடியிருந்த கதவுக்கு வெளியிலிருந்து, "தேவி! தேவி!" என்று இருமுறை வந்த பெண் குரலைக் கேட்டு, "யாரது?" என்று வினவினாள் இளநங்கை படுத்தபடியே.

"தங்கள் பணிமகள்," என்று வந்தது பதில்.

"சரி, உள்ளே வா" என்ற இளநங்கை உள்ளே வந்த பெண்ணைப் பார்த்து வியந்தாள். வந்தவள் மலைநாட்டுப் பெண் மட்டுமல்ல, மலைச்சாதி பெண்ணுங்கூட என்பதை உணர்ந்தாள். அதுமட்டுமல்ல. அவள் அழகும் கண்ணைப் பறிப்பதாயிருந்தது. அந்தப் பெண்ணின் கண்களில் இருந்த ஒளிவீச்சு அதுவரை தான் யார் கண்ணிலும் பாராத ஒளி வீச்சாயிருந்ததைக் கண்டாள் இளநங்கை. அவள் உருண்ட முகத்திலும் குவிந்த இதழ்களிலும் எந்நேரமும் ஒரு புன்முறுவல் விளையாடிக் கொண்டிருந்ததால், அவள் சற்று விஷமக்காரியாயிருப்பாளென்பதையும் புரிந்து கொண்ட இளநங்கை கேட்டாள், "யார் உன்னை அனுப்பியது?" என்று.

"படைத் தலைவர்" என்றாள் அப்பெண் பணிவுடன்.

"படைத் தலைவரை உனக்கெப்படித் தெரியும்?"

"அறிமுகம் செய்து வைத்தார்கள்."

"யார்?"

"இந்தக் கோட்டைத் தலைவராக இருந்தவர். விஜய வர்மன் வீட்டுப் பணிப்பெண் நான். வெள்ளி முளைத்த





வுடனேயே விஜயவர்மன் என்னை எழுப்பி வ
இப்பொழுதுள்ள கோட்டைத் தலைவரிட
ஒப்படைத்தார்."

"அவராக ஒப்படைத்தாரா? இவர்...உம்...படை
தலைவராகக் கேட்டாரா?"

"படைத் தலைவர்தான் கேட்டாராம், அவசரமா
பணிப்பெண் வேண்டுமென்று."

இளநங்கை சிறிதுநேரம் பதிலேதும் சொல்லவில்ல
'பணிப்பெண்ணை எனக்கு நியமிக்க இவருக்கென்
அவசரம்?' என்று தன்னைக் கேட்டுக்கொண்டாள். "இ
நிகழ்ச்சி...அதனால்...பயம் போலிருக்கிறது..." என்று ம
துக்குள் சொல்லிச் சிரித்தும் கொண்டாள்.

இப்படிச் சுயநினைவில் திளைத்த இளநங்கை
அந்தப் பெண்ணே விளித்தாள், "அம்மா!" என்று.

"என்ன?" கனவிலிருந்து கேட்பது போல் கேட்
இளநங்கை மறுபடியும் மஞ்சத்தில் சுருண்டு படுத்தாள்.

"நீராட ஏற்பாடு செய்துவிட்டேன்" என்று கூறின
அந்தப் பெண்.

"ஏற்பாடு செய்ய நான் சொன்னேனா?" என்
அர்த்தமில்லாமல் வெகுண்டு கேட்டாள் இளநங்கை.

அவள் வெகுண்டதற்கு அந்தப் பெண் மசியவில்ல
"நீங்கள் சொல்லவில்லை. படைத்தலைவர் சொன்னா
என்று கூறித் தைரியமாக இளநங்கையை உற்
நோக்கினாள் அந்தப் பெண்.

"நான் நீராட மறுத்தால்?" என்று கூறின
இளநங்கை.

"மறுப்பதற்கில்லை" பணிப்பெண்ணின் பதி
உறுதியுடன் வந்தது.

"ஏன் மறுப்பதற்கில்லை? யார் என்னைக் கட்டா
படுத்த முடியும்?" என்றாள் மீண்டும் இளநங்
பஞ்சணையில் எழுந்து உட்கார்ந்து.

"படைத் தலைவர்" திட்டவட்டமாக வந்தது பணிப்பெண்ணின் குரல்.

"நீராட முடியாது என்று படைத்தலைவரிடம் போய்ச் சொல். போ."

"நீங்கள் நீராடிச் சல்லடம் தரித்து, இன்னும் இரண்டு நாழிகைக்குள் படைத்தலைவரைக் கோட்டையின் மேற்கு வாசலில் சந்திக்கவேண்டும். இது அவர் உத்தரவு."

"படைத்தலைவர் என்ற முறையில் உத்தரவிட்டிருக்கிறாரா?"

"ஆம். தவறக்கூடாது என்றும் சொல்லிப் போனார்."

இளநங்கை அந்தப் பெண்ணை மீண்டும் உற்று நோக்கினாள். அவள் இதழ்களில் விளையாடிய புன்சிரிப்பைக் கண்டு தான் கொண்டது அச்சமா,கோபமா என்பது அவளுக்கே விளங்கவில்லை. மலைச்சாதியின் செழுமையும், அலட்சியமும் அந்தப் பெண் உடல் பூராவும் இருந்ததைக் கவனித்த இளநங்கை, "சரி, உன் பெயர் என்ன?" என்று வினவினாள்.

"குறிஞ்சி."

"என்ன?"

"குறிஞ்சி."

"பெயர் விசித்திரமாயிருக்கிறதே?"

"எங்கள் சாதியில் இது சாதாரணப் பெயர்."

"நீ மலைச்சாதியா?"

"ஆம்."

"இந்த மலைப்பகுதி பூராவும் உனக்குத் தெரியுமா?"

"ஒவ்வோர் அணுவும் தெரியும்."

அந்தப் பெண்ணின் அந்த அறிவிப்புப் பெரும் மகிழ்ச்சியை அளித்தது இளநங்கைக்கு, அந்தப் பெண்ணை அழைத்துக்கொண்டு மலைப்பகுதியைப் பார்வையிடலாம் என்ற எண்ணம் அவளுக்குப் பெரும் குதூகலத்தை அளித்தது. "சரி, குறிஞ்சி! நீராட வருகிறேன்." என்று





சொல்லி எழுந்து அவளைப் பின்பற்றிச் சென்ற வாணாதித்தன் மகள்.

நீராட்ட அறையைப் பார்த்ததுமே அந் பெண்ணின் நுண்ணிய அறிவைப் புரிந்து கொண்ட இளநங்கை. முந்திய இரவில் வீரன் செய்து வை ஏற்பாட்டைப் பார்த்தே பிரமித்த இளநங்கை குறி செய்திருந்த ஏற்பாட்டைப் பார்த்ததும் பிரமிப்பு ஆயி மடங்கு அதிகமாயிற்று. அறை வெகு சுத்தமாயிருந் அவள் உடுத்தி நீராடச் சிற்றாடையொன்று கத தொங்கிக்கொண்டிருந்தது. வாசனைத் திரவியங்கள் அளவுடன் எடுத்துத் தந்தக் கிண்ணங்களில் வைக் பட்டிருந்தன. இரண்டு அண்டாக்களிலிருந்த நீரும் லேச நறுமணம் வீசிக் கொண்டிருந்ததால், அந்த அண்டாக்கள ஏற்கெனவே வாசனை தெளிக்கப்பட்டிருந்த உணர்ந்தாள் இளநங்கை. இவற்றைத் தவிர மஞ்சளு தகளியும் குங்குமமும் கூடத் தனிப்பட வைக்கப்ப இருந்தன. இவற்றையெல்லாம் கண்ட இளநங்கை இன் புன்முறுவலொன்றைப் பணிப்பெண்ணை நோ வீசினாள். பிறகு கதவை மூடிக் கொண்டு நீரா முனைந்தாள்.

அவள் நீராடி முடிவதற்குள் படுக்கையறை பஞ்சணையைச் சரி செய்து, சரிகைத் தகடியைச் சரி மடித்து வைத்து, இளநங்கை அணிய வேண்டிய போ சல்லடத்தையும் எடுத்து வைத்திருந்தாள் பணிப்பெ போருடை அணிந்து முடித்ததும் தட்டில் பால், பழம் ஏ வந்த குறிஞ்சி அவளுக்குக் காலை உணவளித்து, "இ நீங்கள் புறப்படலாம், வாயிலில் உங்கள் புரவி தயாராயி கிறது," என்று கூறினாள்.

ஒவ்வொரு காரியத்தையும் தான் சொல்லாமலே முன்கூட்டியே ஊகித்துச் செய்யும் குறிஞ்சிமீது விய விழிகளை நாட்டிவிட்டு, பாலை மட்டும் அருந்தி வெளி சென்ற இளநங்கை புரவியிலேறியதும் இரு வீரர்க தாரைகளை ஊதினார்கள். மற்றும் இருவர் அவள் புர நகர்ந்ததும் கூடத் தொடர்ந்தார்கள்.

புரவியில் ஆரோகணித்து வீதிகளில் சென்ற இளநங்கை மிதமிஞ்சிய பிரமிப்புடன் நகரத்தைப் பார்த்துக் கொண்டு சென்றாள். நகரெங்கணும் வீரர்கள் காவல் பலமாயிருந்ததே தவிர மற்றபடி சாதாரண வாழ்க்கை பாதிக்கப்படவில்லை. மக்கள் பொதுவாக இல்லங்களுக்குள் இருந்தாலும் அவசியமான அலுவல்களுக்குச் சென்று கொண்டு தான் இருந்தார்கள். ஒரே இரவில் அந்தக் கோட்டையை அத்தனை தூரம் எப்படி அடிமைப்படுத்த வீரபாண்டியனால் முடிந்ததென்பதைச் சிந்தித்துப் பார்த்துப் பிரமித்தாள். கோட்டையைப் பிடித்த பிறகு ஒரு ஜாமமும், காலையில் சுமார் ஒரு ஜாமமுமே இருந்திருந்தும் அதற்குள் ஒரு பெருங் கோட்டையை அடக்கிக் கட்டுத் திட்டம் செய்துவிட்ட வீரபாண்டியன், தமிழகத்தின் விடிவெள்ளியென்றே நினைத்தாள் இளநங்கை.

இப்படிச் சிந்தனையிலாழ்ந்த வண்ணம் மேலை வாசலுக்குச் சென்ற இளநங்கையைச் சந்தித்த வீரபாண்டியன், "உபதளபதி! வாயில்கள் நான்கிலும் காவல் வைத்தாகிவிட்டது. புரவிப் படையை நான்கு கூறுகளாகப் பிரித்து மூன்று பிரிவுகளைக் கிழக்கு, மேற்கு, தெற்கு வாயில்களுக்குப் பங்கிட்டு நிறுத்தியிருக்கிறேன், நான்காவது பிரிவு வீதிகளைக் காவல் செய்யவும் நமது உத்தரவுகளுக்குக் காத்து நிற்கவும் ஏற்பாடு செய்திருக்கிறேன். காலாட் படையில் ஒரு பகுதி கோட்டையின் கிழக்கு வாயில் மதில்களிலும், தெற்கு வாயில் மதில்களிலும் நிற்க வைக்கப்பட்டிருக்கிறது. கோட்டை வெளிப்புறத்தைக் கண்காணிக்க சில வீரர்களை மலைமேடுகளிலும் நிற்க வைத்திருக்கிறேன், நீ பகலில் ஜாமத்துக்கொரு முறையும் இரவில் முதல் ஜாம முடிவிலும் காவல் சோதனை செய்," என்று கூறினான்.



அவன் குரலில் கண்டிப்பு இருந்தது. இரவிலிருந்த கனிவு முகத்தில் சிறிதும் இல்லை. இரவை அவன் அடியோடு மறந்து விட்டானோ என்றுகூட அவள் அதிசயித்தாள். கேவலம் உபதளபதியாக மட்டும் அவன் அன்று காலை தன்னை நடத்தியது பெரும் எரிச்சலையும்



கோபத்தையும் அவளுக்களித்தாலும் அதை வெளிக்கு
காட்டாமல், "படைத் தலைவர் உத்தரவு" என்று மட்டு
கூறித் தலை வணங்கினாள்.

அதற்குமேல் அவளைத் திரும்பிக்கூடப் பார்க்கா
வீரபாண்டியன் இரு வீரர்களைத் தன்னுடன் வரும்ப
சைகை செய்து தெற்கு வாயிலை நோக்கிச் சென்றா
இளநங்கை அவன் செல்வதைப் பார்த்துக்கொண
நின்றாள். எப்பொழுதும் அவள் காதுகளுக்கு இன்பந்தரு
சாம்பல் நிறப் புரவியின் சீரான குளம்பொலிகூட அந்
நிமிடத்தில் அவளுக்கு நாராசமாயிருந்தது. வீ
பாண்டியனின் கண்டிப்பாலும், பாராமுகத்தாலும் சீ
எழுந்த உள்ளத்தால், நெருப்பு வீசும் கண்களுடன் அவளு
நகரத்தையும் மற்ற வாயில்களையும் சுற்றி வந்தாள். வீ
பாண்டியனின் வீரர்கள் மதிலைச் சுற்றி எங்குமிருந்ததை
கண்டு அந்தக் கோட்டை வீரபாண்டியனின் இரும்
வளையத்தில் சிக்கி விட்டதை உணர்ந்து கொண்டா
அந்தக் கோட்டையை யார் பிடிப்பதானாலும் மிகுந்
நாசத்துக்குப் பிறகே பிடிக்க முடியுமென்பதைச் சந்தேகம
அறிந்து கொண்டதால் உச்சி வேளைக்கு ஓரள
திருப்தியுடனேயே தான் தங்கியிருந்த மாளிகைக்கு
திரும்பினாள் இளநங்கை.

அப்பொழுதும் வீரபாண்டியன் வரவில்லை. படை
தலைவர் வரவுக்குக் காத்திருக்க வேண்டாமென்று செய்
வந்திருப்பதாகவும் அவள் உணவருந்தலாமென்று
பணிப்பெண் குறிஞ்சி அவளுக்குத் தெரிவித்தாள்.

இளநங்கை அதற்குப் பதிலேதும் சொல்லாம
போர்ச் சல்லடத்தைக் கழற்றிவிட்டு உணவருந்
உட்கார்ந்தாள். அன்று காலை பூராவும் கோட்டையை
சுற்றியதால் அகோரப் பசி அவளுக்கு எடுத்தாலு
சிறிதளவே உணவருந்தினாள் அவள். பிறகு பஞ்சணையி
படுத்து ஏதேதோ யோசனையில் ஆழ்ந்தாள் இளநங்கை.

அன்று பகல் பூராவும் மாளிகை திரும்பாத வீ
பாண்டியன், இரவு ஏறிய பிறகே திரும்பினான்

திரும்பியவன், நேராகத் தனது அறைக்குச் சென்று போருடை களைந்து சாதாரணப் பட்டாடை அணிந்து மஞ்சத்தில் மல்லாந்துவிட்டான். அவன் மாளிகைக்குள் நுழைந்து உப்பரிகைப்படி ஏறிவந்ததை, திறந்திருந்த தனது அறைக் கதவு மூலமே பார்த்த இளநங்கை, அவன் நேராகப் பக்கத்தறைக்குச் சென்று விட்டதைக் கண்டாள். எப்படியும் வேறு உடை அணிந்து வருவானென்று நீண்ட நேரம் எதிர் பார்த்தும் பயனில்லாது போகவே பஞ்சணையைவிட்டு எழுந்திருந்த இளநங்கை, அவனது அறையை நாடிச் சென்றாள்.

அங்கு மஞ்சத்தில் மல்லாந்து சிந்தனையில் திளைத்திருந்த அந்த வீரனைக் கண்டதும் ஏதோ எதிர்பாராச் செய்தி வந்திருக்கிறது என்பதை மட்டும் உணர்ந்தாள் அவள். ஆகவே கேட்டாள், "ஏதாவது விசேஷமுண்டா!" என்று.

வீரபாண்டியன் அவளை ஏறெடுத்து நோக்கினான். பிறகு சொன்னான். "உண்டு. ஆனால் விரும்பத்தகாத விசேஷம்" என்று.

அதை எடுத்துச் சொன்ன வீரபாண்டியன் குரலில் கவலை மிதமிஞ்சிக் கிடந்தது.



## அத்தியாயம் 50

# நெருக்கடி

முந்திய நாளிரவில் தனது மஞ்சத்தின் பஞ்சணையில் பட்டாடையுடன் மணமகனாகத் துலங்கிக் கள்ளத்தனம் செய்த துள்ளுமுகம் நீங்கி, துன்ப முகம் கொண்ட படைத் தலைவனாக அடுத்த இரவிலேயே விளங்கிய வீர பாண்டியனைக் கண்டதுமே ஏதோ பெருங்கவலை, அவன் உள்ளத்தைப் பீடித்திருக்கிறதென்பதைப் புரிந்துகொண்ட இளநங்கையும் கவலையின் வலையில் சிக்கினாள். சென்ற இரவில் உலகை மறந்து தன்னைப் பஞ்சணையில் அணைத்த அந்த மகாவீரன் அன்று தானிருந்த அறைமீது கண்ணைக் கூடத் திருப்பாமல் பக்கத்து அறைக்குச் சென்று விட்டதைப் பார்த்ததுமே, விரும்பத்தகாதது ஏதோ நடந்திருக்க வேண்டுமென்று அவள் தீர்மானித்துக் கொண்டாளாகையால், தன்னறை விட்டு அவனறைக்கு வந்ததும் அவனிருந்த நிலை அவளுக்கு வியப்பைச் சிறிதளவும் விளைவிக்கவில்லை. பட்டாடை அணிந்து மஞ்சத்தில் மல்லாந்து கைகளை வளைவு சிறிதுமின்றி நீட்டிக்கொண்டிருந்த நிலையும், அவன் தலையின் சுருண்ட குழலிலொரு கொத்து முகத்தின் குறுக்கே விழுந்திருந்த மாதிரியும், புருவங்கள் சற்றே குறுகியிருந்த கோரணையும் பெரும் துன்பம் அவன் இதயத்தைச் சூழ்ந்திருக்கிறதென் பதற்குச் சான்று கூறின. சற்று எட்டத் தொங்கிய சேரநாட்டுச் சரவிளக்குச் சுடரொளி வேறு அவன் முகத்தில் நன்றாக விழுந்து அவன் கவலையை நன்றாகப் பளிச்சிடச் செய்ததன்றி, அவன் பெரும் உருவத்தை மஞ்சத்துடன் இன்னும் பெரிதாகச் சுவரில் படும்படி எழுப்பியிருந்ததால், அந்த அறையே பெரும் கோரசொரூப

மெடுத்து விட்டதுபோல் தோன்றியது கொற்கைக் கோட்டைத் தலைவன் மகளுக்கு. அத்தகைய சூழ்நிலையில் அவள் கேட்ட கேள்விக்கு, "உண்டு, விரும்பத்தகாத விசேஷம் உண்டு," என்று அவன் பதிலிறுத்ததும், தன் ஊகம் எத்தனை சரியென்பதை நினைத்த அவள் அவனை மேற்கொண்டு போர் சம்பந்தமான கேள்வி ஏதும் கேட்காமல், "உணவருந்தி விட்டீர்களா?" என்று மட்டும் வினவினாள்.

"இல்லை," ஒற்றைச் சொல்லில் வரண்ட குரலில் வந்தது அவன் பதில்.

அடுத்து அவள் கேள்வி ஏதும் கேட்காமல் வெளியே சென்று தனது பணிமகளை அழைத்துக் கனிவர்க்கமும் சிறிது தேனும் பாலும் கொண்டுவரப் பணித்து, அவை வரும்வரையில் வெளியிலேயே காத்திருந்து, பணிமகள் கொண்டுவந்த வெள்ளித் தட்டையும், பாலுடனிருந்த தங்கக் குவளையையும் ஏந்திக்கொண்டு மீண்டும் அவனறைக்குள் வந்தாள். சற்று எட்ட இருந்த சிறு மஞ்சமொன்றில் தட்டையும் குவளையையும் வைத்து அறைக் கதவைச் சாத்தவும் செய்தாள். தட்டுடன் சற்று அவனருகில் வந்து கனியொன்றைத் தேனில் தோய்த்து அவனிடம் நீட்டினாள். அப்பொழுதும் அவன் அவளை வெறித்துப் பார்த்தானேயொழிய கையை நீட்டவில்லை.

"கனி" என்றாள் அவள். அவன் அதை அறியாதது போல.

"தெரிகிறது," என்றான் அவன்.

"அருந்துங்கள்."

"வேண்டாம்."

"தேனில் தோய்த்திருக்கிறேன். மலைத்தேன்."

"அதைவிடச் சிறந்த தேனைக்கூட ரசிக்கும் நிலையில் நான் இல்லை."

"மலைத்தேனைவிடச் சிறந்த தேனிருக்கிறதா?"

"இருக்கிறது."





"எங்கே?"

"இதோ," அவன் அவளைத் தன்னருகில் முரட்டு தனமாக இழுத்தான். அந்த வேகத்தில் தட்டிலிருந்த பா குவளை நடுங்கியது, அவள் உணர்ச்சியால் நடுங்கியது போல்.

அத்தனை வேதனையிலும் ஆண்மகன் குண போகாததைக் கண்ட அவள் புன்முறுவல் கொண்டாள் "பால் சிந்திவிடும்," என்று எச்சரிக்கவும் செய்தாள்.

அவன் அதை லட்சியம் செய்யவில்லை. தட்ட அவள் கையிலிருந்து பிடுங்கப் போனான். "முடியாது, இ அருந்தினால்தான்..." என்று இழுத்தாள். தன் கையிலிருந் தேன் தோய்த்தக் கனியைக் காட்டி.

"அருந்தினால்தான்...?" என்று கேட்டான் அவ விஷமத்துடன் அவள் உடல் ஸ்பரிசத்தால் சிறிது கவலை நீங்கியதால்.

"மேற்கொண்டு...?" அவளும் வாசகத்தைப் பூர்த் செய்யாமல் விட்டாள்.

அவன் மனக்கவலை பெரிதும் அகன்றதை முக காட்டியது. அதில் ஆவலும், வெறியும் நிரம்பி நின்றன "மேற்கொண்டு...மேற்கொண்டு...என்ன?" என் வினவினான் வீரபாண்டியன் துடிப்புடன்.

"பேசலாம்," என்று கூறி அவள் புன்முறுவல் பூத்தாள் போர்க்களத்தில் வீரபாண்டியனுக்கு எத்தனை வலுவுண்டோ அதைவிட அந்த அந்தரங்கக் களத்தில் தனது வலு அதிகமென்பதை அந்த யுவதி நன்றா அறிந்திருந்தாள். அவன் கவலையை என்ன, நிதானத்தை கூடத் தன்னால் அடியோடு தகர்த்துவிட முடியுமென்பதை உணர்ந்திருந்தாளாதலால் பேச்சில் முதலில் சூசக காட்டிப் பின்பு ஏமாற்றி விளையாடினாள் அவள்.

அவளுடைய ஈரொரு சொற்களாலும், கண்ணில் வெளிப்போந்த ஒளியாலும், உதடுகளில் துலங்கிய நாண புன்முறுவலாலும், மனக்கவலை போய் இன்பக் கிளர்ச்சி எய்திய அந்த மகாவீரன், 'மகா'வையும் இழந்த

'வீர'த்தையும் இழந்து குழந்தை போலானான். ஆகவே அவள் கையினால் ஊட்டிய கனியை மென்று விழுங்கினான். தங்கக் குவளையை அவன் வாயில் வைத்த போது பாலையும் அரைகுறையாகப் பருகினான். பிறகு அவள் தட்டையும், குவளையையும் அறையோரத்தில் வைத்துவிட்டு வந்ததும் மஞ்சத்திலிருந்து எழுந்து அவள் இடையைத் தன்னிரு கைகளாலும் சுற்றிப் பிடித்துப் பஞ்சணைக்கு இழுத்துச் சென்றான். அவள் பஞ்சணை முகப்பிலேயே உட்கார்ந்து கொண்டு, "நீங்கள்தான் களைத்திருக்கிறீர்களே! படுத்துக் கொள்ளுங்கள்" என்று கூறி, அவனை மெல்லப் படுக்கவும் செய்தாள்.

அவள் கையின் மென்மைப் பிடிப்பின் உத்தரவை மீற முடியாது அந்த இளங்காளை பஞ்சணையில் மல்லாந்து படுத்தான். அவன் கையொன்று அப்பொழுதும் அவள் மடியில் விழுந்து கிடந்தது. அதை அதிகமாக சஞ்சரிக்க வொட்டாமல் தன் கையொன்றால் பற்றிக்கொண்ட இளநங்கை மற்றொரு கையால் அவன் முகக் குழல்களைப் பின்புறம் தள்ளிவிட்டாள். "நீங்கள் இத்தனை களைப் படைந்து நான் பார்த்ததில்லை." என்றாள் இளநங்கை.

"ஆம்," என்றான் அவன். அவன் நினைப்பெல்லாம் அப்பொழுது கவலையைப் பற்றியதாயில்லை. அவள் விரித்த மோகன வலையைப் பற்றியதாயிருந்தது.

"போருக்குப் பின்புகூட இத்தனை களைப்படைந்து பார்க்கவில்லை." என்று அவள் மேலும் கூறினாள்.

"போரில் ஏற்பட்டது வெற்றி. வெற்றி அளிப்பது மகிழ்ச்சி. மகிழ்ச்சி சோர்வை உண்டாக்குவதில்லை." என்றான் வீரபாண்டியன்.

"உண்மை." என்றாள் இளநங்கை.

"கவலை மகிழ்ச்சியைப் போன்றதல்ல. நேர் விரோத மானது. கவலை மனிதனை வாட்டுகிறது. உடல் வேகத்தைக் குறைக்கிறது. ஆகவே களைப்பைத் தருகிறது."

"நீங்கள் சாதாரணமாகக் கவலைப்படுகிற வழக்க மில்லையே?"





"இல்லை."

"பெரிய பெரிய ஆபத்தான சமயங்களில்கூ உங்களிடம் கவலையை நான் கண்டதில்லைே கொற்கையில் சேரன் மாளிகையில் அத்தனை வீரர் எதிர் போதுகூட...." என்ற அவள் பேச்சை இடையில் வெட்ட வீரபாண்டியன் "அப்பொழுது எனக்கு மட்டுந்தா ஆபத்து. அதற்கு நான் எப்பொழுதும் அஞ்சியதில்லை என்று கூறினான்.

"வேறு எதற்கு அஞ்சுகிறீர்கள்?" என்று வினவினா இளநங்கை வியப்புடன்.

"நான் உலகத்தில் அஞ்சுவது ஒன்றே ஒன்றுக்கு என்று சற்று பேச்சை நிறுத்தினான்.

"அது?" இடை புகுந்தாள் இளநங்கை.

"தோல்வி" என்றான் வீரபாண்டியன்.

"தோல்வியா?" இளநங்கையின் குரலில் விய இருந்தது.

"ஆம், இளநங்கை, அது ஒன்றுக்குத்தான் பயப்ப கிறேன், இதுவரை நான் தோல்வியைக் கண்டதில்ல வெற்றியே அடைந்திருக்கிறேன். இப்பொழுது தோல்வி கணமுன் தோன்றுகிறது" என்று துன்பத்துடன் கூறினா அவன்.

இளநங்கை சில விநாடிகள் மௌனம் சாதித்தா "தோல்வி கண்முன் தோன்றுகிறதா? உங்கள் போ திட்டத்தில் ஏதாவது பலவீனம்...?" என்று இழுத்த அவள்.

"ஏதுமில்லை," என்றான், வீரபாண்டியன் திட்டம

"அப்படியானால் தோல்வி தோன்றக் காரண என்று வினவினாள் இளநங்கை.

"வீரபாண்டியன் அவளை உற்று நோக்கிவிட் கேட்டான், "இளநங்கை! காட்டுக் கோட்டையில் ந வகுத்த போர்த்திட்டம் நினைவிருக்கிறதா உனக்கு?" என

"இருக்கிறது." என்றாள் இளநங்கை.

"அதன்படி சேரநாட்டில் வடஎல்லையில் நானும் தென் எல்லையில் மன்னரும் இருப்போம்..."

"ஆம்."

"அதுவரை சரியாக நடந்திருக்கிறது. நாம் இங்கே கோட்டாற்றுக் கரையில் இருக்கிறோம். மன்னன் பொதிய மலை தாண்டி சேர நாட்டு முகப்பில் மலைக்காட்டில் இருக்கிறார்."

"சரி,"

"சேரன் படைகளைக் கோட்டாற்றுக் கரைக்கு அழைத்து வரும்படி சிங்கணனுக்குக் கூறியிருக்கிறோம்."

"ஆம்."

"அதன்படி அவனும் நடந்து கொண்டிருக்கிறான். இன்னும் இரண்டு நாட்களில் சேரன் படை நம்மை முற்றுகையிடும்."

"இரண்டு நாட்களுக்குள்ளா?" இளநங்கையின் கேள்வியில் கவலை துளிர்த்தது.

"அதனால் பாதகமில்லை. இந்தக் கோட்டை அந்த முற்றுகையைத் தாங்கும். தவிர நமது ஆரம்பத் திட்டமும் அதுதான். இங்கு சேரன்படை முற்றுகையிடும்போது அதிகப் பாதுகாப்பற்ற சேரநாட்டுத் தென்பகுதிகளை மன்னர் சூறையாடுவார். இங்கு நம்மால் முறியடிக்கப் பட்டுப் பின்வாங்கும் சேரர் படையை நோக்கி அவர் திரும்புவார். நமது படைகளுக்கிடையில் அகப்பட்டுக் கொள்ளும் சேரர் படையை நாம் முறியடிப்போம். இது தான் நமது திட்டம்" என்ற வீரபாண்டியன் இளநங்கையை நோக்கிப் புரிகிறதா என்று கேட்பதுபோல் புருவங்களை உயர்த்தினான்.

"ஆம். அதுதான் நமது திட்டம்" என்றாள் இளநங்கை.

வீரபாண்டியன் மேலும் கூறினான். "திட்டத்தில் எந்தப் பலவீனமுமில்லை, ஆனால் ஒரு முக்கிய விஷயத்தைக் கவனிக்க மறந்துவிட்டேன். அதைச் சிங்கணன் கவனித்து விட்டான்" என்று, இதைச் சொன்ன அவன் குரலில் கவலை மீண்டும் ஒலித்தது.





"எதை நீங்கள் மறந்து விட்டீர்கள்? எதை அவன் கவனித்து விட்டான்?" என்று வினவினாள் இளநங்கை ஆவலும், கவலையும் கலந்து குரலில் ஒலிக்க.

"கடலொன்றிருப்பதை" இதைச் சொன்ன வீர பாண்டியன் குரலில் சற்றுக் கோபமும் இருந்தது.

"கடலா?"

"ஆம், கோட்டாற்றுக் கரையிலிருந்து கடல் அதிக தூரமில்லை."

"அதனாலென்ன?"

"அதனாலென்னவா?" என்று வீரபாண்டியன் அவளை நோக்கினான். அவளுக்கு மெல்ல உண்மை புரிந்தது. இருப்பினும் அவன் வாயால் வரட்டுமென்று "ஆம், அதனாலென்ன?" என்று வினவினாள் இரண்டாம் முறை.

வீரபாண்டியனின் முகம் சிந்தனையில் சில விநாடிகள் ஆழ்ந்தன. பிறகு அவன் சொற்கள் திட்டமாக வெளிவந்தன. "நான் பாண்டியப் படையை இரண்டாகப் பிரித்து வடக்கிலும் தெற்கிலும் இருத்தி இடையே சேரப் படையைப் புகவிட்டு இறுக்கி நொறுக்கிவிடத் திட்டமிட்டேன். ஆனால் சிங்கணன் தனது படையை மூன்றாகப் பிரித்துவிட்டான். கோட்டாற்றுக்கரையை நோக்கி வந்து கொண்டிருக்கும் அவனது தரைப்படை பாதி தூரத்தில் இரண்டாகப் பிரிந்து ஒரு பாதி தெற்கு நோக்கி வருகிறது. நானும் மன்னரும் கிட்டத்தட்ட ஏககாலத்தில் சேரர் பெரும் படையால் எதிர்க்கப்படுவோம். அது மட்டுமல்ல; சேரர் படையின் மற்றொரு பிரிவு கடல் வழியாக வந்து கொண்டு இருக்கிறது. அது கடற்கரையில் இறங்கி இங்கு வந்து கிழக்குப் புறத்தில் இக்கோட்டையைத் தாக்கும். மேற்குப்புறத்தில் மற்றொரு படை தாக்கும்.

ங்கணத் தண்டநாயகன் மகா வீரன். சிறந்த அறிவாளி." ன்று கூறிய வீரபாண்டியன் குரலில் பாராட்டுதல் ரம்பிக் கிடந்தது.

"என்ன சொல்கிறீர்கள்?" என்று வினவினாள் ளநங்கை.

"நான் இரு வேல்களுக்கிடையில் சேரன் படையை றுத்தத் திட்டமிட்டேன். அவன் மூன்று வேல்களுக்கிடை ல் என்னை நிறுத்திவிட்டான். இந்த நிலையில் இந்தக் கோட்டையும், நாமும் தப்புவது கடினம்," என்று கூறிய வீரபாண்டியன் வதனத்தை மீண்டும் துன்பரேகை ஆக்ரமித்துக் கொண்டது.

இளநங்கைக்கும் நிலைமை புரிந்தது. மிக இக்கட்டான கட்டத்தில் வீரபாண்டியன் சிக்கிக் கொண்டிருப்பதை உணர்ந்த இளநங்கை பரிதாபக் கண்களுடன் அவனை நோக்கினாள். அவள் கை அவன் கையுடன் இணைந்து விரல்கள் பின்னி விளையாடின. அவள் கை ஏதோ பெரும் ஆறுதலைத் தருவதாகத் தோன்றியது அவனுக்கு. போரின் துன்ப நெருக்கடி மறைந்து மற்றோர் இன்ப நெருக்கடி உருவெடுத்தது.



அத்தியாயம் 51

# இன்பத்தைத் தொடர்ந்த துன்பம்

இரவின் அந்தகாரத்தை, அந்த அறை சம்பந்தப்பட்ட மட்டில் அங்கிருந்த குத்துவிளக்கின் சுடரொளி மெல்லக் கிழித்ததுபோலவே, வீரபாண்டியன் இதயத்தில் பொங்கி யெழுந்த துன்பத்தின் கடின இருட்டை இளநங்கையின் மையிட்ட விழிகள் வெளியிட்ட காதல் மின்னொளியும் லேசாகக் கிழித்துவிடவே, பாண்டிய படைத்தலைவனிடமிருந்து ஆசுவாசப் பெருமூச்சொன்று பல வினாடிகள் கழித்து வெளிவந்தது. அத்தகைய ஆசுவாசத்திற்குப் பின்புகூட அவன் துன்பச்சுமை முழுதும் விலகாததால் அவன் கண்கள் அவளை வெறித்துப் பார்த்த வண்ணமே இருந்ததன்றி, இடையைத் தழுவி நின்ற இடது கையும் மரத்து நின்றுவிட்டது போல் உணர்ச்சியற்றே கிடந்தது.

அவன் வெறித்த கண்களுடன் தன் அழகிய கண்களை நீண்டநேரம் கலக்கவிட்ட இளநங்கை, அவன் வலது கையையும் தன் கையால் சிறிது பற்றிக்கொண்டாள். அப்படிப் பற்றிக் கிடந்த கையில் அவள் விரல்கள் புரண்ட தாலோ, விரலோடு விரல் பின்னி நெறித்ததாலோ, அவன் கையும் சிறிது சுரணை பெற்றதாகத் தெரிந்தது. அவளுடைய கண்கள் மூலமாக அவளது உயிரின் ஒரு பகுதியே தன் உடலுக்குள் பாய்வதுபோன்ற பிரமை வீரபாண்டியனுக்கு ஏற்படவே, அவன் கண்கள் மெல்ல மெல்லச் சுரணை பெற்று அவள் முகத்தில் பாய்ந்ததைக் கண்ட இளநங்கை உள்ளூரப் பெரு மகிழ்ச்சி கொண்டாள். உணர்ச்சி மிகுதியால் சற்றே நெளிந்தாள்.

வீரபாண்டியன் துன்ப நெருக்கடியைப் போக்க, அந்தக் கட்டழகி கையாண்ட காமக்கணைகள் அவனை மட்டுமின்றி அவளையும் இன்ப நெருக்கடிக்கு இழுக்கவே, 'எய்தவர்கள் மீதே திருப்பும் பாணங்கள் உண்டு எனப் புராணங்கள் கூறுவதில் ஓரளவு உண்மையும் இருக்கத்தான் செய்கிறது,' என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டாள் இளநங்கை.

அவன் மல்லாந்து கிடந்த தோரணையில் மஞ்சத்தில் உட்கார்ந்திருந்த தனது சரீரத்தின் மீது அவன் கால் கிடந்தது கூட எத்தனை வேதனையையும் மன எழுச்சியையும் தனக்கு அளிக்கிறது என்று எண்ணிய இளநங்கை ஓரளவு கலங்கவும் செய்தாள். ஆனால் அச்சத்தால் கலங்கினாளா அல்லது இச்சையால் கலங்கினாளா என்று அவளுக்கே திட்டமாகத் தெரியவில்லை. ஏதும் புரியாத நிலை அது. எவரையும் குழப்பும் நிலை அது. அந்தக் காதல் நிலையில் துன்பமும் இன்பமும் சமபாகம் கொள்கின்றன. இன்பம் கிட்டும்வரை துன்பம் தான் அந்த நிலையில் உண்டு. உணர்ச்சிகளின் வேகம், எதிர்பார்த்தது பூர்த்தியாகாததால் ஏற்படும் வேட்கை-இவை உடலைத் துடிக்கச் செய்கின்றன. இதயத்தைக் கலக்கவும் செய்கின்றன. ஆனால் இந்தத் துன்பப் பூர்வ பீடிகை இல்லையேல், இன்ப நுகர்ச்சியிலும் பூர்த்தி இருப்பதில்லை. ஒரு நாள் பூர்த்தியாவதற்கு இரவு பாதி பகல் பாதி எப்படித் தேவையாக இருக்கிறதோ, அப்படி மனப்பூர்த்திக்கும் துன்பமும் இன்பமும் சரிபாதி தேவையாகத்தானிருக்கிறது. அந்தத் தேவையின் ஆரம்ப ஸ்திதியிலிருந்த அந்த இரு காதலரும் பேச்சிழந்து கிடந்தார்கள். செயலைக்கூட ஓரளவு இழந்தே கிடந்தார்கள். ஆனால் உணர்ச்சிகள் அலை அலையாக ஓடிக் கொண்டிருந்தன அவ்விருவர் உடலிலும்.

உணர்ச்சிப் பெருக்கால் மெல்ல மெல்ல உந்தப்பட்ட வீரபாண்டியன் கைகள் மெல்ல அவள் இடையைச் சுற்றிக் கொண்டன.





சரேலென எழுந்து அவனிடமிருந்து விடுபட முயற் செய்தாள். ஆனால் அவன் இரும்புக் கைகள் அவளை நக விடவில்லை. குத்துவிளக்குச் சுடரொளியில் அந்த ஆடவ முகத்தில் பெரு வெறி ஒளிவிட்டதைக் கண்டாள் அவ அந்த வெறியில் அவன் உதடுகள் அசைந்தன. "ஏ எழுந்திருக்கிறாய்?'' என்று அவன் உதடுகளிலிருந் உக்கிரமாகச் சொற்களும் வெளிவந்தன.

அவள் அவனைப் பார்க்கச் சக்தியற்றவளானா முந்திய நாளிரவின் நினைவு அவள் அச்சத்தை அதிக படுத்தியது. "கதவு" என்று மட்டும் முணுமுணுத்தாள்.

"கதவுக்கென்ன?" மிகக் கடினமாக வெளிவந்த கேள்வி.

"தாழிடவில்லை," என்று முணுமுணுத்து, பஞ்சணை மீது பார்வையைத் திருப்பினாள் இளநங்கை.

''தாழிடாவிட்டாலென்ன?'' என்று மீண்டு முரட்டுத் தனமாகக் கேட்டான் வீரபாண்டியன்.

"குறிஞ்சி!"

"குறிஞ்சியா?"

"அவள்தான் பணிப்பெண்,"

"ஆமாம். அவளுக்கென்ன?"

"என்னறையில் இருக்கிறாள்."

இதைச் சொன்ன இளநங்கை, மேற்கொண்டு ஏது சொல்ல வேண்டாமென்ற காரணத்தாலோ என்னவே மௌனம் சாதித்தாள்.

"சரி போய்த் தாழிட்டுவிட்டு வா" என்று உத்தரவை போல வெளிவந்தன வீரபாண்டியன் சொற்கள்.

அவளுக்கு அனுமதியளிப்பது போல் இடையிலிருந் அவன் கைகளும் ஒரு முறை இடையை நெருங்கப் பிடித் அகன்று பஞ்சணையில் விழுந்தன.

பதிலேதும் சொல்லும் நிலையிலோ அவ சொற்களை மீறி நடக்கும் துணிவிலோ இல்லை இளநங்கை இடையைப் பிடித்துவிட்ட மூர்க்கத்தனத்தில் தாழிட்டு

திரும்பி வரக் கட்டளையிருப்பதைக் கவனித்தாள் அவள். அந்தக் கட்டளையை மறுத்தாலென்ன என்று அவள் மனம் ஒரு வினாடிதான் சிந்தித்தது. மெல்ல எழுந்து கதவை நோக்கி நடந்து கதவை நெருங்கி தாழைத் தொட்ட போது கூட அந்தச் சிந்தனை இருந்தது அவள் சித்தத்தில். 'இப்படியே கதவைத் திறந்து கொண்டு நான் வெளியே போய் விடுவதை யார் தடுக்க முடியும்?' என்று நினைத்தாள் அவள்.

என்ன காரணமோ அவள் வெளியே போகவில்லை. கதவைச் சிறிது திறக்கவும் இல்லை. தாழைக் கையில் தொட்டுக்கொண்டு திரும்பிப் பஞ்சணையை நோக்கினாள். வெறியும் ஆவலும் நிரம்பிய கழுகுக்கண்கள் குத்துவிளக்குச் சுடரொளியில் பஞ்சணையிலிருந்து பளிச்சிட்டன. சாதாரணமாக எதிரிகளுக்கு அச்சமளித்த அந்தப் பார்வை அவளுக்கும் அச்சத்தை அளித்தது. ஆனால் அது எதிரிகள் அச்சத்தைப் போன்றதல்லவென்பதையும் நேர்மாறான விவரிக்க இயலாத தேவையான அச்சம் என்பதையும் மட்டும் அவள் உணர்ந்தாள். அத்தனை வெறி பிடித்த பார்வையிலும் ஏதோ ஓர் ஏக்கமும் • எதிர்பார்ப்பும் இருந்ததை அவள் உணர்ந்தாள். ஆகவே, மெல்லக் கதவைத் தாழிட்டுத் திரும்பிப் பஞ்சணையை நோக்கிச் சென்றாள். பஞ்சணை முகப்பில் உட்கார்ந்து கொண்டு விளக்கின் திரியை உள்ளே இழுப்பதற்காகத் தனது இடது கையை குத்துவிளக்கை நோக்கிக் கொண்டு சென்றாள்.

அவன் அவள் கையைப் பிடித்திழுத்து, "வேண்டாம்" என்றான்.

"ஏன்?" மெல்லக் கேட்டாள் அவள்.

"விளக்கு எரியட்டும்," என்றான் வீரபாண்டியன்.

"எதற்காம்?" சொல்லவொண்ணா நாணம் மனத்தை சூழ்ந்து கொண்டதால் கேட்டாள் அவள்.

"உன்னை நான் பார்க்கவேண்டும்," என்று முணுமுணுத்தான் அவன்.





"நான் என்ன புதிதா?" என்று அவள் கேள் குழைந்து வந்தது.

"ஆம்,"

"நேற்றுதான்..."

"ஆம்."

"அப்படியானால்..."

"இளநங்கை, நீ நேற்றும் புதிது, இன்றும் புதி நாளைக்கும் புதிது. நானிருக்கும் வரை தினம் தினம் புதிதுதான்; எனக்கு. உன்னை என்றும் முழுதும் நா புரிந்துகொள்ள முடியாது. நித்தம் நித்தம் நீ புத்தம் புதி கோலம் எடுக்கிறாய்." என்றான் வீரபாண்டியன்.

அந்தக் கோலம் மெல்ல மெல்ல மங்கியது. அவ கையிலிருந்து விடுவித்துக் கொண்ட அவள் இடது க அவன் உத்தரவையும் மீறித் திரியை இழுத்தது. விளக்கை தான் அவள் அணைக்க முடிந்தது. அவன் ஆசை அணைக்க முடியவில்லை. ஆசை தேடிய விளக்கத்தையு அணைக்க முடியவில்லை.

சாளரத்தின் வெளியே தூரத்தே கவி வானத்திலிருந்த விண்மீன்கள் அந்தக் காதலர்களி கருத்துப் பூர்த்திக்குச் சான்று கூறின. கண் சிமிட் நகைக்கவும் செய்தன. நீண்ட நேரத்திற்குப் பிற சாளரத்தின் மூலம் கண்ணை ஓட்டிய அந்த இளங்கா பக்கத்தில் கிடந்த இளநங்கையின் கையைப் பற் கொண்டு சொன்னான்: "இளநங்கை, பயப்படாதே" என்

"எதற்கு?" என்று முணுமுணுத்தாள் அவள்.

"எதற்கும்தான்," என்று உறுதி கூறினான்.

"எதற்கும்தானென்றால்!" மீண்டும் முணுமுணுத்தா அவள்.

"உலகத்தில் எதுவும் ரகசியமில்லை, இளநங்கை,"

"உம்?"

அப்படித்தான் சாத்திரங்கள் சொல்லுகின்றன."

"எந்தச் சாத்திரமோ?"

"எல்லாச் சாத்திரங்களும்தான். மனிதன் ரகசியமாக எதையும் செய்யமுடியாது. எல்லாவற்றுக்கும் சாட்சிய மிருக்கிறது."

"யார் சாட்சியோ?"

"பன்னிரண்டு சாட்சிகள். 'ஆதித்ய சந்த்ரா வனிலோ னலச்ச' என்றொரு வடமொழி சுலோகம் இருக்கிறது."

"அது என்ன சொல்கிறது."

"மனிதன் எந்தக் காரியத்தையும் ரகசியமாகச் செய்ய முடியாது. சூரியன், சந்திரன், காற்று, நெருப்பு, ஆகாயம், பூமி, நீர், இருதயம், யமன், இரவு, பகல், உதயாஸ்தமன மாகிய சந்தியா காலங்கள், தர்மம் ஆகிய பன்னிரண்டு சாட்சிகள் சதா மனிதன் நடத்தையைக் கவனித்துக் கொண்டிருக்கின்றன எனக் கூறுகிறது அந்தச் சுலோகம்."

அவள் சிறிது நேரம் மௌனமாயிருந்தாள். "மனிதன் இந்தச் சாட்சிகளுக்குப் பயப்படுவதாகத் தெரியவில்லை."

"ஏன் அப்படிச் சொல்கிறாய் இளநங்கை?"

"பயப்பட்டால் பல காரியங்களில் காலா கால மில்லாமல் ஈடுபடமாட்டான்," இதைச் சொன்ன அவள் குரலில் ஏளனமிருந்தது.

வீரபாண்டியன் சிறிது நேரம் மௌனம் சாதித்தான். "காலா காலம் என்பது சந்தர்ப்பத்தைப் பொறுத்தது."

"இப்பொழுது என்ன சந்தர்ப்பம் வந்துவிட்டது நமக்கு?"

"போர்."

"போரா?"

"ஆம். அதுவும் நெருக்கடியான நிலை, நீயோ நானோ என்றும் உயிர் நீத்துவிடக் கூடிய நிலை."

இதற்குமேல் அவள் பதிலேதும் சொல்லவில்லை. இருப்பினும் அவள் நெஞ்சத்தில் மட்டும் விவரிக்க இயலாத பயம் ஒன்று இருந்து கொண்டிருந்தது. அசதியால் கண்ணை மூடிய பின்பும் உறக்கத்தில்கூட ஏதோ ஒரு பயம் அவளை வாட்டி வதைத்துக் கொண்டிருந்தது.





அந்தப் பயம் மறுநாள் காலை எழுந்து அவள் மங்கல ஸ்நானம், செய்த பின்புகூடத் தெளியவில்லை. அவளை அணைத்து வீரபாண்டியன் விடைபெற்ற சமயத்தில் கூட விவரிக்க இயலாத அந்தப் பயம் இருந்துகொண்டிருந்தது அவள் இதயததில்.

இன்பப் பூர்த்திக்குப் பின்பு ஏனிந்தப் பயம் என்று அவள் பலமுறை தன்னைக் கேட்டுக் கொண்டாள். அன்று முழுதும் அவளுக்கு அக்கேள்விக்குப் பதில் கிடைக்க வில்லை. அன்றிரவில்தான் கிடைத்தது. கிடைத்தபோது பதில் மிக விபரீதமாயிருந்தது. அன்றிரவு இரண்டாம் ஜாம ஆரம்பத்தில்தான் அவள் மீண்டும் வீரபாண்டியனைக் கண்டாள். கண்ட கண்கள் கலங்கின. இதயம் கனத்தது. அவனை நான்கு வீரர்கள் தூக்கி வந்தார்கள். உடல் பூராவும் ரத்தத்தால் நனைந்திருந்தது. தலையில் போட்டிருந்த கட்டிலிருந்து அப்பொழுதும் ரத்தம் கசிந்து கொண்டிருந்தது.

பூர்ண மூர்ச்சையிலிருந்தான் வீரபாண்டியன். அந்தக் கோலத்தைப் பார்த்த இளநங்கை திக்பிரமை பிடித்துச் சில வினாடிகள் நின்றாள். முந்திய நாளிரவின் இன்பத்தைப் பெரும் துன்பம் பிந்திய நாளிரவில் தொடருமென்பதை அவள் சொப்பனத்தில் கூட நினைக்காததால், அவள் இதயம் வெடித்துவிடும் நிலையை அடைந்தது. உணர்ச்சிகள் கொந்தளித்தெழுந்து சுழன்று அவள் புத்தியைக் குழப்பின. பேரதிர்ச்சி அவளை ஆட் கொள்ளவே நின்ற இடத்தில் ஆடினாள். பிறகு இரண்டடி நடந்து சென்று இரு வீரர்களால் தாங்கப்பட்டிருந்த பாண்டிய இளவரசனை உற்று நோக்கினாள். மெல்ல மெல்ல அவன் உருவம் அவள் கண்களிலிருந்து மறைவதாகத் தோன்றியது அவளுக்கு. அடுத்த வினாடி அவள் சுரணையிழந்து அவன் உடலின்மீது தொப்பென விழுந்தாள்.

எத்தனை நேரம் அவள் அந்த நிலையில் இருந்திருந்தாளோ அவளுக்கே தெரியாது. ஆனால், கண்

விழித்த போது அவள் மீண்டும் தன்னறைப் பஞ்சணையில் கிடப்பதை உணர்ந்தாள். தன்னை நோக்கிப் பணிப்பெண் குறிஞ்சி கவலை தோய்ந்த முகத்துடன் குனிந்து நிற்பதையும் கண்ட இளநங்கை மெல்லப் பேச முற்பட்டாலும், குரலில் சிறிதும் வலுவில்லாதிருப்பதை அறிந்து அத்தனை பலவீனம் தனக்கு ஏற்பட்டதை எண்ணி வியக்கவும் செய்தாள். ஆனால் வீரபாண்டியனைப்பற்றிய கவலை அவளுக்கு அதிகமாகவே "குறிஞ்சி" என்று மெல்ல அழைத்தாள்.

"அம்மா!" குறிஞ்சியின் பதில் மிக மெல்லிய குரலில் அன்புடன் வெளிவந்தது.

"அவர்...." என்று ஏதோ சொல்ல முயன்று தயங்கினாள்.

"ஆமம்மா," என்றாள் குறிஞ்சி அவள் உள்ள எண்ணத்தைப் புரிந்து கொண்டதால் திட்டமாக ஏதும் சொல்லாமல்.

"கண் விழித்துவிட்டாரா?" இளநங்கையின் கேள்வி இதயத் துன்பத்தில் தோய்ந்து வந்தது.

"இல்லையம்மா."

"விடிந்து விட்டதல்லவா குறிஞ்சி?"

"விடிந்து ஒரு நாழிகைக்கு மேலாகிறது?"

"இன்னுமா கண் விழிக்கவில்லை அவர்?"

"ஆமம்மா."

"காயம் ரொம்பப் பலமா குறிஞ்சி?"

"பலமென்றுதான் மருத்துவர்கள் சொல்கிறார்கள்."

தன்னைப் பஞ்சணையில் அழுத்திவைத்திருந்த அசதியை உதறிக்கொண்டு எழுந்திருந்தாள் இளநங்கை. பஞ்சணையை விட்டு இறங்கி நடக்கவும் முற்பட்டாள்.

"அம்மா!" என்று குறிஞ்சியின் குரல் அவளைத் தடுத்தது.

"ஏன் குறிஞ்சி?" என்று வினவினாள் கொற்கைக் கோட்டைக் காவலன் மகள்.





"அவரை நீங்கள் பார்க்கமுடியாது." என்றாள் பணி பெண்.

"ஏன்?"

"மருத்துவர்கள் உத்தரவு."

"அதைப்பற்றி எனக்கு அக்கறையில்லை," என் சொல்லிக்கொண்டே பக்கத்தறைக்குச் சென்றா இளநங்கை.

அங்கு தன்னைத் தடுக்க முற்பட்ட காவலனை எரித்து விடுபவள்போல் பார்த்து ஒதுக்கிவிட்டு உள்ே நுழைந்தாள். பஞ்சணையில் சுரணையின்றிக் கிடந் இளவரசனைக் கண்டதும் அவள் கண்களில் நீர் திரண்டது மெல்லப் பஞ்சணை அருகில் சென்றதும் படைத் தலைவ பக்கத்திலிருந்த மருத்துவர் கையைக் காட்டி அவளை தேக்கினார்.

மருத்துவர் மீது உஷ்ணம் மிகுந்த பார்வை வீசினாள் இளநங்கை. மருத்துவர் அதை லட்சியம் செய் வில்லை. வெறுப்புடன் அவளை நோககினார். "பிராண போகும் போதாவது மனிதன் அமைதியுடன் விடப்ப வேண்டும்." என்ற அவர் குரலிலும் வெறுப்பு மண்டி கிடந்தது.

## அத்தியாயம் 52

# மரண வாயில்

**ம**ருத்துவர் சொற்களைக் கேட்ட இளநங்கையின் இதயம் வெடித்துவிடும் நிலைக்கு வந்ததன்றி அவள் கண்களிலிருந்தும் நீர் பொல பொலவென்று உதிர்ந்தது. அவள் அழகிய மார்பகமும் விம்மி விம்மித் தாழ்ந்தது. வீரர்கள் வம்சத்தில் உதித்த காரணத்தால் அவள் வாய் விட்டு அழவில்லையே தவிர, அந்த அழுகையைப்போல் ஆயிரம் மடங்கு அழுகை உள்ளத்தே எழுந்து உடலை உலுக்கிக் கொண்டிருந்தது. கண்ணீர் வடித்த நிலையில், கட்டிலில் கிடந்த அந்தக் கட்டழகனைக் கண்ட அந்தக் காரிகை, அவன் உடலில் அசைவு சிறிதுமில்லாததையும் முகத்தில் கூட வேதனை சிறிதும் புலப்படாததையும் பார்த்து, மரணத்துக்குத் தினையளவும் அஞ்சாத மகா புருஷன் முன்னிலையில் தானிருப்பதை உணர்ந்தாள். அவன் தனக்குச் சொந்தமானவன் என்ற உணர்ச்சி அப்பொழுதுகூட, அத்தனை மரணாபத்தில் அவன் படுத்திருந்த நிலையில்கூட, அவளுக்குத் துன்பமலையுடன் சிறிது இன்பத்தையும் இணைத்துவிட்டது. பாரதத்தின் வீரப்பெண்களின் பட்டியலில் அவன் காரணமாகத் தானும் சேர்ந்துவிட்டதை அவள் எண்ணினாள். அந்த எண்ணம் என்னதான் பெருமிதத்தை அவளுக்களித்தாலும், அவன் படுத்திருந்த நிலை, அடைந்துகொண்டிருந்த வேதனை அவள் தைரியத்தைச் சுக்கல்சுக்கலாக உடைத்தெறிந்து விடவே, மேலும் கண்ணீரே பீறிட்டுக்கொண்டு உதிர்ந்தது. அந்த நீர்த்திரையினூடே அவனைக் கவனித்த இளநங்கை, அவன் தலைக் காயத்துக்கு மருத்துவர்கள் போட்டிருந்த கட்டு பலமாயிருந்ததையும் முந்திய இரவில் தான் பார்த்த





குருதிக் கசிவு அதிலில்லாததையும் கவனித்தாள். அவ
மூச்சுக்கூட ஒரே சீராக வந்துகொண்டிருந்ததையும் கண்
அவள் அவனுக்குப் பிராணபத்து ஏதுமில்லையென்பல
உணர்ந்தாளாகையால், மருத்துவரைத் திருப்பி நோக்
"மருத்துவரே! மூச்சு சாதாரணமாகத்தானே இருக்கிறது
என்று மெல்ல வினவினாள்.

மருத்துவர் பதில் சொல்லாவிட்டாலும் ஆமென்
தற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் அசைத்தார்.

"அப்படியானால், பிராண பயம்?" என்
வார்த்தையை முடிக்காமலே ஒரு கேள்வியையு
தொடுத்தாள்.

"இது வீரர்கள் மரணம்" என்றார் மருத்துவ
மரியாதைக் குரல் தொனிக்க.

"வீரர்கள் மரணமா?" ஏதும் புரியாமல் வினவினா
இளநங்கை.

"ஆம்,சாதாரண வியாதிகளால் பீடிக்கப்பட்
இறப்பவர்களுக்கு அந்திமக் காலத்தில் சுவாசம் வாங்கு
குடும்ப நினைப்புகளுக்கு ஏற்ப முகவிகாரங்களும் வலிப்பு
ஏற்படும். வீரர்கள், ஞானிகள், இவர்கள் மரணம் அப்படி
பட்டதல்ல. ஞான நிஷ்டையில் ஒரே நிலையில் சுவாசத்
விட்டுச் சமாதியடைகிறான். ஒரே நோக்கமுள்ள வீரர்க
மரணத்தை நாடிச் சென்று அதனால் மரண காயமேற்பட்
அலட்சியமாக மரணத்தை ஏற்பதால், ரத்தம் வடிய உயிரு
வடிந்துவிடுகிறது சாவதானமாக. இறப்புக்குப் பிறகுகூ
வீரர்கள் வதனத்தில் மரணக் களை வருவதில்லை" என்
சுட்டிக்காட்டினார் மருத்துவர் துன்பம் நிறைந்த குரலி
அது மட்டுமின்றி, "அத்தகைய வீரமரணத்தை நீங்க
இன்று மாலைக்குள் கண்ணால் காணப் போகிறீர்க
இப்பொழுது அதன் பூர்வாங்கத்தைக் காணுகிறீர்கள்
என்று கூறினார்.

இளநங்கை மேற்கொண்டு கேள்வி ஏது
கேட்கவில்லை. சேலைத் தலைப்பால் கண்களைக்கூ
நன்றாகத் துடைத்துக் கொண்டாள். மரணத்தை எதி

நோக்கும் மகாவீரனுடன் காந்தருவமுறையில் கலந்து விட்ட தனக்கும் அந்த வீரநினைப்பும், தைரியமுமிருக்க வேண்டு மென்று தீர்மானித்தாள். பிறகு மருத்துவரை நோக்கி, "மருத்துவரே! இனி படைத் தலைவருக்கு நீர் செய்யக்கூடிய சிகிச்சை ஏதாவதிருக்கிறதா?" என்று வினவினாள்.

"ஏதுமில்லை. காயத்துக்குச் சேரநாட்டின் சிறந்த மூலிகைகளை வைத்துக் கட்டியிருக்கிறேன். உதடுகள் வரண்டால் மெல்லப் புகட்ட இதோ ரசாயனம் வைத்திருக்கிறேன். ஒரு முறையில் ஓர் உத்திரணி ரசாயனம் புகட்டலாம்." என்று கூறி, பக்கத்து ஆசனமொன்றில் மூடி வைக்கப்பட்டிருந்த தங்க வட்டிலையும் ஆசன மீதிருந்த உத்திரணியையும் கையால் சுட்டிக் காட்டினார்.

"இவற்றைத் தவிர...?" என்று வினவினாள் இளநங்கை.

"உயிர் நீத்தபின்...?" என்று துவங்கிய மருத்துவரை இடைமறித்த இளநங்கை, "அதைப்பற்றிய கவலை உங்களுக்கு வேண்டாம். செல்லுங்கள்',' என்று கூறினாள்.

கூறினாளா, உத்தரவிட்டாளா என்பதைப் புரிந்து கொள்ளமுடியாத நிலையில் வெளிவந்த அவள் சொற்களின் விளைவாக வெளியே செல்ல முற்பட்ட மருத்துவரை நோக்கிய இளநங்கை, "மருத்துவரே! பக்கத்தறையில் என் பணிப்பெண் இருக்கிறாள். இங்கு வரச் சொல்லுங்கள்," என்றும் கூறி, அவர் செல்லலாமென்பதற்கு அறிகுறியாக கையையும் கம்பீரமாக அசைத்தாள். அவள் சொற்கள், தோரணை எல்லாமே விசித்திரமாயிருந்தன மருத்துவருக்கு. மரணமடைந்து கொண்டிருந்த ஒரு மனிதனுடன் தனித்து உட்கார்ந்து, மருத்துவனையும் அகற்றி விடத் துணிவுள்ள யாரையும் அவர் அதுவரை கண்டதில்லை. ஆகவே, அவளை வியப்புடன் நோக்கி விட்டே வெளியே சென்றார்.

அவர் சென்ற அடுத்த வினாடி அறைக்குள் நுழைந்த குறிஞ்சியை நோக்கிய இளநங்கை, "குறிஞ்சி! இந்த உப்பரிகைப் படியில் நிற்கும் காவலரிடம் என் உத்தரவின்றி யாரையும் இங்கு அனுமதிக்க வேண்டாம் என்று சொல்லி





விடு. நீ மட்டும் இந்த அறைக்கு வெளியில் காத்திரு," என்று உத்தரவிட்டாள்.

"சரி அம்மா," என்று போகத் திரும்பினாள் குறிஞ்சி

"குறிஞ்சி!" இளநங்கையின் குரல் குறிஞ்சியைத் தடை செய்தது.

"எனக்கு நீராட்டத்துக்கு ஏற்பாடு செய்," என்ற இளநங்கையை வியப்பு நிரம்பிய விழிகளுடன் ஏறிட்டுப் பார்த்தாள் பணிப்பெண்.

"ஏனப்படிப் பார்க்கிறாய், குறிஞ்சி?" என்று வினவினாள் இளநங்கை.

"ஒன்றுமில்லை. நீராடப் போகிறீர்களா அம்மா?" என்றாள் பணிப்பெண்.

"ஆம்."

"சரி அம்மா."

"அதுமட்டுமல்ல குறிஞ்சி."

"அம்மா!" வியப்பு நன்றாக ஒலித்தது குறிஞ்சியின் குரலில்.

"நன்றாக அலங்காரமும் செய்துகொள்ளப் போகிறேன். நல்ல பட்டாடையாக எடுத்து வை திலகத்திற்கும், அந்த வாசனைக் கூட்டு மை இருக்கட்டும்" என்றும் சொற்களைத் தொடுத்தாள் இளநங்கை.

குறிஞ்சி இளநங்கையை நன்றாக உற்று நோக்கினாள் அவளுக்குப் பைத்தியமேதுமில்லையென்பதை உறுதி செய்து கொண்டதால் கேட்டாள். "அம்மா! இவ இருக்கும் நிலையில்..." என்று வாசகத்தை அவள் முடிக்க வில்லை. முடிக்கும் துணிவும் அவளுக்கில்லை.

இளநங்கையின் இதழ்களில் சோகப் புன்முறுவல் படர்ந்தது. மெல்லச் சென்று படைத் தலைவன் பஞ்சணையில் அவனுக்கருகில் உட்கார்ந்து கொண்டாள் முந்தானைத் தலைப்பால் அவன் முகத்தில் துளிர்த்திருந்த வியர்வைத் திவலைகளைத் துடைத்தாள். பிறகு பக்கத்து ஆசனத்திலிருந்த ரசாயனத்தை உத்திரணியில் எடுத்து

அவன் இதழ்களைத் தனது விரல்களால் நீக்கி வலது கையால் ரசாயனத்தைப் புகட்டினாள். அவன் இதழ்கள் அசைந்தன. ரசாயனம் மெல்ல இறங்கியது. பிறகு குறிஞ்சியை அருகில் வரும்படி அழைத்து, "குறிஞ்சி! ஒரு ரகசியம் சொல்லட்டுமா உனக்கு?" என்று வினவினாள்.

குறிஞ்சியின் குவளை விழிகள் இளநங்கையை உற்று நோக்கின. "சொல்லுங்கள்" என்றாள்.

"நான் நீராடிப் பட்டாடை உடுக்கப் போகிறேன்."

"ஆம் அம்மா! சொன்னீர்களே இப்பொழுது."

"ஏன் தெரியுமா?"

"ஏன்?"

"வீரன் மரணமடையும்போது, வீரன் மனைவி எப்படியிருக்க வேண்டும்?"

"அம்மா!" குறிஞ்சியின் குரலில் அச்சம் தொனித்தது.

"அச்சத்திற்கு இதில் ஏதுமில்லை குறிஞ்சி," என்ற இளநங்கையின் குரல் வருத்தத்தால் குழைந்தது.

"இருப்பினும்..." அச்சம் குறையவில்லை பணிப்பெண் குரலில்.

"இருப்பினும் என்பது இதில் ஏதுமில்லை குறிஞ்சி. திருமணம் நடந்து விட்டது..." என்ற இளநங்கையின் குரலில் ஆனந்தம் இருந்தது.

"எப்பொழுது?"

"இரண்டு நாட்களாக."

"இரண்டு நாட்களாகவா?"

"ஆம். நான் அவர் மனைவியாகிவிட்டேன்."

"சம்பிரதாயம், சாட்சிகள், உற்றார், உறவினர் இல்லாமலா?"

"காந்தருவ சம்பிரதாயம். சாட்சிகள் பன்னிரண்டு என்று இவரே சொன்னார் குறிஞ்சி. ரணகளத்தில் உற்றார் உறவினர் ஏது? நீ சொல்வது சாதாரண மக்கள் சம்பிரதாயம், வீரர்களுக்கானதல்ல. அவற்றுக்குத் தனி சம்பிரதாயம், தனி விதிகள்," என்ற இளநங்கை, "நீ போய் நீராட்டத்துக்கு ஏற்பாடு செய்," என்றாள் குறிஞ்சியிடம்.





குறிஞ்சி பிரமை மிகுந்த மனத்துடன் அவ்வறை
விட்டு வெளியே சென்றாள். அன்று முழுதுமே அ
பிரமிப்பில் ஆழும் நிலையில் இருந்தாள். அந்த அ
யிலிருந்து, தான் வெளிவந்தது முதல் இளநங்கை அடியே
மாறிவிட்டதை அவள் உணர்ந்தாள். சிறிது நேரத்
கெல்லாம் தான் சென்று நீராட அழைத்தபோது தன்
படைத்தலைவனுக்குக் காவல் வைத்துவிட்டு இளநங்
உறுதியுடன் நீராடச் சென்றதையும், சிறிது நேரத்
நீராடிப் பட்டாடை அணிந்து, தலைவாரி முடித்
திலகமும் மையுமிட்டுப் பரிமள கந்தம் உடலில் த
வந்ததையும் கவனித்த குறிஞ்சி வியப்பின் எல்லை
அடைந்தாள். அந்தக் கோலத்தில் அவள் வந்து பன
தலைவன் பக்கத்தில் அமர்ந்து, "நீ போ குறிஞ்சி! இ
மாலை வரையில் நீ வரவேண்டாம். தேவையானால் நா
அழைக்கிறேன்" என்று கூறியபோது அவள் ப
இளநங்கையாக மாறிவிட்டதையும் கண்ட குறிஞ்சி, விய
உச்சநிலைக்குச்செல்ல வெளியே சென்றாள்.

அவள் சென்றபின் கதவை மெள்ளச் சாத்
இளநங்கை மீண்டும் வந்து பஞ்சணையில் அமர்ந்து அ
மகா வீரனை நோக்கினாள். அவன் உடையெங்கும் தெரி
ரத்தக் கறையிலிருந்து, எங்கோ பெரும் சண்
நடந்திருக்கிறதென்பதை அவள் உணர்ந்துகொண்டா
அவன் நெற்றிக் காயத்தின் குருதி கால் பகுதிகளில் தெளி
அவசியமில்லையென்பதை உணர்ந்ததால் அவன் எ
போனான், எதற்காகப் போனான், யாரிடம் சிக்
கொண்டான் என்றெல்லாம் எண்ணிப் பார்த்து வி
யேதும் கிடைக்காமல் திணறினாள் அவள். தவிர அவ
தலையில் பட்டிருந்த காயத்திலிருந்து அக்காயம்
எதிரான போரில் ஏற்படவில்லை யென்பதையு
எங்கிருந்தோ எறியப்பட்ட ஆயுதத்தால் விளைந்திருக்
தென்பதையும் புரிந்துகொண்டாள் இளநங்கை. இத
விளைவாக அவள் மனத்திலிருந்த ஆயிரம் சந்தேகங்களுக்
விடை சொல்லக் கூடியவன் படைத்தலைவன் ஒருவ

யென்பதை உணர்ந்த இளநங்கை அவனிடமிருந்து தான் ஏதும் அறியமுடியாதென்பதை நினைத்து ஏக்கப் பெருமூச் சொன்றும் விட்டாள்.

அவள் கரங்கள் மெள்ள அவன் கன்னங்களைத் தடவின. கைகளையும் கால்களையும் லேசாக வருடின. அவன் கைகளை வருடியபோது, "எனக்குச் சிகிச்சை செய்வதற்கு முந்தா நாளன்றுதானே முனைந்தீர்கள். இப்பொழுது ஏன் இப்படி செயலற்றுக் கிடக்கிறீர்கள்?" என்று வினவினாள் மெள்ளப் பைத்தியம்போல், அவன் பதில் சொல்ல முடியாதென்பதை அறிந்திருந்தும். சற்று நேரம் கழித்து அவன் இதழ்கள் உலர்ந்து போனதைக் கண்டு அவன் நெற்றியில் கையை வைத்தாள். நெற்றியில் சுரம் நெருப்புப் பொறியெனப் பறந்துகொண்டிருந்தது. சிறிது ரசாயனத்தை உத்திரணியில் எடுத்து இதழ்களில் புகட்டினாள். இதழ்கள் இலேசாக அசைந்தனவே தவிர ரசாயனத்தை இழுக்கத் திராணியற்று இருந்தன. ஆகவே மீண்டும் உத்திரணியில் ரசாயனத்தை எடுத்துத் தன் மென்மை விரல்களால் வாயை லேசாக நீக்கி ரசாயனத்தை ஊற்றினாள். மெள்ள ரசாயனம் இறங்கியது.

சுரவேகம் அன்று மாலை வரையில் இருந்து கொண்டிருந்தது. அன்று முழுவதும் படைத்தலைவன் மூச்சுப் பேச்சில்லாமல் கிடந்தான். மாலையில் விளக்கு வைத்ததும் மீண்டுமொரு முறை ரசாயனத்தை உதடுகளில் இறக்க முயன்றாள் இளநங்கை. ரசாயனம் இறங்காது போகவே, அதுவரை அவளுக்கிருந்த தைரியம் சுக்கு நூறாக உடைந்து விட்டது. "என்னைக் கடைசியில் மோசம்தான் செய்வீர்களா? இதற்கா என்னைக் கொற்கையில் பத்துநாள் துரத்தினீர்கள்?" என்று கேட்டு விம்மினாள். திடீரென்று அவன் உடலில் ஓர் அசைவு ஏற்பட்டது. இதழ்களிலும் அந்த அசைவு எதிரொலித்தது. விவரிக்க இயலாத பயங்கர நிலையை அடைந்தாள் இளநங்கை. மரணவாயிலில், கணவன் காலெடுத்து வைப்பதை உணர்ந்தாள்.





அந்த உணர்வு அவளுடைய மற்ற உணர்ச்சிகள
யெல்லாம் பறக்கடித்து அவள் உடலையும் வெறும் கட்
போலாக்கிவிட்டது. திடீரென நெளிந்த இளவரச
உடலை இரு கைகளாலும் அழுத்திக்கொண்டு நிமிர்
இளநங்கையின் கண்கள் வெறித்து அவன் முகத்தைப் ப
விநாடிகள் பார்த்த வண்ணமாயிருந்தன. அவன் முகத்தி
ஏற்பட்ட அசைவுகூட நின்றுவிட்டது. பெரிது பெரித
எழுந்து வந்த மூச்சும் மெள்ள மெள்ள மந்த கதி
அடைந்து கொண்டிருந்தது. இளநங்கைக்கு ஓவென்
கதறிவிட வேண்டும் போலிருந்தாலும், அதற்கும் சக்தியே
திராணியோ அவள் உடலில் இல்லை. மெள்ளத் த
கையை அவன் கையில் வைத்துக்கொண்டு, கண்களை மூ
தேவி மீனாட்சியை மனத்தில் நினைத்தாள் பலவிநாடிக
'இரண்டு நாள் வாழ்வுக்காகவே இவரை என்னிட
அனுப்பினாயா தாயே?' என்று மனத்துள் கேட்டு
கொண்டாள். பதிலேதும் கிடைக்காததால் அவள் இதய
வெடித்துக் கொண்டிருந்தது. இரண்டாம் முறையும் அவ
உடல் ஒரு முறை அசைந்தது, நின்றது. இளநங்கை இதய
நின்று விடும் நிலையை அடைந்தாள். முகத்தை
குனிந்தாள் அவன் முகத்தை நோக்கி. தன் இதழ்கள
அவன் இதழ்களுடன் இணைத்துக் கொண்டாள் ஓ
விநாடி. பிறகு நிமிர்ந்து நோக்கினாள் அவன் முகத்
மீண்டும் அவள் கண்களில் திரண்ட நீர்த்துளிகள் இரண
அவன் உதடுகளிலும் விழுந்தன. ஆனாலும் அவை உள்
செல்லவில்லை. அங்கேயே இரண்டு முத்துக்களைப் போ
நின்று விட்டன, அதைக் கண்ட அவள் தலை மீண்டு
சுழன்றது. உடல் துவண்டு உணர்விழந்து அவன் மார்பும்
அவளும் சாய்ந்துவிட்டாள்.

அத்தியாயம் 53

# புத்துயிரும் புதுச் செயலும்

அவள் கண் விழித்தபோது யவனர் மணிவிளக்கொன்று சற்றுத் தூரத்தில் எரிந்து கொண்டிருப்பது மிக மங்கலாகக் கண்ணுக்குத் தெரியவே தலையை லேசாகப் பஞ்சணையின் மீது செலுத்த முயன்றாள். பஞ்சணையும் தெரியவில்லை அவளுக்கு; படைத்தலைவனும் தெரியவில்லை. மருத்துவரின் கூர்விழிகள் அவளை ஆராய்ந்து கொண்டிருந்தன. அவள் கையின்தாதுவை அவர் கை விரல்கள் பிடித்துச் சோதித்துக் கொண்டிருந்தன. அவர் உதடுகளிலே லேசான புன்முறுவலிருந்தாலும், முகத்தில் குழப்பம் மிதமிஞ்சிக் கிடந்தது. பெரிய தலைப்பாகையுடன் காட்சியளித்த மருத்துவரை மீண்டும் மீண்டும் நோக்கி மிரண்டு விழித்த இளநங்கை, "நான் எங்கேயிருக்கிறேன்?" என்று முணுமுணுத்தாள்.

"படைத்தலைவர் அறையில்," என்று அன்புடன் கூறினார், மருத்துவர்.

"அவர்?" என்று அச்சம் பரவி நின்ற அஞ்சன விழிகளை மருத்துவர்மீது நாட்டினாள் இளநங்கை.

மருத்துவர் சற்று அகன்று, "அதோ" என்று பக்கத்திலிருந்த கட்டிலைக் காட்டினார்.

இளநங்கை கட்டை போலக் கிடந்த படைத்தலைவனைப் பார்த்தாள். பிறகு தானிருந்த இடத்தையும் கைகளால் அழுத்திப் பார்த்து அதுவும் ஒரு பஞ்சணையென்பதைப் புரிந்துகொண்டு, அது ஏது என்பதறியாமல் குழம்பினாள். அந்தக் குழப்பத்தைப் போக்க மருத்துவர் விவரித்தார் "இது உங்களறையிலிருந்த கட்டில், அதையும் இங்கு கொண்டு வந்து போடச் செய்தேன்," என்று.



இளநங்கை, கேள்வியொன்று தொக்கி நின் பார்வையை எழுப்பினாள். அந்தப் பார்வையில் எழுந் கேள்வியைப் புரிந்துகொண்ட மருத்துவர், "அம்மா! நா மறுபடியும் நோயாளியைப் பார்க்க வந்தபோது நீங்க படைத்தலைவர்மீது கிடந்தீர்கள். ஆகையால் உங்க பஞ்சணையையும் இங்குக் கொண்டுவரச் சொல்லி பக்கத்தில் போட வைத்தேன்," என்றார்.

அதைச் சொன்ன அவர் முகத்தில் ஏளன ஏதுமில்லையாதலாலும், சர்வ சகஜமாகத் தன்னிட பேசியதாலும் படைத்தலைவனுக்கு விபரீதம் எதுவு ஏற்படவில்லையென்பதை உணர்ந்த இளநங்கை சற்று தெளிவடைந்து, "அவர் நிலை..." என்று வினவினா தட்டுத்தடுமாறி.

மருத்துவர் முகத்தில் மீண்டும் குழப்பம் தெரிந்தது அவர் சற்று யோசித்துவிட்டுச் சொன்னார், "விசித்திரம யிருக்கிறது," என்று.

"விசித்திரமா?" கவலை தோய்ந்த குரலில் கேட்டா இளநங்கை.

"ஆம்." என்றார் மருத்துவர்.

"அப்படியானால் அவர்..." என்று இழுத்தா இளநங்கை. அந்த இழுப்பில் கவலையும் இருந்தது, நல் பதில் தேவையென்ற எதிர்பார்ப்பும் இருந்தது.

"இறக்கவில்லை." மருத்துவர் குரலில் குழப்ப அதிகரித்திருந்தது.

அவர் அளித்த பதிலில் கிடைத்த சாந்தியில் "அப்பாடி!" என்று ஆசுவாசப் பெருமூச்சுவிட்டாள் அவ

ஆனால் மருத்துவர் அந்த ஆசுவாசத்திலே சாந்தியிலோ பங்கு கொண்டவராகத் தெரியவில்லை "இறக்கவில்லையம்மா. ஆனால் ஏன் இறக்கவில்லை? என்றொரு கேள்வியையும் அவளை நோக்கி வீசினார்.

அத்தனை சோகத்திலும் கோபமும் துளிர்த்தது இள நங்கையின் விழிகளில். இளவரசன் இறக்காதது பெரிய

தவறு போல் மருத்துவர் சொன்னதைக் கேட்டதால் சற்று வியப்பும் கொண்ட அவள், “இறக்காதது கஷ்டமா யிருக்கிறதா உங்களுக்கு?” என்று கூறிக்கொண்டு, மெள்ள எழுந்திருக்க முயன்று தலையில் கனம் அதிகமாயிருந்ததால் முடியாமல் மீண்டும் தலையணையில் விழுந்தாள்.

“நீங்கள் இன்னும் ஒரு நாழிகையாவது படுக்கையில் இருக்க வேண்டும். லேசாக மருந்து புகட்டியிருக்கிறேன் உங்களுக்கு,” என்று கடிந்துகொண்ட மருத்துவர் அவள் கேள்விக்குப் பதிலும் சொன்னார், “படைத்தலைவர் இறக்காதது கஷ்டமாயில்லை, காரணம் சொல்ல முடியாம லிருக்கிறது,” என்று.

“காரணம் சொல்ல முடியவில்லையா?”

“ஆம்”

“என்ன காரணம் தெரியவேண்டும் உங்களுக்கு?”

“சென்ற ஒரு நாழிகைக்குள் இறந்திருக்க வேண்டியவர் ஏன் இறக்கவில்லை? நான் சென்றபோது அவர் நாடி அடங்கிக் கொண்டிருந்தது. வாதநாடி மட்டும் லேசாகத் துடித்துக் கொண்டிருந்தது. பித்த, சிலேஷ்மங்கள் அடங்கி விட்டன. வாதமும் அழுந்திக் கொண்டுதானிருந்தது. மருத்துவ ரீதிப்படி அது மரணத்தின் முதல்படி” என்று மருத்துவர் விளக்கினார்.

“அப்படியானால் ரசாயனம் கொடுக்கச் சொன்னீர் களே எதற்காக?” என்று கேட்டாள் இளநங்கை.

“உங்கள் நிம்மதிக்காக.”

“என் நிம்மதிக்காகவா?”

“ஆம் மருத்துவன் தன் மருந்தில் பயனில்லை என்ற நிலையிலும், மருந்து கொடுக்க வேண்டுமென்பது சாத்திரம். அப்படிக் கொடுத்தால் அது மரணமடைபவனுக்கு பயனில்லையென்றாலும், இருப்பவர்களுக்கு மனச்சாந்தி யளிக்கும். அந்த மருந்தினால் ஏதோ நடக்கப் போகிற தென்ற எதிர்பார்ப்பில் பக்கத்திலிருப்பவர்கள் திருப்தி யடைகிறார்கள். ஆனால் மரணத்தின் பெரும் பயம் சிறிது காலம் தள்ளப்படுகிறது.”





“அப்படியானால் உங்கள் ரசாயனம்...?”

“எந்தப் பயனையும் அளிக்கவில்லை.”

“ஆக...”

“ஏன் இறக்கவில்லை படைத் தலைவர்? நான் செ பின்பு என்ன நடந்தது? நீங்கள் என்ன புகட்டினீர்க ஏதோ புகட்டியிருக்கிறீர்கள். இல்லையேல் மீண்டும் த வலுவடைந்திருக்காது,” என்ற மருத்துவர் அவள்மீது தல கண்களை நாட்டினார்.

அவள், அவர் கேள்விக்குப் பதில் சொல்லவில்ல “அப்படியானால் அவருக்கு ஏதும் ஆபத்தில்லையே” என் வினவினாள்.

“ஆபத்தில்லை என்று சொல்ல முடியாது. ஆன மரணத்தின் முதல்படி அகன்றுவிட்டது. நாடி சு பலத்திருக்கிறது. ஒருமுறை கண்களைக்கூடத் திறந்த படைத் தலைவர்...” என்ற மருத்துவரை இடைம வெட்டிய இளநங்கை, “என்ன! கண்ணைத் திறந்தார என்று ஆவலும், வியப்பும் நிரம்பிய குரலில் கூறினாள்.

“திறந்தார். ஆனால் அதைப்பற்றி மகிழவேண்ட பார்வையில் தெளிவில்லை. சுரம் மீண்டும் அடிக்கி படைத்தலைவருக்கு,” என்றார் மருத்துவர்.

“சுரமா!” மீண்டும் பயம் சூழ்ந்தது, இளநங்கையி இதயத்தில்.

“அதைப்பற்றிக் கவலை வேண்டாம். சுரம் ந அடையாளம். மனித ரத்தம் வியாதியுடன் போராடுவன குறிக்கிறது அது. படைத்தலைவருக்கு ஜீவிக்க வேண் என்ற உறுதி பலமாக ஏற்பட்டிருக்கிறது” என் விளக்கினார் மருத்துவர்.

“அது எப்படி உங்களுக்குத் தெரிந்தது?” என் வினவினாள் இளநங்கை.

“சுரப் பார்வையிலும் அந்த உறுதியிருந்தது. த அந்தப் பார்வையில் படைத்தலைவர் எதையோ எ பார்க்கும் அறிகுறியும் இருந்தது. என் ஊகம் தவறில்ல யானால், உங்களைத்தான் அவர் எதிர்பார்த்தார்” என்ற மருத்துவர்.

இளநங்கை அந்த வேதனையிலும் இன்பநகை கூட்டினாள் இதழ்களில். "அம்மா! இதில் நாணத்துக்கு இடமேதுமில்லை. படைத்தலைவர் உங்களைத்தான் எதிர் பார்க்கிறார்" என்றார் மருத்துவர் திட்டமாக.

"உங்களுக்கு எப்படித் தெரியும் அது?" என்று கேட்டாள் இளநங்கை.

"மருத்துவ சாத்திரம் சொல்லுகிறதம்மா. நன்றாகக் கேளுங்கள். நான் சென்றபோது படைத் தலைவர் மரணமடைந்து கொண்டிருந்தார். நாடி அடங்கிக் கொண்டிருந்தது. வீரனானபடியால் மற்ற மனிதர்களுக்கு வாங்கும் சுவாசம் பெரியதாக வாங்காவிட்டாலும் மூச்சு மந்தகதியில் அடங்கிக் கொண்டிருந்தது. திடீரென்று பணிப்பெண் ஓடி வந்து என்னை அழைக்கிறாள். நான் வந்து பார்க்கிறேன். நீங்கள் படைத்தலைவர் உடல்மீது மயக்கமாய்க் கிடக்கிறீர்கள். படைத்தலைவர் நாடியைப் பார்க்கிறேன். சற்று பலமாயிருக்கிறது. சில்லிட்டிருக்க வேண்டிய உடலில் மீண்டும் நல்ல சூடு காண்கிறது. உங்கள் உடல் சம்பந்தத்திலோ, உணர்ச்சி சம்பந்தத்திலோ நாடியின் தெம்பும் உடற்சூடும் படைத்தலைவருக்கு ஏற்பட்டிருக்க வேண்டும் என்பது என் முடிவு. ஆகவே உங்கள் பஞ்சணையை இந்த அறையில் கொண்டு வந்து போடச் செய்து, உங்கள் கையையும், அவர் கையையும் இணைக்கிறேன். அவர் உதடு அசைகிறது. கண் விழித்து வெறிக்கிறது. ஆகையால் உங்கள் ஸ்பரிசம், உங்கள் அணைப்பு இரண்டும் படைத்தலைவர் அசக்தியை ஈடுசெய்கிறது. ஏதோ விவரிக்க முடியாத உறுதி அவர் த்தியில் எழுந்து உந்துகிறது என்று முடிவு செய்கிறேன். உங்களுக்கு மயக்க மருந்தைப் புகட்டி இங்கேயே படுக்க விடுகிறேன். என் முடிவு சரியென்று நிரூபணமாகிறது..." இப்படி விவரித்த மருத்துவர் சட்டென்று பேச்சை நிறுத்தி, "அம்மா நடந்ததை விபரமாக எதையும் விடாமல் சொல்லுங்கள். ஒருவேளை அதிலிருந்து படைத் தலைவரைப் பிழைக்க வைக்க மருந்து கிடைத்தாலும் கிடைக்கும்," என்று கேட்டார்.



எதைச் சொல்லுவாள் கோட்டைக் காவலன் மகள்? அவன் இதழ்களுடன் தன் இதழ்களைப் பொருத்தியதைச் சொல்லுவாளா? இதய பிரலாபத்தைச் சொல்லுவாளா? மார்புடன் மார்பழுத்தி இழைந்த கதையைச் சொல்லுவாளா? அவன் உடல் முறித்துத் துடித்த வேதனையைச் சொல்லுவாளா? சிலதைச் சொல்ல நாணம் அனுமதிக்காது. சிலதைச் சொல்ல அச்சம் அனுமதிக்காது. ஆகவே மௌனம் சாதித்தாள்.

மருத்துவர் மீண்டும் அவளை ஊக்கினார். "அம்மா! இப்பொழுது படைத்தலைவர் நாடி மீண்டாலும், வெகு வேகத்துடன் ஓடுகிறது. அணையும் சுடரின் படபடப்பை அதில் பார்க்கிறேன். நீங்கள் விவரம் சொன்னால் எனக்குப் புலன் கிடைக்கும். இல்லையேல்..." உதட்டைப் பிதுக்கினார் மருத்துவர்.

இளநங்கை சில விநாடிகள் மௌனம் சாதித்தாள். பிறகு மெள்ளச் சொல்லத் துவங்கினாள் கதையை. "மருத்துவரே ஆபத்து பல விஷயங்களுக்கு நிவாரணம் அளிக்கிறது. சாவை நோக்கும் சமயத்தில், சம்பிரதாயக் கட்டுப்பாடுகள், தனிமனிதர் உணர்ச்சிகள், வாழ்க்கை ரகசியங்கள் உடைபடுகின்றன. ஆகவே சொல்லத் தகாததை யெல்லாம் சொல்ல என்னால் முடியாததையெல்லாம் சொல்லுகிறேன் கேளுங்கள். மருத்துவரிடம் எதையும் ஒளிக்கக் கூடாதென்ற நியதியை முன்னிட்டுச் சொல்லு கிறேன் கேளுங்கள்," என்று துவங்கி நடந்ததை ஒன்று விடாமல் சொன்னாள். நிதானமாக, குரலில் உணர்ச்சி ஏதுமின்றி, கர்மயோகியைப் போல் கூறினாள் நடந்த கதையை.

அந்தக் கதையைக் கேட்கக் கேட்க வியப்பின் வசப் பட்டார் மருத்துவர். கதை முடிந்ததும் தீவிர சிந்தனையில் இறங்கினார். நீண்ட நேரம் பேசாமலே இருந்தவர் கடைசி யாகச் சொன்னார், "அம்மா! தெய்வபலம் உங்களிடம் இருக்கிறது," என்று.

"அப்படி ஏதுமில்லை, மருத்துவரே!" என்றாள் இளநங்கை.

"நிச்சயமாயிருக்கிறது அம்மா. இல்லையேல் இத்தனை நேரம் படைத்தலைவர் உடல் இருக்க வேண்டிய இடம் வேறு. அவர் உடல் ஒருமுறை அசைந்ததாகச் சொன்னீர்களே அது உயிரின் இறுதி அசைவு. அதிலிருந்து சாமான்யமாக யாரும் மீளுவதில்லை. மீளவைத்தது உங்கள் உறுதி, உங்கள் அன்பு, உங்கள் இதழ்கள். ரசாயனம் இறங்காதபோது உங்கள் இதழ்கள் பதிந்ததால் ஏற்பட்ட உணர்ச்சி மீண்டும் படைத்தலைவன் புத்தியை இயக்கி யிருக்கிறது. மரணத்துடன் மனம் போராடியிருக்கிறது. உங்கள் உடல் ஸ்பரிசம் அவன் உடலின் நரம்புகளை மீண்டும் லேசாகத் துடிக்க வைக்கிறது. மனிதன் ஜீவிக்க மூன்று விஷயங்கள் தேவை சாத்திரப்படி. ஜீவிக்க வேண்டும் என்று உறுதி, அந்த உறுதிக்கு ஆக்கமளிக்கும் இன்னொருவர் அன்பு, தெய்வ பலம். இந்த மூன்றின் விளைவினால்தான் படைத்தலைவர் ஜீவிக்கிறார். இப்பொழுது புலன் கிடைத்துவிட்டது எனக்கு. மருந்தும் கிடைத்துவிட்டது," என்றார் மருத்துவர்.

"என்ன மருந்து?"

"மருந்துகள் இரண்டு."

"இரண்டா!"

"ஆம். ஒன்று ஆதார மருந்து. அது நீங்கள். இரண்டாவது மருந்து சாத்திரத்தின் மருந்து. அது என் மருந்துப் பையிலிருக்கிறது," என்று கூறி எழுந்து சென்று தனது பையிலிருந்த ஒரு பச்சிலைக் குப்பியை எடுத்தார். அதிலிருந்த இரண்டு மூன்று இலைகளை எடுத்து, சற்று தூரத்திலிருந்த சிறு மஞ்சத்தின் மீதிருந்த கிண்ணத்திலிருந்த நீரில் நனைத்தார். பிறகு பச்சிலையைத் தனது உள்ளங் கையில் வைத்து நசுக்கிச் சாறு உண்டாக்கி அதைத் தன் இடது கையைக் குழித்துப் பிடித்துத் தேக்கிக் கொண்டார்.. பிறகு "அம்மா, மெள்ள எழுந்திருங்கள்," என்று இள நங்கையைத் தானே பிடித்துத் தூக்கி, அவளைப் பஞ்சணையில் உட்கார வைத்துப் பிடித்துக்கொண்டு, தனது இடது கையைக் காட்டி, "இதிலிருக்கும் சாற்றை உங்கள்





ஆள்காட்டி விரலால் எடுத்துப் படைத் தலைவர் வாயில்
பலவந்தமாகச் செலுத்துங்கள்" என்றார்.

இளநங்கையின் தலை மிகவும் கனத்தது. உட்கா
முடியாமல் உட்கார்ந்து பச்சிலைச் சாற்றை எடுத்து அவன்
வாயில் ஊட்டினாள். சாறும் மெள்ள மெள்ள இறங்கியது
மருத்துவர் மகிழ்ச்சியுடன் தலையை அசைத்தார். பிற
அவளைப் பஞ்சணையில் படுக்க வைத்துவிட்டு வெளியே
சென்று பணிமகளை அழைத்து வந்து இளநங்கையின்
பஞ்சணையை இழுத்துப் படைத்தலைவர் பஞ்சணையுட
ஜோடியாகப் போட்டார். பிறகு, இளநங்கையை நோக்கி
"அம்மா, படைத் தலைவர்மீது உங்கள் ஒரு கை பட்டு
கொண்டு இருக்கட்டும். உங்கள் மயக்கம் இன்னும் ஒ
நாழிகையில் தீர்ந்துவிடும். தலைக்கனமும் நீங்கும். பிற
நீங்கள் எழுந்திருந்துகூடப் படைத்தலைவரைக் கவனிக்
லாம். அதுவரை ஜாக்கிரதை. படைத்தலைவரை யாரு
அசைக்க வேண்டாம். நாளை பகலில் அவர் க
விழிக்கலாம். ஆண்டவன் அருளால் விழிக்கட்டும். ஸர்ப
கந்தி இப்பொழுதுள்ள நிலையில் வேலை செய்யும் என்
நினைக்கிறேன்," என்றார்.

"ஸர்ப்பகந்தியா!" என்றாள் இளநங்கை.

"ஆம். மூளை வியாதிகளுக்குக் கொடுக்கும் பச்சில
சாதாரணமாகக் குழந்தைகளை உறங்க வைக்க
கொடுக்கிறோம். குழந்தையின் சக்திக்குமேல் சக்தியில்ல
படைத் தலைவர் உடலிலும்," என்று கூறிவிட்டுச் சென்றா

அன்றிரவு பூராவும் கண் விழித்தாள் இளநங்கை. ம
நாள் பகலில் மருத்துவர் சொன்னபடி கண்விழித்தா
படைத்தலைவன். கண்ணில் அன்று பார்
தெளிவாயிருந்தது. வந்து பார்த்த மருத்துவரும், "இ
பயமில்லை," என்று சொல்லிப்போனார். அன்று மு
படைத் தலைவன் குணமடையலானான். ஆனால் மிகு
பலவீனமிருந்தது அவன் உடலில். அத்துடன் எப்படி
போரை நடத்தப் போகிறோமென்ற பயமும் ஏற்பட்ட
அவனுக்கு. அதைப் பற்றி இளநங்கையிடம் பிர
தாபித்தான் படைத்தலைவன், நான்கு நாள் கழித்

"இளநங்கை! என்னால் எழுந்துநிற்கவும் முடியவில்லை. நான் எப்படி எதிரிகளைச் சமாளிப்பேன்?" என்று கேட்டான்.

"எதிரி வரட்டும் பார்ப்போம்," என்று தைரியம் சொன்னாள் இளநங்கை.

"எதிரி இனி எந்த நேரமும் வரலாம்," என்றான் வீர பாண்டியன்.

அவன் சொன்னதை ஊர்ஜிதம் செய்வதுபோல் தூரத்தே எங்கோ ஒரு முரசு ஒலித்தது. அதை ஊன்றிக் கேட்டான் படைத்தலைவன். அது சற்று விட்டுவிட்டு மீண்டும் மீண்டும் ஒலித்தது.

"அது சிங்கணன் முரசு" என்றான் வீரபாண்டியன். "அது ஒலிக்கும் தூரத்தைக் கவனித்தால் நாளைக் காலைக்குள் சிங்கணன் படைகள் இந்த நகரத்தைச் சூழ்ந்து கொள்ளும்" என்று அறிவித்தான் சர்வசாதாரணமாக.

"சரி," என்று கூறி எழுந்தாள் இளநங்கை.

"எங்கு போகிறாய் இளநங்கை?"

"பணியை மேற்கொள்ள."

"என்ன பணியை?"

"போர்ப் பணியை. உபதளபதியின் பணியை."

"பொறு."

"ஏன் பொறுக்கவேண்டும்?"

"நான் சிங்கணனுடன் போரிடப் போவதில்லை," என்றான் படைத்தலைவன் நிதானமாக.

இளநங்கையின் இதயம் அதிர்ச்சியால் பதை பதைத்தது. "வேறு என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று வினவினாள் அவள் அச்சத்துடன்.

செய்யப் போவதைச் சொன்னான் வீரபாண்டியன். இளநங்கை பிரமை பிடித்து நின்றாள். தலையில்பட்ட அடி படைத்தலைவன் புத்தியைக் குழப்பிவிட்டதோ என்று கூட நினைத்தாள். ஆனால் படைத்தலைவன் பிடிவாதமாகத் தனது செயலில் இறங்கினான். அந்தச் செயல் அந்தக் கோட்டாற்றுக் கரைக் கோட்டையில் இருந்தவர்களை மட்டுமல்ல, தொலைவிலிருந்த சுந்தரபாண்டியனையும் திடுக்கிட வைத்தது.



## அத்தியாயம் 54

# பாரி, பேகன், வீரபாண்டியன்

**ம**ரணத்தின் பிடியிலிருந்து மீண்டும் கண் விழித்தது
விழிக்காததுமாகத் தான் சிங்கணனுடன் போரிடப் போ
தில்லையென்று வீரபாண்டியன் சொன்னதுமே பிரமி
இளநங்கை, அவன் செய்யப்போவதென்ன என்ப
விளக்கியதும் திகைப்பின் எல்லையை அடைந்தா
மண்டையில் அப்பொழுதுமிருந்த காயத்தின் கட்டை உ
நோக்கி, ஒரு வேளை அந்தக் காயம் படைத்தலைவ
சித்தத்தைக் குழப்பியிருக்குமோ என்றுகூட எண்ணினா
அல்லது மருத்துவர் கொடுத்துப்போன மூலிகையா
ஸர்ப்பகந்தி அவனுடைய மதியை மயக்கியதன்றிச் சிற்
மந்தப்படுத்தியுமிருக்குமோ என்றும் நினைத்தாள் இளநங்

அவள் முகத்திலோடிய எண்ணங்களைப் படை
தலைவன் புரிந்துகொண்டிருக்க வேண்டுமென்பது அவ
இதழ்களில் தோன்றிய புன்முறுவலிலிருந்தும், "இப்படி வ
பக்கத்தில் நெருங்கி உட்கார்" என்று அவன் அழை
தோரணையிலிருந்தும் தெளிவுற விளங்கியது.

இளநங்கை அந்த அடையாளங்கள் எதை
கவனிக்காதது போலவே படைத்தலைவனிடம் நெரு
உட்கார்ந்தாள். "இப்பொழுது சௌகரியமாய் இருக்கிற
என்று அவர்கள் அருகாமையைச் சிலாகித்த படை
தலைவன் தன் கையொன்றை அவள் மடிக்குக் குறுக்
போட்டுக் கொண்டு, "இளநங்கை! எனக்கு மதி மய
மென்று நினைக்கிறாய் போலிருக்கிறது. ஒரு விஷயத்தி
அதுவும் உண்மைதான்," என்றான்.

இளநங்கை அவன் மீது குத்தலான பார்வையை ஓட்டிவிட்டுக் கேட்டாள், "எந்த விஷயத்தில்?" என்று.

"ஒரே ஒரு விஷயத்தில்," என்று கூறிய படைத் தலைவன் நகைத்தான்.

எது என்பதைப் புரிந்துகொண்ட இளநங்கை பொய்க் கோபம் துளிர்த்த விழிகளை அவன்மீது திருப்பினாள். "ஆமாம்!, ஆமாம்,"என்றாள்.

"என்ன ஆமாம்?" இதைக் கேட்ட இளவரசன் கை அவள் சிங்கார இடையைச் சுற்றிச் சென்றது.

"என்ன விஷயத்தில் என்பது புரிகிறது." இளநங்கையின் குரல் உஷ்ணமாக ஒலித்ததா? இன்பமாக ஒலித்ததா? விவரிக்க இயலாதிருந்தது.

"புரிகிறதல்லவா?"

"புரிகிறது. கையை எடுங்கள்."

"எந்தக் கையை?"

"இரண்டு கையையும்தான்."

இளநங்கை அவனைப் புன்முறுவல் கோட்டிப் பார்த்தாள். "எதற்கும் கால தேச வர்த்தமானம் உண்டு," என்று கூறினாள்.

"இப்பொழுது காலத்திற்கென்ன?"

"பகற்காலம்."

"தேசத்திற்கென்ன?"

"எதிரி தேசம்?"

"வர்த்தமானம்?"

"எதிரியின் போர் முரசு ஒலிக்கிறது எல்லையில். நாளை இந்தக் கோட்டையின் முன்பும் ஒலிக்கும்."

"இளநங்கை!"

"உம்."

"இதற்கெல்லாம் அப்பாற்பட்டது அது?"

"எது?"





"என் மதிமயக்கம். ஏன், உன் மதிமயக்கம் கூ
தான்."

"எனக்கு மதிமயக்கம் ஒன்றுமில்லை!"

"எல்லாம் மருத்துவர் சொன்னார்."

"என்ன சொன்னார்?"

"நீ எனக்கு உயிரளித்த முறையை.." என்று கூறிய
பாண்டியன், தன் வலது கையைத் தூக்கி அவள் இதழ்க
தன் இரண்டு விரல்களை வைத்தான். "இந்த இதழ்
எனக்கு உயிரூட்டின என்று சொன்னார். இளநங்
பார்த்தாயா, நமது பரஸ்பர மதிமயக்கத்தால் உயிர் உண்
கிறதே தவிர, போவதில்லை," என்ற வீரபாண்டியன் அ
முகத்தை ஆசையுடன் நோக்கினான்.

அவள் முகத்தில் ஒரு புத்தொளி தோன்றியது. ஆ
களையும் கண்கள் அள்ளித் தெளித்தன. தவிர வெட்க
அவற்றில் விரிந்து கிடந்தது. இதழோடு இதழ் வைத்த
மருத்துவரிடம் மறைக்கக் கூடாதென்பதற்காக,
பாண்டியன் உயிரை மீட்க அவருக்குச் சூசகம் தே
பட்டதன் விளைவாக, அவர் மிகவும் மன்றாடிய
காரணமாக, அவள் எடுத்துச் சொல்லியிருந்தாள். ஆன
ரகசியமாக இருக்கவேண்டிய அந்த விஷயத்தை மருத்து
வீரபாண்டியனிடம் எதற்காகச் சொன்னார் எ
நினைத்துச் சற்று ஆத்திரமும் வெட்கமும் ஒருங்
அடைந்த இளநங்கை, "இதையெல்லாம் மருத்து
உங்களிடம் எதற்காகச் சொன்னார்?" என்று மெ
அலுப்புடன் சொற்களை உதிர்த்தாள்.

வீரபாண்டியன் மெல்ல நகைத்தான். "எனக்கு மய
முண்டாக்க," என்று கூறினான் நகைப்புக்கிடையில்.

"மயக்கத்தைப் போக்க என்று சொல்லுங்கள்," எ
திருத்தினாள் இளநங்கை.

"மயக்கத்தைப் போக்கத்தான் அதைச் சொன்ன
மருந்தும் கொடுத்தார் மருத்துவர். ஆனால் அதுவே மயக்
தையும் கொடுத்தது" என்றான் படைத்தலைவன்

"நீங்கள் பேசுவது புதிராயிருக்கிறது."

"நமக்குள் புதிர்கள் பல. அவற்றை அவிழ்ப்பதே வாழ்க்கை. இந்தப் புதிரைத்தான் பார். காயத்தினால் ஏற்பட்ட மயக்கத்ததைப் போக்க எனக்கு மருந்தும் உன் உறுதிக்குக் காரணத்தையும் கூறி, 'அவள் உறுதியும் சிகிச்சையும் உங்களைப் பிழைக்கவைத்தது. உங்கள் உறுதியும் பணிவும் இனி உங்களை வியாதியின் உக்கிரத்தி லிருந்து மீட்கவேண்டும்' என்றார். அவர் அளித்த மருந்தின் மயக்கம் தீர்ந்தது. ஆனால் வேறொரு மயக்கம் வந்தது. அப்பா! கண்மூடியிருந்த போதிருந்த மயக்கத்துக்கும், கண்திறந்த பின்னேற்பட்ட மயக்கத்துக்கும் எத்தனை வித்தியாசம்!'' என்ற படைத்தலைவன், அந்தக் கட்டழகியைத் தன் கிட்டே இழுத்து, "இளநங்கை! உன் சிகிச்சையில்தான் நான் பிழைக்கவேண்டும். சிகிச்சையை மட்டும் நிறுத்தி விடாதே," என்றும் கூறினான்.

"என்ன சிகிச்சை?" உதடுகளை மடித்துக் கண்களில் சிரிப்பை உதிர்த்துக் கேட்டாள் அந்தச் சித்தினி.

"உள்ளுக்கு..."

"என்ன உள்ளுக்கு?"

"புகட்ட வேண்டும்."

"ரசாயனந்தானே?"

"ஆமாம்."

"ஆகட்டும்."

"மருத்துவர் கொடுக்கும் ரசாயனமல்ல."

"வேறு எதாம்?"

"எதனால் நான் பிழைத்தேன்?"

இதைக் கேட்ட இளநங்கை, "சரி சரி. இந்தப் பைத்தியத்தை விடுங்கள், எதிரியின் முரசொலியைக் கவனியுங்கள். இப்பொழுது எதிரியைச் சமாளிக்க என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று வினவினாள் இளநங்கை.

"எதுவும் செய்யப் போவதில்லை." திட்டமாக வந்தது வீரபாண்டியன் பதில்.





''எதுவும் செய்யப் போவதில்லையா?'' என்று சீறினாள் இளநங்கை.

"இல்லை." மீண்டும் உறுதியுடன் கூறினான் வீ பாண்டியன்.

"சிங்கணனுடன்..." என்று துவங்கிய இளநங்கையை இடைமறித்த இளவரசன் திட்டவட்டமாகக் கூறினான் "மீண்டும், போரிடப் போவதில்லை," என்று.

"ஏன்?"

"போரிட்டுப் பயனில்லை."

"பயனை எதிர்பார்த்தா வீரர்கள் போரில் இறங்கு வார்கள்?"

"சில சமயங்களில் அதுவும் அவசியமாகிறது. சிங்கண னும் பெரும்படையுடன் கிழக்குப் புறத்தில் இந்தக் கோட்டையின்மீது இறங்கப் போகிறான். மேற்குப்பக்கத்தில் கடல் வாயிலாக வருகிறது இன்னொரு பெரும்படை. இந்த இரண்டு படைகளையும் நமது சிறுபடை சமாளிக்க இயலாது. தவிர கோட்டையும் அத்தனை பலமான கோட்டையல்ல," என்று சுட்டிக்காட்டினான் இளவரசன்.

''அப்படியானால், சரணடையப் போகிறீர்களா சிங்கணனிடம்?'' என்று வினவினாள் இளநங்கை ஆத்திரத் துடன்.

"இல்லை. அதுவுமில்லை," என்றான் இளவரசன் சர்வ சாதாரணமாக.

"பிறகு, என்னதான் செய்யப் போகிறீர்கள்?" என்று கேட்டாள் இளநங்கை. அவள் குரலில் குழப்பமும் ஆத்திரமும் மிதமிஞ்சிக் கிடந்தன.

வீரபாண்டியன் விழிகள் அவளை உற்று நோக்கின. "இளநங்கை!" என்ற அவன் குரலிலும் திடமிருந்தது.

"என்ன?" என்று இளநங்கை வினவினாள்.

"நான் படுகாயமுற்றுச் செயலிழந்து படுத்திருப்பது சிங்கணனுக்குத் தெரியாது..." என்று இழுத்தான் படைத் தலைவன்.

"தெரியாது" என்றாள் இளநங்கை அவன் என்ன சொல்ல முற்படுகிறான் என்பதை அறியாமல்.

"அதை அவனுக்குத் தெரியப்படுத்த வேண்டும்" என்றான் வீரபாண்டியன்.

"இளநங்கை முகத்தில் அதிர்ச்சி நிலவியது. "என்ன?" என்ற கேள்வியும் அதிர்ச்சியுடன் ஒலித்தது.

"என் நிலையை அவனுக்குத் தெரியப்படுத்த வேண்டும்."

"இந்தக் கோட்டையின் படைத்தலைவன் பயனற்றுப் படுத்துக் கிடப்பதையா?"

"ஆம்."

"எதிரி இதனால் பெரும் மகிழ்ச்சியடைவானென்பது தெரியும். அவனை மகிழ்விப்பதுதான் என் நோக்கம்."

"நமது பலவீனத்தை எதிரிக்குத் தெரியப்படுத்தி மகிழ்விப்பதா?"

"ஆம், எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பது தமிழன் மரபு.'"

"அதைவிட ஒன்று செய்யலாமே?"

"என்ன?"

"சிங்கணனை உள்ளே அழைத்து அவனிடம் கோட்டையை ஒப்படைத்து விடலாமே!"

"நாமாக ஒப்படைப்பது தவறு."

"அவனாகப் பிடுங்கிக்கொள்ளவேண்டுமா?"

"பிடுங்கிக் கொள்வானேன்? அவனாக வந்து கேட்கட்டுமே?"

"கேட்டால்?"

"இது வள்ளல்கள் மிகுந்த நாடு."

"கோட்டையைத் தானம் செய்துவிடுவீர்களாக்கும்?"

"கிட்டதட்ட அப்படித்தான்,"

"நல்ல தானம் இது?"





"முல்லைக்குத் தேரளித்த பாரியும், மயிலுக்கு போர்வையளித்த பேகனும் வாழ்ந்த இந்த நாட்டில் பிறந் நான் சிங்கணனுக்கு ஒரு கோட்டையளிப்பது தவறா என்று பெருமிதத்துடன் வினவினான் படைத்தலைவன்.

"இல்லை. தவறில்லை. உங்கள் பெயர்..." என்றா இளநங்கை.

"இலக்கியத்தில் நிலைக்கும். சரித்திரத்தி நிலைக்கும்" என்று குதூகலித்தான் பாண்டிய இளவரசன்

"கண்டிப்பாய் நிலைக்கும்," என்றாள் இளநங்கை.

"மக்கள்..." என்று துவங்கினான் வீரபாண்டியன்.

"மண்ணை வாரி இறைப்பார்கள்."

"எந்த மண்ணை?"

"எந்த மண்ணாயிருந்தாலென்ன?"

"பாண்டிய நாட்டு மண்ணாயிருந்தால் எனக்கு திருப்தியாயிருக்கும். அந்த மண்ணில் நான் பிறந்தே அந்த மண்ணை நேசிக்கிறேன். அதற்காக எதுவு செய்வேன். சரித்திரத்தில் துர்ப்பெயர் வாங்கவும் தயங் மாட்டேன். இளநங்கை! நாளை முதல் நான் மரண படுக்கையில் இருப்பதாக எங்கும் செய்தியைப் பரப் யாராவது ஒரு தூதனைப் பிடித்துப் பாண்டிய மன்னருக் ஓர் ஓலையும் கொடுத்தனுப்பு," இந்தச் சொற்கள உணர்ச்சி வேகத்துடன் கூறினான் படைத்தலைவன்.

"பாண்டிய மன்னருக்கா?"

"ஆம். என் சகோதரருக்கு."

"அதெப்படி முடியும்?"

"ஏன் முடியாது?"

"நாளைக் காலையே எதிரிப் படைகள் இந்த கோட்டையை வளைத்துக்கொள்ளுமென்று சொன்னீ களே!"

"ஆம்."

"எதிரிகள் கையில் தூதன் சிக்கிக்கொள் மாட்டானா?"

"சிக்கிக்கொள்ளட்டும். சிங்கணனுக்கும் செய்தி தெரியும்."

"சிங்கணன் நம்புவானா?"

"கண்டிப்பாய் நம்புவான்?"

"இது தந்திரமென்றும் அவன் ஊகித்தால்?"

"ஊகிக்கமாட்டான்."

"ஏன்?"

இளவரசன் இளநங்கையை உற்று நோக்கினான். "இளநங்கை! நீ பல விஷயங்களைப்பற்றிக் கேள்வி கேட்டாய். ஆனால் ஒரு முக்கிய விஷயத்தைப் பற்றிக் கேட்கவில்லையே" என்றும் சொன்னான்.

"எதைப்பற்றி?" என்று வினவினாள் இளநங்கை.

"இந்தத் தலைக்காயம் எனக்கு எப்படி ஏற்பட்டது என்பதைப்பற்றி" என்ற இளவரசன், தலைக்கட்டைத் தொட்டுக் காட்டினான்.

இளநங்கை மூச்சை இழுத்துப் பிடித்துக்கொண்டாள். அவன் உயிருக்கு ஊசலாடிய வேதனையில் அதனால் ஏற்பட்ட மனச்சிதைவில், அதை அடியோடு தான் மறந்து விட்டதை எண்ணிய இளநங்கை, பல வினாடிகள் பிரமை பிடித்து உட்கார்ந்துவிட்டாள். "ஆம். அதைக் கேட்க மறந்துவிட்டேன். எத்தனை மௌடீகத்தனம் எனக்கு?" என்றும் அலுத்துக்கொண்டாள்.



"அதனால் பாதமில்லை. சொல்லுகிறேன் கேள். அன்று மாலை நான் கோட்டையை விட்டு வெளியே சென்றேன், நமது வேவுகாரர்கள் மலைத் திட்டுக்களைச் சரியாகக் காவல் புரிகிறார்களா என்று சோதனை செய்ய. கடைசிக் காவல் வீரனைப் பார்த்தபின்பு திரும்ப யத்தனித்தேன். அப்பொழுது செங்கால் நாரைகளின் கூட்டமொன்று வானில் பறந்து வந்தது. அதுமட்டுமல்ல, இரண்டு வல்லூறுகளும் தூரத்தே வானில் பறந்துகொண்டிருந்தன. நாரைகள் தூதுப் பறவைகள். அவை எப்பொழுதுமே மனிதக் கூட்டமுள்ள ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குப்



பறக்கும். இறைச்சியோ வேறு மாமிசத் தீனியோ சடலங்களோ இருக்குமிடத்திற்கு மேலே வல்லூறுகள் பறக்கும். ஆகவே தீர்மானித்தேன், ஏதோ கூட்டம் சற்று தூரத்திலிருக்கிறதென்று. ஆகவே அந்தத் திசையில் நாடி சென்றேன். சுமார் கால் காதத்திற்குப் பிறகு, இறைச் வாசனை காற்றில் மிதந்து வந்தது. பட்சிகளும் கண்டபடி பறக்கலாயின. ஆகவே, மேலும் காட்டில் சென்றேன் சிங்கணன் படையின் முன்னோடிகள் பதின்மரிட சிக்கிக்கொண்டேன். சண்டை நடந்தது. சிலரை மாய்த்து விட்டுப் புரவியைத் தட்டி விட்டேன். போரிலொ கோடரி என்மீது வீசப்பட்டது. தலையில் பலமாகத் தாக் என் மடியில் வீழ்ந்தது. அந்தக் கோடரியைப் பிடித்து இடையில் செருகிக் கொண்டேன். அத்துடன் தலையில் குருதி பீறிடக் கோட்டைக்கு விரைந்தேன். கோட்டை கருகே வரும்பொழுதே நினைவு தப்பிவிட்டது எனக்கு பிறகு எதுவும் எனக்குத் தெரியாது," என்று விளக்கி வீரபாண்டியன், தொடர்ந்து, "ஆகவே, சிங்கணனுக்கு நான் காயம்பட்டிருப்பது அறிவிக்கப்பட்டிருக்கும். காய பலமானதென்பதை மட்டும் நாம் சொன்னால் போதும் நாளையே நான் சொன்னபடி செய்," என்று உத்தரவிட்ட வீரபாண்டியன் தலையணையில் சற்றுப் புரண்டான்.

"இதனால் என்ன சாதிக்க நினைக்கிறீர்கள்?" என்று வினவினாள் இளநங்கை.

"போகப் போகப் புரிந்து கொள்வாய்" என்றான் வீ பாண்டியன்.

போகப்போகப் புரிந்துகொண்டாள் அவள். ஆனா அவள் புரிந்துகொண்டது பெரும் விபரீதமாயிருந்தது தோல்வி கண்ணுக்கு முன்பு தெரிந்தது, இளநங்கைக்கு கோட்டையிலிருந்த மற்றோருக்கும். உண்மையில் கோட்டை சிங்கணனுக்குத் தானம் செய்யப்பட்டது போலத்தானென்றும், வள்ளல்கள் பட்டியலில் வீர பாண்டியன் சேர்ந்துவிட்டானென்பதும் புரியவே அவனைப் பெரிதும் வெறுக்கவும் செய்தாள் அவள்.

ஆனால் அதைப்பற்றி வீரபாண்டியன் சிறிதும் கவலைப்படவில்லை. எல்லோரும் வெறுத்த பல காரியங்களைத் தொடர்ந்து செய்தான். தோல்வியைக் காண்பதில் அவன் மிக மும்முரமாயிருப்பதைக் கவனித்த கோட்டை வாசிகள் அனைவரும், சிங்கணன் படை உட்புகும் நாளைத் திகிலடைந்த சித்தத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். அந்த நாளும் வந்தது.



## அத்தியாயம் 55

# கூற்றினும் கொடிய சொற்கள்

பாண்டிய இளவல்போட்ட கணக்குப்படிே
சிங்கணன் படை மறுநாளே கோட்டாற்றுக்கரை
முற்றுகையிட்டு விட்டதைக் கண்ட இளநங்கை ஓரள
தைரியத்தைக் கைவிட்டாளென்றால், அவளு
அதைரியத்தை மட்டுமின்றிக் கோட்டைவாசிக
கிலியையும் பன்மடங்கு கிளறிவிடும் அலுவல்களி
தொடர்ச்சியாக இறங்கினான் வீரபாண்டியன். அவ
உத்தரவுப்படி மறுநாள் காலை கோட்டைச் சுவர் மீதிருந்
விற்கூடங்களில் நின்று எதிரி வரவைக் கண்ட இளநங்
சுமார் பத்தாயிரம் பேர்களுக்குக் மேற்கொண்ட பெரு
படை சாரிசாரியாக மலைச்சரிவின் மூன்று பக்கங்களி
இறங்கி வந்ததையும், அவை கோட்டையின் மூன்று பக்க
களையும் உச்சி வேளைக்குள் வளைத்துக்கொண
விட்டதையும் கவனித்தாள். அது மட்டுமின்றி, சிங்கண
எப்பேர்ப்பட்ட சிறந்த படைத்தலைவன் என்பதையு
உணர்ந்து கொண்டாள் கொற்கைக் கோட்டைத் தலைவ
மகள். மூன்று பிரிவாக மலைச்சரிவில் இறங்கிய பை
சீராக மூன்று பக்கங்களில் பிரிந்து, அணி வகுப்புச் சிறிது
கலையாமலே கோட்டையின் மூன்று வாயில்களுக்கு முன்
பரவியதையும், இருப்பினும், வாயில்களுக்கு அருகி
வராமல் எட்டவே நின்று விட்டதையும் கண்ட இள நங்
எதிரியின் அணிவகுப்புச் சிறப்பை மட்டுமின்றி அவ
காட்டிய எச்சரிக்கையையும் சிலாகித்தாள். கோட்டை
சுவர்களிலிருந்து கையால் எறியப்படும் வேல்களின் வீச்
எல்லையிலிருந்து தள்ளியே எதிரிப் படை நிற்பதைக் கண்
இளநங்கை, சுழல் யந்திரங்களிலிருந்து வீசப்படும் வேல்க

மட்டுமே அந்தப் படைவீரர்களை அணுக முடியுமென் பதையும், கையின் குறியளவுக்குச் சுழல் யந்திரங்களிலிருந்து வேல்களை எறிவது கஷ்டமாகையால், எதிரிப் படையை நிறுத்தியிருக்கும் நிலையில் யந்திரவீச்சு வேல்கள் பயனளிக்காதென்பதையும் புரிந்துகொண்ட இளநங்கை, சிங்கணனை வெற்றி கொள்வது அத்தனை சுலபமல்ல வென்பதையும் புரிந்து கொண்டாள். அதனால் ஏற்பட்ட மனஉளைச்சலால் பெரிதும் சங்கடப்பட்ட சித்தத்துடன் உச்சி வேளைக்குப் பிறகு மீண்டும் வீரபாண்டியனைச் சந்தித்த அவள் உள்ள நிலையை மெள்ள விளக்க முயன்றாளானாலும் தனது முயற்சியில் பெரிதும் தோல்வியே அடைந்தாள்.

அவள் சொல்ல முற்பட்ட விவரங்களைக் காதில்கூட வாங்கிக்கொள்ள மறுத்த வீரபாண்டியன், அவளை ஆரம்பத்திலேயே தடுத்து, "இளநங்கை! நீ இன்று முழுவதும் உணவருந்தவில்லையே. பணிப்பெண்ணை அழைத்து உணவு கொண்டுவரச் சொல். முதலில் உன் கவசங்களைக் கழற்றி விடு. பார்ப்பதற்கும் பெரும் சங்கடமாயிருக்கிறது," என்றான்.



முற்றுகையைப் பற்றித் தான் விவரிக்க முயன்ற விஷயங்களைக் காதில் வாங்காதது மட்டுமின்றி, தனது கவசமும் பார்ப்பதற்குச் சங்கடமாய் இருப்பதாக அவன் சொன்னது அவள் மன எரிச்சலை அதிகமாக்கிவிடவே, "எனக்குப் பசிக்கவில்லை. கவசத்தைக் கழற்றும் உத்தேசமு மில்லை," என்று உஷ்ணம் ஒலித்த குரலில் கூறினாள்.

இளவரசன் இதழ்களில் லேசான இளநகை விரிந்தது. "கவசத்திடம் அத்தனை பிரியமா உனக்கு?" என்ற கேள்வியும் கேலிக் குரலில் பிறந்தது.

"ஆம்," என்றாள் இளநங்கை உஷ்ணம் சிறிதும் தணியாத குரலில்.

"ஏனப்படி?" சிரத்தையின்றிக் கேட்டான் இளவரசன்.

"யாராவது கவசம் தரிக்கவேண்டும்," என்றாள் இள நங்கை இகழ்ச்சியுடன்.



"யாராவது என்றால்?" வீரபாண்டியன் சர்வ சகஜமாக சம்பாஷணையில் இறங்கினான்.

"ஒன்று ஆண்மகன் தரிக்க வேண்டும்..." என்ற சொற் களை, "தவறு." என்று இடைபுகுந்து வெட்டினான் வீர பாண்டியன்.

"எது தவறு?"

"ஆண்மகன் தரிக்க வேண்டுமென்பது."

"யார் சொன்னது?"

"மன்னர்?"

"எந்த மன்னர்?"

"என் அண்ணன் பாண்டிய மன்னர்."

"எப்பொழுது சொன்னார்?"

வீரபாண்டியன் உடனடியாகப் பதில் சொல்ல வில்லை. ஒரு விநாடி புன்முறுவல் செய்துவிட்டுச் சொன்னான்: "அதற்குள் மறந்துவிட்டாயா இளநங்கை! காட்டுக் கோட்டையில் மன்னர் சொல்லவில்லை! 'மதுரையை எரித்த கண்ணகிபோல் சேரநாட்டை நீ அழித்துவிடு. பத்தினி ஆட்சி அங்கும் ஏற்படட்டும்' என்று அப்பா! அதைச் சொன்னபோது மன்னர் என்ன உற்சாகம் காட்டினார்! என்னைப் பற்றி இந்த மாதிரி ஒரு வார்த்தை சொல்லியிருப்பாரா? உன் சித்திரத்துக்குக் கவசப் போட்டதைக் கண்டே மன்னர் மயங்கிப் போனார். நான் கவசம் தரித்ததைப் பற்றியோ, போரிடுவதைப்பற்றியோ ஒரு வார்த்தை சொல்லியிருப்பாரா? இல்லை இளநங்கை அவருக்கு ஆண்கள் கவசம் தரிப்பதில் இஷ்டமில்லை பெண்களிடம், நம்பிக்கை வைத்திருக்கிறார்."

இதைக் கேட்ட இளநங்கையின் கோபம் எல்லை மீறியது. "என்னுடன் விளையாடுகிறீர்களா?" என்று வினவினாள் ஆவேசத்துடன்.

கனல் கக்கிய அவள் கண்களைப் பார்த்துவிட்டுச் சொன்னான் வீரபாண்டியன், "விளையாட்டுக்கு அழைக்கும் பார்வையா இது?" என்று.

"எதற்கும் சமயமுண்டு," என்று கண்டிப்புடன் சொன்னாள் இளநங்கை.

"இப்பொழுது எதற்குச் சமயம்?"

"போரைப்பற்றி விவாதிக்க."

"ஏது போர்?"

"பார்த்தீர்களா? மறுபடியும் விளையாடாதீர்கள். என் கோபத்தைக் கிளறாதீர்கள்."

"இல்லை, இல்லை."

"சரி. இதைக் கேளுங்கள்," என்று துவங்கினாள் இளநங்கை.

அவளை நிறுத்தும்படி கையைத் தூக்கி எச்சரித்த வீரபாண்டியன், "இளநங்கை, நீ இந்தக் கவசங்களைக் கழற்றிவிட்டு நீராடி வா. இங்கு இருவரும் சிறிது உணவருந்துவோம், பிறகு பேசுவோம்," என்றான்.

அவன் குரலிலிருந்த கண்டிப்பைக் கவனித்த இளநங்கை அவனுடன் மேற்கொண்டு தர்க்கிப்பதில் பயனில்லையென்பதை உணர்ந்து கொண்டதால், அவன் சொற்படி செய்யத் தனது அறைக்குச் சென்றாள். அறைக்குள் நுழைந்தவள் வெகு துரிதமாகக் கவசங்களைக் கழற்றிவிட்டு நீராட்ட அறைக்குச் சென்று மலைமகள் குறிஞ்சி நிரப்பியிருந்த நீரில் மஞ்சனமாடி, புத்தாடை அணிந்து, மலைப் புஷ்பம் ஒன்றையும் அள்ளி முடித்த குழலில் செருகிக் கொண்டு மீண்டும் வீரபாண்டியன் அறைக்கு வந்தாள். மண்டைக் காயமளித்த பெரு வேதனையிலும், அவள் நீராடி வந்த அழகையும் அந்த ஒற்றை மலரையும் பெரிதும் ரசித்தான் பாண்டிய இளவல். மெல்ல சிரமப்பட்டு நகர்ந்து தனது பஞ்சணையில் உட்காரவும் இடமளித்தான் இளநங்கைக்கு.

அவன் விருப்பப்படி பஞ்சணையில் அவனருகில் உட்கார்ந்து கொண்ட இளநங்கை, "சரி, இப்பொழுது என்ன செய்யவேண்டும்?" என்று வினவினாள்.

"நீயே போய் உனக்கும் எனக்கும் உணவு கொண்டுவா," என்றான் வீரபாண்டியன்.





புருஷன் மூர்க்கத்தனத்தை அகற்ற வேண்டுமானா விட்டுத்தான் பிடிக்க வேண்டுமென்று தீர்மானித் இளநங்கை அவன் சொற்படியெல்லாம் ஆடினாள். தாே சென்று உணவுத் தட்டை எடுத்து வந்தாள். தன் கை லேயே அவனுக்குப் பாலைப் புகட்டவும் செய்தாள். வே உணவு பிடிக்காததால் தானும் சிறிது பாலை மட்டு பருகினாள். பிறகு தட்டை எட்ட வைத்துவிட்டு பஞ்சணையில் அவனிடம் நெருங்கி உட்கார்ந்தா இளவரசன் கையொன்று அவள் மடிக்குக் குறுக் விழுந்தது. அந்தச் சமயத்தில் மெள்ளப் பேச்சைத் துவங்கி இளநங்கை, "இப்பொழுது கேட்பீர்களா" என் வினவினாள் அன்பொழுகிய குரலில்.

வீரபாண்டியன் மற்றொரு கை அவள் பின்பக் தைச் சுற்றிச் சென்றது. "உம்" என்ற ஒற்றைச் சொல் மட்டு அவனிடமிருந்தது வெளி வந்தது.

"சேரர் படைபலம் என்ன இருக்குமென்று நினை கிறீர்கள்?" என்று வினவினாள் இளநங்கை.

வீரபாண்டியன் அலட்சியமாகச் சொன்ன பதி அவளைத் தூக்கிவாரிப் போட்டது. "பத்தாயிரத்துக் குறையாது," என்றான் வீரபாண்டியன்.

"என்ன சொன்னீர்கள்?" திகைப்பளித்த வியப்புட கேட்டாள் இளநங்கை.

"பத்தாயிரத்துக்கு குறையாது என்று சொன்னேன் என்ற வீரபாண்டியன், அதைப் பற்றி ஏதும் பேசாம அவள் அழகை ஆராய்வதில் முனைந்தான்.

சமயம் வேறாயிருந்தால் மடியில் கிடந்த வீரபாண் யன் கை அவளுக்கு எத்தனையோ இன்ப வேதனை அளித்திருக்கும். ஆனால் எதிரி கோட்டைக்கெதிரே இரு அபாய நிலையில் அதைப் பற்றி எண்ணும் திறனை இழந்திருந்தாள் அவள். ஆகவே, "உங்களுக்கு எப்பட தெரியும்?" என்று கேட்டாள் அவனை நோக்கி.

"ஊகம்தான்."

"எப்படி ஊகித்தீர்கள்?"

"நாம் இக்கோட்டையைக் கைப்பற்றியது சிங்கணனுக்குத் தெரியும்."

"ஆம்."

"இந்தக் கோட்டையின் ஆதிபலமும் அவனுக்குத் தெரிந்திருக்கும்."

"இருக்கலாம்."

"நாலாயிரம் வீரர் காத்து நின்ற கோட்டையை நாலாயிரம் வீரர்கள்கூட இல்லாமல் பிடிக்க முடியா தென்பதை எந்தப் படைத்தலைவனும் அறிவான்."

"சரி."

"ஆகவே நாம் குறைந்த பட்சம் நாலாயிரம் வீரர் களுடன் வந்திருப்போம் என்று சிங்கணன் நினைத் திருப்பான். அந்த நாலாயிரம் படை பலத்தில் ஆயிரம் சேதப்பட்டிருந்தாலும், மீதி மூவாயிரம் பேர் கோட்டைக்குள் இருப்பார்களென்று யாரும் ஊகிப் பார்கள்."

"அதுவும் சரி."

"கோட்டையைப் பிடிக்கும் எதிரி கோட்டைவாசி களை அச்சுறுத்தி அவர்களிலொரு பகுதியையும் தன் படையுடன் இணைத்துக்கொள்வது வழக்கம். ஆக என்ன குறைந்தாலும் நம்மிடம் ஐயாயிரம் வீரர்களுக்குக் குறை யாமல் இருப்பார்களென்பது சிங்கணனின் ஊகம். தவிர அவன்..." என்று திடீரெனப் பேச்சை நிறுத்தினான் வீரபாண்டியன்.



"சொல்லுங்கள்," என்று வற்புறுத்தினாள் இளநங்கை.

"தவிர, வீரபாண்டியனை வெற்றி கொள்வது சுலப மல்ல வென்றும் நினைத்திருக்கிறான்..." என்று தட்டுத் தடுமாறிச் சொன்ன இளவரசன், சட்டென்று, சமாளித்துக் கொண்டு, "ஆகவே வெற்றிகொள்ள இரண்டத்தனை படையாவது அவசியம் என்று பத்தாயிரம் வீரர்களுடன் வந்திருக்கிறான். தவிர கோட்டையைச் சுற்றிக்கொள்ளாமல் மூன்று வாயில்களுக்கு முன்பு மட்டுமே படைகளை நிறுத்தி



யிருப்பான்" என்று மற்றொரு வெடியையும் எடுத்து போட்டான்.

இளநங்கையின் கண்கள் பிரமிப்பால் மலர்ந்தன "அதுவும் தெரியுமா உங்களுக்கு?" என்று வினவினாள் பிரமிப்பு குரலிலும் ஒலிக்க.

"ஏன் தெரியாமலென்ன?" என்று கேட்டான் வீ பாண்டியன்.

"எப்படித் தெரியும்?" என்று கேட்டாள் இளநங்கை

"கடல் வழியில் படை வருவது எனக்குத் தெரியு என்பதை சிங்கணன் ஊகிக்க நியாயமில்லை. அந்த இட பலவீனமாயிருப்பதை நினைத்து நான் அவ்வழி தப் யத்தனித்தால் முன் மூன்று வாயில்களிலிருக்கும் பெரு படை இரு பிரிவாகக் கோட்டையைத் துரிதத்தில் சுற் பின் வாயிலில் வெளிப்படும் நம்மை இரு புறத்திலு தாக்கும். அப்படித் தாக்கினால் நாம் கடலை நோக் விரைவோம். அங்கு காத்திருக்கும் கடற்படை. கடலுக்கு கோட்டைக்குமிடையில் நாம் சிக்கிக்கொண்டால் நாம் நி மூலமாகி விடுவோம்,'' என்று விளக்கினான் வீ பாண்டியன்.

சிங்கணனின் பயங்கரத் திட்டம் மெள்ள மெள்ள புரிந்ததால், இளநங்கையின் இதயத்தில் பயம் விரிந்த "மிகப் பயங்கர நிலை" என்றாள் இளநங்கை கவலை விரிந் முகத்துடன்.

"ஆம்" என்றான் வீரபாண்டியன்.

"கடற்படை என்று வரும்?" என்று வினவினா இளநங்கை.

"இன்னும் நான்கு நாட்களாவது பிடிக்கும்" என் வீரபாண்டியன், "தரைப்படை வேகத்தில் கடற்படை வ முடியாது," என்றும் கூறினான்.

"ஏன்?"

"காற்று தெற்கு நோக்கி அடிக்கவில்லையா?"

"ஆம்."

“எதிர் காற்றில் மரக்கலங்கள் அதிகமாகப் பாய் விரித்து ஓடமுடியாது. துடுப்புக்களால் துழாவவேண்டும்!” என்று சுட்டிக்காட்டினான் வீரபாண்டியன்.

வியப்பு மிக அதிகமாக விரிந்தது, இளநங்கை முகத்தில். காற்று வடக்கிலிருந்து அடிப்பதை அவளும் அனுபவித்திருந்தாலும், அதற்கும் கடற்படை வேகத்துக்கும் தொடர்பிருப்பதைப்பற்றி அவள் எண்ணிக்கூடப் பார்க்கவில்லை. ஆகவே எதையும் கவனிக்கும் வீரபாண்டியன் நுண்ணிய அறிவை வியந்த அவள், “அப்படியானால்?” என்று ஏதோ கேட்டாள்.

“போர் இரண்டு நாட்களுக்கு நடக்காது,” என்றான் வீரபாண்டியன்.

“அப்படியானால் இரண்டு நாளும் நாம் கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டியதுதானா?” என்று வினவினாள் இளநங்கை.

“இல்லை. கைக்கு அதிக வேலை இருக்கிறது,” என்று சொன்ன வீரபாண்டியன், “இளநங்கை, நீ போய் ஓலையும் எழுத்தாணியும் எடுத்து வா,” என்றான். அவன் குரல் கட்டளைபோல் ஒலிக்கவே, அவன் சொற்படி எழுது கருவிகளைக் கொண்டு வந்தாள் இளநங்கை. உட்கார்ந்து எழுதும்படி அவளைப் பணித்த இளவரசன் மிகப் பயங்கரமான விகிதமொன்றை வரையக் கூற்றினும் கொடிய சொற்களை மெள்ள மெள்ள உதிர்க்கலானான். எழுத எழுத இளநங்கை கை நடுங்கியது. விவரிக்க இயலாத வேதனை அவள் உள்ளத்தை ஆட்கொண்டது. எழுத்தாணியை விசிறி எறிந்துவிடலாமா என்றுகூட ஒரு கட்டத்தில் நினைத்தாள்.



## அத்தியாயம் 56

# குறுக்கு வழி

இளவரசன் உதடுகளிலிருந்து திடமாக உதிர்
சொற்களைக் கேட்ட இளநங்கைக்கு, தான் கொற்றை
புலவரிடம் பாடம் கேட்ட கம்பகாவியத்தின் முக்கிய கட்
மொன்று நினைவுக்கு வந்தது. ‘இராமனைத் தா’ என்
விசுவாமித்திரன் கேட்டதை, ‘உயிர் இரக்கும் கொடு
கூற்றின் உளையச் சொன்னான்’ என்று கம்பர் பெருமா
வர்ணித்ததைப் புலவர் எத்தனை உருக்கமாகத் தனக்
எடுத்துச் சொல்லியிருக்கிறார் என்பதை நினைத்து
பார்த்தாள் இளநங்கை. அதைவிட எமவேதனை
அளிக்கும் சொற்களை இளவரசன் உதடுகள் வெ
யிட்டதை நினைத்த இளநங்கையின் இதயம் வெடித்துவி
நிலையிலிருந்தது. ஆனால் அதைச் சிறிதும் கவனிக்காமலே
அல்லது கவனித்தும் லட்சியம் செய்யாமலே
வீரபாண்டியன் கடிதத்திற்கான வாசகத்தைச் சொல்
கொண்டே போனான். அந்த வாசகத்தை அவ
சொன்னதைவிட அவன் தற்கொலை செய்துகொள்
கூட சாலச் சிறந்தது என்று எண்ணினாள் இளநங்
கடிதத்தின் வாசகம் ஆரம்பத்திலிருந்தே சுறுசுறுப்புட
தொடங்கி மெள்ள மெள்ள உச்சஸ்தாயியை அடை
கொண்டிருந்தது. ஒரு நிலையில் வீரபாண்டி
வாசகத்தைச் சொல்வதை நிறுத்த, “இளநங்கை, எழு
வரையில் படி,” என்று நியமித்தான்.

அவள் படித்தாள், “சந்திரகுலத் தோன்றலான சு
பாண்டியத் தேவர் பெருமான் கழல் பணிந்து
பாண்டியன் வரையும் ஓலை. மன்னர் கட்டளைப்
கோட்டாற்றுக் கரையைப் பிடித்து விட்டேன். ஆன

பெரும்படை என்னை எதிர்த்ததால் எனது வீரர்களில் பெரும்பாலோர் மாண்டு விட்டனர். மீதியுள்ளோரைக் கொண்டு கோட்டையைப் பாதுகாக்க நான் தத்தளித்துக் கொண்டிருந்த சமயத்தில், சிங்கணன் பெரும்படையுடன் கோட்டையை வளைத்து முற்றுகையிட்டிருக்கிறான். தவிர, நான் நேற்றுக் கோட்டையைவிட்டு எதிரியைப் பற்றிப் புலனறிய வெளியேறியபோது, பலமான கோடரியால் தாக்கப்பட்டுப் பிழைத்ததே பிரம்மப் பிரயத்தனமாகி விட்டது. கை காலை அசைக்கவும் முடியாமல் படுத்துக் கிடக்கிறேன். இந்த நிலையில் நான் எப்படிப் படைகளை நடத்த முடியும்? கோட்டையைத்தான் எப்படிப் பாதுகாக்க முடியும்? உபதளபதியோ பெண்! போர்க்களத்தை முதன் முதலாக இங்குதான் பார்த்திருக்கிறாள். அவளால் படைகளை நடத்த முடியாது. பிராணனுக்கு மன்றாடிக் கொண்டிருக்கும் எனக்கு, சிங்கணனைப்போன்ற ஒரு பலத்த எதிரியுடன் போராட உடல் சக்தியுமில்லை, படை பலமும் இல்லை..."

இதுவரை படித்த இளநங்கை மௌனம் சாதித்தாள். "சரி மேலே எழுது." என்று வீரபாண்டியன் மேலும் சொன்னான். "ஆகவே நான் சிங்கணனிடம் சரணடையத் தீர்மானித்துவிட்டேன். அதற்குத் தங்கள் அனுமதி தேவை. என் உயிர் என்ன ஆகுமோ என்று நீங்கள் கவலைப்பட வேண்டாம். காட்டுக் கோட்டையில் சிங்கணன் உயிரை நான் காப்பாற்றியதால் சமயம் வரும்போது என் உயிரைக் காப்பாற்றுவதாகச் சிங்கணன் உறுதி கூறியிருக்கிறான். சிங்கணன் வார்த்தை தவறாதவன். தங்கள் அபாக்கிய சகோதரன், வீரபாண்டியன்."



இப்படிக் கடிதத்தைச் சொல்லிமுடித்த வீரபாண்டியன் "சரியாகப் போய்விட்டது. போதுமல்லவா?" என்று இளநங்கையைக் கேட்கவும் செய்தான்.

இளநங்கை பதில் சொல்லும் நிலையில் இல்லை. விவரிக்க இயலாத வேதனை அவள் உள்ளத்தைச் சுக்கு நூறாக வெடிக்கச் செய்துகொண்டிருந்தது. இப்படிப்



பகிரங்கமாகத் தனது கோழைத்தனத்தை எடுத்
சொல்லும் யாரைப்பற்றியும் அவள் கேள்விப்பட்டதுக
இல்லை. இக்கடிதத்தைப் பார்த்தால் பாண்டிய மன்
எத்தனை கொதிப்படைவார் என்று எண்ணிப் பார்
நெஞ்சுருகிப் போனாள் அவள். இத்தனைக்கும்
பாண்டியன் அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. அ
மௌனத்தைப்பற்றியும் சிறிதும் லட்சியம் செய்தானில்
"இப்படிக் கொண்டுவா அதை" என்று ஓலையை வாங்
தனது முத்திரை மோதிரத்தை ஓலையில் நன்றாக அழு
இலச்சினை வைத்தான். "இதை மன்னருக்கு அனுப்
குழலில் போட்டுவிடு", என்று உத்தரவிட்டுப் பஞ்சணை
சற்று அசைந்து படுத்துக் கொண்டான்.

இளநங்கை மௌனமே சாதித்தாள். ஏதே
சிலையைப்போல் எழுந்து நடந்து மன்னருக்குச் செ
அனுப்பும் சிறு வெள்ளிக் குழலில் ஓலையைத் திணித்
கொணர்ந்து வீரபாண்டியனிடம் நீட்டினாள். அ
வாங்கிக் கையில் உருட்டிப் பார்த்த வீரபாண்டிய
"இதிலும் எனது வீரச் சின்னம் இருக்கிறது பார்த்தாயா
என்று, அதன் மேலிருந்த யானை, கோடரி, மீன் இ
யிணைந்த முத்திரைக் கீற்றுகளைக் காட்டினான்.

"பார்த்தேன்" என்று வெறுப்புடன் கூறினா
இளநங்கை.

"இதிலிருந்து என்ன தெரிகிறது?" என்று வினவினா
வீரபாண்டியன்.

"அபக்கியாதி தெரிகிறது" என்று குரலில் வெறுப்
அதிகமாக ஒலிக்கச் சொன்னாள் இளநங்கை.

வீரபாண்டியன் முகத்தில் முறுவல் கோட்டினா
"இளநங்கை! இதில் என்ன அபக்கியாதி இருக்கிறது
என்றும் வினவினான்.

"சரணடைவது பிரக்கியாதியோ?" என்
வினவினாள் உஷ்ணத்துடன் இளநங்கை.

"சில சமயங்களில் பிரக்கியாதிதான். விபீஷண
சரணடைந்தது காவியத்தில் எத்தனை சிறப்பான இட
பெற்றிருக்கிறது?" என்று கேட்டான் வீரபாண்டியன்.

இளநங்கையின் ஆத்திரம் அதிகமாகவே, “உங்கள் அண்ணன் என்ன இராவணனா, அல்லது வந்திருக்கும் சிங்கணன் இராமனா?” என்று பதிலுக்குக் கேட்டாள்.

அவள் ஆத்திரத்தை அதிகமாக்கும் வகையில் விரிந்தது வீரபாண்டியன் புன்முறுவல். “போகப் போகப் புரியும் உனக்கு,” என்று மட்டும் கூறினான் அவன். அந்த ஓலையை அனுப்ப யாராவது ஒரு தூதனை அழைத்து வரும்படியும் உத்தரவிட்டான் அவளுக்கு. அதை நிறைவேற்ற அறையை விட்டு வெளிக்கிளம்பிய அவளை, “இளநங்கை?” என்று தடுத்து, அழைத்து, “தூதன் வீரனாக இருக்கவேண்டாம். எழுதப் படிக்கத் தெரியாத சாதாரணப் பணிமகன் போதும். குறிஞ்சியிடம் சொல்லி யாராவது மலைச் சாதியானைப் பிடித்து அழைத்துவா,” என்றும் கூறினான்.

இளவரசனின் போக்குப் பெரும் புதிராகவும் வேதனையாகவும் இருந்ததாலும், தான் ஏதும் தனிப்படச் செய்யும் நிலையில் இல்லாததாலும் அவன் சொற்படியே செய்ய முற்பட்டாள் இளநங்கை. அவன் விருப்பப்படி அன்றிரவே மலைச்சாதி வாலிபன் ஒருவனைக் குறிஞ்சி அவனறைக்கு அழைத்து வந்துவிட்டுப் போனாள். அவனை நோக்கிய வீரபாண்டியன், “தம்பி! உனக்கு மலைவழிகள் நன்றாகத் தெரியுமா?” என்று கேட்டான்.



படைத் தலைவனுக்குத் தலை வணங்கிய வாலிபன் சொன்னான், “தெரியும்,” என்று.

“எழுதப் படிக்கத் தெரியுமா?” என்று மீண்டும் வினவினான் வீரபாண்டியன்.

“தெரியாது” என்றான் அந்த வாலிபன்.

“நல்லது, நல்லது,” என்று உற்சாகப்பட்ட வீர பாண்டியன் ஓலைக்குழலை எடுத்து அவனிடம் நீட்டி, “இதைக் கொண்டு போய் நீ சேரநாட்டுத் தென்புலத்தில் இருக்கும் பாண்டிய மன்னனிடம் சேர்க்கவேண்டும். இரவு நன்றாகச் சூழ்ந்ததும் கிளம்பி, மேற்கு வாயில் வழியாக ரகசியமாகக் கிளம்பிப் போ. மேற்கு வாயிலில்தான்



எதிரிகள் இல்லை. மெல்லக் கடற்கரைப் பக்கம் செ
கடற்கரையோரமே ஓடிவிடு. சற்று தூரத்திற்குப் ப
மீண்டும் மலைப்பாறைக்கு வந்து தெற்கே செல். புரிகிறத
என்று வினவினான்.

“புரிகிறது,” என்றான் வாலிபன்.

“என்ன புரிகிறது?” என்று வீரபாண்டிய
கேட்டான்.

“மற்ற மூன்று வாயில்களில் எதிரிகள் இருக்கிறார்
அவர்கள் கண்களில் படாமல் செல்ல மேற்கு வாயில்த
நல்லது,” என்றான் வாலிபன்.

“சரி சரி. சரியாகப் புரிந்துகொண்டிருக்கிறாய். போ
வா. உன் பயணத்துக்கு வேண்டிய பொற்காசுக
உபதளபதி அளிப்பார். ஓலை கிடைத்ததும் மன்ன
உன்னைச் சன்மானிப்பார்.” என்ற வீரபாண்டிய
அவனை வெளியே செல்லும்படி சைகை செ
அவனுக்குத் தேவையான பொற்காசுகளைக் கொடுக்
படி இளநங்கைக்கும் உத்தரவிட்டான். “ஐந்நூறு பொற்கா
சுகள் கொடுத்தனுப்பு,” என்றும் கூறினான் இளநங்
யிடம்.

“ஐந்நூறா, புலவர்களுக்குத்தான் இப்ப
பொன்னை வாரி இறைப்பது வழக்கம்” என்றாள் இ
நங்கை.

“ஐநூறுக்குக் குறைந்து இவன் கையிலிருந்த
சிங்கணன் நம்பமாட்டான்” என்றான் படைத் தலைவ

“எதை நம்பமாட்டான்?” இளநங்கையின் குர
வியப்பு ஒலித்தது.

“நாம் சரணடையப் போவதை,” என்று சுட்
காட்டினான் வீரபாண்டியன்.

இளநங்கையின் விழிகளில் வியப்பு மீண்
மண்டியது. இருப்பினும் தூதன் எதிரில் ஏதும் கே
இஷ்டப்படாமல் அவனை அழைத்துக்கொண்டு வெளி
சென்றாள். அவனை அனுப்புவதற்கு வேண்டிய ஏற்ப

களைச் செய்த பிறகு ஒரு நாழிகை கழித்து மீண்டும் வீர பாண்டியன் அறைக்குள் வந்த இளநங்கை, "எனக்குச் சில விஷயங்கள் புரியவில்லை," என்று துவங்கினாள் பேச்சை.

"எந்த விஷயங்கள்?" என்று வினவினான் வீர பாண்டியன் சர்வ சாதாரணமாக.

"சரணடையப் போவதாக மன்னருக்கு ஓலை எழுதியிருக்கிறீர்கள்..."

"ஆம்."

"சாதாரணமாக வீரர்களிடம் அனுப்பும் ஓலையை ஒரு காட்டாளிடம் கொடுத்திருக்கிறீர்கள்."

"ஆம்."

"இவனுக்கு எழுதப் படிக்கத் தெரியாததைக் கேட்டு மகிழ்ந்தீர்கள்."

"ஆம்."

பிறகு மேற்கு வாயிலில் எதிரிகள் இல்லாத பக்கமாகப் போகச் சொன்னீர்கள்."

"மிகவும் சரி."

"பிறகு சிங்கணனுக்கு நம்பிக்கை வர ஐந்நூறு பொற் காசுகளை இவனிடம் கொடுக்கச் சொன்னீர்கள்."

"ஆம்."

"அப்படியானால் இவன்..." என்ற இளநங்கையின் வாசகத்தை இடையில் வெட்டிய இளவரசன், "சிங்கணனிடம் இன்று நள்ளிரவில் நிச்சயம் சிக்கிக்கொள்வான்," என்று பூர்த்தி செய்தான்.

இளநங்கைக்கு ஏதும் புரியவில்லை. "நீங்கள் எதற்காக ரகசிய ஓலை எழுதவேண்டும்? பிறகு எதற்காகத் தூதனை எதிரியிடம் சிக்க வைக்கவேண்டும்?" என்று வினவினாள் குழப்பத்துடன்.

வீரபாண்டியன் அவளைத் தன்னருகில் வந்து உட்காரும் படி கூறினான். வேண்டா வெறுப்பாக உட்கார்ந்த அவளை நோக்கி, "இதில் என் மதிப்பும், உன்





மதிப்பும் சம்பந்தப்பட்டிருக்கிறது இளநங்கை" என்றா பரிதாபக் குரலில்.

"மதிப்பா! உங்களுக்கும் எனக்குமா? இந்த ஓலைக்கு பின்பா?"

"ஆமாம்."

"என்ன மதிப்போ?"

இதற்குப் பதில் சொல்லு முன்பு சற்று நிதானித்தா வீரபாண்டியன். பிறகு மெள்ளச் சொன்னான், "இளநங்கை சிங்கணன் நிலையில் நீ இருந்து விஷயத்தைத் தொகுத்து பார். ஒரு காட்டாள் ரகசியமாக வீரர் சூழாத மேற் வாயில் பக்கம் வெளிவருகிறான். அந்த வாயில் சூழப்பட விட்டாலும் ஒற்றர் கண்காணிப்பு அதற்கு இருக்கும். அந் ஒற்றர்கள் அந்தக் காட்டாளைப் பிடித்துச் சிங்கணனிட அழைத்துச் செல்கிறார்கள். அவனிடம் ஐந்நூறு பொ காசுகள் இருப்பதைப் பார்க்கிறான் சிங்கணன். பிற ஓலையைப் படிக்கிறான். பிறகு என்னைச் சிலாகிக்கிறான் 'வீரபாண்டியன் அறிவில் சிறந்தவன். ஆகையால்தா ஓலை இன்னதென்று அறியாத ஒரு மலைவாசியிடம் ரகசி ஓலை கொடுத்து, எனது வீரரில்லாத மேற்கு வாயில்மூல அனுப்பியிருக்கிறான். மலைவாசியை அபாயப் பணிக்கு தூண்டவே அளவுக்கு மீறிப் பொன்னும் கொடுத்திரு கிறான்,' என்று மெச்சுகிறான். இந்த நிலையில் இந் ஓலையை அவன் நம்புவான், புரிகிறதா?"

இளநங்கைக்கு நன்றாகப் புரிந்தது. ஆகவே கேட்டாள், "நம்பி என்ன செய்வான்?" என்று.

"அவனாக என்னைச் சந்திப்பான்," என்றான் வீ பாண்டியன்.

"சந்தித்து."

"சரணடையக் கூறுவான்."

"கூறினால்?"

"நான் ஒப்புக் கொள்வேன்."

"அதிலென்ன பயன்?"

"பெரும் பயன் இருக்கிறது. நானாக அவனிடம் சரணடைவதாகச் சொல்லவில்லை. அதுவே நமக்கு மதிப்பு. அவனாக வந்து கேட்கும்போது நான் நேரிடையாகச் சரணடைய மறுப்பேன்..." என்ற வீரபாண்டியனை இடைமறித்த இளநங்கை, "இதில் குறுக்குவழி இருக்கிறதா?" என்று வினவினாள்.

"இருக்கிறது. நமது மதிப்புச் சிறிதும் குறையாத வகையில் சரணடைந்து விடலாம்," என்றான் வீரபாண்டியன் குதூகலத்துடன்.

அந்த மதிப்பை நினைக்க நினைக்க இளநங்கைக்குப் பிராணன் போய்விடும் போலிருந்தது. "சரணாகதியில் மதிப்பு வேறா?" என்று சீறினாள்.

அவள் இதயம் கொதித்துக் கொண்டிருந்தது!

"இளநங்கை! உண்மையைச் சொல்லட்டுமா?" என்று குழைந்தான் வீரபாண்டியன்.

"என்ன உண்மை?" என்று கேட்டாள் அவள் கொதிப்புடன்.

"உண்மையில் நான் சிங்கணனிடம் சரணடையப் போவதில்லை," என்றான் வீரபாண்டியன்.

இளநங்கையின் முகத்தில் புத்தொளி பிறந்தது. "அப்படியா?" என்றாள் ஆவலுடன்.

"ஆம்," என்றான் வீரபாண்டியன்.

"வேறு என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று வினவினாள் அவள்.

பதில், இடியென அவள் தலையில் இறங்கியது. "தோல்வியடையப் போகிறேன்," என்ற சொற்களை உற்சாகத்துடன் உதிர்த்த இளவரசன், "இதில்தானிருக்கிறது ஒரு குறுக்குவழி" என்றும் கூறினான்.

அந்தக் குறுக்கு வழி அடுத்த நாளே விளங்கியது அவளுக்கு. விளக்கம் மிகவும் பயங்கரமாயிருந்தது.



அத்தியாயம் 57

## வஞ்சகனா இவன் ?

**கோ**ட்டாற்றுக் கரைக் கோட்டையைச் சிங்க
னுக்குத் தானம் செய்து பாரியையும் பேகனையும்பே
வள்ளல்கள் பட்டியலில் தானும் சேரப் போவத
முதலிலும், எதிரியிடம் சரணடைந்துவிடப் போவத
இரண்டாம் முறையும், தோல்வியடையப் போவதாக இ
யாகவும், இப்படி அடுத்தடுத்துச் சொன்ன வீரபாண்டிய
மனத்தில் என்னென்ன எண்ணங்கள்தான் ஓடுகின்
என்பதை நிச்சயமாக நிர்ணயிக்க முடியாத இளநங்கை,
வேளை தலையில் பட்ட அடி சித்தப்பிரமை
உண்டாக்கியிருக்குமோ என்றுகூட நினைத்தாள். அ
நினைப்பின் விளைவாக அவனைக் கூர்ந்து பரிதாபத்துட
பல விநாடிகள் நோக்கவும் செய்தாள். பிறகு பெ
வேதனைக்கான பெரு மூச்சொன்றும் அவளிடமிரு
வெளிவந்தது.

அந்தப் பெருமூச்சைக் கண்ட படைத்தலை
புன்முறுவல் செய்து, "இளநங்கை! நமது தொல்லை
தீரும் சமயத்தில் வேதனை எதற்கு? சற்றுச் சிரி, பா
போம்," என்று தனது வலக்கையால், அவள் முகவா
கட்டையைப் பிடித்து முகத்தைச் சற்று நிமிர்த்தினான்.

இளநங்கையின் வேதனை நிரம்பிய விழிகள் அ
மீது நன்றாக நிலைத்தன. "எந்தத் தொல்லையைக் கு
கிறீர்கள்?" என்று வினவினாள் துக்கம் தொண்டை
லேசாக அடைக்க.

“இந்தப் போர்த் தொல்லை. நாமிருவரும் சேர்ந்து நிம்மதியாக வாழவிடாமல் அடிக்கும் சேரநாட்டுப் படையெடுப்பு இடையூறுகள். இவற்றைத்தான் சொல்லுகிறேன்.”

அவன் பதில் அவள் மனப்புண்ணை ஆற்றுவதற்குப் பதில் அதிகமாகக் கிளறவே செய்தது. “இவை தொல்லையல்ல, கடமை,” என்று குறிப்பிட்டாள் அவள்.

“அப்படியே வைத்துக் கொள். கடமையைத்தானே நிறைவேற்றுகிறோம் இப்பொழுது?” என்றான் வீரபாண்டியன்.

“என்ன கடமை? எதிரியிடம் சரணடைவது பெரும் கடமையா? அல்லது தோல்வியடைவதுதான் கடமையா?” என்று கேட்டாள் இளநங்கை.

“அவசியமானபோது சரணடைவதும் கடமை. தோல்வியடைவதும் கடமை. இந்த இரண்டு சாதனங்களால் நம்மை நம்பியிருக்கும் படை வீரர்களைக் காப்பாற்றுகிறோம் என்பது நினைவிருக்கட்டும். அவர்களிடமும் நமக்குக் கடமையிருக்கிறதல்லவா?” என்று விளக்கிய வீரபாண்டியன், அவள் கைகளிலொன்றை எடுத்துத் தன் கையில் வைத்துக் கொண்டு அழுத்திப் பிடித்தான்.

அவன் கையில் அவள் கை வழக்கம்போல் சுழலவில்லை. வெறும் மரக்கட்டைபோல் உணர்வற்றுக் கிடந்தது. அவன் சுட்டிக் காட்டிய கடமை, வீரர்கள் ஒப்புக் கொள்ள முடியாத பெரும் விபரீதமான கடமையாயிருந்ததால், ‘மனிதர்கள் தங்கள் பலவீனங்களுக்குச் சப்பைக் கட்டுக் கட்ட எத்தனை விதமான கடமைகளைச் சிருஷ்டித்துக் கொள்கிறார்கள்! எத்தனை விபரீதமான வாதங்களைக் கிளப்புகிறார்கள்!’ என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள் இளநங்கை. ‘இவர் ஏதோ தோல்வியில் ஒரு குறுக்குவழி இருப்பதாகச் சொன்னாரே அது என்னவாயிருக்கும்?’ என்றும் தன்னைத் தானே கேட்டுக்கொண்டு விடை காணாததால் தவித்தாள்.

ஆனால் அந்த விடை அடுத்த நாள் மாலையில் கிடைத்தது. கிடைத்தபோது வேதனையின் எல்லைக்கு





அவளை இழுத்துச் சென்றது. வீரபாண்டியன் தன வாழ்க்கையை அடியோடு நாசம் செய்து கொண் விட்டான் என்ற எண்ணத்தால் அவள் இதயம் வெடித் விடும் நிலைக்கு வந்தது.

ஆனால், பாண்டிய மன்னனுக்கு ஓலையுட தூதனை அனுப்பிய முதல் நாளிரவு பெரும் குழப்பத் லேயே இருந்தாள் இளநங்கை, மறுநாள் வரக் காத்திருந் விபரீதத்தின் கடுமையை உணராமல். அன்றிரவு அவ சரியாக உணவருந்தவில்லை. வீரபாண்டியனிடம் வரு போது செய்துகொள்ளும் அலங்காரத்தைக்கூடச் சரியாக செய்து கொள்ளவில்லை. எல்லாவற்றிலும் ஓ அசட்டையும் கசப்பும் இருந்தது அவளுக்கு. அன்றிரவி படுக்க வந்த போதும், அவள் பஞ்சணைக்குச் சென் போதும், தனது பஞ்சணைக்கு வரும்படி வீரபாண்டிய அழைத்தபோதும், சலிப்புடனேயே அவன் பஞ்சணையி சென்று உட்கார்ந்தாள் அவள். அவன் அவளை காதலுடன் தழுவியபோது கூட உணர்ச்சியேதுமற்ற கட் யாகவே கிடந்தாள் அவள். பிறகு மெல்ல விடுவித்து கொண்டு தனது பஞ்சணைக்கு வந்து படுத்துக் கண்கள மூடினாள்.

புறக்கண்கள் மூட அகக்கண்கள் திறந்து பெரு விபரீதக் காட்சிகளை அவள் சிந்தையில் உலாவவிட்ட சிங்கணனுடைய வெற்றிப் புன்முறுவலும், பாண்டி படை தலை குனிந்து நடந்து கோட்டையிலிருந்து வெ யேறும் காட்சியும் விரிந்தது அவள் மனக்கண்கள் முன்பா தோல்வியடைந்து காவலில் இருந்த விஜயவர்மன்கூ அவனை நோக்கி வெற்றி நகை நகைத்தான். இவற் யெல்லாம் காணக் காண உள்ளம் கொதித்தத நிம்மதியோ உறக்கமோ இன்றி இரவைக் கழித்த இளநங் விடியற்காலையிலேயே எழுந்து அறையைவிட்டு வெளி சென்றாள்.

இரவு முழுவதும் வேதனைப்பட்டுத் தலையணையி புரண்டு புரண்டு படுத்ததால் அவள் கருங்குழல் பெரிது கலைந்து சிதறியிருந்ததன்றி, புடவையும் நெகிழ்ந்

கிடந்தது. அத்தகைய கோலத்துடன் வெளியே வந்த இளநங்கையை நோக்கிய குறிஞ்சி இளநகை கொண்டாள். அந்த இளநகைக்குக் காரணம் என்னவென்பதை நொடிப் பொழுதில் உணர்ந்த இளநங்கை பதிலுக்கு வேதனைப் புன்முறுவல் ஒன்று செய்து, "என்ன சிரிக்கிறாய் குறிஞ்சி?" என்று வினவினாள்.

நேரடியாகப் பதில் சொல்லவில்லை பணிமகள். "இரவு முழுதும் தூக்கமில்லையா தேவி?'' என்று வினவினாள்.

அக்கேள்வியிலிருந்த கள்ளத்தனத்தைப் புரிந்து கொண்ட இளநங்கை, "ஆம் குறிஞ்சி," என்று மட்டும் சொன்னாள்.

"படைத்தலைவர்கூட உறங்கவில்லையா?"

"உறங்கினார். குறிஞ்சி."

"அப்படியானால்...!"

"பஞ்சணையில் புரண்டேன் குறிஞ்சி."

"எந்தப்..."

"சீ, சீ, அதெல்லாமொன்றுமில்லை, குறிஞ்சி. என் பஞ்சணையில்தான். நீ போய் நீராட்டத்துக்கு ஏற்பாடு செய்," என்று இளநங்கை சொல்லவே, பணிமகள் குழப்பம் நிரம்பிய பார்வையொன்றை அவள்மீது வீசிவிட்டுச் சென்றாள்.



குறிஞ்சி நீராட்ட ஏற்பாடுகளைச் செய்ததும், நீராடிப் புத்தாடை புனைந்து, சல்லடமும் கவசமும் தரித்து வீர பாண்டியன் அறைக்குள் சென்ற இளநங்கை, வீரபாண்டியனை நோக்கி, "கோட்டையைப் பார்வையிடச் செல்கிறேன். உத்தரவு ஏதாவது உண்டா?" என்று வினவினாள்.

"உண்டு." சகஜமாக வந்தது படைத்தலைவன் பதில்.

அவன் இருந்த நிம்மதியைக் கண்டு வியந்தே போனாள் வாணாதித்தன் மகள். "என்ன உத்தரவு?" என்று அந்த வியப்பினூடே கேட்கவும் செய்தாள்.



"இங்கிருந்து நேராகக் கோட்டையின் கிழக்
வாயிலுக்குச் சென்று கோட்டைச் சுவரில் ஏறிப் பா
அங்குள்ள எதிரியின் படைப் பிரிவில் பரபரப்பு இருக்கு
நீ அதைக் கவனிக்காததுபோல் கோட்டைப் பாதுகாப்
களைக் கவனித்துக் கொண்டிரு. விற்கூடங்களைச்
பார்த்து வீரர்களை எச்சரிக்கை செய்து, எதிரி முற்றுகை
முறியடிப்பதுபோல் மும்முரம் காட்டு. எதிரியின் தாரைச
சப்தித்து, எதிரி உன்னிடம் பேச இஷ்டப்பட்டா
கோட்டைத் தளத்திலிருந்தே பேசு. என்னைப் பார்
சிங்கணன் இஷ்டப்பட்டால், என்னைக் கேட்
தெரிவிப்பதாகக் கூறு. பிறகு இங்கே வா," என்று கூறி அவ
செய்ய வேண்டியதை எடுத்துக் கூறினான், வீரபாண்டிய

எதிரியிடம் கோட்டையை ஒப்படைக்கத்தான் இ
ஏற்பாடுகளெல்லாம் என்பதை உணர்ந்திருந்த இளநங்
அவனிருந்த அறையிலிருந்து வேதனையால் கனத்த இத
துடன் வெளியேறினாள். அவன் திட்டப்படி கோட்ை
யின் கிழக்கு வாசற்படிக்குச் சென்றாள். அங்கு வீரபாண்
யன் எதிர்பார்த்தபடியே சகலமும் நடந்ததைக் கண்
பெரும் வியப்பும் எய்தினாள். கோட்டைச் சுவர்மீது அவ
ஏறிப் பார்த்தபோது எதிரிப்படைகளிடையே பெ
சுறுசுறுப்புக் காணப்பட்டது. புரவி வீரர்கள் அங்குமிங்கு
வேகமாகச் சென்றுகொண்டிருந்தார்கள். சிலர் அ
வகுப்பிலிருந்தும் பிரிந்து கூட்டம் கூடி எதையோ தீவிரம
விவாதித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் முற்று
எதிர்பாராத ஏதோ ஒரு நிகழ்ச்சி ஏற்பட்டிருக்கி
தென்பதை ஊகிக்கவோ, அந்த நிகழ்ச்சி என்னவென்ப
அறியவோ வினாடி நேரம் கூடப் பிடிக்கவில்லை இ
நங்கைக்கு. வீரபாண்டியன் திட்டப்படி தூதன் ஓலையுட
சிங்கணனிடம் சிக்கிவிட்டான் என்பதையும் அதனால்தா
அத்தனை சுறுசுறுப்பும், அணி வகுப்பைக் கலைக்கு
அளவுக்கு அசிரத்தையும் எதிரிக்கு ஏற்பட்டிருக்கி
தென்பதையும் புரிந்து கொண்டாள் இளநங்கை. அடுத்
ஒரு நாழிகைக்குள் வீர பாண்டியன் சுட்டிய அடுத்
நிகழ்ச்சி ஏற்பட்டது. எதிரியின் முரசுகள் திடீரென விட்

விட்டு ஒலித்தன. தூரத்திலிருந்த பாசறையிலிருந்து புரவி வீரனொருவன் வெகுவேகமாகக் கோட்டைச் சுவருக்குச் சற்று எட்டவே நின்று கொம்பொன்றை எடுத்து ஊதினான்.

இளநங்கை கோட்டைச் சுவரின் முகப்புக்கு வந்து, "யார் நீ? என்ன வேண்டும்?" என்று உரத்த உரலில் கேட்டாள்.

"வீரபாண்டியரைப் பார்க்க போசளத் தண்டநாயகர் சேரர் பெருமான் துணைவர் சிங்கணர் விரும்புகிறார்." என்று அவனும் பதிலுக்குக் கூறினான்.

"எதற்காகப் பார்க்க விரும்புகிறார்?"

"அதை வீரபாண்டியரிடம் சொல்லுவார் தண்ட நாயகர்."

"நான் உபதளபதி என்னிடமும் சொல்லலாம்."

"சொல்லிப் பயனில்லையென்பது தண்டநாயகர் கருத்து." வீரன் பதில் திட்டமாகவும் அதிகாரத் தோரணை யிலும் அமைந்திருந்தது.

அதனால் உள்ளூர வெகுண்ட இளநங்கை அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், "அப்படியானால் நடுப் பகலில் மீண்டும் வா. நான் சென்று படைத் தலைவர் அனுமதி பெற்று வருகிறேன்." என்று கூறவே, வீரன் புரவியைத் திருப்பிக் கொண்டு பாசறையை நோக்கி மலைச் சரிவில் சென்றான்.

சுமார் நாலைந்து நாழிகைக்குப் பிறகு, மீண்டும் படைத் தலைவனைச் சந்தித்த இளநங்கை நடந்ததைக் கூறிப் பதில் என்னவென்று வினவினாள்.

"உனக்குத் தெரிந்த பதில்தானே இளநங்கை?" என்றான் வீரபாண்டியன் முறுவல் செய்து.

"ஆம் தெரிந்ததுதான்" என்றாள் இளநங்கை.

"சிங்கணனை வரச் சொல்."

"எப்பொழுது?"

"மாலையில்."

"மாலைவரை எதற்கு அவகாசம்?"





"உடனடியாகத் தோல்வியடையத் துடிக்கிறாய இளநங்கை?"

"இல்லை இல்லை. நீங்கள்தான் துடிக்கிறீர்கள் என்றாள் வெறுப்புடன் வாணாதித்தன் மகள்.

"ஆமாம்" என்றான் வீரபாண்டியன்.

"என்ன ஆமாம்?"

"துடிக்கிறேன்."

"தோல்விக்கா?"

"ஆம். அதில்தானே குறுக்குவழி இருக்கிறது?"

இதைக் கேட்ட இளநங்கை, "என்ன குறுக் வழியோ?" என்று அலுத்துக் கொண்டாள்.

"சிங்கணன் வரட்டும். உனக்கே புரியும்," என்றா இளவரசன்.

என்ன புரியப் போகிறதோ என்ற திகிலுடன் மீண்டு கோட்டைச் சுவருக்குச் சென்ற இளநங்கை, தனது மு களை ஒலித்து எதிரி வீரனை வரவழைத்துச் சிங்கணனை படைத்தலைவர் மாலையில் பார்க்க இசைந்துள்ளதா தெரிவித்தாள். தவிர, தானாகவும் சில நிபந்தனைக விதித்தாள். "தண்டநாயகர் இரண்டே மெய்க்காவலருட வரவேண்டும், கோட்டைக் கதவுகள் திறக்கப்படும்போ முற்றுகை வீரர்கள் யாரும் ஓர் அடிகூட முன்னேற முய கூடாது. முயன்றால் கோட்டைச் சுவர் மீதுள்ள பெ விற்கள் இயங்கும்," என்று எச்சரிக்கவும் செய்தாள்.

அவள் நிபந்தனைப்படியே அன்று மாலையி பெரும் புரவியொன்றில் சிங்கணன் அலட்சியமா கோட்டையின் கிழக்குக் கதவுகளை நோக்கி வந்தா அவனுக்கு இரு புறமும் மெய்க் காவலர் புரவிகளி வந்தனர். அந்த இருவரிடமும் ஆயுதமேதும் இல்ல சிங்கணன் மட்டும் பெருவாளொன்றை இடைக் கச்சைய கட்டியிருந்தான். அவன் கதவுகளை அணுகியதும் கத களைத் திறந்து அவன் உள்ளே வர அனுமதித்தாள் இ நங்கை. பிறகு, கதவுகளை அடைத்துத் தாழிடச் சொல்

காவலரை எச்சரித்துச் சுவரிலிருந்து கீழிறங்கி சிங்கணன் முன்பு வந்தாள்.

சிங்கணனின் கூரிய கண்கள் அவளை ஒரு வினாடி ஆராய்ந்தன. "உபதளபதிக்கு வணக்கம்," என்ற சொற்களும் உதடுகளிலிருந்து உதிர்ந்தன.

அந்தச் சொற்களில் ஏளனம் பெரிதுமிருந்ததை உணர்ந்தாள் இளநங்கை. இருப்பினும் அதைக் கவனியாதது போல் தானும் சம்பிரதாயமாகத் தலை வணங்கி விட்டுத் தனது புரவியில் ஏறிக்கொண்டு அவனைத் தன்னைத் தொடரும்படி சைகை செய்தாள். இப்படி அவனை அழைத்துக்கொண்டு படைத் தலைவன் மாளிகைக்கு வந்த இளநங்கை, சிங்கணன் மெய்க்காவலரை வாயிலிலேயே இருக்கச் செய்து, சிங்கணனுடன் உப்பரிகைப் படிகளில் ஏறி, படைத்தலைவன் அறை வாயிலுக்கு வந்து சேர்ந்தாள். அங்கிருந்த பணிமகளிடம், "குறிஞ்சி! படைத்தலைவரிடம் தண்டநாயகர் வந்திருப்பதை அறிவி," என்று உத்தர விட்டாள்.

சிங்கணனை அதுவரை பார்த்திராத பணிமகள் வாயைப் பிளந்து அதிர்ச்சியுற்றுச் சில வினாடிகள் நின்று விட்டாள். பிறகு ஓடிச் சென்று படைத் தலைவரிடம் சிங்கணன் வரவை அறிவித்தாள். அடுத்த வினாடிகளில் சிங்கணனுடன் படைத் தலைவன் அறைக்குள் நுழைந்த இளநங்கை அறையிலிருந்த நிலையைக் கண்டு அடியோடு பிரமித்து நின்றாள். அறையின் தோற்றம் பூரணமாக மாறியிருந்தது. படைத் தலைவன் பஞ்சணையில் இரண்டு மூன்று தலையணைகளை அடுக்கி, சற்று ஏறி, அரைவாசி உட்கார்ந்த பாவனையில் இருந்தான். சிங்கணன் உட்கார ஒரு சிங்காதனமே போடப் பட்டிருந்தது. அந்த ஆசனத்தின் பக்கத்தில் உருவிய வாளுடன் இரு வீரர்களும், சற்று அப்பால் கோட்டையின் பழைய தலைவன் விஜயவர்மனும் நின்று கொண்டிருந்தார்கள்.



சிங்கணன் அந்த இரு வீரர்களையும் நோக்கி வீரபாண்டியனையும் நோக்கினான். அவன் முகத்தில்



சந்தேகத்தின் சாயை பூர்ணமாகப் படர்ந்தது. 'ஒரு வேளை இது தன்னைப் பிடிப்பதற்காகச் செய்யப்பட்ட வஞ்ச ஏற்பாடோ' என்று ஒரு வினாடி எண்ணினான் சிங்கணன் தன்னைச் சிறைப்படுத்துவதானால் வீரபாண்டிய தன்னை அப்பொழுதே சிறைப்படுத்த முடியுமெ பதையும், தான் சிறைப்பட்டதை அறிந்தால் தலைவனி லாத தனது பெரும் படை சிதறி விடுமென்பதையு உணர்ந்து கொண்டான் சிங்கணன். 'இத்தகைய வஞ்சகன வீரபாண்டியன்? பேச அழைத்து எதிரியைப் பிடிக்கு கயவனா இவன்?' தனக்குள் கேட்டும் கொண்டான்.

அந்த எண்ணமும் கேள்விகளும் இளநங்கையின் சிந்தையிலும் எழுந்தன. 'இதுதான் இவர் சொன்ன குறுக் வழியா?' என்றும் பிரமித்தாள் அவள். இருப்பினும் வேட களால் சூழப்பட்ட சிங்கம் போலச் சிங்கணன் தன அச்சமற்ற பார்வையை அங்கிருந்த அனைவர்மீதும் ஒ முறை வீசினான்.

## அத்தியாயம் 58

# பிழைக்கும் வழி

போசளத் தண்டநாயகனான சிங்கணன் தன்னிடம் தன்னந்தனியே சிக்கிக்கொண்ட அந்தச் சமயத்திலும் லவலேசமும் அச்சமற்ற பார்வையை அறையைச் சுற்றி வீசியதைக் கண்ட வீரபாண்டியன் அவன் நெஞ்சுறுதியை உள்ளூர எண்ணிப் பெரிதும் வியந்தான். இத்தகைய ஒரு தண்ட நாயகன் மட்டும் எதிரிகள் பக்கத்திலிராமல் பாண்டியர் பக்கத்திலிருந்தால் பாண்டியர் நாடும் அதன் மூலம் தமிழகமும் எத்தனை பலப்படும் என்றும் நினைத்தான். தவிர சிங்கணன் வீரப்பார்வையிலிருந்த சந்தேகமும் அவனுக்கு விளங்கவே, "சிங்கணரே! தனிப்பட, நம்பி வரும் எதிரிகளைச் சிறைப்பிடிக்கும் அத்தனை கேவல நிலைக்குப் பாண்டியர் குலம் இன்னும் வரவில்லை," என்றும் கூறினான் புன்முறுவலுடன்.

இதைக் கேட்டதால் சந்தேகம் விலகியதன்றி, வீரபாண்டியனை அற்பமாக எடை போட்டதற்காகச் சிறிது வெட்கமும் அடைந்த தண்டநாயகன் சொன்னான், "படைத்தலைவர்களின் தனியறைகளில் உருவிய வாட்களுடன் மெய்க் காவலர் நிற்பதை நான் இதுவரை பார்த்ததில்லை," என்று.

"இது புதுமைதான் சிங்கணரே! ஆனால் என் உடல் நிலையால் ஏற்பட்ட சந்தர்ப்பம் இத்தகைய புதுமைக்கு இடங் கொடுத்தது," என்று வீரபாண்டியன் அறிவித்ததன்றிப் பக்கத்திலிருந்த கோட்டைத் தலைவனான விஜயவர்மனை நோக்கி, "இல்லையா விஜயவர்மரே!" என்றும் வினவினான்.





விஜயவர்மன் முகம் பல புதிர்களால் புத்தி இயக்க
படுவதை அறிவித்தது. குழப்பத்தின் சிகரமாக விளங்கி
விஜயவர்மன் வீரபாண்டியன் வாக்கியத்தை ஆமோதிக்கு
வகையில் தலையை ஆட்டினான்.

அறையிலிருந்த நிலை சிங்கணனுக்குக்கூடப் பெரு
புதிராயிருந்தது. தன்னுடன் பேச ஒப்புக்கொண்ட வ
பாண்டியன் தனிமையில் பேசாமல் சேரர் கோட்டை
தலைவன் விஜயவர்மனை எதற்காக அறைக்கு வரவழை
தன்றித் தன் கூற்றுக்குத் தலையாட்டவும் வைத்து
கொண்டான் என்பது விளங்கவில்லை, போசளத் தண்
நாயகனுக்கு. "சமாதானத்தைப் பற்றியோ அல்லது சரண
கதியைப் பற்றியோ பேச வீரபாண்டியனுக்கு விஜயவர்ம
போன்ற எதிரியின் துணை எதற்கு? தவிர வீரர்கள் நிற்பதி
புதுமைதான் என்ன இருக்கிறது? என்ன சூதுக்கா
இத்தகைய நிலையைத் தன் படுக்கையறையில் சிருஷ்டித்
ருக்கிறான் பாண்டிய இளவரசன்?" என்று தன்னுள் ப
கேள்விகளை எழுப்பிக்கொண்டான் சிங்கணன்.

அவன் உள்ளத்திலோடும் எண்ணங்களை விநா
நேரத்தில் எடை போட்ட வீரபாண்டியன், "இ
ஆசனத்தில் அமருங்கள் சிங்கணரே! அனைத்துக்கு
விளக்கம் கூறுகிறேன்," என்று கூறிப் பஞ்சணைக்கு
பக்கத்திலிருந்த சிங்காதனத்தைச் சுட்டிக் காட்டினா
அந்தச் சிங்காதனத்தில் அமர்ந்தான் சிங்கணன்.

வீரபாண்டியன் இதழ்களில் வருத்தப் புன்முறு
லொன்று படர்ந்தது. அதையொட்டி உதிர்ந்த சொற்களிலு
வருத்தம் சற்றே கலந்திருந்தது. "சிங்கணரே! ஒரு படை
தலைவன் இன்னொரு படைத்தலைவனைச் சந்திக்கு
இடம் படுக்கையறையல்ல. ஆனால் என் தலையிலிருக்கு
காயத்தால் என் ரத்தம் மிகவும் சேதப்பட்டிருக்கிற
அசையவும் சக்தியில்லாமல் இருக்கிறேன். ஆகையால்தா
உங்களை இங்கே சந்திக்க ஒப்புக்கொண்டேன். ஆனா
போசளத் தண்டநாயகரைச் சந்திக்கும் போது முறையுட
சந்திக்க வேண்டுமல்லவா?" என்று சொல்லிக்கொண்
போன வீரபாண்டியன் சற்று நிதானித்தான்.

"ஆம்," என்று ஏதோ சொல்ல வேண்டுமென்பதற்காகச் சொன்னான் சிங்கணன், அத்தனைப் பூர்வ பீடிகையும் வேறு ஏதோ முக்கிய விஷயத்துக்கு என்பதை உணர்ந்து கொண்டு.

"ஆம், சிங்கணரே! நான் சாதாரண உடல் நிலையில் இருந்தால் எப்படி உம்மைச் சந்திப்பேனோ அப்படிச் சந்திக்க இஷ்டப்பட்டேன். கோட்டைக் கொலு மண்டபத்தில் சிங்காதனங்களுடன் வாள் பிடித்த காவலருடன் சந்திக்கும் முறையில் இங்கும் சந்திக்கத் தீர்மானித்தேன். அதற்காகத்தான் வீரர்கள், சிங்காதனம்..."

"புரிகிறது," என்றான் சிங்கணன், வீரபாண்டியன் சொன்ன எதையும் நம்பாமல்.

"ஆனால், விஜயவர்மரை ஏன் வரவழைத்தேன் என்பது உமக்கு வியப்பாயிருக்கலாம்," என்று வீரபாண்டியன் மேலும் தொடர்ந்தான்.

"பாண்டிய இளவரசர் செய்யும் எந்தக் காரியத்திலும் வியப்பு சம்பந்தப்படாமலிருக்காது," என்ற சிங்கணன் குரலில் சந்தேகம் மட்டுமின்றி விஷமும் கலந்திருந்தது.

"நன்றாகச் சொன்னீர்கள். எதிரியையும் பாராட்டும் பண்பைத் தமிழகத்தில்தான் பார்க்கமுடியும்," என்று சிலாகித்த வீரபாண்டியன், "சிங்கணரே! பெரும் படையுடன் நீங்கள் வந்திருப்பதால் இந்தக் கோட்டையைச் சுலபத்தில் பிடித்துவிடலாமென மனப்பால் குடிக்கிறீர்கள். அது தவறான எண்ணம் என்பதை விளக்க எண்ணினேன். நான் சொல்லும் எதையும் நீங்கள் நம்புவது கடினமாகையால் ஒரு சாட்சியையும் வரவழைத்தேன், அந்தச் சாட்சி விஜயவர்மன்."

அதுவரை இருவர் சம்பாஷணையையும் வெறுப்புடன் கேட்டுக்கொண்டிருந்த இளநங்கையின் சித்தம் ஒருமுறை குலுங்கியது. தோல்வியடையப் போவதாகச் சற்று முன்பு தன்னிடம் கூறிய வீரபாண்டியன் நேர்மாறாகச் சிங்கணனிடம் பேச முற்பட்டதன்றி, தனது பலத்துக்கு விஜயவர்மனைச் சாட்சிக்கு அழைத்திருந்ததையும் கண்டு பெரிதும் பிரமித்தாள். அவள் பிரமையை வீரபாண்டி





யனின் அடுத்த சொற்கள் உச்ச நிலைக்குக் கொண் சென்றன.

"இக்கோட்டையைக் கைப்பற்றிய பின்பு நான் வா விருக்கவில்லை சிங்கணரே! பாண்டியர் கோட் முறையில் பலப்படுத்தியிருக்கிறேன். சேரநாட்டு கூடங்கள் மட்டுமல்ல கோட்டைச் சுவர்களில், நெடுந்தூ வேலெறியும் மர இயக்கிகளையும் அமைத்திருக்கிறே என்று சிங்கணனிடம் கூறிய வீரபாண்டியன், "என் விஜயவர்மரே?" என்றும் கேட்டான் கோட்டை காவலனை நோக்கி.

கோட்டைக் காவலன் சிங்கணனை நோக்கி சொன்னான். "ஆம் தண்டநாயகரே! கோட்டைப் பா காப்பில் பல புதுமுறை யந்திரங்கள் அமைக்கப்பட்டி கின்றன. எந்தப் பலமான படையினின்றும் இதை பதினைந்து நாட்கள் நிச்சயமாகக் காக்கலாம்" என்று.

"அதுமட்டுமல்ல..." என்று வீரபாண்டியன் துவா னான்.

"வேறு என்ன விசேஷம் இந்தக் கோட்டையில் என்று வினவினான் சிங்கணன்.

"விஜயவர்மன் வீரர்களில் பாதிப் பேர் எனது பல யில் சேர்ந்துவிட்டார்கள்." என்றான் வீரபாண்டியன்.

"இது உண்மையா?" என்று வினவினான் சிங்கண விஜவர்மனை நோக்கி.

"ஆம்" என்றான் விஜயவர்மன்.

"சேரமன்னனுக்கு இது தெரிந்தால் உமது கதி என் வாகும்?" என்று வினவினான் சிங்கணன்.

"கோட்டை வீரர்களைப் பாண்டியர் படையி சேரும்படி நான் வற்புறுத்தவில்லை," என்றான் விஜ வர்மன் இகழ்ச்சியுடன்.

"வேறு யார் செய்தது இதை?" என்று சற் கடுமையான குரலில் கேட்டான் சிங்கணன்.

"எனக்கெப்படித் தெரியும்?"

"ஏன் தெரியாது?"

"நான் காவலில் இருக்கிறேன். வெளியே நடப்பதைக எப்படி அறியமுடியும் என்னால்?"

"வீரர்கள் சேர்ந்ததை மட்டும் எப்படி அறிந்தீர்?"

"கண்ணால் பார்த்தேன்."

"எதை?"

"சேரவீரர் அணிவகுப்பை."

"எப்பொழுது?"

"இன்று பிற்பகலில்."

சிங்கணன் சிந்தையில் சந்தேகம் துளிர்விட்டது. விஜயவர்மன் விஷயத்தை அறிந்துதான் சொல்கிறானா அல்லது அவன் ஏமாற்றப்பட்டானா என்பது விளங்காத தால், அவனை விட்டு வீரபாண்டியனை நோக்கிய சிங்கணன் கேட்டான், "அப்படியானால் உங்கள் படை பலம் இப்பொழுது எவ்வளவு?" என்று.

"எந்த முட்டாளாவது எதிரியிடம் தனது படை பலத்தைச் சொல்லுவானா?" என்று வினவினான் வீர பாண்டியன்.

வீரபாண்டியன் கேள்வியில் நியாயமிருப்பதைப் புரிந்து கொண்ட சிங்கணன், "உண்மை வீரபாண்டியரே! நான் கேட்டது தவறுதான். அப்படியானால், நீங்கள் என்னிடம் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?" என்று கேட்டான்.

"நானா?" வீரபாண்டியன் குரலில் வியப்பு ஒலித்தது.

"ஆம்," என்றான் சிங்கணன்.

"நானா உங்களை வரவழைத்தேன் இங்கு?"

"இல்லை."

"அப்படியிருக்க சொல்லவேண்டியது நீங்கள்தானே!"

வீரபாண்டியன் குரல் சர்வ சகஜமாயிருந்தது. இருப்பினும் அதன் உள்ளூர விஷமம் இருப்பது சந்தேகமறத் தெரிந்தது சிங்கணனுக்கு; ஆகவே மேற் கொண்டு பேச்சை வளர்த்தாமல், "நான் சொல்வதைத் தனிமையில்தான் சொல்லவேண்டும்," என்றான்.





வீரபாண்டியன் மிகுந்த மரியாதையுடன் தலையை தாழ்த்தினான். பிறகு வீரர்களையும் விஜயவர்மனையு வெளியே செல்லும்படி கண்களால் ஜாடை செய்தா அவர்கள் சென்றதும் கதவைச் சாத்தும்படி இளநங்கையை பணித்தான். இளநங்கை கதவைச் சாத்திவிட்டு வந் பிறகும் சிங்கணன் பேசவில்லை. அவன் ஆலசியத்துக்கு காரணத்தைப் புரிந்துகொண்ட வீரபாண்டியன், "என் உ தளபதி முன்பாக நீங்கள் எதையும் சொல்லலாம். நா வேறு, அவள் வேறல்ல'' என்று புன்முறுவலுட சொன்னான்.

"இருப்பினும், இது மிக முக்கிய விஷயம். நாமிருவ மட்டுமே விவாதிக்கத்தக்கது."

"இருவர்தானிருக்கிறோம்."

"இருவரா?"

"ஆம்."

"நானொருவன்..."

"நான் பாதி, அவள் பாதி. ஆக நாங்களிருவரு ஒருவர்..."

சிங்கணன் தனது கண்களை இளநங்கையை நோக் ஓட்டினான். இளநங்கை தலையைக் குனிந்துகொண்டா

அவள் நிலையைக் கண்ட சிங்கணன் மெள்ள புன்முறுவல் செய்தான். பிறகு வீரபாண்டியனை நோக் "அப்படியா விஷயம்?" என்று கேட்டான்.

"ஆம்," என்ற வீரபாண்டியன் குரலில் மகிழ்ச இருந்தது.

"இளநங்கை உபதளபதியானதைப் பற்றிக் கேள்வி பட்டேன். சேர நாடே கேள்விப்பட்டிருக்கிறது. ஆனால் வீ பாண்டியனின் காதலியானதை...'' என்ற சிங்கண வாசகத்தை முடிக்கவில்லை. அதற்கு முன்பே இடை புகுந் பாண்டிய இளவரசன், "காதலோடு நின்றால் கூ இத்தனை கஷ்டமிருக்காது..." என்று சற்றுத் தயங்கினான்

"அப்படியானால்...?'' சிங்கணன் பிரமிப்புட இருவரையும் நோக்கினான்.

"திருமணமும் முடிந்து விட்டது." என்ற வீர பாண்டியன், "திருமணம் மனிதனை எத்தனை மாற்றிவிடு கிறது பார்த்தீர்களா சிங்கணரே? எந்தப் படையெடுப் பையும் கண்டு அஞ்சாத வீரபாண்டியனைக்கூட கோழை யாக்கி விடுகிறது" என்றும் அறிவித்தான்.

சிங்கணன் அவனைக் கூர்ந்து நோக்கினான். "வீர பாண்டியன் கோழையாக முடியாது," என்று திட்டமாகக் கூறினான்.

"தவறு சிங்கணரே! நான் இப்படிச் சக்தியற்று அபாய நிலையில் படுத்திராமலிருந்தால், எனக்கென்று மனைவி யொருத்தி ஏற்படாதிருந்தால், நீங்கள் பேச வந்திருப்பதை நான் கேட்க இஷ்டப்பட மாட்டேன்," என்றான் வீர பாண்டியன் வருத்தத்துடன்.

"நான் என்ன பேச வந்திருக்கிறேன்?" என்று வினவி னான் சிங்கணன்.

"என்னைச் சரணடையச் சொல்ல வந்திருக்கிறீர்கள்."

"ஆம்."

"என் பலவீன நிலையை அறிந்திருக்கிறீர்கள். உங்கள் படைபலம் என்னுடைய சிறு படையைவிடப் பல மடங்கு பெரியதாயிருக்கும்."

"பன்மடங்கு பெரியது."

ஆகவே முற்றுகையால் என்னைத் தகர்த்து விடத் தீர்மானித்திருக்கிறீர்."

"ஆம். நாளை முதல் நான் தாக்க ஆரம்பித்தால் நான்கு நாட்களில் இந்தக் கோட்டையை அழித்துவிட முடியும் என்னால். கோட்டைக் கதவுகளை உடைக்க முப் புறத்திலும் பெரும் நீள்மரங்கள் தயாராகின்றன. அந்தக் கட்டைகளை எடுத்துத் தாக்க யானைகளும் கொண்டு வந்திருக்கிறேன். என் பலத்தை எதிர்த்து நிற்க இதைவிட பெரிய கோட்டையாலும், உங்களிடமிருப்பதைவிட இரட்டத்தனை வீரர்களாலும் முடியாது" என்று திட்ட வட்டமாக அறிவித்தான் சிங்கணன்.

வீரபாண்டியன் முகத்தில் முறுவல் விரிந்தது. "தவறு சிங்கணரே! இன்னும் பதினைந்து நாட்களுக்கு நீங்கள்





இருக்கிற இடத்தில் உங்களைத் தேக்கி வைக்க முடி என்னால். யானைகளைக்கொண்டு நீர் நெடுமரங்க இயக்க முனைந்தால் கோட்டைக்கு இருநூறடிக்கு முன் யானைகள்மீது வேல்களை வீச என்னிடம் சாதனங் இருக்கின்றன. கோட்டையிலிருந்து வாசலை உமது ப அணுக முடியாதபடி நாற்புறமும் அம்பு மழை பொழ முடியும். தவிர வேறு விதப் போர் முறைகளும் வீரபாண் யனுக்குத் தெரியும். ஆகவே நான் சரணடையும் உத்தே எனக்கில்லை. அப்படி ஏதாவது கேட்க நீர் வந்திருந்த உடனடியாக உங்கள் பாசறைக்குத் திரும்பலாம்," என்றா புன்முறுவலுடன்.

சிங்கணன் தனது ஆசனத்திலிருந்து எழுந்திருந்து பாண்டியன் பஞ்சணையை நெருங்கினான். "வீரபாண் யரே! சரணடைவது ஒன்றுதான் உமக்கு வழி. அதை நீ உணர்ந்திருக்கிறீர். வீணாக என்னை மிரட்டிப் பயனில்ல நீர் பாண்டிய மன்னருக்கு அனுப்பிய ஓலையுடன் உ தூதன் என்னிடம் பிடிபட்டான்!"

வீரபாண்டியன் அதிர்ச்சியுற்றவன்போல் நடித்தா

"உண்மையாகவா!" என்றான்.

"ஆம்."

"அவனை என்ன செய்தீர்கள்?"

"ஏதும் செய்யவில்லை. ஓலையைப் படித்த பின் ஓலையை மீண்டும் குழலில் அடைத்து அவனை பாண்டிய மன்னனிடம் அனுப்பிவிட்டேன்."

வீரபாண்டியன் முகத்தில் துக்கம் நிரம்பி வழிந்த "பாண்டிய மன்னர் பெரிதும் சினமடைவார்."

"இதில் சினமடைய ஏதுமில்லை. பல மடங்கு பெரி படையுடன் மோதாதிருப்பது போர்ச் சம்பிரதாயம்தான் என்று சுட்டிக்காட்டினான் சிங்கணன். அத்துடன் மேலு சொன்னான், "வீரபாண்டியரே! நான் சேரர்களின் மு பலத்துடன் இக் கோட்டையை முப்புறம் வளைந்திரு கிறேன். நாலாவது புறத்தில் கடல்மூலம் இன்னொரு பன வருகிறது. உமது நிர்க்கதியை நினைத்து என் போ ஏற்பாடுகளைச் சொல்லுகிறேன்," என்று.

வீரபாண்டியன் முகத்தில் கோபம் துளிர்த்தது. "சிங்கணரே! இது பெரும் துரோகம். காட்டுக் கோட்டையில் நான் உமக்கு உயிரளித்தபோது, சேர மன்னனை இங்கு அழைத்து வருவதாக நீர் உறுதி கூறவில்லையா?"

"வீரபாண்டியரே! போரின் தர்மங்கள் பலவகைப் பட்டவை. உயிர் அபாயத்திலிருக்கும்போது நான் உறுதியளித்தது உண்மை. ஆனால் அந்த உறுதி தர்மத்துக்குப் புறம்பானது. அதை முறிப்பது தவறல்ல. தவிர உமது போர் முறைக்குப் பதில் முறை வகுப்பதும் தண்டநாயகனான எனது கடமை."

வீரபாண்டியன் கடைசியாக இளநங்கையை நோக்கினான். "இளநங்கை! பார்த்தாயா நிலைமையை? இவரிடம் சிக்கியிருக்கிறோம்," என்றான் வருத்தத்துடன்.

"அதற்காகக் கவலைப்படாதீர்கள் வீரபாண்டியரே! நீர் சரணடைந்தால், உம்மையும் இளநங்கையையும் பாதுகாப்புடன் கொற்கைக்கு அனுப்பிவைப்பது என் பொறுப்பு."

"நன்றி சிங்கணரே!" என்ற வீரபாண்டியன் தீர்க்காலோசனையில் இறங்கினான். பிறகு சொன்னான்: "சிங்கணரே! நான் சரணடைய முடியாது. சரணடைந்தால் பாண்டிய நாடு சிரிக்கும். பேடியென்று என்னை இகழும். நாட்டை மட்டும் பார்த்தால் போதாது. மனைவியின் நலனையும், என் பிற்கால வாழ்க்கையையுங்கூடக் கவனிக்க வேண்டும்," என்று.



சிங்கணன் தலையை அசைத்தான். "அதற்கும் ஒரு வழி இருக்கிறது. அது இருவருக்கும் அனுகூலம்," என்றான் வீரபாண்டியன். அந்த அனுகூல மார்க்கத்தை விவரிக்கவும் செய்தான். அதைக் கேட்ட சிங்கணன் வெறுப்புடன் நோக்கினான் வீரபாண்டியனை. இளநங்கை உணர்ச்சிகளை அடியோடு இழந்து ஸ்தம்பித்து நின்றாள். சிங்கணன், "இது தான் பிழைக்கும் வழி வீரபாண்டியரே! உமது வழி எனக்கும் சம்மதம். வருகிறேன்," என்று கிளம்பினான் அந்த அறையைவிட்டுத் தனது பாசறையை நோக்கி.

## அத்தியாயம் 59

# போர் நாடகம்

**பா**ண்டிய இளவரசனான வீரபாண்டியன் போர்க்களத் தண்டநாயகனிடம் விவரித்த குறுக்கு வழியைக் கேட்ட இளநங்கைக்கு அவமானத்தால் பிராணனே போய்விடும் போலாகி விட்டது. இத்தகைய குறுக்கு வழியைக் கையாண்டு பிழைப்பதைவிடப் பிராணனை விடுவது எத்தனை சிலாக்கியமென்று அவள் நினைத்துப் [illegible]துத் துக்கப் பெருமூச்சொன்றும் விட்டாள். அந்தக் குறுக்கு வழியைப் பிழைக்கும் வழி என்று சிங்கணன் கேவலமாகக் குறிப்பிட்டது எத்தனை பொருத்தம் என்று கொற்கைக் கோட்டைக் காவலர் மகள் எண்ணிப் பார்த்ததாள். அவள் கண்ணின் கருமணிகளில் கோபத்தின் சாயையோடு 'இப்படி ஒரு வீரன் அழிந்துபோகிறானே' என்ற வேதனையால், பரிதாபத்தின் சாயையும் ஒளிவிட்டது. குறுக்கு வழியை இளவரசன் விவரிக்க ஆரம்பித்தபோது அதன் போக்கை முழுதும் புரிந்துகொள்ள முடியாத இளநங்கை, இளவரசனுக்கும் சிங்கணனுக்கும் சம்பாஷணை முற்ற முற்ற இதயம் வெடிக்கும் நிலைக்கு வந்துவிட்டாள். மிக நிதானமாக, சர்வசாதாரணமாக, பல தர்ம நியாயங்களுடன் வீரபாண்டியன் தனது வழியை விவரிக்கலானான். அதற்குப் பூர்வாங்கமாகத்தனது [illegible] காட்டினான்.

"சிங்கணரே! உங்க[illegible] இ[illegible] நாங்களும் [illegible]க்கியிருப்ப[illegible] உண்[illegible] கோட்டை[illegible]தினைந்து நாட்கள் காக்க [illegible] பலமும் [illegible]ப் போர்ச் சாதனங்களு[illegible] விஜயவர்ம[illegible] கொண்டதைக் கவனித[illegible]

அழைத்து வந்திருக்கும் தரைப்படை மட்டும் என்னை எதிர்ப்பதாயிருந்தால், நான் இக்கோட்டையை ஓரளவு காத்து உமது படையில் பாதியை நிச்சயமாக அழிக்க முடியும். ஆனால் என்னை முதுகிலும் குத்திக்கொல்ல வழி வகுத்திருக்கிறீர்கள். கடல் வழியிலும் பெரும்படை வந்து, கோட்டையின் பின் வாயிலும் தாக்கப்பட்டால் எனது நிலைமை சிறிது கஷ்டந்தான்" என்று துவங்கினான் வீர பாண்டியன்.

சிங்கணன் புன்முறுவலுடன் தலையசைத்தான். "நீங்கள் அதைப் புரிந்துகொண்டது பற்றி மகிழ்ச்சி," என்றும் கூறினான்.

"இருப்பினும்..." என்று சிறிது சந்தேகத்தைக் கிளப்பி ன[illegible] வீரபாண்டியன்.

[illegible]ங்கணன் முகத்தில் மீண்டும் சந்தேகக்குறி தோன்றியது. "இருப்பினும் என்ன வீரபாண்டியரே?" என்று வினவவும் செய்தான் அவன்.

"நான் மன்னருக்கு அனுப்பிய தூதுவனைச் சிறை பிடித்ததாகச் சொன்னீர்கள்..."

"ஆம்."

"பிறகு அவனை விடுதலை செய்து, ஓலையுடன் சேர நாடு செல்ல அனுமதித்ததாகவும் கூறினீர்கள்."

"ஆம்."

"இது அறிவுள்ள செய்கையல்ல சிங்கணரே!"

"எதனால் சொல்லுகிறீர்கள்?"

"சரணடைவதாக நான் குறிப்பிட்டுள்ளதைப் பார்த்த [illegible]ம் மன்னர் தன் படையுடன் இக் கோட்டையை நோக்கித் [illegible]யின் முன்புள்ள உமது படை பின் [illegible] மன்னர் படையாலும், முன்புறத்தில் எனது விற் [illegible]டங்களாலும் தாக்கப்பட்டால் உமது கதி [illegible]? [illegible]சித்துப் பாரும்?" என்று கூறிய வீரபாண்டியன் [illegible] வெற்றிக் குறி இருந்தது.

[illegible] கேட்டதும் இளநங்கையின் இதயத்தில் சற்றே [illegible]ளிர்விட்டது. ஆனால் அ[illegible]ம்பிக்கையைப்



போசளத் தண்டநாயகனின் அடுத்த சொற்கள் சிதற அடித்தன.

"இதையும் நான் யோசித்தேன் வீரபாண்டியரே. இந்த ஓலை சேரநாடு செல்ல இரண்டு நாட்கள் பிடிக்கும். அந்த இரண்டு நாட்களுக்குள் நீர் சரணடைய மறுத்தால் எனது படையில் பாதி அதாவது ஐயாயிரம் வீரர்கள் பிரிந்து இவ்விடம் நோக்கித் திரும்பும் பாண்டிய மன்னரைத் தென் எல்லையிலேயே மறிப்பார்கள். அவரிடம் இருந்த படை வீரர் இரண்டாயிரம் பேர். அவர்களில் சிலர் சேரநாட்டு எல்லைத் தாக்குதல்களில் மாண்டுமிருப்பார்கள். மீதியுள்ள சுமார் ஆயிரத்து ஐந்நூறு அல்லது ஆயிரத்து எழுநூறு வீரர்களைச் சமநிலத்தில் ஐயாயிரம் வீரர்கள் எதிர் கொண்டால் என்ன ஆகும்? சிந்தித்துப் பாருங்கள்" என்று சிங்கணன் புன்முறுவல் செய்துவிட்டு மேலும் சொன்னான்: "அது மட்டுமல்ல வீரபாண்டியரே! உமது படைபலத்தையும் நான் வேவுகாரர்களைக் கொண்டு அறிந்திருக்கிறேன். நீர் இங்கு அழைத்து வந்தது இரண்டாயிரம் பேர் கொண்ட சிறு படைதான் என்பது எனக்குத் தெரியும். ஆகவே இங்கு உமது எதிரில் மலைச்சரிவில் எனது ஐயாயிரம் படைகளும் பின்புறத்தில் கடல்மூலம் வரும் ஐயாயிரம் படைகளும் தாக்கினால், உமது இரண்டாயிரம் வீரர்களில் இந்தக் கோட்டையைப் பிடிப்பதில் மாண்டவர் போக மீதிப் பேரும், விஜயவர்மன் படையில் பாதிப்பேர் இரண்டாயிரம் வீரர்களும் ஆக மொத்தம் நாலாயிரத்துக்குக் குறைவான வீரர்கள் பத்து நாட்கள்கூடச் சமாளிக்க முடியாது. அந்தப் பத்து நாட்களில் உங்கள் அண்ணன் சேரநாட்டு எல்லைப் புறத்திலும், நீங்கள் இந்தக் கோட்டையிலும் அழிக்கப்படுவீர்கள். அப்புறம் பாண்டிய நாட்டுக்கு அடுத்த பட்டத்தரசனைத் தேட வேண்டியதுதான்."

வீரபாண்டியன் சிறிது சிந்தித்தான். "நீங்கள் சொல்வது எனக்குப் புரிகிறது. இருப்பினும், நீங்கள் நினைக்கும் அளவுக்குப் பலவீனமிருப்பதாக நான் எண்ண வில்லை. நீங்கள் எதிர்பார்க்கிறபடி பாண்டிய மன்னர்

உமது படையை சமநிலத்தில் சந்திக்க மறுத்தால் நிலைமை மாறிவிடுமல்லவா?" என்று வினவினான் இறுதியில்.

சிங்கணன் முகத்தில் சிந்தனை படர்ந்தது. "ஆம், அதில் சிறிது மாறுதலேற்படும்" என்றான் சிந்தனை ஊடுருவிய குரலில்.

"பாண்டிய மன்னர் உமது படைகளைச் சந்திக்க மறுத்தால் இப்பொழுது பத்தாயிரம் படைகள் மலைச் சரிவிலும் கடல்வழி மூலம் வரும் ஐயாயிரம் படைகளும் பதினையாயிரம் வீரர்கள் இருப்பதுபோக, இரண்டும் சேர்ந்து பத்தாயிரம் வீரர் கொண்ட படையே இருக்கும். மூன்று வாயில்களில் மட்டுமே நான் அமைத்திருக்கும் பாது காப்பு இயந்திரங்களில் சிலவற்றைக் கடல்புறமும் திருப்பினால், கோட்டையை அதிக நாசமின்றிப் பிடிக்க முடியுமா சிங்கணரே?" என்று வினவினான் வீரபாண்டியன்.

சிங்கணன் முகத்தில் சிந்தனை தீவிரமாகப் படர்ந்தது. இளநங்கை இதயத்தில் சிறிது நம்பிக்கை உதயமாகத் தொடங்கியது. "சிறிது நாசம் ஏற்படத்தான் செய்யும்" என்று சிங்கணன் ஒப்புக்கொண்டது இளநங்கைக்கு அமுத தாரையென காதில் விழுந்தது. ஆனால் அந்த அமுத தாரையை அடுத்த விநாடி அழித்தான் வீரபாண்டியன். "சிங்கணரே! ஒன்று எனக்குப் புரிகிறது. அப்படி நான் கோட்டையைப் பாதுகாத்தாலும் இறுதியில் உமது பெரும் பலம் சேதம் விளைவிக்க முடியும். இப்படி இருபுறத்திலும் ஏற்படக்கூடிய நாசத்தைத் தவிர்க்க ஒரு வழி இருக்கிறது" என்றான் வீரபாண்டியன்.

சிங்கணன் சிந்தனை படர்ந்த விழிகளை இளவரசன் மீது நாட்டி, "என்ன வழி வீரபாண்டியரே?" என்று வினவினான்.

"உமக்குப் பெருமை, இருதரப்பும் நாசம் ஏற்படாமை, என் வீரத்துக்கும் இழுக்கு ஏற்படாமை, இம் மூன்றையும் சாதிக்கவல்ல வழி," என்றான் வீரபாண்டியன்.

ஒருமுறை தனது பலவீனத்தையும், மறுமுறை தனது பலத்தையும் மாற்றி வீரபாண்டியன் சொன்னதும் மண்டை





குழம்பிக் கிடந்த தண்டநாயகன், "என்ன வழி வீர பாண்டியரே?" என்று உணர்ச்சி வறண்டுபோன குரலில் கேட்டான்.

தண்டநாயகன் குழம்பிக் கிடந்ததை ஊகித்துக் கொண்ட வீரபாண்டியன் உள்ளூர நகைத்துக்கொண் டாலும் வெளிக்குச் சர்வசாதரணமாகவே பேசத் தொடங்கி, "தண்டநாயகரே!" என்று மதிப்பும் அன்பும் கலந்த குரலில் அழைத்தான்.

"என்ன வீரபாண்டியரே!" சிங்கணன் கேள்வியில் சந்தேகம் புதைந்து கிடந்தது.

"நீங்கள் யுத்த தர்மங்களை அறிந்தவர்கள்..." என்று துவங்கினான் வீரபாண்டியன்.

"ஓரளவு தெரியும்." சிங்கணன் பதில் சொல்ல வேண்டுமென்பதற்காகச் சொன்னான், வீரபாண்டியன் பூர்வ பீடிகை எதற்கென்பதை உணர முடியாததால்.

"அத்தகைய ஒரு தர்மத்தைப்பற்றிச் சற்று முன்று குறிப்பிட்டீர்கள்." என்று சுட்டிக் காட்டினான் வீரபாண்டியன்.

"ஆம்."

"காட்டுக் கோட்டையில் உமது உயிர் அபாயத்திலிருந்த காலத்தில் கொடுத்த வாக்குறுதி உம்மைக் கட்டுப் படுத்தாது என்று கூறினீர்கள்."

"ஆம். கூறினேன்?"

"ஆபத் தர்மம் தனியல்லவா?"

"ஆம்."

"அந்தத் தர்மம் தனி மனிதனுக்குத்தானா, படைகளுக்கும் உண்டா?"

"படைகளுக்கும் உண்டு."

"இப்பொழுது எனது படை ஆபத்திலிருக்கிறது. அதைக் காப்பாற்ற வழிவகுப்பது அதர்மமா?"

"இல்லை."

"போரில் வெற்றி தோல்வி..."

"சகஜம்."

"தோல்வியடைவது?"

"தர்ம விரோதமல்ல, சாஸ்திர விரோதமுமில்லை."

வீரபாண்டியன் மிகுந்த திருப்தியை முகத்தில் சுட்டிக் காட்டினான். "நாம் பேசிய அனைத்தையும் தொகுத்துப் பாருங்கள் சிங்கணரே."

சிங்கணன் தொகுத்தும் பார்த்தான். அவனுக்கு ஏதும் விளங்காததால் விழித்தான். இளநங்கைக்கும் ஏதும் விளங்க வில்லையாதலாலும் கால் சோர்வு தட்டியதாலும் சற்று எட்ட இருந்த ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டாள். சிங்கணன் விழித்ததையும் இளநங்கையின் சோர்வையும் கவனித்தும் கவனிக்காதவன் போல வீரபாண்டியன்தன் கருத்தை விளக்கினான். "பெரும் படைக்கு முன்பு நான் சரணடைவது எனக்கு அபக்கியாதியைத் தரும். போரிட்டுத் தோல்வியடைந்து தோல்வியின் நிபந்தனை களால் விடுதலையடைவது வீரத்துக்கோ தர்மத்துக்கோ சாஸ்திரத்துக்கோ புறம்பானதல்ல. அப்படிச் சர்வசம்மத மான வழியொன்றிருக்கிறது. அந்த வழியால் இருவருக்கும் பெரும் பயன் ஏற்படும். நீங்கள் என்னைத் தாக்கப் போகிறீர்கள். நான் தோல்வியடையப் போகிறேன். தோல்வியின் விளைவாக நான் கடைசியில் உங்கள் நிபந்தனைகளுக்கு உட்படுகிறேன். புரிகிறதா?" என்றான் வீரபாண்டியன்.



"நன்றாகப் புரிந்தது போசளத் தண்டநாயகனுக்கு. போர் வெறும் போலிப் போராயிருக்குமென்பதைச் சந்தேகமற அறிந்துகொண்ட தண்டநாயகன், "வழியைச் சொல்லுங்கள் வீரபாண்டியரே'' என்று கேட்டான் கம்பீரத்துடன்.

உடனடியாக வழியைச் சொல்லவில்லை வீரபாண்டி யன். இளநங்கையை நோக்கி, "இளநங்கை! இப்படி வா, என் தலையணைக்கு அடியில் ஓலைத்துண்டுகளும் எழுத்தாணியும் இருக்கின்றன, எடு" என்றான். ஆசனத்தை விட்டு எழுந்த இளநங்கை கனவில் நடப்பதுபோல் நடந்து வீரபாண்டியன் பஞ்சணையருகில் வந்து தலையணை



அடியிலிருந்து ஓலைத் துண்டுகளையும் எழுத்தாணி களையும் எடுத்துக் கொடுத்தாள்.

மெல்லத் தலையணையில் அசைந்து உட்கார்ந்து கொண்ட வீரபாண்டியன் எழுத்தாணி கொண்டு அந் ஓலைகளில் கோடுகள் பலவற்றை வரைந்தான். மலைகளை யும், நதியொன்றையுங்கூட வரைந்தான். கடைசியில் சில குறிகளையும் போட்டான். அப்படி வரைந்த ஓலைகளைக் கடைசியில் சிங்கணனிடம் கொடுத்து. "இவற்றில் வழி தெளிவாயிருக்கிறது சிங்கணரே," என்றும் கூறினான்.

ஓலைகளை வாங்கி ஆராய்ந்த சிங்கணன் முகத்தில் பிரமிப்பு மலர்ந்தது. "வீரபாண்டியரே! விசித்திரமான திட்டம் இது," என்றான் சிங்கணன்.

"ஆம் சிங்கணரே! மனித வாழ்வே விசித்திரம்தானே அதிலொரு விசித்திரம் இது. வாரும், திட்டத்தை விளக்கு கிறேன்," என்ற வீரபாண்டியன் ஓலைகளைக் கையில் கொண்டு, கோடுகளையும் குறிகளையும் குறிப்பிட்டு விளக்கலானான். "சிங்கணரே! இந்தச் சதுக்கந்தான் கோட்டை. இதன் பக்கத்தில் ஓடுகிறது கோட்டாறு. எதிரே யிருக்கிறது மலைச்சரிவு. பக்கங்களிலும் சிறிது சரிவுகள் இருக்கின்றன. இதோ இந்த மூன்று வாயில்களின் பிரதான வாயிலானதும் மலையின் பெரும் சரிவுக்கு எதிரேயுள்ளது மான கிழக்கு வாயிலில்தான் அறிவுள்ள எந்தப் படை தலைவனும் தாக்குவான்..." என்று சுட்டிக் காட்டினான் இளவரசன்.

"ஆம்," என்று ஆமோதித்தான் சிங்கணன்.

"ஆனால் நீர் அறிவைச் சிறிது கைவிட வேண்டும்..."

"என்ன?"

"அறிவுள்ள படைத்தலைவன் செய்வதை நீங்கள் செய்ய வேண்டாம். யாரும் நினைக்கவும் முடியாத வடப்புற வாயிலைத் தாக்குங்கள். கோட்டைப் பாது காப்புப் படைகள் பிரதான வாயிலில்தான் பலமாயிருக்கும். ஆதலால் அதை விட்டு வடக்கு வாயிலை நீங்கள் எதி

பாராதவிதமாகத் தாக்கினால் வாயிலை உடைத்து விடலாம்... வாயிலில் அதிகப் பாதுகாப்பு இருக்காது...."

"உங்கள் விற்கூடங்கள், வேலெறியும் இயந்திரங்கள்.."

"செயலற்றிருக்கும். கிழக்கு வாயிலில்தான் தாக்குதலை எதிர்பார்ப்பதாகப் படைகளுக்கு அறிவித்துவிட்டால் வடக்கு வாயிலில் என்ன இருக்கும்?"

"சரி. அப்படி நான் வடக்கு வாயிலில் நுழைந்தவுடன்...?"

"பிரதான வாயிலில் படைகள் குழப்பமடைந்து வடக்கு வாயிலை நோக்கி வரும். அப்பொழுது உமது படையின் இன்னொரு பிரிவு பிரதான வாயிலைத் தாக்கி நுழையலாம். பிறகு தெற்கு வாயிலைப்பற்றிக் கேள்வி கிடையாது. உள்ளே ஏற்படும் குழப்பத்தில் என் படைகள் சிதறியோடும் சமயத்தில், நீங்கள் இந்த மாளிகையைச் சூழ்ந்து கொண்டால், படுத்த படுக்கையாயிருக்கும் நான் என்ன செய்ய முடியும்?" என்று வினவிய வீரபாண்டியன் விழிகளில் துயரம் நிரம்பி நின்றது.

அந்தப் பெரும் போர் நாடகத்தைக் கேட்ட சிங்கணன் இலேசாக இகழ்ச்சி நகை நகைத்தான். எதிரியிடம் கோட்டையை ஒப்படைத்துத் தான் பிழைக்க எந்தப் படைத் தலைவனும் செய்ய இஷ்டப்படாத ஈனமான வழி அது என்று தீர்மானித்த சிங்கணன், தனது வெற்றி நிச்சயமென்ற பெருமிதத்தில், ஆசனத்தைவிட்டு எழுந்தான். "இதற்குப் பதில் என்னிமிருந்து என்ன எதிர் பார்க்கிறீர்கள்?" வினவினான் கம்பீரத்துடன்.

"என் படைகளை நாசம் செய்யக்கூடாது. உயிருடன் நாங்களும் படைகளும் செல்ல அனுமதி தரவேண்டும்; என்னிடம் சேர்ந்துள்ள விஜயவர்மன் படைகள் மீது நடவடிக்கை எதுவும் எடுக்கக்கூடாது," என்றான் வீர பாண்டியன்.

"சரி வீரபாண்டியரே! ஒப்புக்கொண்டேன்," என்றான் சிங்கணன். செல்லவும் கிளம்பினான்.



"சற்றுப் பொறுங்கள்," என்ற வீரபாண்டியன் குர அவனைத் தடுத்தது.

"என்ன வீரபாண்டியரே?" என்று வினவினா சிங்கணன்.

'நீங்கள் தாக்க வேண்டிய சமயத்தைக் கேட் வில்லையே?" என்றான் வீரபாண்டியன்.

"எப்பொழுது தாக்கவேண்டும்?" என்று கேட்டா சிங்கணன்.

"நாளைக் கழித்து மறுநாள் இரவு இரண்டாம் ஜா ஆரம்பத்தில்."

"இரவிலா?"

"ஆம். அப்பொழுதுதான் நானறியாமல் நீங்கள் தாக் விட்டதை மக்கள் ஒப்புக்கொள்வார்கள்."

"சரி வீரபாண்டியரே! அனைத்தையும் யோசித் வைத்திருக்கிறீர். பிழைக்கும் வழியென்றால் இதற்குத் தா பெயர். இந்தப் போர் நாடகத்தை, உமது யுக்தி திட்டத் வரலாற்றில் எழுதி வைத்தால்கூட நல்லது" என் குத்தலாகக் கூறிவிட்டு, அறையைவிட்டு வெளியேறி சிங்கணன் மிகுந்த மகிழ்ச்சியுடன் தனது பாசறைக்கு திரும்பினான். பாண்டிய இளவரசன் கொடுத்த ஓலைக அவனிடமிருந்தால், பாசறையிலும் அவன் அவற்ற நன்றாகப் பார்த்தான். வெற்றி லக்ஷ்மி அவன் முகத்தி விளையாடினாள். "நன்று நன்று! வீரபாண்டியரே! நன் நல்ல நாடகம் இது! உன்னைவிட அயோக்கியனை நா இதுவரை ஆயுளில் கண்டதில்லை!" என்று, சற்று இரைந் சொல்லியும் கொண்டான் ஒரு முறைக்கு இரு முறையா

## அத்தியாயம் 60

# 'கதையொன்று சொல்வேன்'

பாண்டிய இளவரசன் துண்டு ஓலைகளில் வரைந்து கொடுத்த போர் நாடகத் திட்டத்தைத் தனது பாசறையை அடைந்த பிறகும் பல முறை துருவிப் பார்த்த போசளத் தண்டநாயகன் மனம் பெரும் பிரமையிலும் அவநம்பிக்கையிலும் ஆழ்ந்து கிடந்தது. அரபு நாட்டுத் தடித்த சீலைகளால் அமைக்கப்பட்டு உட்புறத்தில் பாண்டி நாட்டுப் பட்டு வேலைகளால் அழகு செய்யப்பட்டிருந்த கூடாரப் பாசறையின் உட்புறத் தூணொன்றில் நீட்டிப் பிணைக்கப்பட்டிருந்த பந்தமொன்றின் வெளிச்சத்தில் நின்ற வண்ணமே ஓலைகளைத் திரும்பிப் பார்த்தான் சிங்கணன். பிறகு வெளியில் நடந்து சென்று வீரனொருவனை விளித்துத் தனது உபதளபதிகள் இருவரையும் அழைத்து வருமாறு உத்தரவிட்டான். அவர்கள் வந்ததும் அவர்களிடம் ஓலைத் துண்டுகளைக் காட்டிக் கோட்டையில் நடந்த அனைத்தையும் விவரித்து, "இந்த ஏற்பாட்டைப் பற்றி என்ன நினைக்கிறீர்களா?" என்று வினவினான்.

உபதளபதிகள் இருவருமே நன்றாக ஓலைக் குறிப்புக்களை ஆராய்ந்தார்கள். அவர்கள் இருவர் முகத்திலும் மகிழ்ச்சிக் குறிகள் நன்றாகப் படர்ந்தன. இருவரில் ஒருவன் சொன்னான், "வீரபாண்டியன் கோட்டையைத் தானாகவே உங்களிடம் சமர்ப்பிக்கிறான்," என்று.

"நமது பெரும்படை பலத்தைக் கண்டு அவன் நடுங்கியிருக்கவேண்டும்," என்றான் இன்னோர் உபதளபதி.



"அது மட்டுமல்ல. போசளத் தண்டநாயகரின் பை
நடத்தும் திறமையும் அவனுக்குத் தெரிந்திருக்கவேண்டும்
என்றான் முதல் உபதளபதி.

"கடல் வழியாகவும் இன்னொரு படை வருவ
அவனுக்குத் தெரிந்திருக்காது. நீங்கள் விளக்கியவுட
தோல்வி அவன் கண் முன்னால் காட்சி அளித்திருக்கும்
என்றான் இரண்டாவது உபதளபதி.

சிங்கணன் அவர்களிருவரையும் இகழ்ச்சியுடன் மா
மாறிப் பார்த்தான். "ஒரு முக்கிய விஷயம் வீரபாண்டி
னுக்குத் தெரியாது. தெரிந்திருந்தால் இந்தப் போ
நாடகத்தை வெளியிட்டிருக்கமாட்டான்," என்று இகழ்ச்
குரலிலும் ஒலிக்கச் சொன்னான்.

"என்ன தண்டநாயகரே, அந்த முக்கிய விஷயம்.
என்று இரு உபதளபதிகளும் ஏககாலத்தில் கேட்டார்கள்.

"நீங்களிருவரும் எனக்கு உபதளபதிகள் என்பது
என்று சிங்கணனின் பதிலில் இகழ்ச்சி பெரிதாக ஒலித்து
மிகுந்த வெறுப்புடன் இருந்த சிங்கணன் மேலு
சொன்னான். "சண்டை செய்யாமல் பெரும் கோட்
தங்கள் கைகளில் பழம்போல் நழுவி விழும் என்பதை
கண்டவுடன் குதூகலிக்கும் இரண்டு களிமண் மண்டைக
எனக்கு உபதளபதிகளாக வந்திருக்கிறார்களென்ப
மட்டும் வீரபாண்டியன் அறிந்திருந்தால் அவன் திட்ட
இதுவாயிருக்காது," என்று.

"தண்டநாயகரே..." என்று துவங்கினான் முதல் உ
தளபதி. இன்னொருவனும் ஏதோ சொல்ல உதடுகளை
திறந்தான். அவர்களிருவரையும் கம்பீரமான தன்
அசைவினாலேயே நிறுத்திய சிங்கணன், "இந்த ஓலைகளை
உங்களுக்கு நான் காட்ட விரும்பியது எதனால் தெரியுமா
என்று வினவினான்.

"திட்டத்தை விளக்க," என்றான் முதல் உபதளபதி.

"அல்ல. இந்த திட்டத்தின் உண்மையைச் சோதிக்க
என்றான் சிங்கணன்.

"உண்மையைச் சோதிக்கவா!" இரண்டாம் உபதளபதி இக்கேள்வியை வியப்புடன் கேட்டான்.

"ஆம்," அப்படியானால்...? முதல் உபதளபதி வினவினான்.

"இந்த ஓலைக் குறிப்புகள் எனக்கு நம்பிக்கை அளிக்க வில்லை," என்றான் சிங்கணன் தீவிர சிந்தனையுடன்.

"குறிப்புக்கள்தான் தெளிவாயிருக்கின்றனவே?" என்றான் முதல் உபதளபதி.

இரண்டாமவன் ஏதோ சொல்ல வாயைத் திறந்தானானாலும் சிங்கணனின் ஒரு பார்வை அவன் வாயை அடியோடு அடைத்துவிடவே, முதல் உபதளபதி மட்டுமே சம்பாஷணையில் கலந்து கொண்டான். முதல் உபதளபதியான ராமவர்மன் சொற்களுக்குச் சிங்கணன் பதில் சொன்னான், "ஆம் ராமவர்மரே! குறிப்புகள் மிகத் தெளிவாயிருக்கின்றன," என்று.

"பின் ஏன் சந்தேகம்?" என்று வினவினான் அவன்.

"மிகவும் தெளிவாயிருப்பதால்தான் சந்தேகப் படுகிறேன். எப்படியாவது கோட்டையை என்னிடம் ஒப்படைக்க வீரபாண்டியன் துடிப்பதை ஓலைக் குறிப்புகள் சுட்டிக் காட்டுகின்றன," என்றான் சிங்கணன்.

"ஆம்."

"கோட்டையிலிருந்து தப்பினால் போதுமென்பவன் தான் இத்தகைய ஒரு முறையை வகுக்கமுடியும்..."

"ஆம்."

"அபாயத்துக்கோ, மரணத்துக்கோ அஞ்சுபவன்தான் இத்தகைய திட்டத்தைத் தயாரிக்க முடியும்."

"ஆம்."

சிங்கணன் மெல்லப் புன்முறுவல் செய்தான். "இப்பொழுது தெரிகிறதா நான் இந்த ஓலைக் குறிப்புகளைப் பற்றிச் சந்தேகிக்கும் காரணம்?" என்று வினவவும் செய்தான்.





"தெரியவில்லை தண்டநாயகரே," என்றான் ராம வர்மன்.

"வீரபாண்டியன் இரண்டுக்கும் அஞ்சாதவன்..." என்று சுட்டிக்காட்டினான் சிங்கணன்.

"என்ன!"

"அபாயம், மரணம், இரண்டும் அவன் நெஞ்சு அறியாத சொற்கள்."

"இருப்பினும்..." என்று கேட்க முயன்ற உப தளபதியைக் கை அசைவினால் தடை செய்த சிங்கணன், "ராமவர்மரே, நாம் இந்தக் கோட்டையை அணுகுமுன்பு எங்கு தங்கியிருந்தோம்?" என்று வினவினான்.

"இரண்டு காதத்துக்கு அப்பாலுள்ள மலைக் காட்டில்..." என்று விடையிறுத்தான் ராமவர்மன்.

"அங்கு ஒருவன் நம்மை வேவு பார்க்க வந்ததாக வீரர்கள் சொல்லவில்லையா?" என்று கேட்டான் சிங்கணன்.

"ஆம்."

"அவன்மீது வீரர்கள் கோடரி எறிந்ததாகவும் சொன்னார்கள்...."

"ஆம்."

"வேவுகாரன் படுகாயப்பட்டதாகவும் கூறினார்கள்."

"சொன்னார்கள்."

"இருப்பினும், புரவியில் கனவேகமாகச் சென்று மறைந்து விட்டதாக அறிவித்தார்கள்."

"உண்மை."

"சிங்கணன் உபதளபதியைக் கூர்ந்து நோக்கிவிட்டுச் சொன்னான், "அந்த வேவுகாரன் வேறு யாருமல்ல, வீர பாண்டியன்!"

முதல் உபதளபதி மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டான். அதுவரை பேசாமடந்தையாயிருந்த இரண்டாவது உபதளபதி, "உம்..." என்ற முனகலொன்றை வெளியிட்டான்.

“உண்மையாகவா? உங்களுக்குத் திட்டமாகத் தெரியுமா?” என்று கேட்டான் ராமவர்மன்.

“தெரியாது ஊகம்தான். இருப்பினும் என் ஊகங்கள் தவறுவதில்லை ராமவர்மரே. சாதாரண ஒற்றர்கள், எல்லையில் நின்றுதான் கண்காணிப்பார்கள். எதிரிப் படைகளுக்குள் ஊடுருவியோ, உடன் தங்கியோ கண்காணிப்பதானால் ஆபத்தையோ உயிரையோ லவலேசமும் லட்சியம் செய்யாதவனாய் இருக்கவேண்டும். எனக்குத் தெரிந்தவரையில் தமிழகத்தில் அப்படி இருவர் உண்டு! அவர்களில் ஒருவன் வீரபாண்டியன்” என்று திட்டமாக அறிவித்தான் சிங்கணன்.

“இன்னொருவன்?”

“சிங்கணன்,” என்று சர்வ சகஜமாகச் சொல்லிப் புன்முறுவலும் கோட்டினான் போசளத் தண்டநாயகன்.

சிங்கணனின் சுய பாராட்டுதலை ராமவர்மனால் ரசிக்க முடியாததால், “அப்படியா?” என்று வறண்ட குரலில் கேட்டான்.

“ஆம் ராமவர்மரே! இது ஏதோ சுயப்பிரதாபமென்று நினைக்கவேண்டாம். சிங்கத்தின் குகைக்குள்ளேயே, அதாவது காட்டுக் கோட்டைக்குள்ளேயே நான் இருந்தேன். யாரும் கண்டுபிடிக்க முடியாத மாறுவேடத்திலிருந்தாலும், வீரபாண்டியனின் கூர்விழிகளிலிருந்து நான் தப்ப முடியவில்லை. அவன் புத்திக் கூர்மையும், வீரமும், நெஞ்சுறுதியும் அளவிட முடியாதவை. ஆகவே, இப்பொழுது அவன் தலையிலிருக்கும் காயம் நாம் தங்கியிருந்த மலைக்காட்டில் ஏற்பட்டதுதான். காயம் பலமென்பதிலும் சந்தேகமில்லை. வீரபாண்டியன் உண்மையில் ரத்தம் சேதப்பட்டு தேகபலமிழந்து படுத்திருக்கிறான். ஆனால்...” என்று சொல்லிக்கொண்டே போன சிங்கணன் சற்று நிதானித்தான்.

“ஆனால்?” என்று வினவினான் ராமவர்மன்.

“அவன் ரத்தம் சேதப்பட்டிருக்கிறது; சித்தம் சேதப் படவில்லை. அதற்கு இந்த ஓலைகள் சான்று.”





“ஓலைகள் சான்றா!”

“ஆம். இத்தனை விவரமாக, விளக்கமாக திட்டத்தைத் தயாரிப்பதானால் புத்தி நன்றாக இயங்கவேண்டும்.”

“ஆம்.”

“அதுமட்டுமல்ல ராமவர்மரே! வீரபாண்டியன் தனது நிலையை விவரித்தபோதும், திட்டத்தை விளக்கிய போதும் நானே சற்று ஏமாந்து போனேன். இங்கு வந்த பிறகும், இந்த ஓலைகளை முதலில் பார்த்தபோதும் கூட அவனை அயோக்கியனென்றும், பிழைக்க வழி செய்கிறானென்றும் நினைத்தேன்...”

“வேறு எதற்கு இத்திட்டம்?”

“அதுதான் எனக்கும் புரியவில்லை. இதில் ஏதோ பெரும் சூது இருக்கிறது. பெரும் போர்கள் இத்தனை சுலபமாக முடிந்ததை நான் வரலாற்றில் கேள்விப்பட்ட தில்லை. ஒரு விஷயம் ரொம்பச் சுலபமாயிருந்ததால் நமபுவதிலும் அர்த்தமில்லை. இந்த ஓலைத்திட்டம் வெகு சுளுவாயிருக்கிறது.”

ராமவர்மனும் யோசனையில் இறங்கினான். அதைக் கண்ட சிங்கணன் புன்முறுவல் செய்துவிட்டுச் சொன்னான், “இப்பொழுது ஓலைகளைப் பாருங்கள்,” என்று. அத்துடன் ஓலையில் சில இடங்களையும் சுட்டிக் காட்டினான். “வடக்கு வாயிலில் காவலிருக்காது என்று கூறுகிறான் வீரபாண்டியன். உண்மையில் இப்பொழுது அதிகக் காவலில்லை. ஆனால் படைகளை நாமறியாமல் உள்ளே நகர்த்த மாட்டானென்பது என்ன நிச்சயம்? அப்படியே நகர்த்தவில்லை யென்றாலும் அந்தப் பகுதியில் நாம் உட்புகும்போது கிழக்கு வாயிலைவிட்டுத் திடீரென எதிரி நம்மீது விழுந்தால்?” என்று வினவவும் செய்தான் சிங்கணன்.

ராமவர்மனின் விழிகள் வியப்பால் மலர்ந்தன. “சிறிது கஷ்டம்தான்,” என்று ஒப்புக்கொள்ளவும் செய்தான்.

“இப்பொழுது தெரிகிறதா ராமவர்மரே, கோட்டைக் குள்ளிருக்கும் தலைவன் யாரென்பது? மிகச் சிறந்த

அறிவாளியுடன் நாம் போராடுகிறோம். இந்தப் போரைப் படைபலம் நிர்ணயிக்காது. அறிவின் பலம்தான் நிர்ணயிக்கும். ஆகவே..."

"என்ன செய்ய வேண்டும்?"

"அறிவிருந்தால் பயன்படுத்த வேண்டும்," என்ற சிங்கணன், "அதைப்பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். நான் சிந்திக்கிறேன். ஒன்று மட்டும் செய்யுங்கள்.." என்றும் கூறினான்.

"என்ன செய்யவேண்டும்?" என்று வினவினான் ராம வர்மன்.

"நீரும் இரண்டாவது உபதளபதியும் படைகளை நாளை முழுதும் அணிவகுக்கவோ நடத்தவோ வேண்டாம். படைகள் அசிரத்தையுடனிருக்கட்டும். நமக்கெதிரே கோட்டைச் சுவர்களிலுள்ள விற்கூடங்கள் நகர்த்தப் படுகின்றனவா என்பதை மட்டும் கவனியுங்கள். அப்படி ஏதாவதிருந்தால் எனக்கு அறிவியுங்கள்," என்ற சிங்கணன், அவர்கள் போகாலாமென்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான்.

உபதளபதிகள் இருவரும் சிந்தனை மிகுந்தவர், களாய்த் தண்டநாயகன் கூடாரத்தை விட்டு வெளியே வந்தனர். அவன் உத்தரவை இம்மியளவும் தவறாமல் நிறைவேற்றினர். அணிவகுப்புகளைச் சிறிதளவும் செய்யாமலும், படைகளை நகர்த்தாமலும் அசிரத்தை காட்டினர் இரு படைத் தலைவரும்; அந்த அசிரத்தையைப் படை வீரர்களும் கவனித்ததால், முற்றுகையின் மும்முரம் பெரிதும் தணிந்து கிடந்தது, மறுநாள், தண்டநாயகன் படை வட்டாரத்தில்.

கோட்டைக்கு வெளியில் மட்டுமல்ல இந்த நிலவரம். கோட்டைக்குள்ளும் அதிகப் போர் சிரத்தையில்லை. வீர பாண்டியன் கோட்டைப் பாதுக்காப்பைப் பற்றி எந்தவித உத்தரவையும் பிறப்பிக்கவில்லை. பிறப்பிக்க முயன்ற இள நங்கையையும் தடுத்தான்.





மறுநாள் காலை இளநங்கை பூர்ண கவசமணிந்து புறப்பட்டபோது அவனிடம் வந்து, "என்ன உத்தரவு?" என்று கேட்டாள்.

"எதற்கு உத்தரவு?" அசிரத்தையுடன் வந்தது வீர பாண்டியனிடமிருந்து கேள்வி.

"படைகளை நடத்த," என்றாள் இளநங்கை வெறுப்புடன்.

"படைகளை எதற்கு நடத்த வேண்டும்?"

"சிங்கணனிடம் கோட்டையை ஒப்படைக்க."

"அதற்கு அவனல்லவா படைகளை நடத்த வேண்டும்?"

"வெளியே அவன் படைகளை நடத்தினால் உள்ளே நாம் அவன் வெற்றிக்குச் சௌகரியம் செய்து கொடுக்க வேண்டாமா?"

"ஆம். அவன் முதலில் படைகளை நடத்தட்டும். அதற்கேற்றபடி நாம் சௌகரியம் செய்து கொடுப்போம்."

இதைக் கேட்ட இளநங்கை, "நல்லது, மிகமிக நல்லது" என்று சீறிவிட்டுச் சென்றாள்.

அப்படிச் சென்றவள் நடுப்பகலில் திரும்பி வந்தாள். அவள் முகத்தில் குழப்பம் பெரிதுமிருந்தது. "எல்லாம் விசித்திரமாயிருக்கிறது," என்றாள்.

"என்ன விசித்திரம்?" என்று கேட்டான் வீரபாண்டியன்.

"சிங்கணன் படைகளைப் பிரிக்கவில்லை, நடத்தவு மில்லை."

"அது அவனிஷ்டம்."

"அப்படியானால் நாம்?"

"அவனைப் பார்த்து எதுவும் செய்வோம்."

"அவன் அசிரத்தை காட்டுகிறான்."

"நீயும் காட்டு. எந்தப் படையையும் உள்ளே நகர்த்தாதே. விற்கூடங்களிலுள்ள இயந்திரங்களும் அப்படியே இருக்கட்டும்."

இளநங்கையின் முகத்தில் குழப்பத்துடன் கோபமும் விரிந்தது. "உங்களுக்குப் பைத்தியமா, சிங்கணனுக்குப் பைத்தியமா?" என்று வினவினாள்.

"இருவருக்கும்தான்," என்ற வீரபாண்டியன் பெரிதாக நகைத்தான்.

"எதற்குச் சிரிக்கிறீர்கள்."

"பைத்தியம் சிரிக்காமலென்ன செய்யும்?" என்றான் வீரபாண்டியன். "இளநங்கை! உன் போர்க்கோலம் எனக்குப் பிடிக்கவில்லை. போய் நீராடி உன் இயற்கையான ஆடைகளை அணிந்து வா."

"எதற்கு?"

"விசித்திரக் கதையொன்று சொல்வேன்!" என்றான் வீரபாண்டியன்.

## அத்தியாயம் 61

# குயவன் பிடித்த குடம்

போர்க் கோலத்தை அழித்துவிட்டுப் புனலாடிப் புதுக்கோலம் பூண்டு வரும்படி பாண்டியர் படைத்தலைவர் பணித்ததைக் கேட்ட பைங்கொடி இளநங்கையின் சித்தம் சினத்தால் படபடத்ததென்றால், அவன் கதையொன்று சொல்லப் போவதாகக் கூறியதைக் காதில் வாங்கியதும் அவள் தனது கருவிழிகளில் கனல் அபரிமிதமாக அள்ளித் தெளிக்க அவனைச் சுட்டுவிடுவது போல் பார்த்துக்கொண்டு நின்றாள். சொந்தமுடன் தீண்டிக் கன்னியழித்துக் காந்தருவ முறைப்படி தன்னை மனையாளாகச் செய்துகொண்ட மணவாளன், மகா கோழையும் பெறுதற்கரிய செயலைச் செய்ய முயன்ற விநாடி முதலே உள்ளம் கொதிப்புண்ட கொற்கைக் கோட்டைக் காவலன் மகள், தனது செயல் பற்றி இளவரசன் சிறிதளவும் வெட்கமோ வருத்தமோ கூடக் கொள்ளாமல் சர்வ சகஜமாயிருப்பதைப் பார்க்கப் பார்க்க எரிச்சல் ஆயிரம் மடங்கு அதிகமாகவே, பேசும் சக்தியைக் கூட அந்தச் சில விநாடிகளில் இழந்து நின்றாள், அவள். ஏற்கெனவே சிவந்த அவள் சிங்காரவதனம் சினத்தால் அதிகமாகச் சிவந்து விட்டதைக் கண்ட இளவல், கோபமும் அவளுக்கு எத்தனை அழகைத் தருகிறதென்பதை பார்த்துப் பார்த்துப் பரவசப்பட்டான். அந்தப் பரவசத்தோடு பரவசமாக, "இளநங்கை உன் புதுப் போர்க்கோலத்துக்குத் தகுந்த உடை இதல்ல. இந்தக் கவசம், வாள், எதுவுமே தேவையில்லை. போய் நீராடிப் புத்தாடை அணிந்துவா," என்று மீண்டும் கூறினான்.

அதைச் சொன்னபோது அவன் குரலிலிருந்த பேரானந்தத்தை அவள் கவனித்தாள். அந்த ஆனந்தம் அவள் எரிந்த உள்ளத்துக்கு எண்ணெயாகவே, உஷ்ணம் மிதம் மீறிய குரலில் வினவினாள் அவள். "புதுப் போர்க் கோலமா?" என்று.

இளவரசன் சீறிய குரலில் பதிலிறுத்தான். "ஆம், இள நங்கை! புதுப் போர்க்கோலம்தான்," என்று உறுதியுடன் சொன்னான்.

இளநங்கைக்கு அவன் பேச்சும் போக்கும் அடியோடு புரியவில்லை. சற்று முன்பு இளநகை கூட்டி ஆனந்தம் துள்ளிய குரலிலும் பேசிய இளவரசன் திடீரென சீறிய குரலில் பேசியதன் காரணம் அவளுக்கு விளங்கவில்லை. எந்தப் புதுப் போர்க் கோலத்தை அவன் சுட்டிக் காட்டு கிறான் என்பதும் புரியவில்லை அவளுக்கு. ஆகவே குழப்பம் நிரம்பிய கண்களை அவன் மீது சில விநாடிகள் நிலைக்கவிட்டுப் பிறகு சரேலெனத் திரும்பி அந்த அறையை விட்டு அகன்று தனது அறைக்குச் சென்றாள். அங்கு அவள் கவசங்களைக் கழற்றத் தயாராகக் காத்திருந்த பணிப்பெண் குறிஞ்சி, "அம்மா! நானே கவசத்தைக் கழற்றி விடுகிறேன்," என்று இளநங்கையை அணுகி வந்தாள்.

இளவரசன் மீதிருந்த கோபத்தைப் பணிப்பெண் மீது காட்ட முற்பட்ட இளநங்கை, "கவசத்தை எதற்காகக் கழற்ற வேண்டும்?" என்று சீறினாள்.

"நீராட," என்று சர்வசகஜமாகச் சொன்னாள் குறிஞ்சி.

"நீராடப்போவதாக யார் சொன்னது?" என்று வின வினாள் இளநங்கை முன்னைவிட அதிக உஷ்ணத்துடன்.

"இளவரசர்."

"நான் நீராடப்போவது அவருக்கெப்படித் தெரியும்?"

"சாதாரணமாக நீங்கள் களைத்து வரும்போது நீராடு வது சகஜம்தானே?"

"சகஜமென்று யார் சொன்னது?"



"அது எனக்கே தெரியுமே."

"உனக்குத் தெரியுமென்றால் இளவரசர் உத்தரவைக் கேட்பானேன்?"

"நான் கேட்கவில்லையம்மா?"

"அவராகச் சொன்னாரா?"

"ஆம். என்னைக் கூப்பிட்டனுப்பினார். 'நடுப்பகலில் உன் தேவி வருவாள், களைப்புடனிருப்பாள், நீராட்டத் துக்கு ஏற்பாடு செய்,' என்று உத்தரவிட்டார்."

இளநங்கையின் மனம் சினத்திலாழ்ந்திருந்ததால் அவள் சிறிது நேரம் பதில் சொல்லவில்லை. "அப்பா! என்ன அக்கறை!" என்று சொன்னபோது சொற்களில் வெறுப்பே இருந்தது.

அந்த வெறுப்பை அதிகமாக்கும் வகையில் அடுத்த சொற்களை உதிர்த்தாள் குறிஞ்சி. "உண்மையில் அக்கறையுடன்தான் சொன்னார் தேவி," என்றாள் பணிப் பெண்.

கவசத்தைக் கழற்ற முயன்ற இளநங்கை மார்புக் கவசத்தைப் பாதி அவிழ்த்த நிலையில், "என்ன! அக்கறை யுடன் சொன்னாரா?"

"ஆம் தேவி," என்றாள் பணிப்பெண்.

"என்ன அக்கறை காட்டினார்?" என்று மீண்டும் கேட்டாள் இளநங்கை.

"உங்களுக்கு நீராட்டப் பொடிகளில் எதெதை எடுத்து வைக்கவேண்டும் என்று கூடச் சொன்னார்?" என்று கூறிய குறிஞ்சியின் குரலில் வெட்கம் தொனித்தது.

"அப்படியா!" இகழ்ச்சி ஒலித்தது இளநங்கையின் குரலில்.

"ஆம் அம்மா! முதலில் சிறிது மஞ்சள் பொடியை எடுத்துக்கொள்ளச் சொன்னார்..."

"பிறகு?"

"அதில் பழையபடி வெட்டிவேரை அதிகமாகச் சேர்க்க வேண்டாமென்று கூறினார்.

"உம்..."

"வெட்டி வேரில் சிறிதும் செண்பகப் பூவின் தூளில் நிரம்பவும் சேர்க்கச் சொன்னார்..."

"ஊஹூம்."

"அடுத்தபடி மகிழம்பூத் தூளைச் சிறிது கலந்து கொள்ளச் சொன்னார்.

"நீராட்டப் பொடித் தயாரிப்பில் வல்லவர் இளவரசர்."

"ஆம் அம்மா! அவருக்குச் சகலமும் தெரிந்திருக் கிறது. அதுமட்டுமல்ல, வெந்நீரில் பன்னீரை லேசாகத் தெளிக்கச் சொன்னார்."

"அதிகமாகத் தெளித்தால் என்னவாம்?"

"வாசனை சுகமாயிருக்காதாம். மிதமான வாசனை தான் அவருக்குப் பிடிக்குமாம்."

அதுவரை பேச்சுக்கொடுத்த இளநங்கை. "உனக்கு வேறு வேலையில்லை? இதையெல்லாம் அவருடன் எதற் காக சர்ச்சை செய்தாய்?" என்று சீறி, மார்புக் கவசத்தைச் சற்று எட்டி இருந்த மஞ்சத்தில் விட்டெறிந்தாள்.

பணிப்பெண் அவள் சினத்தைக் கண்டு சிறிதும் அஞ்சாமலே சொன்னாள்: "அதுமட்டுமல்ல அம்மா! தாங்கள் அணிய வேண்டிய பட்டாடை எது, ஸ்நானத்தின்போது தலையில் தடவவேண்டிய தைலம் எது, பிறகு முடிய வேண்டிய பூ எது என்பதையெல்லாம் விவரமாகச் சொன்னார், படைத்தலைவர்," என்று.

"எல்லாம் திட்டமாகத்தான் சொல்லியிருக்கிறார்!" என்று இகழ்ச்சியுடன் கூறிய இளநங்கை பரபரப்புடன் தனது போராடைகளைக் கழற்றிக் கழற்றி மஞ்சத்திலெறிந் தாள்.

குறிஞ்சி அவளை மேற்கொண்டும் குத்தினாள். "அம்மா இதில் கோபத்திற்கு என்ன இருக்கிறது?" என்று கேட்டாள்.



"இல்லையில்லை, கோபத்திற்கு எதுவுமில்லை. ஆனந்தத்திற்குத் தானிருக்கிறது," என்றாள் இளநங்கை,

"ஆம் அம்மா! இப்படி ஒரு புருஷன் கிடைத்தற்கு நீங்கள் தவம் செய்திருக்க வேண்டும்!"

"பெரும் தவம் செய்திருக்கிறேன்!"

"சந்தேகமில்லையம்மா. தனது காதலிக்கு எது பிடிக்கும் என்பதைச் சதா யோசித்துப் பார்க்கும் புருஷனால் தான் இத்தனையும் சொல்ல முடியும்."

"ஆம், ஆம்" என்று படபடப்புடன் கூறிய இளநங்கை வெகுவேகமாக நீராட்ட அறைக்குச் சென்றாள். அங்கிருந்த தைலத்தையும் நீராட்டப் பொடியையும் பார்த்தபோதே எரிச்சல் வந்தாலும், அவற்றை உபயோகப்படுத்தியே நீராட்டத்தை முடித்த இளநங்கை மீண்டும் அறைக்கு வந்த போது அங்கு தனக்கு லேசான சிவப்பு நிறப் பட்டாடை யொன்றும் செண்பக மலர்கள் ஐந்தாறும் வைக்கப்பட்டிருப் பதைக் கண்டாள். அந்தப் பட்டாடை தனக்கு எத்தனை அழகாயிருக்குமென்று அவளுக்குத் தெரிந்தேயிருந்தாலும், கோபத்தின் காரணத்தால் அதை அவசர அவசரமாக அணிந்துகொண்டாள். தலைக்குழலையும் இருபக்கங்களி லிருந்து எடுத்துப் பின்னிய சிறு பின்னல்களுக்கிடையில் படரவிட்டு, அந்தச் சிறு பின்னல்களை நடுவில் முடித்து அவற்றின் இருபுறங்களிலும் செண்பக மலர்களைச் செருகிக் கொண்டாள். பிறகு நெற்றிக்குத் திலகமிட்டுத் தகளியில் ஒருமுறை பார்த்தும்கொண்டாள். பின்னால் நின்று குறிஞ்சி தனது தேவி தகளி பார்ப்பதைக் கண்டு குறுமுறுவல் கொண்டாள். என்ன கோபமிருந்தாலும் எந்தப் பெண்ணும் தன் அழகைப் பார்க்கத் தவறுவதில்லை,' என்று தனக்குள் சொல்லியும்கொண்டாள்.

பணிப்பெண் முறுவலைத் தகளியிலே கவனித்த இள நங்கை சட்டென்று அசட்டை காட்டித் தகளியை மஞ்சத்தில் எறிந்துவிட்டு இளவரசன் அறைக்குச் செல்ல முற்படவே, "அம்மா!" என்று குரல் கொடுத்தாள் பணிப் பெண்.

"ஏன் குறிஞ்சி?" சற்றே திரும்பியவண்ணம் கேட்டாள் இளநங்கை.

"உணவுத் தட்டை நீங்கள் எடுத்துச் செல்கிறீர்களா? நான் கொண்டுவரட்டுமா?" என்று வினவினாள் குறிஞ்சி.

"உணவுத் தட்டா?"

"ஆம் அம்மா. நீங்களிருவரும் உணவருந்த."

"அவர் கூட உணவருந்தவில்லையா?"

"இல்லை. கேட்டதற்கு நீங்கள் வரட்டுமென்று கூறி விட்டார்."

"அப்படியா! நீயே கொண்டுவா உணவுத்தட்டை," என்று சொல்லிவிட்டு அறையைவிட்டுப் புறப்பட்ட நங்கை திடீரென எதையோ நினைத்துக்கொண்டு, "வேண்டாம் என்னிடமே கொடுத்துவிடு. நானே எடுத்துப் போகிறேன்" என்று கூறவே, பணிப்பெண் தட்டை அவளிடம் அளித் தாள். அதை வாங்கிக்கொண்டு தனது அறைக்குள் நுழைந்த இளநங்கையை விழுங்கி விடுவதுபோல் பார்த்தான் வீரபாண்டியன்.

சிவந்த அவள் மேனியில் தவழ்ந்த சிவப்பு ஆடை சிவப்புக்குச் சிவப்பு அழகு செய்யமுடியும் என்பதை நிரூபிக்க முயன்றதனாலும் அவள் கேசத்தின் வழவழப்பைத் தாங்க முடியாத காரணத்தாலும் திருப்பித் தூக்கிவிட வேண்டிய, அவள் கைகள் உணவுத் தட்டைப் பிடித்திருந்த தாலும், நன்றாக நெகிழ்ந்து முந்தானை நிலத்தில் புரண்டது. ஆனால் முழுவதையும் நெகிழவிடாமல் அவள் மானத்தைக் காக்க இஷ்டப்பட்ட அழகிய மார்பகம் ஆடையைத் தாங்கித் தூக்கி நிறுத்திக்கொண்டது. இப்படி ஆடை நழுவியதால் சங்கடத்திலாழ்ந்த அந்தச் சித்தினியின் சிற்றிடை அவள் நடையில் பெரிதும் நெளிந்து சுழன்று நடைக்கு ஒரு சிக்கலையும் சிங்காரத்தையும் அளித்தது. அப்படிச் சிக்கலுடன் நடந்ததால் அழகுகள் லேசாக அதிர்ந்தன; அலைந்தன. பாதவணிகள் ஒலித்தன. கண்கள் கடைகோட்டிச் சங்கடப்பட்டன. புருவங்கள் எழுந்து தாழ்ந்தன, உதடுகள் உள்மடிந்து கன்னங்களைக் குழித்தன.



அவள் அழகை, அழகிய நடையை, நடையால் விளைந்த அசைவுகளை அணு அணுவாகக் கவனித்தான் வீரபாண்டியன். அவள் சற்று எட்ட இருந்த மஞ்சத்தில் உணவுத்தட்டை வைத்து, நெகிழ்ந்த சேலையைத் தூக்கிவிட்டுச் சரிப்படுத்திக் கொண்டு உணவுத் தட்டுடன் மஞ்சத்தை நோக்கி வந்தபோதும் அவளையே கவனித்துக் கொண்டிருந்தான். ஆனால் இளநங்கை கண்ணை அவன் மீது திருப்பவே இல்லை. அவள் உள்ளத்தே உணர்ச்சிகள் சுழன்று கொண்டிருந்தன. அவை என்ன உணர்ச்சிகள் என்பதைக்கூட அவளால் புரிந்துகொள்ள முடியவில்லை. தன்னை வாட்டுவதைப்பது துன்பமா, இன்பமா, கோபமா, காமமா, இளவரசன்மீது ஏற்பட்டிருப்பது கசப்பா, இனிப்பா, எதுவுமே விளங்கவில்லை அவளுக்கு. ஒன்று மட்டும் திட்டமாக விளங்கியது. இளவரசன் விழிகள் தன்னை ஊடுருவி ஊடுருவிப் பார்க்கின்றன. தனது ஆடையோ, சீற்றமோ எதுவுமே அவற்றுக்குத் தடையாயில்லை என்பதுதான் அது. அதன் விளைவாக அவனைச் சரியாக ஏறெடுத்தும் பார்க்காமலேயே அவன் மஞ்சத்தருகே வந்த இளநங்கை நிலத்தில் கண்களை ஓட்டிய வண்ணமே கேட்டாள், "உணவு அருந்துகிறீர்களா?" என்று.

இளவரசன் கண்கள் அவளை ஆசையுடன் நோக்கின. "நீ கொண்டுவந்தபின் அருந்தாதிருக்க முடியுமா?" என்று உதிர்ந்தன சொற்கள் அவன் உதடுகளிலிருந்து.

"சரி. சரி. இந்தாருங்கள்," என்று உணவுத் தட்டி லிருந்து ஒரு கிண்ணத்தை எடுக்கப் போனாள்.

"இரு இரு. கதவு திறந்திருக்கிறது." என்றான் வீர பாண்டியன்.

"திறந்திருந்தாலென்ன?"

"யாராவது வருவார்கள்."

"வந்தாலென்ன?"

"நாம் தனித்திருக்கும்போது யார் வருவதையும் நான் விரும்பவில்லை."

"நாம் தனித்திருக்கப்போவதாக யார் சொன்னது?"

"நான்தான் சொல்லுகிறேனே?"

"எனக்கிஷ்டமில்லை."

"எனக்கிஷ்டமிருக்கிறது."

"உங்களிஷ்டப்படிதான் நான் நடக்க வேண்டுமா?"

"அப்படித்தான் பெரியவர்கள் சொல்கிறார்கள்."

"எந்தப் பெரியவர்கள்?" என்று சீறினாள் இளநங்கை.

"எல்லா பெரியவர்களுந்தான். புருஷன் இஷ்டப்படி நடக்கவேண்டியது மனைவியின் கடமை," என்றான் இளவரசன்.

"சரி. இப்பொழுது என்ன செய்யவேண்டும்?" என்று கேட்டாள் இளநங்கை.

"கதவைத் தாளிடு."

"எதற்கு?"

"சொல்லுகிறேன்."

"எதற்கும் காலாகாலமுண்டு."

"இப்பொழுதென்ன காலத்திற்கு?"

"பகற் காலம்."

"இருந்தாலென்ன?" இதைச் சொன்ன இளவரசன் முறுவல் கொண்டான்.

"சேசே! நீங்கள் ஆனாலும் மோசம்," என்று சொன்ன இளநங்கை, வேண்டா வெறுப்புடன் சென்று கதவைத் தாளிட்டு வந்தாள்.

திரும்பிய அவளைத் தன்னருகில் பஞ்சணையில் உட்காரச் சொன்னான் இளவரசன். தன் தலையணைகளையும் சற்று உயர்த்தச் சொல்லிச் சிரமப்பட்டு அரைவாசி உட்காரவும் செய்தான். அவனைச் சௌகரியமாகச் சாய்ந்த வண்ணமிருக்கச் செய்து பக்கத்தில் உட்கார்ந்த இளநங்கை, "சொல்லுங்கள்," என்றாள் அவனை நோக்கி.

"எதை?"

"முதலில் எதைச் சாப்பிடுகிறீர்கள் என்பதை."





"சொன்னால் சீறுவாய்," என்ற இளவரசன், இளநகை கொண்டு அவள் இதழ்களில் கண்களையும் ஓட்டினான்.

இளநங்கை சங்கடப்பட்டு அசைந்தாள். அந்தச் சங்கடத்தை ஆயிரமடங்கு அதிகப்படுத்தும் சொற்களைக் கொட்டினான் இளவரசன். அவற்றில் காமவிகாரம் அளவற்றிருந்ததைக் கவனித்தாள் இளநங்கை. ஆனால் அந்தச் சொற்களைச் சரியாக மட்டும் எடை போட்டிருந்தால், ஊன்றி நோக்கியிருந்தால், அந்தக் காமச்சொற்களுக்குள் பெரும் தந்திரக் கதையொன்று ஓடிக்கொண்டிருப்பதைப் புரிந்துகொண்டிருப்பாள் அந்தக் கட்டழகி. ஆனால் சுரணைகள் எட்டப் போய்விட்ட சமயம் அது. காமனின் சுந்தரக்கணைகள் ஆட்டங்காட்டிய காலம் அது. அந்தச் சமயத்தில் ஆராய்ச்சி எங்கிருந்து வரும்? அவள் ஏதும் நினைக்கச் சக்தியின்றி இளவரசனிடம் குயவன் கைக் களிமண்ணென வளைந்தாள். அவள் தன்னிலை மறந்தாள். காலாகாலத்தைப் பற்றிச் சற்றுமுன்பு பேசிய அவள், காலத்தையும் மறந்தாள். அகாலமே காலமாகி விட்டது அவளுக்கு.

## அத்தியாயம் 62

# வலது கரத்தின் விந்தை

சிவந்த ஆடை சற்றே நெகிழ்ந்து கிடக்க, செம்பருத்தி அதரங்கள் சற்றே விரிந்து உள்முத்துக்களை லேசாகக் கோடி காட்ட, வெட்கமும் வெட்டிக் கோபமும் முக மெங்கும் தவழ, தலையிலிருந்த செண்பகப் பூவொன்று அடுத்து என்ன நடக்குமென்று காதுப்புறமாகச் சற்றே எட்டிப் பார்க்க, சங்கடத்தால் வளைந்து தன்னெதிரே உட்கார்ந்திருந்த எழிலுருவத்தின் மேலெல்லாம் கண்களைத் தாவவிட்ட பாண்டிய இளவரசன்,"இளநங்கை! இந்தப் புதுப் போர்க்கோலம் உனக்கு எத்தனை சிறப்பாயிருக்கிறது தெரியுமா?" என்று கேட்டு, அவள் கையொன்றைத் தன் கையிலெடுத்து வைத்துக்கொண்டு மெள்ள அதை நெறிக்க வும் செய்தான்.

இளநங்கையின் உடலில் இன்ப உணர்ச்சிகள் பெரு வேகத்தில் சுழன்று ஓடியதால் அவள் அவனைப் பார்க்காமல் வேறுபுறம் தலையைத் திருப்பிக் கொண்டு, "புதுப் போர்க் கோலமா?' என்று கேட்டாள், ஏதோ கேட்க வேண்டுமென்பதற்காக.

"ஆம். புதுப் போர்க்கோலம்தான்," என்ற இளவரசன் மெள்ள அவளைத் தன்னை நோக்கிச் சற்று இழுக்கவும் செய்தான்.

அவளும் பஞ்சணையில் அசைந்து நகர்ந்தாள். "இது தான் போர்க்கோலம் போலிருக்கிறது!" என்று கூறவும் செய்தாள் சங்கடத்துடன்.

"ஆம்," என்றான் இளவரசன் ஆசை ததும்பிய குரலில்.



"போர் நடப்பது இங்கல்ல. எதிரி வாசலில் இருக்கிறான் என்றாள் இளநங்கை," அவன் கை தனது கையிலிருந்து விலகி இடையில் வளைந்ததால் சற்று நிமிர்ந்து.

"உள்ளேயுந்தானிருக்கிறான்."

"யாரது?"

"வெளியிலிருக்கிற எதிரியைவிட மோசமானவன்."

"அப்படியா!"

"ஆம். வெளியிலிருக்கிற எதிரி பகிரங்கமானவன், கண்ணுக்குத் தெரிகிறான். நேரிடையாகப் போருக்கு வருகிறான்..."

"இவன்?"

"மறைந்து போரிடுகிறான். எனக்கு வேண்டியவர் களைக் கொண்டு என்னை வதைக்கிறான். அவன் பாணங்கள் பார்வைக்கு மென்மை ஆனால் அவற்றைவிடக் கொடுமை வாய்ந்த பாணங்கள் எதுவும் இல்லை."

இதைக் கேட்ட இளநங்கை தலை குனிந்த நிலையிலும் முறுவல் கொண்டாள். அவன் எந்த எதிரியைக் குறிப்பிடுகிறான். எந்தப் பாணங்களைக் குறிப்பிடுகிறான் என்பதை அறிந்தேயிருந்தாள் அவள். இருப்பினும் அவன் வாயால் அதை அறியக் கேட்டாள், "அத்தனை கொடுமை யான பாணங்களா?" என்று.

இளவரசன் முகத்தில் அச்சம் விரிந்தது. "ஆம் இளநங்கை,' என்றான்.

"அவற்றைக் கண்டு நீங்கள் பயப்படுகிறீர்களாக்கும்?" என்று வினவினாள் இளநங்கை.

"ஆம்."

"பயம் வீரர்களுக்கு அழகா?"

"என்னைவிடச் சிறந்த வீரர்கள் பயந்திருக்கிறார்கள்."

'இதற்கும் சான்று இருக்கிறது போலிருக்கிறது."

"இருக்கிறது, அதுவும் காவியச் சான்று."

இளநங்கை மெல்ல நகைத்தாள். "மறுபடியும் பழைய புராணத்தை ஆரம்பித்துவிட்டீர்கள்," என்னும் சொற்களை உதிர்த்தாள்.

இளவரசன் கை அவள் இடையின் பகுதியொன்றை வலிக்கப் பிடித்தது, "பழைய புராணத்தில் இருக்கும் சுவை புதுக் கதைகளில் இல்லையே, இளநங்கை. உதாரணமாக புதுப் போர்க் கோலத்துக்கு விவரணமே பழைய கதையில் தானிருக்கிறது. என் அச்சம் சரியென்பதற்கும் சான்று அதில் தானிருக்கிறது" என்றும் கூறினான்.

"உங்களுக்கு வேண்டிய சகலத்தையும் படித்திருக் கிறீர்கள்," என்றாள் இளநங்கை.

"எனக்கு வேண்டியதா! உனக்கும் வேண்டியதை நானே படித்து வைத்திருக்கிறேன். உன் புதுப் போர்க் கோலத்தைக் காவியம் வர்ணிக்கிறது கேள் இளநங்கை, கதையைச் சொல்லுகிறேன்," என்ற இளவரசன் தொடர்ந் தான்; "இளநங்கை! முன்பு இளவல் ஒருவனிருந்தான், அரச குமாரன்; பெருவீரன். வில்லை வளைத்தால் விண்ணும் நடுங்கும் ஆற்றல் படைத்தவன். அச்சமென்பதை அணுவளவும் அறியாதவன். அவனது அண்ணன் நண்பனொருவன் நன்றி மறந்ததால் அவனுக்குப் புத்தி புகட்ட, அவன் கோட்டைக் கதவை உதைத்து முகத்தில் கோபக்கனல் பறக்க நகருள் புகுந்தான். கோட்டைக்குள் இருந்தவர் நடுங்கினர். ஆனால் நடுங்காதவரும் ஒருவர் உண்டு. அவள் பெண். அந்த வீரனை எதிர்க்கப் போர்க் கூடங்களை ஏவினாள். அந்தப் போர்க்கூடங்கள் தாங்கிவந்த கணைகளைக் கண்டதும் அச்சத்தை அறியாத அந்த மகாவீரன் அச்சத்தின் வசப்பட்டான். அந்தப் போர்க் கூடங்கள் அழகாகத்தான் அசைந்து வந்தன. அந்த அசைவே அச்சத்தை அளித்தது இளவலுக்கு. கண்கள் வேலெறிந்தன. புருவ விற்கள் வளைந்து ஆர்ப்பரித்தன. சிலம்புகள் முரசொலித்தன. இந்த நிலையில் புராணம் என்ன சொல்கிறது தெரியுமா இளநங்கை? 'மெல்லியர் வளைந்தபோது பெயர்க்கரும் சீற்றம் பேரப் பார்க்கவும் அஞ்சினான் அப்பணையிலும் உயர்ந்த தோளான்' என்று சொல்கிறது.



அவள் சொன்ன புராணக் கதை அவளுக்குத் தெரிந்தேயிருந்தது. இலக்குவனை வழிமறித்துச் சினம் தணிக்கத் தாரை அனுப்பிய இளமங்கையர் அந்த இளங் காளையைச் சூழ்ந்துகொண்ட கதையை, கதை பற்றிய கம்ப காவிய வர்ணனையை, இளவரசன் அத்தனை சாமர்த்திய மாகச் சொல்லியிருக்கிறான் என்பதை உணர்ந்துகொண்ட இளநங்கை, 'வீரபாண்டியன் பெரும் வித்தகன். காரியத்திற்கு அனுகூலமாகக் காவியம் படிக்கிறான்,' என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள்.

அவள் மௌனத்தின் காரணத்தைப் புரிந்துகொண்ட இளவரசன் கைகள் அவளை நன்றாகத் தழுவிக்கொண்டன. அப்பொழுதும் பலவீனமான நிலை அவனுக்கு. இரத்த மிழந்து உடல் சக்தியற்றிருந்த ஸ்திதி, அந்த ஸ்தியிலும் அவன் கையில் மட்டும் பெரும் பலமிருந்ததையும் அவை தன்மீது பலபடி சுழல முற்பட்டுவிட்டதையும் உணர்ந்த இளநங்கை அடியோடு நிலைகுலைந்தாள். 'இத்தனை தலைக் காயத்திலும் இதற்கு மட்டும் எங்கிருந்து பலம் வந்துவிடுகிறதோ?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டாள். 'இலக்குவன்தான் இளமங்கையரின் விற் களுக்கும் வேல்களுக்கும் அஞ்சினானே தவிர, இவர் அச்சப் படுவதாகத் தெரியவில்லையே. பெண்களுக்கு நாணம் தானே, கவசம். அதை உடைத்துவிட்ட இவர் அச்சத்தைப் பற்றி எப்படிப் பேசலாம்?" என்றும் எண்ணித் தன் பலவீனம் நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகமாவதை உணர்ந்தாள். அவன் கைப்பிடி `தான் வளைவதையும் அறிந்தாள். அறிந்ததும் அந்த ஆண்மகன் ஆவலிலிருந்து விடுபடும் வகையற்றுத் தவித்தாள்.

வீரபாண்டியன் சிரமப்பட்டுத் தலையணையில் பாதி உட்கார்ந்தபடி சாய்ந்திருந்தான். இரண்டொரு சமயங்களில் அருகில் வரத் தாமதித்த அவள் உடலை, இழுக்கச் சற்று எழுந்திருக்கவும் செய்தான். இருப்பினும், வலியையும்

அலட்சியம் செய்து அவளைச் செப்பனிட முற்பட்டான். அவனிஷ்டத்துக்கு அவள் வளைந்தாள். அந்த இன்ப நிலையில் எங்கிருந்தோ ஒலிப்பதுபோல் மெள்ள வந்தது அவன் அழைப்பு, "இளநங்கை" என்று.

"உம்."

"கதையொன்று சொல்கிறேன் என்று சொன்னேனே?"

"அதுதான் சொல்லி விட்டீர்களே."

"ஆம், சொன்னேன். ஆனால் அந்தக் கதை நமக்கு எப்படிப் பொருந்தும்."

"பொருந்தாது. நாம்தான்..."

"ஆமாம். இருந்தாலும் அந்தப் போர்க் கூடங்கள், விற்கள், வேல்கள் இவை செயலாற்றும் தன்மை பொருந்துமல்லவா?"

"இளநங்கை அவனை உற்று நோக்கினாள். "என்ன சொல்கிறீர்கள்?" என்றும் கேட்டாள் சந்தேகத்துடன்.

இளவரசன் மெள்ளத் துவங்கினான்: "இளநங்கை! பூமியைப் பெண்ணாகத்தானே வர்ணிக்கிறார்கள் கவிகள்?"



"ஆம்" என்றாள் இளநங்கை, அந்தப் பூர்வபீடிகை எதற்காக என்று உணராமல்.

"இந்தக் கோட்டையை ஒரு பெண்ணென்று வைத்துக் கொள். அதன் கிழக்குவாயில் நுதலானால் அதன் மீதிருக்கும் விற்கூடங்கள் புருவங்களாகவும் சற்று அடியிலிருக்கும் வேலேறியும் இயந்திரங்கள் கண்களாகவும் வைத்துக் கொள்ளலாமல்லவா?" என்று வினவினான் இளவரசன்.

"வைத்துக் கொள்ளலாம்."

"எதிரேயிருக்கும் எதிரியைக் கண்டு கோட்டை ராணி, புருவங்களைக் குவித்துக் கண்களைத் தாழ்த்தி நாணிச் சங்கடப்பட்டு நிற்கிறது. இந்த நிலையை எதிரி பயன்படுத்திக்கொள்ள முற்படுகிறான். அப்பொழுது பெண் என்ன செய்வாள்?"



இளநங்கைக்கு அந்த உவமை பிடிக்காததால், "கையைத் தூக்கிக் கன்னத்தில் அறைவாள்!" என்று எரிந்து விழுந்தாள்.

"நல்லது! நல்லது! கற்புடைய பெண் அதைத்தான் செய்வாள்," என்று குதூகலித்த இளவரசன், "அடுத்து என்ன செய்வாள்?" என்றும் வினவினான்.

"கண்களால் சுட்டெரிப்பாள்," என்று சீறினாள் இளநங்கை.

"மிக நல்லது. மிக நல்லது," என்ற வீரபாண்டியன் "இதை எதிரி புரிந்துகொள்வது நல்லது. ஆனால் எங்கே புரியப் போகிறது?" என்று கூறினான்.

இளநங்கைக்கு ஏதும் விளங்கவில்லை. "எனக்கு ஏதும் விளங்கவில்லை" என்றும் கூறினாள்.

"பல விஷயங்கள் நமக்கு விளங்குவதில்லை இளநங்கை. ஆனால் பலனில்லாமலும் போவதில்லை" என்ற வீரபாண்டியன் அதற்குமேல் கதையைப் பற்றியோ கோட்டையைப்பற்றியோ ஏதும் பேசாமல், "இளநங்கை உன் உதடுகள்" என்று அவற்றில் விரலொன்றை வைத்தான்.

உதடுகளை விரல் அழுத்தியதால் பேச முடியாத இளநங்கை, அவன் விரலைத் தன் கையால் நீக்கிப் பற்றிக் கொண்டாள். அவள் கைக்குவியலில் அகப்பட்டுக் கொண்ட அவன் விரல் சற்றே சுழலவே அவள் அதை உதறிவிட்டு எழுந்திருந்தாள். எழுந்தவள் சீலைத் தடுப்பை எடுத்து மேலே போட்டுக் கொண்டு, உணவை அவன் வாயில் மெள்ள மெள்ளப் புகட்டினாள். பிறகு அவனை நீரருந்தவும் செய்து வாயையும் துடைத்தாள். பிறகு அவனருகில் உட்கார்ந்து கொண்டு, "இன்னும் கதை ஏதாவதிருக்கிறதா? நான் போகலாமா?" என்று வினவினாள்.

"நீ இருக்கிற வரையில் கதைகள் உண்டு," என்றான் இளவரசன்.

"என்ன கதை!"

"எத்தனையோ கதை,"

"சொல்லுங்களேன்".

"சொல்லும் கதைகளும் உண்டு, சொல்ல முடியாத கதைகளும் உண்டு."

"சொல்ல முடியாத கதை என்பது ஒன்று உண்டா?"

"உண்டு. அது செயல் கதை." இதைச் சொன்ன இளவரசன் கண்கள் அவள் கண்களுடன் கலந்தன.

அவள் கண்களை அகற்றவில்லை. "மிகவும் பலவீனமாக இருக்கிறீர்கள்," என்றாள்.

"நீ அருகில் வரும்போதெல்லாம் பலவீனம் வரத்தான் செய்கிறது."

"அந்தப் பலவீனத்தைச் சொல்லவில்லை. உங்கள் உடல் ரத்தமிழந்து இருக்கிறது."

"இருந்தாலென்ன?"

"சில நாட்கள் எச்சரிக்கையுடனிருக்க வேண்டும். உடல் தேறட்டும்."

"ஆனால் உயிரைக் கொடுத்த மருந்து உடலுக்கும் உரத்தைக் கொடுக்காதா? வேண்டுமானால் மருத்துவரைக் கேட்டுப் பார்," என்றான் இளவரசன்.

இளநங்கையின் காதல் விழிகளில் நீரும் சுரந்தது. "இரண்டு நாள் பொறுங்கள். கிணற்று நீர் எங்கு போய் விடும்?" என்றாள்.

இளவரசன் கை அவள் கையுடன் கலந்து கிடந்தது. "பொறுத்தார் பூமியாள்வார்," என்று அவன் உதடுகள் முணுமுணுத்தன.

"ஆம். தரணியாளப் பொறுக்க வேண்டும்," என்று அவளும் முணுமுணுத்தாள்.

"தரணியா, தரணியா?" என்று வினவிய அவன் நகைத்தான். அவளும் நகைத்தாள். பிறகு, "நான் வருகிறேன்," என்று எழுந்தாள்.

"எங்கு இளநங்கை?"

"கோட்டை மதிலுக்கு!"





"எதற்கு?"

"எதிரி நிலை பார்க்க."

"பார்க்க வேண்டாம்."

"ஏன்?"

"நாளை இரவுதானே சிங்கணனைத் தாக்கச் சொல்லியிருக்கிறோம்?"

"ஆம்."

"பின் இன்று எதற்காக நீ கோட்டை மதிலைப் பரிசோதிக்க வேண்டும்?"

"எதற்கும் நாம் முன்னேற்பாடாயிருக்க வேண்டாமா?"

"தோல்வியடைய முன்னேற்பாடென்ன?" என்ற வீரபாண்டியன் நகைத்தான். பிறகு சொன்னான், "எதிரி முறை தவறி நடந்தால் பெண் வலது கையை ஓங்கி அறையட்டும்," என்று.

அவன் சொற்களில் புது ஒலி ஒன்றிருந்தது. அதன் காரணம் அவளுக்கு அன்று புரியவில்லை. மறுநாளிரவு அது புரிந்தபோது அவன் சொன்ன கதை, உவமை அனைத்துக்குமே காரணம் புரிந்தது அவளுக்கு. அவளுக்கு மட்டுமல்ல, அந்தக் கோட்டை வாசிகளுக்கே புரிந்தது. அது வீரபாண்டியன் இளநங்கை வாழ்வை மட்டுமல்ல சிங்கணன் வாழ்வையும், பாண்டிய நாட்டின் சரித்திரத்தையும்கூட மாற்றிவிட்டது. "வலது கரத்தின் விந்தை!" என்று வீரபாண்டியனே அதற்குப் பெயர் சூட்டினான்.

## அத்தியாயம் 63

# நள்ளிரவில் ஒரு பெண் குரல்

பட்டப் பகலில் அறைக் கதவைத் தாளிட சொல்லிப் பஞ்சணையில் தன்னை உட்கார வைத்து பே கொண்டு தொட்டு விளையாடி வீண் கதை பே குயவன்கை மண்ணெனத் தன்னை உருட்டித் திரட்டி குழைத்துவிட்ட வீரபாண்டியன், கோட்டையை என் செய்ய வேண்டுமென்பதைப் பற்றி மாத்திரம் திட்டமா ஏதும் சொல்லாமல் கோட்டையைப் பெண்ணா வர்ணித்து, 'எதிரி முறை தவறி' நடந்தால் பெண் வ கையை ஓங்கி அறையட்டும்' எனக் கூறியதைக் கேட் இளநங்கை அவனைச் சில விநாடிகள் தன் கம விழிகளால் கூர்ந்து நோக்கினாள். கடைசிச் சொற்கள அவன் சர்வ சாதாரணமாக உதிர்த்தாலும் அவற்றில் ஏ ஒரு புத்தொளி இருந்ததாகத் தோன்றவே, அவள் அத விளக்கம் கேட்கும் முறையில், "ஏதோ பு போடுகிறீர்களே?" என்று வினவவும் செய்தாள்.

கேள்வியை உதிர்த்த உதடுகளையும் கேள்வி தொ நின்ற கமல விழிகளையும் நோக்கிய வீரபாண்டியன் இ களில் இளநகை அரும்பியது. "என்ன புதிர் போ விட்டேன் இப்பொழுது?" என்று கேட்கவும் செய் அவன்.

"இந்தக் கோட்டையைப் பெண்ணாக வை கொள் என்கிறீர்கள், கிழக்கு வாயில் மதில் மீதிரு விற்கூடங்களைப் புருவம் என்கிறீர்கள், சற்றுக் கீழிரு வேல் இயக்கப் பொறிகளைக் கண்கள் என்கிறீர்கள், அ முறை தவறி நடந்தால் வலது கரத்தால் அ





சொல்கிறீர்கள். உங்கள் மனத்தில் என்னதான் இருக்கிறது?" என்று வினவினாள் இளநங்கை மீண்டும் வீரபாண்டியனை நோக்கி, அவன் சொற்களின் புத்தொளியால் தூண்டப்பட்டு.

வீரபாண்டியன் மெல்ல நகைத்தான். "என் மனத்தில் நீதானிருக்கிறாய்," என்றும் கூறி மீண்டும் அவள் இடையில் கையைச் செலுத்தினான்.

அவள் முகத்தில் பொய்க் கோபம் விரிந்தது. "உம்" என்ற அடக்க ஒலி ஒன்றை நாசி மூலம் வெளியிட்டாள்.

"என்ன இளநங்கை?"

"போதும்" என்ற இளநங்கை அவன் கையைப் பிடித்துத் தள்ளினாள்.

"எது போதும்?"

"எதுவும்தான்."

"எனக்கு விளங்கவில்லையே?"

"உங்களுக்கு எதுவும் விளங்காது?"

"பின் என்னை ஏன் விளக்கம் கேட்டாய்?"

"எதைப்பற்றி?"

"கோட்டையைப் பற்றி."

இளவரசனின் கடைசி வாக்கியத்தைக் கேட்ட இளநங்கையின் கோபம் சுடர்விட்டது. "எதற்கும் எதற்கும் பிணைக்கிறீர்கள்?" என்று சீறவும் செய்தாள்.

"நான் எதையும் பிணைக்கவில்லையே?" என்று கெஞ்சினான் வீரபாண்டியன்.

"எல்லாம் பிணைக்கிறீர்கள்," என்றாள் இளநங்கை.

"எதை இளநங்கை?"

"கோட்டையைப் பெண் என்கிறீர்கள். பிறகு..."

"பிறகு?"

"என்னைப் பார்க்கிறீர்கள்."

"உம்..."

"கண்ணைக் காட்டுகிறீர்கள். போதாக் குறைக்கு—"

"போதாக்குறைக்கு?"

"கையும் சும்மா இருப்பதில்லை," என்ற இளநங்கை சிறிக்கொண்டு எழுந்திருக்க முயன்றாள்.

அவள் கையைப் பிடித்து மீண்டும் பஞ்சணையில் உட்கார வைத்த இளவரசன் கண்கள் அவளைத் துருவிப் பார்த்தன. இருவரும் விளையாடியதால் கலைந்த அவள் ஆடைமீதும், பஞ்சணையில் உதிர்ந்திருந்த இரண்டொரு செண்பக மலர்கள் மீதும் அவன் விழிகள் தாவின. பிறகு அந்த மலரிலொன்றைக் கையிலெடுத்துப் பார்த்துக் கொண்டே, "நீ இப்படிச் சிவந்த ஆடை உடுத்தி, செண்பக மலர் சூடி நறுமணங் கமழ வைத்து, என்னை விழித்துப் பார்த்தால் என் கைகள், எப்படி வாளாவிருக்கும் வேல்விழி?" என்றான்.

"வேல்விழியா! எனக்குப் புதுப்பெயர் சூட்டுகிறீர்களா?"

"ஆம்."

"எதற்காம்?"

"நீ அருகிலிருக்கும்போது கற்பனை ஓடுகிறது. புதுப் பெயர்கள் தோன்றுகின்றன. புதுக்கவிதைகள் தோன்று கின்றன. புதுமுறைகளும் தோன்றுகின்றன."

"புது முறைகளா!"

"ஆம்."

"எதற்கு?"

இளவரசன் பதில் சொல்லாமல் நகைத்தான். அவளுக்கு அர்த்தம் புரிந்தது. சரேலென்று எழுந்து வெகு வேகமாக அறைக்கு வெளியே சென்று தன்னறையை நாடினாள்.

அங்கு அவளுக்காகக் காத்திருந்த பணிப்பெண் குறிஞ்சி அவளை நோக்கி, "அம்மா! பஞ்சணையைச் சரி செய்யட்டுமா?" என்று வினவினாள்.

அவளை நோக்கிச் சரேலெனத் திரும்பிய இளநங்கை, "எதற்குக் குறிஞ்சி?" என்று சீறினாள்.





"ஆயாசத்தைப் போக்கிக்கொள்ள."

"எனக்கு ஆயாசமென்று யார் சொன்னது உனக்கு?"

பணிப்பெண் பதில் சொல்லவில்லை. தலைவியின் கலைந்து கிடந்த ஆடைமீதும் குழல்மீதும் தொக்கிக் கிடந்த செண்பக மலர் மீதும் கண்களை ஓட்டினாள். குறிஞ்சியின் பார்வை ஓடிய இடங்களைக் கண்ட இளநங்கை வெட்கமும் சீற்றமும் நிரம்பிய குரலில் சொன்னாள், "சரி சரி பஞ்சணையைச் சரிசெய். சிறிது இளைப்பாறி விட்டு போகிறேன்," என்று.

பணிப்பெண் தனது உள்ளெழுந்த சிரிப்பை மறைக் முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டாள். பிற பஞ்சணையைச் சரிசெய்துவிட்டுச் சென்றாள். என்று பகலில் உறங்காத இளநங்கை அன்று நீண்ட நேர உறங்கினாள். கதிரவன் சாயும் நேரம் நெருங்கிவிட்ட சமய வரை பொறுத்த பணிப்பெண் அதற்கு மேலு பொறுக்காமல் அவளை அசைத்து எழுப்பினாள்.

இளநங்கை நீராட்ட அறைக்குச் சென்று முக கழுவித் திலகமணிந்து வந்தாள். பிறகு கவசம் பூண்டு, உ வாளணிந்து மாளிகையைவிட்டுப் புறப்பட்டு கோட்டையின் பிரதான வாயிலை நோக்கிச் சென்றாள்.

புரவியிலமர்ந்து இரு வீரர் அக்கம் பக்கத்தில் வா பிடித்துக் காவல் புரிந்து வரச் சென்ற இளநங் கோட்டாற்றுக் கடைவீதிகள் பரம அமைதியா இருந்தாலும், நகரத்தில் உண்மையில் பீதி பரவி நிற்பதை கண்டாள். வீதிகளில் வரிசையாக நிர்மாணிக்கப்பட்டிரு வீடுகளின் சாளரங்களின்மூலம் எட்டிப்பார்த்த ஆ பெண் முகங்களில் அசாத்தியக் கவலையும், அச்ச விரவிக் கிடப்பதைக் கண்டாள். வீதி மூலைகளில் நின் ஆடவர்கள் ஏதேதோ பேச்சு பேசிக் கொண்டிருப்பதையு பேச்சுக்களின் தொனியில் கசப்புத் தட்டுவதையு கவனித்தாள். இப்படிப் பார்த்துக்கொண்டே வீதிகள் சென்ற இளநங்கை கோட்டை வாசிகளிடத்தி அவநம்பிக்கை பெரிதாகப் பரவியிருப்பதற்குண்டா

சூசகங்கள் பல இருப்பதை உணர்ந்தாள். அவள் உணர்ந்தது சரி என்பதற்குக் கோட்டையின் பிரதான வாயிலிலும் ஆதாரமிருந்தது. அந்த வாயிலை அணுகி அவள் புரவியை விட்டிறங்கி மதில் மீது ஏறிச் சென்றபோது அங்கிருந்த விற்கூடத் தலைவன், "அம்மணி! ஒரு சந்தேகம்" என்று கூறிக்கொண்டே அவளை அணுகி வந்தான்.

இளநங்கையின் இதயத்தில் சற்று அச்சம் உதயமாயிற்று. ஒருவேளை தங்கள் வீரர்கள்கூட வீரபாண்டியனைச் சந்தேகிக்கிறார்களோ என்ற பயம் சூழ்ந்துகொண்டாலும் அதை வெளிக்குக் காட்டாமலே கேட்டாள் அவள் "என்ன வீரரே" என்று.

"நமது வீரர்களுக்கு ஒரு சந்தேகம் உண்டாயிருக்கிறது" என்று இழுத்தான் விற்கூடத் தலைவன்.

"என்ன சந்தேகம்?" என்று அதிகாரத் தொனியில் கேட்டாள் இளநங்கை.



சாதாரண காலத்தில் ஒரு பார்வைக்கே நடுங்கக் கூடிய விற்கூடத் தலைவன் அவள் அதிகாரத் தொனியைக் கண்டு சிறிதளவும் அஞ்சாமல், திடமான குரலில் சொன்னான்: "படைத் தலைவர் எதிரியுடன் போராடப் போகிறாரா, இல்லையா என்று கேட்கிறார்கள் வீரர்கள்?".

இளநங்கை விழிகள் அவனைச் சுட்டுவிடுவதுபோல பார்த்தன. "போரிடுவதா அல்லவா என்பதை நிர்ணயிப்பது யார் பொறுப்பு?" என்று வினவவும் செய்தாள் இளநங்கை.

"படைத்தலைவர் பொறுப்புத்தான்," என்றான் விற்கூடத் தலைவன்.

"பிறகு வீரர்களுக்கேன் அந்தக் கவலை?" என்று சீறினாள் இளநங்கை.

விற்கூடத் தலைவன் நன்றாக நிமிர்ந்து நின்றான், "உபதளபதி! நமது வீரர்கள் கோழையல்ல..." என்று சுட்டியும் காட்டினான்.

"அது தெரியும் எனக்கு."

"அவர்கள் வீரர்களாக வாழப் பிரியப்படுகிறார்கள்."



"யார் தடுத்தது அதை?"

"நீங்கள்தான் அதை விளக்கவேண்டும்."

விற்கூடத் தலைவன் பேச்சு பெரும் விந்தையாயிருக்கவே, "நீங்கள் சொல்லுவது புரியவில்லை வீரரே," என்றாள் இளநங்கை.

விற்கூடத் தலைவன் அவளைக் கூர்ந்து நோக்கினான். "அம்மணி! நீங்கள் இன்று காலையும் இங்கு வந்தீர்களல்லவா?" என்று துவங்கினான்.

"ஆம். வந்தேன்."

"இப்பொழுதும் வந்திருக்கிறீர்கள்."

"ஆம் வந்திருக்கிறேன்."

"வரும் வழியில் மக்களைக் கவனித்தீர்களா?"

"கவனித்தேன்."

"எல்லோரிடமும் ஓர் அச்சம் நிலவுவது புரிய வில்லையா உங்களுக்கு?"

"ஆம். அச்சப்படுவதாகத்தான் தெரிகிறது."

"ஏன் அச்சப்படுகிறார்கள் அம்மணி? இரண்டாயிரம் வீரர்களைக் கொண்டு இப்பெரும் கோட்டையைக் கைப்பற்றிய வீரபாண்டியர் படைத் தலைவராயிருக்கையில், மக்களுக்கு அச்சம் ஏன் உதிக்கவேண்டும்?"

"எதிரிபலம் அதிகமாயிருப்பதைக் கண்டு உதித்திருக்கலாம்."

"அதுமாத்திரம் மக்களுக்கு அச்சத்தை ஊட்டி விடுமா?"

"வீரபாண்டியர் ரணகாயப்பட்டுப் படுத்திருப்பது காரணமாயிருக்கலாம்."

"அவர் படுத்திருந்தாலும், உபதளபதி தாங்க வில்லையா? நன்றாகப் பயிற்சி பெற்ற பாண்டியப் படையில்லையா?"

இளநங்கையின் விழிகள் அவன்மீது நிலைத்தன. "அப்படி இருந்தும் மக்கள் ஏன் அஞ்சவேண்டும்?" என்று கேட்டாள்.

விற்கூடத் தலைவன் சற்று யோசித்தான். பிறகு அருகில் வந்து, "அம்மணி! நான் சொல்லுவது தவறாயிருந்தால் மன்னித்துவிடுங்கள். வீரபாண்டியர் எதிரியிடம் சரணடையப் போவதாக ஒரு வதந்தி இருக்கிறது," என்று மிக மெதுவாகச் சொன்னான்.

இளநங்கையின் விழிகளிலும் அச்சம் விரிந்தது. "அப்படியா!" என்று அச்சம் குரலிலும் தொனிக்கக் கேட்டாள் அவள்.

"ஆம் அம்மணி," எனறான் விற்கூடத் தலைவன்.

"யார் இந்த வதந்தியைக் கிளப்பிவிட்டது?" என்று கோபத்துடன் கேட்டாள் அவள்.

"யாரோ தெரியாது. ஆனால் பகலிலிருந்து அந்த வதந்தி வலுத்துவிட்டது. வீரர்கள் காதிலும் அது விழுந்து விட்டது. சில இடங்களில் மக்கள் அதைப்பற்றிச் சற்று இரைந்தே பேசுவதாக நமது ஒற்றர்கள் கூறுகிறார்கள்," என்றான் விற்கூடத் தலைவன்.

இளநங்கையின் முகத்தில் கவலை விரிந்தது. "வீரரே! இந்த வதந்தி மக்களின் உறுதியைக் குலைத்துவிடுமே," என்று கவலையுடன் கூறினாள்.

"குலைத்துவிட்டது அம்மணி. அதைப்பற்றிக்கூட நான் கவலைப்படவில்லை. நமது வீரர்களும் அதை நம்புவதாகத் தெரிகிறது," என்றான் விற்கூடத் தலைவன்.

படைவீரர் உள்ளத்தில் சந்தேகம் புகுந்துவிட்டால் ஏற்படக்கூடிய விபரீதத்தை இளநங்கை நன்றாக உணர்ந்திருந்தாள்.

அந்தச் சந்தேகத்தை முறித்தெறிய, வினவினாள் விற்கூடத்தலைவனை நோக்கி, "வீரபாண்டியரை அறிந்தவர்கள் கூட இதை நம்புகிறார்களா?" என்று.

"வீரபாண்டியரே இதைச் சொன்னதாக வதந்தி இருக்கிறது." என்றான் விற்கூடத் தலைவன்.

இளநங்கையின் இதயத்தில் அச்சம் பெரிதாகச் சூழ்ந்தது. 'மக்கள் உறுதி குலைந்தாலே முற்றுகையைச் சமாளிப்பது கஷ்டம். அப்படியிருக்க, வீரர்கள் உறுதியும் குலைந்தால் கோட்டை எதிரியின் கையில் விழுந்தது போலத்தான்' என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள் இளநங்கை.



அந்த எண்ணத்தின் விளைவாக, அச்சம் பெரிதும் விரிந்த பார்வையுடன் விற்கூடத் தலைவனை நோக்கிய கொற்கை மகள், "விற்கூடத் தலைவரே! இதில் ஆதாரமேது மில்லையென்று வீரர்களுக்குச் சொல்லுங்கள். விற் கூடங்களை எந்த வினாடியும் இயக்கத் தயாராயிருங்கள்," என்று கூறிவிட்டு, வேல் இயக்கப் பொறிகளின் தலைவனையும் விளித்துப் பொறிகளைத் தயாராக வைத்திருக்கும்படி எச்சரித்தாள்.

பிறகு கோட்டை மதில் காவலரிடமும் உரையாடி அவர்களுக்குத் துணிவையும் ஊட்டிவிட்டு, அனைத்தையும் ஒருமுறை மேற்பார்வை பார்த்துவிட்டு இரவு சற்று நேரங் கழித்தே மாளிகை திரும்பினாள். திரும்பியவள் நேராக வீரபாண்டியன் அறைக்குள் நுழைந்து கோட்டையின் நிலைமையையும் உலாவிய வதந்தியையும் எடுத்துக் கூறினாள்.

பாண்டியர் படைத்தலைவன் மிக நிதானமாக அவள் சொன்ன அனைத்தையும் கேட்டுக் கொண்டான். அதைப் பற்றி மகிழ்ச்சியே தெரிவித்தான். "அச்சமும் ஒரு சமயத்தில் பெரும் ஆயுதந்தான் இளநங்கை," என்று கூறி மெல்லப் புன்முறுவலும் செய்தான்.

அவன் புன்முறுவல் அவளுக்கு வெறுப்பைத் தந்தது. "அச்சம் ஆயுதமா?" என்று வெறுப்பு குரலிலும் துவங்கக் கேட்டாள்.

"அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு, நான்குமே பெண்களுக்கு ஆயுதங்கள், நான் கோட்டையைப் பெண்ணாக வர்ணித்தது நினைவில்லையா உனக்கு?" என்று வினவினான்.

இளநங்கையின் கோபம் எல்லை கடந்தது. அவனைச் சுட்டுவிடும் விழிகளால் பார்த்தாள். "உங்கள் வீரமெல்லாம் எங்கே போய்விட்டது" என்று வினவினாள்.

"அதுதான் எனக்கும் தெரியவில்லை. எதற்கும் அதை நாளை இரவு தேடிப் பார்க்கிறேன்," என்ற வீரபாண்டியன் "நேரமாகிவிட்டது. நீ போய்க் கவசத்தைக் களைந்துவிட்டு உணவருந்தி வா" என்றான்.

இளநங்கை உள்ளம் வெடிக்க, உதடு துடிக்க, வெளியேறினாள் அவ்வறையை விட்டு. அன்றிரவு அவள் அவன் அறைக்குச் செல்லவில்லை. தன் அறையிலேயே படுத்தாள். படுத்ததும் உறக்கம் பிடிக்காததால் நள்ளிரவு எழுந்து தாழ்வரைக்குச் சென்றாள். சென்றவள் அடியோடு நிலை குலைந்து நின்றாள். வீரபாண்டியன் அறையில் பேச்சுக்குரல் கேட்டது. அதிலொன்று பெண்குரல்!



## அத்தியாயம் 64

# உத்தரவு

**வீ**ரபாண்டியன் அறையில் பேச்சுக்குரல்
கேட்டதையும், அதிலொரு குரல் பெண் குரலென்பதையுப்
உணர்ந்த உடனேயே விவரிக்க இயலாத பல
உணர்ச்சிகளின் வசப்பட்ட இளநங்கை, வெளித் தாழ்வரை
யிலிருந்தபடியே விண்ணை நோக்கிக் கண்ணை
உயர்த்தினாள். விண்மீன்களின் நிலையிலிருந்து
அப்பொழுதுதான் நள்ளிரவு லேசாக நகர்ந்து சில
நிமிடங்களைக் கடந்திருக்கிறதென்பதை உணர்ந்த அ
கட்டழகி, 'இந்த நிசி வேளையில் எந்தப் பெண்ணுடன்
பேசுகிறார் இவர்? எதற்காகப் பேசுகிறார்?' என்
கேள்விகளைத் தனக்குள் எழுப்பிக் கொண்டு வீர
பாண்டியன் அறைப் பக்கம் பார்வையை நன்றாக ஓட
விட்டாள். அறைக் கதவுகள் மூடப்பட்டிருந்தாலும்
கதவுகள் சரியாகப் பதியாததால் அவற்றின் இடை
வெளியிலிருந்து வெளியே கோடிட்டுக் கிடந்த வெளிச்சப
அறையின் விளக்கு அணைக்கப்படவில்லையென்பதை
அறிவித்தது. அதன் விளைவாகச் சற்றே மனக் கவலையை
துறந்தும் முற்றிலும் திருப்தியடையாத உள்ளத்துடன்
இளநங்கை அந்தக் கதவை நோக்கி அடிமேலடி வைத்து
பூனைபோல் நடந்து கதவை ஒட்டி நின்றாள். மற்றவ
பேசுவதை ஒட்டுக் கேட்பது ஒழுக்கக் குறைவென்பதை
அவள் உணர்ந்தே இருந்தாலும், பேசுபவன் தன்
கணவனென்ற நினைப்பும், அவனுடன் அந்த வேளையில்
தனித்து அறையிலிருப்பவள் ஒரு பெண்ணென்
எண்ணமும் அவள் சிந்தையைப் பெரிதும் உலுக்கியதால்
அவள் எதையும் சிந்தனை செய்யாமல் ஒட்டுக் கேட்டு

கொண்டே நின்றாள். நிற்க நிற்க அவள் வேதனை அதிகமாயிற்று. அடுத்த விநாடி உள்ளிருந்த பெண் உதிர்ந்த சிரிப்பொலியிலிருந்தே அவள் தனது பணிப்பெண் குறிஞ்சி என்பதை உணர்ந்த இளநங்கை, 'சே சே! பணிப் பெண்ணுடன் சிரித்து விளையாடுவது ஒரு தலைவனுக்கு அழகா? அதுவும் இந்த நேரத்தில்...?' என்று நினைத்த அவள் வீரபாண்டியன் மீது பெரும் சீற்றமும் கொண்டாள். அந்தச் சீற்றத்தைப் பன்மடங்கு பெருக்கும் உரையாடல் அடுத்தபடி நடந்தது.

"குறிஞ்சி! உன் தலைவி தூங்கிவிட்டாளா? நன்றாகப் பார்த்தாயா?" என்று வினவினான் வீரபாண்டியன்.

"நன்றாகப் பார்த்தேன் எசமான்! சற்று அசைத்தும் நித்திரையைச் சோதித்தேன். அடித்துப் போட்டது போல் உறங்குகிறாள் தலைவி," என்று மெல்ல நகைத்தாள் குறிஞ்சி.

"அத்தனை அலுப்பா அவளுக்கு?" என்று வினவினான் வீரபாண்டியன்.

"ஆம் எசமான்."

"அப்படியொன்றும் வேலையில்லையே?

"ஏனில்லை எசமாள் பகலிலும் இரவிலும் அவர்களுக்கு ஒழிவேயில்லை?"

"அப்படி என்ன வேலை குறிஞ்சி?"

"எனக்கெப்படித் தெரியும் எசமான்?" என்றாள் பணிப்பெண்.

சிறிது நேரம் உரையாடல் இல்லை. பிறகு வீர பாண்டியன் சொன்னான்: "குறிஞ்சி! மலைவாசிப் பெண்ணாயிருந்தாலும் நீ நகரப் பெண்களைவிடக் குறும்புக் காரியாயிருக்கிறாய்," என்று.

"மலையிலிருந்தாலும் மாநகரிலிருந்தாலும் பெண் பெண் தானே எசமான்?" என்றாள் குறிஞ்சி. அத்துடன் கேட்டாள், "என்னை எதற்கு எசமான் அழைத்தீர்கள்?" என்று.





"நான் எங்கே அழைத்தேன் குறிஞ்சி? என்னால் எழுந்திருக்கவும் முடியாதே. நீயாகத்தானே வந்தாய்?" என்ற வீரபாண்டியன் குரலில் விஷமம் இருந்தது.

"தலைவி இல்லாத சமயம் பார்த்துத் தங்களைச் சந்திக்கும்படி என்னைப் பணிசெய்ய அமர்த்தியபோதே உத்தரவிட்டிருக்கிறீர்களே" என்று சுட்டிக் காட்டினாள் பணிப்பெண்.

"ஆம் குறிஞ்சி! ஆனால் நீ அப்படி என்னைச் சந்திக்கவே யில்லையா?"

"எப்படிச் சந்திப்பேன் எசமான்? எப்பொழுதும் தங்களிடம் உபதளபதியிருக்கிறார்கள். இன்றிரவுதான் என்னமோ நீங்கள் தனித்து இருக்கிறீர்கள்."

இதற்கு வீரபாண்டியனிடமிருந்து பதில் வரவில்லை. பிறகு பெருமூச்சு ஒன்று மட்டும் வெளிவந்தது. அந்த நள்ளிரவின் நிசப்தத்தில் அந்தப் பெருமூச்சு தெளிவாகவே கேட்டது இளநங்கைக்கு. அந்தப் பெருமூச்சு பெரும் புயலென அவளை ஓர் உலுக்கு உலுக்கியது. "நான் அத்தனை இடைஞ்சலாகவா இருக்கிறேன் உங்களுக்கு?" என்று பல்லைக் கடித்துக்கொண்ட இளநங்கை மெள்ளக் கதவின் பக்கத்தில் சாய்ந்து தன்னைத் திடப்படுத்திக் கொண்டாள். அந்தச் சமயத்தில் மீண்டும் ஒலித்தது வீர பாண்டியன் குரல். "ஆம் குறிஞ்சி! இரவில் உன்னைச் சந்திக்க முடியவில்லை. இரவில் இளநங்கையிருக்கிறாள். பகலிலும் மற்றவர்கள் இருக்கிறார்கள். சில வேளை பகலிலும் அவள் இருக்கிறாள்," என்றான் வீரபாண்டியன்.

குறிஞ்சியின் பதில் உடனே வரவில்லை. "எசமான்! தலைவியிடம் உண்மையைக் கூறிவிட்டால் என்ன?" என்று வினவினாள் குறிஞ்சி சில வினாடிகள் கழித்து.

"கூடாது கூடாது! கூடவே கூடாது!" என்று பதற்றத்துடன் வந்தது பாண்டியப் படைத்தலைவன் குரல்.

"ஏன் எசமான் கூடாது?" என்று வினவினாள் குறிஞ்சி.

"உனக்குள்ள பக்குவம் அவளுக்கில்லை," என்று கூறினான் வீரபாண்டியன்.

"எந்தப் பக்குவத்தைக் குறிப்பிடுகிறீர்கள்?"

"எல்லாப் பக்குவத்தையுந்தான்," என்றான் வீர பாண்டியன்.

"அவர்களுக்கில்லாத பக்குவம் எனக்கு என்ன வந்து விட்டது? அவர்கள் நகரத்திலிருந்தவர்; நாகரிகம் உள்ளவர்கள்".

"இருக்கலாம் குறிஞ்சி. ஆனால் அவள் வேறு, நீ வேறு?"

"எப்படி எசமான்?"

"நாட்டு மலரின் தன்மை வேறு, காட்டு மலரின் தன்மை வேறு."

"இரண்டு தன்மைகளையும் எசமான் அறிந்திருக் கிறீர்கள்..."

"ஆம் குறிஞ்சி! காட்டு மலரின் தன்மை நாட்டு மலருக்கு இருக்க முடியாது. காட்டு மானின் அழகு, சாமர்த்தியம் வேறு. நாட்டு மானின் அழகு, சாமர்த்தியம் வேறு. இரண்டையும் எப்படி உபயோகப்படுத்த வேண்டுமோ அப்படி அப்படி உபயோகப்படுத்த வேண்டும்."

இதைக் கேட்ட குறிஞ்சி நகைத்தாள். வெளியில் கதவோரம் நின்ற இளநங்கையின் இதயம் வெடித்துவிடும் நிலையிலிருந்தது. கதவைத் தடாலென்று திறந்து உள்ளே செல்லலாமா என்று ஒருகணம் நினைத்தாள். 'சே! அதைவிடக் கேவலம் என்ன இருக்கிறது?' என்று நினைத்து அடுத்த வினாடி அவ்விடம் விட்டகன்று தன் பஞ்சணையில் வந்து விழுந்தாள்.

அப்படி விழுந்த இளநங்கையின் சித்தத்தில் பலப்பல எண்ணங்கள் எழுந்து அலைமோதின. குறிஞ்சிக்கும் வீர பாண்டியனுக்கும் நிகழ்ந்த உரையாடலிலிருந்து அவர்கள் பழக்கம் நீண்ட நாளாயிருக்கவேண்டுமென்று தோன்றியது.



அது எப்படி சாத்தியம் என்பது புரியாமல் திணறினாள். கொற்கைக் கோட்டைக் காவலன் மகள். 'இவளை விஜய வர்மன் அமர்த்தியதாக இவளே சொன்னாளே! அப்படி யிருக்க முன்னமேயே இவளை எப்படி வீரபாண்டியர் அமர்த்தியிருக்க முடியும்?' என்று தன்னைத்தானே வினவிக் கொண்டாள்.

'அப்படி நீண்ட நாள் பரிச்சயமில்லா விட்டால் நள்ளிரவில் இப்படி ஏன் அவர் அறைக்குச் செல்கிறாள், பேசுகிறாள்?' என்றும் வினவி, விடை காணாமல் தவித்தாள்.

இருந்தாலும், இத்தனையிலும் அவளுக்கு ஒன்று மட்டும் நிச்சயமாகத் தெரிந்தது. தான் அறியாத உறவு, அவர்களுக்குள் ஏதோ இருக்கிறது என்ற விஷயம்தான் அது. அது காதலாயிருக்க முடியுமென்று அவள் மனம் நம்ப வில்லை. ஆனால் அவள் செவிகள் கேட்ட சொற்கள் காதலையும் சோரத்தையுமே சுட்டிக் காட்டியதையும் எண்ணியதால் அவள் பெரிதும் குழம்பிக் கிடந்தாள்.

நீண்ட நேரம் அவள் படுத்துக் கிடந்தாள். எண்ணச் சுழலில். அத்தனை நேரமும் பணிப்பெண் திரும்பவில்லை. அடுத்த அறையில் அவள் என்ன செய்கிறாள் என்ற கேள்வி இளநங்கையின் சித்தத்தில் எழுந்து அவள் இதயத்தைச் சுக்குநூறாக உடைத்துக் கொண்டிருந்தது. நீண்ட நேரத்துக்குப் பின்பு அந்த அறையின் கதவு மெள்ளத் திறந்தது. பணிப்பெண் மெள்ள மெள்ள அடிமேலடி வைத்து அறைக்குள் வந்து, கண்ணை மூடிப் பொய்யுறக்கம் கொண்ட இளநங்கையைச் சில வினாடிகள் கூர்ந்து கவனித்தாள். "பாவம் பேதை இவள். இளவரசரைச் சரிவர உணர்ந்து கொள்ளாதவள்," என்று சற்று இரைந்தே சொற்களைக் கொட்டி விட்டு, இளநங்கையின் மஞ்சத்தின் அருகே கீழே விரித்திருந்த தனது படுக்கையில் உட்கார்ந்தாள். அப்படி உட்கார்ந்த நிலையில் மடியிலிருந்து எதையோ எடுத்து விளக்கொளியில் உற்று நோக்கினாள் அதைப் பார்த்துப் பரவசப்பட்டாள்.

பணிப்பெண் தரைப் படுக்கையில் உட்கார்ந்ததுமே ஒரு பக்கமாகப் பஞ்சணையில் திரும்பிய இளநங்கை அரைவாசிக் கண்ணைத் திறந்து பணிப்பெண்ணைக் கவனித்தாள். அவள் மடியிலிருந்து எடுத்த பொருளைக் கண்டதும் அடியோடு பிரமித்தே போனாள். வீர பாண்டியன் கையில் முதன் முதலில் தான் பார்த்த ராஜ முத்திரை அது. பொருநைத் தோப்பின் கரையில் குறுவாள் காயம் பட்டுத் தான் கிடந்த போது தனக்குச் சிகிச்சை செய்து பின்பு எந்த முத்திரையைத் தன்னிடம் அடையாளமாகக் கொடுத்துத் தந்தையிடம் காட்டச் சொன்னாரோ, எந்த முத்திரை அவர் கையைவிட்டு அசையாமலிருந்ததோ, எந்த முத்திரையின் பிரதிகள் பாண்டிய நாட்டின் முக்கிய படைத்தலைவருக்கு அனுப்பப் பட்டு வந்ததோ, அதே ராஜமுத்திரை, கேவலம் பணிப் பெண்ணொருத்தியின் கையில் அன்றிரவு பளிச்சிட்டதைக் கண்டாள் இளநங்கை. அந்த முத்திரையின் வைரங்கள் யானையாகவும், மீனாகவும், கோடாரியாகவும் பேரொளி வீசியதைப் பார்த்த இளநங்கை, 'பணிப்பெண்ணிடம் இளவரசர் தீவிர நம்பிக்கைதான் வைத்திருக்கிறார்,' என்று எண்ணி உள்ளூரப் பெரிதும் சினந்தாள். அந்தச் சமயத்தில் பணிப்பெண் அந்த இலச்சினையை நெற்றியில் ஒற்றிக் கொண்டதன்றித் தன் அதரங்களையும் அதன்மீது பொருத்தினாள். பிறகு அதை மார்புக் கச்சைக்குள் செருகி மறைத்துக் கொண்டு படுக்கவும் செய்தாள். அடுத்த சில வினாடிகளில் அவள் நன்றாக உறங்கிப் போனாள்.

இளநங்கைக்கு உறக்கம் அடியோடு பிடிக்காததால் வேதனையுடன் பஞ்சணையில் புரண்டாள். இளவரசனைப் பற்றிய வெறுப்பு அவள் இதயத்தில் மண்டிக் கிடந்தது. அந்த முத்திரையை அவர் பணிப்பெண்ணுக்கு அளித்தது, காம விகாரத்துக்கு அறிகுறியா, வேறெதற்காவது அறிகுறியா என்று விளங்கவில்லை அவளுக்கு. மன்னர்கள் பல பெண்களிடம் முறை கொள்வது வழக்கத்துக்கு முரண் பாடில்லையென்றாலும், ஒருத்தியுடன் வாழ்ந்த மன்னன்



யாருமில்லையென்பது வரலாறு தானென்றாலும், இள நங்கையின் மனம் பழக்கத்தையும் ஒப்பவில்லை, வரலாற்றையும் ஒப்பவில்லை. பலபடி அலைக்கப்பட்ட இதயத்துடன், புண்பட்ட மனத்துடன், புழுவெனத் துடித்த இளநங்கை விடியும் தருவாயில்தான் சற்றுக் கண்களை மூடினாள்.

அவள் விழித்தபோது விடிந்து நான்கு நாழிகைகளுக்கு மேலாகியிருந்ததால் அறைச் சாளரத்தின் மூலம் சூரிய வெளிச்சமும் புலப்பட்டது. மெள்ளப் பஞ்சணையில் எழுந்து உட்கார்ந்து கண்களை நன்றாகக் கசக்கிவிட்டுக் கொண்ட இளநங்கை, தலைக்குழலையும் கோதி விட்டுச் சேலையை நன்றாக இழுத்துப் போர்த்துக் கொண்டு தரையிலிருந்த படுக்கையைக் கவனித்தாள். படுக்கை காலியாயிருந்தது. பணிப்பெண் அங்கில்லை.

பணிப்பெண் எழுந்திருந்து அலுவல்களைக் கவனிக்கச் சென்றிருப்பாளென்று நினைத்து, 'குறிஞ்சி! குறிஞ்சி!' என்று இருமுறை குரலும் கொடுத்தாள். பதிலேதும் கிடைக்காததால் எழுந்து வெளியே சென்று காவலனொருவனை விளித்து, "பணிப்பெண் எங்கே பார். வரச்சொல்," என்று பணித்தாள்.

"குறிஞ்சி இல்லையம்மா," என்றான் வீரன்.

"எங்கே?"

"வெளியே போய்விட்டார்கள்."

"எப்பொழுது வருவாள்?"

"நேரமாகுமென்று தங்களிடம் சொல்லச் சொன்னார்கள்."

"என் வேலைகளை யார் செய்வது?"

"இந்த ஒரு வேளை மட்டும் தங்களையே கவனித்துக் கொள்ளச் சொன்னார்கள். அது மட்டுமல்ல..."

"வேறென்ன?"

"இளவரசரின் தேவைகளையும் கவனித்துக் கொள்ளச் சொன்னார்கள்."

இதைக் கேட்ட இளநங்கையின் இதயத்தில் கோபம் கொழுந்து விட்டெரிந்தது. 'என்ன திமிர் ஒரு பணிப் பெண்ணுக்கு? எனக்கே வேலையிடுகிறாளே?' என்று உள்ளுக்குள்ளேயே சீறிக்கொண்டு, சரேலென்று திரும்பி இளவரசன் அறைக் கதவை வேகமாகத் தட்டித் திறந்து கொண்டு அறைக்குள் நுழைந்தாள்.

படுக்கையில் சாய்ந்து உட்கார்ந்திருந்த இளவரசன் அவள் அவசரத்தையும், முகத்தில் சுடர்விட்ட கோபத்தையும் கண்டு வியக்கும் பார்வையொன்றை அவள் மீது செலுத்தினான். "என்ன இளநங்கை, ஏனிந்த அவசரம்?" என்று வினவினான்.

"குறிஞ்சி எங்கே?" என்றாள் இளநங்கை, குரலிலும் சீற்றத்தைக் காட்டி.

"வெளியே சென்றிருக்கிறாள்." சர்வசகஜமாகப் பதில் சொன்னான் இளவரசன்.

"என்னிடம் ஏன் சொல்லவில்லை?"

"நீ உறங்கிக் கொண்டிருந்தாயாம்."

"உங்களிடம் மட்டும் சொன்னாளாக்கும்"

"ஆம்."

"ஏன்?"

"நான் விழித்துக் கொண்டிருந்தேன்" என்ற இளவரசன் மெல்லக் கேலியாக நகைத்தான்.

அந்தக் கேலி நகை அவள் சினத்தை உச்சிக்குக் கொண்டு போகவே, "இரவிலும் விழித்துப் பகலிலும் உங்களால் விழிக்கமுடியும் போலிருக்கிறது," என்று கேட்டாள்.

"அவசியமானால் விழிப்பேன்", என்றான் இளவரசன்.

"இப்பொழுது அந்த அவசியம் அடிக்கடி வருகிறதோ?" என்று மீண்டும் சீறினாள் இளநங்கை.

"ஆம்."

"எதனாலோ?"





"எதிரி வாயிலில் இருப்பதால்."

"இன்றிரவு விழித்திருப்பீர்களோ?"

"இருப்பேன். இன்றுதானே சிங்கணன் தாக்கப் போகிறான்."

இளநங்கையின் விழிகளில் திடீரென ஏதோ யோசனை பிறந்தது. "ஆம்! ஆம்! இன்றிரவுதான் தாக்கச் சொல்லியிருக்கிறீர்கள்" என்று சற்று இரைந்தே சொன்னாள்.

"ஆம். இளநங்கை! இன்றிரவு சிங்கணன் தொல்லை ஒழிந்து போகும். நாம் கோட்டையை விட்டு வெளியேறலாம்," என்றான் வீரபாண்டியன்.

"அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டாமா?" என்று வினவினாள் இளநங்கை.

"ஏற்பாடுகளைச் செய்யத்தான் குறிஞ்சியை அனுப்பியிருக்கிறேன்?" என்றான் வீரபாண்டியன்.

"குறிஞ்சியா! பணிப்பெண்ணா!" என்று வினவிய இளநங்கையின் குரலில் வியப்புமிருந்தது; வேதனையுமிருந்தது.

"ஆம், குறிஞ்சிதான். அழகுடன் அறிவும் இணைந்திருக்கிறது அவளிடம்."

இளநங்கையின் இதயம் உணர்ச்சியின்றி உறைந்து விடும் நிலைமைக்கு வந்தது. "எனக்கு அறிவுமில்லை. அழகுமில்லை," என்றாள் அவள் அழாத தோஷமாக.

"உன் அறிவு, அழகு இவற்றின் தன்மை வேறு. அவள் அழகு, அறிவு இவற்றின் தன்மை வேறு. எதெதை எதெதற்கு உபயோகப்படுத்த வேண்டுமென்பது எனக்குத் தெரியும்."

"அப்படி என்ன வேற்றுமையைக் கண்டீர்கள்?"

இளவரசன் சற்றுப் புன்முறுவல் கொண்டான். பிறகு சொன்னான்: "பூசணிப் பூ அழகுதான். மார்கழி மாதத்தில் வாயிலை அலங்கரிக்க உதவும். தலைக்கு அது உதவுவதில்லை. மல்லிகை தலைக்குத்தான் உதவுகிறது. வாயிற் சாணத்தில் அதை வைப்பதில்லை. எது எதை எங்கெங்கு

வைக்க வேண்டும், எப்படி எப்படி உபயோகப்படுத்த வேண்டும் என்பதை நான் அறிவேன். நீ சென்று நீராடி உடையணிந்து எனக்கும் உணவு தயார் செய்து வா.”

இளவரசன் குரலில் கண்டிப்பு இருந்தது. அதற்கு மேல் பேச முடியாமல் சென்ற இளநங்கை அன்று பணிப் பெண் அலுவலில் இறங்கினாள். இரவில்தான் அந்த அலுவல் மாறியது. இரவு ஏறி நான்கு நாழிகைக்குப் பின் அவளைக் கூப்பிட்டனுப்பிய வீரபாண்டியன், “இளநங்கை! கவசங்கள் அணிந்துகொள். இந்த ஓலையில் இருக்கிறது உத்தரவு. அதன்படி நடந்துகொள்,” என்று ஓர் ஓலையை நீட்டினான்.

ஓலையைக் கையில் வாங்கிய இளநங்கை அதைப் பிரிக்காமலே கேட்டாள்: “இன்றிரவு உங்களுக்கு யார் பணிவிடை செய்வார்கள்?” என்று.

அந்தக் கேள்வியில் குத்தலிருந்தது. ஆனால் அதை வீரபாண்டியன் கவனிக்கவில்லை. “வீண் கேள்வி கேட்காதே. ஓலையில் கண்டபடி செய் போ,” என்று கூவினான் கடுங்கோபத்துடன்.



அத்தனை கோபத்தை அதுவரை அவனிடம் கண்ட தில்லை அவள். ஆகவே சற்று நடுக்கத்துடன் வெளிப் போந்து தன்னறைக்குள் வந்து ஓலையைப் பிரித்துப் பார்த்தாள். ஓலையிலிருந்த உத்தரவு அவளைத் திகைக்க வைத்தது. ‘இதென்ன விபரீதம்! என்னை அழித்துவிடப் பார்க்கிறாரா இவர்?’ என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டாள். அந்த ஓலை உண்மையில் தனது உயிருக்கே உலை என அவள் நினைத்தாள்.

அத்தியாயம் 65

# கனவு நிலை

இளவரசன் அளித்த ஓலைமீது கண்களை ஓட்டிய
இளநங்கை விவரிக்க இயலாத அச்சத்தை அடைந்து அந்த
ஓலையைத் தனது மரணத்துக்காக ஏற்பட்ட பயங்கர
ஓலையாக நினைத்தாளென்றால் அதற்குக் காரணம்
இருக்கவே செய்தது. ஓலையில் இருந்த வரிகள் நான்கேதா
னென்றாலும் அந்த நான்கு வரிகளும் தன்னை அழிக்க
ஏற்பட்ட நான்கு அஸ்திரங்களென்பதை அவள் சந்தேகமற
உணரவே செய்தாள். “உபதளபதி, இன்னும் இரண்டு
நாழிகைகள் கழித்து இங்கிருந்து புறப்பட்டுத் தெற்கு
வாயிலுக்கு போ. அங்கு தயாராயிருக்கும் முந்நூறு
வீரர்களையும் அழைத்துக் கொண்டு தெற்கு வாயிலைத்
திறந்துகொண்டு அப்புறமிருக்கும் கோட்டாற்றைக் கடந்து
அக்கரையில் தங்கியிரு. சரியாக நள்ளிரவில் எதிரி
படையின் ஒரு பகுதி தெற்கு வாயிலைத் தாக்கும்போது
உன் படையை எதிர்க் கரையிலிருந்தே இயக்கு. மற்
விவரங்களைத் தெற்கு வாயிலில் உணர்ந்து கொள்வாய்
என்றிருந்தது ஓலையின் வாசகம். அடியில் ராஜமுத்திரை
இருந்தது.

உள்ளே எழுந்து சுழன்ற உணர்ச்சியின் விளைவாக
திரும்பத் திரும்ப அந்த ஓலையைப் பன்முறை படித்தா
இளநங்கை. ‘எதிரி முற்றுகை பலமாயிருக்கும் மூன்று வாயி
களில் ஒன்றான தெற்கு வாயிலைத் திறப்பதாவது
முன்னூறு வீரர்களுடன் வெளிச் செல்வதாவது
போரிடுவதாவது! நான் வெளியே படைகளை அழைத்து
செல்லும் போது எதிரி கையைக் கட்டிக்கொண்டு சும்ம
இருப்பானா? அதுவும் அவன் படைபலத்துக்கு முன்

இந்த முந்நூறு பேர் எம்மாத்திரம்?' என்று இளநங்கை தன்னைத் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டாள். இவை மட்டுமல்ல அவள் இதயத்தில் எழுந்த கேள்விகள். 'இவர் சிங்கணனை வடக்கு வாயிலைத்தான் தாக்கச் சொல்லியிருக்கிறார்? அப்படியிருக்க இப்பொழுது தெற்கு வாயிலைத் தாக்குவானென்று எழுதியிருக்கிறாரே! ஒருவேளை அவனிடம் சொன்னதை மறந்து விட்டாரோ?' என்ற கேள்வியும் எழவே அதைப் பற்றி சந்தேகம் கேட்க எண்ணி மீண்டும் கையிலிருந்த ஓலையுடன் இளவரசன் அறைக்குச் சென்றாள். கையில் ஓலையுடன் வெகு வேகமாக அறைக்குள் நுழைந்த இளநங்கையை ஒரு வினாடி கூர்ந்து நோக்கிய இளவரசன், "என்ன இளநங்கை! எங்கு வந்தாய்!" என்று வினவினான். அப்படி வினவிய சமயத்தில் அவன் முகம் பார்க்க மிகப் பயங்கரமாயிருந்தது. கண்கள் கழுகுப் பார்வையை வீசிக் கொண்டிருந்தன. அந்தப் பார்வையை அவள் சில சமயங்களில் மட்டுமே பார்த்திருக்கிறாள்! வீரரவியின் வீரர்களோடு தன்னந் தனியே கொற்கை மாளிகையில் போராடிய போதும், கோட்டாற்றுக்கரைப் போரின்போதும், இன்னும் இரண்டு முறைகளே கண்டிருக்கிறாளென்றாலும் ஒவ்வொரு முறையும் அப்பார்வை அவளுக்குப் பயத்தையே அளித்தது. இருப்பினும் அந்தச் சமயங்கள் வேறு, தான் அவனுக்கு மனைவியாகிவிட்ட பிறகு நிலைமை வேறு, என்று நினைத்த அவள் சற்றுத் தைரியத்துடனேயே பேச முற்பட்டு, "எனக்கு ஒரு சந்தேகம் இருக்கிறது" என்றாள்.

"என்ன சந்தேகம்?" என்ற வீரபாண்டியன் குரல் வறண்டு கிடந்தது. அந்தக் குரலிலோ அவன் பார்வையிலோ அன்போ கனிவோ லவலேசமும் இல்லை. ஏதோ யந்திரமொன்று சொற்களை உதிர்ப்பது போன்ற உணர்ச்சியே ஏற்பட்டது அவற்றைக் கேட்ட இளநங்கைக்கு.

"இந்த உத்தரவுப்படி எதிரி தெற்கு வாயிலைத் தாக்க வேண்டும்" என்றாள் இளநங்கை.

"ஆம்."



"சிங்கணனிடம் வடக்கு வாயிலைத்தான் தாக்கச் சொல்லியிருக்கிறீர்கள்."

"ஆம்."

"அப்படியானால் அவன் தெற்கு வாயிலை ஏன் தாக்க வேண்டும்?"

"அவனிஷ்டம்."

"அவனிஷ்டமா! தெற்கு வாயிலைத் தாக்குவது அவனிஷ்டமா?"

"இருக்கலாம்."

"தெற்கு வாயிலைத் தாக்கினால் இக்கோட்டையை அவனெப்படிப் பிடிக்க முடியும்?"

"அதற்குத் தகுந்த திட்டங்கள் அவனிடமிருக்கலாம்."

அவள் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் மிக அலட்சிய மாகவும் வெறுப்புடனும் பதில் கூறினான் இளவரசன். அந்தச் சில நிமிடங்களில் அவள் பெரும் உண்மை யொன்றைப் புரிந்து கொண்டாள். பாண்டியர் படைத் தலைவனான இளவரசன் வேறு, காதலனான இளவரசன் வேறு என்ற உண்மைதான் அது. காதலால் கனிந்து குழைந்து சொற்படி கேட்டுச் சரசம் புரியும் காதலனான வீரபாண்டியனுக்கும், படைகளை நடத்த முற்படும் தளபதி வீரபாண்டியனுக்கும் அகண்டமான வித்தியாசமிருப்பதை உணர்ந்த இளநங்கை மேற்கொண்டு கேட்கத் திராணி யில்லாமல் அசைவற்று நின்றுவிட்டாள் பல விநாடிகள்.

வீரபாண்டியன் கழுகுப் பார்வை அவள்மீது நன்றாக நிலைத்தது. அவன் உதடுகள் உஷ்ணத்தைக் கக்கின. "இள நங்கை! இன்னும் ஏதாவது கேட்க வேண்டியது பாக்கி யிருக்கிறதா?" என்ற கேள்வி உதிர்ந்தது வீரபாண்டியனிட மிருந்து. குரல் விஷம் போலிருந்தது இளநங்கையின் செவிகளுக்கு.

"இருக்கின்றன," என்று கூறினாள் இளநங்கையும் அவன் கழுகுப் பார்வையளித்த அச்சத்தை உதறிவிட்டு.

"அவற்றை நாளை கேட்கலாம். போய் உத்தரவுப்படி நட" என்றான் வீரபாண்டியன்.

"உங்கள் உத்தரவைப் பற்றிய கேள்விகள் அவை" என்றாள் அவளும் பிடிவாதத்துடன்.

"என் உத்தரவு பற்றி இதுவரை கேள்வி கேட்டவர்கள் கிடையாது. கேட்டாலும் பதில் சொல்லும் பழக்கம் எனக்குக் கிடையாது. உத்தரவிட்டால் நிறைவேற்ற வேண்டியது உபதளபதியின் பொறுப்பு," என்ற வீரபாண்டியன் பதில் அவன் படைத் தலைவனென்பதைப் பறை சாற்றியது.

"நிறைவேற்றுவது அசாத்தியமானால்?"

"அசாத்தியம் என்ற சொல் என் சொற்களஞ்சியத்தில் இல்லை."

"என் களஞ்சியத்தில் இருக்கிறது."

வீரபாண்டியன் சற்று எழுந்தே மஞ்சத்தில் உட்கார்ந்தான். "உயிருக்குப் பயப்படுகிறாயா உபதளபதி?" என்றும் வினவினான். அவன் குரலில் வெறுப்பு மறைந்திருந்தது. அந்த இடத்தை இகழ்ச்சி ஆக்ரமித்துக் கொண்டிருந்தது. அந்த இகழ்ச்சி அவன் முகம் பூராவுமே பிரதிபலிக்கிறது; அவன் வெறுப்பைக்கூடத் தாங்கலாம் போலிருந்தது இளநங்கைக்கு; அவன் இகழ்ச்சிக்குரல் சாட்டையெனச் சாடியது அவள் உணர்ச்சிகளை, அவன் தன்னைக் கோழையென்று நினைத்ததை எண்ணிச் சீற்றம் கொண்ட இளநங்கை சொன்னாள், சீற்றம் குரலிலும் பிரதிபலிக்க, "நான் கோழையல்ல. என் உயிரைப்பற்றி நான் அஞ்சவில்லை," என்று.

"வேறு யார் உயிரைப்பற்றிக் கவலைப்படுகிறாய்!" என்று வினவினான் வீரபாண்டியன் இகழ்ச்சி குரலில் அதிகரிக்க.

"என்னுடன் வரப்போகும் முந்நூறு வீரர்களைப் பற்றி?" என்றாள் இளநங்கை.

"பாண்டிய வீரர்களைப்பற்றி நீ கவலைப்பட வேண்டாம். அவர்கள் சாவை வரவேற்பார்கள்."



"அதற்காக அவர்களைக் காவு கொடுக்
வேண்டுமா?"

"அதைத் தீர்மானிப்பது படைத் தலைவன் கடமை.

"அனாவசியமாகப் படைகளைக் காவு கொடுப்ப
படைத் தலைவன் கடமைகளில் ஒன்றல்ல."

"என் கடமையை எனக்கு உபதேசிப்பது உபதளப
யின் வேலையல்ல," என்று சர்வசாதாரணமாகச் சொன்
வீரபாண்டியன், அத்துடன் உரையாடல் முடிந்துவிட்
தென்பதை உணர்த்தப் பஞ்சணையில் மீண்டும் சாய்ந்
கொண்டான்.

இளநங்கையின் இதயத்தில் உணர்ச்சி அலைக
எழுந்து மோதிக் கொண்டிருந்தன. கேவலம் பொம்ம
போல் தன்னை வீரபாண்டியன் இயக்க முற்பட்ட
அவள் ரசிக்கவில்லை. உயிரையும் துறக்கக்கூடிய பயங்
அலுவலையும் தந்து அதை நிறைவேற்றச் செல்லும் தனக்
ஆதரவாகவோ அன்புடனோ ஒரு வார்த்தை கூட
சொல்லாத அவன் இரும்பு மனத்தை நினைத்துப் பார்த்
அவள் பெரும் துன்பத்துக்கு மட்டுமின்றித் துன்பங் கலந்
வியப்புக்கும் உள்ளானாள். இருப்பினும், வே
வழியில்லாததாலும், வீரபாண்டியன் யாரும் நெருங்
முடியாத நிலையை ஏற்படுத்திக்கொண்டு விட்டதாலு
அவனுக்குச் சிரம் தாழ்த்தி அறையை விட்டு வெ
யேறினாள் இளநங்கை. பிறகு வெறுத்த உள்ளத்துடன் தன
போர்க் கவசங்களை அணிந்து கொண்டதன்றித் தன்னிட
அவன் கொடுத்திருந்த ராஜமுத்திரை மோதிரத்தை
தனது தந்தப் பேழையிலிருந்து எடுத்து விரலில் தரித்
கொண்டு மாளிகையை விட்டுக் கிளம்பினாள். கிளம்
வெளியே வந்ததும் அவள் புரவி வாயிற்படியிலே
நின்றிருந்தது. அதைப் பிடித்து நின்ற வீரன் யார் உத்தரவி
மேல் அதை அந்தச் சமயத்தில் கொண்டு வந்தா
என்பதைக்கூட அறியத் திராணியில்லாத இளநங்
அதன்மீது ஆரோகணித்து நகரத்தின் வீதிகளில் சென்றா
அந்த வீதிகளில் இருந்த மாறுபாடு பெரும் விசித்திரத்
அளித்தது அவள் சிந்தைக்கு.

நள்ளிரவு வரை மக்கள் நடமாட்டமிருக்கும் அந்த வீதிகளில் நள்ளிரவு நெருங்க நான்கு நாழிகைக்கு மேலிருந்த நேரத்துக்குள்ளாகவே மக்கள் நடமாட்டம் எதையும் காணவில்லை அவள் கண்கள். சாதாரண மக்களுக்குப் பதில் கடைகளிலும் இல்லங்களிலும் ஆயுதம் தரித்த வீரர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அடிக்கடி அவளைத் தாண்டிச் சில புரவி வீரர்களும் சென்று கொண்டிருந்தார்கள் மக்கள் நடமாட்டமில்லாவிட்டாலும் பந்தங்களும் விளக்கு களும் மட்டும் ஜொலித்துக் கொண்டிருந்தன. மக்கள் வீடுகளுக்குள் செல்ல உத்தரவிடப்பட்டு விட்டதையும் நகர வீதிகளின் நிலையிலிருந்து உணர்ந்து கொண்ட இளநங்கை, "பந்தங்களும் விளக்குகளும் ஏனிப்படிப் பளிச்சிடு கின்றன?" என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டாள். எதிரி கோட்டைக்குள் நுழைவானென்று எதிர்பார்க்கப் படும்போதே வீதிகள் படைவீரர்களிடம் ஒப்படைக்கப் படுவது போர்ச் சம்பிரதாயமென்பதையும், அப்படி ஒப்படைக்கப்பட்டால் எதிரிக்கு விவரம் புரியாதிருக்கப் பெருவாரியான பந்தங்களும் விளக்குகளும் அணைக்கப் பட்டுக் கூடிய விரைவில் இருட்டாக வீதிகளை வைத் திருப்பதே வழக்கமென்பதையும் அவள் அறிந்திருந்தாள். வழக்கத்துக்கு மாறாக வெளிச்சம் அதிகமாயிருப்பதற்குக் காரணம் விளங்கவில்லை அவளுக்கு. தவிர வீரபாண்டியன் சரணடையப் போவதாக வதந்தியும் அதனால் பீதியும் பரவியிருந்த நகரம் திடீரென எப்படி மாறிவிட்டதென் பதையும், மக்கள் நினைத்த மாத்திரத்தில் பீதியை உதறி வீடுகளுக்குள் அடங்கிச் சிறிதும் சத்தமில்லாத மௌன நகரத்தை வீரபாண்டியன் எப்படிச் சிருஷ்டிக்க முடிந்த தென்பதையும் அவளால் நினைத்தும் பார்க்க முடிய வில்லை.

இருப்பினும் தன் கண் முன்னாலேயே அத்தனையும் நிகழ்ந்துவிட்டதைக் கண்ட இளநங்கை வியப்பு நிறைந்த சிந்தையுடன் மெள்ளத் தெற்கு வாயிலை நோக்கிச் செல்ல முயன்றவள் ஆகாயத்தைப் பார்த்தாள். தான் தெற்கு வாயிலை விட்டுப் புறப்பட வீரபாண்டியன் குறிப்பிட்ட



நாழிகைக்கு அதிக நேரம் இருப்பதை உணர்ந்து, தன புரவியைக் கோட்டையின் பிரதான வாயிலான கிழக் வாயிலுக்குத் திருப்பினாள். அந்த வாயிலை அடைந்தது இளநங்கையின் வியப்பு உச்சிக்குச் சென்றது. எதெ நடக்கக் கூடாதோ, அத்தனையும் நடந்து கொண்டிருந்த அங்கு. எதிரி நடமாட்டத்தைக் கவனிப்பதற்கு அத்திய வசியமான கோட்டை மதில் பந்தங்களும் விளக்குகளு அணைந்து கிடந்தன. எதிரியை நோக்கி மதிலில் இருக் வேண்டிய விற்பொறிகள் பழையபடியிருந்தாலும், மதிலி அடுத்த படியிலிருந்த வேலெறியும் பொறிகள் திரும் நகரத்தின் வீதிகளை நோக்கிக்கொண்டிருந்தன, சில தெற் வாசலையும் நோக்கிக்கொண்டிருந்தன. அந்த ஏற்பா களுக்குக் காரணம் விளங்காததால் இளநங்கை விற்கூட தலைவனை விளித்து, "வீரரே! ஏற்பாடுகள் தலைகீழாயிரு கின்றனவே?" என்று வினவினாள்.

"ஆம் அம்மணி!" என்று அவனும் ஒப் கொண்டான்.

"எதிரியிடம் சரணடையப் போகிறோமா அல் சண்டையிடப்போகிறோமா?" என்று வினவினா இளநங்கை.

"சண்டையிடப் போகிறதாகத்தான் தெரிகிற என்றான் விற்கூடத் தலைவன்.

"நேற்றுவரை சரணடையப் போவதாக வத இருந்ததே?" என்று மீண்டும் வினவினாள் இளநங்கை.

"ஆம் தேவி, இன்று பகல்வரைக்கும் அ நிலைதான்."

"பின் எப்பொழுது மாறியது?"

"மாலைக்குச் சற்று முன்பு."

"எப்படி மாறியது?"

"திடீரென விதவிதமான உத்தரவுகள், வினோதமா உத்தரவுகள் எல்லோருக்கும் வந்தன."

"யார் மூலம் வந்தன?"

"ஒரு பெண் மூலம். புரவியில் வெகுவேகமாக வந்து ஓலைகளைக் கொடுத்துப் போனாள்."

"இளநங்கையின் இதயத்தில் மெள்ளச் சந்தேகம் உதய மாயிற்று. "எப்படியிருந்தாள் அவள்?" என்றும் வினவினாள் சந்தேகத்துடன்.

"மலைவாசி மாதிரி இருந்தாள். ஆனால் புதியவளல்ல."

"என்ன புதியவளல்லவா?"

"அல்ல."

"எப்படித் தெரியும் உங்களுக்கு?"

"அடிக்கடி இரவு வேளைகளில் ராஜமுத்திரையுடன் வருவாள். அதைக் காட்டிவிட்டுக் கோட்டைக்கு வெளி யிலும் செல்வாள்."

"அப்படியா?"

"ஆம்."

"எத்தனை நாளாக நடக்கிறது இப்ப்டி?"

"நாலைந்து நாட்களாகவே நடக்கிறது."

"இதைப்பற்றி நீங்கள் என்னிடம் ஏன் தெரிவிக்க வில்லை?"

"இதில் தெரிவிப்பதற்கு என்ன இருக்கிறது தேவி! ராஜமுத்திரை மோதிரத்தை எதிரி காட்டினாலும் அதற்குப் பணியவேண்டியது வீரர்கள் கடமை. ஓலையில் உத்தரவு வந்தால் நிறைவேற்ற வேண்டியதும் கடமை." என்றான் விற்கூடத் தலைவன்.

இதைக் கேட்ட இளநங்கை ஆச்சரியம் நிரம்பிய விழிகளை விற்கூடத் தலைவன்மீது திருப்பினாள். "உத்தரவு கள் அர்த்தமற்றதாயிருந்தாலும் நிறைவேற்றவேண்டியது தானா?" என்றும் வினவினாள் ஆச்சரியம் குரலிலும் தொனிக்க.

விற்கூடத் தலைவன் முகத்தில் ஒரு விநாடி ஆச்சரியம் படர்ந்தது. பிறகு, "பாவம்!" என்றான் பரிதாபத்துடன்.

"எதற்குப் பாவம்?" என்று சீறினாள் இளநங்கை.



"நீங்கள் பெண்," என்றான் அவன் மீண்டும்.

"அதனாலென்ன?" சீற்றம் அதிகரித்த குரலில் கேட்டாள் வாணாதித்தன் மகள்.

"பெண்களுக்கே சந்தேகம் அதிகம், அதுவும் வீரபாண்டியர் உத்தரவுகளைப்பற்றியே சந்தேகம் ஏற்படு வதென்றால் பெண் சிருஷ்டி அவசியமா என்பதை யோசிக்கத்தான் வேண்டும்," என்ற விற்கூடத் தலைவன் அவளுக்குத் தலை வணங்கித் தனது அலுவல்களைக் கவனிக்கச் சென்றான்.

இளவரசனிடம் அவன் வீரர்களுக்கிருந்த அசையாத நம்பிக்கையைக் கவனித்த இளநங்கை பேராச்சரியத்துடன் அங்கிருந்த தெற்கு வாயிலுக்கு வந்தாள். அங்கு முந்நூறு பேர் கொண்ட படை தயாராக அணிவகுத்து நின்றது. அந்தப் படையின் இடையே இரண்டு வேலெறியும் பொறிகள் சக்கர வண்டிகளில் ஏற்றப்பட்டிருந்தன. அவள் வந்ததும், அந்தத் தெற்கு வாயிலைக் காத்து நின்ற படைத் தலைவன் வந்து அவள் குதிரைச் சேணத்தைப் பிடித்துக் கொண்டு, "அம்மணி, சகலமும் தயாராயிருக்கிறது?" என்றான்.

"சரி. படை நகரட்டும்," என்றாள் இளநங்கை.

"தாங்களும் புரவியிலிருந்து இறங்கிவிடுவது நல்லது," என்றான் அந்தப் படைத்தலைவன்.

"ஏன்?" என்று கேட்டாள் அவள்.

"வெளியில் நிலைமை அப்படியிருக்கிறது. கதவு திறந்ததும் நீங்களே புரிந்துகொள்வீர்கள்," என்று பணிவுடன் கூறினான் அவன். இருப்பினும் அவனும் ஏதோ உத்தரவை நிறைவேற்றுவதாகவே தோன்றியது அவளுக்கு. ஏதோ சதுரங்கக் காய்களை நகர்த்துவதுபோல் வீரபாண்டி யன் அனைவரையும் நகர்த்துவதைச் சந்தேகமற உணர்ந்து கொண்டாள். ஆகவே புரவியிலிருந்து இறங்கிப் படை வீரர்களைத் தன்னைத் தொடரச் சொல்லி வாயிற் கதவு களை நோக்கிச் சென்றாள். எங்கும் இருள் சூழ்ந்து நின்ற தால் வானிலிருந்த நக்ஷத்திரங்கள் அளவுக்கதிகமாகச் சுடர்

விட்டுக் கொண்டிருந்தன. அவற்றில் புஷ்பக் கொத்துப் போலிருந்த புனர்வஸு லேசாக மேற்கில் சாய்ந்துவிட்டதிலிருந்து வீரபாண்டியன் குறிப்பிட்ட நேரம் நெருங்கி விட்டதை உணர்ந்தாள் இளநங்கை. அந்த உணர்வு ஏற்படுவதற்கும் வாயிற்கதவுகள் ஓசைப் படாமல் திறப்பதற்கும் நேரம் சரியாகியிருந்தது. திறந்த கதவுகள் அவளை வியப்பில் ஆழ்த்தின. கண்ணெதிரே விரிந்த நிலை கனவு நிலையாக இருந்தது. சிறிதும் நம்பமுடியாத காட்சி விரிந்தது அவள் வேல்விழிகளுக்கெதிரே!

அத்தியாயம் 66

# தெற்கு வாயில் போர்

அவள் கண்களுக்கெதிரே விரிந்த நிலை சூன்ய நிலை. சிறிதளவும் சத்தமின்றி வெகு லாகவமாகத் திறக்கப்பட்ட தெற்கு வாயில் கதவுகளுக்கப்பால் சம்பிரதாயத்துக்குக்கூட எதிரிப் படைகள் இல்லை. பூமியை அத்தனை தூரம் நட்சத்திர கிரணங்களுக்குக் கிழிக்க முடியாததால் பெரும் இருளே சூழ்ந்து நின்றது வெளிப்பகுதியை.

நீர் வற்றிக் கிடந்ததால் நல்ல வெளுப்பாகத் தெரிய வேண்டிய கோட்டாற்று மடிகூட இருட்டில் வெண்மை மங்கிக் கிடந்ததால் அதிகமாக எதுவும் புலப்படவில்லை வெளியில். மலைகள் கிழக்குப் பகுதியில் இருந்ததன் விளைவாக உச்சிகளேதும் இளநங்கையின் கண்களுக்குப் புலப்படாவிட்டாலும், மலைச்சரிவின் ஒரு முனை மட்டும் ஆற்றுக்கு அக்கரையில் இறங்கி அடர்த்தியான தோப்பு ஒன்றையும் அங்கு சிருஷ்டித்திருந்தபடியால் ஆற்றுக்கு அக்கரையிலும் எதுவுமே தெரியவில்லை.

தெற்கு வாயிற் பகுதியின் இத்தகைய சூழ்நிலையை சூன்யநிலையே என்று கருதிய இளநங்கை அதைக் கண்டு வியந்ததன்றித் தன் உள்ளே அதன் காரணத்தை அலசவும் முயன்றாள். 'முப்புறமும் படைகளைக்கொண்டு வளைத்து நின்ற சேரர்படை தெற்குப் பகுதியிலிருந்து திடீரென மறைந்துவிட்டதன் காரணம் என்ன? வடக்கு வாயிலில் நுழையும்படி வீரபாண்டியன் சிங்கணனுக்குக் கூறியிருந்ததால், அந்தப்பக்கம் செல்லப் படைகளை இழுத்து விட்டானா போசளத் தளபதி? இருப்பினும் சில காவலரை

யாவது விட்டுவைக்காமல் அடியோடு அத்தனை வீரர்களையும் வேறுபுறம் இழுத்துவிடுவானேன்? தவிர, யாருமில்லாத இந்த வாயிலுக்கு வெளியே நான் சென்று செய்வதுதான் என்ன? என்று தன்னைத்தானே பல கேள்விகள் கேட்டுக்கொண்டு, அவற்றில் எதற்குமே விடை காணாதவளாய், திக்பிரமை பிடித்துச் சில வினாடிகள் நின்றாள். பிறகு வாளை உருவிக்கொண்டு சிறிதும் சத்தம் செய்யாமல் முந்நூறு காலாட் படைகளின் முகப்பில் நடந்தாள். இந்தச் சிறு படை நகர முற்பட்ட சில வினாடிகளுக்குள் தன்னைத் தொடர்ந்து வரும் வீரர்களுக்கும் ஏற்கனவே கட்டளை திட்டமாகக் கிடைத்திருப்பதை உணர்ந்தாள் இளநங்கை. வில்லும் அம்பறாத் தூணியும் கத்தியும் தாங்கிப் பின்வந்த முந்நூறு வீரர்களும் சிறிதளவும் சத்தம் செய்யாமலும், சத்தமேற்படுத்தக் கூடிய வாள் உறைகளையும் கையிற்பிடித்து அடக்கிக்கொண்டும் நடந்து வருவதைப் புரிந்து கொண்ட இளநங்கைக்கு அந்தச் சில விநாடிகளில் வீரபாண்டியன்மீது பெரும் மதிப்பும் கோபமும் ஒருங்கே உண்டாயின.



இருந்த இடத்திலிருந்தே எதிரியின் யோசனையைப் புரிந்துகொண்டு படைகளை நடத்தும் ஆற்றல் அவனுக்கு இருந்ததைப்பற்றி மதிப்பும், அந்த விஷயங்கள் எதையுமே தன்னிடம் பகிர்ந்து கொள்ளாதது பற்றிக் கோபமும் ஏற்பட்டது அவளுக்கு.

தெற்கு வாயிலிலிருந்து வெகு தூரம் தள்ளிக் கிழக்கு வாயிற்புறத்தில் எதிரி வீரர்களின் படையொன்று திரண்டு நின்றது. தவிர, மேற்கு வாயிலை ஒட்டியும் சில வீரர்கள் அணிவகுத்து நின்றார்கள். இரண்டு படையும் மதில் ஓரங்களில் நீண்ட தூரம் தள்ளி நின்றதாலும், கோட்டை மதிலிலிருந்த பாண்டியப் படையின் விளக்குகளும் பந்தங்களும் அணைந்துகிடந்ததாலும், கிழக்குப் பகுதிகளிலிருந்த எதிரியின் படைக்கும் மேற்குப் பகுதியிலிருந்த எதிரி வீரர்களுக்கும் இடையே இருந்த நீண்ட நிலப்பரப்பு ஆற்றுப் பகுதி உட்பட மையிருட்டில் மூழ்கிக் கிடந்ததை உணர்ந்தாள், இளநங்கை.



கிழக்கு, மேற்குக் கோடிகளில் உள்ள எதிரிகளிடம்
சொற்ப பந்தங்களிருந்ததாலும், வெளிச்சத்தில் இருப்பவர்
கள் கண்களுக்கு இருளிலிருப்பவர்கள் தெரியமாட்டார்
களாதலாலும், தானும் தனது படையும் எதிரி கண்ணில்
படாமல் ஆற்றுக்கு அக்கரை சென்றுவிட முடியும் என்பதை
அறிந்த இளநங்கை, பின்வந்த படையினரைத் தலைகுனிந்து
அடங்கி வரும்படி சைகை செய்து, தானும் தலைகுனிந்து
ஒடுங்கி மிக மெதுவாக நடந்து சென்றாள்.

கோட்டை மதிலிலிருந்து கோட்டாற்றின் மணல் மடி
சில அடி தூரமே இருந்ததால் கிட்டதட்டக் கோட்டையை
அணைத்தே ஆறு ஓடுவது போன்ற பிரமையை
ஏற்படுத்தியிருந்தது. தவிர, சற்றே எழும்பியிருந்த
ஆற்றங்கரைகூட அதிக உயரமில்லாதிருந்தாலும், ஏறி
இறங்கிவிட்டால் அந்தக் கரையே தனது படைகளை
எதிரிகளிடமிருந்து மறைத்து விடுமென்பதை உணர்ந்தாள்
இளநங்கை. அந்த உணர்விலும் பெரும் வியப்பு ஏற்பட்
டிருந்தது அவளுக்கு.

அத்தனையும் எத்தனை உன்னிப்பாகக் கவனித்திருக்
கிறான், இளவரசன் என்ற வியப்பு அவள் இதயத்தைப்
பூரணமாக ஆக்ரமித்துக் கொண்டிருந்தது. இளவரசன்
கோட்டையை விட்டு வேவுபார்க்கச் சென்ற நாட்களில்,
கோட்டையின் சுற்றுப்புறத்தைக் கவனித்து அதன்
உபயோகத்தையும் நிர்ணயித்திருக்க வேண்டுமென்ற
முடிவுக்கு வந்தாள் இளநங்கை.

அடிமேலடி வைத்துச்சென்ற அவளை நெருங்கிப்
பின் தொடர்ந்த வீரர்கள் சிறிதளவும் சத்தம் செய்யாததால்
யாருக்கும் அந்தப் பகுதியில் விவரமே புரியவில்லை. வேல்
பொறிகளுக்குப் பொறுப்புள்ள வீரர்கள் தரையில் அதை
வைத்து உருளைகளைக்கொண்டு நகர்த்தாமல் கைகளில்
தூக்கிக்கொண்டு வந்ததால் பெரும் பொறிகளிரண்டு
வெளியே செல்வது யாருக்கும் புரியவில்லை. சற்றுச் சத்தம்
செய்தாலும் படை நகருவது எதிரிக்கு லேசாகப்
புரிந்தாலும், கிழக்கிலும் மேற்கிலும் உள்ள எதிரிப் படைகள்

கண்ணிமைக்கும் மாத்திரத்தில் இருபுறத்திலும் நெருங்கி முந்நூறு பேரை மூன்று வினாடிகளில் நொறுக்கி அழித்துவிட முடியுமென்பதையும் உணர்ந்திருந்த இளநங்கை வெகுலாகவமாகப் படையை நடத்திச் சென்றாள். ஆற்றங்கரை மேட்டின்மேல் தவழ்ந்து ஏறி மறுபுறம் இறங்கினாள். பின் வந்த முந்நூறு பேரும் மண்டியிட்டுப் ஊர்ந்தும், முன்புறத்தில் கைளை ஊன்றி வளைந்து தாவியும் கரையைத் தாண்டியதும், ஆற்றுக்குள் இறங்கியபின் சற்று துரிதமாகப் பயணம் நடந்தது.

ஆற்றில் மணலே முக்கால்வாசி இருந்தது. எதிர்க் கரையை அணைத்து மட்டும் சிறு வாய்க்கால் ஓடிக் கொண்டிருந்தது. ஆறு மிகவும் சிறியதாகையால் அதை வெகு எளிதில் கடக்க முடியுமென்றாலும் மணலில் முந்நூறு பேர் அதிக வேகமாக நடந்தால் மணலின் சரக் சரக்கென்ற சத்தம் கேட்குமாதலால் அதிகத் துரிதமில்லாமலும் அதிகத் தாமதமில்லாமலும் இளநங்கை தன் வீரர்களை அழைத்துக் கொண்டு ஆற்றைக் கடந்து எதிர்க்கரையை அடைந்தாள். அங்கிருந்து கோட்டையையும் சுற்றுப்புறத்தையும் எடை போட்ட இளநங்கை வேல்பொறிகளைத் தான் இயக்க வேண்டிய வகையை நிர்ணயித்துக் கொண்டாள்.



தவிர, ஆற்றின் அக்கரை வேறு அவளுக்கு ஒருவித வியப்பைத் தந்தது. ஆறு நகரத்திற்குத் தெற்கில் ஓடினாலும் அதன் இரு முனைகள் சற்று உள் நெருங்கி இரண்டு இடங்களில் கோட்டை மதிலுக்கருகில் மூக்குகள் போல் நீட்டிக்கொண்டிருந்ததையும், அந்த மூக்குகளில் காடு மிக அடர்த்தியாக இருந்ததையும் கவனித்தாள் கொற்கைக் காவலன் மகள். அந்த மூக்குகளிரண்டும் சற்று மேட்டுப் பகுதியான மலைச் சரிவிலிருந்ததையும் கவனித்து, தன் வேல் பொறிகளை அமர்த்த அந்த இடங்களே சரியானவை என்பதை உணர்ந்தாள். ஆகவே, வீரனொருவனை அழைத்து வேல் பொறி இயக்குபவர்களில் ஐவரை ஒரு மூக்கிலும், மற்றும் ஐவரை இன்னொரு மூக்கிலும் பொறிகளைக் கொண்டு தயாராக இருக்குமாறும் தான்



சைகை செய்ததும், பொறிகளை இயக்குமாறும் பணிக்க உத்தரவிட்டாள். அவள் உத்தரவுப்படி மேட்டுக் காட்டு மூக்குகளிரண்டையும் நோக்கி இரு வேல் பொறிகள் தூக்கிச் செல்லப்பட்டன. மீதி வீரர்களை இரண்டு அணிகளாகப் பிரிந்து நிற்குமாறு உத்தரவிட்டுத் தான் நடுவில், அதாவது தெற்கு வாயிலுக்கு நேர் எதிரில் உருவிய வாளுடன் நின்று கொண்டாள்.

அவள் அந்த ஏற்பாடுகளைச் செய்து முடிப்பதற்கும் தெற்கு வாயில் கதவுகள் மீண்டும் சத்தமின்றிச் சாத்தப் படுவதற்கும் நேரம் சரியாயிருந்தது. நடுநிசி வரக் கிட்டத் தட்ட ஒரு நாழிகை இருந்ததால் அவள் தனது வீரர்களுடன் காத்து நின்றாள், கோட்டைக் கதவுகளின் மீதும், எதிரிப் படைகளின் மீதும் கண்களை மாறிமாறி ஓட்டிக் கொண்டு அப்பொழுதும் எதிரிப்படை நடமாட்டம் ஏதுமில்லை. கோட்டையின் பிரதான வாயிலான கிழக்கு வாயிற்பகுதியிலும், கடல் வாயிலான மேற்கு வாயிற்பகுதி யிலும் இருந்த இரண்டொரு பந்தங்களின் வெளிச்சம் லேசாகத் தெரிந்ததால், அங்கு படைகள் தயாராயிருந்தும் அவை அசையாததைக் கவனித்தாள். இப்படி இருபுறமும் படைகளை ஸ்தம்பிக்கச் செய்யவேண்டிய அவசியமென்ன வென்று இளநங்கைக்கு லவலேசமும் புரியாததால் அவள் பெருமூச்சு விட்டாள்.

அந்தச் சமயத்தில் அவள் தோள்மீது யாரோ கையைப் பின்புறத்திலிருந்து வைத்தார்கள். "யாரது?" என்று சிறித் திரும்பிய இளநங்கையின் எதிரே புன்முறுவலுடன் நின்றிருந்தாள் பணிப்பெண் குறிஞ்சி.

அவளைக் கண்டதும் இளநங்கையின் இதயத்தில் கோபம் பொங்கி வந்தது. "நீ எப்படி இங்கே வந்தாய்?" என்று வினவினாள் உபதளபதி.

"நான் அடிக்கடி இங்கு வருவது வழக்கம்," என்றாள் பணிப்பெண்.

"உன்னை எப்படி வீரர்கள் வெளியே விடுகிறார்கள்?" என்று வினவினாள் இளநங்கை ஆத்திரத்துடன்.

"உத்தரவிருக்கிறது, விடுகிறார்கள்."

"இளவரசர் சலுகையோ?"

"சலுகையல்ல தேவி, உரிமை."

"உரிமையா! என்ன உரிமை?"

"மலைவாசிகளுக்குள்ள உரிமை. மலைவாசிகள் எப்பொழுதும் நகரங்களுக்குள் போகலாம், வரலாம். இதை யாரும் தடுக்க முடியாது. நாங்கள் தான் நகர வைத்தியர் களுக்கு மலையிலிருந்து மூலிகைகள் கொண்டு வந்து தருகிறோம். எதிரி மருத்துவர்களுக்கு மூலிகைகள் தருவதும் நாங்கள்தான். ஆகவே எங்களை யாரும் தடுப்பதில்லை. இது நீண்ட நாள் வழக்கம்."

"உன்னை மருத்துவப் பெண் என்று இருபுறத்தாரும் எப்படி அறிவார்கள்?" என்று வினவினாள் இளநங்கை.

"அறிய வேண்டிய அவசியமில்லை," என்றாள் பணிப் பெண் குறிஞ்சி.

"ஏன்?" என்று ஏதும் விளங்காமல் கேட்டாள் நங்கை.

பதிலுக்கு, "இதோ பாருங்கள்,' என்று இரண்டு முத்திரை மோதிரங்களை எடுத்துக் காட்டிய பணிப் பெண் கூறினாள், "இது பாண்டிய நாட்டு ராஜமுத்திரை. இது போசள நாட்டு ராஜமுத்திரை. பாண்டிய நாட்டு ராஜ முத்திரை எனக்குக் கோட்டைக் கதவுகளைத் திறந்துவிடும். போசள நாட்டு ராஜமுத்திரை எதிரிப் படைகள் என்னைத் தொடாதபடி செய்யும்," என்று.

ஆச்சரியத்துடன் குறிஞ்சியையும் நோக்கி முத்திரை மோதிரங்களையும் நோக்கிய இளநங்கை, பணிப்பெண் அடிக்கடி கோட்டையைவிட்டு வெளியே சென்று திரும்ப முயன்ற காரணங்களை உணர்ந்து கொண்டாலும், அதைப் பற்றிப் பல விஷயங்களைக் கேட்கத் துடித்தாள். ஆனால் பணிப்பெண் அவளை அதிகம் பேசவிடாமல், "அம்மணி தர்க்கத்துக்கும் விளக்கத்துக்கும் இதுவல்ல சமயம். அதோ பாருங்கள்," என்று ஆகாயத்தைச் சுட்டிக் காட்டினாள்.





ஆகாயத்தில் கண்களை உயர்த்திய இளநங்கை நள்ளிரவு நெருங்கி விட்டதை உணர்ந்தாள். அதுதான் சிங்கணன் வடக்கு வாயிலைத் தாக்கி உள் நுழைய வேண்டிய சமய மென்பதை அறிந்தாள். அதை அறிந்து தலைதாழ்த்து முன்பே பணிப்பெண் அவளைத் தொட்டு அசக்கி, "இப்பொழுது இப்படிப் பாருங்கள்," என்று கிழக்கு வாயிலைச் சுட்டிக் காட்டினாள்.

கிழக்கு வாயிலுக்கெதிரேயிருந்த சேரப் படையின் ஒரு பகுதி மெள்ள வடக்கு வாயிலை நோக்கி நகர்ந்தது. ஒப்புக்கொண்ட ஏற்பாட்டின்படி சிங்கணன் நடக்கிறா னென்பதை உணர்ந்த இளநங்கை பணிப்பெண்ணை நோக்கிக் கேட்டாள். "எதிரிப்படை வடபுறம் செல்கிறது. இந்தத் தென்புறத்தில் எனக்கென்ன வேலை?" என்று.

"சற்றுப் பொறுங்கள் அம்மணி," என்றாள் பணிப் பெண்.

"எதற்குப் பொறுக்க வேண்டும்?" சீற்றமிருந்தது இளநங்கையின் குரலில்.

"அம்மணி!"

"என்ன குறிஞ்சி?"

"உங்களுக்குத் திறமையிருக்கிறது. ஆனால் பொறுமை யில்லை."

"என்ன?"

"ஆம், அம்மணி, அது மட்டுமல்ல, உங்களுக்குச் சக்தி யிருக்கிறது; படைத் தலைவரிடம் பக்தியில்லை."

"குறிஞ்சி!" ஆத்திரத்துடன் வெளிவந்தது இளநங் கையின் குரல்.

பணிப்பெண் சிறிதும் அதற்கஞ்சவில்லை. "அம்மணி! வீரபாண்டியர் காரணமின்றி உங்களைத் தெற்கு வாயிலுக்கு வரச் சொல்லமாட்டார். இங்கு காத்திருக்கவும் பணிக்க மாட்டார். அவரிடம் நம்பிக்கை வைத்து எதிரிகளின் அசைவைக் கவனியுங்கள்."

மிதமிஞ்சி இதயத்தில் எழுந்த கோபத்தால் இளநங்கை பணிப்பெண்ணுக்குப் பதில் சொல்லவில்லை.

'இவள் யார் வீரபாண்டியரைப் பற்றி எனக்குச் சொல்ல?' என்று தனக்குள் கேட்டுக் கொண்டாள்.

நிமிடங்கள் நகர்ந்தன. அந்த வேகத்தில் எதிரிப்படைகளின் கதியும் மெல்ல மெல்ல மாறத் துவங்கியது. கிழக்கு வாயிலிலிருந்து வடக்கு வாயிலை நோக்கி நகர்ந்த எதிரிப் படை மிகச் சிறியது. அதன் பின்னாலிருந்த பெரும் அணி வகுப்பொன்று தெற்கு வாயிலை நோக்கி நகர்ந்தது. பந்தங்களை அணைத்துவிட்டு இருளில் வந்த அந்தப் படையின் முகப்பில் பத்து யானைகள் சென்றன. பின்னால் விற்களையும் வாட்களையும் தாங்கிய காலாட்படையும், அதற்குப் பின்னால் சிறிய புரவிப் படையும் வந்தன. அதே சமயத்தில் மேற்கு வாயிலிலிருந்த படையின் ஒரு பகுதியும் தெற்கு வாயிலை நோக்கி நடந்தது.

உண்மை மெள்ள மெள்ள விளங்கலாயிற்று இளநங்கைக்கு. 'சிங்கணன் எத்தனை அயோக்கியன?' என்று ஒரு முறை நினைத்தாள். 'சே சே! இப்படி நடப்பது அவன் கடமை. எத்தனை சிறந்த படைத்தலைவன் அவன்' என்று மறுகணம் எண்ணினாள். சிங்கணனின் பயங்கர யுக்தி அவளுக்குப் புரிந்தது. வீரபாண்டியன் ஒருவனைத் தவிர வேறு யாராயிருந்தாலும் அந்தப் பயங்கரப் யுக்திக்குப் பலியாகி விடுவார்கள் என்பதை அவள் அறிந்து கொண்டாள். அதற்கு மேல் எண்ணங்களை ஓட்டாமல் பணிப்பெண் குறிஞ்சியை விளித்து, "வந்தது வந்தாய்! இந்த உத்தரவுகளை வீரர்களிடம் பரப்பு," எனச் சில உத்தரவுகளைக்காதோடு காதாகச் சொன்னாள்.

அந்த உத்தரவுகள் வீரர்களுக்கு உணர்த்தப்படுவதற்கும் எதிரிப் படைகள் தெற்கு வாயிலைத் தாக்குவதற்கும் நேரம் சரியாயிருந்தது அடுத்த வினாடி சிங்கணன் யானைகள் தெற்கு வாயிற் கதவுகள் மீது தடால் தடாலென மோதின. பெரும் வாரைகளிரண்டும் கதவுகளை உடைக்க முற்பட்டன. அமைதியாயிருந்த தெற்கு வாயிலில் திடீரெனப் பேரொலிகள் கிளம்பின. அமைதியுற்றிருந்த அந்தப் பகுதியில் அமைதி உடைந்தது. சூன்ய நிலை சூறாவளி நிலைக்கிடங் கொடுத்தது. மும்முரமான போர் வெகு துரிதத்தில் மூண்டுவிட்டது



## அத்தியாயம் 67

# வஞ்சகத் திட்டம்

நேரம் நடுநிசியாகி நகரம் அடங்கிக் கிடந்
காரணத்தாலும், எதிரிப் படைகள் சத்தம் ஏதுமின்றி நகர்ந்
காரணத்தாலும், பூர்ண அமைதி நிலவியிருந்
கோட்டாற்றுக் கரைப் பகுதி எதிரியின் திடீர்
தாக்குதலால், அரவத்தின் சிகரமாக அரைக் கணத்தில்
ஆகிவிடவே, பயங்கர ஒலிகள் வானைப் பிளந்தன. தெற்குப்
பெரு வாயிலில் மோதிய பத்து யானைகளின் மத்தகங்க
ளாலும் இடையே மோதிய மரத்தண்டுகளாலும் எழுப்பிய
தடாலென்ற பேரொலி இரவின் நிம்மதியைத் திடீரெனக்
கிழித்துவிடவே, கோட்டாற்றுக் கரையெனும் மாநகர்ப்
புறப்பகுதி போர்ப் பேயின் ஆட்டத்துக்கு இடங்
கொடுத்தது. யானைகள் வாயிற் கதவுகளின் மேல் மோத
ஆரம்பித்ததுமே எதிரிப் படையின் முன் பகுதியிலிருந்த
வீரர் சிலர் கையில் பந்தங்களைக் கொளுத்திப்
பின்னாலிருந்தவர்களுக்கு வெளிச்சங்காட்டவே, பின்னா
லிருந்த வீரர்கள் கோட்டைத் தளங்கள் மீது அம்புகளையும்
வேல்களையும் வீசியதால், அவை மதிலின் மீது கணீர்
கணீரென்று விழுந்த சத்தங்களும் எங்கும் கேட்டன.

ஆற்றின் அக்கரையிலிருந்து எதிரியின் போர்
முறையைக் கவனித்த இளநங்கை பெரிதும் வியப்பின்
வசப்பட்டாள். எதிரியின் படைவீரரில் கிட்டத்தட்ட
நாலாயிரம் பேருக்கு மேல் தெற்கு வாயிலைத் தாக்க
நின்றது திடீரெனக் கொளுத்தப்பட்ட பந்தங்களின்
வெளிச்சத்தில் தெரிந்ததால் இத்தகைய பெரும் படையைத்
தெற்கு வாயிலிலுள்ள சுமார் ஐந்நூறு பாண்டிய வீரர்கள்
சமாளிப்பது கஷ்டமென்பதை உணர்ந்த இளநங்கை

போரின் விளைவைப் பற்றிச் சிறிது அஞ்சினாலும், உப தளபதியென்ற முறையில் தனது கடமையைச் செலுத்த எண்ணி வீரனொருவனைப் பந்தமொன்று கொளுத்தச் சொல்லி, அதை எடுத்து ஒருமுறை கிழக்குப் புறமும், பிறகு மேற்குப்புறமும் ஆட்டினாள். அடுத்த விநாடி ஆற்றங்கரை கிழக்கு மூக்கின் காட்டிலிருந்த வேல் இயக்கப் பொறியிலிருந்தும், மேற்கு முகப்பிலிருந்த பொறியிலிருந்தும் வேல்கள் பரபரவென்று தெற்கு வாயிலை நோக்கிப் பறந்தன. எதிரிப் படையின் முகப்பில் யானைகள் சென்றதைப் பார்த்த உடனேயே அவற்றை நோக்கி வேலெய்யுமாறு வீரர்களுக்குப் பணிப்பெண் மூலம் இளநங்கை உத்தரவு அனுப்பியிருந்ததால் வேல்கள் யானைகளை நோக்கியே குறி வைக்கப்பட்டன. திடீர் திடீரென்று பக்கங்களிலும் முதுகுகளிலும் மத்தகங்களிலும் பாய்ந்துவிட்ட, கூரிய வேல்களால் யானைகள் பெரிதாக அலறின. அலறியது மட்டுமின்றி யானைகள் வெகுண்டு மறுபுறம் திரும்பவும் செய்தன. திரும்பிய யானைகளைப் பார்த்து மீண்டும் எறியப்பட்ட வேல்கள் இரண்டொரு யானைகளின் துதிக்கைகளிலும் கண்களிலும் பாய்ந்து விட்டமையால் யானைகள் பேரலறலாக அலறித் திரும்பி ஓடமுயன்றும், பிளிறியும் பின்னாலிருந்த வீரர்களைத் தாக்கின. சிலரைத் துதிக்கையால் எடுத்தெறிந்தன. சிலரைக் கால்களால் தாக்கின. சிலரைநோக்கித் தலைகுனிந்து பாய்ந்தன. சிலரைக் கால்களால் துவைக்கவும் செய்தன. எதிர்பாராது ஏற்பட்ட இந்த நிலை எதிரிப்படைகளில் சிறிதளவு குழப்பத்தையும், பெரிதளவு பிளவையும் விளைவிக்கவே, அணிவகுப்பு ஓரளவு கலையவே செய்தது. வரிசையைப் பிளந்த யானைகள் ஓட வழிவிட்ட படையினர், மீண்டும் கூடி வாரைகளைக் கொண்டு கதவுகளை இடிக்கலாயினர். ஆனால் யானைகளின் இடிக்குத் திறக்காத அந்தப் பெருங்கதவுகள் வாரைகளின் இடிக்கு லேசில் இடங்கொடாதென இளநங்கை நினைத்தாள். அதிலும் வியக்கும் விளைவே ஏற்பட்டது. வாரைகளின் முதல் இடியிலேயே கதவுகள் திடீரென



அகன்று தாங்களாகவே திறந்துவிட்டதால், எதிரிப்படை வெகு வேகத்துடன் உள்ளே நுழைந்தது.

ஆனால் படை முழுவதும் நுழையவில்லை. பாதிப் படையே நுழைந்தது. திடீரெனப் பாதிப்படை வெளியிலேயே ஸ்தம்பித்து நின்றது. வாயிலையே நோக்கிக் கொண்டிருந்த இளநங்கை உள்ளே கடுமையான போர் நிகழ்வதை உணர்ந்தாள். திடீரென அலறிய வீரர்களின் கோஷங்களும், பாய்ந்த புரவிகளும், பின் தங்கிவிட்ட படையின் குழப்பமும் கோட்டைக்குள்ளே எதிரி சற்றும் எதிர்பாராத நிலையில் சிக்கிக்கொண்டு விட்டதைக் குறிப்பிட்டதால், இளநங்கை தனது கடமையையும் மேற்கொண்டு செய்ய முற்பட்டாள். தனது முந்நூறு வீரர்களில் வேல் பொறி இயக்க வீரர்களைத் தவிர மற்றவர்களைச் சற்று ஆற்று மணலில் இறக்கி, வில் இயக்கும் நிலைக்குக் கொண்டு வந்து நிறுத்தி, அம்பெய்யுமாறு பந்த மாட்டிச் சைகை செய்யவே, எதிரிப்படையின் பின்பகுதி மீது அம்புகள் பறந்தன.

முதலில் பறந்த அம்புக் கூட்டத்தால் தாக்குண்ட வீரர்கள் அதிகமில்லையாயினும் எதிர்பாராமல் பின்னாலிருந்து தாக்குதல் வந்ததால், எதிரிப்படை சிறிது குழம்பவே செய்தது. அந்தப் படையின் நடுவிலிருந்த உப தலைவனொருவன் தனது படைப் பகுதியைப் பின் தாக்குதலிலிருந்து பாதுகாக்க நன்றாகப் பின்னடையச் செய்து, மீண்டும் கிழக்குப் புறமாக நகர உத்தரவிட்டான். அதனால் அம்பு வீச்சு எல்லையிலிருந்து படை நகர்ந்து விட்டாலும், அதில் ஓரளவு குழப்பம் இருக்கவே செய்தது. அந்தக் குழப்பத்தை அதிகமாக்கவோ என்னவோ பிரதான வாயிலான கிழக்கு வாயிலிலும் திடீரெனப் பேரரவம் கேட்டது. இந்த அரவம் எதிரியிடைப் பெரும் சந்தேகத்தை ஏற்படுத்தியிருக்கவேண்டும். அந்தப் பகுதியை நோக்கித் தெற்கு வாசலைத் தாக்கி நின்ற படையின் பின் பகுதி நகர்ந்தது. அதே சமயத்தில் எதிர்பாராத மற்றொரு நிகழ்ச்சியும் ஏற்பட்டது.

தூரத்தே இருந்த சிங்கணன் துணிக்கூடாரமும் துணைத் தலைவர்களுக்கு அமைக்கப்பட்ட பாசறை ஓலை வீடுகளும் தீப்பற்றி எரிந்தன. அந்தத் தீயினால் ஏற்பட்ட வெளிச்சம் மலைச்சரிவு பூராவையும் தெளிவாக எடுத்துக் காட்டியதால், அந்தப் பாசறைப் பகுதிகளை அடுத்துத் தங்கியிருந்த படைப்பிரிவிலும் பெரும் குழப்பம் ஏற்பட்டது நன்றாகப் புலப்பட்டது இளநங்கையின் விழிகளுக்கு. தெற்கு வாயில் போரைக் கவனித்துக்கொண்டு தனது பெரும் புரவியின்மீது படைகளின் இடையில் நின்றிருந்த சிங்கணன் திடீரெனக் கொம்பொன்றை எடுத்து ஊதவே மேற்குப் பகுதியின் படை பாதி பின்னடைந்தது; கிழக்குப் பகுதியின் படையும் பின்னடைந்தது. ஆனால் அந்தப் படை பூராவும் வெளிவரவில்லை. உள்ளே நுழைந்த பகுதியில் இருந்து ஒரு வீரனோ புரவியோ வெளியே தலைகாட்டவில்லை. அதற்குப் பதில் பாண்டியர் புரவிப் படைப் பிரிவொன்று சூறாவளி வேகத்தில் வெளிவந்தது.



அது வந்த வேகத்தையும், அணிவகுப்பு முறையையும் பார்த்த இளநங்கை தெற்கு வாயிலில் உள்ளே நுழைந்த எதிரிப் படையின் பகுதி அங்கேயே கொல்லப்பட்டிருக்க வேண்டுமென்று ஊகித்தாள். இல்லையேல் சிறிது சிறிதாகப் போரிட்டு மந்த கதியில்தான் படை வெளிவர முடியு மென்று அவள் அறிந்து கொண்டாளாதலால், சிங்கணன் சற்றும் எதிர்பாராத முறையில் போர் திரும்புவதை ஊகித்தாள். ஆனால் எப்படித் திரும்புகிறதென்பதைப் பூராவும் நிர்ணயிக்க முடியாத காரணத்தால், தன் வீரர்களைக் கொண்டு எதிரியின் பின்பகுதியில் அம்புகளா லும், வேல்களாலும் தாக்கினாள். ஆற்றின் அக்கரை மூக்குகளிலிருந்த காட்டுப் பகுதியில் வேல் இயக்கப் பொறிகள் மறைந்து கிடந்ததாலும் ஆற்றின் மடியிலிருந்த காரணத்தால் ஆற்றின் கரை எழுச்சியும் ஓரளவு வில் வீரர்களை மறைத்ததாலும், எதிரி தன்னைப் பின்னால் தாக்கிய படைப் பலத்தை உணரச் சக்தியற்றுப் போனதால், அவர்கள் அணிவகுப்பு லேசாகக் கலையவும் முற்பட்டது.



அந்தக் கலைந்த அணிவகுப்பைப் பல இடங்களில்
ஊடுருவிய பாண்டியப் படை ஓரே சீராகக் கிழக்கு நோக்கி
நகர்ந்தது. அதைக் கவனித்த எதிரியின் மேற்குவாயில் படை
பாண்டியப் படையைப் பின்புறத்தில் தாக்க ஊர்ந்து
வந்தாலும், திடீரென மதில் மீதிருந்த அம்பு மழையால்
தடுக்கப்பட்டது. தெற்கு வாயிலிலிருந்து வெளியே வந்த
பாண்டியர் படை மதிலோரமே எதிரியைத் தாக்கி
முன்னேறியது. பாசறைக்கு அருகேயிருந்த படை தங்கள்
வீரர்களுக்கு உதவ முன் வந்தும் முடியவில்லை. கோட்டை
மதிலிலிருந்த விற்கூடங்கள் எரியம்புகளைச் சாரிசாரியாக
அப்படையை நோக்கி அனுப்பிக் கொண்டிருந்தன. தவிர
வேறொரு புதுத் திருப்பமும் போரில் ஏற்பட்டது.

திடீரெனக் கிழக்கு வாயில் திறக்கப்பட்டு அங்கிருந்த
படை கோட்டையைச் சுற்றித் தெற்கு வாயிலை நோக்கிப்
பாதி தூரம் வந்து மறுபடி சுழன்று எதிரிப் பாசறையை
நோக்கிச் சென்றதால் அந்தப் பகுதியிலும் கிழக்கு வாயில்
லிருந்தும் பேரொலிகள் கிளம்பின. தெற்கு வாயிலிலிருந்துப்
வெளிப்போந்த பாண்டியப் படையின் இரு பிரிவுகளின்
நெருக்கமாகவும் நீளமாகவும் அணி வகுக்கப்பட்டிருந்த
தாலும், அவை வளைந்து வளைந்து சென்று போரிட்ட
தாலும், அது எந்தப் பக்கம் எப்பொழுது தாக்குமென்பதை
அறிய மாட்டாத எதிரிகள், அடிக்கடி அணிவகுப்பை
மாற்றிப் போரிட வேண்டியதாயிற்று. இப்படிப் போர்
கிழக்கு வாயிற்பகுதியிலும் தெற்கு வாயிற்பகுதியிலும் அரை
ஜாமத்திற்கும் மேல் நடந்தது.

வீரபாண்டியன் படைப் பிரிவுகள் பாம்பு வளைவது
போல் வளைந்து வளைந்து போரிட்டதால் அவ்வப்
பொழுது அணி வகுப்பை மாற்றவேண்டிய அவசியத்தை
உணர்ந்த சிங்கணன் பெரிதும் சங்கடப்பட்டான். அந்தப்
போர் முறையே பெரும் விசித்திரமாயிருந்தது அவனுக்கு
பல வியூகங்களைப் பற்றியும் போர் முறைகளைப் பற்றியும்
அவனறிந்தவனாயிருந்தாலும், அவன் கற்ற போர்
சாத்திரத்துக்கு அப்பாற்பட்டதாகவும் சம்பிரதாய விரோத

மாகவுமிருந்தது வீரபாண்டியன் வகுத்த போர் முறை. அதை சர்ப்பவியூகமென்றும் சொல்ல முடியாது. சர்ப்ப வியூகமில்லையென்றும் சொல்லமுடியாது. இப்படி இரண்டுங் கெட்டானாக நெளிந்து வளைந்த வியூகத்தைச் சமாளிப்பதிலேயே அதிக நேரம் செலவழிந்ததாலும், அவ்வப்போது ஊடுருவப்பட்ட அணிவகுப்பைத் திருத்த முற்பட்டதாலும் எதிரிகளைத் தான் தாக்க முடியாமல், எதிரியிடமிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டிய அவசியமேற்பட்டதால், வியப்புக்கும் சினத்துக்கும் இலக்காகிய சிங்கணன், தன் படைகளைத் திடீரென ஒரே புறமாகச் சேரப் பணித்து அனைத்தையும் கிழக்கு வாயிலைத் தாக்கப் பணித்தான்.

அதனால் தெற்கு வாயில் புறத்தின் நெருக்கம் அகன்று விடவே தெற்கு வாயிலிலிருந்து ஒரு பந்தம் அக்கரையை நோக்கி ஆடியது. அதன் குறிப்பை உணர்ந்த இளநங்கை தனது முந்நூறு வீரர்களுடனும், வேலெறியும் யந்திரங்களுடனும் தெற்கு வாயிலை நோக்கி விரைந்தாள். அவளும் அவள் படையும் உள் நுழைந்ததும் தெற்கு வாயில் பெருங் கதவுகள் மூடப்பட்டன. உள்ளே இருந்த வெளிச்சம் பிரமை தரும் காட்சியை, பயங்கரக்காட்சியை அவள் கண்களுக்குத் தந்தது.



உள்ளே நுழைந்த சேரர் படையின் முக்கால் பகுதி மதிலிலிருந்து எய்யப்பட்ட வேல்களால் மாண்டு கிடந்தது. புரவிகள் சில துடித்துக் கொண்டிருந்தன. சில மரணக் கனைப்புக் கனைத்துக் கிடந்தன. மரணமடைந்து கீழே கிடந்த வீரர் பலர் ஆகாயத்தை வைத்த கண் வாங்காமல் முறைத்துப் பார்த்துக்கொண்டிருந்தனர். எங்கும் குருதி பட்டையாகப் பூமியை நனைத்திருந்தது. இறந்தவர் போக நிராயுதபாணிகளாயிருந்த சில எதிரி வீரர்களை பாண்டியப் புரவிப் படை வீரர் நெருங்கி நடத்திச் சென்று கொணடிருந்தனர். இந்த நிலையில் வெளியில் பெரும் போர்க் கூச்சல் கேட்டுக் கொண்டிருந்தது. அந்தக் கூச்சலின் காரணத்தை அறிய மதில் மேல் ஏறிய இளநங்கை மிக விசித்திரமான போர் முறையைக் கண்ணால் கண்டாள்.



அவள் மதில்மேல் உயரத்திலிருந்ததாலும் மிகத் தள்ளி எதிரியின் படை அணிவகுப்புக்குள் பாண்டியப் படைகள் ஊடுருவிவிட்டதாலும், அவள் போர் நிலையை நன்றாகக் காணமுடிந்தது. பாண்டியப்படை நீண்ட சர்ப்பம் போல் வளைந்து வளைந்து எதிரிப் படையில் புகுவதையும், சில சமயம் அதன் வாலும், சில சமயம் அதன் தலையும், சில சமயம் அதன் நடுமுதுகும் வளைந்து கொடுத்துக் கொண்டு, எதிரிப் படையைச் சாடுவதையும் கண்டாள். எதிரியும் அந்தப் புதுமுறைப் போரைச் சமாளிக்கப் படைகளை நெருக்கி அணி வகுப்பு உடையாவண்ணம் செய்ய முயன்றான், அந்த முயற்சி அவனுக்குப் பெரும் யமனாக முடிந்தது.

திடீரெனப் பாம்பு நீண்டு எதிரிப் படையைச் சுற்றி வந்தது. அந்த வட்டத்துக்குள் நின்றவர்களைப் பாண்டிய வீரர்கள் நெருங்கினர். மலைப்பாம்பினால் சுற்றப்பட்ட மனித உடல் எலும்புகள் போல் சிறிது நேரத்தில் எதிரியின் ஒரு படை நொறுங்கியது. அதே சமயத்தில் கிழக்கு வாயில் முரசு ஒலித்தது. சர்ரென்று பாண்டியப் படை பின் வாங்கிக் கோட்டைக்குள் வந்தது. அதைத் தொடர்ந்து எதிரிப் படையைக் கோட்டை மதில் விற்பொறிகள் வீசிய அம்பு மழையும், சாத்தப்பட்ட கிழக்கு வாயில் பெரும் கதவுகளும் தடுத்தன.

புரவிமீது ஆரோகணித்திருந்த சிங்கணனும் தனது சங்கை எடுத்துப பலமாக ஊதினான். அந்த ஊதலுக் கிசைந்த சேரர்படைகள் மீண்டும் பழைய முற்றுகை நிலைக்குத் திரும்பின. சிங்கணன் தனது படைகளின் சேதத்தை எண்ணி எண்ணிப் பிரமித்து, போர்க்களத்தி லேயே நீண்ட நேரம் நின்றான். பிறகு பாசறைக்குத் திரும்பி நெருப்பினால் கருகிப் போன தனது கூடாரத்தைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு புரவியை விட்டிறங்கிப் பக்கத்திலிருந்த பாறைமீது உட்கார்ந்து கொண்டான். அவன் முகத்தில் அப்பொழுதுகூட அச்சமில்லை. படையின் சேதத்தைப் பற்றியோ அன்று

ஏற்பட்ட விளைவைப் பற்றியோ பீதியில்லை. பெரும் குழப்பமே விரிந்து நின்றது அவன் முகத்தில். தனது உத்திரவுப்படி படைகள் பின்வாங்கக் குறைந்தபட்சம் அரை ஜாமம் பிடிக்குமென்பதை அறிந்ததால் அவன் உட்கார்ந்த இடத்திலேயே உட்கார்ந்திருந்தான்.

படைகள் பழைய இடத்துக்கு மீண்டன. இருப்பினும் அந்தப் படைகளில் அமைதியில்லை. காயமடைந்தவர் முனகலைத்தவிர, வேறு ஒருவித சந்தேகமும் படை வீரர் களிடை ஊடுருவி விட்டதை சிங்கணன் உணர்ந்தான். அந்தச் சந்தேகமும் தன் படைத் தலைமையைப் பற்றிய தென்பதையும் அவன் அறிந்தான். எதிரியின் தாக்குதலை விட தன்னிடம் தனது படைகளுக்கு ஏற்படக்கூடிய அவ நம்பிக்கை பெரிதும் அபாயமென்பதை அவன் சந்தேகமறப் புரிந்துகொண்டான். அதை உடைக்க என்ன செய்யலாம் என்பதைச் சிந்தித்தவண்ணமே அவன் அந்தப் பாறையி லேயே நீண்ட நேரம் உட்கார்ந்திருந்தான். வெகு சீக்கிரம் கோட்டைக்குள்ளும் அமைதி நிலவுவதை உணர்ந்தான். வெள்ளி முளைக்கும் தருணம் வந்துவிட்டதால் கோட்டை யின் ஓரிரண்டு பந்தங்களும் அணைக்கப்பட்டன.

அடுத்த நான்கு நாழிகைகளில் கதிரவனும் உதய மானான். நிலைமையை மறுபடியும் சீர்படுத்தப் புதிய யோசனையொன்றும் சிங்கணன் சித்தத்தில் எழுந்தது. "வீர பாண்டியா! இன்னும் நீ என்னுடைய பிடியிலிருந்து விடு படவில்லை. இன்று உன்னை எப்படியும் நொறுக்கி விடுகிறேன் பார்" என்று தன் கைகளிரண்டை இறுகப் பிடித்து நொறுக்கினான். பாண்டிய இளவரசனை அடியோடு ஒழிக்கும் வஞ்சகத் திட்டமொன்று அவன் இதயத்தில் உதயமாயிற்று.



## அத்தியாயம் 68

# சிங்கணன் விரித்த வலை

கதிரவன் முளைத்துத் தனது கனகக் கதிர்களை ரண களத்தின் மீது வீசியபோதும், கற்பாறையின் மீதமர்ந்து அக் களத்தின்மீது கண்களை ஓட்டிக்கொண்டிருந்த போசளத் தண்டநாயகனின் புத்தி நீண்ட காலம் குழம்பியே கிடந்தது. கோட்டையின் வடக்கு வாயிலைத் தாக்குவதாக இருந்த ஏற்பாட்டைத் தான் மாற்றியதையும், தெற்குப்புற வாயிலைத் திடீரெனத் தகர்த்துவிடத் திட்டமிட்டதையும் பாண்டிய இளவரசன் எப்படி அறிந்தான் என்ற புதிரை அவிழ்க்க முடியவில்லை போசளத் தண்டநாயகனின் கூரிய அறிவுக்குக் கூட. தெற்கு வாயிலைத் தான் தாக்கப்போவதை அறிந்தது மட்டுமின்றி, தாக்குவதற்கு ஏற்பாடு செய்திருந்த முறை, அந்த முறையைச் செயல்படுத்த அனுப்பவிருந்த படைபலம், அனைத்தையுமே எதிரி எப்படி அறிந்தான் என்பதை உணர முடியவில்லை சிங்கணனுக்கு. தனது ஒவ்வொரு யோசனையையும் பாண்டிய இளவரசன் முன் கூட்டியே அறிந்து விட்டானென்பதும், அதற்கேற்ப அவன் தனது போர் முறையை வகுத்துக்கொண்டு விட்டானென்ப தும் அந்தப் போசள வீரனுக்குத் தெரிந்தாலும், படைகளைப் பிரித்து அனுப்பும் ஏற்பாட்டைத் தான் கடைசி வரையில் யாரிடமும் சொல்லாததால், அத்தனை ஏற்பாட்டையும் மிக நுணுக்கமாக எதிரி எப்படி அறிந்தான் என்பதை ஊகித்துப் பார்த்து விளங்காததால் சிங்கணன் வியப்பிலே சிக்கிக் கிடந்தான். ஆகவே நடந்ததெல்லாம் விவரிப்புக்கும் அப்பாற்பட்ட இந்திர ஜாலமாகவே தோன்றியது சிங்கணன் சித்தத்துக்கு.

வீரபாண்டியன் விஷயத்தை எப்படி ஊகித்திருந்தாலும் அவன் தனது பெரும் படைகளை முறியடித்தது பெரும் விந்தையென்பதில் சிறிதும் சந்தேகமில்லை சிங்கணனுக்கு. 'கடல் புறத்தில் மேற்குக் கோட்டை வாயிலில் இரவுப் போருக்காகவே முன்னதாக ஆற்றுப் படுகையின் மூலம் ரகசியமாக அனுப்பிய ஆயிரம் வீரர்கள், தான் தளம் போட்டுத் தங்கியிருந்த கிழக்கு வாயிற் பகுதியிலிருந்த ஆயிரம் வீரர்கள், தவிர யானைகள் இவற்றின் இணைந்த இருபுறத் தாக்குதலிலிருந்து எப்படித் தெற்குவாயிலை எதிரி பாதுகாக்க முடிந்தது? அதுவும் கோட்டைக் கதவுகள் திறந்த பின் மதிலிலிருந்த சிறு படையைக் கொண்டு எப்படித் தனது பெரும் படையைச் சமாளிக்க முடிந்தது?' என்று எண்ணி எண்ணித் திகைக்கத்தான் சிங்கணனால் முடிந்ததே தவிர வேறு எந்தவித ஊகத்தினாலும் எதிரியின் போர்த் தந்திரத்தை உணரமுடியவில்லை. ஆனால் ஒரு விஷயம் ஊகத்துக்கு இடமில்லாமல் தெளிவாகியிருந்தது. தனது படைகளுக்கு ஏற்பட்ட சேதம் தான் எதிர்பார்த்ததை விடப் பன்மடங்கு அதிகமென்பதைச் சிங்கணன் விழிகள் கண் கூடாகப் பார்த்தன.

களமெங்கனும், மல்லாந்தும், ஒருக்கணித்தும் குப்புறவுமாகப் பலவித கோணங்களில் மாண்டு கிடந்த வீரர்களின் எண்ணிக்கை இரண்டாயிரத்துக்கு மேற்பட்டது என்பதை நிர்ணயிக்க முடிந்தது. பார்வையினாலேயே போசளத் தண்ட நாயகனுக்கு. எதிரியின் குறைந்த படைக் கலத்தின் காரணமாகவும், திடீர்த் தாக்குதலால் தெற்கு வாயிலில் நுழைந்து விட்டால் அப்படையைக் கூட நிர்முலம் செய்து விடலாம் என்ற எதிர்பார்ப்பிலும், தனது பத்தாயிரம் வீரரில் நாலாயிரம் பேரைப் போருக்கு முந்திய நாளிரவு ரகசியமாகச் சேரநாட்டுக்குச் செல்லத் தான் அனுப்பிவிட்டது எத்தனை முட்டாள்தனம் என்பதை அப்பொழுதுதானறிந்தான் சிங்கணன். போரில் மாண்ட இரண்டாயிரம் வீரர்கள் போகப் பாக்கியுள்ள நாலாயிரம்



வீரர்களைக் கொண்டு கோட்டையின் பலத்த சுவர்களாலும், மதிலின் விற்கூடங்களாலும் பாதுகாக்கப் பட்டிருக்கும் பாண்டியர் படைகளை முறியடிப்பது முடியாதென்பதும் திண்ணமாகத் தெரிந்த படியால், என்ன செய்வதென்பதை அறியாமல் பிரமித்து உட்கார்ந்த சிங்கணன்முன் உபதளபதி ராமவர்மன் வந்து "படைத்தலைவரே!" என்று அழைத்தான்.

கண்கள் களத்தைக் கண்டு கொண்டிருந்தாலும், புத்தி பிரமை பிடித்திருந்தாலும், உபதளபதி வந்ததையும் கவனிக்காத சிங்கணன், ராமவர்மனுக்கு உடனடியாகப் பதில் சொல்லவுமில்லை. தலையை நிமிர்த்தி அவனை நோக்கவுமில்லை. இரண்டாம் முறை ராமவர்மன் குரல் கொடுத்த பின்னரே தலை நிமிர்ந்த சிங்கணன், "என்ன ராமவர்மரே!" என்று வினவினான் வெறுப்பு நிரம்பிய குரலில்.

அதைவிட வெறுப்புடன் ஒலித்தது ராமவர்மன் குரல்: "கடமையைச் செய்ய வந்தேன்" என்று அவன் கூறியபோது

"என்ன கடமை?" என்று சீறினான் சிங்கணன்.

"ஒவ்வொரு தாக்குதல் முடிந்ததும், சேதத்தைத் தளபதிக்கு அறிவிக்க வேண்டியது உபதளபதியின் கடமையல்லவா?" என்று வினவினான் ராமவர்மன்.

"சேதத்தை அறிவிக்க வேண்டியதுதான். வேறெதற்கு நீர் இருக்கிறீர்?" என்ற சிங்கணன் குரலில் கோபம் நன்றாக ஒலித்தது.

"போர்த் தந்திரங்களை வகுக்கும் பொறுப்பைச் சேர மன்னர் எனக்கு அளிக்கவில்லை. என்னைவிடச் சிறந்த தளபதிக்கே அளித்திருக்கிறார்." என்று சுட்டிக்காட்டிய ராமவர்மன், சேரமன்னனைப் பார்த்து நகைக்கிறானா, அல்லது தன்னைப் பார்த்துத்தான் நகைக்கிறானா என்பது புரியவில்லை சிங்கணனுக்கு. ஆகவே மௌனமே சாதித்தான் போசளத் தண்டநாயகன்.

ராமவர்மனே தொடர்ந்தான், "தங்கள் உத்தரவுப்படி ஆயிரம் வீரர்களை அழைத்துச் சென்று யானைகளைக்

கொண்டு தெற்கு வாயிலைத் தாக்கினேன். ஆனால்
தாங்கள் எதிர்பார்த்தபடி தெற்கு வாயில் திறக்கவில்லை.
பின்னாலிருந்து வேல்கள் வந்து யானைமீது பாய்ந்தன.
யானைகள் தெற்கு வாயிலைத் தாக்குவதற்குப் பதில்
எங்களை எதிர்கொண்டன. அதனால் நமது படையின் ஒரு
பகுதி சேதப்பட்டது. பிறகு தெற்கு வாயிலை எதிரிகளே
திறந்து விட்டார்கள். உள்ளே நுழைந்தோம்..."

நுழைந்தபின் ஏற்பட்டதை ராமவர்மன் உடனே
சொல்லவில்லை. சற்று நிதானிக்கவே செய்தான்.
"சொல்லும்" என்றான் சிங்கணன் வறண்ட குரலில்.

"அங்கு நடந்தது போர் அல்ல. கொலை நடந்தது.
சாதாரணமாகக் கோட்டையின் வெளிப்புறத்தை நோக்கிக்
கொண்டிருந்த வேல்கள் உட்புறத்தை நோக்கிக் கொண்
டிருந்ததால் எதிரி நமது படைகளைப் பட்சணம் செய்ய
முடிந்தது." என்று குறிப்பிட்டான் ராமவர்மன்.

"நீர் இதை முன்கூட்டியே அறியவில்லையா?
கோட்டை விற்கூடங்கள் வேலெறியும் பொறிகள்மீதும் கண்
வைக்கச் சொல்லியிருந்தேனே?" என்று வினவினான்
சிங்கணன்.

"சொல்லியிருந்தீர்கள். கண்ணையும் வைத்துத்தா
னிருந்தேன். ஆனால் எதிரி கண்ணை மறைக்க
விளக்குகளையும், பந்தங்களையும் அணைத்திருந்ததை
நீங்களே பார்த்திருப்பீர்கள். வேற்பொறிகள் கோட்டைத்
தளத்தின் இறக்கமான பகுதியில், அதாவது இரண்டாவது
படியில் இருந்தன. இளவரசனுடன் நீங்கள் பேசச் சென்ற
போது இதை நீங்கள் கவனித்திருந்தால்கூட வேல்களை நம்
கண்ணில் படாமல் எதிரி எந்தப் பக்கமும் இயக்க முடியு
மென்பதை உணர்ந்திருக்கலாம். போதாக் குறைக்கு
கோட்டைத்தளப் பந்தங்களையும் எதிரி அணைத்து
விட்டான். நமது படை வீரர் பூனைகளாயிருந்தாலொழிய
இருட்டில் பார்க்கமுடியாதல்லவா?" என்ற ராமவர்மன்.
குரலில் சற்றுக் கடுப்பைக் காட்டினான்.

"சரி, சரி, மேலே சொல்லும்." என்றான் சிங்கணன்.





"சொல்வதற்கு அதிகமில்லை. உள்ளே நுழைந்ததும்
வேல்கள் பாதிப் பேரை அழித்துவிட்டன. தவிரப்
படையின் முழு பலமும் எங்களை எதிர்கொண்டது. நாம்
அந்தப் பக்கம் வரப்போவது எதிரிக்குத் தெரிந்திருக்கிறது.
சில நாழிகைக்குள் எனது வீரரில் பாதிக்கு மேலும், மேல்
திசையிலிருந்து வந்தவர்களில் பாதியும் நிர்மூலமாக்கப்
பட்டபடியால் பின் வாங்கினேன். பிறகு நடந்தது
தங்களுக்கே தெரியும்." என்றான் ராமவர்மன்.

"ஆம், ஆம், தெரியும்," துன்பத்துடன் வந்தது
சிங்கணன் பதில்.

வெந்த புண்ணில் வேலிடத் தொடங்கிய ராமவர்மன்
சொன்னான்; "என்ன வேகத்தில் கிழக்கு வாயிலிலிருந்து
எதிரிப்படை வெளிவந்தது! எத்தகைய அணிவகுப்பு
சர்ப்பவியூகத்தைப் பற்றி நானறிவேன் சிங்கணரே! ஆனால்
இந்த மாதிரிப் படையொன்று பல இடங்களில் எதிரிப்
படைகளைக் கடித்து அழித்துவிடும் விந்தையை நான்
இந்தப் போரில்தான் பார்க்கிறேன்." அத்துடன் பெரு
மூச்சும் விட்ட உபதளபதி, "எதைச் சொல்லி என்ன பயன்.
நமது காலாட்களில் ஆயிரம் பேரும், புரவிப் படையில்
சுமார் ஆயிரம் பேரும் அழிந்து விட்டார்கள். யானைகள்
குதிரைகள் சேதத்துக்கும் குறைவில்லை" என்றான்
பெருமூச்சுக்கிடையே.

"எதிர்பாராத சேதம்," என்று சிங்கணனும் ஆயாசப்
பெருமூச்சு விட்டான்.

"அது மாத்திரமா எதிர்பாராதது?" என்ற ராம
வர்மனை நோக்கி, சிங்கணன் விழிகள் கேள்வி கேட்கும்
பாவனையில் எழுந்தன.

"என் பின்னால் நான் தாக்குதலை எதிர்பார்க்க
வில்லை படைத்தலைவரே. எதிர்பாராத வண்ணம்
ஆற்றுக்கு அக்கரையிலிருந்து வேல்களும், அம்புகளும்
பறந்து வந்தன. அந்தப் படை எப்பொழுது தெற்கு வாயிலை
விட்டு வெளிவந்தது. எப்படி வந்தது என்பதும் ஊகிக்க
முடியவில்லை, என்னால். அந்தப் படையை நடத்தியவர்
யார் தெரியுமா தலைவரே?" என்றான் ராமவர்மன்.

"யார்?"

"பாண்டிய உபதளபதி!"

"யார்?"

"இளநங்கை!"

"அந்தப் பெண்ணா?"

சிங்கணன் வியப்பு எல்லை கடந்தது. தான் எந்தப் பெண்ணைத் தூக்கிக்கொண்டு சேரநாட்டுக்குச் செல்லக் காட்டுக்கோட்டையில் முயன்றானோ அந்தப் பெண்ணை கொண்டே வீரபாண்டியன் தன்னை நிலைகுலையச் செய்திருப்பதை உணர்ந்த சிங்கணன் சித்தத்தில் வியப்புடன் வேதனையும் கலந்து கொண்டது அதே வேதனை விளைவித்த வெறுப்பை உபதளபதிமீது திருப்பிய சிங்கணன், "ஆண் உபதளபதிக்குப் பெண் உபதளபதியே மேல் போலிருக்கிறதே!" என்று கூறினான்.

ராமவர்மனும் கிடைத்த சந்தர்ப்பத்தைக் கைவிட வில்லை. "தளபதிக்குத் திறமையிருந்தால் பெண் என்ன, துரும்பைக் கூட உபதளபதியாக வைத்துக் கொண்டு படைகளை இயக்கலாம். தவிர..." என்று இழுத்தான்.



"தவிர?" சீற்றத்துடன் எழுந்தது சிங்கணன் கேள்வி.

"அந்தப் பெண் தளபதியாயிருக்கவும் தகுந்தவள்" என்று கூறினான்.

சிங்கணனுக்கு ராமவர்மனைக் கொன்றுவிடலாம் போலிருந்தது. இருப்பினும் அந்தச் சமயத்தில் உபதளபதி யின் பகை தனது நிலைமையை அதிகமாக மோசம் செய்து விடுமாதலால் அதிகமாகத் தனது சீற்றத்தைக் காட்டாமல் "ராமவர்மரே! கடந்ததை நினைத்துக் கதறுவதல்ல கர்ம வீரன் காரியம். மேற்கொண்டு செய்யவேண்டியதைக் கவனியும்." என்றான்.

"கவனித்து விட்டுத்தான் வருகிறேன்."

"என்ன கவனித்தீர்கள்?"

"பிணங்களை அப்புறப்படுத்தி ஆற்றில் புதைக்கச் சொல்லியிருக்கிறேன். தங்களுடைய தீய்ந்த கூடாரத்துக்குப்



பதில் வேறு கூடாரம் அமைக்கச் சொல்லியிருக்கிறேன்," என்றான் ராமவர்மன்.

"சரி, சரி, மீதியுள்ள படைகள் முன்போல் பின்வாங்கி முற்றுகை நிலையில் இருக்கட்டும். எந்தப் பகுதியிலிருந்தும் யாரையும் கோட்டைக்குள் அனுமதிக்க வேண்டாம்." என்றான் சிங்கணன்.

"யாரையுமா?"

"ஆம்."

"விதிவிலக்கு?"

"கிடையாது."

"மருத்துவர், புலவர் இவர்களுக்குக் கூட விலக்கில்லையா?"

"இல்லை. உள்ளே யாரையும் போகவிட வேண்டாம் வெளியில் யார் வந்தாலும் சிறை செய்து என்னிடம் அழைத்து வாருங்கள்" என்று உத்தரவிட்ட சிங்கணன் மீண்டும் ரணகளத்தையும் நோக்கிக் காட்டையையும் நோக்கினான். பிறகு சுற்றுப்புறங்கள் மீது பார்வையைச் செலுத்தினான். மெல்ல மெல்ல வீரபாண்டியன் தன்னை முறியடிக்க வகுத்த முறை முழுவதையும் உணர்ந்தான் 'காரிருளில் கதவைத் திறந்துகொண்டு இருநூறு முந்நூறு வீரர்கள் வெளிவந்து ஆற்றைக் கடந்து அப்புறம் போக முடியும். அங்குள்ள காட்டுப் பகுதியில் மறைந்து விட்டால் என் படைகளுக்கு அவர்கள் இருப்பது தெரியாது. இரவோ மையிருட்டு. கோட்டைப் பந்தங்களையோ அணைத்து விட்டான் இளவரசன். 'நன்று! நன்று! வீரபாண்டியா நன்று!' என்று எதிரியைப் பாராட்டவும் செய்தான் போசளத் தண்ட நாயகன். பாராட்டியதோடு நிற்கவில்லை சிங்கணன். இத்தகைய எதிரியைத் தந்திரத்தால் தான் ஜெயிக்க வேண்டுமென்ற முடிவுக்கும் வந்தான். 'காட்டுக் கோட்டையில் என் வேடத்தைக் கலைத்தாய். அது என் முதல் தோல்வி. இரண்டாவது வடக்கு வாயிலை வீட்டுத் தெற்கு வாயிலுக்குத் திரும்பிய என்னை முன்னெச்சரிக்கையால் முறியடித்து விட்டாய்

இது இரண்டாம் தோல்வி. மூன்றாவது முறை உன் அறிவு எப்படி இயங்குகிறது பார்ப்போம்." என்று தனக்குள் சொல்லிக் கொண்ட சிங்கணன், கோட்டைச் சிங்கத்தைத் தன் வழியில் இழுத்துச் சிக்க வைத்து அழித்து விடக்கூடிய புதிய திட்டமொன்றைத் தன் இதயத்துக்குள் உருவாக்கிக் கொண்டான். அந்தத் திட்டம் மட்டும் வெற்றியடைந்தால் வீர பாண்டியன் நிர்மூலமாக்கப்பட்டுவிடுவான் என்ற நிர்ணயம் சிங்கணனுக்கு ஏற்படவே பெரும் மகிழ்ச்சியும் அடைந்தான்.

அந்தத் திட்டத்தை மீண்டும் மீண்டும் மனத்தில் சீர்தூக்கிப் பார்த்து அதில் பலவீனமேதுமில்லை யென்பதை உணர்ந்ததால், சலித்த உள்ளத்தில் சந்துஷ்டியை ஏற்படுத்திக் கொண்டு காலைக் கடன்களை முடிக்கக் கோட்டையாற்றை நோக்கிச் சென்றான். அதன் ஓரத்தே அரித்து ஓடிய குளிர்ந்த நீரில் மூழ்கிய சிங்கணன் புதிய பாசறைக்குத் திரும்பியபோது, கதிரவன் நன்றாகத் தன் உஷ்ணத்தை ரணகளத்தின் மீது வீசி இரவில் பாய்ந்த குருதியின் சாரத்தைக் குடித்து பூமிதேவியின் மீதிருந்த கறையை நீக்க முயன்று கொண்டிருந்தான். பாசறைக்குத் திரும்பிய சிங்கணனும் தனது கீர்த்திக்குக் கடந்த இரவு ஏற்பட்ட கறையை அழித்துவிடத் தனது திட்டத்தைத் தரையில் கோடுகளாகக் கிழித்துப் பார்த்துத் திருப்தியுடன் தலையசைத்துக் கொண்டான். பிறகு எழுத்தாணி கொண்டு ஓலையொன்றில் மிகுந்த யோசனையுடன் செய்தியொன்றைத் தீட்டினான். பிறகு அதை ஒரு முறைக்கு இரு முறையாகப் படித்த பிறகு ராமவர்மனை வரவழைத்து, "ராமவர்மரே! இந்த ஓலையை நீரே எடுத்துக் கொண்டு வீர பாண்டியனிடம் செல்லும்," என்று அதை நீட்டினான் உபதளபதியிடம்.

உபதளபதி ராமவர்மன் அந்த ஓலையைக் கையில் வாங்கிக் கொண்டு மடியில் செருகிக் கொள்ள முயன்றான். "படித்துவிட்டுச் செருகிக் கொள்ளும்," என்ற சிங்கணன் உத்தரவின் காரணமாக ஓலையில் கண்ணை ஓட்டிய



ராமவர்மன் முகத்தில் பெரும் பீதியும் வெறுப்பும் மண்டியது. ஓலையிலிருந்து சிங்கணனை நோக்கிய ராமவர்மன் கண்களில் கோபமும் இருந்தது.

"இது தர்ம யுத்தமல்ல" என்றான் உபதளபதி சீற்றத்துடன்.

"தர்மமும், அதர்மமும் நோக்கத்தைப் பொறுத்தது," என்றான் சிங்கணன்.

"என் நோக்கம் தங்கள் நோக்கத்திலிருந்து மாறுபட்டிருக்கிறது," என்று மீண்டும் உஷ்ணத்துடன் சொன்னான் ராமவர்மன்.

"படைத் தலைவன் சொற்படி கண்ணை மூடிக் கொண்டு நடக்க வேண்டியது உபதளபதியின் கடமை" என்று சுட்டிக்காட்டினான் சிங்கணன்.

"அப்படி நடந்த பலனை நேற்றிரவு கண்டேன்," என்று சீறிய ராமவர்மன் வேறு பதில் சொல்லாமல், ஓலையுடன் வெளியே வந்தான். சிங்கணனின் ஓலைக் கொட்டகைக்கு வெளியே வந்ததும் அந்த கொட்டகையைத் திரும்பி மிகுந்த வெறுப்புடன் பார்த்தான். "அதர்மத்துக்கும் அக்கிரமத்துக்கும் எல்லை உண்டு சிங்கணா! இதில் வெற்றி பெற்றாலும் உலகம் உன்னைத் தூற்றும். எத்தனை பயங்கர மனிதன் நீ!" என்று உள்ளத்தே கூறிக்கொண்டு ஒரு புரவியைக் கொண்டுவரச் சொல்லி, கோட்டையை நோக்கிச் சென்றான். கோட்டைக்குள் பெரு வியப்பு காத்திருந்தது அவனுக்கு. ராமவர்மனை இளவரசன் தனது மாளிகை முனையிலேயே எதிர் கொண்டான். "கொடுங்கள் ஓலையை," என்றும் கேட்டான். ராமவர்மன் ஓலையை எடுத்து நீட்டினான். அதைப் படித்த வீரபாண்டியன் முகத்தில் ஒரு விநாடி வியப்பு தெரிந்தது. அடுத்த விநாடி அவன் பேசிய பேச்சிலிருந்து சிங்கணன் விரித்த வலையில் அவன் விழுந்துவிட்டானென்பதை ராமவர்மன் புரிந்து கொண்டான்.

## அத்தியாயம் 69

# தாப இதயம், வியர்த்த எண்ணங்கள்

**சி**ங்கணன் ஓலையுடன் பாண்டிய நாட்டுச் சிங்கத்தின் குகைக்குள் நுழைவதுபோலக் கோட்டாற்றுக் கரைக் கோட்டைக்குள் நுழைந்த சேரர் உபதளபதி ராமவர்மனுக்கு, கடந்த இரவுப் போரில் ஏற்பட்ட வியப்புக்குப் பன்மடங்கு அதிகமான வியப்பைத் தரும் நிகழ்ச்சிகள் கோட்டையை அணுகியது முதலே கிடைத்ததால், அவன் பெரும் பீதியுடனேயே இளவரசன் இருப்பிடத்தை அடைந்தான்.

இரு புரவி வீரர்கள் அக்கம் பக்கத்தில் வர, தானும் ஒரு பெரும் புரவி மீது அமர்ந்து கோட்டையின் கிழக்கு வாயிலை அடைந்து தனது வீரர்கள் சம்பிரதாயப்படி கொம்பெடுத்து ஊது முன்பாகவே கோட்டை வாயில் திறந்து விட்டதே வியப்பாயிருந்தது ராமவர்மனுக்கு. முதலில். தானும் வீரர்களும் உள்ளே நுழைந்தவுடன் தனக்காகவே காத்திருப்பவர்கள் போல் புரவிகளில் தயாராயிருந்த நான்கு எதிரி வீரர்கள் தனக்குத் தலை தாழ்த்தி வணங்கியதன்றி, தன்னை எதுவும் கேட்காமலும், தான் வாயைத் திறப்பதற்குக்கூட வாய்ப்பளிக்காமலும் தனக்கு முன் சென்றது வியப்பைச் சற்றே அதிகப்படுத்தியது சேரர் உபதளபதிக்கு. தவிர, கோட்டையின் உட்புறத்தில் போர் நடந்த இடம் பரம சுத்தமாயிருந்ததையும், மாண்ட தனது ஐந்நூறு வீரர்களும் சரி, புரவிகளும் சரி, இருந்த சுவடு தெரியாமல் அப்புறப்படுத்தப் பட்டிருப்பதையும் கண்ட ராமவர்மன் இத்தனை துரிதத்தில் எப்படி இளவரசன் இடத்தைத் துப்புரவு செய்தான் என்று மேலும் பிரமித்தான்.



இளவரசனின் மாளிகையை எய்தியதும் அவன் வியப்ட உச்சநிலையை அடைந்தது.

எந்தப் படைத் தலைவன் ரணகளப்பட்டு மரணப் படுக்கையில் படுத்திருப்பதாகக் கேள்விப்பட்டிருந்தானோ அதே படைத்தலைவன் மாளிகையின் முன்படிகளில் புரவி ஏறத் தயாராக நின்றிருந்ததைக் கண்ட ராமவர்மனுக்கு படைத் தலைவன் அவன்தானோ என்ற சந்தேகம் உண்டாகவே, புரவியிலிருந்து இறங்காமலே ஒரு வினாடி தயங்கினான். மாளிகைப் படியிலிருந்தவனைக் கண்டதும் தன்னை அழைத்து வந்த புரவி வீரர்கள் புரவியிலிருந்து அவசரமாகக் குதித்துத் தலை தாழ்த்திய காரணத்தாலும் படியில் நின்றவன் தலையில் அப்பொழுதும் பெரிய கட்டு ஒன்று இறுகச் சுற்றப்பட்டு அது பக்கவாட்டில் முடியிட்டுத் தொங்கியபடியாலும் எல்லாவற்றுக்கும் மேலாக அவன் நின்ற தோரணையைக் கண்டதாலும், அவன்தான் வீரபாண்டியனாக இருக்கவேண்டுமென்று தீர்மானித்துக் கொண்ட ராமவர்மனும் புரவியிலிருந்து குதித்து அவனுக் குத் தலை தாழ்த்தினான்.

அவனுக்குப் பதில் தலை தாழ்த்திய வீரபாண்டிய னும் "கொடுங்கள் ஓலையை" என்று கையை நீட்டவே ராமவர்மன் வியப்பு உச்சியையும் தாண்டி நகர்ந்து விட்டதால் சில வினாடிகள் திகைத்து நின்றுவிட்டான்.

அவன் திகைப்பையும் வியப்பையும் கண்ட வீர பாண்டியன், "இதில் வியப்பதற்கு ஏதுமில்லை ராமவர்மரே! என் நிலையில் நீங்களிருந்தால் நீங்களும் ஓலையை எதிர்பார்த்திருப்பீர்கள்," என்றான் புன்முறுவ லுடன்.

மிகப் பயங்கரமான போர் நடந்த இரண்டு ஜாமத்துக்குள் ஒரு படைத்தலைவன் சர்வசாதாரணமாகப் புன்முறுவல் செய்யக்கூடுமென்பதையே ராமவர்மன் எதிர் பார்க்கவில்லை. தீர்க்கசிந்தனையும், அடுத்து என்ன செய்யலாமென்ற கவலையும், முகத்தில் துலங்கும் படைத் தலைவனைச் சந்திக்க வந்த ராமவர்மனுக்கு, ஏதோ

கல்யாணத்திற்குச் செல்பவனைப்போல் அலங்கார உடை யணிந்து தலைக் காயத்திற்குப் பட்டாடையும் பரிவட்டம் போல் கட்டிக்கொண்டு சர்வசாதாரணமாக ஓலைக்குக் கை நீட்டிப் புன்முறுவலுடன் தன்னை வீரபாண்டியன் சந்தித்ததும், அவன் எப்படித் திகைப்போ வியப்போ அடையாமலிருக்க முடியும்? ஆகவே, அந்த வியப்பினாலும் திகைப்பினாலும் சற்றே தடுமாற்றத்தை அடைந்த குரலில் ராமவர்மன் "தங்கள் நிலையில் நானிருந்தால் நானிருக்கும் நிலை முற்றும் வேறாயிருக்கும்," என்றான்.

வீரபாண்டியன் இதழ்களில் இளநகை மேலும் விரிந்தது. "எப்படி வேறாயிருக்கும்?" என்று வினவினான் வீரபாண்டியன் சர்வசகஜமாக.

"மிகவும் கவலையில் இருப்பேன் வீரபாண்டியரே," என்றான் ராமவர்மன்.

"எதைப்பற்றிக் கவலை?" என்று கேட்டான் வீரபாண்டியன்.

"அடுத்து நடக்க வேண்டியதைப்பற்றி," என்று சுட்டிக் காட்டினான் ராமவர்மன்.

"அதைப்பற்றி நாம் கவலைப்பட்டு என்ன பயன்?"

"ஏன் பயனில்லை? முன்னதாக நம்மைக் காத்துக் கொள்ளலாம்."

"இது மனிதனின் பிரமை."

"மனிதனின் பிரமையா?"

"ஆம் உபதளபதி!"

"தங்களுக்கு எப்படித் தெரியும்? நான் உபதளபதியென்று...?" என்ற ராம வர்மனை இடைமறித்த இளவரசன் சொன்னான்; "ராம வர்மரே! முதலில் உங்கள் தளபதி என்னைச் சந்திக்க வந்தார். அவர் வராததால் உபதளபதிக்குக் குறைந்த யாரையும் என்னிடத்தில் அனுப்பமாட்டார். என்னிடம் அவருக்குள்ள மதிப்பும் மரியாதையும் நான் அறியாததல்ல. அடுத்தபடி இரு உபதளபதிகள் இருப்பதாகவும் அந்த இரு உபதளபதிகளில்





முதல்வரின் பெயர் ராமவர்மரென்றும் கேள்விப்பட்டேன். ஆகையால் தாங்கள்தான் அது என்று நினைத்தேன்," இதைச் சொன்ன இளவரசன் ராமவர்மன் மீது மதிப்புத் துலங்கிய பார்வையொன்றையும் வீசினான்.

ராமவர்மனுக்கு என்ன பதில்சொல்வதென்று விளங்கவில்லை. பெரும் அறிவாளியொருவன் முன்பு தான் நிற்பதை உணர்ந்து கொண்டான். ஆகவே, ஏதோ சொல்ல வேண்டுமென்பதற்காக, "ஆம், ஆம், நான்தான் முதல் உபதளபதி..." என்றான் திக்குமுக்காடி.

இதைக் கேட்டதும் முகத்தில் பெருமகிழ்ச்சி காட்டிய இளவரசன், "தங்களைச் சந்தித்ததில் மிக்க மகிழ்ச்சி. ராமவர்மரே! தங்களைப்பற்றி நான் அனைத்தும் அறிவேன். தாங்கள் பெரும் வீரர் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அடுத்து வரும் போர் நிகழ்ச்சியைப்பற்றிய கவலை வீரர்களுக்கு அவசியம்தான். ஆனால் நான் கவலைப்படுவதில்லை ராமவர்மரே! வீண்பிரமையால் மனிதன் கவலைப் படுகிறான். தன்னால் ஏதோ நடக்கிறதென்ற பிரமையே அவன் கவலைக்குக் காரணம். நடக்கவேண்டியதனைத்தும் விதியின் கரங்களால் முன்னரே தீர்மானிக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே நாம் கவலைப்படுவதில் என்ன அர்த்தம்?" என்று வினவினான்.

இளவரசனின் கடைசி வார்த்தைகளின் பொருளைப் புரிந்துகொண்ட ராமவர்மன் பதில் கூற முடியாமல் திணறினான். எதிர்பாராது தனது படைகள் முறியடிக்கப் பட்ட விஷயத்தையே இளவரசன் குறிப்பிடுகிறான் என்பதை உணர்ந்துகொண்ட ராமவர்மன், மெல்லத் தனது சொரூபத்தையும் காட்டத் தொடங்கி, "தாங்கள் சொல்வது எல்லோருக்கும் பொருந்தாது..." என்று இழுத்தான் சற்று விஷமத்தையும் குரலில் காட்டி.

"எல்லோருக்கும் என்றால்?" இளவரசன் குரலில் வியப்பு ஒலித்தது.

"உதாரணமாகத் தங்களுக்கு!"

"எனக்கா?"

"ஆம்."

"விளக்கிச் சொல்லுங்கள் உபதளபதி."

"தங்களுக்கு விளக்க வேண்டியதில்லை. இருப்பினும் சொல்கிறேன். தெற்கு வாயில் தாக்குதலைத் தாங்கள் எதிர் பார்க்க மாட்டீர்களென்று நாங்கள் நினைத்தோம். ஆனால் தாங்கள் எதிர்பார்த்துத்தானிருந்தீர்கள். கோட்டை இன்று காலை எங்கள் வசமிருக்குமென்று நாங்கள் நினைத்தோம். ஆனால் உங்களுக்குத் திட்டமாகத் தெரியும். முடிவு அப்படி யிருக்காதென்று. ஆகவே தாங்கள் சொல்லும் வலிய விதியும் அதன் எதிர்பாராத திருப்பமும் தங்களுக்குப் பொருந்தாது." என்ற ராமவர்மன் குரலில் இளவரசனைப் பற்றிய பெரு மதிப்புத் தொனித்தது.

இளவரசன் முகத்திலிருந்த விஷமரேகை மறைந்து கனிவு குடி கொண்டது. "ராமவர்மரே, பலர் என்னைப் பாராட்டியிருக்கிறார்கள். ஆனால் இந்தப் பாராட்டுதல் என்மனத்தில் அச்சத்தை விளைவிக்கிறது. இத்தனைக்கு நான் தகுதியா என்ற சந்தேகத்தையும் விளைவிக்கிறது." என்ற வீரபாண்டியன் குரலில் பணிவு நிரம்பிக் கிடந்தது. "சரி, ஓலையைக் கொடுங்கள்" என்று மீண்டும் கை நீட்டினான் இளவரசன்.

ராமவர்மனும் கச்சையிலிருந்த ஓலையை எடுத்து இளவரசனிடம் நீட்டினான்.

இளவரசன் விழிகள் ஓலையில் மிகத் துரிதமாக ஓடின. மூன்று பக்கங்களாக வரையப்பட்டிருந்த அந்தச் செய்தியின் மூன்று ஓலை நறுக்குகளையும் நிமிட நேரத்தில் தள்ளிப் படித்த இளவரசன் முகத்தில் ஒரு விநாடி சிந்தனை படர்ந்தது. மூன்றாவது விநாடி பழைய புன்சிரிப்பு உதடுகளை ஆட்கொண்டது. "சரி ராமவர்மரே, இதற்கு நான் ஒப்புக்கொள்கிறேன். சிங்கணனுக்கு எனது நன்றியைச் சொல்லுங்கள்," என்று கூறினான்.

சிறந்த படைத்தலைவன் மட்டுமின்றிக் கண்ணிய மான மனமும் படைத்த ராமவர்மன், பாண்டிய நாட்டு இளவரசனைக் குழப்பம் மிகுந்த முகத்துடன் நோக்கினான். "எதற்கும் ஓலையை நன்றாகப் படித்து விட்டுச் சொல்லுங்கள் தளபதி," என்றும் கூறினான்.



இளவரசன் சற்று நிதானித்தான். ஏதோ சில வினாடி கள் யோசித்தான். பிறகு புரவி வீரர்களை நோக்கி, "இன்னும் அரை ஜாமம் கழித்து வருவதாகக் கிழக்கு வாயிலுக்கு அறிவித்துவிடுங்கள்" என்று கூறிவிட்டு, "வாருங்கள் ராமவர்மரே!" என்று ராமவர்மனைக் கையைப் பற்றி அழைத்துக்கொண்டு மாளிகைக்குள் சென்றான்.

மாளிகையின் முதல் கட்டைக் கடந்து மாடிப் படிகளில் ஏறித் தனது அறைக்கு வந்ததும், சிங்கணனைச் சந்தித்தபோது தான் அமர்ந்திருந்த சிங்காதனத்தில் ராம வர்மனை உட்காரும்படி சைகை செய்து தான் கட்டிலில் அமர்ந்தான்.

ராமவர்மன் சிங்காதனத்தில் அமராது சிந்தை குலைந்து நின்றான். பாண்டிய நாட்டு இளவரசன் மாளிகையின் வெளி வாயில்படிகளில் காவல்வீரர் பலரும் பார்க்கத் தன்னைச் சுவாதீனமாகக் கையைப் பிடித்து அழைத்து வந்ததே திகைப்பை அளித்தது ராமவர்மனுக்கு. 'பாண்டிய நாட்டு இளவரசர் நிலை எங்கே? சாதாரணப் படைத் தலைவனான என் நிலை எங்கே?' என்று தவித்து நடக்கமுடியாமல் மாளிகைக்குள் நடந்து வந்த சேரர் உபதளபதிக்கு, "இங்கே அமருங்கள்" என்று இளவரசன் சிங்காதனத்தைக் காட்டியதும் பிரமை மிதமிஞ்சியதால் அவன் உட்காராமல் நின்று கொண்டேயிருந்தான்.

"அமருங்கள் ராமவர்மரே!" என்று அன்பு கனிந்த குரலில் சற்று அழுத்தமாகச் சொன்னான் இளவரசன்.

"இது முறையல்ல," என்றான் ராமவர்மன்.

"இந்த மாளிகைக்குள் முறையை நிர்ணயிக்க வேண்டியது என் கடமை," என்று சுட்டிக் காட்டினான் வீர பாண்டியன்.

"இருக்கலாம், ஆயினும் எனது தகுதியும் யோசிக்கத் தகுந்தது."

"தகுதியையும் நானே நிர்ணயிப்பதற்கு என்ன தடை?"

"சமூகம், சம்பிரதாயம் இரண்டும் தடைகள்."

"இரண்டையும் வளைப்பதும் வகுப்பதும் மனிதன். தவிர தகுதியை நான் நிலையான குணங்களால் தீர்மானிக்கிறேன். நிலையற்ற தற்காலிகப் பதவிகளால் அல்ல" என்ற வீரபாண்டியன் ராமவர்மனை வலுக்கட்டாயமாகச் சிங்காதனத்தில் அமரச் செய்தான். பிறகு காவலொருவனை விளித்து இளநங்கையையும் வரவழைத்து, ராமவர்மனுக்கு அறிமுகப்படுத்தினான்.

இளநங்கை சிங்காதனத்தில் சங்கடப்பட்டு உட்கார்ந்த ராமவர்மனை நோக்கித் தலை தாழ்த்தினாள். ராமவர்மன் சிரம் நன்றாகத் தாழ்ந்தது. சிரம் மட்டுமல்ல அவன் மனமும் பூர்ணமாக வணங்கியது.

"என் மனைவி இளநங்கை," என்று கூறிப் பெருமிதத்துடன் புன்முறுவல் செய்தான் இளவரசன்.

"தங்கள் மனைவியா!" என்று வாயைப் பிளந்தான் ராமவர்மன்.

"ஆம்."

"தங்கள் உபதளபதி..."

"அந்தப் பதவியும் இவளுக்கு உண்டு. இரண்டு பதவிகளையும் திறமையுடன் வகிக்கிறாள்."

"தங்களுக்கு..."

"என்ன ராமவர்மரே?"

"திருமணமாகவில்லையென்று சொன்னார்களே?"

"இந்தக் கோட்டைக்கு வந்தபோது ஆகவில்லை."

"இங்குதான்..." ராமவர்மன் சங்கடத்துடன் மென்று விழுங்கினான்.

"ஆம் ஆம் இங்குதான்." என்று சொல்லி நகைத்தான் இளவரசன்.



இளவரசனின் கேலியிலும் ராமவர்மனின் சங்கடத்திலும் சிக்கிக்கொண்ட இளநங்கை கோபநகை கூட்டினாள் தனது கொவ்வை இதழ்களில்.

ராமவர்மனின் சங்கடத்தையும் இளநங்கையின் கோபத்தையும் நீக்க, "இனி ஓலையைக் கவனிப்போம்" என்ற இளவரசன் ஓலையில் கண்ட திட்டத்தைப்பற்றித் தர்க்கிக்கலானான். அந்தத் தர்க்க முடிவில் இளவரசன் பூர்ணமாகச் சிங்கணன் வலையில் சிக்கிக் கொண்டானென்பதை ராமவர்மன் சந்தேகமறப் புரிந்து கொண்டான். 'அந்தப் பாதகன் சூழ்ச்சியால் ஒரு பெரும் வீரனும் இந்த அழகியும் அழிந்து விடப் போகிறார்களே!' என்று நினைத்துப் பெரும் தாபமும் கொண்டான். அந்தத் தாபத்துடன் சிங்கணன் பாசறைக்கு வந்து சமயத்தில் ராமவர்மன் இதயத்தில் சிங்கணன்மீது இணையிலா வெறுப்பும் ஏற்பட்டது. இத்தகைய துரோகச் செயலில், பஞ்சமா பாதகத்தில் இறங்கக்கூடியவன் ஒரு போர் வீரனாகவோ தளபதியாகவோ இருக்க முடியாதென்ற முடிவுக்கும் வந்த ராமவர்மன் மனத்தில் விபரீத எண்ணங்கள் பல எழுந்தன.

## அத்தியாயம் 70

# சாம்ராஜ்யக் கனவு

பாண்டிய நாட்டு இளவரசனிடமிருந்து மீண்ட பல நாழிகைகளுக்குப் பிறகும் சிங்கணன் வகுத்துள்ள சதித் திட்டத்தைப்பற்றியே நினைத்துக் கொண்டிருந்த ராம வர்மன், உண்மையை வீரபாண்டியனுக்கு உணர்த்தி விட்டாலென்ன என்று எண்ணினான். அப்படி உணர்த்துவது சேர நாட்டுக்கு விரோதமென்றாலும், ராஜத் துரோகத்திலும் சேருமென்றாலும், சிங்கணனின் கொடிய செயலைத் தடை செய்ய அது உதவுமென்றால் அதை ஏன் செய்யக் கூடாது என்றும் தன்னைக் கேட்டுக் கொண்டான். வீரபாண்டியனின் கண்ணியம், வீரம், பெருந்தன்மை, பண்பாடு முதலியவற்றை நேரில் கண்ட பின்பு அவனிடம் பெரும் பக்தி சேரநாட்டு உபதளபதிக்கு ஏற்பட்டு விடவே, அத்தகைய ஒரு மகாவீரனைச் சிங்கணனைப் போன்ற சதி காரனிடம் காவு கொடுப்பது எத்தனை தவறு என்பதையும் யோசித்தான். எதிரி நலனைப்பற்றிக் கவலைப்படுவதும் சேர நாட்டு நலனுக்கு ஊறு விளைவிக்கக் கூடிய காரியங்களில் இறங்க யோசிப்பதும், விபரீதமான எண்ணங்கள் என்பதை ராமவர்மன் உணர்ந்தேயிருந்தாலும், அந்தச் சூழ்நிலையில் அத்தகைய எண்ணங்கள் உருவாவது நீதி உள்ளம் படைத்த யாருக்கும் சகஜம் என்று நினைத்தான். இத்தனை நினைப்பிலிருந்தும் ஏதும் செய்ய வகையற்றுத் திணறினான். தான் கோட்டைக்குள் சென்று வந்தது முதல் சிங்கணனுக்குத் தன்மீது ஒரு கண்ணிருக்கு மென்பதையும் சந்தேகமின்றி அறிந்திருந்த சேரநாட்டுத் தளபதி தனது நிலையைப் பற்றித் தானே பரிதாபப் பட்டான்.



அன்று நடுப்பகல் வந்த சமயத்திலும் அவன் சிந்தனையிலாழ்ந்து கிடந்தான். சிங்கணன் அனுப்பிய ஓலையின் வாசகத்தை மீண்டும் தனது மனத்திற்குள் திருப்பித் திருப்பிப் படித்துப் பார்த்தான். ஓலையின் வரிகள் அவன் புத்தியில் தொடர்ந்து ஓடி விட்டன. ஓலையின் ஆரம்பத்தில் முதல் தாக்குதலில் தான் தோல்வியடைந்ததை ஒப்புக்கொண்டிருந்த சிங்கணன், இருப்பினும் போரின் முடிவு அதல்லவென்றும், தன்னுடைய படைக்குச் சேதம் சிறிதளவு ஏற்பட்டிருந்தாலும் மீதியுள்ள படைபலமே முற்றுகை நீடிக்கப் போதுமானதென்றும் அடுத்தபடி குறிப்பிட்டிருந்தான். தவிர இன்னும் இரண்டு நாட்களில் கடல் வழிப் படையும் வருமாதலால் கோட்டையைத் தகர்ப்பதும் பரம சுலபமென்பதையும் சுட்டிக் காட்டியிருந்தான். "இந்தக் கோட்டைக்குள் இனி யாரும் நுழைய முடியாது. உணவுப் பொருள்கள் இன்றி உமது படையும் நீரும் பட்டினி கிடந்தபின் வேறு வழியின்றிச் சரணடைய நேரும். அல்லது எனது பெரும் படையாலும், கடல்வழிப் படையாலும் தாக்கப்பட்டு, கோட்டை தூள் செய்யப்படும். இருப்பினும் உங்களைப் போன்ற பெரு வீரரை அழிக்க எனக்கு இஷ்டமில்லை. ஆகவே கடைசி முறையாக ஒரு சந்தர்ப்பம் அளிக்கிறேன். நீங்களும் உங்கள் படையும் நிராயுதபாணிகளாக வெளியே வந்தால் உங்கள் நாடு செல்லலாம். படைவீரர் இருவர் இருவராக அணி வகுத்துக் கோட்டையிலிருந்து வெளியேற வேண்டும். நீங்களும் உங்கள் உபதளபதியும் முன்னணியில் வர வேண்டும். யாரும் புரவி மீதோ, வேறு கோட்டை வாகன வண்டிகள் மீதோ வரக்கூடாது. இதற்கு உடன் பட்டால் உங்கள் படையின் நாசத்தை நீங்கள் தவிர்க்கலாம்." என்று சிங்கணன் கடைசியில் கூறியிருந்தான்.

"மேல் வாரியாகப் பார்த்தால் உள்ள நிலையில் இந்த ஓலை சரியானதுதான். பெரும் படையின் தளபதி அதிக படை பலமில்லாத ஒரு தளபதிக்கு எழுதக் கூடியதுதான். ஆனால் இதில் மறைந்துள்ள மர்மம் எனக்குத் தெரியாதா?

பாண்டிய வீரர்களை நிராயுதபாணிகளாகக் கோட்டையி லிருந்து வெளிப்பட்டுச் சிறிது தூரம் வரவிட்டு, பிறகு தனது படைகளைக் கொண்டு சிங்கணன் சூழ்ந்து கொண்டால் சிங்கணனை யார் தடை செய்ய முடியும்?' என்று தனக்குள் கேட்டுக் கொண்டான் ராமவர்மன். வீரபாண்டியனை ஒருகாலும் பாண்டியநாடு செல்லவிட மாட்டான் சிங்கணன் என்பதும் ராமவர்மனுக்குத் தெரியும். "அந்த வீரபாண்டியனைக் கையையும், காலையும் கட்டி உங்கள் காலடியில் கொண்டுவந்து தள்ளுகிறேன்." என்று சிங்கணன் சேரமன்னனிடம் சபதம் செய்ததை ராமவர்மன் நேரிடையாகப் பார்த்திருந்ததால், நேராகப் போரிலோ போர்த் தந்திரத்திலோ வெல்ல முடியாத வீரபாண்டி யனைச். சதியால் அழித்துவிடப் பார்க்கிறான் போசளன் என்று நிர்ணயித்துக் கொண்டான். ஓலையைப் பார்த்ததும் உண்மையை வீரபாண்டியன் ஊகித்துக் கொள்வான் என்று நினைத்த ராமவர்மனுக்கு திட்டத்துக்கு உடனடியாகப் பாண்டிய இளவரசன் ஒப்புக்கொண்டது அதிர்ச்சி யாகவே இருந்தது. அந்த அதிர்ச்சியுடன் சிங்கணனிடம் திரும்பிய ராமவர்மனுக்கு அன்று மாலை அதிக அதிர்ச்சி காத்திருந்தது.

அன்று மாலை கோட்டையிலிருந்து வெளிவந்த வீர பாண்டியனின் தூதன் அன்றிரவே சிங்கணன் திட்டப்படி படைகள் புறப்படுமென்பதை அறிவித்தான். சிங்கணன் கூறியபடி வீரர்கள் இருவர் இருவராக அணிவகுத்து அன்றிரவே வெளிவருவார்களென்றும், சிங்கணன் படை யினர் அவர்களைச் சோதனை செய்து வெளிவிடலா மென்றும் தெரிவித்தான். படைத் தலைவர் வெளிவரு முன்பு கோட்டைத் தலைவனான விஜயவர்மனிடம் கோட்டையை ஒப்படைத்து விடுவதாகவும் தூதுவன் கூறினான். தூதுவன் சொன்னதை மௌனமாகவே கேட்ட சிங்கணன் அப்படியே செய்யுமாறு வீரபாண்டியனிடம் சொல்லுமாறு கூறினான். தூதுவன் சென்ற பின்பு பக்கத்தில் இருந்த ராமவர்மனை வெற்றிக்குறி முகத்தில் துலங்க றிட்டு நோக்கினான் போசளத் தண்டநாயகன். ஆனால்





ராமவர்மன் முகம் பெரும் சந்தேகத்தைக் காட்டியது. "இதில் ஏதோ மர்மமிருக்கிறது. படைத்தலைவரே" என்றும் கூறினான். சந்தேகம் குரலில் ஒலிக்க.

"மர்மம் என்ன இதில்? ஏற்கெனவே வீரபாண்டியன் படை சிறு படை. அதில் ஐந்நூறு பேர் கோட்டையைப் பிடிப்பதில் போய்விட்டார்கள். நேற்று இரவுப் போரில் என்னதான் தந்திரமாகப் போரிட்டாலும் இருநூறு பேர்களாவது போயிருப்பார்கள். மீதி வீரரையும் தனது உபதளபதியையும் காக்க முயல்வது இயற்கை ராமவர்மரே! ஒன்று புரிந்து கொள்ளும். ஒரு பெண் கூட இருந்து விட்டால், எந்த வீரனுக்கும் பலவீனம் அதிகம்." என்றான் சிங்கணன்.

ராமவர்மன் அதை நம்பவில்லை. ஆனால் அவனும் நம்பும் படியாகக் காரியம் நடந்தது. தூதுவன் சென்ற அரை ஜாமத்திற்கெல்லாம் சேரர் கோட்டைத் தலைவனான விஜய வர்மன் கோட்டைமீது தோன்றினான். ஏதோ உத்தரவுகளிட்டான். மெல்ல மெல்லக் கோட்டைத் தளத்திலிருந்த விற்பொறிகள் எதிரியை நோக்குவதைவிட்டு அப்புறமாக அகன்று மதிலின் தென்புறக் கோடியில் நகர்ந்தன. கோட்டைமீது ஓரிரு பந்தங்களே இருந்தபோதிலும் அங்கு நடப்பதையெல்லாம் ராமவர்மன் கண்கூடாகப் பார்க்க முடிந்தது. சற்று நேரத்திற்கெல்லாம் கிழக்கு வாசல் கதவுகள் அகலத் திறந்தன. படைகள் வெளியே புறப்பட வேண்டியதற்குச் செய்யப்படும் ஏற்பாடுகளைப் பற்றிய அதிகாரக் கூச்சலும், வண்டிகள் உருளும் ஓசைகளும் கோட்டைக்குள்ளிருந்து கேட்டன. வீரபாண்டியன் சிங்கணன் வார்த்தையை நம்பிவிட்டா னென்பதை இவையனைத்தும் உணர்த்தினாலும், ராமவர்மனுக்கு உள்ளூர சந்தேகம் இருக்கவே சிங்கணனைக் கேட்டான். "எதற்கும் படைகளைச் சித்தமாக நிற்க வைக்க வேண்டுமா?" என்று.

சிங்கணன் அப்பொழுது கோட்டையிலிருந்து சற்று எட்ட நின்றிருந்தான். கோட்டையின் நடவடிக்கைகளைச்

கவனித்ததால் உள்ளூர மகிழ்ச்சியுடன் ராமவர்மனை நோக்கித் திரும்பி, "ராமவர்மரே! மருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்" என்று கூறியதன்றி வாய்விட்டு நகைக்கவும் செய்தான். அடுத்துத் தனது படைகளை இரண்டு மூன்று பகுதிகளாகப் பிரிந்து, கிழக்கு வாசலுக்கு எதிரிலேயே நிற்கவைத்து எதிரிகள் போக வழியும் விட்டான். எதிரிப் படை பூராவும் வெளிவந்ததும் நாற் புறங்களிலிருந்தும் நெருங்கி அவற்றை அழித்துவிடுமாறும் வீரபாண்டியனையும் இளநங்கையையும் மட்டும் சிறை செய்து தன் பாசறைக்குக் கொண்டு போகும்படியும் உத்தரவிட்டிருந்தான்.

"இதைப் போர்த் தந்திரம் என்று சொல்வதைவிடக் கோரக் கொலை என்று சொல்லலாம்,'' என்றான் ராமவர்மன் சிங்கணனை நோக்கி.

மீண்டும் பழமொழியால் பதில் கூறினான் சிங்கணன்: "தன்னைக் கொல்ல வரும் பசுவையும் கொல்லலாம்."

அடுத்துப் பேச மனமில்லாத ராமவர்மன் வேதனையுடன் நின்றிருந்தான். அவன் எதிர்பார்த்த கோரக் கொலை நடக்கவிருந்த சமயமும் நெருங்கியது. இரண்டாம் ஜாமத் துவக்க மணி கோட்டைக்குள் ஒலித்ததும், திறந்த கிழக்கு வாசல் வழியாக வீரபாண்டியனும் இளநங்கையும் வெளி வந்தார்கள். அதே சமயத்தில் கோட்டைத் தளங்களில் சேர வீரர்கள் தோன்றி வெற்றிக் கோஷம் செய்தார்கள். சேரர் கொடியும் கோட்டைமீது பறந்தது. சிங்கணன் முகத்தில் வெற்றிக்குறி தாண்டவமாடியது.

நடுநிசி மணியடித்து வீரபாண்டியனும் இளநங்கையும் வெளிவந்து கிழக்கு வாசலின் ஒரு புறத்தில் நின்றதும் பாண்டியப் படை வீரர்கள் இருவர் இருவராக வெளி வந்தனர். சிங்கணன் வீரர்கள் அணிவகுத்து நின்று அவர்கள் வெளியே செல்ல வழிவிட்டனர். கோட்டையிலிருந்து வந்த வீரர்கள் மெதுவாக வந்தனர். அவர்களுக்குப் பீதியுமிருந்ததை அவர்கள் முகங்களும் நடையும் சந்தேகமற நிரூபித்தன. கடைசி வீரன் வெளிவந்ததும்





சிங்கணன் திடீரென ஒரு பந்தத்தை எடுத்து ஆட்டின
பல இடங்களில் பிரிந்து நின்ற சேரர் புரவிப் படை
தடதடவென்று அந்த நிராயுதபாணிகளை நோக்
பாய்ந்து வந்தன.

அதே சமயத்தில் மற்றொரு பெரும் விபரீ
நேரிட்டது. கோட்டை மீது நின்றிருந்த விஜயவர்
பெரிதாக அலறினான். கொம்பெடுத்துப் பன்மு
ஊதினான். போரை நிறுத்தும் ஒலி அது. அதைக் கே
சிங்கணன் பிரமித்தான். எதற்காக விஜயவர்
அலறுகிறானென்பதை உணர முடியாததால் திணறின
அதைப்பற்றி அவன் சிந்தித்து முடிப்பதற்கு முன்பு வட
வாசற்புறத்திலிருந்து தடதடவெனச் சுமார் ஆயிரம் ப
வீரர்கள் சிங்கணன் புரவிப் படையைப் பின்ப
தாக்கினார்கள், கோட்டை மேலே மீண்டும் விற்பொறி
எழுந்து சுழன்றன. எரிவாளிகளும் வேல்களும் ம
யெனப் பொழிந்தன சிங்கணன் படை மீது. சிங்கண
பிரமித்தான். ராமவர்மனுக்கு ஓரளவு விஷயம் புரிந்தது

முற்றும் எதிர்பாராத விதத்தில் எதிரி தாக்கிய
படைகளை அணிவகுக்கக்கூட அவகாசமில்லை சிங்
னுக்கு. ஆகவே கண்டபடி தாறுமாறாகத் தானறிந்த போ
முறைக்கு முற்றும் மாறாக, பயங்கரச் சண்டை நிகழ
விட்டதை உணர்ந்த சிங்கணன் பிரமித்து நின்று விட்ட
தவிர வடபுறத்திலிருந்து வந்த படை, கோட்டை யிலி
சேரர் படையாகவுமிருந்ததால், அவர்கள் ஏன்
படையைத் தாக்குகிறார்களென்பதும் புரியவில்
அவனுக்கு. இப்படிப் பலபடி குழம்பி நின்ற சிங்கண
வடக்கு வாசல் படையின் ஒரு பகுதி சூழ்ந்து கொ
கோட்டையை நோக்கித் தள்ளிக்கொண்டு சென்றது.

இந்த விபரீதப் போர் அரை ஜாமம் கூட ந
வில்லை. திடீரெனக் கதவுகள் சாத்தப்பட்டன.
வர்மன் அரை ஜாமத்திற்குப் பிறகு எஞ்சிய தனது ப
யுடன் தனித்து நின்றான். கோட்டையிலிருந்து வெ
வந்த நிராயுதபாணிகள் மலைக்காட்டுக்குள்

விட்டதாலும், போரும் திடீரென முடிந்துவிட்டதாலும், எஞ்சிய படைகளைப் பின்வாங்கச் செய்த ராமவர்மன் அன்றைய இரவின் மீதியைக் கோட்டையைப் பார்ப்பதிலேயே கழித்தான். அடுத்த நாள் பொழுது புலர்ந்து ஒரு ஜாமம் கழித்துத்தான் அவனுக்கு உண்மை புரிந்தது. வீரபாண்டியன் ஆணைப்படி கோட்டைக்குள் சென்ற ராமவர்மன் கோட்டையிலிருந்த சேரர்கள் கொலு மண்டபத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டான். அங்கு வீரபாண்டியன் சிங்காதனத்தில் கொலுவிருந்தான். இளநங்கை பூரண கவசமணிந்து சிங்காதனத்திலிருந்து சற்றுத் தள்ளியிருந்த ஆசனத்தில் அமர்ந்திருந்தாள். பாண்டிய வீரர்கள் கொலுமண்டபமெங்கும் காவல் செய்து கொண்டிருந்தார்கள். அந்தப் பெரும் கொலுவைப் பார்த்துக் கொண்டு உள்ளே நுழைந்த ராமவர்மனை அன்புடன் தலையசைத்து வரவேற்ற வீரபாண்டியன் ஓர் ஆசனத்தைச் சுட்டிக் காட்டி அதில் அமரச் சொன்னான்.

ராமவர்மன் உட்காரவில்லை. சிங்கணன் வீரபாண்டியன் முன்பு நிறுத்தப்பட்டிருப்பதைக் கண்டான். ஆகவே கேட்டான். "தளபதிகள் சிறைப்பட்டாலும் அவர்களைக் குற்றவாளிகளைப் போல் நிறுத்தும் பண்பாடு தான் பாண்டியர் பண்பாடா?" என்று. இந்தக் கேள்வியைச் சிறிதும் அச்சமின்றித் தலைநிமிர்ந்து கேட்டான் ராமவர்மன்.

வீரபாண்டியன் முகத்தில் கடுமையிருந்தது. "இல்லை, அந்தப் பண்பாடு இல்லை," என்று கூறினான் பதிலுக்கு.

"பிறகு போசளத் தண்டநாயகர் ஏன் நிற்கிறார்?" என்று மீண்டும் வினவினான் ராமவர்மன்.

"சதிக் குற்றத்திற்காக. சதி வேறு. தந்திரம் வேறல்லவா?" என்று வினவினான் வீரபாண்டியன்.

ராமவர்மன் இதற்குப் பதில் சொல்ல முடியாததால் தலை குனிந்தான். அவனைக் கருணையுடன் நோக்கிய வீர பாண்டியன் மெல்ல மெல்ல விஷயத்தைக் கூறத் தலைப் பட்டான். "ராமவர்மரே! சிங்கணன் மகாவீரன். போரில் வல்லவன். அச்சமென்பதை அறியாதவன். அவனிடம் நேர்மையில்லை. அறவழிகளில் நம்பிக்கையில்லை. முந்நாளிரவுப் போர் நியாயமானது. என்னை நம்பாததும் சரி, வடக்கு வாயிலுக்குப் பதில் தெற்கு வாயிலை உடைக்க முயன்றதும் சரி, எதிரியான என் திட்டத்தை அவன் ஒப்புக்கொள்ள அவசியமில்லை. ஆனால் நேற்றிரவு வகுத்த திட்டம் போர்த் திட்டமல்ல; சதித்திட்டம்; எங்களை அழித்துவிடும் பேய்த் திட்டம்; நிராயுதபாணிகளாக என் வீரர்களை வெளியே வரச்சொல்லி அவர்களை அழித்து விடத் திட்டமிட்டது பெரும் குற்றம் ராமவர்மரே, பெரும் குற்றம். இதில் இன்னொரு குற்றமும் இருக்கிறது..." என்ற வீரபாண்டியன் சிங்கணனை உற்று நோக்கினான். அவன் உணர்ச்சிகள் சீறி எழுந்துவிட்டதை அவன் முகத்தில் விரிந்த பயங்கரங்களையும் கண்ணில் துலங்கிய கழுகுப் பார்வையும் நிரூபித்தன. அந்தப் பயங்கரப் பார்வையை முதன் முதலாகக் கண்ட ராமவர்மன்கூட அச்சத்தின் வசப் பட்டான்.

வீரபாண்டியனின் குரல் பயங்கரமாகத் தொடர்ந்து ஒலித்தது. "நிராயுதபாணிகளைக் கொல்ல முயன்றது ஒரு குற்றம். பாண்டிய வீரர்கள் போரில் மடிவார்களேயொழிய ஆயுதத்தைப் பிரிந்து வெளி வரமாட்டார்கள் என்பதை உணராதது இரண்டாவது குற்றம். உயிரை நான் பெரிதாக மதித்து என் வீரர்களைப் பலி கொடுத்துப் பிழைக்க எண்ணுவேனென்று நினைத்தது மிகப் பெரிய மூன்றாவது குற்றம். இவன் கேடு நினைத்தான் ராமவர்மரே! கெடுவான் கேடு நினைப்பான் என்ற தமிழ்ப் பழமொழி இந்தக் கன்னடத்தானுக்குத் தெரியுமோ தெரியாதோ, நீர் எடுத்துச் சொல்லும்" என்ற வீரபாண்டியன் ராமவர்மனை நோக்கித் தன் புருவங்களைக் கேள்வி கேட்கும் பாவனையில் உயர்த்தினான்.

ராமவர்மன் சிங்கணனைப் பரிதாபத்துடன் பார்த்தான். இத்தனை குற்றச்சாட்டுக்கும் சிங்கணன் சிறிதும் மதியாமல் அலட்சியமாக நின்று இருந்தான்.

அதனால் அவனிடம் சிறிது மதிப்பும் கொண்ட ராம வர்மன், "கோணல் புத்திமட்டுமில்லாவிட்டால் சிங்கணன் பெரும்படைத் தலைவனாகத் திகழ முடியும்" என்று தனக்குள் சொல்லிக்கொண்டான். பிறகு கேட்டான் வீரபாண்டியனை நோக்கி. "உங்கள் வீரர்கள் ஆயுதங்களைப் பிரியாதவர்களென்று சொல்கிறீர்கள். ஆனால், நிராயுத பாணிகளாக வந்ததை நானே பார்த்தேனே?"

"வந்தவர்கள் பாண்டிய வீரர்களல்ல..." என்று கூறினான் வீரபாண்டியன் உறுதி தொனித்த குரலில்.

"அப்படியானால் அவர்கள்...?" என்று இழுத்தான் ராமவர்மன்.

"கோட்டையை நான் பிடித்தபோது என்னால் சிறைப்படுத்தப்பட்ட கோட்டை வீரர்கள்; சேர நாட்டவர்; பாண்டிய வீரர்களின் உடைகளில் வெளிவந்தார்கள். எனது புரவி படைவீரர் சேரர் உடையில் வடக்கு வாசலிலிருந்து வெளிவந்தார்கள். சிறிது உடை மாறாட்டம், கிழக்கு வாசலில் நீங்கள் நிராயுதபாணிகளைச் சோதித்துக் கொண்டிருந்தபோது, வெற்றிமுரசுகளை முழங்கியதால் வடக்கு வாசல் கதவு திறந்ததையோ எனது புரவி வீரர் வெளிப் போந்ததையோ நீங்கள் உணர முடியாத நிலை. இவை காரியத்தைச் சாதித்து விட்டன. வெளிவந்த வீரர் களுக்குச் சேதம் ஏற்படாதிருக்கவே நீங்கள் அவர்கள்மீது விழுந்தவுடன் நான் உங்களைப் புரவிப் படை கொண்டு பின்புறம் தாக்கினேன். அந்தத் தாக்குதல் நிராயுதபாணி கள் கலைந்து ஓடச் சந்தர்ப்பமளித்தது. என் படை சேரர் உடையிலிருந்ததால், அதை நெருங்கு முன்பு அவற்றின் நோக்கம் உங்களுக்குப் புரியவில்லை. தவிர உமது படை நிராயுதபாணிகளை அழிக்கத் திட்டுத் திட்டாகப் பிரிந்து நின்றதால், அவை கூடுவதற்குள் சிங்கணனை வளைத்து உள்ளே கொண்டு வருவதும் சாத்தியமாயிற்று. இப்பொழுது உங்களுக்கு விவரம் புரிகிறதென்று நினைக்கிறேன்," என்றான் வீரபாண்டியன்.



ராமவர்மனுக்கு விஷயம் மிகத் தெளிவாகப் புரிந்தது வீரபாண்டியன் நுண்ணிய அறிவு. எந்தச் சந்தர்ப்பத்தையு சமாளிக்கும் திறன் இரண்டையும் நினைத்துப் பிரமித்தான் சிங்கணன் முகத்திலும் பிரமிப்பு தெரிந்தது. அடுத்தபடி "சிங்கணா!" என்று விளித்த வீரபாண்டியன் சொன்னான் "இத்துடன் கோட்டாற்றுக்கரை யுத்தம் முடிவடைகிறது கடல்வழிப் படையைஎதிர்பார்க்காதே. நான் சரணடைந்து விட்டதாகச் செய்தி அனுப்பி அவற்றைத் திருப்பிவிட்டேன் உன் படைகளில் நீ பாண்டிய மன்னனைப் பின்புறம் தாக் அனுப்பியிருப்பதும் எனக்குத் தெரியும். ஆகவே உன் படை பலமும் மிகவும் குறைந்து விட்டது. இனி இந்த கோட்டையைக் கைப்பற்ற கனவு காணாதே. சேரனிட சென்று சொல், சீக்கிரம் பாண்டிய நாட்டு முத்துக்களை கொடுத்துவிடும்படி. இல்லையேல் இன்று கோட்டாற்று கரையில் ஊன்றிய வீரபாண்டியன் கால் அடுத்தபடி சேர தலைநகரிலும் ஊன்றும் என்றும் எச்சரிக்கை செய். இனி செல்லலாம்"

இந்த வார்த்தைகளை மிகக் கம்பீரமாக உதிர்த்த வீ பாண்டியன் சிங்கணனை அழைத்துச் செல்லுமாறு வீர களுக்குச் சைகை காட்டினான். போகுமுன்பு சிங்கண ஒரு முறை வீரபாண்டியனை ஏறெடுத்து நோக்கினா பிறகு மிகுந்த துணிவுடன் "வீரபாண்டியா! இத்துட இந்தக் கதை முடியவில்லை. இன்னொரு பகுதி இருக்கிறது என்று கூறினான்.

"அந்த இரண்டாம் பகுதி இனித் துவங்கும். சேர படியாவிடில் படிய வைக்கும் பகுதி அது. பாண்டிய சா ராஜ்ய அஸ்திவாரக்கல் ஊன்றும் முதல் பகுதி இங் இன்று முடிகிறது," என்று சிங்காதனத்திலிருந்து எழுந் நின்று கூறினான் வீரபாண்டியன். அதைக் கூறியபோ அவன் குரலில் பெரும் கம்பீரம் இருந்தது. கண்களி பெரும் சாம்ராஜ்யக் கனவு விரிந்தது. முகமெங்கு சாம்ராஜ்யலட்சுமி தாண்டவமாடினாள். அந்த லட்சுமின

வரவேற்பதுபோல் வெளியே முரசுகளும், கொம்புகளும் ஒலித்தன. வீரபாண்டியன் கனவு நனவாகி விடுவதற்குச் சான்று கூறுவனபோல் சங்கங்களும் பெரிதாகச் சப்தித்தன.

## முதல் பாகம் முற்றும்

# ராஜமுத்திரை

(இரண்டாம் பாகம்)

சாண்டில்யன்



வானதி பதிப்பகம்
13, தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : ஏப்ரல், | 1970 |
| இரண்டாம் பதிப்பு | : ஆகஸ்டு, | 1972 |
| மூன்றாம் பதிப்பு | : செப்டம்பர், | 1977 |
| நான்காம் பதிப்பு | : அக்டோபர், | 1980 |
| ஐந்தாம் பதிப்பு | : நவம்பர், | 1982 |
| ஆறாம் பதிப்பு | : ஜுலை, | 1986 |
| ஏழாம் பதிப்பு | : மார்ச், | 1989 |
| எட்டாம் பதிப்பு | : | 1991 |
| ஒன்பதாம் பதிப்பு | : நவம்பர், | 1995 |
| பத்தாம் பதிப்பு | : அக்டோபர், | 1998 |
| பதினொன்றாம் பதிப்பு | : பிப்ரவரி, | 2000 |
| பன்னிரெண்டாம் பதிப்பு | : ஆகஸ்டு, | 2001 |
| பதிமூன்றாம் பதிப்பு | : மார்ச், | 2003 |
| பதினான்காம் பதிப்பு | : ஜுன், | 2004 |



திருநாவுக்கரசு தயாரிப்பு

**விலை: ரூ. 140.00**

| | |
|---|---|
| Title | : RAJAMUTHIRAI-PART II |
| Author | : Sandilyan |
| Subject | : Novel |
| Language | : Tamil |
| Edition | : Fourteenth Edition, Jun, 2004 |
| Pages | : 576 |
| Published by | : **Vanathi Pathipagam**<br>23, Deenadayalu Street,<br>T.Nagar, Chennai - 600 017. |
| Price | : Rs. **140.00** |

Printed at : Malar Printers, 044-28224803

# முதல் பதிப்பின் முன்னுரை

**வா**ணிபம், வீரம் இரண்டாலும் ஆதிமுதல் சிறப்புற்ற நாடுகள் உலகத்தில் மூன்று. தமிழ்நாடு, சீனா, இங்கிலாந்து. இம்மூன்று நாடுகளும் வாணிபத்தாலும் சிறப்புற்றன. வீரச் செயல்களாலும் புகழுற்றன.

ரோமாபுரி சாம்ராஜ்யம் வீரத்தில் சிறந்து விளங்கியது. பொருள் உற்பத்தியிலோ, வர்த்தகப் பெருக்கிலோ அது சிறப்புறவில்லை. தமிழகம், சீனா ஆகிய நாடுகளிலிருந்து பொருள்களை வரவழைத்துக் கொண்டது. தமிழகத்தின் மிளகு அவர்கள் உணவுக்கு ருசியளித்தது. தமிழகத்தின் முத்து அவர்கள் மேனிக்கு அழகளித்தது. தமிழகத்தின் மெல்லிய பருத்தியாடை ரோமாபுரி மாதரின் மானங்காத்தது. இந்தக் கடைசிப் பணியில் இணைந்து கொண்டது சீனத்தின் இணையிலாப் பட்டு.

ரோமாபுரியினரும், இஸ்லாமியரும் பெரும் போர்களைப் புரிந்தார்கள். பல நாடுகளைத் தோற்கடித்தார்கள். தோல்வியுற்ற நாடுகளிலிருந்து பொருள்களைக் கொணர்ந்து தங்கள் வாழ்க்கையை வளப்படுத்திக் கொண்டார்கள். சிறப்புப் பொருள்களின் உற்பத்தியில் அவர்கள் பெரும் சுழியாகவே இருந்தார்கள்.

தமிழகமும், சீனாவும் வாணிபத்தில் வெற்றி கொண்டன. மேலை நாடுகளும் இடையேயிருந்த கீழை நாடுகளும் பெரும் வீர சரித்திரங்களைக் கடலிலும் தரையிலும் எழுதின. ஆதியிலிருந்து குப்ளேகான் வரை பெரும் வல்லரசுகள் சீனாவின் வீரசரித்திரத்தை எழுதின. அந்த நாட்டுக்குச் சென்ற பாதையே பட்டு வழி (Silk route) என்று அழைக்கப்பெற்றதென்றால் அதன் வாணிபச் சிறப்பைச் சொல்லவும் வேண்டுமா?

தமிழகத்தின் வீரத்தைப் பற்றியும், கடற்படைச் சிறப்பைப்பற்றியும் 'யவன ராணி', 'கடல் புறா' ஆகிய இரண்டு நாவல்களில் விவரமாக எழுதிவிட்டேன். நாவலந்தீவின் காற்சிலம்பின் முத்துப்பரல் போல் விளங்கும் இச்சிறு நாடு, வீரத்தில் எத்துணை சிறந்தது என்பதை அந்த இரு நாவல்களிலும் விவரித்தேன். ஆனால் தமிழகத்தின் முத்தைப்பற்றி எழுதவேண்டும் என்று நீண்ட நாளாக எனக்கிருந்த அவா அந்த இரண்டு நாவல்களில் பூர்த்தி பெறவில்லை. அதைப் பூர்த்தி செய்துகொள்ள 'ராஜ முத்திரையை' எழுதினேன்.

நான் எழுதிய நாவல்களுக்குச் சரித்திரக் குறிப்புகளைத் தேடியபோதெல்லாம், முத்தின் சிறப்பு கண்முன் தோன்றிக் கொண்டேயிருந்தது. தமிழகத்தின் சரித்திரத்தை எழுதிய ஒவ்வொரு பேராசிரியரும், இந்த நாட்டுக்கு வந்துபோன ஒவ்வொரு வெளிநாட்டு வாணிபரும், யாத்ரீகரும் இதைக் குறிப்பிடத் தவறவில்லை. அதுவும் பாண்டியநாடு முத்தால் சிறந்ததென்றும், முத்தால் வளர்ந்ததென்றும் அவர்கள் ஒவ்வொருவரும் குறிப்பிட்டிருக்கிறார்கள். முத்து எப்படி எடுக்கப்பட்டது, எப்படிப் பாதுகாக்கப்பட்டது, எப்படி உபயோகிக்கப்பட்டது என்பதை மார்க்கோபோலோ, ஏலியன் முதலிய வெளி நாட்டவர் விவரமாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

ஏலியன் முத்து எடுப்பை ஒரு கதை போலச் சொல்கிறார்: "யூக்ரடைடீஸ் ஆண்ட காலத்தில் ஸோரஸ் (சோழர்) என்ற அரச வம்சத்தினர் ஆண்ட ஒரு நகரம் இன்னும் இருக்கிறது. அந்த நகர மக்கள் பெரும் வலைகளை எடுத்துக் கொண்டு, கடலுக்குச் சென்று முத்து எடுப்பார்கள். முத்துச் சிப்பிகள் கூட்டம் கூட்டமாக நீந்தி வருமென்றும், தேனீக்களுக்கு ராணி இருப்பதுபோல, இந்த முத்து வர்க்கத்துக்கும் ஒரு தலைவி இருப்பதாகவும் தெரிகிறது. தலைவியின் சிப்பி மற்ற சிப்பிகளைவிடவும் பெரிதாகவும் அதிக வர்ண ஜாலங்கள் உள்ளதாகவும் இருக்கும்."



மார்க்கோபோலோவின் விவரணம் இன்னும் அதிகமாகவும் விளக்கமாகவும் இருக்கிறது. அவர் நேரில் இங்கு விஜயம் செய்து, இங்கு தங்கியிருந்தவராகையால் பல விஷயங்களை நேரில் பார்த்துச் சொல்லியிருக்கிறார். முத்தைப் பிடிக்க மன்னன் தலைமையில் முத்தெடுப்பாளர் செல்லும் விமரிசை, சுமார் நூறு படகுகள் ஏக காலத்தில் செல்லும் காட்சி, முத்தெடுக்கும் முறை இவை மிக விவரமாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றன, மார்க்கோ போலோவால். "முத்தெடுப்பதற்கு முன்பு மந்திரவாதிகள் படகுகளில் சென்று மந்திரமோதுவார்கள். அந்த மந்திரத்தின் விளைவாக மனிதரை விழுங்கும் பெரும் சுறா மீன்கள் அந்தப் பகுதியில் வாரா" என்ற பிரத்யேக விவரத்தையும் மார்க்கோபோலோவிடமிருந்துதான் அறிகிறோம்.

இதையெல்லாம் படித்ததும் அந்த முத்தை மூலக் கருவாக வைத்து ஒரு கதை எழுத நீண்ட நாளாக ஆசை யிருந்தது. அந்த ஆசையை வின்செண்ட் ஸ்மித் தூண்டி னார். "கி.பி. முதல் நூற்றாண்டிலேயே மதுரை அல்லது கூடல் பாண்டிய நாட்டுத் தலைநகராயிருந்தாலும், அதற்கும் முன்பு பண்டையத் தமிழகத்தில் கொற்கையே தென்னிந்திய நாகரிகத்தின் தொட்டிலாக இருந்தது. பாண்டிய மன்னனின் ஆட்சிபீடம் மதுரையில் இருந்த தென்றாலும், பாண்டிய நாட்டின் பட்டத்து இளவரசன் கொற்கையில்தான் வசித்தான். ஆகவே கொற்கை பாண்டிய நாட்டின் இரண்டாவது தலைநகராக இருந்தது. கொற்கையின் வாணிபத்தைச் சரிபார்த்து நடத்த அங்கு இளவரசன் ஆட்சி புரிந்தான். அவனுக்கெனத் தனி ராஜ முத்திரை இருந்தது. கோடரியும் யானையும் இணைந்த முத்திரை அது." என்ற விவரத்தையும் கொற்கை முத்தைப் பற்றி அவர் கூறியுள்ள விஷயங்களையும் படித்ததும் அது பற்றி ஒருநாவல் புனைய முடிவு செய்தேன்.

இந்த முடிவுக்குத் தமிழக சரித்திர வியாசர் உயர்திரு நீலகண்ட சாஸ்திரியாரின் நூல்கள் வழக்கம்போல் உதவின.

அவருடைய "History of the Pandian Kingdom" என்ற நூலிலும், "A History of South India" என்ற நூலிலும், அவர் முதலாம் ஜடாவர்மன் சுந்தரபாண்டியனைப் பற்றிக் கூறியுள்ள தகவல்கள், அவன் பெரும் சாம்ராஜ்யத்தைக் குறுகிய காலத்தில் ஸ்தாபித்த சிறப்பு இவை 'குமுதத்துக்கு அடுத்த கதை முத்தைப் பற்றித்தான்." என்பதை நிர்ணயித்து விட்டன.

ஆகையால் பிறந்தது 'ராஜ முத்திரை'. கொற்கையின் பாண்டியப் பட்டத்து இளவரசனின் முத்திரையைச் சுமார் இரண்டரை ஆண்டுகளாகத் தமிழ் மக்கள் மனத்தில் பொறிக்க முயன்றிருக்கிறேன். என் மனத்தில் பதிந்த அந்த இன்ப முத்திரை மற்றவர் மனங்களிலும் பதிய வேண்டு மென்ற ஆவலால் இந்த 'ராஜமுத்திரை' உதயமாயிற்று.

மற்றையக் கதைகளைப்போலவே, இந்தக் கதையையும் பிரசுரித்து உதவிய 'குமுதம்' ஆசிரியருக்கு எனது நன்றி என்றுமிருக்கிறது.

இந்த நூலை நானே பதிப்பித்திருக்கிறேன், "இலக்கியப் பொழில்" என்ற பிரசுராலய முத்திரையில். இப்பொழுது எனக்கு மனச்சாந்தி அதிகமாகிவிட்டதால் முத்திரையை 'சாந்தி பிரசுரம்' என்று மாற்றி இருக்கிறேன். "உனக்கு ஏன் புத்தகம் போடும் தொல்லை? உன்னால் விற்க முடியுமா" என்று பலர் எச்சரித்தார்கள். எச்சரிப்புகளை நான் ஏற்கவில்லை. தமிழ் மக்கள் எனது பக்கம் இருக்கிறார்கள் என்ற அகந்தையோ, எதிலும் எனக்குள்ள துணிச்சலோ, எதிலும் நான் காட்டும் பிடிவாதமோ காரணம் எதுவேண்டுமானாலும் வைத்துக்கொள்ளுங்கள். பதிப்புச் சொந்தப் பதிப்பாக வெளிவந்திருக்கிறது.

நீரில் இறங்கிவிட்டேன். நீந்துவேனே தவிர மூழ்க மாட்டேன் என்ற நம்பிக்கை திடமாக இருக்கிறது. தமிழ் மக்கள் இதுவரை அளித்துள்ள ஆதரவுதான் நம்பிக்கைக்குக் காரணம்.



இந்த பெருநூலை மிகக் குறுகிய காலத்தில் முழு வேகத்துடன் அச்சிட்ட அச்சகத்தாருக்கு எனது நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஏப்ரல் 1970 — சாண்டில்யன்

சென்னை

## இந்நூலை உருவாக்குவதற்கு உதவிய வரலாற்று நூல்களின் பட்டியல்


1. PANDIYAN KINGDOM
   Sri K.A. Neelakanta Sastry, M.A.
2. A HISTORY OF SOUTH INDIA
   Sri K.A. Neelakanta Sastry, M.A.
3. FOREIGN NOTICES OF SOUTH INDIA
   Sri K.A. Neelakanta Sastry, M.A.
4. THE EARLY HISTORY OF SOUTH INDIA
   Mr. Vincent A. Smith, M.A. (Dubl.), M.R.A.S. etc.
5. PRE-PALLAVAN TAMIL INDEX
   Dr. N. Subramanian, M.A., Ph.D.
6. TRAVANCORE MANUAL
   Sri. V. Nagam Aiya, (Hist) S.
7. TAMIL LEXICON
8. கோயிலொழுகு
   ஸ்ரீ எம்பெருமானாரின் ஸ்ரீரங்கம் கோயில் நிர்வாக நூல்
9. பாண்டியர் வரலாறு
   சதாசிவ பண்டாரத்தார்
10. நாநார்த்த தீபிகை – ஒரு சொல் பல பொருள்
    திருநெல்வேலிக் கவிராயர் முத்துசாமிப் பிள்ளை

## ஆசிரியரின் பிற நூல்கள்

ராஜபேரிகை
ராஜதிலகம்
கடல் புறா I
கடல் புறா II
கடல் புறா III
ஜல தீபம் I
ஜல தீபம் II
ஜல தீபம் III
யவனராணி I
யவனராணி II
கன்னிமாடம்
மன்னன் மகள்
சேரன் செல்வி
கவர்ந்த கண்கள்
மலைவாசல்
ஜீவபூமி
மஞ்சள் ஆறு
மூங்கில் கோட்டை
மோகினி வனம்
இளையராணி
நீள்விழி
பல்லவ திலகம்
நாக தீபம்
விலைராணி
பாண்டியன் பவனி
சந்திரமதி
வசந்தகாலம்
உதய பானு
அவனி சுந்தரி
மங்கல தேவி
நிலமங்கை
ஜல மோகினி
கடல் ராணி
மலையரசி
மோகனச் சிலை
ராஜயோகம்
ராணா ஹமீர்
நீலவல்லி
நாகதேவி
ராணியின் கனவு
புரட்சிப் பெண்
செண்பகத் தோட்டம்
மதுமலர்
நங்கூரம்
மனமோகம்
மோகினி வனம்
இந்திர குமாரி
ராஜ்யஸ்ரீ

அத்தியயம் 1

# சிறையில் ஒரு சித்தினி

*மலையாழத்திலிருந்த அந்த மாநகரை மலைச் சரிவிலிருந்த காட்டு முகப்பில் புரவிமீதமர்ந்த வண்ணமே கண்ட வாலிபன் முகத்தில் வியப்பும் விசனமும் கலந்தே தாண்டவமாடின. விண்மீன்கள் மட்டுமே ஒளிவிட்ட கிருஷ்ணபக்ஷத்தின் காரிருளில் விளக்குகளாலும் பெரும் பந்தங்களாலும், மண்ணிலும் இன்னொரு விண் சிருஷ்டிக்கப்பட்டது. போன்ற பிரமையை ஏற்படுத்திய பரலி மாநகரை அலசிவிடுபவன் போல் துருவித் துருவிப் பார்த்த அந்த வாலிபன் இதயத்திலிருந்து இணையற்ற துன்பத்துக்கு அறிகுறியாகப் பெருமூச்சொன்றும் வெளிவந்தது. பராலியா என்று வெளிநாட்டுக் கடல் வணிகராலும், பரலி ஆற்றங்கரையிலிருந்தால் பரலி மாநகரென்றும், செல்வம் கொழித்திருந்ததால் திரு வாழும் கோடு** என்றும் பாரதப் பெருமக்களாலும் அழைக்கப் பட்டு 'உலகப் பிரசித்திபெற்றிருந்த அந்த மாநகரின் செல்வமும் செழிப்பும் இணையற்றதென்பதை உணர்ந் திருந்த அந்த வாலிபன், அத்தனை செல்வமும் செழிப்பும் பரலீசனான வீரரவி உதய மார்த்தாண்டவர்மனின் அதர்மத்தால் அழிந்துவிடப் போகிறதே என்ற நினைப்பால் பெரும் அனுதாபத்தையும் முகத்தில் படரவிட்டுக் கொண்டான்.

---

* கேரளநாடு மேற்குத் தொடர்ச்சி மலையின் ஆழத்திலிருப்பதால் மலை ஆழம் (மலையாழம்) என்று முன்னாளில் அழைக்கப்பட்டது. பிறகு திரிந்து மலையாளம் என்று ஆயிற்று — Travancore Manual Vol. I Page I – By Nagam Aiya F.R–HS.

** திரு வாழும் கோடுதான் பின்னால் திருவிதாங்கூர் என்றும் திருவாங்கூர் என்றும் அழைக்கப்பட்டது.

பரலிமா நகரின் நிலப்பரப்பு அதிகமில்லா விட்டாலும் ஒருபுறம் கடலும் ஒருபுறம் மலையும் அரணமைத்திருந்ததாலும் பார்வைக்கு மலையாழத்தின் சின்னஞ்சிறு ஆபரணம் போல் அந்த மாநகர் அழகு மிகுந்ததன்றி இயற்கையின் பாதுகாப்பையும் அதிகமாகப் பெற்றிருந்ததைக் கண்ட அந்த வாலிபன், 'எந்த அழகுக்கும் இயற்கை ஒருவித அரணை அமைத்துத்தான் தருகிறது. அதை மனிதனுடைய துர்க்குணங்கள்தான் பாழாக அடித்துவிடுகின்றன,' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். அந்த இயற்கை அரணுக்குள்ளே மற்றோர் அரணாக அந்த மாநகரின் வெளிக்கோட்டை விளங்கியதையும், அந்தக் கோட்டையின் வாயில்களில் புதைக்கப்பட்டிருந்த பெரும் யானைத் தந்தங்களும் தந்தங்களின் உச்சிகளில் எரிந்த வெண்கலத் தூண்டா விளக்குகளும் அந்த நகரின் புற அழகைப் பன்மடங்கு உயர்த்தியதையும், கோட்டைக்குள்ளிருந்த வீதிகள் பற்பல சதுரங்களாக அமைக்கப்பட்டிருந்தது மலையிலிருந்து பார்ப்போருக்குக் கோயிலின் பிரகாரங்களை நினைவுறுத்தியதையும் கண்ட அந்த வாலிபனின் கண்கள் தூரத்திலிருந்து விவரங்கள் முழுவதையும் பார்க்க முடியவில்லையென்றாலும் பொதுப் பார்வைக்கு திருவின் இருப்பிடமாக விளங்கும் திருவாழுங்கோடு உள்ளேயும் செல்வப் பெருக்குடன் விளங்கியதை அந்த வாலிபன் உணர்ந்தேயிருந்ததால் அவன் கண்களில் விவரிக்க முடியாத கனவொன்று படர்ந்தது. இத்தனை செல்வப் பெருக்கை மிக எச்சரிக்கையுடன் பாதுகாப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் சேரமன்னன் செய்யத் தவறவில்லை யென்பதை நகரத்துக்கு வெளியேயும் உள்ளேயும் தெரிந்த படைவீடுகள் மட்டுமின்றி அக்கம் பக்கத்தில் தெரிந்த மலையுச்சிகளிலிருந்த பார்வைக் கூடங்களும் நிருபித்ததையும் கண்ட அந்த வாலிபன் முன்னறிவிப்பில்லாமல் ரகசியமாகப் பரலிமாநகரை எந்தப் படையும் நெருங்க முடியாதென்பதைச் சந்தேகமற உணர்ந்து கொண்டான். 'ஆனால் எந்த ஏற்பாட்டுக்கும்,



எந்தப் பாதுகாப்புக்கும், எந்த வலிமையுள்ள படைக்கும் ஓர் ஆபத்து உண்டு. அந்த ஆபத்து அதர்மத்திலிருந்து முளைக்கிறது. எத்தனை அழகிலும் அது புரையோடி விடுகிறது' என்று தனக்குள் சொல்லிக்கொண்ட அந்த வாலிபன் மேலும் அந்த மாநகரை நீண்டநேரம் உற்று நோக்கினான். இப்படி அவன் நோக்குவது புதிதல்ல. பல நாட்களாகப் பார்த்த அதே பார்வை, அதே எண்ணங்கள் அன்றும் அவனிடமிருந்து எழுந்தன. மேற்கொண்டு கவனிக்கவோ வருந்தவோ இஷ்டமில்லாததாலோ என்னவோ கடைசியாகத் தனது புரவியைப் பாதக் குறடால் லேசாகத் தட்டி மலைச் சரிவில் நடக்க விட்டான். மலைச்சரிவின் பாதை கரடு முரடாயிருந்தாலும் அதில் அனாயாசமாக நடந்து சென்ற அந்தப் புரவியைப் போலவே மிக அனாயாசமாக அந்த வாலிபனும் அதில் அமர்ந்து சென்றான்.

பாதையின் சீர்கேட்டைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் புரவியை நடத்திச் சென்ற அந்த வாலிபன் சிறிது தூரம் மலைச்சரிவில் இறங்கியதும் கீழே தெரிந்த பரலிமாநகர் ராஜபாட்டையை அணுகாமல் மீண்டும் வேறொருபுறமாகப் புரவியைத் திருப்பி மலைமீது ஏறிவிட்டு, சற்று எட்ட இருந்த குடிசைகளை நாடிச் சென்றான். அக் குடிசைக் கூட்டத்தை அணுகியதும் புரவியிலிருந்து இறங்கிப் புரவிக் கயிறுகளை அதன் முதுகிலெறிந்துவிட்டு எதிரிலிருந்த சின்னஞ்சிறு குடிசையொன்றை நோக்கி மெல்ல நடந்து சென்றான். குடிசையை அடைந்ததும் உடனே உட்புகாமல் தரையைத் 'தட் தட்' என்று தட்டினான். இரவு நன்றாக ஏறி விட்டிருந்ததால் அந்தக் குடிசைக் கூட்டப் பகுதியே நிசப்த மாயிருந்தது. இரவில் கனவு கண்டதாலும், பசியாலும் வீரிட்டலறிய இரண்டொரு குழந்தைகளின் ஒலியையும், "உம், ஒன்றுமில்லை தூங்கு," என்று அதட்டியும் அன்பாகவும் கூறிய இரண்டொரு தாய்மார்களின் இன்ப மொழிகளையும் தவிர வேறு எந்தவித ஒலியும்

இல்லாததால் வாலிபன் பாதக்குறட்டின் ஓசை அளவுக்கு மீறி அதிகமாகவே அந்த மலைப்பிரதேசத்தில் எதிரொலித்தது. இருமுறை தட்டிய பின்பு அசைவற்று நின்றுவிட்ட அந்த வாலிபனைத் தானும் பின்பற்ற வேண்டுமென்ற காரணத்தாலோ என்னவோ கடிவாளக் கயிறுகளை முதுகில் தாங்கிய புரவியும் அவன் பின்னால் வந்து நின்று குடிசையை ஏறெடுத்து நோக்கியது. தனது தலைவன் கால் தட்டலுக்குக் குடிசையிலிருந்து பதில் கிடைக்காத காரணத்தால் மெல்ல ஒருமுறை கனைக்கவும் செய்தது.

இந்தக் கனைப்புக்கு முன்னமேயே குடிசைக்குள்ளே ஆளரவம் ஏற்பட்டு விட்டதை உணர்ந்த வாலிபன் பின் புறம் தனது கையை நீட்டிப் புரவியின் முகத்தைத் தடவி, "வருகிறார்கள்? அவசரப்படாதே" என்று கூறினான். அவன் கூறி முடிப்பதற்கும் குடிசையின் கதவு திறந்து கை விளக்கொன்று வெளிப்படுத்துவதற்கும் அவகாசம் சரியாயிருக்கவே, கைவிளக்கை ஏந்தி வந்த பெண்ணை நோக்கி, "பார்த்தாயா அண்ணி! இது வரவர மிகவும் அவசரப்படுகிறது," என்று கூறிக்கொண்டே அந்த வாலிபன் குடிசைக்குள் நுழைந்தான். விளக்கேந்தி நின்று வழிவிட்டு அவன் பின்னால் நுழைந்த அந்தப் பெண்ணும் குடிசையின் ஒரு மூலையில் விளக்கை வைத்துவிட்டு, "இன்றைக்கு ஏன் தம்பி இத்தனை நேரமாகி விட்டது? அரண்மனையில் நிரம்ப வேலையோ?" என்று வினவினாள்.

"ஆம் அண்ணி! என்னை வீட்டுக்கு அனுப்ப வேண்டிய காவலன் வரவில்லை. ஏதோ உடல் நலமில்லை யென்று சொன்னார்கள். அவன் காவல் முறையையும் சேர்த்து நான் பார்க்க வேண்டியதாயிற்று," என்ற அந்த வாலிபன், "அண்ணி, அண்ணன் ஏன் இன்னும் வரவில்லை?" என்று வினவினான்.

அந்தப் பெண்ணின் முகத்தில் கவலைக்குறி படர்ந்தது. "தெரியவில்லை தம்பி. அவரும் உன்னுடன் காலையில் சென்றவர்தான். இந்த அரண்மனை வேலை வரவர சள்ளையாகப் போய்விட்டது. இதை விட்டொழித்தாலும் பாதகமில்லை தம்பி," என்றாள் அந்தப் பெண்.



"அரண்மனை வேலையையா! விட்டொழிப்பதா!" என்று கேட்டான் அந்த வாலிபன் வியப்புடன்.

"'என்ன அரண்மனை வேலை வேண்டியிருக்கிறது, தம்பி? காலமில்லை நேரமில்லை, போக வேண்டியிருக் கிறது. திரும்பி வருவதும் அப்படித்தான். தவிர நாங்களென்ன வீரர்கூட்டமா? எங்களுக்கேன் இந்தத் தொல்லை?" என்று அலுத்துக் கொண்டாள் அந்தப் பெண்.

வாலிபன் அவளை உற்று நோக்கினான். அவனைவிட அவள் அப்படியொன்றும் பெரியவளல்ல. சுமார் இருபத்தைந்து வயதுக்கு மேல் மதிப்பிட முடியாத அவள் முகத்தில் நகரவாசிகளின் மினுக்கு அதிகமில்லா விட்டாலும், காட்டுவாசிகளின் விகார ஆபரணங்கள் அவள் கழுத்திலும் காதுகளிலும் காட்சியளித்தாலும், அவள் முகத்திலும் ஒரு கம்பீரக் கட்டழகு இருக்கத்தான் செய்தது. கழுத்திலிருந்த சங்கு மாலையும், காதிலாடிய பாசிமணியில் கோத்த புலிநகங்களும் சாதாரணமாகக் காணமுடியாத ஒரு புதுஅழகை அவளுக்கு அளித்திருந்தன. அவனை நோக்கிய அந்தப் பெரிய கண்கள் காட்டு மான்களின் கண்களைப்போல அழகை அள்ளிக் கொட்டின. உடல் வாளிப்பும், கண்களின் பார்வையும் அழகிய வலுவை மட்டுமின்றி அவள் உள்ளத்தின் உறுதியையும் எடுத்துக்காட்டின. இத்தனையையும் ஒரு விநாடியில் பார்த்து முடித்த அந்த வாலிபன், "அண்ணி! அரண்மனையில் வேலை பெற எத்தனை பேர் காத்துக் கொண்டிருக்கிறார்கள் தெரியுமா?" என்று வினவினான்.

"அவர்களிலொருவனுக்கு உன் அண்ணனின் வேலையை வாங்கிக் கொடுத்துவிடு தம்பி," என்றாள் அவள்.

"ஏன் அண்ணி! உங்களுக்கு இந்த வேலை பிடிக்க வில்லையா?"

"இல்லை தம்பி, அவரவர் வேலையை அவரவர் செய்வதுதான் நல்லது."

"அவரவர் வேலையென்பது ஒன்று உண்டா அண்ணி?"

"உண்டு தம்பி. உன் அண்ணனைப் போல் நீ கூத்தாட முடியுமா? அல்லது உன்னைப்போல் அவர் வேலெறிய முடியுமா?"

இதை அந்தப் பெண் கேட்டதும் அதிர்ச்சியடைந்த அந்த வாலிபன், "என்ன சொன்னீர்கள் அண்ணி?' என்று திடுக்குற்று வினவினான்.

"உன் வேஷம் உன் அண்ணனிடம் பலிக்கும் தம்பி. என்னிடம் பலிக்காது," என்றாள் அந்தப் பெண் சர்வ சாதாரணமாக.

"என் வேஷமா?" என்றான் மீண்டும் அந்த வாலிபன் அதிர்ச்சியுடன்.

"ஆம் தம்பி! சில தினங்களுக்கு முன்பு நீ காட்டுவாசி என்று சொல்லிக் கொண்டு வந்தாய். ஆனால் காட்டுக்கும் உனக்கும் எந்தச் சம்பந்தமில்லையென்பதை நீ வந்த இரவே உணர்ந்தேன். உன் நடையே உன்னைக் காட்டிக் கொடுத்தது தம்பி. அது மட்டுமல்ல. நீ வந்து நான்கு நாள் கழித்துக் காட்டுக்குள்ளிருந்து ஓடிவந்து விட்ட யானைமீது வேலெறிந்தாயே நினைப்பிருக்கிறதா?" என்ற அப்பெண் சற்று நிதானித்தாள்.

"இருக்கிறது அண்ணி," என்ற அவன் பதிலில் சலன மிருந்தது.

"அத்தனை குறியுடன் வேலெறியக் கூடியவர் இந்தக் குடிசைக் கூட்டத்தில் ஒருவர்கூட இல்லை தம்பி! நீ வீரன். போர்களைக் கண்டவன். உன் அண்ணன் கூத்தாடி. அவர் கண்டதெல்லாம் கூத்துக்கோட்டம். அவர் அந்த வேலையில் சேர்ந்தது எனக்குப் பிடிக்கவில்லை. கூத்தாடி காத்து நிற்க முடியுமா?, அதுவும் அந்தச் சிறைக் கூடத்தை!" என்று அலுத்துக் கொண்டாள் அந்த மலைப் பெண்.



"சிறைக்கூடமா?" என்று வினவினான் அந்த வாலிபன் வியப்புடன்.

"வேறென்ன தம்பி?" என்று அவளும் வினவினாள் வெறுப்புடன்.

"அண்ணன் அரசரின் கடற்கரை மாளிகையைக் காவல் புரிகிறார்," என்றான் வாலிபன்.

"அந்த மாளிகையை எத்தனைபேர் காவல் புரிகிறார்கள் தெரியுமா?" என்று வினவினாள் மீண்டும் அப்பெண்.

வாலிபன் முகம் சிரத்தை காட்டியது. "எத்தனை பேர் அண்ணி?" என்று வினவினான்.

"இரு நூறு வீரர்கள்."

"இருநூறு வீரர்களா?"

"ஆம்."

"அது சிறிய-மாளிகைதானே!"

"சிறு மாளிகைதான். ஆனால் பெரும் மர்மமாயிருக் கிறது."

"மர்மமென்ன இதில்?"

"அதன் காவலரை அரசரே தேர்ந்தெடுத்திருக்கிறார். இல்லாவிட்டால் உன் அண்ணனுக்குத்தான் இந்தக் காவல் வேலை கிடைத்ததிருக்குமா? உன்னைத்தான் உன் அண்ணன் அரண்மனையில் காவல் வேலைக்கு அமர்த்த முடியுமா?" என்று கேட்டாள் அவள்.

அந்த வாலிபன் சிறிது நேரம் மௌனம் சாதித்தான். பிறகு கேட்டான், "அண்ணி! அதெல்லாம் உங்களுக்கு எப்படித் தெரியும்!" என்று.

"அண்ணன்தான் சொன்னார்," என்றாள் அவள்.

"மாளிகையின் மர்மத்தைப்பற்றி ஏதும் சொல்ல வில்லையா?"

"சொன்னார். என்ன மர்மம் அங்கே? வழக்கமான மர்மம்தான்."

"வழக்கமான மர்மமா?"

"ஆம் தம்பி! மன்னன் பெண் பித்துப் பிடித்தவன்; வழக்கம் போல் இப்பொழுதும் ஒரு பெண்ணை அங்கு கொண்டு வந்து வைத்திருக்கிறான்."

வாலிபன் கண்கள் திடீரெனப் பளிச்சிட்டன. "பெண்ணையா சிறை வைத்திருக்கிறான்? அந்தப் பெண் எப்படியிருக்கிறாளாம் அண்ணி?"

மலைப் பெண் அவனைக் கூர்ந்து அனுதாபத்துடன் நோக்கினாள். அவன் முகம் மட்டும் விகாரமில்லாவிட்டால் அவன் உடம்பு இருக்கும் வாளிப்புக்கு எத்தனையோ பெண்கள் அவனை மணக்கத் தயாராயிருப்பார்கள் என்பதை நினைத்த அந்த மலைவாசி அனுதாபத்துடன் சொன்னாள், "தம்பி! அவள் எப்படியிருந்தால் உனக்கென்ன? நீ வா, கஞ்சி ஊற்றுகிறேன்," என்று.

அவள் முகத்தில் விரிந்த அனுதாபத்தைக் கவனித்த அந்த வாலிபன் அதன் காரணத்தை உணர்ந்து கொண்டதால் வருத்தப் பெருமூச்சு விட்டான். பிறகு முகம் கை கால் கழுவிக் கைநீட்ட, அவள் குடுவையில் கஞ்சி கொண்டு வந்து ஊற்றினாள். ஆனால் கைக்கெட்டியது அவன் வாய்க் கெட்டவில்லை. கஞ்சியை அவன் கையில் வாங்கியதும் வெளியே அவன் புரவி பலமாக அலறியதால் கையிலிருந்த கஞ்சியை உதறிவிட்டு வெளியே ஓடினான் அந்த வாலிபன். அவளும் அவனைத் தொடர்ந்தாள். முற்றும் எதிர்பாராத கோரக்காட்சி அவர்கள் கண்முன்னே விரிந்தது. புரவியினருகில் அவள் கணவன் குப்புற விழுந்து கிடந்தான். அவன் முதுகில் கத்தியொன்று பாய்ந்திருந்தது. கத்தி பாய்ந்த இடத்திலிருந்து குருதி பீறிட்டு வெளியே ஓடிக் கொண்டிருந்தது. நெஞ்சை உலுக்கும் அந்த விபரீதக் காட்சியைக் கண்ட மலைமகள் ஒரு முறை பெரிதாக வீரிட்டாள். பிறகு நினைவிழந்து தரையில் சாய்ந்தாள்.

## அத்தியாயம் 2

# தம்பி, நீ யார் ?

**க**த்திக்குத்துடன் குருதி பெருகக் கணவன் குப்புற விழுந்ததைக் கண்ட மலைமகள் வீரிட்டு அலறியதால் ஏற்பட்ட ஒலி அந்த மலைப்பிராந்தியத்தைப் பயங்கரமாக ஊடுருவி எதிரொலியும் செய்யவே அக்கம் பக்கத்திலிருந்த குடிசைவாசிகள் திடீரெனக் கண்விழித்துக் கொண்டதன்றி வாசல் தட்டிகளைத் திறந்துகொண்டு ஆணும் பெண்ணுமாகப் பலர் அவ்விடத்தை நோக்கி ஓடியும் வந்தனர். மற்றும் சிலர் அவசர அவசரமாகப் பந்தங்களைக் கொளுத்திக் கொண்டு வந்து வெளிச்சம் காட்டவும் முற்பட்டனர். அப்படி வந்தவர்களில் பல ஆடவர் வியப்புடனும் திகைப்புடனும் குருதி நிலத்தில் பாய விழுந்து கிடந்தவனைப் பார்த்ததன்றி, பெண்களிற் சிலர் பயத்தினால் அழத் தொடங்கியும் இன்னும் இருவர் கீழே விழுந்த மலைமகளைத் தூக்கி மடியில் கிடத்திக்கொண்டு முகத்தில் நீரடித்து விசிறவும் தொடங்கினர். மற்றக் குடிசையினர் கொண்டு வந்த பந்தங்களின் வெளிச்சத்தில் அண்ணனின் கத்திக்குத்தை மண்டியிட்டுப் பரிசோதித்த வாலிபன், சிறிது நேரம் சிந்தனையிலாழ்ந்துவிட்டுப் பிறகு திடீரென ஏதோ முடிவுக்கு வந்தவனாய் அங்கிருந்தவர்களை நோக்கி, "அண்ணனைக் குடிசைக்குள் கொண்டு போக இருவர் கை கொடுங்கள். இன்னுமிருவர் அண்ணன் புரவி எங்காவதிருக்கிறதா என்பதைப் பார்த்து, இருக்குமானால் அதைப் பிடித்து வந்து என்னிடம் ஒப்படையுங்கள்," என்று விடுவிடுவென உத்தரவிட்டு அந்த உத்தரவில் ஒரு பகுதியை நிறைவேற்றுவான் பொருட்டுக்

காயமடைந்தவனின் கைகளிரண்டுக்குள்ளும் தன் கைகளை விட்டு மெள்ள அவனைத் தூக்கவும் முற்பட்டான்.

மற்றுமிருவரும் அவனுக்குக் கைகொடுக்கவே மெள்ள ஆடாமல் அசையாமல் காயமடைந்தவனைக் குடிசைக்குள் கொண்டு போய்ப் படுக்க வைத்த வாலிபன், அதற்குமேல் அவனைக் கவனியாமல் வெளியே வந்து மலைமகளைத் தாங்கி மூர்ச்சை தெளிவித்துக் கொண்டிருந்த இரு பெண்களையும் பார்த்து, "அண்ணியையும் உள்ளே அழைத்துச் சென்று படுக்க வையுங்கள். சத்தம் ஏதும் செய்ய வேண்டாமென்று அண்ணியை எச்சரித்துவிட்டு நீங்களும் உங்கள் குடிசைகளுக்குச் செல்லுங்கள்," என்றான்.

அங்குக் கூடியிருந்த குடிசை வாசிகள் அனைவரும் அவன் உத்தரவுகளை மிகுந்த வியப்புடன் கேட்டதன்றி அவன் செய்யும் அத்தனை எச்சரிக்கைக்கும் காரணத்தை அறியாமல் திகைத்து, இருந்த இடத்தைவிட்டுச் சிறிதும் நகராமல் நின்றனர். அவர்கள் அப்படித் தன் சொல்லை அணுவளவும் லட்சியம் செய்யாமல் நிற்பதைக் கண்ட வாலிபன் சற்றுச் சினத்துடன் வினவினான், "ஏன், நான் சொல்வது உங்கள் காதில் விழவில்லையா?" என்று.

அந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல விருப்பமில்லாத அக்கூட்டத்தினர் அவனைச் சற்று எரிச்சலுடனும் வெறுப்புடனும் நோக்கினர். அவர்களில் வயோதிகனாயிருந்த ஒருவன் அந்த எரிச்சலுக்கும் வெறுப்புக்கும் சொல்லுருவம் தந்து, "காதில் விழுகிறது தம்பி! ஆனால் உன் அதிகாரத்துக்குக் காரணம்தான் புரியவில்லை எங்களுக்கு," என்றான்.

அப்பொழுதுதான் வாலிபனுக்குப் புரிந்தது. அவர்களுக்குத் தான் புத்தம் புதியவனென்பது. அந்தக் குடிசைக் கூட்டத்துக்கு வந்து பதினைந்து நாட்களே ஆனவனும் ஊர் பேர் தெரியாதவனுமான தான் உத்தரவிடுவதைச் சேர நாட்டின் அந்தப் பழங்குடி மக்கள் விரும்பவில்லை என்பதை உணர்ந்துகொண்ட வாலிபன் அந்த வயோதிகனை நோக்கி "பெரியவரே! உங்களுக்கு உத்தரவிட நான் தகுதியுடையவனல்ல என்பதை உணருகிறேன்.



ஆனால் இருக்கும் நிலைமை சில விஷயங்களில் எச்சரிக்கையுடனிருக்கத் தூண்டுகிறது. உங்களுக்கெல்லாம் தலைவனான என் அண்ணன் பிழைக்க வேண்டுமானால் இந்தக் கூட்டம் உடனே கலையவேண்டும். குடிசைக்குள் அனைவரும் பதுங்க வேண்டும். இங்கு ஏதும் நடந்ததே தெரியாத சூழ்நிலையை ஏற்படுத்தவேண்டும்," என்று கூறினான்.

அவன் குரலில் இருந்த உறுதியையும் அதிகாரத்தையும் கவனித்த கிழவன் சற்று முகம் சுளித்தான் கோபத்தால். "தம்பி! என்னைவிட நீ வயதில் மிகச் சிறியவன்?" என்று சுட்டியும் காட்டினான் கோபத்தைக் குரலிலும் காட்டி.

"ஆம் பெரியவரே" என்று வாலிபனின் குரலில் சற்று அலுப்பும் கோபமும் கலந்து தொனித்தது.

"அனுபவமும் குறைவு உனக்கு," என்றான் வயோதிகன்,

"இருக்கலாம்..." என்ற வாலிபன் சற்று நிதானித்து "சில விஷயங்களில்" என்று சொற்களையும் கூட்டினான்.

அந்தச் சொற்கூட்டலைக் கவனிக்க மறுத்த வயோதிகன் "கூத்தனிடம் உனக்குள்ள பரிச்சயத்தைவிட எங்களுக்கு அதிகம். அவன் நன்மையில் எங்களுக்கும் அக்கறை உண்டு," என்றான்.

"அந்த அக்கறையைக் காட்டத்தான் சொல்கிறேன்," என்ற வாலிபன் குரல் கடுமையாக ஒலித்தது.

"அந்த அக்கறையைக் காட்டவேண்டுமானால் இப்பொழுது கூத்தனின் காயத்தைக் கவனிக்க வேண்டும்," என்ற வயோதிகனின் வார்த்தையை இடைமறித்த வாலிபன் "கவனித்துவிட்டேன்," என்று கூறினான்.

"கவனித்து என்ன செய்தாய்?" மீண்டும் எழுந்தது கிழவனின் குரல் மிகக் கடுமையாக.

"ஏதும் செய்யத் தற்சமயம் அவசியமில்லை" என்றான் வாலிபன்.

"ஏன்?" கூட்டத்திலிருந்து கிளம்பியது மற்றொருவன் குரல்.

அத்திசையில் கண்களைத் திரும்பிய வாலிபன் சொன்னான், "காயத்தால் ஆபத்தில்லை அண்ணனுக்கு இப்பொழுது," என்று.

அந்தப் பதில் கூட்டத்தினிடை சிறிது சலசலப்பை உண்டாக்கியது. மற்றொருவன் கேட்டான். "நீ என்ன மருத்துவனா?" என்று.

"அதுவும் கொஞ்சம் தெரியும்" என்ற வாலிபன் அது வரை காட்டிய நிதானத்தை இழந்து கூட்டத்தை ஒரு முறை சுடும் கண்களால் நோக்கினான். "கூத்தன் உயிரோடு இருக்க வேண்டுமென்ற எண்ணம் உங்களுக்கு அணுவளவாவது இருந்தால் சீக்கிரமாகக் குடிசைக்குச் சென்று படுத்துக் கொள்ளுங்கள். எந்தச் சத்தமும் எந்தக் குடிசையிலிருந்தும் வரவேண்டாம். பந்தங்கள், விளக்குகள் அனைத்தையும் அணைத்துவிடுங்கள். கூத்தனுக்கு இப்பொழுது கத்திக் குத்தை விடப் பெரிய ஆபத்து இருக்கிறது. ஆகையால் செல்லுங்கள். இங்கு எது நடந்தாலும் எந்தக் கூச்சல் கேட்டாலும் குடிசைகளைவிட்டு வெளியே வராதீர்கள். மற்ற விஷயங்களை எனக்கு விட்டுவிடுங்கள்" என்று சுடு நோக்குடன் சுடுசொற்களையும் கொட்டிய அந்த வாலிபன், "உம், செல்லுங்கள், ஏன் நிற்கிறீர்கள்?" என்று சீறவும் செய்தான்.

வயோதிகனும் மற்றோரும் அந்த வாலிபனைச் சில வினாடிகள் உற்று நோக்கினர். பிறகு அந்த வாலிபனின் கூரிய பார்வையைச் சந்திக்கமுடியாத காரணத்தாலோ என்னவோ வயோதிகள் கண்களை நிலத்தில் தாழ்த்தினான். அப்படித் தரையைப் பார்த்தபடியே, "தம்பி! உன்னை நம்பிப் போகிறோம். ஆனால் கூத்தனுக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்தால் நீ இந்த மலைப்பகுதியில் அரை வினாடி இருக்க முடியாதென்பதை நினைவில் வைத்துக்கொள்" என்று கூறிவிட்டுத் தன் குடிசையை நோக்கி நடந்தான்.



தலைவன் நடந்ததும் மற்றவர்களும் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டும், வாலிபனின் எச்சரிக்கைக் காரணத்தை உணராததால் குழப்பத்துடன் முணு முணுத்துக் கொண்டும் தத்தம் குடிசைக்குச் சென்றனர். அவர்கள் திரும்பிச் செல்ல முயன்றதுமே வெகு துரிதத்தைக் காட்டிய வாலிபன் விடுவிடு என்று குடிசைக்குள் ஓடினான். அங்கிருந்த இரு பெண்களின் உபசரணையில் மூர்ச்சை தெளிந்து தேம்பிக் கொண்டிருந்த மலைமகளைப் பார்த்து, "அண்ணி! அண்ணனுக்கு ஆபத்து ஏதுமில்லை. அழாதீர்கள்," என்று தைரியம் சொல்லி மற்ற இருபெண் களையும் நோக்கி, "நீங்களும் உங்கள் குடிசைகளுக்குச் சென்று படுத்துக் கொள்ளுங்கள்," என்று அவர்களையும் வெளியே அனுப்பினான்.

அவர்கள் சென்றதும் தரையில் மண்டியிட்டு, "அண்ணி! குடிசைக் கதவைச் சாத்துங்கள். அந்த விளக்கை எடுத்து இப்படிக் காட்டுங்கள்.. கிழிசல் துணி இருந்தால் இரண்டு முழம் எடுங்கள்," என்று கூறிக் கொண்டு கூத்தன் பக்கத்தில் உட்கார்ந்து முதுகுக் காயத்தை மீண்டும் பரி சோதித்தான். "நல்ல வேளையாகக் கத்தி இடப்பக்கத்திலோ வலப் பக்கத்திலோ பாயவில்லை. முதுகெலும்பை நோக்கி நட்ட நடுவில் பாய்ந்திருக்கிறது. தவிர சிறிது திரும்பிப் பாய்ந்திருப்பதால் எலும்பையும் அதிகமாகத் தொட வில்லை" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்ட வாலிபன், மறுபடியும் எழுந்து அறை மூலைக்குச் சென்று ஒரு பையிலிருந்து ஏதோ மெழுகு ஒன்றைக் கொண்டு வந்து பக்கத்தில் வைத்துக் கொண்டான்.

அதற்குள் மலைமகளும் இரு புடவைக் கிழிசல்களை யும் விளக்கையும் எடுத்துக் கொண்டு வரவே, அந்தக் கிழிசல்களைக் கையில் வைத்துக்கொண்ட வாலிபன், "அண்ணி! விளக்கை இப்படிக் காட்டுங்கள், காயத்தில் வெளிச்சம் விழும்படி," என்றான்.

கண்ணீர் ஆறாகப் பெருக்கெடுக்க விளக்கேந்திய மலைமகளை, "அழ ஏதுமில்லை அண்ணி! என்னிடம்

நம்பிக்கையில்லையா உங்களுக்கு? விளக்கை வேண்டுமானால் அந்த விளக்குத் தண்டில் வைத்துவிட்டு நீங்கள் வெளியே செல்லுங்கள். ஏதாவது அரவம் கேட்டால் மட்டும் என்னிடம் வந்து சொல்லுங்கள்'' என்று அவளையும் வெளியில் அனுப்பிவிட்டுத் தண்டில் வைக்கப் பட்ட விளக்கு வெளிச்சத்தில் சிகிச்சையைத் தொடங்கினான். கூத்தன் அங்கியைக் கிழித்துக் கழற்றி, கத்தியை லேசாக எடுத்துப் பீறிட்டு வந்த ரத்தத்தை நிறுத்திக் காயத்துக்குள் கிழிசலின் முனையொன்றைத் திணித்தான். பிறகு மெழுகுக் குப்பிலிருந்து மெழுகைச் சிறிது எடுத்து மற்றொரு துணியைத் திரியாகத் திரித்து அதில் மெழுகைத் தடவி முந்திய கிழிசலைக் காயத்திலிருந்து வாங்கித் திரியை உள் நுழைந்து அழுத்திவிட்டு, சற்றுநேரம் காயத்தை உற்று நோக்கினான். மெழுகுத்திரி நுழைந்ததும் குருதி நின்று விடவே கவலை தீர்ந்த முகத்துடன் மற்றொரு சீலையால் காயத்துக்குக் கட்டைப் போட்டுவிட்ட வாலிபன் ரத்தக் கறை படிந்த கிழிசல்களை மட்டுமின்றி, கூத்தன் அங்கியையும் குடிசை மூலையிலிருந்த ஒரு பானைக்குள் திணித்து விட்டு "அண்ணி! அண்ணி!" என்று குரல் கொடுத்தான்.

உள்ளே வந்த மலைமகள் தனது கணவன் காயம் கட்டப் பட்டிருப்பதையும் குருதி நின்றுவிட்டதையும் கண்டு நன்றி ததும்பும் கண்களை அவ்வாலிபன்மீது ஓட்டினாள். "தம்பி! நீதான் தம்பி எங்களுக்குத் தெய்வம்," என்றும் கூறிக் கண்ணீரைப் போல பொலவென உதிர்த்தாள்.

"அண்ணி! இப்பொழுது வேண்டியது கண்ணீரல்ல. வீட்டில் ஆட்டுப்பால் இருந்தால் அண்ணன் தலையை மட்டும் சற்றுப் புரட்டி ஒரு வாய் உள்ளுக்குக் கொடுங்கள். அண்ணன் கண் விழித்தால் பேசாதிருக்கும்படி சைகை செய்யுங்கள்," என்று கூறிவிட்டு வெளியே சென்ற வாலிபன் குருதி பாய்ந்த கத்தியை நன்றாகத் துடைத்துத் தனது உள்ளங்கிக்குள் மறைத்துக் கொண்டான்.



பிறகு கூத்தன் விழுந்த இடத்தைப் பார்த்து அங்கிருந்த ரத்தக்கறை தெரியாதவண்ணம் தரையைத் தனது வாளின் பிடி கொண்டு தேய்த்து மண்ணுடன் மண்ணாக அது மறையக் கலைத்தான். அண்ணன் வந்த திசையை ரத்தச் சொட்டுகள் மூலம் கண்டு அவை கண்ட இடங்களை இருபது இருபத்தைந்து காலடி தூரம்வரை பாதக் குறட்டால் கலைத்துக்கொண்டே சென்றான். அடுத்தபடி மலையுச்சியில் நின்று கொண்டு மலைச் சரிவுகளைக் கவனித்தான். எந்தப் பகுதியிலும் யாரும் தெரியாததைக் கண்டு, "வீரர்கள் ஏன் இன்னும் வரவில்லை?" என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டான்.

சற்று நேரம் சுற்றுமுற்றும் கண்களை ஓட்டிய பிறகு குடிசையருகில் வந்ததும் கூத்தன் புரவியைக் கண்டுபிடித்த இருவர் அதனுடன் வரவே, அவர்களையும் குடிசைக்குச் சென்று படுத்துக்கொள்ளச் சொல்லி அந்தப் புரவியைப் பிடித்துக்கொண்டு குடிசையின் பின்புறம் கட்டினான்.

இந்த ஏற்பாடுகளைச் செய்து முடித்தபிறகு குடிசைக்குள் வந்த வாலிபனை, "தம்பி! உன் அண்ணன் கண்ணைத் திறந்து விட்டார். இதோ பார்!" என்று அழைத்தாள் மலைமகள்.

கூத்தன் கண்களை விழித்ததன்றி மெள்ளப் புன்முறுவலும் கூட்டினான். அத்துடன் சொன்னான், "எல்லாம் அண்ணி சொன்னாள் தம்பி," என்று.

வாலிபன் தலையை அசைத்தான். பிறகு "அண்ணா! நீங்கள் தப்பியது தெய்வாதீனம். வீசப்பட்ட கத்தி சரியாகப் பாயவில்லை," என்று கூறவும் செய்தான்.

கூத்தன் பதில் சொல்லவில்லை, வாலிபனே மேற்கொண்டு சொன்னான், "அண்ணா! நீங்கள் இங்கிருக்கும் ஒவ்வொரு வினாடியும் உங்களுக்கு ஆபத்து," என்று.

கூத்தன் முகத்தில் வியப்பு விரிந்தது. "அதையும் நீ ஊகித்துக் கொண்டாயா தம்பி?" என்று வினவவும் செய்தான் வியப்புடன்.

"ஆம் அண்ணா," என்ற வாலிபன் சற்று மௌனம் சாதித்தான். அவன் ஏதோ சொல்ல முயல்கிறான் என்பதை உணர்ந்த கூத்தன் கேட்டான், "என்ன தம்பி, சொல், ஏதோ யோசிக்கிறாயே?" என்று.

"அண்ணா! நீங்களும் அண்ணியும் உடனே புறப்பட வேண்டும்," என்றான் வாலிப்ன், சிந்தனை ஆழ்ந்து கிடந்ததால் கவலை தோய்ந்த குரலில்.

"எங்கு தம்பி!" இம்முறை மலைமகள் கேட்டாள் கவலையுடன்.

"நான் சொல்லுமிடத்திற்கு" என்றான் வாலிபன்.

"இப்பொழுது இவரால் பயணம் செய்ய முடியுமா தம்பி?" என்று வினவினாள் மலைமகள்.

"முடியும் அண்ணி! அதற்கு நான் செய்கிறேன் ஏற்பாடு" என்ற வாலிபன் இரண்டு மூன்று துணிகளை எடுத்துக் கொண்டு வெளியே சென்று மீண்டும் திரும்பி உள்ளே வந்தான். பிறகு கூத்தனுக்குப் புதுஅங்கி அணிவித்து, "அண்ணி! கிளம்புங்கள். அண்ணனை ஒருபுறம் தாங்கிப் பிடியுங்கள்," என்று கூறி மெள்ளக் கூத்தனைத் தூக்கி நிறுத்தினான்.

பிறகு மலைமகளும் அவனுமாகத் தாங்கிப் பிடித்து வர, மெள்ளக் குடிசைக்கு வெளியே வந்த கூத்தன் தனது தம்பியின் புரவி பயணத்துக்குத் தயாராயிருப்பதையும் அதன் முதுகுச் சேணத்தின்மீது துணிகள் மெத்தென்று போடப்பட்டிருப்பதையும் கண்டு, "முன்னேற்பாடு பலமாயிருக்கிறது தம்பி" என்று சிலாகிக்கவும் செய்தான்.

வாலிபன் பதில் சொல்லவில்லை. அவன் காதுகள் எதையோ உற்றுக் கேட்டுக் கொண்டிருந்தன. பிறகு அவன் அவசர அவசரமாகக் கூத்தனைக் குதிரைமீது ஏற்றி அவனுக்குப் பின்னால் மலைமகளையும் ஏற்றிவிட்டு, "அண்ணி! இது சாதிப்புரவி. அவசரமறிந்து, அவசியமறிந்து செல்லக் கூடியது. இதை ஏதும் செய்ய வேண்டாம். கடிவாளக் கயிறுகளை மட்டும் நீங்கள் பிடித்துக்



கொள்ளுங்கள். இதுவே போகும்," என்று தைரியமும் கூறினான்.

புரவியில் கணவனுடன் ஏறிக் கடிவாளக் கயிறுகளையும் பிடித்துக் கொண்டே மலைமகள், "எங்கு போகச் சொல்கிறாய் தம்பி?" என்று வினவினாள் மீண்டும்.

"வடக்கு நோக்கிச் செல்லுங்கள்" என்றான் வாலிபன்.

"வடக்கு நோக்கிச் சென்று.....?" என்று வினவிய மலைமகளைச் சற்று நிதானிக்கச் சொன்ன வாலிபன், தன் கச்சையிலிருந்த ஒரு பொருளை எடுத்து அவள் கையில் கொடுத்தான்.

இருட்டில் திடீரென எழுந்த மின்னொளியெனப் பிரகாசித்த அப்பொருளைக் கண்ட மலைமகள் வியப்பும் கலவரமும் ஒருங்கே அடைந்து, "தம்பி! நீ யார் தம்பி! எனக்கொன்றும் புரியவில்லையே?" என்று தட்டுத்தடுமாறி வார்த்தைகளை உதிர்த்தாள். அவள் கலவரத்தைக் கண்டு நகைப்பதுபோல் அவள் கரத்தில் ஒளிவிட்டது பாண்டிய நாட்டு ராஜமுத்திரை.

## அத்தியாயம் 3
# சூழ்ந்த ஆபத்து

**வா**னிலிருந்து விண்மீன்கள் வீசிய லேசான ஒளியிலும் பளபளத்துக் கண்ணைப் பறித்த, விலைமதிப் பற்ற வைரங்கள் பதித்த, பாண்டிய ராஜமுத்திரை மோதிரத்தைக் கையில் வாங்கியதும் கலவரத்துக்குட்பட்ட தன்றி, "நீ யார் தம்பி?" என்று அச்சக் குரலும் கொடுத்த மலைமகளை முறுவல் விரிந்த முகத்துடன் நோக்கிய வாலிபன், "அண்ணி! நான் யாராயிருந்தாலென்ன? தற்சமயம் இந்த அண்ணனுக்குத் தம்பி! உங்களுக்குக் கொழுந்தன். மற்றதைப்பற்றி இப்பொழுதென்ன? நான் சொல்கிறபடி செய்யுங்கள்," என்று கூறினான்.

அவன் அத்தனை திட்டமாகச் சொன்ன பேச்சைக் காதில் வாங்க மறுத்த மலைமகள் பெண் சுபாவத்தைக் காட்டத் தொடங்கி, "அப்படியில்லை தம்பி! நீ வந்த நாளாக உன் பெயரைச் சொல்லவில்லை. கேட்டதற்கு, 'தம்பி' என்று அழையுங்கள் அது போதும் என்று கூறினாய். அப்படித்தான் அழைத்து வந்தோம் தம்பி. உன் நல்ல குணத்தால் எங்கள் வீட்டுப் பிள்ளையாகிவிட்டதால் உன் பெயரை நாங்கள் கேட்க மறந்து விட்டோம். மற்றக் குடிசைக்காரரும் கேட்கவில்லை. எல்லோரும், 'தம்பி, தம்பி,' என்றழைக்க, கூத்தர் கூட்டத்துக்கே தம்பியாகி விட்டாய். ஆனால் இன்று நிலைமை வேறு. இதுவரை இந்தக் குடிசைக் கூட்டத்தில் நடக்காத விபரீதம் இன்றிரவு நடந்திருக்கிறது. எங்களை எங்கோ அனுப்புகிறாய். கையில் நீ கொடுத்து இருப்பதோ பாண்டியர் முத்திரை மோதிரம். இன்னும் நீ யாரென்று சொல்லாதிருப்பது சரியல்ல தம்பி! நாம் இப்பொழுது பிரிகிறோம். இப்பொழுதாவது சொல்" என்று வினவினாள் கையிலிருந்தத மோதிரத்தையும் பார்த்து, பிறகு அவன் மீது கண்ணை ஓட்டி.

வாலிபன் சிறிது சிந்தித்துவிட்டுப் பதில் கூறினான்: "அண்ணி! நீங்கள் செல்கிற இடத்தில் நான் யார் என் பதைப் புரிந்துகொள்வீர்கள். இப்பொழுது உங்களுக்கு என் பெயரைத் தெரிவிப்பதாலும் பயனில்லை. ஆகவே நான் சொல்கிறபடி செய்யுங்கள், வீணாகப் பேசி கால தாமதம் செய்தால் ஆபத்துதான் அதிகமாகும். அண்ணன்மீது கத்தி வீசியவர்கள் எந்த நேரத்திலும் இங்கு வரலாம்."

இதை கேட்ட மலைமகள், "அண்ணன்மீது யார் வீசியது கத்தியை? ஏன் வீசினார்கள்?" என்று வினவினாள் சிறிது நிதானித்துவிட்டு.

"சேர வீரர்கள்," என்ற பதில் வாலிபனிடமிருந்து கடுமையுடன் வந்தது, மலைமகள் காட்டிய நிதானத்தின் விளைவாக.

"இவரும் சேர வீரர்தானே?"

"ஆம்!"

"இவர்மீது ஏன் கத்தியை வீசவேண்டும் சேர வீரர்கள்?"

"அதை அண்ணனே சொல்லுவார் உங்களுக்கு. செல்லுங்கள். புரவிமீது உட்கார்ந்து பேச நான் உங்களைக் குடிசைக்கு வெளியே அழைத்துவரவில்லை," என்று கடுமையுடன் பதிலளித்த வாலிபன், "இங்கிருந்து நேராக வடபுறம் செல்லுங்கள். கிட்டத்தட்ட அரை காதத்தில் அடர்த்தியான காடு தெரியும். அந்தக் காட்டுக்குள் புரவியைச் செலுத்துங்கள். வேண்டாம். அதுவே செல்லும். அதற்கு நான் சொல்லியிருக்கின்றேன்..." என்று மேலும் ஏதோ சொல்லப்போன வாலிபனை இடைமறித்த மலைமகள், "என்ன தம்பி! குதிரையிடம் சொல்லிவிடு கிறாயா?" என்று வியப்புடன் வினவினாள்.

"ஆம் அண்ணி,"

"அது புரிந்துகொள்ளுமா?"

"நன்றாகப் புரிந்துகொள்ளும்."

"அது விலங்கல்லவா?"

"மனிதர்களைவிட விலங்குகளுக்குப் பல விஷயங்களைப் புரிந்துகொள்ளும் சக்தி உண்டு. தவிர இது சாதாரணப் புரவியல்ல; சாதிப் புரவி."

இதைச் சொன்ன வாலிபன்மீது வியப்புத் ததும்பும் கண்களை நாட்டினாள் மலைமகள். அதுவரை அவர்கள் சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டிருந்த கூத்தன், "தம்பி! இவளோடு பேசிக் கொண்டிருந்தால் பொழுது விடியும் வரையில் புரவிமீது உட்கார்ந்திருக்க வேண்டியதுதான். சேர வீரர்களும் வந்து என்னைப் பிடித்து விடுவார்கள். நீ சொல்கிறபடி வடக்கே சென்று காட்டில் நுழைகிறேன். அங்கு யார் மறித்தாலும் இந்த மோதிரத்தைக் காட்டுகிறேன். அவ்வளவுதானா? இன்னும் ஏதாவது..." என்று வாசகத்தை முடிக்காமல் விட்டான்.

"ஏதுமில்லை," என்ற வாலிபன் புரவியை நெருங்கி, அதன் காதில் ஏதோ வார்த்தைகளைச் சொன்னான். புரவி ஒருமுறை அவனைத் திரும்பிப் பார்த்தது. பிறகு கனைத்து விட்டுத் தலையை ஆட்டியது. பிறகு நகர்ந்தது மலைப் பாதையில்.

புரவி நடக்கத் துவங்கியதும், "ஜாக்கிரதை தம்பி! வீரர்களை நான் ஏமாற்றிவிட்டேன். இருப்பினும் அவர்கள் எப்படியும் இங்கு வருவார்கள். வந்தால் எச்சரிக்கையுடன் நடந்து கொள்," என்று எச்சரித்துக்கொண்டே சென்றான் கூத்தன். மலைமகள் ஏதும் பேசவில்லை. தனக்குத் தெரியாத ரகசியம் ஏதோ தனது கணவனுக்கும், அந்த வாலிபனுக்குமிடையே இருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டதால் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டு மௌனமாகவே சென்றாள். புரவியை நடத்தக்கூட அவள் கடிவாளக் கயிறுகளை அசைக்கவோ இழுக்கவோ இல்லை. அதற்குத் தேவையுமிருக்கவில்லை. புரவி வழியை அறிந்தது போல் மலைப் பாதையின் வடக்கு நோக்கி மிகக் கம்பீரமாக நடந்தது.



அதுபோவதை நீண்டநேரம் நின்றவண்ணம் பார்த்துக் கொண்டிருந்த வாலிபன் அது கண்ணுக்கு மறைந்ததும் நிதானமாகக் குடிசையை அணுகினான். குடிசைக்குள் நுழையுமுன்பு ஆகாயத்தை அண்ணாந்து பார்த்து நட்சத்திரங்களைக் கொண்டு நாழிகைகளைக் கணக்கெண்ணினான். இதர குடிசைகள் மீதும் கண்ணை ஒருமுறை ஓட்டிவிட்டுக் குடிசைக்குள் நுழைந்து கதவைச் சாத்திக் கொண்டான். குடிசையின் உட்புறத்தை அடைந்ததும் மூலையில் பானையில் தான் சற்று முன்பு அடைத்த ரத்தக் கறை படிந்த அண்ணன் அங்கிக் கிழிசல்களையும், இரண்டொரு சட்டி, ஓடுகள், குவளைகளையும் போட்டு மறைத்தான். அடுத்தபடி விளக்கைச் சிறிது தூண்டிவிட்டுத் தகளியொன்றை எடுத்துத் தன் முகத்தைப் பார்த்துக்கொண்டான். முகச் சருமத்தில் பலபடி படிந்திருந்த கருப்புத் திட்டுகளைக் கண்டு துன்பப் புன்முறுவலொன்றை இதழ்களில் கூட்டி, "என் முகம் போயும் போயும் இந்தக் கதிக்கா வர வேண்டும்," என்ற எண்ணங்களை மனத்தில் ஓடவிட்டுக் கொண்டு பாயொன்றை விரித்தான். பிறகு விளக்கை ஊதி அணைத்துவிட்டுப் படுத்துக்கொண்டான்.

படுத்த சில விநாடிகளுக்குப் பின்பும் உறங்கவில்லை அந்த வாலிபன். அடிக்கடி எதையோ உற்றுக் கேட்கும் பாவனையில் தலையை உயர்த்தி மீண்டும் படுத்தான். சுமார் ஒரு நாழிகைக்குப் பின்பே உற்றுக் கேட்டதற்குப் பலன் கிடைத்தது அவனுக்கு. பத்துப் பதினைந்து புரவிகள் வரும் சத்தம் அவன் காதுகளில் விழவே, அவன் நன்றாக இழுத்துப் போர்த்துக் கொண்டு குப்புறப் படுத்துக் கொண்டான். புரவிக் காலடிச் சத்தம் விநாடிக்கு விநாடி அதிகரித்தது. அடுத்த சில நிமிஷங்களில் புரவிகள் குடிசைக்கெதிரில் நின்றதும் வீரர்கள் பலர் குதித்ததும் தெரிந்தது அவனுக்கு. "டேய்! யாரங்கே குடிசைக்குள்? வா வெளியே," என்று வந்த வீரர்களின் தலைவன் குரலும் பலமாக விழுந்தது அந்த வாலிபன் காதுகளில். அடுத்த

விநாடி குடிசைக் கதவு முரட்டுத்தனமாகத் திறக்கப் பட்டது. உள்ளே நுழைந்த வீரனொருவன் வாலிபனைத் தனது கத்தி முனையால் தட்டி, "டேய்! எழுந்திரு" என்று அதட்டவும் செய்தான்.

வாலிபன் அப்பொழுதுதான் கண் விழித்தவன் போல் கண்ணைக் கசக்கிக்கொண்டு எழுந்திருந்து தன்னை எழுப்பிய வீரனை நோக்கி, "யாரது? எதற்காக எழுப்புகிறாய்?" என்று சீறவும் செய்தான்.

"எழுந்து வா தெரியும்,'" என்ற வீரன் வாள் முனையை வாலிபன்மீது சற்று அழுத்தவும் செய்தான்.

அதன் விளைவாகச் சிறிது அச்சமுற்றவன் போல் பாசாங்கு செய்த வாலிபன் எழுந்து உடைகளைச் சரிப் படுத்திக்கொண்டு வெளியே வந்தான். அங்கு பதினைந்து பேர் கொண்ட புரவி வீரர் கூட்டமொன்று நின்றிருப்பதை யும், அவர்களில் இரண்டொருவர் பந்தங்களைத் தாங்கி நிற்பதையும் கண்டு பயந்தவன் போல் விழித்தான். அவன் பயத்தை லட்சியம் செய்யாத அந்த வீரர்களின் தலைவன், "டேய்! கூத்தன் எங்கே?' என்று வினவினான்.

"அதுதான் எனக்குத் தெரியவில்லை,'" என்றான் வாலிபன் போலிக் குழப்பத்தை முகத்திலும் குரலிலும் காட்டி.

"தெரியவில்லையா?" என்ற தலைவன் குரலில் கோப மிருந்தது.

"தெரியவில்லை. நான் சற்று முன்புதான் இங்கு வந்தேன். குடிசையில் அண்ணியுமில்லை, அண்ணனு மில்லை" என்றான் வாலிபன்.

"உன் அண்ணனா கூத்தன்?" என்று கேட்டான் வீரர்கள் தலைவன்.

"ஆம்."

"நீ என்ன செய்கிறாய்?"

"அரசர் அரண்மனையில் காவல் புரிகின்றேன்."

"அரண்மனைக் காவலனா?"



"ஆம்"

"குடிசையில் அண்ணனும் அண்ணியுமில்லாததைக் கண்டதும் அவர்கள் எங்கேயென்று மற்றக் குடிசைகளில் யாரையாவது கேட்டாயா?"

"இல்லை"

"ஏனில்லை?"

"நான் வரும்போது எல்லோரும் உறங்கிவிட்டார்கள். காலையில் விசாரித்துக் கொள்ளலாமென்றிருந்து விட்டேன்."

இதைக் கேட்ட வீரர்கள் தலைவன் வாலிபனைக் கூர்ந்து நோக்கினான். மெல்ல அவன் கண்களில் கோபம் விரிந்தது. "டேய்! உண்மையைச் சொல். எங்கே உன் அண்ணன்? எங்கே அந்த ஒற்றன்?" என்றான் கோபம் குரலிலும் ஒலிக்க.

"என் அண்ணன் ஒற்றனா? ஜாக்கிரதையாகப் பேசுங்கள்," என்றான் வாலிபனும் கோபத்துடன்.

"இல்லை. கூத்தன் ஒற்றனில்லை, சேரநாட்டுப் பக்தன்," என்று ஏளனமாகச் சீறிய வீரர் தலைவன், "அரை ஜாமம் முன்புதான் அவனைத் தொடர்ந்தோம். கத்தி வீசினோம். அப்படியும் தப்பிவிட்டான்," என்று விவரிக்கவும் செய்தான், சீற்றம் சிறிதும் தணியாமலே.

"கத்தி வீசினீர்களா?" என்று வியப்பைக் காட்டினான் வாலிபன்.

"ஆம், வீசினோம்."

"குறி சரியாயில்லை போலிருக்கிறது?"

"அவன் முதுகிலேயே கத்தி பாய்ந்தது."

"அப்படியா?"

"ஆம்."

"அப்படியானால் நீங்கள் வேறு யார் மீதோ கத்தியை வீசியிருக்க வேண்டும்."

இதைக் கேட்ட வீரர்கள் தலைவன் வெகுண்டான். "டேய்? என்ன எங்களுடன் விளையாடுகிறாயா?" என்று

கடுங்கோபத்துடன் வாலிபனை எரித்து விடுபவன் போல் வினவினான்.

"விளையாடுவது நானில்லை தலைவரே? முதுகில் குறுவாள் பாய்ந்தவன் அண்ணியை அழைத்துக்கொண்டு எங்கும் ஓடி விட முடியாது. இருந்தால் இந்தக் குடிசைக் கூட்டத்தில் எங்காவதுதானிருக்க வேண்டும். தவிர, குறுவாள் பாய்ந்தால் குருதி கொட்ட வந்திருக்க வேண்டும் அண்ணன். குடிசைக்குள் அதற்கு அத்தாட்சி காணோம். சாதாரணமாகத்தானிருந்தது குடிசை," என்று சுட்டிக் காட்டினான் வாலிபன்.

வாலிபன் பேச்சு வீரர்கள் தலைவனை சிந்தனையில் ஆழ்த்தியது. பிறகு அவன் இரு வீரர்களை அழைத்து, குடிசைக்கு வரும் பாதையைப் பந்தங்களின் உதவிகொண்டு பரிசோதிக்குமாறு கூறிவிட்டு, மற்றுமிருவரை விளித்து மற்ற குடிசைகளிலிருப்பவர்களை எழுப்பிக்கொண்டு வரும்படி உத்தரவிட்டு, தானும் புரவியிலிருந்து இறங்கிப் பந்த மொன்றை வீரனொருவன் காட்டிவர, வாலிபன் பின்தொடர கூத்தன் குடிசைக்குள் நுழைந்தான். குடிசையின் பல பகுதிகளிலும் கண்களை ஓட்டியும் தரையை நன்றாகப் பார்த்தும் ரத்தத்தின் அறிகுறி ஏதும் கிடைக்காமல் போகவே மறுபடியும் குடிசையிலிருந்து வெளியே வந்தான்.

சற்று நேரத்திற்கெல்லாம் குடிசைகளிலிருந்து அழைத்து வரப்பட்ட ஆண் பெண்களிடம் கூத்தனைப்பற்றி யும், அவன் மனைவியைப் பற்றியும் விசாரித்தும் தகவல் ஏதும் கிடைக்கவில்லை வீரர்கள் தலைவனுக்கு, குடிசைக்கு வரும் கரடு முரடுப்பாதையைப் பார்வையிட்டவர்களும் வந்து ரத்தக்கறை ஏதும் தெரிய வில்லையென்று சொன்னதும் குழப்பத்துக்கு உள்ளானான் தலைவன். பிறகு, "சரி, நீ வா எங்களுடன்," என்று உத்தரவிட்டான் தலைவன் வாலிபனை நோக்கி.

"எங்கு?"

"அரண்மனைக்கு"



"எதற்கு?"

"உன் அண்ணனைப் பற்றித் தகவல் சொல்ல."

"எனக்கு ஏதும் தெரியாதென்றுதான் சொன்னேனே"

"அதைச் சொல்ல வேண்டியவர்களிடம் சொல்," என்று அதட்டிய தலைவன் சீக்கிரம் உடையணிந்து வருமாறு அவனுக்கு உத்தரவிட்டான். அதற்குமேல் ஏதும் பேசாத வாலிபன் கூட்டத்திலிருந்த வயோதிகனை நோக்கி, "பெரியவரே! சற்று வாருங்கள். அண்ணன் பெட்டியை உங்களிடம் ஒப்படைக்கிறேன். நானும்போய் விட்டால் அதைக்கவனிப்பாரில்லை," என்று அவனையும் அழைத்துக் கொண்டு மீண்டும் குடிசைக்குள் சென்றான். உள்ளே சென்றதும் ஒரு பெட்டியை எடுத்துக் கிழவனிடம் கொடுத்து விட்டுக் கோடியிலிருந்த பானையைக் காட்டி, "அதிலுள்ள அங்கிக் கிழிசல்களை எங்காவது புதைத்து விடுங்கள்," என்று மெல்லக் கூறிவிட்டு உடையும் வாளும் அணிந்து வெளியே வந்தான். குடிசைக்குப் பின்புறமிருந்த புரவியைப் பிடித்துக் கொண்டு அதன்மீது ஆரோகணித்து வீரர்களுடன் சென்றான்.

வாலிபனைத் தலைநகர் சிறைக் கோட்டத்துக்கு அழைத்துச் சென்ற தலைவன், அங்கிருந்த அறையொன்றில் அவனை அடைக்கச் செய்து, மறுநாள் சந்திப்பதாகக் கூறிச் சென்று விட்டான். வாலிபன் அன்றிரவை அந்த அறையிலேயே நிம்மதியாகக் கழித்து, மறுநாள் காலை நன்றாக விடிந்த பிறகே கண் விழித்தான். அவன் விழித்ததும், முகம் கழுவவும், காலை உணவு அருந்தவும் வசதி அளித்து மீண்டும் அவனை அறையிலே வைத்துப் பூட்டினான் சிறைக்காவலன். அன்று உச்சிவேளை கடந்த சில நாழிகைகளுக்குப் பிறகு, முதல்நாள் சிறை செய்த தலைவன் சிறைச் சென்றான். கோட்டத்திலிருந்து பலவிடுதிகள் வழியாக அவனை அழைத்துச் சென்ற தலைவன் கடைசியாக அரண்மனையின் ஆரம்பப் பகுதியிலிருந்து ஒரு விடுதியின் வாயிலுக்கு அழைத்துவந்து,

வாலிபனை வெளியிலேயே நிற்க வைத்துவிட்டுத் தான் மட்டும் உள்ளே சென்று சில வினாடிகளில் திரும்பிவந்து, "உள்ளே செல்." என்று உத்தரவிட்டான்.

வாலிபன் ஏதும் பேசாமல் உள்ளே சென்றதும், அந்தச் சின்னஞ்சிறு விடுதியின் நடுக்கூடத்திலிருந்த மஞ்சத்தில் தன்னந்தனியே வீற்றிருந்த மனிதன் அவனை அருகில் வரும்படி சைகை செய்தான். அந்த மனிதனைக் கண்டதும் "மன்னிக்க வேண்டும்...அழைத்தது தாங்களென்று தெரியாது. தெரிந்திருந்தால்..." என்று குழம்பிச் சொற்களை உதிர்த்துத் தலை தாழ்த்தி வணங்கினான். மீண்டும் மெள்ள மெள்ள தலையை நிமிர்த்தியபோது மஞ்சத்திலிருந்தவன் கண்கள் மிகுந்த விஷமத்துடன் வாலிபனின் கண்களைச் சந்தித்தன.

"நான்...நான்...தங்களை.." என்று குழறிய வாலிபன் வார்த்தைகளை, "இங்கு எதிர்பார்க்கவில்லை," என்று முடித்த சேரமன்னன் வீரரவி உதயமார்த்தாண்ட வர்மனின் சொற்களில் விளங்காத ஏதோ ஓர் ஒலி இருந்ததையும் அவன் காமக் கண்களிலும் விவரம் புரியாத ஒரு சிரிப்பு தவழ்ந்து கொண்டிருந்ததையும் வாலிபன் கவனித்தான். வீரரவியின் இதய ஆழம் முழுவதையும் வாலிபனால் அளக்க முடியாவிட்டாலும், தன்னைப் பெரும் ஆபத்து சூழ்ந்திருக்கிறது என்பதை மட்டும் அவன் சந்தேகமறப் புரிந்துகொண்டான்.

அத்தியாயம் 4

# புதுக் காவலன்

**வீ**ரரவி உதயமார்த்தாண்டவர்மனின் விஷ விழிகளில் விரிந்த சிரிப்புச் சாயையும் அவன் உதடுகளிலிருந்து கொட்டிய சொற்களில் கலந்தோடிய விபரீத ஒலியையும் கவனித்த வாலிபன், மன்னன் கண்களிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளத் தான் நின்றிருந்த மண்டபத்தின் அகல நீள உயரங்களை அளக்கும் பாவனையில் கண்களை ஐம்புறமும் ஓடவிட்டான். சலனமும், ஓரளவு அச்சமும் கலந்த அந்த வாலிப வீரனின் பார்வையைக் கண்ட சேர மன்னன் உதடுகளில் புன்னகையும் விஷமமும் நன்றாக விரிந்ததன்றி, அடுத்து அவன் கேட்ட கேள்வியிலும் விஷமம் பூர்ணமாக ஒலித்தது. "மண்டபத்தை எடை போடுகிறாயா, வீரனே?" என்று வினவினான் மன்னன் லேசாக நகைத்து.

வாலிபன் கண்கள் விடுதிக் கூரையையும் சுவர்களையும் விட்டு மீண்டும் மன்னனை நோக்கின. "மன்னர் விடுதியை எடைபோட இந்த அற்பன் யார்?" என்று மிகுந்த பணிவுடன் வாலிபன் பதில் கூறினான்.

மன்னன் கண்கள் மீண்டும் வாலிபனை ஊடுருவின. அத்துடன் உதடுகளும் சொற்களைச் சர்வசாதாரணமாக உதிர்த்தன. "வீரனே! உன்னைக் குறைத்து மதிப்பிட்டுக் கொள்ளாதே. நீ பார்வைக்குத்தான் அற்பன். இந்த விடுதியும் நீயும் ஒன்று," என்று மன்னன் மீண்டும் முறுவல் கூட்டினான் உதடுகளில்.

வாலிபன் கண்கள் நிலத்தை நோக்கித் தாழ்ந்தன. "எனக்கு விளங்கவில்லை மன்னவா," என்று மெல்லக் கூறினான் வாலிபன்.

"இந்த விடுதி பிரதான அரண்மனையல்ல..." என்று சுட்டிக் காட்டினான் மன்னவன்.

"ஆம் மன்னவா," என்றான் வாலிபன் விடுதியைப் பற்றி மன்னவன் ஏன் பேசுகிறான் என்பதை அறியாமல்.

"அரண்மனையின் அகழியையும் மதிலையும் தாண்டியவுடன் முகப்பிலிருக்கும் சிறு விடுதிகளில் ஒன்று இது."

"ஆம் மன்னவா! அரண்மனைக் கோட்டத்தின் நடுப் பெரு மாளிகையின் அழகும், கம்பீரமும் இதற்கு வராது."

"இருப்பினும் மாளிகைக்கு இது குறைந்ததல்ல. மாளிகையில் மன்னன் செல்வத்துடனும் சிறப்புடனும் வாழ அவனைச் சூழ்ந்த வீரர்களின் அரச பக்தியும், சக்தியும் அவசியமல்லவா?" என்று வினவிய அரசனை ஏறெடுத்து நோக்கிய வாலிபன், "ஆம் மன்னவா மிக அவசியம்," என்று துடிப்புடன் கூறினான்.

அந்தத் துடிப்பை ஆமோதிப்பவன்போல் தலையசைத்த உதயமார்த்தாண்டவர்மன் மேலும் பேசத் தொடங்கி, "அந்த வீரர்கள் எத்தனை திடமோ அத்தனை திடமானவை, அரண்மனை அகழி மதிலை அடுத்து அதைச் சுற்றிக் கட்டப்பட்டிருக்கும் இந்தச் சிறு விடுதிகள். அரண்மனையைப்போல் படாடோபமானவையல்ல. ஆனால் உரமான சுவர்கள் உள்ளவை. உண்மையான வீரனின் உள்ளம் எத்தனை உரமோ அத்தனை உரம் இவ் விடுதிகள். அரசன் மகிமையுடன் ஆள எப்படி உரமான வீரர்கள் அவசியமோ, அரண்மனைப் பாதுகாப்புக்கு இச்சிறு விடுதிகள் அவசியம். ஆகையால் என் வீரர்களை நான் எத்தனை நேசிக்கிறேனோ அத்தனை இவ்விடுதிகளையும் நேசிக்கிறேன்," என்று கூறியதன்றி, "இதை நீ ஒப்புக் கொள்வாய் என்று நினைக்கிறேன்," என்று வீரனை நோக்கி முடிக்கவும் செய்தான்.



வாலிப வீரனின் உணர்ச்சிகள் பலவிதமாகச் சுழன்று கொண்டிருந்ததால் சில விநாடிகள் அவன் பதிலேதும் சொல்லாமல் மௌனமாக நின்றான். சிறைப்பட்ட தன்னைப் போன்ற சாதாரண வீரர்களைக் கடுமையான கேள்விகளைக் கேட்டுத் தண்டிக்கவோ விடுதலையோ செய்யாமல் நீண்ட நேரம் பலபடி மன்னன் பேசவேண்டிய காரணம் அவனுக்கு விளங்கவில்லை. தவிர, தன்னைப் போன்றவர்களைக் காவலர் தலைவன்தான் விசாரிப்பது வழக்கமே தவிர மன்னன் நேரிடப் பார்ப்பதோ விசாரிப் பதோ கிடையாதாகையால், மன்னன் தன்னை நேரில் ஏன் சந்திக்கின்றானென்பதும் புரியாத புதிராயிருந்தது. அவனுக்கு மன்னவன் தன்னை நேரில் விசாரிப்பதிலிருந்து ஏதோ மர்மம் இருப்பது மட்டும் குறிப்பாகத் தெரிந்ததேயொழிய விவரமாகவோ திட்டமாகவோ ஏதும் தெரியாததால் அவன் சில விநாடிகள் குழம்பி நின்றான்.

அவன் மௌனத்தைக் கவனித்த வீரரவி, "நான் சொல்வதை நீ ஒப்புக்கொள்ள முடியாவிட்டால் அஞ்சாமல் சொல்லிவிடு," என்றான்.

வாலிபன் மன்னனை நோக்கிப் பெருமரியாதை யுடன், தலை தாழ்த்தினான். அத்துடன் சொல்லவும் செய்தான். "மன்னர் சொல்வதை மறுக்க இந்த அற்பனுக்குத் துணிவேது?" என்று.

அடுத்தபடி மன்னன் குரல் திட்டமாக எழுந்தது. "துணிவில்லாதவன் வீரனல்ல. வீரனல்லாதவனை நான் விரும்புவதில்லை," என்ற அவன் சொற்களில் திடமும் உறுதியும் இருந்தன.

"துணிவு இடத்தைப் பொறுத்தது மன்னவா," என்றான் வாலிபன்.

"இடத்தைப் பொறுத்ததா!" மன்னன் குரலில் வியப்பு ஒலித்தது.

"ஆம் மன்னவா! போரில் துணிவைக் காட்டுபவன் வீரன். மரியாதைக்குரியவர்கள், வயோதிகர்கள் பெண்கள் இவர்கள் முன்பு வீரம் பேசுவதோ, துணிவைக் காட்டு

வதோ வீரத்துக்கு அடையாளமில்லையென்று சாத்திரங்கள் கூறுகின்றன," என்ற வாலிபன் தன் சுயநிலை மறந்து மேலும் விவரித்தான், "அதுமட்டுமல்ல மன்னவா! எளியவரைத் தாக்குவது, பெண்களை அபகரிப்பது, ஓடும் எதிரிமீது வேலெறிவது இவற்றையும் வீரர்கள் தர்மம் அனுமதிக்கவில்லை," என்று.

இந்த விவரத்தைக் கேட்ட மன்னன் முகத்தில் கோபத்தின் சாயை ஒரு விநாடி தோன்றி மறைந்தது. பிறகு பழைய வஞ்சகப் புன்முறுவல் அவன் இதழ்களை நன்றாகத் தழுவிக் கொள்ள, மன்னன் வீரனைச் சிலாகித்து, "நன்று சொன்னாய் வீரனே. அதுதான் தர்மம்; துணிவைக் கைவிட வேண்டிய நேரமும் நீ குறிப்பிட்டவைதான்; ஆனால், அரசனைக் காக்கும் விஷயத்தில், அவன் நலன்களைப் பாதுகாக்கும் விஷயத்தில் துணிவையும் பக்தியையும் காட்டவேண்டியது அவசியமல்லவா?" என்று கேட்கவும் செய்தான்.

"மிக அவசியம்?" என்றான் வாலிபன்.

"உனக்கு அந்தப் பக்தி உண்டா?" மன்னன் கேள்வி திடீரென்று உச்ச ஸ்தாயியில் ஒலித்தது.

"சோதித்துப் பாருங்கள் மன்னவா," என்ற வாலிபன் மன்னனை நன்றாக ஏறெடுத்து நோக்கினான்.

"அப்படியானால் சொல், கூத்தன் எங்கே?" என்று கேட்டான் மன்னவன்.

"எனக்குத் தெரியாது, மன்னவா?"

"கூத்தன் யாரொன்பது உனக்குத் தெரியுமா?"

"தெரியும் மன்னவா?"

"எத்தனை நாட்களாக?"

"பல நாட்களாக?"

"பல நாட்களாக என்றால்?"

"சுமார் பதினைந்து நாட்களாக"

"அதற்கு முன்னால் எங்கிருந்தாய்?"

"எங்குமில்லை. நாடோடியாக இருந்தேன்."



"நீ சேர நாட்டவனா?"

"இல்லை. சோழ நாட்டவன்!"

"இங்கு எதற்கு வந்தாய்?"

"பிழைப்பைத் தேடி. கூத்தன் உதவினான்."

"கூத்தன் உன்னை எப்படி அரண்மனையில் சேர்க்க முடிந்தது?"

"தங்கள் கருணையால்."

"என் கருணை உன்மீது ஏன் விழுந்தது? தவிர, கூத்தன் வீரனல்லவென்பது உனக்குத் தெரியும்?" இதை வீரரவி திடீரென்று கேட்கவே வாலிபன் அசந்து போனான். அசந்து விழிக்கவும் செய்தான்.

"கூத்தன் வீரனல்லவென்பது உனக்குத் தெரியும். அப்படியிருக்க ஒரு கூத்தாடியை மன்னன் ஏன் அரண்மனைக் காவலனாக்கினான் என்பதை யோசித்தாயா?" என்று மீண்டும் கேட்டான் மன்னன்.

"இல்லை மன்னவா," என்று கூறினான் வாலிபன்.

"இருக்கிற கூத்தாடிகளையெல்லாம் அரண்மனைக் காவலர்களாக்கினால் அரண்மனையின் கதி என்ன?"

"அதோகதிதான்"

"இதை அறிந்தும் அவனை அரண்மனைக் காவலனாக்கினேன். அதுவும் முக்கியமான கடற்கரை மாளிகையில் காவலுக்கு வைத்தேன். ஏன் தெரியுமா?" என்ற வீரரவி வாலிபனைக் கூர்ந்து நோக்கினான்.

"ஏன் மன்னவா?" என்று சற்று சலனத்துடன் கேட்டான் வாலிபன்.

வீரரவி ஒருவிநாடி தாமதித்தான். பிறகு அறிவித்தான் நிதானமாக, "அவன் பாண்டியநாட்டு ஒற்றன்," என்று.

வாலிபன் எல்லையற்ற அதிர்ச்சியால் பேச நா எழாமலும், கையசைக்கக்கூட திடமில்லாமலும் விநாடிகள் திகைத்து நின்றான். "அப்படியா மன்னவா!" என்று கடைசியில் கேட்கவும் செய்தான் திகைப்பு குரலில் பெரிதும் ஒலிக்க.

"ஆம். சில நாட்களாகக் கூத்தனுடைய நடவடிக்கைகள் பெரிதும் சந்தேகத்துக்கு இடமாயிருப்பதாக ஒற்றர்கள் சொன்னார்கள். ஆகையால் அவனைக் காவலனாக்கினேன். கடற்கரை மாளிகையைக் காவல் புரிய அனுமதித்தேன். அவனைக் கவனிக்கும்படி வீரர்களுக்கும் பணித்திருந்தேன். நான் விரித்த வலையில் விழுந்தான் கூத்தன். நேற்று முன் ஜாமம் மட்டுந்தான் அவனுக்குக் காவல். இருப்பினும் இரண்டாம் ஜாமமும் அங்கு தங்கினான். நள்ளிரவுக்குச் சற்று முன்பு மாளிகைக்குள் நுழைந்தான். பிறகு வெளியே வந்து புரவிமீதேறி ஓடினான். அடுத்து நடந்தது உனக்குத் தெரியும். அவன்மீது கத்தி வீசப்பட்டது. இருப்பினும் வேகமாக மறைந்துவிட்டான்," என்ற மன்னன் சிறிது பேச்சை நிறுத்தி வாலிபனைக் கூர்ந்து கவனித்தான்.

"இது எதுவும் எனக்குத் தெரியாது மன்னவா," என்றான் வாலிபன்.

"ஆம் ஆம். மறந்துவிட்டேன். உனக்கெப்படித் தெரியும்? நீதான் கூத்தனைப் பார்க்கவில்லையே," என்ற மன்னன், "வீரனே! உன்னைப் போன்ற சாதாரண வீரனுடன் நான் ஏன் இத்தனை நேரம் பேசுகிறேன். இத்தனை விவரங்களைச் சொல்லுகிறேன் என்பது உனக்கே விசித்திரமாயில்லையா?" என்று வினவவும் செய்தான்.

"ஆம் மன்னவா! வியப்பாகத்தானிருக்கிறது," என்றும் ஒப்புக்கொண்டான் வாலிபன்.

"வியக்கவேண்டாம் வீரனே! நான் வீரர்களை எப்பொழுதும் விரும்புகிறேன், மதிக்கிறேன். நீ கூத்தனல்ல, வீரன். கூத்தன் அறிமுகப்படுத்திய அன்றே நான் அதைப் புரிந்து கொண்டேன்," என்று சற்று நிதானித்தான் மன்னன்.

"நன்றி மன்னவா," என்று வாலிபன் தலை தாழ்த்தினான்.

"கூத்தனை நான் நம்பவில்லை. எப்படியும் கூத்தாடி கூத்தாடிதான். அவனை விலைக்கு வாங்கலாம். ஆனால் வீரனை விலைக்கு வாங்க முடியாது. ஆகவே நீ கூத்தனால்



அறிமுகப்படுத்தப்பட்டவனாயிருந்தாலும், உன்னை நம்புகிறேன். இனி கூத்தனை மறந்துவிடுவோம். துரோகச் சிந்தையின்றி நீ நடப்பாயா?" என்று வினவிய அரசன் தனது மஞ்சத்திலிருந்து மிகக் கம்பீரமாக நின்றான்.

"இதை மன்னர் கேட்க வேண்டுமா?" என்று கேட்டான் வாலிபன்.

"கொடுத்த பணியை ராஜத் துரோகமின்றிச் செய்வதாக உன் வாளின் மேல் ஆணை வை," என்றான் மன்னன்.

"இது அரண்மனைக் காவலனாகச் சேரும்போதே எடுத்துக் கொண்ட பிரமாணம்தானே?" என்றான் வாலிபன்.

"மீண்டும் ஒருமுறை என் முன்பாக ஆணையிடு," என்று உத்தரவிட்டான் மன்னன்.

வாலிபன் தன் வாளை உருவி உயர்த்தி ஆணையிட்டான். அந்த ஆணையின் வேகத்தைக் கண்ட மன்னன் முகத்தில் சிந்தனை சற்றே விரிந்தது. "நன்று வாலிபனே! இன்று முதல் கூத்தன் பணியை நீ மேற்கொள்," என்று அறிவித்த மன்னன், வாலிபன் வெளியே செல்லலாமென்பதற்கு அறிகுறியாகக் கையை அசைத்தான்.

தலை வணங்கி வெளியே வந்த வாலிபனை அங்கிருந்த தலைமைக் காவலன் மீண்டும் சிறைக் கோட்டத்திற்கே அழைத்துச் சென்று சிறையிலடைத்தான். வாலிபன் சிந்தை குழம்பிக் கிடந்தது. மன்னன் உத்தரவுக்குப் பிறகு தான் மீண்டும் சிறையில் அடைபட வேண்டிய காரணம் அவனுக்குப் புரியவில்லை. வீரரவியின் சொற்களில் பல தத்துவங்கள் ஒலியிட்டாலும் அவற்றுக்கெல்லாம் பின்னால் அவன் மனத்தில் ஏதோ எண்ணங்கள் ஓடியதாக நினைத்து நினைத்து அவை என்னவாக இருக்க முடியும் என்ற விளக்கம் தேடித் தேடி அலுத்த வாலிபன் சிறையில் உணவருந்தி நீண்ட நேரம் உறங்கினான். அன்று இரவு நீண்ட பிறகும் அவனுக்கு விடுதலை கிடைக்கவில்லை. இரவின் முதல் ஜாமம் முடியும் தருவாயில்

படுக்கப்போன சமயத்தில் சிறைக் கதவு திறக்கப்பட்டு உள்ளே நுழைந்த தலைமைக் காவலன் "உடைகளை அணிந்து புறப்படு" என்று உத்தரவிட்டான்.

அவனை எதுவும் கேட்பதில் பயனில்லை என்று அறிந்த வாலிபன் உடைகளை அணிந்து வாளை இடையில கட்டிக்கொண்டு தலைமைக் காவலனைத் தொடர்ந்து அறையைவிட்டு வெளியே வந்தான். வெளியே நான்கு காவல் வீரர்கள் இருந்ததையும் தனிப் புரவி ஒன்று தனக்காகக் கொண்டு வரப்பட்டதையும் கண்டு யாரையும் எதுவும் கேட்காமல் புரவிமீதமர்ந்து சென்றான். இப்படி நான்கு வீரர்களும், தலைமைக் காவலனும் புடைசூழ்ந்து வர, புரவியை நடத்திச் சென்று வாலிபனை நகரத்தின் தென் கிழக்குக் கோடிக்கு அழைத்துச் சென்று அங்கிருந்த கடற்கரை மாளிகை வாயிலில் இறக்கினார்கள். பிறகு தலைமைக் காவலன் மட்டும் அவனை உள்ளே அழைத்துச் சென்று மாளிகையின் உள்ளறையொன்றில் விட்டுச் சென்றான். சில நிமிடங்களுக்குக்கெல்லாம் அந்த உள்ளறையில் தோன்றிய வீரரவி வாலிபனைத் தன்னுடன் வருமாறு சைகை செய்து இன்னும் உள்ளே சென்றான்.

மன்னனைத் தொடர்ந்து சென்ற வாலிபன் அம் மாளிகைக்கு உள்ளடுக்குள் பல இருந்ததையும் ஒவ்வோர் அடுக்கிலும் வாள் தாங்கிய வீரர்கள் காவல் புரிந்து கொண்டிருந்ததையும் கண்டான். அந்த அடுக்குகளின் கடைசி அரங்கை அடைந்த மன்னன் அங்கிருந்த வாயிலைக் காட்டி, "இந்த வாயிலை நீ காக்கவேண்டும். உள்ளேயிருப்பவருடன் எக்காரணம் முன்னிட்டும் பேசாதே. மற்ற யாரையும் பேச அனுமதிக்காதே. ஆனால் பயப்படாதே. உன் விகார முகமே உனக்குப் பாதுகாப்பு," என்ற மன்னன் திடீரென எதையோ யோசித்துவிட்டு, "உன் முகத்தில் இத்தனை தழும்புகள் எங்கிருந்து உண்டாயின?" என்றும் வினவினான்.

"பத்தினித் தெய்வத்துக்குத் தீக்குளித்தேன்," என்று விளக்கினான் வாலிபன்.



"சுத்தமின்றி நெருப்பில் இறங்கிவிட்டாயா?" என்று பயத்துடன் கேட்டான் மன்னன்.

"ஆம்."

"குப்புற விழுந்துவிட்டாயா?"

"ஆம்.?"

"பத்தினித் தெய்வத்துடன் விளையாடலாமா வீரனே?" என்று வினவினான் மன்னன் சீற்றத்துடன்.

"யார் விளையாடுவதும் தவறு, மன்னவா!" என்றான் வாலிபன்.

இதைக் கேட்ட மன்னன் முகத்தில் சீற்றம் மறைந்து கபடம் ததும்பியது. "சாமர்த்தியமாகப் பேசுகிறாய் வீரனே. இந்தச் சாமர்த்தியத்தைக் காவலில் காட்டு," என்று கூறிய மன்னன் வாலிபனை அவ்விடத்திலேயே விட்டுச் சென்றான்.

வாலிபன் காவலைத் துவங்கினான். உருவிப் பிடித்த வாளுடன் அந்தக் கடைசி அடுக்களையின் வாயிலில் அப்புறமும் இப்புறமும் நடந்தான். தன்னைப் போன்ற வீரர்கள் இதர அரங்குகளில் நடக்கும் ஒலியும், வெளியே கடலலைகளின் ஒலியும்கூட அவன் காதில் விழுந்தன. நாழிகைகள் ஓடின. நள்ளிரவும் தாண்டிக் கொண்டிருந்தது. காவல் நடை போட்டவண்ணம் மெள்ள அந்த அரங்கைச் சுற்று முற்றும் பார்த்தான். சற்றுச் கோடியிலிருந்த அறை வாயிலின் உள்ளேயும் அரவம் அடங்கிவிட்டதைக் கவனித் தான். பிறகு அந்த அறைவாயிலை நெருங்கி அதன் படியில் அமர்ந்துகொண்டு சிந்தனையில் ஆழ்ந்தான். நீண்டநேரம் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டதால் உணர்ச்சிகளை அடியோடு இழந்து நின்ற வாலிபன், தனக்குப் பின்னாலிருந்த அறைக்கதவு திறக்கப் பட்டதையோ ஒரு பெண் உள்ளிருந்து அடிமேலடி எடுத்து வைத்துத் தன்னை அணுகியதையோ கவனிக்கவில்லை. ஆனால் கதவைத் திறந்த அந்தப் பெண்ணுருவம் மட்டும் அவனைக் கவனித்தது; கவனித்தது மட்டுமல்லாமல் கையிலிருந்து ஒரு

சிறு விசிறியால் அவனைத்தட்டி "கூத்தா! கூத்தா!" என்று மெதுவாக அழைக்கவும் செய்தது.

வாலிபன் திடுக்கிட்டுத் திரும்பினான். மிக அழகிய இருவிழிகள் அவன் விழிகளைச் சந்தித்தன. சந்தித்த விழிகள் மருண்டன. "நீ...நீ..." எனக் குழறினாள் விழிக்குடையவள். வாலிபன் பதிலில் குழப்பம் சிறிதுமில்லை.

"புதுக் காவலன்," என்ற பதில் மெதுவாக அச்சம் லவலேசமுமின்றி உறுதியுடன் வெளிவந்தது. அவள் திரும்பிக் கதவைச் சாத்த முயன்றாள்.

"வேண்டாம்," என்று மெல்லச் சொன்ன புதுக் காவலன் துணிவுடன் அவள் கரத்தைப் பற்றியதல்லாமல் அவை உள்ளே செல்லவிடாமல் தடுக்கவும் செய்தான்.

## அத்தியாயம் 5

# கண்மணி

அந்த அர்த்த ஜாம வேளையில், கட்டுக் காவலிருக்கும் அந்த தனி மாளிகையில், ஊர் பேர் தெரியாத அந்த வாலிபன், அதுவும் தன்னைக் காவல் செய்ய அரசனால் நியமிக்கப்பட்ட அடிமை, அத்தனை துணிவுடன் தன் கையைப் பற்றியதைக் கண்ட அந்தப் பெண் அச்சத்தையும் ஆச்சரியத்தையும் ஒருங்கே அடைந்தாளானாலும், இருந்த இடத்திலிருந்து நகரவோ, கையைத் திமிறவோ சக்தியற்றவளானாள்.

புதுக் காவலன் தலை நிமிரவுமில்லை. அவள் விழிகளைச் சந்திக்கவுமில்லை. ஆனால் குனிந்த நிலையிலும் தழும்புகள் பல தெரிந்த அவனுடைய விகார முகத்தின் பக்கப் பகுதிகள் அந்த அறை வாயிற்படிருகே எரிந்த விளக்கொளியில் மிகப் பயங்கரமாகத் தெரிந்தன. அதன் விளைவாக அச்சம், வியப்பு இந்த உணர்ச்சிகளுடன் அருவருப்பும் சேர்ந்து கொள்ளவே, அந்தப் பெண்ணின் உதடுகள் லேசாகத் துடித்தன. "உனக்கு என்ன துணிவு!" என்ற சொற்களும் மெல்ல உதிர்ந்தன சினத்துடன்.

வாலிபன் உடனடியாகப் பதிலும் சொல்லவில்லை. பற்றிய அவள் கையை விடவும் இல்லை. தனது கூர்விழிகளை எதிரேயிருந்த அடுத்த அடுக்கின் வாயிலை நோக்கிச் செலுத்தினான் சில விநாடிகள். பிறகு சர்வசாதாரணமாக, "எனக்குப் பின்னால் அப்படியே உட்கார்ந்துகொள்," என்று கூறியதன்றி, பற்றியிருந்த அவள் கையைக் கீழ் நோக்கி இழுக்கவும் செய்தான்.

அவன் குரலில் மிகுந்த எச்சரிக்கை மட்டுமின்றி ஆணையிடும் தொனியுமிருந்ததையும், கையின் பிடியும் இரும்பாயிருந்ததையும் கவனித்த அந்தப் பெண் உடனே உட்கார மறுத்து, "நீ யாரென்பதை முதலில் சொல். நண்பனா, விரோதியா? வீரனா? அல்லது ஓர் அபலையின் நிராதரவை உபயோகப்படுத்திக் கொள்ள முயலும் கயவனா?" என்று வினவினாள்.

இதைக் கேட்ட வாலிபன் இதழ்களில் புன்முறுவல் தவழ்ந்தது. "கொஞ்சம் புத்தியிருந்து அதை உபயோகித்தால் நீ கேட்ட அனைத்துக்கும் விடையிருக்கும்," என்று மெல்லக் கூறிய அந்த வாலிபன், "இதோ பார், விளக்கின் ஒளி உன்மீது தெளிவாக விழுகிறது. பேசாமல் என் பின்புறம் என் முதுகு அளிக்கும் நிழலில் உட்கார். இல்லையேல் அதோ என் முன்புறமிருக்கும் கதவின் காவலன் தனது காவல் நடையை நிறுத்திச் சற்று இப்புறம் திரும்பினால் நீ நின்றிருப்பதைக் கண்டுகொள்ள முடியும்," என்று அவள் கையை கீழ்நோக்கி இழுக்கவும் செய்தான்.

அவன் சொன்னதில் அர்த்தமிருப்பதை அறிந்தாள் அந்த அழகி. அவன் சொற்படி அவனுக்குப் பின்னாலிருந்த நிழலில் உட்கார்ந்துகொண்டாள்.

அவள் அப்படி உட்கார்ந்ததும் புதுக் காவலன் அவள் கையை விடுதலை செய்தான். பிறகு அதே கையை நீட்டி அந்த அறையின் ஒரு கதவை ஒருக்கணிக்கவும் செய்தான். பிறகு வாயிற்படியில் நன்றாகச் சாய்ந்து கால்களை மடக்கிக் கொண்டு, "இப்பொழுது உன்மீது விளக்கொளி சிறிதும் படாது. என் உடலும் ஒருக்கணிக்கப்பட்ட கதவும் உன்னை அந்தகாரத்தில் ஆழ்த்திவிட்டன. இப்பொழுது நீ கேட்க வேண்டியதையெல்லாம் கேள். நாம் பேசிமுடிக்க இன்னும் ஒன்றரை ஜாம காலம் இருக்கிறது. எல்லாவற்றையும் சவிஸ்தாரமாகப் பேசலாம்;" என்றான்.

அவன் பின்னாலமர்ந்திருந்த அந்தப் பெண் எதுவும் கேட்கவில்லை. அவனை; ஆயாசப் பெருமூச்சு மட்டும் விட்டாள். பிறகு மெள்ளச் சொன்னாள், "நான் கேட்க வேண்டியதை ஏற்கெனவே கேட்டுவிட்டேன்," என்று.



"என்ன கேட்டாய்?" என்று வினவினான் வாலிபன் மீண்டும்.

அதுவரை பொறுமையைக் காட்டிய அவள் பொறுமையைத் திடீரென இழந்தாள். திரும்பத் திரும்ப அந்தப் புதுக்காவலன் தன்னை மட்டு மரியாதையின்றி, "நீ, நீ' என்று அழைப்பதை எண்ணியதால் பொங்கிக் கொண்டிருந்த கோபத்தை நன்றாக வழியவிட்டு, "நீ வீரனாயிருந்தால் முதலில் மரியாதையைக் கற்றுக்கொள்," என்று சீற்றம் ததும்பும் குரலில் கூறினாள்.

வாலிபன் பதிலுக்கு மெல்ல நகைத்தான். "சதிகாரர்களுக்குள் மரியாதை எதற்கு?" என்றும் வினவினான்.

அவள் ஏதோ சொல்ல வாயெடுத்தாள். பிறகு மௌனமே அடைந்தாள். தன் கதி அந்தப் புதுக் காவலன் கையிலிருப்பதை அவள் உணர்ந்தாள். இருப்பினும் சற்றுத் துணிவடைந்து, "எந்தச் சதியைப் பற்றிக் குறிப்பிடுகிறாய்?" என்று வினவினாள்.

"எதற்காகக் கூத்தனை அழைத்தாய்?" என்று கேட்டான் அந்த வாலிபன் பதிலுக்கு.

அவள் மெள்ளச் சமாளித்துக் கொள்ள முயன்று, "சதி செய்யத்தான் காவலனை அழைக்க வேண்டுமா?" என்று வினவினாள்.

"காவலனை அழைக்கும் முறையைப் பொறுத்தது." என்றான் வாலிபன்.

"என்ன முறை?"

"உள்ளிருந்தே 'யாரங்கே?' என்றழைப்பது ஒரு முறை..."

"உம்..."

"அது ஒரு தலைவி காவலனை அழைக்கும் அதிகார முறை."

"உம்...'

"மன்னன் சென்றதும் மெள்ள அடிமேலடி எடுத்து வைத்துப் பூனைபோல் நடந்து கதவைச் சிறிதும் சத்தப்

படாமல் திறந்து காவலன் முதுகில் விசிறியால் தட்டி, “கூத்தா! கூத்தா!” என்று காவலனுக்கு மட்டும் கேட்கும் படி முணுமுணுப்பது ஒரு முறை,” என்ற அந்த வாலிபன் ‘கூத்தா கூத்தா’ என்று இரு சொற்களையும் அவள் குரலிலேயே உச்சரித்துக் காட்டினான்.

இதைக் கேட்ட பின்பு அவள் சில விநாடிகள் மௌன மாக இருந்தாள். பிறகு எழுந்திருக்க முயன்றாள். அவள் எழுந்திருக்க முயன்றதைத் தலையைச் சிறிதும் திரும்பாமல் லேசான அவள் அசைவிலிருந்தே புரிந்து கொண்ட அந்த வாலிபன், “பெண்ணே! உட்கார்ந்த இடத்தைவிட்டு நகராதே!” என்று எச்சரித்தான்.

அந்தக் குரலிலிருந்த அதிகாரத் தோரணை அவள் கோபத்தைக் கிளறினாலும், அதை அவள் வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல் பழையபடி சரியாக உட்கார்ந்து கொண்டு, “நகர்ந்தால் என்ன செய்வாய்?” என்று வினவினாள்.

“ஏதும் செய்யமாட்டேன், நடந்ததை மன்னனிடம் சொல்லுவேன்,” என்றான் வாலிபன்.

“அத்தனை கயவனா நீ?”

“சேர மன்னனிடம் ஊதியம் வாங்குகிறேன். அதற்குத் துரோகம் செய்ய முடியாது. துரோகம் செய்யவில்லையென வாக்கும் கொடுத்திருக்கிறேன். நானும் என்ன கூத்தனா, உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்வதற்கு?” என்று வினவினான் வாலிபன்.

இதைக் கேட்ட அந்தப் பெண் பெரும் கோபமடைந் திருக்க வேண்டும். “கூத்தனைப் பற்றிப் பேச உனக்கு என்ன யோக்கியதை இருக்கிறது? அபலையாக உன்னிடம் சிக்கி யிருக்கும் பெண்ணை நீ நீ என்று கண்ணியமின்றி அழைக்கும் நீ எங்கே, கண்ணியத்தின் உருவான கூத்தன் எங்கே? அவன் கூத்தாடியாயிருந்தாலும் ‘வீர உள்ளம் படைத்தவன்...” என்ற அவளை இடைமறித்த வாலிபன், “அதனால்தான் உங்களிடம் சிக்கிக்கொண்டான். உயிரிழக்க வும் இருந்தான்,” என்று முடித்தான்.



“என்ன! கூத்தன் உயிரிழக்க இருந்தானா?” என்ற அவள் சொற்களில் பயமும் இருந்தது, துக்கமும் இருந்தது.

“ஆம்.”

“ஏன், என்ன நடந்தது?”

“கூத்தனைச் சிறை செய்ய முயன்றார்கள். அவன் தப்பி யோடினான். அவன்மீது குறுவாள் வீசப்பட்டது...”

“அப்புறம்...அப்புறம்...”

“அப்படியும் தப்பிவிட்டான் அந்தத் துரோகி.”

“எப்படித் தப்பினான்?”

“இன்னொரு துரோகி அவனுக்கு உதவினான்.”

“அதெப்படி உனக்குத் தெரியும்?”

“உதவிய துரோகியை நேற்று சிறை செய்து கொட்டிலில் அடைத்திருந்தார்கள்.”

“அவனையும் கொன்று விட்டார்களா?”

“இல்லை, கொல்லவில்லை.”

அவள் சில விநாடிகள் மௌனம் சாதித்தாள். அவளிடமிருந்து ஆசுவாசப் பெருமூச்சு ஒன்றும் வெளி வந்தது. அந்தப் பெருமூச்சைக் கண்ட அந்த வாலிபன் மெல்ல நகைத்தான். அந்தச் சிரிப்பைக் கண்ட அவள் வேதனைப்பட்டுக் கேட்டாள், “நான் சிறையிலிருப்பவள். அனாதரவாயிருக்கிறேன். என் நிலைமை உனக்குச் சிரிப்பாயிருக்கிறதா?” என்று.

“சிறையிலிருப்பதை ஒப்புக் கொள்ளலாம். ஏனென்றால் காவலுக்கு நானே வந்திருக்கிறேன். ஆனால் நிராதரவாயிருப்பதை ஒப்புக் கொள்ள முடியாது.”

“ஏன்?”

“கூத்தன் உங்களுக்காக உயிரைக் கொடுக்கத் தயாராயிருந்திருக்கிறான். அது மட்டுமல்ல, அந்தக் கூத்தனை இன்னொருவன் தப்புவிக்கிறான். பிறகு அவன் சிறைப்பட்டாலும், வாயைத் திறக்க மறுக்கிறான். இன்னும் உன்னைக் காக்க எத்தனை பேரிருக்கிறார்களோ! வீரரவியின் தலைநகருக்குள்ளேயே இத்தனை சதிகாரர்

களை உற்பத்தி செய்ய சக்தியுள்ள உன்னை எப்படி நிராதரவாயிருப்பதாக ஒப்புக் கொள்ள முடியும்?"

இதற்கு அவள் பதில் சொல்லவில்லை. வாலிபனின் அறிவையும் அவன் பேச்சு சாமர்த்தியத்தையும் வியந்தாள்.

சற்று யோசித்து விட்டுக் கேட்டாள், "அப்படியானால் நீயும் எனக்கு உதவுவாயா?" என்று.

வாலிபனின் இதழ்களில் இளநகை அரும்பியது. "நானும் என்ன கூத்தனா?" என்று வினவினான் பதிலுக்கு.

அந்தப் பெண்ணும் மெல்ல நகைத்தாள். பிறகு கேட்டாள், "ஏன் இருக்க முடியாது!" என்று.

"என்ன?" வாலிபனின் கேள்வியில் வியப்பு ஒலித்தது.

"ஆம். நீ ஏன் கூத்தனைப் போலிருக்க முடியாது? நீயும் வீரன். பெண்ணைச் சிறையெடுப்பதை எந்த வீரனும் அனுமதிக்க முடியாது," என்று துவங்கினாள் அவள்.

"உண்மை," என்றான் வாலிபன்.

"ஆகவே அதர்மத்துக்கு எதிராக நடப்பது அதர்பமல்ல."

"உண்மை."

"அது கடமை தவறியதும் ஆகாது."

"கடமை காரியத்தைப் பொறுத்தல்லவே. பணி புரியும் இடத்தைப் பொறுத்தது," என்றான் வாலிபன் மெள்ள.

"அல்ல, வீரனே, அல்ல,. அலுவலையும் பொறுத்தது,' என்ற அந்தப் பெண் குழையும் குரலில், "வீரனே, ஒரு நிராயுதபாணியைக் கொல்லென்று மன்னன் சொன்னால் நீ கொல்வாயா?" என்று வினவினாள்.

"குற்றம் புரிபவர்களை ஆயுதத்தைக் கொடுத்துப் போராடச் சொல்வதில்லை. திருடன், ஒற்றன், கொள்ளைக்காரன், ராஜத்துரோகி இவர்களை வெட்டுப் பாறையில் வைத்துத் தலையைச் சீவுவதுதான் வழக்கம்" என்று பதில் சொன்னான் வாலிபன்.



அந்தப் பெண்ணின் சித்தத்தில் சினம் பொங்கியது. நிராயுதபாணியைக் கொல்வது தர்மமல்லவென்று சுட்டிக் காட்டி, பிறகு பெண்ணைச் சிறை பிடிப்பது தர்மமல்லவென்று விளக்கி, அவனைத் தன் பக்கம் இழுக்க முயன்ற அந்தப் பெண் அந்த வாலிபன் வேறு சான்று காட்டிக் கழன்று கொண்டதை எண்ணியதால் ஒரு விநாடி கோபம் கொண்டாலும் பிறகு அதை அடக்கிக்கொண்டு "பெண்ணைக் களவாடுவதும், சிறை பிடிப்பதும் தர்மமா?" என்று நேரிடையாகவே கேட்டாள்.

"அதுவும் சந்தர்ப்பத்தைப் பொறுத்தது. பெண்ணையும் பொறுத்தது," என்றான் வாலிபன்.

"அப்படியா!" இகழ்ச்சி பெரிதும் ஒலித்தது குரலில்.

வாலிபன் விளக்கினான்: "எவ்வளவோ பேர் முறைப் பெண்ணைத் தாலிகட்டக் களவாடிக் கொண்டு போகிறார்கள். அதைத் தர்மம் அனுமதிக்கிறது. க்ஷத்திரியர்களிடையே காந்தருவ விவாகமும் அனுமதிக்கப்படுகிறது. ராட்சஸ விவாகமும் அனுமதிக்கப்படுகிறது. ஆண் பெண்ணை அபகரித்து வந்து விவாகம் செய்து கொள்வது ராட்சஸ விவாகம். ஆகவே க்ஷத்திரியர்கள் பெண்ணைக் களவாடுவது தவறல்ல. புராணத்தைப் பார். அர்ச்சுனன் எவ்வளவு பெண்களைக் களவாடியிருக்கிறான்? கண்ணன் ருக்மணியைக் களவாடவில்லையா? அபிமன்யு வத்ஸலையைக் களவாடவில்லையா?"

அந்தப் புராண விவரத்தைக் கேட்ட அந்தப் பெண்ணுக்கு என்ன சொல்வதென்று தெரியாததால் பல விநாடிகள் மலைத்து பிரமித்து உட்கார்ந்துவிட்டாள். பிறகு கேட்டாள்: "இஷ்டமில்லாத பெண்ணைத் தூக்கிச் செல்வதும் சிறைவைப்பதும் எப்படி?" என்று.

'அது அதர்மம்," என்று வாலிபன் ஒப்புக்கொண்டான்.

"அந்த அதர்மத்தை எதிர்க்க உதவுவாயா?"

"உதவலாம்."

"என்னை இஷ்ட விரோதமாகத் தூக்கி வந்திருக்கிறான் சேரமன்னன்."

"அப்படியா?"

"ஆம் அதனால்தான் கூத்தன் எனக்கு உதவ முன் வந்தான்,"

"அது நியாயம்தான்."

அந்தப் பெண்ணின் குரல் அடுத்தபடி மிகவும் குழைந்தது. "அப்படியானால் நீயும் உதவுவாயா?" என்று கரும்பினுமினிய குரலில் கேட்டாள்.

வாலிபன் சிறிது யோசித்தான். பிறகு, "சற்று இரு, என்று சொல்லிவிட்டு எழுந்திருந்து அறை முன்பு இருந்த மண்டபத்தைக் கடந்து எதிரிலிருந்த அடுத்தக் கட்டு வாயிற் படிக்குச் சென்று உற்று நோக்கினான். அந்த வாயிற்படியின் காவலன் ஒரே சீராக நடை போட்டுக் காவல் புரிந்து கொண்டிருந்ததைக் கண்டதும் திருப்தியடைந்து மீண்டும் கடைக் கட்டு அறைக்கு வந்து தானும் உள்ளே சென்று ஒருக்களித்த கதவைப் பூரணமாக மூடிக் கொண்டான்.

அவன் செய்கையைக் கண்ட அந்தப் பெண் சரேலென எழுந்தாள். அறையின் உள் கோடியிலிருந்த விளக்கின் மிக மங்கலமான வெளிச்சத்திலும் அவள் கண்கள் பளபளத்தன. "என்ன இது, எதற்காகக் கதவைச் சாத்தினாய்?" என்று வினவினாள்.

"அடுத்த கட்டுக் கதவு இதற்கு நேராக இருக்கிறது. இங்கு நாம் பேசுவதை அங்குள்ள காவலன் திட்டமாகக் கவனிக்க முடியாவிட்டாலும் நமது பேச்சு அரைகுறை யாகக் காதில் விழலாம்," என்று விளக்கிய வாலிபனின் கண்களில் காமக்கனல் வீசுவதைக் கண்ட அந்தப் பெண்ணின் கண்களில் கோபக் கனல் மண்டியது. "சொல்ல வேண்டியதைச் சொல்," என்றாள் கல்லெனை உறுதிப்பட்ட குரலில்.

"உனக்கு உதவத் தயாராயிருக்கிறேன், ஆனால் பயனை எதிர்பாராமல் உதவும் உயர்ந்த குணம் எனக்கில்லை," என்று கூறினான் வாலிபன்.

"என்ன பிரதிபலனை எதிர்பார்க்கிறாய்? பொன்னா மணியா? என்ன வேண்டும் உனக்கு?" என்று வினவினாள் அவள்.



"இரண்டும் வேண்டும்," என்றான் வாலிபன்.

"எத்தனை பொன் வேண்டும்? மணியில் எது வேண்டும்? வைரமா, ரத்தினமா, முத்தா...?" என்று அடுக்கினாள் அவள்.

"பொன்னைப் பிறகு பெறுகிறேன், மணியை முதலில் கொடு," என்றான் வாலிபன்.

அவள் கழுத்திலிருந்த ரத்தின ஹாரத்தைக் கழற்றப் போனாள், "அது வேண்டாம்," என்று அவளைத் தடுத் தான் வாலிபன்.

"வேறெது வேண்டும், முத்தாரம் தரட்டுமா!" என்று அடுத்ததைக் கழற்றப் போனாள் அவள்.

வாலிபன் அவளை நெருங்கி மெல்லச் சொன்னான். "கழற்றும் மணிவகை எதுவுமே வேண்டாம்," என்று.

அவள் அவனை நோக்கி விழித்தாள். "வேறென்ன வேண்டும்?" என்று வினவினாள் அச்சத்துடன்.

"கழற்ற முடியாத மணி, கழற்ற முடியாத பொன் இரண்டும் வேண்டும்," என்ற வாலிபன் அவளை உற்று நோக்கினான்.

அந்தப்பெண் பெருஞ்சங்கடத்துக்குள்ளானாள். "அப்படியும் மணியும், பொன்னுமிருக்கிறதா?' என்று வினவினாள்.

"இருக்கிறது," என்றான் வாலிபன்.

"என்ன மணி அது?" என்று மார்பு படபடக்கக் கேட் டாள் அவள்.

வாலிபன் பதில் அவளை அப்படியே அயர வைத்தது. மிதமிஞ்சிய திகைப்பினால் அவள் சரீரமே உறைந்து போயிற்று.

"கண்மணி" என்று ஒரு வார்த்தை பதிலாக உதிர்ந்தது. அவன் உதடுகளிலிருந்து.

அது மட்டுமல்ல, அவள் கண்ணின் மணிகளை அவன் கூரிய விழிகள் ஊடுருவவும் செய்தன. அவன் கைகளிரண்டும் அவளை நோக்கிச் சென்றன.

## அத்தியாயம் 6

# பாலுக்கும் காவல்

'கண்மணி' என்ற சொல்லைக் காவலன் துணிவுடன் உதிர்த்ததும் கதிகலங்கிப் போன அந்தக் கட்டழகி அவன் கண்கள் தன் கண்களை ஊடுருவியதும் அக்கண்களிலிருந்து விடுபட மாட்டாமல் திகைத்து நின்றுவிட்டதால், அவன் கைகளிரண்டும் அவளுடைய தோள்கள்மீது பதிந்த பிறகும் பதுமைபோல் நின்ற இடத்தில் சலனமற்றுச் சிலையென நிற்கவே செய்தாள். அந்தச் சில விநாடிகளில் அவள் உள்ளமே உறைந்து விட்டது போலும் உணர்ச்சிகள் பறந்தோடிவிட்டது போலும் ஏற்பட்ட அதிசய நிலையிலிருந்து அவள் விடுபடவும் சக்தியற்றவளானாள். அந்தக் காவலன் கண்களில் ஏதோ தன் உணர்ச்சிகளை ஈர்த்து நிறுத்தும் விவரிக்க இயலாத விபரீத சக்தியிருந்ததை அவள் உணர்ந்தாலும், வாய்விட்டு ஏதும் சொல்ல இயலாதவளானாள். அப்படி உடலும் உணர்ச்சிகளும் சக்தியற்று நின்ற நிலையிலும் காவலன் பார்வையிலிருந்த ஏதோ ஒரு தனி ஒளி மட்டும் அவள் சிந்தனையை ஒரு மூலையில் கிளறிக் கொண்டிருந்தது. அப்படித் தூண்டப்பட்ட சிந்தனை மூலையில் ஏதோ ஒரு புதுக்கண் திறந்ததும் மூச்சைத் திடீரென ஒரு முறை இழுத்துப் பிடித்துக் கொண்டாள் அந்தப் பெண். அந்த அகக்கண் காட்டிய காட்சிக்கும், புறக்கண் முன்பு தோன்றிய தோற்றத்திற்கும் சிறிதும் சம்பந்தமில்லாது போகவே 'இருக்காது! இருக்காது!' என்று அவள் உள்ளம் முணுமுணுத்தது.

அந்த முணுமுணுப்பை யொட்டித் துளிர்த்த உள் உணர்ச்சி மெல்ல இயங்க ஆரம்பிக்கவே, காவலன் கண்கள் விஷமத்தை உதிர்ப்பதையும் கண்டாள். அந்த விஷமப்



பார்வை அவளுக்குப் புதிதல்ல. அவள் அறிந்த பார்வை தான் அது. அனுபவித்த பார்வையுங்கூட. ஆனால் அதற்குடையவன் இந்தக் காவலனாயிருக்க முடியாது என்று அவள் உறுதி கொண்டு தோளிலிருந்த அவன் கைகளை எடுக்க முயன்றதன்றி, "என்ன துணிவு உனக்கு!" என்று சீற்றம் நிரம்பிய குரலில் மெல்ல முணுமுணுக்கவும் செய்தாள்.

அவன் கைகள் அவள் தோள்களிலிருந்து அசைய மறுத்தன. பிடி இரும்புப் பிடியாயிருந்தது. ஆனால் அவன் பேசியதில் இரும்பின் கடினமில்லை. கரும்பின் இனிப்பேயிருந்தது. "எதற்குத் துணிவு?" என்ற சொற்களை மிக இன்பமாகவும் உதிர்த்தான் அந்த வாலிபன்.

அந்தச் சமயத்தில் அவன் குரலின் ஒலியும் மறுபடியும் அவளை ஒரு விநாடி அயர வைத்தது. இருப்பினும் அவள் தலையை 'இல்லை' என்பதற்கு அறிகுறியாக ஆட்டிவிட்டு, "நீ அழைத்த முறைக்கு!" என்றாள் அவள்.

"நான் எங்கே அழைத்தேன் உன்னை?" என்று மெல்ல நகைத்தான் அவன்.

அதைக் கேட்ட அவள் கோபிக்க எண்ணியும் முடியாததைக் கண்டு உள்ளூர வியந்துகொண்டாள். "அழைக்காமல் என்ன செய்தாய்?" என்றும் வினவினாள்.

"சன்மானம் கேட்டேன்," என்றான் வாலிபன் சர்வ சாதாரணமாக.

"என்ன சன்மானம்?"

"பொன்னும் மணியும் தருவதாகச் சொல்லவில்லையா நீ?"

"ஆம். சொன்னேன்."

"முதலில் மணியைக் கேட்டேன்."

"அதுதான்..."

"கண்மணி."

இதைக் கேட்டதும் அவள் கைகளை ஆத்திரத்துடன் தனது தோள்களிலிருந்து எடுத்தெறிந்தாள் அவள்.

"கண்ணைப் பிடுங்கித் தரச் சொல்கிறாயா?" என்றும் சீற்றத்துடன் வினவினாள்.

இம்முறை அவள் சற்று இரைந்தே பேசியதால், "உஷ்," என்று அவள் வாயைப் பொத்திய அவன், "மெல்லப் பேசு. அடுத்த கட்டின் காவலன் காதில் விழப் போகிறது," என்று எச்சரிக்கவும் செய்தான்.

"ஏன், விழுந்தாலென்ன?" என்ற அந்தப் பெண் இகழ்ச்சியுடன் அவனை நோக்கினாள்.

"அவனும் பரிசு கேட்பான்," என்றான் வாலிபன்.

"அவனுக்கும் ஒரு கண்ணைப் பிடுங்கித் தருகிறேன்," என்றாள் அவள் எரிச்சலுடன்.

"அதில் கஷ்டமிருக்கிறது," என்றான் அந்த வாலிபன்.

"ஏன்?" என்று வினவினாள் அவள் பெரும் குழப்பத் துடன்.

"எல்லாவற்றிலும் இரண்டிரண்டு நீ கொடுக்கும் படியாயிருக்கும்," என்று சுட்டிக்காட்டினான் வாலிபன்.

"எல்லாவற்றிலுமென்றால்?" இம்முறை அந்தப் பெண்ணின் குரலில் குழப்பத்துடன் சினமும் இழைந்து கிடந்தது.

வாலிபன் முகத்தில் சற்று வருத்தச் சாயை படர்ந்தது. "மணிக்கு இரண்டு கண்களைக் கொடுத்து விடுகிறாய். அத் துடன் நிற்காதே விஷயம்?" என்றான் வாலிபன்.

"நிற்காமல் என்ன செய்யும்?" என்று கேட்டாள் அவள்.

"பொன்னும் மணியும் கொடுப்பதாகச் சொன்னாய் எந்த மணி வேண்டும் என்று சொன்னேன். உன் தாராளம், இரண்டு கண்களையும் தானம் செய்து விடுவதாகக் கூறுகிறாய்; அடுத்தது பொன்னைக் கேட்பானே..." என்று இழுத்தான் வாலிபன்.

அந்தப் பெண் அந்த வாலிபன் மீது விசித்திரப் பார்வையொன்று வீசினாள். "அதற்கென்ன கையை வெட்டிக்கொடுக்கச் சொல்வாயா?" என்று கேட்டாள்.



"அதைக் கேட்கமாட்டேன்," என்றான் அந்த வாலிபன் மிக மிருதுவான முறையில்.

"வேறு என்ன கேட்பாய்?" என்று வினவிய அந்தப் பெண் அந்த வாலிபன் வதனத்தில் ஏற்பட்ட பெரு மாறுதலைக் கண்டு வியந்தாள்.

அவள் கேள்விக்கு அவன் உடனடியாகப் பதில் சொல்லவில்லை. அவன் விகார முகம்கூடச் சிறிது கனிவதைக் கண்கள் அறிவுறுத்தின. கண்களில் கனிவு மட்டுமின்றி மெள்ள மெள்ளக் கனவும் விரிந்தது. அவன் ஒரு கை மீண்டும் மெள்ள எழுந்து அவள் தோளின்மீது பதிந்தது. "கையைக் கேட்கமாட்டேன். ஆனால் காலைக் கேட்பேன். அதையும் கேட்பது கஷ்டம். அதிலும் நீ தாராளத்தைக் காட்டினால் இரு கால்களும் போய்விடும்," என்ற அவன் வார்த்தைகள் மிக மென்மையாயும் சொப் பனத்தில் பேசுபவன் பாணியிலும் உதிர்ந்தன.

அந்த மென்மைக்கும் கனவுக்கும் காரணத்தை அறியாத அந்தக் காரிகைக்கு என்ன சொல்வது, என்ன செய்வதென்பது தெரியவில்லை. தன்னைப்பற்றியே வியந்து கொண்டாள் அவள். மிகச் சுதந்தரமான முகம் படைத்தவனும் ராஜ்யாதிகாரியுமான சேர மன்னனைப் பார்க்கவும் இஷ்டப்படாத தான், எப்படி இந்த விகார முக வாலிபரின் அதிகப் பிரசங்கத்தையெல்லாம் தாள முடிகிறது என்பதை நினைத்து வியப்பின் உச்சியை எய்தினாள். அவன் தன்னைத் தொட்ட பிறகும் தான் சகிப்புத் தன்மையைக் காட்டும் காரணமும் விளங்க வில்லை அவளுக்கு. தனக்கும் விளங்காத புதிர் ஒன்று தன்னை ஆட்கொண்டிருப்பதை உணர்ந்தாள் அவள்.

வாலிபன் சொப்பன உலகத்திலிருந்தான். அவன் கண்களில் விரிந்த கனவு விகார முகம் பூராவையும் நன்றாக ஆக்ரமித்துக்கொண்டது. அந்தக் கனவில் வார்த்தைகளை மேற்கொண்டும் மெல்லமெல்ல உதிர்த்தான் அவன்: "ஆம்! இரு கால்களும் போய்விடுமே? அதை நான் எப்படிச் சகிக்க முடியும்! கையின் பெருமையும், அருமையும் எனக்குத்

தெரியாது. ஆனால் கால்கள்! அவை விஷயம் வேறு. அந்த அருவி நீர்தான் எத்தனை பளபளப்பு! அந்த நீரின் அடியி லிருக்கும் கூழாங்கற்கள்கூட அந்த வெளிச்சத்தில அசல் தங்கங்கட்டிகளைப் போலத்தான் இருக்கின்றன. அவை யென்ன பத்தரை மாற்றுத் தங்கமா? பசும்பொன்னா? இரண்டுமில்லை. ஆனால் அந்த அருவியில் துளையும் கால்கள்! தூக்கி மடித்த சேலையின் கீழே தெரியும் அந்தப் பொன்னிறக் கால்கள்! அப்பா! எத்தனை அழகிய பசும்பொன்! பத்தரைமாற்றுத் தங்கத்தைவிடக் கொஞ்சம் அதிகமாகத் தானிருக்கும். மற்றைய நாடுகளில் பத்தரை மாற்றுத் தங்கம் பிரமாதமாயிருக்கலாம். ஆனால் பாண்டிய நாட்டு மாத்திரை எத்தனையோ அதிகமாயிருக்க வேண்டும். இல்லாமற்போனால் பாண்டிய நாட்டில் விளைந்த அந்தத் தங்கத்துக்கு எத்தனை பொலிவு! எத்தனை பொலிவு! இயற்கைப் பொற்கொல்லன் அவற்றை எப்படித்தான் இழைத்தானோ?"

அவன் சொற்கள் முத்துக்குமரியின் இதயத்தில் எத்தனையோ இன்ப வேதனைகளைக் கிளப்பின. 'இவனுக்கு எப்படி இதெல்லாம் தெரியும்?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டாள். அத்தனையும் காட்டுக் கோட்டையில் அருவிக்கரையில் நடந்த சம்பவம். இதை இவன் எப்படி அறிந்தான் என்று எண்ணிப் பெருவியப்பும், சந்தேகமும் எய்தினாள் அவள். ஆகவே சிந்தனையிலும் இறங்கினாள்.

சில விநாடிகள் அந்த அறையில் மௌனம் நிலவியது. அந்த வாலிபன் தனது கனவு நிலையிலிருந்து மெள்ள மீண் டான். திடீரெனத் தனது கச்சையிலிருந்து ஒரு பெருமுத்தை எடுத்து அவளிடம் நீட்டினான்.

அந்த முத்தைக் கண்டதும் அவள் இதயத்தில் மீண்டும் வியப்புத் துளிர்ந்தது. "இந்த முத்து ஏது உனக்கு?" என்று வினவினாள் அவள். அத்துடன் அதைக் கையில் வாங்கிக் கொண்டு அறைக் கோடியிலிருந்த விளக்கிடம் விடுவிடு என்று நடந்து சென்று உற்று நோக்கவும் செய்தாள்.



"ஆம் ஆம். அதுதான் சந்தேமில்லை," என்று சற்று வாய்விட்டுக் கூறினாள்.

அந்தச் சமயத்தில் வாலிபன் தனக்குப் பின்பு வெகு அருகில் நிற்பதை அந்த அழகி உணர்ந்தாள். உணர்ந்த பின்னும் உறைந்தவண்ணம் நின்றாள். சற்றுத் திரும்பினாலும் தன் சரீரம் அவன்மீது உராய்ந்துவிடும் என்ற நினைப்பால் உள்ளம் கொதிக்க ஒரு விநாடி நின்றவள் சட்டென்று விளக்கைத் தாண்டி அப்புறம் சென்று சரேலென அவனை நோக்கித் திரும்பினாள்.

எதிர்பாராதவிதமாக விளக்கை இருவருக்குமிடையே அந்தப் பெண் இருத்திவிட்டதைக் கண்ட வாலிபன் அதற்கு மேல் அவளை நெருங்க முடியவில்லை. விளக்கொளியில் அவள் உருவத்தை நன்றாக ஆராய்ந்தான். அந்த அழகியின் கண்களில் பல கேள்விகள். நோக்கி நின்றன. "இது ஏது உனக்கு?" என்று வினவினாள் அவள் சற்று சிந்தித்த பிறகு.

"கிடைத்தது," என்று பதில் கூறினான் அந்த வாலிபன்.

"எங்கு கிடைத்தது?" என்று மீண்டும் கேட்டாள் அவள்.

"நீ எறிந்த இடத்தில்."

"அருவிக் கரையில் ஒன்று எறிந்தேன்."

"ஆம்."

"அது தெரியுமா உனக்கு?"

"தெரியும்."

"எப்படித் தெரியும்?"

"நான் பார்த்தேன்."

"பார்த்து எடுத்துக்கொண்டாயா?"

"இல்லை, எடுக்கவில்லை"

"ஏன்?"

"இளவரசருக்கு இருக்கட்டுமென்று விட்டு வைத்தேன்."

"எந்த இளவசருக்கு?"

"வீரபாண்டியத் தேவருக்கு."

"அப்படியானால் நான் யாரென்று தெரியுமா உனக்கு?"

"தெரியும் முத்துக்குமரி" என்ற வாலிபனின் சொற்கள் மிக நிதானமாகவும் உறுதியுடனும் உதிர்ந்தன.

அந்தச் சந்தர்ப்பத்தில் அந்தச் சொற்கள் பாண்டியன் மகளுக்கு எந்த விதத்திலும் வியப்பளிக்கவில்லை. அவன் முகத்தைக் காட்டியதுமே அவன் தான் இன்னாரென்பதைப் புரிந்து கொண்டுவிட்டானென்பதை உணர்ந்து கொண்டாள். ஆகவே சிங்கணனைத் தவிர, தன்னை வேவு பார்க்க இவனும் கோட்டையில் இருந்திருக்கிறானென்பதை ஊகித்துக் கொண்டாள். இன்னும் எத்தனை ஒற்றர்கள் பாண்டிய மன்னன் படையில் இருக்கிறார்களோ என்ற ஏக்கமும் அவளுக்கு ஏற்பட்டது. அந்த ஏக்கத்தின் விளைவாக அவள் பெருமூச்சு விட்டாள். அந்தப் பெருமூச்சில் இடையிலிருந்த விளக்கின் சுடர் சிறிது சலனப்பட்டது. அதைப் போலவே சலனப்பட்ட மனத்துடன் கேட்டாள் முத்துக்குமரி: "அந்த முத்தை விட்டு வைத்தாய். இந்த முத்து எங்கு கிடைத்தது?"

"காட்டுக் கோட்டையிலிருந்து சேர நாட்டுக்குப் பிரியும் மலைப்பாதையில்."

"நீ எதற்கு அங்கு வந்தாய்?"

"வீரக் காட்சியைப் பார்க்க."

வாலிபனை மீண்டும் கூர்ந்து நோக்கினாள் முத்துக்குமரி. பிறகு கேட்டாள், "என்ன காட்சியைப் பார்த்தாய்?" என்று.

"ஒரு பெண் பலருடன் போராடும் காட்சியைப் பார்த்தேன். பெண் அத்தனை லாகவமாகக் கோடரி வீசுவதை அன்றுவரை நான் கண்டதில்லை," என்ற அந்த வாலிபன் கண்களில் பெருமிதம் மண்டிக் கிடந்தது.

முத்துக்குமரியின் அழகிய விழிகளில் பெரும் சந்தேகம் துளிர்த்தது. "ஒரு பெண் பலருடன் போராடும் போது பார்த்துக்கொண்டிருப்பது தர்மமா?" என்று வினவினாள் அவள், சந்தேகம் குரலிலும் ஒலிக்க.



"இல்லை," என்றான் வாலிபன் திட்டமாக.

"அப்படியானால் அவள் உதவிக்கு நீ ஏன் செல்லவில்லை?" என்று வினவினாள்.

"சந்தர்ப்பம் சரியில்லை. அவசியமும் இல்லை," என்றான் வாலிபன்.

"நீ சந்தர்ப்பவாதியா?" என்று உஷ்ணத்துடன் வினவினாள் முத்துக்குமரி.

"ஆம்," என்று சர்வசாதாரணமாக ஒப்புக்கொண்டான் வாலிபன்.

"சந்தர்ப்பத்தை முன்னிட்டு யார் பக்கம் வேண்டுமானாலும் சேருவாயா?" என்று மீண்டும் கேட்டாள் பாண்டியன் செல்வி.

"சேருவேன்," என்று சிறிதும் வெட்கமில்லாமல் சொன்னான் அந்த வாலிபன்.

வெறுப்பு வழிந்தோடிய விழிகள் வாலிபனை நோக்கின. "இதை ஒப்புக்கொள்ள உனக்கு வெட்கமாயில்லை?" என்று அருவருப்புத் ததும்பிய குரலில் கேட்டாள் பாண்டியன் மகள்.

"இல்லை."

"ஏன், அதே பழக்கமா?"

"ஆம். பலமுறை கட்சி மாறியிருக்கிறேன்."

முத்துக்குமரியின் விழிகளில் வெறுப்பும் கோபமும் கலந்து தாண்டவமாடின. இதழ்களும் இகழ்ச்சியுடன் ஒரு முறை மடிந்து விரிந்தன. "அட வெட்கங் கெட்டவனே! நீயும் ஒரு வீரனா?" என்று உதடுகள் சுடுசொற்களை உதிர்த்தன.

"அப்படி நினைத்துத்தான் சேரமன்னன் என்னைக் காவலுக்கு அமர்த்தியிருக்கிறார்," என்றான் வாலிபனும் வெட்கமின்றி நகைத்து.

"அவருக்கும் சதி நினைக்கிறாயா நீ?" என்று இகழ்ச்சியுடன் கேட்டாள் அவள்.

"ஆம்."

முத்துக்குமரி அந்த வெட்கங்கெட்ட வாலிபனை மீண்டும் நேராக நோக்கினாள் புன்சிரிப்புடன். "இத்தனை வெட்கங் கெட்ட மனிதனை, கயவனை இதுவரை நான் கண்டதில்லை!"' என்று கூறினாள்.

"அது தவறு!" என்றான் வாலிபன்.

"எது?"

"கண்டதில்லை என்பது."

"உன்னை நான் ஏற்கெனவே பார்த்திருக்கிறேனா?"

வாலிபன் பதில் அவசியமின்றி வந்தது. "பார்த்திருக்கிறீர்கள்," என்றான் அவன்.

"இல்லை. நீ யாரென்பது இன்றுவரை எனக்குத் தெரியாது."

"தெரியும்."

"யார் நீ?"

"இந்திரபானு" வாலிபனின் பதில் திட்டமாக வெளி வந்தது.

## அத்தியாயம் 7

# இதயத்தின் ஒலிகள்

விண்ணிலிருந்து கண்ணின் முன்பு திடீரெனப் பளிச்சிடும் பெரு மின்னல் எப்படிச் சில விநாடிகளுக்குப் பார்வையையும் அபகரித்து, உணர்ச்சிகளையும் சிதறடித்து விடுகிறதோ, அதேவிதமாக முற்றும் எதிர்பாராத 'இந்திர பானு' என்ற ஒற்றைச் சொல், முத்துக்குமரியின் உணர்ச்சிகளை எங்கோ அள்ளிக்கொண்டு சென்றதன்றி, பார்வையிலும் பிரமையை ஊட்டி விட்டதால், அவள் அழகிய உடல் பல விநாடிகள் செயலற்று நின்றது. விழிகள் பார்த்தது பார்த்தபடி நின்றன. ஆரம்ப அதிர்ச்சி நீங்கி உணர்ச்சிகள் மெல்லத் திரும்பத் தொடங்கிய பின்னும் முத்துக்குமரியின் விழிகளில் தெளிவு ஏற்படவில்லை. 'இந்திரபானு' என்று அவள் உதடுகள் திரும்ப அந்தப் பெயரை உதிர்த்த போதும் சொல்லின் ஒலியில் சக்தியில்லை, மிகுந்த பலவீனமே நிரம்பிக் கிடந்தது.

சிதறிய உணர்ச்சிகள் திரும்ப உடலில் பிரவாகிக்க ஆரம்பித்த பின்பும் புத்தி மட்டும் சுயநிலைக்கு வராததால் அவள் கையொன்று எதிரேயிருந்த குத்துவிளக்கைப் பலமாகப் பற்றிக் கொண்டதன்றி, அவள் உடலும் லேசாக விளக்கின் பக்கத்திலிருந்த தூணில் சாய்ந்து கொண்டது. அந்தச் சமயத்தில், அவள் சாய்ந்த தூணில் கைதேர்ந்த சிற்பியொருவன் செதுக்கியிருந்த பெண்ணுருவத்தின் நிலையில்தான் முத்துக்குமரியும் இருந்தாள்.

விளக்குக்கு எதிர்ப்புறத்தில் நின்றிருந்த இந்திரபானு, அவளது திகைப்பையும், திகைப்பை அடுத்து அவள் கை, விளக்கை இறுகப் பிடித்ததையும், பிறகு அவள் உடல்

தூணில் சாய்ந்ததையும் கண்டு அவற்றின் காரணத்தைச் சந்தேகமற உணர்ந்து கொண்டான். அத்தனைக்கும் தன் சாமர்த்தியப் பேச்சும் திடீரெனத் தன் பெயரை அறிவித்த முறையும் தான் காரணமென்பதை அவன் உணர்ந்ததால், அவளுக்குத் தான் அளித்துவிட்ட பிரமிப்பையும் வேதனையையும் குறித்து வருந்தவும் செய்தான். இருப்பினும் தான் வேறுவிதமாகத் தன்னை அறிவித்துக்கொள்ள மார்க்கமேதுமில்லையென்பதையும் தன் முகமிருக்கும் லட்சணத்தில் பழைய நிகழ்ச்சிகளை எடுத்துரைக்காமல் தான் இன்னாரென்பதைத் தெரிவித்திருந்தால் முத்துக்குமரி தன்னை நோக்கி நகைத்தேயிருப்பாளென்பதையும் அவன் புரிந்து கொண்டிருந்ததால், அவன் தன்னைச் சிறிது ஆசுவாசமும் செய்து கொண்டான். முத்துக்குமரியிடம் தான் இன்னாரென்பதை அறிவித்துக் கொண்ட பிறகு தனக்கு அந்த அறையில் வேலையேதுமில்லையென்பதையும் அதிக நேரம் அறையின் கதவைச் சாத்தி வைப்பதும் அடுத்த கட்டின் காவலுக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தி விடுமென்பதையும் இந்திரபானு உணர்ந்து கொண்டான். இருப்பினும் முத்துக்குமரி பிரமை பிடித்துத் தூணில் சாய்ந்து விளக்கைப் பற்றி நின்ற நிலை அவன் உள்ளத்தைக் கொள்ளை கொண்டதால், அவளைப் பார்த்தது பார்த்தபடி நின்றான்.

தூணில் செதுக்கியிருந்த அரை நிர்வாணச் சிலையின் ஒய்யாரத்தையும் வளைவையும்விட, முத்துக்குமரி உடல் வளைந்து, இடை ஒடிந்து நின்ற நிலை பிரமிக்கத்தக்கதாயிருந்ததை இந்திரபானுவின் கண்கள் கண்டன. அவள் செவ்விய வதனத்தில் தொங்கிக் கிடந்த இரண்டொரு உச்சி மயிர்கள் வளைந்து இமைகளில் ஒன்றைத் தொட்டுத் தலைக் கருமைக்கும் இமைக் கருமைக்கும் போட்ட மெல்லிய பாலத்தால், முகத்தின் தாமரைச் சிவப்பு ஒருபுறம் பெரிதாகவும் இன்னொருபுறம் சிறிதாகவும் பிரிந்து கிடந்ததே ஒரு தனி அழகாகத் திகழ்ந்ததை அவன் கண்கள் கண்டன. சற்று உணர்ச்சி திரும்பிய அந்தச் சமயத்திலும்



அவள் கண்களில் மண்டிக்கிடந்த முக்கால் பிரமை அவற்றுக்குப் பெரும் அழகு அளித்ததையும், பிரமையில் மயங்கிக் கிடந்த கண்களின் கருமணிகள், தாமரைத் தேனையுண்டு மயங்கும் வண்டுகளையொத்துத் திண்டாடியதையும் கண்ட இந்திரபானு, 'அந்தக் கண்களுக்கு உவமை அந்தக் கண்களேதான்' என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்டான். தூணிலிருந்த சிறபமும் முத்துக்குமரியின் உயரமே இருந்ததால் அவள் மார்பும் இடையும் அந்தச் சிற்பத்தின் மார்புக்கும் இடைக்கும் அக்கம் பக்கத்திலிருந்ததன் விளைவாக உயிரற்ற சிற்பம் உயிருள்ள சிற்பத்துடன் போட்டி போடுகின்ற மாதிரியே இருந்ததைக் கவனித்த இந்திரபானு, 'இதில் போட்டிக்கு இடம் ஏது? முத்துக்குமரி இதன் பக்கத்தில் நிற்பாளென்று தெரிந்திருந்தால் சிற்பி ஒரு நாளும் இதை இந்தத் தூணில் செதுக்கியிருக்க மாட்டான்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். எது சிற்பம், எது நிஜம்? என்று பாகுபாடு செய்ய முடியாத நிலையில், அந்தப் பாண்டிய குமாரி விட்ட பெருமூச்சொன்று அவள் மார்பைச் சற்று அசைத்ததைக் கண்டதும் 'பாகுபாடு செய்ய இந்த ஒரு வழியாவது இருக்கிறதே!' என்று மகிழ்ந்து கொண்டான். இப்படி அணு அணுவாகப் பாண்டியன் பைங்கிளியை ஆராய்வதிலிருந்த இந்திரபானுவின் மனோநிலைக்கும், முத்துக்குமரியின் மனோநிலைக்கும் வேறுபாடு பலமாயிருந்தது.

அவள் இதயம் எண்ணச் சுழலில், சந்தேக அலைகளில், பெருங் குழப்பத்தில் அகப்பட்டுத் திண்டாடிக் கொண்டிருந்ததால் அவள் பெரும் அவஸ்தையிலிருந்தாள். 'இந்திரபானு' என்று தன்னை அறிவித்தவனை இந்திர பானுவென்று ஒப்புக்கொள்ள அவள் இதயம் ஓரளவு முன் வந்தாலும், கண்கள் ஒப்புக் கொள்ள அடியோடு மறுத்தன. அவன், 'இந்திரபானு,' என்று கூறிய பிறகு அவன் முகத்தை மீண்டும் மீண்டும் ஆராய்ந்தவளின் கண்களில், அச்சமே திரும்பத் திரும்ப நிலவியது. இந்திரபானுவின் குழந்தை முகம், விளையாட்டு வதனம், அத்தனை பயங்கரமாக

எந்தக் காரணத்தை முன்னிட்டும் மாற முடியாதென்று அவள் நினைத்தாள். எதிரேயிருந்த வாலிபன் நுதலில் பட்டையாய்த் தீய்த்திருந்த கரிய பெரும் வடுவும், இரு கன்னங்களையும் தீய்த்துவிட்ட தீப்புண் வடுக்களும் சமீபகாலத்தில் ஏற்பட்டிருக்க முடியாதென்பதை அவள் கண்ணாராய்ச்சி தெளிவு படுத்தியது. தவிர, உதடுகளுக்குக் குறுக்கே பாய்ந்த பட்டைக் கறுப்பு எந்தக் காயத்தாலும் ஏற்பட்டதல்லவென்பதையும் இயற்கையில் ஏற்பட்ட மச்சமே என்பதையும் முத்துக்குமரி ஊகித்துக் கொண்டாள். அவன் முகவாய்க் கட்டை, கழுத்து ஆகிய இடங்களில் திட்டுத்திட்டாகக் காணப்பட்ட செவ்விய தடிப்புகளும் இயற்கையின் கைவண்ணமே தவிர, வேறில்லையென்பதை அவள் உணர்ந்தாள். கண்கள் இத்தனை நிச்சயமாக விஷயத்தை எடுத்துரைத்தும் இதயம் மட்டும் மீண்டும் மீண்டும் சந்தேகத்தைக் கிளப்பியது. அதன் காரணத்தை அவளால் ஊகிக்க இயலவில்லை.

இந்திரபானுவுக்கும் தனக்கும் மட்டுமே தெரிந்த பல தகவல்களை அந்த வாலிபன் எப்படி உணர்ந்திருக்க முடியும் என்று தனக்குள் கேட்டுக்கொண்டாள் பாண்டியன் மகள். "அருவிக்கரையில் நான் உட்கார்ந்ததும், நீரில் கால்களை நீட்டியதும், சேலையை எடுத்து மடித்து மடியில் போட்டுக் கொண்டதும் என் இந்திரபானுவைத் தவிர வேறு யாருக்கும் தெரியாதே! இந்த வாலிபன் எப்படி அந்த இன்ப நிகழ்ச்சியை அறிய முடியும்?' என்ற ஒரு கேள்வியை இதயத்தில் எழுப்பிக் கொண்டாள் முத்துக்குமரி. அந்த இன்ப நிகழ்ச்சி, அதைப் பற்றிய நினைப்பு அவள் கண்களில் இன்ப ரேகையைப் படர விட்டது. அதன் வசமான அவளே மீண்டும் எதிரேயிருந்த வாலிபனை உற்று நோக்கினாள். அவன் மறுபடி இந்திரபானுவை போலத்தான் இருந்தான். ஆனால் எக்காரணத்தைக் கொண்டும் இந்திரபானுவின் முகம் இப்படி அடியோடு மாறக் காரணமில்லையென்று நினைத்த முத்துக்குமரி இவன் இந்திரபானுவல்ல என்ற முடிவுக்கே வந்தாள்.



'இந்திரபானு இல்லாவிட்டால் இவனுக்கு எப்படி எனது அந்தரங்கம் தெரியும்? என்னைக் கள்வர்கள் கடத்தி வந்ததும், சேரமன்னன் அபகரித்து வந்ததும், மலைப் பாதையில் நான் சண்டையிட்டதும் எப்படித் தெரிய வந்தது? நேரில் பார்த்தது போல் விவரங்களைச் சொல்லுகிறானே?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டாள். ஆனால் அது பிரமாதமில்லையென்பதும் அவளுக்குத் தெரிந்தது. தான் சண்டையிட்ட விவரங்கள், அபகரிக்கப்பட்ட முறை இவை சேரநாட்டு வீரர்களிடை பிரசித்தமாகி விட்டதால், இவனுக்கும் அது தெரிவதில் கஷ்டமில்லையென்பதைப் புரிந்துகொண்டாள். 'ஒருவேளை தன் இதயத்தை அறிய சேரமன்னனே இவனிடம் விவரங்களைச சொல்லியிருப்பானோ' என்ற சந்தேகமும் ஏற்பட்டது அவளுக்கு.

முத்துக்குமரியின் தாமரை விழிகளில் படர்ந்த சந்தேகச் சாயையைக் கவனித்த இந்திரபானுவின் இதழ் களில் இளநகை விரிந்தது. உதடுகள் இருந்த கோரத்தின் காரணமாக அந்த இளநகை பார்ப்பதற்குப் பயங்கரமாகவே இருந்ததால் முத்துக்குமரியின் முத்து முகத்தில் அருவருப்பே மண்டியது. அந்த அருவருப்புடன் சொன்னாள் அவள், "நீ இந்திரபானு மாதிரியிருக்கிறாய். ஆனால் இந்திரபானு இல்லை..." என்று.

இந்திரபானு ஒரு விநாடி அவளைக் கூர்ந்து நோக்கினான். பிறகு கேட்டான், "எப்படி அத்தனை நிச்சயமாகச் சொல்கிறாய்?" என்று.

"உன் முகத்தில் இருக்கும் வடுக்கள் சமீப காலத்தில் ஏற்பட்டவையல்ல," என்ற முத்துக்குமரி மேலும் ஏதோ சொல்ல முற்பட்டுச் சட்டென்று நிறுத்திக் கொண்டாள்.

"ஏன் நிறுத்திவிட்டாய்? சொல்ல வேண்டியதைச் சொல்," என்றான் அந்த வாலிபன்.

"நான் களவாடப்பட்ட கதையை நீ யாரிடமிருந் தாவது கேட்டிருக்கலாம்," என்றாள் அவள்.

"அது சாத்தியம்," என்று ஒப்புக் கொண்டான் அந்த வாலிபன்.

"முத்தையும் கண்டு எடுத்திருக்கலாம்," என்றாள் முத்துக்குமரி.

இத்தனை திட்டமாகச் சொல்லிக்கொண்டு வந்த அவள் இந்திரபானுவின் அடுத்த கேள்வியைக் கேட்டதும் அதிர்ச்சியடைந்தாள். "எந்த முத்து?" என்று கேட்டான் இந்திரபானு.

"எந்த முத்தா?" அவள் கேள்வியில் அதிர்ச்சி பூர்ண மாயிருந்தது.

"ஆம். எந்த முத்து?" என்று மீண்டும் கேள்வியைத் திருப்பினான் வாலிபன்.

"நீ கேட்பது விளங்கவில்லை," என்றாள் அவள்.

"விளங்கும்படி சொல்கிறேன் கேள். அருவிக் கரையில் கள்ளர்களிடம் திமிறியபோது எறிந்துவிட்டு வந்தாயே, அந்த முத்தா? அல்லது மலைப்பாதையில் இரண்டாம் முறை போரிட்ட பின்னர், சேர வீரர்கள் புரவிகளில் உன்னை ஏற்றிய பின்னர், எறிந்தாயே அந்த முத்தா?" என்று கேட்ட அந்த வாலிபன் மேலும் சொன்னான்: "வீரபாண்டியன் காணட்டுமென்று அருவிக்கரையில் ஒரு முத்தை எறிந்தாய். ஒருவேளை அது வீரபாண்டியன் கண்களில் படாவிட்டால் இரண்டாவது முத்தாவது தெரியட்டும் என்று நீ கோடரி வீசியபின் புரவியில் ஏற்றப் பட்டதும் இரண்டாவது முத்தை எறிந்தாய். ஒன்றை வீரபாண்டியன் காண விட்டு வந்தேன். இன்னொன்றை நான் எடுத்துக்கொண்டேன், அடையாளத்துக்கு இருக்கட்டு மென்று."

இதைக் கேட்ட பின்பும் முத்துக்குமரிக்கு நம்பிக்கை வராததால் அவள் சொன்னாள், "நீ நேரில் பார்த்தது போல் சொல்லுகிறாயே?"என்று.

"நேரில்தான் பார்த்தேன்," என்ற இந்திரபானு விவரித்தான். "காட்டுக் கோட்டையிலிருந்து கொட்டுந் தளத்துக்கு மன்னரால் திடீரென்று அனுப்பப்பட்ட நான், அங்கிருந்து மறுநாளிரவு வந்து கொண்டிருந்தபோது, கோட்டையின் ஒரு பகுதியில் விளக்கொன்று இரண்டு மூன்று முறை அசைந்ததைக் கண்டேன். ஒற்றர்களின் அந்தப் பழைய சைகையைக் கண்டதும் காட்டுக் கோட்டைக்குள் யாரோ ஒற்றனிருக்கிறான் என்பதை உணர்ந்து வெகுவேகமாகக் கோட்டைக்குள் வந்து விளக்கசைந்த அருவிக்கரையோரம் சென்றேன். அருவிக் கரையின் கூழாங்கற்கள் பெரிதும் புரண்டுகிடந்தன. பழைய முத்தொன்றும் கீழே கிடந்தது. கோட்டைச் சுவர்மீது தாவி ஏறி வெளிப்புறம் பார்த்தேன். தூரத்தில் இருவர் ஏதோ ஒன்றைத் தூக்கிச் செல்வது தெரிந்தது. ஆகவே நானும் மதிலைத் தாவிக் குதித்துத் தொடர்ந்தேன். மலைப் பாதைக்கு வந்ததும் அந்தச் சுமையைத் தூக்கி வந்த இருவர் கீழே இறங்கினார்கள், நீ சீறி எழுந்தாய். சரேலென்று இடுப்பிலிருந்த சிறு கோடரியை எடுத்து நீ வீசியதைக் கண்டேன். பிறகு காட்டில் காத்திருந்த சேர நாட்டுக் காவலரால் சூழப்பட்டாய்,'" என்ற வாலிபன் "மேலும் காட்சியை விவரிக்க வேண்டுமா?" என்று வினவினான்.

"வேண்டியதில்லை. நடந்தது நடந்தபடி சொன்னாய் இருப்பினும் இவையனைத்தையும் நீ வேறு யாரிடமாவது கேட்டு அறிந்திருக்கலாம். அல்லது நீயே பார்த்திருந்தாலும் என்னைச் சிறை செய்ய வந்த சேரர் கூட்டத்தவனாய் இருக்கலாம்" என்றாள் முத்துக்குமரி, அப்பொழுதும் நம்பிக்கை வராமல்.

வாலிபன் முகத்தில் துக்கக் குறி நிரம்பியது. "இந்திர பானுவை நன்றாகத் தெரியுமா உனக்கு?" என்று கேட்டான் அவன்.

"இந்தக் கேள்விக்கு அர்த்தமில்லை," என்றாள் முத்துக்குமரி மெல்ல முறுவலித்து.

முறுவலின் காரணம் அந்த வாலிபனுக்குப் புரிந்தது. ஆகவே கேட்டான், "நான் இந்திரபானுவாயிருந்து என் முகப் தீப்புண்களால் விகாரமடைந்திருந்தால் என்ன செய்வாய்?" என்று கேட்டான் அவன்.

"தீப்புண்களை நான் கண்டிருக்கிறேன்," என்றாள் அவள் பதிலுக்கு.

"அப்படியானால் இவை தீப்புண்களில்லையா?"

"இருந்தாலும் சமீபத்தில் ஏற்பட்டவையல்ல."

"இந்திரபானுவென்று நிரூபிக்க நான் வேறு என்ன செய்ய வேண்டும்?"

"ஏது செய்தும் பிரயோசனமில்லை."

"நிச்சயமாகவா?"

"ஆம்."

"இதைப் பார்," என்று மீண்டும் ஒரு பொருளைக் கச்சையிலிருந்து எடுத்துக்கொடுத்தான் அந்த வாலிபன்.

அதைக் கையிலே வாங்கிய முத்துக்குமரி பெரிதும் பிரமித்தாள். அது சிறிய பட்டை ஓலை. அந்த ஓலையில், பாண்டிய நாட்டு ராஜமுத்திரை இருந்தது. அந்த முத்திரைக்குக் குறுக்கே பல வரிகள் பல இருந்தன. அவற்றைப் பக்கத்திலிருந்த விளக்கொளியில் படித்தாள். படித்த அவள் கண்களில் வியப்பும் குழப்பமும் மீண்டும் மண்டிக் கொண்டன. "இதை வைத்திருப்பவன் இந்திர பானு. முகத்தைக் கண்டு ஏமாறாதே!" என்றிருந்த வாசகத்தின் கீழே பாண்டிய மன்னன் சுந்தர பாண்டியன் கையொப்பமிருந்தது.

அது அவள் தந்தையின் கையொப்பம்தான். சந்தேக மில்லை. இருப்பினும் எதிரேயிருப்பவன் இந்திரபானு என்று அவளால் நம்பமுடியவில்லை. அவன் முகத்தையும் பார்த்து ஓலையையும் பார்த்தாள் அவள்.

"இன்னும் நம்பிக்கை வரவில்லையா?" என்று வினவினான் அவன்.

"இல்லை," என்றாள் முத்துக்குமரி.

"இன்னொரு வழி இருக்கிறது உனக்கு நம்பிக்கை யூட்ட" என்றான் வாலிபன்.

"என்ன வழி?" என்று கேட்டாள் அவள்.



"அவசியமானாலொழிய அந்த வழியைக் கடைப் பிடிக்க நான் இஷ்டப்படவில்லை," என்றான் அவன்.

"ஏதாவதொரு வழியில் நிரூபித்தாலொழிய நான் நம்பமுடியாது," என்றாள் முத்துக்குமரி திட்டமாக.

அடுத்த நிகழ்ச்சி அவளை நிலைகுலையவைத்தது. விளக்கு திடீரென்று ஊதப்பட்டது. அந்தகாரம் அறையை வளைத்துக்கொண்ட வேகத்தில் அந்த வாலிபன் கைகளும் அவளை வளைத்துக் கொண்டன. "குமரி!" என்ற சொல் அவளுக் காதில் ஒலித்தது. அது இந்திரபானுவின் குரல் தான். சந்தேகமில்லை. என்றோ கேட்ட குரல்! அதன் மாதுரியம் மீண்டும் காதில் மதுரமெனப் பாய்ந்தது.

அவன் கைகளுக்குள் சிக்கிய சமயத்தில், உடலளித்த இன்ப உணர்ச்சிகளில், அவன் குரல் ஒலித்த முறையில் அவள் சந்தேகங்கள் பறந்தன. கண்ணின் ஒளி காட்டாத தைக் குரலின் ஒலி காட்டுமென்பதை அவள் புரிந்து கொண்டாள். அதே ஒலியை அத்தனை நேரம் அவள் புரிந்துகொள்ள முடியாததன் காரணம் விளங்கவில்லை அவளுக்கு. யோசித்தாள் அவள். அதுவரை அவன் சொற்கள் ஒலித்தது விவாதத்தின் ஒலி. கடைசியில் காதுக் கருகில் ஒலித்தது இதயத்தின் ஒலி என்பதையும், அந்த ஒலிக்குத் தன் இதயமும் எதிரொலி செய்ததையும் அவள் உணர்ந்தாள். அந்த உணர்வால் அப்படியே அவன் கைகள் அணைத்தபடி நிற்கவில்லை. உதடுகளும், "குமரி," என்று அழைத்ததுடன் நிற்கவில்லை.

## அத்தியாயம் 8
# கண்கள் புரிந்துவிட்ட பாவம்

சிறையிலிருந்த அறையின் காரிருளில், புதுக் காவலன் கைகளில் சிறைபுகுந்த அந்தச் சில விநாடிகளில் பாண்டிய குமாரியின் இதயம் உணச்சிப் பெருக்கால் பலமாக எழுந்து 'குமரி' என்ற அவன் குரலொலிக்கு எதிரொலி செய்ததன்றி, சிறை பிடித்த கரங்களையும் அவள் பூவுடல் உதறித் தள்ளாமல் வரவேற்கவே செய்தது. உணர்ச்சிகள் அனைத்தும் தனது எண்ணத் தளைகளைக் களைந்து கொண்டு அந்த விகார முக வாலிபனுடைய உணர்ச்சிகளுடன் உறவாடத் தொடங்கிவிட்டதையும். தன் உடலும் தன் வசமின்றி அவனிஷ்டத்துக்கு வளைய முற்பட்டுவிட்டதையும் கண்ட முத்துக்குமரி தன்னைத் தானே வெறுத்துக் கொண்டாள். ஆனால் அந்த வெறுப்பு மேலுக்கு ஏற்பட்ட வெறுப்பே என்பதையும் புரிந்து கொண்டாள். அந்த வாலிபன் தனக்குப் பின்னாலிருந் தாலும் அவன் நெருக்கம் தனக்கு ஏதோ வேதனையைத் தந்ததையும் லேசாகவே தனது முதுகில் அடித்துக் கொண்டே அவன் இதய ஒலி முதுகு வழியாக உட் புகுந்து தன் இதயத்துடன் உறவாடுவதையும், அந்த உறவாட்டத் தின் காரணமாகவே தனது இதயம் பெரிதாக ஒலி செய்ததையும் உணர்ந்த அவள் ஏதும் செய்யச் சக்தியற்று நிலைகுலைந்து நின்றாள். தன்னைச் சிறை செய்த கைகளும், மலைநாடான சேரநாட்டின் கடுங்காற்றைப் போலவே கடுமையையும் இன்பத்தையும் இணைத்தே பரிமாறியதையும் கண்ட அவள் நிலைகுலைந்து மதிமயங்கி நின்றாள். இத்தனைக்கும் தன் உள்ளமும் உடலும் எப்படி இடம் கொடுக்கின்றன என்பதைக் கேட்டுக் கொண்டு விடை புரியாமல் தவித்தாள். அவள் உடல் வளைந்தது, இழைந்தது. குழைந்தது.

இது இந்திரபானுவைத் தவிர வேறு யாராகவும் இருக்க முடியாதென்பதை முடிவாக உணர்ந்து கொண்ட முத்துக்குமரி பெருமூச்சு விட்டாள்.

இன்பமாக மென்மையாக வந்த அந்தப் பெருமூச்சு அதுவரை அவள் மனத்திலிருந்த சந்தேகக் கயிறுகளை அறுத்தெறிந்தது. 'சந்தேகமில்லை. இவர் இந்திரபானுதான்' என்று தனக்குள் இருமுறை சொல்லிக் கொண்டது தன்னை ஏமாற்றிக்கொள்ளவா, சாந்தப்படுத்திக்கொள்ளவா என்பது அவளுக்கே புரியவில்லை. எந்த மங்கைக்கும் தனக்குச் சொந்தமான ஆடவன் கர ஸ்பரிசம் தெரிய இயற்கை அளித்திருக்கும் விவரம் புரியாத ஒரு தனி விவேக உணர்ச்சி. அவன் இந்திரபானுவென்பதை அவளுக்குச் சந்தேகமற உணர்த்தியது. ஆகவே "இப்பொழுது ஒப்புக் கொள்கிறாயா குமரி?" என்று அவள் கேட்ட கேள்விக்கு "உம்" என்று பதில் ஒலி கிளப்பினாள் பாண்டியன் மகள்.

இந்திரபானு தன் கைகளை நிலைக்க வைத்து அலைந்து கொண்டிருந்த தனது உணர்ச்சிகளையும் ஒரு கட்டுக்குள் கொண்டு வந்தான். தானும் முத்துக்குமரியும் இருக்கும் அபாய நிலை அவனுக்குத் தெள்ளெனப் புரிந்ததால் அவன் மெள்ளச் சொன்னான்! "குமரி! இந்த நிலையை நான் தவிர்த்திருப்பேன், நீ மட்டும் என்னை இந்திரபானுவென்று ஒப்புக் கொண்டிருந்தால். இந்த நிலையை எய்தாமலே உனக்கு நம்பிக்கையூட்ட என்னாலான ருசுக்களைக் காட்டினேன். முத்தை காட்டினேன். முத்தைக் கண்டெடுத்த இடத்தைச் சுட்டிக் காட்டினேன். அருவிக் கரையில் நீ அமர்ந்திருந்த நிலையை யும் சொன்னேன். நீ நம்பவில்லை. முத்தை கண்டெடுத்த இடத்தைப் பற்றி இருமுறை குறிப்பிட்டேன். இரண்டாம் முறை நீ வியப்பது போல் பாசாங்கு செய்து மீண்டும் விவரம் கேட்டாய். அப்பொழுதும் திட்டவட்டமாய்த் தெரிவித்தேன், முத்து கிடைத்த இடம், சூழ்நிலை

இரண்டையும். அப்படியும் நீ நம்பவில்லை. புறச்சான்றுகள் பயனற்றுப் போகவே கடைசியாக அகச்சான்றுகளுக்கு வந்தேன்..." இப்படிச் சொல்லி ஒரு வினாடி நிதானித்து விட்டு, "இப்பொழுது புரிகிறதா?" என்றும் கேட்டான்.

அந்த இருட்டில் மெள்ளப் புன்முறுவல் செய்தாள் முத்துக்குமரி. அவளுக்கு நன்றாகப் புரிந்துவிட்டது விஷயம். உடல் பின்புறத்தில் பட்டமாத்திரத்திலேயே அவன் இன்னாரென்று புரிந்துகொண்டாள் அவள். 'எனக்கு தன்னைப் புரியவைக்க எத்தனை சிரமம் எடுத்துக் கொண் டிருக்கிறார் இவர்?' என்று நினைத்துப் பார்த்து அதன் விளைவாக இளநகையும் கொண்டாள். அதன் ஊடே சொன்னாள், "புரிகிறது. புரியாமல் எப்படியிருக்க முடியும்?" என்று.

"புரியாமல் எப்படியிருக்க முடியுமா?" என்று வியப் புடன் வினவினான் இந்திரபானு பின்புறத்திலிருந்து.

"ஆம்," என்று அவள் மிக மிருதுவாகச் சொன்னாள்.

"நீ சொல்வது விளங்கவில்லை எனக்கு," என்றான் இந்திரபானு.

"விளங்காததற்கு என்ன இருக்கிறது இதில்? எனக்குப் புரியவில்லை முதலில், பிறகு நீங்கள் புரியவைத்து விட்டீர்கள். அதற்குப் புது வழிகளைக் கற்றுக் கொண் டிருக்கிறீர்கள்," என்று கூறி லேசாக நகைக்கவும் செய்தாள். பின்புறமாக அவன்மீது நன்றாகச் சாயவும் செய்தாள்.

மந்த மாருதத்தைப்போல் மிக மென்மையாக இருளில் விரிந்த அந்த நகைப்பொலி அவன்செவிகளில் மிக சுகமாகப் பாய்ந்தாலும் அவள் சொன்ன புது வழி ஏதென்று தெரியாததால், "புது வழிகளா?" என்று வினவினான்.

"ஆம். புது வழிகள்தான்," என்றாள் மீண்டும் அவன் கைச்சிறையில் அசைந்து.

"என்ன புது வழிகள்?"

"அடையாளங்களைக் காட்டுவது முதலியன பழைய வழிகள். அவற்றுக்குப் புராண இலக்கியச் சான்றுகள் உண்டு. ஆனால் அடையாளங்களை உணர்த்துவதென்பது புது முறை. அதன் பூர்வாங்கமும் புதுமுறை."



"அடையாளங்களை உணர்த்துவதா?"

"ஆமாம், கண்ணுக்கெதிரே அடையாளங்களைக் காட்டுவதுண்டு. வாயால் செய்தி சொல்வதுண்டு. இவை பழைய முறைகள். ஆனால் விளக்கை ஊதுவது, கண்ணை மறைப்பது உடலை வளைப்பது, குரலை மெல்ல ஒலிப்பது, உணர்ச்சிகளைத் தூண்டுவது, இவை புது வழிகள். நான் மட்டும் பாண்டிய மன்னனாயிருந்தால்..." வார்த்தைகளை முடிக்காமல் இழுத்தாள் அந்த இன்பத்தரசி.

"என்ன செய்வாயாம்?" என்று குறுக்கே புகுந்தான் இந்திரபானு.

"இந்த மாதிரி அடையாளம் உணர்த்தும் காளை களைத் தூதர்களாக நியமிக்கமாட்டேன். அதுவும் பெண்களைக் காக்கவோ, தூது செல்லவோ அனுமதிக்க மாட்டேன்," என்று முத்துக்குமரி நகைத்தாள்.

அவன் ஒரு கையை எடுத்து அவள் வாயைப் பொத்தி னான். அவள் திமிறி, "வாயை ஏன் பொத்துகிறீர்கள்," என்று கேட்டாள்.

"பெண்கள் வாயைப் பொத்த வேண்டியது அவசியம்."

"ஏன்?"

"அவர்கள் வாய் சும்மா இருக்காது."

"என்ன செய்யும்?"

"நகைக்கும்,"

"நகைத்தாலென்ன?"

"போர் நடக்கும், பிராணன் போய்விடும்."

"விசித்திரமாயிருக்கிறது."

"விசித்திரமேதுமில்லை இதில். திரௌபதி நகைத்துத் தான் பாரதம் நடந்தது."

"நன்றாகப் புராணம் படிக்கிறீர்கள்," என்ற முத்துக் குமரியின் சொற்களில் பொய்க் கோபம் தெரிந்தது.

"என் புராணத்திற்கு என்ன கேடு?" என்று வினவினான் இந்திரபானு.

"நான் திரௌபதியா?" என்று வினவினாள் முத்துக் குமரி.

"இருந்தாலென்ன?"

"அவளுக்கு..."

"ஓகோ..."

"தவிர, நீங்கள் என்ன தருமனா, பீமனா..."

"இல்லை, இல்லை. அர்ச்சுனனாக வைத்துக்கொள்."

"ஏனாம்?"

"அவனுக்கும் இந்திரனுக்கும்தான் சம்பந்தம். நான் இந்திரபானுவல்லவா?"

முத்துக்குமரி வாய்விட்டு நகைத்தாள். "உஷ்! சிரிக் காதே, சந்திரன் கெட்டதும் பெண்ணாலே இந்திரன் கெட்டதும் பெண்ணாலே என்று பழமொழி இருக்கிறது."

"நீங்கள்..."

"இந்திரபானுவல்லவா? உண்மை தெரிந்தால் சேரன் தலையைச் சீவிவிடுவான்."

இதற்குமேல் பாண்டியன் மகள் பேசவும் இல்லை, நகைக்கவும் இல்லை. சற்று நேரம் மௌனம் சாதித்தாள். கடைசியில் கேட்டாள், "உங்கள் முகத்தில் இந்த விகார வடுக்கள் எப்படி ஏற்பட்டன?" என்று.

"அதை மட்டும் கேட்காதே," என்றான் இந்திரபானு.

"ஏன்?" என்ற முத்துக்குமரியின் குரலில் வருத்தம் மிதமிஞ்சி ஒலித்தது.

"இங்கு சுவர்களுக்கும் செவிகளுண்டு. தவிர, இந்த விகாரம் என் உயிரைக் காப்பாற்றுகிறது," என்று சுட்டிக் காட்டினான் இந்திரபானு.

அவன் குரலில் இருந்த உறுதியைக் கவனித்தாள் முத்துக்குமரி. எப்படியும் பதில் சொல்லமாட்டானென் பதையும் புரிந்து கொண்டதால் பெருமூச்செறிந்து விட்டுச்



சொன்னாள் அவள், "எனக்காக முகத்தைப் புண்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள்," என்று.

அவள் குரலிலிருந்த சோகத்தைக் கவனித்தான் இந்திரபானு, அவள் தன்னைக் குறித்து வருந்துகிறா ளென்பதே அவனுக்குப் பெருமகிழ்ச்சியாயிருந்தது. ஆகவே சொன்னான், "பாண்டியன் மகளே! முகம் புண்பட்டா லென்ன? உள்ளம்தான் புண்படக்கூடாது. அதற்கு அமுத மளிக்க உன் அன்பிருக்கிறது. தவிர அரசகாரியம், நாட்டுப் பணி இவற்றில், தியாகம் அவசியம். நாட்டுப் பணிக்கு எத்தனை பேர் உயிரை அர்ப்பணித்திருக்கிறார்கள். நான் கேவலம் காலத்தால் அழியக்கூடிய அழகைத்தானே கொடுத்திருக்கிறேன்," என்று.

இதைச் சொன்ன அவன் உறுதி, மகிழ்ச்சி இரண்டும் மண்டிக் கிடந்தன. அந்த மகிழ்ச்சியில் உற்சாகத்தில் அவன் கைகள் அவளை விடுவித்தன. அவளிடமிருந்து பிரிந்து நின்ற நிலையில் சொன்னான்; "பாண்டியன் மகளே! எந்தக் காரணத்தை முன்னிட்டும் என்னை நீ கண்டு கொண்டதை வெளிக்குக் காட்டாதே. என்னைக் காணும் போதெல்லாம் முகத்தில் அருவருப்பைக் காட்டு. சேர மன்னன் வந்தால் என்னைக் காவலிலிருந்து விலக்கும்படி விண்ணப்பித்துக் கொள். நீ கேட்கக் கேட்க அவன் மறுப்பான். நீ என்னிடம் காட்டும் வெறுப்பு அவனுக்கு என்னிடம் விருப்பை அளிக்கும். உன் முகத்தில் தோன்றும் சீற்றம் அவன் முகத்தை என்மீது கனிய வைக்கும். இன்றிலிருந்து நீயும் நானும் ஒருவரையொருவர் வெறுக்கிறோம்" என்று.

"எப்பொழுது?" என்று கேட்டாள் முத்துக்குமரி.

"எப்பொழுது என்றால்?" புரியாமல் கேட்டான் இந்திரபானு.

"நாம் பரஸ்பரம் வெறுப்பது பகலிலா, இரவிலா?" என்று கேட்டாள் முத்துக்குமரி.

இந்திரபானுவின் இதழ்களில் இளநகை பூத்தது. அவன் மேற்கொண்டு ஏதும் பேசாமல் அறைக்கதவைத் திறந்து கொண்டு வெளியே சென்று எட்ட இருந்த பந்த

வெளிச்சத்தில் சுற்றும் முற்றும் பார்த்தான். யாரும் அந்தப் பக்கம் வரவில்லையென்பதைப் புரிந்துகொண்டதோடு அடுத்த கட்டுக் காவலன்கூடச் சாதாரணமாகவே காவல் புரிந்து கொண்டிருந்ததையும் கண்டான். பிறகு பந்தத்தை எடுத்துக்கொண்டு அறைக்குள் சென்று உள் விளக்கைக் கொளுத்திவிட்டு மறுபடியும் வந்து வெளிப்படியில் காவலுக்கு அமர்ந்துகொண்டுஉள்ளூற நிகழ்ச்சிகளை மனத்தில் திரும்பத் திரும்ப எண்ணி எண்ணி அந்த இரவுக் காவலைக் கழித்தான். காலையில் காவல் முடிந்தவுடன் திரும்பக் கூத்தனிருந்த மலைக்குடிசைக்குச் சென்றான். அங்கு விசாரித்ததில் மேற்கொண்டு சேரவீரர்கள் வரவில்லை யென்பதையும், எந்த விசாரணையோ சோதனையோ இல்லை யென்பதையும் தான் கூறிச் சென்றபடி கூத்தனின் ரத்தக் கறை படிந்த உடைகள் வெளியில் புதைக்கப்பட்டு விட்டதையும் உணர்ந்தான். அப்படிச் சோதனை விசாரணை ஏதும் இல்லாதது அவனுக்குச் சிறிது சந்தேகத்தை அளித்தாலும், அவன் அதை லட்சியம் செய்யாது தன் அலுவலைக் கவனிக்கலானான். தப்பிய இரவில் அலங்கோலப்படுத்தப் பட்ட குடிசையின் உட்புறத்தை மீண்டும் சீர்படுத்தினான். கூடை, பாண்டங்கள் அனைத்தையும் ஒரு மூலையில் அடுக்கினான். பிறகு சற்று எட்ட இருந்த காட்டுக்குள் சென்று மறைந்தான். பகலவன் உச்சியை எட்டிய சமயத்தில் காட்டிலிருந்து வேட்டையாடிய கடம்பம் ஒன்றைத் தோளில் போட்டுக்கொண்டு திரும்பி அதைக் குடிசை வாசலில் போட்டுவிட்டு நீராடி உள்ளே சென்று பானையில் அண்ணி வைத்துவிட்டுப்போன பழஞ் சோற்றை எடுத்து உணவை முடித்துக்கொண்ட சமயத்தில் அரண்மனைக் காவலரிருவர் வந்து அவனைக் கிளம்பும்படி உத்தரவிட்டனர்.

வந்த இரு வீரர்களையும் நோக்கிய இந்திரபானு, "எங்கு செல்ல?" என்று வினவினான்.

"அரண்மனைக்கு," என்றான் ஒரு வீரன்.



"என் காவல் கடற்கரை மாளிகையில். அதுவும் முடிந்துவிட்டது," என்றான் இந்திரபானு கோபத்துடன்.

"அது தெரியும் எங்களுக்கு. அரசர் அழைத்து வரச் சொன்னார். கிளம்பு," என்றான் வீரர்களில் ஒருவன் கடுமையாக.

இந்திரபானுவுக்கு ஏதும் விளங்கவில்லை. 'திடீரென்று மன்னன் எதற்காக அழைக்கிறான்?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டான். ஒருவேளை முந்திய இரவு நிகழ்ச்சிகளை அடுத்த கட்டின் காவலன் வேவு பார்த்திருப்பானோ என்ற சந்தேகமும் அவனுக்கு ஏற்பட்டாலும் அதற்கு நியாயமில்லை என்று சந்தேகத்தை ஒதுக்கினான். ஆகவே ஏதும் விளங்காமலே வந்த வீரர்களுடன் அரண்மனை சென்றான். அரண்மனையில் அவன் சிறிது நேரங்கூடக் காத்திருக்க அவசியமில்லாது போயிற்று. உடனடியாக மன்னன் அவனைச் சந்தித்தான்.

மன்னனுக்கு முன்பு தலை தாழ்த்திய இந்திரபானு, "மன்னர் திடீரென அழைத்த காரணம் தெரியவில்லை. எந்தப் பணியானாலும் நிறைவேற்றச் சித்தமாயிருக்கிறேன்," என்றான்.

"பணியிடத்தான் உன்னை அழைக்க வேண்டுமா?" என்று வினவிய வீரரவி உதயமார்த்தாண்டவர்மன் இதழ்கள் இளநகை கூட்டின.

"வேறு எதற்கு அழைத்தீர்கள் மன்னவா?" என்று வினவினான் இந்திரபானு.

"ஒரு முக்கிய காரணத்தை முன்னிட்டு," என்றான் வீரரவி.

"கட்டளை இடுங்கள் மன்னவா?" என்றான் இந்திர பானு.

வீரரவி அதற்கு நேரடியாகப் பதில் சொல்லவில்லை. "நீ இனி கூத்தன் குடிசையில் இருக்க வேண்டியதில்லை. இங்கு அரண்மனைக்கே வந்துவிடு," என்றான்.

"வந்து?"

"அரண்மனைக் காவலர் விடுதியொன்றில் தங்கியிரு."

"எதற்கு மன்னவா?"

"மணமாகாத காவலர் இருப்பதற்காகத்தானே காவலர் இருப்பிடங்களைப் பழைய நாளில் கட்டியிருக்கிறார்கள்."

"நன்றி மன்னவா," என்றான் இந்திபானு.

அத்துடன் மன்னன் சந்திப்பு முடிந்து விட்டது என்று நினைத்துத் திரும்ப முற்பட்ட இந்திரபானுவை, "சற்று இரு!" என்ற மன்னன் குரல் தடுத்தது.

இந்திரபானு மன்னனை ஏறெடுத்து நோக்கினான். 'ஏன்?' என்ற கேள்வி அவன் பார்வையிலேயே தொக்கி நின்றது.

"உனக்கு அளிக்கப்பட்டிருக்கும் அறை பெரிது. அதில் இருவர் தங்கலாம்," என்றான் மன்னவன்.

மன்னவன் உள்ளத்தில் தான் அறியாத ஏதோ திட்டம் உருவாவதைப் புரிந்துகொண்ட இந்திரபானு, "சரி மன்னவா," என்றான் உணர்ச்சிகளை வெளிக்குக் காட்டாமல்.

"இவரையும் அழைத்துப்போ," என்ற மன்னவன் தனக்குப் பின்னிருந்த திரையை நோக்கி கையை ஆட்டினான். அதிலிருந்து வெளிவந்தான் ஒரு மனிதன். அவனைக் கண்டதும் எதற்கும் ஆடாத இந்திரபானுவின் இதயமும் ஆடியது. அஞ்சாத அவன் இதயத்திலும் அச்சம் எழுந்தது. அவன் கற்சிலையென நின்றான்.

"கண்கள் புரிந்துவிட்ட பாவம்" என்று உதயமார்த்தாண்டவர்மனின் உதடுகள் முணுமுணுத்தன. சற்றே கொடூரப் புன்னகையும் காட்டின.

## அத்தியாயம் 9

# பரதபட்டன்

திரைக்குப் பின்னிருந்து வெளிப் போந்த மனிதனைக் கண்டதும் பிரமிப்பையும் அச்சத்தையும் ஒருங்கே அடைந்து விட்ட இந்திரபானு, உணர்ச்சிகள் ஸ்தம்பித்துக் கற்சிலையென நின்றுவிட்டதால் சேரர் பெருமானுடைய இதழ்கள் 'கண்கள் புரிந்துவிட்ட பாவம்' என்று முணுமுணுத்ததையோ அதையடுத்துக் கொடுநகை கொண்டதையோ கவனிக்கச் சக்தியற்றவனான். அப்படி இந்திரபானு திக் பிரமையடைந்து விட்டதைக் கண்டு மகிழ்ச்சிக் குறி காட்டிய மன்னன் விழிகள் சரேலெனத் திரைக்குப் பின்னிருந்து வந்தவன்மீது தாவியதும் சற்றுக் குழப்பத்தை எய்தின. ஏதோ விஷயம் விளங்காததற்கான சாயை யொன்றும் வீரரவி உதயமார்த்தாண்டவர்மனின் அழகிய வதனத்தைத் தடவிச்சென்று மறைந்தது. இப்படி நாட்டுக் காவலனும், சிறைக் காவலனும் உணர்ச்சிகளைப் பறக்க விட்டு விழித்தாலும், திரைக்குப் பின்னிருந்து வந்தவன் முகத்தில் மட்டும் இயற்கையளித்திருந்த வியப்புச் சாயையைத்தவிர வேறெந்தவித உணர்ச்சியும் தெரிய வில்லை. அந்த வியப்புச்சாயைகூட முகத்தின் அமைப்பினால் ஏற்பட்டதே யொழிய, உள்ளிருந்த உணர்ச்சிகள் அசைவதால் ஏற்பட்டதல்ல வென்பதை அவன் அடுத்த நடவடிக்கைகள் நிரூபித்தன. அவன் கண்கள் சலனமின்றி மன்னனையும் பார்த்து இந்திரபானுவையும் பார்த்தன.

திரைக்குப் பின்னிருந்து வந்த மனிதனுக்கு வயது குறைந்த பட்சம் எண்பதை எட்டிக் கொண்டிருந்தாலும் அவன் முகத்தில் திரைகள் அடியோடில்லாததன்றி, தலையி

லிருந்த மயிரும் ஒன்றுகூட நரை எய்தாமல் அசாத்தியக் கருமையுடனிருந்தது, கன்னத்தின் சதைகள் நன்றாகக் கீழிறங்கியிருந்தாலும், முகத்தின் மற்றப் பகுதிகளில் சதை மட்டுப்பட்டதால் எலும்புகள் புடைத்துவிட்டதன் காரண மாக ஆழத்திற்குப் போய்விட்ட கண்களாலும், அந்த மனிதன் வயோதிகன் என்பதைப் புரிந்துகொள்ள முடிந்ததே தவிர வயோதிகத்திற்குண்டான வேறெந்த அடையாளங்களும் அவனிடமில்லை. திரைக்குள்ளிருந்து வெளிவந்தபோது அவன் நடை திடமாகவும் கம்பீரமாகவும் இருந்தது. கண்கள் அசாத்திய தீட்சண்யத்துடன் பளிச்சிட்டன.

அவன் மன்னனை வணங்கியபோது கை மிக உறுதியாக இருந்தது. அவன் நின்ற தோரணை நல்ல வயிரம் பாய்ந்த மெல்லிய மரம் நிற்கும் தோரணையைப் போலிருந்தது. நெற்றியில் அவன் தீட்டியிருந்த சந்தனமும் குங்குமமும் உடலுக்குக் குறுக்கே அணிந்திருந்த முப்புரி நூலும் ஒன்று அவன் அந்தணனாகவோ அல்லது அரசகுலத்தானாகவோ இருக்கவேண்டுமென்பதை வலியுறுத்தின. அவன் இடையில் அணிந்திருந்த ஆடை பெரிய சரிகை வேலைப்பாடுடன் பெரும் விலையுள்ளதா யிருந்தது. மேலே சின்னஞ்சிறு ஆடை தான் தோளில் கிடந்தது. இருப்பினும் அது நூல் சம்பந்த சரிகையாலேயே செய்யப்பட்டுப் பளபளத்தது. ஆனால் செக்கச் செவேலென்று மின்னிய அவன் உடலுடன் அந்த சரிகையின் பளபளப்புப் போட்டி போட முடியவில்லை. அத்தனை துல்லிய வேஷத்துடனும் தோற்றமளித்த அந்த வயோதிகன் ஒரு விநாடி இந்திபானுவை நோக்கிவிட்டு அரசனையும் நோக்கினான். "மன்னவா! இவன் யார்? ஏனிப்படி இருக்கிறான்?" என்று வினவினான் சர்வ சாதாரணமாக.

அந்தக் கேள்வி இந்திரபானுவையும் அயர வைத்தது. மன்னனையும் குழம்ப வைத்தது. இந்திரபானு அந்தக் கேள்வி எழுந்த விநாடியில் தன்னை நிதானப்படுத்திக்



கொண்டானானாலும் மன்னன் குழப்பம் தெளியவில்லை யென்பதை அவன் சந்திரவதனமே நிரூபித்தது. அந்தக் குழப்பத்தைக்கூட மன்னன் வெகுலாகவமாக அடக்கிக் கொண்டு "குருநாதரே! இவன் நமது காவலரில் ஒருவன்," என்று மட்டும் கூறினான்.

இந்திரபானுவின் வியப்பு அதிகமாயிற்று. இவர் எப்படி அரசருக்குக் குருநாதர் என்று விளங்காததால் அதை அறியத் திடீரென மண்டியிட்டு அந்த வயோதிகனை வணங்கினான். அதைக் கண்ட மன்னன் குழப்பம் அதிகமாயிற்று. "எதற்காகத் திடீரென்று வணங்குகிறாய்?" என்று வினவினான் மன்னன் குழப்பம் சொற்களில் லேசாக ஒலிக்க.

"மன்னவா! மன்னருக்கு எதிரில் அவரது குருநாதரை வணங்காதிருப்பது குற்றமல்லவா? பெரியவரைக் குருநாத ரென்று தாங்கள் விளிக்கும் வரையில் நான் அறியவில்லை," என்றான் இந்திரபானு.

வீரரவி ஏதோ சொல்ல வாயெடுத்தான். அவன் பேச் சைத் தடைசெய்ய அவனைநோக்கிக் கைகூப்பிய வயோதி கன் பளிச்சிட்ட தன் கண்களை இந்திரபானுமீது நிலைக்கச் செய்து, "வீரனே! உன் ஊகம் தவறு. நான் மன்னனுக்குக் குருவல்ல. ஆகவே நீ என்னை வணங்க அவசியமுமில்லை," என்றான்.

"மன்னரே தங்களைக் குருநாதர் என்று அழைத் தாரே?" என்று சந்தேகத்துடன் வினவினான் இந்திரபானு.

"மன்னர் அன்பினால் என்னை அப்படி அழைக் கிறார். சகல கலைகளிலும் வல்லவரான மன்னருக்குக் குருநாதர் யாரும் அவசியமில்லை. தந்திர சாஸ்திரத்திலும், மந்திர சாஸ்திரத்திலும் அவருக்குள்ள அறிவு மலை யாளத்தில் வேறு யாருக்கும் இல்லை," என்ற குருநாதரின் சொற்களில் மட்டுமின்றி, கண்களிலும் கண்டிப்பு இருந்தது.

"அப்படியனால் தாங்கள்..." என்று இந்திரபானு இழுத்தான்.

"மன்னர் என்னை உன்னுடன் தங்கியிருக்க உத்தர விட்டிருக்கிறார். நான் யாரென்று அறிய முயலுவதோ, எதற்

காக மன்னர் உன்னுடன் என்னைத் தங்கியிருக்கப் பணிக்கிறார் என்பதை அறியத் தந்திரங்களைக் கையாளுவதோ அத்துமீறிய செய்கையாகும். அந்த வழிகளில் நினைப்பைச் செலுத்துவது கூடத் துரோகம்," என்று வயோதிகனின் சொற்களில் தான் சூடு இருந்ததேயொழிய அவன் முகத்தில் வியப்பு ரேகையே படர்ந்து கிடந்தது.

வயோதிகனின் உஷ்ணமான பேச்சைக் கவனித்த மன்னன் அதைச் சாந்தப்படுத்த முயன்று, "வீரன் தெரியாததால் கேட்கிறான் குருநாதரே! தாங்கள் யார் என்பதைத் தெரியப்படுத்துங்கள். தங்களைத் தெரியாதிருப்பது அவன் அறியாமையை உணர்த்துகிறது. சேர நாட்டவனாயிருந்தால் நீங்கள் யாரென்பது தெரியாதிருக்குமா?" என்றான். அவன் குரல் மேலுக்குச் சர்வசாதாரணமாய் இருந்தாலும் உள்ளே பெரும் விஷம் ஊடுருவி நின்றதைப் புரிந்து கொண்டான் இந்திரபானு.

வயோதிகன் முகம் பழையபடியே விகசித்துக் கிடந்தது. மன்னனின் பாராட்டுச் சொற்கள்கூட அவனுக்கு எந்தப் புது உணர்ச்சியையும் அளிக்கவில்லை. "வீரனே, கேள். மன்னன் உத்தரவிட்ட பின்பு உன் அறியாமை இருளை அகற்றாதிருப்பது சரியல்ல," என்ற பூர்வ பீடிகையுடன் துவங்கிய வயோதிகன் "என்னை மன்னர் குருநாதர் என்றழைத்ததற்குக் காரணம் அந்தப் பெருந்தகைக்கு நான் குரு நாதராயிருப்பதாலல்ல. மன்னர் குடிமக்களில் ஒரு பிரிவு என்னைக் குருநாதராக வரித்திருக்கிறது. என்னை மட்டுமல்ல என் ஆன்றோர்களையும் வரித்திருக்கிறது. பரம்பரைப் பட்டன்மார் வமிசத்தில் வந்தவன் நான். அதுவும் என் மூதாதையர் பெரும் கலைஞர்கள். அதில் ஒரு சிறு துளி இந்த அடியவனிடம் இருப்பதைச் சேரநாட்டுக்கலைவாணர் ஒப்புக் கொள்கிறார்கள். அதனால் கிடைத்த பட்டம் இது" என்றான். இப்படிச் சொல்லிவிட்டு மன்னனை நோக்கி மறுபடியும் கை கூப்பினான்.

வயோதிகன் எதற்கெடுத்தாலும் மன்னனை நோக்கிக் கைகூப்புவதை இந்திரபானு ரசிக்கவில்லை. இருப்பினும் வெறுப்பை அடக்கிக்கொண்டு, "அப்படியானால் தாங்கள் வீரரல்லவா?" என்று வினவினான்.



"ஒருவிதத்தில் வீரன்தான்" என்றான் வயோதிகன்.

"எப்படியோ?" என்று வினவினான் இந்திரபானு ஏளனத்துடன்.

"வீரத்தை முத்திரைகளில் காட்டுவேன், முக அசைப்பில் காட்டுவேன், கண் பார்வையில் காட்டுவேன்" என்றான் வயோதிகன்.

"வேலெறியத் தெரியுமா, வாளைச் சுழற்றுவீர்களா?" என்று வினவினான் இந்திரபானு மீண்டும்.

"இரண்டும் செய்வேன். ஆனால் வேலோ, வாளோ கையிலிருக்காது. ஆனால் வேலெறிவது போலும் வாளைச் சுழற்றுவது போலும் முழு உணர்ச்சியுடன் விவரிக்க பரத சாஸ்திரம் வழி வகுத்திருக்கிறது. சிருங்காரம், வீரம், காருண்யம், அற்புதம், ஹாஸ்யம், பயம், பீபத்ஸம், ரெளத்ரம், சாந்தம் ஆகிய நவரசங்களையும் பரத மகரிஷியை விட அனுபவித்தவர் யார்?" என வினவினான் வயோதிகன்.

"தாங்கள் கூத்தர் கூட்டத்தைச் சேர்ந்தவர்களா?" என்றான் வியப்புடன் இந்திரபானு.

"அல்ல. அவர்களின் குருநாதர்!" என்ற வயோதிகன் மன்னனை நோக்கினான்.

அதுவரை அவ்விருவரின் உரையாடலைக் கவனித்துக் கொண்டிருந்த உதயமார்த்தாண்டவர்மன் ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்து, "ஆம் வீரனே! கதகளியில் வல்ல பரத பட்டரை அறியாதவர்கள் சேர நாட்டில் கிடையாது. அவருடைய கலைவன்மை யவன நாட்டவரைக் கூடக்கொள்ளை கொண்டிருக்கிறது. அவரிடம் யவனர்கள் எத்தனைபேர் வேடமணிய வருகிறார்கள் தெரியுமா? இரணியனைப் போலும் பரசுராமனைப் போலும் முகங்களை மாற்றித் தருவதில் விற்பன்னரான பரதபட்டரிடம் தங்கள் விழாக்காலங்களில் யவனர்கள் மன்றாடுகிறார்கள். இந்த நாட்டவனாயிருந்தால் நீ இதை அறிந்திருக்கலாம்," என்றான்.

இந்திரபானு பதிலேதும் சொல்ல முடியாமல் மன்னன் சொல்வதை ஒப்புக் கொள்வதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான். ஒரு வினாடிக்குப் பிறகு சொன்னான்; "மன்னவா! காவலர் விடுதியில், குருநாதரை இருக்க வைப்பது அவருடைய தகுதிக்குக் குறைவாயிற்றே?" என்று.

வீரரவியின் இதழ்களில் புன்முறுவல் மீண்டும் பூத்தது. "உண்மைதான் வீரனே! ஆனால் தற்சமயம் அரண்மனைக் காவலர் விடுதிகளில் மிகப்பெரிதும், விசாலமான அறைகளை உடையதுமான விடுதியில் அவரைத் தங்கவைக்க ஏற்பாடு செய்தேன். காவல் நேரம் போக மீதி நேரத்தில் நீ அவருக்கு ஊழியமும் புரியலாம். உனக்கு அது பெரும் பாக்கியம்" என்றான் மன்னவன்.

இந்தரபானுவுக்கு மெல்லச் சந்தேகம் எழுந்தது. "இந்த விடுதி எங்கியிருக்கிறது மன்னவா?" என வினவினான் அவன்.

"அரண்மனையை அடுத்துள்ள இரு விடுதிகளில் ஒன்று" என்றான் மன்னவன்.

"இரண்டும் மெய்க்காவலர் விடுதிகளல்லவா?"

"ஆ"

"படைத்தலைவர்கள், உதவிப் படைத் தலைவர்கள் இவர்கள் மட்டுந்தானே அவ்விடுதிகளில் தங்கலாம்."

"ஆம். சாதாரண காவலருக்கு இங்கு இடம் கிடையாது."

"அப்படியானால் நான்..." என்று இழுத்தான் இந்திரபானு.

"ஏன் ஒரு நாள் நீயும் படைத்தலைவனாகக் கூடாது?" என்ற மன்னன் முறுவல் கொண்டான்.

"ஆகலாம். ஆனால் இன்று நான்..." என்று மீண்டும் ஆட்சேபணையைக் காட்டினான் இந்திரபானு.

மன்னன் முறுவல் நன்றாக முகம் பூராவும் விரிந்தது. அத்துடன், "எப்படி என்று தீர்மானிப்பதும் என் இஷ்டம்.



தவிர, குருநாதரைச் சாதாரணக் காவலர் விடுதிகளில் தங்க வைக்க முடியாது. சரியான ஊழியனொருவனும் அவருக்குத் தேவை," என்று சுட்டியும் காட்டினான் வீரரவி.

இந்திரபானு தலை வணங்கினான். "மன்னருக்கு அடியவன் மேலுள்ள நம்பிக்கையும் அன்பும் அடியவனுக்குத் திகைப்பூட்டுகிறது," என்றும் கூறினான்.

மன்னன் வதனத்தில் விஷமச்சாயை நன்றாகப் படர்ந்தது. அடுத்து உதடுகளிலிருந்தது உதிர்த்த சொற்களிலும் விஷமம் மண்டிக்கிடந்தது. "வீரர்களை நம்பித்தான் மன்னனே வாழ வேண்டியிருக்கிறது. வீரனே! நம்பிக்கைக்கும் அன்புக்கும் துரோகம் செய்யாதிருப்பது வீரர்கள் கடமை. தவிர நான் நம்பிக் கெட்டவன் இருப்பினும் நம்பாதிருக்க மனம் இடந்தரவில்லை," என்றான் மன்னன்.

"எல்லோரையும் நம்புவது தவறல்லவா மன்னவா?" என்று கேட்டான் இந்திரபானு.

"தவறுதான். இருப்பினும் எனக்கு யாரையும் நம்பும் சுபாவம். நம்பிக்கையில்தான் மனிதன் வாழ முடிகிறது. அடியோடு நம்பிக்கையில்லாமல் சந்தேகத்திலேயே வாழ்க்கையைக் கழிப்பவன் வளர்வதில்லை," என்று கூறினான் வீரரவி. ஒரு வினாடி கழித்து, "நம்புகிறேன், ஆனால் ஒரு கண்ணையும் எல்லோர் மீதும் வைத்திருக்கிறேன்," என்றும் சொன்னான். கடைசி வாக்கியங்களைச் சற்று அழுத்தியே உச்சரித்தான் சேர மன்னன்.

இதை மன்னன் சொன்னதும், "உண்மை உண்மை" என்று கூறிய பரதப்பட்டன் மன்னனை நோக்கிக் கையைக் கூப்பினான். மன்னன் கைதட்டி வெளியிலிருந்த காவலனொருவனை விளித்துப் பட்டனையும் இந்திரபானுவையும் அவர்கள் புது விடுதிக்கு அழைத்துச் செல்லப் பணித்தான்.

அவர்கள் சென்றதும் நீண்டநேரம் தனது ஆசனத்தில் தீவிர சிந்தனையுடன் உட்கார்ந்திருந்தான். பிறகு எழுந்திருந்து தனது உள்ளறைக்குச் சென்று மீண்டும் தனது மெய்க் காவலனை அழைத்து, "அவன் வந்துவிட்டானா?" என்று வினவினான்.

"வந்துவிட்டான். தங்கள் ஆணைக்காகக் காத்திருக்கிறான்," என்றான் காவலன்.

"சரி வரச்சொல்," என்றான் மன்னன்.

காத்திருந்தவன் உள்ளே வந்ததும் மெய்க்காவலன் கதவை மூடிக்கொண்டு வெளியே சென்றான். உள்ளே சென்றவன் நீண்ட நேரம் வெளியே வரவேயில்லை. "இந்தச் சாதாரண வீரனுக்கு மன்னனிடம் இத்தனை நேரம் என்ன வேலை?" என்று அரசரின் மெய்க்காவலன் வியந்து கொண்டிருந்தான்.

பரதபட்டன் மட்டும் சிறிதும் வியக்கவில்லை. இந்திரபானுவுடன் புது விடுதியை அடைந்து அங்கு அவர்கள் தங்குவதற்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த அறைக்குள் சென்றதும் கதவைச் சாத்திவிட்டு இந்திரபானுவை நோக்கி ஆக்ரோஷத்துடன் திரும்பினான். "நீ ஒரு முட்டாள்," என்று சீறிச் சொற்களையும் உதிர்த்தான்.

பட்டனின் சொற்களில் ஒலித்த பதற்றத்தையும் வேகத்தையும் கனல் கக்கிய கண்களையும் கண்ட இந்திரபானு, "நான் என்ன செய்துவிட்டேன் குருநாதரே?" என்று வினவினான் பணிவு நிரம்பிய குரலில்.

"இன்னும் என்ன செய்ய வேண்டும் நீ? உன்னையும் என்னையும் காட்டிக் கொடுத்து விட்டாய் ஒரு வினாடியில்," என்றான் பட்டன் சீற்றம் தணியாமல். "என்னைப் பார்த்ததும் ஏனப்படி பிரமித்தாய்? திகைத்தாய்? உன் கண்ணே உனக்குப் பெரும் விரோதி இந்திரபானு. அவையே உன்னைக் காட்டிக் கொடுக்கும். போதாக்குறைக்கு உணர்ச்சிகளை அடக்கவும் உனக்குச் சக்தியில்லை. இனி உன் உயிரும், என் உயிரும் அரைக் காசு பெறாது. மன்னன் உன்னையும் என்னையும் கொல்வது திண்ணம். எவ்வகையில் கொல்வானென்பதுதான் தெரியவில்லை," என்றான் பட்டன் வெறுப்புடன்.

"வீணாக அஞ்சுகிறீர்கள் பட்டரே! மன்னனின் சந்தேகச் சொற்கள் உங்களுக்குக் கிலியூட்டியிருக்கின்றன. இந்த விகார முகம் எனக்குப் பெரும் திரையல்லவா?" என்றான் இந்திரபானு.



"மன்னனுக்கு அது திரையல்ல. வீரரவியின் கூரிய கண்களுக்கு இனிப் புதிதாகத் திரை தயார் செய்ய வேண்டும்," என்றான் பட்டன் சீற்றம் தணியாமல்.

"முத்துக்குமரியாலேயே என் முகத்தை அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லையே?"

"அவள் கண்கள் காமக் கண்கள். அவற்றுக்கு உன்னைக் காணச் சக்தி இருக்காது. உன் பழைய உருவத்தைத்தான் அவள் சதா பார்த்துக்கொண்டிருப்பாள். ஆனால் மன்னன் கண்கள் வேறு. நீ எந்த வேடத்திலிருந்தாலும் உன்னைப் பிடித்து அழிக்க ஆவலுடன் காத்திருக்கும் கண்கள் அவை. சந்தேகமே வேண்டாம். உன்னை நன்றாக மன்னன் அறிந்து கொண்டுவிட்டான்," என்றான் பட்டன்.

"இனி என்ன செய்வானென்று எதிர்பார்க்கிறீர்கள்?"

"கொலை செய்யும் வழியைப்பற்றி மன்னன் ஆராய்ந்து கொண்டிருப்பான். எப்படிக் கொன்றால் நீ மிகுந்த துன்பத்துடன் சாகமுடியும், எப்படிக் கொன்றால் தன்னை மக்கள் பழிக்கமாட்டார்கள் என்பதை ஆராய்ந்து தக்க வழி கண்டு பிடிப்பான்," என்று பரதபட்டன் சோகப் பெருமூச்சு விட்டான்.

பரதபட்டன் சொன்னதில் தவறேதுமில்லை. உண்மையில் அன்று அரண்மனையில் மன்னன் மூளை வெகு விபரீத வழிகளில் வேலை செய்துகொண்டு இருந்தது. கொலை செய்வதைவிட மிகப் பயங்கர மார்க்கமொன்றை சேர மன்னன் சிந்தித்துக் கொண்டிருந்தான். *"செண்டுவெளி தான் வீரன் மடிய சிறந்த இடம்," என்ற முடிவுக்கும் வந்த மன்னவன் வதனத்தில் மந்தகாசம் குடிகொண்டது. "இந்திரபானு! உன் கண்களே உனக்கு விரோதி! அவற்றை செண்டுவெளி மூடிவிடும்," என்று இரைந்தே சொன்னான் வீரரவி.

* செண்டுவெளி; ஈட்டியைப் போன்ற செண்டு என்ற ஆயுதம் ஏந்தி வீரர்கள் போர்ப் பயிற்சி நடத்தும் அரண்மனை வெளியரங்கு.

## அத்தியாயம் 10

# காலன் சிரிப்பு

"காமத்தின் வசப்பட்ட கட்டழகி முத்துக்குமரியின் கண்கள் வேறு, வீரரவி உதயமார்த்தாண்டவர்மன் கண்கள் வேறு," என்று பரதபட்டன் சொன்னதில் தவறேதுமில்லையென்பதை அன்று அரண்மனையில் நடந்த நிகழ்ச்சிகள் சந்தேகமற நிரூபித்தன.

பரதபட்டனும் இந்திரபானுவும் மன்னவன் சன்னிதானத்திலிருந்து மெய்க்காவலர் விடுதிக்குச் சென்றதும் மன்னனைக் காண உட்புகுந்து, தன்னந்தனியே மன்னனுடன் நீண்டநேரம் அறைக்குள் தங்கிய சாதாரணக் காவலனை வீரரவி விசாரித்த விவரங்களை மட்டும் இந்திரபானு அறிந்திருந்தால், ஆரம்பத்திலேயே தன்னை மன்னன் புரிந்துகொண்டுவிட்டான் என்ற உண்மையை அவன் உணர்ந்திருப்பான். ஆனால் அதற்கு எந்தவித அறிகுறியையும் காட்டாத வீரரவியின் நாடகத்தில் இந்திரபானு ஓரளவு ஏமாந்து சற்று எச்சரிக்கையைக் கைவிட்டே காரியங்களைச் செய்துவிட்டானாகையால் அவை மன்னனுக்குச் சான்றின் மேல் சான்று கிடைக்க உதவி செய்தன. அந்தச் சான்றுகளின் தொகுப்பில் ஒரு கட்டத்தை மட்டும் மன்னனைத் தனித்துக் காண வந்த வீரன் மன்னனுக்கு விவரித்தான்.

இந்திரபானுவையும், பரதபட்டனையும் அனுப்பி விட்டுக் காத்திருந்த அந்தக் காவலனை அழைத்துவரச் செய்த வீரரவி, மண்டபக் கதவு சாத்தப்பட்டதும் வந்த காவலனை நோக்கிக் கண்களை உயர்த்தினான். அந்தக் கண் பார்வையிலிருந்தே மன்னன் கேள்வியை உணர்ந்து



கொண்ட காவலன் தனது பேச்சைத் துவங்கி, "நான் கடற்கரை மாளிகையில் காவல் புரிகிறேன்," என்று கூறினான்.

மன்னன் முகமோ, கண்களின் பார்வையோ சிறிதும் எந்த மாற்றத்தையும் காட்டவில்லை. உதடுகளிலிருந்து சொற்களும் உதிரவில்லை. கேட்கவேண்டிய கேள்விகளை அவன் பார்வையே கேட்டது. ஆகவே, காவலனே பதில் சொன்னான் மளமளவென்று. ஏதோ தெய்வ சன்னிதானத்தில் மந்திரங்களைச் சொல்வதுபோல் அடக்கத்துடனும் தெளிவாகவும் அவன் சொற்கள் தொடர்ந்து உதிர்ந்தன. "நேற்றிரவு அந்தப் புதுக் காவலனைப் பாண்டிய குமாரி இருக்கும் உள்ளறைக்குத் தாங்கள் காவல் வைத்துச் சென்ற பிறகு உப சேனாதிபதி என்னைச் சந்தித்தார். அதுவும் மிகுந்த எச்சரிக்கையுடன் தூண்களின் பக்கவாட்டில் வந்து, உள்ளறைக் காவலனுக்குத் தெரியாமல் என்னைப் பார்த்து, 'உள்ளறைக் காவலன்மீது ஒரு கண்ணை வைத்துக் கொள். எது நடந்தாலும் தலையிடாதே. மன்னர் உன்னை நாளை சந்திப்பார்' என்று கூறிச் சென்றார். ஒரு வினாடி நான் திடுக்கிட்டேன். மாளிகைத் தலைமைக் காவலர் இருக்க, உபசேனாதிபதி எனக்கு நேரிடையாகக் கட்டளையிடுவது இதுவே முதல் தடவை. அதுவும் மன்னரை நான் நேரில் பார்க்கப் போவதும் எனக்கு அச்சத்தை விளைவித்தது. ஆகவே மிகுந்த எச்சரிக்கையுடன் கவனித்தேன். காவலை வழக்கப்படி சாதாரண முறையில் செய்வதாகப் பாசாங்கு செய்தேன். வாயிற்படியை அணுகும்போதெல்லாம் அடுத்த கட்டு வாயிற்படியிலும் ஒரு கண் வைத்திருந்தேன். புதுக் காவலன் கடைக்கட்டில் என்னைப்போலத்தான் காவல் புரிந்துகொண்டிருந்தான் நீண்ட நேரம். நாழிகைகள் ஓடின. உபசேனாதிபதியின் எச்சரிக்கையில் அர்த்தமில்லையென்று நினைத்துச் சற்று ஏமாறக்கூட இருந்தேன். ஆனால் அர்த்த ஜாமவேளையில் புதுக் காவலன் நின்ற நிலையிலிருந்து உட்கார்ந்த நிலையை அடைந்தான். அதுவும் பாண்டிய குமாரியிருந்த அறையின் மேல் படியில்..." என்று சொல்லிக் கொண்டு போன சிறைக் காவலன் சற்று நிதானித்தான்.

'மேலே சொல்' என்பதற்கறிகுறியாகச் சேர மன்ன னின் கை மட்டும் அசைந்தது. மேலே சொன்னான் காவலன். ஆனால், அவன் சொற்களில் மந்திரம் போன்ற உச்சரிப்பில்லை. நிதானமில்லை. பய உணர்ச்சி நிரம்பிக் கிடந்தது. "நடுச் சாமத்தில் நடந்ததை இப்போது நினைத் தாலும் பிரமிப்பாய் இருக்கிறது மன்னவா! உள்ளறைக் காவலன் காவலனாக நடக்கவில்லை. மாளிகையே தனது போல் நடந்துகொண்டான். அவன் முகப்புப் படியில் உட் கார்ந்ததும் உள்ளிருந்து பாண்டிய குமாரி வந்தார். குனிந்து ஏதோ அவனைக் கேட்டார். அந்தச் சமயத்திலிருந்து இரு வரும் பேசிக் கொண்டேயிருந்தார்கள். என் காவல் கட்டுக்கும் அந்த உள்ளறைக்கும் இடையே மண்டப மிருப்பதால், சொற்கள் ஏதும் காதில் விழாவிட்டாலும், மண்டபப் பந்த வெளிச்சத்தில் காவலன் முகத்தை நான் நன்றாகப் பார்க்க முடிந்தது. பாண்டிய குமாரியை ஒரு முறைதான் பார்த்தேன். பிறகு அவர்களைக் காணவில்லை. ஆனால் அவர்கள் காவலனுக்குப் பின்பக்கத்திலிருந்திருக்க வேண்டும். காவலனின் உதடுகள் சொற்களை உதிர்த்துக் கொண்டேயிருந்தன. கண்கள் என் கட்டையே உற்று நோக்கிக்கொண்டிருந்தன. இருப்பினும் அவன் என்னைப் பார்த்துச் சொல்ல என்ன இருக்கிறது? நான்தான் ஏது மறியாதவன் போல், எதையும் பாராதவன்போல் நடந்து கொண்டேன்," என்ற காவலன் சற்றுத் தனது சாமர்த்தி யத்தையும் காட்டினான்.

"சரி, சரி. மேலே சொல்," என்று மன்னன் முதன் முறையாகச் சொற்களை உதிர்த்தான். அவற்றில் சற்று வேகமிருந்ததால் காவலன் மிதமிஞ்சிய பயத்துடன் கூறி னான். "நடந்தது என்னவென்று திட்டமாகக் கூறமுடியாது மன்னவா. நான் மறுமுறை வாயிலைக் கடந்தபோது உள்ள றைக் கதவு மூடியிருந்தது. இருப்பினும் அங்கு செல்லத் துணிவில்லை எனக்கு. ஆனால் இரண்டாம் முறை நான் வாயிலைக் கடந்துபோது கதவு மூடியிருக்கவே உள்மண்டபத்தில் நுழைந்து அறைக்கதவினருகே உள்ளே



பார்க்க முயன்றேன். பூட்டுத் துவாரத்தில் சிறிதுதான் பார்க்க முடிந்தது. ஆனால் சொற்கள் காதில் விழுந்தன..." என்றான் காவலன்.

"என்ன சொற்கள்?" இம்முறை வீரரவியின் குரலில் லேசான கடுமை தெரிந்தது.

காவலன் குழப்பத்துடன் சொன்னான். "எனக்குச் சற்றும் விளங்காத சொற்கள் மன்னவா. முத்து, கோடரி, காட்டுப் பாதைப் போர்—இப்படிப் பல சொற்கள் காதில் விழுந்தன. இதைச் சொன்ன சமயத்தில் உள்ளே புதுக் காவலன் பெரு உணர்ச்சிகளையும் காட்டினான். இந்திரபானு என்ற ஒரு சொல்லும் கேட்டது. ஆனால் முழுதும் ஏதும் கேட்க முடியவில்லை. திடீரென உள் விளக்கு அணைந்தது. பேச்சும் நின்றது." என்ற வீரன் தனது செய்தி முடிந்து விட்டதென்பதற்கறிகுறியாகத் தலை தாழ்த்தி மன்னனை வணங்கினான்.

"அவ்வளவுதானா?"

"ஆம் மன்னவா. அதற்கு மேல் அங்கு நிற்காமல் நான் காவலுக்கு வந்துவிட்டேன். அடுத்த இரண்டு முறை நான் நடந்த பிறகு மூன்றாம் முறையில் அடுத்த கட்டில் நோக்கினேன். உள்ளறை விளக்கு எரிந்து கொண்டு இருந்தது. புதுக் காவலன் ஏதுமறியாத பூனைபோல் வெளிப் படியில் உட்கார்ந்திருந்தான்."

அத்துடன் அவன் போகலாமென்பதற்கறிகுறியாகக் கையை அசைத்த சேரமன்னன் நீண்டநேரம் உட்கார்ந்த நிலையிலேயே சிந்தனையில் ஆழ்ந்து கிடந்தான். பிறகு எழுந்திருந்து கனவில் நடப்பவன் போல் நடந்து அரண் மனைக்குள் சென்று உப்பரிகையிலிருந்த தன்னறைக்குச் செல்லும் படிகளில் ஏறினான். உப்பரிகையிலிருந்த வெளி யறைக்கு வந்ததும் அங்கிருந்த சாளரங்கள் மூலம் தூரத்தே தெரிந்த கடலையும், இடையே தெரிந்த பெரும் தோப்பு களையும், கடலுக்கு உருண்டு சென்று கொண்டிருந்த போர் வாகனங்களையும் உற்று நோக்கினான். பிறகு அரண் மனைக்கும் அரண்மனை மதிலுக்குமிடையில் கிழக்குப்

பகுதியிலிருந்த இடைவெளியைக் கவனித்தான். மெள்ள மெள்ள அவன் இதழ்களில் குரூரப் புன்முறுவல் படர்ந்தது. கண்களில் விஷம் பரவியது. "இந்த இடம்தான் சரி. இங்கு தான் அவன் கண்களை மூடவேண்டும். செண்டு வெளிக் களியாட்டத்தில் யார் இறந்தாலும் எப்படி இறந்தாலும் யார் கேட்கப் போகிறார்கள்? வீரனாயிருப்பவன் அந்தக் களியாட்டத்தில் இறங்காமலிருக்கவும் முடியாது. ஆம் ஆம். அதுதான் சரி," என்ற மன்னன் மெள்ள தனக்குள் நகைத்துக் கொண்டான். பிறகு பஞ்சணையில் படுத்துக் கொண்டு தீர்க்காலோசனையில் இறங்கினான்.

மாலை மெள்ள மெள்ள நெருங்கியது. கதிரவன் குட திசைக் கடலில் இறங்க முடிவு செய்து தனது கதிர்களின் தீட்சண்யத்தை மெல்ல மெல்ல அடக்கிக் கொண்டான். கடற்கரையை அடுத்த சோலைகளிலிருந்து ஜில்லென்ற காற்று மெல்லென்று வீசத் தொடங்கியது. சேரன் தலை நகரான திருவாழுங்கோட்டில் திரு உண்மையாகவே வாழ்கிறாளென்பதை வலியுறுத்திக் கதிரவன் எங்கும் பொன் முலாம் பூசினான். அந்த மாலை வேளையில் மன்னன் மனமும் கடற்கரைப் பூங்காற்றைப் போலவே குளிர்ந்து கிடந்தது. அவன் மந்தகாச வதனத்தைக்கண்ட அரண்மனைப் பாங்கிகள் காமநகை காட்டினர். மன்னனது புன்சிரிப்புக்காகவும் ஒரு பார்வைக்காகவும் ஏங்கியிருந்த அந்தப்புர மகளிர் பலர் அவன் வதனத்தில் தாண்டவமாடிய சந்துஷ்டியிலிருந்து இஷ்டசித்தியடைய அவனை நெருங்கி உறவாட முயன்றார்கள். ஆனால் அவை எதற்கும் இடங்கொடாத மன்னன் நகைத்து அவர்களை விலக்கிவிட்டு அரண்மனையிலிருந்து வெளிப்போந்து தனது ஒற்றைப் புரவி ரதத்தில் ஏறிக்கொண்டு கடற்கரை மாளிகையை நோக்கிச் சென்றான். மாளிகையை அடைந்ததும் அதன் கடைக்கட்டுக்கு வந்த மன்னன் முத்துக்குமரியிருந்த அறைக்குள் நுழைந்தான். மன்னன் சைகையைத் தொடர்ந்து காவலர் விலகிய பின்பும் உள்ளிருந்த முத்துக்குமரி மஞ்சத்திலிருந்த எழுந்திருக்காமலேயே அவனை அதிகாரம் ததும்பும் பாவனையில் ஏறிட்டு நோக்கினாள்.



வீரரவி எதிரிலிருந்த சிறு மஞ்சத்தில் தானாகவே அமர்ந்தான். கூண்டில் சிக்கிய பின்பும் எப்படிப் புலியின் தோரணை மாறுவதில்லையோ அப்படியே பலநாள் சிறை வாசத்துக்குப் பின்பும் சிறிதளவும் மாறாத பாண்டியன் மகளை வீரரவியும் ஏறெடுத்து நோக்கினான். "பாண்டியப் பெருமான் மகளுக்கு இங்கு ஏதும் குறையில்லை என்று நினைக்கிறேன்," என்றும் கூறினான் மெள்ள.

"கூண்டிலடைக்கும் மிருகங்களுக்கும், பட்சிகளுக்கும் குறை வைப்பது மனிதன் பழக்கமல்ல," என்றாள் முத்துக்குமரி.

"இது சிறையல்ல பாண்டியகுமாரி. இது என் சொந்த மாளிகை. ஆண்டில் மூன்று மாதங்கள் இங்கு நானே வசிக்கிறேன்," என்றான் வீரரவி.

"கட்டுக்குக் கட்டு காவலர் இருக்கிறார்கள்" என்று சுட்டிக் காட்டினாள் முத்துக்குமாரி.

"நானிருக்கும் இடத்திலும் அப்படித்தான். மன்னர் மாளிகையில் காவலர் இருப்பது புதிதல்லவே?" என்றான் வீரரவி.

"சாதாரணக்காவல் வேறு, இத்தகைய காவல் வேறு."

"ஏன்? என்ன வித்தியாசம்."

"நடைமுறை தான் வித்தியாசம்."

இதை கேட்ட மன்னன் கண்களில் கோபக் கனல் துளிர்த்தது. "ஏன், புதுக்காவலன் முறைதவறி நடந்து கொண்டானா? சொல் முத்துக்குமரி, அவன் தலையை இன்றே சீவி விடுகிறேன்" என்று சீற்றத்துடன் கூறவும் செய்தான்.

முத்துக்குமரியின் முகத்தில் பயத்தின் சாயை சரேலெனப் படர்ந்தது. "இல்லையில்லை, அவன் முறை தவறி நடக்கவில்லை," என்று அவசர அவசரமாகச் சொன்னாள் முத்துக்குமரி.

மன்னன் இளநகை கொண்டான். ஆசுவாசப் பெருமூச்சும் விட்டான். "அதுதானே கேட்டேன், அவனோ புதுக் காவலன். இந்த நாட்டானுமல்ல. அவனை இந்த முக்கிய காவலுக்கு நியமித்து விட்டேனே என்று பயந்தேன்," என்று கூறினான் மன்னவன்.

முத்துக்குமரியின் வழிகளில் லேசாக அச்சம் உதயமாயிற்று. "என்ன! அவன் இந்த நாட்டவனல்லவா?" என்ற கேள்வியிலும் அச்சம் விரவிக் கிடந்தது.

"ஆம். இந்நாட்டவனல்ல," என்றான் மன்னவன் சர்வ சாதாரணமாக.

"முன்பின் தெரியாதவனைக் காவலுக்கு நியமிக்கலாமா?" என்று வினவினான் முத்துக்குமரி.

"நமக்கு முன்பின் தெரிந்தவன், நம்பிக்கைக்குப் பாத்திரமானவன். அறிமுகப்படுத்தினால் நியமிக்கலாமல்லவா!" என்று கேட்ட மன்னன் முகத்தில் இளநகை மேலும் விரிந்தது.

"ஆம். நியமிக்கலாம், நியமிக்கலாம்," என்று தடுமாற்றத்துடன் சொன்னான் முத்துக்குமரி.

"இவனை அறிமுகப்படுத்தியது யாரென்று நினைக்கிறாய்?"

"யார்?"

"நமது கூத்தன்."

"கூத்தனா?"

"இப்பொழுது சொல இவனை நம்புவதா கூடாதா?"

"நம்பலாம், நம்பலாம்," என்றாள் முத்துகுமரி வேகமாக.

வீரரவி ஒரு வினாடி மௌனம் சாதித்தான். பிறகு "பாண்டியகுமாரி! இவனைக் கூத்தன் அறிமுகப்படுத்தியது மட்டுமல்ல நான் இவனைக் காவலுக்கு அனுப்பியதற்குக் காரணம் இவன் சிறந்த வீரன்," என்றும் சொன்னான்.

முத்துக்குமரியின் முகத்தில் போலி ஆச்சரியம் படர்ந்தது. "இவன் சிறந்த வீரனா!"



"ஆம். வேலெறிவதில் இணையற்றவன்," என்று கூறினான் வீரரவி.

"எப்படித் தெரியும் உங்களுக்கு?"

"கூத்தனே கூறினான், அவன் குடிசைப் பக்கம் வந்த மதயானையை இவன் வேலெறிந்து கொன்று விட்டதாக. மதயானை மீது வேலெறிவது எத்தனை அபாயம், அதைக் கொல்வது எத்தனை கடினம் என்பது உனக்குத் தெரியுமல்லவா?" என்று வினவினான் வீரரவி.

"தெரியும், தெரியும்."

"அவன் வேலெறிவதைப் பார்க்க உனக்கு இஷ்டமா?"

முத்துக்குமரியின் கண்களில் மீண்டும் மெள்ள மெள்ள அச்சம் படர்ந்தது. "நான் எதற்காகப் பார்க்க வேண்டும்?"

"வீரர்களின் சாமர்த்தியத்தை அரச மகளிர் காணுவது இயல்பு. ஆகவே அதற்கு ஏற்பாடு செய்யப் போகிறேன். இன்றிலிருந்து நான்காவது நாள் செண்டு வெளியில் நீ ஓர் அற்புதத்தைப் பார்க்கப் போகிறாய். விளைவு உன்னை அசர வைக்கும்," என்று கூறிய மன்னன் ஆசனத்திலிருந்து எழுந்திருந்தான். "அந்த விளையாட்டுக்குப் பிறகு நீ இந்நாட்டு ராணியாகும் நாளும் அதி தூரத்திலிருக்காது" என்றும் கடைசியாக ஒரு சொல்லம்பை வீசிவிட்டு நடந்தான்.

அன்றிரவு தனது சேனாதிபதியை அழைத்துச் செண்டு வெளிக் களியாட்டத்துக்கு ஏற்பாடு செய்யுமாறும் உத்தரவிட்டான். அதற்குத் தலைவணங்கிய சேனாதிபதியை நோக்கி, "அரண்மனை உப்பரிகையிலிருந்து செண்டாயுதத்தைச் செண்டுவெளி நோக்கி எறிய முடியுமா?" என்று வினவினான் மன்னவன்.

"முடியும் மன்னவா."

"அதற்கும் ஏற்பாடு செய்யுங்கள்," என்றான் வீரரவி.

"எதற்கு?" சேனாதிபதியின் கேள்வியில் வியப்பு இருந்தது.

"அந்தச் செண்டு வெளியில் ஒருவன் ஆயுள் முடியும்," என்ற மன்னன் சேனாதிபதியை அர்த்த புஷ்டியுடன் நோக்கினான்.

சேனாதிபதி திகைத்துப் போனான். "மன்னவா! இது அதர்மமாயிற்றே" என்றும் குழறினான்.

"தர்மத்தையும் அதர்மத்தையும் நிர்ணயிப்பது அரசன் கடமை, உன் கடமையல்ல, செல், சொன்னபடி செய்."

அவன் கண்கள் விஷத்தைக் கக்கின. உதடுகள் சிரிப்பை உதிர்த்தன. காலன் சிரித்தால் அப்படித்தானிருக்கு மென்று சேனாதிபதி எண்ணினான். எண்ணியதைச் சொல்லத் துணிவின்றி மன்னன் சன்னிதானத்திலிருந்து வெளியே நடந்தான்.

அத்தியாயம் 11

# செண்டுவெளி

"சரியான நிலையில் தவழ்ந்தோடும் சரித்திரம், கவிதையும் தத்துவமும் இணைந்த ஓர் அமுதத் தொடர்பு," என்று மேதை மெக்காலே சொன்னதன் சிறப்பை, நாட்டு வரலாற்றையும் மனித வளர்ச்சியையும் ஆராய்ந்து பார்ப்பவர்கள் அறிவார்கள். புல்லறிவாளர்கள் புத்திக்குப் பல விஷயங்கள் எட்டாததுபோல இந்த உண்மையும் எட்டுவதில்லை. சரித்திர ஏடுகளில் காணப்படுவது தேதிகளும் போர்களும் முடிசூட்டு விழாக்களும் மட்டுமல்ல. மனித குல மாற்றங்கள், அபிலாஷைகள், குறைபாடுகள், காதல், கனிவு, களியாட்டங்கள், போர் விளையாட்டுகள், பயிற்சி முறைகள், இன்னும் எத்தனை எத்தனையோ நிலவரங்கள் உணர்ச்சிகள், பெரும் சாதனைகள், சோதனைகள், வேதனைகள்—இத்தனையும் காணப்படுகின்றன. இப்படிச் சரித்திரம் மனிதகுலத்தைப் பற்றிய சகலத்தையும் சொல்லுவதால், பழைய எண்ணங்களை மீண்டும் நமது சிந்தனைக்குக் கொண்டு வருவதால் அதில் கவிதையும் இருக்கிறது. அந்தக் கவிதையின் ஒருபகுதியைச் சேரமன்னன் வீரரவி வகுத்த புதுத் திட்டத்தில் தமிழர்கள் பார்க்கலாம். தமிழர் மூலம் வெளி நாட்டவரும் பார்க்கலாம். கிரேக்க நாட்டு நாகரிகத்துக்குச் சற்றும் குறைவில்லாத, ஏன் சற்று அதிகமான, நாகரிகம் பண்டைத் தமிழரிடம் விளங்கி வந்ததற்குச் சென்ற அத்தியாயத்தில் சேர மன்னன் சிந்தையிற்கொண்ட செண்டுவெளிக் களியாட்டம் சிறந்த சான்றுகளில் ஒன்று.

பழந்தமிழ் மக்களின் வீர விளையாட்டுக்களில் செண்டுவெளிக் களியாட்டம் மிகச் சிறந்ததென்பதைக்

காப்பியங்கள் எடுத்துக் காட்டுகின்றன. அந்தக் களியாட்டம் வீரனை நிர்ணயித்தது. அக்காலத் தமிழ் மன்னர்களுடைய அரண்மனை ஒவ்வொன்றுக்குள்ளும் செண்டுவெளியென்ற பெரும் பயிற்சி அரங்கமொன்று இருந்து வந்தது. ஆயிரக்கணக்கான மக்கள் வட்டமாகச் சுற்றி நின்று வேடிக்கை பார்க்க அந்த வெளியில் வசதியிருந்ததன்றி, மன்னரும் மற்றப் பெருங்குடி மக்களும் அமருவதற்குப் பெரும் மேடைகளும் அமைக்கப்பட்டிருந்தன. செண்டு வெளியில் சமதரை சாதாரண நாட்களில்கூடப் பழுது பார்க்கப்பட்டு வந்ததால், புரவிகள் வெகு வேகமாகச் செல்வதற்கும் அவற்றில் கால்கள் இடறாமலும் வழுக்காமலும் இருப்பதற்கும், எப்பொழுதும் வெகு சீராக வைக்கப் பட்டிருந்தது. அந்தத் தரையின் அழகை ஒட்டியும், குதிரைகளைப் பழக்குவதற்குக் கூட அது உபயோகப் படுத்தப்பட்ட காரணத்தாலும் அதை வையாளி வீதி யென்றும் மக்கள் அழைத்து வந்தார்கள். அரண்மனையின் அந்தச் சிறப்பு வெளிமுற்றத்தில் சாதாரண நாட்களிலும் வீரர்கள் குதிரையேற்றப் பயிற்சியில் ஈடுபடுவார்கள். செண்டாயுதப் பயிற்சியும் அங்கு தினந்தோறும் நடக்கும். ஆனால் மக்களுக்கு முரசு அறிவித்து நடத்துப்படும் செண்டுவெளிக் களியாட்டம் பெரும் பிரமை அளிக்க வல்லது. கவிஞன் நாவுக்கு வலு அளிப்பது, நாட்டுக்குக் கவிதை அளிப்பது வரலாற்று வித்தாக விளங்கியது.

செண்டுவெளியாட்டம் நடப்பதற்கு மூன்று நாட் களுக்கு முன்பே மன்னர் ஆணையாளர் முரசு மூலம் செண்டு வெளி நடக்கும் தேதியை மக்களுக்கு அறிவிப் பார்கள். மூன்று நாட்களுக்கு முன்பிருந்து மீண்டும் செண்டு வெளித் தரையும், மன்னரும் மற்றோரும் அமரும் உயர் மேடைகளும் மிக மும்முரமாகச் செப்பனிடப்படும். மன்னனை வெளியிலிருந்து காக்க அழகிய பெரும் துணி கொம்புகள்மீது விரிக்கப்படும். உண்மையில் இதுகூட அவசியமில்லை. ஏனென்றால் அந்தக் களியாட்டத்தில் ஏற் படும் வெறி, மாலை, நேர வெய்யிலையோ வெப்பத்தையோ வானப் பொழிவையோகூட அலட்சியம் செய்யும். அன்று மக்களுக்கோ மன்னனுக்கோ அரண்மனைப் பெண்களுக்கோ



மது சிறிதும் தேவையில்லை. போதையேற்ற செண்டுவெளி வீர நாடகமே போதும். அந்த வீரவிளையாட்டை* "மண்டிலார் குதிரை நாடு வட்டம் போர் கூத்துமாகும். செண்டு செண்டாயுதம் பந்தெறி வீதி," எனப் பாடி இதைப் போர்க் கூத்து எனச் சிறப்பிப்பாரும் உண்டு.

இந்தப் போர்க் கூத்தில் கையாளப்படும் செண்டு என்ற ஆயுதம் கிட்டத்தட்ட வேல் போன்றது. வேல் போன்ற கூரிய முனையுடன் மட்டுமின்றி அந்த முனைக்குச் சற்றுக் கீழே பிடியைச் சுற்றிச் சின்னஞ்சிறு சூலங்கள் பலவும் வார்ப்படம் செய்யப்பட்டிருந்தபடியால் முனையின் அடிப்பாகம் செண்டு போல் பார்ப்பதற்கு அழகாகவும், வேகமாகப் பாய்ந்தால் சதையைப் பிய்த்துக் கொண்டு ஆழ உள்ளே சென்று தேகத்தில் நிலைத்துப் பறிக்க முடியாத முறையில் உயிரைக் குடித்துவிடும் தன்மை வாய்ந்ததாகவும் இருந்தது. சில சமயங்கள் ஈட்டி முனைக்குக் கீழேயிருந்த சிறு சூலங்களில் சின்னஞ்சிறு துணிகள் சுற்றப்பட்டு எண்ணெயூற்றி நெருப்பும் வைக்கப் படுமாதலால், செண்டால் தாக்கப்படுபவர் தீப்புண் சுட்டு அப்புண்ணுக்குப் பலியாவதும் உண்டு. நீண்ட மரப் பிடியுடன், தலையில் கூரிய இரும்பு வேலும் அதையொட்டி சிறு இரும்புச் சூலங்கள் பலவும் செண்டுபோல் வார்க்கப் பட்டிருந்ததால் பார்வைக்கு மிக அழகாக இருந்த செண்டாயுதம் உண்மையில் உயிரை எளிதில் குடிக்கக்கூடிய பயங்கர ஆயுதமாக இருந்தது. இத்தகைய ஆயுதத்துக்குத் தெய்வத்தன்மையும் கற்பிக்கப்பட்டிருந்தது. இதை ஐயனாரின் ஆயுதமாகச் சிறப்பித்து வந்தார்கள் பைந் தமிழர்கள். இதன் காரணமாக ஐயனாருக்கு** செண்டாயுதன் என்ற திருநாமமும் வழங்கலாயிற்று.

* "நாநார்த்த தீபிகை" — "ஒரு சொல் பல பொருள்" — திரு நெல்வேலி கவிராயர் முத்துசாமிப் பிள்ளை எழுதியது — Page 173. Madras University Publication 1936.

** செண்டாயுதன் — Name for Aiyyanar as bearing the Weapon Cendu — Tamil Lexicon, page 1585.

இப்படித் தெய்வீகமும், வீரமும் கலந்த செண்டு வெளிக் களியாட்டத்தை அடுத்த நான்காவது நாள் சேர மன்னன் கொண்டாட இருக்கிறானென்பதை முரசு மூலம் அறிந்து பரலிமாநகர் மக்களின் குதூகலம் அடக்க முடியாத நிலையை அன்று மாலையே அடைந்து கொண்டிருந்தது. மன்னன் இத்தகைய ஏற்பாட்டைச் செய்கிறான் என்பதை அறியாத காரணத்தால், இரவு சற்று ஏறியதும் மெய்க் காவலர் இல்லத்தைவிட்டுப் புரவிமீது ஏறி வெளியேறிய இந்திரபானு அரண்மனை மதில்களுக்கு முன்பாக டமடமவென்று முரசு முழங்கிக் கொண்டிருந்ததை முதலில் சற்று வியப்புடன் கேட்டான்.

முரசு கொட்டியவன் கொட்டுவதை நிறுத்தி விஷயத்தைப் பெருங்குரலில் அறிவித்த பின்னர் இந்திரபானு தானிருக்கும் இடம், நிலை, சகலத்தையும் மறந்து பேருவகை கொண்டான். செண்டு வெளியை அவன் மதுரை மாநகரில் பார்த்திருக்கிறான். அந்த ஆயுதம் கொண்டு புரவியை வெகு வேகமாக ஏவி நுண்ணிய இலக்குகளை வீரபாண்டியன் துழாவித் தகர்த்தெறிந்த பெரும் வீரச் செயல்களைப் பார்த்திருக்கிறான். வீரபாண்டியனுடைய ஒவ்வொரு வீர விளையாட்டுக்குப் பின்னரும் அரண்மனைப் பாங்கியரும் மற்றச் சாதாரண குடிமாதரும் பூப்பந்துகளை அவன்மீது வீசிய அரிய காட்சிகளெல்லாம் அவன் கண்முன் வந்ததால், அவன் சேர நாட்டை மறந்து மதுரை மாநகர் சென்றான். அங்கிருந்த அரண்மனை செண்டு வெளிக்குச் சென்றான். சூழ்நிலையை அடியோடு மறந்து கனவுலகில் சஞ்சரித்துக் கொண்டே புரவியை நடத்திக் கடற்கரை மாளிகையை நோக்கிச் சென்றான். முரசு அளித்த போதையில் முக்கிய பல விஷயங்களை கவனிக்கவும் எண்ணிப் பார்க்கவும் மறந்தான்.

மன்னன் தன்னை மெய்க்காவலனாக்கிய போதிலும், அரண்மனையை அடுத்த பிரதான இல்லங்களிலொன்றில் தன்னைத் தங்கவைத்த போதிலும், உண்மையில் தான் சிறையிலேயே வைக்கப்பட்டிருந்ததை அன்று பகலில் உணர்ந்



திருந்த இந்திரபானு, இரவில் தான் வெளியே போய் வருவதாக விடுதிக் காவலனிடம் அறிவித்தபோது காவலன் நடந்துகொண்ட முறையைப்பற்றி என்னகாரணத்தாலோ எண்ணிப் பார்க்கவில்லை. தன்னுடன் தங்கி மாலை பூராவும் தன்னைப்பற்றி நொந்து பேசிக் கொண்டிருந்த பரதபட்டன் கூடத் தன்னைத் தடை செய்யாத காரணத்தையும் அவன் யோசிக்கவில்லை. சர்வ சாதாரணமாக, சர்வ சுதந்திரமாகத் தான் இரவில் சேரன் தலைநகரில் சுற்றும் நிலை ஏற்பட்டதன் காரணத்தைக்கூட அவன் நினைத்துப் பார்க்கவில்லை. இவையனைத்தையும் மீறிய நினைவுகள், கனவுகள் அவன் சிந்தையை ஆட்கொண்டிருந்தன.

பகல் பூராவும், மாலை நெருங்கி வெகு நேரத்துக்குப் பின்புங்கூட, அவன் முத்துக்குமரியையே நினைத்துக் கொண்டிருந்தான். முதல் நாளிரவு அவள் தன் கையில் சிக்கிக் கிடந்ததைத் திரும்பத் திரும்ப எண்ணிப் பார்த்து, அந்தத் தழுவலளித்த சுகத்தையும், சுகத்தின் பூர்த்தியின்மை அளித்த துன்பத்தையும் நினைத்துப் பெருமூச்செறிந்தான் பலமுறைகள். இருப்பினும் நினைப்பு அளித்த இன்ப நினைவுகளின் காரணமாக இரவு ஏறியதும் உணவைக் கூடக் தொட்டுப் பார்க்காமல் வெளியே கிளம்ப யத்தனித்தான். பரதபட்டனின் பளிச்சிட்ட கண்கள் அவனை நோக்கின. உதடுகள், "எங்கு போகிறாய்?" என்று கேட்டன.

"கடற்கரை மாளிகைக்கு," என்றான் இந்திரபானு கச்சையில் வாளைக் கட்டிக் கொண்டு.

"எதற்கு?" என்று வினவினான் பரதபட்டன்.

"காவல் புரிவதற்கு, காவலை நிறுத்தச் சொல்லி மன்னன் உத்திரவிடவில்லையே?'' என்று பதில் சொன்னான் இந்திரபானு.

பரதபட்டன் அவனை ஒரு வினாடி உற்று நோக்கினான். பிறகு சிரித்துவிட்டுத் தனது பஞ்சணையில் நன்றாக மல்லாந்து படுத்துக் கொண்டான். வேறெதுவும் பரதபட்டன் சொல்லாததால் மெய்க் காவலர் விடுதியை

விட்டு வெளியே வந்த இந்திரபானுவை நோக்கி விடுதிக் காவலன் வணங்கினான்.

நேரங்கடந்த நேரத்தில் இடையில் கச்சையும் வாளும் கட்டி மெய்க் காவலர் விடுதியிலிருந்து வெளியே வந்த போது விடுதிக் காவலன் அவனை எந்த விதத்திலும் தடை செய்யாது மிக அடக்கம் காட்டி நன்றாகத் தலை வணங்கவே செய்தான். இந்திரபானு அவன் நோக்கத்தை அறிய, "நான் வெளியே போகிறேன்," என்று அறிவித்தான் அதிகாரத்துடன்.

"நல்லது" என்றான் விடுதிக் காவலன்.

"எங்கே போகிறேனென்பதைக் கேட்கவில்லையே நீ?" என்றான்.

"மெய்க்காவலரைத் தடை செய்ய நான் யார்?" காவலன் பதிலில் பணிவு அதிகமாயிருந்தது.

"சரி, புரவியொன்று கொண்டு வா," என்று உத்தர விட்டான் இந்திரபானு.

விடுதிக் காவலன் பதிலேதும் கூறாமல் கொட்டடிக்குச் சென்று புரவியொன்றைக் கொண்டு வந்தான்.

புரவியிலேறிக் கொண்டு, "நான் மாளிகைக் காவலுக் குப் போய் வருகிறேன்," என்று அறிவித்தான் இந்திரபானு காவலனிடம்.

விடுதிக் காவலன் அதற்கும் பதில் சொல்லவில்லை. சரியென்பதற்கு அடையாளமாகத் தலையை மட்டும் ஆட்டினான். அங்கிருந்து அரண்மனை மதிலையும் தாண்டி வெளியே வந்த இந்திரபானுவுக்கு முத்துக்குமரி நினைப்புடன், முரசு அறிவித்த செண்டுவெளி நினைப்பும் சேர்ந்து கொள்ளவே அவன் வெகு குதூகலத்துடன் கடற்கரை மாளிகையை நோக்கிப் பெருவேகத்துடன் புரவியைத் தூண்டினான்.

இரவு ஏறியும் சேரன் தலைநகர் அன்று விழித்துக் கிடந்தது. முரசு பல இடங்களில் ஒலித்துவிட்டதன்



காரணமாக மக்கள் வீதி மூலைகளிலும் உப்பரிகைகளிலும் நின்று நான்கு நாட்களுக்குப் பிறகு நடைபெறவிருந்த செண்டு வெளிப் பெரு விழாவைப் பற்றியே பேசிக் கொண் டிருந்தார்கள். எங்கும் நிலவு மங்கலாகப் படர்ந்து கிடந்ததே அந்த நகரத்துக்கு ஓர் அழகைக் கொடுத்ததென்றால், வீதி உப்பரிகையின் மீது காதலருடன் நெருங்கி நின்ற காதலிகள் செண்டு வெளியைப் பற்றிப் பேசிய பேச்சின் உணர்ச்சி வேகமும் இந்திரபானுவின் இதயத்தை ஆழத் தொடவே செய்தது. பாண்டிய நாட்டின் உற்சாகத்தை சேர நாட்டிலும் கண்டான் இந்திரபானு. சந்திரபானுவின் மகனான இந்திரபானு, 'தமிழ் மக்கள் இத்தனை வீர உணர்ச்சி பெற்றிருக்க, தமிழ் மன்னர்கள் மட்டும் சதா போர் புரிந்து தமிழகத்தில் சேதத்தையும் ஏன் விளைவிக்கிறார்கள்?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான். தமிழரின் சிறு பொறாமைகள் எப்படி அவர்களின் பெரும் சக்தியைச் சீரழித்து விடுகின்றன என்பதை எண்ணிப் பெருமூச் செறிந்து கொண்டும், செண்டு வெளியை நினைத்துப் பெருமகிழ்வு கொண்டும் கடற்கரை மாளிகையை எய்தினான்.

இரவு பெரிதும் ஏறியிருந்ததாலும் கடற்கரை மாளிகையில் பந்தங்கள் ஜொலித்துக் கொண்டிருந்தன. தனக்கு 'எப்படியும் மாளிகை வாயிலில் எதிர்ப்பு ஏற்படு மென்பதையும், அப்படி ஏற்பட்டால் மன்னன் தன்னை மெய்க்காவலனாக்கியிருக்கும் காரணத்தைச் சொல்லி உள்ளே புகமுயல வேண்டியிருக்குமென்பதையும் அறிந்தே புரவியில் மாளிகைக்கு முன்னால் வந்து நின்றான் இந்திரபானு. ஆனால் அவனுக்கு எந்தத் தடங்கலும் ஏற்பட வில்லை. வாயிலை அவன் அடைந்ததுமே அங்கிருந்த காவலர் அவனுக்குத் தலை வணங்கி புரவி உள்ளே செல்ல வாயிலை அவசர அவசரமாகத் திறந்துவிட்டனர். அடுத்த வாயிலைத் தாண்டி மாளிகைக்குள் புகுந்த போதும் யாரும் அவனைத் தடை செய்யவில்லை. அவன் காவல் காத்த இடமும் காலியாகவே இருந்தது. அந்த உள்ளறை வாசல்

படிக்கு முன்பாகச் சில வினாடிகள் நின்ற இந்திரபானு மெள்ள முந்தியநாள் உட்கார்ந்த படியில் உட்கார்ந்து கொண்டான். நீண்டநேரம் அப்படியே உட்கார்ந்து கொண்டிருந்த பிறகு அடுத்த கட்டுக் காவலை உற்று நோக்கிவிட்டுச் சமயம் பார்த்து அறைக்குள்ளேயும் நுழைந்தான். அன்றும் முத்துக்குமரி பஞ்சணையில் உட்கார்ந்திருந்தாள். ஆனால் அவள் முகம் முந்தைய நாள் முகமாயில்லை. கிலிபடர்ந்து கிடந்தது முகம் பூராவும். அவனைக் கண்டதும் அவள் உதடுகள் துடித்தன கோபத்தால். "ஏன் இங்கு வந்தீர்கள், யார் வரச் சொன்னது உங்களை?" என்று சீறினாள்.

அவள் மாற்றம் பெரும் மாற்றமாயிருந்தது. அந்தப் பெருமாற்றத்தின் காரணம் அவனுக்கு விளங்கவில்லை. அவளைக் கூர்ந்து நோக்கினான் இந்திரபானு. அவள் அழகிய கண்களில் அவன் எதிர்பார்த்து வந்த காதலில்லை. கனல் இருந்தது. மதிமுகத்தில் கனிவு இல்லை. சினம் தானிருந்தது. குரலில் குழைவு இல்லை கோபம் தானிருந்தது. "இங்கு அரை நிமிஷம்கூட நிற்கவேண்டாம். போய்விடுங்கள்." என்ற முத்துக்குமரி வாயிற்படியையும் சுட்டிக் காட்டினாள்.

இந்திரபானுவுக்குத் தலை சுற்றும் போலிருந்தது. ஏதும் விளங்காமல் பிரமை பிடித்து நின்றான்.

## அத்தியாயம் 12

# வஞ்சிக் காண்டம்

கடற்கரை மாளிகையின் கடையறைக் கட்டிலின் பஞ்சணையில் உட்கார்ந்திருந்த பாண்டியன் பைங்கிளியின் பதற்றத்தையும், சற்றும் எதிர்பாராத மாற்றத்தையுங் கண்ட இந்திரபானு, இரண்டு மூன்று விநாடிகள் அடியோடு செயலற்றுச் சிலையென நின்றுவிட்டான். முதல் நாளிரவு தன் பிணைப்பில் சொந்தத்துடன் சுழன்ற அந்த அழகுப் பிம்பம் ஒரே நாளையில் அந்தமிழந்து விவரிக்க இயலாத வகையில் விந்தைப் பிம்பமாகிவிட்டதன் காரணத்தை அறியாத அந்த வாலிபன், என்ன செய்வது, எதைக் கேட்பது, என்று தெரியாமல் திணறினான். அப்படித் திணறிய நிலையிலும் அவள் கம்பீரத்தையும், மாற்றமடைந்த முகத்திலும் விரிந்துகிடந்த புதுவித சோபையையும் கவனித்த இந்திரபானு, பாண்டிய குமரியின் அழகு ஒவ்வோர் உணர்ச்சிப்பெருக்கின்போதும் வெவ்வேறு விதமாக மாறினாலும் அதன் கவர்ச்சியில் மட்டும் மாறுதலில்லை என்பதை உணர்ந்தான். "இங்கு அரை நிமிஷங்கூட நிற்க வேண்டாம். வெளியே போய்விடுங்கள்" என்று சீறி வாயிற்படியை நோக்கிக் கையைக் காட்டிய தோரணையிலும் கம்பீரமும், கவர்ச்சியும் இருந்ததையும், வாயிற் படியைச் சுட்டிக்காட்ட அவள் கையெழுந்த வேகத்தில் திடமான அழகொன்றும் மேல்நோக்கி எழுந்ததையும், உதடுகள் துடித்த வேகத்தில் உடலின் எழில் முகமும் லேசாகத் துடித்ததையும் கண்ட சிங்கள நாட்டு இந்திர

பானு, சித்தத்தையெல்லாம் அவளிடம் பறிகொடுத்ததால் பேச நா எழாமலே நின்றான்.

அவன் அப்படி அசையாமல் நின்றது அவள் இதயத்தின் கோபத்தைக் கிளறியதா, பரிதாபத்தைப் பறை சாற்றியதா அல்லது அச்சத்தை அள்ளிக்கொட்டியதா என்று திட்டமாகச் சொல்ல முடியாதபடி மூன்று உணர்ச்சி களையும் கலந்து அவள் அழகிய முகத்தில் விரவி விட்டதால் அவள் மீண்டும் சொன்னாள் குழம்பிய குரலில், "தயவுசெய்து போய்விடுங்கள். இங்கு நிற்காதீர்கள்," என்று.

அப்படி இரண்டாம் முறையாக அவள் தன்னை வெளியேற வற்புறுத்தியதும், இந்திரபானு செயலற்ற நிலையிலிருந்து சற்று உணர்ச்சி நிலைக்கு வந்து வினவினான். "ஏன் குமரி! என்னைக் கண்டால் உனக்குப் பிடிக்கவில்லையா?"

முத்துக்குமரியின் விழிகள் அவனை நன்றாக ஏறிட்டு நோக்கின. "இத்தனை நாட்களுக்குப் பிறகு அசட்டுக் கேள்வி!" என்று சொற்கள் இகழ்ச்சியுடன் உதிர்ந்தன.

இந்தப் பதில் இந்திரபானுவின் உள்ளத்தில் அமுத மெனப் பாய்ந்தது. ஆகவே அவன் சற்று வேடிக்கையாகவே சொன்னான்; "என் விகார முகம் உன் இதயத்தை மாற்றி விட்டதோ என்று நினைத்தேன்," என்று.

முத்துக்குமரி பஞ்சணையைவிட்டு இறங்கி இரண்டடிகள் அவனை நோக்கி வந்தாள். "உங்கள் முகம் மாற்றவில்லை என்னை," என்று சற்று சீற்றத்துடன் கூறினாள்.

"வேறு எது மாற்றிவிட்டது குமரி?" என்று வினவினான் இந்திரபானு குழப்பத்துடன்.

"உங்கள் கழுத்து, உங்கள் மார்பு," என்று கூறிய முத்துக்குமரியின் முகத்தில் மீண்டும் அச்சம் படர்ந்தது.

இந்திரபானுவுக்கு ஏதும் விளங்கவில்லை, "என் கழுத்தா? மார்பா? அவற்றுக்கென்ன?" என்று வினவினாள் சற்று தடுமாற்றத்துடன்.



"ஆம். அவையிரண்டை நோக்கித்தான் வீரர்கள் வேலெறிவார்கள். அந்த வேல் செண்டாயுதமாயிருந்தால் மரணம் உடனடியாக நிச்சயம்," என்ற முத்துக்குமரி சோகப் பெருமூச்செறிந்தாள்.

"அதற்கும் எனக்கும் சம்பந்தம்?" என்று வினவினான் இந்திரபானு.

முத்துக்குமரியின் விழிகளில் அச்சம் மறைந்து கோபம் துளிர்த்தது. உண்மையில் "உங்களுக்குப் புரிய வில்லையோ நான் சொல்வது?" என்று வினவினாள் கோபத்துடன்.

"இல்லை, புரியவில்லை," என்றான் இந்திரபானு.

"நீங்கள் நகரத் தெருக்களின் வழியாகத்தானே வந்தீர்கள்?"

"ஆம்."

"அங்கு முரசு கொட்டவில்லையா?"

"கொட்டிற்று. இன்றிலிருந்து நான்காம் நாள் செண்டு வெளியென அறிவிக்கப்பட்டது.

"அதிலிருந்து என்ன புரிகிறது?"

"சேர நாட்டில் வீரம் செத்துவிடவில்லையென்பது புரிகிறது."

முத்துக்குமரி ஒரு விநாடி இருந்த இடத்தில் ஸ்தம்பித்து நின்றாள். பிறகு அவனைக் கூர்ந்து நோக்கினாள். "பாண்டிய நாடும், சேரநாடும் போர்க் கோலம் கொண்டிருப்பது உங்களுக்குத் தெரியுமா தெரியாதா?" என்று மெள்ளக் கேட்கவும் செய்தாள்.

"இதில் ரகசியமென்ன இருக்கிறது? உலகறிந்த விஷய மாயிற்றே? பாண்டிய குமாரியைச் சேரன் சிறையெடுத்த பின்பு பாண்டிய மன்னன் கையைக் கட்டிக்கொண்டு காட்டுக்கோட்டையில் உட்கார்ந்திருப்பானா?" என்று வினவினான் இந்திரபானு.

முத்துக்குமரியின் கண்கள் அறை வாயிலுக்கு வெளியே ஒருமுறை பாய்ந்தன. பிறகு மீண்டும் இந்திர

பானுவின் மீது நிலைத்தன. பாண்டியர் படை இரு பிரிவாகப் பிரிந்து ஒன்று சேரநாட்டு வடதிசை நோக்கியும், இன்னொன்று தென்திசை நோக்கியும் நகர்ந்துவிட்டது, சில நர்ட்களுக்கு முன்பு" என்று அவள் கனவில் பேசுவதுபோல் சொற்களை உதிர்த்தாள்.

இம்முறை இந்திரபானுவின் முகத்தில் வியப்பு விரிந்தது. "அப்படியா!" என்ற சொல்லில் அந்த வியப்பு மட்டுமல்ல, அச்சமும் தெரிந்தது.

முத்துக்குமரி கனவில் பேசுவதுபோல் மேலும் சொன்னாள்; "இந்தச் சிறைவாசத்தில் பல விஷயங்களை நான் அறிந்தேன். எனது சிறிய தந்தை வீரபாண்டியர் படைப் பிரிவு ஒன்றுடன் சேரர் வடக்கெல்லைக்குச் சென்றதாகவும், எனது தந்தை சுந்தரப்பாண்டியப் பெருமான் இன்னொரு படைப் பிரிவுடன் இத்தலைநகர் நோக்கி வந்ததாகவும் கேள்விப்பட்டேன். உங்களுக்குப் பதிலாக உபதளபதியாக வீரபாண்டியருடன் கொற்கைக் கோட்டைக் காவலன் மகளான இளநங்கை சென்றிருப்பதாகவும் கேள்விப் பட்டேன். வீரபாண்டியன் கோட்டாற்றுக் கரையை அடைந்துவிட்டதாகக்கூடச் செய்தி கிடைத்தது. இங்கிருந்தும் பெரும்படையொன்று கோட்டாற்றுக் கரை நோக்கிச் சென்றதாகவும் கேள்விப்பட்டேன்." இந்த இடத்தில் உணர்ச்சிப் பெருக்கின் காரணமாகச் சற்று நிதானித்து, பெருமூச்செறித்தாள் பாண்டியன் மகள்.

இந்திரபானுவின் விகார முகம் மேலும் விகாரமடைந்தது. அந்த விகாரத்தில் அது கெட்டிப்பட்டு கல்லாகிவிட்டதாகக்கூடத் தெரிந்தது. அவன் குரலும் கருங்கல்லை விடக் கடுமையாக ஒலித்தது. அவன் பெருமூச்சுக்குக் குறுக்கே "வேறென்ன கேள்விப்பட்டாய்?" என்ற சொற்கள் சினத்துடன் உதிர்த்தன அவன் உதடுகளிலிருந்து.

முத்துக்குமரி கனவுலகத்தில் இருந்தாள். அவன் கடுமைக் குரல் அவளைச் சற்றும் பாதிக்கவில்லை. உணர்ச்சிப் பெருக்குடன் மேலே சொன்னாள்; "தரைப் படையைப் போசளத் தண்டநாயகனும் பெருவீரனுமான



சிங்கணன் நடத்திச் சென்றதாகவும் கேள்விப் பட்டேன். அதற்கு உதவியாகக் கடற்படை யொன்றும் இயங்கியதாகக் கேள்விப்பட்டேன். இந்த இரு படைகளும் வீரபாண்டியர் படையை அழிப்பது நிச்சயம் என்றும் கேள்விப்பட்டேன். இத்தனைக்கும் என் தந்தை சுந்தரபாண்டியர் ஏதும் செய்யவில்லையென்றும் அறிந்தேன். எல்லைக் கிராமங்களைக் கொளுத்தினாராம். பயிர்பச்சைகளைக் கொளுத்தினாராம். பெரும் வீரரான அவர் இதைத்தான் செய்தாராம். சேரர் படைகளைக் கண்டபோதெல்லாம் காட்டில் மறைந்தாராம். அவர் படை எங்கு சஞ்சரிக்கிறது, எப்படிச் சஞ்சரிக்கிறது என்று தெரியவில்லையாம். எப்படிச் சஞ்சரித்தாலும், பயிரைக் கொளுத்துவதும் கிராமங்களை அழிப்பதும், வீரர்களுக்கு அழகல்லவென்று மக்கள் பேசிக் கொள்கிறார்களாம்." இத்துடன் முத்துக்குமரி நிறுத்தினாள். வெறுப்பும் சோகமும் கலந்த பெருமூச்சொன்று அவரிடமிருந்து வெளிவந்தது.

இந்திரபானு ஸ்தம்பித்து நின்றான். அவன் வாயிலிருந்து நீண்டநேரம் சொற்களேதும் வெளிவரவில்லை. "இதையெல்லாம் யார் சொன்னது உனக்கு?" என்று கடைசியாக வினவினான் வறண்ட குரலில்.

முத்துக்குமரியின் பதில் தடங்கலின்றி வெளிவந்தது "கூத்தன்," என்று பதில் சொன்னாள் முத்துக்குமரி.

"இத்தனையும் கூத்தனா சொன்னான்?" என்ற இந்திர பானுவின் குரலில் சினமிருந்தது.

"ஆம், கூத்தன் மிகவும் நல்லவன். என்னிடம் அவன் காட்டிய பிரியத்தை ஒரு சகோதரன்கூடக் காட்ட மாட்டான். ஒவ்வொரு நாளும் இரவுக் காவலுக்கு அவன் தான் வருவான். இரவு வெகுநேரம் நாங்களிருவரும் பேசிக் கொண்டிருப்போம்" என்றாள் முத்துக்குமரி,

"அப்பட்யா?"

"ஆம். முதல் நாளிரவும் நீங்கள் வந்ததும் உங்களை நான் அழைக்கவில்லையா ரகசியமாக?"

"ஆம் அழைத்தாய்."

"ஏன் அழைத்தேன்?"

"சொல்."

"கூத்தனென்று நினைத்து அழைத்தேன்."

அது இந்திரபானுவுக்குத் தெரிந்தேயிருந்தபடியால் அவன் அதற்குக் காரணம் கேட்கவில்லை. "இப்போது புரிகிறது, புரிகிறது," என்றான் இந்திரபானு.

முத்துக்குமரிக்கு ஏதும் புரியாததால் கேட்டாள், "என்ன புரிகிறது?" என்று.

"கூத்தன் வாயினால் கெட்டான் என்பது," என்று கூறிய இந்திரபானு, "ஒற்றனாயிருப்பவன் அதிகமாகப் பேசக்கூடாது. பேசினதால்தான் அவன் அகப்பட்டுக் கொண்டான். வீரர்கள் துரத்தியும் தெய்வாதீனத்தால் பிழைத்தான்," என்றும் சொன்னான்.

இந்திரபானு கூத்தனைப்பற்றிக் குறை கூறியது முத்துக்குமரிக்குப் பிடிக்கவில்லை. "ஒற்றர்களின் இலக்கணம் என்ன?" என்று சீற்றத்துடன் கேட்டாள்.

"மாறுவேடத்தில் உலாவுதல், மௌனமாயிருந்தல்," என்றான் இந்திரபானு.

"நீங்கள் மாறுவேடத்தில் தானிருக்கிறீர்கள். மௌன மாகவும் இருந்திருப்பீர்கள். விளைவு என்ன?" என்று வினவினாள் முத்துக்குமரி.

"இன்னும் சுதந்திரத்துடன் உலவுகிறேன். வீரர்கள் என்னைத் துரத்தவில்லை, என் மீது குறுவாளெறியவு மில்லை" என்றான் இந்திரபானு.

"உங்கள்மீது குறுவாளெறியமாட்டார்கள்," என்று முத்துக்குமரி கூறி இகழ்ச்சி நகை கோட்டினாள்.

"வேறென்ன எறிவார்கள்?" என்று கேட்டாள் இந்திரபானு.



"செண்டு எறிவார்கள். வீரரல்லவா நீங்கள்!" என்ற முத்துக்குமரியின் பேச்சில் இகழ்ச்சியிருந்தது.

"எப்படித் தெரியும் உனக்கு?" என்று சீற்றத்துடன் கேட்டான் இந்திரபானு.

"கூத்திடுவோரைக் காக்க மதயானையை நோக்கி வேலெறிபவர் மீது செண்டெறியாமல் வேறெதை எறிவார்கள்?" என்று வினவினாள் முத்துக்குமரி.

மீண்டும் ஸ்தம்பித்து நின்றான் இந்திரபானு. "இதை யும் கூத்தன் சொன்னானா?" என்று வினவினான் ஒரு விநாடி கழித்து.

அவள் பதில் அவனை மீண்டும் அசரவைத்தது. "இல்லை. சேர மன்னன் சொன்னான்," என்றாள் முத்துக்குமரி.

"எப்பொழுது சொன்னான்?"

"சற்று முன்பு."

"எதற்காகச் சொன்னான்?"

"உங்கள் சமர்த்தை நிரூபிப்பதற்காகச் சொன்னான். நீங்கள் யார் என்பது வீரரவிக்கு நன்றாகத் தெரிந்துவிட்டது. நாட்டைப் போர் நெருங்கியுள்ள இந்தச் சமயத்தில் சேர மன்னன் செண்டுவெளியை ஏன் ஏற்பாடு செய்கிறான்? உங்களை அழிப்பதைத் தவிர வேறென்ன நோக்கம் அவனுக்கிருக்க முடியும்?" என்று கேட்டாள் முத்துக்குமரி. அத்துடன் மேலும் சொன்னாள்; "சேரமன்னன் சற்று முன்பு இங்கு வந்து மிகச் சுலபமாகவும் சாமர்த்தியமாகவும் பேச்சின் இடையிடையே புதுக் காவலனைப்பற்றிப் பிரஸ்தாபித்தான். புதுக் காவலன் வேறு நாட்டவன் என்பதை வலியுறுத்தினான்; வீரர்கள் வேலெறிவதைக் கண்டு களிப்பது அரசமகளிர் இயல்பு என்றும் கூறினான். 'செண்டுவெளியில் நீயே காணப் போகிறாய் அதை' என்றும் சொன்னான். வேறொன்றும் சொன்னான்..." இந்தச்

சமயத்தில் அவள் கண்களில் நீர் தேங்கியது. துக்கமும் கோபமும் தொண்டையை அடைத்துக்கொண்டன.

"வேறென்ன சொன்னான்?" இந்திரபானு கேட்டான் கோபத்துடன்.

"என்னை இந்த நாட்டு ராணியாக்கப் போவதாகவும் கூறினான்," என்று முத்துக்குமரியின் குரல் தடுமாறித் தடுமாறி ஒலித்தது.

இந்திரபானுவின் முகம் பரம விகாரத்தை அடைந்தது. கண்களில் கொடூரம் மிதமிஞ்சித் தெரிந்தது. "இந்திரபானு இருக்கும்வரையில் அது நடக்காது."

முத்துக்குமரி கண்களில் எழுந்த நீரை அடக்கிக் கொண்டாள். துளித்த ஓரிரண்டு பொட்டுக்களைத் துடைத்துக் கொண்டு மீண்டும் மன உறுதி படைத்த, கொற்கையில் வேவு பார்க்க வந்த பாண்டியகுமாரியாக மாறினாள். அடுத்து எழுந்த அவள் சொற்களில் சோகமில்லை, துக்கமில்லை, கம்பீரமே இருந்தது. உணர்ச்சிகளைப் பறக்கவிட்டதற்குச் சிறிது வெட்கமடைந்தாள் பாண்டிய மகள். அந்தத் தோரணையில் உறுதியுடன் கூறினாள். "இந்திரபானு இருக்கும்வரையில் நடக்காதென்று தெரியும் சேர மன்னனுக்கு. ஆகவே இந்திர பானுவைச் செண்டுவெளியில் ஒழிக்கப் பார்க்கிறான்."

"இந்திரபானுவை ஒழிக்கச் செண்டுவெளி எதற்கு? இப்பொழுதே சிறை செய்து வெட்டுப்பாறைக்கு அனுப்ப லாமே?" என்று வினவினான் இந்திரபானு.

முத்துக்குமரி அதற்கும் விடை தந்தாள்; "சாதாரண எந்த மன்னனும் நீங்கள் சொல்வதுபோலத்தான் செய் வான். ஆனால் சேரமன்னன் அசாதாரணமான அறிவு படைத்தவன். உங்களை இந்திரபானுவென்று ஒப்புக் கொண்டு சிறைசெய்தால் உங்கள் தந்தை சந்திரபானுவின் விரோதம் ஏற்படும். அவர் விரோதமிருந்தால் கடல் வலு பாதிக்கப்படும். பாண்டியர் படையெடுப்பு ஏற்பட்டுள்ள சமயத்தில் உங்கள் தந்தையை விரோதம் செய்துகொள்வது



முட்டாள்தனம் என்பதை வீரரவி அறிவான். ஆகவே உங்களை யாரென்று அறிவிக்காமலே அழித்துவிடப் பார்க் கிறான். நீங்கள் செண்டுவெளியில் இறந்தால் அதற்கு மன்னன் பொறுப்பாளியல்ல. அதுவும் யாரோ ஒரு காவலன் எறிந்தானென்றால் யாரும் கேட்கப் போவதில்லை. சேரமன்னன் திட்டம் அவன்மீது எந்தவித அவதூறையும் விளைவிக்காது. இத்தகைய கடும் போர்க் காலத்திலும் செண்டுவெளியை ஏற்பாடு செய்ததுபற்றிச் சக மன்னர்கள் அவனைப் போற்றவே செய்வார்கள். இந்தச் செண்டு வெளியால் தனது மதிப்பை உயர்த்திக்கொள்வான் சேர மன்னன். முக்கிய விரோதியான உங்களையும் அழித்து விடுவான். இரண்டு லாபம் அவனுக்கு" என்றாள் பாண்டியன் மகள்.

முத்துக்குமரியின் விளக்கம் இந்திரபானுவின் கண்களை நன்றாகத் திறந்துவிட்டது. அதன் விளைவை நினைத்து அவன் நடுங்கினான். தன் மரணத்தைப்பற்றி யல்ல அவன் அஞ்சியது. செண்டுவெளியில் தன்னை அழிக்க கூடியவன் சேர நாட்டில் இனி பிறந்தால்தானுண்டு என்ற கர்வம் இருந்தது அவனுக்கு. ஆனால் ஒருவேளை இறந்தால் முத்துக்குமரியின் கதி என்ன ஆகும் என்று யோசித்தான் அவன். அதன் விளைவாகக் கூறினான், "லாபம் இரண்டல்ல முத்துக்குமரி, மூன்று," என்று.

"மூன்றாவது எது?" என்று கேட்டாள் பாண்டியன் குமரி.

"நீ" என்றான் இந்திரபானு.

முத்துக்குமரி பதிலுக்கு நகைத்தாள். "அது நடவாது" என்று திட்டமாகக் கூறினாள்.

"ஏன்? அதற்கு என்ன தடை?" என்று வினவினான் இந்திரபானு.

"இது சேரநாடு," என்று சுட்டிக் காட்டினாள் முத்துக் குமரி.

"இருந்தாலென்ன?" என்று கேட்டான் இந்திரபானு.

முத்துக்குமரியின் முகத்தில் வீரக்கனல் நிறைந்தது. அந்தச் சிறையிலும் அவள் பாடல் சொன்னாள், வேகத்துடன் சொன்னாள், விளைவைப் பொருட்படுத்தாமல் சொன்னாள்.

"கானவேங்கைக் கீழோர் காரிகை
தான்முலை இழந்து, தனித்துயர் எய்தி,
வானவர் போற்ற, வானகம் பெற்றனள்;
எந்நாட்டாள் கொல்? யார்மகள் கொல்லோ"

முத்துக்குமரியின் மெல்லிய குரலில் இழைத்த அந்த வரிகளில் ஒலித்த உண்மை சிங்கள நாட்டவனான இந்திர பானுவுக்கு விளங்கவில்லை, முத்துக்குமரியே அதை விளக்கினாள். "இந்த வஞ்சி நாட்டிலே வானகம் பெற்றவள் புகாரின் வஞ்சி. நான் சொன்னவை சிலப்பதிகார வஞ்சிக் காண்டத்திலே காட்சிக் காதையில் இளங்கோ அடிகள் இதயத்திலிருந்து எழுந்த வரிகள். இதை இங்கு மக்கள் எப் பொழுதும் பாடுகிறார்கள். பத்தினிக்குக் கோயிலமைத்த நாடு இது. இங்கு வேந்தனும் முறைதவறி நடக்க முடியாது. ஆகையால் தான் மன்னன் என்னை இத்தனை நாள் சிறை வைத்திருக்கிறான். உங்களை அழிக்கச் செண்டுவெளி யெனும் சதியையும் ஏற்படுத்துகிறான். சேரன் மிகத் தந்திரமாகவும், மக்கள் ஆட்சேபிக்காத முறையிலும், உங்கள் தந்தை ஏதும் அறியாதவகையிலும் உங்களை அழித்து விட இந்த நாடகம் நடத்துகிறான். ஆகவே சீக்கிரம் இங்கிருந்து சென்றுவிடுங்கள். இந்த நாட்டை விட்டே அகன்று விடுங்கள். என்னைப்பற்றிக் கவலை வேண்டாம். என் தந்தையின் வெற்றிப்படையுடன் நீங்கள், வாருங்கள்," என்றாள் முத்துக்குமரி வேகத்துடன்.

ஆனால் அந்தச் சொற்களில் ஒலித்த எதிர்பார்ப்பு - பாண்டியனின் வெற்றியைப்பற்றிய எதிர்நோக்கு - அதே சமயத்தில் அடியோடு அர்த்தமற்று அழிந்து கொண்டிருந்ததை அவள் அறியவில்லை. வீரரவி உதயமார்த்தாண்ட



வர்மன் அதே சமயத்தில் தனது அறைவிளக்கில் ஓலையொன்றைப் படித்துக்கொண்டிருந்தான். அதைப் படித்ததும் ஏற்பட்ட குதூகலத்தால் வானத்தை நோக்கிக் கண்களை உயர்த்தினான். எந்தப் பத்தினித் தெய்வத்தைப் பற்றி முத்துக்குமரி குறிப்பிட்டுக்கொண்டிருந்தாளோ, அதே பத்தினித் தெய்வத்தைப்பற்றிச் சேரமன்னனும் நினைத்து வணங்கினான். 'பத்தினித் தெய்வம் எனக்குத்தான் அருள் புரியும். கணவனைக் கொன்ற பாண்டிய நாட்டுக்குக் கண்ணகித் தெய்வம் எப்படி உதவும்? கணவனுடன் சேர்த்துவைத்த வஞ்சி நாட்டுக்குத்தான் அது உதவும், என்று தனக்குத்தானே கூறிக் கொண்டான். மகிழ்ச்சி மிகுதியால் பலமுறை கையிலிருந்த ஓலையைப் படிக்கவும் செய்தான். "இக்கால வஞ்சிக்காண்டம் இது," எனச் சொல்லிப் பெரும் பூரிப்பும் எய்தினான்.

## அத்தியாயம் 13

# மந்திரமும் மனக் கதவும்

**வ**ஞ்சிமாநகர் எது என்பதுபற்றிச் சரித்திர ஆசிரியர்களுக்குள்ளே சண்டையுண்டு. புலவர்களிடையேயும் பூசல் உண்டு. வஞ்சி என்பது திருச்சி அருகேயுள்ள கரூரா அல்லது மலையாளத்தின் திருவஞ்சிக்குளமா என்ற கேள்வி இன்னும் தீராத கேள்வியாவும், தீராத சர்ச்சைக்கிடமாகவுமே இருந்து வருகிறது. ஆனால், "அஞ்சியில் ஓதி! அறிக எனப் பெயர்ந்து, முதிரா முலைமுகத்து எழுந்த தீயின், மதுரை மூதூர் மாநகர் சுட்ட வஞ்சியின் நெஞ்சுருக்கும் கதையைப்பற்றி மட்டும் இன்றளவு சர்ச்சையில்லை, சமருமில்லை. தமிழ் மக்களுக்கு இலக்கியச் சுவையூட்டும் செந்தமிழ்ச் சுனையாகவே அது இன்றும் விளங்கி வருகிறதென்றால், சேரரும், சோழரும் பாண்டியரும் வாழ்ந்த அன்று அதன் சிறப்பைப் பற்றிக் கேட்பானேன்? அன்று அது தர்மத்துக்கு எச்சரிக்கையாகவும், கன்னியர் கற்பைக் காக்கும் பெருந்துணையாகவும் விளங்கி வந்தது. மக்கள் பத்தினித் தெய்வத்தை எண்ணி இன்றும் சிறிது அஞ்சுகிறார்களென்றால் அன்று ஆயிரம் மடங்கு அதிகமாக அஞ்சினார்கள். ஆகவே முத்துக்குமரி சிலப்பதிகார வரிகளை* உணர்ச்சியுடன் இசைத்து, சேர நாட்டில், மன்னனும் என்னை இஷ்ட விரோதமாகத் தீண்ட முடியாது," என்று சொல்லியதை உண்மையென்றே இந்திர பானுவும் நம்பினான்.

* சிலப்பதிகாரம் வஞ்சிக்காண்டம் காட்சிக் காதை வரி. 5 முதல் 77 வரை.



இருப்பினும், தமிழகத்தில் அதிகப் பழக்கமில்லாத காரணத்தால் ஓரளவு பயத்துடனேயே முத்துக்குமரியின் அறையிலிருந்து வெளியே வந்து மாளிகை வாயிலை நோக்கித் தீவிர சிந்தனையுடன் நடந்தான். மாளிகை வாயிலுக்கு வந்த பின்பு, வீரர்கள் கொணர்ந்து நிறுத்திய புரவிமீது ஆரோகணித்து மதிலைத் தாண்டியபோதும் அதற்கு பிறகு கூட அவன் யோசனையிலேயே ஆழ்ந்திருந்ததால் புரவியை இஷ்டப்படி நடக்கவிட்டான். போகிற திசை தெரியாமல் போய்க் கொண்டுமிருந்தான்.

அவன் நினைப்பெல்லாம் முத்துக்குமரி சொல்லிய பல விஷயங்களிலே லயித்திருந்தது. அவள் சொன்னதில் செண்டுவெளி மர்மத்தைத் தவிர வேறெதுவும் அவனுக்குப் புதிதல்ல, காட்டுக் கோட்டைப் பாதையிலிருந்து அவனையும் அவளைச் சிறை செய்த வீரர்களையும் பின் தொடர்ந்த அவன் சேரநாட்டுத் தலைநகர் எல்லைக்குப் பிறகு அவளைத் தொடரமுடியவில்லையாயினும் அவளைப்பற்றி விசாரிக்கத் தவறவில்லை. ஆனால் வீரரவியின் சாமர்த்தியமான ஏற்பாட்டின் விளைவாக முத்துக்குமரி சிறை வைக்கப்பட்ட இடத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லையென்றாலும், அதற்கான முயற்சியை மட்டும் அவன் கைவிடவில்லை. அந்த முயற்சியின் போது ஒரு நாள்தான் அவன் பரதபட்டனைச் சந்தித்தான். மலைக் காட்டுக்குள்ளே ஒரு குடிசையில் தன்னந்தனியே வசித்து வந்த பரத பட்டனை முத்துக்குமரியைத் தேடியலைந்து கொண்டிருந்த ஒரு நாளில் அவன் கண்டான். தூரத்திலிருந்து கண்ணுக்குத் தெரிந்த இருபெரும் குதிரைகளைக் கண்டு அவற்றைப் பார்க்கத் தனது புரவியை நடத்திச் சென்ற இந்திரபானு அந்தக் குதிரைகளிரண்டும் மண் குதிரைகளென்பதைக் கண்டு வியப்புற்றான். அங்கு அந்தக் குதிரைகள் மட்டுமின்றி வேறு பலவித பட்சிகளும் மிருகங்களும் மண்ணினால் சமைக்கப்பட்டிருப்பதையும் அவற்றுக்கெல்லாம் வர்ணம் பூசப்பட்டிருந்ததையும் கண்டு வியந்து நின்றுகொண்டிருந்த சமயத்தில் வயோதிகனான பரதபட்டன் வெளியே வந்து, "யாரப்பா நீ?" என்று வினவினான்.

"வெளிநாட்டவன்," என்று விடை கூறினான் இந்திர பானு.

அந்தப் பதில் பரதபட்டனுக்கு வியப்பையோ வேறு எந்த உணர்ச்சியையோ அளிக்குமென்று இந்திரபானு நினைத்திருந்தால் அவன் ஏமாந்தேபோயிருப்பான். ஆழத்தி லிருந்த பரதபட்டன் கண்கள் அவனைக் கண்டுபளிச் சிட்டன ஒரு வினாடி. அடுத்த வினாடி அவன் உதடுகள் விஷமச் சிரிப்பைக் கக்கின. "நல்லது. இங்கு எதற்கு வந்தாய்?" என்று வினவினான் பரதபட்டன்.

"காரணம் ஏதுமில்லை" என்றான் இந்திரபானு

"வழி தவறி வந்தாயா?"

"இல்லை."

"இந்தக் குதிரைகளைப் பார்த்து வந்தாயா?"

"ஆம்."

"உள்ளே வா."

பரதபட்டனின் இந்த அழைப்பின் பேரில் புரவியை விட்டிறங்கிப் பரதபட்டனுடன் குடிசைக்குள் நுழைந்த இந்திரபானு, அங்கியிருந்த காட்சியைக் கண்டு பிரமித்துப் போனான். குடிசையின் உட்புறம் மிகப் பெரியதாயிருந்தது. எங்கும் பலப்பல புராண உருவங்கள் காட்சியளித்தன. ஒரு புறம் பரசுராமன், இன்னொருபுரம் இரணியன், மற்றொரு புறம் இராமன், இலக்குவன், சீதை, அனுமான் நால்வரும், வரிசையாகக் காட்சியளித்தனர். ஒரு மூலையில் அந்தப் பகல் வேளையிலும் ஒரு பெரும் குத்துவிளக்கு எரிந்து கொண்டிருந்தது. அந்தக் குத்துவிளக்கிலிருந்த வேலைப் பாட்டையும் அதன் தலையில் சிறகு விரிந்து உட் கார்ந்திருந்த கருட சிற்பத்தையும், குத்துவிளக்கின் ஜொலிப்பையும் பார்த்த இந்திரபானு பிரமித்தான் முதலில் மற்ற பிம்பங்களைப் பார்த்தே அதிசயித்து வந்த அவன், அந்தக் குத்துவிளக்கைக் கண்டு எல்லையில்லா வியப்பை அடைந்தான்.



அவன் நினைப்பை முன்கூட்டியே உணர்ந்த பரத பட்டன், "இது பத்தரைமாற்றுத் தங்கம். சந்தேகம் வேண்டாம்" என்று கூறினான். அது மட்டுமல்லாமல் குடிசைக் கூரையிலிருந்து தொங்கிய சில மணிமாலை களையும் சுட்டிக்காட்டி, "இது நவமணிமாலை, இது சுத்த வைரம், இதில் நான்கு கோமேதகம், நான்கு மாணிக்கம்," என்று அலட்சியமாகச் சுட்டியும் காட்டினான்.

இந்திரபானுவின் நா பேச மறுத்தது. உணர்ச்சிகள் பல வழிகளில் சஞ்சரித்தன. 'காட்டில் இத் தனிக் குடிசையில் விலை மதிக்க முடியாத சொர்ணத்தையும், வைர, கோமேதக மாணிக்கங்களையும் வைத்துக்கொண்டு எந்தத் துணிவுடன் வசிக்கிறான் இந்த மனிதன்?' என்று தன்னைக் கேட்டுக் கொள்ளவும் செய்தான். அந்தக் கேள்வி கண்களிலும் தெரிந்திருக்க வேண்டும். ஆகவே பரத பட்டன் அவனை நோக்கிச் சொன்னான், "இந்த மணிகளல்ல, சொர்ணக் குத்துவிளக்கல்ல, இங்குள்ள எதையும் யாரும் தொடமுடியாது" என்று.

"ஏன்?" என்று வினவினான் இந்திரபானு.

"இவற்றுக்குக் காவலிருக்கிறது" என்றான் பரத பட்டன் புன்சிரிப்புடன்.

"என்ன காவல்?" என்று வினவினான் இந்திரபானு அத்தனை வியப்பிலும் சற்று இகழ்ச்சியுடன்.

பரதபட்டன் அதற்கு உடனடியாகப் பதில் சொல்ல வில்லை. மீண்டும் புன்முறுவல் கொண்டான். பிறகு "உண்மை உண்மை," என்று சொன்னான் வெளிப் படையாக.

"என்ன உண்மை?" இம்முறை சற்றுக் கோபத்துடன் எழுந்தது இந்திரபானுவின். கேள்வி.

"நீ வெளிநாட்டவன் என்பது," என்றான் பரத பட்டன்.

"அதைத்தான் ஆரம்பத்திலேயே சொன்னேனே?"

"யார் எதைச் சொன்னாலும் நான் உடனடியாக நம்புவதில்லை. நானே முடிவு செய்கிறேன்."

"இப்பொழுது முடிவு செய்துவிட்டீராக்கும்?"

"ஆம்."

"எப்படியோ?"

"இங்குள்ளவற்றுக்குக் காவலில்லை என்று நீங்கள் நினைத்ததிலிருந்து."

"அப்படியானால் பெரும் காவலிருக்கிறதா?"

"ஆகா." பரதபட்டன் பதில் மிகத் திட்டமாக வெளி வந்தது.

இந்திரபானு குடிசையின் உட்புறத்தை ஊடுருவிப் பார்த்தான். வெளியே சென்று சுற்றும் முற்றும் பார்த்தான். அங்கிருந்த மண்குதிரைகள், சில புற்றுகள், மரங்களிலிருந்து கூவிய கிள்ளைகள், நகர்ந்துகொண்டிருந்த ஓணான்கள், மலைப் பல்லிகள்—இவை தவிர எதையுமே காணோம். ஆகவே மீண்டும் குடிசைக்குள் நுழைந்தான். அவன் வெளிச் சென்றபோது நின்றுகொண்டிருந்த பரதபட்டன் அவன் திரும்பியபோது ஒரு புலித்தோலில் உட்கார்ந்து கொண்டிருந்தான்.

இந்திரபானு உள்ளே நுழைந்ததும், "என்ன, ஏதாவது தெரிகிறதா?" என்று வினவினான் பரதபட்டன் இந்திர பானுவை நோக்கி நகைத்தவாறு.

"இல்லை ஏதும் தெரியவில்லை," என்றான் இந்திர பானு அந்த நகைப்பை, ரசிக்காமல்.

"அப்படியானால் நான் அனாதையாயிருக்கிறேன். அப்படித்தானே உன் எண்ணம்?" என்று வினவினான் பரதபட்டன் தனது ஆழக் கண்களைச் சிமிட்டி.

"ஆம். அப்படித்தான் நினைக்கிறேன்," என்று உறுதி யுடன் கூறினான் இந்திரபானு,

பரதபட்டன் ஒரு வினாடி சிந்தித்துவிட்டுச் சொன்னான், "சிறிது சோதித்துப் பார்ப்பதுதானே?" என்று.

"எதைச் சோதிப்பது? எப்படிச் சோதிப்பது?" என்று வினவினான் இந்திரபானு.



"தம்பி, நீ வாலிபன். நான் கிழவன். இங்கே ஓர் அரசை விலைக்கு வாங்குவதற்குரிய பொருள்கள் இருக்கின்றன. ஏதாவதொன்றை எடுத்துப் பாரேன்?" என்றான் பரத பட்டன்.

இந்திரபானுவுக்குச் சிரிப்பதா, கோபிப்பதா என்று தெரியவில்லை. 'காட்டில் தன்னந்தனியே இருக்கும் இந்தக் கிழவன் ஏதோ ஆயிரக்கணக்கான காவலரைவைத்திருக்கும் துணிவுடன் பேசுகிறானே?' என்று எண்ணினான். எண்ணியதுடன் நிற்காமல் செய்கையிலும் இறங்கினான்.

"கிழவரே! அதோ, அந்தக் குத்துவிளக்கு விலைமதிப் பற்றது. அது பூர்ண சொர்ணம் மட்டுமல்ல, அதில் விலை மதிக்க முடியாத வைர வைடூரியங்கள் பதிக்கப் பெற்றிருக் கின்றன. அந்தக் கருடன் கண்கள் இரண்டே பெரும் விலை பெறும். ஆகவே அந்தக் குத்துவிளக்கை எடுத்தால் என்ன செய்வீர்?" என்று சீறினான்.

"முயன்று பார் தம்பீ!" வெகு சாவதானமாகவும் இகழ்ச்சியுடனும் வெளிவந்தது பரதபட்டன் பதில்.

இந்திரபானு இரண்டடி நடந்து அந்தக் குத்துவிளக் கின் முகப்பைத் தொட்டான். அடுத்த வினாடி அவன் முற்றும் எதிர்பாராத, வீரனான அவனுக்கும் குலைநடுக்கம் எடுக்கக் கூடிய, விபரீத நிகழ்ச்சியொன்று ஏற்பட்டது. குத்துவிளக்கின் கருட முகப்பில் அவன் கை வைத்த வுடனேயே "உஸ் உஸ்," என்று பெருமூச்சொன்று குடிசையின் ஒரு மூலையில் கேட்டது. அந்தச் சப்தம் திரும்பத் திரும்ப அறை பூராவும் கேட்கும்படி ஒலிக்கவே அந்தத் திசையை நோக்கிக் கண்களைச் செலுத்தினான் இந்திரபானு. குடிசையின் கோடியிலிருந்து சிறு புற்றிலிருந்து எழுந்து படமெடுத்துச் சீறிய வண்ணம் நின்று கொண்டி ருந்தது ஒரு கிருஷ்ண சர்ப்பம். இந்திரபானுவின் கண்கள் அதை அச்சத்துடன் நோக்கினாலும் கைமட்டும் குத்துவிளக்குப் பிடியை விடவில்லை. ஆனால் சற்றுப் படமெடுத்து நின்ற கிருஷ்ண சர்ப்பம், புற்றை விட்டுக் கிளம்பி அவனை நோக்கி வந்தது. இந்திரபானு அடுத்த

வினாடி குத்து விளக்கை விட்டான். அவன் கை கச்சையிலிருந்து குறுவாளை நாடியது.

பரதபட்டன் மட்டும், "முட்டாள்! நில்!" என்று அதட்டியிருக்காவிட்டால் அவன் குறுவாளெறிந்து சர்ப்பத்தை அழித்திருப்பான்.

ஆனால் பரதபட்டன் குரல் கடுமையாகவும் திடமாகவும் இருந்தது. "முட்டாள், நில்!" என்ற சொற்களை அடுத்து, "குறுவாளிலிருந்து கையை எடு" என்ற சொற்களும் அவன் வாயிலிருந்து உதிர்ந்தன கடுமையுடன்.

"ஏன்?" என்று வினவினான் இந்திரபானு.

"இந்த ஒரு சர்ப்பம் மடிந்தால் நூறு சர்ப்பங்கள் குடிசைக்குள் நுழைந்துவிடும்," என்று கூறினான் பரத பட்டன்.

பெரும் போர்களைப் பற்றி லட்சியம் செய்யாத இந்திரபானு அந்த சர்ப்ப கோஷ்டியை நினைத்துக் குலை நடுக்கம் கொண்டான். அவன் நெஞ்சு அப்படி நடுங்கிக் கொண்டிருந்ததை பரதபட்டனும் கவனித்ததால் கூறினான், "பயப்படாதே! இப்பொழுது சர்ப்பத்தைப் பார்," என்று.

சர்ப்பத்தைப் பார்த்தான் இந்திரபானு. அது மீண்டும் திரும்பிப் புற்றை நோக்கிச்சென்று கொண்டிருந்தது. அதன் காரணத்தைப் பரதபட்டன் விளக்கினான். "நீ குத்து விளக் கிலிருந்த கையை எடுத்ததும் அது திரும்பிவிட்டது. இங்குள்ள சொத்துக்களுக்கு இந்தச் சர்ப்பமும் இதன் குடும்பமும் பொறுப்பாளிகள். சர்ப்பத்துக்கு ஒரு குணம் உண்டு. தானாக யாரையும் தீண்டாது. ஒன்று நாம் அதைத் தவறி மிதிக்க வேண்டும் அல்லது அதன் வர்க்கத் திலொன்றைக் கொல்ல வேண்டும், வேறு தீயசெயல்களைச் செய்யவேண்டும். இல்லையேல் அது கிட்டே வராது. இங்கு தான் மனிதனுக்கும் அதற்குமுள்ள வித்தியாசம். மனிதன் காரணமில்லாமல் எதையும் யாரையும் கொல்வான். எந்தத் தீவினையும் செய்வான்," என்ற பரதபட்டன், "அது மட்டு மல்ல..." என்று மற்றொரு சொல்லையும் கூட்டினான்.

"வேறென்ன?"



"சர்ப்பம் சத்தியத்துக்குக் கட்டுப்படும். மனிதன் அதற்குக் கட்டுப்படமாட்டான்," என்றான் பரதப்பட்டன்.

"ஆம்," என்று ஒப்புக்கொண்டான் இந்திரபானு.

"சரி, நீயாவது சத்தியத்தைப் பேசு, நீ யார்? எங்கு வந்தாய்?" என்று வினவினான் பரதபட்டன்.

பரதபட்டனை ஒருமுறை உற்று நோக்கினான் இந்திர பானு. பட்டன் கண்கள் அவனைப் பெரிதும் கவர்ந்திருக்க வேண்டும். அவற்றின் சக்தி அளவற்றதாயிருந்திருக்க வேண்டும். இந்திரபானு மெல்லமெல்லத் தன்மனக்கதவைத் திறந்து சொற்களைக் கொட்டினான். பட்டனுடைய மந்திரம் திறந்துவிட்ட அந்த மனக்கதவிலிருந்து உண்மையே பெருக்கெடுத்துப் பாய்ந்தது.

கதையை மெள்ள மெள்ள அணுவிடாமல் சொன்னான் இந்திரபானு. அதை நிம்மதியுடன் கேட்ட பரதபட்டன் நீண்டநேரம் சிந்தனையில் ஆழ்ந்தான். பிறகு சொன்னான், "நீ இந்தக் குடிசையில் தங்கி இரண்டுநாள் கழித்துப் போகலாம்," என்று.

பரதபட்டன் தன்னைத் தேக்கி வைத்ததன் காரணம் இந்திரபானுவுக்கு விளங்கவில்லை. அவன் சொன்னதைத் தான் ஏன் கேட்கவேண்டும் என்பதும் விளங்கவில்லை. இருப்பினும் கேட்கவே செய்தான் இந்திரபானு. அங்கு தங்கிய இரண்டு நாட்களில் பரதபட்டன் யார் என்ற முழு உண்மையை அறிந்தான். அறிந்ததால் பெரும் பக்தி, அச்சம் இரண்டும் இந்திர பானுவுக்கு பரதபட்டனிடம் ஏற்பட்டன. மூன்றாவது நாள் மற்றொரு நிகழ்ச்சி ஏற்பட்டது! அந்தக் குடிசையில் மறக்க முடியாத நிகழ்ச்சி அது. இந்திரபானு அடியோடு அதிர்ச்சியடைந்துவிட்ட நிகழ்ச்சி அது.

## அத்தியாயம் 14

# தியாக அக்கினி

பரதபட்டனுடன் காட்டுக்குடிசையில் மூன்று நாட்கள் தங்கிய இந்திரபானுவுக்கு ஒவ்வொருநாளும் பிரமை, பக்தி, அச்சம் இத்தனையையும் விளைவிக்கும் சம்பவங்கள் ஏற்பட்டு வந்ததால், அவன் நேரம் போவது தெரியாமலும் நாழிகைக்கு நாழிகை பலதரப்பட்ட உணர்ச்சிகளுக்கு இலக்காகியும் காலத்தைக் கழித்தான். குடிசை காட்டிலிருந்தாலும் அடிக்கடி அங்கு வந்து போய்க் கொண்டிருந்த மக்களுக்குக் குறைவேயில்லாதிருந்தது மட்டுமின்றி வந்தவர்கள் அதிக நேரம் தங்கவுமிலலை யென்பதையும் இந்திரபானு அங்கு தங்கிய மூன்று நாட்களில் கவனித்தான். தவிர வந்தவர்களிடம் பரதபட்டன் அதிகம் ஏதும்பேசாததையும் முக்கால் விஷயத்தைக் கண்ணசைவாலும், கை ஜாடையாலுமே உணர்த்தியதையும் கண்டான் இந்திரபானு. உணவுக்கோ வேறு சௌகரியத்துக்கோ பரதபட்டன் எங்கும் போக வில்லை. உணவு அவனைத் தேடி வந்து கொண்டிருந்தது. இந்திரபானு கிருஷ்ண சர்ப்பதைக் கண்டு அச்சமுற்ற அந்த மாலையே சற்று எட்ட இருந்த ஒரு கிராமத்திலிருந்து குறப் பெண்கள் இருவர் ஒரு கிண்ணத்தில் சோறு, ஒரு குடுவையில் தயிர், ஒரு குடுவையில் பால், இரண்டொரு கறி வகைகள் இவற்றைக் கொண்டு வந்து குடிசை மூலையில் வைத்துவிட்டுப் போனார்கள். அப் பெண்கள் சென்றதும் பரதபட்டன் பாலை எடுத்துக் குடிசை வெளிப் புறத்திலிருந்த புற்றுகளில் சிறிது ஊற்றினான். பிறகு உள்ளே வந்து அங்கிருந்த கிண்ணத்தில் மீதிப் பாலை ஊற்றினான் மீண்டும் தரையில் உட்கார்ந்து இரைந்து "குஞ்சே, வா!"



என்று அழைத்தான். குடிசைக்கோடியிலிருந்த புற்றிலிருந்து அந்தப் பழைய கிருஷ்ணசர்ப்பம் கிளம்பி நேராக வந்து கிண்ணத்திலிருந்த பாலைக் குடித்துவிட்டு மீண்டும் புற்றுக்குச் சென்று மறைந்தது. இத்தனையும் முடிந்ததும் பரதபட்டன் தனக்கும் ஒரு சட்டியில் உணவு எடுத்துக் கொண்டு, இந்திரபானுவுக்கும் ஒரு சட்டியில் உணவு பரி மாறி சூாப்பிடப் பணித்தான்.

இந்திரபானு பிரமிப்புடன் உண்டான். உண்மையில் உணவு அவனுக்குச் சற்றும், உள்ளே செல்லவில்லை. வேண்டா வெறுப்பாக உணவைக் கடித்துக் கடித்து உண்டான். பரதபட்டன் அவனை ஏறிட்டு, "ஏன்? உணவு பிடிக்கவில்லையா?" என்று வினவினான்.

"இல்லை. பிடிக்கவில்லை," என்றான் இந்திரபானு.

"உடம்பு சரியில்லையா? சுரமா?" என்று கேட்டான் பரதபட்டன்.

"இல்லை, சுரமில்லை," என்று பதிலளித்தான் இந்திரபானு.

"அச்சமும் ஒருவகை சுரந்தான்," என்று சொல்லி நகைத்த பரதபட்டன், "பயப்படாதே. சாப்பிடு," என்று ஊக்கினான்.

இருப்பினும் இந்திரபானு சிறிது சிரமத்துடனேயே சாப்பிட்டு முடித்தான். சாப்பாட்டுப் பாத்திரங்களைத் தானே கழுவினான். அதனால் மனம் குளிர்ந்த பரதபட்டன் மீண்டும் அவன் கதையையும், தமிழக மன்னர்களின் பூசல்களைப் பற்றியும் விவரமாக விசாரித் தான். அவன் சிங்களத்தை விட்டுத் தமிழகம் வந்த காரணத்தைப் பற்றியும் கேட்டான். பதில் தயக்கமின்றி வந்தது இந்திரபானுவிடமிருந்து. "பாண்டிய நாட்டு இளவரசர் வீரபாண்டியனைப் பற்றிப் பலகதைகளைக் கேள்விப்பட்டேன். அவர் வேலெறிவதிலும், கத்திச் சமரி லும் குதிரைகளைப் பழக்குவதிலும் இணையற்றவர் என்று கேள்விப்பட்டு அவற்றைக் கற்கப் பாண்டியநாடு வந்தேன். அங்கு..." என்று மேலும் ஏதோ கூற முற்பட்டான்.

இந்திரபானு பதிலை முடிக்குமுன்பு இடைபுகுந்து, "அங்கு வீரபாண்டியன் வீரத்திலும், முத்துக்குமரியின் அழகிலும் சிக்கிக்கொண்டாய்," என்ற பரதபட்டன், "வீரபாண்டியன் குதிரையைப் பழக்குகிறானா? இது ஒரு விந்தையா? பாம்பைப் பழக்கத் தெரியுமா அவனுக்கு? பட்சிகளைப் பழக்கத் தெரியுமா அவனுக்கு?" என்றும் கேட்டான்.

வீரபாண்டியனின் திறமையைப்பற்றிக் குறை கூறியதை இந்திரபானு ரசிக்கவில்லையென்றாலும் பரத பட்டனிடமிருந்த அச்சத்தாலும் பக்தியாலும் அவன் மறந்து எதுவும் பேசவில்லை. பரதபட்டனும் அதற்குமேல் அதைப்பற்றிப் பேசாமல் போசளர் சோழர் பூசல்களைப் பற்றி விசாரித்தான். இந்திரபானுவுக்கு ஆச்சரியம் ஏற்பட்டது. எரிச்சலும் ஏற்பட்டது. 'அரசியல் விஷயங் களைப்பற்றி இந்தக் காட்டிலிருக்கும் கிழத்துக்கு என்ன அக்கறை? அதுவும் போசளர் சோழர் பூசலைப்பற்றி ஏன் கேட்கிறார்?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்ட இந்திரபானு, "போசளரைப் பற்றி நமக்கென்ன இப்பொழுது? சண்டையே பாண்டியருக்கும், சேரருக்கும் தானே?" என்று வினவினான்.

பரதபட்டன் கண்கள் ஆழத்திலிருந்து பளிச்சிட்டன. "போசளர் ஆதிக்கம் சோழர்மீது ஏற்பட்டதால் சோழநாடு வலு இழந்தது. சோழநாட்டு வலு போய்விட்டதால் அதன் தெற்கெல்லையிலுள்ள பாண்டியநாடு எச்சரிக்கையடைந்து போசளரிமிருந்து தன்னைக் காத்துக் கொள்ளப்படை திரட்டியது. பாண்டியநாடு படை திரட்டியதும் அதன் மேற்கிலுள்ள சேரநாடு தன்னைக் காத்துக்கொள்ளக் கொற்கையின் முத்துக் குவியல்மீது கண்ணை ஓட்டியது. பரஸ்பர பயம், தற்காப்பு இரண்டுக்கும் பின் விஸ்தரிப்பு ஆசை, இவைதான் அரசுகளிடையே விரோதத்தை ஏற் படுத்துகிறது. போசளர் சோழரை அடிமைப்படுத்தி யிருக்காவிட்டால் பாண்டிய நாடும், சேர நாடும் மோதக் காரணமில்லை," என்று விளக்கினான் பரதபட்டன்.



பரதபட்டன் அரசியல் அறிவு விவரிப்புக்கும் அப்பாற்பட்ட வியப்பை அளித்தது இந்திரபானுவுக்கு. மாலைவரை பரதபட்டன் மந்திர வலுவையும் இரவில் அவன் அரசியல் அறிவையும் அறிந்த இந்திரபானுவுக்கு மறுநாள் காலை பரதபட்டனின் மற்றொரு திறமை புலனாயிற்று.

மறுநாள் விடியற்காலையில் பரதப்பட்டனால் எழுப்பப் பெற்று, சற்று தூரத்திலிருந்த சுனைக்குச் சென்று நீராடி, சந்தனமணிந்து, பரதபட்டன் கொடுத்த வெள்ளை வேட்டி புனைந்து, பட்டன் சீடனைப்போல விளங்கிய இந்திரபானு குடிசைக்குத் திரும்பியதும் அங்கிருந்த சூழ்நிலை அவனை அயர வைத்தது. சுமார் இருபது வாலிபர்களும், பருவப் பெண்களும் வாயிலில் உட்கார்ந்து கொண்டு தகளி பார்த்து முகத்தில் பலவித மைகளைப் பூசிக்கொண்டிருந்தார்கள். அவர்களைப் பார்த்து இந்திரபானு வாயிலிலேயே நின்றாலும், பரதபட்டன் அவர்களைப் பாராமலே உள்ளே சென்றான். சற்று நேரத்துக்குள் உள்ளே மணியோசையும் பரதபட்டன் உரக்க மந்திரங்களை ஜெபிப்பதும் கேட்டது. அது முடிந்து தட்டில் கற்பூரத்துடனும் விபூதியுடனும் பரதபட்டன் வெளியே வரவே அங்கிருந்த இருபது பேரும் எழுந்து நின்று கற்பூரத்தை கண்ணில் ஒற்றிக்கொண்டு பரதபட்டன் அளித்த விபூதியையும் நெற்றியில் வைத்துக்கொண்டதும், பரதபட்டன் உள்ளே சென்று திரும்பி வந்து அந்த இருபது பேர் அணிந்திருந்த வேஷங்களை ஊன்றிக் கவனித்தான். பிறகு தரையில் உட்கார்ந்துகொண்டு, "உம், ஆகட்டும்," என்றான். பரதபட்டன் மந்திரவாதி, அரசியல்வாதி மட்டு மல்ல, பெரிய கலைஞனும்கூட என்பதை அன்று உணர்ந்தான் இந்திரபானு. வந்திருந்த இளைஞர்கள் இருபது பேரும் வண்ணங்களணிந்ததும் அடியோடு மாறி விட்டதையும், பரதபட்டன் ஆணை பிறந்த உடனேயே ஆட ஆரம்பித்து விட்டதையும் கண்ட இந்திரபானு தரையில் உட்கார்ந்தபடி கவனித்தான்.

பரதபட்டன் கையசைந்தது, வாயும் அசைந்து இசைத்தது. அந்த இசைக்கும் அவன் சைகைக்கும் தகுந்தபடி ஆடியவர்களின் உடல் அசைந்தது, முகம் அசைந்தது, முகப் புருவம் அசைந்தது, புருவத்தின் மயிர்க்கால்களும் அசைந்ததாகத் தெரிந்தது. பரதபட்டன் இசையைத் தொடர்ந்து நவரசங்களை இளைஞர்கள் முகத்தில் காட்டினார்கள். இந்திரபானு அந்தக் காலையில் புது உலகத்திலிருந்தான். காட்டுப் பட்சிகளின் கில கிலா சப்தங்கள், பரதபட்டனின் மெல்லிசை, சதங்கையொலி, இத்தனையும் சேர்ந்து அவனை வேறு உலகத்திற்கு அழைத்துச் சென்றன. புராணங்களின் சில இடங்களை மட்டும் அந்த இளைஞர்கள் அன்று ஆடினார்கள். சுமார் கால் ஜாமம் ஆடிய பிறகு பரதபட்டன் கால்களைத் தொட்டு ஒற்றிக் கொண்டு வர்ணங்களை அழிந்துவிட்டுச் சென்றனர். அடுத்த கால் ஜாமத்தில் மற்றும் பத்துப் பேர் வந்தார்கள். அவர்களும் முதல் கோஷ்டியைப்போல வேடமணிந்து ஆடினார்கள். அன்று முழுவதும், இடைவேளையில் மீண்டும் பரதபட்டன் பூசைக்கு உட்கார்ந்த நேரம் போக பாக்கி நேரம் பூராவும், இத்தகைய கோஷ்டிகள், பல வர்ணத்தவர், பல தரத்தவர் வந்து பட்டனிடம் பாடம் கேட்டுச் சென்றார்கள். மாலை நெருங்க ஒரு ஜாமம் இருக்கையில், "இத்துடன் பாடம் முடிந்தது," என்று சொல்லிக்கொண்டு எழுந்திருந்தான் பரதபட்டன்.

"ஏன், இதற்குமேல் யாரும் வரமாட்டார்களா!" என்று கேட்டான் இந்திரபானு.

"வரமாட்டார்கள். வந்தாலும் நான் சொல்லிக் கொடுப்பதில்லை."

"ஏன்?"

"எதற்கும் காலம் உண்டு, நியதியுண்டு."

"கலைக்குக் காலமில்லையென்று சொல்கிறார்களே?"

"எதற்கும் காலம் உண்டு."

"ருசு?"



பரதபட்டன் இந்தக் கேள்வியைக் கேட்டதும் இந்திரபானுவை நோக்கித் திரும்பினான். "சுற்றிலும் கண்களை ஓட்டு வாலிபனே! இயற்கையைப் பார், ஜீவராசிகளைப் பார். சராசரம் எல்லாவற்றையும் பார். எல்லாவற்றிற்கும் காலம் உண்டு. சூரியன் உதித்தால் உயிர்கள்விழிக்கின்றன. சூரியன் மறைந்தால் உயிர்கள் உறங்குகின்றன. மழைக்குப் பயந்த ஜீவராசிகள் பதுங்குகின்றன. எதற்கும் அஞ்சாத சர்ப்பும் இடியைக் கேட்டு நடுங்குகிறது. இயற்கை பலவிதத்தில் உயிர்களுடன் சம்பந்தப்பட்டிருக்கிறது. காலத்தை நிர்ணயித்திருக்கிறது. ஆகாயத்திலுள்ள அண்டங்களும் கிரகங்களும் இந்தப் பிண்டத்தின் காலாகாலத்தை நிர்ணயிக்கின்றன. இவற்றை சாஸ்திரம் திட்டமாகச் சொல்கிறது. சாஸ்திர நம்பிக்கையில்லாமல் எந்த வேளையிலும் பைத்தியம் பிடிக்கக்கூடிய தன் சிறிய மூளையை நம்பி, தர்க்க பலத்தை நம்பி, அறிவு என்ற பெயரில் மனிதன் ஒருவன்தான் காலா காலமில்லாமல் காரியங்களில் ஈடுபடுகிறான். காலத்தில் சேர்க்கவேண்டிய தேக பலம், புத்தி பலம், இவற்றை இழந்து சீக்கிரம் நசிக்கிறான்," என்ற பரதபட்டன் மேற்கொண்டு ஏதும் பேசாமல் இந்திரபானுவை உணவருந்தச் செய்து படுக்கச் சொல்லி, தான் ஏதும் உணவருந்தாமல் படுத்துக் கொண்டான். இந்திரபானுவுக்கு உறக்கம் பிடிக்கவில்லை. கோடிப் புற்றிலிருந்த பாம்பை எண்ணினான். சுற்றிலும் இருந்த சிலைகளை எண்ணினான். வெளியிலிருந்த மண் குதிரைகளை எண்ணினான். இப்படிப் பலப் பலவாக எண்ணிக் கொண்டு கண்களை மூடிக்கொண்டிருந்தான். இரவு ஏறியதும் அசதி அவனை ஆட்கொண்டது.

மறுநாளும் முதல் நாளைப் போலவே காரியக்கிரமங்கள் நடந்தன. ஆனால் மறுநாள் கலை பயில வந்தவர் கூட்டம் அதிகமாயிற்று. சில கலைஞர்களுக்குப் பரதபட்டனே வேடமணிவித்தான். அவர்களில் ஒருவனிடம் விசேஷ அக்கறை காட்டினான். மற்றவரெல்லாம் சென்ற பிறகு அந்த ஒருவனை மட்டும் நிறுத்திக் கொண்டான். மாலை வந்தது. அந்த ஒற்றை

மனிதனும் தன்னை பட்டன் இருக்கச் சொன்னதைப் பற்றி ஏதும் கேட்கவில்லை. பட்டனும் ஏதும் சொல்லவில்லை. பரதபட்டன் சொன்ன அலுவல்களை மட்டும் நிறைவேற்றிக் கொண்டிருந்தான் அந்த மனிதன். மாலை முற்றி விளக்கு வைத்ததும் பரதபட்டன் அந்த மனிதனையும் இந்திரபானுவையும் அறிமுகப்படுத்தினான். "இந்திரபானு! இவன் உண்மைப் பெயர் சேரநாட்டில் யாருக்கும் தெரியாது. ஆனால் பரதபட்டனுடைய பிரதம சீடன் கூத்தன் என்பது மட்டும் எல்லோருக்கும் தெரியும். கலைத் திறமை காரணமாகக் கூத்தன் என்ற பெயர் இவனுக்கு நிலைத்துவிட்டது. ஆகையால் இவனைக் கூத்தன் என்றே அறிந்துகொள். இவன் கூத்திடும் கூட்டத்தைச் சேர்ந்தவன், குரவைக் கூத்தில் இணையற்றவன், கதகளியில் என் ஒருவனை மட்டும் வெற்றி கொள்ளதாவன்," என்று இந்திரபானுவிடம் கூறிய பரத பட்டன் கூத்தனை நோக்கி, "கூத்தா! இவன் இந்திரபானு, பெருவீரன் என்று முகத்திலிருந்தே தெரிகிறது. பாண்டிய குமாரியைத் தேடி வந்திருக்கிறான். சேரன் அவளைச் சிறை வைத்திருக்கும் இடத்தைக் கண்டுபிடி. இவனுக்குத் தேவையான உதவியைச் செய்," என்றான்.

கூத்தன் தலைவணங்கினான். மிகுந்த மரியாதை யுடன். "நான் எப்படி இவருக்கு உதவ முடியும்? நான் வெறும் கலைஞன்," என்றான் கூத்தன்.

"அதனால் பாதகமில்லை. மன்னனிடம் காவலன் வேலைக்கு அமர்ந்துகொள்."

"நான் வீரனல்லவே?"

"இங்கு தினம் வா. வாட்பயிற்சி சொல்லித் தருகிறேன்"

"சரி, குருநாதரே! மன்னன் இணங்கவேண்டும்."

"கலைஞருக்கு இணங்காத மன்னன் உலகத்தில் இனிப் பிறக்க வேண்டும் கூத்தா! நீ அரண்மனையிலும் ஆடுகிறாயல்லவா?"

"ஆடுகிறேன்."



"மன்னனை..."

"நன்றாக அறிவேன்."

"அப்படியானால் நாளைக்கே வேலையில் அமர்ந்து விடு."

இதைப் பரதபட்டன் திட்டமாக அறிவித்தான். அதற்குப் பிறகு கூத்தன் பேசவில்லை. பரதபட்டனே பேசினான்! "முத்துக்குமரியிருக்குமிடத்தைக் கண்டு பிடித்துக் காவலுக்குப் போ. இவனையும் மெள்ள அரசனிடம் வேலைக் கமர்ந்து," என்று கூறினான் பட்டன்.

"இவரையா!" கூத்தன் சொற்களில் வியப்பு இருந்தது.

"ஆம்," என்றான் பரதபட்டன் சர்வ சாதாரணமாக.

"அது எப்படி முடியும்?" என்று பயத்துடன் வினவினான் கூத்தன்.

"ஏன் முடியாது? அரசன் உன் சொல்லைக் கேட்க மாட்டானா?"

"கேட்பார். ஆனால் இவரைப் பார்த்ததும் வெட்டிப் போட்டால்?" என்று வினவினான் கூத்தன்.

"மன்னன் இவனைப் பார்க்கமாட்டான். வேறொரு வனைப் பார்ப்பான்," என்றான் பரதபட்டன். அப்படிச் சொல்லி விட்டு இந்திரபானுவை நோக்கித் திரும்பி, "இந்திரபானு! நான் அரசியல்வாதியல்ல. எனக்குச் சேரன், சோழன், பாண்டியன் அனைவரும் ஒன்றுதான். ஆனால் அதர்மங்களை நான் வெறுக்கிறேன். பெண்ணைக் களவாடு வதும் அதர்மம். களவாடுபவன் யாராயிருந்தாலும், கள வாடப்படும் பெண் எந்த நாட்டவளாயிருந்தாலும், எந்த இனமாயிருந்தாலும் அதர்மம் அதர்மம்தான். ஆகவே முத்துக்குமரியைக் காண உனக்கு வாய்ப்பளிக்கிறேன். ஆனால் நீ தியாகம் செய்யவேண்டும்" என்று கூறினான்.

இந்திரபானு பட்டனை உற்று நோக்கினான். "குரு நாதரே! உயிரை வேண்டுமானாலும் கொடுக்கத் தயாரா யிருக்கிறேன்," என்று கூறவும் செய்தான்.

"அதனால் எந்தப் பயனும் இல்லை," என்றான் பரத பட்டன் விஷமச் சிரிப்புடன்.

"வேறு எதைத் தியாகம் செய்ய வேண்டும்?"

"உயிரைவிடப் பெரியதை."

"மானத்தையா?"

"அல்ல. அதைவிடச் சிறியதை."

"எதை குருநாதரே?" என்று கேட்டான் இந்திரபானு ஏதும் விளங்காமல்.

பரதபட்டன் சொற்கள் திடமாக வெளிவந்தன. "உன் அழகை," என்று நிதானமாக உச்சரித்தான்.

அதைக் கேட்ட இந்திரபானு மெல்ல நகைத்தான். "இவ்வளவுதானா?" என்று கேட்டான்.

"காரியம் முடிந்த பின் நகைக்கமாட்டாய் நீ." என்ற பரதபட்டன் குரலில் கடுமையிருந்தது. "இந்திரபானு! உன்னை வேறு மனிதனாக்க முயல்கிறேன். அதில் உன் அழகு அழிந்துவிடும். பிறகு நீ அச்சமின்றிச் சேரநாட்டில் உலாவலாம்," என்றும் சொன்னான்.

"எதை வேண்டுமானால் செய்யுங்கள் குருநாதரே! என்னை எப்படி வேண்டுமானாலும் மாற்றுங்கள்."

"உன் அழகை நீ திரும்பப் பெறமுடியாது. அடியோடு போனாலும் போகலாம்," என்றான் பட்டன்.

"பாதகமில்லை," இந்திரபானுவின் குரலில் உறுதி இருந்தது.

இதற்குப் பின் கூத்தனை வெளியே செல்லும்படி சைகை செய்தான் பட்டன். வெளியே வந்து நின்ற கூத்தன் பொறுமைகூட அன்று சோதிக்கப்பட்டது. உள்ளே அடிக் கடி, திணறலும் முனகலும் கேட்டன. சில சமயம் நிசப்த மிருந்தது. சில வேளைகளில் தட்டுக்கள் நகர்த்தப்படும் ஒலிகள் பயமூட்டின கூத்தனுக்கு. அவை ஊட்டிய பயம் மிகச் சொற்பமென்பதை வெகு விரைவில் உணர்ந்தான். கால் ஜாமத்திற்குப் பிறகு குடிசைக் கதவு திறக்கப்பட்டு முதலில் பட்டன் வெளியே வந்தான். அவனைத் தொடர்ந்து வந்தான் இந்திரபானு. பட்டன் தன் கையிலிருந்த விளக்கை இந்திரபானுவின் முகத்தில் படும்படி காட்டினான். "கூத்தா, இதோ பார்!" என்று உரத்தும் கூறினான்.



கூத்தன் கண்கள் பயத்தில் பெரிதும் மலர்ந்தன. அவன் உடல் நடுங்கியது. முகம் வியர்த்தன. "குரு நாதரே! குருநாதரே! இதென்ன பயங்கரம்!" என்று அலறினான். இந்திரபானுவின் அடியோடு மாறி விட்ட முகத்தைக் கண்டு அவன் குலை நடுங்கியது. அம் முகத்திலிருந்த தழும்புகள் அதை அடியோடு மாற்றியிருந்தன.

பரதபட்டன் முகத்தில் உணர்ச்சி ஏதுமில்லை. "இது பயங்கரமில்லை கூத்தா, தியாகம். முகத்தின் வெளி விகாரத் தைக் கண்டு அஞ்சாதே. தியாகத்தின் உள்ளழகைப் பார். தியாக அக்கினியைக் கவனி. இப்பொழுது அழைத்துச் செல் இவனை. இவன் அலுவல் முடியும்வரை இங்கு இருவரும் வரவேண்டாம்" என்ற பரதபட்டன் மீண்டும் குடிசைக்குள் சென்றான். வெளியில் விடப்பட்ட இந்திர பானுவும் கூத்தனும் ஒருவரையொருவர் பார்த்துப் பிரமித்து நின்று கொண்டிருந்தனர் நீண்ட நேரம்.

அத்தியாயம் 15

# விசேஷமும் விபரீதமும்

குடிசைக்கு வெளியே பரதபட்டனால் விடப்பட்ட இருவரில் இந்திரபானுவைவிடக் கூத்தனே விவரிக்க இயலாத உணர்ச்சிகளுக்கும் முக்கியமாக அச்சத்துக்கும் உட்பட்டு இந்திரபானுவின் முகத்தைக் கூர்ந்து நோக்கிய வண்ணம் விநாடிகள் பறப்பது தெரியாமலே நிலைத்து நின்று கொண்டிருந்தான். இரவு இரண்டாம் ஜாமத்தை எட்டிக்கொண்டிருந்த சமயத்தில் அந்தக் காட்டுப்புறமே பயங்கரமாயிருந்ததென்றால் அதைவிடப் பயங்கரத்தை அளித்தது இந்தரபானுவின் முகம். கூத்தனின் இதயத்துக்குக் காட்டின் இருளளித்த அச்சமும், எங்கோ ஓரிரு ஆந்தைகள் அலறிய ஒலியும், எங்கோ ஒரு மரத்தில் மலைப்பாம்பு ஏறிக் கொண்டிருந்ததைக் கண்டு கூண்டிலிருந்த பறவைக் குஞ்சுகள் கிளப்பிய பயம் தரும் மெல்லிய ஒலிகளும், தூரத்தே கிளம்பி மலைப் பாறைகளில் மோதியதால் மன உளைச்சலை அளித்த புலியொன்றின் உறுமலும் சாதாரண மக்களுக்குத் திகிலை ஊட்டுபவையென்றாலும், காட்டிலே பிறந்து காட்டிலே வளர்ந்த கூத்தனுக்குச் சிறிதளவும் அச்சத்தை விளைவிக்கவில்லைதான். எனினும் அந்தச் சூழ் நிலையில் எதிரே நின்ற வாலிபனின் முகம் மட்டும் அவன் குலையை நடுங்கவே வைத்தது. சற்று முன்பு தான் கண்ட அழகிய முகம் அத்தனை விகாரமாக, பயங்கரமாக மாற முடியும் என்பது எந்தக் கற்பனைக்கும் அப்பாற்பட்டதா யிருந்ததால் கூத்தன் வாயடைத்தே நின்றான்.

கூத்தன் மனோநிலை இந்திரபானுவுக்குச் சந்தேகமற விளங்கியதாகையால் அவன் கூத்தனின் சிதறிய எண்ணங் கள் மீண்டும் ஒன்று கூடி நிலைப்பதற்கு அவகாசம் கொடுத்துவிட்டு நீண்ட நேரத்துக்குப் பிறகு சொன்னான்: "இதில் வருந்துவதற்கு ஏதுமில்லை, நான் வரவேற்று ஏற்றுக் கொண்டதுதானே இது?"

கூத்தன் கண்கள் பிரமிப்பைக் கக்கின. இத்தகைய வேதனைக்குப் பிறகு ஒரு மனிதன் புன்முறுவல் கொள்ள முடியும் என்பதே பெரும் விசித்திரமாயிருந்தது அவனுக்கு. "தம்பி...தம்பி..." என்று வியப்பும் அச்சமும் கலந்த குரலில் துவங்கிய கூத்தன் அப்பொழுதும் பேச்சை முடிக்காமல் திணறினான்.

இந்திரபானு அவனை நெருங்கி அவன் தோள்மீது ஒரு கையை வைத்து அன்புடன், "அண்ணா!" என்று அழைத்தான்.

"அண்ணனா!" கூத்தனின் பேச்சில் துக்கமே தொனித்தது.

"ஆம். தாங்கள் என்னைத் தம்பீ என்று அழைக்க வில்லையா?" இந்திரபானுவின் குரலில் அன்பு நிரம்பிக் கிடந்தது.

"ஆமாம். அழைத்தேன். இருப்பினும் நான் உனக்கு அண்ணனல்ல. எந்த அண்ணன் இந்தப் பயங்கரத்துக்குச் சம்மதிப்பான்?" என்ற கூத்தன், "சற்று இரு தம்பி! இதைக் குருநாதரிடம் சொல்லி மாற்றச் சொல்கிறேன்" என்று கூறிக்கொண்டே குடிசைக் கதவை நோக்கி நகர்ந்தான்.

இந்திரபானு அவன் கையைப் பிடித்து நிறுத்தி, "அண்ணா! அவசரப்படாதீர்கள். இதை இப்பொழுது மாற்ற குருநாதரால்கூட முடியாது. அதுமட்டுமல்ல, இதை நான் வரவேற்றுத்தானே ஏற்றுக் கொண்டேன்," என்று ஆசுவாசப் படுத்தினான்.

கையைப் பிடித்து நிறுத்தப்பட்ட கூத்தன் அவனை வேதனை நிரம்பிய கண்களுடன் பார்த்தான். "தம்பி! உன் வாழ்க்கையையே நீயே பாழாக அடித்துக் கொண்டாய். ஏன் இதற்கு உடன்பட்டாய் தம்பி?" என்று உதடுகள் துடி துடிக்கக் கூறினான்.

"இதை நீங்கள் கேட்க வேண்டுமா அண்ணா?" என்று வினவினான் இந்திரபானு.

"எதை?"

"எதற்காக நான் இந்த விகாரத்துக்கு உட்பட்டே னென்பதை."

"சொல் தம்பி, எதற்காக இந்தத் தியாகம்?"

"பாண்டிய நாடும், சேர நாடும் போரிடுகிறது. நான் பாண்டியப் படையின் உபதளபதி."

இதைக் கேட்ட கூத்தன் அத்தனை அச்சத்திலும் லேசாகப் புன்முறுவல் கூட்டினான்.

"அதல்ல தம்பி காரணம். எந்தப் போரை முன்னிட்டும் பகையை முன்னிட்டும் எந்த மனிதனும் இந்த விகாரத்துக்கு உட்படமாட்டான். அந்தப் பெண்...அவள் பெயர்... என்ன சொன்னார் குருநாதர்...ஆம்...முத்துக்குமரி, அவளை முன்னிட்டுத்தான் இந்தத் தியாகம். பெண் குறுக்கிடும்போது உலகத்தில் எந்த மனிதனும் சுயநிலை இழக்கிறான். இந்திரன் கெட்டதும் பெண்ணாலே சந்திரன் கெட்டதும் பெண்ணாலே என்று கூத்தில் நாங்கள் பாடுகிறோம். அது எத்தனை உண்மை! தம்பி! இந்திரன் உடல் அழுகச் சபித்தான் முனிவன். இருப்பினும் அந்த விகாரம் பிறர் கண்களுக்குத் தெரியாமல் செய்தான். இந்திரன் கலையிழக்கச் சபித்தான் இன்னொரு முனிவன். ஆனால் மீண்டும் கலைகளைப் பெற வழிவகுத்தான். இந்த விகாரம், இந்த விபரீதம், அவர்கள் யாருக்குமே இல்லை தம்பி. உன்னைப் பார்க்கும் மாந்தர் வெறுப்பர். எந்தப் பெண்ணுக்காக முகத்தை இப்படி அடித்துக் கொண்டாயோ அவளும் உன்னை வெறுப்பாள்," என்று கூத்தன் ஆவேசத்துடன் சொற்களை உதிர்த்தான்.

இந்திரபானு மீண்டும் அவனைச் சமாதானப் படுத்தினான். "அண்ணா! உங்கள் இதயம் பொன் இதயம். அதனால் இந்தத் தியாகத்தை மிகைப்படுத்திக் கூறுகிறீர்கள். தவிர முத்துக்குமரியைக் காப்பது என் தர்மம். சேரன் அவளைத் தூக்கி வந்தது அதர்மமென்று கலைஞரான குரு



நாதரே நினைக்கிறார். அதற்காகத்தான் மன்னனுக்கு எதிராக நடக்கவும் முற்படுகிறார். அப்படியிருக்க க்ஷத்திரி யனான நான் என்ன செய்ய வேண்டுமென்பது உங்களுக்கு விளங்காததில்லை. வாருங்கள் போகலாம்," என்று அவனை அழைத்தான்.

கூத்தனுக்கு அப்பொழுதும் மனநிம்மதியில்லை. ஏதும் பேசாமலும் வேதனை நிறைந்த உள்ளத்துடனும் இந்திரபானுவுடன் சென்றான். இந்திரபானு சற்று எட்ட இருந்த மரத்தில் கட்டியிருந்த புரவியை அவிழ்த்து அதில் ஏறிக்கொண்டு கூத்தனையும் தன் பின்னால் ஏற்றிக் கொண்டு, "அண்ணா நாம் எந்தத் திசையில் போக வேண்டும்?" என்றான்.

"நேராக வடக்கே போ தம்பி! ஐந்து நாழிகைப் பயணம் செய்யவேண்டும். இந்த மலையிலிருந்து இறங்கி அடுத்த மலையில் ஏறினால் காடு சற்று இடைவெளி கொடுக்கும். அங்கு தீபங்கள் தெரியும்," என்று வழியைச் சுட்டிக் காட்டினான் கூத்தன். கூத்தன் சொற்படி புரவியை நடக்கவிட்ட இந்திரபானுவின் மனத்தில் தன் முக விகாரத்தைப் பற்றிச் சிறிது வருத்தமிருந்த போதிலும் அவன் எண்ணமெல்லாம் முத்துக் குமரியையே வட்ட மிட்டுக் கொண்டிருந்தது. இரவும் சுற்றிலுமிருந்த இயற்கையும் அவன் சம்பந்தப்பட்டவரையில் இன்ப மாகவே இருந்ததால், அவன் தான் இறங்கிய மலைச் சரிவையும் எதிரே தெரிந்த மலை எழுச்சியையும் திருப்தியுடனேயே பார்த்து, 'மலைகளின் எழுச்சியும் இடை யிடையே உள்ள ஆழமும் சேர்ந்து தான் இதற்கு மலையாளம், என்று பெயர் வந்ததுபோலும்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். அவன் புரவி சென்று கொண்டிருந்த மலைச் சரிவிலிருந்தே சேரன் தலைநகர் நன்றாகத் தெரிந்தது. இரவில் பளிச்சிட்ட அதன் விளக்குகளைப் பார்த்த இந்திரபானு சேரன் தலைநகர் தன்னைப் பார்த்துக் கண் சிமிட்டுகிறதென்று நினைத்தான். அந்த விளக்குகளின் மத்தியில் ஏதோ ஓரிடத்தில்

முத்துக்குமரி இருக்கிறாள் என்ற நினைப்பு மீண்டும் அவன் உள்ளத்தே எழுந்தததால், அவன் அவளையும் நினைத்து அவளைக் கவர்ந்த வீரரவியையும் நினைத்து, இந்த நகரை நான் சுட்டெரித்து விடுகிறேன்,' என்று உள்ளுக்குள் கறுவிக் கொண்டான்.

கூத்தன் மனம் வேறு வழிகளில் சஞ்சரித்துக் கொண் டிருந்தது. கூத்திட்டு மன்னனையும் மக்களையும் திருப்தி செய்து கொண்டிருந்த தனக்குத் திடீரென அரசை எதிர்க்கும் அலுவல் வந்ததை எண்ணி, தன் கதி என்னவாகும் என்பதையும் நினைத்து நடுங்கினான் ஒரு விநாடி. திடீரென அரண்மனையில் வேலை கேட்டால், வீரரவி சந்தேகப்பட்டால் என்ன செய்வதென்று சிந்தித்தான் இன்னொரு விநாடி. எப்படியும் வீரரவி உண்மையை ஊகிப்பானென்பதிலோ, ஊகித்துவிட்டால் தன் கதி என்னவாகுமென்பதிலோ அவனுக்குச் சிறிதும் சந்தேகமில்லை. ஆனால் அந்தக் கதியை நினைத்து இந்திரபானுவின் தியாகத்தையும் நினைத்த கூத்தன் தன் உயிர் போனாலும் கூட இந்திரபானுவவின் தியாகத்துக்கு அது ஈடாகாது என்று நினைத்தான். தவிர எக்காரணத்தை முன்னிட்டும் தன் குருநாதருடைய கட்டளையை மீற முடியாதென்பதையும் உணர்ந்திருந்தானாகையால் விதிமீது பழியைப் போட்டுப் பேசாமலே பயணம் செய்தான்.

ஒரு மலை இறங்கி மறு மலை ஏறி, காட்டின் முகப்புக்கு வந்ததும் தூரத்தே தெரிந்த இரண்டொரு பந்தங்களைக் காட்டி, "அதுதான் கூத்தர் குடிசைகள் இருக்குமிடம், அங்கு புரவியை விடு," என்று கூறினான் கூத்தன். அவன் சொற்படி குதிரையை நடத்தி முன்பிருந்த ஒரு குடிசைக் கருகில் வந்ததும் புரவியை நிறுத்தச் சொல்லிக் கீழே குதித்த கூத்தன் உள்ளேயிருந்த தன் மனைவியை அழைத்து இந்திரபானுவை அவளுக்கு அறிமுகப்படுத்தினான். கூத்தன் மனைவி இந்திரபானுவைக் கண்டதும் ஒரு விநாடி பிரமித்தாள். அவனை அனுப்பியது குருநாதர் என்பதைக் கேட்டதும் வேறு பேச்சின்றி அவனை உள்ளே வரும்படி அழைத்தாள்.



அடுத்த மூன்று நாட்களில் பரதபட்டனுடைய செல் வாக்கு எத்தன்மையென்பதை இந்திரபானு நன்றாக உணர்ந்தான். அவன் கூத்தர் குடிசைக் கூட்டத்தை அடைந்த மறுநாள் காலையில் அந்தக் கூட்டத்தார் அவனைச் சந்தேகத்துடன் பார்த்தார்களானாலும், அவனை அனுப்பி வைத்தது யாரென்பதை அறிந்ததும் யாரும், மூச்சுப் பேச்சு விடாதது மட்டுமல்ல, அவனைத் துங்களில் ஒருவராக நடத்தவும் முற்பட்டார்கள். அங்கு மட்டுமல்ல, இந்திரபானு பரதபட்டன் பெயரின் சக்தியை அறிந்தது. கூத்தனுடன் அடுத்த மூன்று நாட்கள் பரலிமா நகருக்குள் சென்றபொழுது பல இடங்களில் கூத்தன் அவனைக் குருநாதரின் புதுச் சீடனென்று அறிமுகப் படுத்தினான். அந்த இடங்களிலெல்லாம் அவனுக்கு வரவேற்பும் அபரிமிதமாகக் கிடைத்தது. முதல் மூன்று நாட்களுக்குள், மன்னனுக்கு அடுத்தபடி மக்கள் அச்சப் படுவது குருநாதரிடம்தானென்பதைப் புரிந்துகொண்ட இந்திரபானு, தான் குருநாதரின் சீடனாயிருப்பது தனக்குப் பெரும் கவசமென்பதையும் உணர்ந்துகொண்டான்.

மூன்றாவது நாள் கூத்தன் இந்திரபானுவிடம் விடை பெற்றுக்கொண்டு மன்னனைச் சந்திக்க சென்றான். அரண் மனையில் வேலை கேட்ட கூத்தனை ஒரு விநாடி கூர்ந்து நோக்கினான் சேரன். "கூத்தா! சிறந்தகலைஞனான உனக்குக் காவல் வேலை எதற்கு?" என்று வினவினான்.

"கூத்து இப்பொழுது பயனளிக்கவில்லை. மன்னருக்கும் பாண்டியருக்கும் போர் ஏற்பட்ட பின்பு அரண்மனையில் கூட யாரும் அழைப்பதில்லை என்னை," என்றான் கூத்தன்.

அது முற்றிலும் உண்மை என்பதைப் புரிந்து கொண்ட மன்னன், "சரி கூத்தா! உனக்கு இங்கேயே வேலை தருகிறேன்," என்று அவனை அரண்மனையில் காவல் வேலைக்கு அமர்த்தும்படி காவலர் தலைவனுக்கு உத்தரவிட்டான். அந்த வேலை கிடைத்ததும் அதைப்

பற்றிக் குதூகலத்துடன் அன்றிரவு இந்திரபானுவிடம் கூறிய கூத்தன், "மன்னனே இன்று என்னிடம் ஏமாந்து விட்டான்," என்று நகைக்கவும் செய்தான்.

ஆனால் வீரரவி சிறிதும் ஏமாறவில்லை. கூத்தன் சென்ற பின்பு காவலர் தலைவனை நோக்கி, "கூத்தன்மீது எதற்கும் ஒரு கண்ணை வைத்துக்கொள்," என்று உத்தரவிட்டான்.

"ஏன் மன்னவா? அவன் மீது தங்களுக்குச் சந்தேகமா?" என்று வினவினான் காவலர் தலைவன்.

"கூத்தன் காவலனாவதைக் கேட்டிருக்கிறாயா?" என்று வினவினான் வீரரவி புன்முறுவலுடன்.

"இல்லை." என்றான் காவலர் தலைவன்.

"தனக்குப் பழக்கமில்லாத வேலைக்கு ஒருவன் வந்தால் அவன் கவனிக்கத்தக்கவன்," என்று கூறினான் வீரரவி.

மறுநாள் காவல் பொறுப்பை ஏற்றுக்கொண்ட கூத்தன் காலக்கிரமத்தில் மெள்ள மெள்ள முத்துக்குமரி இருப்பிடத்தைப்பற்றி விசாரித்தான். அவன் விசாரித்த மூன்று நாட்களுக்குள் அவளைக் காக்கும் பணியே அவனுக்குக் கிடைத்தது. ஆகவே கூத்தன் இந்திரபானு விருப்பப்படி காவலர் தலைவனிடம் சொல்லி. அவனையும் அரண்மனைக்காவலர்களில் ஒருவனாக்கினான். இந்திர பானு அரண்மனையிலும் கூத்தர் குடிசைப் பகுதியிலும் கிடைத்த சந்தர்ப்பத்தை நன்கு பயன்படுத்திக் கொண்டான். பகலில் காவல் நேரம் போக மீதி நேரங்களில் நகரத்தைச் சுற்றினான். கடைவீதியிலும் மற்றப் பிரமுகர் வீதியிலும் மக்கள் பேசிய பேச்சுக்களிலிருந்து சிங்கணன் படை புறப்படுவதைப் பற்றியும் அறிந்தான். வீரபாண்டியன் கோட்டாற்றுக் கரைக்குச் சென்ற செய்திகளையும் அறிந்தான். சேரர் தலைநகரில் பாதுகாப்பு ஏற்பாடுகளும் பலமாயிருந்தன. நகருக்கு வரும் மார்க்கங்களில் படைப் பிரிவுகள் காவல் புரிந்தன. படையின் வாகனப் பிரிவுகள் சதா நகரில் இரவும் பகலும் ஓடிக் கொண்டிருந்தன. எங்கும்



பலத்த தற்காப்பு ஏற்பாடுகளிருப்பதைக் கண்ட இந்திரபானு, அடிக்கடி குடிசைக் கூட்டத்திலிருந்து காட்டுப் பகுதிக்கு இரவில் சென்று கொண்டிருந்தான்.

அவன் முகம் விகாரமாயிருந்ததாலும், அவன் சிரித்துக் சிரித்துக் குழந்தைகளிடம் பேசியதாலும், பெண்களிடம் அதிகமாக நெருங்காமல் விலகி நின்றதாலும் கூத்தன் கூட்டத்தாரின் அன்பை அவன் பெரிதும் பெற்றான். மதம் பிடித்த யானையொன்று காட்டிலிருந்து வந்து குடிசைகளை அழிக்க முயன்றபோது வேலெறிந்து அவன் அதைக் கொன்றது அவர்களுக்கு அவனிடமிருந்த மதிப்பை அதிகப் படுத்தியது. இப்படியிருந்த ஒரு நாளில்தான் கூத்தன் முதுகில் கத்திக்காயத்துடன் வந்து குடிசைக்கருகில் விழுந்தான்.

அதற்குப் பிறகு நடந்த துரித நிகழ்ச்சிகளில் அந்தக் குடிசைக் கூட்டத்தாருக்குப் பங்கேதுமில்லையென்றாலும் இந்திரபானுவின் பங்கு நாளுக்கு நாள் அதிகப்பட்டது. மன்னன் அவன் முன்பு பரதபட்டனைக் கொண்டு வந்து நிறுத்தி, செண்டுவெளிக் களியாட்டத்துக்கு வித்திட்டது இந்திரபானுவுக்கு இட்ட மரண வித்தென்பதை மன்னனைத் தவிர வேறு யாரும் அறியவில்லை. எப்படியும் செண்டுவெளியில் இந்திரபானுவை ஒழித்துவிடக் கங்கணம் கட்டிக்கொண்ட வீரரவி முத்துக்குமரியைப் பார்த்து அதைப்பற்றிப் பிரஸ்தாபித்த பிறகுதான் அவன் மகிழ்ச்சியைப் பன்மடங்கு அதிகப்படுத்தும் ஓலை கிடைத்தது. சிங்கணனிடமிருந்து கிடைத்த அந்த ஓலையளித்த மகிழ்ச்சியால், "இதற்கே ஒரு செண்டுவெளி நடத்தலாமே?" என்று மன்னன் இரைந்து சொல்லிக் கொண்டு தூதுவனுக்குத் தன் கையிலிருந்த ஒரு வீரகங்கணத்தையும் கழற்றிப் பரிசளித்தான். "செண்டு வெளி உண்மையில் சேரர்களின் வெற்றி வெளியாகும். இதை மக்களுக்கு அன்றே அறிவிக்கிறேன" என்று கூறித் தூதனை அனுப்பினான். அன்றிலிருந்து வீரரவி மிகுந்த உற்சாகத்தைக் காட்டினான். மன்னன் உற்சாகத்தைக்

கண்டு மாளிகையே உல்லாசத்தை அடைந்தது. உற்சாகமும் உல்லாசமும் ஒருவனுக்கு மட்டும் ஏற்படவில்லை. உள்ளத்தில் கவலை மட்டும் லேசாகத் துளிர்த்திருந்தது. அந்தக் கவலையை பரதபட்டன் வாய்விட்டுச் சொல்ல வில்லை. இருப்பினும் இந்திரபானு அதை உணர்ந்து கொண்டான். அது பற்றி விசாரிக்கவும் முற்பட்டு, "தலைநகர் களிவெறியில் மூழ்கியிருக்கிறது குருநாதரே!" என்று துவங்கினான்.

"ஒருவர் மகிழ்ச்சி இன்னொருவருக்குத் துன்பம். இது உலக நீதி!" என்றான் பரதபட்டன்.

"செண்டுவெளி..."

"மன்னனுக்கு மகிழ்ச்சி."

"மற்றோருக்கு?"

"அன்றுதான் தெரியவேண்டும்."

"செண்டுவெளியில் ஏதாவது விசேஷத்தை எதிர் பார்க்கிறீர்களா!"

"பரதபட்டன் இந்திரபானுவைக் கூர்ந்து நோக்கினான். "இல்லை. விபரீதத்தை எதிர்பார்க்கிறேன்," என்று மெல்லச் சொற்களை உதிர்த்தான்.

## அத்தியாயம் 16

# வீரர் திருவிழா

பரதபட்டனும் இந்திரபானுவும் மெய்க் காவலர் இல்லத்தில் இருத்தப்பட்ட நாளையடுத்த நான்காம் நாளும் மெல்ல மெல்ல அணுகவே அன்றைய உதயசூரியன் தன் செவ்விய கிரணங்களை அரண்மனையின் *செண்டு வெளியின் மீது வீசினான். செம்மண் குழம்பு கொண்டு மூன்று நாட்களாகப் பதனிடப்பட்டதால் செவ்வரியோடி யிருந்த அந்தச் செண்டுவெளிமீது காலைக் கதிரவன் செங்கதிர்களும் படவே, அன்று இரவு அந்த இடத்தில் வீரர்கள் ரத்தம் சிந்துவதற்கு முன்கூட்டி இயற்கை அத்தாட்சியளிப்பதைப் போன்ற பிரமையை அளித்தது அந்தத் திறந்தவெளி அரங்கு. மெய்க் காவலர் வீதியின்மீது நின்று அதை உற்று நோக்கிய பரத பட்டன் தீர்க்கா லோசனையில் ஆழ்ந்திருந்தானானாலும் அவனருகே நின்ற இந்திரபானுவின் உள்ளம் மட்டும் இரவு விளையாட்டை நினைத்து மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தது. ஆகவே பரதபட்டனை நோக்கிக் கேட்டான், "குருநாதரே! செண்டுவெளி எத்தனை சிவந்து கிடக்கிறது பார்த்தீர்களா?" என்று.

பரதபட்டன் குரல் உற்சாகமின்றி ஒலித்தது. "'ஆமாம் பார்த்தேன்," என்ற சொற்களில் கவலை ஊடுருவி நின்றது.

* செண்டுவெளி அரண்மனையில் திறந்தவெளி முற்றம்; வீரர் செண்டெறியும் போர்ப் பயிற்சிக்கு உபயோகப்படுவது — Pre-Pallavan Tamil Index By Dr. Subramanian. M.A., Ph.D., Reader in Indian History. Madras University – Page 381.

பரதபட்டன் எண்ணங்கள் எந்தத் திசையில் ஓடுகின்றன என்பதை அறியாமலே, "இந்தச் செண்டு வெளியைப் பார்த்தால் கவிகள் இதற்கு என்ன உவமை காட்டுவார்கள்?" என்று வினாவினான்.

பரதபட்டன் அவனைத் திரும்பி நோக்கினான். "இப் பொழுது அதைப்பற்றி என்ன?" என்று விசாரித்தான் சர்வ சாதாரணமாக. அவன் குரலில் இகழ்ச்சி பெரிதும் மண்டிக் கிடந்தது.

"சரச கவியாயிருந்தால் பெண்களின் இதழ்களுக்கு இந்தச் சிவப்பை ஒப்பிடுவான். செண்டுவெளிச் சிவப்பு அவ்வளவு சிவந்திருக்கிறது," என்றான் குதூகலத்துடன் இந்திரபானு.

"அப்படியும் ஒப்பிடலாம்,'" என்ற பரதபட்டன் குரலில் இகழ்ச்சி முன்னைவிட அதிகமாக ஒலித்தது

"வேறு எப்படி ஒப்பிடலாம் குருநாதரே?" என்று கேட்டான் இந்திரபானு.

"புலியின் உதடுகளுக்கு ஒப்பிடலாம்" என்றான் பரத பட்டன்.

"புலியின் இதழ்களுக்கா!" இந்திரபானு வியப்புடன் வினவினான்.

"ஆம். புலியின் உதடுகளும் சிவப்பாகத்தானிருக்கும். அது மட்டுமல்ல..."

"வேறென்ன குருநாதரே?"

"புலியின் இதழ்கள் மனித ரத்தத்ததை உறிஞ்சும். இந்தச் செண்டுவெளிக்கும் அந்தக் குணம் உண்டு."

"குருநாதரே!" என்றான் இந்திரபானு குரலில் அதிர்ச்சி ஒலிக்க.

"அவசரப்படாதே. ஆத்திரமும் படாதே. இன்றிரவு பார்," என்றான் பரதபட்டன் வெறுப்புடன்.

இந்திரபானு சந்தேகம் நிரம்பிய விழிகளைக் குருநாதர் மீது திரும்பினான். "செண்டுவெளியில் போராட்டத்தின் போது ரத்தம் சிந்துவதுண்டு. ஆனால்



யாரும் இறப்பது கிடையாது," என்று மேலும் சொல்லப் போன இந்திரபானுவுக்குப் பதிலேதும் சொல்லாமல் செண்டுவெளியையும் பார்த்து அரண்மனை உப்பரிகைப் பகுதிகளையும் ஊன்றிப் பார்த்து விட்டுக் கீழே இறங்கிச் சென்றான் பரதபட்டன்.

சேரர் தலைநகர் பூராவும் களிவெறியில் மூழ்கியிருக்கப் பரதபட்டன் மட்டும் சிறிதளவுகூடச் சந்துஷ்டியில்லாமலிருப்பதற்கு எத்தகைய காரணமும் இல்லையென்றே நினைத்தான் இந்திரபானு. மிகக் கூரிய அறிவுள்ள இந்திரபானுவுக்கூட எவ்வித சந்தேகமும் ஏற்படாத சூழ்நிலையைச் சேரமன்னன் ஏற்படுத்தியிருந் தாலும் பரதபட்டனை மட்டும் அவனால் சிறிதளவும் ஏமாற்ற முடியவில்லை. சேர மன்னன் சூதை விநாடி நேரத்தில் ஊகித்தறிந்த பரதபட்டன் அன்று பகல் வெளியே போய் வந்த இந்திரபானுவின் உற்சாகப் பேச்சை வெறுப்புடனேயே கேட்டான். இரவு ஏற்படவிருந்த செண்டுவெளிப் போராட்டத்தை முன்னிட்டுப் புரவி ஏறிப் பயிற்சி செய்துவிட்டு வந்த இந்திரபானு, "குருநாதரே! நகரம் களிவெறி கொண்டிருக்கிறது." என்றான்.

பஞ்சணையில் உட்கார்ந்தபடியே பரதபட்டன் பதில் சொன்னான், "மக்களும் விசித்திரம்; மன்னனும் விசித்திரம்," என்று.

"ஏன்? என்ன விசித்திரம் அதில்?" என்று வினவினான் இந்திரபானு.

"செண்டு வெளிக் களியாட்டத்துக்கு இதுதான் சமயமா?"

"இந்தச் சமயத்திற்கென்ன?"

"தலைநகரிலிருந்து மூன்று காதத்தில் பாண்டியன் படை நிற்கிறது.

"ஆம்."

"போரில் வெற்றி தோல்வியை நிச்சயமாகச் சொல்ல முடியாது."

"ஆம்."

"இந்த சமயத்தில் மன்னன் களியாட்டத்துக்கு ஏற்பாடு செய்கிறான்! இதை மக்கள் குதூகலத்துடன் வரவேற்கிறார்கள்!"

இந்திரபானு சற்றுச் சிந்தித்தான். பிறகு கேட்டான்: "இதையெல்லாம் மன்னர் சிந்திக்காமலா இருப்பார்?"

"சுயநலத்தைவிடப் பொதுநலத்தில் சிரத்தையுள்ள மன்னனாயிருப்பவன் சிந்திப்பான்," என்று பட்டும் படாமலும் பரதபட்டன் பதில் சொன்னான். அத்துடன் நிறுத்தாமல் மேலும் சொன்னான்: "மன்னன்தான் அறிவில்லாமல் அலுவல் புரிகிறானென்றால் மக்களுக்கு எங்கே போயிற்று அறிவு? தமிழ் மக்களுக்கே கூத்து களியாட்டம் என்றால் தலைகால் புரிவதில்லை. இந்தக் கலைப் பைத்தியத்தாலேயே தமிழ் மக்கள் அழிந்து போகிறார்கள்.'

இந்திரபானு சற்று யோசித்துவிட்டு, "ஒரு நாளைக்குத் தானே இந்தக் களியாட்டம் குருநாதரே! நாளைக்கே நகரம் பழையபடி போர்ப் பாதுகாப்பில் இறங்கி விடுகிறது. மன்னனும் நகர எல்லைகளில் பாதுகாப்பைப் பலப் படுத்தித்தான் இந்தச் செண்டு வெளிக் களியாட்டத்தையும் ஏற்பாடு செய்திருப்பான். தவிர, குருநாதரே —" என்று மேலும் ஏதோ சொல்லப் போனான்.

"என்ன?" என்று கேட்டான் பரதபட்டன்.

"மன்னன் மற்றபடி எத்தனை கேவலமாக நடந்து கொண்டாலும் இந்தக் களியாட்ட சம்பந்தமாக நியாய மாகத்தான் நடக்கிறான்."

"எப்படி?"

"உதாரணமாக வீரர்களுக்குச் சுதந்திரமிருந்தால் தான் களியாட்டத்தில் ஈடுபட முடியும்."

"உம்,"

"ஆகவே, எனக்குக்கூட மூன்று நாட்களாக நிரம்பச் சுதந்திரத்தை அளித்திருக்கிறான்."

"உனக்குக்கூட என்றால்?"



"என்னைக் கூத்தன் வேலைக்கமர்த்தினான். அவன் மீதுள்ள சந்தேகம் என்மீது விழுமல்லவா?"

"ஆம்?"

"இருப்பினும், நான் இஷ்டப்படி உலாவ முடிகிறது இந்நகரத்தில் இஷ்டப்பட்டபோது மூன்று நாட்களாக அரண்மனைக்கு வெளியே சென்று வருகிறேன். தவிர, மெய்க்காவலனுக்குள்ள மரியாதையும் எனக்குக் கிடைக்கிறது."

"உம்."

"என்ன குருநாதரே? எதற்கெடுத்தாலும் உம் கொட்டுகிறீர்களே?"

பரதபட்டனின் கண்களில் ஒரு விநாடி விஷம ரேகை யொன்று படர்ந்து மறைந்தது. உதடுகளில் லேசான புன்முறுவல் ஒன்றும் தெரிந்தது. "உம் கொட்டாமல் என்ன செய்யமுடியும்? உன் சுதந்திரம் தரும் வியப்பு, பேச்சைத் தடை செய்கிறது," என்ற பரதபட்டன் மெல்ல நகைக்கவும் செய்தான்.

"என் சுதந்திரம் வியப்பைத் தருகிறதா?" என வினவினான் இந்திரபானு.

"ஆம் இந்திரபானு! மூன்று நாட்களாகக் கிடைத்திருக் கும் சுதந்திரம் விசித்திரமானது" என்றான் பரதபட்டன்.

"என்ன விசித்திரம் இதில்?"

"அளவுக்கு மீறிய எதுவும் விசித்திரம்தான். அளவுக்கு மீறிச் சுதந்திரமோ, உபசரிப்போ எது கிடைத்தாலும் விசித்திரம்தான்! ஆட்டைப் பலியிடுவதற்கு முன்பு அதற்கு என்ன உபசரிப்பு நடக்கிறது. எவ்வளவு தடவை குளிப்பாட்டுகிறார்கள்? எத்தனை முறை மஞ்சள் பூசி மாலை சூட்டி எவ்வளவு அழகாய் அலங்கரிக்கிறார்கள்? அது எத்தனை மிடுக்குடன் பலிபீடத்திற்கு நடந்து செல்லுகிறது," என்ற பரதபட்டன் அதற்குமேல் எதுவும் பேச மறுத்தான்.

பரதபட்டன் அன்றிரவில் ஏதோ விபரீதத்தை எதிர் பார்க்கிறானென்பதை இந்திரபானு சந்தேகமற உணர்ந் திருந்தாலும், அதுபற்றி முத்துக்குமரி முன்பே கோடி

காட்டியிருந்தாலும், அவன் சிறிதும் லட்சியம் செய்ய வில்லை. அவன் மனக்கண் முன்பு மதுரை அரண்மனைச் செண்டுவெளிக் களியாட்டமும், போர்க்கூத்தும் மக்கள் ஆரவாரமுமே எழுந்து நின்றன. ஆகவே அவற்றை நினைத்து நினைத்துச் சேரநாட்டிலும் அது போன்ற வெறியாட்டம் இருக்குமென்ற மகிழ்ச்சியில் அன்று பகலைக் கழித்தான். அந்த மகிழ்ச்சி அவனுக்கு மட்டுமல்ல. சேரமன்னன் வீரரவிக்கும் இருந்தது. அன்று வீரரவி இரண்டு மூன்று முறை உப்பரிகையில் நின்று செண்டு வெளியைக் கவனித்தான். அங்கிருந்த ஏற்பாடுகளையும் தனது கண்களால் ஆராய்ந்து திருப்திப்பட்டுக் கொண்டான். பிறகு தனது அறையில் சேனாதிபதியை வரவழைத்து, "என்ன! நான் சொன்ன ஏற்பாட்டைச் செய்துவிட்டாயா?" என்று வினவினான்.

"செய்து விட்டேன்," என்றான் சேனாதிபதி வெறுப்புடன்.

"யாரை உப்பரிகை முன்கூடலில் நிறுத்தப் போகிறாய்?"

"செண்டுவெளியில் பிரசித்திப் பெற்ற வீரனை" என்றான் சேனாதிபதி.

"குறி தவறாமல் எறியக்கூடியவனா?" என்று மன்னன் மீண்டும் வினவினான்.

"அவன் செண்டு பலபேர் உயிரை ஏற்கனவே குடித் திருக்கிறது," என்ற சேனாதிபதி, அதற்கு மேல் ஏதும் கூறாமல் மௌனம் சாதித்தான்.

சேனாதிபதி மௌனத்துக்குக் காரணம் தெரிந்திருந்த படியால் மன்னன் மேற்கொண்டு சம்பாஷணையை நீட்டாமல், அவனுக்குப் போக அனுமதியளித்தான். அன்றைய பகலைப் பற்பல யோசனைகளிலும் பற்பல ஏற்பாடுகளிலும் செலவழித்தான். அன்றிரவு நிகழவிருந்த சதியைப் பார்க்க இஷ்டமில்லாத 'பரிதியும் மேலைக் கடலில் இறங்க முற்பட்டான்.

அன்று பௌர்ணமிக்கு முந்தின நாளாதலால், செண்டுவெளிக் களியாட்டத்தைக் காணப் பொழுதிருக்கும்



போதே வானத்தில் தோன்றிவிட்ட மதி தன் கதிர்களின் வெண்மையை மெள்ள மெள்ள அதிகப்படுத்தலானான். அந்திவானம் சிவந்ததுமே அரண்மனையை நோக்கி நகர முற்பட்ட மக்களின் கூச்சலும் கூட்டத்தைக் கட்டுப்படுத்த வீரர்கள் புரவிகளை ஓடவிட்டதால் ஏற்பட்ட ஒலிகளும், படைத்தலைவர் பலர் ரதங்களில் வேகமாகச் சென்றதால் கிளம்பிய சகட நாதமும் பரலி மாநகரைத் திருவிழா நகரமாக அடித்திருந்தது. கூலவாணிகரும், கூத்தரும், சேரவீரரும், யவனக் காவலரும் பலப்பல உடைகளையும், பலப்பல ஆயுதங்களையும் தரித்துச் செண்டுவெளியை நோக்கி நடந்தது சேரமாநகரின் மக்களமைப்பு எத்தன்மையது என்பதை எடுத்துக் காட்டியது. இப்படி வெள்ளமென நகர்ந்த பலதரப்பட்ட மக்களின் கூட்டம் அரண்மனையின் பல வாயில்கள் மூலமும் உட்புகுந்தது. எந்த வாயிலில் புகுந்தாலும் செண்டு வெளிக்குச் செல்ல வசதியிருந்ததால் நான்கு பக்கங்களிலிருந்தும் நான்கு நதிகளென செண்டு வெளியை நோக்கி வந்த மக்கள் பிரவாகத்தைச் செண்டுவெளி முனையில் பெரும் யவனவீரர்கள் ஈட்டிகளைக் கொண்டு தேக்கி நிறுத்தினர். மக்களில் பலர் களிவெறி கொண்டு கூச்சலிட்டார்கள். பலர் பாடினார்கள். பலர் ஆடினார்கள். குதூகலம் எங்கும் கரைபுரண்டு ஓடிக் கொண்டிருந்தது.

இரவு மெல்ல மெல்லப் புகுந்துவிட்டதால் பட்டப் பகல் போல் காய்ந்த வெண்ணிலவு செண்டுவெளியின் செம்மண் நிலத்திற்குப் புதுமெருகு கொடுத்திருந்தது. அத்தனை நிலவு காய்ந்தும், அது போதாதென்று செண்டு வெளியை அடுத்திருந்த அரண்மனைச் சுவர்களில் பதிக்கப் பெற்றிருந்த லட்சம் வெண்கல அகல்களும், ஏற்றப் பட்டிருந்தபடியால், அந்த அரங்கை இயற்கையின் லட்சம் கண்கள் பார்ப்பது போல் தோன்றியது. இவை தவிர மன்னரும் மற்றப் பெருங்குடி மக்களும் உட்காருவதற்காக நிர்மாணிக்கப் பட்டிருந்த மேடையின் அருகே பெரும் பந்தங்கள் பல சுடர்விட்டெரிந்து தங்கள் தீச்செண்டுகளை லேசாகக் காற்றில் ஆற்றிக்கொண்டிருந்ததும் அந்த

வையாளி வீதிக்குப் பெரும் கம்பீரத்தை அளித்திருந்தது. சேனாதிபதிகளும் உபசேனாதிபதிகளும், புரவிப் படைப் பெருவீரரும், அரச குடும்பம், தளபதிகள் குடும்பம், புரோகிதர் குடும்பம் இவற்றைச் சேர்ந்த நாரீமணிகள் பலரும் பற்பல அழகிய உடைகளை அணிந்து அந்த மேடைக்குள் புகுந்து கொண்டிருந்தனர். தளபதிகள் அணிந்திருந்த பெருங் கவசங்களும் புரோகிதர்களின் பீதாம்பரங்களும், மங்கையரின் நானாவித சரிகைச் சேலைகளும் பந்தவெளிச்சத்திலும், லட்ச தீப ஒளியிலும் கண்ணைக் கவர்ந்தன. மேடைமீதும் கீழுமிருந்த மக்களின் பாகுபாட்டையும், உடையிலும் மற்றதிலுமிருந்த ஏற்றத் தாழ்வையும் காணச் சகியாதவன்போல வான்மதி சின்னஞ்சிறு வெண்ணிற மேகமொன்றில் ஒரு விநாடி மறைந்தான். அந்தச் சமயத்தில் அரண்மனை முரசுகள் முழங்கின.

முரசு முழங்கியதும் பட்டென்று செண்டுவெளி எங்கும் நிசப்தம் உலாவியது. இருமுறை தூய வாத்தியங்கள் முழங்கின. அரண்மனைத் தாதிகள் பலர் அப்சர ஸ்திரீகள் போல் மேடைமீது தாவி வந்து மலர்களைத் தூவிச் சென்றனர். அடுத்தபடி சங்க நாதங்களும் இன்னிசைக் கருவிகளும் அறை கூவுவோரின் வெற்றி முழக்கங்களும் பலமாக எழுந்தன. அந்த ஒலிகளுக்குச் செவிசாய்த்துப் புன்முறுவல் செய்துகொண்ட அந்தப் பெரு மேடையின் முன்புறத்தில் மன்னன் தோன்றினான். அன்று மன்னன் வெண்புரவியில் அமர்ந்து செண்டுவெளி அரங்கு வழியே மேடைக்கு வந்தான்.

மன்னன் உடை மிகக் கம்பீரமாயிருந்தது. யவனர் உடையை அணிந்திருந்தான் அன்று வீரரவி. சாதாரண மாகவே அழகிய தோற்றமுள்ளவனான உதயமார்த்தாண்ட வர்மன் அன்றைய உடையில் மெல்லிய இரும்புக்கம்பிகளில் நெய்யப்பட்டிருந்த மார்புச் சட்டையில், 'கைகளின் முன் புறத்தை (முழங்கையிலிருந்து கணுக்கை வரை) முடியிருந்த பித்தளைத் தகட்டில், தலையில் கவித்திருந்த சொர்ணக் கிரீடத்தில், அதன் முகப்பில் செருகியிருந்த செங்கழுகின்



இறகில், மிகமிகக் கம்பீரமாகவும் அழகாகவும் காட்சி யளித்தான். பரசுராமன் சிருஷ்டித்த நாட்டைச் சேர்ந்த வீர ரவியின் இடையில் அன்று ஒரு பொற்பரசும் பளிச்சிட்டது. அவன் பொற்கிரீடமும் மற்றக் கவசங்களும் தீபங்களின் ஒளியில் செந்நிறம் பெற்றதற்கும், அவன் ஏறி வந்த புரவியின் வெண்மைக்குமிருந்த மாறுபாடே பிரமிக்கத்தக்க தாயிருந்தது.

வெண்புரவியில் வரும் இந்திரனைப்போல், பூம்புகாரின் இந்திரவிழாவை நிகர்த்த அந்தச் செண்டு வெளி விழாவிற்கு வந்த வீரரவி உதயமார்த்தாண்டவர் மனைக்கண்டதும் வீரர்கள் ஜெயகோஷம் செய்தார்கள். மக்கள் மகிழ்ச்சிக் கூச்சலிட்டார்கள். அவற்றை வரவேற்கும் பாவனையில் சிரமசைத்த உதயமார்த்தாண்டவர்மன் அந்த ஆராவாரங்களுக்கிடையே, தனது வெண்புரவியை நடத்திச் சென்று மேடையின் மத்தியப் பகுதிக்கு வந்ததும் புரவியை நிறுத்த, இரு வீரர்கள் புரவியின் கடிவாளத்தைப் பிடித்தனர். மற்றுமிருவர் மன்னன் கால்வைத்து இறங்கப் பஞ்சணைப் படியொன்றை வைத்தார்கள். புரவியிலிருந்து அப்படியில் காலை வைத்து இறங்கி மன்னன் மேடைமீது ஏறவே, அந்த அலங்கார மேடைமீதிருந்த பெருங்குடி மக்கள் அனைவரும் எழுந்து நின்றனர்.

மன்னன் அவர்களையும் அவர்கள் வணக்கத்தையும் ஏற்றுத் தனது ஆசனத்தில் அமர்ந்தான். அவன் அமர்ந்த அதே சமயத்தில் மேடையின் பின்புறமாக இரு சேடிகளுக் கிடையில் அழைத்து வரப்பட்ட முத்துக்குமரி மன்னன் உட் கார்ந்திருந்த ஆசனத்தின் பின்னால் உட்கார்ந்தாள். அவள் வந்ததைத் திரும்பிப் பார்த்த மன்னன் மீண்டும் செண்டு வெளியை நோக்கித் திரும்பித் தன் வலது கரத்தை அசைத்தான். அந்தக் கை அசைந்ததும் அந்தச் செண்டு வெளியரங்கின் முரசுகள் மூலைகளில் டமடமவென்று முழங்கின. இரண்டு மூலைகளிலிருந்து இரு புரவிகள் பாய்ந்து செண்டுவெளிக்குள் காற்றெனப் பறந்து வந்தன. செண்டாயுதங்கள் இரண்டு வேகமாக அங்கு குறுக்கே பறந்தன. வீரர்களின் திருவிழாவான செண்டு வெளி மிக மும்முரமாகவும் ஆரவாரத்துடனும் துவங்கிவிட்டது.

அத்தியாம் 17

# இதயம் நனையவில்லை

**ம**ன்னன் அமர்ந்திருந்த உயர் மேடைக்கெதிரில் பெரு வளையமாகக் காட்சியளித்த மக்கள் கூட்டத்தின் வடமூலையிலும் தென்மூலையிலும் மக்கள் வளையம் இரண்டு இடங்களில் காவலர் அணிவகுப்பால் பிளக்கப் பட்டிருந்தபடியால், அந்தப் பிளவுகளுக்குள் வீரர் புரவி களில் விரைந்து செண்டுவெளிக்குள் நுழைய வசதியிருந்த தன்றி, செண்டுவெளியின் ஈசானிய மூலையில் செண்டாயுதத்தின் கூரிய வேல் நுனி பதிய, பெரியதொரு மீன் இலக்கமும் பதிக்கப்பெற்றிருந்தது. அதிலிருந்து சற்று எட்டத் தள்ளி, பாண்டியர் கொற்கை ராஜமுத்திரையைப் போல் யானையும் கட்டாரியும் பிணைந்த மற்றோர் இலக்கம் இரண்டு பெருந்தூண்களுக்கு இடையில் தொங்கவிடப்பட்டு ஆடிக் கொணடிருந்தது. மன்னன் கையசைத்துப் புரவி வீரரிருவர் செண்டுவெளிக்குள் புகுந்து இரண்டு செண்டாயுதங்களை மீன் இலக்கை நோக்கி வீசியதும் மக்கள் பெருத்த ஆரவாரம் செய்தார்கள். அந்தச் சமயத்தில் அரண்மனைக் கட்டியக்காரன் மேடையின் ஒரு கோடியில் எழுந்து நின்று கையிற் பிடித்திருந்த பெருங்கோலை ஆட்டவே மீண்டும் முரசுகள் ஒலித்தன. மன்னர் ஏதோ அறிவிக்க விரும்புகிறாரென்பதை உணர்ந்த மக்கள் சட்டென்று கூச்சலை அடக்கிக் கொண்டார்கள். செண்டு வீசிய புரவி வீரர் இருவரும் புரவிகளை அடக்கி, செண்டு வெளி நடுவில் நின்றார்கள்.

நிசப்தம் நிலவியதும் கட்டியக்காரன் பெருங்குரலில் சேர மன்னன் விருதுகளை இரைந்து அறிவித்தான். 'ப்ரசு ராமர் நாட்டினரான சேரர் பெருமான், மேலைக்கடல்



எம்பிரான், பல்யானைச் செய்குழு குட்டுவன் பரம்பரையில் வந்த பரலீசன், மக்களுக்குத் தனது வாழ்த்துக்களைச் சொல்லுகிறார்..." என்று கட்டியக்காரன் கூறி நீளக் கைக்கோலை மேடையில் மும்முறை தட்டி, "ஜெய விஜயீபவ!" என்று கூச்சலிட்டதும் மன்னன் தனது ஆசனத்தில் எழுந்திருந்தான். ஒருமுறை தனது குடிமக்களை ஆவலுடன் நோக்கினான். பிறகு உரத்த குரலில், "சேர நாட்டுப் பெருமக்களே! இந்த மண்ணை வெற்றி கொள்ள மாற்றானொருவன் முயல்கிறான் அது முடியுமா?" என்று கேட்டான்.

"முடியாது, முடியாது. பாண்டியப் படைகளைக் கிழித்தெறிவோம்!" என்ற மக்கள் கூச்சல் வானைப் பிளந்தது.

சேர மன்னன் அந்தக் கூச்சலைக் கையமர்த்தி அடக்கிவிட்டு, "உண்மை. சேரமக்களின் உணர்ச்சி வெள்ளம் பாண்டியப் படைகளை அடித்துக்கொண்டு போய்விடும். மக்கள் கொந்தளிப்பு எனும் தீயில் பாண்டியர் மாண்டு மடிவார்கள், சேரர் வீரத்துக்கு இந்தச் செண்டு வெளி அத்தாட்சியல்லவா?" என்று மீண்டும் மக்களின் உணர்ச்சிகளைத் தூண்டினான்.

இந்தக் கேள்விக்குப் பதில் முன்னைவிட மும்முரமா யிருந்தது. "ஆம்! ஆம்! செண்டுவெளி வீரர் பிறக்குமிடம், வீரர் மடியும் இடம்" என்று மக்கள் பலபலவிதமாகக் கூவினர்.

மன்னன் ஒரு விநாடி தாமதித்துவிட்டு மீண்டும், "இந்தச் செண்டுவெளித் திருநாளுக்கு, நமது படைகளை நடத்திச் சென்றுள்ள சிங்கணர் ஒரு செய்தியனுப்பி யிருக்கிறார். படிக்கிறேன், கேளுங்கள்," என்று மடியிலிருந்து ஒரு நீட்டோலையை எடுத்தான். அந்த ஓலையைக் கண்டதும் மக்களிடம் பெரும் அமைதி ஏற்பட்டது. மன்னன் இரைந்து ஓலையைப் படித்தான்: "சேரர் திலகமே! மன்னரே! என் தலைமையில் திரண்டு வந்த தங்கள் படை பலத்தைக் கண்டதும் கோட்டாற்றுக் கோட்டைக்குள்

உள்ள வீரபாண்டியன் நடுங்கிவிட்டான் அவன் சரணடையத் தயாராகி விட்டான். அதுபற்றிய செய்தியை முதலில் தந்திரத்தால் அறிந்தேன். பிறகு அவனே நேரிடையாக என்னிடம் சரணடையச் சம்மதித்து விட்டான். வாழ்க சேரநாடு! வாழ்க சேர மக்கள்! வாழ்க சேரர் மாமன்னர்! இப்படிக்கு ஊழியன் சிங்கணன்."

வாசகத்தை ஒவ்வொன்றாகத் தனது குரலுக்கு உணர்வும் ஒலியும் கொடுத்து மக்கள் மனத்தில் உறையும்படி படித்தான் சேரமன்னன். அது முடிந்ததும் மக்கள் உணர்ச்சி கரை கடந்துபோகவே பல இடங்களில் வீரர் காவலும் அணியும்கூட உடைக்கப்பட்டன. மக்கள் உணர்ச்சி அளவுக்கு மீறிப் போய்விட்டதை உணர்ந்த வீரரவி பக்கத்திலிருந்த சேனாதிபதியை நோக்கிப் புன்முறுவல் செய்து ஆசனத்தில் உட்கார்ந்தான்.

மக்கள் ஆரவாரம் அதிகமாயிருந்தது. அந்த ஆரவாரத்துடன், மக்கள் கூட்டத்தைச் சரி செய்து நிறுத்த வீரர் சிலர் கிளப்பிய ஒலிகளும், சுற்றிச் சுற்றிப் புரவிகளில் ஓடி மக்களைப் பின்னடையச் செய்ய முயன்ற மற்றும் சில வீரர் களின் சத்தமும் குழப்பத்தைக் குறைப்பதற்குப் பதில் அதிகப்படுத்திக் கொண்டிருந்தன. ஆனால் திரும்பத் திரும்ப முரசுகள் ஒலித்ததும் மக்கள் கூச்சல் அடங்கியது. வீரர்கள் பழையபடி செண்டுவெளி அரங்கையும் சரிசெய்யவே, ஆரம்பத்தில் உட்புகுந்து செண்டு வீசி பிறகு அரங்கின் நட்டநடுவில் நின்றுவிட்ட புரவி வீரர் இருவரும் மீண்டும் புரவிகளின் பக்கவாட்டிலிருந்து வாட்களை உருவிச் சண்டையிட்டனர். மக்களைச் சுயநிலைக்குக் கொண்டு வரும் நோக்கத்துடன் நடந்த அந்தச் சண்டைக்குப் பிறகு மக்கள் அடங்கி விடவே செண்டுவெளி விழா மேலும் தொடர்ந்தது.

முதலில் வந்த இரு புரவிவீரர் சென்றதும் மீண்டும் இருயவனர்கள் வந்து புரவிகளை அந்த அர்த்த சந்திர அரங்கில் சுற்றிச் சுற்றி வரச்செய்து வெகுவேகத்துடன் வேல்களை மீன் இலக்கை நோக்கி எறிந்தனர்.



இருவேல்களும் மீன் இலக்கில் பதிந்துவிடவே இருவரும் புரவிகளைப் போட்டியிட்டுச் செலுத்தி வேல்கள் இரண்டையும் மீண்டும் உருவியெடுத்து பாண்டியர் ராஜ முத்திரையை நோக்கி வீசினர்: ஆனால் ஆடிக் கொண்டிருந்த ராஜமுத்திரையை அவை தொடாது போகவே மக்கள் பெரிதாக நகைத்தனர். யவனர்கள் சிரம் தாழ்த்திச் சென்றதும் மற்றுமிரு சேரவீரர் செண்டு எறியக் காலோட்டமாக வந்து வெகு வேகத்துடன் மீன் இலக்கத்தை நோக்கி செண்டுகளை எறிந்தனர். ஒரு செண்டு பதிந்தது. மற்றொரு செண்டு தவறியது, இப்படித் திரும்பத் திரும்பப் பல வீரர்கள் பங்கு கொண்ட செண்டுவெளி விழா நேரமாக ஆக, உச்சஸ்தாயியை எட்டிக் கொண்டிருந்தது.

செண்டு வீசி இலக்கம் தவறிய வீரர்கள் பலர் அந்தச் செண்டுகளை மீண்டும் எடுத்து ஒருவருடன் ஒருவர் போரிட்டனர். அதில் காயமுற்றவர்களைப் பலர் அப்புறப் படுத்தினர். அவ்வப்போது வீரர் குருதியால் அந்தச் செண்டு வெளி வீரபூமி நனைந்து கொண்டிருந்தாலும் முழுதும் இரண்டு இலக்கங்களையும் எந்த வீரனையும் அடிக்க வில்லையாதலால் மக்கள் ஆட்சேபக் கூச்சலிட்டார்கள். அதனால் சேரமன்னனே தனது ஆசனத்திலிருந்து எழுந்து மேடையிலிருந்து இறங்கி அதனருகில் அத்தனை விளையாட்டுக்கும் போருக்கும் அசையாமல் சிலையென நின்று கொண்டிருந்த வெண்புரவிமீது ஆரோகணித்தான். அவன் கை நீட்ட அவனிடம் அளிக்கப்பட்டது ஒரு பெரும் செண்டு.

மன்னனும் அந்த விழாவில் பங்கு கொள்ளப் போவதை அறிந்த மக்கள் களிவெறி கொண்டனர். வீரரவி செண்டாயுதத்தை ஏந்தி ஒருமுறை புரவியில் செண்டு வெளிக்குக் குறுக்கே சென்றான். அவன் திரும்பியபோது புரவி காற்றெனப் பாய்ந்தது. பாய்ந்தது புரவியா, செண்டா என்று மக்கள் உணருமுன்பு மன்னன் கையிலிருந்த செண்டு மீன் இலக்கத்தை ஊடுருவிச் சென்றுவிட்டது. அது சென்ற

வேகத்தில் மீன் இலக்கத்திலிருந்த பனைநார்கள் நாற்புறமும் சிதறின. மக்கள் கூச்சல் எல்லை கடந்தது. அவர்களுக்கு மேலும் வெறியூட்ட வீரரவி மீண்டும் ஒரு செண்டை ஏந்தி மக்களை நோக்கிக் கூறினான்: "பாண்டியர் மீன் வீழ்ந்தது பாருங்கள். இதோ, அவர்கள் இலச்சினை அறுந்து விழும்!" அதைச் சொல்லிக்கொண்டே ஊஞ்சலாடிக் கொண்டிருந்த அந்த இலச்சினைமீது செண்டை வீசிவிட்டான். செண்டு குறி தவறாது அந்த இலச்சினையை அறுத்து விட்டதா னாலும் அதே சமயத்தில் பெரும் அற்புதம் ஒன்று நேர்ந்தது. கூட்டத்தில் ஒரு மூலையிலிருந்து செண்டு வெளியில் பாய்ந்து விட்ட வீரன் ஒருவன் அந்த இலச்சினை பூமியில் விழுமுன்பு அதைத் தாங்கிப் பிடித்தான். பிறகு அதன் கயிறுகளை முடிந்து தனது தோளில் மாட்டிக்கொண்டான்.

கூட்டத்தில் சட்டென நிசப்தம் நிலவியது. பலர் மூச்சை இழுத்துப் பிடித்துக்கொண்டார்கள். பாண்டியர் இலச்சினையைத் தாங்குவது பெரும் துரோகம் என்று கருதிய மக்கள் அந்த வாலிபனைப் பரிதாபத்துடன் பார்த்தார்கள். அவன் முகத்தைப் போலவே புத்தியும் விகாரப்பட்டிருக்குமோ என்று பலர் நினைத்தார்கள். மேடையிலிருந்து அந்த நிகழ்ச்சியைக் கண்ட முத்துக் குமரியின் முகத்தில் பயத்தின் வியர்வை துளிர்த்தது. இந்திர பானுவின் அந்தத் துணிகரச் செயல் அவளைத் திக்பிரமை யடையச் செய்து விட்டது. மன்னன் அவனைத் தீர்த்துவிட வேறு அத்தாட்சி வேண்டியதில்லையென்று நினைத்தாள். தான் பாண்டியரைச் சேர்ந்தவன் என்று பறைசாற்ற அந்தத் துணிகரச் செயலைவிடச் சிறந்தது எதுவும் கிடையாதென்ற நினைப்பு அவள் புத்தியில் அக்னியை வாரித் தெளித்தது. மேடையின் ஒரு மூலையில் தன்னந்தனியே உட்கார்ந்திருந்த பரதபட்டனும் அதைக் கவனித்தாலும் அவன் அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. அவன் முகத்தில் அதிக உணர்ச்சி ஏதுமில்லை. சுவையற்ற ஒரு நாடகத்தைப் பார்ப்பவனைப் போன்ற வெறுப்புத் துலங்கிய முகத்துடன் உட்கார்ந்திருந்தான்.



ஆனால் மற்றவர்கள் வியக்க, பயமடைய, அடுத்து நிகழ்ச்சிகள் நடந்தன. வீரனைத் தொடர்ந்து பெரும் புரவி யொன்றும் செண்டுவெளிக்குள் ஓடிவந்தது. அந்த விகார முக வீரன் அதில் தாவி ஏறிக்கொண்டு, புரவிமீதிருந்த மன்னனுக்கு முன்வந்து "மன்னர் அனுமதித்தால் அடிய வனும் செண்டு வீசுவேன்," என்று அடக்கத்துடன் கூறித் தலை வணங்கினான். அந்த வீரனிடம் மக்கள் பெருங் கோபத்தைக் காட்டினாலும் வீரரவியின் முகத்தில் கோபம் ஏதுமில்லை. மகிழ்ச்சிப் புன்முறுவலொன்று உதடுகளில் படர்ந்து முகம் பூராவும் பரவியது.

"செண்டு எறி" என்று கூறி அவனிடம் இரண்டு செண்டாயுதங்களைக் கொடுக்கக் காவலருக்கு உத்தர விட்டான். பிறகு மேடைக்குச் சென்று அமர்ந்தான்.

வீரன் புரவியில் செண்டுவெளியை வெகுவேகமாகச் சுற்றினான் இருமுறை. திடீரெனத் திரும்பி ஒரு செண்டை வீசி மீன் இலக்கை அறுத்தான். அது கீழே விழு முன்பு அதைப் புரவியில் பாய்ந்து சென்று கையில் ஏந்தினான். அதைப் புரவியின் கழுத்தில் தனக்கெதிரில் வைத்துக் கொண்டான். இப்படித் தோளில் இலச்சினையும் மடியில் இலக்குமாக மீண்டும் புரவியில் சுற்றிய அந்த விகாரமுக வீரன் செண்டுவெளியில் ஒரு பக்கத்தில் தனிச் சுவரில் பொருத்தப்பட்டிருந்த சேரர் இலச்சினையை நோக்கிச் செண்டை வீசினான். செண்டு மிக வேகமாகச் சென்று அந்த உலோக இலச்சினையில் 'கிளாங்' என்று தாக்கிக் கீழே விழுந்தது. பிறகு அந்த வாலிபன் புரவியில் கடுகி அரங்கின் கோடியில் சாத்தப்பட்டிருந்த செண்டுகளில் இரண்டைக் கையில் எடுத்துக்கொண்டான்.

அவன் செய்கை ஒவ்வொன்றும் மக்களுக்கு வெறி யூட்டவே, "கொல்லுங்கள் அவனை, கொல்லுங்கள் துரோ கியை!" என்ற கூக்குரல்கள் எங்கும் எழுந்தன. அவனை நோக்கிச் சேரவீரர் இருவர் புரவிகளில் செண்டுகளை ஏந்தி வந்தனர். அந்த இரண்டு வீரர்களையும் அந்த வாலிபன் ஒரே சமயத்தில் எதிர்கொண்டான். வெகு வேகமாகப்

பாய்ந்த அவன் புரவியாலும், சமயத்தில் அவன் செண்டைத் திருப்பிய சாமர்த்தியத்தாலும், இரு சேர வீரரும் புரவிகளிலிருந்து தரையில் உருண்டனர். அடுத்து வந்த இரு யவனர் கதியும் அவ்வாறே இருக்கவே, மக்கள் வெறி உச்சநிலை அடைந்தது. மக்களை மட்டும் மன்னன் வீரர்கள் கட்டுப்படுத்தாதிருந்தால் அவனை அவர்கள் கிழித்தெறிந்திருப்பார்கள். ஆனால் அவர்கள் உடைக்க முடியாதபடி அரங்கில் வீரர் அணிவகுப்பு பலமாயிருந்தது.

அது எதையுமே லட்சியம் செய்யாத இந்திரபானு வெகு அலட்சியமாகவும் ஆணவத்தால் நிமிர்ந்த தலையுடனும் செண்டுவெளியை வலம் வந்தான். தன்னை எதிர்த்த நான்கு வீரர்கள் தரையில் உருண்டதும், அவனே கீழே இறங்கி அவர்களை அவர்கள் புரவிகளின் முதுகில் தூக்கிப் போட்டுப் புரவிகளை விரட்டினான். வெளியே பிறகு வெற்றிக் குறி முகத்தில் துலங்க வீரரவியிருந்த இடத்துக் கருகில் புரவி மீதமர்ந்தவாறே வந்தான். அவன் வந்து கொண்டிருந்தபோதே மன்னன் கண்கள் சேனாதிபதியை நோக்கின. சேனாதிபதியின் கண்கள் மேடையின் மூலைக்கு அப்பாலிருந்த உப்பரிகையின் முக்கூடலை நோக்கின. அவ்வளவுதான். விபரீத நிகழ்ச்சிகள் அடுத்த விநாடி வெகு துரிதத்துடன் தொடர்ந்தன. முத்துக்குமரி கூடல்வாயை நோக்கி வீறிட்டு மயக்கமுற்றுச் சாய்ந்து விட்டாள் உட்கார்ந்த இடத்திலேயே.

அந்த வீறலின் காரணத்தை அறியாத மக்கள் திடீரெனக் குழப்பமடைந்தபோது முக்கூடலில் ஒரு விபரீதம் நேரிட்டது. அங்கு செண்டு தாங்கி நின்ற ஒரு பிணம் கூடல் வாயிலில் உருண்டுவந்து செண்டுவெளியில் தொப்பென்று விழுந்தது. செண்டுவெளியில் அடுத்த விநாடி பெருங் குழப்பம் கூச்சல் எல்லாம் ஏற்பட்டன. வீரர் அணி எங்கும் உடைக்கப்பட்டு மக்கள் செண்டுவெளிக்குள் புகுந்து விட்டனர். மக்களை அடக்க ஊதப்பட்ட தாரைகள், ஒலிக்கப்பட்ட முரசுகள் அத்தனையும் அர்த்தமற்றதாயின.



மக்கள் கிளப்பிய ஒலி விளைவித்த குழப்பம் மற்ற எல்லா ஒலிகளையும் அடக்கிவிடவே, மக்கள் சமுத்திரம் வெகுசீக்கிரம் உள்ளே நுழைந்துவிட்டது. அந்தச் சமுத்திர அலைகளை மன்னனின் யவன வீரர்கள் தேக்க முடியவில்லை. அத்தனையையும் பார்த்துக் கொண்டிருந்த பரத பட்டன் உதடுகள் இகழ்ச்சியால் மடிந்தன. “வினை விதைத்தவன் வினையறுப்பான்,” என்ற சொற்களும் அவன் உதடுகளிலிருந்து மெல்ல உதிர்ந்தன.

உட்புகுந்த மனித அலைகளைத் தேக்க நீண்டநேரம் பிடித்தது வீரர்களுக்கு. கடைசியாக செண்டுவெளியில் அமைதி துலங்கியபோது மன்னன் மேடையிலிருந்து இறங்கிச் சென்று மூலையில் குப்புறக் கிடந்த பிணத்தை வெறுப்புடன் பார்த்தான். தன் பாதக் குறட்டால் அந்த உடலைத் திருப்பித்தள்ளியும் பார்த்தான். அப் பிணத்தின் இதயத்திலிருந்து குருதி பெருமளவில் வந்துகொண்டிருந்தது. அந்தக் குருதியின் ஒரு பகுதியால் மன்னன் பாதக் குறடு நனைந்தது! ஆனால் அவன் இதயம் மட்டும் நனையவில்லை. வீரரவியின் இதயத்தில் ஈரம் இம்மியளவும் இல்லை. கோபமே மண்டிக் கிடந்தது. “முட்டாள்!” என்ற சொல் அருவருப்புடன் அவன் வாயிலிருந்து உக்கிரத்துடன் உதிர்ந்தது.

## அத்தியாயம் 18

# மந்திரக்கோலின் மகிமை

சேர வீரர்களாலும் யவனக் காவலராலும் மக்கள் ஓரளவு கட்டுப்படுத்தப்பட்டுச் செண்டுவெளியிற் சிறிது குழப்பமும் அடங்கிய பிறகு மேடையிலிருந்து குதித்து வந்து கூடல் வாயிலிலிருந்து மாண்டு விழுந்த மாபெரும் வீரன் உடலைத் தன் இடதுகாலால் உதைத்துப் புரட்டிய வீரரவியின் உள்ளம் பெரும் எரிமலையாயிருந்தபடியால், தனது பாதக்குறட்டில் நனைந்த ரத்தத்தைக்கூட அவன் சட்டை செய்யவில்லை. 'முட்டாள்', என்ற சொல்லை உதிர்த்த போதும் அவன் முகத்தில் பெரும் வெறுப்பே மண்டிக் கிடந்தது. மன்னன் மேடையிலிருந்து குதித்து மாண்டவனை நோக்கிச் செண்டுவெளிக்குக் குறுக்கே நடந்த போது அவனைத் தொடர்ந்து வந்த சேனாதிபதியும் மற்றும் சில அரண்மனைக் காவலரும் மன்னனுக்கு அக்கம் பக்கத்திலும் பின்னாலும் நின்று, அந்த விபரீதக் காட்சியை உற்றுப் பார்த்து ஏதும் புரியாமல் விழித்துக் கொண்டிருந்தனர். செண்டுவெளியில் புது வீரனொருவன் புகுந்து பாண்டியர் இலச்சினைகளுக்கு மரியாதையும், சேரர் இலச்சினைக்கு அவமரியாதையும் செய்ததால் கோபவெறி கொண்டிருந்த மக்கள் ஒரு விபரீத மரணமும் அன்று நேர்ந்து விட்டபடியால் பலவிதமாகப் பெருங் கூச்சலிட்டுக் காவலர் அரணை உடைக்க முயன்று கொண்டிருந்தார்கள். மன அலைகள் பல பெரிதாக எழுந்து மோதிக் கொண்டிருந்ததால் மனித அலைகள் எழுப்பிய கூச்சலும் அதனால் ஏற்பட்ட குழப்ப ஒலிகளும் வீரரவியின் காதுகளில் அறவே விழவில்லை. நீண்ட நேரம் தனது காலடியில் கிடந்த பிணத்தை ஊன்றிக் கவனித்த சேர



மன்னன் சேனாதிபதியைத் திரும்பி நோக்கி, "இவன் எப்படி இறந்தான்?" என்று வினவினான்.

அன்று நடந்த நிலவரங்களால் பெரும் குழப்ப மடைந்த சேனாதிபதி, "'யாராவது கொன்றிருக்க வேண்டும்" என்று பதில் கூறினான்.

உள்ளத்திலிருந்த அத்தனை கோபத்தையும் மீறி வீரரவியின் இதழ்களில் புன்முறுவல் தோன்றியது. "இதை எப்படிக் கண்டுபிடித்தாய் சேனாதிபதி!" என்ற மன்னன் கேள்வியில் ஏளனம் இருந்தது.

"எதை மன்னவா?"

"இவனை யாராவது கொன்றிருக்க வேண்டு மென்பதை!"

"இவன் இறந்து விழுந்ததிலிருந்து..."

"இவன் தானாகச் செத்திருக்க முடியாதென்று நிர்ண யித்தாய்!" என்ற மன்னன் முகத்தில் எள்ளும் கொள்ளும் திடீரென வெடித்தன. "கொஞ்சம் அறிவை பயன்படுத்து. இவன் தானாகச் சாகவில்லையென்பதை அறிய சேனாதி பதியின் கூரிய மூளை தேவையில்லை. அது இங்கு கூடியுள்ள சாதாரண மக்களெல்லாருக்குமே தெரியும், இவன் இறந்த காரணத்தைக் கேட்கிறேன்," என்று கடுங் கோபத்தினிடையே கேட்டான் வீரரவி.

சேனாதிபதிக்கு ஏதும் விளங்கவில்லை. "மன்னர் சொல்வது விளங்கவில்லை," என்று பகிரங்கமாக ஒப்புக் கொண்டான்.

வீரரவியின் இதழ்களில் இகழ்ச்சி பெரிதும் மண்டிக் கிடந்தது. "உனக்கு அத்தனை விளங்கிவிட்டால் பாண்டிய ருடன் போராடப் போசளத்திலிருந்து சிங்கணன் வருவா னேன்?" என்ற சேரமன்னன், "சரி, சரி! இவனை உற்றுப்பார்," என்று பிணத்தை மீண்டும் பாதக் குறட்டால் உந்திக் காட்டினான்.

சேனாதிபதி பார்த்தான். ஏதும் விளங்காததால் ஏதோ சொல்ல வேண்டுமென்பதற்காக, "இதயத்திலிருந்து ரத்தம் அதிகமாக வந்து கொண்டிருக்கிறது" என்றான்.

"ரத்தம் வரக் காரணம்?" என்று வினவினான் வீரரவி.

அப்பொழுதுதான் சேனாதிபதிக்கு விஷயம் புரிந்தது. இறந்து கிடந்தவன் மார்பில் கத்தி ஏதும் தெரியவில்லை. அப்படியிருக்க அங்கு குருதி குபுகுபுவென்று எப்படிக் கிளம்பியது என்று புரியாததால் திருதிருவெனச் சில விநாடிகள் விழித்தான். பிறகு பிணத்திடம் சென்று உட்கார்ந்து அதன் மேலங்கியை உற்றுப் பார்த்தான். அப்பொழுதும் ஏதும் புரியாததால், தனது கத்தியை எடுத்து அதை அகற்ற முயன்றான். மேலங்கி மற்ற இடத்தில் சுழன்றாலும், இதயத்துக்கு எதிரே அகல மறுத்தது. அதைக் கண்ட சேனாதிபதி தனது கையை இதயத்துக்கு எதிரே கொண்டு போய் வைத்து அங்கியை நெருடினான். அவ்வளவுதான். அவன் முகத்தில் பெரும் பிரமிப்பு சூழ்ந்து கொண்டது. "மன்னவா! இதென்ன விசித்திரம்! இதென்ன விபரீதம்!" என்று கூவினான் பலமாக.

வீரரவியின் முகம் உணர்ச்சியற்றுக் கல்லாகிக் கிடந்தது. "என்ன விசித்திரம் சேனாதிபதி?" என்று வினவினான் மன்னன் வறண்ட குறலில்.

"இவனைக் கொன்றிருப்பது மிகச் சிறிய, மிகக் கூர்மையான கத்தி" என்று வினவினாான் சேனாதிபதி.

"எடு அதை," மன்னன் கட்டளை வேகத்துடன் பிறந்தது.

அங்கியுடன் சேர்த்து மிகச் சிரமப்பட்டுக் கத்தியை பிடுங்கிய சேனாதிபதி எழுந்திருந்து மன்னனிடம் கத்தியைப் நீட்டினான். கத்தியை ஆராய்ந்த மன்னன் கண்களிலும் வியப்பு மிதமிஞ்சி விரிந்தது. கத்தி சுமார் இரண்டு பிடிநீளமே இருந்தது. மிக மெல்லியதாயும் இருந்தது. ஆனால் அதன் சிறிய பிடி சிறிது கனமாயிருந்த தையும், கத்தியின் இரு புறமும் மிகக் கூர்மையாயிருந்த தையும் விரல்களைக் கொண்டு தடவியறிந்த மன்னன், எந்த மனிதனின் உயிரையும் சத்தப் படாமல் உறிஞ்ச அந்த கத்தியைவிடச் சிறந்த ஆயுதம் வேறெதுவுமில்லை யென்பதை உணர்ந்தான். தவிர அதைக் கொண்டு குறி



தவறாது எய்ய மிகுந்த திறமை வேண்டுமென்பதையும் அறிந்து கொண்ட மன்னன் இரண்டொரு விநாடிகள் வியப்படைந்தாலும், அதை அதிகமாக வெளிக்குக் காட்டாமல் அந்தப் பிணத்திடமிருந்து திரும்பி செண்டு வெளியின் நடுவில் வந்து கடைசியாகப் போரிட்ட இந்திரபானுவை நோக்க முயன்றான்.

அடுத்த விநாடி அந்தச் செண்டு வெளியில் தூள் பறந்தது. இருந்த இடத்தில் இந்திரபானுவோ அவன் புரவியோ காணாது போகவே, "எங்கே அவன்? எங்கே அந்தத் துரோகி?" என்று இரைந்து கூவினான் மன்னன். அதுவரை இந்திரபானுவைப் பற்றிக் கவனிக்காத சேனாதிபதியும் காவலரும் திடீரென்று, "எங்கே அவ்ன்? பிடியுங்கள் அவனை!" என்று கூக்குரலிட்டனர். "பிடி அவனை, பிடி அவனை!" என்ற கூச்சல் மக்களிடையேயும் எழுந்தன. தான் பாண்டியர் வீரனென்பதைப் பறை சாற்றிய வீரன், பிணம் விழுந்த போது ஏற்பட்ட குழப்பத்தில் செண்டுவெளிக்குள் மக்கள் புகுந்து விட்ட கும்பலில் மறைந்து நழுவியிருக்க வேண்டுமென்பதை உணர்ந்ததால் எங்கும் நானாவித சர்ச்சைகளும் கூச்சல்களும் கிளம்பின. இந்த இரண்டாவது குழப்பத்தின் விளைவாக மக்கள் மீண்டும் காவலர் அணியை உடைக்க முற்பட்டதால் மேற் கொண்டு செண்டுவெளிப் போராட்டத்தை நடத்த முற்படாத சேரமன்னன் கையை அசைக்க, முரசுகள் பல மாக முழங்கின. மக்களைக் கலைக்க முரசுகளைத் தொடர்ந்து கொம்புகளும் ஊதப்பட்டன. சேனாதிபதியும் இதர படைத் தலைவர்களும் மக்களைச் செல்லும்படி கைகளைப் பலமாக வீசினர். இத்தனைக்கும் மக்கள் அசையவில்லை. போக முயன்ற மக்களை, போக இஷ்டப் படாமல் நின்று வேடிக்கை பார்க்க இஷ்டப்பட்ட மக்கள் தடை செய்ததாலும், கும்பல் ஓர் ஒழுங்கில் அசையாமல் குறுக்கும் நெடுக்கும் அசைந்ததாலும் குழப்பம் முன்னை விட அதிகமாயிற்று. தவிர மக்கள் சீராகச் செல்வதற்கு உதவிய வீரர்களும், இடையிடையே விகாரமுக வீரனைத்

தேட முயன்ற வீரர்களுமாகச் சேர்ந்து விளைவித்த இன்னல்களும் செண்டு வெளிப் பிரதேசத்தைச் சந்தைவெளியாக அடித்திருந்தது. நடந்து வந்த மக்கள் குறுக்கும் நெடுக்கும் நின்றதால் வாகனங்களில் வந்த பிரபுக்கள் போக முடியாததன் விளைவாக, பலவிடங்களிலும் ரதங்கள் தேங்கி நின்றும் மெள்ளச் செல்ல முயன்றும் பலவித இடையூறுகள் விளைந்து கொண்டிருந்தன. மக்களை அகற்றவும் ஒழுங்காகச் செல்லவும் ரதசாரதிகள் கிளப்பிய வேண்டுகோள்களும் இரைந்து கேட்டன. இடையிடையே புகுந்து கூட்டத்தைச் சரிசெய்து மக்கள் சாரிசாரியாகச் செல்ல முரசு கொட்டியும், புரவிகளைக் குறுக்கே விட்டும் ஒழுங்கு செய்ய முயன்று கொண்டிருந்த வீரர்கள் செயல்களும் பலவித ஓசைகளைக் கிளப்பிக் கொண்டிருந்தன.

இப்படியேற்பட்ட பெரும் கூச்சலையும் குழப்பத் தையும் மேடையின் ஒரு மூலையிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த பரதபட்டன் மட்டும் இருந்த இடத்தை விட்டு அசையவில்லை. இந்திரபானு மீது சதிச் செண்டெறிய நிற்க வைக்கப்பட்ட வீரனைக் கூடல் வாயில்மீது பார்த்ததால் வீறிட்டு மயக்கமுற்ற முத்துக் குமரியின்மீது, இருந்த இடத்திலிருந்தே கண்களை ஓட்டிய பரதபட்டன் அவளைச் சேடிகள் மூர்ச்சை தெளிவித்துப் பிடித்து அழைத்துக் கொண்டுபோன பிறகு சாந்திப் பெருமூச்சு விட்டான். வேறெதையும் லட்சியம் செய்யாமல் உட்கார்ந்திருந்த பரதபட்டன் கடைசியாக மன்னன் அரண்மனைக்குள் சென்றதும் தானும் கிளம்பி மற்றொரு வழியாக மெய்க் காவலர் இல்லத்தை அடையக் கிளம்பினான். அப்படிக் கிளம்பி அரண்மனையின் பக்க வழியொன்றில் புகுந்த பரதபட்டனைக் குறுக்கே மறித்த இரு வீரர்கள், "குருநாதரை மன்னர் பார்க்க விரும்புகிறார்," என்று அறிவித்தனர்.

"என்ன விசேஷம்?" என்று வினவினான் பரதபட்டன் அவர்களை நோக்கி.



"எங்களுக்குத் தெரியாது," என்றான் வீரரில் ஒருவன்.

"நாளை பார்க்கிறேனென்று சொல்" என்று கூறிப் பரதபட்டன் நகர முயன்றான்.

வீரர்களை வழிமறித்து நின்றனர். "உங்களைக் கையுடன் அழைத்து வரும்படி உத்தரவு," என்றான் இன்னொரு வீரன்.

பட்டன் அவர்களை நோக்கி இகழ்ச்சி நகை புரிந்து ரிட்டு, "சரி நடவுங்கள்," என்று கூறி அவர்களைத் தொடர்ந்தான். பல கட்டுகளைத் தாண்டி மன்னனின் அந்தரங்க அறையை அடைந்ததும் வீரர்கள் வெளியே நின்றுவிடவே சேனாதிபதியால் எதிர்கொள்ளப் பட்ட பரதபட்டன் அலட்சியமாக மன்னன் அந்தரங்க அறையில் பிரவேசித்து அடிபட்ட புலிபோல் அந்த அறையில் சினந்து நடந்துகொண்டிருந்த மன்னனை ஏறெடுத்து நோக்கினான்.

பரதபட்டனைக் கண்டதும் வீரரவி அவன் உட்கார ஓர் ஆசனத்தைக் காட்டி, "குருநாதா அமரவேண்டும்," என்று சொல்லித் தலையும் வணங்கினான்.

ஆனால் குருநாதன் அமரவில்லை. "என்னை அழைத்த காரணம் என்ன?" என்று கோபத்துடன் கேட்டான் பரதபட்டன்.

வீரரவியும் சளைக்கவில்லை, "இன்றைய நிகழ்ச்சி களைப் பற்றி விசாரிக்க அழைத்தேன்," என்றான் குருநாதனுக்கு இணையான சீற்றத்தைக் குரலில் காட்டி.

'என்னை விசாரிக்க உனக்கு அதிகாரம் கிடையாது மன்னா,". என்று உரைத்தான் பரதபட்டன்.

"அவசியம் அதிகாரத்தை அளிக்கிறது," என்று சீறினான் மன்னன்.

"என்ன அவசியம்?"

"இன்று நேர்ந்த நிகழ்ச்சிகள் அளித்த அவசியம்."

"விளங்கச் சொல்."

"சொல்லுகிறேன் கேளுங்கள் குருநாதரே!" என்று துவங்கிய மன்னன், "செண்டுவெளியில் சேரநாடு இன்று

அவமதிக்கப்பட்டது. என்னிடம் வேலைக்கு அமர்ந்த வீரனொருவன் பாண்டியர் இலச்சினையைத் தாங்கினான். சேரர் இலச்சினை மீது செண்டை எறிந்தான். இதைவிட இந்த நாட்டுக்கு வேறென்ன அவமானம் வேண்டும்!" என்று கேட்டான் கடுங்கோபத்துடன்.

"வேறெதும் வேண்டியதில்லை," என்று ஒப்புக்கொண்டான் பரதபட்டன்.

"அப்படி இந்த நாட்டை அவமானப்படுத்தியதற்கு என்ன தண்டனை?" என்று வினவினான் அரசன்.

"மரண தண்டனை," என்று விளக்கினான் குருநாதன்.

"அதை அந்த வீரனுக்கு அளிக்கவேண்டும்," என்றான் மன்னன்.

"அளிப்பதை யார் தடுத்தது?" என்று கேட்டான் பரதபட்டன்.

"அவன் நழுவி விட்டான்."

"தப்பி விட்டானா?"

"ஆம்!"

"எப்படி?"

"கூடல்வாய்ப் பிணம் விழுந்த குழப்பத்தில், செண்டு வெளிக்குள் புகுந்துவிட்ட கூட்டத்தில்."

"ஆம், ஆம். அப்பொழுது பெரும் குழப்பம்தான். அதிருக்கட்டும், கூடல்வாயிலிருந்து பிணம் எப்படி விழுந்தது?"

பரதபட்டனின் இந்தக் கேள்விக்கு மன்னன் நேரிடையாகப் பதில் சொல்லவில்லை. "அதைப் பிறகு சொல்லுகிறேன். முதலில் அந்தப் பாதகனைச் சிறை செய்ய வேண்டும்" என்ற மன்னன் சற்று நிதானித்து, "அதற்கு நீங்கள் உதவவேண்டும்," என்று கேட்டான்.

"நான் எப்படி உதவ முடியும்?" என்று பதிலுக்குக் கேட்டான் பரதபட்டன்.

"அவனிருக்குமிடம் தங்களுக்குத் தெரியும்!" என்ற மன்னன் பரதபட்டனை உற்று நோக்கினான்.



"ஆம்! தெரியும்" என்று ஒப்புக்கொண்டான் பரதபட்டன்.

இதைக் கேட்ட மன்னன் முகத்தில் வியப்பு மண்டியது. நாட்டுத் துரோகியிருக்குமிடம் தனக்கு தெரியுமென்று சாவதானமாகக் கூறும் பரதபட்டன் துணிவு அவனை அசர வைத்தது. இருப்பினும் அதை வெளிக்குக் காட்டிக்கொள்ளாமல் கேட்டான், "அவன் எங்கிருக்கிறான்," என்று.

"என்னுடன்தான் தங்கியிருக்கிறான்," என்றான் பரதபட்டன்.

"அது தெரியும் எனக்கு," என்றான் மன்னன் கோபத்துடன்.

"பின் அங்கு தேட வேண்டியதுதானே?" என்றான் பரதபட்டன் இகழ்ச்சியுடன்.

மன்னன் முகத்தில் கோபம் மண்டியது. "குருநாதரே! என்னுடன் விளையாடுவது அபாயம்," என்று கூவினான் வீரரவி சுயநிலை மறந்து.

"என்னைப் பகைத்துக்கொள்வதும் அபாயம்!" என்றான் பரதபட்டன்.

மன்னன் மிதமிஞ்சிய கோபத்தால் தன் இடையிலிருந்த வாளைத் தொட்டான். அதைக் கண்ட பரதபட்டன் முகத்தில் இகழ்ச்சி அதிகமாகப் படர்ந்தது. "மன்னா! உன் கத்தியைத் தொட்டு அச்சுறுத்த முயலாதே; உன் வாளைவிட இது அதிக வலு உள்ளது," என்று தன் கையிலிருந்த மந்திரக்கோலைக் காட்டிய பரதபட்டன், "வேண்டுமானால் சோதித்துப் பார்," என்று கூறி அவனிடம் மந்திரக்கோலை நீட்டவும் செய்தான்.

மன்னன் மந்திரக்கோலைக் கையில் வாங்கித் திருப்பித் திருப்பிப் பார்த்தும் ஏதும் விளங்கவில்லை! ஆகையால் குழப்பம் மிகுந்த விழிகளை பரதபட்டன்மீது

திரும்பினான். "இதில் ஏதும் விளக்கவில்லை எனக்கு," என்றான் இறுதியில்.

"ஆராய்ச்சிக் கண்ணுடன் பார்! விளங்கும்," என்றான் பரதபட்டன்.

"என்ன விளங்கும்?" என்று வினவினான் மன்னன்.

"இன்றைய நிகழ்ச்சிகளுக்குக் காரணம் விளங்கும்;"

மந்திரக் கோலைப் பலமுறை திருப்பிப் பார்த்தும் ஏதும் விளங்காது மன்னன் விழிக்கவே, 'இப்படிக் கொடு,' என்று மந்திரக் கோலைக் கையில் வாங்கிய பரதபட்டன் அதன் சக்தியை விளக்கினான். மந்திர தண்டத்தின் மகிமை விளங்கவே மன்னன் மதி பெரும் பிரமிப்பில் ஆழ்ந்தது. அடுத்தி விநாடி கோபமும் துடித்தெழுந்தது. "இந்தக் குருநாதனைச் சிறையில் அடையுங்கள்" என்று உத்தரவும் சீற்றத்துடன் பிறந்தது மன்னன் உதடுகளிலிருந்து. அடுத்த விநாடி வீரர் இருவருக்கிடையில் சிறைப்பட்டு நின்றான் பரதபட்டன்.

### அத்தியாயம் 19

# எழுத்தின் வலிமை

**ம**னிதனுக்கு மிதமிஞ்சிய துணிவு ஏற்படுவதற்கு பெரும் சாதனை, பெரும் பயம், பெரும் ஏமாற்றம் மூன்றுமே காரணமாகின்றன. பெரும் சாதனைக்காக வாழ்க்கையை அர்ப்பணிக்கும் வீரன் லட்சிய பூர்த்தி கண்ணுக்கெதிரில் தோன்றும்போது எதற்கும் துணிந்துவிடுகிறான். பெரும் பயம் சூழ்ந்து ஏதாவது செயலில் இறங்கினாலொழிய தான் பிழைக்க முடியாதென்ற நிலையில் கோழைகூடப் பெரும் துணிவு கொள்கிறான். எதிர்பார்த்த காரியங்கள் விபரீத நிலையில் திரும்பி, பெரும் ஏமாற்றம் உணர்ச்சிகளைத் தடுமாற வைக்கும்போதும் மனிதன் துணிவு அபரிமிதமாகிறது.

சேரநாட்டில் எவருமே தொடவோ நெருங்கவோ அஞ்சும் குருநாதனைச் சிறைசெய்யும் அளவுக்கு வீரரவிக்குத் துணிவு பிறந்ததற்குப் பெரும் ஏமாற்றத்தால் ஏற்பட்ட மன உளைச்சலே காரணமென்பதைச் சொல்லவும் வேண்டுமா? தான் திட்டமிட்டு நடத்திய நாடகத்தின் முடிவு அத்தனை விபரீதமாக, தான் எதிர்பார்த்ததற்கு நேர் எதிராக, தனக்குப் பெரும் அவமானம் அளிக்கும் தன்மை வாய்ப்பதாக இருக்குமென்பதைச் சொப்பனத்தில்கூட நினைக்காததால், வீரரவியின் மனம் பெரும் தீக்கனியாக இருந்ததென்றால், பரதபட்டன் மந்திரக் கோலின் மகிமை அந்தத் தீக்கனியை விசிறிப் பெரும் ஜ்வாலையாக அடித்து விட்டது. அதிலும் பெரும் ஏமாற்றத்தை அடைந்துவிட்ட காரணத்தால் சேர மன்னன், நாட்டில் யாரும் அஞ்சும் செய்கையில், பரத பட்டனைச் சிறை செய்யும் செய்கையில் துணிவுடன் இறங்கினான்.

"இன்றைய நிகழ்ச்சிகளை இது விளக்கும்" என்று பரத பட்டன் மந்திரக் கோலை நீட்டியபோதோ, அதைக் கையில் வாங்கி உற்றுப் பார்த்து விழித்தபோது, "ஆராய்ச்சிக் கண்ணுடன் பார். தெரியும்,' என்று ஊக்கியபோதோ அந்த மந்திரக்கோலின் தந்திரத்தைச் சிறிதும் உணராத மன்னன், பரதபட்டனே அதை விளக்கிய பின்பு பெரும் சீற்றத்துக்கு உள்ளானான்.

தன் கண்களையே நம்பமுடியாத அத்தனை மர்மம் அந்த மந்திரக்கோலிலிருந்து விரிந்தது. மந்திரக்கோலை மன்னன் கையிலிருந்து வாங்கிய பரதபட்டன் அதை ஒரு விநாடி உற்றுப் பார்த்துவிட்டு மீண்டும் மன்னை நோக்கி, "மன்னா! இந்த மந்திரக்கோல் நமது காடுகளில் கிடைக்கும் உரமுள்ள பிரம்பால் செய்யப்பட்டது. இதன் பிடியின் மேற்பாகம் பிரம்புக்கு இயற்கையான அடிப்பாகம்போல் பழுப்புத் தட்டி உருண்டு காட்சியளிக்கிறது. ஆனால் அப்படித் தெரிவது பிரம்பின் அடிப்பாகமல்ல, இதோ பார்," என்று கூறி விட்டுப் பிரம்பின் வழவழத்த தலையைத் தன் கட்டை விரலால் அழுத்தித் தூக்கினான்.

வழவழத்த பழுப்பு நிறமுள்ள அந்தத் தலை ஏதோ வெண்ணெயைப்போல் வெகு சுலபமாக நழுவி எழுந்தது. பிறகு இடது கையில் மந்திரக்கோலின் மத்தியைப் பிடித்துக் கொண்ட குருநாதன் வலது கையால் அந்தத் தலையை லேசாக எடுத்தான். அடுத்தபடி மந்திரக்கோலைத் திருப்பி லேசாக உலுக்கினான். மந்திரக் கோலிலிருந்து ஒன்றன் பின் ஒன்றாகத் தரையில் விழுந்த மூன்று கத்திகள் 'கிளாங் கிளாங்' என்ற ஒலிகளை எழுப்பின. அந்த ஒலிகள் மன்னன் அறையின் பெரும் சுவர்களில் எதிரொலிகளையும் பயங்கர மாகக் கிளப்பின.

மன்னன் விழிகள் மட்டுமின்றி, பக்கத்தில் நின்ற சேர நாட்டுச் சேனாதிபதியின் விழிகளும் மிதமிஞ்சிய பிரமிப் பால் மலர்ந்தன. சில விநாடிகள் பெரும் மௌனம் மன்னனின் அந்தரங்க அறையில் நிலவியது. தரையில் விழுந்த கத்திகள் அன்றைய கதையைக் கூறின. கூடல் வாயிலிருந்து உருண்டு சென்டு வெளியில் பிணமாக



விழுந்த வீரன் மார்பில் தைத்திருந்த கத்தியின் உடன் பிறவிகளே கீழே விழுந்த அந்தச் சிறு கத்திகளென்பதை சந்தேகமற மன்னனும் சேனாதிபதியும் உணரவே ஒருவரை யொருவர் பார்த்துக் கொள்ளவும் செய்தனர். சில விநாடிகள் இருவர் விழிகளும் கோபாக்கினியையும் கக்கின. ஆனால் அதைப் பற்றிச் சிறிதும் லட்சியம் செய்யாத பரதபட்டன் குனிந்து அந்தக் கத்திகளிலொன்றைக் கையிலெடுத்துக்கொண்டு, "மன்னா! அந்தத் திரைச் சிலைக்குப் பின்னால் யாராவது இருக்கிறார்களா?" என்று வினவினான்.

"இல்லை" என்றான் மன்னன் உக்கிரம் மிகுந்த குரலில்.

"இந்தக் கத்தி பார்ப்பதற்குச் சிறியது மன்னா! ஆனால் அம்பைவிட வேகமாகப் பறந்து செல்லக்கூடியது. இதன்பிடி அதற்காகவே சற்றுக் கனமாக வைக்கப்பட்டிருக் கிறது. இது எத்தனை சுலபமாக, எத்ததனை வேகமாகச் செல்கிறது பார்,' என்று கூறிக் கையிலிருந்த கத்தியை வீசினான் பரதபட்டன்.

கத்தி ஜிவ்வென்று பறந்து கோடியிலிருந்த திரைச் சிலையில் பாய்ந்து அதைக் கிழித்து, பிடி மட்டும் வெளியே தெரிய சிலையில் நான்கு விரற்கடை தூரம் கீழே இறங்கவும் செய்தது.

அந்தக் கத்தியின் கூர்மையையும் அதை எறிந்த பரத பட்டன் லாவகத்தையும் பார்த்த மன்னன் புத்தி பலவித உணர்ச்சிகளால் சுழன்றுகொண்டிருந்தது. அந்த உணர்ச்சி களை அதிகமாகக் கிளறிவிடச் சொன்னான் பரதபட்டன்: "மன்னா! இந்தக் கத்தியைக் கொலைக்கு உபயோகப் படுத்துவது இதுதான் முதல் தடவை," என்று.

அவ்வளவுதான். மன்னன் அதுவரை அடக்கி வைத் திருந்த உணர்ச்சிகள் காற்றில் பறந்தன. "இந்தக் குரு நாதனைப் பிடித்துச் சிறையில் அடையுங்கள்,' என்று கூச்சலிட்டான் வீரரவி.

குருநாதன் மன்னை நோக்கி இகழ்ச்சிநகை புரிந்தான். "சேரமன்னா! உன் துணிவு வியக்கத்தக்கது!"

சேரமன்னன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. "எனது துணிவு இருக்கட்டும், உமது துணிவைப்பற்றி என்ன நினைக்கிறீர்," என்று வினவினான்.

"என் துணிவு உலகமறிந்தது," என்றான் பரதபட்டன் இகழ்ச்சியைக் குரலில் சற்று அதிகமாகக் காட்டி.

"என் துணிவும் உலகமறிந்ததுதான்" என்றான் வீரரவி.

"சரியாக அறியவில்லை உலகம். நான் அறிய வைக்கிறேன்," என்றான் பரதபட்டன்.

"என்ன அறிய வைப்பீர் குருநாதரே?"

"திருடர்களைவிட்டுப் பாண்டியன் மகளைத் திருடவும், செண்டு வெளியில் வீரனொருவனைக் கொல்ல ஒரு கொலைகாரனை உப்பரிகை முனையின் நிறுத்தி வைப்பதும் துணிவுக்கு அடையாளமல்லவென்பதை."

"இரண்டுக்கும் நியாயமிருக்கிறது."

"என்ன நியாயம்?"

"தனி நியாயம்"

"தனி நியாயமா? உனக்குமட்டும் உலகில் இல்லாத நியாயமா?"

"அசாதாரண நீதிகளையும் தர்மங்களையும் சாத்திரம் விதித்திருக்கிறது. காதலுக்கும் போருக்கும் தனி நியாயமுண்டு."

மன்னனின் இந்தச் சொற்களைக் கேட்ட பரதபட்டன் மன்னனை நோக்கி மெல்ல நகைத்தான். "காதலுக்கும் போருக்கும் நியாயம் மற்ற நாடுகளில் இருக்கலாம். தமிழகத்தில் கிடையாது. பொதுப்படையான அறவழிக்குத் தான் தமிழர் சமுதாயம் இடமளிக்கிறது. தவிர, நீ இன்று செய்ய முற்பட்டது காதலிலும் சேராது. போரிலும் சேராது" என்றும் சுட்டிக்காட்டினான் பரதபட்டன் வெகு அலட்சியமாக.

"என்ன சொல்கிறீர் குருநாதரே?" சீற்றத்துடன் எழுந்தது மன்னன் கேள்வி.

"மன்னா! காதல் இருவழிபட்டது. முத்துக்குமரி உன்னை வெறுக்கிறாள். இஷ்டவிரோதமாக அவளைக் கொணர்ந்திருக்கிறாய். இன்று செண்டுவெளி உன்னிஷ்டப் படி நடந்திருந்தால், அவளை ராணியாக்கப் போவதாக மக்களுக்கு அறிவித்திருப்பாய்," என்றான் பரதபட்டன்.



இதைக் கேட்டதும் மன்னனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. தான் முத்துக்குமரியிடம் கடற்கரை மாளிகையில் தனிப்படச் சொன்னதைக் குருநாதன் அறிந்தது எப்படி என்று வியந்தான். அந்த வியப்பைக் கண்ட குருநாதன் மேலும் சொன்னான்: "மன்னா! இதற்குப் பெரும் மந்திரமோ தந்திரமோ தேவையில்லை. ஊகமே போதும். மக்கள் பத்தினியை வழிபடும் இந்நாட்டில் முத்துக்குமரியை அடையவேண்டுமானால் நீ முறைப்படி அடைய முடியும். பாண்டியன் மனதை உடைக்க நீ எதையும் செய்ய முற்படுவாய் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.' அதற்கு நீ வித்து விதைக்க இன்றைய செண்டுவெளியைச் சாக்காக வைத்து இந்திர பானுவையும் அழித்து, சிங்கண்ன் வெற்றிச் செய்தியில் மக்கள் களிவெறி கொண்டுள்ள நிலையில் பாண்டியன் மகளை ராணியாக்குவதாக நீ கூறியிருந்தால் மக்கள் எதிர்த்திருக்க மாட்டார்கள். மகிழ்ச்சிக் கூச்சலிட்டிருப்பார்கள். ஆனால் உன் திட்டங்களை விதி உடைத்துவிட்டது"

பரதபட்டன் மேலும் ஏதோ சொல்லப் போனான். ஆனால் அவனை மன்னன் அடக்கி, "விதியல்ல தடுத்தது. துரோகியான நீர்தான் தடுத்தீர்," என்று சீறினான்.

"இல்லை மன்னா! விதியின் கைதான் நான். அதர்மத்தை அடக்க ஆண்டவன் அவ்வப்பொழுது பல கருவிகளைக் கையாளுகிறான். அக் கருவிகளில் நான் ஒன்று," என்றான் பரதபட்டன்.

உமது செயலுக்கு ஆண்டவனை ஏன் இழுக்கிறீர்கள்?' என்று இரைந்தான் மன்னன்.

"நான் அவனை இழுக்காத நாளில்லை. அவனறியாத செயல் எதையும் நான் செய்ததில்லை. நான் என்ன, யாருமே செய்ய முடியாது," என்றான் பரதபட்டன்.

"குற்றத்தை மறைக்க வேதாந்தம் பேசுகிறீரா?"

"அது குற்றம் செய்பவர்கள் செய்யவேண்டிய காரியம்."

"நீர் செய்தது சேரநாட்டுக்குத் துரோகம் அல்லவா?"

"அல்ல. அதற்கு இழுக்கு ஏற்படுத்த முயன்ற உன்னிடமிருந்து, காப்பாற்றினேன். பாண்டியன் மகளை நீ திருடி வந்தது அதர்மம். இந்திரபானுவைச் சதியால் கொல்ல முயன்றதும் அதர்மம். மக்கள் களிவெறியெனும் திரைமறைவில் முத்துக்குமரியை மணக்கத் திட்டமிட்டது அதர்மம். இந்த மூன்று அதர்மங்களிலிருந்து உன்னையும் சேரநாட்டையும் காத்த என்னைச் சிறைசெய்ய முற்படுவது பெரிய அதர்மம். இத்தனைக்கும் நீ பதில் சொல்ல வேண்டியிருக்கும்," என்று சீறினான்.

"யாரிடம் பதில் சொல்ல வேண்டியிருக்கும்? ஆண்டவனிடமா?" என்று சீற்றத்துடன் வினவினான் மன்னன்.

"அது பிறகு. இப்பொழுது மக்களுக்குப் பதில் சொல்ல வேண்டியிருக்கும். உன்னிடமிருந்து தப்பிய இந்திரபானுவுக்கும் நீ பதில் சொல்ல வேண்டியிருக்கும்," என்று மன்னனை ஏறெடுத்து நோக்கிச் சொன்னான் பரதபட்டன்.

இதற்குப் பிறகு பரதபட்டன் பேச்சைத் தாங்கமுடியாத வீரரவி சேனாதிபதியை நோக்கி, "குருநாதனை அரணமனைச் சிறையில் அடைத்து வை. தண்டனையை நாளைக் காலையில் கூறுகிறேன்," என்றான்.

"நடவுங்கள் குருநாதரே," என்ற சேனாதிபதியின் உத்தரவைக் கேட்டதும் மன்னனை வெகு அலட்சியமாக நோக்கிவிட்டு வீரர்களுக்கு இடையில் நடந்தான் குருநாதன்.

மன்னனிருந்த உப்பரிகைக் கட்டுகள் பலவற்றைத் தாண்டி குருநாதனை வீரர்கள் அழைத்துச் சென்றனர். அப்பொழுதும் அரணமனையை அடுத்த செண்டு வெளியில் மக்கள் கூச்சலும் குழப்பமும் இருந்து கொண்டிருந்தது. அந்தச் செண்டு வெளிப்பக்கம் வந்த சமயத்தில் குருநாதன் கைப்பிடிச் சுவரின் மூலம் எட்டிப்



பார்த்தான். பிறகு தன் மடியிலிருந்து ஏதோ ஒரு பொருளை எடுத்துக் கூட்டத்தில் வெகு வேகமாக வீசினான்.

குருநாதனின் செய்கை கண்ணிமைக்கும் நேரத்தில் நடந்து விட்டபடியால் வீரர்களால் அவனைத் தடுக்க முடிய வில்லை. பரதபட்டன்மீது கையை வைக்க அவர்கள் அஞ்சியபடியால் மேலே நடக்கும்படி பணிவுடன் கேட்டுக் கொண்டார்கள். பரதபட்டனும் அதற்குப் பின்பு எந்தத் தொந்தரவும் செய்யாமல் நடந்தான். அரணமனையின் கட்டிடங்களிலொன்றிலிருந்த சிறையில் அடைக்கப்பட்ட பரதபட்டன் மிக நிம்மதியாகச் சிறையில் தரையில் உட்கார்ந்து கொண்டான். அறையில் குருநாதன் நுழைந்ததும் அதைப் பூட்டிய வீரர்கள் காவலரை எச்சரித்து நடந்தனர். அவர்கள் சென்றதும் தோளிலிருந்த சிறு துண்டால் தரையைத் தட்டிவிட்டுப் படுத்து நன்றாக காலை நீட்டிக் கொண்ட பரதபட்டன் முகத்தில் பெரும் சாந்தியிருந்தது.

அந்தச் சாந்தியில் அவன் உதடுகள் முணுமுணுத்தன. "என் சக்தியின் வலிமையை விட எழுத்தின் வலிமை அதிகம். எழுத்தின் வலிமை அளவிட முடியாதது. அதை மன்னன் நாளை புரிந்துகொள்வான். தெரியாமலா பீஜாட் சரங்களைக் கொண்டு முனிவர்கள் மந்திரங்களை வகுத்தார்கள்?" என்று.

இதற்குப் பிறகு பரதபட்டன் நிம்மதியாக உறங்கினான். ஆனால் சிறையின் தரையில் பரதபட்டன் அடைந்த நிம்மதி அரணமனையில் பஞ்சணையில் படுத்திருந்தத மன்னன் அடையவில்லை. மனம் அவனைப் புரட்டிக்கொண்டிருந்தது. கவலை வாட்டிக் கொண டிருந்தது. சுகம் தருவது பஞ்சணையல்ல என்பதை மன்னன் சந்தேகமறப் புரிந்து கொண்டான். ஆனால் அன்றிரவை விட மறுநாள் காலையில் அவனுக்குப் பெரும் தொல்லை காத்திருந்தது. எழுத்து அளித்த தொல்லை அது. பரதபட்டன் சிறையில் முணுமுணுத்த எழுத்தின் வலிமையை மன்னன் பூர்ணமாகப் புரிந்துகொண்டான். பெரும் இடி தலையில் இறங்கிவிட்ட நிலையில் வீரரவி தவித்தான் மறுநாள் காலையில்.

## அத்தியாயம் 20

# புது விபரீதம்

மறுநாள் பொழுது புலருவதற்கு இரண்டு நாழிகை
களுக்கு முன்பே பஞ்சணையிலிருந்து எழுந்துவிட்ட வீரரவி
உதயமார்த்தாண்டவர்மன் மெள்ள கடற்பக்கமிருந்த தனது
அறைச் சாளரத்தின் மூலம் வெளியே எட்டிப் பார்த்தான்.
பரலி மாநகரின் கடற்புறம் அரண்மனையிலிருந்து
நீண்டதூரமிருந்த போதிலும் அரண்மனை உப்பரி
கையிருந்த மலைப்பகுதியின் காரணமாகக் கடலின்
விளம்பிலிருந்த கட்டிடங்களும் அவற்றுக்கு அப்பாலிருந்த
மணல் பரப்பும், அந்த மணல் பரப்பில் மோதிய சிற்றலை
களுங்கூட அவன் கண்ணுக்குத் தெரிந்தன. சாதாரண
சமயமாயிருந்தால் மனத்துக்குப் பெரும் உற்சாகத்தை
அளிக்கக் கூடிய அந்த இன்பக் காட்சி மன்னனிருந்த
அன்றைய நிலையில் அவனுக்கு இன்பத்துக்கு பதில்
துன்பத்தையே அளித்தது. கடல்வரை அசையாது உயரமாக
நின்ற தனது தலைநகரின் கட்டிடங்களைக் கண்ட வீரரவி
தன் முந்தைய நாள் திட்டம் அக் கட்டிடங்களைப் போல்
திடமாயில்லாமல் தூரத்தே தெரிந்த சமுத்திர அலைகளைப்
போல் உடைந்து விழுந்து விட்டதை எண்ணிப் பெருமூச்சு
விட்டான். அவன் அறைக்கும் கடற்கரைக்கும் இடையே
யிருந்த பல தோப்புகளிலிருந்து வந்த இன்பமான காலைக்
காற்றும் அவனுக்கு ஆறுதலளிக்க மறுக்கவே அவன்
துன்பப் பெருமூச்சொன்றை வெளியில் விட்டான்.

இரவு முழுவதும் அவனை அல்லல் படுத்திய
எண்ணங்கள் அந்தக் காலை நேரத்திலும் அவனைத்
தொடர்ந்து வாட்டிக் கொண்டிருக்கவே, அவன் கண்களின்
பார்வை சற்று நேரத்திற்கொருமுறை அறுந்து அறுந்து



தடைப்பட்டதால் இடையிடையே வெறித்த அர்த்தமற்ற
பார்வை கண்களிலிருந்து வெளிப்பட்டுக் கொண்டிருந்தது.
இந்திரபானு மிதமிஞ்சிய துணிவுடன் செண்டுவெளியில்
சேரர் இலச்சினையை அவமதித்ததும், பிறகு கூட்டத்தின்
குழப்பத்தில் தப்பிச் சென்றதும் அந்தக் காலை நேரத்தில்
கூடப் பெரு விசித்திரமாய்த் தெரிந்தது அவன் புத்திக்கு.
அத்துடன் சேர நாட்டு மக்களால் வணங்கப்படும் குரு
நாதன் துரோகம் அவன் துன்பத்தை ஆழக் கிளறி
விட்டிருந்ததால் வீரரவி எதையும் சகிக்கும் ஆற்றலை
இழந்திருந்தான். குருநாதன் மட்டும் இடைபுகாமலிருந்
திருந்தால் செண்டுவெளி அரங்கின் முடிவில் தனது
பிரச்சினைகள் பலவற்றுக்கும் முடிவு கண்டிருக்க
முடியுமென்று எண்ணிய சேர மன்னனுக்குப் பரதபட்டன்
மீதிருந்த கோபம் எல்லை கடந்ததால், என்ன ஆனாலும்
பரதபட்டனை லேசில் விடுவதில்லையென்று சபதம்
செய்து கொண்டான் அவன். பரதபட்டன் துரோகத்தை
மட்டும் சரியாகப் பறைச்சாற்றினால் மக்களுக்கு ருருநாதன்
மீதிருந்த பிரமையைக் கூட உடைத்து விடமுடியும் என்று
தீர்மானித்த வீரரவி அந்தத நினைப்பில் சிறிது மகிழ்ச்சியும்
அடைந்தான். அவன் மகிழ்ச்சிக்குச் சுருதி கூட்டுவன போல்
அரண்மனையின் உதயகால வாத்தியங்கள் ஒலித்தன.

சேரமன்னன் மனப்புண்ணுக்கு நரம்பு வாத்தியங்
களின் மிருதுவான இசை பெரும் ஆறுதலை அளித்தது.
பரம கலா ரசிகனான உதயமார்த்தாண்டவர்மன் அத்தனை
மனப் புண்ணிலும் அந்த வாத்தியங்களின் இசையைக்
காதில் வாங்கிக் கொண்டான். அந்த இசை ஒலிகளின்
காரணமாகவோ என்னவோ அரண்மனை நந்தவனப்
பறவைகளும் கூவ முற்பட்டதால் விளைந்த புது இன்ப
நாதங்கள்கூட அரசனுக்குச் சற்று மனோரம்மியமாயிருந்தது.
மெள்ள மெள்ளப் புலர்ந்த பொழுதும் அவன் கண்களுக்குக்
குளுமையை அளித்தது. இந்த உதயத்திலாவது அறுந்த
தனது திட்டங்கள் மீண்டும் கூடுவதற்கு வழி ஏதாவது
ஏற்படாதா என்று சிந்தித்தான் மன்னன். அந்தச்
சிந்தனையில் நம்பிக்கை அம்சங்கள் பல எழுந்து உலாவவும்

தொடங்கின. கூட்டத்தின் குழப்பத்தில் தப்பிவிட்ட இந்திரபானு எப்படியும் நாட்டை விட்டுத்தாண்டி விட முடியாதென்றும், எப்படியும் காவலரால் கைப்பற்றப் படுவானென்றும், அப்படிக் காவலரிடமிருந்து தப்பினாலும் கொந்தளித்துக் கொண்டிருக்கும் சேர மக்களிடமிருந்து தப்ப முடியாதென்றும் எண்ணினான் மன்னன். செண்டுவெளியில் இந்திரபானு செய்த துரோகச் செயல் தலைநகரில் இரவே பரவியிருக்குமென்பதிலும் எந்த இடத்திலும் இந்திரபானுவுக்கு அபயம் கிடைக்காதென்பது திண்ணமென்றும் நம்பினான் வீரரவி. 'அதுட்டுமல்ல, மக்களிடம் சிக்கிக் கொண்டால் அவர்களே அவனை அடித்துக் கொன்று விடுவார்கள். நாட்டை அவமதித்ததை மட்டும் சேரமக்கள் பொறுக்க மாட்டார்கள்' என்று தனக்குள் சொல்லியும் கொண்டான் சேரர் புரவலன். இன்னொரு யுக்தியும் அவன் புத்தியில் தோன்றியது. இந்திரபானுவைப் போன்ற சேரத் துரோகிக்குக் குருநாதர் உதவியிருக்கிறார் என்ற விஷயத்தையும் மக்களுக்குத் தெரியப்படுத்தினால் மக்கள் அவர்மீதும் கொதித்தெழு வார்கள் என்று தீர்மானித்த வீரரவி அதற்கான ஏற்பாட்டைச் செய்யவும் முடிவு செய்தான்.

பாண்டியன் சேரநாட்டுமீது போர் தொடுத்திருக்கும் இந்தச் சமயத்தில் பாண்டியநாட்டு உபதளபதியான இந்திரபானுவுடன் சேர்ந்து பரதபட்டன் நாட்டுக்குத் துரோகம் செய்தான் என்று பறையறைவித்துவிட்டால் மக்கள் கோப அலைகள் குருநாதரின் மீது திரும்பும்: அந்தக் கோப அலைகள் அடங்கு முன்பு முத்துக்குமரியையும் திருமணம் செய்து கொண்டு விட்டால் பாண்டியன் மனத்தையும் உடைத்து விடலாம்' என்று எண்ணமிட்ட வீரரவி அதற்கான ஏற்பாடுகளைச் செய்துவிடவும் தீர்மானித்தான்.

இத்தகைய திட்டத்தில் ஓரளவு நிம்மதியடைந்த மனத் துடன் காலைக் கடன்களை முடிக்கப் பணிமக்களை அழைக்குமாறு அறைக் காவலருக்கு உத்தரவிட்டான். அவன் உத்தரவு பிறந்த சில விநாடிகளுக்குள் வந்த



பணிமக்கள் நால்வர் மன்னனுக்குத் தலை வணங்கினர். அவர்களில் இருபெண்கள் நீராட்டத்துக்குச் சகலமும் தயாராயிருப்பதாக அறிவிக்கவே மன்னன் நீராட்ட அறையை நோக்கிச் சென்றான். மனத்தில் புதுத் திட்டமொன்று உருவாகியிருந்த காரணத்தால் நீராட்டத்தை வெகு சீக்கிரத்தில் முடித்துக்கொண்ட வீரரவி தனது அரசாங்க அறைக்கு வந்து முதலமைச்சரையும் சேனாதிபதியையும் அழைத்து வரக் காவலர் இருவரை ஏவினான். காவலர் விரைந்த இரண்டு நாழிகைகள் கழித்து அந்த அறைக்குள் நுழைந்த முதலமைச்சரும், சேனாதிபதியும் மன்னன் முகத்தில் ஓரளவு சாந்தி பரவியிருந்ததையும், பொற் கிண்ணத்தில் அவன் நிதான மாகப் பாலை அருந்திக்கொண்டிருந்ததையும் பாலைக் கொண்டுவந்து கொடுத்து விட்டுப் பாத்திரத்தை வாங்கிச் செல்ல, பக்கத்தில் நின்று கொண்டிருந்த பணிமகள் முகத்தில் புன்முறுவலிருந்ததையும் கண்டதால் சற்று நிதானத்துக்கு வந்து, "மன்னர் வாழ்க! சேரர் மாநிலம் வாழ்க!" என்று விருதுகூறித் தலை வணங்கினார்கள்.

பொற்கிண்ணத்தில் பாலை உறிஞ்சிய வண்ணமே அந்த வணக்கத்தை ஏற்கும் முறையில் தலையசைத்த வீரரவி இரண்டு விநாடிகளுக்குப் பிறகு பாற்கிண்ணத்தைப் பணிமகளிடம் நீட்டினான். அதை ஒரு கையால் வாங்கிக் கொண்ட பணிமகள் மற்றொரு கையிலிருந்த பாத்திரத்தி லிருந்து நீரை வார்க்கக் கைகளையும் வாயையும் லேசாகத் துடைத்துக் கொண்டான் மன்னன். பிறகு பணி மகளின் முழங்கையில் தொங்கிக் கொண்டிருந்த பட்டுச் சீலைத் துண்டால் கையையும் வாயையும் லேசாக ஒற்றிக் கொண்டு, "அமைச்சரே! நகரம் எப்படியிருக்கிறது?" என்று வினவினான்.

அமைச்சர் பெருமான் உடனடியாகப் பதில் சொல்ல வில்லை. பிறகு மெள்ளச் சொன்னார்: "சிறிது கலங்கித் தானிருக்கிறது," என்று.

மன்னன் விழிகள் லேசாக அவர் முகத்தில் பதிந்தன ஒரு விநாடி. பிறகு உதடுகளிலிருந்து மெள்ளச் சொற்கள்

உதிர்ந்தன. "நேற்றைய செண்டுவெளி யாரையும் கலக்க வல்லது," என்று கூறினான் வீரரவி.

"ஆம்." முதலமைச்சர், சேனாதிபதி இருவரும் ஏக காலத்தில் ஆமோதித்தனர்.

ஒன்றாக ஒலித்த அந்த இரட்டை 'ஆமை' காதில் வாங்கிய மன்னன் உதடுகளில் புன்முறுவல் விரிந்தது. அத் துடன் சற்று மகிழ்வுடன் சொன்னான் மன்னன், "நேற்றைய சம்பவங்கள் நமக்குப் பெருமையளிக்க வல்லவை," என்று.

மன்னன் சொற்களைக் கேட்ட முதலமைச்சர் முகத்தில் வியப்பு விரிந்ததென்றால், சேனாதிபதி பிரமை பிடித்து நின்றான். அவர்கள் உள்ளத்திலோடிய உணர்ச்சிகளைப் புரிந்துகொண்ட மன்னன், "நான் சொல்வது உங்களுக்கு வியப்பாயிருக்கலாம். ஆனால் அதுதான் உண்மை," என்று கூறினான்.

"எது மன்னவா? அந்தப் புதுமை வீரன் நம்மை அவமதித்ததா? அல்லது நமது வீரனொருவன் பிணமாய் விழுந்ததா?"

"இரண்டுமல்ல."

"பிறகு எது?" இம்முறை சேனாதிபதி கேட்டான் குரலில் சற்று வெறுப்பைக் காட்டி.

"சேரநாட்டுப் பொது அமைப்பு, அதன் பண்பாடு," என்றான் மன்னன்.

"விளக்கிச் சொல்லுங்கள்," என்று கேட்டார் முதலமைச்சர்.

"செண்டுவெளி, வீரர்கள் போர்க்கூத்துக்குப் பொது விடம். அங்கு யாரும் நுழையலாம். யாரும் வீரத்தைக் காட்டலாம். ஆகையால் எதிரி வீரன் அதில் நுழைந்ததும் தவறாகாது," என்ற மன்னன் சற்றுப் பேச்சை நிறுத்தினான்.

முதலமைச்சரும், சேனாதிபதியும் மௌனம் சாதித்தனர். மன்னனே மேற்கொண்டு விவரிக்கத் தொடங்கி, "செண்டு வெளியில் யார் பிரவேசிப்பதையும் பரலி மாநகர்ப் பொதுமக்கள் தடைசெய்வதில்லை. நமது



செண்டுவெளியில், யவனர், அரேபியர், சோனகர் பலரும் பல முறைகள் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். இப்படிப் பலருக்கும் இடமளிக்கும் பரந்த நோக்கமுள்ள வர்கள் பரலி மக்கள். இந்த நோக்கம் சேரர் பண்பாட்டை விளக்குகிறது. ஆகையால் செண்டுவெளி விழாவில் நாம் எப்பொழுதும் பெருமை அடைகிறோம். நேற்று செண்டு வெளியில் நடந்த துரோகச் செயலைக்கூட மக்கள் ஓரளவு பொறுத்தார்கள் என்று சொல்ல வேண்டும். துரோகியை அவர்கள் கிழித்தெறியாது தப்பிச் செல்ல விட்டதுகூட அவர்கள் பொறுமைக்கும், கட்டுப்பாட்டுக்கும் அத்தாட்சி," என்று கூறினான்.

செண்டுவெளியில் ஏற்பட்ட குழப்பம் அதிகமில்லை யென்பதையும் மக்கள் அடியோடு கட்டுப்பாடுகளை மீறியிருந்தால் நடந்திருக்கக்கூடிய அனர்த்தமும் நாசமும் அதிகமென்பதையும் உணர்ந்து கொண்ட முதலமைச்சர் அரசன் மக்களைப் பாராட்டுவதை ஆமோதித்தார். "மக்களிடம் மன்னன் வைத்திருக்கும் அன்பும் நம்பிக்கையும் பாராட்டத்தக்கது," என்று வாய்விட்டும் சொன்னார்.

"மக்களுக்கும் தங்களிடம் அந்த பக்தியும், அன்பும் உண்டு," என்று சேனாதிபதியும், முதலமைச்சருடன் ஒத்துப் பாடினான்.

பிறகுதான் வீரரவி மெள்ள தன் திட்டத்தை அவிழ்த்தான். "இருப்பினும் அமைச்சரே! தர்மம் நீதி இரண்டையும் நிலைநிறுத்துவது அரசன் கடமையல்லவா?" என்று வினவினான் மெள்ள.

"ஆம் மன்னவா! அதில் சந்தேகமென்ன?" என்றார் முதலமைச்சர்.

"துரோகம் விளைவிப்பது யாராயிருந்தாலும் தண்டிக்க வேண்டியதுதானே?" என்று கேட்டான் மன்னன்.

"ஆமாம். அதிலும் சந்தேகமில்லை" என்றார் முதலமைச்சர்.

"குருநாதர் அதற்கு விலக்காக முடியுமா?" மெல்ல கேள்வி எழுந்தது அடுத்தபடி அரசனிடமிருந்து. கபடமான பார்வையொன்றும் அவன் முகத்தில் உதயமாயிற்று.

இதைக் கேட்ட முதலமைச்சர் மெல்ல இருந்த இடத்தில் அசைந்தார். "நியாயப்படி பார்த்தால் குருநாதரும் துரோகச் செயலிலிருந்து தப்பமுடியாது," என்று சங்கடத்துடன் இழுத்தார் சொற்களை.

"நியாயம் வழங்குவது எனது கடமையென்று சற்று முன்புதானே ஒப்புக் கொண்டீர்?"

"ஒப்புக்கொண்டேன். இருப்பினும்..."

"இருப்பினும் என்ன?"

"குருநாதரிடம் மக்கள் பெருமதிப்பு வைத்திருக்கிறார்கள்."

"அதனால் அவர் குற்றங்களைப் புரிய முடியுமா??"

"தர்ம நியாயப்படி முடியாது."

"வேறு என்ன நியாயமிருக்கிறதது அவர் தப்புவதற்கு?"

"நியாயம் என்பது எதுவும் இல்லை. ஆனால் மக்கள் குருநாதர் தவறு செய்யமாட்டார் என்று நம்புகிறார்கள்."

"தவறு செய்ததை நாம் நிருபித்தால்?"

"நிரூபிப்பது கஷ்டம்."

"ஏன்?"

"குருநாதர் கூரிய அறிவு படைத்தவர். விஷயத்தை எப்படியாவது நம்மீது திருப்பினால் நமக்கு ஆபத்து," என்ற முதலமைச்சர் குரலில் லேசாகப் பயமும் ஒலித்தது.

மன்னன் அவரைக் கூர்ந்து நோக்கிவிட்டுக் கூறினான். "முதலமைச்சரே! மக்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதை வைத்து நாம் நீதி செலுத்த முடியாது. நீதி சொல்வதைச் செய்வதுதான் நமது கடமை. அந்தக் கடமையைச் செய்வதில் உயிரிழந்தாலும் பாதகமில்லை," என்று.

"அது நடக்கலாம்," என்றார் முதலமைச்சர்.



"எது? கடமையைச் செலுத்துவதுதானே?" என்று வினவினான் மன்னன்.

"இல்லை. உயிரிழப்பது," என்று விஷமமாகப் பதில் சொன்னார் முதலமைச்சர்.

மன்னன் முகத்தில் கோபம் மெள்ளத் துளிர்ந்தது. "ஏன் குருநாதரைத் தண்டித்தால் மக்கள் என்னைக் கொன்று விடுவார்களா?" என்று வினவினான் மன்னன்.

"தங்களிடம் வரமாட்டார்கள்?"

"ஏன்?"

"தங்கள் பெயரால் நீதி செலுத்துபவர்களை விசாரித்து விடுவார்கள்."

மன்னன் கோபம் தலைக்குமேல் ஏறியது. "நீதி செலுத்த அஞ்சுகிறீரா முதலமைச்சரே!" என்று சீறிய மன்னன், "குருநாதரின் துரோகச் செயலை மக்களுக்கு பறையறிவித்துக் கூறும். அவரைப் பொது மண்டபத்திலே நாமே விசாரித்துவிடுவோம். அவர் எந்தக் கத்திமூலம் சேர நாட்டு வீரனொருவன் உயிரை உறிஞ்சினார் என்பதை மக்களுக்குக் காட்டுவோம். மக்களை வளைப்பது நமது கையிலிருக்கிறது," என்றான் மன்னன்.

அவன் மேலும் ஏதோ சொல்லப் போன சமயத்தில் அவசரமாக உள்ளே நுழைந்த காவலன் உபசேனாதிபதியொருவர் உடனடியாக முதலமைச்சரைப் பார்க்க விரும்புவதாகத் தெரிவித்தான். "உள்ளே வரச்சொல்" என்று மன்னன் ஆணையிட சற்று நேரத்திற்குள் உள்ளே நுழைந்த உபசேனாதிபதி அங்கிருந்த மூவருக்கும் தலைவணங்கி, கச்சையிலிருந்தது ஓர் ஓலையை எடுத்து முதலமைச்சரிடம் கொடுத்தான். அதைப் பிரித்து வாசித்த முதலமைச்சர் முகத்தில் விவரிக்க இயலாத உணர்ச்சிகள் விரிந்தன. "போதாக் குறைக்கு இது வேறா?" என்ற சொற்கள் அவர் உதடுகளிலிருந்து உதிர்ந்தன. "இந்தப் புது விபரீதத்தைப் பாருங்கள்," என்று மன்னனிடம் அந்த ஓலையை நீட்டினார் முதலமைச்சர்.

## அத்தியாயம் 21

# பட்டன் இட்ட தீ

முதலமைச்சர் நீட்டிய ஓலையைக் கையில் வாங்கி அதன்மீது கண்களை ஓட்டிய மன்னன் முகத்தில் விபரீதச் சாயை ஒன்று வெகு வேகமாகப் படர்ந்தது. ஓலையைப் படித்து முடித்து அதைக் கொண்டு வந்த உபசேனாதிபதியை நோக்கிய மன்னன் கண்களில் கோபக்கனல் மிதமிஞ்சி வீசிக்கொண்டிருந்தது. "இதை யார் கொண்டு வந்தது?" என்ற சொற்களும் நெருப்புத் துண்டங்கள் போல் உதிர்ந்தன, வீரரவியின் உதடுகளிலிருந்து.

"யாரும் கொண்டுவரத் தேவையில்லை மன்னவா! நகரத்தில் பல பேரிடம் இது இன்று காலை காணப்பட்டது," என்று உபசேனாதிபதி மிகுந்த பயத்துடன் மன்னனுக்குப் பதில் கூறினான்.

அடுத்து மன்னன் பதில் பேசாமல் மீண்டும் ஒருமுறை ஓலையின்மீது கண்களை ஓட்டினான். "சேர மன்னன் அதர்மங்கள் அத்துமீறுகின்றன. மக்கள் விழித்துக் கொள்ளட்டும். இல்லையேல் சேரநாடு அழிந்துவிடும்—பரதபட்டன்" என்ற வரிகள் மன்னன் கண்களை எரித்தன. 'இந்த ஓலையை யார் படித்தாலும் இது மாதிரி பத்து ஓலைகள் எழுதி மற்றவருக்குக் கொடுங்கள்,' என்ற அடிக்குறிப்பு மன்னனுக்கு இணையில்லா ஆவேசத்தை அளித்தது. அந்த ஆவேசத்துடன் முதலமைச்சரை நோக்கிக் கேட்டான் மன்னன், "இந்த ஓலையைக் குருநாதர் எப்பொழுது எழுதியிருப்பார்? எப்பொழுது பரப்பியிருப்பார்? யார் மூலம் அனுப்பியிருப்பார்?" என்று.



இந்தக் கேள்வி எதற்கும் பதில் கூற இயலாத முதலமைச்சர் கவலை தோய்ந்த முகத்துடன் மன்னனை நோக்கி, "மன்னா! குருநாதரின் திறமை நீங்கள் அறியாததல்ல. அவர் காரியத்தை எப்படிச் செய்கிறார். எப்பொழுது செய்கிறார். என்பதைத் திட்டமாகக் கண்டுபிடிப்பது கஷ்டம்" என்று கூறினார்.

"குருநாதர் திறமையைப் பாராட்ட இங்கு நாம் கூடவில்லை," என்று மன்னன் இரைந்தான்.

"இல்லை. அவரைத் தண்டிக்கக் கூடினோம், விசாரிக்க எண்ணமிட்டோம். அவர் நம்மைத் தண்டித்துவிட்டார். விசாரணை நடக்க இயலாத வழியையும் வகுத்துவிட்டார்," என்றார் முதலமைச்சர் துன்பம் தாண்டவமாடிய குரலில்.

"விசாரிப்பதை யார் தடுக்க முடியும்? குருநாதரை நான் தண்டிப்பதைத்தான் யார் தடுக்க முடியும்?" என்று கேட்டான் மன்னன் சீற்றம் குரலில் முற்றிலும் ஒலிக்க.

இந்தச் சமயத்தில் சேனாதிபதி குறுக்கிட்டுச் சொன்னான் "யார் என்பதைவிட எது என்று கேட்பது பொருந்தும்" என்று.

'எது? சொல்லுங்கள் படைத்தலைவரே?" என்று வினவினான் மன்னன்.

படைத்தலைவன் சற்றுத் தயங்கினான். "பட்டன் இட்ட தீ!" என்ற சொற்கள் அவன் வாயிலிருந்து தயக்கத்துடன் உதிர்ந்தன.

"பட்டன் இட்ட தீயா!" என்ற மன்னன் குரலில் இகழ்ச்சி தொனித்தது.

அடுத்துப் பேச முற்பட்ட சேனாதிபதியைத் தனது கையை அசைத்துத் தடுத்த முதலமைச்சர் தானே பதில் கூறினார் மன்னனுக்கு. "மன்னவா! உரிய காலத்தில் இதமான யோசனை கூறுவது எனது கடமை. ஆகையால் தங்களுக்குப் பிரியமில்லாததைச் சொல்லுகிறேன். கேளுங்கள்" என்று துவங்கி துணிவுடன் தமது யோசனையைச் சொன்னார்.

"இந்த ஓலையைக் குருநாதர் எப்பொழுது எழுதினார் என்பது நமக்குத் தெரியாது. ஆனால் அவர் சிறைப்பட்ட பின்னர் எழுதியிருக்க முடியாது. அப்படி எழுதியிருந்தாலும் நேற்றிரவுக்குள் அதை வெளியிலனுப்பி மக்களிடை பரப்பியிருக்க முடியாது. ஆகவே பின்னால் ஏற்படக் கூடிய விளைவுகளை முன்னதாகவே எதிர் பார்த்து, இந்த ஓலையுடன் தயாராக குருநாதர் செண்டு வெளிக்கு வந்திருக்கவேண்டும். செண்டுவெளி முடிவுக்கும் அவர் சிறையிலடைக்கப் பட்டதற்கும் இடையே அவர் இந்த ஓலையை யாரிடமோ கொடுத்திருக்கவேண்டும். இந்த ஓலையை அல்ல அல்ல - இந்தத் தீயை மக்களிடை அனுப்பியிருக்கிறார் குருநாதர். அவர் இட்ட தீ மூண்டு விடும் என்பதைச் சந்தேகமற அறிந்தே இந்த ஓலையை மக்களிடை அனுப்பியிருக்கிறார். தீ மூண்டு விட்டதற்கு, இத்தனை அதிகாலையில் இது அரண்மனைக்கு வந்திருப்பதே தகுந்த சான்று. ஆகையால் மன்னவா! குருநாதரை விடுதலை செய்துவிடுங்கள், பெருத்த விபரீதத்திலிருந்து நாம் மீள அதுதான் வழி!" என்றார் முதலமைச்சர் உறுதியுடன்.

முதலமைச்சர் பேசப் பேச மன்னன் தனது உணர்ச்சிகளை ஒரு கட்டுக்குள் கொண்டு வந்து விட்டான். அவனுடைய இயற்கையான ஆனால் பயங்கரமான புன் முறுவல் அவன் உதடுகளில் மீண்டும் தவழ்ந்தது. மிகமிருது வான குரலில் கேட்டான் வீரரவி, "முதலமைச்சரே! உமது கடமையை நீர் செலுத்திவிட்டீர் அல்லவா?" என்று.

"செலுத்திவிட்டேன் மன்னவா," என்றார் முதலமைச்சர் மன்னனின் திடீர் சாந்தத்துக்குக் காரணத்தை அறியாமல்.

"எனக்கும் கடமை உண்டல்லவா?" என்று வினவினான் வீரரவி அதே சாந்தமான குரலில்.

"உண்டு மன்னவா," என்று ஆமோதித்தார் முதலமைச்சர்.



"இந்த நாட்டு மக்களைக் காப்பது என் கடமை யல்லவா?"

"ஆம்."

"அந்தக் கடமையைச் செலுத்த அவசியமான எதையும் செய்வதும் என் கடமை."

"ஆம்."

"நாட்டுப் பாதுகாப்புக்கு இடைஞ்சலாக நிற்கும் எதையும், யாரையும் களையெடுப்பதும் காவலன் கடமை."

"சந்தேகமில்லை. ஆனால்..."

"கடமையைச் செலுத்துவதில் 'ஆனா'லுக்கு இடமில்லை அமைச்சரே. அதன் விளைவுகளைச் சந்திப்பதிலும் அர்த்தமில்லை. இந்நாட்டு மக்கள் நலன், அவர்கள் உயிருடன், செழிப்புடன் வாழ வேண்டியதற்கு வகை செய்யும் பொறுப்பு, அவர்களுக்குத் தீங்கு செய்யும் யாவரையும் அழிக்க வேண்டிய கடமை எனக்கு இருக்கிறது. அந்தக் கடமைகளை, பொறுப்புகளை நிறைவேற்றுவதைத் தடுக்க யார் முயன்றாலும், யார் தீ வைத்தாலும், பிரளயத்தையே கிளப்பினாலும் அஞ்சுவது அறமல்ல அரசனுக்கு. அதைக் கண்டு அலறுவதோ, புலம்புவதோ, பின்னடைவதோ, பலமல்ல புரவலனுக்கு. ஆகவே, இந்த பட்டன் இட்ட தீயைக் கண்டு நான் அஞ்சப் போவதில்லை. அவனைச் சிறையிலிருந்து விடுவிக்கப் போவதுமில்லை," என்று விடுவிடு என்று முதலமைச்சரை நோக்கிப் பேசிய மன்னன் பின்பு சேனாதிபதியை நோக்கி "சேனாதிபதி! குருநாதனை அரண்மனையைவிட்டு அகற்ற வேண்டாம், இந்தச் சிறையிலேயே அவன் கிடக்கட்டும்," என்று உத்தரவிட்டபின், சற்று நிதானித்துவிட்டு, "பாண்டியன் மகள் விழித்து விட்டாளா?" என்றும் வினவினான்.

"நேற்று இரவு அரண்மனை மருத்துவர் பார்த்த போதும் செண்டுவெளியில் அடைந்த மயக்கம் தீரவில்லை பாண்டியன் மகளுக்கு. மருத்துவர் ஏதோ மருந்து கொடுத்துவிட்டுப் போனார். 'இரவு உறங்கட்டும்,

காலையில் விழித்துக் கொள்வார் இளவரசி' என்றும் சொல்லிச் சென்றார். இன்று காலையில் விழித்திருக்க வேண்டும்," என்றான் சேனாதிபதி.

"அவளை மீண்டும் கடற்கரை மாளிகைக்கு அனுப்ப வேண்டாம். இங்கேயே காவலில் இருக்கட்டும். அவளை யாரும் நெருங்கக் கூடாதென்று திட்டம் செய்யுங்கள்," என்று சேனாதிபதிக்கு மேலும் உத்தரவிட்ட வீரரவி, "என்ன முதலமைச்சரே! வேறு ஏதாவது நீர் எனது இதத்தை முன்னிட்டு யோசனை சொல்ல வேண்டியது பாக்கியிருக்கிறதா?" என்று வினவினான் முதலமைச்சரை நோக்கித் திரும்பி.

முதலமைச்சர் சிறிதும் அச்சமின்றி மன்னனை ஏறெடுத்து நோக்கினார். "மன்னர் பெருமானே! அபாயமான துறையில் இறங்குகிறீர்கள். கடலின் அலைகளை எதிர்க்கலாம். சுழலை எதிர்க்க முடியாது. அரசியல் கடலிலும் அலைகளும் உண்டு சுழல்களும் உண்டு. இப்பொழுது உங்கள் முன் காணப்படுவது சீறிவரும் அலையல்ல, உங்களை அழுத்த முயலும் சுழல். அதில் அகப்பட்டுக் கொள்ள வேண்டாம். குருநாதன் பெரிய சுழல், பெரிய புயல். அவரை விட்டு விடுவது அனைத்துக்கும் நல்லது. தவிர நாட்டு வாயிலில் மாற்றான் நிற்கும் போது மக்களின் மதிப்புக்கு உரியவர்களை விரோதித்துக் கொள்வது மக்களையே விரோதித்துக் கொள்வதாகும். மக்கள் விரோதத்துடன் மாற்றானை வெற்றி கொண்ட மன்னன் எவரும் வரலாற்றில் கிடையாது," என்று கூறிவிட்டுத் தலை வணங்கி வெளியே சென்றார்.

தான் அனுமதிக்கும்வரை காத்திராது வெளியே சென்று விட்ட முதலமைச்சர் சென்ற வழியை நோக்கிக் கொண்டிருந்த மன்னன் அவர் அறை, வாயிற்படியைத் தாண்டியதும் சேனாதிபதியை நோக்கினான். சேனாதிபதியின் முகத்தில் விவரிக்க இயலாத உணர்ச்சிகள் பரவிக் கிடந்தன. படைத் தலைவன் உள்ளத்திலிருந்த சஞ்சலத்தை முகத்தோரணையிலிருந்தே ஊகித்துக் கொண்ட மன்னன்



கேட்டான், "என்ன சேனாதிபதி! நீங்கள் ஏதாவது யோசனை சொல்ல வேண்டியது பாக்கியிருக்கிறதா?" என்று.

"இந்த விவகாரங்களில் நான் யோசனை சொல்லத் தகுதியற்றவன்," என்றான் சேனாதிபதி.

"ஏன் உமது தகுதிக்கு என்ன குறைச்சல்?" என்று மன்னன் வினவினான் விஷமத்துடன்.

"நான் ராஜதந்திரியல்ல, படைவீரன்," என்று கூறினான் சேனாதிபதி.

"அதனால்?"

"ராஜதந்திர சம்பந்தமான விஷயத்தில் நான் யோசனை சொல்வது சரியல்ல."

"வேறு எதில் யோசனை சொல்லுவீர்?"

"படைகளை நடத்துவது, அணிவகுப்பது, நகரப் பாதுகாப்பை வலுப்படுத்துவது ஆகிய விஷயங்களில் நான் யோசனை சொல்ல முடியும்."

"நகரத்தில் ஒழுங்கு குலைந்தால்?"

"அதைப் படைகளைப் பிரித்து நிறுத்திச் சமாளிப்பேன்."

"இவை அனைத்தையுமே செய்ய வேண்டிய சமயம் வந்து விட்டது சேனாதிபதி," என்று கூறினான் மன்னன் சர்வ நிதானமாக.

"இவை அனைத்தையுமா?" என்று வினவினான் சேனாதிபதி வியப்புடன்.

"ஆம் சேனாதிபதி! பரதபட்டன் இட்ட தீ பரவினால் தலை நகரில் ஒழுங்கு குலையும். ஆகவே அதைப் பரவாது தடுக்க முயலவேண்டும். அப்படிப் பரவினால் மக்களைக் கட்டுப்பாட்டில் நிறுத்த முயலவேண்டும். அதற்குத் தகுந்தபடி தலைநகரப் படையை வகுத்துவிடும். இன்று முதல் படைகள் பாசறையில் இல்லாது நகரத் தெருக்களில் உலாவட்டும். நகரத்தின் முக்கிய இடங்களில் குதிரைப் படையின் பகுதிகள் காவல் நிற்கட்டும். ரதங்கள் நகரக்

கோட்டை முகப்பில் வளைய வரட்டும். இத்தகைய ஓலையை யாராவது பத்துப்பேர் கூடி நின்று படித்தால் அவர்களில் ஒருவனைப் பிடித்துச் சிறையில் அடையுங்கள். பரதபட்டனுக்குத் தரப்படும் ஆதரவு ராஜத் துரோக குற்றமாகும் என்பது வலியுறுத்தப்படட்டும்," என்றான்.

"அப்படிப் பறையறைவித்து விடட்டுமா?" என்று வினவினான் சேனாதிபதி.

மன்னன் இதழ்களில் இகழ்ச்சி நகை அரும்பியது. "அது தீயை அணைக்காது, சேனாதிபதி, தீயைக்கிளறும் பரதபட்டன் எத்தனை லாகவமாகத் தீயை வைத்திருக் கிறானோ அத்தனை லாகவமாக அதை நாம் அணைக்க வேண்டும். எதிரிகள் நடமாட்டம் எல்லையில் அதிகமிருப்பதாகவும் மக்கள் எச்சரிக்கையாயிருக்க வேண்டுமென்றும் பறையறைவித்துவிடுங்கள். படை நடமாட்டம் எதிரிகளைக் குறித்ததாக மேலுக்கும், பட்டனை எதிர்ப்பதாக உள்ளேயும் இருக்கட்டும். பரத பட்டனைப் பற்றிய விஷயத்தைப் படைவீரர்கள் மக்கள் காதில் விழும்படி வாய் வார்த்தையாகப் பேசிக் கொண்டால் போதும்" என்றான் மன்னன். மன்னன் ஏற் பாட்டின் முழு ஆழம் சேனாதிபதிக்கு விளங்காது போகவே மன்னன் மேற்கொண்டு சொன்னான்: "மக்கள் மனக் கிளர்ச்சி ஒரு விஷயத்தில் லயித்திருக்கும் போதே அதை வேறுவிஷயத்தில் திருப்பி விட்டால் முதல் விஷயம் அடியோடு மறைந்துவிடும். எதிரியின் நடவடிக்கை மும்முரமாகிறதென்றால் பரதபட்டன் ஓலை செண்டுவெளி நிகழ்ச்சிகள் இவை அனைத்தும் மக்கள் மனத்திலிருந்து அகன்றுவிடும். போர் முரசு ஆங்காங்கு அடிக்கப்படும் போது பேராபத்து தலைநகரத்திற்கு ஏற்பட்டிருக்கிறதென்ற நிலையில் மக்கள் குருநாதனை மறந்து விடுவார்கள். இப்படி மக்கள் உணர்ச்சிகளுக்குப் பக்க வாய்க்கால் வெட்டுவதி லிருக்கிறது நமது வெற்றி."

மன்னனின் திட்டத்தைக் கேட்ட சேனாதிபதி பல விநாடிகள் வியப்பின் வசப்பட்டு நின்றான். மன்னன்



மனோதத்துவத்தை அறிந்திருக்கும் முறையும், அவன் மனத்தின் ஆழமும், அந்த ஆழத்திலிருந்து கிளம்பிய இணையிலா தந்திரமும் பிரமிப்பை அளித்தது படைத் தலைவனுக்கு. மன்னன் தன் திட்டத்தை விவரிக்கும் வரையில் குருநாதரின் கூரிய அறிவை நினைத்து அஞ்சிய அவன், "உண்மையில் யார் அறிவு கூர்மையானது? அரசன் அறிவா, குருநாதர் அறிவா?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான்.

ஆனால் வீரன் என்ற முறையில் விளைவைப் பற்றி எண்ணுவதை விட்டு மன்னனை நோக்கி, "சரி மன்னவா! தங்கள் ஆணையை நிறைவேற்றுகிறேன். இன்று மாலைக்குள் பரலி மாநகர் முழுப் போர்க்கோலம் கொள்ளும். மக்கள் கூடிக் கூடி நிற்பது அபாயம் என்பதும் வலியுறுத்தப்படும். எதிரி நமது தலைவாயிலில் நின்றால் நிலை என்னவோ அந்த நிலைக்கு பரலிமாநகர் இன்று மாலை வந்து விடும்," என்று கூறித் தலை வணங்கினான்.

அத்துடன் சேனாதிபதியைப் போகவிட்ட மன்னன் தீவிர சிந்தனையில் இறங்கினான். 'பரதபட்டன் இட்ட தீயை அணைத்துவிட ஏற்பாடு செய்து விட்டேன். ஆனால் தீ அணையுமா!' என்று சற்று சந்தேகத்துடன் தன்னைக் கேட்டுக் கொண்டான். பரதபட்டன் இட்ட தீ அன்று மாலைக்குள் ஓரளவுக்கு அடங்கவே செய்தது. ஆனால் வேறொரு திசையில் மற்றொரு தீ பிடித்துக் கொண்டி ருந்தது. அது புயல் வேகத்தில் சேரன் தலைநகரை நோக்கி நகரவும் ஆரம்பித்தது.

# அத்தியாயம் 22

# தர்மத்தின் சக்தி

மக்கள் மனோதத்துவத்தை உள்ளபடி உணர்ந்து மன்னன் துரிதமாக எடுத்த நடவடிக்கைகள், பட்டன் இட்ட தீ பரலிமாநகரில் அதிகமாகப் பிடித்துப் பரவி விடாமல் ஓரளவு தடுக்கவே செய்தன. பட்டன் முன் யோசனையுடன் செய்த முயற்சி மன்னன் சூழ்ச்சியால் சற்றுத் தோல்வியடைந்தது என்று சொல்வது கூடமிகை யாகாது.

செண்டுவெளி விழாவை நடத்த மன்னன் தீர்மானித்து விட்டான் என்பதைக் கேட்டதிலிருந்தே மன்னன் எண்ணத்தைப் புரிந்து கொண்ட பரதபட்டன், தனது ஒவ்வொரு நடவடிக்கையும் எப்படியிருக்க வேண்டுமென்பதை தீர்மானித்துக் கொண்டான். வீரனான இந்திரபானுவை ஒழித்து விட மன்னன் செண்டுவெளியில் ஏற்பாடு செய்வானென்பதைத் திட்டமாக அறிந்துகொண்ட பரதபட்டன், அந்த ஏற்பாட்டின் விளைவாக மன்னன் தன்னைச் சிறைசெய்யும் பட்சத்தில் எடுக்க வேண்டிய எதிர் நடவடிக்கையையும் நிர்ணயித்துக் கொண்டான். ஆகவே, செண்டுவெளிக்கு வந்த போது மந்திரக்கோலை அவன் எடுத்துக்கொண்டதன்றி ஓர் ஓலை நறுக்கையும் எடுத்து மக்களுக்கு அதில் ஒரு செய்தியையும் பொறித்து மடியில் செருகிக் கொண்டான். அந்த ஓலை பரலிமாநகரில் யார் கையில் கிடைத்தாலும் அது விளைவிக்கக் கூடிய பரபரப்பு எத்தன்மையதாயிருக்கும் என்பதை உணர்ந்திருந்த பரதபட்டன், மன்னன் தன்னைச் சிறைசெய்த பின்பு அந்த ஓலையை உபயோகிக்கத் தீர்மானித்துவிட்டான். ஆகையால் தான் செண்டுவெளி வழியாக வந்தபோது மாளிகை



உப்பரிகைகளில் கைப்பிடியில் சற்று எட்டிப் பார்த்து ஓலையைப் பலமாக வீசினான். அவன் வீசிய சமயத்தில் செண்டு வெளிக்கூட்டம் ஓரளவு கலைந்திருந்தாலும் மக்கள் பூராவும் வெளியேறாத காரணத்தால், சட்டென்று தலைமேல் விழுந்த ஓலையைச் சேரநாட்டுக் குடிமகன் ஒருவன் பிடித்து என்னவென்று பிரித்துப் பார்த்தான். அவ்வளவுதான், ஓலை அவன் மடியில் அடுத்த கணம் மறைந்தது. ஓலை கிடைத்ததும் கும்பலிலில் மோதி ஊடுருவி வெளியேறிய அந்தக் குடிமகன், இல்லம் சேர்ந்து பத்து ஓலைகளைத் தயார் செய்து கொண்டு உடனடியாக வெளிக் கிளம்பினான். சேரமாநகரின் பெரும் அங்காடியில் அவற்றை விநியோகம் செய்து திரும்பினான். அதற்கு பிறகு பட்டன் இட்ட தீ ஓலை மூலம் மிகத்துரிதமாகப் பரவியது. சாதாரண ஓலையில் பிடிக்கும் தீ எப்படிக் கண் இமைக்கும் நேரத்தில் பெரிதாக எரிந்து காற்றில் விசிறுமோ, அப்படியே விசிறிய அந்த நறுக்கு ஓலைத் தீயும் அன்றைய இரவுக்குள் நகரின் பிரதான இடங்களில் பிடித்து விடியற்காலைக்குள் அரண்மனையையும் பற்றிக் கொண்டது.

அந்தத் தீயின் வலிமை பற்றி வீரரவிக்குச் சிறிதளவும் சந்தேகமில்லை. தன்னையும் மீறிய செல்வாக்குப் பரதபட்டனுக்கு மக்களிடத்தில் உண்டு என்பதை அவன் அறிந்திருந்தான். நகருக்குள் வராமல் காட்டிலேயே வசித்து வந்தபடியாலும், பாம்புகள்மீதும் மற்ற பிசாசு கணங்கள் மீதும் அவனுக்குப் பெரும் சக்தியிருந்ததாக மக்கள் நம்பியிருந்ததாலும், அவனைத் தொடுவது நாட்டுக்கு நல்லதல்ல என்பது மக்களின் தீவிர நம்பிக்கை என்பதை உணர்ந்திருந்தான் சேரமன்னன். அத்தகைய பரத பட்டனைச் சிறை செய்தால் ஏற்படும் கொந்தளிப்பும் அவன் அறியாத ஒன்றல்ல. இருப்பினும் தனக்கு பொதுவாகப் பாண்டியன் மீதும், குறிப்பாக இந்திர பானுவின் மீதும் இருந்த விரோதத்தை முன்னிட்டு பரத பட்டனை எக்காரணத்தைக் கொண்டும் விடுதலை செய்வதில்லையென்று உறுதி கொண்டான். அந்த

உறுதியின் விளைவாகப் பட்டனைப் பற்றிய பேச்சை நகரத்தில் அடக்கிவிடத் தந்திரமாகத் திட்டமும் இட்டான்.

பட்டனிடமிருந்த கிலியைவிட அதிகக் கிலியையும் பர பரப்பையும் அளிக்ககூடிய செய்தியை நகரில் பரப்பினாலொழிய மக்கள் கொந்தளிப்பை அடக்கமுடியாதென்பதை அறிந்திருந்த மன்னன் மக்களிடையே போர்க்கிலியை மூட்டி விடச் சேனாதிபதிக்கு உத்தரவிட்டான். எதிரி நடமாட்டம் நகர எல்லையில் இருக்கிறதென்றால் மக்கள் அதிகமாக வெளியில் உலாவமாட்டார்கள். அப்படியே உலாவினாலும் போரின் அவசியத்தை முன்னிட்டு அவர்கள் கூடுவதையும் பேசுவதையும் படைவீரர்கள் ஓரளவு தடை செய்ய முடியும். தவிர, கோட்டைக் கதவுகளுக்கருகிலும் பாதுகாப்பு அதிகமிருக்குமாகையால் யாவரும் வெளியே செல்லவும் முடியாது. வெளியே யாரும் அனுமதிக்காவிட்டால் பரலிமாநகர் விவகாரம் சேரநாட்டின் மற்ற பகுதிகளுக்கு உடனடியாகப் பரவாது. தவிர, காவலைக் கடந்து இந்திரபானு வெளியேறுவதும் நடவாத காரியம். இப்படிப் பலபடியாக யோசித்தே மன்னன் நகரத்தை எச்சரிக்க உத்திரவிட்டான் சேனாதிபதிக்கு.

அன்று முரசுகள் நகரின் பல மூலைகளிலும் முழங்கின. எதிரியின் அபாயம் பற்றித் தலைநகருக்கு மட்டும் விஷயத்தை அறிவிக்க உத்தரவு பெற்றிருந்த பறையறிவிப்பவர்கள் மன்னன் திட்டப்படி அபாயத்தை மிகைப்படுத்திக் கூறினார்கள். முதலில் மக்களுக்கு அதை நம்புவது சந்தேகமாயிருந்தது. முரசொலியையும் முரசறைவிப்பின் செய்தியைக் கேட்டதும் ஆங்காங்கு கூடிய மக்கள் கும்பல் வியப்பை அடைந்தது. கோட்டாற்றுக் கரையில் வீரபாண்டியன் சரணாகதியடைந்து விட்டதாகவும் தளபதி சிங்கண்ணன் பெருவெற்றி எய்தி விட்டதாகவும் முந்திய இரவில் மன்னனே அறிவித்திருக்க, ஓரே இரவில் நிலைமை மாறி எதிரி பயம் தலைநகருக்கு எப்படி ஏற்படும் என்று மக்கள் ஒருவரையொருவர்



கேட்டுக்கொண்டார்கள். இருப்பினும் அன்று மாலைக்குள் படைகள் தலைநகரத்தின் பல பகுதிகளுக்குப் பாசறைகளிலிருந்து விரைந்து விட்டதையும், ரதங்களும் எங்கும் வீரர்களைத் தாங்கி விரைந்தோடுவதையும் கண்ட மக்கள் முரசறைவிப்பில் ஏதோ உண்மையிருக்கிறதென்று நம்பலானார்கள். தவிர, கோட்டை வாயில்களிலும், காவல் பலமாகி வெளியே போகிறவர்கள் வருகிறவர்கள் விசாரிக்கப்படவே, நிலைமை ஏதோ நெருக்கடியாகிவிட்டதென்று ஒப்புக் கொள்ளவும் செய்தார்கள்.

முரசறைவித்த இரண்டு மூன்று நாட்களில் பரலிமாநகர் முழுதும் போர்க்கோலம் பூண்டு நின்றது. காட்டை நோக்கிக் கொண்டிருந்த வடக்கு, கிழக்கு வயல் களில் இருந்த பாதுகாப்பைப் போல் கடற்புறத்திலும் காவல் பலமாயிருந்தது. கடற்கரை ஓரமாகப் பூரண போர்க் கவசம் பூண்ட யவனர்கள் புரவிகளில் ஏறி உலாவிக் கொண்டிருந்தனர். சற்று எட்ட கடலில் நின்ற மரக்கலங் களுக்கு வர்த்தக நிமித்தமாகப் படகுகளில் சென்றவர்களை விசாரிக்கவும் சோதிக்கவும் அலை ஓரமாக இருந்த படகுத் தளைகளின் அருகே ஒற்றர்களும் சுங்கக் காவலரும் நின்றிருந்தார்கள். ஒரு மனிதன்கூடக் காரணமில்லாமல் படகுகளில் ஏற அனுமதிக்கப்படவில்லை. மரக்கலங்களி லிருந்து படகுகளில் வந்து கரையிலிறங்கியவர்களும் விசாரிக்கப்பட்டனர்.

இப்படி மன்னன் பெரும் பாதுகாப்பை ஏற்படுத்தி, சைன்னியத்தின் இரும்பு வளையத்தில் நகரத்தை கட்டுப் படுத்தி விட்டபடியால் பட்டனைப் பற்றிப் பேசுவதைக் கூட மக்கள் குறைத்துக்கொண்டனர். அவர்கள் கவனம் முழுவதும் எதிரி நடமாட்டத்தைப் பற்றிய செய்திகளில் திரும்பிவிட்டதை ஒற்றர்கள் மூலம் அறிந்த மன்னன் பெரிதும் மகிழ்ச்சி கொண்டான்.

மூன்று நாட்களில் மக்கள் மனம் வேறு வழியில் திரும்பி விட்டதைக் கண்ட மன்னன் நான்காவது நாள் முதலமைச்சரை வரவழைத்து, “அமைச்சரே! பட்டன்

இட்ட தீ அணைந்துவிட்டதாகத் தெரிகிறது," என்று சற்று இகழ்ச்சியுடன் கூறினான்.

அந்த இகழ்ச்சியில் மகிழ்ச்சியும் ததும்பியதை முதலமைச்சர் கண்டார். இருப்பினும் அவர் அந்த மகிழ்ச்சியில்பங்கு கொள்ளாமல், "இடைக்கால மாறுதல்," என்று கூறினார்.

"எது இடைக்கால மாறுதல்?" என்று வினவினான் மன்னன், புருவங்களை வியப்பால் சற்று உயரத் தூக்கி.

"மக்களின் மனமாற்றம்," என்றார் முதலமைச்சர்.

"அப்படியா!" இலேசாகச் சிரித்தான் மன்னவன்.

"இதில் சிரிப்பதற்கு ஏதுமில்லை மன்னவா. மக்களால் மதிக்கப்படும் குருநாதரைச் சிறை செய்திருக்கிறீர்கள். எதிரி வந்துவிட்டான் என்ற பயம் காட்டி மக்கள் எண்ணத்தை வேறு திசையில் திருப்பியிருக்கிறீர்கள். மக்கள் உண்மையை உணர்ந்து கொண்டால், சற்றுச் சிந்திக்கத் துவங்கினால், அப்புறம் என்ன ஆகும்? பிரளயம் ஏற்படும் மன்னவா, பிரளயம் ஏற்படும்," என்ற முதலமைச்சர் மீண்டும் கூறினார், "மன்னவா! செண்டுவெளியன்றுதான் மீண்டும் வீரபாண்டியன் சரணடைந்து விட்டதாக அறிவித்திருக்கிறீர்கள். மறுநாள் எதிரி பயம் தலைநகருக்கு ஏற்பட்டு விட்டதாக முரசறைவிக்கிறீர்கள். மக்கள் சற்று நிதானப் பட்டுக் கோட்டையாற்றுக் கரையின் பெரு வெற்றிக்குப் பின்பு சிங்கணன் பெரும் படை என்ன செய்கிறது என்று சிந்திக்கத் துவங்கினால்? அந்த வெற்றிக்குப் பின்பு இங்கிருந்து நீங்கள் அனுப்பிய கடற்படை எதற்காகக் கோட்டாற்றுக் கரையின் துறைமுகமான கொல்லத்தில் தூங்கவேண்டும் என்று எண்ணத் துவங்கினால்? மக்களுக்கு முரசறைவிப்பில் அர்த்தமில்லை யென்பது புரியும். மன்னவுன் தங்களை ஏமாற்றியிருப்பதை மக்கள் புரிந்து கொள்வார்கள். அப்புறம் உங்கள் கதி? உங்களுக்கு அமைச்சனான என்கதி?" இதைச் சொன்ன முதலமைச்சர் பெருமூச்சு விட்டார்.



"மக்கள் புரிந்து கொள்ள நாளாகும்," என்றான் மன்னன்.

"மக்கள் புரிந்துகொள்ள நாளாகும் மன்னவா. ஆனால் ஒருமுறை புரிந்துகொண்டு விட்டால் அவர்கள் திரும்பும் முறை பயங்கரமாயிருக்கும். பொங்கி வரும் மக்கள் கடலை நமது படைபலம் தடுக்க முடியாது," என்றார் முதலமைச்சர்.

"அவர்கள் புரிந்து கொள்வதற்குள் நமது வெற்றிப் படைகள் சேரநாடு திரும்பும், அப்பொழுது மக்கள் கடல் பொங்கும். என்னை நோக்கி அல்ல அமைச்சரே! வெற்றி வீரர்களை வரவேற்க. அந்த உற்சாக வெள்ளத்தில் பட்டன் மீண்டும் அடித்துக் கொண்டு போகப்படுவான்—அதுவரை அவன் இருந்தால்," என்ற மன்னன் லேசாகப் புன்முறுவல் செய்தான்.

முதலமைச்சரும் இம்முறை புன்முறுவல் செய்தார். "மன்னா! பெரிதும் முன்னோக்கித்தான் சிந்திக்கிறீர்கள். ஆனால் இத்தனையும் உங்கள் புத்தியில் விளைவது. புத்திக்கும் அப்பாற்பட்டது ஒன்று உண்டு அதுதான் தர்மம். அந்தத் தர்மத்தை யாரும் அழித்துவிட முடியாது. எந்த யுக்தியும் அதன் வலிமையையோ, செயலையோ எதிர்க்க முடியாது மன்னா! தவிர கோட்டாற்றுக்கரை வெற்றியுடன் போர் முடிந்துவிடுமென்று எனக்குத் தோன்றவில்லை. நாட்டு எல்லையில் இதுவரை தாக்கிவிட்டுத் தாக்கிவிட்டுக் காடுகளில் பின் வாங்கிக் கொண்டிருந்த பாண்டிய மன்னன் இப்பொழுது நமது நாட்டுக்குள் புகுந்து விட்டதாயும் எல்லை ஊர்களை நாசம் செய்வதாகவும் ஒற்றர்கள் செய்தி கொண்டு வந்திருக்கிறார்கள்," என்றும் கூறினார் முதலமைச்சர்.

வீரரவி சற்று யோசனையில் இறங்கினான், "நாட்டுக்குள் பாண்டியன் இறங்கத் துவங்கிவிட்டானா?" என்றும் விசாரித்தான் பல விநாடிகள் கழித்து.

"ஆம்"

"எந்தத் தைரியத்தில் நுழைகிறான்?"

"அதுதான் எனக்கும் புரியவில்லை."

"கோட்டையாற்றுக் கரைப் போர் முடிந்ததென்றால் சிங்கணன் பெரும்படை சேரநாட்டை நோக்கித் திரும்புமே?"

"ஆம்"

"அதைச் சமாளிக்கவே பாண்டியனிடம் படை இல்லை. தவிர, இங்குள்ள படையும் அவனைத் தாக்கும். முன்னும் பின்னும் தாக்கும் இரு படைகளை அவன் எப்படிச் சமாளிப்பான்?"

இந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல முதலமைச்சரால் முடியவில்லை. "எனக்குப் புரியவில்லை மன்னா! ஆனால் பாண்டியன் அறிவீனனல்ல, மூர்க்கனுமல்ல," என்றார் முதலமைச்சர்.

வீரரவியும் அதை ஆமோதித்துத் தலையசைத்தான். "நாமும் அறியாத் பலம் அவனுக்கு ஏதாவது இருக்குமா அமைச்சரே?" என்றும் கேட்டான் கடைசியாக.

முதலமைச்சரின் இதழ்கள் இகழ்ச்சியுடன் மடிந்தன. "ஒரு பலம் அவனிடம் இருப்பது தெரியும் எனக்கு," என்றார் மெல்ல.

"என்ன பலம் அது?" என்று வினவினான் மன்னன்.

"தர்மத்தின் பலம். அவன் இப்போது போரிடுவது நாட்டாசையால் அல்ல. தனது முத்துக்களைத் திரும்பப் பெறவும், பெண்ணை விடுவித்துக் கொள்ளவும் போராடு கிறான். நமது நிலை நேர் எதிரானது," என்றார் முதலமைச்சர்.

"படைபலமில்லாது தர்மத்தின் பலத்தில் மட்டும் போரில் வெற்றி கொள்ள முடியுமா?" என்று வினவினான் வீரரவி.

"கண்டிப்பாக முடியும்," என்ற முதலமைச்சர், "தர்மம் பெரு நெருப்பு மன்னவா? அதன் வேகம் நமக்குப் புலப்படாது. அது வெற்றியைத் தோல்வியாக்கும், தோல்வியை வெற்றியாக்கும்," என்று தெரிவித்தார்.



'இது வெறும் வேதாந்தம்,' என்று வீரரவி எண்ணினான். ஆனால் வேதாந்தத்தில் முழுக்கப் புதைந்து கிடப்பது சத்தியம் எனும் பெரும் சக்தி என்பதை அவன் உணரவில்லை. அடுத்த நான்கு நாட்களில் அவன் அதை உணர்ந்தான். நான்கு நாட்கள் கழித்து முதலமைச்சர் ஓர் ஒற்றனைக் கொண்டுவந்து மன்னன் முன்பு நிறுத்தினார். "இவன் செய்தி ஒன்று கொண்டு வந்திருக்கிறான் நாட்டு எல்லையிலிருந்து," என்றும் தெரிவித்தார் மன்னனிடம்.

"சொல்," என்று மன்னவன் ஆணையிட்டான்.

"இப்பொழுது நடப்பது..." என்று தயங்கினான் ஒற்றன்.

"சொல்."

பதிலுக்கு ஒற்றைச் சொல்லைச் சொன்னான் ஒற்றன். "எரிபரந்தெடுத்தல்," என்ற சொல் திகிலுடன் உதிர்ந்தது அவன் உதடுகளிலிருந்து.

## அத்தியாயம் 16

# எரிபரந்தெடுத்தல்*

செண்டுவெளிப் போர்க்கூத்து நடந்து ஏழு நாட்கள் சென்றுவிட்ட பிறகு எட்டாவது நாள் கிட்டிய அந்தச் செய்தி மன்னன் மனதில் மட்டில்லாக் கவலையை ஊட்டி விட்டதால், எதிரே நின்ற ஒற்றனை நோக்கி, "என்ன சொன்னாய்? திரும்பச் சொல்," என்று வீரரவி வினவினான் குரலில் கோபமும் கவலையும் கலந்து ஒலிக்க.

ஒற்றன், கடமையைச் செய்யும் துணிவால் கொற்றவனை நிர்ப்பயமாக உற்று நோக்கி, "எரிபரந் தெடுத்தல் துவங்கி விட்டது," என்று கூறினான் திரும்பவும் மிகத் தெளிவான குரலில்.

மன்னன் முகத்தில் கவலைக்குறி மறைந்து சினத்தின் சாயை மெல்லப் பரவியது. "எந்த இடத்தில் துவங்கியிருக் கிறது?" என்று வினவினான் குரலில் கோபம் தொனிக்க.

"நமது வடகிழக்கு எல்லையில்," என்று அறிவித்த ஒற்றன், "விவரம் ஓலையிலிருக்கிறது," என்றும் விளக்கினான் பணிவுடன் தலை வணங்கி.

அதுவரை மௌனம் சாதித்த முதலமைச்சர் கையில் இடுக்கி வைத்திருந்த ஓலையை எடுத்து மன்னனிடம் நீட்டினார். அதை வாங்கி இரண்டு முறை படித்த மன்னன் முதலமைச்சரை நோக்கி, "இதைப்பற்றி என்ன நினைக் கிறீர்கள்!" என்று வினவினான்.

* எரிபரந்தெடுத்தல் : Setting fire to enemy land. A military situation — Pre-Pallava. Tamil index by Dr. N. Subramaniayam. M.A., Ph.D. Page 161; 'இயங்குபடையரவ மெரிபரந்தெடுத்தல்'—தொல்காப்பியம் பொருளதி காரம் — 65.1.



முதலமைச்சர் முகத்தில் கவலை பரிபூரணமாகத் தெரிந்தது. அவர் சொற்களும் கவலை தோய்ந்த வண்ணம் வெளி வந்தன. "இதில் நினைப்பதற்கு என்ன இருக்கிறது மன்னவா? நமது வட எல்லைப் படைத்தலைவன் செய்தியை மிகத் தெளிவாகப் பொறித்திருக்கிறானே?" என்றார் முதலமைச்சர்.

"ஆம் முதலமைச்சரே! ஓலையில் செய்தி தெளிவாகத் தானிருக்கிறது. பாண்டியன் வடகிழக்கு எல்லையிலுள்ள கிராமங்களைக் கொளுத்துகிறானென்று கூறுகிறான் படைத் தலைவன்," என்றான் மன்னவன்.

"இந்தச் செய்தி உண்மையாயிருந்தால், நாமும் அறியாத சூது ஏதோ நடக்கிறது என்று அர்த்தம்," என்றார் விவேகியான முதலமைச்சர்.

"எங்கு அது நடக்கிறதென்று நினைக்கிறீர் அமைச் சரே?" என்று வினவினான் மன்னவன்.

"கோட்டாற்றுக்கரையில்..." என்ற முதலமைச்சர் கவலையால் சற்றுப் பெருமூச்சும் விட்டார்.

மன்னன் முகத்தில் சினத்துடன் வியப்பும் கலந்து தெரிந்தது. "கோட்டாற்றுக் கரையிலா?" என்ற கேள்வியில் வியப்பு கோபத்தைவிடச் சற்று அதிகமாகத் தொனித்தது.

"ஆம். கோட்டாற்றுக் கரையில்தான்," என்றார் முத லமைச்சர் உறுதியுடன்.

"எத்தகைய சூழ்ச்சியை எதிர்பார்க்கிறீர்?"

"எது என்று நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை மன்னவா? ஆனால் சிங்கணனிடமிருந்து செண்டுவெளி அன்று கிடைத்த செய்தி சந்தேகத்தை ஊட்டுகிறது!"

"என்ன சந்தேகம் அதில்?"

"வீரபாண்டியன் சரணடைந்துவிட்டதாகச் சிங்கணன் ஓலை விடுத்திருந்தான் தங்களுக்கு."

"ஆம்."

"வீரபாண்டியன் சரணடைந்திருந்தால் அந்தச் செய்தி நமக்குக் கிட்டுவதுபோல் பாண்டியனுக்கும் கிட்டியிருக்க வேண்டும்."

"ஆம்."

"நீங்கள் பாண்டியனாயிருந்தால் என்ன செய்வீர்கள்?"

எதற்காக முதலமைச்சர் அந்தக் கேள்வியைக் கேட்கிறார் என்பதைப் புரிந்துகொள்ள முடியாத மன்னன், கேள்வி தொக்கி நின்ற பார்வையொன்றை அவர்மீது வீசினான். மன்னன் கேள்வியைப் பார்வையிலேயே புரிந்து கொண்ட முதலமைச்சர், "மன்னவா! பாண்டியப் படைகள் இரு கூறாகப் பிரிந்து ஒன்று சேரநாட்டு வட கோடிக்கும் தென் எல்லைக்கும் நகர்ந்தன. வடக்கெல்லையில் வீர பாண்டியன் சரணடைந்துவிட்டான். இந்தச் செய்தி கேட்டதும் தென் எல்லையில் அதாவது நமது தலைநகருக்கு நேர் வட கிழக்கில் நிற்கும் பாண்டியன் என்ன செய்ய வேண்டும்" என்று வினவினான்.

"வடக்கெல்லையிலுள்ள வீரபாண்டியனுக்கு உதவ விரையவேண்டும்."

"இரண்டு காரணங்களுக்காக விரையலாம். சரணடைந்துவிட்ட படைகளை ஒழுங்காகச் சிங்கணனிடமிருந்து மீட்க விரையலாம். அல்லது சரணடைந்த படைகளுக்குத் துணை கொடுத்து அவற்றைத் தனது படைகளுடன் இணைத்து வடக்கில் எதிரியை மீண்டும் தாக்க விரையலாம்," என்று சுட்டிக் காட்டினார் முதலமைச்சர்.

"ஆம். உண்மை," என்று ஒப்புக்கொண்டான் மன்னவன்.

"அப்படிச் செய்யவில்லை பாண்டியன்! வடக்கே திரும்புவதை விட்டு, தெற்கே திரும்பி, போரை மும்முரப் படுத்துகிறான். அதுவும் கிராமங்களையும் பயிர்களையும் கொளுத்துகிறான். இது விசித்திரமாயில்லையா உங்களுக்கு?" என்று வினவினார் முதலமைச்சர்.

மன்னன் சில விநாடிகள் சிந்தனையில் இறங்கினான். பிறகு "ஆம். விசித்திரமாகத்தானிருக்கிறது" என்றும் கூறினான்.

"கோட்டாற்றுக் கரையில் வீரபாண்டியன் வெற்றியடைந்திருந்தால் அதைப்பற்றிக் கவலையைவிட்டு சுந்தர பாண்டியன் பரலியை நோக்கி நகருவது இயற்கை," என்று சுட்டிக் காட்டினார் முதலமைச்சர்.





"ஆம். அவன் செய்கை இயற்கைக்கு விரோதமாயிருக்கிறது. பரம்பரைப் போர் முறைக்கும் ஒவ்வாததாயிருக்கிறது," என்றான் மன்னன் சஞ்சலத்துடன்!

"அதுமட்டுமல்ல..." என்று இழுத்தார் முதலமைச்சர்.

"வேறென்ன?" இன்னும் ஏதோ சொல்லப் போகிறார் முதலமைச்சர் என்ற கிலியுடன் கேட்டான் மன்னன்.

"வீரபாண்டியன் சரணடைந்து விட்டதாக சிங்கணன் ஓலை அனுப்பி இன்று எட்டாவது நாள்..."

"ஆம்."

"முதல் ஓலைக்குப் பிறகு சிங்கணனிடமிருந்து வேறு ஓலையே ஏன் வரவில்லை?"

"கோட்டையைக் கைப்பற்றி அங்கே மக்களிடையே ஒழுங்கை நிலைநிறுத்திப் போர்க் காயங்களை நகரத்திலிருந்து நீக்கும் முயற்சியில் முனைந்திருக்கலாம் சிங்கணன்."

"பிடித்த கோட்டையை ஒழுங்குக்குக் கொண்டுவர நல்ல படைத்தலைவனுக்கு இரண்டு நாட்கள் போதாதா?"

"போதும்."

"அப்படியானால் மூன்றாவது நாள் செய்தியனுப்பியிருக்கலாமே. அனுப்பியிருந்தால் இரண்டு நாட்களுக்கு முன்பே நமக்குக் கிடைத்திருக்குமே. தவிர மன்னவா, வெற்றியடையும் உற்சாகத்தில் திரும்பத் திரும்ப வெற்றிச் செய்திகளையும் இதர விவரங்களையும் தலைநகருக்குத் தெரியப்படுத்துவது படைத்தலைவர் வழக்கமல்லவா?"

முதலமைச்சர் எந்தத் துறைக்குத் தனது விவரணத்தைக் கொண்டு செல்கிறார். என்பது புரிந்தது மன்னனுக்கு. ஆகவே திட்டமாகவே கேட்டான் வீரரவி. "அப்படியானால் கோட்டாற்றுக்கரை வெற்றி பொய் என்கிறீர்கள்?"

"பொய்யென்று சொல்லவில்லை மன்னா! மெய்யானால் எந்த வகையில் காரியங்கள் நடைபெற வேண்டுமோ அந்த வகையில் நடக்கவில்லையென்றுதான் சொல்லுகிறேன். தங்கள் காலமுதல் நான் இங்கு அமைச்சுத் தொழில் பார்க்கிறேன். உங்கள் தந்தை காலத்திலும்

போர்கள் நடந்திருக்கின்றன. கோட்டைகள் பிடிபட்டிருக்கின்றன. கோட்டை பிடிபட்ட நாளிலிருந்து தினமொரு ஓலை வந்து கொண்டிருக்கும். தவிர, பிடிபட்ட எதிரிக் கோட்டையின் முக்கிய இலச்சினைகளை இருவீரர்கள் கொண்டு வருவார்கள். அவை தலைநகரில் வலம் வரும். மக்கள் மகிழ்ச்சி ஆரவாரத்துடன் அந்தப் பவனியில் கலந்து கொள்வார்கள். ஆனால் கோட்டாற்றுக்கரை வெற்றி மிக ரகசியமாயிருக்கிறது. வெற்றியைப்பற்றி ஓர் ஓலை வந்தது. பிறகு அதைப்பற்றிச் செய்தியில்லை. கிடைக்கும் செய்தி எரிபரந்தெடுத்தல், இவையெல்லாமே இயற்கைக்கு விரோதமாயிருக்கிறது மன்னவா! கோட்டாற்றுக் கரையில் மேற்கொண்டு என்ன நடக்கிறது என்பது தெளிவாகத் தெரியவேண்டும்" என்றார் முதலமைச்சர்.

முதலமைச்சர் உள்ள நிலைமையைத் தனது கூரிய அறிவு கொண்டு நன்றாக விமர்சித்து சந்தேகத்தையும் கிளப்பிவிட்டதால் மன்னனும் ஆழ்ந்த சிந்தனையில் இறங்கினான். "அப்படியானால் இங்கிருந்து ஒரு தூதனை அனுப்புவோமா?" என்று வினவினான் முதலமைச்சரை நோக்கி.

"அனுப்புவது நல்லது," என்றார் முதலமைச்சர்.

"சரி, ஒரு தூதனைக் கோட்டாற்றுக் கரைக்கு அனுப்பும். இடையே பாண்டியனை எதிர்க்க உத்தரவு அனுப்புகிறேன்." என்றான் மன்னன்.

"உத்தரவோடு துணைப்படையொன்றும் வடக்கு நோக்கி விரையட்டும்," என்று முதலமைச்சர் யோசனை சொன்னார்.

அப்படியே அனுப்பச் சம்மதித்தான் மன்னன். கோட்டாற்றுக் கரை நிலவரத்தை அறிந்துவர ராமவர்மனுக்கு ஓலையொன்று மன்னன் அறையிலேயே வரைந்து செய்தி கொண்டுவந்த ஒற்றனிடம் கொடுத்து, "வீரனே! இதை ராமவர்மனிடம் கொர்டுத்துப் பதில் வாங்கி வா. கோட்டாற்றுக் கரைக்கு மலை வழி மூலம் செல்லாதே. அங்கு எதிரிகளிடம் சிக்கிக்கொள்வாய். கடற்கரை ஓரமாகப் பயணம் செய்," என்றும் உத்தரவிட்டான்.



அதைப் பக்கத்திலிருந்து கேட்டுக்கொண்டிருந்த மன்னன் முதலமைச்சரை நோக்கி, "ஓலை யாருக்கு?" என்று வினவினான்.

"ராமவர்மனுக்கு."

"சிங்கணனுக்கு எழுதக்கூடாதா?"

"சிங்ணனைவிட ராமவர்மன் நம்பத் தகுந்தவன். தவிர சேர நாட்டு உபசேனாதிபதி, சேரநாட்டிடம் பக்தி கொண்டவன்."

"சிங்கணனை நீர் நம்பாத காரணம்?"

"பெண்களைக் களவாடுபவன் சிங்கணன். களவு, பொய் இக்குணங்கள் ஒன்றையொன்று விடுவதில்லை.

"எத்தனையோ அரசர்கள் பெண்களைக் களவாடியதில்லையா?"

"உண்டு. அவர்களே நேரிடையாகச் சென்று பெண்களைத் தூக்கி வந்தார்கள். மணம் புரிந்து கொண்டார்கள். அப்படிப்பட்ட விவாகம் ராட்சஸம் என்று அழைக்கப்படுகிறது. அதைத் தர்ம சாஸ்திரம் ஒப்புக்கொள்கிறது. ஆனால் இன்னொருவருக்காகப் பெண் திருடுபவன் தர்மத்தின் ஏடுகளில் இடம் பெறுவதில்லை."

மன்னன் அதற்குமேல் ஏதும் பேசவில்லை. தவிர எதிரே ஒற்றன் நின்றுகொண்டிருக்க அவன் முன்பு சிங்கணனைப் பற்றிச் சர்ச்சை செய்வதும் உசிதமாகப் படவில்லை வீரரவிக்கு. ஆகவே ஒற்றனை அனுப்பிவிட்டு, "முதலமைச்சரே! ஆதிமுதல் உங்களுக்குச் சிங்கணனைப் பிடிக்கவில்லை. ஆகையால் அவனைக் காமாலைக் கண்ணுடன் பார்க்கிறீர்கள்," என்று கூறினான். முதலமைச்சர் அதற்குப் பதிலேதும் சொல்லாமல் மன்னனிடம் விடைபெற்றுத் தமது இல்லம் சென்றார்.

அடுத்த நாளே பாண்டியன் சேர நாட்டு எல்லைகளைக் கொளுத்தும் செய்திதலைநகரெங்கும் பரவிவிட்டது. அடுத்த இரண்டு நாட்களில் கொளுத்தப்பட்ட எல்லைப் புறத்திலிருந்து தலைநகர் வந்த மக்கள் எரிபரந்தெடுத்தல் உண்மையே என்றும் கூறினர். ஆனால் அவர்கள் கூறியது மன்னனுக்குக் கோபத்தைவிட வியப்பையே விளைவித்தது. எல்லைப்புறக் குடிமக்களில் சிலரை அரண்மனைக்கு வர

வழைத்த மன்னன் அவர்களுக்கு முதலில் ஆறுதல் கூறினான். "குடிபெருமக்களே! நீங்கள் இழந்த அனைத்தையும் திரும்பப் பெறுவீர்கள். பாண்டியன் தீ வைக்கலாம், தலைநகர் நோக்கியும் முன்னேறலாம். ஆனால் அவன் வைத்த தீயில் விட்டிலென அவனே விழப் போகிறான். அதற்கு ஏற்பாடுகள் நடக்கின்றன" என்ற சேர மன்னன், "பாண்டியன் உங்களை மிகவும் துன்புறுத்தி விட்டானா?" என்றும் வினவினான்.

குடிமகனொருவன் மன்னனுக்குத் தலைவணங்கிச் சொன்னான், "இல்லை; துன்புறுத்தவில்லை," என்று.

மன்னன் பக்கத்தில் நின்ற முதலமைச்சரைப் பார்த்து சேனாதிபதியையும் நோக்கினான். பிறகு குடிமகனை நோக்கி, "துன்புறுத்தவில்லையா? உங்கள் கிராமங்களைக் கொளுத்துவதன் பொருள் என்ன?" என்று வினவவும் செய்தான்.

"பாண்டிய மன்னரின் முறை விசித்திரமாயிருக்கிறது" என்றான் குடிமகன்.

"என்ன விசித்திரம்?" என்று மன்னன் கேட்டான்.

"பாண்டியன் படைகள் திடீரென்று தாக்குவதுமில்லை. எதிர்பாராமல் ஊரைக் கொளுத்துவதுமில்லை. முதலில் பாண்டியப்படையின் முன்னணிவீரர் முரசறைவிக்கிறார்கள். அதன்படி கிராமத்தின் பெருந்தனக்காரர் இருவர் பாண்டிய மன்னரைச் சந்திக்கிறார்கள். அக்கிராமம் கொளுத்தப்படுமென்றும் ஆகவே முக்கியமாக வேண்டிய பொருள்களை எடுத்துக் கொண்டு தலைநகர் நோக்கிக் கிராம வாசிகள் செல்லலாமென்றும் மன்னர் அறிவிக்கிறார். கிராமத்தை ஒழிக்கவும், வயோதிகர்கள் குழந்தை குட்டிகள் சௌக்கியமாகச் செல்வதற்கும் பாண்டிய வீரர்கள் துணைபுரிகிறார்கள். எல்லோரும் கிராமத்தைவிட்டு அகன்ற பிறகு கிராமம் கொளுத்தப்படுகிறது. அங்கு கிராமப் பாதுகாப்பு வீரர்கள் இருந்தால் அவர்கள் ஆயுதங்கள் மட்டும் பறிக்கப்படுகின்றன. தலைநகர் பயணத்துக்கு வேண்டிய உடை, உணவு, இவை தாராளமாக அனுமதிக்கப்படுகின்றன." என்றான் குடிமகன்.





அவன் சொன்னதை மற்றவர்களும் ஆமோதித்தார்கள். கிராமத்தை விட்டு விரட்டிய பாண்டியனை அந்தக் குடிமக்கள் அப்போதும் பாராட்டியதைக் கண்டு கோபத்துக்குப் பதில் பெரும் வியப்பே அடைந்தான் மன்னன். முதலமைச்சருக்குக்கூடப் பாண்டியன் போக்கு விசித்திரமாயிருந்தது. ஆனால் அதைக் கேட்டுக் கொண்ட சேனாதிபதி முகத்தில் சிறிதளவும் வியப்பு இல்லை. திகில் மண்டிக் கிடந்தது. அந்தத் திகிலுக்குக் காரணத்தை அறியாத மன்னன் கேட்டான், "என்ன சேனாதிபதி" என்று.

"மிகப் பயங்கரம்" என்றான் சேனாதிபதி பதிலுக்கு.

"எது?" என்று வினவினான் மன்னன் மீண்டும்.

"எரிபரந்தெடுத்தல். அதன் விளைவு. இத்தனை பயங்கரமான போர் முறையைப் பற்றி இதுவரை நான் கேள்விப்பட்டதில்லை," என்றான் சேனாதிபதி.

"கிராமங்களைப் பாண்டியன் கொளுத்துவதைப் பற்றிப் பயப்படுகிறீரோ?"

"அதைப் பற்றியல்ல நான் பயப்படுவது."

"வேறெதைப் பற்றி?"

"போர் முறையைப் பற்றி. எல்லையைப் பாண்டியன் கொளுத்துவதால் விளையும் விபரீதத்தைப் பற்றி."

"என்ன விபரீதம் விளையக்கூடும்?" என்று கேட்டான் மன்னன் கோபத்துடன்.

மெல்ல மெல்ல விளக்கினான் சேனாதிபதி. அவன் விளக்கத்தைக் கேட்ட மன்னன் மட்டுமின்றி முதலமைச்சரும் அச்சத்துக்கு உட்பட்டார். எரிபரந்தெடுத்தலின் விளைவு அத்தனை விபரீதமாகவும் பயங்கரமாகவும் இருக்குமென்பது சேனாதிபதி விளக்கும்வரை அவர்கள் இருவருக்குமே புரியவில்லை. புரிந்த பின்பு அவர்கள் மனத்தில் சாந்தியில்லை.

அவர்கள் மன உளைச்சலைக் கண்ட சேனாதிபதி கடைசியாக ஒரு வார்த்தையும் சொன்னான்; "பாண்டியனை உடனடியாகச் சமாளிக்க நாம் ஏற்பாடு செய்யாவிட்டால் தலைநகரம் இன்னும் ஒரே மாதத்தில் எதிரி வசப்படும்," என்று திட்டவட்டமாக அறிவித்தான் சேனாதிபதி.

## அத்தியாயம் 24

# சத்திரத்துப் பேச்சு

எல்லைப்புற குடிமக்கள் பாண்டியன் கையாளும் எரிபரந்தெடுத்தல் முறையை விளக்கியதும் சேனாதிபதி பெருந்திகிலடைந்ததன்றி, அதன் விளைவு பயங்கரம் என்று கூறியதைக் கேட்ட மன்னன், முதலமைச்சர் இருவருமே வியப்படைந்தார்களென்றாலும், மன்னனே சேனாதி பதியை நோக்கிக் கேட்டான் முதலில், "இதில் பயங்கரம் என்ன இருக்கிறது?" என்று.

மன்னன் கேள்விக்குச் சேனாதிபதி உடனடியாகப் பதில் சொல்லவில்லை. எல்லைப்புறத்திலிருந்து வந்து நிலைமையை விளக்கிய குடிமகனையும் மற்றக் கிராமவாசி களையும் வெளியே செல்ல உத்தரவிட்டான். அவர்கள் சென்று பொது மண்டபக் கதவுகள் சாத்தப்பட்டதும் வீரரவியை நோக்கி, "பாண்டியன் மன்னன் கையாளும் முறை விசித்திரமாகத் தெரியவில்லையா உங்களுக்கு?" என்று வினவினான் சேனாதிபதி கவலை பாய்ந்த குரலில்.

"என்ன விசித்திரத்தைக் கண்டாய் சேனாதிபதி?" என்றான் மன்னன் ஏதும் புரியாமல்.

சேனாதிபதி மீண்டும் ஒரு கேள்வியை வீசினான். "நீங்கள் இத்தகைய போர் முறையில் ஈடுபட்டால் என்ன செய்வீர்கள்?" என்று.

"திடீரெனத் தாக்குவேன், கிராமங்களைக் கொளுத்தி விட்டு மேலே முன்னேறுவேன்," என்று கூறினான் மன்னன்.

"அதுதான் போர்முறை மன்னவா, கலிங்கம்கொண்ட கருணாகர பல்லவனும் அப்படித்தான் துரிதமாகப் போரிட் டிருக்கிறான். தவிர, போரில் துரிதம்தான் பயனளிப்பது.





படையெடுப்பவன். தற்காப்புக்குப் போராடுபவனுக்கு நினைக்கவும் நேரமளிக்கக் கூடாது," என்று சுட்டிக் காட்டினான் சேனாதிபதி.

"ஆம், ஆம். திடீரென எல்லைகளைத் தாக்கி எரிய விட்டு எதிரிக்கு அவகாசம் கொடுக்காமல் முன்னேறுவது தான் சம்பிரதாயப் போர்முறை" என்று ஒப்புக் கொண்டான் மன்னன்,

இதுவரை மௌனமாயிருந்த முதலமைச்சர் இடை புகுந்து, "ஆனால் பாண்டியன் முறை நேர் விரோத மாயிருக்கிறது," என்றான்.

சேனாதிபதி முதலமைச்சரை நோக்கித் தலையை அசைத்து, "ஆம் அமைச்சர் பெருமானே! நேர்விரோத மாயிருக்கிறது. ஒவ்வொரு கிராமத்திற்கும் முன்னெச் சரிக்கை செய்கிறான் பாண்டிய மன்னன். எல்லோரும் கிராமத்திலிருந்து நகர உதவுகிறான். கிராமக் காவலரைக் கூட அவன் சிறை பிடிப்பதில்லை. ஆயுதங்களைப் பிடுங்கிக் கொண்டு விட்டுவிடுகிறான். இப்படி ஒவ்வொரு கிராமத்தையும் பிடிப்பதால் பாண்டியன் ஆமை வேகத்தில் தான் நகர முடியும்," என்றான்.

"யானை தன் தலைமேல் தானே மண்ணைப் போட்டுக் கொள்கிறது," என்றான் வீரரவி.

"யானை என்று யாரைக் குறிக்கிறீர்கள்" என்று கேட் டான் சேனாதிபதி.

"பாண்டியனைத்தான்."

"பாண்டிய நாட்டில் யானைகள் அதிகம் கிடையாது. சேரநாடுதான் யானைகளுக்குப் பேர் போனது."

"என்ன சொல்கிறாய் சேனாதிபதி?"

"யானையின் தலைமேல் பாண்டியன் மண்ணைப் போடுகிறான்."

"நம் தலையிலா?"

"ஆம்."

"பாண்டிய மன்னனிடம் உமக்குப் பெருமதிப்புப் போலிருக்கிறது. அவன் பலத்தை அளவுக்கு மீறி மதிப்பிடு கிறீர்," என்று சீறினான் வீரரவி உதயமார்த்தாண்டவர்மன். அவன் முகத்தில் கடுமை விரிந்தது. கண்களில் கனல் தெறிந்தது.

மன்னனின் சீற்றத்தைச் சிறிதும் லட்சியம் செய்ய வில்லை. "மன்னர் பெருமானே! எதிரி பலத்தையும் அறி வையும் குறைத்து மதிப்பிடுவதில் பொருளில்லை," என்று சற்றுக் கடுமையாகக் கூறினார்.

"என்ன பலத்தை, அறிவை பாண்டியனிடம் கண்டு விட்டாய்?" என்று சீற்றம் மிகுந்த குரலில் கேட்டான் உதய மார்த்தாண்டவர்மன்.

சேனாதிபதி மன்னனை ஒரு வினாடி உற்று நோக்கி விட்டுக் கூறினான், "மன்னவா! நாட்டு நலத்தை முன்னிட்டு உண்மையைக் கூறுவது சேனாதிபதியின் கடமை. ஆகையால் சொல்கிறேன். கேளுங்கள். பாண்டியன் கிராமம் கிராமமாகக் கொளுத்துகிறான். கிராம மக்களில் ஒருவரைக்கூடக் கொல்வதில்லை. இந்தத் தலைநகருக்கு வர உதவுகிறான். அவன் முன்னேற முன்னேறக் கிராமம் கிராமமாகச் சூன்யப்பட்டு மக்கள் இங்கு வரத் தொடங் கினால், இன்னும் பதினைந்து நாட்களுக்குள் இந்தத் தலைநகரின் ஜனத்தொகை அளவுக்கு மீறிப் பெருகி, படைகள் நடமாடுவதுகூடக் கஷ்டமாகிவிடும். பரலிமாநகர் பெரிதுதான் மன்னவா. ஆனால் சேர நாட்டு மக்கள் அனைவரையும் ஒரு நகரம் தாங்க முடியாது. மக்கள் நகரத்தில் பெருகிவிட்டால் அவர்களுக்கு உணவு இருப்பிடம் இவ்வசதிகளைக் கவனிப்பதற்கும், போர்க்கால நோய்களைத் தடுப்பதற்குமே வீரர்களுக்கு வேலை சரியாயிருக்கும். போர்ச் சமயத்தில் எந்த உத்தரவையும் நாம் நிறைவேற்றுவது முடியாமற் போய்விடும். இந்தப் பரலிமாநகர் பெரும் மக்கள் நிறைந்த சந்தையாகித் திணறும்," என்று.

மன்னன் தீவிர சிந்தனையில் இறங்கினான். முதலமைச்சரும் சிறிது சிந்தித்தார். நிலைமை எத்தனை





சீர்கேடு அடைந்திருக்கிறது என்பதைப் புரிந்துகொண்ட தால், "இப்படிக் கிராமம் கிராமமாக மக்களை இங்கு பாண்டியன் அனுப்புவதால் அவனை நோக்கி இங்கிருந்து படைகள் முன்னேறுவதும் தாமதப்படும்," என்று சுட்டிக் காட்டினார் முதலமைச்சர்.

"ஆம் அமைச்சர் பெருமானே, வடக்கெல்லையி லிருந்து மக்கள் சாரி சாரியாக வரும்போது, படைப் பிரிவுகள் துரிதமாக முன்னேற முடியாது. பாதைகளில் மக்கள் கூட்டம் வேகத்தைத் தடை செய்யும்," என்று ஒப்புக் கொண்டான் சேனாதிபதி.

"ஆம், ஆம். பெருந்தொல்லைதான்," என்று முணு முணுத்தார் முதலமைச்சர்.

"அதுமட்டுமல்ல அமைச்சரே..." என்று இழுத்தான் சேனாதிபதி.

"வேறென்ன?" அதுவரையில் சிந்தனையில் ஆழ்ந் திருந்த மன்னன் அவர்கள் உடையாடலில் புகுந்தான் எரிச்சலுடன்.

"பெருங்கூட்டமாக மக்கள் நகருக்குள் உட்புகும் போது அவர்களில் யார் குடிமக்கள், யார் எதிரியின் ஒற்றர்கள் என்று கண்டுபிடிப்பதும் கஷ்டம்," என்றான் சேனாதிபதி.

"ஆம், ஆம். ஒற்றர்கள் உட்புக முடியும்," என்றார் முதலமைச்சர்.

"பரலிமாநகரில் குடிமக்கட் கூட்டத்தோடு ஒற்றர் களும் கலந்துவிட்டால் தலைநகரில் பலவீனம் அளவிடத் தகாது," என்றான் சேனாதிபதி.

"பாண்டியனைப் பாராட்டியது முடிந்துவிட்டதா இல்லையா?" என்று மன்னன் கேட்டான் சினம் குரலில் பொங்கி வழிய.

"இன்னும் ஒன்றிருக்கிறது," என்று மெள்ளக் கூறினான் சேனாதிபதி.

"அதையும் பாடிவிடு, புகழ்பாட நீ கவிஞனாயிருக்க லாம்," என்றான் மன்னன்.

“அப்பபடியாகியிருந்தால் பாண்டியன் விளைவிக்கும். இந்தத் தொல்லையில் நான் சிக்கியிருக்க மாட்டேன்,” என்று பதிலுக்கு இடித்துக் கூறிய சேனாதிபதி, “பாண்டியன் புகழை நான் பாட வேண்டியதில்லை மன்னவா! அவனால் உணவும் உடையும் வசதிகளும் பெற்று வந்திருக்கும் சேர நாட்டுக் குடிமக்களே பாடுவார்கள். பாண்டியன் தங்களை நடத்திய முறையைக் குடிமக்கள் வர்ணித்ததைத் தாங்களே கேட்டீர்கள். அவன் வர்ணித்தபோது முகத்திலும் குரலிலும் விளங்கிய சந்துஷ்டியைக் கவனித்தீர்களா? இங்கு வரும் குடிமக்கள் அவனைப்பற்றி நல்லெண்ணத்துடன் வருவார்கள். அது இன்னும் ஆபத்து நமக்கு. நாம் எதிரியிடமிருந்து பாதுகாக்க வேண்டிய பெரு நகரில் எதிரியிடம் அன்பும் மதிப்பும் கொண்ட மக்கள் இருந்தால், அவர்கள் இங்குள்ள மற்றவர்களிடமும் பாண்டியன் பெருமையைப் பரப்புவார்கள். பாண்டியன் மகள் நம்மிடமிருப்பதால் எதிரிமீது அனுதாபமும் அதிகரிக்கும். இத்தகைய மக்களை மடியில் கட்டிக்கொண்டு போராடுவது பூனையை மடியில் கட்டிக்கொண்டு சகுனம் பார்ப்பது போலாகும்,” என்று விளக்கினான் உள்ள நிலையை.

சேரமன்னன் சிறிது நேரம் மௌனம் சாதித்தான். பிறகு கேட்டான், “உள்ள ஆபத்தை விளக்கிவிட்டீர்களா சேனாதிபதி! இதற்குப் பரிகாரம் ஏதாவது தெரியுமா?” என்று.

“இருக்கிறது மன்னவா,” என்றான் சேனாதிபதி சிறிதும் சளைக்காமல்.

“என்ன பரிகாரம்? எல்லைப்புற மக்களை மேலும் தலைநகருக்குள் வராமல் தடுக்கலாமா?” என்று வினவினான் மன்னன்.

“வராமல் தடுப்பது அவர்கள் விரோதத்தைச் சம்பாதிப்பதாகும். அது அல்ல மன்னவா வழி. நகருக்குள் இதுவரை வந்தவர்களையும் இனி வரப் போகிறவர் களையும் நகருக்குத் தெற்கேயுள்ள கிராமங்களிலும்





காடுகளிலும் அனுப்பி, போர் முடியும்வரை வசிக்கச் செய்யலாம். இந்தப் புதுக் கூட்டங்களைத் தாங்கும் கிராமப் பெருமக்களுக்கு அதிக மான்யங்களை வழங்கலாம். இப்படிச் செய்தால் வடக்கிலிருந்து வரும் மக்கள் தெற்கே சென்றுவிடுவார்கள். தலைநகரம் கூட்டத்தால் திணறாது. நகருக்குள் கூட்டம் நுழைய நுழைய நாம் வெளியில் அனுப்பிக் கொண்டேயிருந்தால், வெளியில் அவர்கள் வாழ வழி செய்துவிட்டால், தலைநகரப் பிரச்சனை தீர்ந்துவிடும். இந்தக் கூட்டத்தில் யாராவது ஒற்றர்கள் கலந்து வந்தாலும் அவர்களும் கூட்டத்தோடு தலைநகரை விட்டு வெளியேற வேண்டியிருக்கும். அப்படிச் சிலர் கும்பலிலிருந்து விலக முயன்றால் வரும் கூட்டத்தை ஒழுங்கு செய்து அனுப்பும் நமது வீரர்கள் அவர்களை உடனடியாகச் சிறை செய்வார்கள். அப்படி நம்மிடம் சிக்குபவர்களை நாம் விசாரிக்கலாம்,” என்றான் சேனாதிபதி.

“நல்லது சேனாதிபதி! நல்லது!” என்று சிலாகித்தான் மன்னன்.

“அத்துடன் கோட்டாற்றுக்கரை உண்மை நிலையும் தெரிந்தால் சிங்கணனைப் பாண்டியர்களைப் பின்புறத்தில் தாக்க உத்தரவு அனுப்பலாம். நமது கடற்படை திரும்பி வந்ததும் அதை மீண்டும் வடக்கே ஒரு காதம் போகவிட்டு அதன் வீரர்களில் ஒரு பகுதியைத் தரையில் இறக்கி, பாண்டியனை நோக்கி நகரச் சொல்லலாம். இப்படிச் செய்தால் வடக்கே, பாண்டியன் பின்புறம் சிங்கணன் பெரும் படையும், மேற்கே அவன் இடைப்பக்கம் நோக்கிக் கடற்படை வீரர்களும் நகருவார்கள். பாண்டியப் படையின் முதுகும் இடையும் ஏககாலத்தில் தாக்கப்படும். அதே சமயத்தில் தலைநகரப் படையின் ஒரு பிரிவுடன் நானும் தலைநகரிலிருந்து வெளியேறி அரைகாதத்திற்கு முன்பே பாண்டியனை எதிருக்கு எதிராகச் சந்திப்பேன்,” என்று தனது போர் முறையை விளக்கினான் சேனாதிபதி.

இந்த விளக்கத்தைக் கேட்டதும் வீரரவியின் காமக் கண்கள் அகல விரிந்து வீரத்தைக் கொட்டின. வியப்பையும்

சிந்தின. சேனாதிபதியை நோக்கிய கண்களில் பெருமையும் விரிந்தது. "சேனாதிபதி! இதைவிடச் சிறந்த போர்த் திட்டத்தை என்னாலும் வகுக்க முடியாது," என்று பாராட்டினான் வாய்விட்டு வீரரவி. "என்ன முதலமைச்சரே, உமது கருத்து என்ன?" என்று வினவினான் உற்சாகத்துடன்.

முதல்மைச்சர் முகத்தில் அத்தனை உற்சாகம் துலங்கவில்லை. "போர்த் திட்டம் சிறந்ததுதான். நகரத்தில் கூட்டம் மிகைப்படாதிருக்க சேனாதிபதி சொன்ன வரையில் சரிதான். ஆனால் மேற்கொண்டு பாண்டியனை எதிர்க்கும் திட்டம் நிறைவேறுவது வீரபாண்டியனைப் பொறுத்தது," என்றார் முதலமைச்சர்.

"என்ன! வீரபாண்டியனையா?" என்று கேட்டான் மன்னன்.

"ஆம் மன்னவா. வீரபாண்டியன் சரணடைந்திருந்தால் சிங்கணன் பாண்டியனைப் பின்புறத்தில் தாக்க முடியும். அப்பொழுதுதான் கடற்படை வீரர்களை கொண்டு இடையில் தாக்கச் சேனாதிபதி வகுத்திருக்கும் திட்டமும் பயனளிக்கும். அந்த இரண்டு தாக்குதல்களும் இருந்தால்தான் சேனாதிபதியும் தலைநகரைவிட்டு வெளியேறிப் பாண்டியனை எதிர்கொள்ள முடியும்," என்றார் முதலமைச்சர்.

"அப்படியானால் கோட்டாற்றுக்கரை பிடிபட்டதாகவும் வீரபாண்டியன் சரணடைந்துவிட்டதாகவும் சிங்கணன் அனுப்பிய ஓலை பொய்யென்கிறீரா?" என்றான் மன்னன் சினத்துடன்.

"அது மெய்யென்பது தெரியவேண்டும். அது மெய்யானால் அதற்கான அறிகுறிகள் பாண்டியன் நடவடிக்கையில் தெரிய வேண்டுமென்று முன்னமே சொன்னேன்," என்று சுட்டிக் காட்டினார் முதலமைச்சர். அத்துடன் நிற்காமல் மேலும் சொன்னார், "ராமவர்மனுக்கு நான் அனுப்பியிருக்கும் ஓலைக்குப் பதில் வரட்டும். பிறகு உள்ள நிலைகொண்டு திட்டம் வகுப்போம்," என்று.

"அதுவரை?" சேனாதிபதி கேட்டான் கோபத்துடன்.





"நீங்கள் முன்பு சொன்னது போல் நகரத்தில் கூட்டம் பெருகாமல் பார்த்துக் கொள்ளுவோம்," என்றார் முதலமைச்சர்.

"உமது ஓலைக்குப் பதில் வராது போனால்?" மன்னனும் கோபத்துடன் கேட்டான்.

"தூதுவன் இடையில் யாராலும் பிடிக்கப்படாமல் சென்றால் கண்டிப்பாகப் பதில் கிடைக்கும்."

"பிடிபட்டால்?"

"பதில் வராது."

"பிடிபட்டான் என்பது எப்படித் தெரியும்?"

"அவனுக்குப் போய்வர நான்கு நாள் அவகாசம், அதற்குள் வரவில்லையானால் பிடிபட்டதாக வைத்துக் கொண்டு மேற்கொண்டு செய்யவேண்டியதை யோசிப்போம்," என்றார் முதலமைச்சர்.

அந்த யோசனைக்கு மன்னனும் இசைவு தெரிவித்தான். அவ்விருவர் யோசனையையும் சேனாதிபதி ஏற்கவில்லை; 'போரில் வீண் ஆலசியம் கூடாது மன்னவா," என்றான் சேனாதிபதி.

மன்னன் முதலமைச்சரை நோக்கினான். முதலமைச்சர் முறுவல் கொண்டார். "சேனாதிபதி! ஒரு வேளை வீரபாண்டியன் சரணடையாதிருந்தால் உமது திட்டம் என்ன ஆகும்? போயிருக்கும் கடற்படைதான் இங்கு திரும்ப முடியுமா? அல்லது சிங்கணன்தான் முற்றுகையைக் கைவிட்டுப் பாண்டிய மன்னன் முதுகைத் தாக்க வர முடியுமா?" என்று வினவினான்.

இது இரண்டும் முடியாதென்பது சேனாதிபதிக்குத் தெரிந்திருந்ததால், "திட்டத்துக்குக் குறை சொல்லுவது எளிது. மாற்றுத் திட்டம் ஏதாவது இருக்கிறதா முதலமைச்சரே?" என்று கேட்டான்.

"இருக்கிறது."

"என்ன அது?"

"நிதானித்தல்."

"அதுவரை?"

"நகரத்தின்மீது ஒரு கண்ணை வைத்திருத்தல். ஒற்றர்கள் உட்புகுந்தால் சிறை செய்தல். வெளியில் ஒற்றர்களையும் அனுப்பி நிலைமையை ஆராய்தல். படைப் பிரிவுகளை என்றும் கிளம்பும் நிலையில் சன்னத்தமாக வைத்திருத்தல்."

இதற்குமேல் சேனாதிபதி பேசவில்லை. மன்னனை நோக்கினான். மன்னன் சொன்னான், "முதலமைச்சர் சொல்கிறபடி நிதானிப்போம். சேனாதிபதி, எதற்கும் நகரத்தின் வெளிப்புறத்திலும் ஒரு கண்ணை வைத்திரு," என்றான் மன்னன்.

அடுத்த இரண்டு நாட்களுக்குள் பரலிமாநகரில் கெடுபிடி நூறு மடங்கு அதிகப்பட்டது. மக்களின் இரவு நடமாட்டம் அடக்கப்பட்டது. வெளியிலிருந்து வரும் மக்களை வரிசை வரிசையாகத் தென்புறம் அனுப்பிக் கொண்டிருந்தார்கள் புரவிப் படைவீரர். யாரும் நகருக்குள் நுழைவது கடினமாயிற்று அதைப்பற்றி மக்கள் அன்னச் சத்திரங்களிலும், இதர ரகசியமான விடுதிகளிலும் பேசவும் முற்பட்டார்கள். அத்தகைய உரையாடலொன்று பரலிமாநகரின் தென்புறத்திலிருந்த சிறு சத்திரமொன்றிலும் மறுநாளைக்கு மறுநாள் நிகழ்ந்துகொண்டிருந்தது. சத்திரத்துக் கூடத்தின் மூலையில் இருட்டடித்த இடத்தில் உணவருந்திக் கொண்டிருந்த இருவர் மக்களின் அந்த உரையாடலை ஊன்றிக் கேட்கவும் முற்பட்டார்கள். அந்த இருவர் முக்காடிட்டு முகத்தைப் பெருமளவு மறைத்துக் கொண்டிருந்தார்கள். சத்திரப் பேச்சின் ஆரம்பத்தில் சற்று முகத்தை நிமிர்த்திய இருவரும் உரையாடல் அதிகப்பட அதிகப்பட அதைக் கேட்பதில் முனைந்துவிட்ட படியால் கலத்திலிருந்த உணவை அருந்துவதையும் மறந்தார்கள். உணவைவிடச்சத்திரத்துப் பேச்சு அத்தனை இன்பமாயிருந்தது அவர்கள் செவிகளுக்கு.



## அத்தியாயம் 25

# அராபியர் இருவர்

இயற்கை ஏராளமாக அள்ளிக் கொட்டிய காரமிளகையும், நெசவாளர் கைத்திறனில் விளைந்த செயற்கைப் பட்டையும் ரோமாபுரி மாதர் விரும்பியதன் விளைவாக, யவனவரும் அராபியரும் அவற்றைப் பெறுவான் வேண்டி, கொண்டு குவித்த பொற்காசுகள் நிரம்பி வழிந்ததால், திருவின் தாண்டவம் எங்கும் தெரிந்ததன் காரணமாகத் திருவாழுங்கோடு என்று பிரசித்தி பெற்றிருந்த பரலிமாநகரத்திலிருந்து குமரிக்குச் செல்லும் பாதையில், அம்மாநகரின் தெற்குக் கோடியிலிருந்தது அந்தச் சிறு சத்திரம்.

பரலிக்கு வரும் வெளிநாட்டார் தங்குவதற்கு வசதியும் உண்ண உதவும் அளிக்கச் சேர மன்னர்கள் பல தலைமுறைகளுக்கு முன்பு கட்டிய சத்திரங்களில் அந்தச் சிறுசத்திரமும் ஒன்றானாலும், பரலியிருந்து குமரிக்குச் செல்லும் பாதையில் அது இருந்தபடியாலும் குமரியில் வெளிநாட்டு வர்த்தகம் அதிகமில்லாத காரணத்தாலும், அந்தச் சத்திரத்தில் சாதாரணமாகக் கூட்டம் அதிகமிருப்பதில்லை. கடலோர வணிகர் விடுதிகளிலும், சற்று உள்ளடங்கி நகரின் நடுவிலிருந்த மற்றும் சில சத்திரங்களிலுமே சாதாரண நாட்களில் கூட்டமிருப்பது வழக்கம். அந்த விடுதிகளிலும் சத்திரங்களிலும் இடமில்லாத சமயங்களிலேயே தெற்குக் கோடியிலிருக்கும் இந்தச் சிறு சத்திரத்துக்கு வணிகர்கள் வருவார்களாதலால், அப்படி வரும் வணிகர்கள் தொகை மிகக் குறைவாகவே இருக்கும். வாணிபத்துக்கன்றி வேறு காரணங்களுக்காகப் பயணம் செய்பவர்களும் அங்கு தங்குவது குறைவு.

ஆனால் இந்தச் சாதாரண கால நிலைக்கு முற்றிலும் புறம்பான நிலை சேனாதிபதியின் திட்டத்துக்குப் பிறகு தலைநகரில் இருந்ததால், சத்திரத்தில் அன்று அளவுக்கு மீறியகூட்டம் இருந்தது. சத்திரத்தில் உள்ள கூட்டத்தில் முக்கால்வாசி, பாண்டியனின் 'எரிபரந்தெடுத்தல்' போர் முறையால் கிராமங்களிலிருந்து வெளிப்பட்டு வந்தவர்களாதலால், சத்திரத்தின் உணவு மண்டபத்தில்கூட மூலைகளில் மூட்டை முடிச்சுக்கள் நிரம்பிக் கிடந்தன. மக்கள் ஆங்காங்கு கூட்டம் கூட்டமாக உட்கார்ந்து நானாவிதமாகப் பேசிக்கொண்டிருந்ததால், சத்திரத்தின் சூழ்நிலை கடைவீதியின் சூழ்நிலையைத் தூக்கியடித்தது.

கூச்சல் நிரம்ப இருந்த அந்தச் சூழ்நிலையில், கூட்டத்தில் கலக்காமல் தீபஒளி வீசாத இருட்டடித்த மூலையில் முக்காடிட்டு உட்கார்ந்திருந்த இருவர் கலங்களிலிருந்த உணவை நிதானமாகவே அருந்திக் கொண்டிருந்தாலும், அவர்களிடமிருந்து நாலைந்து முழம் தள்ளி உட்கார்ந்திருந்த நான்கு பேர்கள் உரையாடல் மட்டும் அவர்கள் கவனத்தை இழுக்கவே, அவர்களிருவரும் உணவருந்துவது போல் பாசாங்கு செய்துகொண்டு உரையாடலைக் கேட்க முற்பட்டார்கள்.

சற்றுத் தள்ளியிருந்த நான்கு பேர்களில் ஒருவன், "இத்தனை கூட்டத்தை இந்தச் சத்திரத்தில் என்றாவது பார்த்திருக்கிறாயா?" என்று வினவினான்.

"திருவிழாக் காலங்களில் பார்த்திருக்கிறேன்," என்றான் மற்றொருவன்.

"இப்பொழுது நடப்பது திருவிழாவல்லவே? அதற்கு நேர்மாறானதல்லவா நடக்கிறது?" என்றான் இன்னொருவன்.

"ஆம், ஆம்." என்றான் முதலில் உரையாடலைத் துவக்கியவன்.

"இப்படி எல்லாக் கிராமங்களிலிருந்தும் மக்கள் வந்தால் இந்நகரம் தாங்குமா?" என்றான் இரண்டாமவன்.

"தாங்காதென்பது சேனாதிபதிக்குத் தெரியும்," என்றான் முதல்வன்.



"தெரிந்து என்ன செய்யப் போகிறார்?" என்று கேட்டான் அலுப்புடன் இன்னொருவன்.

"நாளை முதல் என்ன நடக்கிறது பார்," என்றான் முதல்வன்.

இதைக் கேட்ட மற்ற மூவரும் தலைநிமிர்ந்து முதல்வனை ஊன்றிப் பார்த்தார்கள். "என்னப்பா நடக்கும்?" என்று மற்ற மூவரும் ஏககாலத்தில் கேட்கவும் செய்தார்கள்.

"ரகசியத்தைக் காக்க உங்களால் முடியுமா?" என்றான் முதல்வன், தான் முக்கியஸ்தன் என்ற தோரணையில் சற்றுப் பெருமையுடன் மற்றவர்களை நோக்கி.

"ஏன் முடியாது?"

"நாங்கள் மூச்சுவிட மாட்டோம்."

"சொல்லப்பா. நீ அரண்மனையில் இருப்பதால் உனக்குத்தான் தெரியும்"

இப்படி மூவரும் கெஞ்சவே முதல்வன் சற்றுத் தனது சகாக்களை நோக்கிக் குனிந்து, "வருகின்ற கும்பலை நகரத்தை விட்டு வெளியேற்றப் படைகளுக்கு ரகசிய உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது," என்றான்.

"அப்படியா!" மற்ற மூவரும் வியப்புடன் வினவினார்கள்.

"ஆம். இன்று நாளைக்குள் நகரத்திலிருந்து இந்தக் கும்பல் வெளியேறிவிடும். அதுமட்டுமல்ல இனி வரும் கும்பலைச் சூட்டோடு சூட்டாக வெளியேற்றி விடவும் உத்தரவு இருக்கிறது. இப்பொழுதுகூடச் சத்திரத்தின் மாடியிலிருந்து பார்த்தால் மக்கள் வரிசை நதிப்பிரவாகம் போல் தெற்கு நோக்கிப் போய்க் கொண்டிருப்பதைப் பார்க்கலாம்," என்றான் முதல்வன்.

"அதனால்தான் குதிரை வீரர் அணிவகுப்புக் கிடையே மக்கள் வருகிறார்களா?" என்று கேட்டான் ஒருவன்.

"ஆம்."

"அப்படியானால் இந்தச் சந்திரத்திலிருப்பவர்கள் என்றைக்கு வெளியேற்றப்படுவார்கள்?"

"இன்னும் ஒரு நாளையில். இவர்களெல்லாம் முன்னமே வந்து தங்கிவிட்டவர்கள். இருப்பினும் எந்த வினாடியிலும் படைவீரர்கள் வந்து இவர்களைக் கிளப்பி விடலாம்."

"அப்பொழுது சத்திரம் காலியாகிவிடும்?"

"ஆம். அதுமட்டுமல்ல, இங்கு தங்கும் யாராயிருந்தாலும் அவர்கள் கண்காணிக்கப்படுவார்கள்."

"ஏன்?"

"இந்தக் கூட்டத்தில் பாண்டியன் ஒற்றர்களும் கலந்து கும்பலோடு கும்பலாக நகரத்துக்குள் நுழையலாமென்று சேனாதிபதி நினைக்கிறார்."

"அப்படியானால் இங்கு தங்குவது ஆபத்து என்று சொல்!"

"ஆம். மிகவும் ஆபத்து."

இந்தச் சமயத்தில் சம்பாஷணை சிறிது நின்றது. "அரண்மனையில் வேலை பார்ப்பதால் உனக்கு இத்தனையும் தெரிகிறது. எங்களுக்கு என்ன தெரிகிறது?" என்றான் மற்ற மூவரில் ஒருவன் முதல்வனைப் பார்த்து.

அந்தப் பாராட்டுதல் அரண்மனைக் காவலனின் பெருமையைக் கிளறிவிடவே மேலும் அவன் வாய்மடை திறந்தது. "அதுமட்டுமல்ல தம்பி!" என்று துவங்கினான் அவன்.

"வேறென்னப்பா?" மூவரிலொருவன் ஆசையுடன் கேட்டான்.

"பாண்டியன் மகளைச் சிறையெடுத்திருக்கிறாரே மன்னவர்..." என்ற அரண்மனைக் காவலன் சற்றுப் பயத்துடன் முன்னும் பின்னும் பார்த்து மூலையில் உட்கார்ந்திருந்த இருவரை நோக்கியதும், "யாரோ அந்த மூலையில் இருக்கிறார்கள்" என்று கூறி வாயை மூடிக் கொண்டான்.





அதுவரை உணவருந்துவதைவிட்டு உரையாடலைக் கவனித்துக் கொண்டிருந்த இருவரும் மீண்டும் கலத்தை நோக்கி உண்ணுவதுபோல் பாசாங்கு செய்தனர். அதைச் சுட்டிக் காட்டிய ஒருவன் சொன்னான், "அவர்கள் அராபியர், தமிழ் தெரியாது" என்று.

"உனக்கெப்படித் தெரியும்?" அரண்மனைக் காவலன் கேள்வியில் சந்தேகம் ஒலித்தது.

"இத்தனை செய்திகளை நீ சொல்லும்போது தமிழ் தெரிந்தவனாக இருந்தால் தலைகுனிந்து உணவருந்தவா செய்வான்?" என்று மற்றவன் ஊக்கவே முதல்வன் பேச ஆரம்பித்து, "பாண்டியர் மகளை அரசர் கடற்கரை மாளிகைக்குத் திரும்ப அனுப்பவில்லை. அரண்மனையிலேயே சிறை வைத்திருக்கிறார்," என்றான்.

"ஏனாம்?"

"செண்டுவெளியில் ஒருவன் தப்பியோடி விட்டானே..."

"ஆம்."

"அவன் வந்து பாண்டியர் மகளை மீட்க முயலலாமென்று அரசர் அவளை அரண்மனையில் பலமான காவலில் வைத்திருக்கிறார்."

"பலமான காவலென்றால்?"

"அரண்மனையில் மேற்புற வாசலுக்கருகில் அரண்மனையின் கடைசிக் கட்டு இருக்கிறதல்லவா?"

"ஆம்."

"அங்குதானிருக்கிறாள் பாண்டியகுமாரி. அங்கு சுமார் நூறு வீரர்கள் மாற்றி மாற்றிக் காவல் புரிகிறார்கள். அரசர் உத்தரவின்றி யமன்கூட அங்கு நுழையமுடியாது. நேற்று வரை சிறையில் தள்ளப்பட்டிருந்த குருநாதரும் அந்த இடத்துக்கு அனுப்பப்பட்டிருக்கிறார்," என்றான் அரண்மனைக் காவலன்.

"குருநாதரைச் சிறை செய்ய மன்னனுக்குத் துணிவு வேண்டும்," என்றான் மற்ற மூவரில் ஒருவன்.

"போதாத காலம் வந்தால் எதற்கும் துணிவு வரும்," என்ற அரண்மனைக் காவலன், "இதைப் பற்றி நாம் பேசினால் மன்னன் நம்மையும் சிறையில் தள்ளுவான். உணவை முடித்துக் கொள்ளுங்கள். செல்வோம்" என்றும் கூறினான்.

அதற்கு மேல் அந்த நால்வரும் பேசவில்லை, உணவை முடித்துக்கொண்டு செல்லப் புறப்பட்டார்கள். அரண்மனைக் காவலன் மட்டும் உணவருந்தி முடிந்ததும் சத்திரத்தின் வாயிலை நோக்கிச் சென்றான். அவ்வளவுதான். மூலையில் முக்காடிட்டிருந்த இருவரும் தட்டில் அவசர அவசரமாகக் கை கழுவி நீளமாக நாற் புறமும் தொங்கிய தங்கள் அராபிய உடையில் துடைத்துக் கொண்டு, அந்த அரண்மனைக் காவலனைத் தொடர்ந்து சென்றார்கள். அவர்கள் வாயிலில்வந்ததும் சற்றுத் தூரத்தில் கண்ணுக்குத் தென்பட்ட அக்காவலனைத் தொடர்ந்தனர். அரண்மனைக் காவலனும் சத்திரத்துக்குப் பின்புறமிருந்த பாதையில் திரும்பி அரண்மனை நோக்கிச் சென்ற தெருவில் சென்றான்.

அவன் நடையில் பெருமை இருந்தது. கால்களை வீசி அனாயாசமாகத் தலையை நிமிர்ந்து நடந்து சென்றான். அந்த உற்சாகத்தினாலும் தெரு நடுவில் கும்பல் சென்று கொண்டிருந்தபடியாலும் பின்னால் நிழல்போல் தொடர்ந்து வந்த இருவரைக் கவனிக்காமலே கைகளை வீசி நடந்த அரண்மனைக் காவலன், தன்மீது பலமாக உரசிக் கொண்டே ஒருவன் சென்ற பின்பே சற்றுச் சுரணை வந்த தால், "யார் நீ? மாடு போல் மோதுகிறாய்." என்று சீறினான்.

அவனை உரசியவன் அரபுநாட்டு மொழியில், "மன்னிக்க வேண்டும், கவனிக்கவில்லை," என்று சொல்லிக் கையைப் பூமியில் தொட்டுச் சிரம்தாழ்த்தி வணங்கிவிட்டுச் சென்றான்.

அப்படி அவன் வேகமாக இடித்துக்கொண்டு சென்றாலும் முன் சென்றதும் நடையைத் தளர்த்திக்



கொண்டதையும் நிதானமாக நடக்க முற்பட்டதையும் கண்ட அரண்மனைக் காவலனுக்குச் சந்தேகம் ஏற்படவே பின்னால் திரும்பி நோக்கினான். பின்னும் ஓர் அராபியன் தன்னைத் தொடர்ந்து வருவதைப் பார்த்ததும், சற்று வேகமாக நடக்கத் துவங்கினான். அவன் வேகமாக நடக்கத் துவங்கியதும் அவன் அடி ஓசை கேட்டதனாலோ என்னவோ முன்சென்ற அராபியனும் துரிதமாக நடந்தான். பின்வந்தவனும் துரித நடை போட்டான்.

அரண்மனைக் காவலனின் சந்தேகம் தெளிந்து விட்டது. அந்த இருவரும் தன்னைக் காரணமாகவே தொடர்ந்து வந்திருக்கிறார்களென்பதையும், இப்பொழுது அவர்கள் தனக்கு முன்னும் பின்னும் இருப்பதால் தான் அவர்கள் கைக்குள் சிக்கியிருப்பதையும் உணர்ந்தான். ஆகவே அவன் சற்று நிதானத்துடனேயே மீண்டும் நடக்க முற்பட்டான்! இப்படித் தெரு முழுவதும் காவல் வீரரும் மிக அதிகமாய் இருந்ததால் துணிவு கொண்டு சரேலென நடுவீதிக் கும்பலை அடைந்து அதில் கலந்து கொண்டான்.

தெரு சற்றுக் குறுகலானதால் ஜனநெருக்கம் அதிகமா யிருந்தது. இத்தகைய கும்பலில் கலந்துவிட்ட அரண்மனைக் காவலன் நிம்மதிப் பெருமூச்சு விட்டான். அப்பொழுதும் வீதியோரமாகத் தன்னைப் பாாத்துக்கொண்டே வந்திருந்த அராபியனை வீரர்களிடம் காட்டிக் கொடுத்துவிட்டால் தனது ஆபத்து நீங்கியது என்று தீர்மானித்த அரண்மனைக் காவலனுக்கு மனநிம்மதியோடு மனமகிழ்ச்சியும் ஏற் பட்டது.

அப்பொழுது தனக்கு நேர் எதிரில் அடுத்த தெரு முனையில் நின்றுகொண்டிருந்த இரு புரவி வீரர்களுக்குச் சமிக்ஞை செய்யக் கை உயர்த்த முற்பட்டான். கை உயர வில்லை. சற்று உயர முற்பட்ட கை சட்டென்று கீழேயே விழுந்தது. அரண்மனைக் காவலன் மார்பு படபடவென்று அடித்துக்கொண்டது. பின்னால் வந்த அராபியன் கூட்டத் தில் தன்னுடன் மிக நெருங்கி நிற்பதையும், அவன் உடல் தன் உடலுடன் அழுந்தி நிற்பதையும் புரிந்துகொண்ட

அரண்மனைக் காவலன் திகிலடைந்தான். அந்தத் திகிலை அதிகப்படுத்த அவன் முதுகை, அராபியன் சீலைக்குள் மறைந்திருந்த கத்தியின் முனை தடவிக் கொண்டிருந்தது. "பேசாமல் நட. சைகை எது செய்தாலும் அடுத்த சைகை செய்ய முடியாது," என்று அவன் காதுக்கருகில் பயங்கரச் சொற்கள் ஒலித்தன.

அரண்மனைக் காவலன் பேசாமல் நடந்து சென்றான். அதற்குப் பிறகு அரண்மனைக் காவலனை அவன் முதுகிலிருந்த கத்தி முனையும் அராபியனின் கையெழுத்துமே திருப்பிச் சென்றன. சூத்திரப்பாவையென நடந்து சென்ற அவன் சற்று நேரத்திற்கெல்லாம் ஒரு மலைப் பாதையின் சரிவில் காட்டுக்குள் இறக்கிச் செல்லப் பட்டான். அதற்குள் முன் சென்ற அராபியனும் தனது நண்பனுடன். சேர்ந்து கொள்ளவே இருவருக்கிடையிலும் நண்பன்போல் நடந்து சென்ற அரண்மனைக் காவலன் பக்கத்திலிருந்த காட்டுக்குள் அழைத்துச் செல்லப்பட்டான். ஒரு மரத்தடிக்கருகில் வந்ததும் அராபியரில் ஒருவன் சொன்னான் காவலனை நோக்கி, "நண்பரே! இனி நாம் நிதானமாகப் பேசலாம்" என்று.

"யார் நீ?" காவலன் கேள்வி கிலியுடன் வெளிவந்தது. பதிலுக்கு முக்காட்டை எடுத்தான் அராபியன்.

காவலன் முகத்தில் பீதி எல்லையற்றுப் பரவியது. "நீயா!" என்ற ஒற்றைச் சொல் கிலியுடன் தோய்ந்து உதிர்ந்தது. "அது யார்?" என்று அடுத்த கேள்வியும் நடுங்கிய குரலில் வெளிவந்தது அரண்மனைக் காவலனிடமிருந்து.

"என்னைவிட அவர் உனக்குத் தெரிந்தவர்," என்ற முதல் அராபியன் மற்றவனை முக்காட்டை நீக்கச் சொன்னான்.

அவ்வளவுதான். காவலன் முகத்திலிருந்து கிலி நீங்கி, பிரமிப்பு அந்த இடத்தை ஆட்கொண்டது.

## அத்தியாயம் 26

# மைத்துனி வந்தாள்

அரபு உடை அணிந்த அந்த இருவரும் தன்னைத் தெருக் கூட்டத்திலிருந்து மிகச் சாமர்த்தியமாக விலக்கிக் காட்டுக்குள் அழைத்து வந்ததுகூட அளிக்காத கிலியையும் வியப்பையும் அரண்மனைக் காவலனுக்கு அவர்கள் முகங்கள் அளித்ததென்றால் அதற்குக் காரணம் இருக்கவே செய்தது. தான் சற்றும் சொப்பனத்தில்கூட நினைக்காத இருவர் அராபிய உடைக்குள் புகுந்திருந்ததை அரண் மனைக் காவலன் எப்படித்தான் எதிர்பார்த்திருக்க முடியும்? திருவிதாங்கூர் இருந்த அமைப்பில் தன்னைக் காட்டுக்குள் கொண்டு வருவது பெரும் பிரமாதமில்லை என்பதை அரண்மனைக் காவலன் உணர்ந்து கொள்ளவே செய்தான். ஆனால் அந்த இருவர் அந்த நகரில் உலாவுவதே பெரும் பிரமிப்பாயிருந்தது அவனுக்கு.

திருவிதாங்கூரின் அமைப்பை இன்று பார்த்தால் கூட அதில் காட்டுக்குள் யாரைக் கொண்டு போவதும் மிக எளிதென்பது புலனாகும். பெருமலைச் சரிவில் பண்டை நாளில் பெரும் நகரமாக நிர்மாணிக்கப்பட்டு, இன்று திரு வனந்தபுரத்திலிருந்து தென்மேற்கில் முப்பத்தைந்து மைல் தூரத்தில் சிற்றூராகக் காட்சியளிக்கும் திருவிதாங்கூரைச் சுற்றி இப்பொழுதும் காடுகளே இருக்கின்றன.

திருவிதாங்கூரிலிருந்து மிகச் சரிவாக இறங்கும் மலைப் பகுதியில் வீதிகளின் மேற்புறத்தில் வீடுகளைத் தொட்டுக் கொண்டு கண் செல்லும் அளவுக்குக் காடுகளே இருக்கின்றன. திருவிதாங்கூரிலிருந்து மேற்கே சமுத்திரத் திலுள்ள கொளச்சலில்தான் தொடமுடியுமாதலால் அந்தத்

தூரத்துக்கு நெடுகிலும் பெரும் காடுகளையும் தோட்டங் களையும் பார்க்கலாம், பெரும் தென்னைகளையும் பற்பல காட்டு மரங்களையும் கொண்ட அந்த மலைச்சரிவு கடலுக்கு ஓடுவதே கண்கொள்ளாத கவர்ச்சிக்காட்சி. அதை விடப் பெரிதாக எழுந்து நின்று கீழ்ப்புறத்தே காட்சியளிக்கும் பெருமலை ஒரு பயங்கரம். இந்தக் கவர்ச்சிக்கும். பயங்கரத்துக்கும் இடையேயுள்ள திருவி தாங்கூரின் வீதிகளுக்கு அக்கம் பக்கமெங்கிலும் காடுகள் பரந்து நிற்பதால் யாரையும் அங்கு பதுக்குவதோ படுகொலை செய்வதோ பிரமாதமல்ல. இன்றைய திருவி தாங்கூரின் நிலையை வைத்து பரலிமா நகரை எண்ணிப் பார்த்தால், இன்றைய சிற்றூரைப் பழைய பெருநகரமாக விரித்துப் பார்த்தால், சற்றே பெரிய வீதிகள், அதிக வெளி நாட்டு வாணிபம் பெரும் மாளிகைகள் இவற்றுடன் கடல் வரை நகரம் தெரியும். அத்துடன் வீதிகளைச் சூழ்ந்த காடுகளும் மலைச்சரிவுகளும் தெரியும். இத்தகைய காடு களைக் கொண்ட பரலியில் அரண்மனைக் காவலனை அரபு உடையணிந்த இருவரும் அழைத்து வந்தது பெரும் வியப்பில்லையல்லவா?

ஆகவே அதைப்பற்றி வியப்படையாத அரண்மனைக் காவலன், முதல் அராபியன் தன் முக்காட்டை நீக்கியதும் வியப்பினாலும் கிலியாலும் வாயைப் பிளந்து நின்றான். பிறகு "நீயா!" என்று கிலி நிரம்பிய குரலில் கேட்கவும் செய்தான்.

அவன் முன் நின்றவன் செண்டுவெளியில் சாகசச் செயல் புரிந்து குழப்பத்தில் வெளியேறிவிட்ட அந்தத் துணி கர வாலிபன். அவன் விகாரமுகத்தைவிட அவன்யாரென்ற உணர்வு பெரும் அதிர்ச்சியை அளித்தது அரண்மனைக் காவலனுக்கு. அவன் கிலியைக் கண்டு சற்றுப் புன்முறுவல் கோட்டிய இந்திரபானு, "என்னைவிட அவர் உனக்குத் தெரிந்தவர்" என்று கூறி மற்றவனை முக்காட்டை நீக்கச் செய்ததும் அரண்மனைக் காவலனின் பிரமிப்பு எல்லை கடந்தது. "நீண்டநேரம் வாயடைத்து நின்ற காவலன்,



"கூத்தா! நீயா?" என்றான் வியப்பு மிதமிஞ்சிக் குரலில் ஒலிக்க,

கூத்தனும் முறுவல் செய்தான். காவலனை நோக்கி, "ஆம். நான்தான்," என்றும் கூறினான் சர்வசகஜமாக.

"கூத்தா, நீ இங்கிருப்பது தெரிந்தால்" என்று இழுத்தான் அரண்மனைக் காவலன், விளைவைச் சொல்லப் பயந்து.

"வெட்டுப்பாறைக்கு அனுப்புவார்கள்," என்று சர்வ அலட்சியமாகப் பதில் சொன்னான் கூத்தன்.

அடுத்தப் பேச்சு எதுவும் அரண்மனைக் காவலனிட மிருந்து வரவில்லை. நீண்ட நேரம் அவர்களை நோக்கி மிரள மிரள விழித்தான். பிறகு தட்டுத் தடுமாறி, "நீ...நீ..." என்று திணறினான்.

கூத்தன் அவனை முதுகில் தட்டிக் கொடுத்து, "தயங்காமல் சொல் தம்பி! ஒற்றன் என்றுதானே சொல் கிறாய்! நான் ஒற்றன்தான். இவரும் அந்த நிலைதான்," என்று இந்திரபானுவையும் சுட்டிக் காட்டினான்.

அரண்மனைக் காவலன் முகத்தில் சற்றுத் துணிவு தெரிந்தது. "இவர் இந்த நாட்டுக்கு விரோதியாயிருப்பதில் நியாயமிருக்கிறது. ஆனால் நீ...கூத்தா...நீ இந்நாட்டவன்..." என்றான் காவலன் சற்று வெறுப்புடன்.

"நீ சொல்வது புரிகிறது தம்பி! ஆனால் ஒரு விஷயம் நீ மறந்துவிட்டாய்," என்றான் கூத்தன்.

"எது கூத்தா?"

"நான் குருநாதரின் அடிமையென்பதை."

"ஆம் ஆம்."

"நமது மன்னர் பெண்ணைக் களவாடியதைக் குரு நாதர் ஒப்பவில்லை."

"ஆம்."

"ஆகவே இவருக்கு உதவும்படி எனக்குக் கட்டளை யிட்டார்," என்று இந்திரபானுவைச் சுட்டிக் காட்டினான் கூத்தன்.

அரண்மனைக் காவலன் பதிலேதும் சொல்ல வில்லை. தலையை மட்டும் ஆட்டினான். கூத்தனே தொடர்ந்தான், "குருநாதர் இப்பொழுதும் மக்களுக்கு ஓலை விடுத்திருக்கிறார், மன்னனுக்கு எதிராக," என்று.

"ஆம்" என்றான் அரண்மனைக் காவலன்.

"குருநாதர் சேரநாட்டுத் துரோகியா?" என்று வின வினான் கூத்தன் உஷ்ணத்துடன்.

அதற்குப் பதில் சொல்லவும் அஞ்சினான் அரண் மனைக் காவலன். முத்துக் களவையும், முத்துக்குமரியின் களவையும் குருநாதர் வெறுக்கிறார் என்பதை அரண்மனை யில் எல்லோருமே அறிந்திருந்தார்கள்; தலைநகரும் அறிந் திருந்தது. "சேரனே! எதிரியைப் போரால் முறியடித்து அவன் செல்வத்தைக் கவர்ந்து வா. உன் பக்கம் நானிருக் கிறேன்; அவன் நாட்டுக்குள் துணிவுடன் புகுந்து மகளைச் சிறையெடுத்து வா. அதை ஆமோதிக்கிறேன். ஆனால் சிங்களத்துடன் சேர்ந்து முத்துக்களவு செய்ததையும், காட்டுக் கள்ளரையும், சிங்கணன் போன்ற ஒற்றனையும் கொண்டு வஞ்சகத்தால் பாண்டியன் வஞ்சியைக் கவர்ந்த தையும் நான் எப்படி ஒப்புக்கொள்ள முடியும்?" என்று மன்னனை நோக்கிக் குருநாதர் சீறியதாக அரண்மனையில் கிசுகிசுவென்று பேசிக் கொண்டதும், அரண்மனைக் காவல னுக்குத் தெரிந்தது.



தவிர அரசனிடம் கொண்ட பக்தியைப்போல் பரத பட்டனிடம் பத்து மடங்கு அதிக பக்தியை மக்கள் கொண்டிருந்ததால் அவரைப்பற்றி எதிர்த்து நாலு வார்த்தை சொல்வதும் அச்சமாயிருந்தது அவனுக்கு. ஆகவே அதைப் பற்றிய சர்ச்சையில் இறங்காத அரண்மனைக் காவலன் கேட்டான் அவர்களிருவரையும் நோக்கி, "என்னை எதற்காக இப்படி அழைத்துக்கொண்டு வந்திருக்கிறீர்கள்?" என்று.

இதற்குக் கூத்தன் பதில் சொல்லவில்லை. இந்திர பானுவே பதில் சொன்னான்: "வீரனே! நீ சத்திரத்தில் பேசியதைக் கேட்டோம். நீ அளித்த விவரங்கள் ருசியா யிருந்தன," என்று.



"எந்த விவரங்கள்? வெளியூர்களிலிருந்து வரும் மக்களை நகரத்தில் தேக்காமல் வெளியே அனுப்பும் திட்டமா?"

இந்திரபானு மெள்ளப் புன்முறுவல் கோட்டினான். "அது ரகசியமல்ல வீரனே! புரவி வீரர் வரும் மக்களை வரிசையாக நகரின் தெற்குப்புறமாகச் செலுத்தும்போது யாருமே அதைப் புரிந்துகொள்வார்கள். அதுவும் போர் களில் பழக்கமுள்ளவர்களுக்கு இது சுலபமாகப் புரியும். அதல்ல நான் குறிப்பிடுவது," என்று கூறிக் கூத்தனையும் நோக்கினான்.

அரண்மனைக் காவலன் வாயைத் திறக்குமுன்பு கூத்தன் கூறினான், "அவர் குறிப்பிடுவது பாண்டிய இளவரசியைப் பற்றி" என்று.

"பாண்டிய இளவரசி இருக்குமிடம் நான் செல்ல முடியாதே?" என்றான் அரண்மனைக் காவலன்.

"அத்தனை பெரிய பணியை உனக்கு நாங்கள் அளிக்க மாட்டோம்" என்றான் இந்திரபானு.

"வேறென்ன நான் செய்ய முடியும்?" என்று வினவினான் அரண்மனைக் காவலன்.

"இந்திரபானு சற்று யோசித்தான். பிறகு கேட்டான், "உன் வீடு எங்கிருக்கிறது!" என்று.

"அரண்மனைக்குப் பின்புறத்தில்..." என்று சொன்ன அரண்மனைக் காவலன் சட்டென்று பேச்சை நிறுத்தி னான். வாய் தவறி உண்மையைச் சொல்லிவிட்டதைப் புரிந்து கொண்டதால் அச்சமும் அடைந்தான்.

"அதாவது அரண்மனையின் மேற்கு வாசலில்?" என்று திடமாக எழுந்தது இந்திரபானுவின் அடுத்த கேள்வி.

"ஆம்."

"அரண்மனை மேற்கு வாசலுக்கும் உன் வீட்டுக்கும் எத்தனை தூரமிருக்கும்?"

"தூரமே இல்லை. மேற்கு வாசலுக்கு எதிரில் மேற்குப் பெருவீதி. அதை அடுத்து, சிறு மலைச்சரிவில் மணமான காவலர் விடுதிகள். அதிலொன்றில்..."

"நல்லது! நல்லது!" என்ற இந்திரபானு கூத்தனையும் நோக்கினான்.

கூத்தனும், "மிக நல்லது," என்றான்.

"எது நல்லது?" என்று பயத்துடன் கேட்டான் அரண்மனைக் காவலன்.

"உனக்கு மணமாகியிருப்பது," என்றான் இந்திரபானு.

"அதில் நல்லது என்ன இருக்கிறது?" என்று கேட்டான் அரண்மனைக் காவலன்.

"திருமணத்தில் உபத்திரவம் அதிகம்தான் இருப்பினும் யார் தான் மணத்தை விரும்பவில்லை? நீ மணம் செய்திருப்பது இப்பொழுது எங்களுக்குப் பெரும் அனுகூலம்?" என்றான் இந்திரபானு.

"மிக மிக அனுகூலம்," என்றான் கூத்தன்.

"எனக்கு மணமானால் உங்களுக்கு என்ன அனுகூலம்?" என்று வினவினான் காவலன் சினத்துடன்.

"உன் மைத்துனர்களாக உங்கள் வீட்டில் நாங்கள் தங்கலாம்," என்று இந்திரபானு சுட்டிக் காட்டினான்.

"தங்கினால் உங்கள் தலையோடு என்தலையும் சீவப் படும்" என்று கூறினான் வீரன்.

"படைவீரனுக்கு மரணம் என்றும் நிச்சயம்" என்றான் கூத்தன்.

"இப்பொழுது அதற்கு அவசியமில்லை," என்றான் அரண்மனைக் காவலன்.

"நமது இஷ்டத்தைப் பொறுத்ததல்ல அது" என்று கூறிய இந்திரபானு, "வீரனே, உன் வீட்டுக்கு எங்களை அழைத்துச் செல். அங்கிருந்து நாங்கள் அரண்மனைமீது ஒரு கண்ணை வைத்துக் கொள்கிறோம்," என்று சொன்னான்.





"நான் மறுத்தால்?" அரண்மனைக் காவலன் கேள்வி கோபத்துடன் எழுந்தது.

"அரண்மனைக்கெதிரில் உன் வீடிருந்தும் பயனில்லை," என்ற இந்திரபானுவின் குரல் ஏளனத்துடன் ஒலித்தது.

"ஏன்?" காவலன் கேட்டான் கடுமையுடன்.

"நீ வீட்டுக்குச் செல்லமாட்டாய்!" என்ற இந்திர பானுவின் கை அவன் இடைக் கச்சையிலிருந்து குறுவாளைத் தடவியது.

அரண்மனைக் காவலனுக்குத் தன் நிலைமை சந்தேகமறப் புரிந்தது. இவர்களை அழைத்துச் சென்று தன் வீட்டில் இடம் கொடுத்தால் பெரும் ஆபத்து. மன்னனுக்குத் தெரிந்தால் தன் தலை வெட்டுப்பாறையில் உருளும். அழைத்துச் செல்ல மறுத்தால் உடனடியாக மரணம். இரு தலைக் கொள்ளியாகத் திணறிய அரண்மனைக் காவலன் வேறு வழியின்றி அவர்களை அழைத்துச் செல்லச் சம்மதித் தான். அவன் சம்மதம் அளித்ததும், மற்ற இருவரும் முக் காடணிந்து அராபியர் உடையில் அவனைத் தொடர்ந்து அவனில்லம் சென்றனர்.

இல்லத்தில் வாயிற் கதவைத் தாழிட்ட அரண்மனைக் காவலன் தனது மனைவிக்கு அவர்களை தனது நண்பர் களென அறிமுகப்படுத்தினான். இப்படி மூன்று நாட்கள் அவன் வீட்டில் தங்கிய இந்திரபானுவும் கூத்தனும் அராபிய உடையில் இஷ்டப்படி வெளியே செல்வதும் வரு வதுமாக இருந்தனர். சில வேளைகளில் அதிக் அகாலத்திலும் வந்து கொண்டிருந்தனர். அவர்கள் போக்கு அரண்மனைக் காவலனுக்குப் பெரும் விசித்திரமாயிருந்தது. வேவு பார்ப்பதாகவும் தெரியவில்லை அவனுக்கு இருவரும் மிக உல்லாசமாகக் காலங் கழிப்பதையும், இரவில் ஊர் சுற்றுவதையுமே கண்டான் அவன். இராக் காலங்களில் சில சமயங்களில் அவனுடன்கூட அவர்களும் தலைநகரச் சத்திரங்களுக்குச் சென்று மக்கள் பேசுவதைக் கேட்டு

வந்தார்கள். பிறகு நான்காவது நாளிரவு அவர்கள் வந்த போது ஒரு பெண்ணையும் அழைத்து வந்தார்கள்.

வந்தவள் மிக அழகாயிருந்தாள். தேகக்கட்டு காவலனை அசரவைத்தது. அவள் கூந்தலில் காதுக்கருகில் காட்டு மலர் ஒன்றைச் செருகியிருந்தாள். "யார் இது?" என்று பயத்துடனும் வியப்புடனும் கேட்டான் அரண்மனைக் காவலன்.

இந்திரபானு புன்முறுவல் செய்து, "உன் மனைவியின் தங்கை, மைத்துனி!" என்று கூறினான்.

"என் மனைவிக்குத் தங்கை கிடையாது. அவள் தந்தைக்கு ஒரே மகள்," என்றான் அரண்மனைக் காவலன்.

"அந்தக் குறையை இவள் பூர்த்தி செய்வாள்," என்றான் இந்திரபானு.

"இவள் எதற்காக வந்திருக்கிறாள்?" என்று கேட்டான் அரண்மனைக் காவலன்.

இந்திரபானுவின் பதில் மெல்ல உறுதியுடன் வெளி வந்தது. சொற்கள் நிதானமாக உதிர்ந்தன. அவன் விழி களில் சதா தாண்டவமாடும் விஷமம் மறைந்து அதன் இடத்தை உறுதி ஆக்கிரமித்துக் கொண்டது. "அரண்மனை யில் பணிபுரிய வந்திருக்கிறாள்," என்றான் இந்திரபானு.

அரண்மனைக் காவலன் கூத்தனையும் நோக்கி இந்திரபானுவையும் நோக்கினான். இருவர் முகங்களிலும் பெருத்த அபாயமான திட்டத்தை வகுத்துவிட்ட குறி இருந்தது. திட்டத்தை மெள்ள அவிழ்க்கவும் முற்பட்டான் இந்திரபானு.



## அத்தியாயம் 27

# சாத்தனுக்குப் புரிந்தது

இந்திரபானு தனது அபாயகரமான திட்டத்தை விவரிக்க முற்பட்ட பிறகுகூடப் பல வினாடிகள் அரண்மனைக் காவலன் அந்தப்பணிப்பெண் முகத்தையே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தான். அவள் உடல் கட்டையும் கண்டதுமே அவள் மலைச் சாதிப் பெண்ணென்பதைச் சந்தேகமற உணர்ந்து கொண்டான் அரண்மனைக் காவலன். காட்டுப் புஷ்பம் போலவே செழித்து உறுதியுடனும், அதிக மெருகுடனும் காட்சியளித்த அவள் உடல் பிரதேசமும், உருண்ட முகமும், திண்மைக் கன்னங்களும் குவிந்த உதடுகளும், அவள் மலைப்பூ வென்பதற்குச் சான்று காட்டின. கணுக்காலுக்குச் சற்று மேலேயே சேலை நின்றுவிட்டதால், ஆடுதசையின் கீழ்ப்பகுதி யானையின் துதிக்கை போல் ஆனால் மிகுந்த வழவழப்புடன் இறங்கியதையும், இறுக்கிய உடைக்கு அடங்கினாலும் உடல்கட்டின் உறுதியின் காரணமாகச் சுற்றிலும் வளையமாகச் சதை தெரிந்த சிற்றிடையும் அவள் வலுவுக்கு அத்தாட்சி கூறின. இத்தனை வலுவும் தெரியாமல் மறைத்து உடலைப் பூவுடலாகக் காட்டிய அவள் அழகு யாரையும் மயக்குந் தன்மையைப் பெற் றிருந்தது. அவள் காதில் செருகிய ஒற்றைப் பூவும் மலைப் பூவாதலால், அவள் இனத்தைப்பற்றி அரண்மனைக் காவலன் சந்தேகப்படவில்லையென்றாலும் அவளைப் பற்றி அவன் மனத்தில் ஏதோ ஒரு சந்தேகம் தோன்றி யிருந்தது. அவளை எப்பொழுதோ எங்கேயோ பார்த் திருக்கும் நினைப்பு அவன் மனத்தில் சுழன்று கொண்டிருந்தது. ஆகவே அதைப்பற்றி ஆராய்வதில் அவன்

மனமிருந்ததால் இந்திரபானு விவரிக்க முற்பட்ட திட்டத்தின் ஆரம்பப் பகுதிகளை அவன் காதில் வாங்கிக் கொள்ளவில்லை.

அவன் பிரமை பிடித்து நிற்பதையும் தான் சொன்ன எதுவுமே அவன் காதில் விழாததையும் கண்ட இந்திரபானு, "வீரனே! நான் சொல்வது உன் காதில் விழவில்லை போலிருக்கிறது!" என்றான் சற்றுக் கடுமையுடன்.

இதைக் கேட்ட அரண்மனைக் காவலன், "மன்னிக்க வேண்டும். நான் இந்தப் பெண்ணையே பார்த்துக்கொண் டிருந்துவிட்டேன்," என்றான்.

"பிற பெண்ணை அப்படிக் கண்கொட்டாமல் பார்ப்பது தவறு வீரனே!" என்றான் இந்திரபானு, தனது கடுமையைக் கைவிட்டுச் சற்றுப் புன்முறுவல் கொண்டு.

அரண்மனைக் காவலன் தனக்கும் நகைச்சுவை வரும் என்பதைக் காட்ட முற்பட்டு, "ஆனால் இவள் பிற பெண் அல்லவே," என்றான் பதிலுக்கு, அவனும் புன்முறுவல் கூட்டி.

"வேறு யார்!" இந்திரபானு ஏளனம் நிரம்பிய குரலில் விசாரித்தான்.

"இவள் என் மைத்துனியென்று தாங்கள்தானே கூறி னீர்கள். அதற்குள் மறந்துவிட்டீர்களா?" என்று கேட்டான் அரண்மனைக் காவலன்.

இதைக் கேட்ட கூத்தனும் அந்தப் பெண்ணும்கூட நகைத்தார்கள். ஒரு சாதாரண அரண்மனைக் காவலன் தன்னைப் பேச்சில் மடக்கிவிட்டதைக் கண்டு சற்றே சங்கடப்பட்ட இந்திரபானு, "சாத்தா!" என்று காவலனை அழைத்தான்.

காவலன் முகத்தில் சற்று ஆச்சரிய ரேகை படர்ந்தது. இருவரும் வந்து நாட்கள் நாலு ஆகியும் இருவரும் தன் பெயரைத் தன்னிடமோ தனது மனைவியிடமோ கேட்க வில்லை யென்பதை உணர்ந்திருந்த காவலன், 'இவர்கள் வெளியிலும் யாரிடமும் உரையாட முடியாதே. இந்தக் கூத்தனுக்கும் என் பெயர் தெரியாதே. அப்படியிருக்க என்





பெயர் இவனுக்கு எப்படித் தெரிந்தது?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டான்.

அவன் மனத்திலெழுந்த கேள்விகள் இந்திர பானுவுக்குச் சந்தேகமறப் புரிந்ததால், "இதைப்பற்றி வியக்க வேண்டாம் சாத்தா! நேற்றிரவு நாங்கள் இங்கிருந்து கிளம்பிய போது காவலர் இருவர் எங்களைப் பார்த்தனர். அவர்களில் ஒருவன் எங்களை ஏதோ கேள்வி கேட்க எண்ணி, எங்களை நோக்கி வர முற்பட்டான். மற்றவன் அவனைத் தடுத்து, 'அவர்கள் சாத்தன் வீட்டுக்கு வந்திருக் கிறார்கள்' என்று அவனைத் தன்னுடன் அழைத்துச் சென்றான். அதிலிருந்து உன் பெயரை அறிந்து கொண்டேன்," என்று கூறினான் இந்திரபானு.

இதைக் கேட்ட அரண்மனைக் காவலன் முகத்தில் பயக்குறி படர்ந்தது. "அவர்கள் ஏதாவது சந்தேகப்பட்டார் களா உங்கள்மீது?" என்று வினவினான் சாத்தன்.

"இல்லை. நாங்கள் உன் வீட்டவர் என்று தெரிந்ததும் முதலில் சந்தேகப்பட்டவனும் சென்றுவிட்டான்," என்ற இந்திரபானு, "சாத்தா! சாமர்த்தியமாகப் பேசுகிறாய். ஆனால் மைத்துனியாயிருந்தாலும் அவளை வெறித்து வெறித்துப் பார்க்கக்கூடாது," என்றான்.

சாத்தன் அதற்கும் மசியவில்லை. "இதை ஆட்சேபிக்க வேண்டியது தாங்களல்ல," என்றான்.

"வேறு யார்?" இந்திரபானு கேட்டான் வியப்புடன்.

"என் மனைவி," என்றான் சாத்தன்.

இதைக் கேட்டதும் கூத்தனும் அந்தப் பெண்ணும் மீண்டும் நகைத்தனர்.

தன்னைப் பேச்சில் வெல்லக்கூடியவன் வீர பாண்டியன் ஒருவன்தான் என்று அன்றுவரை நினைத் திருந்த இந்திரபானு இன்னொருவனும் அந்தச் சாமர்த்தியத் துடனிருக்கிறானென்பதை அறிந்ததால் சற்றுச் சங்கடத்துடன், "சரி சாத்தா, வேடிக்கைப் பேச்சிருக்கட்டும். நமக்கு முன்னிருக்கும் அலுவலைக் கவனிப்போம்," என்று மீண்டும் தனது திட்டத்தை விவரிக்க முற்பட்டு, "சாத்தா!

உனக்கு எங்கள் இருவரையும் தெரியும். ஆனால் இப் பெண்ணைத் தெரியாது. இருப்பினும் தெரிந்ததாகப் பாசாங்கு செய்யவேண்டும். இவர்கள் எப்படியும், அரண்மனையில் பணிப்பெண் ஆக வேண்டும். அதுவும் பாண்டிய மகளிடம் இவள் பணிபுரிய வேண்டும்," என்று சற்று நிதானித்துச் சாத்தனைக் கூர்ந்து நோக்கினான்.

சாத்தன் மனோநிலை கவலையையும் பயத்தையும் மீறி இருந்தது. மிகவும் சாமர்த்தியமாக இரு எதிரி ஒற்றர்களிடம் தான் சிக்கிக்கொண்டிருப்பதை நான்கு நாட்களாக உணர்ந்துவிட்ட அவன், தன் வாழ்வின் விதி எப்படியும் அபாய மார்க்கத்தில் திரும்பக்கூடும் என்ற நினைப்பை அடைந்திருந்தான். ஆகவே இந்திரபானு தனது யோசனையைக் கூறியதும் புரிந்துகொண்டதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் அசைத்தான்.

இந்திரபானு மேலும் சொன்னான், "சாத்தா, நீ அரண்மனைக் காவலனானாலும் அளவுக்குமீறி நீ எதுவும் செய்ய முடியாதென்பது எனக்குத் தெரியும். ஆனால் இந்தப் பெண்ணுக்கு நீ வேலை கேட்கலாம். இவளை உன்னுடன் நாளைக்கு அழைத்துச் சென்று அரண்மனை அந்தப் புரத்தில் உன் மைத்துனியாக இவளை அறிமுகப்படுத்து. இவளுக்கு வேலையும் கேள். அரண்மனைக் காவலன் சிபாரிசு செய்வதால் அவர்கள் ஒப்புக்கொள்வார்கள்."

இந்திரபானுவின் யோசனை அத்தனை எளிதாக நிறைவேற முடியும் என்று நினைக்கவில்லை சாத்தான். "இதில் சில கஷ்டங்களிருக்கின்றன," என்றும் சுட்டிக் காட்டினான்.

"என்ன கஷ்டங்கள்?" என்று வினவினான் இந்திர பானு.

"உங்களை மைத்துனர்கள் என்று கூறச் சொன்னீர்கள்..." என்று இழுத்தான் சாத்தான்.

"ஆம்," என்று ஒப்புக்கொண்டான் இந்திரபானு.

"அப்படித்தான் அக்கம்பக்கத்திலிருக்கும் சகோதர வீரர்களுக்குக் கூறியிருக்கிறேன்."



"சரி."

"இந்த விஷயம் அரண்மனை வரையில் முதல் இரண்டு நாட்களிலேயே போயிருக்கும்."

"சரி."

"இப்பொழுது மைத்துனி வந்திருப்பதாக சொல்லச் சொல்கிறீர்கள்."

"ஆம்."

சாத்தன் இகழ்ச்சியுடன் நோக்கினான். "இப்படித் தினம் மைத்துனர்களும் மைத்துனிகளும் வருகிறார்களென்றால் அரண்மனையில் நம்புவார்களா? தவிர, இந்த மைத்துனர்களும் மைத்துனிகளும் இத்தனை வருடங்கள் எங்கு போயிருந்தார்களென்று கேட்கமாட்டார்களா?" என்று வினவிய சாத்தன் இகழ்ச்சி நகையும் கோட்டினான் இந்திரபானுவைப் பார்த்து.

இந்திரபானு அவன் இகழ்ச்சி நகையையோ பார்வையையோ லட்சியம் செய்யவில்லை. "உனக்கும் உன் மாமன் வீட்டுக்கும் பல வருஷங்கள் விரோதமிருந்தது. யாரும் வரவில்லை. இப்பொழுது அவர்களாக வருகிறார்கள். வேலைக்கு உன் பிராணனை வாங்குகிறார்கள்..." என்று சுட்டிக் காட்டினான் இந்திரபானு.

சாத்தன் முகத்தில் வியப்பு மறைந்தது. மதிப்பு மூண்டது. "மனித இயற்கையை நன்றாக உணர்ந்திருக்கிறீர்கள்," என்று சிலாகிக்கவும் செய்தான் அவன்.

அந்தப் பாராட்டுதலைக் காதில் வாங்கிக்கொள்ளாத இந்திரபானு சொன்னான்; "சாத்தா! நீ நல்ல அறிவு படைத்தவன். எங்கள் வரவுக்குக் காரணம் சொல்ல உன்னை நான் பழக்க வேண்டியதில்லை. தகுந்த காரணங்களைக் கேட்பவருக்குத் தகுந்தபடி நீயே சொல்லிக்கொள். இவளை நீ அரண்மனையில் பணிப்பெண்ணாக்கு," என்று.

"அதற்கு முயலலாம்," என்ற சாத்தன், "ஆனால்..." என்று இழுத்தான் சற்று சிந்தனைக்குப் பிறகு.

"என்ன ஆனால்?"

"பாண்டிய இளவரசியிடம் இவளைப் பணிப் பெண்ணாக அமர்த்த என்னால் முடியாது."

"வேண்டாம், அதை இவள் கவனித்துக்கொள்வாள்."

"அப்படியா!"

"ஆம் சாத்தா."

"அத்தனை திறமைசாலியா இவள்?"

இதுவரை மௌனமாயிருந்த கூத்தன் சம்பாஷணையில் புகுந்து, "போகப் போக உனக்கே தெரியும்," என்றான்.

"கூத்தா!" என்றான் சாத்தன்.

"என்ன சாத்தா?"

"அபாயமான பணியில் என்னை இறங்கச் சொல்கிறீர்கள்."

"ஆம்"

"இதில் என் தலை போனாலும் போகலாம்."

"உன் தலை தனியே போகாது. எங்கள் தலைகளும் சேர்ந்தே போகும்."

"அதனால் எனக்கு எவ்விதப் பயனுமில்லை," என்ற சாத்தன் சோகப் பெருமூச்சு விட்டான்.

அதைக் கவனித்த இந்திரபானு, "உன்னைக் காப்பாற்றிக்கொள்ள ஒரு வழி சொல்லுகிறேன்," என்றான்.

"என்ன?"

"நீ எங்கு அபாயத்தில் சிக்கிக் கொண்டாலும் எங்களைக் காட்டிக் கொடுத்து விடலாம். நாங்கள் யாரென்பது உனக்குத் தெரியுமென்றும் எங்களைப் பிடித்துக் கொடுக்கவே உன் வீட்டுக்கு அழைத்துவந்ததாகக் கூறிவிடு. நீ தப்பலாம். உனக்கு வெகுமதியும் கிடைக்கும்."

இதைக் கேட்ட சாத்தன் முகம் அவமானத்தால் குன்றியது. "அத்தனைக் கயவனல்ல நான்," என்ற சாத்தன் அவர்கள் இஷ்டப்படி பணிப் பெண்ணை மறுநாள் அரண்மனைக்கு அழைத்துச் செல்லச் சம்மதித்தான்.





"அரண்மனையில் பணிப்பெண்ணாக்கியதும் என அலுவல் முடிந்து விட்டதா?" என்றும் வினவினான்.

இந்திரபானு திட்டமாகக் கூறினான்; "இல்லை, இவளை நீ அடிக்கடி சந்திக்கவேண்டும். இவள் சொல்லும் செய்திகளை எங்களுக்குத் தெரிவிக்கவேண்டும்." என்று.

சாத்தன் சந்தேகமறப் புரிந்துகொண்டான், தான் எதிரிகளின் ஒற்றனாவதை. வீரனான அவன் மனம் அந்த வேலைக்கு இணங்க மறுத்தது. ஆகவே அவன் கேட்டான், "நான் சாப்பிட்ட உப்புக்கு என்னைத் துரோகம் செய்யச் சொல்கிறீர்களா?"

இந்திரபானு அனுதாபத்துடன் நோக்கினான் சாத்தனை. "சாத்தா! நாம் சாதாரண காலத்தில் ஜீவிக்கவில்லை. தமிழகம் நிலைகுலைந்து கிடக்கும் நாட்களில் ஜீவிக்கிறோம். தர்மம் தளர்ந்து கிடக்கும் நிலையில் வாழ்கிறோம். பாண்டியன் மகள் காரணமின்றி இங்கு சிறைப்பட்டிருக்கிறாள். அந்த அநீதியை எதிர்த்து நாங்கள் போராடுகிறோம். நீயும் அதை எதிர்ப்பதில் தவறில்லை. தர்மம் தெரிந்த குருநாதரே அதை எதிர்க்கவில்லையா? சாத்தா, நம்மைவிட குருநாதர் தர்ம நியாயங்கள் தெரிந்தவர். தவிர அவர் சேரநாட்டிடம் பக்தி கொண்டவர். அவர் காட்டும் வழியில் நடப்பது ஒரு வேளை ராஜத் துரோகமாகலாம், நாட்டுத் துரோகமாகாது," என்றும் கூறினான்.

சாத்தனுக்கு அந்தப் பதிலோ தர்ம நியாயமோ திருப்தியளிக்கவில்லையென்றாலும் இந்திரபானுவின் திட்டத்தை நிறைவேற்ற ஒப்புக் கொண்டான். மறுநாள் பொழுது புலர்ந்ததும் அந்தப் பெண்ணை அரண்மனைக்கு அழைத்துச் செல்வதாக உறுதி கூறினான்.

மறுநாள் காலைப் பொழுது புலர்ந்தது. கதிரவன் எழுந்ததும் அந்த மலைச்சாதிப் பெண் அரண்மனை செல்லத் தயாராகக் கூடத்துக்கு வந்தாள். அவள் உடை, முதல் நாள் உடைக்கு முற்றும் மாறுபட்டிருந்ததையும், மறுநாள் உடை நகரத்து மக்களின் நாகரிக உடையாக

இருந்ததையும் கவனித்தான் சாத்தன். "ஏன் இந்த மாறுபாடு பெண்ணே?" என்றும் கேட்டான்.

"உங்கள் மைத்துனி காட்டுப் பெண்ணாக இருந்தால் ஒப்புக் கொள்வார்களா?" என்று கூறி அவள் சாத்தனை நோக்கிக் கலகலவென நகைத்தாள்.

அவள் சிரிப்பு கிண்கிணி நாதம்போலிருந்தது சாத்தன் காதுகளுக்கு. அவள் அழகு கண்ணைப் பறித்தது. அவள் விழிகளில் தீட்டியிருந்த மை அவன் சித்தத்துக்கு மை போட்டது.

"உன் பெயர்?" என்று வினவினான் அவன் அவள் அழகைக் கண்டதால் ஏற்பட்ட பிரமிப்புடன்.

"குறிஞ்சி" என்றாள் அவள்.

திடீரென உண்மை சித்தத்தில் பளிச்சிட்டதால் பிரமை பிடித்து நின்ற சாத்தன், "குறிஞ்சி!" என்று பிரமிப்புடன் வார்த்தைகளை உதிர்த்தான். "நீ! நீ! கோட்டாற்றுக் கரையில்..." என்று குழறவும் செய்தான்.

"விஜயவர்மனின் பணிப் பெண்." அதை சர்வ சாதாரணமாகக் கூறினாள் குறிஞ்சி.

யாருமறியாத பேருண்மையொன்று சாத்தனுக்கு விளங்கிடவே, "அது மட்டுமல்ல! அது மட்டுமல்ல," என்று குழறிய சாத்தன் மிதமிஞ்சிய பீதியால் தன் இரு கைகளாலும் முகத்தையும் மூடிக் கொண்டான். அச்சத்தால் அவன் உடல் பயங்கரமாக அசையவும் செய்தது.

அத்தியாயம் 28

# குறிஞ்சியும் சாத்தனும்

**கா**ட்டு மலரைப் போலவே செழித்து வளர்ந்திருந்த கட்டழகி குறிஞ்சி விஜயவர்மனின் பணிப்பெண் என்பதை அறிந்ததும் சாத்தன் எதற்காக அத்தனை அச்சப்பட்டான், குழறினான் என்பதை அறியாத இந்திரபானுவும் கூத்தனும் பெருங்குழப்பத்துடன் அரண்மனைக் காவலனை உற்று நோக்கினர்.

"அது மட்டுமல்ல," என்று அவன் கூறியதில் ஏதோ யாருமறியாத உண்மை புதைந்து கிடப்பதையும் அவர்கள் உணர்ந்து கொண்டதால் பணிப்பெண் குறிஞ்சிமீது அவர்கள் சந்தேகம் கலந்த பார்வையும் வீசினார்கள்.

இத்தனைக்கும் பணிப்பெண் குறிஞ்சி எந்தவித அச்சத்தையும் சஞ்சலத்தையும் காட்டாமல் உதட்டில் அரும்பி நின்ற புன்னகை அரும்பியபடியே நின்றுகொண்டிருந்தாள். "சரி சாத்தா! அரண்மனைக்குக் கிளம்பலாமா?" என்று அவள் கேட்ட கேள்வியிலும் அலட்சியம் நிறைந்திருந்ததே யொழிய அரண்மனைக்குள் போகப் போகிறோமே, ஆபத்தில் தலையிடப் போகிறோமே என்ற அச்சம் சிறிதும் இல்லை.

அவள் நிதான நிலை சாத்தன் அச்சத்தையும் ஓரளவு துடைத்துவிடவே, அவன் வியப்பு நிரம்பிய விழிகளை அவள் மீது திருப்பியதன்றி, "சரி அம்மணி, தங்கள் இஷ்டம் இதுவானால் ஏழை காத்திருக்கிறேன்," என்றும் கூறினான்.

அரண்மனைக் காவலன் பேச்சின் தோரணை திடீரென மாறிவிட்டதையும், அவன் பேச்சின் பாணி பணிப்பெண்ணுடன் பேசும் பேச்சைப்போல் இல்லை

யென்பதையும் கவனித்த இந்திரபானு, பணிப் பெண்ணையும் சாத்தனையும் சந்தேகம் துளிர்த்த கண்களுடன் மாறிமாறிப் பார்த்தான். "சாத்தா! இவளைப் பற்றி உனக்கென்ன தெரியும்?" என்று சந்தேகம் ஒலித்த கேள்வியொன்றையும் வீசினான். அவன் கேள்வியில் வழக்கமான நகைச்சுவையில்லை. கண்களில் தவழும் விஷமமும் இல்லை. குரல் வறட்சியுடன் ஒலித்தது. கண்களில் சீறிய பார்வை படர்ந்து கிடந்தது.

சாத்தன் தயங்கினான். வெளியிடத் தகாத விஷயத்தை வெளியிட்ட பீதி அவன் முகத்தில் மண்டிக் கிடந்தது. அந்தப் பீதியுடன் குறிஞ்சியை ஒருமுறை நோக்கினான். பிறகு கண்களை நிலத்தில் தாழ்த்தினான். அவன் வாயிலிருந்து சொற்கள் ஏதும் வெளிவரவில்லை.

"சாத்தா! நான் கேட்பது உன் காதில் விழவில்லை?" என்ற கேள்வி இந்திரபானுவிடமிருந்து சீறி வந்தது.

"விழுந்தது," நிலத்தை உற்று நோக்கிக்கொண்டே கூறினான் சாத்தன்.

"பின் ஏன் பதில் சொல்லவில்லை?" என்று மீண்டும் கேட்டான் இந்திரபானு உஷ்ணத்துடன்.

சாத்தன் மெள்ளத் தலை நிமிர்ந்து இந்திரபானுவைத் திடமாக நோக்கினான். அவன் உள்ளத்தில் ஏதோ ஒரு முடிவு ஏற்பட்டதை அந்தப் பார்வையிலிருந்தே புரிந்து கொண்ட இந்திரபானு சாத்தன் பதிலை நிதானத்துடன் எதிர்பார்த்து நின்றான்.

சாத்தன் மெள்ளச் சொன்னான், "இவர்கள் யாரென்பது அறிந்ததும் ஏற்பட்ட அதிர்ச்சி என்னைக் கலக்கிவிட்டது," என்று.

இதை அடுத்துக் கூத்தன், "யாரென்று அறிந்தாய் சாத்தா?" என்று வினவினான்.

சாத்தன் அவனைக் கூர்ந்து நோக்கினானேயொழிய, பதிலேதும் சொல்லாமல் இந்திரபானுவை நோக்கியே உரையாட முற்பட்டு, "இவர்கள் விஜயவர்மனின் பணிப்பெண் என்று அறிந்தேன்..." என்றான்.



"அதைத்தான் இவளே சொன்னாளே!" என்றான் இந்திரபானு.

"ஆம், சொன்னார்கள்."

"அப்படியிருக்க அதிர்ச்சி எங்கிருந்து வந்தது?"

"கோட்டாற்றுக் கரைக் கோட்டையிலிருக்க வேண்டிய இவரை இங்கு நான் எதிர்பார்க்கவில்லை."

"ஏன் எதிர்பார்க்கவில்லை?"

"கோட்டாற்றுக் கரைக் கோட்டையைச்சுற்றிலும் எங்கள் படை நிற்கிறது. தவிர, வீரபாண்டியன் சரணடைய ஒப்புக்கொண்டதாகச் சிங்கணன் ஓலையனுப்பியிருப்பதையும் மன்னர் செண்டுவெளியில் படித்துக் காட்டவில்லையா?"

"ஆம், காட்டினார்."

"அப்படியிருக்க, விஜயவர்மனின் பணிப்பெண் இங்கு வருவதானால் சிங்கணன் அனுப்பி வரவேண்டும் அல்லது, வீரபாண்டியர் சரணடைந்த பின்பு விஜயவர்மர் அனுப்பி வரவேண்டும். யார் அனுப்பினாலும் சேரர் படைத் தலைவர் அனுப்பி, சேரநாட்டுச் சார்பில் மன்னர் அரண்மனைக்கு வரவேண்டும்."

"ஆம், ஆம்."

"அப்படிக்கின்றி, இவர்கள் பாண்டிய மன்னன் ஒற்றராக மற்ற இரு ஒற்றர்களுடனும் கலந்து வந்திருக்கிறார்கள்..." இந்த வாசகத்தைச் சாத்தன் முடிக்கவில்லை. இருப்பினும் அவன் சொல்வதில் அர்த்தமிருப்பதாகவே தெரிந்தது கூத்தனுக்கு. சாத்தன் குழப்பத்துக்கும் குமுறலுக்கும் இந்தக் காரணமே போதுமென்று நினைத்தான் கூத்தன்.

இந்திரபானு அப்படி நினைக்கவில்லை. சாத்தன் காட்டிய காரணத்தில் நியாயமிருந்தபோதிலும், அவன் எதையோ மறைக்கிறானென்பதை உணர்ந்துகொண்ட இந்திரபானு ஒரு வினாடி சாத்தனை உற்று நோக்கினான்.

அத்துடன், "சாத்தா! காரணம் கோவையாகத் தானிருக்கிறது" என்றும் கூறினான்.

அதைக் கேட்ட சாத்தன் முகத்தில் கவலை மறைந்தது. சாந்திப் பெருமூச்சு ஒன்றும் நாசியிலிருந்து கிளம்பியது. அந்தச் சாந்திப் பெருமூச்சையும் கவனித்தான் இந்திரபானு. அவன் முக உல்லாசத்தையும் பார்த்தான். அதனால் நிச்சயமான உள்ளக் கருத்துடன் கேட்டான்; "சாத்தா! நீ கூறுவதெல்லாம் உண்மைதான். ஆனால் இந்தச் சாதாரணப் பணிப்பெண்ணை எதற்காக, 'நீங்கள் இவர்கள்' என்று மிகுந்த மரியாதையுடன் அழைக்கிறாய்?" என்று.

"பெண்களிடம் மரியாதையாயிருப்பது தவறா?" என்று கேட்டான் சாத்தன் சிறிதும் மசியாமல்.

"தவறல்ல சாத்தா! பண்பாட்டுக்கு அறிகுறி அது. ஆனால் உன் பண்பாடு அடிக்கடி மாறுகிறதே?" என்றான் இந்திரபானு.

"பண்பாடு மாறுகிறதா?" வியப்புடன் வினவினான் சாத்தன்.

"ஆம். சாத்தா. முதலில் இப்பணிப்பெண்ணை நீ நீ என்று அழைத்தாய். திடீரென்று நீங்கள் நீங்கள் என்று அழைக்க முற்பட்டு விட்டாய். எதிலும் ஒரு தொடர்ச்சி இருப்பது நல்லதல்லவா?" என்ற இந்திரபானு விஷமப் புன்னகை கோட்டினான். எதிலும் என்ற வார்த்தையை அவன் அளவுக்கு அழுத்தியும் உச்சரித்தான்.

இந்திரபானுவின் விஷமப் புன்னகையையோ, எதிலும் என்ற சொல்லைச் சற்று அழுத்திச் சொன்னதையோ கவனிக்கத் தவறாத சாத்தன் மீண்டும் சங்கடத்திற்குள்ளாகி, "நீங்கள் சொல்வது விளங்கவில்லை," என்றான் குரலில் சங்கடம் சந்தேகமின்றித் துலங்க.

அதுவரை அவர்கள் உரையாடலில் கலக்காமல் தனித்து நின்ற பணிப்பெண் குறிஞ்சி இடை புகுந்து, "சாத்தா! நீ திடீரென்று என்னிடம் மரியாதை காட்டியது இவருக்குச் சந்தேகத்தை அளித்திருக்கிறது. அதற்குக் காரணத்தைக் கூறிவிடேன்," என்றாள் சர்வசாதாரணமாக.



இந்திரபானு குறிஞ்சியின் முகத்தின்மீது தனது பார்வையை நிலைக்க விட்டான். அவன் பார்வையைக் கண்டு அஞ்சவில்லை குறிஞ்சி. அழகிய அவள் விழிகள் மிகுந்த அலட்சியத்துடனும் தைரியத்துடனும் அவன் கண்களுடன் கலந்தன. அந்தக் கண்களின் காந்தத்திலிருந்து இந்திர பானுவே தனது கண்களை இழுத்துக் கொண்டான். அதைக் கண்டு லேசாக நகைத்த குறிஞ்சி, "உண்மையைச் சொல் சாத்தா! இவர்கள் சந்தேகமும், சந்தேகத்தில் விளைந்த அச்சமும் அகலட்டும்!" என்று கூறினாள்.

சாத்தன் மெள்ள தைரியத்தை வரவழைத்துக் கொண்டு இந்திரபானுவை ஏறிட்டு நோக்கினான். "இவர்கள் சாதாரணப் பணிப் பெண்ணல்ல. விஜயவர்மர் அரண்மனையில் இவர்களுக்குத் தனி இடமுண்டு. கோட்டைத் தலைவருக்குள்ள மரியாதை இவர்களுக்கும் காட்டப்படும் அங்கு," என்று திட்டமான குரலில் அறிவித்தான் சாத்தன்.

"ஏன் அப்படி?" இந்திரபானுவின் கேள்வியும் உறுதியுடன் எழுந்தது.

இம்முறை குறிஞ்சி பதில் கூறினாள். "ஏனென்றால் நான் அரண்மனை மருத்துவர் மகள். கோட்டைத் தலைவருக்குத் தலைவலியென்றால்கூடச் சுக்கு அரைத்துப் போடுகிறவள் நான்தான். அவர் மனைவி ஈன்றெடுத்த இரு குழந்தைகளையும் உலகின் ஒளிக்கு எடுத்துவந்தவள் நான்தான். நாங்கள் அரச மருத்துவர் குலம். சேரநாட்டின் எட்டு வைத்தியக் குடும்பங்களில் எங்கள் குடும்பம் பிரதானமானது," என்ற குறிஞ்சி பெருமிதத்துடன் இந்திர பானுவை நோக்கினாள்.

இந்திரபானுவுக்கு அவள் சொன்னது சரியென்றே புலப்பட்டது. இருப்பினும் விவரிக்க இயலாத சந்தேக மொன்று அவன் மனத்திலிருந்து அகல மறுத்தது. ஆகவே மீண்டும் கேட்டான் அவன், "விஜயவர்மரின் அந்தரங்க மருத்துவப் பெண் எதற்காகப் பாண்டியர் வேவுகாரியாக மாற வேண்டும்?" என்று.

குறிஞ்சியின் செவ்விய இதழ்கள் இகழ்ச்சியுடன மடிந்தன. "இந்தக் கேள்வியை நீங்கள் என்னிடம் கேட்க வேண்டியதில்லை," என்றாள் அவள் இந்திரபானுவைச் சிறிதும் லட்சியம் செய்யாமல்.

"வேறு யாரிடம் கேட்கவேண்டும்?" இந்திரபானுவின் குரல் சற்று உஷ்ணத்துடன் ஒலித்தது. அவன் நிலை குலைந்துவிட்டானென்பதையும் அந்த ஒலி விளக்கிக் காட்டியது.

குறிஞ்சியின் இகழ்ச்சி முகத்திலும் படர்ந்தது. "உங்கள் கேள்வியை நீங்கள் ஒன்று பாண்டிய மன்னனிடம் கேட்க வேண்டும். அல்லது வீரபாண்டியரிடம் கேட்க வேண்டும்," என்றாள் குறிஞ்சி இகழ்ச்சி குரலிலும் ஒலிக்க.

இந்திரபானு பதில் சொல்ல வகை தெரியாமல் திணறினான். சிறிது நேரம் தீவிர சிந்தனையிலும் இறங்கினான். செண்டுவெளியிலிருந்து தப்பிச் சென்ற தன்னைக் காட்டு முகப்பில் சந்தித்ததும் கூத்தன், பிறகு இந்தப் பெண்ணைத் திடீரென அழைத்து வந்ததும் கூத்தன், குறிஞ்சியைப் பாண்டிய மன்னர் அனுப்பியதாகவும் அவளை முத்துக் குமரிக்குத் துணையாகச் சேர்த்து விடுமாறு உத்தரவிட்டதாகவும் செய்தி கொண்டு வந்ததும் கூத்தன், இந்திரபானு கடைசியில் அவனையே கேட்டான், "கூத்தா! இவளை எப்படி நீ சந்தித்தாய்?" என்று.

"என்னையும் என் மனைவியையும் கூத்தர் குடிசைக் கூட்டத்திலிருந்து உங்கள் புரவியில் ஏற்றிவிட்டதும் உங்கள் உத்தரவுப்படி வடமேற்கில் காட்டுக்குள்ளே பயணம் செய்தேன்! நீங்கள் எதிர்பார்த்தபடி பாண்டிய வீரர்களால் இரண்டு காதத்துக்குப் பிறகு சூழ்ந்து கொள்ளப்பட்டேன். ராஜமுத்திரை பொறித்த முத்திரை மோதிரத்தைக் காட்டியதும் பாண்டிய மன்னர் பாசறைக்கு அழைத்துச் செல்லப்பட்டேன். அங்கு மன்னனே என்னை நேரில் விசாரித்தார். நீங்கள் சேரர் தலைநகரில் இருப்பதைக் கேட்டதும் பெருமகிழ்வு கொண்டார். எனக்கும் என் மனைவிக்கும் சகல வசதிகளும் அளிக்கப்பட்டன.





அடிக்கடி பாண்டியப் படைகள் காடு விட்டுக் காடும், ஊர்விட்டு ஊரும் நகர்ந்துகொண்டிருந்தன. திடீரென ஒருநாள் இவள் வந்து சேர்ந்தாள். வீரபாண்டியரிடமிருந்து ஓர் ஓலையும் கொண்டு வந்தாள். அதைப் படித்ததும் இவளை அழைத்துக்கொண்டு இந்தத் தலைநகருக்குச் செல்லுமாறும், உங்களைச் சந்திக்குமாறும் உத்தரவிட்டார். நாங்கள் தலை நகருக்கும் வந்தபோது தனியாக வரவில்லை. இன்னும் பத்துச் சாதாரணக் குடிகளும் வந்தார்கள். இவளை அவர்களுடன் தங்கவிட்டுத் தங்களைக் காட்டு முகப்பில் சந்தித்தேன். பிறகு நடந்தது உங்களுக்குத் தெரியும்," என்று விளக்கினான் கூத்தன்.

இந்திரபானு தீவிரச் சிந்தனையில் இறங்கினான். பிறகு கேட்டான், "கூத்தா! இவளைப் பற்றி பாண்டிய மன்னர் என்ன சொன்னார்?" என்று.

"இவள் எதைச் சொன்னாலும் அதற்குப் பணியும்படி உத்தரவிட்டார் பாண்டிய மன்னர்," என்றான் கூத்தன்.

"உன்னிடம் பாண்டிய மன்னரே அப்படி நேரில் சொன்னாரா?" என்று மீண்டும் வினவினான் இந்திரபானு.

"ஆம் தம்பி! இவள் முன்னதாகவே சொன்னார் பாண்டிய மன்னர். 'கூத்தா! இவளை நமக்குச் சமதையாக நடத்தும்படி வீரபாண்டியன் எழுதியிருக்கிறான். இவள் சொற்படி கேள், இந்திரபானுவையும் கேட்கச் சொல். இவள் ஆணை என் ஆணையாகும். என்று திட்டமாக உத்தரவிட்டார் சுந்தரபாண்டியத் தேவர்." என்று கூத்தன் தங்கு தடையில்லாமல் அரசாக்ஞையை எடுத்துச் சொன்னான்.

இந்திரபானு அதற்கு மேல் அதிகம் பேசவில்லை. "சாத்தா! இவளை அழைத்துக்கொண்டு அரண்மனைக்குச் செல். இவள் உத்தரவு எதுவானாலும் எங்களுக்குத் தெரிவி" என்று சாத்தனிடம் கூறிவிட்டு, "குறிஞ்சி! நீ விஜயவர்மன் பணிமகளானாலும் சரி, அவர் மதிப்புக்குரிய மருத்துவர் மகளானாலும் சரி, இப்பொழுது பாண்டிய மன்னரின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவள் என்பதை நினைப்பில்

வைத்துக் கொள். அதற்குத் துரோகம் செய்யாமல் நடந்து கொள்," என்று பணிப்பெண்ணை நோக்கிக் கூறிவிட்டு அவர்கள் செல்லலாமென்பதற்கு அறிகுறியாகக் கையை ஆட்டினான்.

அதற்குமேல் ஏதும் பேசாத சாத்தன் குறிஞ்சியைத் தன்னுடன் வரச் சைகை செய்துவிட்டுத் தனது விடுதியை விட்டுக் கிளம்பினான். விடுதிக்கு வெளியே கூப்பிடு தூரத்தில் அரண்மனையின் பெரிய சுவர் இருந்தது. அதன் தளத்தில் வீரர்கள் நடமாட்டமிருந்ததாலும் வாயிலில் புரவி வீரர் காவல் புரிந்ததாலும் அரண்மனைப் பகுதி அந்தக் காலை நேரத்தில் வெகு கம்பீரமாகக் காட்சியளித்தது. அரண்மனையின் பெரிய மதில்களுக்கும் காவலர் விடுதிகளுக்கும் இடையேயிருந்த பெருவீதியில் காவலுக்கு விரைந்து கொண்டிருந்த வீரர்கள் புரவிகளை அடித்த சாட்டையொலி எங்கும் எதிரொலித்தது.

விடுதியிலிருந்து வீதிக்கு வந்த சாத்தனும், குறிஞ்சியும் நீண்ட தூரம்வரை பேசாமலே நடந்தனர். கிட்டத்தட்ட அரண்மனை வாயிலருகில் வந்த சமயத்தில் குறிஞ்சியே பேச்சைத் தொடங்கினாள், "சாத்தா! நமது நிலை எப்படி?" என்று.

"மிக சௌக்கியம்," சாத்தன் வெறுப்புடன் பதில் சொன்னான்.

"நல்லவேளை சாத்தா. நான் யாரென்பதை உளறா திருந்தாயே?"

"நீங்கள் குறுக்கிடாதிருந்தால் உளறித்தானிப்பேன்!"

"என்ன வென்று! விஜயவர்மன் மகளென்றா?"

"உச், வாயை மூடு! உனக்கென்ன பைத்தியமா!" என்று சாத்தன் மிகுந்த திகிலால் அடியோடு மரியாதையைக் கைவிட்டுக் கூவினான்.



## அத்தியாயம் 29

# குறிஞ்சியின் முன்னேற்றம்

**சா**த்தன் அப்படித் திடீரென்று மரியாதையைக் கைவிட்டு 'உனக்கென்ன பைத்தியமா? வாயைமூடு' என்று கூவியதைக் கேட்ட குறிஞ்சி மற்றொரு முறை கலகலவென நகைத்தாள். யாருக்கும் இன்பமளிக்கவல்ல அந்த மனோகர நகைப்பு அந்தச் சமயத்தில் சாத்தனுக்குத் திகிலையும் வெறுப்பையுமே அளித்ததால் அவன் ஒருமுறை அக்கம் பக்கம் பாத்து, "சிரிப்பொன்றுதான் குறைச்சல் இப்பொழுது! தயவுசெய்து பேசாமல் வாருங்கள்," என்று கெஞ்சிய வண்ணம் சற்று நடையை வேகப்படுத்தினான்.

ஆனால் குறிஞ்சி மட்டும் பழையபடி உல்லாசமாக ஆடி ஆடி அழகெல்லாம் கொந்தளிக்க நடந்தாள். சற்று தூரம் முன் சென்றதும் திரும்பிப் பார்த்த சாத்தன் குறிஞ்சி பெரிதும் பின்தங்கிவிட்டதையும் அலட்சியமாகவும் மெதுவாகவும் உல்லாசமாகவும் நடந்து வருவதையும் கண்டு ஒரு வினாடி நின்றான்! அவள் மீண்டும் அவன் சமீபத்தை யடைந்ததும், "அம்மணி! இந்த நடைக்குக் காலமல்ல இது," என்று சற்றுப் பயத்துடன் கூறினான் சாத்தன்.

குறிஞ்சி அவனை நோக்கிப் புன்முறுவல் கோட்டினாள். "இந்த நடைக்குக் காலம் என்பது கிடையாது சாத்தா," என்றும் தெரிவித்தாள் புன்முறுவலுக் கிடையே.

சாத்தன் அவளுடன் பேச்சுக் கொடுத்துக்கொண்டே நடந்தான். "அம்மணி! எதற்கும் காலமும் உண்டு. சந்தர்ப்பமும் உண்டு. இரண்டையும் அனுசரித்தே நாம் நடக்க வேண்டும்," என்று சுட்டிக் காட்டினான் சாத்தன்.

“இந்த நடை என் இயற்கை நடை; எங்கள் இனத்தின் நடை,” என்று கூறினாள் குறிஞ்சி.

“இயற்கையைக் கொஞ்சம் மாற்றிக் கொள்ளுங்கள். இனத்தைச் சற்று மறந்து விடுங்கள்” என்று சாத்தன் உபதேசித்தான்.

“ஏன் சாத்தா?” என்று வினவினாள் அவள்.

“மன்னர்...” என்று இழுத்தான் சாத்தன்.

“மன்னருக்கென்ன?”

“அழகில் பைத்தியமுள்ளவர்.”

“அப்படியா?”

“ஆம். பெண் அழகாயிருந்தால்...”

“என்ன செய்வார்?”

“என்ன கேள்வி இது? எதையும் செய்வார்.”

“அதுதான் முடியாது சாத்தா.”

“ஏன் முடியாது?”

“எல்லாப் பெண்களையும் அணுகிவிட முடியாது. அணுகக்கூடிய பெண்களைத்தான் அணுகலாம்.”

“அப்படியோர் இனம் உண்டோ?”

“உண்டு. உதாரணமாகப் பாண்டிய குமாரியைப்பார். மன்னர் அணுகமுடிகிறதா அவளை?”

“அதற்குக் காரணம் உண்டு. பாண்டியன் மகள் விஷயத்தில் அரசியலும், போரும் சம்பந்தப்பட்டிருக்கின்றன.”

“அந்த சம்பந்தம் என் விஷயத்திலும் உண்டு சாத்தா” என்ற குறிஞ்சி லேசாக நகைத்தாள்.

அந்தச் சம்பந்தம் என்னவென்பது விளங்காததால் சாத்தன் பக்கவாட்டில் திரும்பி, “உங்களுக்கும் அரசியலுக்கும் போருக்குமா?” என்று வினவினான் சற்றுக் குழப்பத்துடன்.

“ஆம் சாத்தா! நான் அரசியலிலும் சம்பந்தப்பட்டிருக்கிறேன். போரிலும் சம்பந்தப்பட்டிருக்கிறேன். என்





வாழ்வில் அரசியல் கலக்காவிட்டால் பாண்டிய மன்னரிடம் நான் எப்படி வந்தேன் கோட்டாற்றுக் கரையை விட்டு? போர் கலக்காவிட்டால் இங்கு எதற்கு வருகிறேன் இந்த வேவு வேலைக்கு. அதுவும் அந்த இருவருடன் எதற்காகச் சேர்ந்து வருகிறேன்?” என்று கேட்ட குறிஞ்சி சாத்தன் மேலும் குழப்பமடைந்ததை நோக்கி, “சாத்தா! இதெல்லாம் உன்னை மீறிய விஷயங்கள். ஆகையால் இவற்றைப் போட்டு நீ குழப்பிக் கொள்ளாதே. உன் மைத்துனியென்று என்னை அரண்மனையில் அறிமுகப்படுத்துவதோடு நிறுத்திக் கொள். தவிர நான் விஜயவர்மர் மகளென்பதை யாரிடமும் சொல்லாதே” என்று சொன்னாள் பணிப் பெண். இதைச் சொன்ன அவள் குரலில் கண்டிப்பு இருந்தது, சற்று அதிகாரமும் கலந்து கிடந்தது.

இரண்டையும் கவனித்த சாத்தன், “அதைப்பற்றி நான் மூச்சுவிட மாட்டேன்,” என்றதோடு, “அம்மணி! இருப்பினும் ஒரு சந்தேகம்” என்றான்.

“கேள் சாத்தா” என்று ஊக்கினாள் குறிஞ்சி.

“விஜயவர்மன் பெண்ணென்று அறிந்து வீரபாண்டியர் உங்களை எப்படி நம்பினார்? நம்பி எப்படி உங்களைப் பாண்டிய மன்னரிடம் அனுப்பினார்? தவிர சிங்கணனிடம் சரணாகதியடைந்துவிட்ட வீரபாண்டியன் எப்படி உங்களைப் பாண்டிய மன்னரிடம் அனுப்ப முடிந்தது?” என்ற கேள்விகளைச் சரசரவென்று கேட்டான்.

அவன் கேள்விகள் சிறிதும் வியப்பை அளிக்கவில்லை குறிஞ்சிக்கு. வெகு துரிதமாகவும் எதிர்பாராத வகையிலும் நடந்துவிட்ட கோட்டாற்றுக்கரை நிகழ்ச்சிகள் இன்னும் சேரர் தலைநகரத்தை அணுகவில்லை என்பதை உணர்ந்து கொண்ட குறிஞ்சி அவற்றைப்பற்றி முழுவதும் விளக்காமல், “நான் விஜயவர்மர் மகளென்பது சேரநாட்டிலேயே பலருக்குத் தெரியாது. அப்படியிருக்க வீரபாண்டியருக்கு எப்படித் தெரியப் போகிறது? விஜயவர்மரின் நான்கு மனைவிகளில் என் தாய்தான் சிறியவள். அதுவும் ரகசிய விவாகம். அவள் இறக்கும்வரை அவள் படைத்தலைவர் மனைவி என்பது யாருக்கும் தெரியாதல்லவா?” என்று மட்டும் கூறினாள்.

கோட்டாற்றுக்கரைக் கோட்டையில், இளமைப் பருவத்தில் சேவை செய்த சாத்தனுக்குக் குறிஞ்சியின் பிறப்பு வளர்ப்பு நன்றாகத் தெரிந்திருந்தது. விஜயவர்மர் ஆஸ்தான மருத்துவர் வீட்டுக்கு அடிக்கடி இரவில் போய் வந்ததும், பிறகு மருத்துவர் பெண் ஒரு பெண்ணை ஈன்று மாண்டதும், முடிவில் மருத்துவர் பெண் படைத்தலைவனை முறைப்படி மணம் செய்து கொண்டவளென்பது புரிந்ததும், இதனால் ஏற்பட்ட வதந்தி விவகாரங்கள் பலவும் சாத்தன் அறிந்திருந்தான். இத்தனை இருந்தும் குறிஞ்சி மருத்துவப் பெண்ணாகவே படைத்தலைவன் மாளிகையில் வளர்க்கப்பட்டதும், பிறகு மன்னனுக்குப் பணிப்பெண்ணாகவே இருந்ததும் அவன் அறிந்த விஷயங்கள்தான். அவள் மேலுக்குப் பணிப்பெண்ணே தவிர கோட்டையில் அவளுக்கு அரச மரியாதை நடந்து வந்ததையும் சாத்தன் உணர்ந்திருந்தான். விஜயவர்மனுக்கு உண்மையில் பெரும் செல்லப் பெண் குறிஞ்சிதான் என்பது கோட்டை மாளிகையில் அனைவருக்குமே தெரிந்திருந்தாலும் 'பெரிய இடத்து விவகார'த்தை யாரும் பகிரங்கமாகப் பேசாமலே இருந்தார்கள். இத்தகைய சூழ்நிலையில் செல்வத்தில் வளர்ந்த குறிஞ்சி வீரபாண்டியனிடம் எப்படிப் பணிப்பெண்ணாகவும் வேவுகாரியாகவும் வந்து சேர்ந்தாள் என்பது மட்டும் சாத்தனுக்குப் புரியவில்லையானாலும் அதைப்பற்றி ஏதும் கேட்காமல் நடந்தான் அரண்மனை வாயிலை நோக்கி. வாயிலை நெருங்கியபோது மட்டும் குறிஞ்சி அவனை எச்சரித்தாள். "சாத்தா! நான் உன் மைத்துனி என்பதை மறக்காதே. அரண்மனைக் காவலர் முன் மரியாதையாக என்னைப் பற்றிப் பேசாதே" என்று.

'புரிந்தது' என்பதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் அசைத்த சாத்தன், உள்ளே எழுந்து அலைமோதிக் கொண்டிருந்த உணர்ச்சிகளின் காரணமாக ஏதும் பேசாமல் அரண்மனையின் பின்புற வாயிலை அணுகினான். தூரத்தே வரும் போதே அவனையும் அவனுக்குப் பின்னால் வந்துகொண்டிருந்த குறிஞ்சியையும்



கவனித்த பின்புற வாயில் காவலரில் ஒருவன் சாத்தன் வாயிலை அணுகியதும் புரவிமீதிருந்த வண்ணமே, வேல்களை நீட்டி அவனை மடக்கி, "யாரிது சாத்தா?" என்று வினவினான்.

"என் மைத்துனி. அரண்மனையில் வேலைக்கு வந்திருக்கிறாள்," என்று கூறிவிட்டு வேலைக் கையால் தள்ளிவிட்டுக் குறிஞ்சியுடன் மேலே நடந்த சாத்தன் மூன்று கட்டுகளைக் கடந்து அரண்மனையில் பின்பகுதிக்குள் நுழைந்தான். சாத்தனை அங்கு எல்லோருக்கும் தெரிந்திருந்ததால் அவனை யாருமே தடுக்காததால் அந்தப்புரத்தின் முகப்புக்கு வந்த சாத்தன், வெளித் தாழ்வரையில் குறிஞ்சியை நிற்கச் சொல்லிவிட்டு வாயிற்படிக்கருகில் காவல் நின்ற பெண்ணிடம் கிசுகிசுவென்று சில வார்த்தைகள் சொன்னான். அதைக் கேட்டதும் தலையசைத்து உள்ளே சென்ற அந்தப் பணிப்பெண் சில நிமிஷங்களில் திரும்பி வந்து சாத்தனையும் குறிஞ்சியையும் தன்னுடன் வரும்படி சைகை செய்தாள். பிரும்மாண்டமான சேரன் அந்தப்புரத்தில் நுழைந்த குறிஞ்சி அதன் சிறப்பைக் கண்டு பிரமித்தாள். உள் தாழ்வரையில் இருந்த பெரும் சிற்பங்களும், யவனர் விளக்குகளும், பாரத வர்ஷத்தின் வெண்கல பிம்பங்களும் அவள் கண்களை மட்டுமல்ல உள்ளத்தையும் கவர்ந்தன. போகத்துக்கு வேண்டிய சகல சௌபாக்கியங்களும் அந்தப்புரம் நெடுக இருப்பதையும், ஆங்காங்கு வாயிற்படிகளிலும், கட்டுகளின் முகப்புகளிலும் தொங்கிக் கொண்டிருந்த காமச் சித்திரங்களும் பெரும் பிரமிப்பை ஊட்டின அவளுக்கு. அப்படிப் பிரமித்து பார்த்துக் கொண்டு நடந்த குறிஞ்சியை ஒரு பெரும் அறைக்குள் அழைத்துச் சென்ற சாத்தன் அங்கு மஞ்சத்தில் அமர்ந்திருந்த ஒரு பெண்ணிடம் குறிஞ்சியை அறிமுகப்படுத்தினான். "அம்மணீ, இவளுக்குத்தான் வேலை வேண்டும்," என்று கூறினான்.

முதல் கட்டுக்காவல் பெண்ணிடமிருந்து அவள் யாரென்பதை ஏற்கெனவே அறிந்திருந்த அந்தப் பெண், "இவள் உன் மைத்துனியா?" என்று வினவினாள்.

"ஆம் அம்மணி," என்று பணிவுடன் கூறினான் சாத்தன்.

"அரண்மனையில் பணிபுரிந்து வழக்கமுண்டா?" என்று வினவினாள் அவள் மீண்டும்.

"இல்லை," என்றான் சாத்தன்.

"தெரிகிறது," என்றாள் அந்தப் பெண்.

அதுவரை வாளாவிருந்த குறிஞ்சி பணிவுடன் கேட்டாள், "எப்படித் தெரிகிறது?" என்று.

இதைக் கேட்ட அரண்மனைப் பணிப்பெண்களின் தலைவி சட்டென்று தலை நிமிர்ந்து அவளை நோக்கினாள். பிறகு கண்டிப்புடன் சொன்னாள், "அரண்மனையில் பணி புரிபவர்கள் கண்டபடி கேள்விகளைக் கேட்கக் கூடாது," என்று.

"சரியம்மணி," என்றாள் குறிஞ்சி புன்னகை செய்து.

அவள் புன்னகையில் விஷமம் துளிர்த்திருந்ததைக் கவனித்த தலைவி சற்றுமுகம் சுளித்தாள். "இவளை இங்கு விட்டுப்போ, சாத்தா. மாலையில் வா. இவளைப் பணி புரிய அமர்த்தமுடியுமா என்று சொல்லுகிறேன்," என்று கூறினாள்.

அத்துடன் அங்கிருந்து அகன்ற சாத்தன் மன நிம்மதி யின்றி அந்தப்புரத்திலிருந்து வெளியே நடந்தான். குறிஞ்சி யின் ஆரம்பப் பேச்சே அரண்மனைப் பணிப்பெண் தலைவிக்கு அதிருப்தியை அளித்திருக்கிறதென்பதைப் புரிந்து கொண்ட சாத்தன் அன்று மாலைக்குள் என்னென்ன தொல்லைகளை அவள் கிளப்பிவிடப் போகிறாளோ என்று அஞ்சியே அன்று பகல் முழுதும் தனது காவலைக் கவனித்தான். அவனை அன்று குருநாதர் சிறைப்பட்டிருந்த அறைக்கு வெளியே காவல் வைத்திருந்தார்கள். அவனுக்கிருந்த மனவேதனையில் குருநாதர் இட்ட இரண்டொரு பணியைக்கூடச் சரியாக நிறைவேற்றவில்லை. அன்று அவருக்கு உணவு கொண்டு சென்றபோது நீர்க்குவளை தவறி விழுந்து குருநாதர் அறையைத் தண்ணீர் மயமாக அடித்துவிட்டதும் அச்சப்பட்ட சாத்தனை குருநாதர் வியப்புடன் நோக்கினார்





"என்ன சாத்தா! இன்றென்ன கவலையுடன் இருக்கிறாய்?" என்று வினவினார்.

"ஒன்றுமில்லை குருநாதரே!" என்று சாத்தன் பொய் சொன்னான்.

"பின் ஏன் கை நடுங்குகிறது?" என்று வினவினார் குருநாதர்.

"நடுங்கவில்லை. குவளை தவறிவிட்டது," என்று உளறினான் சாத்தன்.

குருநாதர் புன்முறுவல் கொண்டார். ஆனால் அதற்கு மேல் ஏதும் பேசவில்லை. வேறு குடிநீர் கொண்டுவரச் சொல்லி ஆகாரத்தை முடித்துக் கொண்டார். பகல் காவல் முடிந்து வேறு காவலன் வந்ததும் நேராக அந்தப் புரத்தை அணுகிய சாத்தன், தலைமைப் பணிப் பெண்ணைச் சந்தித் தான். "மைத்துனியை வேலைக்கமர்த்திக் கொள் கிறீர்களா?" என்று வினவினான்.

பணிப்பெண்கள் தலைவி அவன்மீது வியப்பு நிரம்பிய பார்வையை வீசினாள். "அமர்த்திக் கொள்கிறோம்," என்று மட்டும் கூறினாள்.

"நான் ஒரு வினாடி அவளைப் பார்க்கலாமா?" என்று கேட்டான் சாத்தன்.

"சற்றுப் பொறு," என்று கூறிய தலைவி பணிப்பெண் ணொருத்தியை அழைத்து, "இவன் மைத்துனியை அழைத்துவா," என்று உத்தரவிட்டாள்.

உத்தரவுக்குப் பணிந்து தலையசைத்த பணிப்பெண் அந்தப்புரத்துக்குள் விடுவிடுவென்று நடந்து சென்றாள். ஆனால் வெகு நேரம் அவள் மட்டும் திரும்பவில்லை. நேரம் ஓடியது. அரண்மனையில் விளக்கேற்றுவோர் ஏணியும் பந்தமுமாக ஆங்காங்கு தீபங்களுக்கு எண்ணெய் ஊற்றித் திரியமைத்துக் கொளுத்தினார்கள். அந்தப்புரத்தின் அந்தப் பின்புற முகப்புக்கட்டில் பல விளக்குகள் பளிச்சிட்டதால் அந்தப் பகுதி பூராவும் இந்திரலோகம் போல் காட்சியளித்தது. விளக்குகள் ஏற்றப்பட்ட நாலைந்து நாழிகைகள் கழித்துத் திரும்பிய பணிப்பெண் தலைவியின்

காதில் கிசுகிசுவென்று ஏதோ கூறினாள். அதைக் கேட்டதும் தலைவியின் முகத்தில் பிரமிப்பு பெரிதும் தாண்டவமாடியது. கண்களில் அந்தப் பிரமிப்புப் பெரிதும் ஒளிவிட்டதன்றி அவள் உதடுகளிலிருந்து உதிர்ந்த சொற்களிலும் அச்சமிருந்தது. "உன் மைத்துனியை இப்பொழுது பார்க்க முடியாது சாத்தா," என்றாள் பணிப் பெண்களின் தலைவி உதடுகள் லேசாகத் துடிக்க.

"ஏன்?" கவலையுடன் வினவினான் சாத்தன்.

தலைவி உடனடியாகப் பதில் சொல்லவில்லை. "உன் மைத்துனி பெரிய கைகாரி சாத்தா," என்று இரண்டு வினாடிகளுக்குப் பிறகு கூறினாள்.

"நீங்கள் சொல்வது விளங்கவில்லை," என்றான் சாத்தன்.

"உன் மைத்துனியுடன் மன்னர் பேசிக் கொண்டிருக் கிறார். இப்பொழுது அவளை நீ பார்க்க முடியாது. புரி கிறதா?" என்று பெரிய வெடியை எடுத்து வீசினாள் பணிப் பெண்களின் தலைவி.

சாத்தன் வியப்பு உச்சிக்குச் சென்றது. "என்ன! மன்ன ருடன் பேசிக்கொண்டிருக்கிறாளா?" என்று வினவினான் பிரமிப்புடன் சாத்தன்.

"ஆம் சாத்தா."

"நிச்சயமாகவா?"

"சந்தேகமின்றி."

"யார் சொன்னது இதை?"

பணிப்பெண்களின் தலைவி மீண்டும் அவனை நோக்கினாள் வெறுப்புடன், "மன்னரே சொல்லியனுப்பி யிருக்கிறார். அவர் அந்தரங்க அறையில் இருக்கிறாள் உன் மைத்துனி," என்ற சொற்களில் இகழ்ச்சி நிரம்பிக் கிடந்தது.

சாத்தன் மலைத்து நின்றான். பெரும் அபவாதம் தன்னைச் சூழ்ந்து கொள்ளும் என்பதை உணர்ந்ததால் நின்ற இடத்தில் கற்சிலையென நின்றுவிட்டான் நீண்ட நேரம். குறிஞ்சியின் முன்னேற்றம் தனது குடும்பத்துக்கு அபவாதத்தின் முன்னேற்றம்கூட என்பதைப் புரிந்து கொண்டதால் அவன் உள்ளம் கொந்தளித்தது.

## அத்தியாயம் 30

# பார்த்திபனைக் குழப்பிய பணிப்பெண்

பணிப் பெண்களின் தலைவியின் பவளஉதடு களிலிருந்து உதிர்ந்த சொற்களால் படபடத்த இதயத் துடனும், கொந்தளித்த உள்ளத்துடனும் பேச நா எழாமல் பல விநாடிகள் நின்றுவிட்ட சாத்தன், குறிஞ்சியால் அன்றிலிருந்து தனது மானம் மரியாதை எல்லாம் காற்றில் பறந்து விடுமென்பதையும், மறுநாள் காவலுக்கு வரும்போது மற்ற காவலரின் இகழ்ச்சிப் பார்வைக்கும் அரண்மனைப் பணிப் பெண்களின் அவதூறுக்கும் இலக்காக வேண்டியிருக்குமென்பதையும் சந்தேகமறப் புரிந்து கொண்டான். அந்தச் சிந்தனையில் வேதனை நிறைந்த இதயத்துடன் பெரும் பளுவைத் தூக்கிச் செல்பவனின் சிரமம் மிகுந்த நடையுடன் தனது இல்லத்தை நோக்கி மெல்ல மெல்ல நடந்தான். அரண்மனையிலிருந்து சிறிது தூரமே உள்ள தனது இல்லத்துக்குச் சென்றபோது மனம் பல எண்ணங்களில் சுழன்று கொண்டிருந்தபடியால் அந்தச் சிறிது தூரத்தைக் கடக்கச் சாதாரண நாட்களில் பிடிக்கும் அவகாசத்தைவிட நான்கு மடங்கு அதிக அவகாசம் பிடித்தது அவனுக்கு. 'குறிஞ்சி ஒரே பகலுக்குள் அரசனை அணுக எப்படி முடிந்தது? அப்படியே அணுகினாலும் அவருடன் அந்தரங்கமாகப் பேசும் அளவுக்கு வழிவகை செய்துகொள்ள என்ன தந்திரத்தைக் கையாண்டிருக்க முடியும்?' என்ற கேள்வி வீடு போகும் வரையிலும், ஏன் வீட்டை அடைந்த பின்பும்கூட அவன் மனதில் எழுந்து எழுந்து அவனைத் திகைக்கச் செய்து கொண்டிருந்தன.

அவனை மட்டுமல்ல அக் கேள்விகள் திகைக்க வைத்தது. அரண்மனைப் பணிப்பெண் தலைவியையும்கூட அவை அறவே திகைக்க அடித்தன. சாத்தன் அந்தப்புரத்தை விட்டு நடந்த பின்பு அந்தப்புர வட்டாரத்திலும் அது பற்றிய பேச்சே நடந்தது.

சாத்தன் மைத்துனியை அழைத்துவரச் சென்ற நேரங் கழித்து அந்தத் திகைப்பூட்டும் செய்தியைக் கொண்டுவந்த பணிப்பெண்ணை நோக்கி, பணிப்பெண்களின் தலைவி கேட்டாள், "உண்மையில் அரசரே உன்னிடம் சொன்னாரா?" என்று.

"ஆம் அம்மணி! மன்னரே சொன்னார். இந்த விஷயத்தில் நான் பொய் சொல்வேனா??" என்றாள் பணிப் பெண் பதிலுக்கு.

"மாட்டாய். ஆனால் மன்னரை எப்படி நீ சந்தித்தாய்?" என்று வினவினாள் தலைவி.

"அம்மணி! காலையில் இவளை இரண்டாவது ராணியார் மாளிகையில் பணிபுரிய அனுப்பினீர் களல்லவா?"

"ஆம்."

"அங்குதான் முதலில் சென்று பார்த்தேன். அங்கில்லை இவள். அங்கு பணிபுரிந்து கொண்டிருந்த மற்றொருத்தி இவள் நடுப்பகலில் பட்டத்து ராணியாரி ருக்கும் மாளிகைக்குச் சென்றுவிட்டதாகச் சொன்னாள். அங்கிருந்து பட்டத்து ராணியாரின் மாளிகைக்கு வந்தேன். அங்குமில்லை இவள். அங்கு விசாரித்ததில் பட்டத்துராணியார் சற்றுமுன்புதான் இவளை மன்னரிடம் அனுப்பியதாகத் தெரிந்தது. அங்கிருந்து அந்தப்புர முன்பகுதியிலிருக்கும் மன்னர் கட்டுக்குச் சென்றேன். அங்கு காவல் புரிந்த வீரர்கள் யாரோ ஒரு புதுப் பெண்ணுடன் மன்னர் அந்தரங்க அறையில் பேசிக் கொண்டிருப்பதாகக் கூறினார்கள். நான் அந்தரங்க அறை யின் வாயிலில் நின்றுகொண்டிருந்தேன். மன்னர் திடீரென வெளியே வந்தார். என்னைப் பார்த்ததும் 'நல்லதாய்ப் போயிற்று. இன்று குறிஞ்சி வரமாட்டாளென்று அவள்





வீட்டுக்குச் சொல்லியனுப்பிவிடு' என்று கூறினார். உடனே வந்துவிட்டேன். இந்த அந்தப்புர மாளிகையில் ஒன்றை விட்டு ஒன்று ஏறி இறங்கி என் கால் முறிந்துவிட்டது."

அந்த விவரத்தைக் கேட்ட பணிப் பெண்களின் தலைவி முகத்தில் பிரமிப்பு விரவிக் கிடந்தது. அதுவரை அந்த அரண்மனையில் நடந்திராத விசித்திரம் அது. கட்டழகுள்ள பெண்களைக் கண்டால் வீரரவி சற்று மகிழ்ந்து பார்ப்பாரென்பதைப் பணிப் பெண்களின் தலைவி உணர்ந்திருந்தாலும், எந்தப் பணிப் பெண்ணும் தானாக அரசனை அணுகுவதையும், அந்தரங்க முறையில் பேசுவதையும் அவள் அங்கு பணி செய்த பதினைந்து ஆண்டுகளில் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை. தவிர அரண்மனை வேலையில் முன்னேற விருப்பமுள்ளவர்கள் கூட தன்னைத் திருப்தி செய்து முன்னேற முற்படுவார்களே யொழிய மன்னரை நேராக அணுகும் துணிவு யாருக்கும் கிடையாதென்பதையும் தலைவி உணர்ந்திருந்தாளாதலால், இந்தப் புதுப் பணிப்பெண்ணின் துணிகர சாகசச் செயலை நினைத்து நினைத்து வியந்துகொண்டிருந்தாள் .

அவள் வியப்பைவிடப் பன்மடங்கு அதிக வியப்பில் அன்று ஆழ்ந்திருந்தான் சேரநாட்டு அதிபதி வீரரவி உதய மார்த்தாண்டவர்மன். தனது அந்தரங்க அறையில் காவலன் அறிவிப்பில்லாமல் எதிர்பாராத விதமாகத் திடீரென நுழைந்துவிட்ட குறிஞ்சியை முதன் முதலில் வியப்புடன் ஏறெடுத்து நோக்கினான் வீரரவி. அவள் திடீரென்று வேகத்துடன் உள்ளே நுழைந்ததையும், அவளைத் தடுக்க முயன்று முடியாமல் அவளைத் தொடர்ந்து வந்த காவலன் தன்னைக் கண்டதும் பயத்தால் அசைவற்று நின்று விட்டதையும் விநாடி நேரம் கவனித்த வீரரவி, காவலனை வெளியே செல்லுமாறு சைகை செய்தான். காவலன் வெளியே சென்றதும் குறிஞ்சியின்மீது நிதானமாகத் தன் கண்களைச் சில விநாடிகள் ஓட்டினான். நல்ல தேகக் கட்டுடன் அழகு ததும்ப நின்றிருந்த குறிஞ்சியைப் பார்த்த மன்னன் அவள் ஆடைகள்தான் நகரத்து ஆடைகளே தவிர, அவள் மலைவாசியென்பதை விநாடி நேரத்தில் புரிந்து கொண்டான். மலைசாதியானாலும் அவளிடம் நாகரிகம்

சற்று அதிகமாகவே கலந்து காணப்படுவதையும், அவள் நின்ற தோரணையிலிருந்து அவள் மாளிகை வட்டாரத்துப் பழக்கவழக்கங்களில் பயிற்சி உள்ளவளென்பதையும் நொடிப் பொழுதில் உணர்ந்துகொண்ட வீரரவி தனது கண்களுடன் அவளது கண்கள் நிர்ப்பயமாகக் கலந்து நிற்பதைக் கண்டு பெரும் வியப்பும் கொண்டான். “சூறாவளி காட்டில் உதயமானாலும். நாட்டில் நுழையும்போது வேகத்துடன்தான் நுழைகிறது. அதையாரும் தடுக்க முடிவதில்லை,” என்று அந்த வியப்பின் ஊடே சொற்களையும் உதிர்த்தான் சேரர் பெருமான்.

மன்னன் சொற்கள் குறிஞ்சியின் அசையா மனத்தையும் ஒரு விநாடி அசைய வைத்தன. அவன் ஒரே பார்வையில் தன்னை இன்னாரென்று எடை போட்டுவிட்டதைப் புரிந்து கொண்டாள் அவள். தனது நாகரிக உடை மன்னன் கண்களை மறைக்க முடியவில்லையென்பதையும் தான் மலைவாசியென்பதைப் புரிந்துகொண்டே காட்டுச் சூறாவளி வேகத்துடன் பிரவேசிப்பதைத் தன் அசந்தர்ப்ப அந்தரங்க அறைப் பிரவேசத்துக்கு மன்னன் உவமை கூறுகிறானென்பதையும் உணர்ந்து கொண்டாள். ஆகவே குறிஞ்சியும் சற்றுத் தன்னைத் திடப்படுத்திக்கொண்டு மன்னனுக்குத் தலைதாழ்த்தி, “உவமையாலேயே உண்மையை உணர்த்தக்கூடிய தனிப்பெரும் சக்தி எங்கள் சேரர் பெருமானைத் தவிர வேறு யாருக்கு உண்டு?” என்று மெல்ல மெல்லப் பதில் சொல்லும் பாவனையில் சொற்களை உதிர்த்தாள்.

மன்னன் இதழ்கள் அந்தப் பாராட்டின் விளைவாகக் குறுநகை கொண்டன. “உண்மைக்குச் சான்று கூறுவது உவமை. உண்மையை முற்றிலும் அவிழ்க்க உவமைக்குச் சக்தி இல்லையல்லவா?” என்றான் மன்னன், மீதியைக் கூற வேண்டியது குறிஞ்சியென்பதைச் சுட்டிக் காட்ட.

“அவிழ்ப்பது தங்கள் பணிமக்கள் கடமை,” என்றாள் குறிஞ்சி மன்னனை நோக்கி.

“அந்தக் கடமையை நிறைவேற்ற மன்னன் வாயிலிருந்து உத்தரவு வேண்டுமா மருத்துவப் பெண்ணே?” என்று கேட்டான் மன்னன்.





மீண்டும் அதிர்ச்சியடைந்து நின்றாள் குறிஞ்சி. “மன்னா!” என்று அதிர்ச்சியின் விளைவாக ஒற்றைச் சொல்லையும் உதிர்த்தாள்.

மன்னன் மெல்ல நகைத்தான். “பச்சிலை கசக்கும் கைகளில், சாயம் போகாத சில பச்சிலைகள் அடையாளங்களை விட்டு வைக்கின்றன,” என்றும் கூறி அவள் இடுப்பில் மடங்கியிருந்த உட்கையின் சாயத்தைச் சுட்டிக் காட்டினான்.

குறிஞ்சி அதைத் திருப்பிப் பார்த்தாள், பயத்துடன் மன்னனை நோக்கினாள். “மன்னா! உங்கள் கண்களிலிருந்து தப்பக்கூடியது ஏதாவது உண்டா?” என்று வினவவும் செய்தாள்.

“உண்டு” என்றான் வீரரவி மேலும் நகைத்து.

“என்ன அது?”

“பெண்களின் மனம்.”

“பெண்களின் மனமா?”

“ஆம். அதை என் கண்களும் அண்ட முடிவதில்லை, என் சிந்தையும் அண்ட முடிவதில்லை.”

“அப்படியா!

“ஆம். உதாரணமாக உன் இதயத்தில் என்ன இருக்கிறதென்பதைக்கூட என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.”

“மன்னவா” குறிஞ்சியின் குரல் பயத்துடன் ஒலித்தது.

“பெண்ணே, உன்னை இன்றுவரை நான் அந்தப் புரத்தில் பார்த்ததில்லை. ஆகையால் நீ இன்றோ நேற்றோ புதிதாகச் சேர்ந்திருக்கவேண்டும். இந்தக் குறுகிய காலத்திற்குள் பட்டத்துராணி உன்னை இங்கு அனுப்பி வைக்கும் பெரும் பதவிக்கு உயர்ந்துவிடுகிறாய். இந்த அரண்மனையில் இந்தப் பதவிக்கு வரச் சுமார் பத்து வருடம் காத்திருப்பவர்கள் இருக்கிறார்கள் தெரியுமா உனக்கு? உன் திடீர் உயர்வு உனக்கே வியப்பாயில்லை?” என்று வினவினான் மன்னவன்.

குறிஞ்சி உடனடியாகப் பதில் சொல்லவில்லை. மன்னனைச் சிறிது உற்று நோக்கவிட்டுச் சொன்னாள், “இல்லை,” என்று திடமாக.

மன்னன் விழிகளில் சிறிது வியப்பு மலர்ந்து மறைந்தது. "இல்லையா?" என்று கேட்டான் மன்னவன் அகத்தே எழுந்த வியப்பைப் புறத்தே காட்டாமல்.

"இல்லை மன்னா! இரண்டாவது ராணியார் பட்டத்து ராணியாரிடமும் பட்ட மகிஷி தங்களிடமும் என்னை அனுப்பியதற்குக் காரணம் இருக்கிறது," என்றாள் குறிஞ்சி.

"என்ன காரணம்?" மன்னன் கேள்வி சர்வசாதாரணமாக எழுந்தாலும் அதில் உள்ளூரக் கோபம் துளிர்த்தது குறிஞ்சிக்குப் புரிந்தது.

ஆனால் அவள் அதை லட்சியம் செய்யாமல் சொன்னாள்; "பெரும் அரசியல் ரகசியம் என்னிடமிருப்பதாகக் கூறினேன் இரண்டு ராணிகளிடமும்."

"என்ன ரகசியம் என்று அவர்கள் கேட்கவில்லையோ?"

"கேட்டார்கள்."

"நீ என்ன பதில் சொன்னாய்?"

"மன்னரைத் தவிர வேறு யாரிடமும் அதைச் சொல்ல முடியாதென்று சொன்னேன்."

"உன்னை அவர்கள் காவலரிடம் ஒப்படைப்பதாகக் கூறவில்லையா?"

"கூறினார்கள். அதைப்பற்றிக் கவலையில்லையென்று கூறினேன். கடைசியில் நீங்களே விசாரித்துத் தண்டிக்கட்டுமென்று இங்கு அனுப்பினார்கள்."

குறிஞ்சியின் சொற்கள் வீரரவியின் கோபத்தைவிட வியப்பையே அதிகமாகக் கிளறிவிட்டன. இரண்டு ராணிகளை எதிர்த்து, குழப்பி, தன்னை காணவந்த அவள் துணிவு அவனைத் திகைக்கக்கூடச் செய்தது. ஆகவே கேட்டான், "நான் உன் ரகசியத்தைக் கேட்க மறுத்துச் சிறையிலடைத்தால் என்ன செய்வாய்!" என்று.

"எதுவும் செய்யமாட்டேன். பரிதாபப்படுவேன்," என்றாள் குறிஞ்சி நன்றாகத் தலைநிமிர்ந்து மன்னனை நோக்கி.





"எதைப் பற்றிப் பரிதாபப்படுவாய்?" என்று வினவினான் மன்னன்.

"சேரநாட்டுத் தலைவிதியைப் பற்றி." இந்தச் சொற்களை மெல்ல அழுத்தமாக உச்சரித்தாள் பணிப்பெண் குறிஞ்சி.

"அதன் தலைவிதி கேவலம் பணிப்பெண்ணொருத்தியின் கரத்திலா இருக்கிறது?" என்று சீறினான் சேரன்.

"தற்சமயம் அப்படித்தானிருக்கிறது," என்றாள் குறிஞ்சியும் உறுதியாகவும் திட்டமாகவும்.

அந்தச் சந்தர்ப்பத்தில் வீரரவியைத் தவிர வேறு யாராக இருந்தாலும் கண்டிப்பாக நிலைகுலைந்திருப்பார்கள். கோபத்தின் வசப்பட்டுக் குறிஞ்சியை வெளியே இழுத்துச் செல்லும்படி காவலரை அழைத்து உத்தரவும் பிறப்பித்திருப்பார்கள். ஆனால் உணர்ச்சிகளை அடக்கிக் கொள்ளும் ஆற்றல் வாய்ந்தவனும் பெரும் அறிவாளியுமான சேர மன்னன் தன்னைப் பெரிதும் அடக்கிக் கொண்டான். குறிஞ்சியின் தோரணையிலிருந்தே அவள் ஏதோ பெரும் ரகசியத்தை வைத்திருக்கிறாளென்பதைப் புரிந்தும் கொண்டான். ஆகவே கேட்டான், "சொல் பெண்ணே! அத்தனை பெரிய ரகசியம் என்னவென்பதைப் பார்ப்போம்," என்று.

குறிஞ்சி உடனடியாகப் பதில் சொல்லவில்லை. அக்கம் பக்கம் கண்களை ஓட்டினாள். பிறகு வெளியே செல்லக் காலடி எடுத்து வைத்தாள். "இரு" என்று சொல்லிவிட்டு மன்னனே எழுந்திருந்து வெளியே சென்றான். குறிஞ்சியைத் தேடி வந்து அங்கு காத்து நின்ற பணிப்பெண்ணை நோக்கி, "எதற்கு வந்தாய்? இங்கு என்ன வேலை உனக்கு?" என்று சீறினான்.

"இன்று ஒரு புதுப் பணிப் பெண் வேலைக்கு வந்தாள்..." என்று கூறு முன்பு, "அவள் இங்கு தானிருக்கிறாள். இப்பொழுது வரமாட்டாள். யாராவது கேட்டால் சொல்லி விடு," என்று கூறிவிட்டு உள்ளே சென்றான் மன்னவன். அந்தச் செய்தியை தலைவிக்கும்

சாத்தனுக்கும் அறிவிக்கப் பணிப்பெண் ஓடியதும் அந்தரங்க அறைக்குள் மீண்டும் வந்து மன்னவன், "பெண்ணே! இனி யாரும் இங்கு வர மாட்டார்கள். விஷயத்தைச் சொல்," என்றான்.

"மன்னவா..." என்று துவங்கினாள் குறிஞ்சி.

"என்ன பெண்ணே?"

"என் பெயர் குறிஞ்சி!"

"சரி."

"நான் மருத்துவக் குலத்தவள். மலையில் பச்சிலை தேடுபவள்."

"இவைதான் ரகசியமா," என்ற மன்னன் குரலில் உஷ்ணம் தெரிந்தது.

"இல்லை மலைப்பகுதியிலிருந்து வருகிறேன்," என்றாள் குறிஞ்சி.

"அதுவும் பெரிய ரகசியமில்லை," என்றான் சேரன்.

"இல்லை. அதுகூட ரகசியமில்லை. ஆனால் நான் சேர நாட்டு எல்லை மலைப்பகுதிலியிருந்து வருகிறேன் என்பது ரகசியம். அதுவும் பாண்டிய மன்னனிடமிருந்து வருகிறேன் என்பது பெரும் ரகசியமல்லவா?" என்று மெதுவாகச் சொன்னாள் குறிஞ்சி.

அதுவரை பெரிதும் அடங்கிக்கிடந்த சேரன் உணர்ச்சிகள் படீரென வெடித்தன. "என்ன! என்ன சொன்னாய்?" என்று படபடத்துக் கேட்டான்.

"ஆம் மன்னா, நான் பாண்டியனிடமிருந்துதான் வருகிறேன். அவர் நம்பிக்கைக்குப் பாத்திரமாகத்தான் வருகிறேன். வேண்டுமானால் இதைப் பாருங்கள்," என்று மடியிலிருந்து ஒரு மோதிரத்தை எடுத்துச் சேரனிடம் நீட்டினாள்.

பாண்டிய நாட்டு ராஜமுத்திரை 'அந்த அந்தரங்க அறையில் மணி விளக்குகளில் கண்ணை அள்ளும் படியாகப் பளிச்சிட்டது. அது அள்ளித் தெளித்த வர்ண ஜாலங்கள் சேரமன்னன் முகத்தில் தாக்கித் தாக்கி



அசைந்தன. அம்மோதிரத்தை மன்னன் கையில் வாங்கியதும் பல விநாடிகள் அசைவற்று நின்றான். திரும்பத் திரும்ப அந்த முத்திரை மோதிரத்தைப் பார்த்துக் கொண்டு நின்றான். நீண்ட நேரத்திற்குப் பின் தலை தூக்கிய அவன் குறிஞ்சியைக் குழப்பத்துடன் நோக்கினான். "இம் முத்திரை மோதிரம் பாண்டிய நாட்டுப் படைத் தலைவர்களுக்கு மட்டும் கொடுக்கப்படுகிறது," என்றும் கூறினான்.

"ஆம்," என்றாள் குறிஞ்சி மெதுவாக.

"விசேஷத் தூதர்களுக்கும் கொடுக்கப்படுகிறது," என்றும் சுட்டிக் காட்டினான் சேரன்.

"ஆம்," என்று மீண்டும் ஆமோதித்தாள் குறிஞ்சி.

"அந்த இரண்டில் நீ யார்?" என்று வினவினான் வீரரவி.

"இரண்டுமில்லை."

"அப்படியானால் பாண்டியன் ராஜமுத்திரை உனக்கு எப்படிக் கிடைத்தது?"

"அது பெரும் கதை."

"அந்தக் கதையைச் சொல் குறிஞ்சி. நீ பாண்டியன் வேவுகாரியா அல்லவாவென்பதை முடிவு செய்கிறேன்."

இதைக் கேட்ட குறிஞ்சியின் இதழ்களில் நகை அரும்பியது. அத்துடன் மடியிலிருந்து மற்றொரு மோதிரத்தையும் எடுத்து, "இதையும் பாருங்கள் மன்னவா," என்று அரசனிடம் நீட்டினாள்.

அதை கையில் வாங்கியதும் அடியோடு குழம்பிப் போனான் மன்னன். "இதென்ன, எனக்கேதும் புரியவில்லையே," என்றான் அந்த இரண்டு மோதிரங்களையும் மாறிமாறிப் பார்த்துக் குழம்பிக் கொண்டே. சேரநாட்டுப் பார்த்திபனையே குழப்பிவிட்ட பணிப்பெண் குறிஞ்சி, "உட்காருங்கள் மன்னா! விவரமாகச் சொல்கிறேன்," என்று மன்னனுக்கு அவனது மஞ்சத்தைச் சுட்டிக் காட்டினாள். அவன் உட்கார்ந்தும் வீரரவியும் வியந்து மலைக்கும் விவரங்களைக் கூற முற்பட்டாள் குறிஞ்சி.

## அத்தியாயம் 31

# வீட்டில் மலர்ந்த காட்டு மலர்

பணிப்பெண் குறிஞ்சி காட்டிய இரண்டாவது மோதி ரத்தைக் கண்டதும் பெருமலைப்புக்கும் குழப்பத்துக்கும் பாத்திரமாகிவிட்ட சேரமான், அவள் மஞ்சத்தில் உட்கார ஆணையிட்டதும், மறுத்து ஏதும் பேசாமல் அவள் சுட்டிக் காட்டிய இடத்தில் அமர்ந்து அவள் சொல்ல முற்பட்டதைக் கேட்க வெகு ஆவலுடன் அவள் அழகிய முகத்தில் தனது விழிகளை நாட்டினான். குறிஞ்சி மெள்ளப் புன்முறுவல் செய்து, "மன்னா, அந்த இரண்டாவது மோதிரம் போசள நாட்டு முத்திரை மோதிரம்," என்று மெல்லிய குரலில் கூறினாள். மன்னன் புத்தியில் தனது சொற்கள் உறைக்கும் வரை காத்திருந்து மீண்டும் சொன்னாள், "இதை நான் திருடவில்லை. போசளத் தளபதியே எனக்குக் கொடுத்தார்," என்று.

வீரரவியின் விழிகள் வெறித்த நிலையிலிருந்து மீண்டும் வியப்பு நிலைக்குத் திரும்பின. "என்ன! சிங்கணனா!" என்று அவன் உதடுகளிலிருந்து உதிர்ந்த சொற்களிலும் அந்த வியப்பு மிதமிஞ்சி ஒலித்தது.

"ஆம்! போசளர் தளபதி சிங்கணன்தான்," என்ற பணிப்பெண் குறிஞ்சி, "நான் பாண்டியர் வேவுகாரியா யிருந்தால் போசள ராஜமுத்திரை என்னிடமிருக்க காரண மில்லை. நான் போசளர் வேவுகாரியாயிருந்தால் பாண்டிய ராஜமுத்திரை என்னிடமிருக்கக் காரணமில்லை. இருவருக்கும் வேவுகாரியாக இருந்தால் ,இத்தனை நாள் என் உயிர் காலனிடம் சரணடைந்திருக்கும்," என்றும் விளக்கினாள்.



அவள் விளக்கம் சரியென்பதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் ஆட்டினான் வீரரவி. ஆனால் அந்தத் தலையசைவிலும் அவன் குழப்பம் விலகாததை முகத்தின் தோற்றத்திலிருந்தே கண்டுகொண்ட குறிஞ்சி, "இதிலிருந்து தெரியவில்லையா நான் யாருக்கும் வேவுகாரியல்ல வென்று?" என்று சுட்டிக் காட்டினாள்.

வீரரவி அவளை நன்றாக ஏறெடுத்து நோக்கினான் ஒருமுறை. பிறகு பெருமூச்சொன்றும் அவனிடமிருந்து வெளி வந்தது. அந்தப் பெருமூச்சைத் தொடர்ந்து, "எனக்கு எதுவும் தெரியவில்லை, புரியவில்லை!" என்று அவன் கூறிய சொற்களில் குழப்பத்தோடு அலுப்பும் இருந்தது.

மன்னன் புத்தியிலோடிய உணர்ச்சிகளை சந்தேக மறப் புரிந்துகொண்டாள் குறிஞ்சி. மிகப் புத்திமானான வீரரவிக்குத் தன்னால் ஒரு பணிப் பெண்ணின் மனத்திலிருப்பதை அவிழ்க்க முடியவில்லையே என்ற ஏக்க மிருந்ததையும் அதன் காரணமாக அவன் சொற்களில் அலுப்புத் தொனித்ததையும் அவள் அறிந்து கொண்டதால் அவள் சற்று அனுதாபத்துடன் வீரரவியை நோக்கி, "மன்னா! சேரநாடு பெரும் அபாயத்தில் சிக்கியிருக்கிறது. ஆகையால் அதன் குடிகள் அதைக் காப்பாற்றப் பலவித வேடங்கள் தரிக்க வேண்டியிருக்கிறது. அந்த வேடங்களில் இந்தப் பணிப்பெண் வேடமும் ஒன்று. இந்த வேடம் எனக்குப் பலனளித்தது," என்று கூறினாள்.

"என்ன பலன் பெண்ணே?" என்று வினவினான் சேர மன்னன் ஏதும் புரியாமல்

"முதல் பலன் வீரபாண்டியன் நம்பிக்கைக்குப் பாத்திரமானது. இரண்டாவது பலன் சிங்கணர் நம்பிக்கைக்குப் பாத்திரமானது. நான் மருத்துவச் சாதியாதலால், கோட் டாற்றுக்கரைக் கோட்டைக்கு வெளியில் எப்பொழுதும் சென்றுவர இம்முத்திரை மோதிரத்தை வீரபாண்டியர் கொடுத்தார். போரில் காயமடைந்த பாண்டிய வீரர்களுக்கு மூலிகை கொண்டுவரும் காரணம் காட்டிக் கோட்டைக்கு வெளியே

சென்று மலைக்காட்டில் மறைந்து இராக் காலங்களில் சிங்கணரைச் சந்தித்தேன். கோட்டையில் வேவு பார்க்க அவர் இம்மோதிரத்தை என்னிடம் கொடுத்தார்," என்று கூறினாள் குறிஞ்சி.

"அப்படியானால், நீ சேர நாட்டுக்குப் பெரும் பணி புரிந்திருக்கிறாய்," என்றான் வீரரவி.

"பணி புரிந்திருக்கிறேனா!" இம்முறை குறிஞ்சியின் சொற்களில் வியப்பு இருந்தது.

"ஆம்," என்றான் மன்னன்.

"என்ன பணி?"

"சிங்கணன் வெற்றிக்கு நீ உதவியிருக்க வேண்டு மல்லவா?"

"சிங்கணன் வெற்றியா!"

"ஆம், வீரபாண்டியன் சரணாகதி சிங்கணன் வெற்றி தானே?"

வீரரவியின் இந்தச் சொற்களைக் கேட்ட குறிஞ்சி கலகலவென நகைத்தாள். "என்ன! கனவு ஏதாவது கண்டீர்களா மன்னா?" என்று வினவினாள் சிரிப்பின் ஊடே.

அவள் சிரிப்பும் கேள்வியும் வீரரவியின் சினத்தைக் கிளறி விடவே, "கனவல்ல பெண்ணே! செண்டுவெளி யன்று செய்தி வந்தது சிங்கணனிடமிருந்து," என்று சீறினான் சேரமன்னன்.

"என்ன செய்தி?"

"வீரபாண்டியன் சரணடைய ஒப்புக் கொண்டதாக."

"ஒப்புக் கொள்வது வேறு: சரணடைவது வேறு அல்லவா?"

அந்தக் கேள்விக்கு நேரிடையாகப் பதில் சொல்ல வில்லை மன்னன். "மன்னா! அந்தச் செய்திக்குப் பின்பு ஏதாவது செய்தி வந்ததா சிங்கணரிடமிருந்து?" என்று ஒரு கேள்வியை மீண்டும் கேட்டாள் குறிஞ்சி.

"இல்லை," என்றான் மன்னன்.



"ஏனில்லை? முதல் செய்திவந்து நாட்கள் ஆகவில்லை?"

"ஆகிறது."

"பல நாட்கள் செய்தி அனுப்பாமல் ஒரு படைத் தலைவன் வாளாவிருக்க முடியுமா?"

"அது அங்குள்ள போர் நிலையைப் பொறுத்தது."

இதைக் கேட்ட குறிஞ்சி சற்று நிதானித்துவிட்டுச் சொன்னாள், "உண்மை மன்னா! ஆனால் போர் நிலையைப் பற்றி உபதலைவராவது ஏதாவது செய்தி யனுப்பியிருக்கலாம் அல்லவா?" என்று.

"அனுப்பியிருக்கலாம்," என்றான் மன்னன்.

"ஏன் அனுப்பவில்லை?" என்று கேட்ட குறிஞ்சி, "அனுப்பும் நிலையில் அவர்கள் இல்லை. சரணாகதிப் போர்வையில் வீர பாண்டியர் சிங்கணன் படைகளுக்குப் பெரும் சேதம் விளைவித்துவிட்டார். அதற்கு நானே சாட்சி," என்றாள் குறிஞ்சி மெள்ள.

"என்ன, வீரபாண்டியன் சிங்கணனுடைய படை களுக்குச் சேதம் விளைவித்தானா? அவன் சிறு படையெங்கே, சேரர் மாபெரும் படையெங்கே?" என்றான் வீரரவி உக்கிரத்துடன்.

குறிஞ்சி சிறிதளவும் அச்சத்தைக் காட்டாமல் உறுதி யுடன் நின்ற இடத்தில் நின்றாள். "மன்னா! இந்தப் போரில் படைபலம் வெல்லவில்லை. அறிவு வென்றது. யாராலும் அளவிட முடியாத ஆழம்படைத்த வீரபாண்டியரின் அறிவு வென்றது," என்று குறிஞ்சி மேலும் சொன்னாள்: "மன்னா. சிங்கணர் பெரும் படைத்தலைவர். தந்திரசாலி. ஆனால் வீரபாண்டியர் போர்த் தந்திரதை ஊகிக்கக்கூட முடியவில்லை சிங்கணரால். பக்கத்திலேயே இருந்த என்னாலேயே ஊகிக்க முடியவில்லை. அவர் சிந்தனையில் திட்டம் உருவாகிறது. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவிதப் பணி இடுகிறார். ஏன் அப்பணி இடுகிறார் என்பது பணியை மேற்கொள்பவருக்கே புரியாது. ஆனால் அந்தப் பல பணிகள் காலப் பிரமாணப்படி ஒன்றுசேரும் போது

எதிர்பாராத விளைவுகள் ஏற்படுகின்றன. அவர் தனது சிந்தனைகளை, திட்டங்களை யாருடனும் பகிர்ந்து கொள்வதில்லை. அவர் மனைவி அந்த இளநங்கையிடம் கூட முழுவதும் அவர் எதையும் சொல்வதில்லை. மனைவி, பணிப்பெண், படைத் தலைவர்கள் எல்லோரும் சதுரங்கக் காய்கள். பாண்டிய இளவரசர் தமது இஷ்டப்படிகாய்களை நகர்த்துகிறார். இப்படித்தான் நடந்தது கோட்டையில். அவர் தாக்கச் சொன்ன இரவில் சிங்கணர் தாக்கினார். அதுவும் வீரபாண்டியர் திட்டத்துக்கு முற்றும் மாறான இடத்தில், அவர் எதிர்பாராத இடத்தில் தாக்கினார். ஆனால் வீரபாண்டியர் அதை முன்பாக எதிர்பார்த்திருக்க வேண்டும். எப்படியென்று என்னைக் கேட்காதீர்கள். எனக்கே சரியாகத் தெரியாது. இளநங்கையையும் முந்நூறு வீரர்களையும் கொண்டு சிங்கணரின் தாக்குதலை முறித்து விட்டார் வீரபாண்டியன். அந்தப் போரின்போது நானும் இருந்தேன். நானும் பங்கு கொண்டேன்."

எதற்கும் அசையாத அவன் மனமும், அப்பொழுது அசைந்து கிடந்தது. "நீ சொல்வது உண்மையா?" என்று வினவினான்.

"ஆம்."

"அப்படியானால் சிங்கணன் சரணடைந்து விட்டானா?"

"இல்லை."

"நீ எப்பொழுது கிளம்பினாய் கோட்டாற்றுக் கரையிலிருந்து?"

"நான் குறிப்பிட்ட போர் முடிந்த மறுநாள்."

"ஏன் கிளம்பினாய்?"

"வீரபாண்டியர் உத்தரவுப்படி பாண்டிய மன்னனுக்கு ஓலை கொண்டு கிளம்பினேன்."

"என்ன ஓலை?"

"அது தெரியாது. ஆனால் பயணத்தில் ஒன்று கண்டேன்."



"என்ன?"

"மலைவழி பூராவும் ஆங்காங்கு கண்காணிப்பு இருந்தது. பாண்டியப் படைகள் கோட்டாற்றுக் கரைக்கும் தலை நகர எல்லைக்கும் இடையே யாரும் புகமுடியாத திரையை அமைத்திருக்கின்றன. அதைக் கிழித்துக் கொண்டு இங்கு செய்தி வருவதும் சாத்தியமல்ல"

வீரரவிக்கு இது பெரும் வியப்பாயிருந்தது. சற்றுச் சிந்தித்துவிட்டு வினவினான். "எப்படி அத்தகைய திரையை அமைக்க முடியும்? பாண்டியர்களிடம் அத்தனை பெரும் படையில்லையே? தவிர, நமது கடற்படை அங்கு வந்திருக்க வேண்டுமே?" என்று.

"கடற்படை அங்கு வரவில்லை." குறிஞ்சியின் சொற்கள் மெள்ள மெள்ள உதிர்ந்தன.

வீரரவி மலைத்து நின்றான். "ஏன் வரவில்லை?" என்று சீறினான் சில விநாடிகளுக்குப் பிறகு.

"காரணம் தெரியவில்லை. ஆனால், அதுவும் வீரபாண்டியன் சூழ்ச்சியாகத்தான் இருக்க வேண்டும். நான் கோட்டாற்றுக் கரையில் அவரிடம் பணிபுரிந்த ஒவ்வொரு நாளும் அவர் சதா ஓலைகளை எழுதிக் கொண்டிருந்தார். அவற்றுடன் வீரர்களைக் கோட்டைக்கு வெளியே அனுப்பிக் கொண்டிருந்தார். அந்த ஓலைகள்..." என்று சொல்லிக்கொண்டு போன குறிஞ்சி வாசகத்தை முடிக்கு முன்பு, "சிங்கணனைக் குழப்பின. வீண் தைரியத்தை அவனுக்கு அளித்துவிட்டன. எதிரியின் சூழ்ச்சியில் சிங்கணன் சிக்கிவிட்டான்" என்று வீரரவி சொற்களை இடைபுகுந்து வெட்டினான். அத்துடன் அந்த அறையில் நடமாடிக்கொண்டு "இப்பொழுது புரிகிறது ஓரளவுக்கு. வீரபாண்டியன் சரணாகதியடையப் போவதாக அண்ணனுக்கு ஓலை எழுதி, அதை அகஸ்மாத்தாகச் சிங்கணனிடம் கிடைக்க ஏற்பாடு செய்திருக்கிறான். சிங்கணன் அதை நம்பியிருக்கிறான். அதில் ஏமாந்து விட்டான். இருப்பினும் சிங்கணனும் அப்படியொன்றும் போர்த் தந்திரம் அறியாதவனல்லவே? தவிர இந்தக் கடற்

படை என்ன ஆயிற்று?" என்று சற்று இரைந்து சொல்லிக் கொண்டு குறிஞ்சியையும் இருமுறை நோக்கினான். "நீ வரும் போது கோட்டாற்றுக்கரை நிலை என்ன?" என்று வினவவும் செய்தான்.

"முதல் முதலில் சிங்கணர் தந்திரத்தால் வெல்லப் பட்டார். பிறகு நான் கிளம்பிவிட்டேன்' என்று பதில் கூறினாள் குறிஞ்சி.

"பாண்டியன் பாசறைக்கு நீ வந்து எத்தனை நாளாகிறது?"

"நான்கு நாட்களாகின்றன."

"பாண்டியன் இங்கு வேவு பார்க்க உன்னை அனுப்பினானா?"

"ஆம்."

"வேவு பார்ப்பதாக உத்தேசமா?"

மன்னனின் இந்தக் கேள்வியைக் கேட்டதால் சற்றுப் புன்னகை கொண்டாள் குறிஞ்சி. பிறகு மடியிலிருந்த ஓர் ஓலையை எடுத்து மன்னனிடம் நீட்டினாள். மன்னன் ஓலையைப் பிரித்துப் படித்தான். வீரபாண்டியன் வெகு விவேகியென்றும், அவனை வெற்றி கொள்ளச் சிங்கணனால் முடியாதென்றும் கோட்டாற்றுக் கரைக் கோட்டைத் தலைவனான விஜயவர்மன் எழுதியிருந்தான் அந்த ஓலையில். அதைப் படித்து முடித்ததும் மன்னன் சொன்னான், "இதில் புதிதாக ஏதுமில்லையே?" என்று.

"இருக்கிறது பாருங்கள்" என்றாள் குறிஞ்சி.

"என்ன புதுமை இதில்?"

"ஓலை கனமாயில்லையா?"

"ஆம்."

"பனை ஓலை இத்தனை கனமா?"

மன்னன் மீண்டும் ஓலையைக் கவனித்தான். இரண்டு பனை ஓலைகளை ஒன்றின் மேலொன்று ஒரே சீராக ஒட்டப்பட்டிருப்பதைக் கண்டான். மெல்ல ஒட்டியிருந்த இடத்ததை நகத்தால் கீறி ஓலையைப் பிரித்தான். அடி



ஓலையில் சின்னஞ்சிறு வரிகள் நிரம்ப இருந்தன. அதைப் படிக்கப் படிக்க மன்னன் முகத்தில் பெருவியப்பு மண்டியது. "இது உண்மையா?" என்ற கேள்வியில் உள்ளத்தின் வியப்புப் பெரிதும் பிரதிபலித்தது.

"ஆம்," என்றாள் குறிஞ்சி.

மன்னன் மஞ்சத்தில் உட்கார்ந்தான். "இப்படி உட்கார்," என்று அவளுக்கும் தன்னருகில் இடம் விட்டான். "இப்பொழுது சொல், வீட்டில் வளர்ந்த காட்டு மலரே, சொல் கேட்கிறேன். உன் விசித்திரக் கதையைச் சொல்" என்றான் சேரமன்னன்.

## அத்தியாயம் 32

# கதையும் யோசனையும்

**வீ**ட்டில் வளர்ந்த காட்டு மலரெனக் குறிஞ்சியை விளித்து அவள் விசித்திரக் கதையைச் சொல்லுமாறு வீரரவி பணித்த பின்பும், குறிஞ்சி தன் கதையைச் சொல்லாமல் மன்னனை உற்றுப்பல விநாடிகள் நோக்கிவிட்டு, "மன்னவா! ஓலையை நன்றாகப் படித்தீர்களல்லவா?" என்று வினவினாள் கவலை சொட்டிய குரலில்.

மன்னனும் அவளை நன்றாக ஏறெடுத்து நோக்கினான். அவள் முகத்தில் தோய்ந்து கிடந்த கவலை அவனுடைய வியப்பை அகற்றி அவன் உள்ளத்திலும் கவலையைப் பெருக்கி விடவே, "படித்தேன் குறிஞ்சி. நீ மலைவாசியானாலும் விஜயவர்மன் மகளென்பதைப் புரிந்து கொண்டேன். சேரநாடு அபாயத்திலிருப்பதாகவும், நிலைமையை நீ விளக்கிச் சொல்லுவாயென்பதையும், உன் சொற்படி நடப்பது நலன் தருமென்றும் விஜயவர்மன் ஓலையில் குறித்திருக்கிறான்," என்று உள்ளத்தே படர்ந்த கவலையின் சாயை குரலிலும் தொனிக்கக் கூறிய வீரரவி, "சேரநாட்டுக் கோட்டைத் தலைவன் ஒருவன் தனது மகளின் பேச்சைக் கேட்கும்படி மன்னனுக்கு எழுதப் பெரும் துணிவு வேண்டுமல்லவா?" என்று வினவினான்.

குறிஞ்சி தனது விழிகளை அகலவிரித்து மன்னனை நோக்கி, "தேவை எந்தத் துணிவையும் அளிக்கும் மன்னவா! நாட்டு நலன் கண்முன் நிற்கும்போது, தனிப்பட்ட அந்தஸ்து, பதவி அனைத்தும் கண்ணுக்கோ அறிவுக்கோ புலப்படாததும் இயற்கை," என்று சுட்டிக் காட்டினாள்.



"உண்மை குறிஞ்சி, உண்மை. விஜயவர்மன் எனது சிறந்த படைத்தலைவர்களுள் ஒருவன். நாட்டுப் பற்று மிகக் கொண்டவன். ஆனால் அமைச்சர்களும் மற்றப் படைத் தலைவர்களும் இங்கிருக்க ஒரு பெண்ணின்—அதுவும் வயது முதிர்ச்சி சிறிதுமற்ற வாலிபப் பருவத்திலிருக்கும் ஓர் அழகியின் — யோசனையைக் கேட்கும்படி படைத் தலைவன் வலியுறுத்துவது விந்தையல்லவா?" என்று வினவினான் வீரரவி.

"இங்குள்ள தங்கள் அமைச்சர்களும் படைத் தலைவர்களும் அறியாததை அங்கிருந்து வரும் நானறிந் திருப்பதில் வியப்பில்லையல்லவா? விஷயமறியாது அறிவாளிகள் கூறக் கூடிய யோசனைகளைவிட விஷய மறிந்த சாதாரணக் குடிமகளொருத்தி கூறும் யோசனை சிறந்ததல்லவா?" என்று கேட்டாள் குறிஞ்சி.

குறிஞ்சியின் துணிவு மன்னனுக்குப் பெரும் வியப்பை அளித்தாலும் அதை வெளியில் காட்டிக் கொள்ளவில்லை. லேசாகப் புன்முறுவல் செய்துவிட்டு, "சொல் குறிஞ்சி. சொல். உன் யோசனையையும் கேட்போம்," என்று கூறி விட்டு மஞ்சத்தில் நன்றாகச் சாய்ந்து கொண்டான் மன்னன்.

கோட்டாற்றுக்கரையை வீரபாண்டியன் அடைந்ததி லிருந்து நடந்த விஷயங்களை விவரமாகச் சொன்னாள் குறிஞ்சி. மெல்ல மெல்ல, விஜயவர்மனின் பெரும் படை எப்படி ஊடுருவப்பட்டது, தாக்கப்பட்டது, எப்படி எதிர் பாராத, புதுவிதப் போர் முறையை வீரபாண்டியன் கையாண்டான் என்ற விவரங்களைத் தெளிவாகச் சொன் னாள் குறிஞ்சி. கோட்டைச் சுவரிலிருந்த விற்கூடங்களைத் திருப்பி நிறுத்திய முறை—இவற்றையும் சொன்னாள். எப்படிச் சரணாகதியடைவதாகச் சிங்கணனை ஏமாற்றினான், எப்படி மேலுக்குப் போர் புரிவதாகச் சொல்லிப் பிறகு உண்மைப் போர் புரிந்து சிங்கணன் சற்றும் எதிர்பாராத விதத்தில் அவன் படையை உடைத்தான் என்ற விவரங்களையும் சொன்னாள். கோட்டாற்றுக்கரை

நிகழ்ச்சிகளையெல்லாம் விவரித்த குறிஞ்சி, கடைசியாகக் கூறினாள்: "கோட்டைக்கு வெளியே என் தந்தையை வீரபாண்டியன் முறியடித்த வுடனேயே என் தந்தை புரிந்து கொண்டார், மிகுந்த விவேகமுள்ள ஒரு மனிதனிடம் கோட்டை சிக்கிக் கொண்டிருப்பதை. ஆகவே வீர பாண்டியன் தமது மனைவிக்குப் பணிப்பெண் கேட்டதும் என்னையே அனுப்பினார். என்னையே தேர்ந்தெடுக்கும்படியான சூழ்நிலையையும் என் தந்தை சிருஷ்டித்தார். தன் மகளென்று சொல்லாதபடி கட்டுத்திட்டமும் எனக்குச் செய்து அனுப்பினார்," என்று.

இதைச் சொன்ன குறிஞ்சி சற்று நிதானித்தாள். அந்தச் சமயத்தில் மன்னன் கேட்டான்: "இளநங்கை எப்பொழுது வீரபாண்டியன் மனைவியானாள்?" என்று.



குறிஞ்சி மன்னனைச் சற்று வெறுப்புடன் பார்த்தாள். "எங்கள் கோட்டையில்தான் அவருக்கு மனைவியானாள். ஆனால் அதுவா முக்கியம் இப்பொழுது?" என்று வெறுப்புக் கலந்த குரலில் கூறிய குறிஞ்சி, "மன்னருக்குப் பெண்களென்றால் தனிப் பிரியமுண்டு என்பதைக் கேட்டிருக்கிறேன். அந்த விஷயங்களுக்கு இப்பொழுது சமயமில்லை மன்னவா! நாடு நிலைத்த பிறகு சுகபோகங்களைக் கவனியுங்கள்" என்றும் தெளிவாகச் சொன்னாள்.

இதைக் கேட்ட மன்னன் முகத்தில் சுடர்விட்ட கோபத்தைக்கூடக் கவனிக்காமல் மேலும் சொன்னாள் குறிஞ்சி. "மன்னவா! என் தாய் மலை இனத்தவள். கோட்டாற்றுக் கரை மாளிகையில் மருத்துவர் பச்சிலை தேடக் காட்டுக்குச் சென்றபோது பச்சிலையை மட்டுமின்றி அனாதையாயிருந்த என் தாயையும் அழைத்து வந்து தனது பெண்ணைப்போல் வளர்த்தார். மருத்துவர் மனைக்கு என் தந்தை வந்த சமயங்களில் அங்கிருந்த காட்டு மலரையும் சொந்தமாக்கிக் கொண்டார். நான் அவர்கள் அன்பின் செல்வியாகப் பிறந்தேன். மாளிகையில் வளர்ந்தேன். மாளிகை வாழ்க்கைப் பிடிக்காத என் தாய் என்னை



அடிக்கடி மலைக்காடுகளுக்கு அழைத்துச் செல்லுவாள். மலைப் பச்சிலைகளைக் காட்டிக் கொடுப்பாள். சில நாட்கள் தனது இனத்தாருடன் விட்டும் வருவாள். இப்படி நான் காட்டிலும் வீட்டிலுமாக வளர்ந்தேன். காட்டுப் பாதைகளை, மூலிகைகளை நன்றாக அறிந்தேன். தாய் இறந்த பிறகு மருத்துவருக்கு நானே பச்சிலைகளைக் கொணர்ந்தேன். என் பிறப்பு விஷயம் மெள்ள மெள்ள வெளிப்பட்டது. ஆனால் என் தந்தையான விஜயவர்மன் அதைப்பற்றி லட்சியம் செய்யவில்லை. என்னைப் பெண்ணாகவே நடத்தினார். அவர் என்னைத் தன் பெண்ணாகக்கூடப் பகிரங்கமாக ஒப்புக்கொண்டிருப்பார். ஆனால் அந்தச் சமயத்தில் போர் வந்தது. வீரபாண்டியர் கோட்டைக்குள் நுழைந்தார். நான் பணிப் பெண்ணானேன். பணிப்பெண் மட்டுமல்ல வேவுகாரியும் ஆனேன். ஆனால் வீரபாண்டியரிடம் அதிகமாக வேவு பார்க்க முடியவில்லை. அவர் செய்யச் சொன்ன பல காரியங்கள் அர்த்தமற்று இருந்தன. நான் அவர் அலுவல்களைத் தந்தையிடம் சொன்னபோது தந்தைக்கு ஏதும் விளங்கவில்லை. சிங்கணன் முதல் மோதலில் முறியடிக்கப்பட்ட பின்புதான் அவரிடும் அலுவல்களுக்கு அர்த்தம் புரிந்தது. அதற்குமேல் தாமதிப்பது தவறென்று தந்தை என்னிடம் இந்த ஓலையைக் கொடுத்துச் சமயம் கிடைக்கும்போது கோட்டையை விட்டுச் சென்றுவிடும்படி கூறினார். அந்தச் சமயத்தை வீரபாண்டியரே ஏற்படுத்திக் கொடுத்தார். பாண்டிய மன்னருக்கு ஓலை கொடுத்தார்..."

சற்று நிதானித்தாள் குறிஞ்சி. மன்னனும் சில விநாடிகள் பேசவில்லை. பிறகு, "இப்பொழுது உன் யோசனை என்ன?" என்று வினவினான்.

குறிஞ்சி பதில் சொல்லத் தயங்கினாள். பிறகு, "மன்னவா!" என்று துவங்கினாள்.

"உம்."

"நான் பாண்டியர் பாசறையிலிருந்து வருகிறேன்..."

"ஆம்."

"பாண்டிய மன்னர் எரிபரந்தெடுத்தல் கொள்கை விளைவாக வந்த கிராம மக்கள் கூட்டத்தில் கலந்து வந்தேன்."

"சரி."

"வரும் போது மக்கள் பேசிக் கொண்டார்கள்."

"என்ன பேசிக் கொண்டார்கள்?"

"பாண்டிய மன்னரின் பெருந்தன்மையைப் பற்றிப் பேசிக் கொண்டார்கள். கிராமங்களுக்குத் தீயிடுமுன்பு தங்களுக்கு உதவி புரிந்து வெளியேற்றியதைப் பற்றிப் பேசிக் கொண்டார்கள். பெண்ணை அபகரித்துச் சென்றால் யார்தான் வாளாவிருப்பார்கள் என்றும் பேசிக் கொண்டார்கள்."

"அப்படியா!"

"ஆம். அது மட்டுமல்ல. இங்கு வந்த பின்பு குருநாதர் சிறைப்பட்டதைப் பற்றியும் வெறுப்புடன் மக்கள் பேசிக் கொள்கிறார்கள்."

மன்னன் கோப விழிகளை அவள்மீது நாட்டினான். "நாட்டுக்குச் சதி செய்பவர்கள் யாராயிருந்தாலும் தண்டிக்க வேண்டியது, மன்னன் கடமையில்லையா?" என்றும் வினவினான் கோபத்துடன்.

குறிஞ்சியின் மலர் விழிகளில் வேதனை தெரிந்தது. "மன்னவா! குருநாதர் நாட்டுக்குச் சதி செய்யாமாட்டா ரென்று, மக்கள் திட்டமாக நம்புகிறார்கள். பாண்டிய குமாரியை நீங்கள் சிறைப்படுத்தியிருப்பதை மட்டும் அவர் ஒப்புக் கொள்ளவில்லை என்று கூறுகிறார்கள்," என்றாள் குறிஞ்சி வேதனையுடன்.

"என் மக்களை எனக்குத் தெரியும்," என்றான் வீரரவி சீற்றத்துடன்.

"குருநாதருக்கும் தெரியும்," என்ற குறிஞ்சி "மன்னவா! நீங்கள் அறியாத விஷயமில்லை. பத்தினித் தெய்வத்தைக் கொண்டாடும் சேரநாட்டில் பெண்கள் பலவந்தமாகக் கொண்டு வரப்படுவதை யாருமே விரும்புவ





தில்லை. இதனால் குருநாதர் விரோதப்பட்டார். மக்களும் விரோதப்பட்டிருக்கிறார்கள். இஷ்டமில்லாத மக்களை வைத்துக் கொண்டு போர் நடத்துவது அபாயம். இது என் தந்தையின் கருத்து."

"இஷ்டமுள்ள மக்களை வைத்துக்கொண்டு உன் தந்தை நடத்திய போர் என்னவாயிற்று?" என்று கேட்டான் மன்னவன்.

குறிஞ்சி இதற்குப் பதில் சொல்லமுடியாமல் தவித் தாள். "சரி உன் யோசனையைச் சொல்லிவிடு. குருநாதரையும், பாண்டியகுமாரியையும் விடுவிக்க வேண்டும். அவ்வளவுதானே?" என்று மற்றொரு கேள்வி யையும் வீசினான் மன்னவன்.

"குருநாதர் ஒருவர்தான் இப்பொழுது நாட்டைக் காக்க முடியும். வீரபாண்டியர் அறிவுக்குச் சமமான அறிவைப் படைத்தவர் குருநாதர். மற்றவர்கள் பார்க்காத இடங்களில் அவர்கள் பார்வை செல்லும். ஆகவே அவர் யோசனைப்படி நடப்பது நல்லது. இது என் கருத்து. நிற்க, கோட்டாற்றுக்கரைக் கோட்டைப் போர் நான் வரும் போது முடியவில்லை. ஆனால் முடிவை நான் இங்கிருந்தே சொல்ல முடியும். சிங்கணரால் ஒருகாலும் வீரபாண்டி யரை வெற்றி கொள்ள முடியாது," என்றாள் குறிஞ்சி.

"குருநாதர் புகழையும், வீரபாண்டியர் புகழையும் பாடவந்தாயா குறிஞ்சி? இந்தப் பாட்டைப் பலர் பாடக் கேட்டு என் காது புளித்துவிட்டது. உன்னால் வேறு ஏதாவது சொல்ல முடியுமா?" என்றான் மன்னவன்.

'இல்லை' என்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தாள் குறிஞ்சி.

மன்னன் அடுத்த கேள்வியை வீசினான். "உன்னுடன் யார் வந்திருப்பது?" என்று வினவினான், உணர்ச்சியற்ற குரலில்.

"பாண்டிய மன்னர் வேவுகாரர் இருவர்," என்றாள் குறிஞ்சி.

"அவர்கள் யார்?"

"தெரியாது. இன்று காலை நான் வரும்போது அரண் மனைக் காவலன் இல்லத்தில் இருந்தார்கள்."

"காவலன் பெயர்?"

"சாத்தன்."

"அவன் எப்பொழுது வேவுகாரனாக மாறினான்?"

"அவன் மாறவில்லை. அவனை மிரட்டி, சொற்படி கேட்க வைத்தார்கள்."

"உன் சகாக்களா?"

"ஆம்."

"அந்தச் சகாக்கள் பெயர் என்ன?"

"தெரியாது."

"தெரியாதா?"

"ஆம் தெரியாது. என்னை அவர்களுடன் இங்கு பாண்டிய மன்னர் அனுப்பியபோது, 'இவர்களுடன் செல்' என்று மட்டும் கூறினார்,"

"அவர்கள் உனக்கிட்டுள்ள பணி என்ன?"

"முத்துக்குமரியைப் பாதுகாப்பது. இளவரசியைத் தப்புவிக்க வழி தேடுவது."

வீரரவியின் முகத்தில் குழப்பம் தெரிந்தது. 'வேவு பார்க்க வந்தவள் இத்தனை விவரமாக ஒளிவு மறைவு இல்லாமல் விஷயங்களை ஏன் சொல்லுகிறாள்? ஒரு வேளை சேர நாட்டிடம் உண்மையிலேயே பற்று உள்ளவளா?' என்று சிந்திக்க மன்னன் மேற்கொண்டு ஏதும் பேசாமல் கைதட்டி வெளியிலிருந்த காவலனை அழைத்து, "இந்தப் பெண்ணைப் பாண்டியர் மகளிடம் பணிபுரிய அமர்த்தி விடு," என்று உத்தரவிட்டான்.

பணிப்பெண் குறிஞ்சி வியப்பு நிரம்பிய விழிகளை அவன் மீது திருப்பினாள். மன்னன் அவளைப் பார்த்துப் புன்முறுவல் செய்து, "நீ செய்ய வந்த பணிக்கு இந்தப் பணி உதவும்," என்று கூறி வெளியே செல்ல அவளைப் பணித்தான். அவள் வெளியே சென்றதும் மற்றொரு





காவலனை விளித்து, "சாத்தன் என்ற நமது காவலன் இல்லம் தெரியுமா உனக்கு?" என்று வினவினான்.

"தெரியும்," என்றான் காவலன்.

"பத்து வீரர்களுடன் அங்கு செல்."

"உத்தரவு."

"சென்று சாத்தனையும் அந்த வீட்டிலுள்ள மற்றவர் களையும் சிறைப்படுத்தி வா."

"உத்தரவு மகாராஜா," என்று கூறிக் காவலன் தலை வணங்கிச் சென்றான்.

மன்னன் மேலும் முறுவல் கொண்டான். "சாத்தன் இல்லத்தில் இந்திரபானு இருக்கிறான். சந்தேகமில்லை. தந்திரசாலியான இந்திரபானு பிடிபட்டால், வீரபாண்டி யன் வலது கை உடைந்தது போலாகும். அதுமட்டுமல்ல. இந்திரபானு முத்துக்குமரி இருவரின் சிறையிருப்பு பாண்டியனை மிரட்டச் சிறந்த ஆயுதமுங்கூட" என்று சற்றே இரைந்தே சொல்லிக் கொண்டான். பிறகு தனது மேலங்கியை அணிந்துகொண்டு குருநாதன் சிறை வைக்கப் பட்டிருந்த இடத்தை நோக்கி நடந்தான். நாலைந்து கட்டுகளைத் தாண்டியிருந்த கடைசி அறையை நெருங்கியதும் அங்கிருந்த காவலர் தலை வணங்க உள்ளே சென்ற வீரரவி குருநாதன் இருந்த நிலையைக் கண்டு பெரிதும் வியந்தான்.

குருநாதன் அங்கிருந்த மஞ்சத்தில் படுக்காமல் தரையில் உட்கார்ந்து கொண்டிருந்தான். வெள்ளைவெளே ரென்றிருந்த அவன் மேல்துண்டு பக்கத்தில் விழுந்திருந்தது. மந்திரதண்டம் கைக்கெட்டும் தூரத்தில் இருந்தது. அந்த மந்திர தண்டத்தைக் கண்டதும் சேர மன்னன் சிறிது கலங்கினான். அந்த மந்திர தண்டத்திலிருந்த கூரிய சிறு கத்திகளின் மகிமையை அவன் ஏற்கனவே உணர்ந்திருந்த தால் உள்ளத்தே எழுந்த கலக்கம் முகத்திலும் தெரிந்தது. அவன் நின்ற இடத்திலேயே சில விநாடிகள் நின்றான்.

அவனைக் குருநாதன் ஏறெடுத்தும் பார்க்கவில்லை. கையிலிருந்த ஓலை நறுக்குகளில் எழுத்தாணிகொண்டு சொற்களைப் பொறித்துக் கொண்டிருந்தான். "குருநாதரே!" என்று மன்னன் விளித்த பின்பே சற்றுத் தலையை உயர்த்தினான்.

"என்ன?" என்ற அவன் கேள்வியில் அசட்டை இருந்தது. மன்னன் முகத்தில் கவலை மறைந்து அந்த இடத்தைக் கோபம் ஆக்கிரமித்துக் கொண்டது. "உமக்கு மீண்டும் துணை அனுப்புகிறேன்," என்றான் மன்னவன்.

"மகிழ்ச்சி" இகழ்ச்சியுடன் வெளிவந்தது குருநாதனின் பதில்.

"மகிழ்ச்சி அதிக நாள் நீடிக்காது," என்று சீறினான் மன்னன்.

"யார் மகிழ்ச்சி? உன் மகிழ்ச்சியா, என் மகிழ்ச்சியா?" என்று பதிலுக்குக் கேட்டான் குருநாதன்.

"உமது மகிழ்ச்சிதான். இந்திரபானுவைச் சிறை செய்யக் காவலரை அனுப்பியிருக்கிறேன்," என்றான் மன்னன்.

பதிலுக்கு இரைந்து நகைத்தான் குருநாதன். "உனக்குப் பைத்தியந்தான்" என்றும் கூறினான்.



## அத்தியாயம் 33

# குருநாதன் கவலை

குருநாதன் நகைப்பும் அலட்சியமும் இகழ்ச்சியும் வீரரவி உதயமார்த்தாண்டவர்மனின் சினத்தைப் பெரிதும் கிளறி விடவே, "பைத்தியம் யாருக்கென்பது வெகு விரைவில் தெரியும்," என்று சற்றே இரைந்தே கூறினான்.

குருநாதன் விஷமப் புன்னகை கோட்டினான். "எத்தனை விரைவில் தெரியும்?" என்று விஷமத்துடன் வினவவும் செய்தான்.

"இன்னும் அரை நாழிகையில்" என்று விடையிறுத்தான் மன்னன்.

"அரை நாழிகையில் இந்திரபானு இங்கு வந்துவிடுவான்?" என்றான் குருநாதன்.

"ஆம்." திட்டமாகக் கூறினான் மன்னன்.

"அவன் இருக்குமிடம் தெரிந்து விட்டதா?" என்று வினவினான் பரதபட்டன்.

"தெரிந்துவிட்டது."

"எப்படித் தெரிந்தது?"

"ஒரு மலைப்பெண் மூலமாக."

"மலையில் சந்தித்தாளா அவள் இந்திரபானுவை."

"ஆம்."

"இங்கு எப்படி அழைத்து வந்தாள்?"

"அவள் அழைத்து வரவில்லை. அவனே அவளை அழைத்து வந்தான்."

பரதபட்டன் தன் கண்களை மீண்டும் ஓலையிலிருந்து தூக்கி மன்னனை நோக்கினான். "அவன் அழைத்து

வந்தானா! நீ சொல்லும் மலைப் பெண்ணையா!" என்று வினவினான் வியப்புடன்.

மெள்ள குருநாதன் அலட்சியத்தை முறித்து வியப்பைக் கிளறி விட்டதில் பெருமை கொண்ட வீரரவி கூறினான், "ஆம், அவன்தான் அழைத்து வந்தான், சேர நாட்டுப் பற்றுக் கொண்ட குடிமகளை வேவுகாரியாக்கலா மென நம்பி," என்று.

குருநாதன் சற்றுச் சிந்தனையில் இறங்கினான். பிறகு பழைய நிலையையடைந்து, "மன்னவா! மஞ்சத்தில் உட்கார். சிறை செய்யச் சென்ற காவலர் வரட்டும்," என்றான்.

மன்னன் சிறிது தயங்கினான். "நீங்கள் தரையில் உட் கார்ந்திருக்கிறீர்கள்," என்று சுட்டிக் காட்டினான்.

"நான் எப்பொழுதும் தரையில்தான் உட்காருகிறேன், படுக்கிறேன்."

"ஏன்?"

"தரை சேரநாட்டைச் சேர்ந்தது!"

"மஞ்சம் யாரைச் சேர்ந்தது?"

"சேரநாட்டைச் சேர்ந்ததாயிருக்க வேண்டிய அவசிய மில்லை. அதன் கால்கள் யவன நாட்டிலிருந்து கடைசல் பிடித்து வந்த கால்களாயிருக்கலாம். அதன் துணி வடக்கே யுள்ள பட்டு வகையில் சேர்ந்ததாயிருக்கலாம். பஞ்சு சேர நாட்டில் கிடைத்ததாகவுமிருக்கலாம். சோழ, பாண்டிய நாடுகளிலிருந்து வந்ததாகவுமிருக்கலாம். ஆனால் தரை அப்படியல்ல. அப்பட்டம் நான்பிறந்த மண்ணைச் சேர்ந்தது. நான் வாழும் குடிசை மண் போன்றது. அதனால் தான் எப்பொழுதும் தரையில் உட்காருகிறேன். படுக்கிறேன்," பரதபட்டன் இதை, வெகு நிதானமாகவும் தெளிவாகவும் சொன்னான். "ஆகவே, நீ உட்கார் மஞ்சத்தில்," என்றும் கூறினான்.

"ஏன்... நான் மட்டும்?" என்று ஏதோ துவங்கினான் மன்னன்.





"உனக்கு வெளிநாட்டுச் சொத்து பிடிக்கிறது. வெளி நாட்டு முத்து பிடிக்கிறது. வெளி நாட்டுப் பெண் பிடிக் கிறது," என்ற பரதபட்டன் மன்னனைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் மீண்டும் ஓலைமீது எழுத்தாணியை ஓட்டினான்.

மன்னன் ஒரு விநாடி நின்றான். பிறகு மஞ்சத்தில் உட்கார்ந்து கொண்டு, "குருநாதரே!" என்று அழைத்தான்.

"ஏன் மன்னவா?" குருநாதன் தலை நிமிராமலே கேட்டான்.

"இந்திரபானுவை நான் சிறை செய்வேனென்று உமக்கு நம்பிக்கையில்லையா?" என்று வினவினான் மன்னன்.

"இல்லை," குருநாதன் பதில் திட்டமாக வந்தது.

வீரரவி ஒரு விநாடி மௌனம் சாதித்தான். பிறகு சொன்னான் மெள்ள, "இந்திரபானுவைக் காட்டிக் கொடுத்தது யாரென்று நினைக்கிறீர்கள்?" என்று.

"அதுதான் யாரோ மலைப்பெண் என்று சொன்னாயே."

"அந்த மலைப் பெண் யார் தெரியுமா?"

'யார்?"

"கோட்டாற்றுக்கரைக் கோட்டைத் தலைவன் விஜய வர்மன் இல்லை?"

"ஆம்."

"அவன் மகள்."

"அவன் மகளா?" குருநாதன் விழிகளை வியப்புடன் உயர்த்தினான் மன்னனை நோக்கி.

"ஆம் குருநாதரே," என்றான் வீரரவி முறுவலுடன்.

"அவன் மலைச் சாதியில் மணம் செய்து கொண்டதாகக் கேள்விப்படவில்லையே."

"சம்பிரதாய மணமல்ல அது."

"அப்படியா!"

"ஆம்."

"மன்னன் எவ்வழி குடிகள் அவ்வழி," என்றான் குருநாதன்.

மன்னன் விழிகளில் ஒரு விநாடி சீற்றம் தோன்றி மறைந்தது. "விஜயவர்மன் நடத்தையைப் பற்றி விவாதிக்க நான் வரவில்லை," என்றான் வீரரவி சிந்தனை நிரம்பிய குரலில்.

"யார் நடத்தையைப் பற்றியும் விவாதிக்கும் நிலையில் நாம்தான் இல்லையே," என்றான் குருநாதன்.

குருநாதன் சொற்களில் தொக்கி நின்ற வசையை மன்னன் அசட்டை செய்துவிட்டுச் சொன்னான். "குருநாதரே, உமது யோசனை எனக்குத் தேவை. சேரநாட்டு நன்மையை முன்னிட்டு உமது கருத்தைச் சொல்ல வேண்டும்," என்று.

"பரதபட்டன் புன்முறுவல் செய்தான். "மன்னவா! குருநாதரிடம் யோசனை கேட்கும் இடம், சந்தர்ப்பம் இவற்றைப் பற்றி யோசித்தாயா?' என்று வினவினான் ஏளனம் குரலில் ஒலிக்க.

"யோசித்தேன். ஆனால் குருநாதர் சேரநாடு பிழைக்க எதுவும் செய்வார் என்பது எனக்குத் தெரியும்," என்றான் மன்னவன்.

"அந்த நம்பிக்கைக்கு நன்றி,'" என்ற குருநாதர் கேட்டார், "சொல் மன்னவா! என்னிடம் என்ன எதிர் பார்க்கிறாய்!" என்று.

மன்னன் குருநாதரைக் கவலை நிறைந்த முகத்துடன் நோக்கினான். "வீரபாண்டியன் கோட்டாற்றுக்கரையில் முறியடிக்கப்பட்டதாகச் செண்டுவெளியின் போது செய்தி வந்ததல்லவா?" என்று வினவினான் கவலையுடன்.

"ஆம்."

"அந்தச் செய்தி தவறென்று விஜயவர்மன் மகள் கூறுகிறாள்."

"அப்படியா!"



"ஆம். அதுமட்டுமல்ல. சிங்கணன் படையை முதல் மோதலில் தந்திரத்தால் வீரபாண்டியன் முறியடித்துவிட்டதாகவும் கூறுகிறாள்."

"வேறு என்ன கூறுகிறாள்?"

"வீரபாண்டியனை யாரும் வெற்றி கொள்ள முடியாதென்றும் கூறுகிறாள்."

"சிங்கணன் பெரும்படை என்ன ஆயிற்று?"

"சிறு சேதமேற்பட்டாலும் இன்னும் நமது படைதான் அங்கு பெரிதும் இவள் வரும்போது முற்றுகையிலிருந்ததாம்."

"நீ அனுப்பிய கடற்படை?"

"அது என்ன ஆயிற்றென்றே தெரியவில்லை."

"உன் ஒற்றர்கள் யாரும் செய்தி கொண்டுவரவில்லையா?"

"இல்லை; வழி நெடுக பாண்டியப் படைகள் சேரநாட்டு வழிகளைத் துண்டித்திருக்கின்றனவாம்."

குருநாதன் சிந்தனையிலிறங்கினான். பிறகு சொன்னான்; "அந்த மலைப்பெண் சொல்லியதை அப்படியே சொல்," என்று வீரரவி குறிஞ்சியின் கதையை அப்படியே திருப்பிச் சொன்னான். ஒரு சம்பவத்தையும் விடாமல் எடுத்துச் சொன்னான். மன்னன் முழு விவரங்களைச் சொல்லி முடித்த பின் பரதபட்டன் தீர்க்காலோசனையிலிறங்கினான்: கடைசியாகச் சொன்னான், "நீ நினைப்பதுபோல் இந்திரபானு பிடிபடமாட்டான்," என்று.

வீரரவி வியப்படைந்தான். 'என்ன அத்தனை திட்டமாகச் சொல்கிறீர்கள்?" என்று கேட்கவும் செய்தான் வியப்புடன்.

"மன்னவா! இந்தப் பெண் எப்பொழுது வேலைக்கு வந்தாள்?" என்று வினவினான் பரதபட்டன்.

"இன்று காலை."

"யார் அழைத்து வந்தது? உன் அரண்மனைக் காவலனா?"

"ஆம்."

"ஒரே நாளையில் இவள் இளையராணி, பட்டத்து ராணி இருவரையும் தாண்டி உன்னிடம் வந்திருக்கிறாள்."

"ஆம்."

"இவளுடன் நீ பேசிக்கொண்டிருந்தபோது இவளை அழைத்துச் செல்லப் பணிப்பெண் வந்தாள்?"

"ஆம்."

"அவள் இரவு வரமாட்டாள் என்று நீயே சொல்லி அனுப்பிவிட்டாய்?"

"ஆம்."

"மன்னா! அந்தப் பணிப்பெண் சாத்தனிடம் சென்று சொல்வாள், 'குறிஞ்சி உன்னுடன் பேசிக்கொண்டிருந்ததை. சாத்தன் தன் வீடு சென்று இந்திரபானுவிடமும் கூத்தனிடமும் சொல்லுவான். பிறகு என்ன எதிர்பார்க்கிறாய்? இந்திர பானுவும் கூத்தனும் உன் வீரர்களை எதிர்பார்த்து அங்கேயே உட்கார்ந்திருப்பார்களா?"

மன்னன் இதைக் கேட்டு அசையவில்லை. "இதற்கு இன்னொரு வாதமும் இருக்கிறது," என்றான்.

"என்ன வாதம் மன்னவா?" என்று வினவினான் பட்டன்.

"இவளை இந்திரபானுவும் கூத்தனும் வேவு பார்க்க அனுப்பியிருக்கிறார்கள்."

"ஆம்."

"ஆகவே இவள் என்னுடன் பேசிக் கொண்டிருக்கி றாள் என்பதைக் கேட்டதும் இவள் முன்னேற்றத்தையும் சாமர்த்தியத்தையும் குறித்து மகிழ்ச்சியடைவார்கள். தவிர எனக்கொரு தனிப்பெயர் இருக்கிறதல்லவா?"

"என்னவோ?"

"காமுகன் என்று," என்று கூறி முறுவலித்த சேரமான், "ஆகவே, நான் அந்தப் பெண்ணின் வலையில் விழுந்துவிட்டதாகவும், இனி அரண்மனை ரகசியங்க ளெல்லாம் தனது கையிலிருப்பதாகவும் இந்திரபானு



எண்ணி மகிழ்ச்சியுடனிருப்பான். அந்தச் சமயத்தில் நமது வீரர்கள் அங்கு சென்று கதவை இடிப்பார்கள்" என்றும் சுட்டிக் காட்டினான்.

மன்னன் கூறியதில் உண்மையிருந்தும் பரதபட்டன் அத்தனை எளிதில் இந்திரபானு சிக்கிக்கொள்வானென்று எதிர்பார்க்கவில்லை. "மன்னவா! நீ சொல்வதிலும் அர்த்தமிருக்கிறது. ஆனால் இந்திரபானு அத்தனை எளிதில் சிக்கிக் கொள்ளமாட்டான். ஒன்று மட்டும் நினைவில் வைத்துக் கொள். இத்தனையும் இந்தப் பெண் வந்த ஒரே பகலில் நடந்திருக்கிறது. இத்தனை துரிதமாக நடக்கும் காரியங்களில் பலவீனம் இருப்பதை இந்திரபானு நன்றாக அறிவான்," என்று கூறினான்.

"காவலர் சென்று நேரமும் ஆகிறது. சாத்தன் வீடு இங்கு அருகில் தானிருக்க வேண்டும். சீக்கிரம் தெரிந்துவிடு கிறது," என்றான் மன்னன். அவன் இப்படிச் சொல்லிக் கொண்டே இருக்கையில் வெகுவேகமாக யாரோ ஓடிவரும் சத்தம் வெளித் தாழ்வரையில் கேட்டது. அடுத்த விநாடி இறைக்க இறைக்க எதிரில் நின்ற காவலன், "மன்னவா! மன்னவா! மன்னவா!" என்றான் பெருமூச்சு வாங்க.

"என்ன! சொல்." மன்னன் சொற்களில் தீப்பொறி பறந்தது.

"இப்படிக் கொஞ்சம் வெளியே வாருங்கள்" என்றான் காவலன்.

"எதற்கு?" என்று சீறினான் மன்னன்.

"தயவு செய்து வாருங்கள்," என்ற காவலன் தாழ் வரையை நோக்கி ஓடினான். மன்னனும் குருநாதனும் அவனைத் தொடர்ந்தனர். வெளித் தாழ்வரையிலிருந்த வண்ணம் எட்ட இருந்த ஓர் இடத்தைச் சுட்டிக் காட்டிய காவலன், "அதோ அதுதான் சாத்தன் வீடு," என்றான் பதைபதைக்க.

மன்னன் அந்த இடத்தை நோக்கியதும் சில விநாடிகள் பிரமை பிடித்து நின்றான். சாத்தன் வீடு

தீப்பிடித்து எரிந்து கொண்டிருந்தது. அதை அணைக்க முயன்றுகொண்டிருந்த மக்கள் கூட்டத்தின் ஒலி மன்னனுக்கும் பரதபட்டனுக்கும் தெளிவாகக் கேட்டது.

மன்னன் கோபத்துடன் வீரனை நோக்கித் திரும்பி, "இதற்கென்ன அர்த்தம்?" என்று வினவினான்.

"தெரியாது."

"அந்த வீட்டிலிருந்தவர்களைச் சிறைசெய்யச் சென்றது என்ன ஆயிற்று."

"சிறைசெய்ய முடியவில்லை."

"ஏன்?"

"நாங்கள் வீட்டை அணுகுமுன்பே அது தீப்படித்து எரிந்து கொண்டிருந்தது."

"பின்புறம் சென்று தேடுவதுதானே?"

"தேவையில்லாது போயிற்று."

"ஏன்?"

"முன்புறத்திலிருந்த ஒரு மரத்தில் கத்தியொன்று தைத்திருந்தது. அதில் இது இருந்தது" என்று கத்தியையும் ஓர் ஓலையையும் எடுத்து மன்னன் கையில் கொடுத்தான். மன்னன் அதைப் பிரித்தான். "எரிபரந்தெடுத்தல்" என்ற ஒரு வார்த்தைக்கு அடியில் "இந்திரபானு" என்ற கையொப்பமும், பாண்டிய நாட்டு ராஜமுத்திரையும் அதில் பொறிக்கப்பட்டிருந்தன.

மன்னன் அதை குருநாதனிடம் நீட்டினான். குருநாதன் விழிகள் அதை ஒரு விநாடி பார்த்தன. "எதிர்பார்த்தேன்" என்ற சொற்கள் அவன் வாயிலிருந்து உதிர்ந்தன. பிறகு பரதபட்டன் ஏதோ நினைத்துக்கொண்டு, "மன்னவா! நாளைக்கே ஒற்றர்களை ஏவி நமது கடற்படை என்ன ஆயிற்றென்று கவனி" என்று கூறினான். இதைக் கூறிய குருநாதன் குரலில் கவலை பெரிதும் ஒலித்தது.



## அத்தியாயம் 34

# மன்னன் தலையில் மற்றொரு பேரிடி

குருநாதன் குரலில் ஒலித்த கவலை மன்னன் மனத்திலும் பெரும் கவலையையும் குழப்பத்தையும் சிருஷ்டித்து விடவே அவன் நீண்ட நேரம் காவலன் கொண்டு வந்த ஓலையையும், கத்தியையும் கையில் திருப்பித் திருப்பிப் பார்த்த வண்ணமே நின்று கொண்டிருந்தான். இந்திரபானு பிடிபட மாட்டானென்று குருநாதன் திட்ட வட்டமாகச் சொன்னது எத்தனை சரியாகப் போய் விட்டதென்பதை நினைத்துப் பார்த்துப் பார்த்துப் பிரமிப்படைந்த வீரரவி தன்னைவிடக் குருநாதனின் புத்தி மிகமிகக் கூரியதென்பதை உள்ளூர ஒப்புக்கொண்டதால், அத்தனை கூரிய அறிவுள்ள பரதபட்டன் கடற்படையைப் பற்றிக் கவலை கொண்டதில் காரணமிருந்ததென்றே எண்ணினான். ஆனால் காரணம் என்னவென்பது மட்டும் அவனுக்குப் புலப்படவில்லை. மேல் கடலில் சேர நாட்டுக்கு மட்டுமே படைபலமிருக்கும் காரணத்தாலேயே எப்படியும் வீரபாண்டியனைச் சமயத்தில் ஒடுக்கிவிடலாமென்று இறுமாந்திருந்த சேரமன்னனுக்கு, அந்தத் துறையைப்பற்றியும் குருநாதன் கவலை காட்டியதாலும் அந்தக் கவலை அவனையும் தொற்று வியாதிபோல் ஒட்டிக் கொண்டதாலும், ஏதோ விவரிக்க முடியாத அச்சமும் ஏற்படவே, உறுதியான அவன் கால்களும் சற்று உறுதி இழந்து தரையில் அசைந்தன. அப்படி உறுதி சற்றே தளர்ந்த நிலையில் ஏதோ சொல்ல வேண்டுமென்பதற்காக, "இந்தக் கத்தியைப் பார்த்தீர்களா?" என்று காவலன் ஓலையுடன் கொணர்ந்த கத்தியைக் காட்டினான் குருநாதனிடம் வீரரவி.

மன்னன் கையிலிருந்த கத்தியைப் பார்க்காமல் வெளியே தூரத்தில் எரிந்து கொண்டிருந்த சாத்தன் இல்லத்தையே கவனித்துக் கொண்டிருந்த குருநாதன், "பார்த்தேன்," என்றான்.

"இது தங்கள் மந்திர தண்டத்தின் கத்தியைப் போன்றது,;" என்று சுட்டிக் காட்டினான் மன்னன்.

"ஆம்."

"சேர வீரனொருவனை எறிந்து கொன்றீர்களே, அதே கத்தியின் உடன் பிறவியாயிருக்க வேண்டும்."

"ஆம். ஆம். சந்தேகமில்லை. இரண்டு கத்திகளை இந்திர பானுவுக்குக் கொடுத்தேன். இப்பொழுதுதான் ஒன்றை உபயோகித்து இருக்கிறான்," என்று விளக்கினான் குருநாதன்.

"எதற்குக் கொடுத்தீர்கள்?" மன்னன் கேட்டான் எரிச்சலுடன்.

"நாங்களிருவரும் சிறையில் அடைக்கப்பட்டபோதே அவன் உயிருக்கு ஆபத்தென்பது எனக்குத் தெரியும். ஆகவே கத்தியின் சூட்சமத்தைச் சொல்லி அவனிடம் இரண்டு கொடுத்தேன். அவன் உபயோகிக்கத் தருணமில்லை. செண்டுவெளியில் அத்தனை கேவலமான கொலை நடக்குமென்று அவன் எதிர்பார்க்கவில்லை," என்ற குருநாதர் குரலில் வெறுப்பு இருந்தது. அந்த வெறுப்பு தன்னைப் பற்றியதென்பதை அறிந்திருந்தும், மன்னன் அதைப் பற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை. "தன்னைக் கொல்ல வரும் பசுவையும் கொல்லலாம் என்று சாத்திரமிருக்கிறது," என்று கூறினான் வீரரவி.

"சாத்திரம் எல்லோருக்கும் எல்லாச் சமயங்களிலும் பயன்படுகிறது," என்று கூறிய குருநாதன் அதைப் பற்றி மேற்கொண்டு விவரிக்காமல், ""அந்தப் பழைய கதையைப் பற்றி இப்பொழுதென்ன பேச்சு? புது அபாயத்தைக் கவனி," என்றான். இப்படிச் சொன்ன குருநாதன் குரலில் கவலை பரிபூரணமாக மண்டிக் கிடந்தது.



அதை மன்னன் கவனித்தான். "எந்தப் புது அபாயத்தைக் குறிப்பிடுகிறீர்கள்?" என்று வினவினான் மன்னனும் கவலையுடன்.

"சேரநாட்டுத் தலைநகருக்கு ஏற்பட்டிருக்கும் அபாயம்." குருநாதன் சொற்கள் நிதானமாக, திட்டமாக உதிர்ந்தன.

"எதிரிப் படையெடுப்பைப்பற்றிக் குறிப்பிடுகிறீர்களா குருநாதரே?" என்று வினவினான் வீரரவி.

"பரலிமாநகரை நெருங்கி நகரும் பாண்டியன் படைகளைக் குறிப்பிடுகிறேன்," என்றான் குருநாதன் மீண்டும் கவலை தோய்ந்த குரலில்.

"இத்தனை சுலபமாகப் பாண்டியச் சிறுபடை நமது தலைநகரை அணுகிவிட முடியுமா?" என்ற மன்னன் கேள்வியில் வியப்பு ஒலித்தது.

ஆனால் இதற்குப் பதில் சொன்ன பரதபட்டன் குரலில் வியப்பில்லை, வெறுப்பே மண்டிக் கிடந்தது. "தலைநகருக்குள் பாண்டியனைச் சந்திக்க உன்னால் முடியுமா?" என்றொரு கேள்வியைக் கேட்டான் குருநாதன்.

"ஏன் முடியாது?" என்று மன்னன் வினவினான்.

"முடிந்தால், அதுதான் நல்லது,"

"ஏன்?"

"பாண்டியன் கிராமங்களைக் கொளுத்தி மக்களை வெளியேற்றி இந்தத் தலைநகரை நிரப்பியிருக்கிறான்..." என்ற குருநாதரை இடைமறித்த சேரமான், "இல்லை இல்லை. நிரப்பவில்லை. வரும் மக்களைத் தெற்கே அனுப்பிக் கொண்டிருக்கிறேன்," என்று குறிப்பிட்டான்.

குருநாதன் மன்னனை ஏறெடுத்து நோக்கி, "அதுவரை நீ செய்தது சரி மன்னா. ஆனால் வடக்கு எல்லையிலிருந்து வரும் மக்களனைவரையும் வெளியேற்றுவது கடினம். நூறு பேர் வந்தால் பத்துப் பேர் இங்குத் தங்குவார்கள். தவிர, பாண்டியன் தொடர்ச்சியாகக் கிராமங்களை நிர்மூலமாக்கி, மக்களை இங்கு அனுப்பிக் கொண்டேயிருப்பான்.

அப்படி விரட்டும் மக்களுக்குப் பின்பே பாண்டியப் படையும் வரும். கடைசி கிராமங்களின் மக்கள் உள் நுழைவதற்குள் பாண்டியன் பரவியின் கோட்டையைத் தாக்குவதற்கும் இடைக்காலம் சிறிதுமிருக்காது. மக்கள் நிரம்பியிருக்கும் தலைநகரில் படைகளைத் துரிதமாக நகர்த்துவதும் கடினம். ஆகவே, பாண்டியன் இந்நகருக்கு வெகு தூரத்தில் இருக்கும்போதே அவனை எதிர்ப்பதுதான் நல்லது. ஆனால் அதுவும் முடியாது" என்றான்.

"ஏன் முடியாது?" என்று வினவினான் மன்னன்.

"மக்கள் சாரி சாரியாகப் பாதைகளில் வரும்போது அவர்களுக்கெதிரே படைகள் நகருவது கஷ்டம். அதுவும் விற்கூடங்கள் வேற்கூடங்கள் உள்ள ஆயுத வாகனங்கள் நகருவது அசாத்தியம். வேண்டுமானால் சேனாதிபதியைக் கேட்டுப்பார்," என்றான் குருநாதன்.



சிறையிலடைபட்ட குருநாதன் சகலத்தையும் உணர்ந்திருப்பது பற்றி மன்னன் பெரிதும் வியப்படைந்தான். "இத்தனையும் உங்களுக்கு எப்படித் தெரிந்தது? யார் சொன்னார்கள்?" என்று கேட்டான் வியப்புடன்.

"யாரும் சொல்லத் தேவையில்லை" என்றான் குருநாதன்.

"நீங்களாக ஊகித்தீர்களாக்கும்?" என்றான் மன்னன் ஏளனத்துடன்.

"ஊகத்திற்குப் பாண்டியன் இடம் வைக்கவில்லையே?" என்றான் குருநாதன் விஷமத்துடன்.

"பாண்டியனிடமிருந்து அதை அறிந்துகொண்டு விட்டீர்?"

"அவன் உதவி இதற்கு எதற்கு?"

"வேறு யார் உதவி கொண்டு அறிந்ததீர்?"

"இவற்றின் உதவி கொண்டு," என்று குருநாதன் பளிச்சிட்ட தனது கண்களைக் கையால் தொட்டுக் காட்டினான். "இந்தச் சிறையிலும் சாளரமிருக்கிறது. ஒன்று வடபுறமும் இருக்கிறது. இப்படி வா," என்று மன்னனை



அழைத்த குருநாதன் தனது அறைக்குள் சென்று வடக்குச் சாளரத்தருகில் நின்று கொண்டான். பிறகு தூரத்தே தெரிந்த மலைப் பகுதியைச் சுட்டிக் காட்டினான்.

மன்னன் தனது கண்களில் விரிந்த காட்சியைக் கண்டு அசைவற்று நின்றான். தூரத்திலிருந்த மலைப் பகுதியில் பந்தங்கள் சாரிசாரியாய் வந்துகொண்டிருந்தன. அவற்றை ஏந்தி வந்துக்கொண்டிருந்த மக்களின் கூச்சல் மட்டுமின்றி, வண்டிகளில் சக்கர அரவம்கூட மிகத் தெளிவாக மன்னன் காதுகளில் விழுந்தன. அந்தக் காட்சியையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த மன்னனுக்கருகில் வந்து நின்றுகொண்டிருந்த குருநாதன் மெல்லச் சொன்னான், "மன்னவா! இந்தக் காட்சியை ஒரு வார காலமாகப் பிரதிதினம் பார்க்கிறேன். இதற்கு விவரணம் தேவையா? இந்த ஊரில் புது அரசன் முடியேற்கப் போகிறானா என்ன? கிராம மக்கள் வேடிக்கை பார்க்கவா வருகிறார்கள்? இந்தக் காட்சி போதாதா பாண்டியன் நோக்கத்தை அறிய? இதைப் பிரதி தினம் பார்த்தேன். புண்ணான மனத்துடன் உட்கார்ந்திருந்தேன். பரவிமா நகரை அழிக்கவே அத்தனை மக்கள் பந்தத்துடன் வருவதாக எனக்குத் தோன்றியது. இருப்பினும் கடற் படையை எண்ணி மன ஆறுதல் கொண்டேன். அந்தப் பலத்தை உடைக்கப் பாண்டியனுக்கு வலு இல்லை, வசதியுமில்லை என்று இறுமாந்திருந்தேன். அந்த இறுமாப்பிலும், ஆறுதலிலும் நீ மண்ணைப் போட்டு விட்டாய். கடற்படை என்ன ஆயிற்றென்று தெரியவில்லையென்கிறாய்," என்று மன வேதனையுடன் சொன்னான் குருநாதன்.

"இப்பொழுது என்ன செய்யச் சொல்கிறீர்கள்?" என்று வினவினான் வீரரவி.

"ஒற்றரை அனுப்பி, கடற்படை என்ன ஆயிற்றென்று கவனி. கடற்படை உருப்படியுடனிருந்தால் அதைத் திரும்ப அழைத்துவிடு," என்றான் குருநாதன்.

"ஏன் குருநாதரே? எதிரி கோட்டை வாயிலில் தாக்கினால் கடலில் நிற்கும் படை எப்படி உதவும்?" என்று வினவினான் வீரரவி.

"பிறகு சொல்கிறேன். முதலில் கடற்படையின் கதியைக் கவனி," என்ற குருநாதன், "மொத்தம் எத்தனை மரக் கலங்களை அனுப்பியிருக்கிறாய்?" என்றும் வினவினான்.

"ஐம்பது மரக்கலங்களை அனுப்பியிருக்கிறேன்," என்றான் வீரரவி.

"நம்மிடமிருப்பதே அவ்வளவுதானே?"

"ஆம்."

"அத்தனையும் அனுப்பிவிட்டாய்?"

"ஆம்."

"கோட்டாற்றுக் கரையைப் பிடிக்க."

"ஆம்."

"தரைப் படை பத்தாயிரம், போர்க் கலங்கள் ஐம்பது. அத்தனையும் ஒரு கோட்டையைத் தாக்க? வீரபாண்டியனையும் அவன் சிறு படையையும் அழிக்க? உம்?" என்று சீறிய பரதபட்டன், "எதிரியிடம் உனக்கு அத்தனை மதிப்பு?" என்று சொற்களை உதிர்த்ததன்றி மேலும் கேட்டான். "தலைநகரை மலைப்புறத்திலும் கடற்புறத்திலும் நிர்க்கதியாகவிட உனக்கு யோசனை சொன்ன படைத் தலைவன் யார்? மந்திரி யார்?" என்று.

"சிங்கணன்." மன்னன் குரல் மெல்ல ஒலித்தது.

"போசளர் படைத் தலைவனா?" என்றான் குருநாதன்.

"ஆம்."

"ஏன் சேர நாட்டில் உனக்கு யோசனை சொல்ல யாருமில்லையா? உன் படைகளை நடத்தத் திறமைசாலி எவனுமே கிடையாதா இங்கே? அயல் நாட்டுப் படைத் தலைவன் எதற்கு உனக்கு?"

சேரன் நீண்ட நேரம் இதற்குப் பதில் சொல்லவில்லை. பிறகு பரதன் எரிச்சலுடன் கிண்டிக் கேட்ட போதும் பதில் சொல்ல மறுத்தான். "இந்தப் போரில் சேரநாடு மட்டுமல்ல சம்பந்தப்பட்டிருப்பது" என்றான் கடைசியில்.



"தெரியும் எனக்கு," என்றான் பரதபட்டன் வெறுப்புடன்.

மன்னன் விழிகள் வியப்புடன் பரதபட்டனை நோக்கின. "என்ன தெரியும் உங்களுக்கு?" என்று அவனிடமிருந்து உதிர்ந்த சொற்களிலும் வியப்பிருந்தது.

"இதில் போசள நாடும், சிங்களமும், சோழ நாடும் சம்பந்தப்பட்டிருப்பது எனக்குத் தெரியும். சேரநாடு அவர்கள் கைப்பாவையாக இயங்குவதும் எனக்குத் தெரியும்" என்றான் குருநாதன், மன்னனைச் சீற்றத்துடன் நோக்கி.

"குருநாதரே!" மன்னன் குரல் வெகுண்டு எழுந்தது.

"என்ன?" குருநாதனும் கேட்டான் சீற்றத்துடன்.

"உமது துணிவுக்கும் எல்லை இருக்கவேண்டும். என்னைக் கைப்பாவை என்கிறீர்?" என்றான் மன்னன் உதடுகள் கோபத்தால் துடிக்க.

"உண்மையைச் சொல்லப் பிரமாத துணிவு தேவையில்லை மன்னா! நீ மற்ற வல்லரசுகளின் கைப்பாவையில்லையேல் அவர்கள் படைப்பிரிவுகள் உனக்கு உதவ ஏன் வரவில்லை? உன்மீது பாண்டியன் படை எடுத்ததும் பாண்டிய எல்லையைப் போசளர் ஏன் தகர்க்கவில்லை? சிங்கணனை மட்டும் ஏன் அனுப்பினார்கள்? சிங்கணன் என்ன கிருஷ்ண பரமாத்மாவா, சூட்சுமத்தால் பெரும் வீரர்களையும் படைகளையும் தகர்த்தெறிய?" என்று சீற்றம்பெரிதும் முகத்தில் துளிர்த்ததால் சிவந்துவிட்ட வதனத்துடன் காலருத்ரன் போல் காட்சியளித்து பரதபட்டன் கேட்டான். "போசளரும், சிங்களரும் உன்னைத் தங்கள் கருவியாக உபயோகிக்கிறார்கள் பாண்டியனை உடைக்க. அவர்கள் வலையில் நீயும் விழுந்துவிட்டாய். அது நடந்த கதை. இனி நடக்கவேண்டிய கதையைக் கவனி. உன்நாட்டைக் காக்கப் பார். கடற்படை என்னவாயிற்று

என்று பார்த்து எனக்கு அறிவி. பிறகு என்ன செய்ய வேண்டும் என்பதைச் சொல்கிறேன். போய்வா மன்னவா, போய் வா; சேரநாட்டுத் தலைவிதி எதற்கும் கலங்காத என் தலையைக்கூடக் கலக்குகிறது," என்று கூறி அறைக்கு வெளியே செல்லும்படி மன்னனுக்குச் சைகை செய்தான்.

பரதபட்டனின் கடுங்கோபத்தைக் கண்டு மலைத்து நின்றுவிட்ட மன்னன்மெள்ள மெள்ள அந்த அறையை விட்டு வெளியேறினான். இரவு நேரம் ஓடிவிட்டாலும் அவன் பள்ளியறைக்குச் செல்லவில்லை. பட்டத்து ராணியையோ, இளைய ராணியையோ நாடவில்லை. ஆஸ்தான அறையை அடைந்து சேனாதிபதியை வரவழைத்துக் கடற்படையின் கதியை அறியுமாறு கட்டளையிட்டான்.

சேனாதிபதிக்குப் பதில் சொல்ல நா எழவில்லை. ஏதோ மென்று விழுங்கினான்.

"ஏன் விழுங்குகிறாய்? சொல்" என்று சீறினான் மன்னன்.

"நமது கடற்படையைப் பற்றித்தான் சொல்ல வந்தேன்," என்று குழறினான், சேனாதிபதி.

"கடற்படைக்கு என்ன?" என்று கேட்டான் மன்னன் கோபத்துடன்.

"திரும்பி வந்துகொண்டிருக்கிறது," என்று அறிவித்தான் சேனாதிபதி.

சேனாதிபதியின் முகபாவத்திலிருந்தும் சொற்கள் குழறியதிலிருந்தும் அவன் ஏதோ தனக்கு விருப்ப மில்லாததைச் சொல்ல முயலுகிறான் என்பதை உணர்ந்து கொண்டான் வீரரவி. ஆகவே, "சொல் சேனாதிபதி! எதுவாயிருந்தாலும் சொல்," என்றான்.

சேனாதிபதி மெள்ள விஷயத்தை அவிழ்த்தான். வீரரவியின் திகைப்பு எல்லை கடந்தது. தனது தலையில் மற்றொரு பேரிடி இறங்கிவிட்டதை உணர்ந்தான்.

## அத்தியாயம் 35

# புதுக் கதை

கடற்படையின் நிலைபற்றி விவரங்கேட்ட மன்னனை நோக்கி சேனாதிபதி தயங்கித் தயங்கி மெல்லப் பேசினாலும், சொல்ல முற்பட்டதை மென்று விழுங்கி ஆமை வேகத்தில் சொன்னாலும் விஷயம் விபரீதமாக யிருந்ததால் சேனாதிபதியின் சொற்கள் நன்றாகக் காய்ச்சி உருக்கப்பட்ட ஈயம் போல் புகுந்தன மன்னன் செவிகளுக்குள். "எதுவாயிருந்தாலும் சொல்," என்று மன்னன் துணிவுடன் சேனாதிபதியை ஊக்கி விட்டானே தவிர, அந்த 'எதுவாயிருந்தாலும்' இத்தனை விபரீதமாக இருக்குமென்று மன்னன் எண்ணவேயில்லை. ஆகவே சேனாதிபதி மிக மெதுவாக வாழைப்பழத்தில் ஊசியேற்றுவது போல் விஷயத்தை அவிழ்த்தாலும் அந்தச் சொல் ஊசிகள் மன்னன் இதயத்தில் சுரீல் சுரீலென்று பாயவே செய்தன. வீரரவி உதய மார்த்தாண்டவர்மனுக்கு அந்தச் சமயத்தில் வீரரவிப் பட்டத்தை நீக்கி அவனை வெறும் உதயமார்த்தாண்டவர்மனாகவே செய்தன.

இத்தனைக்கும் சேனாதிபதி வெகு சாலாக்காகத் தனது பதிலைத் துவக்கினான், "எதுவாயிருந்தாலும் சொல்," என்று மன்னன் கட்டளை பிறந்தவுடன். "தாங்கள் இப்படி அவசரப்பட்டு ஆணையிடுவதால் சொல்கிறேன். இல்லாவிடில் நாளைக் காலையில் விஷயத்தைப் பூராவாக ஆராய்ந்து விட்டுத்தான் தங்களைச் சந்தித்துப் பேசுவதாக இருந்தேன்," என்றான் சேனாதிபதி.

"உனது ஆராய்ச்சி பின்னாலிருக்கட்டும், முதலில் சொல். கடற்படை திரும்பி வருவதாக யார் சொன்னது உனக்கு?" என்று வினவினான் மன்னன் கவலையுடன்.

"மன்னா, நான் தங்கள் சேனாதிபதியல்லவா?" என்றொரு அர்த்தமற்றக் கேள்வியைக் கேட்டான் சேனாதிபதி.

"இன்றுவரை நீதான் சேனாதிபதி!" என்று மன்னன் குறிப்பிட்டான் அத்தனை கவலையிலும் விஷமத்தைக் கைவிடாமல்.

"ஏன், என்னை மாற்றிவிடுவதாக உத்தேசமா?" என்று வினவினான் சேனாதிபதியும் இடக்காக.

"மாற்றினால் ஆச்சரியப்பட வேண்டாம். சேனாதிபதி மக்களைக் காக்க, இந்நாட்டைக் காக்க, இத்தலைநகரைக் காக்க யாரையும் எப்பொழுதும் மாற்றுவேன்," என்றான் வீரரவி மேலும் விஷமத்துடன்.

சேனாதிபதியும் அதற்குச் சளைத்ததாகத் தெரிய வில்லை. "மன்னருக்கு நாட்டிடமும் மக்களிடமுமிருக்கும் அன்பு நன்கு தெரிந்தது. ஆகையால் என்னைப் பதவியைவிட்டு அகற்றினால் நான் ஆச்சரியப்பட மாட்டேன்" என்றான் சேனாதிபதி. இதைச் சொன்ன சேனாதிபதியின் குரலில் விபரீத ஒலி இருந்தது. அவன் தன்னைப் போற்றுகிறானா, தூற்றுகிறானா என்பது விளங்காததால் வீரரவி லேசாக உஷ்ணத்துடன் கேட்டான், "ஆச்சரியப்படாமல் என்ன செய்வீர்?" என்று.

"மகிழ்ச்சியடைவேன்" என்றான் சேனாதிபதி மிகுந்த பணிவுடன்.

"மகிழ்ச்சியடைவாயா?" மன்னன் குரலில் வியப்புத் துளிர்த்தது.

"ஆம்," மீண்டும் பணிவுடன் வந்தது சேனாதிபதியின் பதில்.

"பதவி போவதில் அத்தனை பிரியமா உனக்கு?"

"பதவியின் உயர்வு தாழ்வு சந்தர்ப்பத்தைப் பொறுத் தது. உயர்வு தாழ்வைப்பற்றியது, அதிலுள்ள மோகம் அந்த



மோகத்தைப் பொறுத்தது நாம் அதை விரும்புவதும் விரும்பாததும்,"

புதிரைப்போல் விரிந்த சேனாதிபதியின் சொற் களைக் கேட்ட மன்னன் ஒரு விநாடி குழம்பி நின்றான். பிறகு கேட்டான், "சேரநாட்டு சேனாதிபதி பதவி அற்பமென்று நினைக்கிறாயா?" என்று.

"சமீப காலம்வரை நினைக்கவில்லை," என்றான் சேனாதிபதி துணிவுடன்.

"எப்பொழுது நினைக்க ஆரம்பித்தீர்?"

"மன்னரே அதற்கு மதிப்புக் கொடுக்காதபோது."

"எப்பொழுது அதன் மதிப்பைக் குறைத்தேன்?"

"என்று சேரநாட்டுப் படைகளை நடத்திச் செல்ல என்னையும், ராமவர்மனையும் விட்டுப் போசளனைத் தேர்ந்தெடுத்தீர்களோ அன்று," சேனாதிபதி இந்தச் சொற்களை வெறுப்புடன் உதிர்த்தான்.

மன்னன் அவன்மீது துயரம் நிரம்பிய விழிகளை நாட்டினான். "சேனாதிபதி," என்று அந்தத் துயரம் குரலிலும் தோய அழைத்தான்.

"மன்னவா!" சேனாதிபதி பணிவுடன் கேட்டான்.

"உன்னையும் ராமவர்மனையும் இழிவுபடுத்தும் நோக்கத்துடன் சிங்கணனைப் படைகளை நடத்த நான் நியமிக்கவில்லை," என்றான் மன்னன்.

"மன்னர் செய்யும் காரியங்களுக்குக் காரணங்கள் பல இருக்கலாம்," என்றான் சேனாதிபதி பதிலுக்கு.

"ஆம். முக்கிய காரணம் உங்களைவிட வீரபாண்டி யனைச் சிங்கணன் நன்கறிவான் என்பது."

"உண்மை."

"சிங்கணன் சுந்தரபாண்டியன் கோட்டையில் வேவுத் தொழில் புரிந்திருக்கிறான். வீரபாண்டியன், சுந்தர பார்ண்டியன் இவர்களை நன்றாகக் கவனித்திருக்கிறான். அங்குள்ள படைபலம் அவனுக்குத் தெரியும். அங்கிருந்த

சமயத்தில்..." என்று மன்னன் வாசகத்தை முடிக்காமல் விட்டான்.

"பல அரிய சாதனைகளைப் புரிந்திருக்கிறார்" என்று சேனாதிபதி வாசகத்தை முடித்தான்.

சேனாதிபதி தன்னைப் பார்த்து நகைக்கிறானென்பதைப் புரிந்துகொண்டாலும் மன்னன் அதை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல் கூறினான். "சேனாதிபதி! அந்தக் கோட்டையிலிருந்த சமயத்தில் பாண்டியப் படைகளின் பயிற்சி, அவற்றின் போர் முறை, அவை இயங்க வீரபாண்டியன் பிறப்பித்த உத்தரவுகள், அத்தனையையும் சிங்கணன் கவனித்திருக்கிறான். பாம்பின் கால் பாம்பறியும் என்பதுபோல் சிங்கணன் பாண்டிய சகோதரர்களை நன்கறிந்திருந்தான். ஆகையால்தான் அவன் தலைமையில் படைப் பிரிவை அனுப்பினேன்," என்று.



"பாம்பு என்ன ஆயிற்று மன்னவா! எதிரியைக் கடித்ததா? எதிரியால் அடியுண்டதா?" என்று வினவினான் சேனாதிபதி.

சிங்கணன் கதியைச் சில நாழிகைகளுக்கு முன்பே குறிஞ்சியிடமிருந்து அறிந்திருந்த மன்னன் அதுபற்றி சேனாதிபதிக்கு ஏதும் அறிய வாய்ப்பில்லையென்று நினைத்து, "அதை நீதான் அறிந்து சொல்ல வேண்டும்? உன் ஒற்றர்கள் ஏதும் செய்தி கொண்டு வரவில்லையா?" என்று வினவினான்.

"சென்ற ஒற்றர்களில் இருவர் திரும்பி வந்தார்கள். வந்த இருவரும் கோட்டாற்றுக் கரையை அடைய முடியவில்லை" என்றான் சேனாதிபதி மெள்ள.

"ஏன்" மன்னன் வினவினான் எரிச்சலுடன்.

"இடையிலுள்ள பாதைகளைப் பாண்டியப் படைகள் கத்தரிக்கின்றனவாம்," என்றான் சேனாதிபதி.

"அத்தனை படை பாண்டியனுக்கு ஏது? கோட்டாற்றுக் கரைக் கோட்டையைப் பாதுகாத்த சிங்கணன் பெரும் படையை எதிர்க்கவும், நமது தலை



நகரின் வழியிலுள்ள பாதைகளைத் துண்டிக்கவும் பெரும்படை வேண்டுமல்லவா?" என்று வினவினான்.

"இத்தனை நாள் அப்படித்தான் நினைத்துக் கொண்டிருந்தேன்," என்றான் சேனாதிபதி மிகப் பணிவுடன்.

"இப்பொழுது கருத்தை மாற்றிக்கொண்டு விட்டீராக்கும்?" என்ற மன்னன் கேள்வியில் ஏளனமிருந்தது.

"ஆம்."

"என்ன காரணம்?"

"பாண்டியன் மலைச்சரிவுகளில் முக்கிய இடங்களில் பத்துப் பத்து வீரர்களை நிறுத்தியிருக்கிறான். நமது தலைநகருக்கும் வடக்கெல்லைக்குமிடையே ஓடும் பாதைகள் அந்தச் சரிவுகளிலிருந்து தெளிவாகத் தெரிகின்றன.."

"கடலோரப் பாதைகளா?"

"கடலோரப் பாதைகளும் சரி, கடலை ஒட்டியுள்ள மலைப் பாதைகளும் சரி, இரண்டும் தெரிகின்றனவாம். யாராவது ஒற்றன் புரவிமேல் சென்றால் அவன் குதிரைமீது அம்பு பாய்கிறது. அல்லது அவன்மீதே பாய்ந்துவிடுகிறது. இதில் போனவர் போக மீதி இரண்டு ஒற்றர்கள் தப்பி வந்திருக்கிறார்கள்..." என்று சேனாதிபதி சற்று நிதானித்தான். பிறகு மேலும் தொடர்ந்து, "கோட்டாற்றுக் கரையைத் தனி ஒற்றர் அணுக முடியாதென்றும் சேரநாடு தப்புவது மிகக் கடினம் என்றும் கூறுகிறார்கள்," என்றான்.

சேரமான் தனது தீ விழிகளைச் சேனாதிபதிமீது திருப்பினான். "இதை என்னிடம் சொல்ல உனக்குத் துணிவு நிரம்பவேண்டும்," என்றும் சீறினான்.

"எனக்குத் தனிப்பட்ட துணிவு கிடையாது. ஒற்றர்கள் துணிவுதான் எனக்கும் துணிவு கொடுத்தது," என்று சேனாதிபதி நன்றாக நிமிர்ந்து நின்று மன்னனை நோக்கினான். "மன்னவா! என் கடமையை நான் உணர்வேன். நெருக்கடியான காலத்தில் மன்னனிடம் உண்மையை மறைப்பதல்ல சேனாதிபதியின் கடமை. தவிர,

இன்றுள்ள நிலையில், சேரநாட்டுச் சேனாதிபதியாக இருக்க யாரும் விரும்பமாட்டார்கள். இந்நாட்டில் நான் பிறந்த தோஷம், தங்கள் உப்பை நீண்டநாள் தின்ற உணர்வு, கடைசிவரை கடமையைச் செய்ய என்னைத் தூண்டுகிறது. நமது வெற்றியில் நம்பிக்கை இழந்த மக்கள், எதிரியின் தந்திரத்தைப் போற்றும் படை, பாண்டிய குமாரியைத் தாங்கள் சிறையெடுத்ததை எதிர்க்கும் குருநாதர், இத்தனை விபரீதத்தில் நான் சேனாதிபதிப் பதவியை வகிப்பது பலருக்கு விந்தையாயிருக்கிறது. அந்தப் பதவியிலிருந்து நீங்கள் என்னை விலக்கினால் எனக்கு எவ்வித வருத்தமுமில்லை. முன்பு சொன்னபடி மகிழ்ச்சிதான். நீங்கள் பதவியிலிருந்து விலக்கினாலும், நான் சாதாரண வீரனாக போரிட்டு மடிவேன். பதவியல்ல நான் விரும்புவது. சேரநாட்டு நலனை விரும்புகிறேன். தந்திர சாலிகளான பகைவர்களுக்கு எதிரே நமது படைபலம் ஆத்மீக பலம் இரண்டும் குன்றியுள்ள நிலையில், நான் கடமையைக் கைவிட ஆசைப்படவில்லை. அந்தக் கடமையின் காரணமாகவே, ஆட்டங் கொடுக்கும் அபாயம் விளைவிக்கும் இந்தப் பதவியில் இருக்கிறேன். என் கடமையைச் செய்து கொண்டும் வருகிறேன். பாண்டியன் எதிர்ப்பார்ப்பதுபோல் அத்தனை அபாயத்தில், தற்காப்பு சாத்தியமில்லாத நிலையில் நமது தலைநகர் இல்லை," என்று விடுவிடு என்று வீராவேசத்துடன் மன்னனைத் துரும்பென மதித்துப் பேசினான் சேனாதிபதி.

அவன் ஆவேசத்தைக் கண்டு மன்னன் வியந்தான். துணிவைக் கண்டு வியந்தான். தலைநகர் அத்தனை பலவீனமாயில்லையென்பதைக் கேட்டு மகிழ்ந்தான். ஆகவே சொன்னான், "சேனாதிபதி! தலைநகர் பற்றி நீ சொன்னதுத திருப்தியாயிருக்கிறது," என்று.

சேனாதிபதி மன்னனை ஏறெடுத்து நிர்ப்பயமாக நோக்கினான். "மன்னவா! செண்டுவெளியில் சேரநாடு அவமானப் பட்ட அன்றே தீர்மானித்தேன். அடுத்த அவமானத்துக்கு இடம் கொடுப்பதில்லையென்று. உடனடி



யாக நகரக் கோட்டைச் சுவர்களில் விற்பொறிகளை ஏற்றிவிட்டேன். உள்ளே நுழைந்த கும்பலை நகரைவிட்டு வெளியேற்றினேன். வெளிக் கிராமங்களிலிருந்து வந்த யார் நகரத்தில் தங்கினாலும் கடுமையான தண்டனை விதிக்கப் படுமென உத்தரவு பிறப்பித்தேன். ஆகவே நூற்றுக்கு பத்துப் பேர் தங்கினாலும் நகரத்துக்குள் உள்ள காட்டுப் பகுதிகளிலும் உறவினர் இல்லங்களிலும் மறைந்துதான் தங்குகிறார்கள். பாதைகளில் கூட்டமில்லை. நமது படைப் பிரிவுகள், வாகனங்கள், நன்றாகச் சஞ்சரிக்க முடியும். தவிர கடல் பகுதிகளிலும் எரியம்பு எய்யும் விற்கூடங்களை நிறுத்தியிருக்கிறேன். ஆகவே கடலோரப் பாதைவழியாகவும் நாமறியாமல் எதிரி நம்மை அணுகமுடியாது," என்று விவரித்தான் சேனாதிபதி.

மன்னன் சற்று மனச் சாந்தியடைந்தான். சேனாதிபதியின் ஏற்பாடுகளில் குருநாதர் பயத்துக்கு விடைகளிருப்பதை உள்ளூர உணர்ந்து மகிழ்ந்தான். அந்த மகிழ்ச்சி அவன் முகத்திலும் பிரதிபலிப்பதை சேனாதிபதி கண்டான்.

கண்டதாலோ என்னவோ சற்று முகம் சுளித்தான் சேனாதிபதி. அதுவரை துணிவு நிலவிய அவன் 'முகத்தில் அச்சம் திடிரெனப் புகுந்தது. "மன்னவா! நான் சொன்ன அற்ப விஷயங்களைக் கேட்டு மகிழ்ந்துவிடாதீர்கள். நகரத் தைப் பாதுகாக்கத்தான் நான் ஏற்பாடு செய்திருக் கிறேன்..." என்று இழுத்தான்.

"வேறென்ன?" என்று வினவினான்.

"வெளிநிலை மோசமாயிருக்கிறது," என்று சேனாதி பதி தழுதழுத்த குரலில் கூறினான்.

"எப்படி மோசமாகி வருகிறது?"

"பாண்டியன் படை முன்னைவிட அதிவேகமாகத் தலை நகரை நோக்கி வருகிறது."

"அப்படியா?"

"ஆம். அதுமட்டுமல்ல!"

"வேறு விசேஷமும் இருக்கிறதா?"

"இருக்கிறது. சிங்கணனிடமிருந்து செய்தி ஏதுமில்லை. அவன் படைப்பிரிவில் பாதியைச் சுந்தரபாண்டியனைப் பின்புறத்தில் தாக்க அனுப்பியிருக்க வேண்டும், முதல் ஏற்பாட்டின்படி.

"ஆம்.'

சேனாதிபதி மன்னனை உற்று நோக்கினான். "பின்னால் படை தாக்கும்போது அதைச் சமாளிக்காமல் எதிரி எப்படி முன்னேற முடியும்?" என்று வினவினான்.

அப்பொழுதுதான் மன்னனுக்கு விஷயம் விளங்கியது. "ஆம் சேனாதிபதி, ஆம். பாண்டியன் முன்னேறுவதானால் ஒன்று அவன் படையைப் பின்புறம் யாரும் தாக்கவில்லை. அப்படித் தாக்கியிருந்தால் அந்தப் படையை அவன் நிர்மூலமாக்கியிருக்க வேண்டும்" என்றான் வீரரவி குழப்பம் சிந்தனையை ஆட்கொள்ள.



மன்னன் ஊகம் சரியென்பதற்கு அறிகுறியாகத் தலையசைத்தான் சேனாதிபதி. "இந்த நிலை எனக்குப் புரியவில்லை மன்னவா! அதுமட்டுமல்ல. கடற்படை விவகாரமும் பெரும் விந்தையாயிருக்கிறது. மன்னவா, கடற்படை கோட்டாற்றுக்கரையைப் பின்புறம் தாக்க அனுப்பினோம்," என்று பழைய கதையைத் துவங்கினான் சேனாதிபதி.

"அது பழைய கதை. புதுக் கதையைச் சொல்," என்றான் மன்னன்.

இருப்பினும் புதுக்கதையைச் சொல்ல இஷ்டப்படாத சேனாதிபதி பழைய கதையையே சுவைக்க இஷ்டப்பட்டு, "நமது கடற்படை கோட்டாற்றுக் கரையைப் பின்புறம் தாக்கவில்லை," என்றான்.

"ஏன்?" என்று வினவினான் மன்னன் கோபத்துடன்.

"அது கோட்டாற்றுக் கரையை அடையவேயில்லை," என்று தட்டுத்தடுமாறிக் கூறினான் சேனாதிபதி.

"வேறு எங்கு போயிற்று?"



"கோட்டாற்றுக்கரைக்கு ஒரு காதமிருக் கையில் அதை நோக்கிக் கரையிலிருந்து விளக்கசைக்கப்பட்டது ஓர் இரவில்.

"உம்."

"அந்த விளக்கசைந்ததும் படைத்தலைவர் இரண்டு படகுகளில் வீரர்களை அனுப்பி அதைக் கவனிக்கச் சொல்லி உத்தரவிட்டார்."

"சொல்."

"படகுகள் திரும்பின, இரு வீரர்களுடன்."

"தாமதிக்காதே. சொல்."

"அந்த இரு வீரர்களும் சிங்கணனிடமிருந்து இரண்டு ஓலைகளைக் கொண்டு வந்தார்கள். ஓர் ஓலையில் கோட்டை பிடிபட்டதாகவும் வீரபாண்டியன் சரணடைந்து மீதி வீரர்களுடன் வெளிப் போந்ததாகவும், ஆகவே கடற்படை பரலிக்குத் திரும்பலாமென்றும் சிங்கணன் உத்தரவிட்டிருந்தான். இன்னோர் ஓலையில் வீர பாண்டியன் சரணாகதி ஒப்பந்தமிருந்தது."

மன்னன் முகத்தில் மகிழ்ச்சி துளிர்த்தது. "இதில் துயரத்திற்கு என்ன இருக்கிறது? இந்தப் புதுக் கதை தரமாயிருக்கிறதே" என்ற மன்னன் குரலில் சந்துஷ்டி தெரிந்தது.

"அதனால் திரும்பிய நமது கடற்படை...." என்று தயங்கினான் சேனாதிபதி.

"என்ன!" மன்னன் குரலில் சந்தேகம் தொனித்தது.

"முழுவதும் திரும்பவில்லை. பத்துப் போர்க்கலங்கள் வழியில் தீக்கிரையாயின. மீதி தப்பி வந்தது தம்பிரான் புண்ணியம்," என்று குரல் நடுங்கிக் கூறிய சேனாதிபதி, "அவரும் வந்திருக்கிறார். வெளியிலிருக்கிறார். அழைக்கட்டுமா?" என்று வினவினான்.

"யார் அது?" மன்னன் குரல் கடினமாயிருந்தது.

"கடற்படையின் உபதளபதி." சேனாதிபதியின் குரலில் துயரத்தின் சாயை நன்றாகப் பிரதிபலித்தது. அடுத்த விநாடி உபதளபதி உள்ளே நுழைந்தான். அவன் கோலமே அவன் கதையை மட்டுமல்ல: கடற்படையின் புதுக் கதையையும் சொல்லிற்று.

## அத்தியாயம் 36

# குருநாதன் எச்சரிக்கை

**க**டற்படை உபதளபதியின் தோற்றத்தைக் கண்டதுமே அவன் நீண்ட தூரம் துரிதமாகவும் கஷ்டப்பட்டும் பயணம் செய்து வந்திருக்கிறானென்பதை மன்னன் புரிந்து கொண்டதால் அவன் உட்கார ஓர் ஆசனத்தைத் தன் கையால் சுட்டிக் காட்டி, தானும் தனது மஞ்சத்தில் உட்கார்ந்து கொண்டான். சேனாதிபதியைக்கூட உட்காரும்படி மன்னன் சைகை காட்டத்தான் செய்தான். ஆனால் சேனாதிபதி இருந்த மனோநிலையில் அவன் அதைப் புரிந்து கொள்ளத்தானில்லையோ, அல்லது புரிந்து கொண்டு உட்காரத்தான் இஷ்டமில்லையோ, நின்றது நின்றபடி உபதளபதியை உற்றுக் கவனித்தான். மன்னன் கண்களும் உபதளபதிமீது பல விநாடிகள் நிலைத்தன.

சேரநாட்டுக் கடற்படையின் உபதளபதி நன்றாக ஆறடி உயரமிருந்ததன்றி அடிக்கடி கடற் பிரயாணத்தில் ஈடுபட்டதன் விளைவாக அவன் முகமும் லேசாக கருத்திருந்தது. அங்கியின்மீது கழுத்தில் அவன் தங்கச் சங்கிலியொன்றை அணிந்திருந்தாலும், அவன் காதிலிருந்த வெளுத்த சங்கு வளையங்கள் கடற்பொருள்களில் அவனுக்கிருந்த ஆர்வத்தை நன்கு விளக்கின. அநேகமாகக் கடலில் உலாவியதால் பயத்தை அடியோடு இழந்திருந்தவனாயினும் அன்று மட்டும் அவன் முகத்தில் அச்சம் விரவி நின்றது. கலைந்திருந்த அவன் கேசமும் அதன் இழைகளின் சில நுனிகளில் அப்பொழுதும் முத்துப்போல் தொக்கி நின்ற நீர்த்திவலைகளும் அவன் கடலிலிருந்து நிலம் வந்து அதிக நேரமாக வில்லையென்பதையும் அலைத் திவலைகளைத் துணியால் துவட்டி நீக்கக்கூட அவன் நேரத்தைச்



செலவழிக்கவில்லை யென்பதையும் அறிவுறுத்தின. கிழிந்த அவன் ஆடைகள் அதிக அவசரத்தைக் குறித்தனவா அல்லது இடையே ஏற்பட்ட சண்டையைக் குறித்தனவா? எதையும் ஊகிக்கும் திறன் வாய்ந்த சேரமானுக்கே புரியவில்லை.

ஆகவே வீரரவி உதயமார்த்தாண்டவர்மன் ஏதும் பேசாமல், எக்கேள்வியும் வாய்விட்டுக் கேட்காமல், புருவத்தின் அசைவால்கூடத் தனது வியப்பைக் காட்டாமல் உட்கார்ந்தேயிருந்தான். கடற்படை உபதளபதியே வாய் திறந்து சொன்னான் சுருக்கமாகவும் திடமாகவும், "பத்து மரக்கலங்களை நாம் இழந்துவிட்டோம்" என்று.

"அதை சேனாதிபதியிடமிருந்தே அறிந்தேன்," என்றான் மன்னனும் சுருக்கமாக.

"ஓலை விஷயங்களையும் அறிந்திருப்பீர்கள்," என்றான் கடற்படை உபதளபதி.

"ஆம்., அவற்றையும் அறிந்தேன்," என்று பதிலளித்தான் மன்னன்.

உபதளபதி சற்றுச் சிந்தித்துவிட்டு, "அந்த ஓலைகளைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?" என்று வினவினான்.

"நினைப்பதற்கு என்ன இருக்கிறது? சிங்கணன் ஓலையில்லாமல் இருக்கலாம். உங்களை ஏமாற்ற எதிரி அனுப்பிய ஓலையாயிருக்கலாம். விளக்கசைத்தவீரர்கள் வீரபாண்டியன் வீரர்களாயிருக்கலாம்" என்றான் மன்னன் குரலில் எந்த உணர்ச்சியையும் காட்டாமல்.

"இப்படி நீங்கள் சந்தேகப்படுவீர்கள் என்று கடற்படைத் தளபதி நினைத்தார்," என்றான் உபதளபதி.

"நினைத்து அவர் செய்ததென்ன!" மன்னன் குரலில் லேசாக உஷ்ணம் துளிர்க்கலாயிற்று.

"இதை உங்களிடம் காட்டச் சொன்னார்," என்று இரண்டு ஓலைகளையும் மடியிலிருந்து மன்னனிடம் கொடுத்தான் உபதளபதி.

மன்னன் ஓலைகளை வெகு நிதானமாக ஆராய்ந்தான். சேனாதிபதியும் இரண்டடி எடுத்து வைத்து மன்னனுக்குப் பின்புறம் வந்து நின்று ஓலைகளைக் கவனித்தான். மன்னன் இரு ஓலைகளையும் பல முறை மாறி மாறிக் கவனித்தான். அவற்றில் சந்தேகப்படுவதற்கு ஏதுமில்லை. சிங்கணன் ஓலையில் போசள நாட்டு இலச்சினை இருந்தது. சரணாகதி ஒப்பந்தத்தில் வீரபாண்டியன் முத்திரை, போசள முத்திரை இரண்டுமே இருந்தன. அவ்விரண்டையும் துருவித் துருவி ஆராய்ந்த பிறகு சிங்கணனின் ஓலை வாசகத்தையும் கவனித்தான் வீரரவி. "கடற்படைத்தளபதிக்கு சேரர்தரைப் படைத் தளபதி போசள சிங்கணன் விடும் ஓலை. வீரபாண்டியன் சரணடைந்து விட்டான். கோட்டை கைவசப் பட்டு விட்டது. கடற்படை திரும்பிச் செல்லட்டும். மன்னரிடம் வெற்றிச் சேதியைச் சொல்லும் முதல் தூதராகும் வாய்ப்பை உமக்குத் தருகிறேன்," என்றிருந்தது சிங்கணன் ஓலை. கடைசியில் சிங்கணன் கையொப்பமும் போசள முத்திரையுமிருந்தன.

மன்னன் மௌனம் சாதித்தான் பல விநாடிகள். பிறகு கண்களை உயர்த்தி, "உபதளபதி! இப்படி ஓலைகள் நடுவழியில் கிடைத்தது உனக்கோ கடற்படைத் தளபதிக்கோ வியப்பாயில்லை?" என்று வினவினான்.

"இல்லை."

"ஏன்?"

"இங்கிருந்து கடற்படை புறப்படும்போதே எதிர்க் காற்று பலமாயிருந்தது. மன்னருக்குத் தெரியும். சற்று தாமதித்துத்தான் மரக்கலங்கள் கொல்லத்தை அதாவது கோட்டாற்றுக்கரைக் கோட்டையின் பின்புறத் துறை முகத்தை அடைய முடியும் என்பதும் தெரியும். கடற்படை சென்றதே தரைப் படைக்குத் தீங்கு நேர்ந்தால் உதவுவதற்காக, ஒருவேளை தரைப்படைக்குக் கோட்டையைத் தாக்குவதில் கஷ்டங்கள் இருந்தால், கடற்படை வரும்வரையில் தரைப்படை தாமதிக்க வேண்டுமென்றும்





ஏற்பாடு, கோட்டை கைவசமாகிவிட்டதால் கடற்படைக்கு வேலையில்லை. அது தவிர மன்னர் உத்தரவும் திட்டமாயிருந்தது," என்று சுட்டிக் காட்டினான்.

"என்ன உத்தரவோ?"

"கடற்படை சிங்கணன் உத்தரவுப்படி நடக்க வேண்டுமென்று தாங்கள் உத்தரவிட்டீர்கள். அதன்படி நடந்தோம்."

"சந்தர்ப்பத்துக்குத் தகுந்தபடி சுயயோசனை அவசியமில்லையா?"

"சந்தர்ப்பத்திலும் தவறு ஏதுமில்லை. கோட்டை வசப்பட்டு விட்டது. திரும்பிச்செல்ல உத்தரவிடுகிறார் போசளர். இந்த நிலை சர்வசாதாரணமானது. இதில் சந்தேகிக்க ஏதுமில்லை."

"அப்படியானால் பத்து கப்பல்கள் எப்படி எரிந்தன?"

"அந்தக் கேள்விக்கு இன்னும் விடை கிடைக்க வில்லை எங்களுக்கு."

"உங்களுக்கு ஓலைகளைக் கொண்டுவந்த வீரர்கள் என்ன ஆனார்கள்?"

"ஓலைகளைக் கொடுத்ததும் திரும்பிச் சென்று விட்டார்கள்."

"ஏன் அனுப்பினீர்கள்?"

"சந்தேகப்படுவதற்கு ஏதுமில்லை. ஓலைகளைக் கொண்டு வந்தவர்கள் கொடுத்த பின்பு திருப்பிச் செல்ல அனுமதி கேட்டார்கள். படகுகளில் அனுப்பி வைத்தோம். இதுவும் சாதாரணமாக நடப்பது."

மன்னன் விழிகள் தீயைக் கக்கின. "பத்துக் கப்பல்கள் எரிந்தது? அதுவும் சாதாரணமாக நடப்பதுதானோ? உப தளபதி! கடற்படையில் அசாதாரணம் எதுவுமே கிடையாது போலிருக்கிறது. தளபதிகளின் மூளையும் சர்வ சாதாரணம் போலிருக்கிறது" என்று சுடச்சுடச் சொற்களை உதிர்த்தான் மன்னன்.

உபதளபதி மஞ்சத்தை விட்டு எழுந்து மன்னனை நோக்கினான். "மன்னவா! நாங்களிருந்த நிலையில் அசாதாரண மூளையுடனிருப்பவர்கள் என்ன செய்வார்கள்?" என்று வினவினான்.

மன்னனுக்கு இதற்கு என்ன பதில் சொல்வதென்று விளங்கவில்லை. யாரும் அந்த நிலையில் வேறு எதையும் செய்திருக்க முடியாதென்று மன்னனுக்கு நன்றாகப் புரிந்ததேயிருந்தது. ஆகவே மேற்கொண்டு உபதளபதியைக் காரசாரமாக ஏதும் பேசாமல், "உமது உடைகள் ஏன் கிழிந்திருக்கின்றன?" என்று வினவினான்.

"மன்னர் நன்றாகக் கவனிக்க வேண்டும், இவை கிழிசல் இல்லை," என்றான் உபதளபதி.

"வேறென்ன!" என்றான் மன்னன்.

"தீக்கிரையான மரக்கலங்களிலொன்றில் நானும் இருந்தேன். அதில் தீப்பிடித்த இடங்களைக் கிழித்து ஏறிந்தேன். ஓரங்களில் சில இடங்களில் கரி தட்டியிருப்பதைப் பார்க்கலாம்," என்று இரண்டு மூன்று இடங்களைக் கையால் காட்டினான் உபதளபதி. பிறகு அங்கியைச் சில இடங்களில் நீக்கி உள்ளிருந்த இரண்டொரு தீப்புண்களையும் காட்டினான்.

மன்னன் அப்புண்களைக் கவனித்துவிட்டுப் பெருமூச்செறிந்தான். பிறகு "நீ சொல்ல வேண்டியது பாக்கி ஏதாவதிருக்கிறதா?" என்று வினவினான்.

"இல்லை," என்பதற்கறிகுறியாகத் தலையசைத்த உபதளபதியையும், தன் பின்னே ஏதும் பேசாமல் சிலையென நின்றிருந்த சேனாதிபதியையும் தன்னுடன் வரும்படி சைகை செய்து மஞ்சத்திலிருந்தது எழுந்து வெளியே நடந்தான் மன்னன். மன்னனை தொடர்ந்து மற்ற இருவரும் நடக்க மூவரும் குருநாதனிருந்த அறைக்கு வந்து சேர்ந்தார்கள்.

இரவு நடுச்சாமத்தை அடைந்துங்கூட பரதபட்டன் உறங்கவில்லை. விளக்கடியில் உட்கார்ந்து பனைநறுக்குகளில் எழுத்தாணிகொண்டு எதையோ எழுதிக்கொண்டிருந்தான். மற்ற இருவருடன் மன்னன் உள்ளே நுழைந்ததும் தலை நிமிர்ந்த பரதபட்டன் கடற்படை உபதளபதியைக் கண்டதும் சற்றே வியப்பைக் காட்டினான். "மன்னவா! இப்பொழுதுதான் கடற்படையைப் பற்றி உன்னை விசாரித்தேன். அதற்குள் உபதளபதியையே பிடித்துக்கொண்டு வந்து விட்டாயா?" என்று சிலாகித்தான். அந்தச் சிலாகிப்பில் ஏதோ விஷமம் ஊடுருவி நின்றதை மன்னன் கவனிக்கவே செய்தான்.



அதனால் வெகுண்ட அவன் இதயம் அடுத்த விநாடி பெரும் அதிர்ச்சிக்கு ஆளாகியது. அத்தகைய ஒரு கேள்வியை வீசினான் குருநாதன் உபதளபதியை நோக்கி. "கடற்படைக்கு எவ்வளவு சேதம்?" என்ற கேள்வி வெகு சாவதானமாக எழுந்தாலும் அந்த அறையைப் பயங்கரமாக ஊடுருவியது.

"குருநாதரே!" ஏககாலத்தில் மற்ற மூவர் குரலும் எழுந்தது.

"வியப்பு இருக்கட்டும் விஷயத்தைச் சொல்," என்றான் குருநாதன் அலுப்புடன் உபதளபதியை நோக்கி.

உபதளபதி மன்னனிடம் சொன்னதையெல்லாம் திரும்பச் சொன்னான். குருநாதன் இமையைக் கூட அசைக்காமல் உணர்ச்சியை எவ்விதத்திலும் லவலேசமும் காட்டாமல் அனைத்தையும் கேட்டான். உபதளபதி கதையைச் சொல்லி முடித்ததும் கூறினான், "உங்கள்மேல் அதிகத் தவறில்லை, தளபதியும் நீயும் நடந்துகொண்டது சரிதான். இருப்பினும், தலைநகர் நெருங்கும்போது நீங்கள் சற்று எச்சரிக்கையுடனிருந்திருக்க வேண்டும்," என்று.

இதைக் கேட்ட உபதளபதியின் விழிகள் வியப்பால் மலர்ந்தன. சற்று அச்சமும் உதயமாயிற்று அவன் இதயத்தில், முக்கிய விஷயத்தை மறைத்த காரணத்தால். மன்னன் மீதும் சேனாதிபதி மீதும் அவன் கண்களை ஒரு விநாடி செலுத்தினான். மன்னன் பார்வையிலும் சேனாதிபதியின் பார்வையிலும் கொலையுணர்ச்சி மண்டிக் கிடந்தது. ஆனால் உள்ளே எழுந்த வியப்பில் உபதளபதி

அதைச் சிறிதும் லட்சியம் செய்யவில்லை. "குருநாதனுக்கு மந்திரம்தான் தெரிந்திருக்க வேண்டும்" என்று கூறினான் வியப்பு விளிம்பை எட்ட.

"நான் மந்திரவாதியென்பது சேரநாட்டில் யாருக்கும் புதிதல்ல" என்ற பரதபட்டன், "தலைநகருக்கு அரைக் காதமிருக்கையில் பத்துமரக்கலங்கள் தீக்கிரையாக வேண்டுமென்றால் உங்கள் அஜாக்கிரதை அதிகமாயிருந் திருக்க வேண்டும்" என்று குற்றமும் சாட்டினான்.

உபதளபதி தலைகவிழ்ந்து நின்றான். "அரைக் காதத்தில் அந்தச் சம்பவம் நிகழ்ந்ததென உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று வினவவும் செய்தான்.

"மரக்கலங்கள் தீக்கிரையானதும் படகு ஏறிக் கரைக்கு வந்து எதிர் கிராமமொன்றில் புரவி பெற்று அவசர அவசரமாக நீ வந்திருப்பதிலிருந்து தெரிகிறது," என்றான் பரதபட்டன்.

உபதளபதி பிரமித்து நின்றுவிட்டான். "குருநாதரே..." என்று துவங்கினான்.

குருநாதன் விழிகள் அவனை நோக்கிப் பளிச்சிட்டன. "மீண்டும் மந்திரவாதிப் பட்டத்தைச் சூட்டாதே. இதில் மந்திரம் ஏதுமில்லை. உன் கால்களில் ஆடுதசையில் ஓட்டி யிருக்கும் கடல் மணலைப் பார். பாதத்தின் ஓரங்களி லிருக்கும் காவி மண்ணையும் கவனி. அவை கதை சொல்லும். தீப்பிடித்தவுடன் உடனடியாக மன்னனுக்கு அறிவிக்க தளபதி உன்னை நியமிக்கிறான். நீ படகில் ஏறிக் கரை வந்து மணலில் நடந்து கடற்கரை ஓரக் கிராமத்திற்கு வந்து அங்குள்ள படைவீரரிடம் விஷயத்தைக் கூறுகிறாய். நமது கடற்கரைக் கிராமங்களில் ஒன்று உழவு மண் இருக்கிறது. அல்லது காவிமண் இருக்கிறது. நீ சென்ற கிராமத்தின் காவி மண் நீ நடந்தபோது பாதத்தை நன்றாகக் கவ்வியிருக்கிறது. அந்தக் காவியுடன் குதிரையேறி விரைந்து வருகிறாய். ஒரே ஜாமத்தில் அரண்மனையையடைந்து விஷயத்தைக் கூறுகிறாய். கப்பல் தீப்பிடித்த நேரத்திற்கும் நீ இங்கு வந்து சேரும் நேரத்திற்கும் நாள் கணக்கு



இருந்திருந்தால், இந்த மணலும் இருக்காது, மண்ணு மிருக்காது. தலைநீரும் உலர்ந்திருக்கும். வெகு துரிதமாக வந்திருக்கிறாய். வெகு அருகிலிருந்தும் வந்திருக்கிறாய்" என்றான் பரதபட்டன்.

இந்தச் சமயத்தில் மன்னன் ஏதோ சொல்லப் போனான். பரதபட்டன் மன்னனைக் கையமர்த்தி, "கடற்படை தளபதி வந்ததும் மற்றதை யோசிப்போம். அரண்மனைக்குள் யாரும் உட்புகாதபடி பார்த்துக் கொள். பெரும் போர் நகரை அணுகி விட்டது. எல்லையை எச்சரிக்கை செய்யும் ஏற்பாடு செய்துவிடு. எந்த மரக்கலமும் பரலியைவிட்டு நகர வேண்டாம்," என்று உத்தரவிட்டான் குருநாதன்.

குருநாதன் தனக்கு உத்தரவிடுவதைக் கேட்க மன்னனுக்குக் கோபமாயிருந்தும் அவன் அதை வெளிக்குக் காட்டவில்லை. "வேறு உத்தரவு உண்டா?" என்று மட்டும் வினவினான்.

"பாண்டியகுமாரியின் அறையில் காவலைப் பலப்படுத்து, இன்றிரவுக்கு. நாளைக் காலையில் என்னிடம் அவளை அழைத்து வந்துவிடு," என்று மற்றோர் உத்தரவும் இட்டான் குருநாதன்.

"பாண்டிய குமாரியைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம் குருநாதரே. அந்த அறையை யாரும் நாட முடியாது," என்றான் மன்னன்.

குருநாதன் மன்னனை நோக்கிப் புன்முறுவல் செய்தான். "நான் ஒரு சந்தேகப் பிராணி, சொன்னேன். எதற்கும் எச்சரிக்கையுடனிரு," என்று மீண்டும் கூறினான்.

அரசன் அதைப்பற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை. இருப்பினும் காவலைச் சோதிக்க சேனாதிபதிக்குக் கட்டளையிட்டு, கடற்படை உபதளபதிக்கும் விடை கொடுத்துத் தனது அறைக்குத் திரும்பினான். சிறிது நேரங்கழித்து மன்னனிடம் வந்த சேனாதிபதி பாண்டிய குமாரியின் அறைக் காவலை இரட்டித்து விட்டதாகச் சொன்னான்.

"இரண்டு பேர் காவலிருக்கிறார்களா?" என்று வினவினான் மன்னன்.

"ஆம்" என்றான் சேனாதிபதி.

மன்னன் பலப்பல யோசனைகளுடன் படுத்தான். இருப்பினும் முத்துக்குமரியின் அறைக்காவல் பலப்படுத்தப் பட்டதில் ஒரு திருப்தியும் அடைந்தான். அந்தத் திருப்தி எத்தனை அர்த்தமற்றது என்பதை மன்னன் அடியோடு புரிந்து கொள்ளவில்லை.



## அத்தியாயம் 37

# கால் வருடிய கரம்

பாண்டிய ராஜகுமாரியின் அறைக் காவலைப்பற்றி சேரமான் வீரரவி திருப்தியடைந்தானென்றால் அதற்குக் காரணம் இருக்கவே செய்தது. அரண்மனைப் பகுதியிலேயே அந்தப்புரப் பகுதி பெரும் காவலுள்ள தென்றால் அதில், முத்துக்குமரியின் அறையைவிட அதிகக் காவலும் கண் பார்வையுமுள்ள அறை அந்தப்புரத்தில் வேறெங்கும் கிடையாது. அரண்மனையின் பின்புறத்தில் இருந்த அந்தப்புரத்தின் தெற்குக் கோடி அறை அது. அரண்மனையின் பின்புறத்தில் அந்தப்புரம் இருந்த காரணத்தாலேயே அதற்கு நேர் எதிரில் அரண்மனை மதில்களுக்கெதிரில் காவலர் இல்லங்களுக்குப் பின்புறம் மலைச்சரிவும் காடும் இருந்ததால், அந்தக் காட்டுக்கு ஓர் அரண் போலவும் அரண்மனை மதிலை ஒட்டி ஓடிய வீதிக்கு எதிரே மற்றொரு மதில்போலவும் காவலர் இல்லங்கள் காட்சியளித்தன. அந்த வீதிக்கு இருபுறத்திலும் அதாவது காவலர் இல்லங்கள் வரிசையிலும், மதிலோரமும் ஆயுதம் தரித்த புரவிக்காவலர் சதா உலாவிக்கொண்டிருந் தனர். அரண்மனையின் அந்த மேற்குப்புற மதிலுக்கும் வடக்கு தெற்காக இருந்த அந்தப்புரக் கட்டிடத்திற்கும் இடையிலிருந்த திறந்தவெளி அரங்கிலும் பலத்த காவலிருந்தது. அந்தக் காவலின் முடிவிடம் தெற்கு முனை யிலிருந்தபடியால் அதே தெற்கு முனையின் உப்பரிகைப் பகுதியும் சரி, அடிப்பகுதியும் சரி, எப்பொழுதும் காவலர் கண்காணிப்பில் இருந்தன. தெற்குப் புறத்திலிருந்து உப்பரிகைக்கு ஓடிய படிகளின் அடியிலும் மேலும் காவலர் உருவிய வாளுடன் நின்றிருந்தார்கள்.

இரவிலும் பகல்போல் ஆங்காங்கு பந்தங்கள் எரிந்து கொண்டிருந்தன. அரண்மனை மகளிரை எழுப்பக்கூடா தென்ற விதியின் காரணமாக அரவம் சிறிதுமின்றிக் காவலர் மெதுவாகப் பேய்கள்போல உலாவினர். இத்தகைய கெடு பிடியில் மன்னனின் கண்டிப்பான உத்தரவின் காரணமாக உப்பரிகையின் தெற்குக் கோடி அறையின்மீது வீரர் கண்ணோட்டம் சதா இருந்து கொண்டிருந்தது. அந்தப்புரத்திலிருந்தே யாரும் காவலர் அறியாமல் உள்ளே வரவோ, வெளியே செல்லவோ இயலாது. அதுவும் தெருக்கோடி அறைத் தாழ்வறையி லிருந்து பணிப்பெண்கள் தலையை நீட்டினால்கூடத் திரும்பி உள்ளே செல்லும்படி வீரர்கள் ஈட்டியால் சைகை செய்து வந்தார்கள். உத்தரவின்றி யாரும் எங்கும் அசையக் கூடாதென்ற அரசர் கண்டிப்பால், ,காவலர் அந்தப் பகுதியில் பலமாகக் கடமையைச் செலுத்தினர். நின்ற காவலர் நின்றபடியிருந்தார்கள், நடந்து காவல் புரிந்தவர் நடந்தபடி இருந்தார்கள். அன்றிரவில்கூடத் திடீரென்று சாத்தன் வீடு தீப்பிடித்ததன் காரணமாகச் சிறிது நேரம் காவலர் வெளியே ஓடியதைக் கூடக் காவலர் தலைவன் கண்டித்துப் பழையபடி காவலைத் திடப்படுத்திவிட்டான்.

இத்தனை திறமையான காவலிருந்ததால் முத்துக் குமரி அறையில் பணிப் பெண்ணொருத்தியும் கதவுக்கு வெளியே காவலனொருவனுமே அவளைக் கவனிக்கப் போதுமானதாயிருக்க, இன்னொரு காவலனையும் அன்று நியமித்த பின் அரசன் திருப்தியுடன் படுத்தானென்றால் அதில் வியப்பென்ன இருக்கிறது? பல கவலைகளை உடைய மன்னன் இந்த ஒரு விஷயத்தில் திருப்தியடைவது அல்ப சந்தோஷமென்றாலும் சில சமயங்களில் அந்த அல்ப சந்தோஷமும் பெரும் சந்தோஷமாகிறது. எதிரியின் படையெடுப்பு அணுகிவிட்டதைக் குருநாதன் எச்சரித்ததி லிருந்து பெரும் கவலைக்குள்ளான, மன்னன் முத்துக்குமரி காவலைப்பற்றி திருப்தி கொண்டானென்றால், பெருங் கவலையில் ஏற்பட்ட அந்தத் திருப்தி, காரிருளில்



பளிச்சிடும் அகல் விளக்கைப் போல அவன் இதயத்தில் சாந்தி தீபத்தைப் பெரிதாக ஏற்றவே செய்தது.

ஆனால் அந்தப்புரத்தின் தெற்குக் கோடி அறையின் பஞ்சணையில் படுத்திருந்த பாண்டியன் பைங்கிளி மனச்சாந்தி எதுவுமின்றி விழித்தவண்ணம் அறைக் கூரையை நோக்கிக் கொண்டிருந்தாள். அறைக்குள் அறையாக இருந்த அந்தப் பெரிய அறையின் உள்ளறையில் விளக்கை அணைத்துவிடச் செய்து படுத்திருந்த முத்துக் குமரிக்கு வெளி அறையிலிருந்தது மங்கலிலும் மங்கலாக வந்து கொண்டிருந்த சிறு வெளிச்சம் கூட வேதனை யளித்தது. உள்ளறைச் சாளரத்தின் மூலம் வந்து கொண்டிருந்த நட்சத்திர ஒளிகூடச் சூரிய வெளிச்சம் போல் பட்டது அவளுக்கு. அன்று அவள் தனிமையை மட்டுமின்றி இருளையும் நாடினாள். மனக் கவலைக்கு இருட்டும் தனிமையுமே தகுந்த துணை என்று எண்ணி, புதிதாக வந்த பணிமகளைத் தன்னறை விளக்கை அணைத்துவிடச் செய்தாள். முதலில் புதிதாக வந்த பணிப்பெண் விளக்கை அணைக்க இஷ்டப்படாமல், "அரசகுமாரி! விளக்கு சிறியது தானே? வேண்டுமானால் சற்று இழுத்து மெல்லியதாக வைக்கிறேனே?" என்றாள்.

புதிதாக வந்த பணிப்பெண்ணைப் பார்த்ததும் ஆரம்பத்திலேயே வெகுண்ட முத்துக்குமரி அவள் தன்னை மீறிப் பேசியதும் அளவுக்கு மீறிய சினங்கொண்டு, "நீ எப்பொழுது அரண்மனையில் வேலைக்கு வந்தாய்" என்று வினவினாள் குரலில் கோபம் விளையாட.

"இன்றுதான் அம்மணி," என்றாள் புதுப்பணிப்பெண்.

"அதற்குள் இங்கெப்படி பணி புரிய வந்தாய்?" என்று மீண்டும் கேட்டாள் கோபத்துடன் முத்துக்குமரி.

"மன்னர் அனுப்பினார்," என்றாள் பணிப்பெண்.

முத்துக்குமரியின் இதழ்களில் இகழ்ச்சியும் விஷமமும் தாண்டவமாடின.

"மன்னரை ஓரே நாளில் கைக்குள் போட்டுக் கொண்டு விட்டாயா?" என்று வினவினாள் இகழ்ச்சியுடன்.

பணிப்பெண்ணின் முகத்திலும் சினம் துளிர்த்தது. அவள் மலர் விழிகள் நன்றாக மலர்ந்தன ஒரு விநாடி.

"அரசகுமாரிகள்கூடப் பணிமக்களைக் கண்டபடி பேசமுடியாது," என்றாள் சொல்லிலும் உஷ்ணத்தைக் காட்டி.

முத்துக்குமரி அப்பொழுதும் பணிமகளின் நெஞ்சுக் குரோதத்தைப்பற்றி லட்சியம் செய்யவில்லை. சேர மன்னனின் காமவேட்கையைப் பற்றி அறிந்திருந்த முத்துக் குமரி, "பணிமகளிடம் அரசர் திடீரென அசாத்திய நம்பிக்கை வைப்பது யாருக்கும் வியப்பளிக்கும்," என்றாள்.

பணிமகள் பாண்டிய குமாரியை உற்று நோக்கினாள். "காவலரிடம் அரசகுமாரிகளுக்கு அன்பு ஏற்படுவது எப்படி?" என்றும் வினவினாள் பதிலுக்குத் துணிவுடன்.

முத்துக்குமரியின் கண்களில் கோபக் கனல் தெரிந்தது. "எந்த அரசகுமாரியைப் பற்றிக் கூறுகிறாய்?" என்று சீறினான்.

"எனக்குத் தெரிந்த ஓர் அரசகுமாரி."

"'என்ன செய்தாள்?"

"அவளை அழைத்துச் சென்ற ஒரு காவலன் வலையில் வீழ்ந்தாள். இரவில் ஏதோ, அருவிக் கரையாம்..."

பணிமகள் வாசகத்தை முடிக்கு முன்பு, "நிறுத்து! யார் நீ?" என்று கேட்டாள்.

"பணிமகள்."

"பெயர்?"

"குறிஞ்சி"

"இதெல்லாம் உனக்கெப்படித் தெரியும்?"

"இதில் ரகசியமில்லை. நாடறிந்த கதை!"

முத்துக்குமரி சில விநாடிகள் மௌனம் சாதித்தாள். பணிமகள் அவளை மீண்டும் குத்தினாள். "அரசகுமாரி காவலரிடம் அன்பு கொள்ளலாமென்றால் பணிமகள் அரசனிடம் அன்புகொள்வது எப்படித் தவறாகும்?" என்று கேட்கவும் செய்தாள்.





முத்துக்குமரி உணர்ச்சி மிகுதியில், "அவர்...அவர்..." என்று தடுமாறினாள்.

"அவர்?"

"படைத் தலைவர்களில் ஒருவர்."

"இருந்தாலும் மன்னனிடம் பணி புரிபவர்தானே?"

"இருந்தாலும்..."

"என்ன?"

"சேர மன்னரைப் போன்றவரல்ல..."

"என்ன வித்தியாசமோ?"

"அறவழியில் செல்பவர்."

குறிஞ்சி பதிலுக்குச் சிரித்தாள்.

"ஏன் சிரிக்கிறாய்?" என்று வினவினாள் முத்துக்குமரி.

"அவரவர் விரும்புபவர் அவரவர் சம்பந்தப்பட்ட வரையில் அறவழியாளர், செம்மனத்தவர், கற்பின் இலட்சியம்..." என்ற குறிஞ்சி மெள்ளப் புன்னகை பூத்தாள்.

முத்துக்குமரிக்குப் பதிலேதும் சொல்லத் தெரியாததால் பணிமகளோடு மேற்கொண்டு பேசாமல் மௌனம் சாதித்தாள். குறிஞ்சியும் அதைப்பற்றிக் கவலைப்படாமல் வெளி அறைக்குச் செல்லக் காலடி எடுத்து வைத்தாள்.

"அறை விளக்கை அணைத்துவிட்டுச் செல்," என்று சீறிய முத்துக்குமரி. தானே எழுந்து சென்று திரியை இழுத்து விளக்கை அணைத்துவிட்டு வந்து பஞ்சணையில் விழுந்தாள்.

குறிஞ்சி பாண்டிய குமாரியின் பதட்டத்தைக் கண்டு சிறிது முறுவல் கொண்டு வெளியறைக்குச் சென்று படுத்துக் கொண்டாள். சிறிதுநேரத்தில் நித்திரை வசப்படவும் செய்தாள். இரண்டு நாள் பயண அலுப்பால் சுரணையின்றித் தூங்கவும் செய்தாள்.

உள்ளறைப் பஞ்சணையில் படுத்திருந்த முத்துக் குமரிக்கு உறக்கம் சிறிதும் பிடிக்கவில்லை. புதிதாக வந்த பணிப்பெண்ணின் பேச்சை நினைத்து நினைத்து ஆக்ரோஷப்பட்டாள். 'என்ன துணிவு இவளுக்கு? கேவலம்

பணிப்பெண்!' என்று உள்ளூரப் பெரும் சினம் கொண்டாள். அந்தச் சினம் மெள்ள மெள்ள அடங்கப் பணிப்பெண் தன்னை இடித்துக் கூறியதில் எத்தனை உண்மை இருந்ததென்பதையும் உணர்ந்து உணர்ந்து இன்பத்தின் வசமும் ஆனாள். காட்டுக் கோட்டையின் அருவிக்கரை அவள் கண்முன் வந்துநின்றது. சலசலத்துப் பந்தத்தின் வெளிச்சத்திலோடிய அருவி நீர் அவள் இதயக்கண் முன்பு பளபளத்தது. சீலை அருவி நீரில் நனையாதிருக்கத் தன் காலுக்குமேல் அதை எடுத்து மடித்து மடியில் திணித்திருந்ததையும், இந்திரபானு தனது கால்களை உற்று உற்றுப் பார்த்ததையும் எண்ணினாள். 'பணிமகள் சொன்னதில் தவறில்லை: சேனைக்கு உபதலை வராயிருந்தாலும் மன்னருக்கு நீங்கள் பணிமகன்தானே? அரசன் மகளான என்னை எப்படி நீங்கள் தொடலாம்?' என்று தனக்குள் கேட்டுக் கொண்டாள். 'அது மட்டுமா செய்தீர்கள்? கடற்கரை மாளிகைக்கே காவல் செய்ய வந்தீர்களே!' காவலாசெய்தீர்கள்? கள்ளத்தனம் செய்து என் பள்ளியறையிலே புகுந்துவிட்டீர்களே! அப்பப்பா! எத்தனை துணிவு! எத்தனை மோசம் நீங்கள்? கற்சிலைக்குப் பக்கத்தில் என்னை எத்தனை இறுக்கிப் பிடித்தீர்கள்' என்று ஏதேதோ சொல்லிக் கொண்டாள் தன்னுள். சிந்தனைச் சொற்கள் அவை. அது மட்டுமல்ல, உணர்ச்சிச் சொற்களும் அவை. சிந்தனை பேசப்பேச உணர்ச்சிகளும் பேசின. இடை துவண்டு உடல் நெளிந்தது. எதனாலோ மார்பு வேகமாக ஓடியது. கால்கள் மெல்ல அப்புறமும் இப்புறமும் அசைந்தன. பஞ்சணையை அருவியென்று பாண்டியகுமாரி நினைத்தாளோ என்னவோ? சீலையை முழங்காலுக்கு மேலும் இழுத்து மடியில் மடக்கிக் கொண்டாள். அந்த் அறையில் விளக்கு இல்லைதான். எனினும், வெளியறை விளக்கின் வெளிச்சம் அவள் கால்களுக்குப் பெரும் மெருகைக் கொடுத்தது. அவள் உதடுகள் காரணமின்றி அசைந்தன. மடிந்தன. மீண்டும் பழையபடி மலர்ந்தன.



சிந்தனைகளில் சிக்கியிருந்ததால் வெளியே நடந்த எதுவுமே அவளுக்குத் தெரியவில்லை. சாத்தன் வீடு தீப் பிடித்ததையோ, அதனால் காவல் சற்றுக் குழம்பியதையோ பிறகு பழையபடி திடப்படுத்தப்பட்டதையோ அவள் அறியவில்லை. இரண்டாவது காவலனொருவன் நடுச் சாமத்திற்குமேல் வந்ததைக்கூட அவள் உணரவில்லை. அவள் நிலை உணர்ச்சியற்ற நிலையல்ல. உணர்ச்சிமிக்க நிலைதான். ஆனால் உணர்ச்சிகள் சுழன்ற இடம் வேறு. அவை நாடிய சூழ்நிலை வேறு. தேடிய மனிதர் வேறு. ஆகவே இருந்த சூழ்நிலை இல்லாததாகவும் இல்லாத சூழ்நிலை இருந்ததாகவும் ஆகிவிட்டது அவளுக்கு. அவள் உடல் அப்பொழுதிருந்தது சேரமான் கோட்டையில்தான். ஆனால் சிந்தனையிருந்தது, காட்டுக் கோட்டையில்தான். அதிலிருந்த அரண்மனை அந்தப்புரத்தில்தான். ஆனால் சிந்தனையிருந்தது காட்டுக் கோட்டையில், அருவிக் கரையில். உடல் புரண்டது அந்தப்புரப் பஞ்சணையில், உணர்ச்சி புரண்டது பாறைகள் நிரம்பிய அருவிக்கரையில். உள்ளறைச் சாளரத்தின் வெளியே விண்ணில் விண்மீன்கள் கண்ணைச்சிமிட்டின. அவை தெரிந்தன அவளுக்கு. ஆனால் சாளரம் தெரியவில்லை. தான் உட்கார்ந்திருந்த பாறை தெரிந்தது காலருகே ஓடிய அருவி தெரிந்தது. அதன் மேலேயிருந்த விண் தெரிந்தது. அந்த விண்தான் அவள் அன்று கண்ட விண்ணும். அந்தப் பழைய தாரகைகள்தான் அன்றும் கண்ணுக்குத் தெரிந்தன பாண்டிய குமாரி சம்பந்தப்பட்ட வரையில்.

அந்தப் பழைய கனவில் திளைத்த பாண்டிய குமாரி அப்பொழுதும் நினைத்தாள். "இப்படி எனது கால் சேலையின் பாதுகாப்பின்றிக் கிடப்பதற்கு அவர் இருந்தால் வாளாவிருப்பாரா?' என்று நினைத்துப் பெருமூச்சு விட்டாள்.

அவள் எந்தத் தெய்வத்தைப் பிரார்த்தித்தாளோ என்னவோ அவள் எண்ணப்படி அவள் கால் மெல்ல வருடப்பட்டது ஒரு கையால். அதனால் திடீரென்று பயந்து பேச முற்பட்ட பவள வாயும் மூடப்பட்டது... எதனால்?'

## அத்தியாயம் 38

# பஞ்சணை பயந்தது

**கா**வில் கையொன்று பட்டவுடனேயே அருவிக் கரைப் பாறையிலிருந்து அரண்மனைப் பஞ்சணைக்குத் திரும்பி முழுச்சுரணையடைந்துவிட்ட முத்துக்குமரி பவள வாய் திறந்து கூச்சலிட முற்பட்டாலும், உதடுகளைத் திடீரென மென்மையும் வாசனையும் கலந்த ஏதோ ஒன்று பலமாக அடைத்துக் கொள்ளவே இதழ்களைத் திறக்கவும் சக்தியற்றவள் ஆனாள் பாண்டியன் பைங்கிளி. அந்த ஏதோ ஒன்று வழவழப்பாகவும் சுகந்தமாகவும் இருந்ததன்றி விரல் நீளத்துக்கும் அகலத்துக்கும் பலபடி அவள் பவள இதழ்களில் பரந்துகிடந்த விதத்திலிருந்தும், அதன் வாசனையிலிருந்த தினுசிலிருந்தும் செண்பக மலரொன்று தன் இதழ்களில் விரிந்து அழுத்தப் பட்டிருக்கிற தென்பதைப் புரிந்துகொண்ட அவள் கண்களைத் திறந்து அந்தச் செயலில் ஈடுபட்டிருப்பது யார் என்று அறிய. முயன்றாள். அப்பொழுதுதான் அறையில் சாளர வெளிச்சம் தவிர வேறு வெளிச்சமில்லையென்பதையும், அந்த அறைக்கும் வெளியறைக்குமிடையேயிருந்த வாயில் திரைச்சீலை நன்றாக இழுத்து மூடப்பபடிருக்கிறதென்பதை யும் புரிந்து கொண்ட பாண்டியன் மகள், தன்னைத் தொட்டவன் யாராயிருந்தாலும் அவன் நல்ல முன் யோசனையுடனேயே காரியங்களைச் ,செய்திருக்கிறா னென்பதைப் புரிந்துகொண்டாள். திரைச்சீலை தரையைத் தொடாமல் சற்று மேலேயே நின்றுவிட்டதால் அதன் அடியில் தெரிந்த வெளியறை வெளிச்சம் தனது அறையில் இருட்டை அதிகப்படுத்திக் காட்டுவதைக் கண்ட





முத்துக்குமரி வந்தவன் கையில் தான் பூரணமாகச் சிக்கியிருப்பதை அறிந்து கொண்டாள்.

வந்தவன் யாராயிருந்தாலும் எத்தனை வல்லவனா யிருந்தாலும் அரண்மனையிலிருக்கும் காவலிலிருந்து தப்பிச் செல்வது முடியாத காரியமென்பதை உணர்ந்திருந்த பாண்டியகுமாரி, 'இவன் எப்படி உள்ளே வந்தான்?' என்று மட்டும் தன்னைக் கேட்டுக் கொண்டாள். அவள் சிந்தனையை அவன் அறிந்துகொண்டிருக்க வேண்டும். அதுவரை நின்றிருந்தவன் மெள்ளப் பஞ்சணைப் பக்கத்தில் தரையில் மண்டியிட்டு உட்கார்ந்து இதழைப் பொத்தி யிருந்த கையாலேயே அவள் தலையைத் தானிருந்த பக்கத்தை நோக்கித் திருப்பி, "கட்டுக்காவல் எதுவும் தடுக்க முடியாதது ஒன்று இருக்கிறது குமரி?" என்று அவள் காதில் மெல்லக் கூறினான்.

முத்துக்குமரி வியப்பின் வசப்பட்டாளா? மகிழ்ச்சி வெள்ளத்தில் அமிழ்ந்தாளா? விடைகூற அவளுக்கே தெரிய வில்லை. விவரிக்க இயலாத உணர்ச்சிகள் சரசரவென்று சுழன்றன அவள் உடலில். இந்திரபானு அத்தனை துணிகர மாக அந்தப்புரத்துக்குள் நுழையமுடியும் என்று அவள் சொப்பனத்தில்கூட நினைக்கவில்லை. அவன் எங்கிருந்தான், எப்படி வந்தான் என்று ஏதுமே தெரியாததால் அவள் வாயிலிருந்த மலரை மெள்ள நீக்கி முணுமுணுத்தாள், "என்ன சொன்னீர்கள்?" என்று.

செண்பக மலர் இதழ்களில் அழுந்தியிருந்ததால் அவள் சொன்னது தெளிவாகக் காதில் விழவில்லை இந்திரபானுவுக்கு. ஆகவே கையை இதழ்களிலிருந்து நீக்கி ஒருக்களித்திருந்த கன்னத்தில் வைத்து அழுத்திக் கொண்டே, "என்ன?" என்று வினவினான் மெதுவாகத் தலையை நன்றாகக் குனிந்து.

மண்டியிட்டு உட்கார்ந்திருந்த நிலையில் அவன் தலையை நன்றாகக் குனிந்ததால் அவள் தலைக் குழல்கள் அவன் நெற்றியின்மீதும் காதின் மீதும் விழுந்தன. அப்படி குழல் கவிந்து திரையிட்ட அவள் முகமலர்ப் பகுதிக்குள்

இந்திரபானு நன்றாகப் புகுந்து உதடுகளைக் காதுக்கருகிலும் அசைத்தான். உதடுகள் காதுக்கருகில் அசைந்தன. பின்பு காதை விட்டிறங்கி அவள் மலர்க் கழுத்திலும் அசைந்தன. செண்பக மலரின் வாசனை அந்தக் கழுத்தையும் ஆட்கொண்டிருந்ததால் அதை நன்றாக ஒருமுறை இழுத்து முகர்ந்தான் இந்திரபானு. அதைத் திரும்பத் திரும்ப இழுத்து இழுத்து முகர்ந்துகொண்டேயிருக்க வேண்டும் போலிருந்தது அவனுக்கு. *காட்டுக் குட்டைகளுக்கருகில் மழைத்தூற்றல் போட்டு மண் வாசனை எழும்போது அந்த மண்வாசனையை முகர்ந்து முகர்ந்து மகிழும் யானைகள், எத்தனை நேரம் முகர்ந்தாலும் திருப்தியடை யாததைப் போலவே அவள் கழுத்து வாசனையை நுகர்ந்தது நுகர்ந்தபடியே இருந்தான் பாண்டியர் உப தலைவன்.

அவள் தலைக்குழலை அவன் வலது கரம் கோதி விட்டது. அவன் இடது கை அவள் மலர்க் கன்னத்தை விட்டுக் கீழிறங்கியது. முத்துக்குமரியின் மார்பு படபடத்தது. "உம்...உம்" என்ற ஆட்சேபணை ஒலிகள் கிளம்பின அவளிடமிருந்து. இந்திரபானு அவற்றைக் கவனித்ததாகத் தெரியவில்லை. "உம்..." என்று ஏதோ கேள்வி கேட்கும் பாவனையில் மற்றோர் ஒலி அவளிடமிருந்து எழுந்ததே தவிர சரியான பதிலேதும் கிடைக்கவில்லை. உதடுகள் பதிலளிக்கவில்லை, உணர்ச்சிகள் வேறு அலுவலுக்கு உந்தியதால்.

சொற்கள் அர்த்தமற்ற சமயம் அது. ஒலிகள் பொருள் பெறும் சந்தர்ப்பம் அது. உணர்ச்சிகள் வெட்கத்தை உடைக்கவும் ஒலிகள் அவற்றுக்குத் தடைவிதிப்பன போல் பாசாங்கு செய்யவும் முற்படும் இன்பப் போர் விளையும் நேரம் அது. அந்த இந்திர ஜாலத்தில் சிக்காதவர் யார்? சிக்கிய சமயத்தில் வெளி உலகத்தை நினைத்தவர் யார்? இடையே சற்று நினைத்தாலும் அதை லட்சியம் செய்தவர் யார்? யாருமிலர். அப்படியிருக்க நீண்ட நாள் விட்டுச் சந்திக்கும் அந்த இருவர் நிலைமட்டும் எப்படி?

* காளிதாஸ மகாகவியின் உவமை, ரகுவம்ஸம்; ஸர்க்கம் 3.



மாறுபடாத நிலையில், உலகத்தை மறந்த நிலையில், வெளியறையில் பணிப்பெண் படுத்திருக்கிறாள், அதற்கும் வெளியே காவலனொருவன் காத்திருக்கிறான் என்ற எதையுமே நினைக்காத நிலையில், இந்திரபானு அருகிலிருக்கிறான். அவன் கரமொன்று தன் குழலைக் கோதி விளையாட இன்னொரு கரம் மற்றதைத் தேடுகிறது என்பதை மட்டும் உணர்ந்த முத்துக்குமரியின் உடல் வேதனையால் நெளிந்தது. அந்த வேலையைச் சற்றுத் தணித்துக்கொள்ளவோ என்னவோ அவள் தனது பவள வாய் திறந்து, "என்னமோ சொன்னீர்களே," என்றாள் மெதுவாக.

அவள் கழுத்தில் புதைத்த முகத்தை எடுக்காமலே காதுக்கருகில் கேட்டான் அவன், "என்ன சொன்னேன்?" என்று.

சர்ப்பம் சீறுவதுபோன்று மூச்சின் உணர்ச்சியில் கலந்து காதில் புகுந்த அந்த ரகசியச் சொற்களைக் கேட்ட முத்துக்குமரி புன்முறுவல் கொண்டாள். "ஏதோ கட்டுக் காவல்..." என்று முணுமுணுக்கவும் செய்தாள்.

"ஆம் ஆம்." அவனும் முணுமுணுத்தான்.

"என்ன...?"

"கட்டுக்காவல்..."

"உம்..."

"தடுக்காதது உண்டு."

இதைக் கேட்ட அவள் சட்டென்று அவனை நோக்கி ஒருக்களித்து, "அது எது?" என்றாள் மெள்ள.

"இதுதானென்றால்..."

"இப்பொழுது கிடைத்திருப்பது."

"எதுவோ?"

"காதல்..."

"கட்டுக் காவலைக் கடந்து விட்டதா?"

"ஆம்."

"அது மட்டுமல்ல..." என்று இழுத்தாள் பாண்டிய குமாரி.

"வேறு எது?" என்றான் அந்தக் காளை.

"கட்டுப்பாட்டையும் கடந்து விட்டது," என்றாள் மெள்ள அந்தக் காரிகை.

"எது?" இந்திரபானு புரியாதது போல் கேட்டான்.

"இதுதான்," என்ற முத்துக்குமரி அளவுக்குமீறி நகர்ந்த அவன் இடது கையைத் தனது வலது கையால் தடுத்துக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டாள்.

வேறு இடம் கிடைக்காது போகவே அந்த மலர்க் கையில் அவன் கரம் சுழன்றது. பிறகு விடுவித்துக்கொண்டு அவள் கையைப் பிடித்து நெரிக்கவும் செய்தது. "என்ன இது?" என்றாள் முத்துக்குமரி.

"தண்டனை," என்றான் இந்திரபானு

"வலிக்கிறது."

"வலிக்கிறதற்குத்தானே நெரிக்கிறது," என்று கூறி மேலும் ஏதோ பேச முயன்ற அவன் வாயைச் சரேலென்று அவன் கையிலிருந்து விடுவித்துக்கொண்ட அவள் கை பொத்தியது.

அவன் உதடுகளில் பதிந்த கை மலரைவிட மென்மையாயிருந்தது. அவன் உதடுகள் அக் கையில் அழுந்தப் பதிந்தன. அந்தக் கையிலிருந்த பாண்டியநாட்டு முத்து மோதிரம் அவன் உதடுகளில் அழுந்தியதால் சற்று உதடுகள் வலிக்கக் கூடச் செய்தன. இந்திரபானுவுக்கு அந்த வலிகூடத் தேவையாயிருந்தது. நீண்டநாள் மனவலிக்கு அந்த வலி மாற்று மருந்தென்று நினைத்தான். அந்த மோதிரத்தின் முத்தையும் மெல்லக் கடித்தான்.

முத்து கடிக்கப்படுவதை உணர்ந்த முத்துக்குமரி சட்டென்று கையை இழுத்துக்கொண்டாள். "முத்தைக் கடிக்கிறீர்கள்?" என்று கோபப்பட்டாள்.

"ஆம்." இந்திரபானு மெல்ல அவள் காதுக்கருகில் நகைத்தான்.





"இந்த முத்து..." என்றாள் முத்துக்குமரி ஆத்திரத்துடன்."

"என்ன அதற்கு?"

"என் தந்தையளித்தது; விலை உயர்ந்தது."

"இருக்கட்டுமே."

"அதை ஏன் கடித்தீர்கள்?"

"எனக்குத் தெரியவேண்டாமா குமரி?"

"என்ன தெரியவேண்டும்?"

"முத்தின் தரத்தைப் பார்க்கும் முத்துக் குளியாளர்கள் அதை லேசாகக் கடித்துப் பார்ப்பது வழக்கம்."

"ஆமாம், முத்துக் குளித்து சீர்செய்யப்பட்டதும் தரம் பிரிப்பதற்குப் பார்ப்பார்கள்."

"ஆம்."

"தரம் பிரித்து மோதிரம் கட்டியபின் பார்ப்பதுண்டா?"

"ஏன் கூடாது."

"எதற்காம்?"

இந்திரபானு தலையை மெள்ளத் தூக்கி அவளை நன்றாகத் தனக்காகத் தனது இடது கையால் புரட்டி அவளை உற்று நோக்கினான். "இங்கும் தரம் பிரிக்க வேண்டியிருக்கிறது," என்றும் கூறினான்.

சாளரத்திலிருந்து வந்த விண்மீன்களின் வெளிச்சத்தில் அவள் முகம் மிக மங்கலாகத் தெரிந்தது அவனுக்கு. இருப்பினும் அவள் கண்கள் மட்டும் பளிச்சிட்டன பெரு முத்துக்களைப்போல். அவள் உதடுகள் நன்றாகத் தெரியாவிட்டாலும் அவற்றின் சிவப்பு ஓரளவு ஒளி பெற்றே இருந்தது. இரண்டு கெம்புகள்போல் உதடுகள் அசைந்தன அந்த மங்கலான வெளிச்சத்திலும், "இங்கு தரம் பிரிக்க எத்தனை முத்துக்கள் இருக்கின்றன?" என்று.

"இரண்டு," என்றான் இந்திரபானு.

"இரண்டு ஏதாம்?" குமரியின் குரல் தழுதழுத்துக் கிடந்தது, தன்னைப் புரட்டிய இந்திரபானுவின் கரம் பின் புறத்தில் அழுத்திக் கிடந்ததால்.

"மோதிரத்தில் தங்கத்தில் பிணைந்திருக்கும் முத்து ஒன்று," என்றான் புன்முறுவலுடன் இந்திரபானு.

"இன்னொன்று?"

"இதோ," என்று அவள் உடலை இடது கையால் அசைத்துக் காட்டினான். "இந்த முத்து அதிக எடையுள்ளது. அரை ஸாகியோவுக்கு அதிகப்பட்டாலே பாண்டிய மன்னர் முத்துக்களைத் தன் பொக்கிஷத்துக்கு இழுத்துக்கொள்கிறார். ஆனால் இந்த முத்தை மட்டும்..."

"என்ன, இதை மட்டும்" என்றாள் முத்துக்குமரி.

"ஒன்று அவராகவே தானம் செய்ய வேண்டும்."

"அல்லது."

"நானாகவே தூக்கிக்கொண்டு போய் விடுவேன்,"

"பெரிய வீரர்." இம்முறை ஏளனத்துடன் கூறினாள் முத்துக்குமரி.

"என் வீரத்துக்கு என்ன குறை?"

"இந்த முத்தைத் தூக்கிக்கொண்டு போய் விடுவதாக மார் தட்டுகிறீர்களே?"

"ஆம்."

"இது வீரத்துக்கழகா?"

"எப்படி வீரமோ?"

"ஏன் வீரமில்லை?"

"தானாகக் கிடைப்பதை தூக்கிக் கொண்டு போகப் பிரமாத வீரம் வேண்டும்!" என்று மெல்லச் சிரித்தாள் பாண்டியகுமாரி.

"ஆம், தானாகக் கிடைப்பதுதான், வா இப்படி. இப்பொழுதே தூக்கிக்கொண்டு போகிறேன்," என்று எழுந்து அவள் உடலைச் சுற்றித் தன் கைகளைக் கொடுத்துத் தூக்க முற்பட்டான்.





அவன் தூக்க முற்பட்ட பின்புதான் விழித்துக் கொண்டாள் முத்துக்குமரி காதல் மயக்கத்திலிருந்து.

"நீங்கள் எப்படி வந்தீர்கள்?" என்று வினவினாள் கிலியுடன்.

"சாளரத்தின் மூலம் ஏறிக் குதிக்கவில்லை. நான் என்ன திருடனா தப்பு வழியில் வர?" என்றான் அவன்.

"திருடனல்லவா? வேறு யாரோ?"

"காவலன்."

"அரண்மனைக் காவலனா?"

"ஆம். உடையைப் பார்," என்று அவளைக் கட்டிலை விட்டு குழந்தையைத் தூக்குவதுபோல் தூக்கிக் கொண்டு சாளரத்தின் வெளிச்சத்தில் கொண்டுபோய் இறக்கினான்.

அவள் அவனை நோக்கி, "இன்று பாதகமில்லை," என்றாள்.

"ஏன்?"

"மெள்ள இறக்கினீர்கள் கீழே."

"வேறு எப்படி இறக்குவேன்?"

"சிந்தித்துப் பாருங்கள்."

"சிந்தனைக்கு என்ன இருக்கிறது?"

"காட்டுக்கோட்டை இருக்கிறது."

"அப்புறம்?"

"என் சிறிய தந்தையின் புரவியிருக்கிறது. அதன் மேலேறி விழப்போன என்னை நீங்கள் தாவிப் பிடித்து ஆக்ரோஷத்துடன் சுமந்து சென்று எங்கள் விடுதிப் படியில் போட்ட நிலையிலிருக்கிறது," என்று அவள் கண்களில் பழைய கனவு விரிந்தது. அவனும் அந்த நிலைக்குச் சென்று கனவில் சிக்கினான்.

சற்றுப் பொறுத்து அவள் மெள்ளக் கூறினாள் அவனுடன் இழைந்தவண்ணம், "பணிப்பெண் விழித்துக் கொள்ளப் போகிறாள்," என்று.

"விழிக்க மாட்டாள்," என்றான் இந்திரபானு திட்டமாக.

"ஏன்?"

"செண்பகப் பூவை அனுபவிக்கிறாள்."

"இன்னொரு காவலன்?"

"அவனும் ரசிகன். செண்பகத்தை முகர்ந்தான்."

"நான் முகர்ந்தது!"

"அது வேறு."

"அந்த இன்னொன்று."

"இதோ இருக்கிறது," என்று தன் கச்சையிலிருந்த செண்பகப் பூவை எடுத்துக் காட்டினான்.

"இப்படிக் கொடுங்கள்."

"வேண்டாம். இதை முகரக்கூடாது நீ," என்று கையை இழுத்துக் கொண்டான்.

"ஏன்?"

"அவர்களைப்போல் நீயும் மயங்கிவிடுவாய்."

"சரி, சரி தெரிகிறது. என்னை மயக்க இந்த அஸ்திரம் தேவையில்லை."

"என்ன குமரி?"

"வேறு அஸ்திரம் இருக்கிற தைரியம் உங்களுக்கு."

இருவரும் நகைத்தார்கள். ஒருவரை நோக்கி ஒருவர் நெருங்கவும் செய்தார்கள். திரும்பவும் செய்தார்கள். சற்று தூரத்தே இருந்த பஞ்சணை பயந்தது.

அத்தியாயம் 39

# பட்டன் அளித்த பிரசாதம்

அந்தப்புரத்தில் அந்தக் கடைசி அறையின் சாளரத் தருகில் விண்மீன்கள் வீசிய மெல்லிய ஒளியில் காதலால் கட்டுண்ட அந்த வாலைப்பருவத்தினர் இருவரும் தன்னை இம்சை செய்தால் என்ன செய்வதெனப் பஞ்சணை பயந்தது பொருளில்லாது போயிற்று. வெளியறையிலிருந்த பணிப் பெண்ணைப் பற்றியும், வாயிற் காவலைப்பற்றியும் நினைப்பு வந்தவுடனேயே தாங்களிருந்தது சொர்க்க மில்லையென்பதையும், யார் பார்த்துவிட்டார்லும் ஆபத்து பலமென்பதையும் புரிந்துகொண்டதால் அந்த இருவரும் சற்று எச்சரிக்கையடைந்து விட்டனர். சிறிது அச்சத்துக்கும் உள்ளானாள் முத்துக்குமரி. அவள் அச்சம் இருவிதமாயிருந்தது. இடையைச் சுற்றி வளைத்து இறுக்கிக் கொண்டும் மெல்ல நெருடிக் கொண்டுமிருந்த அந்த வாலிபக் கரங்கள் தன்னை விடுவித்து விட்டால் என்ன செய்வது என்றோர் அச்சம். இத்தனை துணிகரமாக வந்து சொந்த வீட்டிலிருப்பவன்போல் பேசிக்கொண்டிருந்த பாண்டிய உபதலைவன் சேரமான் காவலரிடம் சிக்கிக் கொண்டால் அவன் கதி என்ன ஆகுமோ என மற்றொருவித அச்சம். இப்படி இரண்டுவித அச்சங்களுக் கிடையில் சிக்கித் தவித்த அந்தச் சித்திரப்பாவை மெள்ளக் கேட்டாள், "இத்தனை நாழி நிதானித்து இங்கு என்னுடன் தங்கியிருக்க என்ன துணிவு உங்களுக்கு?" என்று.

இந்திரபானுவின் கரங்கள் அவள் இடை வளைவை இருபக்கத்திலும் பிடித்துச் சிறிதளவு சதையையும் இழுக்கவே அவளுக்கு வலித்தது. அந்த வலி தேவையா

யிருந்தாலும் அவள், "உம்! வலிக்கிறது," என்று பொய்க் கோபம் காட்டினாள்.

"வலிக்கட்டும் என்றுதானே கிள்ளுகிறேன்" என்றான் இந்திரபானு மெல்ல நகைத்து.

"ஏன். கிள்ளுகிறீர்கள்? நான் என்ன செய்தேன்? கோபத்துடன் கேட்டாள் பாண்டியன் செல்வி.

"குற்றத்திற்குத் தண்டனை."

"என்ன குற்றம் செய்தேன்?"

"ஒரு வீரனைப் பார்த்து உனக்கு என்ன துணிவு என்று கேட்பதைவிட பெரும் குற்றம் என்ன இருக்க முடியும்?"

முத்துக்குமரி இதற்குப் பதில் சொல்லவில்லை. மெல்ல அவனுடன் இழைந்தாள். பிறகு மெல்லக் கேட்டாள், "நீங்கள் எப்படி அரண்மனைக்குள் நுழைந்தீர்கள்?" என்று.

இந்திரபானு அவளை அணைத்து நின்ற கரமொன்றை நீக்கித் தனது தலையில் தட்டிக் காட்டி, "இதன் உதவியால்," என்று கூறினான்.

"இந்த விஷயத்தில் தங்கள் மூளை அதிகமாகத்தான் வேலை செய்கிறது" என்றாள் முத்துக்குமரி லேசாக நகைத்து

"என் மூளை மட்டுமல்ல குமரி. எந்த முட்டாளின் மூளையும் வேலை செய்யும்."

"முட்டாளின் மூளை .வேலை செய்யுமா?"

"ஆம்."

"விசித்திரமாயிருக்கிறதே."

"இதில் விசித்திரம் ஏதுமில்லை, விஷயம் அப்பேர்ப் பட்டது."

"என்ன விஷயமோ?"

"பெண் விஷயம்."

"உம்." சற்றே நிமிர்ந்து பார்த்தாள் பாண்டியன் மகள், தந்தையின் உபதலைவனை.



"பெண்ணை அடைய எவன் மூளையும் துரிதமாக வேலை செய்யும். இல்லாத தந்திரங்களைக் கையாளும். எதற்கும் துணிவு கொள்ளும். இதில் முட்டாள் கெட்டிக் காரன் என்ற வித்தியாசம் கிடையாது. ஏனென்றால்..." என்று இழுத்தான் இந்திரபானு.

"என்ன சொல்லுங்கள்?" முத்துக்குமரியின் குரலில் உக்கிரம் தெரிந்தது.

"ஏனென்றால்..." என்று மீண்டும் தயங்கிய இந்திர பானு, "காதலுக்குக் கண்ணில்லையென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். கண் மூளையின் வெளிப்பகுதி. ஆகவே காதலிப்பவர் எல்லோருமே முட்டாள்கள்தான்" என்றான்.

முத்துக்குமரி அவனைத் தன்னிடமிருந்து தள்ளினாள். "சரி, சரி. விலகுங்கள். என்னால் நீங்கள் முட்டாளாக வேண்டாம்."

இந்திரபானு சிரித்தான். "அடடே! உன்னைச் சொல்லவில்லை. உன்னைப் போன்ற பெண்ணை விரும்புபவன் பெரும் ரசிகன், கவி!" என்று கூறினான் சிரிப்பின் ஊடே.

"பரிகாசம் செய்கிறீர்களா?" என்றாள் கோபத்துடன் அவனிடமிருந்து தன்னை நன்றாகத் திமிறி விடுவித்துக் கொண்டு.

"இல்லை இல்லை. இதோ பார். நான் எவ்வளவு கஷ்டப்பட்டு வந்திருக்கிறேன் லீலாசுகர் மாதிரி?" என்றான் இந்திரபானு அவளை மீண்டும் பிடித்து.

"லீலாசுகரா!" வியப்பும் கோபமும் கலந்தொலித்தது குமரியின் குரலில்.

"ஆம்."

"யாரது?"

"பெரிய வடநாட்டுக் கவி."

"அவருக்கென்ன;"

"ஒரு பெண்ணிடம் காதல் கொண்டிருந்தார். அவளை அடைய வீட்டிலிருந்து கிளம்பி ஆற்று

வெள்ளத்தைப் பிணக்கட்டையின் உதவியால் நீந்தித் தாண்டி, அவள் சாளரத் தருகேயிருந்த மரத்தில் தொங்கிக் கொண்டிருந்த மலைப் பாம்பைக் கயிறென நினைத்துப் பிடித்து ஏறித் தாவி அறைக்குள் குதித்தார்..."

"சே! இவ்வளவு பெண்பித்தன் ஒரு கவியா!"

"ஆம், பெரிய கவி."

"நீங்களும் கவியோ?" ஏளனத்துடன் வினவினான் முத்துக்குமரி.

"இல்லை. இல்லாததால் தான் அத்தனை ஆபத்தில்லை. பிணத்தைக் கட்டிக்கொண்டு ஆற்றைத் தாண்டவில்லை; பாம்பைப் பிடித்து ஏறிக் குதிக்கவில்லை," என்றான் இந்திரபானு பதிலுக்கு.

பிணம், பாம்பு என்பதெல்லாம் லீலாசுகரைப் பற்றிய பழைய கதையானாலும் அதைக் கேட்கப் பயம் சூழ்ந்து கொண்டது பாண்டிய குமாரியின் உள்ளத்தில். இந்திரபானு பல கட்டுக்காவல்களைத் தாண்டி அங்கு வந்ததற்கும் தன்னிடமுள்ள பித்துதான் காரணமென்பதை அறிந்தாள். அந்த அறிவு ஓரளவு இன்பத்தைக் கொடுத்தாலும் பெரும் பயத்தையும் அளிக்கவே கேட்டாள், "நீங்கள் எப்படித் தான் வந்தீர்கள்? காவலர் அயர ஏதாவது சந்தர்ப்பம் கிடைத்ததா?" என்று.

"இல்லை குமரி! சந்தர்ப்பத்தை நானே ஏற்பாடு செய்து கொண்டேன்" என்றான் இந்திரபானு.

"எப்படி?" கவலையுடன் கேட்டாள் முத்துக்குமரி.

"உன்னிடம் இன்று வந்த பணிப்பெண் நமது ஒற்றர்களில் ஒருத்தி. இந்த அரண்மனைக் காவலனான சாத்தனைக் கொண்டு அவளை இங்கு வேலைக்கமர்த்தினேன். இரவு திரும்பியிருக்க வேண்டிய அவள் வரவில்லையென்று மன்னரிடம் பேசிக் கொண்டிருக்கிறாளென்றும் இரவின் ஆரம்பத்தில் இல்லம் திரும்பிய சாத்தன் சொன்னான். ஆகவே பணிப்பெண் எங்கோ தவறி மன்னனிடம் அகப்பட்டுக் கொண்டு விட்டாளென்பதை





ஊகித்தேன்," என்ற இந்திரபானு தன் திட்டம் குமரியின் மனத்தில் உறைய சற்று நிதானித்தான்.

"உம் சொல்லுங்கள்" அவள் குரலில் அப்பொழுதும் பயமிருந்தது.

"அதனால் மேற்கொண்டு சாத்தனில்லத்தில் தாமதிப்பதில் பயனில்லை என்று சாத்தனையும் கூத்தனையும் வெளியே அனுப்பிவிட்டு நான் சாத்தன் உடையை அணிந்து கொண்டு சாத்தனில்லத்துக்கு நெருப்பு வைத்தேன். மன்னனுக்கு ஓர் ஓலை எழுதிக் காவலர் கண்களில் படும்படி மரத்தில் கத்தியால் தைத்து வைத்தேன்," என்று கூறினான் இந்திரபானு.

"உம்."

"நெருப்பைக் கண்டதும் காவலில் குழப்பமேற்பட்டது. பல காவலர் அரண்மனையைவிட்டு வெளியே ஓடிவந்தார்கள் தீயை அணைக்க. நானும் அவர்களுடன் கலந்து கொண்டேன். சாத்தனுடையில் நானிருந்ததாலும் தலையை நிமிர்த்தாததாலும் பந்தங்களின் வெளிச்சத்தைத் தவிரவேறு வெளிச்சமில்லாததாலும் தவிர அரை நாழிகை குழப்பமாயிருந்ததாலும் நானும் கும்பலோடு கும்பலாகக் கலந்து உள்ளே நுழைந்தேன். பிறகு அந்தப்புரத்தின் கோடிப் படியில் ஏற முற்பட்டேன். அப்பொழுது தலைமைக் காவலன் என்னை அழைத்தான்..."

"அப்பா! எத்தனை அபாயம்!" ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்த இந்திரபானு சொன்னான். "அது அபாய நிலைதான். ஆனால் நான் சமாளித்துக் கொண்டேன். இன்னொரு வீரனையும் தூரத்திலிருந்தே காட்டிய காவலர் தலைவன் 'நீங்களிருவரும் பாண்டிய குமாரியின் அறையில் காவலிருங்கள்' என்று கூறி, 'மிகுந்த எச்சரிக்கையாயிருங்கள்' என்றும் எச்சரித்தும் அனுப்பினான். நான் காவலுக்கு வந்தேன். சிறிது நேரம் இருவரும் காவல் புரிந்தோம். பணிப்பெண் உள் அறை விளக்கை அணைத்துப் படுத்துக் கொண்டாள். நான் எனது மடியிலிருந்து ஒரு செண்பகப் பூவை எடுத்து முகர்ந்து 'அப்பாடா' என்று ரசித்தேன்."

"அப்பொழுது இன்னொரு காவலன்?" என்று கேட்டாள் முத்துக்குமரி.

"என்ன அது என்று கேட்டான். 'இந்தா உனக்கும் ஒன்று' என்று அவனுக்கு ஒரு பூவை மடியிலிருந்து எடுத்துக் கொடுத்தேன். அவன் முகர்ந்தான். தள்ளாடினான். எங் காவது கீழே தடாலென்று விழுந்து என் பிராணனை வாங்கப் போகிறானென்று அவனைக் கட்டிப் பிடித்து அறை வாயிற் கதவில் சாத்தினேன். அவன் கையிலிருந்த மலரையும் திரும்பப் பெற்றுக்கொண்டேன். அவன் அனுமதியில்லாமலே."

முத்துக்குமரி தனது முத்து விழிகளை அவன்மீது திருப்பினாள். "நன்றாகத்தான் திட்டமிட்டிருக்கிறீர்கள்," என்று. சிலாகிக்கவும் செய்தாள்.

அதைக் கவனிக்காதவன்போல் மேலும் சொன்னான் இந்திரபானு. "அந்தச் செண்பகப் பூவை உறங்கிக்கொண் டிருந்த பணிப்பெண் நாசியிலும் வைத்தேன். அவர்கள் இருவரும் நாமாக இஷ்டப்பட்டாலொழியக் காலை வரையில் நம்மைத் தொந்தரவு செய்யமாட்டார்கள்" என்று.

முத்துக்குமரி முறுவல் கொண்டாள். "பூக்கள் மாறி யிருந்தால் என்ன செய்வீர்கள்?" என்று கேட்கவும் செய்தாள் விஷமத்துடன்.

"மாறியிருக்காது. ஏனென்றால் கச்சையின் வலப் புறத்திலொன்றும் இடப்புறத்திலொன்றுமாக மாற்றி வைத்திருந்தேன். காலையில் எழுந்து சென்று விடுவேன்," என்றான் இந்திரபானு.

"இந்த மயக்கத்துக்குக் கால நிர்ணயம் உண்டா?" என்று வினவினாள்.

"உண்டு. மயக்க ரசாயனம் எத்தனை பூவில் தடவப் படுகிறது என்பதைப் பொறுத்தது. அதிகமாகத் தடவி விட்டால் முகருபவர்களுக்கு வைகுந்த வாசமோ கைலாச வாசமோ நரகவாசமோ கிடைக்கும் அவரவர் மதப்படி, அவரவர் வினைப்படி" என்றான் இந்திரபானு.



"இதெல்லாம் உங்களுக்கு யார் சொல்லிக் கொடுத் தார்கள்?"

"சிங்கணன்."

"யார், போசளத் தளபதியா?"

"ஆம். சேர நாடு வந்த பிறகு, காட்டுக் கோட்டையில் நடந்த அனைத்தைப் பற்றியும் அறிந்தேன். பரலிமாநகரில் அதுவே பெருங்கதையாயிற்று. சிங்கணன் படையெடுத்துக் கோட்டாற்றுக் கரைக்குச் செல்லுமுன்பு, அதுபற்றி பரத பட்டரைக் கேட்டேன். அவர் விளக்கம் தந்தார். எதற்கும் இருக்கட்டுமென்று பிரசாதமும் தந்தார்."

"ரசாயனமா?"

"ஆம்."

"அதுவும் குருநாதர் அளித்த பிரசாதமா?"

"ஆம். சேரன் உன்னைத் தூக்கி வந்ததே குரு நாதருக்குப் பிடிக்கவில்லை. அவர் அதர்மத்தை வெறுப் பவர்."

"ஆம். ஆம்," என்றாள் முத்துக்குமரி வருத்தத்துடன். பிறகு "வாருங்கள் போவோம், இவர்கள் விழிக்கு முன்பு" என்றாள் அடுத்த அறையை நோக்கிக் கண்ணைக் காட்டி.

"இல்லை. உன்னை அழைத்துப் போக நான் வர வில்லை," என்றான் இந்திரபானு.

இதைக் கேட்ட பாண்டியன் மகள் பெரும் அதிர்ச்சி யடைந்தாள். "பின் எதற்காக வந்தீர்கள்?" என்றும் வின வினாள் அதிர்ச்சி நிரம்பிய குரலில்.

"உன்னை எச்சரிக்க. உன் உதவி பெற" என்ற இந்திர பானு விளக்கலானான்; "குமரி! உன் ஒருத்தியை முன்னிட் டுத்தான் குருநாதர் சேரனை எதிர்க்கிறார். உன்னை நான் சிறை மீட்டுவிட்டால் குருநாதர் இதயத்தில் சாந்தி ஏற்பட்டு விடும். பிறகு அவர் கவலை சேரனைப் பற்றியும், சேர மக்களைப் பற்றியுமிருக்கும். அத்தகைய கூரிய அறிவுடைய வரை சேரன் பக்கத்துக்கு நாமாக அனுப்புவது மதியீனம். நீ இங்கு சிறையிருப்பதுதான் பாண்டிய நாட்டுக்குப் பலம்.

தவிர எந்தச் சமயமும் சேரமான் குருநாதரையும் மீறி நடவடிக்கைகள் எடுப்பான். திடீரென எதிர்பார்க்காத சம்பவங்கள் இங்கு நிகழும். அப்படி ஏற்படும்போது இங்கிருந்து எங்களுக்குச் செய்தி அறிவிக்கக் கூடியது நீ ஒருத்திதான். எது நடந்தாலும் வெளித் தாழ்வரையில் பந்த வெளிச்சத்தில் வந்து அரை நாழிகை நில். நான் புரிந்து கொள்வேன்..."

முத்துக்குமரியின் அதிர்ச்சியும் பிரமையும் அதிகமாயிற்று. "பகலில் ஏதாவது விளைந்தால்!" என்று வினவினாள் பயத்துடன்.

"பகலில் எதுவும் ஏற்படாது. இரகசியமாகப் புரியப்படும் அலுவல் இரவில்தான் புரியப்படும். தவிர பகலில் எது நடந்தாலும் எனக்குத் தெரியாமல் நடக்காது" என்றான் இந்திரபானு.

பிறகு அவள் தோள்மீது தனது இரு கைகளையும் வைத்து, "குமரி, எச்சரிக்கையுடனிரு. யாரையும் நம்பாதே. இந்தத் தலைநகரை போர் நெருங்கிக் கொண்டிருக்கிறது" என்று கூறினான் உணர்ச்சி ததும்ப.

"இந்தப் பணிப்பெண் உங்கள் வேவுகாரி, இவளையும் நம்பக்கூடாதா?" என்று வினவினாள் முத்துக்குமரி.

"போர் நடக்கும்போது யாரையும் முழுக்க நம்புவது தவறு முத்துக்குமரி," என்ற இந்திரபானு அவள் தோளிலிருந்த தனது கைகளை இறக்கிச் செண்பகப் பூக்களைத் திரும்பவும் மடியில் செருகிக்கொண்டு வெளியே சென்றான். முத்துக்குமரி பஞ்சணையில் படுத்தாள்: நான்காம் ஜாமம் நெருங்கியதும் அந்த அறைக்கு மாற்றுக் காவலர் படியிலேறி வந்து கொண்டிருந்தனர். இந்திரபானு மற்றொரு காவலனைக் கிளப்ப முயன்றான். முடியாததால் தான் மட்டும் உடையைச் சீர்செய்து கொண்டு இடையில் வாளைக் கட்டிக்கொண்டான். வந்த இரு காவலரும் உறங்கிக் கொண்டிருந்தவனைக் கோபத்துடன் பார்த்தனர். பிறகு இந்திரபானுவை நோக்கிக் கேட்டான். "இவன் எப்படி உறங்கலாம்?"



"அவனைத்தான் கேட்க வேண்டும்," என்றான் இந்திரபானு.

"எழுப்ப வேண்டியது உன் கடமையல்லவா?" என்றான் மற்றொரு காவலன்.

"இல்லை. மன்னர் காவலைப்பற்றி எச்சரித்திருக்கும்போது உறங்காதிருப்பது இவன் கடமை. கடமை மீறியவர்களைப்பற்றிக் காவலர் தலைவனிடம் முறையிடுவது நமது கடமை," என்றான் இந்திரபானு திட்டமாக.

"அப்படியானால் நீ போய் நமது தலைவரை அனுப்பு. அவரே நேரில் பார்க்கட்டும் இவனை" என்றான் புதிதாக வந்த இருவரில் ஒருவன்.

அந்த உத்தரவை நிறைவேற்ற இந்திரபானு படிகளில் இறங்கிச் சென்றான். மதிலுக்கும் அரண்மனைப் பின்புறக் கட்டிடத்திற்குமுள்ள இடைவெளியில் வந்ததும் "பாண்டிய குமாரி. அறைக் காவலன் உறங்குவதாகத் தலைவரிடம் தெரிவி" என்று அங்கிருந்த ஒரு வீரனிடம் கூறிவிட்டு வெளியே சென்றான். நான்காம் ஜாமக் காவல் துவங்கிவிட்டதால் மூன்றாம் ஜாமக் காவலர் பலர் வெளியே சென்று கொண்டிருந்தார்கள். அவர்களுடன் கலந்து இந்திரபானுவும் சென்றான். அப்பொழுதும் சாத்தன் இல்லம் லேசாகப் புகைந்து கொண்டிருந்தது. அதை நோக்கி நடந்த இந்திரபானு அதைத் தாண்டிப் பின்புறமிருந்த மலைச்சரிவின் காட்டுக்குள் புகுந்தான். சிறிது நேரம் காட்டின் ஒரு பகுதியில் நின்று மடியிலிருந்து ஒரு செண்பகப் பூவை எடுத்துத் தூர எறிந்தான். பிறகு கச்சையின் மற்றொரு பகுதியிலிருந்து சின்னஞ்சிறு வெண்கலச் சிமிழை எடுத்துப் பார்த்தான். "அப்பா! பட்டர் அளித்த பிரசாதம் நன்றாக வேலை செய்கிறது. என்ன அபாயமான பிரசாதம்?" என்று கூறிக்கொண்டு மீண்டும் மடியில் செருகிக் கொண்டான். பிறகு தனது வலக்கை நடுவிரலையும் கட்டை விரலையும் சேர்த்து இருமுறை சொடுக்கிச் சத்தம் செய்தான். சற்று தூரத்திலிருந்த புதரில் சலசலப்பு ஏற்பட்டது.

## அத்தியாயம் 40

# எல்லாம் என்னால்தான்

மலைச்சரிவின் புதர் அசைந்ததும் அதன் கிளைகள் இரண்டு நீங்க, அதிலிருந்து தலையை மெல்ல வெளியே நீட்டிய கூத்தன் இருபுறமும் கண்களை ஓட்டிவிட்டுப் பிறகு சற்று எட்ட நின்றிருந்த இந்திரபானுவை நோக்கினான். காட்டு இருட்டு அதிகமாயிருந்த போதிலும், இந்திரபானு நின்றிருந்த இடத்திற்கு நேர் மேலேயிருந்த மரக்கிளைகள் பலவும் விலகிக் கிடந்ததால் கிருஷ்ணபட்சத்து உதயச் சந்திரனின் ஆரம்ப வெளிச்சத்தின் இரண்டொரு கதிர்கள் அவன்மீது விழுந்திருந்ததின் காரணமாக அவனை நன்றாகப் பார்த்துவிட்ட கூத்தன் தைரியத்துடன் வெளிப் போந்து புதருக்குள்ளிருந்த சாத்தனையும் வெளியே வரும்படி அழைத்தான். அரண்மனைக் காவலைத் தவிர, வேவு விவகாரங்களை அடியோடு அறியாதவனான சாத்தன். கடந்த தினத்திலிருந்து ஏற்பட்ட பலவித நிகழ்ச்சிகளால் அதிகத் திகிலுக்கும், குழப்பத்துக்கும் உள்ளாகியிருந்ததால் உடல் சற்று நடுக்கத்துடனேயே வெளியே வந்து கூத்தனைத் தொடர்ந்து இந்திரபானு நின்றிருந்த இடத்துக்கு வந்து சேர்ந்தான். பிறகு திகிலுடன் கேட்கவும் செய்தான். "இனி நான் போகலாமா?" என்று.

அந்தக் கேள்வி இந்திரபானுவை நோக்கிக் கேட்கப் பட்டதானாலும் கூத்தன் சினத்துடன் அவனை நோக்கித் திரும்பி வினவினான், "எங்கு போகப் போகிறாய் சாத்தா?" என்று.

"அரண்மனைக்கு," என்றான் சாத்தன் அப்பொழுதும் குரலில் திகில் ஒலிக்க.



"போய் என்ன செய்கிறதாக உத்தேசம்?" இம்முறை கூத்தனின் குரலில் ஏளனம் ஒலித்தது.

சாத்தன் ஏளனத்தைப் பற்றிக் கவலை கொண்டதாகத் தெரியவில்லை. "என் அலுவலை ஏற்றுக்கொள்ளப் போகிறேன். அரண்மனை உப்பை இத்தனை நாள் தின்றிருக்கிறேனல்லவா?" என்றான் சாத்தன் கூத்தனை அலட்சியத்துடன் நோக்கி.

கூத்தன் இதழ்கள் இகழ்ச்சியுடன் மடிந்தன. "போனால் என்ன ஆகும் தெரியுமா?" என்று கூத்தன் உதடுகள் ஒரு கேள்வியையும் வெளியிட்டன இகழ்ச்சியுடன்.

"என்ன ஆகும்?" சாத்தன் குரலில் இகழ்ச்சி தொனித்தது.

"அரண்மனை உப்பு உன் உடம்பில் ஊறியிருக்கிறதல்லவா?" என்று வினவினான் கூத்தன்.

"ஆம்..."

"மீண்டும் ஊறும்."

"நீ சொல்வது விளங்கவில்லை எனக்கு."

"உன் தோலை உரித்து உப்பைத் தடவுவார்கள்?"

"எதற்காக?"

"வேவுக்காரர்களுக்கு உடந்தையாயிருந்ததற்காக விருந்தளிப்பார்களென்று எதிர்பார்க்கிறாயா?"

இந்தக் கேள்விக்குச் சாத்தன் உடனடியாகப் பதில் சொல்லவில்லை. சிறிது யோசனைக்குப்பின் சொன்னான், "எது நடந்தாலும் சரி. நான் அரண்மனைக்குப் போகப் போகிறேன். கடந்த நாட்களில் நடந்ததைக் கூறிவிடப் போகிறேன். மேற்கொண்டு அரசத் துரோகத்துக்கு என் மனசாட்சி இடங்கொடுக்கவில்லை," என்று.

கூத்தன் முகத்தில் சினம் அதிகமாகத் துளிர்த்தது. ஏதோ சொல்ல வாயெடுத்தான் சாத்தனை நோக்கி. அவனைப் பேச வேண்டாமென்று கையமர்த்திய இந்திர பானு சாத்தனைக் கனிவுடன் நோக்கி, "சாத்தா! உன் அரச

பக்தி மெச்சத் தகுந்தது. நீ போவதாயிருந்தால் போ. ஆனால் இதையும் சிந்தித்துப் பார். பரதபட்டர் சேரநாட்டுப் பற்றிலும் அரசபக்தியிலும் யாருக்கும் சளைத்தவரல்லர். ஆனால் அவரே அரசனுக்கு எதிராக அலுவல்களைப் புரிகிறார். அரச தர்மத்துக்குப் பிரஜைகள் பணிய வேண்டியதுதான். அரச அதர்மத்துக்குப் பணியும்படி எந்த அறவிதியும் கூறவில்லை. தவிர இன்னொன்றும் நீ கவனிக்கவேண்டும்," என்றான்.

"என்ன கவனிக்க வேண்டும்?" என்று கேட்டான் சாத்தன்.

"அரசர் அறியாதது எதையும் நீ கூற முடியாது. பணிப் பெண்ணை வேலைக்கமர்த்தியது நீயென்று அரண் மனையில் தெரியும். அவ்வளை அரசர் நிறுத்திக் கொண்டிருக்கிறார் ஏதோ சந்தேகத்தின்மேல். அவர்கள் சந்தேகப்பட்ட வினாடியிலிருந்து அரண்மனையில் பல கண்கள் அவள்மீது நிலைத்திருக்கும். இத்தனை. நேரம் அவள் பல விஷயங்களை அரசரிடம் கூறியிருக்கலாம் இல்லையேல் இரவில் காவலர் உனது இல்லம் தேடி வரக் காரணமில்லை. உன் வீடு எரிந்திருக்கிறது. வீட்டுக்கெதிரே யுள்ள மரத்திலிருந்து எனது ஓலையும் அரசரிடம் போயிருக்கிறது. இவற்றைத் தவிர வேறு என்ன மன்னருக்கு நீ சொல்ல முடியும்?" என்று கேட்டான் இந்திரபானு. அதைத் தொடர்ந்து மேலும் சொன்னான், "சாத்தா! அந்தப் புரத்தில் பாண்டியகுமாரி அறைக் காவலனொருவன் மயக்கமுற்றுக் கிடக்கிறான். ஒரு காவலன்மறைந்து விட்டான். அந்தக் காவலன் நீயா நானா? அந்தப்புர வழிகள் எனக்குத் தெரியக் காரணமில்லை. உனக்குத் தெரியக் காரணமுண்டு. தவிர, பணிப்பெண்ணை அமர்த்தியதும் நீ. அவளை மாலையில் சந்திக்க முயன்று முடியாமல் திரும்பியிருக்கிறாய். இரவில் சந்தர்ப்பம் கிடைத்தபோது மைத்துனியைப்பார்க்க நீ ஏன் போயிருக்கக் கூடாது? தவிர, அவள் மைத்துனியென்று நீ கூறியதற்கு உண்மை என்ன என்பதற்கு என்ன அத்தாட்சி? அவள் உன்





காதலியாகக்கூட இருக்கலாமே? நீ, உன் காதலி இருவரும் ஒற்றர்கள். என்னையும் கூத்தனையும் சேர்ந்தவர்கள். ஆகவே அவளை விடுவித்துக் கொண்டு வர நீ இந்தத் தீயையும் குழப்பத்தையும் பயன்படுத்திக் கொண்டிருக்கலா மல்லவா?" என்று.

சாத்தன் மூளை அடியோடு குழம்பிவிட்டதால் அவன் பதிலேதும் சொல்லத் தெரியாமல் விழித்தான். அவன் நிலைமையைக் கண்டு பரிதாபப்பட்ட இந்திரபானு, "சாத்தா! உன்னைப்போன்ற வீரர்கள் நாட்டின் மாணிக்கங்கள். ஆனால் மன்னர்களுக்கு அத்தகைய மாணிக்கங்களை மதிக்கத் தெரியாது. அதுவும் சினத்துக்கும் காமத்துக்கும் வசப்பட்ட மன்னர்களுக்கு மனிதர்களின் தராதரம் தெரிவது கிடையாது. வேண்டுமானால் நீ எங்களைவிட்டுச் செல். ஆனால் அரண்மனைக்குச் செல்லாதே. அரண்மனையில் உனக்குச் சித்திரவதை காத்திருக்கிறது," என்றான்.

அத்துடன் சாத்தனுடன் பேசுவதை நிறுத்திக் கொண்ட இந்திரபானு கூத்தனை நோக்கி, "அண்ணா அதோ பார், அந்தப்புர உப்பரிகைத் தாழ்வரையை," என்று சுட்டிக் காட்டினான்.

உப்பரிகைத் தாழ்வரையில் பந்தங்கள் வேகமாக அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருந்தன. பிறகு ஒரு பந்தம் படிகளில் இறங்கிக் கீழே ஓடிவந்தது. அடுத்த வினாடி நாலைந்து பந்தங்கள் மாடிப் படிகள் ஏறிச் சென்றன. சில வினாடிகளுக்குள்ளாகப் பல விளக்குகளும் ஏற்றப்பட்டன. இத்தனையும் மௌனமாகப் பார்த்த கூத்தன், "ஆம் தம்பி! நீ சென்று வந்தது தெரிந்துவிட்டது," என்றான்.

"நான் என்று திட்டமாகத் தெரியாது அவர்களுக்கு, யாரோ ஒருவன் வந்திருக்கிறான் என்றுதான் தெரியும். அனேகமாக, சாத்தன்மீதுதான் அவர்களுக்குச் சந்தேகம் விழும்," என்றான் இந்திரபானு. பிறகு ஒருவினாடி சிந்தித்து விட்டு, "அண்ணா! இனி இந்தப் பகுதி சல்லடை போட்டுச் சலிக்கப்படும். வா நாம் போகலாம்" என்று கூத்தனை

அழைத்துக்கொண்டு கிளம்பினான். அவர்கள் போவதை ஒரு வினாடி கவனித்துக்கொண்டிருந்த சாத்தன் முகத்தில் குழப்பம் மிதமிஞ்சிக் கிடந்தது. சிறிது அவகாசத்துக்குப் பிறகு சாத்தன் சோகப் பெருமூச்சு விட்டுக்கொண்டு அவர்களை மெல்லப் பின்பற்றிச் சென்றான். அரண்மனைக்குள் அடுத்து நிகழக்கூடிய நிகழ்ச்சிகளைப்பற்றியே அவன் மனம் சிந்தித்துக் கொண்டிருந்தது.

அரண்மனை நிகழ்ச்சிகள் இந்திரபானு எதிர்பார்த்த படிதான் இருந்தன. பாண்டியகுமாரியின் அறைக் காவலனொருவன் தூங்கிவிட்டான் என்பதை அறிந்தவுடன் அந்த அறைக்கு நாலைந்து வீரர்களுடன் விரைந்த காவலர் தலைவன் வாயிற்படியில் சாய்ந்து கொண்டு நிம்மதியுடன் உறங்கிக் கொண்டிருந்த காவலனைக் கண்டதும் வெகுண்டு, "டேய்! எழுந்திரு," என்று கூறி, பாதக் குறட்டால் அவனைக் குத்தவும் செய்தான்.

அந்தக் குத்தலுக்கும் காவலன் மசியவில்லை. தலைவன் கையால் பிடித்து உலுக்கியதற்கும் மசியவில்லை. பிறகு தலைவன் வீரனொருவனை விளித்து, "இவனை தூக்கி நிறுத்தி முகத்தில் நீர் அடியுங்கள்," என்றான்.

ஒரு வீரன் அவனைத் தூக்கி நிறுத்தி, மற்றொரு வீரன் நீர் கொண்டு வந்து முகத்திலடித்ததும் லேசாகக் கண்களைத் திறந்த காவலன் மீண்டும் கண்ணை மூடிக் கொண்டு தன்னை நிற்க வைத்தவர்மீது தடாலெனச் சாய்ந்துவிடவே இருவரும் தரையில் விழுந்தனர். அடியில் விழுந்த வீரன், உறங்கியவன் உடலிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு விலகி, "அப்பா! பிணம் கனம் கனக்கிறான். இறந்து விட்டான் போலிருக்கிறது" என்றான் காவலர் தலைவனை நோக்கி.

"சற்று முன்பு கண் விழித்தானே," என்று சீறினான் காவலர் தலைவன்.

"ஆமாம்." கீழே விழுந்த வீரன் ஒப்புக்கொண்டான் பணிவுடன்.



"பிணம் விழிக்குமா?" என்று மீண்டும் கூறினான் தலைவன்.

"விழிக்காது." விழுந்த வீரன் குரலில் பணிவு அதிகமாகயிருந்தது.

"பின் எப்படி இவனைப் பிணமென்கிறாய்?" என்றான் தலைவன் ஆத்திரத்துடன்.

"தங்கள்மீது இவன் விழுந்திருந்தால் தாங்களும் ஒப்புக்கொள்வீர்கள்," என்றான் வீரன்.

காவலர் தலைவனுக்கு அந்த வீரனை ஓங்கி அறைந்து விடலாம் போலிருந்தாலும் சினத்தை அவன்மீது காட்டாமல் மற்றொருவனை நோக்கி, "இந்த அறையின் பணிப் பெண் எங்கே?" என்று சீறி விழுந்தான்.

"உள்ளேயிருக்க வேண்டும்."

"அழைத்து வா அவளை."

அறைச் சீலையை விலக்கிக் கொண்டு உள்ளே சென்ற காவலன் சில வினாடிகளுக்குப் பின்பு திரும்பி வந்து, "தலைவரே! பணிப்பெண்ணும் உறங்குகிறாள்," என்றான்.

"வாளால் தட்டி எழுப்ப நான் சொல்லித் தர வேண்டுமா?" என்று வினவினான் தலைவன் ஆக்ரோஷத்துடன்.

"வேண்டியதில்லை. நானே வாள் பிடியால் குத்திக் கூடப் பார்த்தேன். அவள் எழுந்திருக்கவில்லை," என்றான் வீரன்.

"நீ சொல்வது விளங்கவில்லை," என்றான் தலைவன்.

"அவளும் இவன் நிலையில்தானிருக்கிறாள்," என்று வீரன் விளக்கவே என்ன செய்வதென்றறியாமல் விழித்த காவலர் தலைவன், "நீ சென்று மன்னர் சயன அறைக் காவலனிடம் இதைத் தெரிவித்துவிட்டு வா," என்றான்.

"மன்னர் எங்கு சயனித்திருக்கிறாரோ? பட்டத்து ராணியின் மாளிகையிலா? இளைய ராணியின் மாளிகையிலா?" என்றான் வீரன்.

“மன்னர் இரண்டு மாளிகைகளுக்கும் செல்லவில்லை. இந்தப் பகுதியின் சயன அறையில் தானிருக்கிறார்,” என்று காவலர் தலைவன் கூறியதும் விரைந்த வீரன் சில நிமிடங்களுக்கெல்லாம் மற்றொரு காவலனுடன் திரும்பினான். வந்த காவலன் மிக வயோதிகனாயிருந்தான். அரண்மனைக் காவலிலேயே ஆயுள் காலத்தைக் கழித்துக் கொண்டிருந்த அவன் நீண்டநேரம் உறங்கிக் கொண்டிருந்த அந்தக் காவலனைக் கவனித்தான். பிறகு உள்சென்று அங்கிருந்த பணிப்பெண்ணைக் கவனித்துவிட்டு வெளிவந்தான். பிறகு காவலர் தலைவனை நோக்கி, “இவன் உறங்குவதை எப்பொழுது அறிந்தீர்கள்?” என்றான்.

“மூன்றாம் ஜாமக் காவலனொருவன் சொல்லியனுப்பினான்,” என்று பதில் கூறினான் தலைவன்.



அரசனின் சயன அறைக் காவலன் சற்றுச் சிந்தித்துவிட்டு, “உறங்குபவன் உறங்கட்டும். பணிப்பெண்ணையும் ஏதும் செய்யவேண்டாம். இங்கு காவலைப் பலப்படுத்துங்கள். காலையில் மன்னரே அவர்கள் நிலையை நேரில் பார்க்கட்டும்,” என்று கூறிச் சென்றான்.

காவலர் தலைவன் காவலைப் பலப்படுத்த வேறு யாரையும் நியமிக்கவில்லை. தன்னுடன் வந்த காவலர்களோடு தானே காவல் புரிந்தான்.

நான்காம் ஜாமமும் வெகு துரிதமாக ஓடியது. உதய கால தாரைகள் அரண்மனையில் சப்தித்தன. அந்தப்புரத்திலும் பணிமக்கள் நடமாட்டம் துவங்கியதால் சிலம்பொலிகள் ஆங்காங்கு கேட்டன. எங்கோ கோவிலில் பாடப்பட்ட திருப்பள்ளியெழுச்சியும் தொடர்ந்து கேட்டது. சற்று நேரத்திற்கெல்லாம் பாண்டியகுமாரியின் அறைக்கு வயோதிகக் காவலன் பின்தொடர வந்து மன்னன் உறங்கிக் கிடந்த காவலனை இருமுறை காலால் உதைத்தான். பிறகு உள்ளே சென்று பணிப்பெண்ணையும் இருமுறை உதைத்துப் பார்த்தான். பிறகு உள்ளறைச் சீலையை விலக்கச் சென்றான். அவன் அதை அணுகு முன்பு, “யாரது?” என்று அதிகாரச் சத்தமிட்டுத் திரைச்



சீலையை விலக்கிக்கொண்டு வெளியே வந்த முத்துக்குமரி அரசனை நோக்கி தீ விழி விழித்தாள். “அனுமதியின்றி உங்களை யார் நுழையச் சொன்னது இங்கே?” என்று கனல் கக்கும் சொற்களையும் உதிர்த்தாள்.

மன்னன் அவள் சினத்தைவிட அதிக சினத்தைக் காட்டி, “இங்கு என்ன நடந்தது இரவில்?” என்றான்.

“அரண்மனையில் நடப்பதைக் கண்டுபிடிப்பது சிறையிருப்பவள் வேலையா?” என்றாள் குமரி.

“நேற்றிரவு இங்கு இருவர் மயக்கமுற்றிருக்கிறார்கள்.”

“அரண்மனையில் பலருக்குப் பலவித மயக்கமிருக்கிறது.”

“பாண்டியகுமாரி! இதோ உன் பணிப்பெண் மயக்கமாகப் படுத்திருக்கிறாள். வாயிலில் காவலனொருவன் மயக்கமாகப் படுத்திருக்கிறான்,” என்றான் கோபத்துடன் மன்னன்.

“அதற்கு நான் என்ன செய்ய?”

“உன்னை நாடி யார் வந்தது இரவில்?”

“யாரும் வரவில்லை?”

“பொய்.”

“வந்திருந்தாலும் உங்களிடம் சொல்வேனென்று எதிர்பார்க்கிறீர்களா?”

“வேறுவிதமாக அறிய மார்க்கமில்லையென்று நீ நினைக்கிறாயா?”

“இருக்கும்போது என்னைக் கேட்பானேன்?” என்ற முத்துக்குமரி உள்ளறையை நோக்கித் திரும்பினாள்.

“நில்!” என்று அதட்டிய மன்னன் அவளுக்கு முன்பு உள்ளறைக்குள் நுழைந்து சுற்றும்முற்றும் கவனித்தான். பஞ்சணையில் விழுந்திருந்த செண்பகப் பூவைக் கண்டதும் அதைக் கையிலெடுத்துக்கொண்டு, “இது எது?” என்றான்.

“உங்கள் அரண்மனைப் பூக்காரியைத்தான் கேட்க வேண்டும். சேர நாட்டில் செண்பகம் விளையுமிடம் எனக்கெப்படித் தெரியும்?”

அரசன் காவலனொருவனை விளித்து, "பரத பட்டரை இங்கு அழைத்து வா," என்று உத்தரவிட்டான்.

சற்று நேரத்திற்கெல்லாம் அங்கு வந்த பரதபட்டன் காவலனையும் நோக்கினான். பணிப் பெண்ணையும் நோக்கினான். பிறகு மன்னனை நோக்கி, "இந்த மயக்கம் தானாகச் சரியாகப் போய்விடும். இன்னும் ஒரு நாழிகை யில் இருவரும் கண் விழித்துக் கொள்வார்கள்," என்றான்.

"இவர்கள் எப்படி மயக்கமுற்றார்கள்? யாரால்?" என்றான் அரசன்.

பரதபட்டன் தனது சின்னஞ்சிறு விழிகளை அரசன் மீது திருப்பினான். "எல்லாம் என்னால்தான்," என்றான்.

அரசன் திகைத்து நின்றான். "உங்களாலா!" என்ற அரசன்சொல்லில் ஒலித்தது வியப்பா, வேதனையா, கோபமா என்பது புரியவில்லை.



## அத்தியாயம் 41

# மூன்று நிபந்தனைகள்

கடந்த இரவில் நடந்த விசித்திர நிகழ்ச்சிகளெல்லாம் தன்னால்தானென்று குருநாதன் ஒப்புக் கொண்டதைக் கேட்டுப் பலவித உணர்ச்சிகளுக்கு உள்ளான மன்னன் அந்த உணர்ச்சிகளை வேறு யார்மீதும் காட்டாமல் கையிலிருந்த செண்பகப் பூவைப் பலமாக நெருடினான். அப்பொழுது தான் செண்பகப் பூவைக் கவனித்த குருநாதன், "இப்படிக் கொடு அந்தச் செண்பகப் பூவை," என்று அரசனைக் கேட்டு அதை வாங்கிச் சற்று எட்ட நீட்டிக்கொண்டே அதைக் கவனித்தான். பிறகு மன்னனை நோக்கிக் கேட்டான்; "இதே மாதிரி இன்னொரு பூ இருக்க வேண்டுமே. அது கிடைத்ததா?" என்று.

மன்னன் முகத்தில் கோபம் அதிகமாகத் துளிர்க்கவே, "பூவைத் தேட இங்கு நான் வரவில்லை," என்று சினத் துடன் கூறினான் குருநாதனை நோக்கி.

"வேறு எதற்கு வந்தாய்?" என்று குருநாதன் கேட்டான் இகழ்ச்சியுடன்!

"இவர்கள் மயக்கத்துக்குக் காரணம் கண்டு பிடிக்க," என்று மன்னன் மீண்டும் சீறினான்.

"மயக்கத்திற்கும் பூவுக்கும் சம்பந்தமுண்டு என்று புலப்படவில்லையா உனக்கு?" என்ற பரதபட்டன் குரலில் இகழ்ச்சி அதிகமாக ஒலித்தது.

"சம்பந்தம் உங்களுக்கும், மயக்கத்துக்கும்தானென்று கூறவில்லையா நீங்கள்?" என்ற அரசன் கேள்வியில் கோபம் அதிகமாகத் தெரிந்தது.

"எனக்கும் இவர்கள் மயக்கத்துக்கும் சம்பந்தம் உண்டு. இவர்கள் மயக்கத்துக்கு நான் காரணம்தான். ஆனால் இடைக் கருவிகள் தேவை" என்றான் பரதபட்டன்.

"இடைக் கருவிகளா?" ஏதும் புரியாமல் வினவினான் மன்னன்.

"ஆம்."

"என்ன இடைக் கருவிகள்?"

"என் திராவகத்தைத் தடவ ஒரு சிறு கிழிசல் துணி அல்லது ஒரு சிறு புஷ்பம், அந்தக் கிழிசல் அல்லது மலரை ஏந்திவர ஒரு மனிதன், இவையனைத்தும் தேவை."

மன்னன் பொறுமை அதற்கு மேல் நிலைக்கவில்லை. "சொல்வதை விளங்கச் சொல்லும்," என்று கூவினான் சினக் கதிர்கள் முகத்தில் வீச.

பதிலுக்குப் பரதபட்டன் முகத்தில் வருத்தக் குறி பெரிதும் படர்ந்தது. "பாண்டிய நாட்டில் அறிவு வளர்ந்து வருகிறது. சேரநாட்டில் அது குன்றி வருகிறது." என்று சற்று இரைந்து சொல்லிக் கொண்டான்.

அதைக் காதில் வாங்கிய மன்னன், "குருநாதரே! உமது துணிவு எல்லை மீறிப் போகிறது," என்றான் குரலில் உஷ்ணம் அலைபாய.

"எல்லைமீறிப் போவது அது மட்டுமல்ல..." என்றான் குருநாதன்.

"வேறெது?"

"தலைநகரின் ஆபத்து."

"எப்படித் தெரியும் உமக்கு?"

பதிலுக்குப் பெரும் அதிர் வெடியை எடுத்து வீசினான் குருநாதன். "இந்திரபானு இந்த அறைக்கு வந்து போனதிலிருந்து," என்று குருநாதன் கூறிய சொற்களைக் கேட்ட வீரரவி உதய மார்த்தாண்டவர்மன் அவருக்கு ஒருவேளை புத்தி பிசகிவிட்டதோ என்று உள்ளூர நினைத்தான்.



அவன் முகபாவத்திலிருந்தே அவன் நினைப்பதை ஊகித்த குருநாதன் மெல்ல நகைத்தான். "மன்னா! உன் காவலன் வீடு பற்றி எரிகிறது. பிறகு கிடைக்கிறது இந்திர பானுவின் ஓலை உனக்கு. தீப் பிடித்ததில் அரண்மனை பின்புறக் காவல் சிறிது குழம்புகிறது. அந்தக் குழப்பத்தில் உனது காவலர் உடையில் இந்திரபானு உள்ளே நுழைந்தால் யார் கவனிக்கப் போகிறார்கள்? இங்கிருந்த காவலனையும் பணிப்பெண்ணையும் ரசாயனம் தடவிய செண்பகப்பூவை முகரச்சொல்லி இருவரையும் கும்பகர்ணர்கள் ஆக்கி விட்டதால் அவன் இரவில் ஒரு முழு ஜாமத்தை இங்கு கழிப்பதை யார் தடுக்க முடியும்?" என்று வினவவும் செய்தான். அத்துடன் மேலும் சொன்னான்; "அந்த ரசாயனத்தை இந்திரபானுவின் தற்காப்புக்காகக் கொடுத்தேன். அதுவும் அவன் என் குடிசையில் இருந்த நாளில் கொடுத்தேன். முத்துக்குமரியைச் சிங்கத்தின் வாயிலிருந்து மீட்க வரும் ஒரு வாலிபனுக்கு உதவியாயிருக் கட்டுமென்று கொடுத்தேன். அறிவாளியான அவன் அதை வெகு சாமர்த்தியமாக உபயோகப்படுத்தியிருக்கிறான், அவன் நிதானமாக அலுவல்களைப் புரிகிறான். நீ அவசரத்தில் காரியத்தைக் கெடுக்கிறாய்."

மன்னன் மெள்ள தன் கோபத்தை ஒரு கட்டுக்குள் கொண்டு வந்தான். "என்ன அவசரப்பட்டு விட்டேன் நான்?" என்று வினவினான்.

பரதபட்டன் சிறு விழிகள் மன்னனை நோக்கிப் பளிச்சிட்டன ஒரு விநாடி. பிறகு அவன் உதடுகள் சொற்களை நிதானத்துடன் உதிர்க்கத் தொடங்கின. "நீ என்ன அவசரப் பட்டுவிட்டாய் என்று சொல்வதைவிட நானாயிருந்தால் எப்படி நடந்துகொண்டிருப்பேன் என்று சற்றுச் சிந்தித்துப் பார்க்கிறேன். திடீரென ஒரு புதுப் பணிப் பெண் முளைத்து இரண்டு ராணிகளைத் தாண்டி என்னிடம் வந்து விட்டால் முதலில் அவளிடம் எச்சரிக்கையுடனிருப்பேன். அவள் சொல்வதைக் கேட்டுக் கொள்வேனே தவிர அவளை அரண்மனையில்

இருத்திக்கொள்ள மாட்டேன். அவளைத் தேடி வந்த பணிப் பெண்ணிடம் அவள் இரவு வரமாட்டாளென்று சொல்லியனுப்பியிருக்கமாட்டேன். நிதானித்திருப்பேன். அந்தப் பெண்ணைப் போக விட்டு அவளைக் கவனிக்க ஏற்பாடு செய்திருப்பேன். அவள் எந்த இல்லத்துக்குப் போகிறாள், எந்தக் காவலனுடன் தங்கியிருக்கிறாள், அந்த இல்லத்தில் வேறு யார் யார் இருக்கிறார்கள் என்று கவனிக்கச் செய்வேன். அவள் விஷயத்தில் மேலுக்கு வெகு அசிரத்தை காட்டுவேன். உள்ளூர வெகு எச்சரிக்கையுடனிருப்பேன். என் அசிரத்தை அவளுக்கும் அவளைச் சேர்ந்தவர்களுக்கும் துணிவைக் கொடுக்கும். அந்தத் துணிவில் ஏதாவது ஒரு சரிவு, ஓர் இடைவெளி கிடைக்கும். அப்பொழுது என் கரம் குறுக்கே நிற்கும். இது என் வழி. உன் வழி உடனுக்குடன் நடவடிக்கை. ஆத்திரத்தின் வழி அது. ஆத்திரக்காரனுக்கு...'' மேலே சொல்லவில்லை பரதபட்டன். ஆனால் அரசன் உணர்ந்து கொண்டான். காவலர் எதிரில், முத்துக்குமரியின் எதிரில் தன்னை நிந்திக்க பரதபட்டனுக்கு மிதமிஞ்சிய துணிவு இருக்கவேண்டுமென்று நினைக்க நினைக்க ஆத்திரம் எல்லை மீறியது. மீண்டும் குருநாதனை இழுத்துச் செல்லுமாறு காவலருக்கு உத்தரவு பிறப்பிக்க வாயெடுத்தான். அப்பொழுது குறிஞ்சி மெல்லக் கண்களைத் திறந்தாள்.

மன்னன் ஆணையிடுவதைச் சற்றே தேக்கிக்கொண்டான். குருநாதர், அரசர், காவலர், அந்த அறையிலிருந்ததைக் கண்ட குறிஞ்சி மெள்ளத் தன் ஆடைகளைச் சீர் செய்து கொண்டும் தலையைக் கோதிக்கொண்டும் எழுந்து உட்கார்ந்து கண்களைச் சற்றுக் கசக்கிவிட்டுக் கொண்டாள். அதே சமயத்தில் வாயிற்படியில் சாய்ந்து கிடந்த வீரனும் மெள்ள எழுந்திருந்து தள்ளாடித் தள்ளாடி உள்ளே வந்து மன்னனைக் கண்டதும் தலை வணங்கக்கூட உணர்ச்சியற்றுப் பிரமைபிடித்து நின்றான்.

"இதுதான் நீ காவல் புரியும் லட்சணமா?'' என்று வினவினான் மன்னன்.



பதிலுக்கு நடுங்கினான் வீரன். "எல்லாம் அந்தச் செண்பகப்பூ...'' என்று குளறினான்.

"எந்தச் செண்பகப்பூ?'' என்று மன்னன் வினவினான்.

"அந்த இன்னொரு காவலன் கொடுத்தது?'' என்று மீண்டும் குளறினான் அவன்.

"எங்கே அது?'' அரசன் கையை நீட்டினான் பூவை வாங்க.

காவலன் தனது கச்சையில் தேடிப் பார்த்தான். "காணவில்லை. அவன்தான் எடுத்துக்கொண்டு போயிருக்க வேண்டும்'' என்றான் காவலன்.

"அவனை இதற்கு முன்பு பார்த்திருக்கிறாயா?'' என்று குருநாதன் வினவினான்.

"இல்லை, பார்த்ததில்லை,'' என்றான் காவலன்.

"அவன் முகம்...'' என்ற குருநாதன் வார்த்தையை முடிக்கவில்லை.

''மிக விகாரம்,'' என்று வீரன் வார்த்தையை முடித்தான் இடைபுகுந்து.

மன்னன் அவனைச் செல்லுமாறு பணித்துவிட்டுக் குறிஞ்சியை நோக்கினான். குறிஞ்சி மன்னன் கேள்வியை ஊகித்துப் பதில் சொன்னாள். "யாரோ என்னை மயக்க ரசாயனத்தை முகர வைத்திருக்கிறார்கள். இத்தனைக்கும் நான் அதிகமாக உறங்குவதில்லை. முகர வைத்தவன் யாராயிருந்தாலும் அவன் படு சாமர்த்தியசாலியாக இருக்க வேண்டும். நான் படுத்து உறங்கும் வரையில் காத்திருந்து மெல்ல வந்து என் முகத்திற்கு எட்டாமையில் வைத்தே அதை நான் சுவாசிக்கச் செய்திருக்கிறான். அவன் கொண்டு வந்த மலரோ துணியோ சற்று என்மீது பட்டிருந்தாலும் நிலைமை வேறாயிருக்கும்,'' என்றாள் மன்னனை நோக்கி.

மன்னன் பரதபட்டனை நோக்கினான். பரதபட்டன் தான் அவளை ஏதும் கேட்க விரும்பவில்லையென்று கூறிவிட்டு அறையைவிட்டு வெளியே சென்றான். காவலரிருவர் குருநாதனைத் தொடர்ந்தனர். மன்னனும்

அத்துடன் விசாரணையை நிறுத்திக்கொண்டு காவலர் தலைவனை விளித்துக் காவலை அந்த அறையில் பலப் படுத்தும்படி உத்தரவிட்டுத் தனது சயன அறையை நோக்கிச் சென்றான்.

மீண்டும் தனது பஞ்சணையில் படுத்த வீரரவி வெகு நேரம் சிந்தனையில் ஆழ்ந்தான். பரதபட்டன் சொன்ன அனைத்தும் உண்மையென்பது அவன் கூரிய அறிவுக்கு மிகத் தெளிவாகத் தெரிந்தது. தனது அவசரத்தாலேயே பல காரியங்கள் கெட்டு விட்டன என்பதையும் அவன் புரிந்து கொண்டான். பரதபட்டன் உதவியும் யோசனையும் அந்த நெருக்கடியான கட்டத்தில் சேர நாட்டுக்குத் தேவையென் பதையும் உணர்ந்தான் சேரமன்னன். இருப்பினும் குரு நாதன் இந்திரபானுவைத் தான் கொல்ல முயன்றதையும், முத்துக்குமரியைச் சிறை வைத்திருப்பதையும் ஒப்பவில்லை யென்பதைப் புரிந்து கொண்டானானதால் அவனுக்குக் குருநாதன்மீது ஓரளவு கோபமும் துளிர்த்தது. கோபத்தைக் காட்ட அது சமயமல்லவாதலால் குருநாதனிடம் ஓரளவு ஒத்துப் போவதே சிறந்த வழி என்பதை உணர்ந்து வீரரவி அதற்கான யோசனையில் இறங்கினான். தனது அந்தரங்க ஆலோசனைகளில் குருநாதனுக்கும் ஓரளவு இடங் கொடுத்து அவன் யோசனைகளில் இறங்கினான். தனக்குப் பிடித்தமானதை எடுத்துக் கொள்ளவும் தீர்மானித்தான் உதயமார்த்தாண்டவர்மன். 'உள்ள நிலைமை இன்று புரியும். இன்று எப்படியும் கடற்படை துறைமுகத்துக்கு வந்துவிடும், கடற்படைத் தலைவனையும் விசாரிப்போம்,' என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்ட சேரமான் வழக்கத்துக்கு விரோதமாக அன்று நீண்ட நேரம் கழித்தே நீராடச் சென்றான். நீராடிய பிறகு, லேசாகக் காலை உணவருந்தி முதலமைச்சரை வரவழைத்தான் தனது சயன அறைக்கே.

முதலமைச்சர் மிகுந்த கவலையுடன் சயன அறைக்குள் நுழைந்தார். மன்னன் சயன அறைக்குள் நுழைய யாருக்குமே அனுமதி கிடையாது. மன்னனுக்கு உடல்நிலை சரியில்லையென்றால் மருத்துவர் மட்டும் அங்கு நுழையலாமென்பதுதான் அரண்மனை விதி. அப்படியிருக்கத் தம்மை மன்னன் அங்கு அழைத்ததை எண்ணிப் பெருங்கவலையுடன் வந்த முதலமைச்சர், "மன்னர் உடலுக்கு..." என்று விசாரித்து முகத்தில் துன்பத்தைக் காட்டினார்.



"உடல் நிலைக்கு ஏதுமில்லை, முதலமைச்சரே! மனநிலைதான் சரியில்லை," என்றான் மன்னன்.

"புதிதாக என்ன ஏற்பட்டுவிட்டது மன்னரைக் கவலைக்குள்ளாக்க?" என்று வினவினார் முதலமைச்சர்.

மன்னன் பஞ்சணையை விட்டு எழுந்திராமல் கடந்த இரவில் நடந்ததை விளக்கமாகச் சொன்னான். முதல மைச்சர் முகத்தில் முதலில் வியப்பு விரிந்தது, பிறகு கவலை படர்ந்தது, முடிவில் அதிர்ச்சி தெரிந்தது. "மிக விசித்திரம் மிக விசித்திரம்," என்றார் முதலமைச்சர் நிகழ்ச்சி முழுவ வதையும் கேட்ட பின்பு.

"இதிலிருந்து உமக்கு என்ன தெரிகிறது?" என்று வினவினான் மன்னன் சர்வ சாதாரணமாக.

முதலமைச்சர் சற்றுத் தயங்கியே பதில் சொன்னார், "அரண்மனைக் காவல் அத்தனை சரியாயில்லையென்று தெரிகிறது. தவிர, தலைநகரில் எதிரி வேவுகாரர் நடமாட்டம் அதிகமென்று தெரிகிறது. அதுமட்டுமல்ல, வெகு திறமைசாலிகளான ஒற்றர்களை நாம் சமாளிக்க வேண்டியிருப்பதும் தெரிகிறது," என்று.

"வேறு என்ன தெரிகிறது?" என்று வினவினான் மன்னன் பஞ்சணையில் எழுந்து உட்கார்ந்து.

முதலமைச்சர் சிறிது தயங்கினார். "சொல்லத் தயக்கமாயிருக்கிறது," என்றும் கூறினார்.

"என்ன தயக்கம்?" என்று கேட்டான் மன்னன்.

"நமது மதிப்புக்குரியவர்மீது குறை சொல்வது தயக்கத்தை தருகிறது."

"தயக்கம் வேண்டாம். சொல்லும்."

"குருநாதர் வெளிப்படையாகக் கூறுவதைகூட அதிக மாக விஷயமறிந்திருக்கிறார் என்று தெரிகிறது."

மன்னன் ஆமோதிக்கும் வகையில் தலையசைத்தான். "அவரிடமிருந்து விஷயத்தை வரவழைப்போமா?" என்று வினவினான்.

"குருநாதரைத் தங்களுக்குத் தெரியாதா? இஷ்ட மில்லாததைச் சொல்லமாட்டார். அவரைத் தொட்டாலும் மக்கள் நம்மைச் சும்மா விடமாட்டார்கள்," என்றார் முதலமைச்சர்.

"வேறு வழி?" மன்னன் குரல் கவலையுடன் ஒலித்தது.

"அவர் நிபந்தனைக்குட்பட்டு அவரை நமது பக்கம் இழுக்க வேண்டும்," என்றார் முதலமைச்சர்.

மன்னன் சிறிது நேரம் சிந்தனையில் இறங்கினான். பிறகு குருநாதனையும் சயன அறைக்கு வரவழைத்து எதிரிலிருந்து மஞ்சத்தில் உட்காரச் சொல்லி முதலமைச்சர் முன்பாக அவர் ஒத்துழைப்பை நாடினான்.

ஒத்துழைக்கக் குருநாதன் ஒப்புக்கொண்டான் மூன்று நிபந்தனைகளின் மேல். அந்த மூன்று நிபந்தனைகளும் வேப்பங்காயாகயிருந்தன வீரரவியின் இதயத்துக்கு.

## அத்தியாயம் 42

# இரகசிய உத்தரவுகள்

பரலிமாநகரத்தின் கீழ்ப்புறத்தில் பெரிதாக எழுந்திருந்த பெருமலையுச்சியுடன் போட்டி போடுவது போலிருந்த அரண்மனை ஆஸ்தான மண்டபச் சிகரத்தின் நேர் பின்புறத்தில், அந்தப்புரப் பகுதியின் ஆரம்பத்திலிருந்த மன்னன் சயன அறை மிகப் பெரிதாக மந்திராலோசனைக் குரிய பல வசதிகளுடனுமிருந்ததன்றி, அங்கிருந்த சாளரங் களும் நகரின் பல பகுதிகளையும் பார்க்கும் வகையில் மிகப் பக்குவமாகப் பொருத்தப்பட்டிருந்தன. ஆஸ்தான மண்டபம் அந்த அறையை 'முன்புறத்தில் மறைத்தாலும், சாளரமொன்று ஈசானிய மூலையில் அமைக்கப்பட்டிருந்த தால் அதன் மூலம் மலைச்சிகரம் ஆஸ்தான மண்டபத்தின் உச்சி இரண்டையுமே பார்க்க முடிந்தது. அந்த அறையை அடுத்த மேற்புறத் தாழ்வரைக்கும் முன்பாகவே சுவரில் பெரும் சாளரங்களிருந்ததாலும், சயன அறை இருந்த பகுதி அந்தப்புரத்தின் மற்ற பகுதிகளைவிடச் சற்று உயரமா யிருந்ததாலும், சாளரங்கள் மூலம் மேலைக் கடல் வெகு நன்றாகத் தெரிந்தது. மன்னன் பஞ்சணை ஈசானிய மூலைச் சாளரங்களும் கடற்புறச் சாளரங்களும் தெரியும்படி சற்று வசதியுடன் அமைக்கப்பட்டிருந்ததால் பஞ்சணையில் சாய்ந்தபடியே மன்னன் பரலியின் இருபகுதிகளிலும் கண்ணைச் செலுத்த முடிந்தது. அது மன்னன் தனி சயன அறையாதலால் மன்னன் பஞ்சணையைத் தவிர வேறு இரண்டு மூன்று மஞ்சங்களும் பெரிய தீபங்கள் இரண்டுமே அவ்வறையில் காணப்பட்டன. தவிர சயன அறையில் சாதாரணமாகக் காணப்படாத வாட்களும் வேல்களும், இரும்புக் கவசங்களும் சுவர்களில் அமர்ந்திருந்தன.

மன்னன் ராணிகளின் மாளிகைகளுக்குச் செல்லாத நாட்களில் அந்த அறையில் தான் சயனிப்பது வழக்கமென்பதையும், திடீரென இரவில் ஆயுதமும் மாறு வேஷமும் தரித்து வெளியில் செல்வது வழக்க மென்பதையும் அறிந்திருந்த முதலமைச்சரும் பரத பட்டனும் அறையின் அமைப்பைப் பற்றிச் சிறிதளவும் வியப்பைக் காட்டாமல் மன்னனின் கவலை தோய்ந்த முகத்தைப் பார்த்துக்கொண்டு நின்றனர்.

மன்னன் கண்கள் அன்று கடற்புறத்தையே நோக்கிக் கொண்டிருந்தன. மேலைக் கடல் அன்று பார்ப்பதற்கு மிக லாவண்யமாயிருந்தது. அதில் விளையாடிய கதிரவன் கதிர் களும், விளையாடுவதுபோல் அலைகளில் எழுந்து எழுந்து தாழ்ந்து கொண்டிருந்த நாவாய்கள் இரண்டும், கண்ணைக் கவரும்படியாகவே இருந்தன. தூரப் பார்வைக்கு அந்த மரக் கலங்கள் மிகச் சிறிய படகுகளைப் போல் தென்பட்ட தாலேயே அழகு மிகுந்து நின்ற போதிலும், சாதாரணமாக அழகை ரசிக்கும் ஆற்றலுடைய சேரமன்னன் கண்கள் அன்று அந்த ஆற்றலை இழந்து நின்றன. சிந்தையின் கவலை கண்களின் பார்வையை அர்த்தமற்றதாகச் செய்திருந்தன.

மன்னன் மனோநிலையை உணர்ந்த முதலமைச்சர் மௌனம் சாதித்தாலும் பரதபட்டன் மட்டும் மன்னனைத் தேற்றும் வகையில், "மன்னா! ஆபத்து அணுகும்போது அறி வாளிகள் கவலையை உதறி விடுகிறார்கள். ஆகவேண்டிய தைக் கவனிக்கிறார்கள்" என்றான்.

முதலமைச்சர் ஏதும் பேசவில்லையென்றாலும், குரு நாதன் சொன்னதை ஆமோதிப்பதுபோல் தலையை மட்டும் அசைத்தார். மன்னன் இருவர்மீதும் கண்களைச் சிறிது நேரம் ஓட்டினான். பிறகு சாய்ந்த நிலையிலிருந்து பஞ்சணையில் நன்றாக எழுந்து உட்கார்ந்து கொண்டான். பிறகு குருநாதனை நோக்கி, "மீதிக் கடற்படை இன்று எப்படியும் வந்துவிடும்" என்று கூறினான்.

குருநாதன் ஆசனத்தில் அமர்ந்தபடியே சொன்னான்; "இத்தனை நேரம் வந்திருக்கும்," என்று.



மன்னன் மீண்டும் கடல் பகுதியில் கண்களை ஓட்டினான். "வந்ததற்கு அறிகுறிகளைக் காணோம்," என்றான். "அறிகுறிகள் தெரியக் காரணம் இல்லை," என்ற பரதபட்டன் குரல் உணர்ச்சியற்றுக் கிடந்தது.

முதலமைச்சர் புரிந்துகொண்டதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தார். அதைக் கண்ட மன்னன், "என்ன புரிந்துவிட்டது உமக்கு?" என்று சீறினான்.

"குருநாதர் சொன்னது உண்மையென்று," என்றார் முதலமைச்சர் வணக்கத்துடன்.

"குருநாதர் சொன்னதில் என்ன பொருளைக் கண்டு விட்டீர்?" மன்னன் குரலில் ஆத்திரம் ஒலித்தது.

"இங்கிருந்து கடல் தெரியும்! ஆனால் கடலோர மாளிகைச் சிகரங்கள் மறைக்காத கடற்பகுதி மட்டுமே தெரியும். அவற்றால் மறைக்கப்படும் துறைமுகம் தெரியாது," என்றார் முதலமைச்சர்.

"உம்" உறுமினான் சேரமன்னன்.

"அதனால் கடற்படை துறைமுகத்துக்குள் வந்திருந் தால் இங்கிருந்து மன்னர் பார்க்கவும் முடியாது, கேட்கவும் முடியாது,"

"கேட்கவும் முடியாதா?"

"ஆம். வெற்றியுடன் திரும்பும் கடற்படை துறைமுகத் திற்குள் புகும்போது சீர்வாணங்களைக் கொளுத்தும். எரியம்புகளை ஆகாயத்தில் வீசும். அவற்றைக் காணும் மக்கள் ஆரவாரிப்பார்கள். கூச்சல் ஒரு காதத்துக்குக் காதைப் பிளக்கும். பத்துக் கப்பல்களைப் பறிகொடுத்து வரும் கடற்படை சந்தடியின்றித்தான் நுழையும். அது நுழைந்த மாதிரியிலிருந்தே கடலோரக் குடிமக்கள் விஷயத்தை ஊகித்து விடுவார்களாதலால்..." முதலமைச்சர் அத்துடன் நிறுத்திக் கொண்டார். அவர் உரையை முடிக்க அவசியமில்லாது போயிற்று.

மன்னன் பெருமூச்செறிந்தான். அந்தச் சங்கட நிலையிலிருந்து குருநாதனே மன்னனை விடுவித்தான்.

"இப்பொழுதும் குடிமுழுகிப் போய் விடவில்லை. அரசு நமது கையில் தானிருக்கிறது. கடற்படையில் பெரும் பகுதியும் தலைநகரப் படை முழுவதும் நமது கையில் தானிருக்கின்றன. எதிரியைக் கண்டு நடுங்க அப்படி அவசியம் ஏதுமில்லை" என்றான் குருநாதன்.

அரசன் முகத்தில் கவலை வேகமாக வீசியது. சற்று நிமிர்ந்து குருநாதனை நோக்கி, "குருநாதரே! இத்தனை இக்கட்டான நிலையில் சேரநாடு என்றும் சிக்கியதில்லை." என்றான்.

"இக்கட்டைக் கண்டு அஞ்சவில்லை உன் முன்னோர்கள். இமயவரம்பன் குலத்திலுதித்தவன் இந்த இடைஞ்சலைக் கண்டு அஞ்சுவதில் அர்த்தமில்லை" என்று பதில் கூறினான் குருநாதன்.

மன்னன் பஞ்சணையில் நகர்ந்து முகப்புக்கு வந்து காலைத் தொங்கவிட்டுக் கொண்டான். "எதிரி மிகத் தந்திரசாலியாயிருக்கிறான்," என்று சுட்டிக் காட்டினான் வீரரவி.

"தந்திரம் அவனுக்கும் மட்டும் சொந்தமில்லை," என்ற குருநாதர் விஷமச் சிரிப்புச் சிரித்தான்.

"அந்த விஷயத்தில் குருநாதரைத் தோற்கடிக்க ஆயிரம் பாண்டியர்களாலும் முடியாது," என்று முதலமைச்சர் பாராட்டினார்.

பரதபட்டன் அந்தப் பாராட்டுதலை லட்சியம் செய்யாமல் மன்னனை நோக்கிக் கேட்டான், "இப்பொழுது என்ன செய்வதாக உத்தேசம்?" என்று.

"தலைநகரை நோக்கி எதிரி வருவதாக நீங்களே சொன்னீர்களே?" என்றான் வீரரவி.

"ஆம்."

"ஆகவே நகரத்தைக் காக்க ஏற்பாடு செய்ய வேண்டும்."

"செய்ய வேண்டிய ஏற்பாடுகளையும் ஏற்கெனவே சொன்னேனே."



"ஆம், ஆம். சொன்னீர்கள்."

இந்தச் சமயத்தில் முதலமைச்சர் சற்று வியப்பைக் காட்டினார். "என்ன சொன்னீர்கள் குருநாதரே?" என்று வினவவும் செய்தார்.

குருநாதன் பதில் சொல்லு முன்பு மன்னனே பதில் சொன்னான். "கடற்படை எதுவும் துறைமுகத்தை விட்டு அசையக்கூடாது என்று சொன்னார். நகரத்தில் படையைப் போருக்குச் சித்தமாக வைக்கச் சொன்னார். மேற்குப்புறக் கோட்டை வாசலில் விற்கூடங்களை ஏற்றி வைக்கும்படியும் கூறினார்" என்று.

முதலமைச்சர் முகத்தில் வியப்பு மேலும் விரிந்தது. "நீங்கள் அப்படி ஏதும் உத்தரவிடவில்லையே?" என்றும் வினவினான்.

மன்னன் சிறிது நேரம் பதில் கூறவில்லை. பிறகு முதலமைச்சரை நோக்கி, "குருநாதர் ஒத்துழைப்பு நமக்குப் பூரணமாயிருந்தாலொழிய நாம் அந்த உத்தரவுகளைப் பிறப்பிப்பதில் பயனில்லை" என்றான்.

முதலமைச்சர் அதற்குப் பதில் கேள்வியொன்றை வீசினார், "குருநாதரைவிட சேர நாட்டை நேசிப்பவர் யார்? அவர் ஒத்துழைப்பு ஏனிருக்காது நமக்கு?" என்று.

"கடந்த நிகழ்ச்சிகள் ஒத்துழைப்புக்கு அத்தாட்சிகளாயில்லை" என்றான் மன்னன்.

முதலமைச்சர் சற்று தைரியத்துடன், "நீங்கள் காரணமின்றிச் சிறையிலடைப்பவர்களெல்லாம் உங்களுடன் ஒத்துழைக்க வேண்டுமென்று நினைக்கிறீர்களா?" என்று வினவினார்.

முதலமைச்சரைச் சுட்டுவிடுவது போல் பார்த்தான் வீரரவி. "செண்டுவெளியில் சேரவீரனை மாய்த்தது, எதிரியைக் காத்தது, என்மீது ஜனங்களுக்கு வெறுப்புண்டாக்க புரட்சி ஓலை வீசியது, இவை எல்லாவற்றையும் எந்த மன்னனாவது பொறுப்பானா?" என்று வினவினான் உதய மார்த்தாண்டவர்மன்.

முதலமைச்சர் பதில் சொல்ல வாயெடுத்தார். அவரைப் பேசவொட்டாமல் தடுத்த பரதபட்டன், “அரச விரோதத்தை அரசன் சகிக்க முடியாதது போல் அதர்மத்தை பட்டர் குலத்தில் பிறந்த எவனும் சகிக்க மாட்டான். செண்டுவெளியில் எதிரியைத் தனிக்குத் தனி போராடிக் கொன்றிருந்தால் நான் இடைபுகுந்திருக்க மாட்டேன். உப்பரிகைக் கூரையின் மறைவில் வீரனொருவனை நிற்க வைத்து ஈட்டி எறிந்து திருட்டுத்தனமாகக் கொல்ல முயன்றது வீரன் செய்யத் தகாத வேலை. வீரரவி என்று பெயர் வைத்திருக்கும் நீ, பெருஞ்சோற்றுதியன் சேரலாதன், பல்யானை செல்குழுகுட்டுவன் ஆகிய வீராதி வீரர்கள் குலத்தில் உதித்த நீ, தர்மத்தை ஆதரித்த மகான்கள் குலத்தில் உதித்த நீ, அத்தகைய கேவலச் செய்கையில் ஈடுபடத் துணிந்ததை இந்தப் பரதபட்டன் எப்படிப் பொறுக்க முடியும்? பட்டத்தை உடன்பிறந்தானுக்குத் தரக் காவியேற்ற கர்ம வீரன் இளங்கோ பிறந்த வம்சத்தில் பிறந்தவன் காமப் பித்தால் எதிரியின் மகளைக் கள்ளத்தனமாகக் கவர்ந்துவந்ததைக் கண்ணியமுள்ள எவன் சகிக்க முடியும்?” என்று கேள்வியின் மேல் கேள்வியாக அடுக்கினான்.

இதற்கு மன்னன் பதில் கூறவில்லை. சற்றுத் தயங்கிக் கேட்டான், “உங்கள் ஒத்துழைப்பு சேரநாட்டுக்கு உண்டா இல்லையா?” என்று.

“உண்டு. மூன்று நிபந்தனைகளை நீ ஒப்புக் கொண்டால்.”

“என்ன நிபந்தனைகள் அவை?”

“நான் ஏற்கனவே சொன்னபடி இந்நகரத்தில் கடற்படை, நிலப்படை இரண்டும் என் உத்தரவுப்படி நடக்க வேண்டும்...”

“இது முதல் நிபந்தனை.”

“ஆம். இரண்டாவதாக இந்திரபானு எங்கிருந்தாலும் அரண்மனைக்கு வந்து சரணடைய வேண்டியதாக முரசறைவிக்க வேண்டும்.”



“மூன்றாவதாக முத்துக்குமரியை என்னிடம் ஒப்படைத்து விடவேண்டும். அவள் என் அறையைவிட்டு எக்காரணத்தைக் கொண்டும் அகலக் கூடாது.”

“இதுதான் மூன்றாவதா?”

“ஆம்.”

“முதல் இரண்டு நிபந்தனைகளுக்கும் போருக்கும் சம்பந்தமிருக்கிறது. இந்த மூன்றாவது நிபந்தனைக்கும் போருக்கும் என்ன சம்பந்தம்?” என வினவினான் மன்னன்.

“போரின் வித்தே அதுதானே மன்னவா?” என்றான் பரதபட்டன்.

மன்னன் தீர்க்காலோசனையில் இறங்கினான். மூன்று நிபந்தனைகளும் அவன் மூளைக்குப் பேரதிர்ச்சியைத் தந்திருந்தன. ‘மாந்திரீகமும், நடனக் கலையும் போதித்து வரும் குருநாதன் கடற்படையையும் நிலப்படையையும் எப்படி நிர்வகிக்க முடியும்?’ என்று தன்னைக் கேட்டுக் கொண்டான். தவிர முரசறைவித்ததும் தானாக வந்து எதிரியிடம் சிக்கிக் கொள்ள பாண்டியர் உபதலைவனான இந்திரபானு முட்டாளா என்றும் வினவிக் கொண்டான். அரண்மனையில் சகலமும் தன் கண் பார்வையிலிருக்க முத்துக்குமரியைக் குருநாதன் அறைக்கு அனுப்பிவிட்டால் என்ன பெரிய வித்தியாசம் ஏற்பட்டுவிடும் என்றும் சிந்தித்தான். வேறு ஒரு சிந்தனையும் அவன் சித்தத்தே எழுந்தது. படை நடத்திப் பழக்கமில்லாத குருநாதன் கண்டபடி உத்தரவுகளைப் பிறப்பித்துப் போரைக் குழப்பிவிட்டால் பரலிமா நகரின் கதி அதோகதியாகிவிடுமே என்ற கிலி அவனைப் பெரிதும் வாட்டியதால் பதிலேதும் சொல்லாமல் இருந்தான்.

அந்தச் சந்தேகத்தை ஊகித்த பரதபட்டன் சொன்னான். “உன் படைத்தலைவர்களை விடப் படையைத் திறம்பட நடத்த எனக்குத் தெரியும். இந்திரபானு சரணடையவேண்டியது என் இஷ்டமென்றால் அவன் சரணடையாதிருக்க முடியாது. அவன் பிற்கால ஜீவிதம் என் கையிலிருக்கிறது. முத்துக்குமரி என்னிடம்

ஒப்படைக்கப்பட்டால் அது வெகு சீக்கிரம் மக்களிடையே பரவும். மக்களிடையே பரவினால் இந்நகரத்தில் பரவி நிற்கும் பாண்டிய ஒற்றர்களிடமும் பரவும். பாண்டியனுக்கு இது இரண்டு நாட்களில் தெரிந்துவிடும். அவன் சற்று நிதானிக்கவும் செய்வான்." இதைச் சொன்ன பரதபட்டன் குரலில் உறுதியிருந்தது.

வீரரவி பஞ்சணையில் இருந்து குதித்துத் தரையில் நின்றான். "கடற்படையையும் நிலப்படையையும் நடத்த எங்கு பயின்றீர்?" என்று வினவினான்.

"இங்கு!" என்று தன் தலையை லேசாகத் தட்டிக் காட்டினான் குருநாதன்.

"மூளை போதுமா இதற்கு?" என்று இகழ்ச்சியுடன் கேட்டான் மன்னன்.

"மற்றது போதாது என்று நிரூபிக்கப்பட்டு விட்டதால் இது போதும் என்று நினைக்கிறேன்," என்றான் குருநாதன் இகழ்ச்சியுடன். அத்துடன், "பெரும் படைப்பயிற்சி உள்ளவர்கள் கோட்டாற்றுக் கரையிலும் கடலிலும் சாதித்ததைப் பார்த்தேன்'' என்று கூறி இகழ்ச்சிப் புன்முறுவலும் கோட்டினான்.

சேரநாட்டுக் காவலனுக்கும் குருநாதனுக்கும் நடந்த அந்தச் சொற்போரில் முதலமைச்சர் சம்பந்தப்படாமல் ஒதுங்கி நின்றார். நீண்ட நேரம் மன்னன் ஏதோ சிந்தித்தான். முடிவில் குருநாதனுக்கு மறுநாள் பதில் கூறுவதாகக் கூறி அவனை அனுப்பினான். குருநாதன் சென்ற பிறகு சேனாதிபதியை அனுப்புமாறு உத்தரவிட்டு முதலமைச்சரையும் அனுப்பினான். சற்று நேரத்திற்கெல்லாம் வந்த சேனாதிபதிக்கு சில ரகசிய உத்தரவுகளைப் பிறப்பித்தான் வீரரவி.



அத்தியாயம் 43

# இரு பெரும் சக்திகள்

அரசனால் அவசரமாக அழைக்கப்பட்ட சேனாதிபதி அழைக்க வந்த காவலன் அரசன் சயன அறைப் பக்கம் திரும்பியதுமே சிறிது வியப்படைந்தானென்றால், அந்த அறைக்குள் நுழைந்த மன்னன் எதிரில் நின்றதும் அவன் வியப்பு உச்ச நிலைக்குச் சென்றது. அவன் வந்த போது மன்னன் பஞ்சணையில் உட்கார்ந்தேயிருந்தானென்றாலும் அவன் கண்கள் மட்டும் மேலைக்கடலை நோக்கி வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்ததைப் பார்த்துப் பிரமித்த சேனாதிபதி, 'மன்னருக்கு விஷயம் தெரியும் போலிருக்கிறது,' என்று தனக்குள்ளேயே சொல்லி கொண்டான்.

அந்தப் பிரமிப்பையும் தூக்கியெறியும் தினுசில் அமைந்த அரசன் கேள்வி சேனாதிபதியை அடியோடு அசர வைத்தது. "மீதிக் கடற்படை எப்பொழுது வந்தது துறை முகத்துக்கு?" என்று வினவினான் மன்னன் சேனாதிபதியை ஏறிட்டு நோக்காமலும் கடலிலிருந்து கண்ணை எடுக்காமலும்.

சேனாதிபதி பிரமித்தான், தயங்கினான். தடுமாறினான். "ஒரு ஜாமத்திற்கு முன்பு..." என்று குளறவும் செய்தான்.

"உடனே ஏன் என்னிடம் சொல்லவில்லை?" என்று கேட்டான் மன்னன் உள்ளிருந்த கோபத்தைச் சிறிதளவும் வெளிக்குக் காட்டாமல்.

“மன்னர் ஆஸ்தான அறைக்கு வந்தபின் சொல்வது தான் மரபு. சயன அறைக்கு வர யாருக்கும் அனுமதி கிடையாது” என்றான் சேனாதிபதி மிக அடக்கமாக.

மன்னன் கடலிலிருந்து கண்களை நீக்கி அவற்றைச் சேனாதிபதிமீது நிலைக்கவிட்டு, “சம்பிரதாயங்களைக் கை விட மாட்டீர் போலிருக்கிறது?” என்று வினவினான்.

“எப்படி விட முடியும்?” நீண்ட கால சம்பிரதாயம்...” என்றான் சேனாபதி.

“விடமுடியாது, விடமுடியாது, என்றான் மன்னன்.

“மன்னன் அடியவன் கூறுவதை ஒப்புக்கொள்வா ரென்பது எனக்குத் தெரியும்,” என்றான் சேனாதிபதி.

“இதை எப்படி ஒப்புக் கொள்ளாதிருக்க முடியும்? சம்பிரதாயமாயிற்றே?”

“ஆம்.”

“எப்பொழுதும் அதை விட்டு விடவேண்டாம்.”

“ஒருக்காலும் விடமாட்டேன்.”

“எதிரி தலைநகரில் புகுந்துவிட்டாலும் விடாதேயும். சம்பிரதாயத்தையும் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளும். எதிரி தலைநகரைப் பிடித்துக் கொள்ளட்டும்.”

அப்பொழுதுதான் மன்னன் தன்னை இகழ்ந்து பேசுகிறானென்பதைப் புரிந்துகொண்ட சேனாதிபதி, “மன்னவா!” என்று ஆட்சேபக் குரல் எழுப்பினான்.

மன்னன் இகழ்ச்சி மேலும் ஒலித்தது. “சேனாதிபதி! அவரவர்களுக்கு வேண்டியதை அவரவர்கள் பிடித்துக் கொள்ளுகிறார்கள். எதிரிக்கு வேண்டியது தலைநகர். உமக்கு வேண்டியது சம்பிரதாயம். குருநாதருக்கு வேண்டியது அதிகாரம்,” என்ற மன்னன், “எனக்கு வேண்டியது என்ன என்பதுதான் யாருக்கும் புரிய வில்லை,” என்று சலித்துக் கொண்டான்.

சேனாதிபதி மெல்லச் சலிப்பை அகற்ற முயன்று, “ஏன் புரியவில்லை?” என்று கூறினான்.

“என்ன புரிந்துவிட்டது?” என்று கேட்டான் மன்னன்.



“மன்னருக்கு வேண்டுவதெல்லாம் அவர் வசமேயிருக் கிறது,” என்று இழுத்தான் சேனாதிபதி.

“என்ன இருக்கிறது?”

“தமிழகத்தின் சிறந்த அரசு.”

“உம்.”

“சிறந்த தலைநகர்”

“ஊம்”

“பாண்டியர் முத்து...”

“உம்”

“பாண்டியன் மகள்...”

“உம்”

அதற்கு மேல் சொல்ல ஏதுமில்லாததால் மௌன மாய் நின்றான் சேனாதிபதி. “ஏன் நிறுத்திவிட்டீர்? உம்மைப் போன்ற சேனாதிபதி, குருநாதரைப் போன்ற சேரர் குலபக்தர், இவற்றையும் சேர்த்துக் கொள்ளலாமே?” என்று கேட்ட மன்னன் சேனாதிபதியைப் பரம இகழ்ச்சி யுடன் நோக்கினான்.

சேனாதிபதி மன்னன் மனோநிலையை உணர்ந்ததால் பதிலேதும் சொல்லவில்லை. மன்னனே பேசட்டுமென்று மௌனம் சாதித்தான். வீரரவி மேலும் கேட்டான், “ஏன் சேனாதிபதி! நீர் முன்பு சொன்னீரே நான்கு விஷயங்கள்... அரசு, தலைநகர், முத்து, பாண்டியன் மகள்... இவை என் னிடமிருப்பதில் ஆட்சேபணையில்லையே உமக்கு?” என்று.

“மன்னவா!” சேனாதிபதி அச்சக் குரல் எழுப் பினான். அதில் வியப்பும் கலந்திருந்தது.

மன்னன் சேனாதிபதியின் முகத்தில் விரிந்த உணர்ச்சி களைச் சர்வ சாதாரணமாகக் கவனித்துவிட்டுச் சொன்னான், “சிலருக்கு ஆட்சேபணையிருப்பதால், உம் கருத்து என்ன வென்று கேட்டேன்.” என்று.

“அரசர் கருத்துக்கு மாறுபடுவது அரசர் துரோகமல் லவா?” என்று சேனாதிபதி நடுக்கத்துடன் சொன்னான்.

“சிலர் அப்படி நினைக்கவில்லை.”

"யார்?"

"குருநாதர்."

"ஆம் ஆம்."

"முத்தும் பாண்டிய குமாரியும் என்னிடமிருப்பது தவறென்று நினைக்கிறார்."

இதற்குச் சேனாதிபதி பதிலேதும் சொல்லவில்லை. அவன் மௌனத்தைக் கண்ட மன்னன் கேட்டான், "குரு நாதர் கருத்தில் உமக்கும் உடன்பாடு உண்டா?" என்று.

சேனாதிபதி இப்படியுமில்லாமல், அப்படியு மில்லாமல் பதில் சொன்னான்; "மன்னரின் சொந்த விஷயத்தில் கருத்துக் கொள்வதோ, யோசனை கூறுவதோ சேனாதிபதியின் கடமையல்ல..."

"அது யார் கடமையோ?" என்று வினவினான் மன்னன்.

"மன்னரின் சொந்த நடவடிக்கைகள் நாட்டைப் பாதிப்பதானால், அதுபற்றித் தலையிட வேண்டியவர் முதலமைச்சர். படைகளை நடத்தி நாட்டைப் பாதுகாப்பது ஒன்று தான் சேனாதிபதியின் கடமை; அதில் மன்னர் கருத்துக்கும் என் கருத்துக்கும் முரண்பாடிருந்தால் சொல்லத் தவற மாட்டேன்" என்றான் சேனாதிபதி.

சேனாதிபதியின் சாமர்த்தியத்தை உள்ளூர வியந்து கொண்ட வீரரவி, "உமது பதவியை வேறு யாராவது மேற் கொள்ள விரும்பினால் என்ன செய்வீர்?" என்று கேட்டான்.

"முன்பு செய்தது போல் செய்வேன்," என்றான் சேனாதிபதி.

"முன்பா?"

"ஆம். சிங்கணனைப் படைகளை நடத்திச் செல்ல நியமித்தபோது."

"ஆம், ஆம். முதலில் எதிர்த்தீர்..."

"பிறகு பணிந்துவிட்டேன் அரசர் விருப்பம் தெரிந்த பிறகு... ஆனால்..."



"ஆனால் என்ன?"

"சிங்கணனும் அதிகம் ஏதும் சாதித்து விட்டதாகத் தெரியவில்லை."

"சாதிக்கவில்லையென்று எப்படித் தெரியும்?"

"கோட்டாற்றுக்கரையில் நாம் எதிர்பார்த்தபடி அவன் அபரிமித வெற்றியடைந்திருந்தால் வீரபாண்டியன் சரணடைந்து சிங்கணன் கையில் சிக்கியிருந்தால், சேரநாட்டு வடக்குப் பாதைகளில் எதிரி கெடுபிடியும், சஞ்சாரமும் இவ்வளவிருக்காது. ஆனால் இது என் ஊகம்தான். சிங்கணன் சாமர்த்தியம் மன்னருக்குத் தெரியுமாதலால் அதைப்பற்றி எதிர்த்துக் கூறுவது சரியாகாது."

மன்னன் நன்றாகப் புரிந்து கொண்டான் சேனாதிபதி தன்னைப் பார்த்து நகைக்கிறானென்று. இருப்பினும் சிறிதளவும் கோபத்தைக் காட்டாமல், "நடந்தது இருக்கட்டும். நடக்கப் போவதைக் கவனிப்போம். மீண்டும் உமது பதவிக்குப் போட்டி வந்திருக்கிறது," என்றான் வீரரவி.

சேனாதிபதி இகழ்ச்சிப் புன்முறுவல் செய்து, "இம் முறை அது யாரோ?" என்று வினவினான்.

மன்னன் மெள்ளத்தான் பதில் சொன்னான். ஆனால் அதைக் கேட்ட சேனாதிபதி பதில் சொல்ல நா எழாமல் நின்றான். "குருநாதர்!" என்ற மன்னன் சொல் ஏதோ மின்னல் தாக்குவதுபோல் அவன் புத்தியைத் தாக்கியதால் நிலைகுலைந்து நின்றான் சேனாதிபதி.

"என்ன திகைக்கிறீர் சேனாதிபதி?" என்று வினவினான் மன்னன் புன்முறுவலுடன்.

"ஒன்றுமில்லை. குருநாதர் படைகளை நடத்தப் போவதாகக் கூறுகிறீர்கள்..." என்று முணுமுணுத்தான் சேனாதிபதி.

"நடத்தப் போவதாக யார் சொன்னது?" என்று கேட்டான் மன்னன்.

"நீங்கள்தானே சொன்னீர்கள்?"

"அது குருநாதர் விருப்பம் என்று சொன்னேன்."

"அப்படியானால் தங்கள்..."

"விருப்பம் அதுவல்ல..."

"மன்னா!"

"தவிர, ஒரு முறை செய்த தவறை இரண்டாம் முறை செய்ய நான் விரும்பவில்லை."

"அப்படியானால் குருநாதர் கோபிப்பாரே!"

"அங்குதான் நமது ராஜதந்திரம் வேலை செய்ய வேண்டும்," என்ற மன்னன் மேலும் விளக்க முற்பட்டான்; "சேனாதிபதி, நாடு மிக இக்கட்டான நிலையில் இருக்கிறது, எதிரி நம் தலைநகரை நோக்கி வருகிறான். கடற்படை பத்துக் கப்பல்களைப் பலி கொடுத்துவிட்டுத் துறை முகத்தில் வந்து நிற்கிறது. கோட்டாற்றுக்கரை நிலை மர்ம மாயிருக்கிறது. தலைநகரத்தில் எதிரி ஒற்றர்கள் நடமாட்டம் மிக அதிகமாயிருக்கிறது. அவர்களில் ஒருவன் நேற்றிரவு பாண்டியகுமாரியின் அறைக்கு வந்து போயிருக்கிறான். ஆகவே, நிலைமை என்னவென்பதை நான் விளக்கத் தேவையில்லை; இந்த நிலையில் மக்களால் விரும்பப்படும் குருநாதரைச் சிறையில் வைத்திருப்பது அபாயம். ஆனால் குருநாதரை முற்றிலும் நம்பவும் முடியாது. கடந்த கால நிகழ்ச்சிகள் அவரிடம் எனக்கு நம்பிக்கையூட்டவில்லை. எதிரியிடம் அவருக்குப் பாசமிருக்கிறது. எதிரி மகளுக்கு நம்மிடம் ஏதும் ஆபத்தில்லையென்றாலும் நாட்டைக் காப்பதைவிட அவளைக் காப்பதில் முனைந்திருக்கிறார் குருநாதர். இந்த நிலையில் அவர் ஒத்துழைப்பை நாடினேன். அதற்கு அவர் மூன்று நிபந்தனைகள் கூறுகிறார்." இந்த இடத்தில் மன்னன் சிறிது நிதானித்து, சேனாதிபதியை நோக்கினான்.

சேனாதிபதி உணர்ச்சியற்ற வறண்ட குரலில் கேட்டான், "என்ன நிபந்தனைகள் அவை?" என்று.

"நிலப்படை கடற்படை இரண்டும் அவர் சொற்படி இயங்க வேண்டுமாம். இந்திரபானு உடனடியாகச் சரணடைய முரசறைவிக்க வேண்டுமாம். முத்துக்குமரியை அவர் வசம் ஒப்படைக்க வேண்டுமாம்" என்று பதில் கூறினான் மன்னன்.



"என்ன பதில் கூறினீர்கள் குருநாதருக்கு?"

"நாளை பதில் கூறுவதாகச் சொல்லியிருக்கிறேன்."

"என்ன பதில் கூறப் போகிறீர்கள்?"

"அதைப்பற்றி உமது கருத்தைக் கேட்கவே உம்மை அழைத்தேன்" என்ற மன்னன், "சேனாதிபதி! எனது படைகளுக்கு நீர் தலைவர். உமதிஷ்டப்படிதான் முடிவு செய்யப் போகிறேன். நீர் என்ன சொல்கிறீர்?" என்று மன்னன் வினவியதன்றி, சேனாதிபதியின் முகத்தைக்கூர்ந்து நோக்கவும் செய்தான்.

மன்னன் தன்மீது பொறுப்பைத் தள்ளுவதைச் சேனாதிபதி உணர்ந்தான். குருநாதர் யோசனையை ஏற்க வேண்டாமென்று சொல்லும் பட்சத்தில் மக்கள் விரோதம் தனக்கு ஏற்படும் என்பதை நன்றாக உணர்ந்துகொண்ட சேனாதிபதி, என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் திகைத்தான் சில வினாடிகள். பிறகு சாதுர்யமாகச் சொன்னான் , "என் கருத்து எதுவானாலும் அது மன்னர் கருத்துக்கு எதிராயிருக்காது. ஆகவே மன்னர் உள்ளத்தைத் திறந்தால் அதன் படி நடப்பது அடியவன் கடமை," என்று.

சேனாதிபதி தன்னைவிட ஒரு படி மிஞ்சி, கோலத்துக்குள் நுழைவதைக் கண்ட மன்னன் புன்முறுவல் செய்தான். "உமது கஷ்டம் புரிகிறது எனக்கு. சரி, நானே சொல்கிறேன், கேளும், நாம் குருநாதரைத் தற்சமயம் விரோதித்துக் கொள்ள முடியாது. ஆகவே, அவர் நிபந்தனைகளுக்கு ஒப்புக்கொள்ள வேண்டியது..." என்று மன்னன் மெள்ளத் தனது உள்ளத்தைத் திறந்தான்.

"சரி மன்னவா" என்றான் சேனாதிபதி.

மன்னன் புன்முறுவல் விரிந்தது. உள்ளத்தில் கள்ளத்தனமும் அந்த முறுவலில் துலங்கியது. "குருநாதர் சொற்படி அவரே நிலப்படைக்கும், கடற்படைக்கும் தலைவராயிருக்கட்டும். அவர் சொற்படி படைகள் தலைநகரின் தற்காப்புக்கு நிறுத்தப்படட்டும். அவர் இஷ்டப்படி

இந்திரபானுவைச் சரணடைய முரசும் அறிவிப்போம். இந்திரபானு சரணடையாவிட்டல் குருநாதர் அந்தத் தோல்வியிலேயே மனமுடைந்து போவார். இல்லையேல், மக்களுக்கு அவர்மீதுள்ள மதிப்புக் குறையும். இரண்டும் நமக்கு நல்லது. ஒருவேளை, அவன் முட்டாள்தனமாகச் சரணடைந்தால் வீரனான ஓர் எதிரி நமது கையில் சிக்கி விடுகிறான். இதுவும் நமக்கு அனுகூலம்," என்ற மன்னன் சேனாதிபதியை நோக்கினான்.

"ஆம் ஆம்," என்றான் சேனாதிபதி.

"முத்துக்குமரி குருநாதரிடம் ஒப்படைக்கப் பட்டாலும் தலைநகரில்தானிருக்கிறாள். இந்திரபானு சிறைப்பட்டால் அவளை விடுவிக்கத் துணியும் பெருவீரன் நமது பாதையிலிருந்து அகற்றப்படுகிறான்..." என்று சுட்டிக் காட்டினான் மன்னன்.

சேனாதிபதியின் கண்கள் வியப்பால் மலர்ந்தன. இருப்பினும் ஒரு சந்தேகம் கேட்டான். "ஒருவேளை குரு நாதர் இருவரையும் சேர்த்துத் தப்பவிட்டால்?"

"குருநாதரை நாம் கண்காணித்து வருவோம். அவர் சொற்படி நாம் கேட்டு, அவர் கேட்ட அதிகாரங்களைக் கொடுத்த பின்பும் அவர் நாட்டு எதிரிகள் தப்ப உதவினால், அதுவும் போர் தலைநகரை அணுகிய சமயத்தில் உதவினால், மக்கள் விரோதம் அவருக்கு ஏற்பட்டுவிடும். அப்பொழுது அவர் தலையைச் சீவினாலும் மக்கள் ஆமோதிப்பார்கள்..." என்றான் மன்னன்.

மன்னன் உள்ளத்தின் ஆழமும் தந்திரமும் மெள்ள மெள்ளத் துலங்கவே, சேனாதிபதி மலைப்புடன் பார்த்தான் மன்னனை. "ஒருவேளை அவர் இருவரையும் தப்பவிடவில்லையென்றால்?"

"தப்பிச்செல்ல நாம் துணைபுரிவோம். இவர்கள் தப்பிச் செல்லும்போது அவர்களை நமது இஷ்டப்பட்ட இடத்துக்குச் கடத்திச் செல்ல நமக்கு வாய்ப்பு இருக்கிறதல்லவா?"

"இருக்கிறது."



"அப்போது அவர்கள் தப்பியதன் பொறுப்பைக் குரு நாதர்மீது போடலாம். அதற்காகவும் அவரைத் தண்டிக் கலாம். அப்பொழுதும் அவர்கள் பாண்டியனிடம் போயிருப்பதாகக் குருநாதர் மனப்பால் குடிக்கலாம். ஆனால் அவர்களில் ஒருவர் சேரனிடம் இருப்பார்கள். இன்னொருவர்..."

"இன்னொருவர்?"

மன்னன் பஞ்சணையிலிருந்து எழுந்து தாழ்வரைக்குச் சென்று திரும்பி வந்து, "இன்னொருவர் கடல் பயணம் செய்வார் நாம் குறிப்பிடும் இடத்திற்கு. அவசியமானால் இருவருமே பயணம் செய்வார்கள். ஒரு கப்பலைத் தவிர எல்லாக் கப்பல்களும் இயங்கட்டும் குருநாதர் உத்தரவுப் படி. ஆனால் ஒரு மரக்கலம் துறைமுகத்திலிருந்து கிளம்பி, சற்றுத் தெற்கே வந்து சஞ்சரிக்கட்டும். நாம் சொல்லும் இரவில் செல்லட்டும்," என்றான் ரகசியமாக.

"எங்கு?" சேனாதிபதியின் குரல் ஒலித்தது, பயத்துடன் அரசன் ரகசிய உத்தரவை நோக்கி.

அரசன் குரல் மேலும் ரகசியமாக ஒலித்தது, "சிங்களத்துக்கு," என்று. அத்துடன் நிற்கவில்லை வீரரவியின் உத்தரவு.

"அக்கப்பல் தனிப்படச் செல்லாது," என்றும் கூறினான் மன்னன்.

"வேறு எப்படிச் செல்லும்?" என்று வினவினான் சேனாதிபதி.

"பாண்டியன் மகளையும் தாங்கிச் செல்லும்," என்ற வீரரவி கபடத்துடன் நகைத்து, "வெகு சீக்கிரம் புரிந்து கொள்வார் குருநாதர். குருநாதர் தந்திரத்தை விட வீரரவியின் தந்திரம் பெரிதென்பதை," என்று கூறினான். சேனாதிபதி இதைக் குறித்தே அதிர்ச்சியடைந்தான். ஆனால் இன்னும் அதிர்ச்சியடையும்படியான வேறு இரு உத்தரவுகளையும் மன்னன் பிறப்பித்தான். அன்று மன்னன் அறையிலிருந்து அகன்ற சேனாதிபதியின் உணர்ச்சிகள், விவரிக்கத் தகாததாயிருந்தன. குருநாதர், அரசன் இரண்டு பெரிய சக்திகளுக்கிடையில் தான்சிக்கியிருப்பதை உணர்ந்ததால் அவன் புத்தி பிரமை பிடித்துத் திணறிக் கொண்டிருந்தது.

## அத்தியாயம் 44

# பட்டன் திட்டம்

குருநாதர் நிபந்தனைகளை ஏற்பதுபோல் ஏற்று அவற்றுக்கு நான்கு பக்கத்திலும் தளைகளைக் கட்டிவிடத் தீர்மானித்த மன்னனின் தந்திரத்தையும் அந்தத் தந்திரத்தின் விளைவாகப் பிறப்பித்த உத்தரவுகளையும் நினைத்தே வியப்பும் பிரமிப்பும் அடைந்த சேனாதிபதிக்கு மன்னனின் கடைசி இரு உத்தரவுகள் பேரதிர்ச்சியை அளித்தன. ஆரம்ப உத்தரவுகளைக் கேட்டுக்கொண்டு கிளம்ப முயன்று அறைவாயிலை நோக்கி அடி எடுத்துவைத்த சேனாதிபதியை, "சேனாதிபதி!" என்ற மன்னன் குரல் சற்றே தடுத்ததால் அவன் மீண்டும் திரும்பினான் மன்னனை நோக்கி. மன்னன் சேனாதிபதியை வினவினான் சர்வ சாதாரணத்துடன், "நமது பெரிய ராணி பவனி போகும் வண்டி சரியாயிருக்கிறதா?" என்று.

சேனாதிபதியின் முகத்தில் குழப்பம் தெரிந்தது. "சரியாகத்தானிருக்கும். மன்னர் பவனி ரதமும் சரி; பட்டத்து ராணியார் வண்டி மட்டுமின்றி இளைய ராணியின் வண்டிகூட அடிக்கடி பழுது பார்க்கப் படுகின்றன. ஆகையால் சரியாகத்தானிருக்கும்," என்று விடை கூறினான் சேனாதிபதி.

"அதை ஊகத்தில் விட வேண்டாம். அரண்மனை ரத வேலைக்காரர்களைக் கொண்டு சோதிக்கச் செய்யும். சரியாயில்லாவிட்டால் செப்பனிடச் செய்யும். எப்பொழுதும் பட்டத்துராணி வண்டி நீண்ட பயணத்துக்குத் தகுதியுள்ளதாயிருக்கட்டும்,'' என்று உத்தரவிட்டான் மன்னன்.



இந்த உத்தரவின் காரணத்தை உணராத சேனாதிபதி மேலும் குழப்பமே அடைந்தானென்றாலும் அதை வெளிக்குக் காட்டாமல், "சரி மன்னவா'' என்று பதில் சொன்னான்.

"சாதாரணமாக பவனி வண்டியை இழுக்க அடக்கமாகச் செல்லும் புரவிகளைத்தான் கட்டுவது வழக்கம்" என்று சுட்டிக் காட்டினான் மன்னன்.

"ஆம்!" என்ற சேனாதிபதி மன்னனை நோக்கி விழித்தான்.

"அந்த வழக்கத்தை மாற்றிவிடும்," என்றான் மன்னன் சாதாரணமாக.

"மன்னவா! சேனாதிபதியின் சொல்லில் வியப்பு மிதமிஞ்சி நின்றது.

"என்ன சேனாதிபதி?" என்று வினவினான் மன்னன் சேனாதிபதியின் வியப்பைக் கவனிக்காததுபோல.

"பட்டத்து ராணியார் பவனியில், அதிக வண்டியாட்டம் இல்லாமல் பவனி சொகுசாயிருப்பதற்கே அடக்கமான புரவிகள் அவ்வண்டியில் கட்டப்படுகின்றன," என்று இழுத்தான் சேனாதிபதி.

"இது சொகுசுக்குக் காலமா?" என்று வினவிய வீரரவியின் கேள்வியில் விஷமம் இருந்தது.

"இல்லை."

"போர் தலைநகரை அநேகமாக நெருங்கிவிட்டது."

"ஆம் மன்னவா!"

"ஆகவே ராணியின் பவனிக்கும் காலமில்லை."

"இல்லை, இல்லை."

"ஆகவே வேகமாகச் செல்லக்கூடிய புரவிகளை அந்த வண்டிக்கு ஏற்பாடு செய்து வையும். எந்த நேரத்திலும் இரவானாலும் சரி, பகலானாலும் சரி, அந்த வண்டி புறப்படத் தயாராயிருக்கட்டும். தவிர அதன் திரைச்சீலைகளை மாற்றி, நல்ல கெட்டித் திரைச்சீலைகளை அமைத்து

வையும். அதைக் காவல் புரிந்து செல்ல நான்கு வீரர்கள் எப்பொழுதும் தயாராயிருக்கட்டும்."

மன்னன் உத்தரவைக் கேட்ட சேனாதிபதி அதன் காரணத்தை உள்ளூரப் புரிந்துகொண்டதைக் காட்டும் பாவனையில், "மன்னர் சித்தம். தங்கள் உத்தரவுப்படி ஒரு போர்க் கப்பலைத் தனிப்பட நிறுத்தி வைக்கிறேன். அதை நோக்கிச் செல்ல பவனி வண்டியையும் சித்தமாக வைக்கிறேன். வண்டி செல்லவேண்டிய பாதையையும் நிர்ணயித்து வைக்கிறேன்" என்றான்.

மன்னன் இதழ்களில் புன்முறுவல் விரிந்தது. "சேனாதிபதி! நீர் மிகுந்த அறிவாளி" என்று பாராட்டி னான் அந்த முறுவலுடன்.

"மன்னருக்கு அது ஒரு நாள் புரியும் என்ற நம்பிக்கை உண்டு எனக்கு," என்றான் சேனாதிபதி.

சேனாதிபதியின் குத்தலுக்குக் காரணம் மன்ன னுக்குப் புரிந்தேயிருந்தது. சிங்கணன் சேரர் படைகளுக்குத் தலைமை தாங்கிச் சென்றதை சேனாதிபதி சற்றும் பொறுக்காததால், சமயம் கிடைத்தபோதெல்லாம் அதைச் சுட்டிக் காட்டுகிறானென்பதைப் புரிந்துகொண்ட மன்னன் அதைப்பற்றி விளக்காமல், "சரி சேனாதிபதி! குருநாதர் எங்காவது போகவேண்டுமென்றால் எனது ரதத்தையே அவருக்குக் கொடுத்துவிடும்," என்று மற்றோர் உத்தரவை யும் பிறப்பித்து சேனாதிபதியை அனுப்பிவிட்டான்.

அந்த இரண்டாவது உத்தரவுக்கும் காரணத்தைப் புரிந்துகொண்ட சேனாதிபதி, 'குருநாதருக்கு அரசன் சுதந்திரமளித்தாலும், படைகளை நடத்த அதிகாரமளித்தா லும், அவரை எப்பொழுதும் கண்காணிக்கவும் தனக்கு இஷ்டமானபோது அவரைக் கை கால் அசைக்கவொட்டா மல் செய்யவும் ஏற்பாடு செய்கிறான்,' என்று தனக்குள் சொல்லிக் கொண்டே சென்றான். அப்படிச் சென்ற சேனாதிபதிக்கு ஒரு விஷயம் தெள்ளெனப் புரிந்திருந்தது. அரசன் அந்தச் சமயம் உள்ள விபரீத நிலைமையால் ஏதோ தனக்குச் சாதகமாயிருக்கிறானே தவிர தனது நிலையும்





திடமானதல்லவென்று உணர்ந்திருந்தான் சேனாதிபதி. மன்னனுக்கு எதிலும் உள்ள சந்தேகம் தனது நடவடிக்கை களிலும் இருக்குமென்பதில் சற்றும் ஐயமில்லாததால் அதிக மாகப் பொறுப்பைக் கழிக்காமலும் அதிகமாகப் பொறுப்பை ஏற்காமலும் நடப்பதுதான் விவேகமென்ப தைப் புரிந்து கொண்டான் சேனாதிபதி. இருப்பினும் அரசன் பிறப்பித்த இரகசிய உத்தரவுகள் எந்தக் கஷ்டத்தில் தன்னைக் கொண்டு போய்விடுமோ என்று திகைப்பே அடைந்தான் அவன். அரசன் மிகத் தந்திரமாகச் செய்துள்ள ஏற்பாடுகளைக் குருநாதர் புரிந்துகொண்டால் ஏற்படக்கூடிய விபரீதம் அவனுக்குத் தெரிந்திருந்தது. குரு நாதரும் அப்படியொன்றும் ஏமாந்தவரல்லவென்பதை உணர்ந்திருந்த சேனாதிபதி அரசனுக்கும் குருநாதருக்கு மிடையில் தான் அகப்பட்டுக் கொண்டதை நினைத்துத் தனது விதியை நொந்துகொண்டான். ஆகையால் அந்தச் சிந்தனையிலும் கலக்கத்திலும் அச்சத்திலும் அன்று பொழுதைக் கழித்த சேனாதிபதிக்கு அடுத்த ஒருவார காலம் மன நிம்மதி ஏற்பட்டது.

மன நிம்மதி ஏற்பட்டது சேனாதிபதிக்கு மட்டுமல்ல, அரண்மனையில் வாழ்ந்த அனைவருக்குமே ஏற்பட்டது. மறுநாள் விடியற்காலையிலேயே எழுந்திருந்து காலைக் கடன்களையும் பூசையையும் முடித்துக் கொண்ட வீரரவி உதயமார்த்தாண்டவர்மன் முதலமைச்சரை வரவழைத்துத் தனது மந்திரலோசனை அவையில் சேனாதிபதி, கடற்படைத் தளபதி, குருநாதர் ஆகியவர்களையும் மற்ற மந்திரிகளையும் கூட்டுமாறு உத்தரவிட்டான். அரசன் உத்தரவை நிறைவேற்றச் சென்ற முதலமைச்சர் சுமார் அரை ஜாமத்துக்கெல்லாம் மன்னனைச் சந்தித்து "அனைவரும் தங்களுக்காகக் காத்திருக்கிறார்கள்," என்று அறிவித்தார்.

முதலமைச்சர் தொடர, காவலர் கட்டியங்கூற, பெண் களிருவர் முன்னால் மலர் தூவ, தனது மேலிருந்து சரிகைத் தகடி தரையில் புரள, இடது கையில் வீரகங்கணம் பள

பளக்க, நெற்றியில் தீட்டப்பட்டிருந்த சங்கு வடிவத் திலகம் போருக்கு அறைகூவ மந்திராலோசனை அறையில் நுழைந்த சேரர்பெருமானைக் கண்டதும் அனைவரும் எழுந்து சிரம் தாழ்த்தினர். அவர்களுக்குப் பதில் வணக்கம் செய்து தனது ஆசனத்தில் அமர்ந்த வீரரவி மந்திராலோசனை சபையைக் கண்டு பூரித்தான். சபையில் சுமார் பத்துப் பேர்கள்தானிருந்தார்களென்றாலும் அரசின் பத்துவித உறுப்புகளும் அவர்களில் விரிந்து நிற்பதை மன்னன் உணர்ந்தான். அந்தச் சபையிலிருந்த ஒவ்வொருவரும் ஒவ்வொரு பணியில் சிறந்தவர்களென்பதை உணர்ந்த வீரரவி அந்தச் சமயத்தில் பாண்டியனிடம் உள்ளூர இருந்த பயத்தைக்கூட உதறி விட்டான். ஆகவே மற்றவர்களை அமரச் சொல்லிக் கையமர்த்தி சபை துவங்கலாமென்பதற்கு அறிகுறியாக முதலமைச்சர்மீது கண்களைத் திருப்பினான். முதலமைச்சர் அரசனுக்குப் பின்னால் வெள்ளி மந்திர தண்டங்களுடன் நின்றிருந்த விருது கூறுவோரை நோக்கினான். அடுத்த விநாடி விருது கூறுவோர் கைகளைத் தண்டத்துடன் உயரக் கூப்பி சேரமன்னர்குல தெய்வச் செய்யுளை முணுமுணுத்தார்கள். பிறகு அரசனின் விருதுகளைக் கூறினார்கள். பிறகு அரசன் பின்னாலிருந்து விலகி அறை வாயிலை நோக்கிச் சென்றார்கள். அடுத்த நிமிடம் அறையின் பெருவாயிற் கதவுகள் சப்தமின்றிச் சாத்தப்பட்டன.

கதவுகள் மூடுவதற்கும் முதலமைச்சர் ஆசனத்தை விட்டு எழுவதற்கும் நேரம் சரியாயிருந்தது. "சேரர் குலச் செல்வர் வீரரவி உதயமார்த்தாண்டவர்மர் சபையில் கலந்துகொள்ள விரும்புகிறார். எதிரிகள் அணுக அஞ்சும் இப்பரலி மாநகரை பாண்டியன் படைகள் அணுக இருக்கின்றன. எதிரிக்கு அஞ்சும் நாடல்ல சேரநாடு. எதிரியைக் குறைத்து மதிப்பிடுவதும் இந்நாட்டு வழக்கமல்ல. எதிரி திறமைசாலி. தந்திரசாலியுங்கூட. அத்தகைய பாண்டிய சகோதரர்களை நாடு எதிர்க்க வேண்டியிருக்கிறது. அணுகி வரும் போரைக் கண்டு அஞ்சுவதோ பின்னடைவதோ இமயவரம்பன் குலத்தாரிடம் கிடையாது. அச்சம் என்பது சேரமக்கள் அறியாத சொல். ஆகவே போர்த் தந்திரங்களை



நிர்ணயிக்க இந்தச் சபை கூடியிருக்கிறது," என்று கூறி அமர்ந்தார்.

மன்னனின் கூரிய விழிகள் எதிரே அமர்ந்திருந்த சபையினரை ஒரு விநாடி துழாவின. பிறகு அவன் உதடுகள் தெளிவாகவும் கம்பீரமாகவும் சொற்களை உதிர்த்தன. "நம் நாடு போரைக் கண்டு நாளாகிறது. காரணம், எந்த நாட்டுடனும் நாம் போரை நாடாததுதான். ஆனால் நாம் போரைக் கண்டு அஞ்சுவோமென்று எந்த நாடாவது நினைத்தால் அதைப்போல் அறிவற்ற நினைப்பு எதுவுமில்லை. பாண்டியர்மீது நாம் போர் தொடுக்கவில்லை. பாண்டியர் நம்மீது போர் தொடுத்திருக்கிறார்கள். பாண்டியன் மகளை நாம் கொணர்ந்ததற்காகப் போர் என்று கூறப்படுகிறது. பெண்களைக் கொணர்ந்து ராக்ஷஸ விவாகம் புரிவது க்ஷத்திரிய தர்மம் என தர்மசாத்திரம் கூறுகிறது. பெண்ணை நாம் கொணர்ந்தது உலகத்தின் கண்களில் தவறாகப்படலாம். ஆனால் தர்மத்தின் கண்களுக்கு அது தவறல்ல. தவிர, ஏன் பாண்டியன் பெண்ணைக் கொணர்ந்தோம்? பாண்டியன் ரகசியமாகப் போருக்குச் சித்தமாகிக் கொண்டிருந்தான். முத்துக்களவில் நமக்குச் சம்பந்தமிருப்பதாகப் புரட்டுகளைக் கிளப்பினான். அதை முன்னிட்டு கொற்கைக்குத் தனது தம்பியையும் மகளையும் வேவுத் தொழில் புரிய அனுப்பினான். வேவுகாரர்களை, சேரர் மீது கண்காணிப்பவர்களை, பிடிப்பதும் தண்டிப்பதும் நமது கடமையாயிற்று. அவ்விருவரையும் கொற்கையிலேயே பிடிக்கப் பார்த்தோம். தந்திரத்தால் தப்பிவிட்டார்கள். பிறகு சேரநாட்டு எல்லையருகிலுள்ள கோட்டையில் ரகசியமாகத் தங்கிப் படை திரட்டினார்கள். அங்கு அவர்களைக் கண்காணித்து, நம்மீது வேவு பார்த்த அவர்கள் அரசகுமாரியைத் தந்திரத்தால் கொணர்ந்தோம். அப்பொழுதாவது பாண்டியர்கள் விரோத பாவத்தைக் கைவிட்டுச் சமரசத்தை நாடியிருந்தால், வேவு பார்ப்பதை நிறுத்திக்கொண்டிருந்தால், நாம் அமைதிக்கரத்தை

அவர்களுக்கு நீட்டியிருப்போம். ஆனால் அவர்கள் நாடியது சமரசமல்ல, போர். உடனடியாகப் போர் தொடங்கினார்கள். நமது தலைநகருக்குள் ஒற்றர்களை அனுப்பினார்கள். இன்னும் பாண்டிய ஒற்றர்கள் இங்கு உலாவுகிறார்கள். இந்த நிலையில் நாம் இத்தலைநகரைக் காப்பதைத் தவிர வேறு வழியில்லை. நமது கடற்படையில் பத்துப் போர்க் கப்பல்களை எதிரிகள் அழித்திருக்கிறார்கள். போரிலல்ல. திருடன் வீட்டைக் கொளுத்துவது போல கள்ளத்தனமாகக் கொளுத்தியிருக்கிறார்கள்'' என்ற மன்னன் சிறிது நிதானித்தான்.

சபையில் சிறிது சலசலப்பு ஏற்பட்டது. ஆங்காரத் தொனிகள் கிளம்பின. அவற்றைக் கவனித்தும் கவனிக்காதது போல மன்னன் மேலும் சொன்னான்; "சேர நாடு யானைகள் பெருத்த நாடு. யானை சாதுவானது. ஆனால் இதனுடன் விளையாடுவது ஆபத்து. நிதானமாக இயங்குவது அதன் சுபாவம். ஆனால் நிதானம் மீறிவிட்டால் அதன் வேகத்துக்கும் கோபத்துக்கும் இணை கொடுக்க யாராலும் முடியாது. யானையைப் பாண்டியன் தூண்டுகிறான். அது இப்பொழுது சீற ஆரம்பித்துவிட்டது. இருப்பினும் அது நிதானத்தையும் தர்மத்தையும் இழக்க விரும்பவில்லை. ஆகவே முதலில் இந்தப் போரின் அஸ்திவாரத்தைத் தகர்க்க விரும்புகிறது."

அரசன் மனத்தில் உதித்திருப்பது என்ன என்பது புரியாததால் மந்திரிகள் அவனைச் சற்றுக் குழப்பத்துடன் நோக்கினர்.

மன்னன் விளக்கினான் மெல்ல, "பாண்டிய மகளை நாம் கொணர்ந்தது தவறு, சிறை வைத்திருப்பது தவறு என்று பாண்டியன் கூறுகிறான். வேவுகாரர்களைப் பிடிப்பதோ சிறை வைப்பதோ தவறில்லையென்பது என் கருத்தானாலும் குருநாதர் கருத்து வேறுவிதமாயிருக்கிறது. அது அதர்மம் என்று நினைக்கிறார் குருநாதர் ஆகவே பாண்டியன் மகளை இன்று முதல் அவரிடம் ஒப்படைத்து விடுகிறேன். தவிர, இன்றுள்ள போர் நிலைமையைச்





சமாளிப்பதிலும் அவர் யோசனைப்படி நடக்கத் தீர்மானித்திருக்கிறேன். இன்று முதல் படைகள் அவர் உத்தரவுப்படி இயங்கும்," என்றான் மன்னன்.

முதலமைச்சர், குருநாதன், சேனாதிபதி இம்மூவரைத் தவிர மற்றவர் முகங்களில் வியப்பு விரிந்தது. அந்த வியப்புடன் சற்றுக் கோபமும் கொண்ட கடற்படைத் தளபதி ஆசனத்திலிருந்து எழுந்து, "குருநாதருக்குக் கடற்படைப் பயிற்சி உண்டா? போர்க்கப்பல்களை நடத்தத் தெரியுமா?' என்று வினவினான்.

மன்னன் பதிலுக்குக் குருநாதனை நோக்கினான் குருநாதன் சின்னஞ்சிறு விழிகள் கடற்படைத் தலைவனை அலட்சியத்துடன் நோக்கின. "உமக்கு அவற்றில் பரிச்சயமுண்டு போலிருக்கிறது," என்று வினவினான் விஷமமாக.

"உண்டு. சின்னஞ்சிறு வயது முதற்கொண்டே கடலோடியிருக்கிறேன். இருபது ஆண்டுகளாகக் கடற்படைத் தளபதியாயிருக்கிறேன்," என்றான் கடற்படைத் தளபதி.

"இருந்து நீர் சாதித்தது என்னவோ?" குருநாதன் குரலில் உணர்ச்சி ஏதும் தெரியவில்லை. ஆனால் கண்கள் விஷமத்தைச் சொட்டின.

"சாதனைக்குப் பட்டியல் தர அவசியமல்ல," என்ற கடற்படைத் தலைவன் குரலில் சீற்றமிருந்தது.

"காரணம் தர அவசியமிருக்கிறது."

"எதற்கு?"

"பத்துப் போர்க் கப்பல்கள் எரிந்து போனதற்கு?"

"எதிர்பாராது நடந்தது."

"அதில்தான் அதிகக் குற்றமிருக்கிறது."

"நீங்கள் சொல்வது புரியவில்லை."

"எதிரிக் கப்பல்கள் உமது படைமீது மோதி கப்பல்கள் எரிந்திருந்தால் அது போர் நஷ்டக்கணக்கு. எந்த எதிர்ப்பும் இல்லாதபோது எரிந்திருந்தால் அது கடற்படைத் தலைவன் அஜ்ஞாக்கிரதை, அசிரத்தை. அஜாக்கிரதை மன்னிக்கத் தகுந்த குற்றமல்ல."

கடற்படைத் தலைவன் கண்கள் நெருப்பைக் கக்கின. "நான் கலைத்துறையில் இல்லை. இது நடனமாடும் வேலையுமல்ல," என்றான் மூர்க்கத்தனமாக.

"உண்மை. கலைக்கும் உமக்கும் சம்பந்தமில்லை," என்றான் குருநாதன்.

"இப்பொழுது புரிகிறதா உமக்கு?" என்று வினவினான் கடற்படைத் தலைவன்.

"புரிகிறது. நன்றாகப் புரிகிறது."

"என்ன புரிகிறது?" என்று வினவினான் கடற்படைத் தலைவன்.

"எந்தக் கலைக்கும் உனக்கும் சம்பந்தமில்லையென்று. போரும் ஒரு கலை," என்று குருநாதன் விஷமப் புன்முறுவல் கோட்டினான்.

இந்தச் சொற்போரை நீடிக்கவிடாத மன்னன் இடை புகுந்து, "நமக்குள் சண்டையிட இப்பொழுது அவகாச மில்லை. தலைநகரை எதிர்நோக்கி வரும் பகைவனைச் சமாளிக்கும் வழியைப் பற்றி யோசிப்போம். முதலில் குரு நாதர் யோசனை கூறட்டும்," என்றான்.

குருநாதன் ஆசனத்தைவிட்டு எழுந்திருக்கவில்லை. உடனடியாக யோசனையும் கூறவில்லை. தீர்க்காலோசனை யில் இறங்கி நீண்டநேரம் மௌனம் சாதித்தான். அந்த மௌனம் உடைந்தபோது சொற்கள் உதிர்ந்தன. தனது போர்த் திட்டத்தை மெள்ள மெள்ள விவரித்தான் பரத பட்டன். அந்தத் திட்டம் விரிய விரிய மன்னன் விழிகளும் மந்திரியின் விழிகளும் படைத்தலைவர்கள் விழிகளும் வியப்பால் மலர்ந்தன. ஒரு கட்டத்தில் அவர்கள் நெஞ்சம் கூடத் திடுக்கிட்டது. நெஞ்சம் அஞ்சும் திட்டத்தைத் தீட்டினான் பட்டன் அவர்கள் மனக்கண்களுக்கெதிரே.

அத்தியாயம் 45

# அதிகார பீடத்தில் பரதபட்டன்

நீண்ட நேரம் சித்தனை வசப்பட்டு மௌனம் சாதித்த பிறகு தனது போர்த் திட்டத்தை விவரிக்க முற்பட்ட குருநாதனின் சின்னஞ்சிறிய தீட்சண்யமான கண்கள் மந்திராலோசனை சபையில் கூடியிருந்த யாரையுமே பார்க்கவில்லை. வெறித்து எங்கேயோ பார்த்துக்கொண்டிருந்த கண்கள் அடுத்து வரவிருந்த யுத்த பூமியையே பார்ப்பதுபோலிருந்தன. உதடுகள் சொப்பனத்திலிருப்பவன் உதடுகளைப் போல அசைந்து சொற்களை உதிர்த்தன. அப்படி, உதிர்க்கப்பட்ட சொற்களில் உறுதியும், ஓர் அழுத்தமும், எடுத்ததைச் சாதிக்க வல்லவனின் திட்டமும்கூடக் காணப்பட்டன. சிந்தனையால் வெறித்த கண்கள், உணர்ச்சியால் சிவந்த முகம், உறுதியால் திறந்த உத்டுகள், இவற்றிலிருந்து பிறந்த திட்டத்தை விளங்கிய சொற்கள் மெள்ள மெள்ள ஆரம் பத்தில் உதிர்ந்தாலும் நிமிடங்கள் ஓட ஓட அதிவேகத்தைப் பெற்றன.

பரதபட்டன் சொன்னான்; "இந்தச் சபையில் நானி ருக்கத் தகுதியற்றவன் என்பதை உணருகிறேன். இங்கு இருக்கவேண்டியவர்கள் மந்திரிகள், பிரதானிகள், படைத் தலைவர்கள் ஆகிய போர் நுணுக்கம் தெரிந்தவர்கள். போர் அனுபவமுள்ளவர்களுக்கே ஏற்பட்டது போர். மந்திரா லோசனைசபை. ஆனால் எத்தகைய அறிவும் தர்மத்துக்கு உட்பட்டது. அந்தத் தர்மம் நம்மிடம் இல்லை. பாண்டியன் குமரியைக் கொணர்ந்ததற்கும், முத்தை அள்ளி வந்ததற்கும் மன்னன் கூறும் காரணங்களை நான் ஒப்பவில்லை. க்ஷத்திரியர்களுக்கு கந்தர்வ ராக்ஷஸ விவாகங்களைச்

சாத்திரம் அனுமதிப்பது உண்மை. ஆனால் எந்த நிலையில் அவை நடைபெறலாம் என்ற நிபந்தனைகளையும் சாத்திரம் கூறியிருக்கிறது. இஷ்டமில்லாத பெண்ணைத் தூக்கிவர, நிர்ப்பந்திக்க, சாத்திரம் இடங்கொடுக்கவில்லை. பாண்டியன்மீது படையெடுத்து நாடு பிடித்துச் சூறையாடி முத்துக்குவியலைக் கைப்பற்றலாம் ஆனால் அதல்ல நாம் செய்தது, மன்னனைக் குறை கூற நான் இவற்றைச் சொல்ல வில்லை. நாடு நலம் பெறவும், மன்னன் நீண்ட, சிறப்பான ஆட்சி பெறவும் அறத்தின் அஸ்திவாரம் தேவை; போர் வெற்றிக்கும் அது அவசியம். அந்த அறத்தை முதலில் நாம் ஸ்தாபிக்க வேண்டும். பாண்டின் மகள் சிறைவாசியல்ல என்பதை உறுதி செய்ய வேண்டும். இந்த உறுதியும் உறுதியால் முத்துக்குமரியின் வாழ்வில் ஏற்படக் கூடிய சுதந்திரமும் நமக்கு அறத்தின் அஸ்திவாரத்தைத் தரும். அந்த அஸ்திவாரத்தில் நாம் போரை அமைப்போம். ஆகவே எனது முதல் ஏற்பாடு முத்துக்குமரியை என் ஆதரவில் வைத்துக் கொள்வது. இது தரும் பலம் அதிகம். முத்துக்குமரி இங்கு குருநாதனிடம் இருக்கிறாளென்றால் அது மக்களுக்குத் தெரியும். மக்களுக்குத் தெரிந்தால் பாண்டியன் ஒற்றர்களுக்குத் தெரியும்; ஒற்றர்களுக்கு தெரிந்தால் பாண்டியனுக்கே தெரியும். பாண்டியனுக்குப் பிறகு தூது அனுப்புவோம்..."

இங்கு இடைமறித்தான் சேனாதிபதி, "என்ன தூது?" என்று.

குருநாதன், அவனை ஏறெடுத்துப் பார்க்கவில்லை. வெறித்தபார்வை வெறித்தேயிருக்கக் கூறினான், "உன் மகளை நீ அழைத்துப் போகலாம். போரை நிறுத்தினால் கைவசமிருக்கும் முத்தும் உன்னிடம் ஒப்படைக்கப்படும்," என்று.

"அவன் போரை நிறுத்த இஷ்டப்படாவிட்டால்? சேர மன்னன் சரணாகதியை எதிர்பார்த்தால்?" என்று எழுந்தது முதலமைச்சர் கேள்வி.

"அப்பொழுது கூறுவோம் கடைசி சேரவீரன் உயிருட னிருக்கும்வரை சேர நாடு போர் புரியும் என்று. அதுமட்டு



மல்ல, பாண்டியன் பின்வாங்க அவசியம் வரும்போது அவன் படையில் கால்வாசிகூடப் பாக்கியிருக்காது என்றும் சொல்லுவோம். அதுமட்டுமல்ல, போரின் வித்து நீக்கப் பட்டபின்பும், அதாவது முத்துக்குமரியை நாம் ஒப்படைக்க ஒப்புக்கொண்ட பின்பும், அவன் போராட விரும்பினால் அவன் போர் வெறியன் என்பதைப் பரப்புவோம். பத்தினித் தெய்வத்தின் நாடான இச்சேரநாடு இன்று முத்துக் குமரியின் களவையும் சிறையிருத்தலையும் வெறுக்கிறது. அந்தச் சிறையிருப்பு இல்லையென்றால் முத்துக்குமரியை ஒப்படைக்க நாம் முற்பட்ட பின்பும் பாண்டியன் நாட்டை அழிக்க எண்ணுகிறானென்றால், இந்நாட்டு மக்கள் கொதித்து எழுவார்கள். அந்தப் பிரளய அக்னியிலிருந்து பாண்டியன் தப்ப முடியாது. மக்கள் ஆதரவுடனிருக்கும் மன்னன் சக்தி அளவிட முடியாதது. ஆகையால் பாண்டியன் போரை விரும்பினால், நாம் அவனுக்குப் போரை அளிப்போம். அவன் இதுவரை கண்டிராத போரைக் காணுவான். அவனை நாம் இந்தத் தலைநகரி லேயே சந்திப்போம்," என்றான் பரதபட்டன்.

"ஏன் தலைநகரில்? வெளியே சென்று சந்தித்தா லென்ன?" என்று வினவினார் முதலமைச்சர்.

பரதபட்டன் பதில் சொன்னான்; "முதலமைச்சரே! பாண்டியனின் எரிபரந்தெடுத்தலுக்கு காரணம் அவன் பலவீனம். பெரிய படை அவனிடமில்லை. ஆகவே பயிர் பச்சைகளை எரித்து மக்களை இத்தலைநகருக்கு விரட்டி, இங்கு கும்பலை அதிகரித்து, நமது நடமாட்டத்தை நெருக்கி இங்கும் எரியம்புகளை வீசி ஊரைக் கொளுத்தப் பார்க் கிறான். அதை நாம் அனுமதிக்கப் போவதில்லை. முதலில் நமக்கு கிழக்கு மதிளுக்கு எதிரேயுள்ள காட்டுப் பகுதியின் முகப்பை அழித்துவிடப் போகிறோம்."

இதைக் கேட்டதும் சபையினர் திக்பிரமை அடைந்தார்கள். சிலர் ஆட்சேபக் குரலும் கிளப்பினார்கள். "தவறு தவறு, பெருந்தவறு," என்று கூவினார் ஒரு மந்திரி.

"நமது முக்கிய அரணை அழிப்பது எதிரிக்கு வரவேற் பளிப்பதாகும்" என்றார் இன்னொரு மந்திரி.

குருநாதன் தனது கண்களை அவர்கள்மீது திருப்பினான். ஆனால் பதில் சொல்லவில்லை. பதில் சொல்லத் துவங்கு முன்பு சேனாதிபதி முந்திக்கொண்டு, "காட்டை நாம் அழிக்காத காரணம்? குருநாதருக்குப் புரிய வில்லை. அவர் போர்ப் பழக்கமில்லாதவரல்லவா?" என்றான்.

குருநாதர் இதழ்கள் இகழ்ச்சியால் மடிந்தன. "போர்ப் பழக்கமுள்ள உமது காரணத்தை நான் அறியலாமா?" என்று வினவினான்.

"அறியலாம். தமிழகத்தில் கோட்டைகளின் முகப்பில் காடுகளை வைத்திருப்பதற்குக் காரணம் எதிரியின் ஆயுத வண்டிகள் கோட்டையை அணுக முடியாதிருப்பதற்காக. நெருக்கமாக மரங்களிருக்கும் பகுதியில் ஆயுத வண்டிகள் நுழையவே முடியாது. ஆகவே கோட்டைகளைத் தாக்க முயலும் எதிரியின் புரவிப் படையும் காலாட்படையும் மட்டுமே கோட்டையிடம் வரும், அவற்றைக் கோட்டை மீதுள்ள விற்கூடங்கள் சமாளிக்கும். இந்தப் பாதுகாப்பு இல்லையேல் பெரும் ஆயுதவண்டிகளைக் கொண்டுவந்து நிறுத்தி எதிரி தூரத்திலிருந்தே நம்மீது ஆயுதமழை பொழி வான்," என்று கூறிய சேனாதிபதி மந்தகாசம் செய்தான்.

"அப்படியா!" என்ற குருநாதன் கேள்வியில் இகழ்ச்சி பெரிதும் ஒலித்தது.

"ஆம்," என்றான் சேனாதிபதி மிடுக்குடன்.

"எதிரியிடம் ஆயுத வண்டிகள் அதிகமா?" என்று வினவினான் பட்டன்.

சேனாதிபதி சற்று நிதானித்து விட்டுச் சொன்னான்; "அதிகமில்லை. அவர்கள் படையே சிறியதுதானே?" என்று.

"அப்படி ஆயுத வண்டிகள் அதிகமில்லையென்றால் அவற்றைத் தடை செய்யக் காடுகள் எதற்கு?" என்று வினவினான் பரதபட்டன்.

சேனாதிபதியின் பதில் பட்டென்று வந்தது. "இந்த ஒரு எதிரியை மட்டும் எதிர்பார்த்து அரண்கள் நிர்மாணிக்கப்படவில்லை," என்றான் சேனாதிபதி.



"இப்பொழுது தலைநகரைத் தாக்கவரும் எதிரியைச் சமாளிப்போமா அல்லது இனிமேல் என்றாவது வரக்கூடிய எதிரிக்குத் திட்டம் தயாரிப்போமா?" என்று வினவினான் பரதபட்டன்.

இதற்குச் சேனாதிபதி உடனடியாகப் பதில் சொல லாமல் தயங்கினான். பரதபட்டனே கூறினான்; "இன்று நகரை நோக்கி மிகத் தந்திரசாலியான எதிரி வருகிறான். அவனிடம் ஆயுத வண்டிகள் இல்லை. படையும் சிறியது தான். ஆனால் திறமையான படை. அவர்கள் போர்த் தந்திரத்தால் கோட்டாற்றுக்கரை என்ன ஆயிற்றென்று தெரியவில்லை. போர்க் கப்பல்கள் பத்து எரிந்துவிட்டன. அவன் படை தங்கு தடையின்றி நகரை நோக்கி வருகிறது. ஆகவே காட்டைக் கட்டிக் கொண்டு நாம் திண்டாடுவதில் பயனில்லை. தவிர காடு முழுமையும் அழிக்கும்படி நான் கூறவில்லை. முகப்புப் பகுதியை மட்டும் அழித்துவிட்டால் கோட்டைச் சுவருக்கும் காட்டுக்கும் இடையே திறந்த வெளி ஏற்படும். எதிரி மறைந்து நின்று எரியம்புகளை வீச முடியாத நிலையில் காடு இருக்கும். ஆகவே, எதிரிப்படை திறந்தவெளிக்கு வந்தே கோட்டைமீது எரியம்புகளையும் வேல்களையும் வீச முடியும். எதிரிப் படை திறந்த வெளிக் குள் நுழைந்தவுடனேயே நமது கோட்டைச் சுவர் யந்திரங் கள் இயங்கும். வேல்களும் அம்புகளும் எதிரிப் படையின் மீது புயலெனப் பாயும். புரவிகள் மாண்டு விழும். வீரர்கள் கோட்டையை நெருங்கு முன்பு மடிந்து விடுவார்கள். நமக்குக் கோட்டைச் சுவரின் மறைவு பாதுகாப்பு. எதிரிக்குக் காட்டு முகப்பின் மறைவு பாதுகாப்பு. அந்த மறைவை அழித்துவிட்டால் எதிரி மறைந்து நின்று போர் செய்ய முடியாது. பகிரங்கத்தில் போர் செய்ய அவனிடம் படைபலம் கிடையாது. நாம் மறைந்து நின்று போரிடலாம். நமது படை பலமும் மிக அதிகம்."

இதைக் கேட்ட சபையினர் திக்பிரமை கொண்டனர். பரதபட்டனின் நுண்ணிய போர் அறிவு அவர்களைத் திகைக்க வைத்தது. மன்னன் விழிகள் மகிழ்ச்சியால்

மலர்ந்தன. சேனாதிபதி வாயைப் பிளந்தான் வியப்பின் மிகுதியால்.

இவை எதையுமே கவனிக்காமல் பரதபட்டன் மேலும் சொன்னான்; "இப்படித் தலைநகரின் கிழக்குப் பகுதியில் எதிரியின் வசதியை நீக்கி விடுவோம். அவன் ஒரு வேளை கடற்புறத்தில் வர முயலலாம். அதையும் நாம் தடை செய்வோம்," என்று.

இங்கு. இடைமறித்த கடற்படைத் தளபதி, "எதிரியிடம் கடற்படை ஏது கடற்புறத்தில் வர?" என்று வினவினான்.

"எதிரி மலைப்புறமாக வந்திருப்பதால் அவர்கள் கடற்படை இங்கு வரவில்லையென்பதை இந்த நகரத்தில் குழந்தைகள்கூட அறியும். கடற்புறமென்று சொன்னது தலைநகரின் மேற்குப் புறத்தைச் சொன்னேன்," என்றான் குருநாதன்.

"மேற்குப் புறத்தில் பாதையொன்று கடலோரம் இருக்கிறது. அந்த வழியில் வரக்கூடிய படை கோட்டாற்றுக் கரையிலுள்ள வீரபாண்டியன் படைதான். வீரபாண்டியன் படை சரியாயிருந்தால் கொல்லம் துறைமுகத்தை அடைந்து அங்கிருந்து கடலோரமாகவே வரலாம். ஆனால் அப்படை சரணடைந்து விட்டது..." என்றான் கடற்படைத் தலைவன்.

"அது எப்படி அத்தனை திட்டமாகத் தெரியும்?" என்று வினவினான் குருநாதன்.

"சிங்கணன் ஓலை, வீரபாண்டியன் ஒப்பந்தம்..." என்று துவங்கிய கடற்படைத் தலைவனைக் கையசைத்து அடக்கி விட்ட குருநாதன், "அந்தக் கதையை நாம் கேட்டு விட்டோம். ஓலை கொண்டு வந்து ஓடிவிட்ட தூதர்கள் செய்கையும், அதை அடுத்து நமது போர்க் கப்பல்கள் எரிந்த நிகழ்ச்சியும் வீரபாண்டியன் சரணாகதியை நிரூபிக்கவில்லை. கோட்டாற்றுக்கரை பற்றி நமக்குச் சரியான தகவல் கிடைக்கும்வரை அது பிடிபடவில்லையென்று வைத்துக்கொண்டு திட்டம் வகுப்போம். பிடிபட்டிருந்தாலும் எதுவும் நஷ்டமில்லை. மேல் திசையில் நமது எச்சரிக்கை அனாவசியமாயிருக்கலாம். அனாவசிய அலட்சியத்தைவிட அனாவசிய எச்சரிக்கை, நல்லது" என்ற குருநாதன், "ஆகவே நமது துறைமுகத்தை விட்டு கடற்படை நகர வேண்டாம். எல்லாப் போர்க் கப்பல்களும் வரிசையாக அரணமைத்து நிற்கட்டும். தவிர இனிமேல் பாண்டியன் எரிபரந்தெடுத்தலால் வெளியிலிருந்து வரும் கிராம மக்களையும் நகரத்தைவிட்டுத் தெற்குப்புறக் கிராமங்களுக்கு அனுப்ப வேண்டாம்" என்றும் கூறினான்.





சேனாதிபதியின் வியப்பு எல்லை கடந்தது, "என்ன, என்ன சொன்னீர்கள்?" என்று வினவினான் அவன்.

"மக்களைத் தெற்குக் கிராமங்களுக்கு அனுப்ப வேண்டாமென்று சொன்னேன்," என்றான் பரதபட்டன் தெளிவாக.

"வேறெங்கே அனுப்புவது? நகரத்தில் கும்பலை அதிகரிப்பதா?" என்று சீறினான் சேனாதிபதி.

"நகரத்துக்குள் வந்ததும் மக்களைக் கடற்கரையோரம் அனுப்புங்கள். அப்படியே கடற்கரையோரமாக வடக்கு நோக்கிச் செல்லும் பாதைகளில் நிரப்புங்கள். சுந்தர பாண்டியன் எரிபரந்தெடுத்தலால் நகரத்தின் கிழக்கு வாசல் வழியாக மலைப்பாதை மூலம் வரும் மக்கள் கூட்டம் மேற்கு வாசலுக்குச் சென்று மறுபடியும் வடக்கு நோக்கிக் கடலோரப் பாதையில் நிரம்பும். அப்படி நிரம்பினால் கோட்டாற்றுக் கரையிலிருந்து கடற்கரையோரம் வரக்கூடிய வீரபாண்டியன் படைக்கு மக்கள் கூட்டம் பெரும் இடைஞ்சலாயிருக்கும். படை வேகமாக வரமுடியாது. ஆகவே சுந்தர பாண்டியன் அனுப்பும் மக்கள் கூட்டத்தை அவன் தம்பிக்கு இடைஞ்சலாகத் திருப்புவது அனுகூலம்," என்றான் குருநாதன்.

"நன்றுநன்று" என்று கொண்டாடினார் முதலமைச்சர்.

மன்னனும் பாராட்டுதலுக்கறிகுறியாகத் தலையசைத்தான்.

பரதபட்டன் மேலும் சொன்னான்: "இப்படி இரு புறத்திலும் எதிரிக்கு மிகப் பாதகமான நிலையை

பரதபட்டனை உபயோகப்படுத்திக் கொண்டு சமயத்தில் அவன் அதிகாரத்தைக் கத்தரித்துவிட முடிவும் கட்டினான் மன்னன். ஆனால் அந்த எண்ணத்தை யாரிடமும வெளியிடவில்லை அவன்.

அன்று மாலை, சேனாதிபதி மன்னனைச் சயன அறையில் சந்தித்த போது மன்னன் முறுவலுடன் அவனை வரவேற்றான். சேனாதிபதியின் முகத்தில் முறுவலில்லை. முகத்திலும் சந்துஷ்டியில்லை. வேதனை நிரம்பிக் கிடந்த முகத்துடன் மன்னனுக்குத் தலைவணங்கிய சேனாதிபதி படபடப்புடன் பேசினான்: "இன்று பிற்பகலில் குருநாதர் தமது அறைக்கு என்னையும் கடற்படைத் தலைவரையும் அழைத்துப் பல உத்தரவுகளைப் பிறப்பித்திருக்கிறார். முதலமைச்சருக்கும் கட்டளைகள் பிறப்பிக்கப்பட்டிருக் கின்றன. சாதாரண காலத்தில் மன்னர் இடவேண்டிய உத்தரவுகள் அவை" என்ற சேனாதிபதியை வியப்பைக் கக்கும் விழிகளுடன் பார்த்தான் வீரரவி.

ஆனால் சேனாதிபதி முகத்தில் வியப்பு ஏதுமில்லை. வெறுப்பு இருந்தது. "உத்தரவுகளும் விபரீதமாயிருக்கின்றன. கோட்டைமீது விற்பொறிகளை ஏற்றுவதோடு கடற்படை மீதும் விற்பொறிகளை ஏற்றும் பழக்கமில்லை என்று கடற் படைத் தலைவர் எதிர்த்தும் குருநாதர் கேட்கவில்லை. கடற் படையோரம் அனுப்பச் சொன்ன கிராம மக்களுக்கும் போர்க் கலங்களைக் கொடுக்கச் சொல்லியிருக்கிறார். போர்ப் பயிற்சி இல்லாத சாதாரண மக்களிடம் ஆயுதங்கள் கொடுப்பதன் பொருள் எனக்குப் புரியவில்லை" என்று கூறிய சேனாதிபதி, "மன்னவா! இன்னொரு விஷயமும் இருக்கிறது. எல்லாவற்றையும்விட முதலமைச்சருக்கு இடப்பட்டிருக்கும் உத்தரவு மிக விபரீதம்" என்று சொல்லி, பெருமூச்சு விட்டான்.

அந்தச் சமயத்தில் உள்ளே நுழைந்த முதலமைச்சர் முகம் பார்க்கத்தகாததாயிருந்தது. முதலமைச்சர் கவிழ்ந்த தலையுடன் தனக்குக் கிடைத்த உத்தரவைத் தெரிவித்தார். "மக்கள் சாதாரணக் காலத்தில் நடமாடுவதுபோல் நடமாடவும் கலை களியாட்டங்களைத் தடையின்றி நடத்தவும் அனுமதிக்க உத்தரவிட்டிருக்கிறார் குருநாதர்" என்றார் முதலமைச்சர் ரத்தினச் சுருக்கமாக.



இப்படிச் சேனாதிபதிக்கும், முதலமைச்சருக்கும் அடுக்கிய விபரீத உத்தரவுகளைக் கேட்ட மன்னன் நீண்ட நேரம் சிந்தனையில் இறங்கினான். முடிவில், "குருநாதர் உத்தரவுகளை நிறைவேற்றுங்கள்" என்று எதிரே நின்ற இருவருக்கும் பணித்தான்.

குருநாதர் உத்தரவுகளை சேனாதிபதியும் முதலமைச் சரும் நிறைவேற்ற விரும்பவில்லையென்பதை உணர்ந்த மன்னன் மனம் ஆறுதலடைந்தது. வெகு சீக்கிரம் இந்த வெறுப்பு மக்களிடையேயும் பரவும் என்று அவன் உணர்ந்திருந்ததால் அந்த வெறுப்பைக் காரணமாகக் கொண்டு குருநாதனை அழித்து விடலாமென்று மன்னன் உள்ளூரத் தீர்மானித்துக் கொண்டான்.

அந்த இரண்டு நாட்களில் குருநாதன் யாரும் விரும்பாத உத்தரவுகளை ஒன்றன்பின் ஒன்றாகப் பிறப்பித்தான். அந்த உத்தரவுகளின் விளைவாக, பரலி மாநகர் மக்கள் பெரும் சுதந்திரத்துடன் உலாவ முற்பட்டார்கள். படைத்தலைவன் உத்தரவின் காரணமாக இரவில் முதல் ஜாமத்துடன் மூடப்பட்ட கடைவீதி பழையபடி இரவு முழுவதும் திறந்து கிடந்தது. கேளிக்கைக் கூடங்களில் சதங்கைகள் ஒலித்தன. பரலிமாநகர் போர்க் கோலமிழந்து விழாக்கோலம் கொண்டது. இதை முதலமைச்சர் பட்டனிடம் பிரஸ்தாபித்தபோது, "உண்மையில் இது விழாக் கோலந்தான். பரலிமாநகர் எதிரியிடம் 'விழா'க் கோலம்" என்று சாதுர்யமாகப் பேசினான்.

குருநாதன் சாதுர்யத்தை முதலமைச்சர் ரசிக்க வில்லை. பெரும் குழப்பமும் அச்சமும் அவர் உள்ளத்தை ஆட்கொண்டிருந்தன. சேனாதிபதியும் குழம்பினான் நகர நிலை கண்டு. அவர்கள் மட்டுமல்ல குழம்பியது. உத்தரவுகள் பலனளிக்கத் தொடங்கிய மூன்றாவது நாளிரவில் கேளிக்கை மண்டபமொன்றில் தூணில் சாய்ந்து கொண்டிருந்த வேறொருவனும் குழம்பினான். "இது எனக்கு அடியோடு புரியவில்லை" என்ற சொற்களையும் உதிர்த்தான் பக்கத்திலிருந்த ஒரு பெண்ணிடம்.

## அத்தியாயம் 45 A

# இரவில் எழுந்த ஒலி

பரலிமா நகரின் பிரதான கேளிக்கை மண்டபமல்ல அது. நகர எல்லைகளில் காட்டுவாசிகளும் நகரவாசிகளும் கலந்து, ஆடல் பாடல் கூத்து இவற்றைக் கண்டு ரசிக்கும் சிறிய கூடங்களில் ஒன்றுதான் அது. இருப்பினும் அந்தக் கேளிக்கைக் கூடத்தின் ஆடலரங்கு சம்பிரதாயத்துக்குச் சிறிதும் மாறுபடாமலும் மிகச் சிறப்பாகவும் அமைந்திருந்தது. நடனமாடுபவர் புகவும் வெளிவரவும் வாயில்கள் உடையதாய் நால்வகை வருணராகிய வச்சிரதேகன், வச்சிர தந்தன், வருணன், இரத்தகேசுரன் ஆகிய பூதருடைய தூண்கள் பெற்றதாய், நிலை விளக்குகள் உளதாய், இடத்தூணிடத்தே உருவு திரையாகிய ஒருமுக எழினியும், இரண்டு வலத் தூண்களிடத்தும் உருவு திரையாகிய பொருமுக எழினியும், மேற்கட்டுத் திரையாகக் காத்துவரல் எழினியும், சித்திர விதானமுடையதாய் சந்திரன், குரு, அங்காரகரை அதிதேவதைகளாகப் பெற்ற வெண்மை, பொன்மை, செம்மையென்னும் முத்துமாலைகள் தொங்க விட்டதாய் அமைந்திருந்த அந்தக் கேளிக்கை மண்டபம் கண்களுக்குப் பெருவிருந்தாகக் காட்சியளித்தது. அந்தச் சிறு கேளிக்கை மண்டபத்தின் சிறப்பைக் காணும் எந்தப் புதுமனிதனும் சேரநாட்டுச் செல்வ வளமும், கலைவளமும் எத்துணை சிறப்பு வாய்ந்தவை என்பதைப் புரிந்து கொள்வான். நகர எல்லையின் சிறுகூடத்துக்கே இந்தச் சிறப்பு உண்டென்றால் மற்றப் பெருங் கூடங்களும்

* அபிதான சிந்தாமணி — ஆ. சிங்கார வேலு முதலியார் இயற்றியது — பக்கம். 122.



அரண்மனை ஆடலரங்கும் எப்படியிருக்கும் என்று நினைத்துப் பிரமை கொள்வான்.

அத்தகைய பிரமையை அன்று அளித்தது ஆடலரங்கு மட்டுமல்ல; அன்று அந்த அரங்கில் நடந்த ஆய்ச்சியர் குரவையும் பிரமிக்கத் தக்கதாகவே இருந்தது. மலையாழத்தின் வழவழத்த மேனியுள்ள அழகுப் பைங்கிளிகள் எழுவர் சேர்த்து கைகோத்துக் கண்ணன் பின்னையை மாலையிட்ட வீரக்கூத்து ஆடினார்கள். முதலில் ஆடல்மாதரை வரிசையாக நிறுத்தி அவர்களுக்குப் பெயர் சூட்டினார்கள்.

17. "மாயவன் என்றாள் குரல்; விறள் வெள்ளை
ஆயவன் என்றாள் இளி தன்னை; ஆய்மகள்
பின்னையாம் என்றாள் ஓர் துத்தை மற்றையள்
முன்னையாம் என்றாள் முறை."

குரலை என்பாளொருத்தி தன்னை மாயவனான கருமை நிறக் கண்ணனாகவும், இளி என்ற இன்னொருத்தி தன்னை வெள்ளை நிறத்தவனான பலராமனாகவும், துத்தை என்பவள் பின்னையாகவும், மற்றவர்கள் கண்ணன் காலத்திலிருந்த ஆயர்குல மாதராகவும் அறிமுகப்படுத்திக் கொண்டபின் முறைப்படி கூத்து துவங்கியது. இசைக் கருவிகள் முழங்கின.

18. "குரல் மந்தம் ஆக, இளி சமன் ஆக
வரன் முறையே, துத்தம் வலியா, உரனிலா
மந்தம் விளரி பிடிப்பாள், அவள் நட்பின்
பின்றையப் பாட்டெடுப்பாள்."

இப்படி மாயவனானவன் குரல் மந்தசுரமாகவும், இளி என்பவள் சமசுரமாகவும், துத்தை ஸ்தானத்திலிருந்தவளின் குரல் வல்லொலியாகவும் ஒலித்தன.

இப்படி பாத்திரத்திற்கு ஏற்ப குரலும் சுருதியும் அமைத்துப் பாடவும் பாட்டிற்கேற்ப ஆடவும் துவங்கிய

* சிலப்பதிகாரம் ஆய்ச்சியர் குரவை 17, 18 என்பது பாட்டுகளைக் குறிக்கும்.

அந்த ஆடலழகிகள் காற்சலங்கைகள் வெகு சீக்கிரம் மண்ட பத்தில் கம்பீரமாகவும் இன்பமாகவும் ஒலித்தன. இசைக் கருவிகளுடன் இணைந்து ஒலித்த அந்தச் சதங்கை ஒலிகளும், வேடத்துக்குத் தகுந்தபடி சுருதி பிடித்து மந்திரத்திலும் ஸ்தாயியிலும் பாடிய குரலோசையும், அவர்கள் அணிந்திருந்த ஆடைகளின் சரசரவொலிகளும் அந்த மண்டபத்தில் மட்டுமின்றி அங்கு குழுமியிருந்த மக்கள் இதயத்திலும் ஒலிக்கவே மக்கள் மெய்ம்மறந்து குரவைக் கூத்தைப் பார்த்தார்கள்.

கைகோத்து மெய்ம்மறந்து ஆடிய அந்த அழகு மாதர் எழுவர் மறை திரையேதும் இல்லாது போயினும் நின்ற இடத்திலேயே பிரிந்தும் கூடியும் கண்ணன் நப்பின்னையின் காதல் கதையை இசைத்து ஆடிக் கொண்டிருந்தார்கள். அங்கு மண்டபத்தில் ஆயர்பாடியே வந்திருந்தது. பார்க்க வந்தவர்கள்கூட ஆயர்களாகவும் ஆய்ச்சியர்களாகவும் மாறி ஆர்ப்பரித்தார்கள். சில நாட்களாக இத்தகைய களியாட்டங்கள் நிறுத்தப்பட்டிருந்தமையால் இன்று ஆடியவர்களிடமும் வெறியிருந்தது. பார்த்தவர்களிடமும் வெறியிருந்தது. ஆடியவர்கள் சுவானுபவமும் பார்த்த வர்கள் அனுபவமுமாகச் சேர்ந்து பெரு மயக்கமும் கலை வெறியும் அந்தக் கேளிக்கை மணடபத்தில் நிரம்பிக் கிடந்தது.

இத்தனை இன்பத்திலும் ஈடுபடாமல இருவர் மட்டு மிருந்தனர். அந்த இருவரில் ஆண்மகனானவன் மண்டபத் தில் கடைத்தூணின் ஒரு பகுதியில் சாய்ந்து கொண்டிருந்தான். அவன் பக்கத்திலிருந்த பெண், அவனிருந்த இடத்திலிருந்து பத்து விரற்கடையே தள்ளி உட்கார்ந்திருந்ததால் அவளுடன் அந்த ஆண்மகன் சர்வ சகஜமாகப் பேச முடிந்தது. குரவைக் கூத்தின் ஆரவாரத்தில், இசையெழுப்பிய மயக்கத்தில் நடனம் கிளப்பிய உள்ளக் கிளர்ச்சியில் அவ்விருவரையும் யாரும் கவனிக்கச் சந்தர்ப்பமில்லாது போயிற்று. அந்த வாலிபன் கண்கள் கூத்தைப் பார்க்க மறுத்தன. புத்தி கூத்தின்



கதையைச் சிந்திக்க மறுத்தது. சித்தத்தில் விளைந்த பெரும் கவலை அவன் நுதலில் விரிந்து கிடந்தது. "இது எனக்கு அடியோடு புரியவில்லை." என்ற சொற்கள் அவன் வாயிலிருந்து குழப்பத்துடனும் கவலையுடனும் உதிர்ந்தன.

பக்கத்திலிருந்த யுவதியும் தன் அழகிய கண்களைக் குழப்பத்துடன் அவன்மீது திருப்பினாள். "எனக்கும் புரிய வில்லை" என்றாள் அவள்.

வாலிபன் சிறிது நேரம் ஏதோ சிந்தித்தான். பிறகு கேட்டான், "நீ அரண்மனையில்தானே இருக்கிறாய்?" என்று.

"ஆம்," என்றாள் அந்த அழகி.

"நீ இங்கு வந்துபோகச் சுதந்திரமிருப்பது உனக்கு வியப்பாயில்லையா?" என்று அவன் மீண்டும் வினவினான்.

"வியப்பாகத்தானிருக்கிறது. நான் அரண்மனையை விட்டு வெளியே போவதையோ வருவதையோ யாரும் தடுப்பதில்லை" என்று அவள் கூறினாள்.

"இது விசித்திரமாயில்லையா?" என்று கேட்டான் வாலிபன்.

"இங்கு நடக்கும் கூத்தைவிட விசித்திரமில்லை" என்ற அவள், "போர் நகரத்தை நெருங்கிவிட்டது. இருக்கிற போர் சன்னத்தையும் தளர்த்தி நகரத்தில் கேளிக்கையும் கூத்தும் நடக்க அனுமதிப்பதைவிட அரண்மனைப் பணிப் பெண்ணை வெளியே போக விடுவது பெரிய அனர்த்தமா?" என்று வினவவும் செய்தாள்.

"விசித்திரம், பெருவிசித்திரம்" என்ற வாலிபன் உதடுகள், "இத்தனையும் குருநாதர் ஏற்பாடுதானே?" என்று வினவினான்.

"ஆம்."

"இன்னும் என்ன செய்திருக்கிறார் குருநாதர்?" என்ற வாலிபன் மீண்டும் யோசனையில் இறங்கினான். மறுபடியும் கேட்டான். "இத்தனைக்கும் சேரமன்னன் ஒப்புக்கொண்டிருக்கிறானா?" என்று.

"ஆம், கடற்படைத் தலைவர், சேனாதிபதி, அமைச்சர்கள் எல்லாருமே அவர் சொற்படி கேட்கிறார்கள்," என்றாள் அந்த யுவதி.

"அந்த எல்லோரும் நகரப் பாதுகாப்பை உடைத்து விடத் தீர்மானித்திருக்கிறார்களா?" என்று வினவினான் அந்த வாலிபன்.

"அவர்கள் நடவடிக்கையிலிருந்து அப்படித்தான் தெரிகிறது," என்றாள் அவள்.

"இந்த நிலையில் பாண்டிய மன்னருக்கு என்ன செய்தியனுப்ப முடியும் என்று எனக்கு விளங்கவில்லை. குறிஞ்சி. நகரம் பாதுகாப்பிழந்து கோலாகலத்தில் கிடக்கிறது. தாக்குங்கள் என்று செய்தியனுப்புவதா? எனக்கேதும் புரியவில்லை என்று சொல்லியனுப்புவதா? இங்கு நடக்கும் சகலமும் அறிவுக்குப் புறம்பாயிருக்கிறதே?" என்றும் அவன் மெல்லச் சொன்னான்.

"அறிவுக்குப் புறம்பானது மட்டுமல்ல," என்றாள் அந்த யுவதி..

"வேறென்ன?" என்று வினவினான் அவன்.

"நேற்றிலிருந்து கிழக்குக் கோட்டைச் சுவருக்கெதிரி லுள்ள காட்டு முகப்பு மரங்கள் வெட்டப்படுகின்றன," என்று பதில் கூறினாள் அவள்.

மீண்டும் திகைத்தான் அவன். "நானிருக்கும் மறைவிடத்திலிருந்து என்னால் ஏதும் அறியமுடியவில்லை. கோட்டையின் இயற்கை அரணான காடு ஏன் அழிக்கப் படுகிறது? இதைச் சாதாரணமாக நீயே விசாரித்திருக்க லாமே?" என்று கேட்டான் வாலிபன்.

"குருநாதரையே கேட்டேன்," என்றாள அவள்.

"என்ன சொன்னார் அவர்?"

"அரணை அழித்தால்தான் போர் நோக்கம் சேர மன்னனுக்கில்லை என்பது பாண்டிய மன்னருக்குத் தெரியுமாம்."

"தெரிந்து பாண்டிய மன்னன் என்ன செய்வாராம்?"



"சமாதானத்தை நாடுவாராம்?"

"அவர் மகளைச் சிறையெடுத்தவனிடமா?"

"அதையும் கேட்டேன்."

"அதற்கு என்ன பதில் கூறினார் குருநாதர்?"

"இப்பொழுதுதான் பாண்டியன் மகள் சிறையில் இல்லையே?" என்றார்.

"முத்துக் களவைப்பற்றி என்ன சொன்னார்? பாண்டிய மன்னர் மகள் கிடைத்தால் போதுமென்று போரை நிறுத்தி விடுவார் என்று எதிர்பார்க்கிறாரா?"

"எதிர்பார்க்கவில்லையாம். பாண்டியன் புத்திசாலி யானால் போரை நிறுத்தித் தன்னிடம் வந்து அது பற்றி நேரில் பேசுவான் என்கிறார்."

வாலிபன் மேலும் குழம்பினான். "குறிஞ்சி! நீ என்னை மேலும் மேலும் குழப்புகிறாய்," என்று கூறினான் அலுப்புடன்.

"குழப்புவது நானல்ல, குருநாதர்," என்று மறுமொழி கூறிய குறிஞ்சி கேட்டாள் அந்த வாலிபனிடம், "உங்களைச் சரணடையச் சொல்லி மூன்று நாட்களாகிறதே, அதற்கு என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று.

"நான் சரணடைந்தால் சிறையிலிருந்து இம்முறை மீள முடியாது. குருநாதர் சொல்வதை என் ஒருவன் விஷயத்தில் சேரமன்னன் கேட்கமாட்டான்." என்றான்.

"அப்படியானால் சரணடைய உத்தேசமில்லையா?"

"இல்லை," என்றான் இந்திரபானு.

குறிஞ்சி தன் குரலை அவசியத்துக்கு அதிகமாகத் தாழ்த்தினாள். "குருநாதர் ஒரு முக்கிய விஷயம் சொன்னார்" என்று கூறினாள் மிக ரகசியமாக.

இந்திரபானு தன் கூரிய விழிகளைச் சரேலெனத் தூக்கினான். "என்ன அது?" என்று வினவினான்.

"உங்கள் முகம் உண்மையில் மிக அழகாம்..."

"உம்..."

"அதை விகாரமாக்கியது அவர்தானாம்..."

"ஆம்."

"அதைத் திரும்பப் பழைய நிலைக்குக் கொண்டுவர அவரால்தான் முடியுமாம்."

"ஆம்."

"ஆகையால் முகத்தாசையால் நீங்கள் சரணடைவீர்களாம்."

இதைக் கேட்ட இந்திரபானு மெல்ல நகைத்தான். "குருநாதர் இந்திரபானுவை இன்னும் புரிந்து கொள்ளவில்லை. முகத்தாசையல்ல, உயிர் ஆசைகூட வீர பாண்டியனிடமிருந்து இந்திரபானுவைப் பிரிக்கமுடியாது" என்றான் அந்தச் சிரிப்புக்கிடையே. அதைச் சொல்லிக் கொண்டிருக்கையிலேயே திடீரென அவன் கண்கள் என்றுமில்லாதபடி பளிச்சிட்டன. அவன் எதையோ உற்றுக் கேட்பதை முகம் வலியுறுத்தியது. காதுகள் கேட்பது கேளிக்கையின் ஒலிகள் அல்ல; அதையும் மீறி எங்கோ ஒலித்த ஓர் ஓசை. அவன் குறிஞ்சியின் கையை அழுத்திப் பிடித்துக்கொண்டான். "வெளியே வா" என்று அவளிடம் கூறிவிட்டு எழுந்து மெல்ல கூட்டத்தில் திக்குமுக்காடி வெளியே வந்தான். மண்டப வாயிலில் உற்றுக் கேட்டான். அவன் பின்னால் வந்து நின்று கொண்ட குறிஞ்சியை நோக்கி, "குறிஞ்சி! உற்றுக் கேள், உன் காதில் ஏதாவது விழுகிறதா?" என்று.

கேட்டது அவளுக்கும். இரவில் எழுந்த அந்த ஒலி இருவருக்கும் திக்பிரமையை அளித்தது.

## அத்தியாயம் 46

# சரண்

கேளிக்கை மண்டபத்திற்கு வெளியே ஆகாயம் கறுத்துக் கிடந்ததனாலும் மண்டபத்தின் முகப்புச் சர விளக்குகள் வீசிய வெளிச்சத்தில் இந்திரபானுவும் குறிஞ்சியும் ஒருவரையொருவர் நன்றாகப் பார்த்துக் கொள்ள முடிந்தது. பார்த்த அந்த இரு ஜோடிக் கண்களில் பெருத்த திகைப்பும் வியப்பும் கலந்து கிடந்தன. அதிக வீடுகளோ அரவமோ இல்லாத நகரத்தின் வடமேற்கு மூலையிலிருந்த கேளிக்கை மண்டபத்திற்கு அப்பால் மேற்குத் தொடர்ச்சி மலைக்காடும், அதன் சரிவில் நகரத்தின் பெருமதிலும், மதிலை அடுத்துச் சில காவலர் இல்லங்களும், இவற்றிலிருந்து அறவே தள்ளிக் கூத்தர் குடிசைகளும் இருந்தமையாலும், காவலர் மதிலோரம் அரவம் ஏதுமின்றிக் காவல் புரிந்த காரணத்தாலும், கூத்தர் குடிசைகளிலிருந்தோர் கேளிக்கை மண்டபத்துக்கு வந்திருந்தபடியாலும் அந்தப் பகுதியில் மண்டபத்துக் குள்ளிருந்த ஆடலொலியைத் தவிர வேறு அதிக ஒலி ஏதும் இல்லை. அரவம் அதிகமாக இல்லாத அந்த இடத்தில் இரவில் எழுந்த ஒலி மிகத் திட்டமாகவே கேட்டது. குறிஞ்சியும் இந்திரபானுவும் நீண்ட நேரம் அதை நன்றாக உற்றுக் கேட்ட பிறகு இந்திரபானு சொன்னான், "சந்தேகமில்லை" என்று.

மலைமகள் குறிஞ்சி தன் பெருவிழிகளை அவன் மீது திருப்பி, "ஆம், சந்தேகமில்லை," என்று பதில் சொன்னாள் பயமும் வியப்பும் கலந்த குரலில்.

இருவரும் மீண்டும் மௌனம் சாதித்தனர். 'டக் டக்' என்று புரவிக் காலடி ஓசை மிகத் தெளிவாகவும் ஒரே சீராகவும் கேட்டது. அந்த இரவில் அந்த ஓசையை மலைப்பகுதியும் வாங்கி எதிரொலி செய்ததால் அது எந்தப் பகுதியிலிருந்து வருகிறது என்பது மட்டும் விளங்கவில்லை இருவருக்கும். ஆகவே அப்படியும் இப்படியும் காதை மட்டுமின்றி, புத்தியையும் திருப்பிப் பார்த்த அந்த இருவரில் குறிஞ்சி கேட்டாள், "ஒலி கேட்கிறது, ஆனால் எந்தத் திசையிலிருந்து வருகிறது?" என்று.

"எனக்கும் தெரியவில்லை குறிஞ்சி. ஆனால் இது அந்த சாம்பல் நிறப் புரவியின் குளம்பொலிதான். அதை நீயும் பார்த்திருக்கிறாயல்லவா?" என்று வினவினான்.

"பார்த்திருக்கிறேன், ஒரு விசித்திரப் புரவி அது," என்றாள் குறிஞ்சி.

"அதன் அறிவு விவரணத்துக்கு அப்பாற்பட்டது குறிஞ்சி. அவர் இஷ்டத்தை அறிந்து நடக்கும் அது. இப்பொழுது கேட்கும் அதன் குளம்பொலியை அப்புரவி வேண்டுமென்றே கிளப்புகிறது. நமக்கு அது கேட்கவேண்டுமென்பதற்காகவே அது நடக்கிறது," என்று விளக்கினான் இந்திரபானு.

இதைக் கேட்ட குறிஞ்சிக்குக் குதிரைக் குளம்பொலியிலிருந்த சிரத்தை அதிகப்படவே அவள் கேட்டாள், "வேண்டுமென்றே புரவி இப்படி நடக்கிறதா?" என்று.

"ஆம், வீரபாண்டியர் தாம் இத்தலைநகருக்கருகில் வந்து விட்டதை நமக்கு அறிவுறுத்துகிறார், இக் குளம்பொலி மூலம்," என்றான் இந்திரபானு.

குறிஞ்சியால் அதை அடியோடு நம்பமுடியாததால் அவனைச் சந்தேகத்துடன் பார்த்தாள். அந்தச் சந்தேகம் குரலிலும் ஒலிக்கக் கேட்டாள். "நாம் இங்கிருப்பது வீர பாண்டியருக்குத் தெரியுமா?" என்று.

"தெரியாது." சிறிதளவும் சிந்திக்காமலே பதில் சொன்னான் இந்திரபானு.

"பின் எதற்காகக் குளம்பொலியைக் கிளப்புகிறார்?"



"இன்றுதான் இந்த ஒலி முதன்முதலாகக் கிளம்புகிறதா அல்லது நேற்றும் முந்தாநாளுங்கூடக் கிளம்பியிருக்கிறதா என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது குறிஞ்சி. ஆனால் தன்னைச் சேர்ந்தவர்கள் யாராவது மலைச் சாரலின் இந்தப் பகுதியிலிருந்தால் அவர்கள் இந்த ஒலியைப் புரிந்து கொள்வார்களென்பது இளவரசருக்குத் தெரியும். அல்லது பாண்டிய ஒற்றர்கள் நம்மைத் தவிர வேறு யாராவது இந்தப் பகுதியில் இருக்கலாம். அவர்களுக்குத் தாம் அருகிலே இருப்பதைத் தெரியப் படுத்தவும் இளவரசர் இந்தக் காட்டுப் பகுதியில் புரவி மீது வரலாம். வீரபாண்டியர் எதற்காக எதைச் செய்கிறார் என்பது விளைவு ஏற்படும் வரையில் யாருக்கும் புரியாது. ஆனால் ஒன்று நிச்சயம். அவர் இந்த மலைச்சாரலில் எங்கோ வெகு அருகில் உலாவுகிறார். அதில் சந்தேகமில்லை."

"ஆம் ஆம். சந்தேகமில்லை."

இந்திரபானு குறிஞ்சியை வியப்புடன் நோக்கினான். "அவருடைய இணையற்ற துணிவைப்பற்றி நீயும் கேள்விப்பட்டிருக்கிறாயா?" என்று வினவவும் செய்தான் வியப்புடன்.

"நேரே பார்த்தே இருக்கிறேன்." என்ற குறிஞ்சி, "கோட்டாற்றுக்கரைக் கோட்டையிலிருக்கையில் தன்னந் தனியே இதே புரவியில் அவர் நீண்ட தூரம் மலைக் காட்டில் பயணம் செய்து, சேரர் படை முன்னோடிகளால் தாக்கப்பட்டுப் படுகாயப்பட்டு விஜயவர்மர் மாளிகைக்கு வந்தார். வேவு பார்க்கப் படைத்தலைவர்கள் தன்னந் தனியே நேரே செல்வதை அவரிடம்தான் பார்த்தேன். மற்றப் படைத்தலைவர்களாயிருந்தால் ஒற்றர்களைத்தான் அனுப்புவார்கள். எதிரி எந்தச் சமயத்திலும் தம்மை நோக்கி வரலாம் என்ற நிலையில் தனிப்படப் புரவியேறி எதிரி வாயில் நுழையச் செல்லும் வீரர் இவரைத்தான் பார்த்தேன்." என்றும் கூறினாள். இதைச் சொன்ன அவள் கண்களில் கனவு தெரிந்தது. கோட்டாற்றுக்கரை நிகழ்ச்சிகளைப் பற்றிய கனவு அது.

இந்திரபானு அவளை உற்று நோக்கினான். அவன் சிந்தையில் ஏதோ சந்தேகம் எழுந்ததென்றாலும் அதை அவன் வெளிக்குக் காட்டிக் கொள்ளவில்லை. அவள் கண்களின் பார்வை முகத்தில் விரிந்த விவரிக்க இயலாத ஏதோ ஓர் இன்பம் அவன் கவனத்தை ஈர்க்கவே செய்தது. இருப்பினும், அதைப்பற்றி அவன் ஏதும் சொல்லாமல், "ஆம் குறிஞ்சி! இளவரசர் இணையற்ற வீரர். அவர் நெஞ்சுத் துணிவுக்குச் சமம் கிடையவே கிடையாது. இருப்பினும் எனக்குச் சிறிது அச்சமாகவே இருக்கிறது," என்றான்.

"எதற்கு அச்சம்?" என்று வினவினாள் குறிஞ்சி.

"இந்தப் பகுதியில் அவர் நடமாட்டம்."

"அதைப்பற்றிக் கவலை வேண்டாம். அவரைப் பிடிக்க யாராலும் முடியாது. சிங்கணனே அவரிடம் திணறி விட்டான்." என்று விளக்கினாள் குறிஞ்சி.

இந்திரபானு சற்றுச் சிந்தித்துவிட்டு நிதானமாகச் சொன்னான், "சிங்கணன் வேறு, வீரரவி வேறு. வீரரவியின் கண்களிலிருந்தும், காதிலிருந்தும் எதுவும் தப்பாது." என்று.

"ஆனால் அவன் கண்களுக்கும், காதுகளுக்கும் இப்பொழுது வேலையில்லையே."

"ஏன்?"

"அதிகாரத்தைத்தான் குருநாதரிடம் ஒப்படைத்து விட்டானே."

இந்திரபானு சற்றுத் தாமதித்துவிட்டுச் சொன்னான் திட்டமாக, "நான் அதை நம்பவில்லை?" என்று.

"என்ன, நம்பவில்லையா?" என்று வியப்புடன் வினவினாள் குறிஞ்சி.

"நம்பவில்லை."

"இப்பொழுது அவர் உத்தரவுப்படி எல்லாம் நடப்பது உங்களுக்குத் தெரியவில்லையா?"

"தெரிகிறது. இருப்பினும் இது எத்தனை நாள் நடக்கும் என்று சொல்லமுடியாது. வீரரவி ஏதோ காரணத்தைக் கொண்டுதான் குருநாதரிடம் அதிகாரத்தைக் கொடுத்திருக்கிறான். மேலுக்கு, குருநாதர் அதிகாரம் பரி பூர்ணமானதுதான். ஆனால் இதற்கும் பின்னால் ஏதோ இருக்கிறது குறிஞ்சி. வீரரவி ஏதோ ஆழ்ந்த திட்டத்தை வகுத்திருக்கிறான். அது என்னவென்று எனக்குப் புரியவில்லை. இந்தச் சமயத்தில் வீரபாண்டியர் இத்தனை அருகில் உலாவுவதும் எனக்கு அச்சத்தை அளிக்கிறது," என்று கூறினான் இந்திரபானு.



அச்சத்தின் விளைவாகச் சிறிது நேரம் ஏதோ சிந்தித்த இந்திரபானு, "குறிஞ்சி! அரண்மனையில் நடந்த அனைத்தையும் சொல்லிவிட்டாயா?" என்று மற்றுமொரு கேள்வியை வீசினான்.

"முக்கியமானதை எல்லாம் சொல்லிவிட்டேன்," என்றாள் குறிஞ்சி.

"முக்கியம் அல்லாததையும் சொல் குறிஞ்சி," என்று கேட்டான் இந்திரபானு.

"வீண் சமாசாரங்கள் எதற்கு?" என்று வினவினாள் குறிஞ்சி.

"குறிஞ்சி!"

"உம்."

"வீரரவியின் செய்கைகளில் எது முக்கியம், எது முக்கியமல்லவென்பதை நிர்ணயிக்க முடியாது. முக்கியமானது முக்கியமில்லாது இருக்கலாம். முக்கிய மில்லாதது முக்கியமாயிருக்கலாம். உனக்குத் தெரிந்த அனைத்தையும் சொல்" என்று சொல்லிக்கொண்டே மெல்ல நடந்தான் இந்திரபானு. கோட்டைச் சுவரை யொட்டி மலைச்சாரலில் இருந்த குடிசைகளை நோக்கி, குறிஞ்சியும் அவனுடன் நடந்து கொண்டே சொன்னாள்: "இரண்டு நாட்களாக அரசைக் கவனிப்பதில்லை. அந்தப் புரத்தைத்தான் கவனிக்கிறார்," என்று.

"என்ன கவனிக்கிறார் அந்தப்புரத்தை?" இந்திரபானு வின் கேள்வியில் சந்தேகம் ஒலித்தது.

"பட்டத்துராணி மாளிகையிலும், இளையராணி மாளிகையிலுமே பாதி சமயம் இருக்கிறார்." என்றாள் குறிஞ்சி.

"அப்படியா! அங்கு என்ன செய்கிறார்?" என்று வினவினான் இந்திரபானு.

அவனுடன் நடந்து கொண்டிருந்த குறிஞ்சி நகைத்தாள். "நல்ல கேள்வி இது?" என்ற அவள் சொற்களில் நாணமும் கேலியும் மிதமிஞ்சியிருந்தது.

"ஏன்? கேள்விக்கென்ன?" என்றான் இந்திரபானு. அவன் சித்தம் வீரரவியையும் போர் நிலையையுமே சுற்றிக் கொண்டிருந்ததால் எதைக் கேட்கிறோம், கேள்வியில் என்ன பொருள் தொனிக்கும் என்பதைச் சிறிதும் அறியாமலே கேட்டான் அவன்.

குறிஞ்சி மீண்டும் நகைத்தாள். "கேள்விக்கென்னவா?" என்று வினவினாள் வெட்கத்துடன்.

"ஆம், கேள்விக்கென்ன?" இம்முறை அவன் குரலில் கோபம் லேசாக ஒலித்தது.

"ராணிகளின் மாளிகையில் மன்னர் என்ன செய்கிறார் என்ற கேள்வி அசட்டுக் கேள்வி" என்றாள் குறிஞ்சி நாணங் கலந்த கோபத்துடன்.

"என்ன கேள்வியாயிருந்தாலும் பதில் சொல்," என்ற இந்திரபானுவின் சொற்களில் திட்டமிருந்தது, கடுமையுமிருந்தது.

"சொல்லட்டுமா?"

"சொல்."

"எனக்கு மூக்கில் மயக்க மலர் காட்டி முத்துக் குமரியின் அறைக்குச் சென்றீர்களல்லவா?"

"ஆம்."

"அங்கு நீங்கள் என்ன செய்தீர்கள்?" இதைக் கேட்ட குறிஞ்சி நகைத்தாள்.

"குறிஞ்சி!" இந்திரபானுவின் சொல் உக்கிரமாக எழுந்தது.



"ஏன் உபதலைவரே!"

"இது அர்த்தமற்ற கேள்வி. குறும்புக் கேள்வி."

"அந்த அர்த்தமற்ற, குறும்புச் செயலில்தான் மன்னரும் ஈடுபடுகிறார்...ராணிகளிடம்."

இந்திரபானு மேற்கொண்டு மௌனம் சாதித்தான். அவன் கண்முன்பு முத்துக்குமரியின் நாணத்துடன் கவிழ்ந்த விழிகளும், நாணமின்றி எழுந்த அழகுகளும் தோன்றின. இருப்பினும் அவற்றைத் தன் புத்தியிலிருந்தும் பார்வையிலிருந்தும் அகற்றிய இந்திரபானு, "குறிஞ்சி! வீரரவி செய்வது எதுவாயிருந்தாலும் சொல். ராணிகளுடன் கொஞ்சுவதை நீ பார்த்தாலும் சொல்" என்றான்.

"உங்கள் பேச்சு அழகாயிருக்கிறது" என்றாள் குறிஞ்சி.

"அழகில்லாமலென்ன?"

"அரசர் ராணிகளிடம் கொஞ்சுவதை நான் பார்க்க முடியுமா? ஏன் உளறுகிறீர்கள்?"

"வேறு ஏதாவது சொல்."

"மன்னர் ராணிகளிடம் அன்பாயிருக்கிறார் இரண்டு நாட்களாக, அதுவும் பட்டத்து ராணி மாளிகையில் அதிக நேரம் கழிக்கிறார். பட்டத்து ராணிக்குப் பல சௌகரியங்களையும் செய்து கொடுக்கிறார். உதாரணமாக பட்டத்து ராணியாரின் பவனி ரதம் இரண்டு நாட்களாகப் பழுது பார்க்கப்படுகிறது. அவற்றுக்குப் புரவிகள் மாற்றப் பட்டிருக்கின்றன..." என்று சொல்லிக்கொண்டே போன குறிஞ்சியைப் பிடித்துச் சட்டென்று நிறுத்தித் தானும் நிலைத்து நின்றுவிட்டான் பல விநாடிகள். "பட்டத்து ராணி உலாத் தேரா?" என்றும் வினாவினான் கவலையுடன்.

"ஆம்." என்றாள் குறிஞ்சி அவன் திகைப்புக்குக் காரணத்தை அறியாமல்.

"பழுது பார்ப்பது யார்?" என்று மற்றொரு கேள்வியும் கேட்டான்.

"சேனாதிபதி," என்றாள் குறிஞ்சி.

"பட்டத்துராணி மாளிகையிலும், இளையராணி மாளிகையிலுமே பாதி சமயம் இருக்கிறார்." என்றாள் குறிஞ்சி.

"அப்படியா! அங்கு என்ன செய்கிறார்?" என்று வினவினான் இந்திரபானு.

அவனுடன் நடந்து கொண்டிருந்த குறிஞ்சி நகைத்தாள். "நல்ல கேள்வி இது?" என்ற அவள் சொற்களில் நாணமும் கேலியும் மிதமிஞ்சியிருந்தது.

"ஏன்? கேள்விக்கென்ன?" என்றான் இந்திரபானு. அவன் சித்தம் வீரரவியையும் போர் நிலையையுமே சுற்றிக் கொண்டிருந்ததால் எதைக் கேட்கிறோம், கேள்வியில் என்ன பொருள் தொனிக்கும் என்பதைச் சிறிதும் அறியாமலே கேட்டான் அவன்.

குறிஞ்சி மீண்டும் நகைத்தாள். "கேள்விக்கென்னவா?" என்று வினவினாள் வெட்கத்துடன்.

"ஆம், கேள்விக்கென்ன?" இம்முறை அவன் குரலில் கோபம் லேசாக ஒலித்தது.

"ராணிகளின் மாளிகையில் மன்னர் என்ன செய்கிறார் என்ற கேள்வி அசட்டுக் கேள்வி" என்றாள் குறிஞ்சி நாணங் கலந்த கோபத்துடன்.

"என்ன கேள்வியாயிருந்தாலும் பதில் சொல்," என்ற இந்திரபானுவின் சொற்களில் திட்டமிருந்தது, கடுமையுமிருந்தது.

"சொல்லட்டுமா?"

"சொல்."

"எனக்கு மூக்கில் மயக்க மலர் காட்டி முத்துக் குமரியின் அறைக்குச் சென்றீர்களல்லவா?"

"ஆம்."

"அங்கு நீங்கள் என்ன செய்தீர்கள்?" இதைக் கேட்ட குறிஞ்சி நகைத்தாள்.

"குறிஞ்சி!" இந்திரபானுவின் சொல் உக்கிரமாக எழுந்தது.



"ஏன் உபதலைவரே!"

"இது அர்த்தமற்ற கேள்வி. குறும்புக் கேள்வி."

"அந்த அர்த்தமற்ற, குறும்புச் செயலில்தான் மன்னரும் ஈடுபடுகிறார்...ராணிகளிடம்."

இந்திரபானு மேற்கொண்டு மௌனம் சாதித்தான். அவன் கண்முன்பு முத்துக்குமரியின் நாணத்துடன் கவிழ்ந்த விழிகளும், நாணமின்றி எழுந்த அழகுகளும் தோன்றின. இருப்பினும் அவற்றைத் தன் புத்தியிலிருந்தும் பார்வையிலிருந்தும் அகற்றிய இந்திரபானு, "குறிஞ்சி! வீரரவி செய்வது எதுவாயிருந்தாலும் சொல். ராணிகளுடன் கொஞ்சுவதை நீ பார்த்தாலும் சொல்" என்றான்.

"உங்கள் பேச்சு அழகாயிருக்கிறது" என்றாள் குறிஞ்சி.

"அழகில்லாமலென்ன?"

"அரசர் ராணிகளிடம் கொஞ்சுவதை நான் பார்க்க முடியுமா? ஏன் உளறுகிறீர்கள்?"

"வேறு ஏதாவது சொல்."

"மன்னர் ராணிகளிடம் அன்பாயிருக்கிறார் இரண்டு நாட்களாக, அதுவும் பட்டத்து ராணி மாளிகையில் அதிக நேரம் கழிக்கிறார். பட்டத்து ராணிக்குப் பல சௌகரியங்களையும் செய்து கொடுக்கிறார். உதாரணமாக பட்டத்து ராணியாரின் பவனி ரதம் இரண்டு நாட்களாகப் பழுது பார்க்கப்படுகிறது. அவற்றுக்குப் புரவிகள் மாற்றப் பட்டிருக்கின்றன..." என்று சொல்லிக்கொண்டே போன குறிஞ்சியைப் பிடித்துச் சட்டென்று நிறுத்தித் தானும் நிலைத்து நின்றுவிட்டான் பல விநாடிகள். "பட்டத்து ராணி உலாத் தேரா?" என்றும் வினாவினான் கவலையுடன்.

"ஆம்." என்றாள் குறிஞ்சி அவன் திகைப்புக்குக் காரணத்தை அறியாமல்.

"பழுது பார்ப்பது யார்?" என்று மற்றொரு கேள்வியும் கேட்டான்.

"சேனாதிபதி," என்றாள் குறிஞ்சி.

"அப்படியானால் திரும்பு" என்றான் இந்திரபானு.

"எங்கு?"

"அரண்மனைக்கு."

"எதற்கு?"

"நான் சரணடையப் போகிறேன்."

குறிஞ்சி பிரமித்து நின்றாள், "சற்று முன்புதானே சரணடைய மறுத்தீர்கள்?" என்று கேட்டாள்.

"ஆம், ஆனால் நிகழ்ச்சிகள் நான் எதிர்பார்த்ததை விட மும்முரமாகவும் துரிதமாகவும் முன்னேறுகின்றன., வா போவோம் அரண்மனைககு. நீயே என்னைச் சிறை செய்து ஒப்படைத்து விடு," என்றான் இந்திரபானு.

"நான் உங்களை எப்படிச் சிறைபிடிக்க முடியும்?" என்று வினவினாள் குறிஞ்சி.

"சேரவீரர் ஆயிரம் பேரால் செய்யமுடியாதது உன்னால் முடியும். உன்னைத் தவிர வேறு யாராலும் சிறை செய்ய முடியாது" என்றான் அவன்.

குறிஞ்சி மலைப்புடன் அவனை நோக்கினாள் "மலைக்காதே குறிஞ்சி! போய் அருகேயுள்ள கோட்டைக் காவலரில் இருவரை அழைத்து வந்து என்னை மடக்கிவிடு" என்று உத்தரவிட்டான்.

அடுத்த அரைஜாமத்துக்கெல்லாம் குறிஞ்சி முன் செல்ல ஆயுதம் தாங்கிய இரு காவலருக்கிடையில் இந்திரபானு அரண்மனையை அடைந்தான். பரதபட்டன் அவனை எதிர் கொள்ள அரண்மனை வாயிலிலேயே நின்றிருந்தான்.

அத்தியாயம் 48

# மூலிகை மருத்துவம்

இரவின் அந்த நேரத்தில் பரதபட்டன் அரண்மனை வாயிலில் நின்றிருந்தது மிகவும் அதிசயமாகவே பட்டது இந்திரபானுவுக்கு. ஆய்ச்சியர் குரவையின் முக்கால் கூத்தைப் பார்த்துவிட்டு வெளியில் வந்து பல நாழிகைகள் கழித்தே சிறைப்பட்டு அரண்மனைக்குக் கிளம்பினானாகை யால் தான் அரண்மனையை அடையும்போது நள்ளிரவு தாண்டிவிடும் என்பதை உணர்ந்தே இருந்தான் பாண்டியர் உபதலைவன். ஆகையால் தன்னைச் சிறை செய்த காவலாளர் அரண்மனைத் தலைமைக் காவலனிடந்தான் தன்னை ஒப்படைப்பார்களென்றும் விடிந்த பின்புதான் குருநாதரைச் சந்திக்கும்படியாயிருக்குமென்றும் எண்ணி னான் அவன். அவன் எண்ணத்துக்கும் ஊகத்துக்கும் அடியோடு பரதபட்டன் அந்த மேற்குப்புற வாயிலில் நின்றிருந்தது பெருவியப்பாயிருந்தது அந்த வாலிப வீரனுக்கு.

அவன் முகத்தில் விகசித்த வியப்புக் குறியைக் கண்ட குருநாதன் சற்றே குறுநகை கொண்டான். "வருக வீரனே! வருக," என்றும் வரவேற்புரையும் பகன்றான்.

குருநாதர் தன்னைப் பார்த்து நகைக்கிறாரென்பதைப் புரிந்துகொண்ட இந்திரபானு, "நானாக வரவில்லை." என்று சுட்டிக்காட்டி தான் சிறை செய்யப்பட்டதை வலியுறுத்த பக்கத்தில் ஆயுதந்தாங்கி நின்ற இரு காவலர் மீது கண்களை ஓட்டினான்.

குருநாதன் இம்முறை குறுநகை கொள்ளவில்லை. மெல்ல நகைக்கவே செய்து, "இவ்விருவரும் உன்னைச் சிறை செய்து விட்டார்களா?" என்று வினவினான்.

குறிஞ்சி ஏதோ சொல்ல வாயெடுத்தாள். அதற்கு முன்பாகவே காவலனொருவன், "சிறை செய்தது இந்தப் பெண்மணி குருநாதரே! அவர் கட்டளைப்படி நாங்கள் இவரைச் சிறை செய்தோம்," என்றான்.

"அதைத்தானே கேட்டேன்," என்றான் குருநாதன் மீண்டும் நகைத்து.

"என்ன கண்டுவிட்டீர்கள் குருநாதரே இப்பொழுது?" என்று வினவினாள் குறிஞ்சி.

பதிலுக்குக் குருநாதன் தனது இடது கையால் இந்திர பானுவின் கச்சையில் தொங்கிக்கொண்டிருந்த வாளைச் சுட்டிக் காட்டினான். "ஒருவனைக் காவலர் சிறை செய்யும் போது அவன் வாளை எடுத்துக்கொள்வது சாதாரண வழக்கம். காவலர் இவனைச் சிறை செய்யவில்லை யென்பதை கச்சையில் இருக்கும் வாள் நிரூபிக்கிறது. காவலர் செய்யாததை ஒரு கயல்கண்ணி செய்திருக்கிறா ளென்ற ஊகம் உண்மைக்கு மாறாகுமா?" என்று வினவவும் செய்தான்.

குறிஞ்சி அதற்குமேல் குருநாதனிடம் பேச்சுக் கொடுக்க இஷ்டப்படவில்லை. 'இந்தக் கிழட்டு மந்திர வாதிக்கும் பெண்பித்துப் போகவில்லை,' என்று மனதிற்குள் சொல்லிக் கொண்டு, "எப்படி வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள். இதோ இவரை ஒப்படைத்து விட்டேன்." என்று கூறி விட்டு விடுவிடு என்று அந்தப்புர பகுதிகளை நோக்கி நடந்தாள்.

குருநாதன் அவள் போவதை புன்முறுவலுடன் பார்த்துக் கொண்டிருந்து விட்டு இந்திரபானுவுடன் வந்த காவலரையும் அனுப்பிவிட்டு, "வா இந்திரபானு! எனது அறைக்குப் போவோம்," என்று அந்தப்புர பகுதியின் வட எல்லையிலிருந்த கட்டிடத்தை நோக்கி நடந்தான். இந்திர பானு ஏதும் பேசாமல் அவனைப் பின் தொடர்ந்தான்.



இருவரும் அறையை அடைந்ததும், மூலையிலிருந்த குத்து விளக்கைச் சிறிது தூண்டிவிட்ட குருநாதன் தரையிலிருந்த கோரைப் பாயில் உட்கார்ந்தான். இந்திரபானுவையும் உட்காரும்படி செய்தான். இந்திரபானு கச்சையை அவிழ்த்து வாளை ஒருபுறம் சார்த்திவிட்டுப் பாயில் அமர்ந்தான். அவன் உட்கார்ந்த பின்பு நீண்ட நேரம் மௌனம் சாதித்த குருநாதன் மெல்லக் கேட்டான். "உன் மனத்தை மாற்றியது எது?" என்று.

இந்திரபானுவின் கூரிய கண்கள் பட்டன் கண்களைச் சந்தித்தன. "எதைப்பற்றிக் கேட்கிறீர்கள்?" என்று அவன் உதடுகள் மெல்லச் சொற்களை உதிர்த்தன.

"நீ இங்கு வந்த காரணம்" என்றான் குருநாதன்.

"என்னைச் சரணடையும்படி நீங்கள்தான் பறையறை வித்தீர்களே!" என்று உண்மையை மறைக்கப் பார்த்தான் இந்திரபானு.

"பறையறைவித்து நாட்கள் மூன்று ஆகின்றன. நீயாகச் சரணடைவதாயிருந்தால் முதல் நாளே இங்கு வந்திருப்பாய்," என்று சுட்டிக் காட்டினான் குருநாதன்.

"இப்பொழுது நானாக வராமல் காவலர் சிறை செய்தார்களா?"

"அதுதான் இல்லையென்று முன்னமே சொல்லி விட்டேனே."

"நானாக சரணடைந்திருப்பதால் உங்கள் விருப்பப் படி தானே இருக்கமுடியும்?"

"அதையும் இல்லையென்று உணர்த்திவிட்டேனே."

"வேறென்ன காரணம்?"

"அதைத்தான் கேட்கிறேன். ஏதோ ஒரு நிகழ்ச்சி. அதுவும் இந்த இரவின் ஆரம்பத்திலோ சற்று முன்போ ஏற்பட்ட நிகழ்ச்சி. உன் மனத்தை மாற்றியிருக்கிறது. அது என்னவென்று சொல்ல உனக்கு விருப்பமா?" என்று வினவினான் குருநாதன்.

இந்திரபானு தீவிர சிந்தனையில் இறங்கினான். குருநாதனிடம் தனது சந்தேகத்தைப் பங்கிட்டுக் கொள்ளலாமா என்று ஒரு விநாடி யோசித்தான். பிறகு அதில் அர்த்தமில்லையென்ற முடிவுக்கும் வந்தான். தவிர குருநாதனும் அறியாத தந்திரத்தில் வீரரவி இறங்குவதால் அது குருநாதனுக்குத் தெரிந்து விட்டது என்று தெரிந்தாலும் மன்னன் தன் திட்டத்தை மாற்றிவிடுவான் என்ற எண்ணமும் பிறந்ததால் உண்மையைச் சொல்ல இஷ்டப்படாமல் "குறிஞ்சி சற்று முன்பு ஒரு செய்தி சொன்னாள்," என்று குறிப்பிட்டான்.

"என்ன செய்தி?" என்று கேட்டான் குருநாதன்.

"என் முக விகாரத்தைத் திரும்பவும் மாற்றிவிட உங்களால் முடியும் என்று சொன்னாள். தவிர..."

"சொல்."

"நான் சரணடையாவிட்டால் நீங்கள் அதைச் செய்ய மாட்டீர்கள் என்றும், ஆகவே சரணடைவதே நல்ல தென்றும் கூறினாள்."

"உம்."

"சரியென்று இணங்கினேன். முத்துக்குமரிக்காக முகத்தை விகாரமாக்கிக் கொண்டேன். இப்பொழுது அவளுக்கு ஆபத்து ஏதுமில்லையென்பதையும் உங்கள் வசம் ஒப்படைக்கப் பட்டிருக்கிறாளென்பதையும் கேள்விப் பட்டேன். ஆகையால் விகாரத்தை நீக்கிக் கொள்வதானால் அதைத் தவிர்ப்பானேன் என்று நினைத்தேன்."

இந்திரபானுவின் சொற்களை மட்டுமின்றிக் குரலையும் கவனித்த குருநாதனுக்கு அப்பொழுதும் இந்திர பானுவிடம் நம்பிக்கை பிறக்கவில்லையாயினும் அவன் சொன்ன காரணங்களைப் பட்டனால் மறுக்கமுடிய வில்லை. ஆகவே அதை ஒப்புக் கொண்ட்தாகவே காட்டிக் கொண்ட பட்டன், "உண்மை இந்திரபானு, நீ என் ஆணைக்குக் கீழ்ப்படியவில்லையானால் ஆயுள் முழுவதும் இந்த முகத்துடனேயே இருந்திருப்பாய். நீ சரணடைந்து விட்டதால் உன் சிகிச்சையை நாளை முதல் துவக்குகிறேன். ஆகையால் நீ என் பக்கத்து அறையிலேயே சிறையி ருக்கலாம். உன்னை நானே காவல் புரிகிறேன்." என்றான். இந்திரபானு அதை ஆமோதிக்கவே பரதபட்டன் காவலரை அழைத்துப் பக்கத்து அறையைச் சுத்தம் செய்யச் சொல்லி அந்த அறையிலிருந்த மஞ்சத்தில் இந்திர பானுவைப் படுக்கச் சொல்லிக் கதவைப் பூட்டிக் கொண்டு சென்றான்.



அடுத்த இரண்டு நாட்கள் இந்திரபானு பரதபட்டனைச் சந்திக்கவே இல்லை. காவலரே வந்து அவனுக்கு சகல சௌகரியங்களையும் செய்து கொடுத்துச் சென்றார்கள். அவன் அறையை ஒவ்வொரு முறையும் காவலர் பூட்டிக் கொண்டே சென்றார்கள். இந்த நிலையின் விளைவாக அவன் ஒவ்வொரு விநாடியும் துடித்துக் கொண்டிருந்தான். ஆகவே மூன்றாவது நாள் காலை பரத பட்டன் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்த போது இந்திரபானுவின் முகத்தில் பெரும் சீற்றம் இருந்தது. குருநாதன் அந்தச் சீற்றத்தைச் சிறிதும் கவனிக்கவேயில்லை. "ம்ஞ்சத்தில் படு" என்று கூறிவிட்டுப் பக்கத்திலிருந்த ஓர் ஆசனத்தில் தனது மந்திரத் தண்டத்தையும் மூலிகைகள் கொண்ட ஒரு குடுவையையும் சிறுகலுவம் குழவி இவற்றையும் வைத்தான். பிறகு மூலிகைகளைக் கலுவத்தில் சேர்த்துக் குழவியால் இடித்தான் சிறிதுநேரம், பிறகு சாளரத்தைச் சாத்தி அறையை இருட்டாக்கி, சிறு அகல் விளக்கை மட்டும் ஏற்றினான். அந்த அகல் விளக்கு எண்ணெயில் பச்சிலைச் சாறு சிறிது பிழிந்தான். மீதிச் சாற்றை எடுத்து வந்து மெல்ல தன் ஆள்காட்டி விரலால் இந்திரபானுவின் முகத்தில் பூசினான் தழும்பிருந்த இடங்களிலெல்லாம், அடுத்தபடி மஞ்சத்தை அகல் விளக்குடன் அவன் பக்கத்தில் இழுத்து வைத்து, "வாலிபனே! நன்றாகக் கேட்டுக்கொள், என் சொல்லை இம்மியளவும் தவறாமல் கேட்டு நடப்பதிலிருக்கிறது, உன் பிற்கால வாழ்க்கை. முகத்தை அடையாளம் புரியாமல் அடிப்பதைவிடத் திரும்ப அதைப் பழைய நிலைக்குக் கொண்டு வருவது கஷ்டம். உனக்குப் பழைய அழகு

திரும்பினாலும் திரும்பும். இந்த விகாரம் நிலைத்தாலும் நிலைக்கும். ஆனால் பச்சிலைகள் வீண்போவதில்லை. இந்தப் பச்சிலை உன் சருமத்தின் ஜீவநாடிகளைத் தூண்டும் சக்தியுள்ளது; அதை அதிகமாக உலரவிடாமல் வைக்கவேண்டும். அந்த அகல் விளக்குத் திரி எரிய எரிய இதிலுள்ள எண்ணெய் லேசாகச் சுடும். அதை எடுத்து மெல்ல மெல்ல பச்சிலைச் சாறு தடவிய இடங்களில் தடவிக்கொள்," என்றார்.

"திரி எரியும்போது விளக்கின் எண்ணெய் சாதாரண மாகச் சுடுவதில்லையே," என்றான் இந்திரபானு.

"இந்த விளக்கு சாதாரண விளக்கு இல்லை. சொன்ன படி செய். ஒரு ஜாமம் கழித்து வருகிறேன்," என்று கூறி விட்டுச் சென்றான் பரதபட்டன்.

இந்திரபானு மஞ்சத்தில் மல்லாந்து கிடந்தான். அவன் முகச் சருமத்தில் மெல்ல லேசாக எரிச்சல் கண்டது. உடனே அகல் விளக்கின் எண்ணெயை எடுத்துத் தடவிக் கொண்டான். உண்மையில் விளக்கிலிருந்த எண்ணெய் அந்த எரிச்சலுக்கு மிக இதமாயிருந்தது. இப்படியே திரும்பத் திரும்ப எண்ணெயைத் தடவிக் கொண்டும் சிந்தனையைப் பலவிதமாக அலையவிட்டும் படுத்துக் கொண்டிருந்தான் இந்திரபானு. சரியாக ஒரு ஜாமம் கழித்து உள்ளே நுழைந்த குருநாதன் கையில் ஒரு பாத்திரத்தில் ஏதோ கொண்டுவந்து "வாயைத் திற" என்றான்.

இந்திரபானு வாயைத் திறந்ததும் சுட்ட மோர் ஊற்றப்பட்டது. அந்த மோரிலும் ஏதேதோ மூலிகைகள் சேர்க்கப்பட்டிருந்தாலும் மிகவும் ருசியாயிருந்தது. சுமார் அரைக்கிண்ண மோரை ஊற்றிய குருநாதன், "இனி உனக்கு நாளைக்குத்தான் ஆகாரம். பேசாமல் படுத்திரு" என்று கூறி விட்டு முகத்தின் மீதி இடங்களிலும் பச்சிலைச் சாறு தடவி விட்டுச் சென்றான்.

அடுத்த நாள் சிகிச்சை இன்னும் கடுமையாயிருந்தது. அன்று பூராவும் முகத்தில் ஒரு பச்சிலை துணியைப் போட்டு மூடினான் குருநாதன். சுவாசம் விட ஒரு துவாரம்



மட்டும் மூக்குப் பகுதியில் விடப்பட்டிருந்தது. மூன்றாம் நாள் சிகிச்சை நடந்து கொண்டிருக்கையில் அந்த இடத்திற்கு வீரரவி வந்து சேர்ந்தான். "இங்கு என்ன நடக்கிறது குருநாதரே?" என்று வினவவும் செய்தான் சினத்துடன்.

சிகிச்சையில் லயித்திருந்த குருநாதன் மன்னனைத் திரும்பிப் பார்க்காமலே சொன்னான், "சிகிச்சை," என்று.

"என்ன சிகிச்சை?" என்று கேட்டான் வீரரவி சீற்றத் துடன்.

மெல்ல சிகிச்சையை முடித்து எழுந்த குருநாதன், "இதோ பார்" என்று மஞ்சத்தில் கிடந்த இந்திரபானுவைச் சுட்டிக் காட்டினான்.

எதற்கும் அஞ்சாத வீரரவி பேரச்சத்திற்குட்பட்டுப் பேச நா எழாமல் நின்றான். இந்திரபானுவின் முகம் முன்னை விட ஆயிரம் மடங்கு அதிக விகாரப்பட்டிருந்தது. "குருநாதரே!" என்ற அதிர்ச்சிச் சொல் மன்னனிடமிருந்து எழுந்தது.

## அத்தியாயம் 49

# கவசம்

இந்திரபானுவின் முகநிலை கண்டதும் அவனிடம் தீரா விரோதம் கொண்டிருந்த வீரரவியின் இதயத்தில்கூட அனுதாபம் உண்டானதால் பல விநாடிகள் அம்முகத்தைப் பார்த்தது பார்த்தபடி நின்றுவிட்டான் அவன். அதிர்ச்சியால் உள்ளமும் உடலும் ஒருங்கே உறைந்துவிட நின்றுவிட்ட மன்னனுக்கு, குருநாதன் பேச்சும் குரூரப் புன்முறுவலும் வேப்பங்காயாயிருந்தது. ஒரு சிறந்த வீரனை இந்த நிலைக்குக் கொண்டு வந்த குருநாதன் ஒரு மனிதப் பிறவிதானா என்ற சந்தேகங்கூட மன்னன் இதயத்தில் எழுந்தது.

சிகிச்சை முடிந்து எழுந்த சமயத்தில் முதல் நாள் முகத்தை மூடியிருந்த துணியை எடுத்து விட்டிருந்த தால் மன்னன் மிகத் தெளிவாகப் பார்க்க முடிந்தது பாண்டியர் உபதலைவன் முகத்தை. அந்த முகத்தில் முன்பிருந்த பெரும் தழும்புகள் இல்லை. திட்டுத் திட்டாகத் தீப்புண் வடுக்கள் போலிருந்த விகாரங்கள் இல்லைதான். ஆனால் முகம் பூராவும் வெந்து தழும்பாகி விட்டதுபோல் பளபளப்புடன் காணப்பட்டது. தலைக்குழலிலிருந்து முகவாய்க் கட்டை வரை இருந்த சருமம் முழுவதும், கன்னங்களும் காதுகளின் ஒரு பகுதியும்கூட அடியோடு வெந்துபோன மாதிரி இருந்தது. அனைத்தையும் மறைத்தும் மறைக்காமலுமிருந்த பச்சிலைச் சாறு முகத்திற்கு அதிக பயங்கரத்தை அளித்தது. அந்த முகத்தை மீண்டும் மீண்டும் பார்த்த வீரரவி, "குருநாதரே! விரோதியிடம் நடந்துகொள்ளும் முறையில் கூட ஓரளவு தர்மம் இருக்க வேண்டும்" என்றான்.



சேர மன்னன் ரத்தத்தில் ஓடிய அந்தப் பரம்பரைப் பெரும் குணம் தலையெடுத்துவிட்டதைக் கண்ட குருநாதன் மகிழ்ச்சியடைந்தான். இருப்பினும் அதை வெளிக்குக் காட்டாமல் கேட்டான், "மறைவிலிருந்து வேலெறிந்து கொல்வதைவிட நான் செய்தது தர்மக் குறைவா?" என்று.

சேரமன்னன் நாசியிலிருந்து பெருமூச்சொன்று வெளி வந்தது. "அது அதர்மம்தான் குருநாதரே! ஆனால் நீர் இப்பொழுது செய்திருப்பதற்கு என்ன பெயர் சூட்டுவதென்றே எனக்குத் தெரியவில்லை," என்று கூறிய மன்னன், "குருநாதரே! இவனை விடுதலை செய்து வீர பாண்டியனிடம் அனுப்பிவிடுங்கள். அல்லது இவன் எங்கு செல்ல வேண்டுமென்று பிரியப்படுகிறானோ அங்கு அனுப்பி விடுங்கள். நீர் இன்று செய்திருப்பது சேர நாட்டுக்கே பெருத்த அவமானம்" என்று கூறிவிட்டு விடுவிடு என்று நடந்து அறையைவிட்டு அகன்றான்.

மன்னன் சென்றதும் குருநாதன் அறைக் கதவைச் சாத்திவிட்டுத் திரும்பிவந்து இந்திரபானு படுத்திருந்த மஞ்சத்தருகில் உட்கார்ந்துகொண்டான். "இந்திரபானு!" என்று மெள்ள அழைக்கவும் செய்தான்.

"என்ன குருநாதரே?"

"மன்னன் சொன்னது காதில் விழுந்ததா?"

"விழுந்தது."

"நீ இனி எங்கு வேண்டுமானாலும் செல்லலாம்" என்றான் குருநாதன்.

"எங்கும் செல்ல விரும்பவில்லை," என்று இந்திரபானு கூறினான்.

"ஏன்?"

"இப்பொழுது பல விஷயங்கள் புரிந்து விட்டன," என்று இந்திரபானு, "நீங்களும் சேனாதிபதியும் நேற்றிரவு இங்கு வந்தபோது நான் உறங்கவில்லை," என்று சுட்டியும் காட்டினான்.

இதைக் கேட்ட குருநாதன் முகத்தில் அச்சம் பெரிதும் விரிந்தது.

"அனைத்தும் கேட்டேன். உங்கள் திட்டமும் புரிந்தது. தற்காப்பைத் தளர்த்தி, நகர நிலைகாட்டி, முத்துக்குமரியையும் முத்தையும் ஒப்படைத்து, பாண்டியன் படையெடுப்பை நிறுத்தப் பார்க்கிறீர்கள். அது முடியாவிட்டால்..." என்று இந்திரபானு நிதானித்தான்.

"முடியாவிட்டால்?"

"பாண்டியனை அழித்துவிட நீர் செய்திருக்கும் ஏற்பாட்டையும் புரிந்துகொண்டேன்."

"அதைப்பற்றி நான் ஏதும் சேனாதிபதியிடம் சொல்லவில்லையே?"

"குருநாதரே! நீர் பாண்டியனுக்குத் தயாரித்திருக்கும் பெரும் பள்ளம் எத்தன்மையதென்பதை வாய் விட்டுச் சொல்லவில்லையென்பது உண்மைதான். ஆனால் நல்ல அறிவுள்ள எவனும் அதைப் புரிந்துகொள்ளமுடியும். ஒரு பக்கத்தில் மக்களுக்குச் சுதந்திரம் அளித்திருக்கிறீர்கள். மற்றொரு பக்கம் அதற்குப் பெரும் வேலியைக் கட்டியிருக்கிறீர்கள். இந்தப் பரலிமாநகரின் எல்லைக்குள் சுதந்திரமிருக்கிறது. ஆனால் எல்லைப் பகுதியை வளைத்துப் பெரும் காவலும், பெரும் அணிவகுப்பும் இருக்கிறது. நீங்கள் சேனாதிபதியுடன் பேசியதிலிருந்து கிழக்குவாயில் முகப்புக்காட்டை அழிக்கச் சொன்ன காரணம் தெரிந்துகொண்டேன். கிழக்குக் கோட்டை மதிள்களில் விற்பொறிகள் வேற்பொறிகள் ஏற்றப்பட்டிருக்கின்றன. மதிளோரம் காலாட் படையும் குதிரைப் படையும் சஞ்சரிக்கின்றன. தென்பகுதியிலும், வடபகுதிகளிலும் படைப்பகுதிகளிலும் மலை உட்புகுந்த இடங்களிலும், கடற்கரை யோரப் பகுதிகளிலும் படைப் பகுதிகள் வரிசையாக உலாவுகின்றன. துறைமுகத்தில் கடற்படை தயாராக இருக்கிறது. உண்மையில் இந்த நகரைச் சுற்றிப் பெரிய படை வளையம் இருக்கிறது. அரைஜாமத்தில் அந்த வளையத்தை இறுக்கிவிட ஆங்காங்கு முக்கிய இடங்களில்



முரசுகளையும் வைத்திருக்கிறீர்கள். அரை ஜாமத்தில் இந்தத் தலைநகரில் கேளிக்கைகளை நிறுத்திவிடலாம். மக்களை இல்லங்களில் பதுங்கச் சொல்லலாம். தலைநகரைச் சுற்றிலும் உள்ள படைகள் நினைத்த மாத்திரத்தில் பல உள்வளையங்களை நிர்மாணித்துக் கொள்ளலாம். இதனால் வளையத்துக்குள் வளையமாகப் பல வளையங்கள் உள்ள பெரும் வியூகம் வெகு சீக்கிரமாக வகுக்கப்படும். அத்தகைய வியூகத்தைப் பாண்டிய சகோதரர்களின் சிறு படை உடைப்பது கஷ்டம்."

இதைச் சொல்லி முடித்த இந்திரபானு மேற்கொண்டு ஏதும் பேசாமல் மௌனம் சாதித்தான். குருநாதன் முகத்தில் அதிர்ச்சி மிக அதிகமாகத் தெரிந்தது. "இந்திரபானு! உன் முகத்தில் தடவிய பச்சிலைச்சாறு வேலை செய்கிறதா என்பதைப் பார்க்கவே நள்ளிரவில் வந்தேன். புறப்படும்போது என் அறைக்குச் சேனாதிபதியும் வந்ததால் அவனையும் அழைத்துவந்தேன். நீ உறங்குவதைப் பார்த்து சேனாதிபதியிடம் பேசிவிட்டேன்," என்று கூறிய குருநாதன் பேச்சில் கவலை தொனித்தது.

அந்தக் கவலையைக் கவனித்த இந்திரபானு கேட்டான், "ஏன் கவலைப்படுகிறீர்கள் குருநாதரே?" என்று.

"நான் சேரநாட்டை நேசிக்கும் அளவுக்கு நீ பாண்டிய நாட்டை நேசிக்கிறாய் என்பது எனக்குத் தெரியும்," என்றான் குருநாதன்.

"அதனாலென்ன?" என்று வினவினான் இந்திரபானு.

"எதிரியிடம் எனது பாதுகாப்பு ஏற்பாடு சிக்கிவிடுவதைவிட ஆபத்து ஏதாவது உண்டா?" என்று கேட்டான் குருநாதன்.

"நான் எதிரியா?"

"ஆம். சேரநாட்டின் பகைவன் நீ."

"அதைவிட வீரரவியின் பகைவன் என்று சொல்வது பொருந்தும் குருநாதரே."

"இப்பொழுது இரண்டும் ஒன்றுதான். வீரரவி அதர்மத்தின் வழியைக் கடைப்பிடித்தபோது அவனுக்கெதிராக மக்களுக்கு நானே ஓலை விடுத்தேன். ஆனால் இப்பொழுது வீரரவி பாண்டியன் மகளையும் என்னிடம் ஒப்படைத்துவிட்டான். உன்னையும் என்னிடம் ஒப்படைத்து விட்டான். அவனை நான் வெறுத்த காரணம் நீங்கி விட்டது," என்று விளக்கினான் குருநாதன்.

இந்திரபானு மஞ்சத்தில் படுத்தபடியே தலையைத் தலையணையில் சற்று அசைத்துத் தான் புரிந்துகொண்டு விட்டதைத் தெரியப்படுத்தினான். அப்பொழுது குருநாதன் சொன்னான்: "நீ புரிந்துகொண்டதுபோல் சேனாதிபதியும் புரிந்துகொண்டிருந்தால் இப்பொழுதுள்ள நிலை தலைகீழாய் மாறும்."

"ஏன்?" என்று கேட்டான் இந்திரபானு.

"என் போர் ஏற்பாடுகளின் சூட்சுமம் இதுவரை வீரரவிக்குத் தெரியாது. அவன் சேனாதிபதிக்கும் தெரியாது. ஆனால் என் உத்தரவுகளின் மர்மத்தை சேனாதிபதி புரிந்து கொண்டு மன்னனிடம் சொல்லிவிட்டால் ஆபத்து இருக்கிறது," என்றான் குருநாதர்.

இந்திரபானு இதற்குப் பதில் சொல்லவில்லை. "நான் எப்பொழுது கிளம்பலாம்?" என்று மட்டும் கேட்டான் குருநாதனை நோக்கி.

"எங்கு?" குருநாதன் கேள்வி.

"பாண்டிய மன்னனிடம்," என்றான் இந்திரபானு.

"யார் உன்னை அனுப்பப் போவது?"

"மன்னன் உத்தரவிடவில்லையா?"

"உத்தரவிட்டான்."

"அதை நீங்கள் எதிர்க்க முடியுமா?"

"ஏன் முடியாது? மன்னன் உத்தரவு எதற்கு இதுவரை நான் பணிந்தேன்?"

"அப்படியானால் என்னைச் சிறை வைத்திருக்கத் தான் போகிறீர்களா?"



"ஆம்"

"என் முகத்தைத்தான் கெடுத்தீர்கள். கடமையையும் ஏன் கெடுக்கப் பார்க்கிறீர்கள்?"

பதிலுக்கு மெல்ல நகைத்தான் பரதபட்டன். வேறெதுவும் சொல்லாமல் அறையைவிட்டு அகன்றான். அதற்குப் பிறகு மூன்றுநாட்கள் அந்த அறைக்கே வரவில்லை குருநாதன். அறைக் காவலையும் பலப்படுத்தி விட்டான். இதையெல்லாம் கவனித்த இந்திரபானுவின் இதயத்தில் கவலை ஏறிக்கொண்டு இருந்தது. எப்படிக் காவலிலிருந்து தப்பலாம் என்று யோசித்த வண்ணம் அந்த மூன்று நாட்களை ஓட்டினான். நான்காம் நாளிரவு பரதபட்டன் அந்த அறைக்குள் செம்பருத்திக் குழம்புடனும் இலவம்பஞ்சுடனும் நுழைந்தான். மீண்டும் இந்திரபானுவைப் படுக்க வைத்து அந்தக் குழம்பை முகத்தில் பஞ்சால் தடவித் துடைத்தான். பிறகு இந்திரபானுவின் முகத்தை நீண்ட நேரம் உற்று நோக்கினான். கடைசியாக "இப்படி வா" என்று இந்திரபானுவை அறைக் கோடியிலிருந்து விளக்கிடம் அழைத்துச் சென்று கையிலொரு தகளியைக் கொடுத்து, "முகத்தைப் பார்" என்றான்.

உற்று நோக்கினான் தகளியில் தெரிந்த முகத்தை இந்திரபானு. அவன் இதயம் விவரிக்க இயலாத உணர்ச்சிகளால் தாக்குண்டது. கண்களைத் தகளியிலிருந்து அகற்றிக் குரு நாதனை ஏறிட்டு நோக்கினான். "இப்பொழுது சொல். நீ விடுதலையடைய விரும்புகிறாயா?" என்று வினவினான் குருநாதன். இந்திரபானு பதில் கூறவில்லை. குருநாதன் தனது கையிலிருந்த ஒரு பட்டுக் கவசத்தை எடுத்து இந்திரபானுவின் தலையோடு முகத்தையும் மூடினான். "சில நாட்களுக்கு இப்படியே இரு" என்று கூறிவிட்டு நடையும் கட்டினான் குருநாதன்.

தகளியில் முகத்தைக் கண்ட இந்திரபானுவின் இதயம் விவரணத்துக்கும் அப்பாற்பட்ட உணர்ச்சிகளால் தாக்கப்பட்டதால் குருநாதன் பட்டுக்கவசம் கொண்டு

அவன் தலையையும் முகத்தையும் மூடியபோதும் அவன் ஆட்சேபிக்கவில்லை. "இப்படியே சில நாட்கள் இரு," என்று உத்தரவிட்டபோது பதிலேதும் கூறவில்லை. பார்ப்பவர் யாரும் பரிகசிக்கக்கூடிய வீரர்கள் வெறுக்கக்கூடிய அந்தப் பட்டுக் கவசத்தை அணிந்து அடுத்த இரண்டு நாட்கள் அரண்மனைப் பகுதிகளில் உலாவவும் தொடங்கினான். காவலர் அவனைப் பார்த்து நகைத்தார்கள். அந்தப்புரச் சேடிகள் இகழ்ச்சிப் புன்முறுவல் கோட்டினார்கள். ரகசியத்தில் அதைப் பற்றிப் பலபடி கேலியும் செய்தார்கள். எந்த ரகசியமும் வெளியாவது போல் இந்திரபானுவின் பரிகாச நிலையும் முத்துக்குமரியின் காதுகளுக்கெட்டவே அவள் குறிஞ்சியை அழைத்து மெள்ள விசாரித்தாள்.

முதலில் விஷயத்தை மறைக்க முயன்ற குறிஞ்சி உண்மையை அவிழ்த்தாள். "ஆம் அம்மணீ. அது உண்மை தான்," என்று கூறினாள், வேதனையுடன்.

இதைக் கேட்ட முத்துக்குமரியை இதயம் சுக்குநூறாக வெடித்துவிடும் போலிருந்தாலும் அவள் அதை வெளிக்குக் காட்டவில்லை. அவள் முகத்தில் கம்பீரம் கலந்த வெறுப்பே தாண்டவமாடியது. வீரனுக்கு இகழ்ச்சியைவிட மரணம் பெரிதென்று நினைத்த பாண்டியகுமாரி அன்று பிற்பகலே இந்திரபானுவின் அறைக்குச் சென்று, "திறவுங்கள் கதவை" என்று சீறினாள்.

"யாரது?" என்ற குரல் கடுமையுடன் உள்ளிருந்து வந்தது.

"பாண்டியன் மகள்." அரச கம்பீரத்துடன் பதில் கூறினாள் முத்துக்குமரி.

"எதற்கு வந்தாய்?" இந்திரபானுவின் இந்தக் கேள்வியில் சீற்றமே இருந்தது.

"உங்கள் அழகைப் பார்க்க வந்தேன்." வெறுப்பும் சினமும் கலந்த குரலில் பதில் கூறினாள் பாண்டியன் மகள்.

"பிறகு பார்க்கலாம்."

"இல்லை. இப்பொழுதே பார்க்க வேண்டும்."



"முடியாது."

"ஏன்?"

"உன் அழகை நான் பார்க்க விரும்பவில்லை" என்ற இந்திரபானு நகைத்தான்.

முத்துக்குமரியின் கோபம் எல்லை கடந்தது. இத்தனை கேவல நிலையிலும் அவன் மிடுக்குப் போகாததைக் கண்டு "என்ன நகைக்கிறீர்கள்?" என்று கேட்டாள் ஆவேசத்துடன்.

"ஏன், நகைக்கக்கூடாதா?"

"உங்களைப் பார்த்துத்தான் பிறர் நகைக்கிறார்களே?"

"அவர்களைப் பார்த்து நான் நகைக்கிறேன்," என்ற இந்திரபானு உள்ளிருந்து பயங்கரமாக நகைத்தான். பிசாசு நகைத்தால் இப்படித்தானிருக்குமென்று நினைத்தாள் முத்துக்குமரி. அதனால் வெகுண்டு, "சரி சரி, நான் போகிறேன். இரவில் சந்திக்கிறேன்," என்று கூறிவிட்டுத் தடதடவென்று திரும்பிச் சென்றாள் அவள்.

அரண்மனையின் தாழ்வறையில் நடந்து சென்ற அவளை அவன் சிரிப்பின் எதிரொலி தொடர்ந்து வந்தது. ஒருவேளை இந்திரபானுவுக்குப் புத்தி பிசகிவிட்டதோ என்றுகூட நினைத்தாள் அவள். அந்த நினைப்புடன் தனது அறைக்கு வந்து படுத்தவள் அன்று உணவுகூட அருந்தவில்லை. எப்படியும் இரவில் அவனைச் சந்தித்து அவன் பட்டுக் கவசத்தைக் கிழித்தெறிவதென சபதம் செய்து கொண்டாள்.

இரவு அவனைச் சந்தித்தாள்; ஆனால் பட்டுக் கவசத்தைக் கிழிக்க முடியவில்லை; அவள் சபதம் பலிக்கவில்லை. அவனையும் அவளையும் தாங்கிய பட்டத்து ராணியின் ரதம் காற்று வேகத்தில் பரலிமாநகரின் காட்டை ஊடுருவிச் சென்று கொண்டிருந்தது.

## அத்தியாயம் 50
# வீரரவியின் பரிவு

பரலிமாநகரின் எல்லைக்காட்டின் ஊடே கடு வேகத்தில் சென்றுகொண்டிருந்த பட்டத்து ராணியின் ரதத்தில் அமர்ந்திருந்த முத்துக்குமரியின் சித்தமும் அந்த ரதத்தின் சக்கரங்களைப்போலவே கனவேகத்தில் சுழன்று கொண்டிருந்தது. அந்தக் காட்டின் நடுவில் ராணிகளின் உல்லாசப் பயணத்துக்காகப் போடப்பட்டிருந்த ராஜ பாட்டையும், அனேகமாகச் சீராக இருந்தபோதிலும் சிற்சில இடங்களில் மடிப்புகள் இருந்ததால் அந்த மடிப்புக்களில் இறங்கி ஏறிய சமயங்களில் ரதத்தின் சக்கரங்கள் அதிர்ந்து ரதத்தின் உட்புறத்தையும் தூக்கி எறிந்துகொண்டிருந்ததைப் போலவே முத்துக்குமரியின் சிந்தனைச் சுழலும் சில மடிப்புக்களிலும் இடையிடையே சிக்கியதால் அவ்வப்போது அவள் உணர்ச்சிகளுக்கு அதிர்ச்சியைத் தந்துகொண்டிருந்தது. அவள் நினைப்புக்கள் அந்தச் சமயத்தில் அந்த ரதத்திலோ அல்லது அக்கம் பக்கத்தில் ரமணீயமாக இருந்த காட்டுச் சூழ்நிலையிலோ சிறிதும் ரசிக்காமல் அன்று பகல் முதல் நிகழ்ந்த அரண்மனை நிகழ்ச்சிகளிலேயே உழன்றுகொண்டிருந்தது.

அன்று பகல் கோபத்துடன் தனது அறைக்குத் திரும்பியதும் குறிஞ்சி தன்னை ஏளனமாகப் பார்த்தாள் என்பதை நினைத்தாள் முத்துக்குமரி. பிறகு அவள் ஏள னத்தை அகற்றத் தனது பஞ்சணை முகப்பில் உட்கார்ந்து பரிவுடன் தனது முதுகைத் தடவிக் கொடுத்து, "இதில் நமக்குத் தெரியாத விஷயங்கள் பல இருக்கலாம். இந்திர பானு திடீரெனக் கோழையாகிவிட முடியாது" என்று கூறியதும் அவள் சிந்தையில் உலாவிற்று.



"அவர் கோழைத்தனத்துக்கு அத்தாட்சியிருக்கிறதே குறிஞ்சி" என்று குரல் தொண்டையை அடைக்கக் கூறினாள் அரச குமாரி.

"புறச்சான்றுகளை நம்பக்கூடாது அரசகுமாரி," என்றாள் குறிஞ்சி.

"வேறு சான்று எது?"

"மனச்சான்று இருக்கிறதே?"

"என்ன சொல்கிறாய் குறிஞ்சி?"

"உங்கள் மனத்தைக் கேட்டுப் பாருங்கள் அது சொல் கிறதா உப தலைவர் கோழையென்று?"

பஞ்சணையில் நெஞ்சத்தை வினவினாள் முத்துக்குமரி. மனம் ஒப்புக் கொண்டதாகத் தெரியவில்லை இந்திரபானுவின் கோழைத்தனத்தை. பின், சித்தம் ஏன் அப்படிக் கொதித்தெழுந்தது அவன்மீது? அதற்கும் விடை கிடைக்கவில்லை பாண்டியன் மகளுக்கு. ஆகவே பஞ்சணையில் புரளவே செய்தாள். நெஞ்சத்தில் அமைதியின்றிக் கடைசியாக ஒருவார்த்தை சொன்னாள், "எப்படியும் இன்றிரவு சந்திக்கிறேன் அவரை," என்று.

ஆனால் அவள் எண்ணப்படி சந்திக்க முடியவில்லை அந்த சிங்களத்தின் வாலிபனை. அவனைத் தான் சிறிதும் எதிர்பாராத முறையில் சந்திக்க நேர்ந்ததை நினைத்துப் பெரிதும் வியந்தாள் முத்துக்குமரி. ரதத்திலிருந்த அந்தச் சமயத்தில் அன்று மாலை தன்னைச் சந்தித்த சேரமான் வீரரவியின் போக்கே அவளுக்குப் பெரும் புதிராயிருந்தது. வீரரவி அன்று மாலை அவள் அறைக்கு வந்தபோது அவன் பார்வையில் காம விகாரமில்லை. உதடுகளில் சதா தவழும் அந்த வேட்கைப் புன்முறுவலுமில்லை. அவன் கண்களில் அனுதாபம் நிரம்பிக்கிடந்தது. புன்சிரிப்பும் சற்று இருக்கத் தான் செய்தது ஆனால் அதில் விரவி நின்றது பரிதாபம். காம வேட்கை அல்ல. வீரரவியின் குரலிலும் பரிதாபம் ததும்பி நின்றது. அவன் வந்ததும் உள்ளறைக்கும் வராமல் தன்னைப் பார்க்கக் குறிஞ்சியை வினவியதே விந்தையாயிருந்தது குமரிக்கு. வெளியறையில் சந்தித்த

போது அவன் முகபாவம் அவள் வியப்பை எல்லைமீறச் செய்தது. "பாண்டிய மன்னன் செல்வி!" என்று அழைத்த குரலில் மட்டுமரியாதை பரிதாபத்தில் குழைந்து கிடந்தது.

"தங்கள் விஜயத்தின் காரணம்?" வழக்கம்போல் கடுமையாக இருந்தது குமரியின் கேள்வி.

அந்தக் கடுமையைக் கவனிக்க இஷ்டப்படாத வீரரவி "உனக்கொரு செய்தி கொண்டு வந்திருக்கிறேன். மகிழ்ச்சியை அளிக்கும் என நம்புகிறேன். ஆனால் மகிழ்ச்சி யளிக்கும் செய்தியல்ல அது," என்றான் வீரரவி.

"சொல்லுங்கள்." வறண்ட குரலில் எழுந்தது குமரி யிடமிருந்து அந்த ஒற்றைச் சொல்.

"இந்திரபானுவை விடுதலை செய்ய உத்தரவிட்டு விட்டேன்," என்றான் மன்னன்.

"இப்பொழுதே சுதந்திரமாகத்தானே உலாவுகின்ற தாகக் கேள்வி," என்றாள் முத்துக்குமரி தன் விழிகளை நிலத்திலிருந்து உயர்த்தி.

"அரண்மனை எல்லைக்குள் உலாவுகிறான்."

"இனி?"

"அரண்மனையில் வைத்திருக்க உத்தேசமில்லை."

"ஏன்? உங்கள் விரோதம் என்ன ஆயிற்று?"

"அகன்று விட்டது."

"ஏன்?"

"விரோதமும் பரிதாபமும் இணைந்துறைய முடியாத இருவகை உணர்ச்சிகள்."

"பரிதாபத்துக்குக் காரணம்?"

"அவன் நிலை" என்ற மன்னன் மேலும் சொன்னான்; "இந்திரபானு பழையபடி இருந்தால் அவனை வெட்டுப் பாறைக்கு அனுப்புவதே என் குறிக்கோளாக இருக்கும். ஆனால் அவன் இப்பொழுது இறகிழந்த பறவை. வெளியில் காட்ட முடியாத கோரமுகத்தைப் பெற்றிருக்கிறான். அரு வருக்கத்தக்க. பார்ப்பவர் பத்தடி தூரம் விலகிச் செல்லத் தக்க, அத்தனை விபரீதமாக அடித்துவிட்டார் குருநாதர்



அவன் முகத்தை. சேரநாட்டு நன்மைக்காக அதைச் செய்த தாகக் கூறுகிறார் குருநாதர். ஆனால் சேர நாட்டுக்கு அந்த விதத்தில் நன்மைதேட நான் இஷ்டப்படவில்லை. ஆகவே இந்திரபானுவைச் சிறையெடுக்கவோ கண்காணிக்கவோ நான் இனி இஷ்டப்படவில்லை. இன்றிரவு அவன் அரண் மனையிலிருந்து குருநாதருக்கும் தெரியாமல் வெளியேற்றப் படுவான்..."

"அவர் வெளியேற இஷ்டப்படாவிட்டால்? குருநாதர் சொல்லை மீற மறுத்தால்?" என்று வினவினாள் முத்துக்குமரி.

"குமரி! அவனை நான் புரிந்துகொண்ட அளவுக்குக் கூட நீ புரிந்து கொள்ளவில்லை. அவன் சுத்த வீரன். போர் தலை நகரத்தை அணுகிவிட்டது அவனுக்குத் தெரியும். ஆகவே அந்தப் போரில் பங்குபெறுவதையே விரும்புவான். அந்த விருப்பத்தை நிறைவேற்றுவது எனது கடமையாகிறது. நானும் வீரர் குலத்தில் பிறந்தவனல்லவா? வீரரவி பெயரையும் எனக்குச் சூட்டியிருக்கிறார்களே!" என்றான் மன்னன்.

"இதையெல்லாம் என்னிடம் ஏன் சொல்லுகிறீர்கள்?" என்று வினவினாள் குமரி.

"நீயும் அவனுடன் செல்கிறாய்." வீரரவியின் பதில் மிக உறுதியுடன் வெளிவந்தது.

"நானா!" வியப்பினால் பவளவாயைத் திறந்து மூடினாள் முத்துக்குமரி ஒரு வினாடி.

"ஆம்."

"நான் எதற்கு?"

"நீயும் வருவதாகச் சொன்னாலொழிய அவன் கிளம்ப மாட்டான். குருநாதரிடமே லயித்து அழிந்து விடுவான்," என்ற வீரரவி, "இன்றிரவு இரண்டாம் ஜாமத்தில் கிளம்ப வேண்டும். தயாராயிரு," என்றும் கூறிவிட்டு வெளியே நடந்தான்.

முத்துக்குமரியின் தலை சுழலும் நிலைக்கு வந்ததால் அவள் அங்கிருந்த ஆசனத்தில் உட்கார்ந்து தனது கைகளில்

முகத்தைப் புதைத்துக்கொண்டாள். மன்னனிருந்தவரையில் அறைக்கு வெளியே சென்றுவிட்ட குறிஞ்சி அவன் சென்றதும் உள்ளே வந்து அரசமகள் நிலை கண்டு பிரமித்தாள். "என்ன அம்மணி! ஏனிப்படி உட்கார்ந்திருக்கிறீர்கள்?" என்று வினவவும் செய்தாள்.

மன்னன் கூறியதை ஒன்று விடாமல் சொன்ன குமரி, "இதைப் பற்றி என்ன நினைக்கிறாய் குறிஞ்சி?" என்று வினவவும் செய்தாள்.

பாண்டிய குமாரியின் மலைப்பைவிடப் பன்மடங்கு அதிக மலைப்பை அடைந்த குறிஞ்சி பல விநாடிகள் பதில் சொல்ல வில்லை. "எல்லாம் விபரீதமாயிருக்கிறதே அம்மணி," என்று மட்டும் கூறினாள் நீண்ட நேர மௌனத்திற்குப் பிறகு.

"ஆம் குறிஞ்சி," என்றாள் குமரி.

"உங்களிடம் மையல் கொண்டுள்ள இந்திரபானு உங்களை அலட்சியம் செய்கிறார். பார்க்கவும் மறுக்கிறார். உங்களைக் கடத்திவந்த வீரரவி உங்களை உங்கள் காதலருடன் சேர்க்க முயல்கிறார். பெரிய விபரீதம்..." என்றாள் குறிஞ்சி.

"குறிஞ்சி!"

"ஏன் அம்மணி?"

"இந்த அரண்மனையில் ஒரு வேளை..."

"என்ன அம்மணி?"

"எல்லோருக்கும் புத்தி பிசகிவிட்டதா?"

"அப்படித்தான் தோன்றுகிறது."

"அல்லது..."

"உம்"

"நமக்குத்தான் பிசகியிருக்கிறதா?"

"அப்படியும் இருக்கலாம்."

முத்துக்குமரி சிறிது சிந்தித்தாள். "இன்னொன்று தோன்றுகிறது குறிஞ்சி," என்று மீண்டும் துவங்கினாள் உரையாடலை.



"என்ன தோன்றுகிறது?" என்று கேட்டாள் குறிஞ்சி.

"குருநாதர்..."

"பெரிய கலைஞர்."

"அது மட்டுமல்ல மந்திரவாதி. மருத்துவர் கூட."

"ஆம்."

"ஏதாவது கண்ட மருந்தைக் கொடுத்தோ, மந்திரம் ஜபித்தோ அவர் புத்தியை மாற்றியிருப்பாரோ?"

"அவர் புத்தியை மட்டும் மாற்றவில்லையே அம்மணி, அரசன் புத்தியையும் மாற்றியிருக்கிறாரே."

"ஆம். குறிஞ்சி! எனக்கெதுவும் புரியவில்லை," என்ற முத்துக்குமரி அதற்குப் பிறகு ஏதும் பேசவில்லை. கடைசியாக ஒரு விஷயம் மட்டும் சொன்னாள், "குறிஞ்சி! நான் சென்றதும் நீ எனது தகடியைப் போர்த்திக்கொண்டு வெளித் தாழ்வரை விளக்கின்கீழ் இரண்டொரு நிமிடங்கள் நில்," என்று.

"எதற்கு அம்மணி நிற்கவேண்டும்?" என்று வினவினாள் குறிஞ்சி.

"அரண்மனையில் முக்கிய நிகழ்ச்சி ஏதாவது ஏற்பட்டால் அது எனக்குத் தெரிந்தால் அப்படி நிற்கும்படி அவர் சொன்னார்" என்றார் குமரி.

"அவர்தான் இங்கேயே இருக்கிறாரே," என்றாள் குறிஞ்சி.

"அவர் சகாக்கள் அறியலாம். கூத்தன் அறியலாம். அவன் மூலம் என் தந்தையோ, சிறிய தந்தையோ அறியலாம். இந்தக் குழப்பத்திற்கு அதுதான் விடிமோட்சம்," என்றாள் குமரி.

அப்படியே செய்வதாகக் கூறிய குறிஞ்சி தனது அலுவல்களைக் கவனிக்கச் சென்றாள். அரசன் சொன்னபடி அனைத்தும் நடந்தன. இரண்டாம் ஜாம ஆரம்ப மணி அடித்ததும் அரசனே வந்து குமரியை அழைத்துச்சென்றான். அந்தப்புரத்தின் வாயிலுக்கு வந்ததும் "குமரி, இனி நான் வருவதற்கில்லை. இவர்

உன்னை அழைத்துச் செல்வார்," என்று கூறி சேனாதிபதியிடம் அவளை ஒப்படைத்தான்.

சேனாதிபதி அவளை அந்தப்புரத்தின் தாழ்வரை இருட்டிலேயே அழைத்துச் சென்று மெள்ள தென்புறத்திலிருந்த அந்தப்புர அந்தரங்க வாயிலுக்கு அழைத்து வந்தான். அங்கு பட்டத்துராணியின் ரதம் பயணத்துக்குத் தயாராயிருந்தது. ரதசாரதி ரத பீடத்திலேயே அமர்ந்திருந்தீதையும் அவன் பக்கத்தில் காவலர் இருவர் அமர்ந்திருந்ததையும் கவனித்த குமரி சேனாதிபதி ரதத்தின் திரைச்சீலையை நீக்க உள்ளே ஏறினாள். ஏறியவள் திகைத்தாள். பட்டுக் கவசம் தலையையும் முகத்தையும் மூடியிருக்க அமர்ந்திருந்தான் இந்திரபானு. திரும்பிப் பழையபடி தனது அறைக்கு ஓடிவிடலாமா என்று நினைத்தாள் குமரி ஒரு வினாடி. பிறகு பெருமூச்சு விட்டுத் தொப்பென்று ஆசனத்தில் விழுந்தாள். அடுத்த வினாடி ரதம் புறப்பட்டது. அடுத்த சில வினாடிகளில் அரச வீதியில் பறந்தது. வீசம் ஜாமத்திற்குள் தென்புறக் காட்டுப் பாதையில் நுழைந்துவிட்டது.

இது அத்தனையும் சித்தத்தில் கனவுபோல் சுழன்றதால் பிரமை பிடித்தவள் போல் உட்கார்ந்திருந்தாள் முத்துக்குமரி. பக்கத்தில் உட்கார்ந்திருந்த இந்திரபானுவின் போக்குக்கூட அவளுக்கு விபரீதமாயிருந்தது. இந்திரபானு அவள் பக்கத்தைக்கூட அணுகவில்லை. அவளைத் தொடவும் முயலவில்லை. அசையாமல் சிலைபோல் உட்கார்ந்திருந்தான். இரண்டாவது ஜாமம் கழித்து மூன்றாவது ஜாமம் நெருங்கியது சமயத்தில் ரதப்புரவிகளின் வேகம் சிறிது குறைந்து, மெள்ள மெள்ள சக்கரங்களின் சுழற்சி மும்முரம் குறைந்து கடைசியாக ரதம் நிற்கவும் செய்தது.

திரைச் சீலையை நீக்கிய வீரனொருவன், "தேவி, இறங்குங்கள்," என்று வணக்கத்துடன் தெரிவித்தான்.

முத்துக்குமரி மெள்ள இறங்கினாள். அவளைத் தொடர்ந்து இந்திரபானுவும் இறங்கினான். முத்துக்குமரி



சுற்றும்முற்றும் நோக்கினான். காட்டின் எல்லையைக் கடந்து கடற்கரையை அடைந்திருந்தது ரதம். தூரத்தே கடலில் மரக்கலம் ஒன்றிருந்தது.

"அது என்ன மரக்கலம்?" என்று வினவினான் பக்கத்திலிருந்த காவலனை நோக்கிய பாண்டியகுமாரி.

வீரன் வணக்கத்துடன் பதில் கூறினான், "சேர நாட்டுப் போர்க்கலம்," என்று.

"இங்கு எதற்கு நிற்கிறது?" என்று கேட்டாள் குமரி சந்தேகத்துடன்.

"தங்களை அழைத்துச் செல்ல." வீரன் பதில் திட்டவட்டமாக இருந்தது. சற்று ஏளனமும் அதில் ஒலித்தது.

## அத்தியாயம் 51

# செல்வியும் செல்வமும்

**வீ**ரன் சொன்ன செய்தியால் அதிர்ச்சியேதும் அடையவில்லை பாண்டியன் மகள். அதிர்ச்சியை மீறிய நிலையில் எதுவும் பாதிக்காத மனப் பக்குவத்தில் இருந்தாள் அவள். ஆகவே, வீரன் சொன்ன பதிலைத் தொடர்ந்து ஆத்திரத்தையோ சினத்தையோ சிறிதும் காட்டாமல் தூரத்தே கடலில் ஆடி நின்ற மரக்கலத்தையும் கடற்கரையையும் மாறி மாறிப் பார்த்தாள்.

காட்டு முகப்பிலிருந்து கடற்கரை சற்றுத் தள்ளியே இருந்தாலும் வங்கக் கடல் பகுதியில் காணப்படுவதுபோல அங்கு முந்திரிக் காடோ வேறு காட்டு மரத் தோப்புகளோ மணற்பரப்பைத் தொடக்கூட இல்லாததைத் கவனித்த முத்துக்குமரி தனக்கு உதவி ஏதாவது வருவதாயிருந்தால் காட்டு முகப்பை ரதம் எட்டுவதற்குள் வந்திருக்கவேண்டு மென்றும் வெட்ட வெளியான மணற்பரப்பில் யாரும் வருவதோ, உதவுவதோ முடியாதென்றும் உணர்ந்து கொண்டாள். தவிர, தான் சொன்னபடி குறிஞ்சி தனது தகடியுடன் தாழ்வரை விளக்கில் நின்றிருந்தாலும் தன்னை மன்னன் உடனடியாக ரதத்தில் வேகமாக அனுப்பி விட்டதால் அவர்கள் உதவுவதாயிருந்தாலும் அதற்கு அவகாசமில்லையென்பதைப் புரிந்துகொண்டாள் முத்துக் குமரி. ஆகவே, நிர்க்கதியான நிலையில் கடற் பகுதியை உற்று நோக்கினாள்.

கடலின் அலைகள் சற்று அதிகமாகவே கொந் தளித்தால் தூரத்தே நின்ற போர்க்கலம் அதிகமாக ஆடிக் கொண்டிருந்தது. கரையோரமாக இழுத்துத் தளைகளில் பிணைக்கப்பட்டிருந்த இரண்டு படகுகளின்மீதும்



கோபப்படுவனபோல் அலைகள் ஆத்திரத்துடன் வந்து அவற்றை அறைந்து கொண்டிருந்தன. சில சமயங்களில் அலைகள் பெரிதாகி நீர்ப்படகுகளின் அடியை ஊடுருவியதால் இரண்டு வினாடிகள் படகுகள் எழுந்து மிதந்து மீண்டும் மணலில் பதிந்தன. கடலின் கொந்தளிப்பும் மரக்கலத்தின் ஆட்டமும் தனது மனக் கொந்தளிப்பையும் ஆட்டத்தையும் போலவே இருப்பதைக் குமரி உணர்ந்தாள். படகுகள் தமிழகத்துத் தரையைவிட்டு அகல இஷ்டப்படாததைப் போலவே தன் மனமும் இஷ்டப்படவில்லையென்றும் குமரி அறிந்து கொண்டாள். இருப்பினும் சேரமான் ஆணையால் அந்தப் படகுகள் தளைகளிலிருந்து அவிழ்க்கப்பட்டுக் கடலோடிச் செல்லுமென்றும், அப்படியே தன் சிறைத்தளைகளை அவிழ்த்துவிட்ட சேரமான் ஆணை தன்னைப் போர்க் கப்பலில் ஏற்றிவிடத் தவறாதென்றும் புரிந்து கொண்டாள். அதன் விளைவாக அவளிடமிருந்து பெருமூச்சொன்று வெளிக் கிளம்பியது.

இந்திரபானு வெறும் கல்லென உணர்ச்சியற்று நின்று கொண்டிருந்தான். கவசத்தின் துவாரங்கள் மூலம் பள பளத்த அவன் கண்கள் தூரத்தேயிருந்த படகுகளையும், படகுகளிருந்த இடத்திலிருந்து வந்து கொண்டிருந்த நாலைந்து மாலுமிகளையும் கவனித்துக் கொண்டி ருந்ததைப் பார்த்தாள் பாண்டிய குமாரி. அவன் இடைக் கச்சையில் அவன் வீரவாள் அப்பொழுதும் தொங்கிக் கொண்டிருந்தது. ஆயினும் அவன் அதை உபயோகப்படுத்த முயலும் அறிகுறி எதுவும் அவன் நின்றிருந்த தோரணை யிலும் காணோம். அதைத் தவிர அவன் சேரமான் உத்தரவுக்கு இசைந்து விட்டவன் போலவும் தோன்றியது முத்துக்குமரிக்கு. அது உண்மையென்பதற்கு அத்தாட்சியும் அடுத்த வினாடி கிடைத்தது அவளுக்கு.

தன்னையும் அவளையும் காத்து நின்ற இரு வீரர்களை நோக்கிய இந்திரபானு, "ஏன்? எதற்காகக் காத்திருக்கிறோம்! போர்க்கலத்துக்குப் போகலாமே?" என்று கூறினான்.

வீரர்களில் ஒருவன் சொன்னான், "அதோ மாலுமிகள் வருகிறார்கள், வந்ததும் போகலாம்" என்று.

"மாலுமிகள் வரும்வரை நாம் காத்திருப்பானேன்?"

இந்தக் கேள்வி வீரர்களை வியப்பில் ஆழ்த்தியது. இந்திரபானு நடுவழியில் தப்பிச் செல்ல முயன்றால் என்ன செய்வது என்ற திகிலுடன் வந்திருந்த வீரர்களுக்கு அவன் தப்புவதற்கு எந்தவித ஆர்வத்தையும் காட்டாததே வியப் பாயிருந்தது. இந்திரபானுவின் வாள் திறனை அவர்கள் உணர்ந்திருந்ததால், அவனை வாளுடன் அனுப்புவதையே அவர்கள் முதலில் விரும்பவில்லை. ஆனால் சேனாதிபதி யின் உத்தரவு திட்டமாயிருந்தது. ரதத்தைத் தயார் செய்த பிறகு இந்திரபானுவை எந்தவிதத்திலும் அவர்கள் தொந்தரவு செய்யக் கூடாதென்றும் அவன் எப்படி வருகிறானோ அப்படியே கொண்டுபோய்க் கடலில் சேர்க்க வேண்டியதென்றும் சேனாதிபதி திட்டமிட்டிருந் தான்.

"அவர் தப்பிச் செல்ல முயன்றால்?" என்று வினவினான் வீரனொருவன்.

"தப்பிச் செல்லமாட்டார்," என்று திட்டமாகக் கூறினான் சேனாதிபதி.

ஆனால் வீரர்கள் நம்பவில்லை; தவிர மன்னன் நேரிடையாக வந்து முத்துக்குமரியை ரதத்தில் ஏற்றியபோது மன்னனை அதே கேள்வியைக் கேட்க அவர்களுக்குத் துணி வில்லை. ஆகவே மிகுந்த கிலியுடனேயே அவர்கள் ரதத்தில் வந்தார்கள். வழியில் எந்தவிதத் தொந்தரவும்இல்லாததே பெரும் இதமாயிருந்தது அவர்கள் இதயங்களுக்கு. இறங்கிய பின்பும் இந்திரபானு எந்தவிதச் செயலிலும் இறங்காதது வியப்பாயிருந்தது அவர்களுக்கு. அவன் மரக்கலத்துக்குப் போகத் துடித்தது அந்த வியப்பை உச்சத்துக்குக் கொண்டு செல்லவே வீரனொருவன் ஏளனத்துடன் கேட்டான், "சேர நாட்டிலிருந்து செல்ல அத்தனை துடிப்பா உங்களுக்கு?" என்று.

"ஆம்" என்றான் இந்திரபானு.



"மரக்கலம் எங்கு செல்கிறது தெரியுமா?" என்று வினவினான் மற்றொரு வீரன்.

"தெரியாது," என்றான் இந்திரபானு.

"அறிந்து கொள்ள இஷ்டப்படவில்லையா?" என்று வினவினான் மற்றொரு வீரன்.

"இல்லை."

"ஏன்?"

"சேரமான் எது செய்தாலும் நியாயமாகத்தான் செய்வார்."

இதைக் கேட்ட வீரன் மட்டுமல்ல, முத்துக்குமரியும் வியப்படைந்து இரண்டாம் முறையாக அவனை நோக்கினாள். "என்ன சொன்னீர்கள்" என்று வினவவும் செய்தாள்.

"மன்னர் எது செய்தாலும் நியாயமாகத்தான் செய்வா ரென்றேன்" என்றான் இந்திரபானு சர்வசாதாரணமாக.

"சேரமான் நியாயத்தில் உங்களுக்கு அத்தனை நம்பிக்கையா?" என்று சீறினாள் முத்துக்குமரி.

"ஆம்," என்று இந்திரபானுவின் பதில் திட்டமாக வெளிவந்தது.

"எத்தனை நாளாக இந்த நினைப்பபோ?"

"சில நாட்களாக."

"நினைப்புக்குக் காரணம்?"

"மன்னன் நடந்துகொண்ட முறை, சொன்ன விஷயங்கள், செய்த காரியங்கள்."

"மன்னர் பல விஷங்களை உங்களிடம் சொன் னாரோ?"

"என்னிடம் சொல்லவில்லை."

"பிறரிடம் சொன்னாரோ?"

"ஆம்."

"அது உங்களுக்குத் தெரிந்துவிட்டது."

"ஆம்."

"அதிலிருந்து உங்களுக்கு அவர் நியாயத்தில், தர்மத்தில் நம்பிக்கை பிறந்து விட்டது."

"அது மட்டுமல்ல," என்றான் இந்திரபானு மெள்ள.

"வேறென்ன?" என்று சீற்றம் ததும்பிய குரலில் கேட்டாள் குமரி.

"அவர் செயல்களிலும் நியாயமிருந்தது. சொன்ன வண்ணம் செய்தார்" என்றான் இந்திரபானு. அவன் குரலில் பெரும் பக்தியிருந்ததை முத்துக்குமரி மட்டுமின்றி வீரர்களும் கவனித்தார்கள்.

முத்துக்குமரியின் வெறுப்பு அதிகமாகிவிட்டதால் அவள் அதற்குமேல் பேசவில்லை. இந்திரபானுவை அந்தச் சமயத்தில் அடியோடு வெறுத்தாள் அவள். "நீங்கள் இத்தனை துரோகியென்று அடியோடு தெரியாது எனக்கு," என்று கூறினாள் இதயம் வெடித்துக் கொண்டிருந்ததை உணர்த்தும் குரலில்.

"ஏற்கனவே இந்தப் பட்டத்தை அளித்திருக்கிறாய் நீ" என்றான் இந்திரபானு ஏளனம் ஒலித்த குரலில்.

"எப்பொழுது?" என்று கேட்டாள் குமரி.

"கொட்டுந்தளத்தை நினைத்துப் பார்," என்றான் இந்திரபானு.

முத்துக்குமரியின் எண்ணங்கள் பழைய நிகழ்ச்சியில் சுழன்றன. கொட்டுந்தளத்தில் இந்திரபானு சேரன் பக்கம் சேர்ந்திருந்ததையும், பிறகு அவனே சேர நாட்டுக்கு அழைத்துச் செல்ல வீரரவியால் நியமிக்கப்பட்டதையும் நினைத்துப் பார்த்தாள். பிறகு அவனே பாதை மாற்றிக் காட்டுக்கோட்டைக்குத் தன்னையும் இளநங்கையையும் அழைத்துச் சென்றதையும் எண்ணிப் பார்த்தாள். இப்பொழுது அவன் செய்கை பழையபடி இருந்தது. 'ஒருவேளை சேரன் பக்கம் சேர்ந்துவிட்டதுபோல் பாசாங்கு செய்கிறாரே இவர்? வேறு ஆழ்ந்த கருத்து ஏதாவது இருக்குமோ இவருக்கு' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டாள். ஆனால் இந்திரபானுவின் அடுத்த சொற்கள் அவள் ஊகம் தவறு என்பதை நிரூபித்தன.



"என் பழைய நிலைமை வேறு. இன்றைய நிலைமை வேறு அரசகுமாரி. அன்று கொட்டுந்தளத்தில் எனக்கு அழகு இருந்தது. ஆனால் இன்று முகத்தை வெளியில் காட்டக்கூடாத நிலையில் இருக்கிறேன். இந்த நாட்டை விட்டு என் முகமறியாத இடத்துக்குப் போவதுதான் என் வாழ்வுக்கு நல்லது. அதற்கு உதவும் மன்னனுக்கு நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்" என்றான் இந்திரபானு.

அவன் சொற்களில் துயரம் தொனித்ததைக் கண்டாள் பாண்டியன் மகள். அவனுக்குக் குருநாதன் இழைத்தது பெரும் அநீதிதானென்பதை உணர்ந்து கொண்டாள். அதனால் பெருமூச்சும் விட்டாள்.

இந்திரபானுவும் அவள் அனுதாபத்தைக் கண்டான். அதன் விளைவாகச் சொன்னான், "அரசகுமாரி! இந்த அனுதாபத்திலிருந்து தப்பத்தான் நான் வெளிநாடு செல்லச் சம்மதித்தேன். என் முகத்தை அறியாத தேசத்திற்குச் சென்றுவிட நான் விரும்பியதை மன்னன் ஏற்றுக் கொண்டான். அவனுக்கு என் இதயம் நன்றி பாராட்டுகிறது. முன்பும் என் முகத்தை விகாரபடுத்திக் கொண்டேன் முத்துக்குமரி. உன் பொருட்டு துணிந்து செய்தேன் அதை. அப்பொழுது விகாரம் சிறிதளவுதான். என் ஜாடையை மறைப்பதற்கு வேண்டிய தழும்புகள் மட்டும் ஏற்படுத்தப் பட்டன. இன்று நிலைமை வேறு, பகலில் உலாவக் கூடாத நிலை. நான் ஏன் இந்த நாட்டைவிட்டு ஓடிவிட நினைக்கிறேனென்பது உனக்குத் தெரியாதா இப்பொழுது?" என்று.

நன்றாகப் புரிந்தது பாண்டியன் மகளுக்கு. மனமுடைந்த நிலையில் தகாத செய்கையும் தகுந்த செய்கையாக இந்திர பானுவுக்குப் படுவதை அவள் உணர்ந்து கொண்டதால் மேற்கொண்டு ஏதும் பேசவில்லை அவள். இந்திரபானுவும் மௌனம் சாதித்தான். இந்த உரையாடல் முடிவதற்கும், மாலுமிகள் வருவதற்கும் சமயம் சரியாயிருக்கவே மாலுமிகளிடம் இந்திரபானுவையும் முத்துக்குமரியையும் வீரர்கள் ஒப்படைத்தனர். வந்த மாலுமிகள் மொத்தம் அறுவர். அவர்கள் பூர்ண ஆயுதங்கள் அணிந்தே வந்திருந்தார்கள். அவர்களில் சற்று

உயரமாயிருந்தவன் கேட்டான் இந்திரபானுவை நோக்கி, "போகலாமா?" என்று.

"போகலாம். நீங்கள் கடற்படை உபதளபதியாயிருக்கும் பட்சத்தில்" என்றான் இந்திரபானு.

அந்த மாலுமி தனது கச்சையிலிருந்து செப்புப் பட்டயம் ஒன்றை எடுத்து நீட்டினான் இந்திரபானுவிடம். இந்திரபானு அதை நிலவொளியில் பார்த்துவிட்டுத் திரும்பி மாலுமியிடம் கொடுத்துவிட்டுத் தன் கச்சையிலிருந்த வாளை அவிழ்த்து, "உபதளபதி! இதோ நான் உங்களிடம் அடைக்கலம்," என்று அவனிடம் நீட்டினான்.

வாளைப் பெற்றுக்கொண்ட கடற்படை உபதளபதி ரதக் காவலரைத் திருப்பிச் செல்லும்படி பணித்துவிட்டு முத்துக்குமரியையும் இந்திரபானுவையும் தன்னைத் தொடரும் படி சைகை செய்து முன் நடந்தான். உபதளபதி முன் செல்ல மற்ற மாலுமிகள் பின்தொடர நடந்த இந்திர பானுவும் முத்துக்குமரியும் படகுகளிருந்த இடத்துக்கு வந்ததும் உபதளபதி அவ்விருவரையும் தன்னுடைய படகில் ஏற்றிக் கொண்டு படகைக் கடலில் தள்ள இரு மாலுமிகளைப் பணித்தான். படகு கடல் அலைகளைச் சேர்ந்ததும், "அரச குமாரி, பக்கப் பலகையைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுங்கள், இன்று அலை சற்று அதிகமாக இருக்கிறது" என்று எச்சரித்துவிட்டுத் தானே துடுப்புகளை நீரில் பாய்ச்சித் துழாவிப் படகைச் செலுத்தினான்.

எத்தனையோ கோர அலைகள் படகை நோக்கி வந்தும் படகை வெகு லாவகமாக அவற்றைத் தாண்டச் செய்த உபதளபதி தங்களுக்கு அதிக அவதியேதுமில்லாமல் படகை செலுத்தியதைக் கண்ட முத்துக்குமரிக்கு மன வேதனை பல இருந்தும் அந்தப் பயணம் சற்று அதிசயத்தை அளித்தது. மனிதன் லாவகம் கடலையும் வெற்றி கொள்வதை நினைத்து சிருஷ்டியையும் ஓரளரவு வெற்றி கொள்ளும் மனிதன் திறத்தை நினைத்து நினைத்து வியந்தாள் அவள். மனிதன் மட்டும் இந்தச் சக்தியை



நல்வழியில் உபயோகப்பபடுத்தினால் உலகத்தில் எத்தனை மகிழ்ச்சியிருக்கும் என்பதை நினைத்துப் பார்த்தாள் அவள். அந்தச் சக்தியையும் அளித்து ஆசாபாசங்களாகிற குறையையும் ஆண்டவன் அளித்ததற்கு ஏதோ மனித புத்தியால் உணர முடியாத காரணம் இருக்குமென்று தனக்குள் சொல்லிக் கொண்டாள் முத்துக்குமரி. இப்படிப் பலபடி எண்ணிக் கொண்டே மரக்கலத்தை அடைந்தாள்.

கப்பல்தளத்தில் முத்துக்குமரியுடன் நின்ற இந்திர பானு சுற்றுமுற்றும் நிலவொளியில் அழகாகவும் பயங்கரமாகவுமிருந்த மேற்றிசைக் கடலைக் கண்டான். குடக்கடலைச் சுற்றிலும் தொட்டுக்கொண்டிருந்த வானத்தையும் கண்டான். ஆனந்தப் பெருமூச்சொன்று அவளிடமிருந்து வெளிவந்தது. பிறகு தான் நின்று கொண்டிருந்த தளத்தைச் சுற்றிலும் கவனித்தான். சேர நாட்டின் பெரும் போர்க்கலமொன்றில் தானிருப்பதைப் புரிந்துகொண்டான். அந்தப் போர்கலத்தின் தளத்தின் கொடிகளிலும் பாய்மரத்தின் அடியிலும் பாய் விரிப்ப தற்குத் தயாராயிருந்ததையும் பார்த்தான். "அந்தப் படகு வந்ததும் கப்பல் பாய் விரித்தோடும்," என்று உபதளபதி சுட்டிக் காட்டியபோது அவன் உணர்ச்சி ஏதும் காட்டாமல் தலையை மட்டும் அசைத்தான்.

அவர்களிருவரையும் மரக்கலத்தின் நடுப்பகுதிக்கு அழைத்துச் சென்ற உபதளபதி, "பாண்டியர் உபதலைவரே! இது போர்க் கப்பலாதலால் இதில் மரக்கலத் தலைவனுக்குத் தான் தனி அறை உண்டு. மாலுமிகளுக்குப் பொதுக் கூடந்தான். ஆகவே நீங்களிருவரும் என் அறையில் தான் தங்க வேண்டும்," என்று கூறி மரக்கலத்தின் நடுவிலிருந்த தனது அறையைத் திறந்துவிட்டான். இருவரும் அறைக்குள் நுழைந்ததும் தானும் உடன் வந்து அங்கிருந்த விளக்கொன்றை ஏற்றிவிட்டு, "நீங்களிருங்கள்! நான் பாய் விரித்து மரக்கலத்தை ஓடவிட்டு வருகிறேன்," என்று கூறிச் சென்றான்.

அவன் சென்றதும் கடற்காற்றில் சரேல் சரேலென்று மூடியும் திறந்து கொண்டுமிருந்த அறைக் கதவைத் தாளிட்ட இந்திரபானு அங்கிருந்த தலைவன் மஞ்சத்தில் சாய்ந்து கொண்டான். "ஏன், உட்கார்," என்று முத்துக் குமரியையும் அழைத்தான்.

"வேண்டாம், நிற்கிறேன்," என்ற அவளைத் திடீரென்று பெரிதாக ஆட்டங்கொடுத்த கப்பல் அவனை நோக்கித் தள்ளியது. அவன் கைகளில் விழுந்தாள் பாண்டியன் மகள். அவளை இறுகப் பிடித்த கைகளிலிருந்து அடுத்த விநாடி திமிறவும் முயன்றாள். அவன் கைகள் அவளை விடவில்லை.

"விடுங்கள் என்னை," என்றாள் முத்துக்குமரி.

"முடியாது," என்றான் இந்திரபானு.

"ஏன்?" என்று சீறினாள் அவள்.

"பாண்டியன் செல்வியையும் விடமுடியாது. பாண்டியன் செல்வத்தையும் விடமுடியாது," என்றான் இந்திரபானு.

'என்ன உளறுகிறீர்கள்?" என்று திமிறினாள் அவள்.

"உளறவில்லை. இந்த மரக்கலத்தில் பயணம் செய்வது நீயும் நானும் மட்டுமல்ல," என்றான் இந்திரபானு.

"வேறு யார் பயணம் செய்கிறார்கள்?"

"எது என்று கேள்?"

"எது?"

"பாண்டிய நாட்டு முத்தும் பயணம் செல்கிறது. முத்து நிரம்பிய மூன்று பெட்டிகள், கொற்கையின் களவு போன பெரும் செல்வம் நம்முடன் வருகிறது," என்று இந்திரபானு நகைத்தான் மெல்ல.

நகைத்தது அவன் மட்டுமல்ல. அதே நேரத்தில் அரண்மனையிலிருந்த வீரரவியும் நகைத்துக் கொண்டு தானிருந்தான்.

அத்தியாயம் 52

# குருநாதனுக்கு மீண்டும் சிறை

அரண்மனை அந்தபபுரப் பகுதிலிருந்த தனது அந்தரங்க அறையில் அன்றிரவின் மூன்றாம் ஜாமம் நாலாவது ஜாமத்தை எட்டிப் பிடிக்க முயன்று கொண்டிருந்த சமயத்தில் பஞ்சணையில் உட்கார்ந்து கொண்டிருந்த சேர மன்னனான வீரரவி உதய மார்த்தாண்டவர்மன் மகிழ்ச்சி மிகுதியால் வாய்விட்டு நகைத்தான். எதிரே அடக்கத்துடன் நின்றிருந்த சேனாதிபதி மன்னனைப்போல் வாய்விட்டு நகைக்கவில்லையானாலும் வித்தியாசம் இருக்கவே செய்தது. முன்னமேயே இட்ட திட்டப்படி இந்திரபானுவையும் முத்துக்குமரியையும் பாண்டியன் பெரும் செல்வத்தையும் சிங்களத்துக்குக் கடத்திவிட்டாலும் குருநாதன் போர்த் திட்டமும் விளக்கமாகத் தெரிந்துவிட்டதாலும் 'இனி குருநாதனையும் தீர்த்துக் கட்டலாம்' என்ற நினைப்பாலும் தங்கு தடையின்றி மகிழ்ச்சி பிரவாகித்துக் கொண்டிருந்தது மன்னன் மனத்தில். ஆனால் சேனாதிபதியின் இதயத்தில், குருநாதன் திட்டத்தைத் தான் வெட்டவெளிச்சமாக்கி விட்டாலும் குருநாதனை மீறிச் செயலில் இறங்குவது அத்தனை சுலபமல்லவென்ற நினைப்பால் மகிழ்ச்சியுடனும் சற்று அச்சமும் கலந்தே இருந்தது. அதன் விளைவாக அவன் மன்னன் உற்சாகத்தில் முழுவதும் கலந்துகொள்ள முடியாது, நின்ற இடத்தில் சற்று சங்கடத்துடன் அசையவும் செய்தான். சேனாதிபதியின் சங்கடத்தை மன்னன் கவனிக்கத் தவறாததால் நகைப்பைத் தொடர்ந்து லேசாகப் புன்முறுவலும் செய்து கேட்டான், "ஏன் சேனாதிபதி!

உனக்கு இன்னும் குருநாதரிடமுள்ள கிலி போகவில்லை போலிருக்கிறது?" என்று.

சேனாதிபதியின் கண்கள் மன்னன் கண்களைச் சற்றுத் தைரியத்துடனே சந்தித்தன. "மன்னவா! குருநாதர் மிகத் தந்திரசாலி. மக்கள் அவரைப் பெரிதும் மதிக்கின்றனர்," என்று சுட்டிக் காட்டினான் சேனாதிபதி.

"அதைப்பற்றிக் கவலைப் படாதே சேனாதிபதி. மக்கள் இன்று மதிப்பவனை நாளை மதிப்பதில்லை. மக்களுக்கு தீர்க்காலோசனை கிடையாது. அவ்வப்பொழுது தங்களுக்குக் கிடைக்கும் நன்மை தீமைகளைப் பொறுத்து அவர்கள் மதிப்பும் கசப்பும் மாறிவிடுகின்றன. குருநாதரிடமிருக்கும் மதிப்பை மக்களிடமிருந்து அகற்றுவது இனிப் பிரமாதமில்லை," என்ற மன்னன், "குருநாதர் விஷயத்தை நான் கவனித்துக்கொள்கிறேன். போர் விஷயத்தில் இனி அவர் உதவி உனக்குத் தேவையா? அதை மட்டும் சொல்," என்று வினவினான்.

சேனாதிபதியின் பதில் திடமாக வந்தது. "தேவையில்லை மன்னவா. குருநாதர் நகரத்தின் கோட்டை மதில்களில் விற்பொறி வேல் பொறிகளையும் நகரத்தைச் சுற்றிலும் கூட்டம் கூட்டமாகவும் வரிசை வரிசையாகவும் படைகளையும் நிறுத்தச் சொன்ன காரணத்தை நானறிவேன். இடையிடையே முரசுகளை வைக்கச் சொன்ன காரணமும் தெரியும் எனக்கு. படைகளுக்கு இடையிடையே தனித்தனியாக நகரத்தைச் சூழ இருக்கும் முரசுகள் ஒலித்ததும் பிரிந்து நிற்கும் படை வரிசைகள் இணையும். கண்ணிமைக்கும் நேரத்தில் நகரத்தைச் சுற்றிப் பலமான படை வளையம் ஏற்படும். இப்படிச் சுமார் ஐந்து வளையங்களை அமைக்க குருநாதர் திட்டமிட்டார். அத்தனையையும் அமைத்திருக்கிறேன். அவரிஷ்டப்படி எரிபரந்தெடுத்தலால் வீடு வாசல் விட்டு வந்திருக்கும் கிராமமக்களில் பலசாலிகளான வாலிபருக்கு ஆயுதங்கள் கொடுத்து நகரத்தின் வடக்கெல்லையில் கடற்கரையோரமாக உள்ள பாதையில் நிறுத்தியிருக்கிறேன். இந்த நகரத்தின் பாதுகாப்பைப் பெரும் படையே இப்பொழுது உடைக்க முடியாது. நகரத்தைச் சுற்றி ஐந்தடுக்கு வளையங்கள், தளங்களில் விற்பொறிகளுடன் மேற்கே பலமான கடற்படை, கடற்கரை வடக்கு வழியில் ஆயுதந்தாங்கி நிற்கும் கிராம மக்கள் கூட்டம். தெற்கில் பெருங்காட்டில் மறைந்த பல வீரர்கள். இத்தனை பயங்கர ஏற்பாடுகளை யாரும் ஊடுருவ முடியாது. கிழக்கு எல்லையில் பாண்டியன் வரவே முடியாது. கோட்டைச் சுவருக்கு எதிரேயுள்ள காட்டு முகப்பு அழிக்கப்பட்டதால் வில் மூலம் வரும் எரியம்புகள் கோட்டையை அணுக முடியாது. எதிரிகள் வெட்டவெளியில் வந்தால் நமது விற்பொறிகளால் அழிக்கப்படுவார்கள்" என்று விளக்கிய சேனாதிபதி, "போருக்கு நான் சித்தம் மன்னவா! அதற்குக் குருநாதர் உதவி தேவையில்லை. இருப்பினும் என் மனத்தில் விவரிக்க இயலாத ஏதோ ஒரு சந்தேகம், பயம் இருந்து கொண்டேயிருக்கிறது குருநாதரைப் பற்றி," என்றும் முடிவாகக் கூறினான்.



அந்தப் பயம் அனாவசியமென்பதை மன்னன் தனது கையின் ஓர் அசைவினாலேயே தெரிவித்தான். "போரை நீ கவனி சேனாதிபதி. நான் குருநாதரைக் கவனிக்கிறேன். இந்திரபானுவும், முத்துக்குமரியும் தப்பிவிட்ட செய்தியை மக்களிடம் பரப்பு," என்றான் மன்னன்.

"எப்படித் தெரிவிப்பது மன்னவா?" என்று வினவினான் சேனாதிபதி.

"அவ்விருவரும் தப்பிவிட்டதாகவும், பிடித்துக் கொடுப் போருக்கு நல்ல வெகுமதி உண்டென்றும் முரசறைவித்து விடு," என்று உத்தரவிட்ட மன்னன், "பட்டத்துராணியின் ரத சாரதியையும், ரதத்துடன் சென்ற வீரர்களையும் தற்காலிகமாகச் சிறையில் அடைத்து வை," என்றும் கூறினான்.

சேனாதிபதியின் முகத்தில் வியப்புத் தோன்றியது. "அவர்களை எதற்குச் சிறை செய்யவேண்டும்?" என்று வினவினான்.

"நானும் நீயும், இந்திரபானுவையும், முத்துக்குமரியையும் அனுப்பியது அவர்களுக்குத் தெரியுமல்லவா?"

"ஆமாம்."

"அவர்களை ஏதாவது உளறுவது விரும்பத்தக்கதா?"

"இல்லை."

"ஆகவே சிறையிலடைத்துவிடு. பிறகு விடுதலை செய்வோம்."

மன்னன் கபடம் பூராவும் சேனாதிபதிக்குத் தெரிந்தது. அவசியமானால் மன்னன் தன்னையும் நீக்கத் தவறமாட்டான் என்பதைப் புரிந்துகொண்டதால் மௌனமே சாதித்தான் சேனாதிபதி.

"ரதம் வந்தவுடன் சாரதியையும் வீரர்களையும் கவனித்துவிடு. குருநாதர் ஏதாவது கேட்டால் என்னைக் கேட்டுக்கொள்ளச் சொல். போர் ஏற்பாடுகள் மும்முரமாகத் தொடர்ந்து நடக்கட்டும்,'' என்ற மன்னன் சேனாதிபதி போகலாமென்பதற்கு அறிகுறியாகக் கையை அசைத்தான்.

சேனாதிபதி தலைவணங்கி தீவிர சிந்தனையுடன் வெளியேறினான். ஆனால் மன்னன் மன மகிழ்ச்சியுடன் படுத்துக் கொண்டான். அந்த மகிழ்ச்சி அடுத்த ஒரு வாரம் தினம் தினம் உச்சநிலையை அடைந்து கொண்டிருந்தது. கிட்டத் தட்ட மூன்று மாத காலமாகத் தன்னைவிட்டு விலகி நின்ற அதிர்ஷ்ட தேவதை மீண்டும் தன் பக்கம் திரும்பிவிட்டதை உணர்ந்தான் மன்னன்.

இந்திரபானு மறைந்த நாள் குருநாதன் மன்னனை அணுகி இந்திரபானுவைப் பற்றி விசாரித்தபோது, "அவனைப்பற்றி யாருக்காவது தெரியவேண்டுமென்றால் உங்களுக்குத்தானே தெரியவேண்டும்," என்று அலட்சியமாகப் பதில் சொன்னான் வீரரவி. அரியணையிலிருந்து இறங்கவும் இல்லை. தானாகவே வந்து எதிரே நின்ற குருநாதனை உட்காரக்கூடச் சொல்லவில்லை வீரரவி. சரியாகக் குருநாதனை ஏறிட்டுப் பார்க்கவும் இல்லை அவன்.



மன்னனின் திடீர் மாற்றம் பெரும் வியப்பை அளித்தது குருநாதனுக்கு. முந்திய நாள்வரை தன்னிடம் தாசனாயிருந்த மன்னன் தன்னை அடியோடு அலட்சியம் செய்வதையும் முகங் கொடுத்துப் பேசாததையும் கண்டதும் குருநாதன் ஏதோ விபரீதம் நடந்திருக்கிறது என்று மட்டும் தீர்மானித்துக் கொண்டதால் நிதானத்தை இழக்காமலே மன்னனை நின்றபடி ஏறிட்டு நோக்கினான். "இந்திரபானுவை அவன் அறையில் காணவில்லை," என்றான் குருநாதன் உள்ளுக்குள் இருந்த குமுறலை வெளிக்குக் காட்டாமல்.

"வெளியே எங்காவது போயிருக்கலாம்," என்றான் அரசன் கையிலிருந்த ஓர் ஓலையைப் படித்துக் கொண்டே.

"அரண்மனையை விட்டுப் போக நான் அனுமதியளிக்கவில்லை அவனுக்கு," என்றான் குருநாதன்.

"பின் போயிருக்க மாட்டான்," என்றான் மன்னன்.

"போய்விட்டான் மன்னவா. அவன் அரண்மனையில் இல்லை; முத்துக்குமரியும் இல்லையாம்," என்றான் குருநாதன் மெல்ல.

மன்னன் கண்கள் அதிர்ச்சியுடன் எழுந்தன ஓலையிடமிருந்து. "என்ன! என்ன சொன்னீர்கள்!" என்று வினவினான் அந்தப் போலி குரலிலும் ஒலிக்க.

"முத்துக்குமரியையும் காணவில்லையாம்," என்றான் குருநாதன் மீண்டும் நின்ற இடத்தில் அசையாமல் நின்ற வண்ணம்.

மன்னன் அரியணைப்படியில் எழுந்து நின்றான். அவன் எழுந்த வேகத்தில் படியிலிருந்த காலணையும் சற்று அழுந்தியது. "குருநாதரே! விளையாட வேண்டாம். முத்துக்குமரி எங்கும் போயிருக்க முடியாது. பலத்த காவலில் வைத்திருந்தேன்," என்றான்.

"குறிஞ்சியைக் கேள்," என்றான் குருநாதன்.

"என்ன சொன்னாள் குறிஞ்சி?" ஆத்திரத்துடன் எழுந்தது மன்னனின் கேள்வி.

"முத்துக்குமரி அறையில்இல்லை என்றுமட்டும் கூறினாள். வேறெதுவும் சொல்ல மறுக்கிறாள்," என்றான் பரதபட்டன்.

"வற்புறுத்திக் கேட்பதுதானே?"

"கேட்டேன்."

"அதற்கு என்ன சொன்னாள்?"

"உன்னைக் கேட்கச் சொன்னாள்?"

"என்னையா?" மன்னன் குரலில் ஆத்திரம் இருந்தது.

"ஆம் உன்னைத்தான்," என்ற குருநாதன் குரலில் மீண்டும் கடுமை இருந்தது.

மன்னன் அரியணைப் படியிலிருந்து கீழே இறங்கி குருநாதனை எரித்துவிடுவதுபோல் பார்த்தான். "குரு நாதரே! என்ன நாடகம் இது? அந்தப் பாண்டியன் வேவுகாரியும் நீரும் சேர்ந்து எங்கு கடத்தினீர்கள்கள் பாண்டியன் மகளையும், எனது விரோதியையும்? சொல்லுங்கள் உண்மையை?" என்று கடுங்கோபத்துடன் கேட்டான் மன்னன்.

குருநாதன் சித்தத்தில் மெள்ள மெள்ள உண்மை உதயமாகவே அவன் முகத்திலும் சினம் லேசாகத் தெரிந்தது. உதடுகளில் சினம் கலந்த முறுவலும் தெரிந்தது. "மன்னவா! நாடகமாடுவதில் என்னைவிட நீ வல்லவனா யிருக்கிறாயே. இதுவரையில் கலைஞனென்ற இறுமாப்பு எனக்கு இருந்தது. அந்தப் பட்டம் உனக்கே உரியது," என்று கூறினான் வெறுப்புடன் பட்டன்.

"குருநாதரே! இப்பொழுது புரிகிறது எனக்கு. நீரும் பாண்டிய ஒற்றராகத்தானிருக்க வேண்டும். இல்லையேல் இந்திரபானுவையும், முத்துக்குமரியையும் உம்மிடம் ஒப்படைக்கச் சொல்லிவிட்டு, அவர்களைத் தப்ப வைத்து அந்தப் பழியை என்மீதே போடுவீரா? உம்மை நம்பினேன் குருநாதரே. எனது விரோதிகளை, நகரப் பாதுகாப்பை,



படைகளை உம்மிடம் நம்பி ஒப்படைத்தேன். போரில் சிறந்த படைத்தலைவர்களை உமக்கு அடிமையாக்கினேன். ஏன்? நான் என்னையே அடிமையாக்கிக் கொண்டேன். இத்தனைக்கும் உட்பட்ட என்னை இந்திரபானு எங்கே, முத்துக்குமரி எங்கே என்று கேட்க உமக்கு மிகத் துணிவு வேண்டும். அவர்களிருவரும் உமது ஆணைக்குட்பட்ட வர்கள். உமது பார்வையிலிருந்தவர்கள். அவர்கள் எங்கே யென்று என்னைக் கேட்கிறீர்கள். இப்பொழுது உண்மை யைச் சொல்லும். எங்கே அவர்கள்? எங்கு அனுப்பினீர் அல்லது எங்கு மறைத்திருக்கிறீர்? ராஜத்துரோகம் பெருங் குற்றம் குருநாதரே! நம்பிக்கைத் துரோகம் பஞ்சமா பாகங்களில் ஒன்று." உணர்ச்சியும் கோபமும் கலந்த குரலில் இரைந்தான் அரசன்.

எதற்கும் அசையாத குருநாதன் திக்பிரமை பிடித்து நின்றான். மன்னன் எத்தனை கெட்டிக்காரத்தனமாய் தன்னைப் பெரும் இக்கட்டில் கொண்டுவந்து நிறுத்தி விட்டான் என்பதை உணர்ந்தான் குருநாதன். மன்னன் இந்திரபானுவையும் முத்துக்குமரியையும் தன்னிடம் ஒப்படைத்தது அரண்மனைக் காவலருக்குத் தெரியும். மக்களிடை அந்தச் செய்தி பரவவும் காலமிருந்திருக்கிறது, அவ்விருவரைப் பற்றித் தனக்கு ஏதும் தெரியாதென்றால் யாரும் நம்பமாட்டார்களென்பதைக் குருநாதன் உணர்ந்தான். ஆனால் போரைப்பற்றி மன்னன் என்ன செய்யப் போகிறான் என்று நினைத்துப் பார்த்தான்.

அடுத்த விநாடி அதற்குப் பதில் கிடைத்தது. மன்னன் இரைந்து கொண்டிருந்த சமயத்தில் உள்ளே நுழைந்த சேனாதிபதி மன்னன் இரைச்சல் முடிந்ததும் மெள்ளச் சொன்னான்; "குருநாதர் உத்தரவுப்படி நகரப் பாதுகாப்பை அமைத்துவிட்டேன்," என்று.

குருநாதன் சேனாதிபதியை நோக்கினான் சந்தேகத் துடன். சேனாதிபதி விளக்கினான். "குருநாதர் சொற்படி படை வளையங்களை அமைத்துவிட்டேன். குருநாதர் எள்

என்றவுடன் எண்ணெயென்று நிற்பது அடியவன் கடமை யல்லவா?" என்றான் சேனாதிபதி.

மற்றோர் இடி குருநாதர் தலையில் இறங்கியது. இந்திரபானுவைப்போல சேனாதிபதியும் தனது பாதுகாப்பு முறையைப் புரிந்து கொண்டு விட்டான் என்பதை உணர்ந்துகொண்ட குருநாதன் மன்னனும் சேனாதிபதியும் கலந்தே சகலத்தையும் செய்து முடித்திருக்கிறார்களென்று ஊகித்துக் கொண்டான். அதனால் நிலைகுலைந்து நின்ற குருநாதனை நோக்கிய மன்னன், "குருநாதரே! எங்கே அவர்கள்!" என்று மீண்டும் ஒரு கேள்வியை வீசினான்.

"யார் மன்னவா?" ஏதுமறியாததுபோல் சேனாதிபதி கேட்டான்.

"பாண்டியன் மகளும், இந்திரபானுவும்," என்றான் மன்னன்.

"அவர்களுக்கென்ன?" என்று வினவினான் சேனாதிபதி பூனைபோல்.

"அரண்மனையில் காணோமென்று குருநாதர் கூறு கின்றார்" என்றான் மன்னன்.

"குருநாதரா?" வியப்பு ஒலி கிளப்பினான் சேனாதிபதி.

"ஆம்." மன்னன் குரலில் வெறுப்பு ஒலித்தது.

சேனாபதி குருநாதனை நோக்கி, "எங்கே அவர்கள் குருநாதரே! தங்கள் உத்தரவின்றி யாரையும் அரண் மனைக்கு வெளியே அனுப்பக் கூடாதென்று காவலருக்கு உத்தரவிட்டிருந்தோமே" என்றான்.

குருநாதன் மன்னனையும் நோக்கி சேனாதிபதியை யும் நோக்கினான். "மன்னனுக்கு ஏற்ற சேனாதிபதி," என்றும் வாய்விட்டுச் சொன்னான்.

"குருநாதரே, பாசாங்குக்கு ஒரு முடிவு கட்டவேண் டியது அவசியம்," என்றான் அரசன்.

"ஆம்," என்று ஆமோதித்த குருநாதன், "மன்னவா! உன் நாடகத்தின் கடைப்பகுதி நடக்கட்டும்," என்றான் முடிவில் திடமான குரலில்.



"எது கடைப்பகுதி?" என்று கேட்டான் மன்னன்.

"என்னைச் சிறை செய்ய வந்திருக்கும் சேனாதிபதிக்கு அனுமதி கொடு," என்ற பரதபட்டன், "சேனாதிபதி! வீரர்களை அழை," என்றும் உத்தரவிடும் தோரணையில் கூறினான்.

மன்னன் சேனாதிபதியை நோக்கி, "குருநாதர் குற் றத்தை ஒப்புக்கொள்கிறார்," என்றான்.

"தண்டனையையும் அவரே விதித்துக் கொள்கிறார்" என்றான் சேனாதிபதி.

"அவர் விருப்பத்தை நிறைவேற்றிவிடு," என்றான் மன்னன்.

அடுத்த விநாடி சேனாதிபதி கைதட்ட, உள்ளே நுழைந்த வீரர்கள் உருவிய வாட்களுடன் குருநாதனுக்கு இருபுறமும் நின்றார்கள். அவர்களுடன் செல்லுமுன்பு மன்னனை வெறுப்புடன் நோக்கிய குருநாதன், "சேரர் பெருமானே! உன்னைக் காக்கவல்ல ஒரே ஒருவனையும் அகற்றிவிட்டாய். இத்துடன் சேரர் தலைநகர் அழிந்தது. செருக்களத்தில் பாண்டியன் தயவில் நீ நிற்கும்போது என்னை நினைத்துக்கொள்," என்று சற்றே இரைந்தே கூறினான். மேலும் சொன்னான், "நாளை ராமவர்மன் வருகிறான் தலைநகருக்கு. அவன் கூறும் செய்தியையும் கேள். உன் வீழ்ச்சியின் துவக்கத்தைப் புரிந்து கொள்வாய்," என்று. அத்துடன் வெறுப்பு நகைப்பொன்றையும் உதிர விட்டான். அந்த நகைப்பை அந்த மந்திராலோசனை மண்டபம் பயங்கரமாக எதிரொலி செய்தது. அதையும் வீரரவி லட்சியம் செய்யவில்லை. "இந்தத் துரோகியை இழுத்துச் செல்லுங்கள்," என்றான் வீரர்களை நோக்கி.

## அத்தியாயம் 53

# போர் ஏற்பாடுகள்

சேரமானான வீரரவி உதய மார்த்தாண்டவர்மன், குருநாதன் முகத்தில் துலங்கிய வெறுப்புக் குறியாலோ எச்சரிக்கையும் இகழ்ச்சியும் நிரம்பிய சுடுசொற்களாலோ சிறிதும் கலங்கவில்லை. வீரர்கள் பரதபட்டனைச் சிறைக் கூடத்திற்கு அழைத்துச் சென்ற பிறகு பக்கத்தில் நின்ற சேனாதிபதியை நோக்கி, "வேடன் வலையில் சிக்கிக் கொள்ளும் பறவைகள்கூட இப்படித்தான் காது துளைக்கக் கத்துகின்றன!" என்று அலட்சியத்துடன் கூறிப் புன் முறுவல் கோட்டினான். ஆனால் சேனாதிபதிக்கு மன்னனுக்கிருந்த துணிவு இல்லாததால், "குருநாதர் ஏதோ ராமவர்மரைப் பற்றிக் குறிப்பிட்டாரே," என்று வினவினான் சிறிது அச்சத்துடன்.

சேனாதிபதியின் குரலிலிருந்து அச்சத்தைக் கவனித்த வீரரவியின் புன்முறுவல் அவன் அழகிய இதழ்களில் நன்றாக விரிந்தது. "ராமவர்மன் உனது உபசேனாதிபதி தானே?" என்று வினவினான் சர்வசாதாரணமாக.

"ஆம் மன்னவா" என்று பதில் கூறினான் சேனாதிபதி.

"அவர் திறமையற்றவன் அல்ல" என்றான் மன்னன் மீண்டும்.

"அல்ல."

"நாட்டுப்பற்று அதிகமுள்ளவன்."

"நாட்டுக்காகவும், மன்னனுக்காகவும் எந்தத் தியாகமும் செய்யத் தயங்கமாட்டான்."



"ஒருவேளை கோட்டாற்றுக்கரை போர் நமக்கு எதிராக முடிந்திருந்தாலும் அதற்காக ராமவர்மனை நாம் வெறுக்கவா போகிறோம்?"

"இல்லை."

"ஆகையால் அவன் வரட்டும் பார்ப்போம். வந்தபின் சொல்வதையும் கேட்போம். வீரபாண்டியனின் போர் முறைகளை நேரில் கண்டவன் கொண்டுவரும் செய்தி நமக்கும் படிப்பினையாயிருக்கும்," என்று சுட்டிக் காட்டினான் மன்னன்.

"ஆம் ஆம்" என்று சேனாதிபதியும் ஒப்புக் கொண்டான்.

வீரரவி அத்துடன் சேனாதிபதியைக் கூர்ந்து நோக்கி, "சேனாதிபதி! கோட்டாற்றுக்கரை போர் வெற்றியில்லாமல் நமது படை பின்வாங்கி வந்தாலும் நகரின் படைபலம் பெருகத்தான் செய்யும். இங்கு தலைநகருக்குள்ளே வீர பாண்டியனிடம் நட்புக் காட்டி நமக்கு உபதேசம் செய்து கொண்டிருந்த புல்லுருவி குருநாதரைச் சிறையிலடைத்து விட்டோம். பாண்டியர் உபதலைவனான இந்திர பானுவையும் சிங்களத்துக்கு அனுப்பிவிட்டோம். எந்த முத்துக்குவியலுக்காகவும், மகளுக்காகவும் பாண்டிய சகோதரர்கள் போர் தொடுத்திருக்கிறார்களோ அந்த முத்தும் சரி, முத்துக்குமரியும் சரி சிங்களத்தை நோக்கிப் பயணம் செய்வதற்கு ஏற்பாடு செய்துவிட்டோம். தவிர குருநாதன் மிகத் தந்திரத்துடன் பாண்டிய வீரர்களை அழிக்கச் செய்த திட்டமும் நம் வசம் சிக்கிவிட்டது. இனி அச்சத்திற்குக் காரணம் ஏதுமில்லை," என்று கூறி அவனுக்குத் துணிவையும் ஊட்டினான் மன்னன்.

மன்னனின் அத்தனை உறுதியும் சேனாதிபதிக்கு நம்பிக்கையளிக்க மறுத்தது. ஆகவே சற்றுத் தயங்கவே செய்தான் சேரர் படைத்தலைவன்.

அவன் தயக்கத்தைக் கண்ட மன்னன், "தயக்கம் வெற்றியைத் தருவதில்லை. வீரர்கள் சாவுக்கும் அஞ்சுவ தில்லை," என்றான் சற்று எரிச்சலுடன்.

"நான் சாவுக்கஞ்சவில்லை மன்னவா! இத்தலை நகரின் நலத்துக்கு அஞ்சுகிறேன்," என்றான் சேனாதிபதி.

"சேனாதிபதி!" சற்று உக்கிரத்துடன் எழுந்தது அரசன் குரல்.

"மன்னவா!"

"எதிரியின் படைபலம் எத்தனை தெரியுமா?"

"நமது படைபலத்தில் ஐந்திலொரு பகுதிதான்."

"அந்தச் சொற்பப் படையை வைத்துக்கொண்டு போரில் அவன் என்ன செய்யமுடியும்?"

இதைக் கேட்ட சேனாதிபதி மெள்ள, "அவன் கோட்டாற்றுக்கரையில் என்ன செய்து தொலைத்தானோ தெரியவில்லையே," என்றான் லேசாக விஷமத்தைக் காட்டி.

சேனாதிபதியின் குத்தலை வீரரவி நன்றாகப் புரிந்து கொண்டான். "அங்கும் பாண்டியன் படைபலம் மிகக் குறைவுதானே என்கிறாயா?" என்று வினவினான்.

"ஆம்."

"அங்கு மாத்திரம் எப்படி அவன் நமது பெரும் படையை முறியடித்தானென்று வியக்கிறாய்!"

"ஆம்."

"முறியடித்தானென்பது என்ன நிச்சயம்?"

"நிச்சயமில்லை."

"அப்படியா? முறியடித்திருந்தாலும் ஒரு வித்தியாச மிருக்கிறது."

"என்ன வித்தியாசமோ?"

"அங்கு வீரபாண்டியனை எதிர்நோக்கியவன் சிங்கணன்..." என்று சுட்டிக் காட்டினான் மன்னன்.

"இங்கு தாங்கள் போலிருக்கிறது?" என்றான் சேனாதிபதி சற்று விஷமமாக.



"தந்திரம் என்று வந்துவிட்டால் வீரரவியும் சளைத்தவனல்ல."

"இது போர் விஷயம்."

"அதிலும் என் தந்திரத்தைச் சீக்கிரம் புரிந்து கொள்வாய். நிம்மதியுடன் போய்வா. குருநாதர் இந்திர பானுவையும், முத்துக்குமரியையும் மறைத்துவிட்டதாகவும் அதற்காக அவர் சிறை செய்யப்பட்டிருப்பதாகவும் செய்தியை நகரத்தில் பரப்பு," என்று கூறிய மன்னன் அவன் செல்லலாமென்பதற்கு அறிகுறியாகக் கையை அசைத்தான்.

அன்றும் மறுநாளும் மன்னன் மிகுந்த குதூகலத்துடன் காணப்பட்டான். அடிக்கடி ரதத்தில் சென்று கடற்கரைப் பகுதியையும் கிழக்கிலிருந்து மலைப்பகுதிப் போர் ஏற்பாடுகளையும் தானே நேரிடையாகக் கவனித்தான். நகரமெங்கும் மக்கள் சர்வ சுதந்திரத்துடன் உலாவுவதையும் குதூகலத்துடனிருப்பதையும் கண்டான். அந்தக் குதூகலத்திற்குச் சிறிதும் இடைஞ்சலேற்படாத வகையில் பரலிமாநகர்க் காவல் ஏற்பாடுகளையும் உபசேனாதிபதிகளையும், கடற்படைத் தளபதி, உபதளபதி இவர்களை இருமுறை வரவழைத்து நகரக் காவலுக்கான திட்டங்களையும் விளக்கினான். ஐயாயிரம் குதிரைப் படையினர் மேற்குக் கோட்டை மதில் நெடுக நான்கு பிரிவுகளாகப் பிரித்து நிற்கட்டும். குருநாதன் இடையிடையே வைத்துள்ள முரசுகள் முழங்கியதும் அவை கிழக்கு வாயில் வழியாக வெளியே செல்லட்டும். குதிரைப் படைக்கும் முன்பாகக் காலாட்படை நிற்கட்டும். அவர்கள் வில் வளைத்து நாணேற்றி முன் செல்ல, குதிரைப்படை அவர்களைத் தொடரும். வெளியே சென்றதும் இரு படைகளும் சக்கிர வியூகமாக வளைந்து மூன்று பிரிவுகளாகப் பிரிந்து மூன்று வழிகளில் முன்னேறும். இடையே எப்பொழுது எதிரி வந்தாலும் பிரிந்த படைகள் ஒன்று சேர்ந்து அர்த்தசந்திர வடிவத்தில் கொடுவாளைப் போல் எதிரியை நெருங்கும்," என்று கூறிய மன்னன் கடற்கரைப் பகுதியைப் பற்றியும் கூறினான். "கடற்கரைப்

பகுதியில் கப்பல்கள்மீது விற்கூடங்கள் இருக்கட்டும். குருநாதர் எதிர் பார்ப்பதுபோல் வீரபாண்டியன் படை கடற்கரையோரப் பாதையில் வந்தால் வெளிக் கிராமங்களிலிருந்து வரும் மக்களை முதலில் அவன் முன்பு சாரி சாரியாகத் தள்ளுங்கள். சாதாரண மக்களைக் கண்டு அவன் குழம்பும்போது நமது மரக்கலங்களில் உள்ள காலாட் படையினர் படகுகளில் இறங்கி வந்து வீரபாண்டியன் பின்புறத்தைத் தாக்கட்டும். அவன் பின்புறம் திரும்பினால் சாதாரண மக்கள் கடற்கரைப் பாதையை விட்டுக் கடலோரம் சென்று விடுவார்கள். அப்பொழுது நாம் அவனை வடக்கு வாசல் மூலமாகத் தாக்குவோம். இப்படி இரு படைகளுக்கிடையில் வீரபாண்டியன் சிக்கிக் கொள்வான்," என்று தனது போர்த்திட்டத்தை விவரித்தான்.

இதற்கு யாரும் எந்தவித ஆட்சேபனையும் சொல்ல வில்லை. சேனாதிபதி மட்டும் ஒரு கேள்வி கேட்டான், "கடற்கரைப் பாதையிலுள்ள சாதாரணக் குடிமக்கள் நாம் நினைக்கிறபடி நகர முடியுமா? படைகள் நகருவதற்குக் கொம்பூதும் அடையாளங்கள் உண்டு," என்றான்.

"அவர்களை இன்று முதல் படைகளைப்போல் நடத்தப் பழக்குங்கள்," என்றான் மன்னன்.

"அப்படியானால்..." என்று இழுத்தான் ஓர் உப சேனாதிபதி.

அந்த உபசேனாதிபதியை மன்னன் உற்று நோக்கினான் சில விநாடிகள். பிறகு கூறினான்: "நமது முன்பு எதிரி நிற்கிறான். இந்தத் தலைநகர் வீழ்ந்தால் அரசு வீழ்ந்தது. அரசு வீழ்ந்தால் மக்களின் கதி அதோகதி. ஆகவே மக்களும் இப்போரில் சம்பந்தப்பட்டவர்கள். அவர் களையும் படைவீரர்களைப் போல் பழக்க ஏற்பாடு செய்யுங்கள்."

சேனாதிபதியும் சரி, கடற்படைத் தலைவனும் சரி, இதர உபசேனாதிபதிகளும் மன்னன் எண்ணத்தைச் சந்தேகமறப் புரிந்து கொண்டார்கள். "மக்களைக் கட்டுப்



பாட்டுக்குள் கொண்டு வருவதென்றால், படை முறையில் அவர்களை இயங்கச் செய்வதென்றால், அவர்களிடம் படைத் தலைவர்கள் அபரிமிதக் கண்டிப்புக் காட்டும்படி யாயிருக்கும். அதனால் மக்கள் கசப்பு அதிகரிக்கும்," என்று நினைத்தார்கள்.

அவர்கள் நினைப்பை மன்னனும் உணர்ந்தான். "மக்களைக் காக்க மக்களுக்குச் சில கஷ்டங்களை விளைவிப்பது அவசியம். குழந்தையைக் காக்க முற்படும் மருத்துவன் குழந்தைக்கு மருந்து இனிக்குமா என்று யோசிப்பதில்லை," என்றான் முடிவாக. அத்துடன் அந்த மந்திராலோசனை கலைந்தது. மறுநாள் முதல் பரலிமாநகரின் கடலோரங்களில் மக்கள் அடுத்து வரும் போருக்கு ஆயுத்தம் செய்யப்பட்டார்கள். உபசேனாதி பதிகள் புரவி வீரர்களைக் கொண்டு அவர்களைக் கூடவும் பிரியவும் கடற்கரை நோக்கி ஓடவும் பயிற்சியளிக்கத் தொடங்கினார்கள். எரிபரந்தெடுத்தல் கொள்ளையில் வீடு வாசல்களைவிட்டு ஓடிவந்து தலைநகரில் அடைக்கலம் புகுந்த அந்த மக்கள் முதலில் முணுமுணுத்தார்கள். பிறகு வேறு வழியின்றிப் படைத்தலைவர்கள் சொற்படி ஆடினார்கள். காலையிலும் மாலையிலும் கிராம மக்கள் குழந்தை குட்டிகளுடன் இரண்டு மூன்றுமுறை கூட்டமாக நடந்தும் பிரிந்தும் அல்லாடினார்கள், அலுத்தார்கள். ஓய்வு பெற்ற வேளைகளில் மன்னனைச் சபிக்கவும் செய்தார்கள்.

இதற்கெல்லாம் வீரரவி மசியவில்லை. போர்க் காலத்தில் சில கஷ்டங்களும், அநீதிகளும் தவிர்க்க முடியாதவை என்று எண்ணினான். நகரப் பாதுகாப்பை தனது இரும்புக் கரத்தால் மிகப் பலமாகச் செய்தான். நகரம் படையின் அரணுக்குள் பிடிபட்டுக் கிடந்தது. கோட்டை மதில்களில் விற்பொறிகளும் வேற்பொறிகளும் மறைந்து கிடந்தன. ஆங்காங்கு தீ நாக்குகளைத் துருத்திக் காட்டி எரிந்துகொண்டிருந்த பந்தங்கள் மேற்குத் தொடர்ச்சி மலையை ஊடுருவிப் பார்த்துக் கொண்டிருந்தன. படை எந்த நிமிஷத்திலும் முன்னேறத் தயாராயிருந்தது.

இந்த ஏற்பாடுகளைக் கண்டு பூரித்தான் வீரரவி. எப்படியும் தனது பெரும் படைபலத்தால் பாண்டியனை அழித்து விடலாம் என்று திடமனத்துடனிருந்தான். ஆகவே குருநாதன் சொன்னதுபோல் ராமவர்மன் கொண்டுவந்த பயங்கரச் செய்தியும் அவனுக்கு எத்தகைய மன உளைச்சலையும் அளிக்கவில்லை.

குருநாதன் சொன்னதுபோல் ராமவர்மன் மறுநாள் வரவில்லை. இரண்டு நாள் கழித்தே வந்தான். வந்தவன் பெருந்திகில் அளிக்கும் பயங்கரச் செய்தியைக் கொண்டு வந்தான்.

## அத்தியாயம் 54

# மனத்தில் ஒரு புதுக் கனவு

குருநாதன் சிறைப்பட்டு இரண்டு நாட்கள் கழித்து பரலிமாநகருக்கு வந்த ராமவர்மனை வீரரவி தனது அந்தரங்க அறையிலேயே சந்தித்தான். அந்தச் சமயத்தில் ராமவர்மன் இருந்த நிலை அரசனுக்கு மட்டுமின்றி சேனாதிபதிக்கும் மிகுந்த வியப்பை அளிக்கவே ஒருவரை யொருவர் கணநேரம் பார்த்துக் கொண்டனர். நீண்ட பயணத்துக்கான அறிகுறி எதுவுமே ராமவர்மனிடம் காணப்படவில்லை. உடைகள் பயணத்தால் அழுக்குப் படாமலும் முகத்தில் களைப்பு ஏதும் காணப்படாமலுமிருந்த ராமவர்மனைக் கண்ட சேனாதிபதிக்கு மன்னனைவிட வியப்பு அதிகரித்திருந்ததால், "உமது நிலை மன்னருக்கு வியப்பைத் தருகிறது," என்று பேச்சைத் துவங்கினான்.

"வியப்பு மன்னருக்கு மட்டுமல்ல," என்றான் ராமவர்மனும் சேனாதிபதியை ஏறிவிட்டு நோக்கி.

"உமக்கும் ஏற்பட்டிருக்கிறது போலிருக்கிறது?" என்றான் சேனாதிபதி விஷயமாக.

"உணர்ச்சிகள் சம்பந்தப்பட்ட வரையில் ஆண்டவன் சகலரையும் சமமாகவே படைத்திருக்கிறான்," என்று குறிப்பிட்டான் ராமவர்மன்.

இதைக் கேட்ட சேனாதிபதி சற்று சங்கடப்பட்டான் பரலி மாநகரிலிருந்து சிங்கணன் தலைமையில் படைகளை நடத்திச் சென்ற ராமவர்மனுக்கும் அன்று தங்களெதிரில் நின்ற ராமவர்மனுக்கும் அதிக மாறுபாடு இருந்ததைக் கவனித்தான் சேனாதிபதி. கேவலம் கர்மவீரனும் மன்னரோ, தானோ எதைச் சொன்னாலும் தட்டிப்

பேசாதவனுமான ராமவர்மன் மிகுந்த இடக்குப் பேச்சுப் பேசுவதைக் கண்டதால் சங்கடத்துக்குள்ளான சேனாதிபதி, “மன்னர் வியப்புக்குக் காரணமிருக்கிறது ராமவர்மரே,” என்றான் கடுமையுடன்.

“காரணமின்றி யாருக்கும் வியப்பு ஏற்படுவதில்லை” என்று ராமவர்மன் சுட்டிக் காட்டினான்.

இதனால் சற்றுச் சினத்தின் வசப்பட்ட சேனாதிபதி “உமது நிலைகண்டு மன்னர் வியக்கிறார்,” என்றான் குரலில் கோபம் ஒலிக்க.

சரிதானென்பதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் அஸ்சத்தான் ராமவர்மன் அந்தத் தலையசைத்தலில் விஷமம் சொட்டுவதைக் கண்ட சேனாதிபதி மேலும் வெகுண்டு, “உமது உடை சற்றும் நலுங்கவில்லை. முகத்திலும் களைப்பில்லை. ஏதோ விருந்திலிருந்து வருகிற கோலத்திலிருக்கிறீர்,” என்று சீறினான்.

“உண்மை.” என்றான் ராமவர்மன் சேனாதிபதியின் சீற்றத்தைச் சிறிதும் லட்சியம் செய்யாமல்.

“என்ன உண்மை?”

“விருந்திலிருந்து வருகிறேனென்பது.”

“யார் விருந்து வைத்தது?”

“வீரபாண்டியன்!”

இதைக் கேட்ட சேனாதிபதி மன்னன் இருவருமே அசந்து போனார்கள். “என்ன! வீரபாண்டியனா!” என்று இருவரும் ஒரே காலத்தில் கேட்டார்கள்.

ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான் ராமவர்மன், சேனாதிபதி மீண்டும் ராம்வர்மனை நோக்கி, “கோட்டாற்றுக் கரையில் வைத்த விருந்து இத்தனை தூரத்துக்குத் தெம்பு கொடுக்கிறதா?” என்று வினவினான்.

“கோட்டாற்றுக் கரையிலா!” என்றான் ராமவர்மன் வியப்பைக் காட்டி.



“ஆம்,” சேனாதிபதி தனது சாமர்த்தியத்தைக் காட்டியதில் மகிழ்ச்சியுடன் அந்தச் சொல்லை உதிர்த்தான்.

“கோட்டாற்றுக் கரையில் யார் இருக்கிறார்கள்?” என்று வினவினான் ராமவர்மன்.

இதைக் கேட்ட மன்னன் தனது கண்களைச் சந்தேகத்துடன் நாட்டினான் ராமவர்மன்மீது. மறுபடியும் ஏதோ சொல்லப் போன சேனாதிபதியைக் கையமர்த்தி அடக்கி, “ராமவர்மா! நீ சொல்வது புரியவில்லை எனக்கு. கோட்டாற்றுக் கரையில் யாருமில்லையா?” என்று வினவினான்.

அதுவரை சேனாதிபதியுடன் இடக்காகப் பேசிய ராமவர்மன் முகத்தில் பெருவியப்பு படர்ந்தது. “மன்னவா! என் தூதன் தங்களிடம் ஏதும் சொல்லவில்லையா?” என்று வினவினான்.

“தூதனா! யாரும் வரவில்லையே,” என்றான் மன்னன்.

வியப்பு மிக அதிகமாயிருந்தது ராமவர்மன் குரலில். “மன்னருக்கு அனுப்பப்படும் ஓலைகளை வேறு யாராவது பார்க்கிறார்களா?” என்று வினவினான் மிதமிஞ்சிய வியப்புடன்.

“ஒருவேளை குருநாதர் பார்த்திருப்பார்,” என்ற மன்னன் ‘ராமவர்மன் நாளை வருவான், விஷயத்தைப் புரிந்து கொள்வாய்’. என்று எச்சரித்த குருநாதன் சொற்கள் நினைப்புக்கு வரவே, ராமவர்மனை நோக்கி, “ஆம் ராமவர்மா. நீ வரப்போகும் விஷயத்தைக் குருநாதரே சொன்னார்,” என்றும் கூறினான்.

ராமவர்மன் சற்று யோசித்தான். “ஓலை, மன்னருக்கு மட்டுமென்று குறித்திருந்தேனே விலாசத்தில்,” என்றான்.

“இருப்பினும் குருநாதர் பிரித்துப் பார்த்திருப்பார்,” என்றான் அரசன்.

“அரசன் ஓலையைப் பிரிப்பது பெரும் குற்றமாயிற்றே” என்று கூறினான் ராமவர்மன்.

"குற்றத்துக்குத் தண்டனையை அனுபவித்துக் கொண்டிருக்கிறார் குருநாதர்." என்று கூறிய மன்னன், "அது கிடக்கட்டும் ராமவர்மா! தூதனிடம் என்ன எழுதியனுப்பினாய்?" என்று வினவினான்.

"நான் வீரபாண்டியனால் விடுதலை செய்யப் பட்டேன். இன்னும் இரண்டு நாட்களில் தலைநகர் வந்துவிடுவேன் என்று எழுதியனுப்பினேன்..."

வீரரவியின் வதனத்தில் மீண்டும் வியப்பும் கவலையும் விரிந்தன. "அப்படியானால் நீ வீரபாண்டியனிடம் சிறைப்பட்டிருந்தாயா?" என்று வினவினான் வியப்பு குரலிலும் ஒலிக்க.

"ஆம்," என்றான் ராமவர்மன்.

"சிங்கணன்?" மன்னன் கேள்வியில் வியப்பும் கவலையும் ஒலித்தன.

"போசளத்துக்குப் போய்விட்டான்."

"எப்பொழுது?"

"கோட்டாற்றுக்கரை வீழ்ந்த பிறகு" என்ற ராமவர்மன், "மன்னவா, அந்த விஷயம் ஏதுமே தெரியாதா இங்கே?" என்று வினவவும் செய்தான்.

"தெரியாது ராமவர்மா! சேர நாட்டுப் பாதைகளை சுந்தரபாண்டியன் அடியோடு கத்தரித்துவிட்டான்."

"என்னிடம் மட்டும் தூதன் எப்படி வந்தான்?"

"நீ எங்கிருந்தாய்?" என்று கேட்டான் மன்னன்.

"வீரபாண்டியன் பாசறையில்."

"எங்கிருக்கிறது அது?"

"தலைநகரின் வடகிழக்கில் மலைமீதுள்ள அடர்ந்த காட்டுக்குள்."

"வீரரவி திகைத்தான். சேனாதிபதியின் கண்கள் பிதுங்கி விடும்போல் இருந்தன. "இத்தனை அருகிலா?" என்று மன்னனும் சேனாதிபதியும் ஒரே சமயத்தில் கேட்டார்கள்.



"ஆம். வீரபாண்டியன் தனது மனைவியுடனும் படையுடனும் தலைநகரின் வடகிழக்கிலிருக்கிறான். சுந்தர பாண்டியனும் அருகிலேயே இருக்கிறான். இரு படைகளும் இணைந்து நான்கு நாட்களுக்கு மேலாகிறது," என்று விளக்கினான் ராமவர்மன். மேற்கொண்டு ராமவர்மனே சொன்னான்: "மன்னவா! கோட்டாற்றுக்கரை வீழ்ந்து விட்டது கண்ணிமைக்கும் நேரத்தில், சிங்கணன் தந்திரம் வீரபாண்டியன் தந்திரத்துக்கு முன்பு ஈடுகொடுக்க முடிய வில்லை. நமது பெரும் படையில் பாதி அங்கு அழிக்கப் பட்டது. மீதிப்பாதியை சிங்கணன் சுந்தரபாண்டியனைப் பின்புறம் தாக்க அனுப்பியிருந்தான். சுந்தரபாண்டியன் அதை சந்திக்கும் நேரத்தில் வீரபாண்டியன் அதை பின் புறத்தில் சந்தித்தான். கட்டை விரலுக்கும், ஆள்காட்டி விரலுக்கும் இடையில் நெறிக்கப்பட்ட வேர்க்கடலை போல் அதுவும் நெறிக்கப்பட்டுவிட்டது. தோல்வியுற்ற சேரவீரர் நிராயுதபாணிகளாக்கப்பட்டுக் கிராமங்களுக்கு அனுப்பப்பட்டார்கள்..."

இங்கு சற்று நிதானித்த ராமவர்மனை நோக்கிய மன்னன், "எந்தக் கிராமங்களுக்கு?" என்று வினவினான்.

"எரிபரந்தெடுத்தலால் மக்களற்ற கிராமங்களுக்கு. அங்கு பிரித்தனுப்பினான். திரும்பி அவர்கள் படைகளாகச் சேரவோ ஆயுதங்களைப் பெறவோ வழியிருக்காதவாறு செய்துவிட்டான் வீரபாண்டியன். என்னையும் இரண்டு நாட்களுக்கு முன்பு விடுவித்தான். இன்று வந்து சேர்ந்தேன். ஆனால் மன்னவா! இந்த நகரத்தின் நிலை என்னைக் குலைநடுக்கமெடுக்கச் செய்கிறது. எங்கும் களியாட்டங் களைப் பார்க்கிறேன். கடற்புறத்தில் சாதாரண மக்கள் கூட்டங்கூட்டமாகத் துரத்தப்படுவதைப் பார்க்கிறேன். பாதுகாப்பு ஏற்பாடுகள் பலமாயிருந்தாலும் அவற்றைப் பயனற்றதாகச் செய்யும் மக்கள் நிலையைப் பார்க்கிறேன். மக்களிடம் பெரும் கசப்பு இருக்கிறது மன்னவா இந்த நகர நிலை..."

மன்னன் கூறினான், "ராமவர்மா, நீ சென்ற பிறகு பல விஷயங்கள் நடந்து விட்டன தலைநகரில். ஆனால் ஏற்பட்டிருக்கும் மாறுதல்கள் தலைநகரத்தின் நன்மைக்குத்தான்," என்று. அத்துடன் குருநாதன் முதலில் சிறைப்பட்டதிலிருந்து கடைசியாகச் சிறைப்பட்டதுவரை சகலத்தையும் சேனாதிபதியை விட்டு ராமவர்மனுக்குத் தெளிவு படுத்தவும் சொன்னான்.

சேனாதிபதி ஆதியோடந்தமாகச் சகல விஷயங்களையும் சொன்னான். குருநாதன் போர்த் திட்டத்தையும் சொன்னான். குருநாதனை மடக்க மன்னன் செய்த சூழ்ச்சிகளையும் கூறினான். அவையனைத்தையும் கேட்ட ராமவர்மன் பெருமூச்செறிந்தான். "மன்னவா, மிகச் சிறந்த சந்தர்ப்பத்தை இழந்து விட்டீர்கள்."

"என்ன சந்தர்ப்பம்?" என்று கேட்டான் மன்னன்.

ராமவர்மன் மெள்ள மெள்ள வீரபாண்டியன் பாசறைச் செய்திகளை விவரித்தான். அந்தச் செய்திகள் மன்னன் மனத்தில் ஒரு புதுக் கதவைத் திறந்து விட்டன. அதன் மூலம் தெரிந்த காட்சி பிரமிப்பையும் அச்சத்தையும் ஒருங்கே அளித்தது வீரரவிக்கு.

## அத்தியாயம் 55

# ராமவர்மன் விளக்கம்

வீரபாண்டியனின் பாசறைச் செய்திகளை ராமவர்மன் விவரித்ததால், வீரரவியின் மனத்திலே திறந்த பெருங்கதவு பல உண்மைகளை அவனுக்கு வெட்ட வெளிச்சமாக்கியது. குருநாதனின் திட்டங்களுக்கு எதிர்த் திட்டங்களை வகுத்ததால் தனது நிலை எத்தகைய அபாயத்தில் சிக்கவிட்டது. என்பதை உதயமார்த்தாண்ட வர்மன் சந்தேகத்துக்கிடமின்றிப் புரிந்துகொண்டான். ராமவர்மன் சற்றுக் கடுமையும் அதிகப் பரிதாபமும் துலங்கிய குரலில் விஷயங்களை எடுத்துரைக்க முற்பட்டு, "மன்னவா! கோட்டாற்றுக்கரையில் வெற்றிக் கொடியை நாட்டிவிட்ட பிறகு அங்கிருந்து சேரர்தலைநகர் நோக்கித் திரும்பிய வீரபாண்டியன் தனது முழுபடைபலத்துடன் கிளம்பவில்லை. தனது படையினர் ஆயிரம் பேர்களை மட்டும் கோட்டாற்றுக் கரையைக் காக்க விட்டு வைத்து, கோட்டையின் பாதுகாப்பையும் பழையபடி விஜயவர்மன் வசமே ஒப்படைத்தான். மீதி இரண்டாயிரம் வீரர் கொண்ட புரவிப்படையுடன் அவன் கிளம்பியபோது கோட்டாற்றுக்கரையில் அவனிடம் சிறைப்பட்டிருந்த சேரவீரர் மூவாயிரவரையும் தனது படையுடன் சேர்த்துக் கொண்டான். அவர்களுக்கு ஆயுதங்களையும் வழங்கினான்" என்று கூறிச் சிறிது நிதானித்தான்.

"நமது வீரர்களை அவன் படையில் சேர்த்துக் கொண்டானா?" என்று மன்னனும், சேனாதிபதியும் வியந்து ஏககாலத்தில் கேட்டார்கள்.

"ஆம். தனது படையில் சேர்த்துக் கொண்டான்," என்றான் ராமவர்மன் திடமாக குரலில்.

"நமது வீரர்கள் துரோகிகளாகத் திரும்பி விட்டார்களா?" என்று சீறினான் சேனாதிபதி.

"அப்படித்தான் தெரிகிறது," என்றான் வீரரவியும்.

ராமவர்மன் அவர்களிருவரையும் ஏற இறங்கப் பார்த்தான். பிறகுகேட்டான், "மன்னவா, உங்கள் உயிரை ஒருவன் காப்பாற்றுகிறான். அவனிடம் நீங்கள் எத்தகைய உணர்ச்சி கொள்வீர்கள்?" என்று.

இந்தக் கேள்விக்குக் காரணத்தைப் புரிந்து கொள்ள முடியாத மன்னன். "எந்த உணர்ச்சியும் சந்தர்ப்பத்தைப் பொறுத்தது," என்று கூறினான்.

"அப்படியானால் சந்தர்ப்பத்தையும் கூறுகிறேன் கேளுங்கள் மன்னவா! சிங்கணன் வீரபாண்டியனைச் சரணாகதி செய்யும்படி அழைத்தான். வீரபாண்டியன் படைவீரர்கள் நிராயுதபாணிகளாகக் கோட்டைக்கு வெளியே வரவேண்டுமென்றும் நிபந்தனை விதித்தான். அந்தச் செய்தியை நானே கொண்டு சென்றேன். வீரபாண்டியன் அந்த நிபந்தனையைக் கேட்டுச் சீறுவான் அல்லது நகைப்பான் என்று எதிர்பார்த்தேன். அவன் சீறவுமில்லை நகைக்கவுமில்லை. ஒப்புக் கொண்டான்..." என்றான் ராமவர்மன்.

"ஒப்புக் கொண்டானா!" என்றான் சேனாதிபதி வியப்புடன்.

அந்த வியப்பைக் கண்ட ராமவர்மன். "உங்களுக்கு ஏற்படும் வியப்பு எனக்கும் ஏற்பட்டது. வியப்பு மட்டுமின்றிச் சந்தேகமும் ஏற்பட்டது ஆனால் சிங்கணன் சந்தேகப்படவில்லை. தன் தந்திரம் பலித்துவிட்டதாக கொக்கரித்தான். மறுநாள் படைவீரர்கள் நிராயுதபாணிகளாகக் கோட்டையின் பிராதான வாயில் வழியாக வெளிவந்தார்கள். அவர்களை அழிக்கச் சிங்கணன் நமது புரவிப்படையை ஏவினான்..." என்று கூறினான்.



"நிராயுதபாணிகள் மீதா?" என்றான் வீரரவி கோபத்துடன்.

"ஆம் மன்னவா! ஆனால் அவர்கள் பாண்டியப் படை வீரர்கள் அல்ல. கோட்டாற்றுக்கரையில் சிறைப் பட்டிருந்த சேரநாட்டு வீரர்கள்" என்று சுட்டிக் காட்டினான் ராமவர்மன்.

கூரிய அறிவுள்ள வீரரவி நிலவரத்தை நிமிடத்தில் புரிந்து கொண்டான். "பிறகு?" என்று கேட்கவும் செய்தான்.

ராமவர்மன் தொடர்ந்து கூறினான், "அவர்கள்மீது சிங்கணன் படை விழுந்து தாக்குவதற்குள் கோட்டையின் வடக்கு வாயில் வழியாகப் பாண்டியப் படை வந்து சிங்கணன் படைகளைத் தாக்கியது. நிராயுதபாணிகள் காக்கப்பட்டனர். அந்த நிராயுதபாணிகள் மனோபாவம் எப்படியிருக்கும்?" என்று.

"நம்மிடத்தில் கசப்பும், வீரபாண்டியனிடத்தில் பிரமிப்பும் இருக்கும்," என்று ஒப்புக்கொண்டான் மன்னன்.

எதிரியின் தாராளத்தையும் ஒப்புக் கொள்ளும் வீரரவியின் உயர்ந்த குணத்தைக் கண்ட ராமவர்மன், அவன் மட்டும் சில குற்றங்களைப் புரியாதிருந்தால் சேர நாட்டை யாரும் அணுக முடியாதென்றும் எண்ணினான். அந்த எண்ணத்துடன் கூறினான்: "ஆம் மன்னவா! சேர வீரர்கள் அவனிடம் பெரும் பிரமிப்பையும் நன்றியறிதலையும் கொண்டார்கள். அவர்களைத் தன் படையில் சேர அழைத்ததும் உடனடியாக ஒப்புக்கொண்டார்கள். அவர்களும் தங்கள் பழைய உடைகளையே அணியலாமென்றும் தனது படையில் ஒரு பிரிவாக இருக்கலாமென்றும் கூறினான் வீரபாண்டியன்."

மன்னன் வியப்பு அதிகமாயிற்று. "நமது வீரர்கள் அவனுக்கு அடிமைப்படக் காரணமிருக்கிறது. இந்தத் தாராளம் எனக்குக்கூட இருக்காது," என்றான் வீரரவி வியப்பு பலமாக ஒலித்த குரலில்.

"மன்னவா! இதில் தாராளம் ஏதுமில்லை," என்றான் ராமவர்மன்.

"நினைத்தேன்," என்று உரையாடலில் புகுந்த சேனாதிபதியைச் சுடும் விழிகளுடன் பார்த்த வீரரவி, "என்ன நினைத்துவிட்டாய்?" என்று சீறினான்.

"அதில் தாராளம் ஏதுமில்லையென்று தெரிகிறது," என்றான் சேனாதிபதி.

"எப்படித் தெரிகிறது!"

"திடீரென்று நமது வீரர்களைச் சேர்த்துக்கொண்டதிலிருந்து."

"வேறெதுவும் புரியவில்லை உனக்கு?"

"எதைக் குறிப்பிடுகிறீர்கள்?"

"வீரபாண்டியன் நமது தலைநகருக்கு எதிரில் பாசறை அமைத்திருப்பதை."

"அதெப்படித் தெரியும் எனக்கு?"

"தெரியக் காரணமில்லை. அதைச் சொல்ல ராமவர்மன் வரவேண்டும். ஆகவே மீதியையும் நிதானமாகக் கேள்," என்று இகழ்ச்சியுடன் கூறிய மன்னன், "மேலே சொல் ராமவர்மா," என்று உத்திரவிட்டான்.

ராமவர்மன் சொன்னான்: "மன்னவா! வீரபாண்டியன் படை கோட்டாற்றுக் கரையை விட்டுக் கிளம்பிய போது அதன் முன்னணியில் சேரவீரர் இரண்டாயிரம் பேர் சென்றனர். நடுவில் வீரபாண்டியனும் அவன் மனைவியும் சென்றனர். அவர்களுக்குப் பின்புறம் நகர்ந்தது பாண்டியப் படை. வீரர்களையே அவர்கள் எதிர்நோக்க வேண்டியிருந்தது. சுந்தரபாண்டியன் தென்புறத்தில் தாக்க வீரபாண்டியன் வடபுறத்தில் தாக்க, சிங்கணன் அனுப்பிய சேரர் படை முதலில் தத்தளித்தது. பிறகு இரு பிரிவாகப் பிரிந்து ஒரு பிரிவு சுந்தரபாண்டியனையும், இன்னொரு பிரிவு வீரபாண்டியனையும் எதிர்கொண்டது. வீரபாண்டியனை எதிர்கொண்ட சேரர்படை வீரபாண்டியன் படை முகப்பிலிருந்த சேர வீரரைக் கண்டதும் குழம்பியது. குழம்பி அது தாக்குமுன்பாக வீரபாண்டியன் தனது பின்னாலிருந்த பாண்டியப் படையை இருபிரிவாகப் பிரித்து நமது படையின் இரு விலாப்புறங்களிலும் தாக்கச்



செய்தான். தங்களுக்கு நேர் எதிரில் சேரவீரரும் இரு பக்கங்ககளிலும் பாண்டிய வீரரும் தாக்கவே சரியாகக் கண்ணிமைக்கும் நேரத்தில் நமது படைகள் சிதறியோடியன. இதற்குள் சுந்தரபாண்டியன் தென்புறத்தில் முன்னேறி நெருக்கினான். நமது படைகள் நிலையை நான் சொல்ல வேண்டியதில்லையென நினைக்கிறேன்," என்று.

வீரரவிக்கு மட்டுமின்றிச் சேனாதிபதிக்கும் நிலைமை தெளிவாகப் புரிந்தது. சேனாதிபதி பெருமூச்செறிந்தான். சித்தத்தைக் குழப்பும் அந்தச் செய்தியால் வீரரவி மட்டும் எந்த உணர்ச்சியையும் காட்டாமல், "சரி மேலே சொல்," என்று ஊக்கினான் ராமவர்மனை.

"மன்னவா! இந்தப் போரிலும் வீரபாண்டியன் தனது பெருந்தன்மையைக் காட்டினான். சேர வீரர்களை முகப்பில் நிறுத்தினானேயொழிய அவர்களை நமது படைகளுடன் கை கலக்கவிடவில்லை. பக்கங்களில் தனது படைகளைக் கொண்டு தாக்குகையில் சேரர் பிரிவைப் பின்வாங்கச் சொல்லிக் கொம்பு ஊதினான். அவர்கள் பின்வாங்கிய இடத்தைப் பக்கத்தில் தாக்கிய பின் பிரிவுகளைக் கொண்டு கனவேகத்தில் நிரப்பினான். இந்தப் போர் முறை உங்களுக்குப் புரிகிறதென்று நினைக்கிறேன். எதிரே சேரவீரர் நிற்பதைக் கண்டு, நமது படை தயங்குகிறது. அந்தத் தயக்கம் தெளியுமுன்பு பக்கங்களில் தாக்கப் படுகிறது. அதைச் சமாளிக்க முற்படுகையில் கொம்பு ஊதப்பட்டுச் சேரவீரர் பின்வாங்குகிறார்கள். அந்த இடத்தில் பக்கங்களில் தாக்கிய பாண்டியப்படை இரு நதிகளாகப் பாய்ந்து இணைகிறது. திடீரெனத் தங்கள் முன் எழுந்து பாய்ந்து வந்த படையைச் சமாளிக்க முயலும் நமது படை பின்புறத்தில் சுந்தரபாண்டியனால் தாக்கப்படுகிறது. நமது படைகளுக்கு நகரவும் அவகாசமில்லை, நினைக்கவும் அவகாசமில்லை" என்று விளக்கினான் ராமவர்மன்.

வீரரவிக்கு வெட்டவெளிச்சமாகப் புரிந்தது. போர் முறையும் அதன் முடிவும். ஆகவே கேட்டான், "பிற்கு?" என்று.

"முன்பே கூறினேனே மன்னவா! அது போல் சேர வீரர்கள் ஆயுதமற்றவர்களாகக் கிராமங்களுக்கு அனுப்பப் பட்டார்கள். நானும் சில வீரர்களும் சிறையிருந்தோம். எங்களை விடுவித்துத் தங்களிடம் செல்ல அனுமதி கொடுத்தான் வீரபாண்டியன். அதற்குமுன்பு இங்கு நடந்த விஷயங்களைக் கேட்டு மகிழ்ந்தேன்," என்றான் ராமவர்மன்.

"எதைக் கேட்டு?" என்று வினவினான் வீரரவி.

"நீங்கள் இந்திரபானுவையும் முத்துக்குமரியையும் சிறையிலிருந்து விடுவித்துவிட்டதையும், முத்தைக்கூடக் கொடுத்துவிடப் போவதாகவும் செய்தி வந்தது," என்றான் ராமவர்மன்.

"செய்தியனுப்பியது யார்?" என்று வினவினான் மன்னன்.

"குருநாதர்" என்றான் ராமவர்மன்.

இந்தப் பதில் மன்னனுக்குப் பெருவியப்பை அளித்தது.

"யார் மூலமாக அனுப்பினார்?" என்ற மன்னன் குரல் பலமாக எழுந்து எதிரொலி செய்தது அந்த அறையில்.

ராமவர்மன் பதில் மன்னன் பிரமிப்பை உச்ச நிலைக்குக் கொண்டு சென்றது. "என்ன! என்ன! இன்னொரு முறை சொல்," என்றான் மன்னன்.

## அத்தியாயம் 56

# தலைநகரின் தலைவிதி

"குறிஞ்சி!" என்று ராமவர்மன் உதடுகளிலிருந்து உதிர்ந்த சொல் பெரும் பிரமிப்பை அளித்தது சேர மன்னனான உதயமார்த்தாண்டவர்மனுக்கு.

"குறிஞ்சியா! அந்த மருத்துவப் பெண்ணா! விஜய வர்மன் மகளா!" என்றான் வியப்புடன்.

"ஆம் மன்னவா!" என்றான் ராமவர்மன் தனது குரலில் எந்தவித உணர்ச்சியையும் வெளிக்காட்டாமல்.

ராமவர்மனை ஒரு விநாடி உற்று நோக்கிவிட்டு, சேனாதிபயைச் சுடும் விழிகளுடன் நோக்கிய வீரரவி, "இப்பொழுது எங்கே அவள்?" என்று வினவினான்.

சேனாதிபதி மன்னன் சீற்றத்தைக் கண்டு சற்றே நடுங்கினான். "எனக்குத் தெரியாது மன்னவா!" என்றான் நடுக்கம் குரலிலும் தெரிய.

"என்னதான் தெரியும் உனக்கு?" என்ற வீரரவியின் பார்வையில் கோபத்துடன் இகழ்ச்சிக் குறியும் கலந்து கொண்டது.

"மன்னவா!" என்றான் சேனாதிபதி மெள்ள.

"என்ன?"

"இந்த விஷயம் அந்தப்புரத்தைதப் பற்றியது."

"அதனால்?"

"அரண்மனையிலிருக்கும் காவலருக்குத்தான் தெரியும். தவிர....?"

"தவிர?"

"இவள் பணிப்பெண்..."

"அது தெரியும் எனக்கு."

"பணிப் பெண்களின் தலைவிக்குத்தான் வேலை நேரங்கள், இருப்பிடம் முதலியன தெரியும். ஆனால் இந்தப் பணிப்பெண் விஷயம் அவளுக்குக்கூடத் தெரியுமோ தெரியாதோ!"

இதைக் கேட்ட மன்னன் முகத்தில் இகழ்ச்சி அதிக மாகியது. "இந்தப் பெண் விஷயம் தனிபோலிருக்கிறது," என்று வினவினான் வீரரவி இகழ்ச்சி குரலில் அதிகமாக ஒலிக்க.

பதிலுக்குச் சேனாதிபதி அதிகப் பணிவைக் காட்டினான். "இந்தப் பணிப்பெண்ணை மன்னரே நேரில் அமர்த்தியதாகக் கேள்வி."

சேனாதிபதியின் குறும்பு மன்னனுக்கு நன்றாக விளங்கியது. சாத்தன் குறிஞ்சியை அழைத்து வந்தபோது அவளைத் தானே அந்தப்புரத்தில் நிறுத்திக்கொண்டது மன்னனுக்கும் நினைவு வரவே அவன் பதிலேதும் சொல்ல வில்லை சில விநாடிகள். "சரி சரி! அவளை அழைத்து வரச் சொல்," என்று கூறினான்.

அந்த உத்தரவைத் தேக்கும் முறையில் இடையே புகுந்த ராமவர்மன், "மன்னவா! அவள் இங்கிருக்க முடியாது," என்றான்.

"எப்படித் தெரியும் உனக்கு?" என்று வினவினான் மன்னன்.

"இந்தப் பெண் உங்களிடமிருந்து கொண்டு எதிரிக்கு வேவு பார்க்க வந்தவள். எந்த முத்துக்குமரியைப்பற்றி அறிய வந்தாளோ அந்த முத்துக்குமரி அப்புறப்படுத்தப் பட்ட பின்பு அவளுக்கு இங்கே வேலையில்லை. ஆகவே மறைந்திருப்பாள்," என்று விளக்கினான் ராமவர்மன்.

இதைக் கேட்ட மன்னன், "ஆம். ஆம். அப்படித்தா னிருக்கும்," என்று ஒப்புக்கொண்டான். ஆகவே, "சேனாதிபதி! குறிஞ்சியிருந்தால் அவளை அழைத்து வரச்சொல். இல்லையெல் பணிப்பெண்ணின் தலைவியை அழைத்து வரச்சொல்," என்று மன்னன் உத்தரவிடவே



சேனாதிபதி அப்பணிக்குக் காவலரை ஏவாமல் தானே சென்றான். அரசன் பிறகு ராமவர்மனை வீரபாண்டியன் விஷயமாக மற்றும் பல கேள்விகளைக் கேட்கத் துவங்கினான்.

ராமவர்மன் அரசன் கேட்டதற்கெல்லாம் சற்றும் தயங்காமல் பதில் கூறினான். கோட்டாற்றுக்கரையில் தான் நேரிடையாகக் கண்ட நிலவரங்களை மட்டுமின்றி மற்றவர்களிடமிருந்து கேட்ட விவரங்களையும் தெரிவித் தான். அவன் வீரபாண்டியனைப்பற்றிச் சொல்லச் சொல்ல அவன் குரலில் எழுந்த மரியாதையையும் வியப்பையும் கண்ட வீரரவி வீரபாண்டியன்மீது பொறாமையும் கொண்டான். இப்படி எதிரிகளையும் வசீகரிக்கும் குணங்களைக் கொண்டவன் தன்னிடம் அலுவல் புரிபவர்களை அடிமையாக்கிக் கொள்வது ஒரு பிரமாதமில்லை என்றே எண்ணினான்.

இப்படி ராமவர்மனும் அரசனும் பேசிக் கொண்டிருந்த சமயத்தில் பணிப்பெண்ணின் தலைவி யுடன் உட்புகுந்த சேனாதிபதி, "மன்னவா! இதோ தலைவியை அழைத்து வந்திருக்கிறேன்" என்றான்.

"குறிஞ்சி எங்கே?" என்று வினவினான் மன்னன் தலைவியை நோக்கி.

"காணவில்லை." அவள் பதில் சட்டென்று வந்தது.

"எப்பொழுது காணவில்லை?" என்று கேட்டான் மன்னவன்.

"இரண்டு நாட்களாக."

"அதைப்பற்றி என்ன செய்தாய் நீ?"

"ஏதும் செய்யவில்லை."

"ஏன்?"

"அவள் எனது கட்டுத்திட்டங்களுக்கு அடங்க வில்லை."

"அடங்கவில்லையா?"

"ஆம். இஷ்டப்படி அரண்மனையைவிட்டு வெளியே செல்லுவாள், திரும்புவாள், அவளை எதுவும் நான் கேட்பது கிடையாது."

"மற்றவர்களுக்கு இல்லாத உரிமை இவளுக்கு மட்டும் என்ன இருந்தது?"

"மன்னரைச் சேர்ந்தவள் என்ற உரிமை இருந்தது."

"நான் சொன்னேனா அப்படி உன்னிடம்?"

"இல்லை."

"யார் சொன்னதது?"

"யாரும் சொல்லத் தேவையில்லை. அவளிடம் சேர நாட்டு முத்திரை மோதிரம் இருந்தது."

இந்தப் பதிலுக்குப் பிறகுதான் மன்னன் உண்மையைப் புரிந்துகொண்டான். அவள் சேரனின் முத்திரைமோதிரம், பாண்டியன் முத்திரை மோதிரம் இரண்டையும் தன்னிடம் காட்டியதை நினைத்துப் பார்த்தான். தனது கண்கள் எப்படிப் பலவிதத்தில் அவளால் கட்டப்பட்டது என்பதையும் உணர்ந்தான்.

மன்னனுக்கு மற்றோர் உண்மையையும் சொன்னாள் பணிப் பெண்களின் தலைவி, "இன்னொரு விஷயம் மன்னவா..." என்று இழுத்தாள் மெள்ள.

"என்ன?" என்று வினவினான் மன்னவன் கோபம் துளிர்த்த குரலில்.

"ஒருநாள் இரவு அரண்மனையிலிருந்து ஒரு ரதம் கிளம்பிச் சென்றதல்லவா?" என்று துவங்கினாள் தலைவி.

"ஆம்."

"அது சென்ற சமயத்தில் நான் வழக்கம்போல் காவலரை எச்சரிக்க அந்தப்புரத்தைச் சுற்றி வந்தேன்..."

"உம்."

"ரதம் சென்றதும் பாண்டிய இளவரசி இருந்த அறைக் கெதிரேயுள்ள தாழ்வரையில், விளக்குக்கு நேர் எதிரில் மணப்பெண்போல் புத்தாடையணிந்து இந்தப் பணிப்பெண் நின்றிருந்தாள்."



"பிறகு?"

"உள்ளே சென்றுவிட்டாள்."

"அவ்வளவுதானே?"

இங்கு சற்று நிதானித்த பணிப் பெண்களின் தலைவி, "அவள் அணிந்திருந்த உடை பணிப்பெண்களின் உடை யல்ல மன்னவா. சிறையிலிருந்த அரசகுமாரியின் உடையா யிருந்தது" என்றாள் மெதுவாக.

வீரரவி அவளை நோக்கி, "வேறெதாவது உண்டா?" என்றான்.

"அவள் அந்த உடையுடன் சற்று நேரத்திற்கெல்லாம் அந்தப்புரத்தை விட்டுக் கிளம்பினாள்."

"இப்பொழுதுள்ள சந்தேகம் உனக்கு அப்பொழு தில்லையா?"

"இருந்தது. ஆகையால் அவளை வழிமறித்துக் கேட்டேன். அந்த உடையை அரசகுமாரி செல்லும்போது அவளுக்குப் பரிசாக அளித்துப் போனதாகச் சொன்னாள். அதற்குமேல் நான் ஏதும் சொல்ல முடியவில்லை," என்றாள் பணிப்பெண்களின் தலைவி.

அத்துடன் பணிப் பெண்களின் தலைவியை அனுப்பிய மன்னன் நீண்ட நேரம் யோசனையில் இறங்கினான். பிறகு ராமவர்மனை நோக்கிக் கேட்டான், "இன்னும் எத்தனை தினங்களில் நாம் பாண்டியர்களிட மிருந்து தாக்குதலை எதிர்பார்க்கலாம்?" என்று.

"எந்த விநாடியிலும் எதிர்பார்க்கலாம்," என்றான் ராமவர்மன்.

"அப்படியானால் நாமும் தயாராயிருக்கிறோம். வீர பாண்டியன் சிந்திக்க நாம் இடங் கொடுக்கக் கூடாது: அவனாகத் தாக்கவில்லையானால் தாக்குதலை நாம் துவங்குவோம்," என்றான் மன்னன்.

"எப்படி மன்னவா?" என்று கேட்டான் ராமவர்மன்'

"அதற்கு திட்டம் வைத்திருக்கிறேன். உனது மன்னன் அறிவும் இயங்கிக் கொண்டுதானிருக்கிறது. திட்டத்தை

நாளை சொல்கிறேன்," என்று ராமவர்மனை நோக்கிக் கூறிய. மன்னன், "சேனாதிபதி! அந்தப் பணிப் பெண் எங்கிருந்தாலும் கைப்பிடியாகப் பிடித்து அழைத்து வர உத்தரவு பிறப்பித்துவிடு. அவசியமானால் முரசும் கொட்டு'' என்று சேனாதிபதிக்கும் உத்தரவைப் பிறப்பித்தான்.

ஆனால் சேனாதிபதியின் உத்தரவுகளும் சரி, முரசும் சரி, எந்தவிதப் பலனையும் அளிக்கவில்லை. 'அவள் எங்கு மறைந்திருப்பாள்?' என்று சிந்தித்தான் வீரரவி. அந்தச் சிந்தனை மறுநாள் பூராவும் தொடர்ந்து இருந்தது. ஆனால் பணிப்பெண் குறிஞ்சி அவன் சிந்தனையும் எட்டாத தூரத்தில் இருந்தாள். மறுநாள் இரவு அவள் வீரபாண்டியனிடம் மிக முக்கியமான செய்தியைச் சொல்லி கொண்டிருந்தாள். அந்தச் செய்தி பரலிமாநகரின் தலைவிதியை நிர்ணயித்து விட்டது.

## அத்தியாயம் 57

# இயற்கையின் உக்கிரம்

பரலிமாநகரின் தலைவிதியை நிர்ணயித்துவிட்ட பயங்கரச் செய்தியைச் சொல்லப் பாண்டிய இளவரசன் பாசறையைப் பாவை குறிஞ்சி எய்திய சமயத்தில், போருக்கான எவ்விதக் கெடுபிடியோ சிந்தனையோ இல்லாமல் இளவரசன் இளநங்கையுடன் சிரித்துச் சல்லாபம் செய்து கொண்டிருந்ததை வெளியிலிருந்தே உணர்ந்த பணிப்பெண் சற்று நிதானித்து, பாசறையின் புறப்பகுதியைச் சுற்றுமுற்றும் நோக்கினாள். இளவரசனிருந்த இடத்துக்கும் சுற்றுமுற்றுமிருந்த குடிசைகளுக்கும் பெருவித்தியாசமிருந்தது. ரசிகனுக்கும் மற்றவர்களுக்குமுள்ள வித்தியாசம் தான் அது.

நான்கு நாட்களுக்கு முன்பு தான் வந்தபோதிருந்த கூடாரத்தில் இளவரசனில்லை என்பதையும், தனக்காக ஒரு புது விடுதியை அமைத்துக் கொண்டிருக்கிறானென்பதையும் புரிந்து கொண்டாள் பணிப்பெண் குறிஞ்சி. பெரிதாக வளர்ந்திருந்தாலும் கிளைகள் தழைத்துக் கிடந்த மருதமரத்தின்கீழ் இளவரசன் தனது குடிலை நிர்மாணித்திருந்ததன்றி, அதன் கூரைக்காகக் கூடாரத் துணியேதும் கட்டாமல் மருதமரத்தின் தழையடர்ந்த கிளைகளையே வளைத்தும், ஒன்றுக்கொன்று குறுக்கே செல்லும்படி பின்னியும், அர்த்த சந்திர வடிவத்தில் கூரையும் அமைத்திருந்ததையும் கவனித்தாள் குறிஞ்சி. குடிலைச் சுற்றிலும் பெருங்கிளைகள் நடப்பட்டு சுவர்களுக்குப் பதில் வேலியையே சுவர்களாக அமைத்திருந்ததையும், அந்தக் குடிலின் வாயிலிலிருந்த ஈட்டிப் பந்தங்கள் குடிலின்

சுவர்களாக விளங்கிய பச்சைமரக் கிளைகளிலிருந்து சற்று எட்டவே நடப்பட்டிருந்ததையும் கவனித்த குறிஞ்சி, அதன் காரணத்தையும் புரிந்து கொண்டாள். பச்சை மரக்கிளைகளினருகே பந்த ஜ்வாலை பட்டால் இலைகள் கருகும் என்பதற்காகவே வீரபாண்டியன் பந்தங்களைத் தள்ளி நட்டிருக்கிறானென்பதை உணர்ந்து கொண்ட குறிஞ்சி, 'பச்சை மரத்தினிடமும் பரிவு காட்டும் இந்த இளவரசனை எதற்காகப் போருக்கிழுக்கிறான் சேர மன்னன்?' என்று தனக்குத்தானே கேட்டுக் கொண்டாள். பிறகு சுற்றிலும் சற்றே தள்ளித் தள்ளி நாலைந்து பேர்களாக உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த வீரர்கள் கூட்டத்தையும், தூர தூரக் கட்டப்பட்டிருந்த துணைப் படைத் தலைவர்கள் குடிசைகளையும், பாறை உச்சிகளில் ஆங்காங்கு வேலும் கையுமாகக் காவல் புரிந்து சதா தூரத்தே தெரிந்த பரலிமாநகரைக் கவனித்துக் கொண்டிருந்த வீரர்களையும், ஆங்காங்கே மரங்களில் கட்டப்பட்டுக் கனைத்துக் கொண்டிருந்த புரவிகளையும் கண்ட குறிஞ்சி, பாண்டியர் படை எந்த நேரத்திலும் போருக்குத் தயாராயிருப்பதைப் புரிந்து கொண்டாள். இளவரசன் குடிலிலிருந்து நன்றாக எட்டத் தள்ளியிருந்த சுந்தரபாண்டியன் கூடாரத்தின் தலையிலிருந்த மீன்கொடி பரலிமாநகரை விழுங்கத் துடிப்பதுபோல் காற்றில் படபடத்துக் கொண்டிருந்தது. பரலிமாநகரின் பிரதான கிழக்கு வாயிலுக்கெதிரேயிருந்த பாண்டிய மன்னன் பாசறை எப்பொழுது வீரபாண்டியனிருந்த வடக்கெல்லைக்கு வந்தது? ஏன் வந்தது என்பது புரியவில்லை பணிப்பெண்ணுக்கு. இப்படிப் பல யோசனைகளில் மூழ்கி நேரங்கடத்திவிட்ட பணிப்பெண்ணின் சிந்தனையை உள்ளே கலீரென எழுந்த வீரபாண்டியன் சிரிப்பொலி கலைத்துவிட அவள், "இளவரசே! இளவரசே!" என்று இருமுறை அழைத்தாள்.

உள்ளே சிரிப்பொலி சட்டென்று அடங்கியது. "யார் அது?" என்ற வீரபாண்டியன் குரல் அதட்டலுடன் எழுந்தது.



"குறிஞ்சி" என்று சற்றே இரைந்தே சொன்னாள் மருத்துவப் பெண்.

அடுத்த விநாடி பாசறையின் கதவாகப் பணியாற்றிய சிறிய தட்டி திறக்க, குறிஞ்சி உள்ளே நுழைந்தாள். நுழைந்ததும் மிகவும் தர்மசங்கடமான நிலையில் தான் உட்புகுந்துவிட்டதை உணர்ந்ததால் முறுவலும் காட்டினாள் விஜயவர்மன் மகள். கீழேயிருந்த புலித் தோலில் கூதிர்ந்து கிடந்த இரண்டொரு மலர்களிலிருந்து இளநங்கை அவசரமாக எழுந்து உட்கார்ந்திருக்கிறாளென்பதையும், அவள் உட்கார்ந்திருந்த இடத்துக்கருகில் இளவரசன் தகடி நீண்டு கிடந்ததிலிருந்து அதை எடுத்துத் தோள்மேல் போட்டுக் கொள்ளக்கூட வீரபாண்டியனுக்கு அவகாசமில்லாமல் போய்விட்டதையும் ஓரே நோக்கில் அறிந்தாள் பணிப்பெண். அந்தக் குடிசைக் கோடியிலிருந்த சிறு விளக்கும் நன்றாக இழுக்கப்பட்டிருந்ததால் மங்கலான ஒளியை வீசிக் கொண்டிருந்தாலும், சந்திரனும் மேலேயிருந்து ஓரிரு ஒளிக்கதிர்களை வளைக்கப்பட்டிருந்த மருதமரக்கிளைகள் வழியாக உள்ளே செலுத்தியிருந்ததால் அவசியமான மனோகரமான வெளிச்சம் அறைக்குள் இருந்ததையும் கண்டாள் குறிஞ்சி. தன் வரவால் திடீரென எழுந்துவிட்ட இளநங்கை தன் ஆடையைச் சரிப்படுத்திக் கொள்ள அவகாசம் கொடுத்த குறிஞ்சி வீரபாண்டியனையும் நோக்கி, குடிசை மேலிருந்த கிளைகளையும் நோக்கினாள்.

அவள் கண்கள் போன திக்கைப் பார்த்தவீரபாண்டியன், "என்ன பார்க்கிறாய் குறிஞ்சி?" என்று வினவினான்.

"பாசறை மாறிவிட்டதே என்று பார்த்தேன்," என்றாள் குறிஞ்சி.

"ஆம். துணிக்கூடாரம் பிடிக்கவில்லை குறிஞ்சி! ஆகவே மருதமரத்தின் கிளைகளையே கூரையாக்கிக் கொண்டேன்." என்றான் வீரபாண்டியன்.

"ஆம். படைத்தலைவரே, படுத்திருக்கும்போது வானிலிருந்து மதியின் வெள்ளிக் கம்பிகள் உடல்மீது விழும். தவிர

மருதமலர்களும் கொட்டும்." என்றாள் பணிப்பெண். அவள் அப்படிச் சொல்லிக் கொண்டிருக்கையில் இரண்டு மூன்று குயில்கள் இன்பமாகக் கூவவே, "இது வேறா?" என்றும் கேட்டாள் அவள்.

"ஆம் குறிஞ்சி. இந்த மரக்கிளைகள்மீது மாதவிக் கொடியொன்றும் ஓடிக் கொண்டிருந்தது. அதைக் கெடுக்காமல் அதையும் சேர்த்துக் கூரையை வளைத்து விட்டேன்," என்றான் வீரபாண்டியன்.

"மேலே மாதவிப்பந்தலா?" என்று வினவினாள் குறிஞ்சி நகைத்து.

"ஆம் குறிஞ்சி. அதனால்தான் இந்த மரத்தின் கீழ் குடிலை அமைத்தேன்," என்றான் வீரபாண்டியன்.

"அதனாலென்ன உபயோகமோ?" என்று மீண்டும் கேட்டாள் குறிஞ்சி.

"குறிஞ்சி! மாதவிப்பந்தல்மேல்தான் குயில்கள் அதிக மாக வசிக்கும். அதன்மேல் இருக்கும்போதுதான் அடிக்கடி இனிமையாகக் கூவும்," என்றான் வீரபாண்டியன்.

"மேலே இசையிருக்கிறது. மதி இருக்கிறான். மலர் களும் இருக்கின்றன. கீழே என்ன இருக்கிறது படைத் தலைவரே?" என்று வினவினாள் குறிஞ்சி.

"அத்தனையும் கலந்த ஒன்று இருக்கிறது" என்ற வீர பாண்டியன், சற்று எட்டத் தள்ளி உட்கார்ந்து விட்ட இளநங்கையை நோக்கினான்.

குறிஞ்சி நகைத்தாள். "அதுமட்டுமில்லையே வீரபாண்டியரே" என்று கூறவும் செய்தாள்.

"வேறென்ன குறிஞ்சி?"

"உக்கிரமும் இருக்கிறதே!"

"உக்கிரமா?"

"ஆம். புலித்தோலில்லையா?"

"மாதவிப் பந்தல்மேல் பலகால் குயிலினங்கள் கூவினகாண்" — ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவை.



"ஆமாம் குறிஞ்சி ஆமாம்."

"என்ன ஆமாம்?"

"இயற்கை விளையாட்டில்..."

"என்ன படைத்தலைவரே?"

"உக்கிரமும் கலந்து விடுகிறது."

குறிஞ்சிக்கே வெட்கம் தாங்கமுடியவில்லை. இளநங்கை சுடும் விழிகளுடன் அவ்விருவரையும் பார்த்தாள். குறிஞ்சி சற்றே கடிந்தே சொன்னாள், "படைத்தலைவரே! நீங்கள் மகாமோசம்" என்று.

இளவரசன் ஏதுமறியாததுபோல் அவளை நோக்கினான். "என்ன குறிஞ்சி?" என்றும் கேட்டான்.

"முறை தவறிப் பேசுகிறீர்கள். நீங்கள் பேசுவது பெண்கள் முன்னிலையில் பேசக் கூடிய பேச்சல்ல" என்று தரையை நோக்கிக் கொண்டே சொன்னாள்.

"என்ன சொல்லி விட்டேன்? எனக்கேதும் புரிய வில்லையே?" என்றான் இளவரசன்.

"உக்கிரம் அது இதுவென்று..." என்றாள் பணிப்பெண்.

"இந்த மருதக் கிளைகளைப் பார் குறிஞ்சி" என்று தலைமேலிருந்த கூரையைச் சுட்டிக் காட்டினான் இளவரசன்.

தரையிலிருந்த கண்களை கூரைமீது நாட்டிய குறிஞ்சி, "அவற்றுக்கென்ன?" என்று வினவினாள்.

"முரட்டுக் கிளைகள்," என்று சுட்டிக்காட்டினான் வீரபாண்டியன்.

"ஆம்."

"காற்று வேகமாக அடிக்கும்போது கிளைகள் ஒன்றுக் கொன்று உராய்கின்றன உக்கிரமாக."

"அதற்கென்ன?"

"உணர்ச்சியும் காற்றைப்போல்தான்."

"அப்படியா?"

"ஆம். சிலசமயம் வேகமாக அடிக்கிறது. சில சமயம் மந்தப்படுகிறது."

இளவரசன் இதைச் சொல்லி இளநகை கோட்டினான். இளநங்கை நெருப்பு விழிகளை இருவர் மீதும் திருப்பினாள். "உங்கள் இருவருக்கும் வெட்க மில்லை?" என்று வினவினாள் சுடுசொற்களால்.

"எதற்கு வெட்கம் இளநங்கை?" என்று வினவினான் இளவரசன்.

"எதற்கு வெட்கமா?" ஆத்திரத்துடன் எழுந்தது அடுத்த கேள்வி இளநங்கையிடமிருந்து.

"ஆம். வெட்கம் எதற்கு? நாங்கள் இயற்கையை விவாதிக்கிறோம்" என்ற இளவரசன், "இல்லையா குறிஞ்சி" என்று குறிஞ்சியை நோக்கிக் கேட்டான்.

"ஆம்..." என்று இழுத்தாள் குறிஞ்சி.

"என்ன குறிஞ்சி இழுக்கிறாய்?" என்று கேட்டான் இளவரசன்.

"ஒன்றுமில்லை. நீங்கள்..."

"நான் என்ன?"

"இயற்கையைப்பற்றி நீங்கள் என்னுடன் பேசியதை விட..."

"இளநங்கையுடன்பேசியிருக்கவேண்டுமென்கிறாயா"

"ஆம்."

"ஏன்?"

"அதில் பலனுண்டு."

"ஏன் உன்னிடம் பேசினால் பலனில்லையா?"

இதைக் கேட்ட குறிஞ்சி, "படைத்தலைவரே!" என்று சீறினாள்.

"என்ன குறிஞ்சி?"

"உமக்குப் பேச்சுத் திறமையும் போய்விட்டது."

"போய்விட்டதா?"

"ஆம். அர்த்தம் தெரியாமல் பேசுகிறீர்கள்."



"என்ன அப்படிப் பேசிவிட்டேன்?"

"நான் போன பிறகு உபதளபதியைக் கேளுங்கள்."

"நீ இருக்கும்பொழுது கேட்டாலென்ன?"

"உபதளபதி பதில் சொல்லமாட்டார்."

"போன பிறகு?"

"பதில் சொல்வார்."

"வாயைத் திறவாவிட்டால்?"

"வேறு விதத்தில் பதில் சொல்லுவார்."

இந்த இடத்தில் மீண்டும் இரைந்து ஒலித்தது இள நங்கையின் குரல், "குறிஞ்சி!" என்று.

"அம்மணி?"

"சொல்ல வந்ததைச் சொல்லிவிட்டுப் போ."

"அதைச் சொல்லவிடவில்லையே படைத்தலைவர்." இம்முறை இளநங்கை வீரபாண்டியனை நோக்கி, "வீண் வார்த்தை பேசாமல் அவள் சொல்ல வந்ததைக் கேளுங்கள்" என்றாள்.

"அதைக் காலையில் கேட்போமே இளநங்கை" என்றாள் வீரபாண்டியன்.

"ஏன்?" என்று கேட்டாள் இளநங்கை.

"குறிஞ்சி நீண்ட நேரம் பயணம் செய்து வந்திருக் கிறாள்..." என்ற வீரபாண்டியனை இடைமறித்த குறிஞ்சி, "இல்லை படைத்தலைவரே, எனக்குக் களைப்பு ஏதுமில்லை" என்றாள்.

அவளைக் கையமர்த்தி அடங்கிய வீரபாண்டியன், "இல்லை குறிஞ்சி! உனக்குக் களைப்பாக இருக்கும். நீ சென்று சற்று எட்ட உள்ள எனது பழைய கூடாரத்தில் படுத்துக் கொள். காவலுக்கு இரு வீரர்களை அழைத்துப் போ. காலையில் பேசலாம்" என்றான்.

"இப்பொழுதே பேசினாலென்ன?"

"போர்ப் பேச்சு சுவையாயிருக்காது. இத்தனை நேரம் நாம் பேசிய பேச்சின் இன்பத்தைக் கெடுத்துவிடும்."

“வேறெதைக் கெடுத்துவிடுமோ?”

அதற்குமேல் குறிஞ்சியைப் பேசவிடாத வீரபாண்டியன் அவளை அழைத்துப் போய்க் குடிலுக்கு வெளியில் விட்டு, “அதோ இருக்கிறது எனது கூடாரம், போய்ப் படுத்துக் கொள். இரண்டு காவலரை வாயிலில் காவல் புரிய அழைத்துச் செல்” என்றான்.

“நீங்கள்?” என்று விஷமத்துடன் கேட்டாள் குறிஞ்சி.

“நான்...நான்...” என்று எதற்கும் திணராத வீரபாண்டியனும் திணறினான்.

“தெரியும் படைத்தலைவரே!” என்ற குறிஞ்சி மருதமரக் கிளைகளைப் பார்த்தாள், நகைத்தாள். கிளைகள் காற்றில் உராய்ந்தன.

இளவரசன் பதிலேதும் கூறாமல் படலை மூடிக்கொண்டு உள்ளே சென்று புலித்தோலில் படுத்துக் கொண்டான். “இளநங்கை! இப்படி வா!” என்றழைத்தான்.

கிட்டே நெருங்கி வந்த இளநங்கை, “என்ன!” என்றாள் கோபத்துடன்.

“படுத்துக்கொள். நேரமாகிறது,” என்றான் வீர பாண்டியன்.

அவன் பரிவைக் கண்ட மருதமரம் கலகலவென மலர்களை உதிர்த்து நகைத்தது. கிளைகள் உக்கிரத்துடன் தழுவி உராய்ந்தன. வீரபாண்டியன் கரம் இளநங்கையை நோக்கி நகர்ந்தது.

## அத்தியாயம் 58

# செல்வம் முளை விட்டது

மறுநாள் காலை அருணோதயத்துக்குச் சற்று முன்பாகவே கண் விழித்துக்கொண்ட மருத்துவப் பெண்ணான குறிஞ்சி கூடாரத்துக்கு வெளியே வந்து மலைப்பகுதியின் அழகைக் கண்களால் பருகிக்கொண்டு நின்றாள். மலர்மரங்கள் பலஇடங்களில் பொன்போலும் வெள்ளி போலும் மலர்களை உதிர்த்திருந்தன. மலர்க ளில்லாத மரங்கள் உலர்ந்த சருகுகளை உதிர்த்திருந்தன, பொன்னும் வெள்ளியுமில்லாத ஏழை செப்புக்காசுகளைத் தருமம் செய்வதுபோல். இன்னும் சில மரங்கள் தளிர் விட்டிருந்தாலும் பொன்போன்ற தளிர்களை மலைக்குத் தராமல் லோபியைப்போலத் தாங்களே வைத்துக்கொண்டு அழகு பார்த்துக் கொண்டிருந்தன. தூரத்தே தெரிந்த ஒரு சிற்றருவி தனது நீரை அள்ளிப் பாய்ச்சிக் கொண்டிருந்தது கேட்டாலும் கேட்காவிட்டாலும் தானாகவே தரும் வள்ளலைப்போல. இதற்கிடையே மெல்ல மெல்ல எழத் தொடங்கிய அருணன் லோபி, வள்ளல், பணக்காரன், ஏழை அனைவரும் தனக்குச் சமம் என்பதை அறிவிப்பவன் போல் அந்தப் பகுதியின் சராசரம் அனைத்தின்மீதும் செவ்விய கிரணங்களை வீசத் தொடங்கினான்.

அந்த நிலையில் மலை மனோகரமாயிருந்தது. ஆங்காங்கு கூவிய பட்சி ஜாலங்கள் நானாவித ஒலிகளைக் கிளப்பினாலும் அந்த ஒலிகளின் சுருதிகளில் வேறுபாடு இருந்தாலும், அவையெல்லாம் சேர்ந்து ஏதோ ரம்மியமான, தெய்வீகமான, ஒரு பெரும் சுருதியில் லயித்துக் கொண் டிருந்ததாக தோன்றியது அந்த மருத்துவப் பெண்ணுக்கு. அந்த மலையின் அழகே மனோவியாதிகளைப் போக்க

வல்லதென்றாலும் உடற்பிணியைப் போக்கும் பல மூலிகைகளும் அந்தப் பகுதியிலிருந்ததை அறிந்திருந்த குறிஞ்சி, 'இத்தகைய மலையில் மனிதன் மனிதனைக் கொல்லுவதற்கான ஆயத்தம் நடக்கிறதே' என்று எண்ணிப் பெருமூச்சு விட்டாள். அப்படி இன்பமும் துன்பமும் இணைந்த உணர்ச்சிகளுடன் சற்று எட்ட இருந்த அருவிக்குச் சென்று அருவிக் கரையிலிருந்த வேம்பின் குச்சியால் பல்விளக்கி முகம் கழுவி வெளியேறிய குறிஞ்சி அந்த அருவி வளைந்தோடிய மற்றொரு மறைவிடத்தி லிருந்து வீரபாண்டியன் நீராட்டத்தை முடித்துக்கொண்டு ஈர உடையைப் பிழிந்து கொண்டு வெளியே வருவதைக் கவனித்து நின்ற இடத்திலேயே நின்றாள்.

நீராட்டியதன் காரணமாக இடுப்பில் ஒரு நூலாடை யுடனும் கையில் பிழிந்த ஒரு நூல் துண்டுடனும் எதிரே வந்த வீரபாண்டியனின் திண்மையான மார்பையும் திரண்ட தோள்களையும், நீண்ட கரங்களையும் கண்ட குறிஞ்சி பிரமித்து நீண்டநேரம் மலைத்து நின்றுவிட்டாள். மறைக்கப்படாத அவன் மார்பையும், புஜங்களையும் நீர் அப்பொழுதும் தழுவிக்கொண்டிருந்தது. துவட்டப்பட்ட தலையில் தாறுமாறாகக் கிடந்த முடி நுனிகளில் திரண்டு உருண்டு பளபளத்து நின்று பிறகு சொட்டிய துளிகளுங் கூட அவன் வதனத்துக்கு ஒரு கம்பீரத்தை அளித்து அவன் வீரத்தனத்தை எடுத்துக் காட்டின. அவன் அவயவத்தின் ஒவ்வோர் இடத்திலும் புருஷத்தன்மை சொட்டுவதைப் பார்த்த குறிஞ்சியின் மனத்தில் இளநங்கை எத்தனை பாக்கியசாலி என்ற எண்ணம் எழுந்தது. அந்த எண்ணத்துடன் வேறோர் எண்ணமும் எழவே அவள் சிந்தனையில் சிறிது கலக்கமும் உதயமாகியது. முந்திய நாளிரவு மருதமரக் குடிலில் கண்ட இளநங்கையின் முகம் அவள் இதயக் கண்கள் முன்பாக நன்றாக எழுந்தது. இதயக் கண்கள் அந்த முகத்தை மீண்டும் ஆராயவே, "ஆம், ஆம், அப்படித்தான்," என்ற சொற்களும் அவள் வாயைவிட்டு உதிர்ந்தன.



அந்தச் சமயத்தில் அவளை அணுகிய வீர பாண்டியன் லேசாக நகைத்து, "என்ன குறிஞ்சி, நீயாக ஏதோ பேசிக் கொண்டிருக்கிறாயே?" என்று வினவினான் கையிலிருந்த துணியை மீண்டும் பிழிந்து.

"இப்படிக் கொடுங்கள். நான் பிழிந்து தருகிறேன்." என்றாள் குறிஞ்சி பேச்சை மாற்றி.

ஆனால் வீரபாண்டியன் விடவில்லை. "நான் கேட்ட தற்குப் பதில் சொல்லவில்லையே குறிஞ்சி!" என்றான்.

"பதில் சொல்லும்படி என்ன கேட்டுவிட்டீர்கள்?" என்றாள் குறிஞ்சி.

"நீயாக ஏதோ பேசிக் கொண்டிருந்தாய்..."

"ஆம்."

"அது என்ன என்று கேட்டேன்."

"அதுவா..."

"ஆம்."

"அதற்கென்ன இப்பொழுது? சொன்னால் போகிறது" என்றாள் குறிஞ்சி அலட்சியமாக.

வீரபாண்டியன் அவளை உற்று நோக்கினான். அவள் எதையோ சொல்ல மறைக்கிறாள் என்பதைப் புரிந்து கொண்டு, "ஏன் குறிஞ்சி, என்னிடம் மறைக்கக்கூடிய விஷயங்களும் இருக்கின்றனவா?" என்று கெஞ்சினான். வீர பாண்டியனின் தீட்சணமான கண்கள் நகைப்பதைக் கண்டாள். உதடுகள் சற்று விலகி, கோடிகளுக்குச் சென்று கண்களில் நகைப்புக்கு இணைப்பு கருதி கூட்டுவதையும் கண்டாள். அவசியமானால் வீரபாண்டியன் குழந்தையாக மாறமுடியும் என்பதை உணர்ந்தும் கொண்டாள்.

அவள் இதயத்திலும் பெரும் பரிதாபம் அவனைப் பற்றி எழுந்து கிடந்தது. "படைத் தலைவரே! என் மனத்தில் தோன்றியதைச் சற்று நேரம் கழித்துச் சொல்கிறேன்," என்று மெல்ல மன்றாடினாள்.

"சற்று நேரம் கழித்து நீ மன்னர் முன்பு உன் செய்தியைச் சொல்ல வேண்டியிருக்குமே குறிஞ்சி!" என்றான் வீரபாண்டியன் கெஞ்சும் குரலில்.

"ஆம்," என்றாள் குறிஞ்சியும் தீர்க்காலோசனையுடன்.

"அப்பொழுதே இதையும் சேர்த்துச் சொல்லிவிடுகிறே னென்கிறாயா?" என்று வினவினான் வீரபாண்டியன்.

"இதை அங்கு சொல்ல முடியாது படைத்தலைவரே!"

"ஏன்?"

"அங்கு பலர் இருப்பார்கள்."

"ஆம்."

"பலர் முன்னிலையில் சொல்லக்கூடிய விஷய மல்ல இது."

வீரபாண்டியன் கண்களில் சிரிப்பு மறைந்து சிந்தனை படர்ந்தது. "குறிஞ்சி?" என்றான் மெல்ல.

"ஏன் படைத்தலைவரே!" என்று வினவினாள் குறிஞ்சியும்.

அந்தக் கேள்வியும் குழப்பமிருந்ததைப் புரிந்து கொண்ட இளவரசன், "நீ எதை மறைக்கிறாய் குறிஞ்சி! ஏன் மறைக்கிறாய்?" என்று வினவினான் கவலையுடன்.

"உங்கள் படைக்கு வந்துள்ள பலவீனத்தைச் சொல்ல மனம் வரவில்லை" என்றாள் குறிஞ்சி மிக மெல்லிய குரலில்.

"பலவீனமா! நமது படைக்கா! எங்கிருக்கிறது அந்தப் பலவீனம்?" என்று சற்று இரைந்தே கேட்டான் வீரபாண்டி யன். அதே சமயத்தில் அவ்விருவரையும் நோக்கி இளநங்கை வந்து கொண்டிருந்தாள்.

அவளைக் கூர்ந்து நோக்கினாள் குறிஞ்சி. இளநங்கையின் நடை பழைய உறுதியான நடையாயில்லை. சற்றே துவண்டிருந்தது. இடுப்பிலிருந்த உடையும் லேசாக ஒருபுறம் சரிந்திருந்தது. அவள் கண்கள் சோர்வடைந் திருந்தன. அந்த நிலையில்கூட இளநங்கையின் அழகு அபரி மிதமாகச் சுடர் விட்டது. அந்தக் காலை நேரத்தில், இளநங்கையைக் குறிஞ்சி உற்று நோக்குவதைக் கண்ட இளவரசன், "என்ன அப்படிப் பார்க்கிறாய் குறிஞ்சி," என்று வினவினான்.



"நீங்கள் என்ன பலவீனம் என்று கேட்டீர் களல்லவா?" என்றாள் குறிஞ்சி.

"ஆம்." என்றான் இளவரசன்.

"உங்கள் படையின் பலவீனம் அதோ இருக்கிறது," என்று தூரத்தே வந்துகொண்டிருந்த இளநங்கையைச் சுட்டிக் காட்டினாள் குறிஞ்சி.

"என்ன இளநங்கையா! படையின் பலவீனமா? பாண்டியப் படையின் சிறந்த உபதளபதி அவள்!" என்றான் வீரபாண்டியன் இரைந்து.

"அந்த உபதளபதி உங்களுக்கு இனிப் பயன்பட மாட்டாள்," என்றாள் குறிஞ்சி மெதுவாக.

"ஏன் குறிஞ்சி! ஏன்?" என்று கலவரத்துடன் கேட்டான் இளவரசன்.

பதிலுக்குப் பெரும் வெடியை எடுத்து வீசினாள் பணிப்பெண். அதைக் கேட்ட இளவரசன் பிரமித்துப் பல விநாடிகள் நின்றுவிட்டான். "உங்கள் செல்வம் அவள் கருவில் முளை விட்டிருக்கிறது" என்ற சொற்களை மிக லேசாகத்தான் சொன்னாள் மருத்துவப் பெண் குறிஞ்சி. ஆனால் அந்த ஒவ்வொரு சொல்லும் பனித்துளிகள் போல் அவன் சித்தத்தில் இறங்கி, சித்தத்தை அடியோடு உறையச் செய்துவிட்டன.

பணிப்பெண் குறிஞ்சி சொன்ன சொற்கள் பனித்துளி களென வீரபாண்டியன் சிந்தையிலிறங்கி உறைந்து அவன் சிந்தனாசக்தியை அடியோடு நிலைகுலையச் செய்து விட்டதால் பிரமித்த பார்வையுடன் வெகுநேரம் நின்று விட்ட பாண்டிய இளவரசன், இளநங்கை தானிருந்த இடத்தை நெருங்கிவிட்டதை உணர்ந்தானில்லை. அருகில் வந்த இளநங்கை அவனையும் நோக்கிக் குறிஞ்சியையும் நோக்கியதோ அவள் அழகிய விழிகளில் பல கேள்விகள் எழுந்து துள்ளியதையோ காணவும் இல்லை பாண்டிய சகோதரன். அவள் வாய்விட்டுச் சற்றுக் கடுமையுடன் கேள்வியொன்றை எழுப்பிய பின்பே அவன் சுயநிலைக்கு

வந்தான். "குறிஞ்சி! இவர் ஏன் இப்படிப் பேய் அறைந்தது போல நிற்கிறார்?" என்று வினவினாள் இளநங்கை.

குறிஞ்சியின் இதழ்களில் லேசாகக் குறுநகை அரும்பியது. "இவர் நிலைக்கும் பேய்க்கும் சம்பந்தம் இருக்கிறது அம்மணி," என்றாள் குறும்பு குரலில் தொனிக்க.

"எந்தப் பிசாசு பிடித்திருக்கிறது இவரை?" என்றாள் கோபத்துடன் இளநங்கை.

"எது பிடித்தால் மருந்தும் மாந்திரீகமும் பயன் படாதோ அந்தப் பிசாசு அம்மணி," என்றாள் குறிஞ்சி.

"அப்பேர்ப்பட்ட பிசாசா?" என்று மீண்டுமொரு கேள்வியை வீசினாள் இளநங்கை.

"ஆம் அம்மணி."

"அது எப்படியிருக்குமோ?"

"அழகாக இருக்கும்."

"அழகாக இருக்குமா?"

"மோகினிப் பிசாசு அழகில்லாமலிருக்குமா?' என்ற குறிஞ்சி மெல்ல நகைத்தாள்.

இதைக் கேட்ட இளநங்கை கோபம் தணிந்து குறு நகை கோட்டி, "குறிஞ்சி," என்று இன்பம் சொட்ட அழைத்தாள்.

"ஏன் அம்மணி?"

"மோகினிப் பிசாசு பிடித்தால் தவறா குறிஞ்சி?"

"தவறில்லை அம்மணி, அதுவும் இவரைப் பிடிப்பதில் இவருக்கு ஏதும் கஷ்டமில்லை," என்று கூறிய குறிஞ்சி இளவரசன்மீது தனது விஷமக் கண்களை நாட்டினாள்.

குறிஞ்சியின் சொற்களைக் கேட்டு இளநங்கையும் நகைத்தாள். "அப்படியானால் பிசாசுக்குத்தான் கஷ்டமா?" என்று வினவினாள் நகைப்பொலி சொற்களிலும் ஊடுருவ.

"ஆம் அம்மணி."

"எப்படி!"

"அப்படித்தான்."



"அப்படியென்றால்?"

"நாள் செல்லச் செல்ல மோகினியின் முகம் வெளுக்கிறது. சற்று, சிரமத்திலும் முகம் குறு வியர்வை கொள்கிறது. ஆபரணங்களைச் சுமக்கும் சக்தியைக்கூட இழந்துவிடுகிறது...." என்ற குறிஞ்சி சொற்களை முடிக்காமல் இளநங்கையை நோக்கினாள். இளநங்கை தலையைக் கவிழ்ந்து கொண்டாள்.

"ஏன் தெரியுமா அம்மணி? அதன் வயிற்றில் வேறொர் ஆபரணம் வளருவதால் மற்ற ஆபரணங்களை உடல் சுமக்க முடிவதில்லை. *உடல் இளைத்து முகம் வெளுத்து நகை குறைந்து...அப்பப்பா எத்தனை சிரமம் அம்மணி..." என்ற குறிஞ்சியின் சொற்கள் இளநங்கையின் காதில் தெளிவாக விழுந்ததும் அவள் உடனே பதில் சொன்னாளில்லை. பிறகு மெள்ள வினவினாள் தலையை நிமிராமலே, "நாள்கூட அதிகமாகவில்லையே குறிஞ்சி? நீ எப்படி ஊகித்தாய்?" என்று.

"நான் மருத்துவப் பெண் அம்மணி," என்று சுட்டிக் காட்டினாள் குறிஞ்சி.

"அதனால்?"

"கண்டுபிடிக்க முடிந்தது."

"எப்படி?"

"நேற்றிரவு நான் உள்ளே வந்தவுடன் அவசரமாய் எழுந்து உட்கார்ந்தீர்கள்..."

"'ஆம்."

"அப்பொழுது உங்கள் மூச்சு ஆயாசத்துடன் வெளி வந்து கொண்டிருந்தது, துரிதமாகவும் வந்தது.."

"உம்."

* "சரீரம் இளைத்ததால் குறைவான ஆபரணங்களை அவள் அணிந்திருந்தாள். அவள் முகம் வெள்ளத்தி மலர்போல் வெளுத்திருந்தது. விடியற்காலை சந்திரன்போல் அவள் வதனம் வெளிறிட்டு ஒளிகுன்றிக் கிடந்தது." — சுதக்ஷிணையின் கர்ப்பக் குறிகள் பற்றி ரகுவம்ச மகா காவியத்தில் காளிதாஸன் — மூன்றாவது சர்க்கம்.

"முகம் அளவுக்கதிகமாக வெளுத்திருந்தது."

"உம்."

"கழுத்து சற்று இளைத்திருந்தது."

"உம்."

"நான் வந்த அதிர்ச்சியைக்கூட முகம் தாங்க முடியாமல் குறுவியர்வை கொண்டது," என்று குறிகளைச் சொன்ன குறிஞ்சி சற்று நிதானித்தாள்.

இதற்குப் பிறகு நீண்ட நேரம் மௌனம் சாதித்தாள் இளநங்கை. "இதை எதற்காக இவரிடம் இத்தனை அவசர அவசரமாகச் சொன்னாய் குறிஞ்சி?"

"எந்த விநாடியிலும் போர் துவங்கலாம் அம்மணி," என்று கூறினாள் குறிஞ்சி.

"அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?" என்ற இள நங்கை தலையை நிமிர்த்திக் குறிஞ்சியை நோக்கினாள்.

"பாண்டியப் படையின் முக்கிய உபசேனாதிபதி குறைவதற்கும் இதற்கும் சம்பந்தமில்லையா அம்மணி?" என்று கேட்டாள் குறிஞ்சி.

இளநங்கையின் பலவீனமெல்லாம் எங்கோ பறந்து விட்டது. "குறிஞ்சி!" என்ற சொல் சீற்றத்துடன் வெளி வந்தது.

"என்ன அம்மணி!"

"ஒன்று நினைவில் வைத்துக்கொள்."

"என்ன அது?"

"போர் முன் நிற்கும்போது வீட்டுக்கோடும் உபதளபதியல்ல நான்?"

"அப்படியானால்?"

"இவருடன் தோளுக்குத் தோள் நின்று போர் புரிந்து சேரனைப் புறமுதுகு காணப்போகிறேன். முத்துக்குமரியைச் சிறை மீட்கவும் போகிறேன்."

குறிஞ்சியின் கண்கள் இளநங்கையை ஏறெடுத்து நோக்கின. "இளவரசியார் சேரர் தலைநகரில் இல்லை," என்ற சொற்களை மிக நிதானமாகச் சொன்னாள் குறிஞ்சி.



குறிஞ்சியின் இந்தச் செய்தி முந்திய செய்தியைவிட அதிக அதிர்ச்சியைத் தரவே, "என்ன? முத்துக்குமரி பரலியில் இல்லையா?" என்ற கேள்வி இளவரசன், இளநங்கை இருவரிடமிருந்து ஏககாலத்தில் எழுந்தது.

"முத்துக்குமரியும் இல்லை, முத்தும் இல்லை பரலியில்," குறிஞ்சியின் பதில் திடமாக எழுந்தது.

"வேறெங்கு இருக்கிறாள் முத்துக்குமரி? முத்து எங்கே போய்விட்டது?" என்று சீறினான் வீரபாண்டியன்.

"சிங்களத்துக்கு," என்றாள் குறிஞ்சி.

"இதை ஏன் முன்பே சொல்லவில்லை?" வீரபாண்டி யன் குரல் கடுமையுடன் ஒலித்தது.

"நேற்றிரவே சொல்ல முயன்றேன். கேட்கும் நிலையில் நீங்கள் இல்லை," என்று சுட்டிக் காட்டினாள் குறிஞ்சி.

வீரபாண்டியன் இரண்டுவிநாடிகள்தான் சிந்தித் தான். "சரி சரி, நீ மன்னரிடம் சென்று விஷயத்தைச் சொல். இதோ நானும் வந்துவிட்டேன்" என்று கூறிவிட்டு இள நங்கையைக்கூடக் கவனிக்காமல் கையிலிருந்த பிழிந்த துணியுடன் மருதமரக் குடிலை நோக்கி ஓடினான் வீர பாண்டியன்.

இளநங்கை இரண்டு விநாடிகள் பிரமித்தாள். பிறகு அவளும் குடிலை நோக்கி நடந்தாள். அத்தனை இளைப்பிலும் இம்முறை அவள் நடை துரிதமாகவும் உறுதியுடனும் இருந்தது. சேனைகளை நடத்தும் திறனை அந்த நடையில் பார்த்தாள் குறிஞ்சி. 'வீரப் பெண்கள் இப்படித்தான் இருப்பார்கள் போலிருக்கிறது?' என்று தனக்குள் சொல்லிக்கொண்ட குறிஞ்சி மன்னன் கூடாரத்தை நோக்கிச் சென்றாள்.

## அத்தியாயம் 59

# வீரபாண்டியன் சிருஷ்டி

**த**ரையிலிருந்து கிளம்பிக் கூடாரத்தின் தலையை ஊடுருவிக் கிளம்பி நின்ற பெரிய நடுத்தூணின் மூலையில் தென்னவன் கொடி பரலியை நோக்கிக் காற்றில் படபடக்க, கொடித்துணியில் தீட்டப்பட்டிருந்த பெருமீன் காற்றில் துணி வளைந்ததால் உடல் வளைத்துப் பரலியை விழுங்க ஆசைப்படுவதுபோல் வாளைக் கண்ணால் அம்மாநகர் நோக்கி விழிக்க, கூடார வாயிலில் காவல் புரிந்த யவன வீரர் இருவர் குறுக்கும் நெடுக்கும் நடந்ததால் மலைக்கற்களில் உராய்ந்த அவர்கள் பாதக்குறடுகள் கர் கர்ரென்று மலையின் பொடிக்கற்களைப் படுசூரணம் செய்து ஒலி கிளப்பிப் பரலியும் அப்படிச் சூரணமாகும் நாள் தூரத்திலில்லை என்பதை அறிவுறுத்த, பார்ப்பதற்குப் பயத்தையும் மதிப்பையும் ஒருங்கே கொடுத்த மன்னன் இருப்பிடத்தை நோக்கி நடந்த குறிஞ்சிக்கு அந்தக் கூடாரத்தை எட்டியதும் பெருவியப்பு காத்திருந்தது. அவள் காவலரை அணுகியதும், "பணிப் பெண்ணை உள்ளே அனுப்பு," என்ற மன்னன் குரல் மிகக் கம்பீரத்துடன் ஒலித்தது. அந்த உத்தரவால் வழிவிட்டு விலகிநின்ற இரு யவனக் காவலரையும் தாண்டி, குறுக்கே கிடந்த வழிச்சீலையை அகற்ற உள்ளே நுழைந்த குறிஞ்சி மன்னனை நோக்கி, தலை மிகவும் தாழ வணங்கினாள்.

அவள் உள்ளே நுழைந்தபோது ஜடாவர்மன் சுந்தர பாண்டியன் கூடாரத்தின் நடுவேயிருந்த மஞ்சத்தில் அமர்ந்திருக்கவில்லை. கூடாரத்தின் ஒரு மூலையில் அரபு நாட்டுச் சீலைகள் இரண்டு கூடியிருந்த இடத்தருகே நின்று கொண்டிருந்தான். அவளை உடனடியாக சுந்தர



பாண்டியன் விசாரிக்கவும் இல்லை. அவளை நோக்கித் திரும்பவும் இல்லை. கூடாரத்தின் கீழே முனைகள் நன்றாக இறுக்கப்பட்டிருந்ததால் நன்றாக ஒன்றுக்கொன்று இடை வெளி தெரியாமல் பிணைந்து நின்ற அரபு நாட்டுக் கெட்டித் துணிக்கு அருகிலேயே நின்றிருந்தான். நீண்ட நேரம் இப்படி நின்றிருந்து பிறகு திரும்பி மன்னன் குறிஞ்சியை நோக்கி, "ஏன்? தம்பி வரவில்லையா?" என்று வினவினான்.

இந்தக் கேள்வி குறிஞ்சியை அயரவைத்து, "தம்பியா?" என்று பிரமிப்புடன் ஒற்றைச் சொல்லை உதிர்த்தாள் அவள்.

"ஆம்," என்ற ஜடாவர்மன் குறிஞ்சியைத் தனது அருகில் வரும்படி சைகை செய்தான். அவள் அருகில் வந்ததும் கூடாரத்தின் இணைந்த துணிகளில் ஒன்றை இடது கையால் சற்று நீக்கி, "இப்பொழுது வெளியே பார்," என்று உத்தரவிட்டான்.

பார்த்தாள் குறிஞ்சி. பார்த்துப் பார்த்துப் பிரமிக்கவும் செய்தாள். விலகிய அந்த சீலை மூலம் தானும் இளவரசனும் இளநங்கையும் நின்று பேசிக்கொண்டிருந்த இடம் மிகத் தெளிவாகத் தெரிந்தது. மன்னன் காதில் தங்கள் பேச்சு விழாவிட்டாலும் தான் கூறிய செய்தியால் வீரபாண்டியன் அடைந்த அதிர்ச்சி, துரிதம், இள நங்கையின் வியப்பு அத்தனையும் மன்னன் கண்ணால் கண்டிருப்பானென்பதைச் சந்தேகமற உணர்ந்தாள் குறிஞ்சி. அதனால் ஏற்பட்ட பிரமிப்பு குரலிலும் துலங்கக் கேட்டாள் பணிப் பெண். "பாண்டிய மன்னர் இத்தனை காலையில் இவ்வழி நோக்க வேண்டிய அவசியம்?" என்று.

ஜடாவர்மன் இதழ்களில் இளநகை அரும்பிற்று. அவன் சிங்கக் கண்களிலும் சிரிப்பு சற்று சிந்தியது. "தன்னைச் சுற்றிலும் என்ன நடக்கிறதென்பதை அறியாத மன்னன் நீண்ட நாள் உயிர் வாழ முடியாது. ஆகையால் இப்படிச் சீலை இணைப்புகளை நாற்புறமும் வைத்திருக்கிறேன். வேண்டிய போது விலக்கிப் பார்க்கிறேன்.

விடியற்காலையில் பார்ப்பதை சம்பிரதாயமாக வைத்துக் கொண்டிருக்கிறேன்," என்று கூறிய ஜடாவர்மன் சுந்தர பாண்டியன், "சரி, நீ கொணர்ந்த செய்தி என்ன? வீரபாண்டியனையே கவலையில் ஆழ்த்தும் செய்தியானால் அது நாம் நேரிடையாகக் கேட்கத் தகுந்ததாகவே இருக்கும்," என்றான்.

"அவரும் வந்துவிடட்டும்," என்றாள் குறிஞ்சி சற்றுத் தயங்கி.

"ஏன்? அவர் எதற்கு? அவரிடந்தான் சொல்லியாகி விட்டதே'" என்றான் சுந்தரபாண்டியன்.

"அவரைப்பற்றிய செய்தியும் இருக்கிறது..." என்று செய்திகள் சொல்ல வேண்டிய முறையை மெல்ல மாற்றினாள் குறிஞ்சி.

முதலில் ஜடாவர்மன் முகத்தில் முறுவலின் சாயை அதிகமாகப் பரவியது. தலையைச் சற்றுப் பின்னுக்குத் தள்ளி அவன் சிரித்தபோது அவன் முரட்டு முடிகளில் சில தலையிலும் வண்டுகள்போல் விழுந்து துள்ளின. "மிகவும் கெட்டிக்காரி நீ" என்ற மன்னன் குரலில் ஏளனமிருந்தது.

குறிஞ்சி அச்சத்தின் வசப்பட்டாள். மன்னவன் தன் உள்ளத்தை ஊடுருவிப் பார்த்துவிட்டானென்பதால் பெரும் பீதியடைந்தாள் அந்தப் பணிப்பெண்.

ஆகவே, "மன்னவா!..." என்று ஒரு சொல்லைச் சொன்னாள். அத்துடன் மேலும் ஏதோ பேச வாயெடுத்தாள். மன்னன் அவளைத் தன் கையை உயர்த்தித் தடுத்து, "சற்றுப் பொறு, தம்பியும் வந்துவிட்டான்," என்று சொல்லிக் கொண்டிருந்த சமயத்தில் அதிவேகமாக உள்ளே நுழைந்தான் வீரபாண்டியன். அண்ணனைக் கண்டதும் தலைவணங்கிவிட்டு,, "குறிஞ்சி முக்கிய செய்தி கொண்டு வந்திருக்கிறாள்," என்று கூறினான்.

"கொண்டு வந்த செய்தியையும் கேட்போம்,, கண்டு வந்த செய்தியையும் கேட்போம், இதுதான் வரிசைக் கிரமம். உனக்கு அவசியமானால் கிரமத்தை மாற்றிக் கொள்,'"



என்றான் ஜடாவர்மன் தம்பியை நோக்கிச் சர்வ சாதாரணமாக.

மன்னன் சொன்னது நன்றாக விளங்கியது வீர பாண்டியனுக்கு. இருப்பினும் விளங்காததுபோல் கேட்டான். "நீங்கள் சொல்வது விளங்கவில்லை எனக்கு" என்று.

"கொண்டுவந்த செய்தி பரலிமா நகரிலிருந்து கொண்டு வந்தது. கண்டு வந்த செய்தி இங்கு வந்தபின் கண்டு வந்தது. கண்டு உவந்தது என்றுகூடச் சொல்லலாம்," என்ற ஜடாவர்மன் பெரிதாக நகைத்தான்.

வீரபாண்டியனும் குறிஞ்சியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். ஜடாவர்மன் இரைந்தே சொன்னான்: "மனைவியைப்பற்றிய எந்த விஷயமும் கணவனுக்குத்தான் ரகசியம், மற்றவர்களுக்கு அல்ல. கொற்கை ராஜமுத்திரைக்கு அடுத்த தலைமுறை ஏற்படப் போகிறதென்பதை இரண்டு நாட்களுக்கு முன்பே கண்டு விட்டேன் தம்பி."

"மன்னர் மருத்துவர் அல்லவே" என்று குறுக்கிட்டாள் குறிஞ்சி.

"மருத்துவனில்லா விட்டாலென்ன, இளநங்கையின் அழகிய வீரநடை குலைந்தபோதே விஷயம் புரிந்துவிட்டது. தவிர மருத்துவப் பெண்ணே..." என்ற ஜடாவர்மன் குறிஞ்சியைப் பார்த்து நகைத்தான்.

"என்ன மகாராஜா?" என்று வினவினாள் குறிஞ்சி.

"குடும்ப வாழ்க்கை நீ எய்தவில்லை. தம்பியும் அதற்குப் புதியவன். நான் அப்படியில்லை. எனக்குப் பெண் பிள்ளைகள் இருக்கிறார்கள். அனுபவத்தில் வராதது மருத்துவத்தில் மட்டும் வந்துவிடாது. உனக்குத் திருமண மான பின்பு நீயும் புரிந்து கொள்வாய் மருத்துவம் இரண்டாம் பட்சம் என்று," எனக் கூறிய பாண்டிய மன்னன் கடகடவென நகைத்தான்.

அவன் விஷம நகைப்பு அவளுக்கு வெட்கத்தை அளித்தது. அவன் கூரிய அறிவையும் கிரகிக்கும் கண்களின்

பார்வையையும் நினைத்து அவள் வியப்பும் கொண்டாள். அவள் மீண்டும் ஏதோ பேசத் துவங்கியபோது கையமர்த்திய சுந்தரபாண்டியன், "சரி குறிஞ்சி! நமது உபதளபதிகளில் ஒருவர் உபயோகப்படமாட்டார். அவரைக் கொற்கைக்கு அனுப்ப ஏற்பாடு செய்வோம்," என்று கூறினான். அத்துடன் அந்த வேடிக்கைப் பேச்சு முடிந்தது. மஞ்சத்தில் உட்கார்ந்துகொண்ட மன்னன் முகத்தில் கம்பீரமும் உறுதியும் சுடர்விட்டது. "சரி, இனி நீ கொண்டுவந்த செய்தியைச் சொல்," என்றான்.

குறிஞ்சி பல விநாடிகள் மௌனம் சாதித்தாள். பிறகு சொன்னாள் தடுமாற்றக் குரலில், "மன்னவர் விரும்பத்தகாத செய்தி அது. சொல்ல அச்சமாகவும் இருக்கிறது," என்று.

"கேட்பதற்கு எனக்கு அச்சமில்லை, சொல்" என்றான் ஜடாவர்மன்.

குறிஞ்சி திரும்பி வீரபாண்டியனை நோக்கினாள். அவன் முகம் பார்ப்பதற்குப் பயங்கரமாயிருந்தது. போரில் இறங்கும் போது ஏற்படும் பேய் முகத்தைக் கண்டாள். கழுகுகளின் பார்வையைப் போன்ற பார்வையையும் கண்டாள். ஆகவே சட்டென்று முகத்தைத் திருப்பி மன்னனை நோக்கி, "சித்தத்தைக் கலக்கும் செய்தி மன்னவா, இருப்பினும் கடமையைச் செய்கிறேன்" என்று துவங்கி, "பரலிமா நகரில் இளவரசியும் இல்லை. முத்துச் செல்வமும் இல்லை" என்றாள் பயத்துடன்.

"எங்கே?" மன்னன் குரல் பயங்கரமாக ஒலிக்கவில்லை. உணர்ச்சி ஏதுமற்று வறண்டு ஒலித்தது.

"சிங்களத்துக்குக் கடத்தப்பட்டார்கள்," என்று குறிஞ்சி சொன்னாள். சொன்ன உதடுகள் நடுங்கின. உடலும் லேசாக உள்ளூர நடுக்கம் கொடுத்தது.

அடுத்த சில நிமிடங்கள் கூடாரத்தின் உள்ளே மௌனம் நிலவியது. மன்னன் தீவிரமாக எதையோ யோசித்தான். பிறகு அதே வறண்ட குரலில் கேட்டான், "குருநாதருக்கு இது தெரியுமா?" என்று.



"குருநாதர் சிறையிலிருக்கிறார்," என்றாள் குறிஞ்சி மெல்ல.

"இந்திரபானு இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தானா?" என்றான் வீரபாண்டியன் கடுமையான குரலில்.

"இந்திரபானுவும் சிங்களத்துக்குக் கடத்தப்பட்டுவிட்டார்?" என்றாள் குறிஞ்சி.

"முத்துக்குமரிக்கு இப்படி நடக்கப் போவது தெரியுமா?" என்றான் மன்னன்.

"தெரிந்திருக்க வேண்டும். தனது ஆடையை உடுத்திக் கொண்டு நள்ளிரவில் அந்தப்புரத் தாழ்வரை விளக்கொளியில் நிற்கச் சொன்னார்கள்," என்றாள் குறிஞ்சி.

மீண்டும் மௌனம் நிலவியது அம் மூவரிடையேயும். ஜடாவர்மன் நீண்டநேரம் தரையை நோக்கிக் கொண்டிருந்தான். பிறகு சொன்னான். "தம்பி! நீதான் வெற்றியடைந்தாய்," என்று.

புரிந்துகொண்டதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான் வீரபாண்டியன். "தங்கள் சபதம் பலிக்கிறது" என்றும் கூறினான் கம்பீரமான குரலில்.

ஜடாவர்மன் தரையை மீண்டும் நோக்கினான். "என் மனம் கேட்கவில்லை தம்பி! நிராயுதபாணிகளான பலர் உயிர் விடுவார்களே" என்றான் பரிதாபத்துடன்.

"சேரன் தலைநகரை அழிப்பதில் இத்தனை பரிதாபமா உங்களுக்கு? அப்படியானால் காட்டுக் கோட்டையில் ஏன் சொன்னீர்கள். 'பத்தினி ஆட்சி நடக்கட்டும்; பரலி பற்றி எறியட்டும்' என்று?"

"உணர்ச்சி வேகத்தில் சொன்ன சொல் அது."

"இப்பொழுது உணர்ச்சி மாற சேரன் என்ன செய்துவிட்டான்?"

"இருப்பினும் உன் ஆயுதம் பயங்கரம் தம்பி!"

"அவனிடம் படைபலம் அதிகம்."

"ஆம் தம்பி ஆம். இருப்பினும்..."

"இருப்பினும் என்ன அண்ணா? கிழக்குக் கோட்டை வாயில் நெடுகிலும் மரங்களை வெட்டிப் பாலைவனமாக்கி விட்டான் சேரன். விற்பொறிகளும் வேல் பொறிகளும் மதிள்கள்மேல் தயாராக நிற்கின்றன. நமது வீரர்கள் கோட்டையை நெருங்கக்கூட முடியாது. காட்டின் மறைவு நமக்கில்லை: வெட்ட வெளியில் போனால் அரைஜாம நேரத்தில் அழிக்கப்படுவோம்..."

ஜடாவர்மன் பெருமூச்சு விட்டான். "ஆம் தம்பி உண்மை" என்றும் சொன்னான்.

மேலும் சொன்னான் வீரபாண்டியன், "அண்ணா! கோட்டைக்கு உள்ளே வளையத்துக்குள் வளையமாகச் சேரன்படை நிற்கிறது. அவற்றைத் திடீரென ஒன்று சேர ஆங்காங்கு முரசுகளும் வைக்கப்பட்டிருக்கின்றன. முரசுகள் ஒலித்தால் வளையங்கள் கூடிவிடும். நாம் ஒருவேளை விற் பொறிகளுக்குத் தப்பி உள்ளே நுழைந்தால் அந்தப் பயங் கரப் படை வளையங்களுக்குள் அகப்பட்டுக் கொள்வோம். வளையம் நெருக்கப்பட்டால் அடியோடு மடிந்து போவோம்."

இதைச் சொன்ன வீரபாண்டியன் கம்பீரமாக எழுந்து நின்றான். "ஓர் உபதளபூதி நமது திட்டத்திலிருந்து குறைந்துவிட்டதை எண்ணிக் கவலை வேண்டாம். அவர் பணியையும் நானே செய்கிறேன். உத்தரவு கொடுத்தால் நமது ஆயுதங்களைக் காட்டின் முகப்புக்கு நகர்த்துகிறேன்," என்றும் கூறினான் வீரபாண்டியன்.

இருவர் பேசுவதின் பொருள் சற்றும் விளங்கவில்லை குறிஞ்சிக்கு. பரலிமாநகர் தற்காப்பு ஏற்பாடுகளையும் குருநாதர் திட்டங்களையும் பாண்டிய சகோதரர்கள் உணர்ந்திருக்கிறார்களென்று அவளுக்கு விள்ங்கியதே தவிர அவ்விருவரும் பரலியை அழித்துவிட முடியும்போல் பேசுவது விந்தையாயிருந்தது. அதனால் மன்னனை நோக்கிச் சொன்னாள்: "மன்னவா! சுமார் இருபதினாயிரம் படை வீரர்கள் உங்களை எதிர்நோக்கியிருக்கிறார்கள். தவிர



கடற்படையும் சமயத்தில் கைகொடுக்கச் சித்தமாயிருக் கிறது."

அவள் உள்ளே எழுந்த எண்ணத்தை உணர்ந்து கொண்ட ஜடாவர்மன் தனது சிங்கக் கண்களைக்கொண்டு அவளை நோக்கினான். "குறிஞ்சி! இருபதினாயிரம் வீரர்களையும் அழிக்கும் ஆயுதத்தை இளவரசன் ஏற்பாடு செய்திருக்கிறான். அத்தகைய அழிவை நான் விரும்ப வில்லை. நான் விரும்பினால் என்ன, விரும்பா விட்டால் என்ன? அது நடக்கத்தான் போகிறது. இளவரசருடன் சென்று அந்த ஆயுதத்தைப் பார்த்துவிட்டு வா. அதன் பயங்கரம் பரலிமா நகர்மீது உன் இதயத்திலும் கருணையை விளைவிக்கும்," என்று கூறி "தம்பி! குறிஞ்சிக்கு உன் விபரீத சிருஷ்டியைக் காட்டு!" என்று வீரபாண்டியனுக்கு உத்தர விட்டான். தன்னுடன் வரும்படி குறிஞ்சிக்கு உடன் சைகை செய்து வெளியே நடந்தான் வீரபாண்டியன்.

குறிஞ்சி அவனைத் தொடர்ந்தாள். மலைப்பாதையில் நீண்ட தூரம் நடந்து, படைப்பிரிவுகள் பலவற்றைத் தாண்டிக் காடடர்ந்த ஓர் இடத்துக்கு வந்தாள். வீர பாண்டியன் சிருஷ்டியைக் கண்டாள். மிகப் பயங்கர சிருஷ்டி அது. "பரலி தீர்ந்தது," என்று நடுக்கத்துடன் தன் மனத்தே சொல்லியும் கொண்டாள்.

## அத்தியாயம் 60

# இடங்கணிப் பொறி!
# எரிமுகப் பேரம்பு!

பாண்டிய மன்னன் பாசறையிலிருந்து பாவை குறிஞ்சியைத் தனது பயங்கர சிருஷ்டியிருந்த காட்டுப் பகுதிக்கு அழைத்து வந்த வீரபாண்டியன், "குறிஞ்சி இதோ பார்," என்று அங்கிருந்த ஒரு பெரும் பொறியையும் பொறிக்கு முனையில் நான்கு ஆள் நீளத்துக்குப் பரலியின் திக்கை நோக்கிக் கொண்டிருந்த ஒரு பெரிய அம்பையும் காட்டினான்.

அந்த ஆயுதம் பாண்டியன் பாசறையிலிருந்து கால் காதத்துக்கு மேலிருந்ததால் அவர்கள் அதை அடைந்த சமயத்தில் வெயில் சற்று நன்றாகவே ஏறியிருந்த காரணத்தால் தெளிவாக அதைப் பார்க்க முடிந்தது விஜயவர்மன் மகளுக்கு.

அந்த ஆயுதத்தை நிறுத்த அந்த அடர்ந்த காட்டுப் பகுதியில் இருந்த சில மரங்களை வெட்டி, சக்கர வட்டமாக இடம் அமைக்கப்பட்டிருந்ததன்றி, அந்த ஆயுதமும் அதன் அடியிலிருந்த பொறிக்கூடும் இரண்டு சக்கரங்கள் உள்ள ஒரு பொறி ஒரு பெரும் கூடை போலிருந்தது. அதன் மேலெழுந்த பெரிய அம்பின் நுனியில் கழுத்தில் மற்றும் ஒரு பெரும் உருண்டையும் இருந்தது. அந்தப் புது அம்பின் நீளம், உருண்டைக்கழுத்து, அடியிலிருந்த பொறிக்கூடை — இத்தனையும் பார்த்த குறிஞ்சி பெரும் பிரமிப்பால் அதைப் பார்த்துக் கொண்டே இருந்தாள்.

நீண்டநேரம் அப்படி மலைத்து நின்றுவிட்ட குறிஞ்சியை வீரபாண்டியன் சொற்கள் நனவுலகத்துக்கு



அழைத்து வந்தன. "குறிஞ்சி! தமிழகத்தின் மூதாதைகள் வகுத்த மிகப் பயங்கரமான ஆயுதத்தை நீ பார்க்கிறாய். சமீப காலத்தில் இதை யாரும் செய்ததுமில்லை, கையாண்டது மில்லை. தமிழர் படைக்கல அமைப்பில் சொல்லப்படுவது ஏட்டுச் சுரைக்காய் என்று நம்பி வந்தார்கள். ஆனால் இது பற்றி நான் நீண்ட நாட்களாகச் சிந்தித்திருக்கிறேன். மதுரையிலிருக்கும்போது சிறுசிறு ஆயுதங்களை இதுபோல் செய்தும் பார்த்திருக்கிறேன். தேவையில்லாவிட்டால் இப்பொழுதுகூட இதைச் செய்திருக்கமாட்டேன். எதிரியின் பெரும்படை, நமது சிறு படையை மதிள்புறம்கூட அணுகவிடாதிருக்க, அதன் காட்டு முகப்பை அழித்தது, விற்பொறிகளையும் வேல் பொறிகளையும் மதிள்மீது ஏற்றியது, இவை காரணமாகவே இதைச் சிருஷ்டித்தேன். இதை நான் அமைக்க முயன்றபோது மன்னர்கூட நகைத்தார். என்னைப் பார்த்தும், தச்சர்களை வேலை வாங்குவதைப் பார்த்தும், காட்டு மரங்கள் சிலவற்றை வெட்டுவதைப் பார்த்தும் இகழ்ச்சிப் புன்முறுவலும் கொண்டார். ஆனால் இதைச் செய்தபின் அவர் முறுவலும் கொள்ளவில்லை; வாய்விட்டு நகைக்கவும் இல்லை," என்று கூறினான் வீரபாண்டியன்.

குறிஞ்சி அந்தப் பெரும் ஆயுதத்திலிருந்து கண்களைத் திருப்பி வீரபாண்டியனை நோக்கினாள். வீரபாண்டியன் முகம் பார்ப்பதற்குப் பயங்கரமாயிருந்தது. கண்களில் சதா துள்ளும் விஷமச் சிரிப்பு மறைந்து கழுகுப் பார்வை துலங்கியது. வீரபாண்டியன் குரலும் தொடர்ந்து பயங்கரமாக ஒலித்தது: "பெண்ணே! சேரன் எனது சகோதரன் மகளை அபகரிக்காத வரையில் நேர்முகப் போருக்கு இலக்கானவனாயிருந்தான். பெண்ணைக் கொண்டு சென்ற பிறகு அவனை அழிப்பதற்கு நேர்முகப் போர் அவசியமில்லை. அதற்குத்தான் இந்தக் காவிய வாளியை அமைத்தேன். எவ்வாளியைக் கொண்டு சிவ பெருமான் முப்புரத்தை அழித்தாரோ அந்த வாளியைப் போன்றது இது. ஆகவே இதற்கும் அந்தப் பெயரையே

சூட்டியிருக்கிறேன். அந்தப் பெயர் தெரியுமா குறிஞ்சி?" என்று வினவினான் வீரபாண்டியன்.

குறிஞ்சி பதிலேதும் சொல்லவில்லை. அவன் போர் வெறி, அவன் சொற்சீற்றம், கண்பார்வை இவையனைத்தும் அவளுக்கு அச்சத்தையே அளித்தன. அவளிடமிருந்து பதில் வராது போகவே தனது கேள்விக்குத் தானே பதில் சொல்லிக்கொண்டு மேலும் பேசினான் இளவரசன்: "அதற்குப் பெயர் எரிமுகப் பேரம்பு, திரிபுரத்தையே அதன் ஜ்வாலை அழித்தது. அது இப்படித் தானிருக்க வேண்டும் குறிஞ்சி. தமிழர் படை இலக்கணம் இருவகைப் படைகளைக் குறிக்கிறது. கைவிடு படை, கைவிடாப் படை என்று இருவகைகள் இருக்கின்றன. ஒரு வகை வாள், வேல், கோடரி முதலியன. மற்றொரு வகை பொறிகளால் இயங்குபவை. இரண்டாவது வகையைச் சேர்ந்தது இது. இடங்கணி என்று கேள்விப்பட்டிருக்கிறாயா நீ?"

இதைச் சொன்ன வீரபாண்டியன் சற்றுப் பேச்சை நிறுத்திக் குறிஞ்சியைப் பார்த்தான். குறிஞ்சிக்கு ஏதும் புரியவில்லை. அவனுக்கிருந்த போர் வெறிதான் புரிந்தது அவளுக்கு. "இடங்கணியா!" என்று கேட்டபோதும் மயக்கத்திலேயே கேட்டாள் அவள்.

"ஆம், குறிஞ்சி *இடங்கணிதான். கல வீசும் பொறியின் பெயர் அது. இடங்கணியில் கல்விடு கூடை என்று உண்டு. அதில் கருங்கற்களை இட்டு வைத்தால் பொறிஇயங்கி இக்கற்களை எடுத்து, கனவேகத்தில் வீசும். பெரும் பந்தங்களையும் வீசும் ஆற்றல் உடையது அது. அந்தப் பொறியையும் வேற்பொறியையும் அந்த அம்பிலேயே இணைத்திருக்கிறேன். இதிலுள்ள இடங் கணியின் கல்விடு கூடையில் கல்லிருக்காது. பெரும் தீப்பந்தங்கள் இருக்கும். இந்தப் பொறி இயங்க முற்பட்டதும் இந்த எரிமுகப் பேரம்பு இடங்கணியுடன்

* 'அபிதான சிந்தாமணி' ஆயுதப் பொதுப் பிரிவு அ. சிங்கார வேலு முதலியார் இயற்றியது.



பெருவேகத்தில் சேரன் தலைநகர் மீது பாயும். அது நகர்ப்புறத்தை அடைவதற்கும் இடங்கணி இயங்குவதற்கும் நேரம் சரியாயிருக்கும். இடங்கணி பந்தங்களை மலைபோல் சேரர்தலைநகர் மீது வீசும். தலைநகரின் எந்தப் பகுதிகள் எரியுமோ சொல்ல முடியாது. ஆனால் நகரெங்கணும் பல இடங்கள் தீப்பிடிக்கும், பல இடங்கள் பயங்கரமாக எரியும். அப்படி நாற்புறமும் தீப்பிடித்து எரியும்போது, சேரன் படையில் பெரும் குழப்பம் ஏற்படும். அந்தச் சமயத்தில் எனது குதிரைப்படை அந்த மாநகரின் பெரும் நாசத்தை விளைவிக்கும்" என்றான் வீரபாண்டியன்.

'அவன் சொன்னதைக் கேட்டு வாயடைத்து நின்றாள் குறிஞ்சி. இப்படித் தனது போர்த் திட்டத்தை வெட்ட வெளிச்சமாக விளக்கும் யாரையும் அவள் பார்த்ததில்லை. அதுவும் கோட்டாற்றுக்கரைப் போரில் தனது எண்ணங் களைச் சிறிதும் விளக்காது அடியோடு மறைத்து விட்ட வீரபாண்டியன், நிற்கப்போவது பாண்டிய நாடா, சேர நாடா என்பதை நிர்ணயிக்கும் இந்த முக்கிய போரில் தனது மனத்தைத் திறந்து காட்டுவதைக் கண்டு பெருவியப் பெய்தினாள். அந்த வியப்பைச் சொல்லிலும் வடித்தாள். "பெரும்படைத் தலைவர்கள் தங்கள் போர் முறையைப் பகிரங்கப்படுத்துவதும் வழக்கமில்லையே?" என்று.

"இது போர் முறையல்ல குறிஞ்சி. இது வெறும் அழிவு. அதர்மத்தின் பலனைச் சேரன் அனுபவிக்கப் போகிறான். இதற்கு நான் பொறுப்பாளியல்ல," என்று பதில் கூறிய வீரபாண்டியன், "இப்பொழுது பார், எரிமுகப் பேரம்பு இயங்கக்கூடிய முறையை" என்று கூறிவிட்டுச் சுற்றிலும் பொறி வண்டியைக் காவல் புரிந்த வீரர்களில் இருவரை அழைத்துக் கையால் சைகை செய்தான். அந்த இருவரும் பொறியை அணுகி அம்பு உட்கார்ந்திருந்த இடங்கணிப் பொறியின் இருபுறங்களிலுள்ள இரு சுழற்சக்கரங்களைத் திருகினார்கள் மெல்ல. அவர்கள் திருகத் திருக, வேலின் முகம்போல் முகங்கொண்டு படைத்திருந்த அந்த அம்பின் முனைப்பகுதி இரண்டாக மெள்ளப் பிளந்தது. பிறகு அதன்

கழுத்திலிருந்த சிறு கூடையும் ஒருமுறை அரைவாசி சுழன்று இரண்டாகப் பிரிந்தது. பிறகு உள்ளிருந்த பெரும் மர உருளையொன்று பயங்கர வேகத்தில் ஆகாயத்தை நோக்கிப் பறந்தது. வீரர் இருவரும் சக்கரத்தைச் சுழற்றுவதை நிறுத்தினார்கள். பொறி தட்டென்ற சத்தத்துடன் உட்கார்ந்தது.

வீரபாண்டியன் கண்கள் ஆகாயத்தில் பறந்து சென்ற மர உருளையைக் கவனித்துக் கொண்டிருந்தன. அது கண்ணுக்கு மறைந்த பின்பு திரும்பி அவன் குறிஞ்சியை நோக்கினான். குறிஞ்சி மர உருளை பறந்த வானையே நோக்கிக் கொண்டிருந்தாள். "குறிஞ்சி" என்று வீரபாண்டியன் அழைத்த பின்புதான் அவள் இவ்வுலகத்துக்கு வந்து வீரபாண்டியன் கண்களைச் சந்தித்தாள்.

வீரபாண்டியன் கண்களில் சிருஷ்டிகர்த்தாவின் பெருமிதம் இருந்தது. "குறிஞ்சி! அந்த மர உருளையைத் தீப்பந்தாக வைத்துக்கொள். அந்த மாதிரிக் கணக்கில்லாத தீப் பந்துகள் ஒன்றன்பின் ஒன்றாய்ப் பரலிமீது மழை போல் பொழியும். ஏன் தெரியுமா?" என்று வினவவும் செய்தான் வீரபாண்டியன்.

"ஏன்?" உணர்ச்சியின்றி வந்தது குறிஞ்சியின் கேள்வி.

"இம்மாதிரி பத்து எரிமுகப் பேரம்புகளைச் சிருஷ்டித்திருக்கிறேன். இம்மாதிரிப் பத்துப் பொறிகள் இக் காட்டு முகப்பில் பத்து இடங்களில் இருக்கின்றன. இப்பொழுது நாம் பரலியிலிருந்து ஒன்றரைக் காத தூரத்திலிருக்கிறோம். இன்றே படைகளுக்குப் புறப்பட உத்தரவளிக்கப்படும். எந்தக் காட்டு முகப்பை அழித்து, என் படையைப் பொறிகள் கொண்டு அழித்துவிடச் சேரன் பார்த்தானோ, அந்தக் காட்டு முகப்பு நோக்கி, இந்தப் பொறிகள் இன்று நகர்த்தப்படும்," என்று கூறிச் சற்று நிதானித்த வீரபாண்டியன், "ஆமாம். இளநங்கைக்கு ஏற்பட்டது போல உனக்கும் ஒரு சந்தேகம் ஏற்பட்டிருக்க வேண்டுமே!" என்று வினவினான் திடீரென்று.



"என்ன சந்தேகம் ஏற்பட்டது கொற்கைக் கோட்டைத் தலைவர் மகளுக்கு?" என்று வினவினாள் குறிஞ்சி.

"இரண்டு வீரர்கள் சுழற்சக்கரங்களைச் சுற்றினால் தானே பொறி இயங்குகிறது? அவற்றைச் சுற்றிக்கொண்டு வீரர்கள் கோட்டை முகப்பு முன்பு ஓடும்போது கோட்டை விற்பொறிகள் வாளாவிருக்குமா? என்று கேட்டாள் இளநங்கை," என்றான் வீரபாண்டியன்.

குறிஞ்சிக்கு அப்பொழுதுதான் அந்த ஆயுதத்தை இயக்குவதிலும் ஒரு குறைபாடு இருப்பது தெரிந்தது. "ஆம் ஆம். அதற்கென்ன செய்வீர்கள்?" என்றாள்.

"இங்குதான் சேரன் நமக்கு உதவுகிறான்," என்று கூறினான் வீரபாண்டியன் பயங்கரப் புன்முறுவல் செய்து.

"எப்படி?"

"பரலியின் பிரதான வாயிலுக்கெதிரே பத்துப் பதினொரு புருஷ நீளந்தான் சமவெளி. அதுவும் வண்டிப் பாதைக்கே முன்னோர்கள் போட்டது. அதை அடுத்து இந்த மலைத் தொடர் எழுந்து நிற்கிறது. அவன் அழித்த காட்டை அடுத்து மலை எழுந்து நிற்கிறது. ஆகவே, இந்தப் பொறி மலைச்சரிவுகளில் தள்ளிவிடப்படும். அப்பொழுது வண்டிச் சக்கரங்களுடன் இணைக்கப்பட்ட பொறியின் சுழற் சக்கரங்கள் திரும்பும். பொறி தானாகவே இயங்கும். பொறி வண்டியைத் தள்ளுமுன்பாக எண்ணெய்ப் பந்துகளைக் கல்விடு கூடையில் நிரப்பித் தீ வைத்து அனுப்பும் வேலைதான் வீரர்களுக்கு. மற்றவற்றைப் பொறி தானாகவே செய்து கொள்ளும். இது கைவிடாப் படையல்லவா?" என்று கூறிய வீரபாண்டியன் குறிஞ்சியை மகிழ்ச்சியுடன் நோக்கினான்.

குறிஞ்சி முகத்தில் மகிழ்ச்சி எதுவுமில்லை. அந்தப் பயங்கர ஆயுதத்தைப் பார்த்தவண்ணமே நின்றாள். 'பரலி அழிந்தது,' என்று தனக்குள் சொல்லியும் கொண்டாள்.

வீரபாண்டியன் திரும்ப அவளைப் பாண்டிய மன்னன் கூடாரத்துக்கு அழைத்து வந்தான். குறிஞ்சி மன்னனைப் பார்த்தாள். மன்னன் பெருமூச்செறிந்தான்.

பிறகு தம்பியை நோக்கிக் கூறினாள், "தம்பி! இன்றே புறப் படட்டும் படை பரலி நோக்கி," என்று.

தம்பி தலை தாழ்த்தினான். "பல்லக்கையும் தயார் செய்கிறேன்," என்றான்.

மன்னன் தலையை மட்டும் அசைத்தான். பல்லக்கு எதற்கு என்று அவனும் கேட்கவில்லை. குறிஞ்சியும் கேட்க வில்லை. இளநங்கையைக் கொற்கைக்கு அனுப்பத்தான் பல்லக்கு என்று இருவருக்கும் தெரியும். அன்று அந்தி வேளையில் இளநங்கை பயணமானாள் கொற்கை நோக்கி. படைகள் நகர்ந்தன பரலி நோக்கி.

## அத்தியாயம் 61

# குறிஞ்சிக்குப் போர்ப் பணி!

பாண்டிய மன்னன் உத்தரவுப்படி படைகளை நகர்த்துவதிலிருந்த சுலபம் இளநங்கையைக் கொற்கைக்கு அனுப்புவதில் இல்லை வீரபாண்டியனுக்கு. மன்னன் உத்தரவைக் கேட்டதுமே வெகுண்ட இளநங்கை, பல்லக்குத் தயாராகி பர்ணசாலை வாசல் வந்த பின்பும் கிளம்ப மறுத்து அடம்பிடித்து மல்லுக்கு நின்றாள் இளவரசனிடம். "நான் எதற்காகப் போகவேண்டும் கொற்கைக்கு? என்ன வந்து விட்டது எனக்கு?" என்று சீறினாள் வீரபாண்டி யனை நோக்கி.

வீரபாண்டியன் கைகள் அவளைச் சுற்றிச் சென்று பூ உடலைச் சற்று இறுகவே அணைத்தன. "என்ன வந்திருக் கிறது என்பதைக் குறிஞ்சி சொல்லவில்லையா? இந்த நிலையில் நீ எப்படிப் போராட முடியும்? முடிந்தாலும் நான் அனுமதிப்பது எப்படி நியாயமாகும்?" என்று மெல்ல அவள் காதுக்கருகில் அவன் உதடுகள் சொற்களை உதிர்த்தன. சற்று அகன்று கன்னங்களையும் தடவின.

சாதாரணச் சமயமாயிருந்தால் அந்த ஒரு செய்கையி லேயே இளநங்கையின் பலமெல்லாம் காற்றில் பறந்திருக் கும். அவன் கையில் உருகியிருப்பாள் அவள். ஆனால் அன்றிருந்த கோபத்தில் அவன் சரசம் கோபத்தைக் கிளறவே, "இதெல்லாம் வேண்டாம். நானிருப்பது உங்களுக்கு இஷ்டமில்லாவிட்டால் நான் போகிறேன்" என்றாள்; கோபம் குரலில் தெறிக்க.

வீரபாண்டியன் கைகளிலொன்று அவள் முதுகை மெள்ளத் தடவியது. "இளநங்கை! உன்னைவிட்டுப் பிரிந்

திருப்பது எனக்கு மட்டும் சுலபமென்று நினைக்கிறாயா? நிலைமை இந்தப் பிரிவை சிருஷ்டித்திருக்கிறது," என்று சமாதானப்படுத்தினான்.

"என்ன நிலைமை?" இளநங்கை அவன் அணைப்பி லிருந்தபடியே கேட்டாள்.

"நம்மை மீறிய நிலைமை." வீரபாண்டியன் சங்கடத் துடன் கூறினான்.

"இதொன்றும் நம்மை மீறிய நிலைமை அல்ல..."

"என்ன இளநங்கை?"

"நம்மால் உண்டான நிலைமைதான். அதுவும் உங்களால் உண்டானதுதான்," இளநங்கையின் சொற்கள் எரிச்சலுடன் வெளிவந்தன.

அந்த எரிச்சலிலும் ஒரு பெருமை துள்ளி விளையாடு வதைக் கண்ட வீரபாண்டியன் புன்முறுவல் கொண்டான். அவன் மார்பில் அவள் முகம் புதைந்ததால் முறுவலை அவள் கவனிக்கவில்லை. "வீணாக என்மீது குற்றம் சாட்டு கிறாய்.." என்றான் வீரபாண்டியன் மகிழ்ச்சியுடன்.

"வீணாகக் குற்றம் சாட்டுகிறேனோ?" என்றாள் அவள் சீற்றத்துடன்.

"ஆமாம்!"

"சாமர்த்தியத்தால் பேச்சை மாற்றாதீர்கள்."

"இல்லை இளநங்கை. யோசித்துப் பார். நீ என்ன செய்கிறாய்?"

"நானா?"

"ஆமாம். இதோ மாதவிக்கொடி இருக்கிறது. இதில் பூ அழகாகப் பூக்கிறது. அதைப் பறித்துச் சூட்டிக்கொள் கிறாயல்லவா,"

"ஆம்."

"அது உன் குற்றமா? பூவின் அழகின் குற்றந்தானே?"

"நல்ல கெட்டிக்காரர் நீங்கள். பழியை என்மீதே போடுகிறீர்களா?"

"இல்லை இளநங்கை."



"ஆண்டவன் மீதா?"

"ஆம். அவன் ஏன் இத்தனை அழகாக உன்னைச் சிருஷ்டித்தான்? பொருநையைத்தான் சிருஷ்டித்தான்? அதில் உன்னை ஏன் நீந்தவிட்டு என் கண்ணில் மோதவிட்டான்? ஆகவே..."

"ஆகவே?" என்று கேட்டு, அவனை நோக்கித் தலை நிமிர்ந்தாள் இளநங்கை.

"குற்றம் உனதுமில்லை, எனதுமில்லை. ஆண்டவனு டையது," என்ற வீரபாண்டியன் ஒரு கையால் அவளை அணைத்த வண்ணம் அவள் கண்களை வருடினான்.

அந்த ஸ்பரிசம் அவளை மேலும் இளக்கவே, "ஆம். ஆண்டவனுடையதுதான்..." என்றாள் லேசாகப் புன் முறுவல் செய்து.

"இப்பொழுது ஒப்புக்கொள்கிறாயா?" என்று வினவினான் வீரபாண்டியன்.

"ஒப்புக் கொள்கிறேன். என்னை ஆண்டவர் நீங்கள் தானே? 'ஆண்டவருக்கு' முன்னால் 'கை' என்று ஒரு உயிர் மெய்யெழுத்தையும் சேர்த்தால் சரியாகப் போய்விடும்," என்ற இளநங்கை வெட்கத்துடனும் தைரியத்துடனும் அவனை ஏறெடுத்துப் பார்த்தாள்.

அந்தப் பார்வையை தாங்கமுடியாத இளவரசன் அவளை மீண்டும் கைகளைக் கொண்டு இறுக்கித் தனது உடலுடன் இணைத்துக் கொண்டான்

இளவசரன் அவளை வலிக்க வலிக்க அணைத்து நொறுக்கியபோது, 'இப்படியே என்னை நொறுக்கி விட்டாலும் எனக்கு இன்பமாயிருக்குமே. என்னை எதற்காகக் கொற்கைக்கு அனுப்பப் பார்க்கிறார் இவர்?' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள்

அப்படி அவள் சொல்லிக் கொண்டிருக்கையிலேயே வெளியிலிருந்து குறிஞ்சியின் குரல் கேலியுடன் ஒலித்தது, "பல்லக்கு வந்துவிட்டது, வீரர்கள் காத்திருக்கிறார்கள்," என்று.

வீரபாண்டியன் இளநங்கையைச் சுற்றியிருந்த கைகளை விலக்கினான். "புறப்படு இளநங்கை," என்ற சொல் அதிகாரத்துடன் ஒலித்தது திடீரென்று.

கடமை என்று வந்தால் தனது கணவன் அதிகாரியாக மாறிவிடுவானென்பதையும், மன்மதனுடைய புஷ்பபாணங்கள்கூட அவனிடம் செலாவணியாகாதென்பதையும் பன்முறை உணர்ந்துகொண்டிருந்த இளநங்கை, மெல்ல குடிலின் வாயிலை நோக்கிச் சென்றாள். கதவருகில் சென்றதும் குடிலின் நட்ட நடுவில் நின்று கொண்டிருந்த இளவரசனைத் திரும்ப நோக்கினாள். அவள் பார்வையில் காதல் இருந்தது. துக்கமும் இருந்தது. ஆனால் வீரபாண்டியன் இருந்த இடத்தைவிட்டு நகரவில்லை. அவன் முகம் கல்லாயிருந்தது. "போய் வா இளநங்கை! பரலிப்போரை முடித்துக் கொண்டு உன்னைக் கொற்கையில் சந்திக்கிறேன்," என்றான் வீரபாண்டியன் உணர்ச்சி வறண்டு போன குரலில்.

இளநங்கை குடிலின் கதவைத் திறந்து கொண்டு பல்லக்கை நோக்கி நடந்தாள். வீரபாண்டியனும் திறந்த கதவின் மூலம் வெளிவந்து அவள் பல்லக்கில் ஏறுவதைக் காண நின்றான். பல்லக்கு அருகில் சிறிது நேரம் நிலைத்து நின்றாள் இளநங்கை. பிறகு பல்லக்குத் தூக்க நின்றிருந்த ஆட்களை விலக்கிக்கொண்டு தனக்குக் காவல் புரிந்துவர நின்றிருந்த வீரர்களிடம் சென்று அவர்கள் குதிரைகளில் ஒன்றின்மீது தாவி அதன் கடிவாளத்தை இழுத்துவிட குதிரை ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து பறந்தது. அவள் ஆத்திரத்தைக் கண்டு வாயடைந்து நின்றான் வீரபாண்டியன். பிறகு வீரர்களை நோக்கி, "உம்! ஏன் நிற்கிறீர்கள்? போங்கள்," என்று சீற வீரர்களும் புரவிகளில் பாய்ந்து இளநங்கை சென்ற திக்கை நோக்கிச் சென்றார்கள்.

குறிஞ்சி பிரமித்து நின்றாள் நீண்ட நேரம். "இதற்கென்ன அர்த்தம் இளவரசரே?" என்று வினவினாள் வீரபாண்டியனை நோக்கி நீண்ட யோசனைக்குப் பிறகு.



"கருவுற்றிருந்தாலும் கொற்றைச் செல்வி கொற்கைச் செல்விதான். வீரன் மகள் வீராங்கனைதான்!" என்றான் வீரபாண்டியன்.

"எனக்குப் புரியவில்லை வீரபாண்டியரே." என்றாள் குறிஞ்சி.

"குறிஞ்சி! இளநங்கை ஆண்பிள்ளைபோல் வளர்ந்தவள். குதிரையேற்றம், சிலம்பம், வாட்போர் சகலத்தையும் இள வயதில் பயின்றவள். அவளைத் தொந்தரவு செய்ய முயன்ற வாலிபர் இருவரைக் கொற்கையில் காலை உடைத்தவள்; ஒருவனுக்குக் கத்திக் காயமும் ஏற்பட்டதாகக் கேள்வி. வெகு முரட்டுப் பெண். பயம் சிறிதும் அறியாதவள். அவளைக் கண்டு கொற்கையில் அஞ்சாத ஆடவரில்லை. நான் ஒருவன்தான் எது எப்படியானாலும் ஆகட்டும் என்று துணிவுடன் அவளை நெருங்கினேன்..." என்றான் வீரபாண்டியன்.

"ஆம் ஆம். அவள் பெண்மையைத் தூண்டியது நீங்கள் தானே," என்றாள் குறிஞ்சி.

"இருப்பினும் பிறவிக்குணம் போகவில்லை. என்ன அலட்சியமாகப் பல்லக்கை விட்டுக் குதிரையில் தாவிப் போய்விட்டாள்!" என்ற வீரபாண்டியன் அவள் சென்ற திக்கை நோக்கிக்கொண்டே நின்றான். பிறகு மெள்ள சங்கோசத்துடன், ''இதனால் அவள்...'' என்றான் தயங்கியவாறு.

பெண்கள் கருவுற்றார்கள் என்று கேள்விப்பட்டதுமே ஆண்களுக்கு உண்டாகும் அச்சத்தையும் எச்சரிக்கையையும் நினைந்து உள்ளூர நகைத்துக் கொண்டாள் குறிஞ்சி. 'இந்த எச்சரிக்கை முன்னதாக இருந்தால் இந்தத் தொல்லை இல்லையே' என்றும் உள்ளூரச் சொல்லிக் கொண்ட குறிஞ்சி "இதனால் இளவரசிக்கு எக்கெடுதலும் ஏற்படாது. இரண்டாவது மாதந்தான் துவங்கியிருக்கிறது. நான் மருத்துவச்சியாதலால் எனக்குத் தெரிந்தது மற்றவர்களுக்குத் தெரியாது" என்று தைரியமூட்டினாள்.

வீரபாண்டியனிடமிருந்து ஆசுவாசப் பெருமூச் சொன்று வெளிவந்தது. "சரி சரி, பல்லக்கை எடுத்துச் செல்லுங்கள்" என்று கூறிவிட்டுச் சுந்தரபாண்டியன் கூடாரத்தை நோக்கி நடந்தான் வீரபாண்டியன்.

அங்கு மன்னனுடன் நீண்டநேரம் படைகளை நகர்த் துவது சம்பந்தமாகப் பேசிக்கொண்டிருந்தான். பிறகு உதவிப் படைத் தலைவர்களை வரவழைத்தான் மன்னனின் கூடாரத்துக்கு. சுமார் பத்து உதவிப்படைத் தலைவர்கள் கூடினார்கள் இளவரசன் ஆணைக்குக் கீழ்ப்படிந்து. அவர்களை நோக்கி வீரபாண்டியன் கூறினான்: "இங்கிருந்து பரலி ஒரு நாள் பயணத்திலிருக்கிறது. ஆனால் நாம் மலைப்பாதைகள் வழியாகவும், பாதைகளற்ற வழிகளிலும் செல்லவேண்டியிருப்பதால் பயணம் ஒன்றரை நாட்கள் பிடிக்கும் என்று நினைக்கிறேன். நம்மிடம் நமது படையினர் ஐயாயிரவர் தவிர, எரிபரந்தெடுத்தலில் பாண்டிய மன்னர் காட்டிய கருணையைக் கண்டு நமது படையில் சேர்ந்தவர்கள் ஆயிரமும் சேர்ந்து சுமார் ஆறாயிரம் வீரர்கள் இருக்கிறார்கள்! தவிர இந்திரபானுவைச் சேர்ந்த வீரர்கள் பலர் பரலியுள் இருக்கிறார்கள். ஆனால் அந்த வேவுப் படையைப்பற்றி நான் திட்டமாக எதுவும் சொல்வதற்கில்லை. இந்திரபானுவைச் சேரமன்னன் சிங்களம் கடத்திவிட்டதாக நமக்குச் செய்தி வந்திருக்கிறது. ஆகவே நாம் இந்த ஆறாயிரம் வீரர்கள் கொண்ட படையைக் கொண்டுதான் நமது போர்த்திட்டத்தை அமைக்க வேண்டும். இதிலும் புதிதாகச் சேர்ந்த ஆயிரம் வீரர்களைக் கணக்கில் சேர்க்காது ஒடுக்க வேண்டும். நமது படையிலுள்ள ஐயாயிரம் வீரர்களைக் கொண்டுதான் பரலியின் முற்றுகையைத் துவங்க வேண்டும்...'

இதைச் சொல்லி சற்று நிறுத்தி உபதலைவர்களை உற்று நோக்கினான் வீரபாண்டியன். அவர்கள் முகங்களில் எந்த வித மாறுதலுமில்லை. கட்டளையைக் கேட்கும் கர்ம வீரர்களாக உட்கார்ந்திருந்தார்கள். வீரபாண்டியன் தொடர்ந்து சொன்னான்: "நமது படைபலத்தைவிட



நாலைந்து மடங்கு பெரியது சேரன் படைபலம். சுமார் இருபதினாயிரம் வீரர்கள் பரலியில் நம்மை எதிர்க்கப் போர் சன்னத்துடன் நிற்கிறார்கள். மதிள்களில் விற் பொறிகளும், வேற்பொறிகளும் கிழக்கைச் சதா எதிர் பார்த்த வண்ணம் தயாராக இருக்கின்றன. அந்தக் கிழக்குத் திசைக்கு, பரலியின் பிரதா்ன வாயிலுக்கு நாம் செல்கிறோம் இதோ கவனியுங்கள்."

இப்படிச் சொல்லிவிட்டுக் கையில் அதுவரை மடக்கி வைத்திருந்த புலித்தோலை விரித்தான் அவர்களுக்கெதிரே இளவரசன். அதில் அவன் கைக்கொண்டு இழுத்திருந்த கோடுகளையும் குறிகளையும் உற்றுப் பார்த்தனர் உப தலைவர்கள்.

"இதுதான் பரலியின் நான்கு வாயில்கள். பிரதான வாயிலான கிழக்கு வாயிலுக்கெதிரேயுள்ள மலைக் காட்டுக்கு இப்பொழுது நாம் செல்கிறோம். அங்குள்ள முகப்புக் காட்டை சேரன் அழித்து அதை வெட்ட வெளியாக்கியிருக்கிறான். அதன் முகப்பில் நாம் சென்றால் விற்பொறிகளும் வேல்பொறிகளும் நம்மை அழித்துவிடும். ஆகவே சற்றுத் தள்ளி மலையின் மேற்பகுதியிலிருக்கும் காட்டுக்கு நாம் செல்கிறோம். அங்கு சென்றதும் படை நான்காகப் பிரிக்கப்படும். ஒரு பிரிவு பிரதான வாயிலுக் கெதிரில் இருக்கும். இன்னொரு பிரிவு சற்றுத் தள்ளி மலைச்சரிவில் உள்ள தெற்கு வாயில்முன்பும் மற்றொரு பிரிவு வடக்கு வாயில் முன்பும் நிற்கும். படைகள் மறைந்தே நிற்கும் அடர்ந்த மரங்களுக்கிடையில். நட்ட நடுவிலுள்ள பரலியின் பிரதான வாயிலுக்கெதிரே மலையின் மேற்பகுதியிலுள்ள காட்டில் நானும் இருப்பேன். நமது புதிய பயங்கரப் பொறிகளும் இருக்கும். மன்னரும் என்னுடனிருப்பார். என் படைக்கு இருபுறத்திலும் அதாவது தெற்குப் புறத்திலும் வடக்குப் புறத்திலும் இரு படைப் பிரிவுகள் இருக்கட்டும், இடதுகை வலது கைபோல். மீதி ஏற்பாட்டைப் பிறகு சொல்கிறேன்."

இதைக் கேட்ட உபதலைவன் ஒருவன் சந்தேகமொன்றைக் கிளப்பினான். "படைகள் நான்கு பிரிவாகப் பிரிக்கப்படும் என்கிறீர்கள். மூன்று பிரிவுகளில் இடங்களைக் குறிப்பிட்டீர்கள். நான்காவது பிரிவைப்பற்றி ஏதும் சொல்லவில்லையே?" என்று வினவினான்.

"அந்தப் படை ஒரு பெண்ணின் தலைமையில் இயங்கும்."

உபதலைவர்கள் துணுக்குற்று எழுந்தார்கள். "பெண்ணின் தலைமையிலா? எந்தப் பெண் அவள்?"

சுந்தரபாண்டியனுக்கும் இது புதுமையாகயிருக்கவே, "யார் தம்பி அது? இளநங்கையும் போய்விட்டாளே?" என்று வினவினான்.

"குறிஞ்சி!" என்றான் வீரபாண்டியன் மெதுவாக.

"குறிஞ்சியா!" என்றான் சுந்தரபாண்டியன் வியப்புடன்.

"ஆம்" என்ற வீரபாண்டியன் பரலிப் போரில் குறிஞ்சியின் பணியைப்பற்றி விவரித்தான். அதைக் கேட்ட உபதலைவர்கள் திக்பிரமையடைந்தனர். மன்னனும் அதற்கு ஒப்ப மறுத்தான். "மிகப் பயங்கரமான யோசனை தம்பி! அதை விட்டுவிடு. குறிஞ்சி அழிந்து விடுவாள்," என்றான் திட்டமாக.

ஆனால் வீரபாண்டியன், மன்னன் சொன்னதை ஒப்புக்கொள்ள மறுத்து, புலித்தோலைக் கூடாரத் தூணொன்றில் ஆணி கொண்டு அறைந்து, "இதைக் கவனியுங்கள்," என்று தனது போர்த்திட்டத்தை விளக்கலானான்.

## அத்தியாயம் 62

# படை நகர்ந்தது

பாண்டியனின் நான்காவது படைப்பிரிவு ஒரு பாவையின் கீழ் இயங்கும் என்று வீரபாண்டியன் கூறியதுமே அதை ஆட்சேபித்த உபதலைவர்கள் அது எப்படி இயங்கும் என்பதைக் கேட்டபின் திக்பிரமையே அடைந்தார்கள். "இது தவறு இளவரசே! கேவலம் வேவு பார்க்கும் ஒரு பெண்ணை இத்தகைய முக்கியப் பணிக்கு ஏவுவது தவறு," என்றான் ஓர் உபதலைவன்.

"ஏன் எங்களில் ஒருவர் அந்தப் பணியைச் செய்ய முடியாதா?" என்று வினவினான் இன்னோர் உபதலைவன்.

"இதை விட்டுவிடு தம்பி, குறிஞ்சி அழிந்து விடுவாள்," என்று பாண்டிய மன்னனும் கூறினான்.

வீரபாண்டியன் குறிஞ்சிக்குப் பணித்திருந்தது, அத்தனை பயங்கரமான, துணிகரமான செயல். "பாண்டிய மன்னரின் எரிபரந்தெடுத்தல் கொள்கையின் விளைவாகவும் அவர் காட்டிய கருணையின் விளைவாகவும் நமது படையில் சேர்ந்திருக்கும் ஆயிரம் வீரர்கள் நமது படையின் நான்காவது பிரிவாகப் பணியாற்றுவார்கள். ஆனால் அந்த நான்காவது பிரிவு நம்முடன் பரலியின் பிரதான வாயிலுக்கு வராது. குறிஞ்சியின் தலைமையில் பரலிக்கு அரைக்காத தூரத்துக்கு முன்பே மலையை விட்டிறங்கிக் கடலோரப் பாதை வழியாக வடதிசையில் பரலி மாநகருக்குள் நுழையும்," என்று கூறிக்கொண்டே போன வீரபாண்டியனை இடைமறித்து. உபதலைவர்கள் தங்கள் ஆட்சேபணையைத் தெரிவித்தார்கள். அந்த ஆட்சேபணையை ஏற்றுக் கொண்ட முறையில்தான் பாண்டிய

மன்னனும் தன் கருத்தைத் தெரிவித்தான். அவன் கருத்தைத் தெரிவித்த பின்பு இன்னோர் உபதலைவனும் கேட்டான், "வடக்கு வாசலைக் காவல் புரியும் பலமான சேரர் படையை இந்த ஆயிரம் வீரர்கள் எப்படித் தாக்கி வெற்றி பெற முடியும்?" என்று.

"தவிர அங்கு சாதாரண மக்களுக்கும் ஆயுதங்கள் அளிக்கப்பட்டிருப்பதாகவும், அதுவும் பெருத்த கும்ப லென்றும் செய்தி கிடைத்திருக்கிறதே," என்று ஒத்துப் பாடினான் இன்னோர் உபதலைவன்.

இத்தனை ஆட்சேபணைகளையும் காதில் வாங்கிக் கொள்ளாத வீரபாண்டியன் புலித்தோலைக் கூடாரத்துத் தூணொன்றில் அறைந்து, "இதைக் கவனியுங்கள்" என்று அதிலிருந்த பல கோடுகளையும் குறிகளையும் காட்டித் தனது போர்த் திட்டத்தை விளக்கலானான். "இதுதான் பரலிமா நகரின் கிழக்குக் கோட்டை வாயில். இதுதான் அதன் எதிரில் காட்டு முகப்பை அழித்ததால் ஏற்பட்டுள்ள இடைவெளி, அந்த இடைவெளியையும் தாண்டி மலையின் மேற்பகுதியில் இன்னும் அடர்த்தியான காடு இருப்பதை இந்தக் குறிகள் காட்டுகின்றன. காட்டின் முகப்பை சேரன் அழித்தற்குக் காரணம் அதன் மறைவில் நாம் கோட்டைச் சுவரை அணுகாதிருப்பதற்குத்தான். தவிர, நமது அம்புகளும் வேல்களும் வெறும் பொறி வீச்சினால் மட்டும் கோட்டைப் பாதுகாப்பை அழிக்க முடியாதிருப்பதற்கும் அந்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே நமது விற்பொறிகளும் வேல் பொறிகளும் காட்டு மறைவிலிருந்து வாள்களையும் வேல்களையும் வீசினால் அவை கோட்டைச்சுவரை அணுகா. நாம் அந்தப் பகிரங்க இடை வெளியில் இறங்கினாலோ கோட்டை விற்பொறிகளும் வேல் பொறிகளும் நம்மை அழித்துவிடும். நமது நிலைமை புரிகிறதா?" என்று வினவினான் வீரபாண்டியன்.

"புரிகிறது," என்று ஓர் உபதலைவன் சொன்னான்.

"அபாயமான நிலைமைதான்," என்றான் இன்னொருவன்.



அப்படிச் சொன்ன இருவர் குரலிலும்கூட அச்சம் சிறிதும் ஒலிக்காததையும், தான் கேட்டதற்குப் பதில்தான் அவர்கள் சொன்னார்களேயொழிய அந்த ஆபத்தைப் பற்றி அவர்களுக்கு லவலேசமும் லட்சியமில்லாததையும் கண்ட இளவரசன் பாண்டியர் நெஞ்சுறுதியை உள்ளுக்குள் வியந்து கொண்டான். அந்த வியப்பினால் வலுத்த குரலுடன் மேலும் சொன்னான்: "ஆகையால்தான் இடங்கணிப் பொறியும், எரிமுகப் பேரம்பும் கலந்த புதுப்பொறிகளை நாம் செய்தோம். இந்தப் பொறிகள் பத்தும் நம்முடன் வரும். மலையின் மேற்பகுதியில் நம்முடனிருக்கும். நம்முடன் என்றால் நானும் பாண்டிய மன்னரும் இருக்கும் நடுப்பகுதியில் இருக்கும். சமயம் வரும்போது அதை உபயோகப் படுத்துவோம். நிற்க. பணிப்பெண் குறிஞ்சி அழைத்துச் செல்லும் நான்காவது பிரிவு பரலிக்கு அரைக்காத தூரமிருக்கையில் மலையை விட்டிறங்கிக் கடலோரப் பாதையில் செல்லும். ஆனால் படைப் பிரிவாகச் செல்லாது. எரிபரந்தெடுத்தல் கொள்கையால் பாதிக்கப்பட்ட சாதாரண மக்களாக ஆயுதந்தரிக்காமலும் போர்க்கோலமின்றியும் கூட்டம் கூட்டமாக அணிவகுப் பின்றிச் சென்று கடற்கரையோரத்திலிருக்கும் சாதாரண மக்களோடு கலந்து கொள்ளும். இப்பொழுது சேரன் கையாளும் கொள்கை காரணமாக அவர்களுக்குச் சேரர் படைத்தலைவர்கள் ஆயுதங்களை அளிப்பார்கள். இந்த ஆயிரம் பேரும் சேரநாட்டு ஆயுதங்களைப் பெற்று வடக்குவாசல் மக்களோடு சேர்ந்துவிடுவார்கள். சமயம் வரும்போது தாக்குவார்கள்." என்று.

"எப்படித் தாக்குவார்கள்? திடீரென்று அணி வகுத்தா? பணிப்பெண்ணின் தலைமையிலா?" என்று ஓர் உபதலைவன் கேட்டான்.

"அணிவகுத்தல்ல. அணிவகுத்து வரும் நமது படையைத்தான் சேரன் அங்கு எதிர்பார்க்கிறான். அணி வகுத்து வரும் படையை எதிர்க்க சாதாரண மக்களுக்கு ஆயுதங்களைக் கொடுத்துப் பயிற்சியும் அளிக்கிறான்," என்றான் வீரபாண்டியன்.

“பயிற்சி அத்தனை சுலபத்தில் வரக்கூடியதா?” என்று வினவினான் இன்னோர் உபதலைவன்.

“வரக்கூடியதல்ல. அது சேரனுக்கும் தெரியும். பயிற்சி யற்ற சாதாரண மக்கள் கூட்டத்தை நமது படை முன்பு தள்ளினால் நாம்அவர்களைக் கொல்லத் துணிய மாட்டோம். போர் செய்து அழிக்கவும் மாட்டோம். என்ன செய்வதென்றறியாது குழம்புவோம். நமது அணிவகுப்பும் பின் வாங்கும், அல்லது குழப்பத்தில் கலைந்துவிடும் என்று சேரன் நினைக்கிறான். அப்படி அங்கு படை ஏதும் செய்யமுடியாத நிலையைச் சிருஷ்டித்திருப்பதால் நமது தாக்குதல் அந்தப் பகுதியில் ஏற்படாதவாறு செய்து விட்டான். ஆகவே அணிவகுத்துத் தாக்கக்கூடிய படை அங்கு பயனில்லை. அணிவகுக்காமல் தாக்கக்கூடிய படை, தந்திரத்தால் சாதாரண மக்களாக உள்நுழையும் படைதான் அங்கு தாக்கமுடியும்” என்று கூறிய வீரபாண்டியன் மறுபடியும் புலித்தோலை நோக்கித் திரும்பி, “இதுதான் பரவியின் வடக்கு வாசல். இதைத்தான் கடலோரப் பாதை தொடுகிறது. இங்கு கோட்டைக்குள்ளும் வெளியிலும் சாதாரண மக்களின் பெருங்கூட்டம் இருக்கிறது. வெளியிலுள்ள மக்களுக்குத் தினசரி காலையும் மாலையும் போர்ப் பயிற்சி அளிக்கப்படுகிறது பலவந்தமாக. இந்த மக்களுடன் குறிஞ்சி நமது ஆயிரம் வீரர்களைக் கலந்து விடுவாள். அவள்கூட அதற்கு முயற்சி எடுக்க அவசிய மில்லை. வடக்கு வாசல் சேர வீரர்களே அதற்கு வழி செய்வார்கள். நமது வீரர்களும் எரிபரந்தெடுத்தலால் கஷ்டப்பட்டு வந்த மக்களாதலால் சேரன் படைத் தலைவர்கள் அவர்களுக்கு ஆயுதம் கொடுப்பார்கள். பயிற்சியும் கொடுப்பார்கள்...” என்றான் வீரபாண்டியன்.

மேலும் சொன்னான் உணர்ச்சிமிகுந்த குரலில்: “இதோ கடற்கரைப் பகுதி இங்கு நீர் அலைகள் தொடுமிடத்திற்கு முன்பே பரவிக் கோட்டை மதிள்சுவர் நின்றுவிடுகிறது. அது நிற்குமிடத்திலிருந்து வெறும் திறந்த வெளி, மணல். அந்த இடத்திற்கு நேர் எதிரே திறந்த



வெளியைப் பாதுகாத்த வண்ணம் சேரன் போர்க் கப்பல்கள் நிற்கின்றன. அங்கு படை சென்றால் அழிந்து விடும், போர்க் கப்பல்கள் மீதுள்ள விற்பொறிகளால். ஆனால் சாதாரண மக்கள் அழியமாட்டார்கள்...”

இங்கே சற்று நின்று அண்ணனையும் உபதலைவர் களையும் நோக்கினான் வீரபாண்டியன். அவன் சொல்லியது அவர்களுக்குத் தெள்ளென விளங்கியது. “அந்தப் பகுதியில் குறிஞ்சியைச் சேர்ந்த ஆயிரவர் இரவிலும் பகலிலும் சஞ்சரிப்பார்கள்,” என்பதை உணர்ந்தார்கள் உபதலைவர்கள். ஆனால் அவர்களைவிட ஒரு படி அதிகமாகத் தம்பியின் திட்டத்தை உணர்ந்து கொண்ட ஜடாவர்மன் சுந்தரபாண்டியனின் சிங்கக் கண்கள் திடீரென ஜொலித்தன. தம்பியின் கண்களும் அண்ணனின் கண்களும் அரைவிநாடி சந்தித்தன. அந்த அரை விநாடியில் ஆயிரம் கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டன. அதன் விளைவாக சுந்தரபாண்டியனே பேசினான்: “இப்படி நடமாடும் நமது வீரர்கள் இராக்காலத்தில் போர்க்கப்பல்களுக்கு தீ வைத்து விடமுடியும். கடற்படைக்குச் சேதமேற்படுத்தவும் முடியும். கப்பல்களை அரண்போல் நெருக்கமாக ஓரே இடத்தில் நிறுத்தியிருக்கிறான் சேரன், நாம் அந்தப் பகுதியில் வந்தால் சமாளிக்க. ஆகவே ஒரு கப்பலைப் பற்றும் தீ மற்ற கப்பல் களுக்கும் வெகுவிரைவில் பரவிவிடும். தவிர இது வட காற்று வீசும் காலம்,” என்றான் ஜடாவர்மன். ஆனால் ஓர் ஆட்சேபணையையும் உதிரவிட்டான் மன்னன். “இருப்பினும் குறிஞ்சியின் நிலைமை இதில் கஷ்டமானது. அவளை வீரர்கள் நன்கறிவார்கள். அரண்மனைப் பாங்கியாக அரசன் அபிமானத்துக்குப் பாத்திரமானவளாகப் பெயர் வாங்கியிருப்பதால் படைத் தலைவர்களும் அறிவார்கள். அவள் பிடிபட்டால் அவள் கதி என்னவாகுமென்று சொல்ல முடியாது. பெண்ணைப் பலி கொடுத்து வெற்றி பெறுவது வெற்றியும் ஆகாது,” என்றும் சுட்டிக் காட்டினான்.

"குறிஞ்சியைப் பிடிக்கலாம் சேரர்படைத் தலைவர்கள். ஆனால் அவள் சேர மன்னனுக்கு உதவியாகச் செல்லப் போவதால் அபாயமும் எதுவும் ஏற்படாது," என்றான் வீரபாண்டியன்.

சுந்தரபாண்டியன் தம்பியை ஏறெடுத்து நோக்கினான். "என்ன! குறிஞ்சி சேரமன்னனுக்கு உதவப் போகிறாளா?" என்று வினவினான் வியப்புடன்.

தம்பியின் பதில் அண்ணனையும் தூக்கிவாரிப் போட்டது.

"ஆம். நம்மை வேவு பார்த்து அவள் செல்லட்டும். நமது ஆயிரவர் கடற்கரைப் பொதுமக்களுடன் கலந்ததும் அவள் அரண்மனைக்குச் சென்று நமது படைப்பிரிவுகள் கிழக்கு வாயிலுக்கெதிரே வந்துவிட்டதையும், நமது பொறிகளின் அபாயத்தைப்பற்றியும் சொல்லட்டும்," என்றான் வீரபாண்டியன்.

இதைக் கேட்ட உபதலைவர்கள் பதின்மரும் ஒரே சமயத்தில் ஆசனங்களிலிருந்து துள்ளி எழுந்தார்கள். "இது தற்கொலையாகும். எதிரிக்கு நமது படைகளின் நிலைமை யைச் சொல்வது என்ன விவேகம்?" என்று தைரியத்துடன் கேட்கவும் செய்தனர்.

வீரபாண்டியன் புலித்தோலிருந்த இடத்தைவிட்டுத் திரும்ப அவர்களை நோக்கினான். "எதிரிக்கு நமது பலத்தைத் தெரிவித்து அவனை வெற்றி கொள்வது சிறப்பல்லவா?" என்று கேட்கவும் செய்தான்.

"வெற்றி கண்டால் சிறப்புதான்," என்றான் ஓர் உபதலைவன். அவர்கள் அனைவரும் தனது திட்டத்தை ஆட்சேபிப்பதைப் புரிந்துகொண்ட வீரபாண்டியன் மன்னனை நோக்கினான்.

எப்பொழுதும் தர்மயுத்தத்தை விரும்பும் ஜடாவர்மன் கண்களில் மகிழ்ச்சி துளிர்த்தது. "அதுதான் சரி தம்பி. சேரன் நமது படைபலத்தை, நிற்குமிடத்தை, பொறிகளின் பயங்கரத்தை உணர்ந்து கொள்ளட்டும்," என்று கூறினான்.



உபதலைவர்கள் மன்னன் உத்தரவுக்குச் சிரம் தாழ்த்தினார்கள். அன்று மாலையே படைகள் நகர்ந்தன. கொம்புகள் ஊதப்பட்டுப் பந்தங்கள் அசைந்ததும் தனது சாம்பல் நிறப்புரவிமீது ஏறி அண்ணனின் பட்டத்துப் போர்ப் புரவிக்கருகே சென்று நின்றான் வீரபாண்டியன். குறிஞ்சி மற்றொரு புரவிமீது அமர்ந்து அதைத் தாண்டி மன்னனின் மறுபுறத்தில் குறிஞ்சியும் இருப்பதைப் பார்த்த மன்னன், "குறிஞ்சி இடத்தில் இளநங்கையல்லவா இருக்க வேண்டும்?" என்று நினைத்தான் ஒரு விநாடி. அடுத்த விநாடி தனது கையை உயரத் தூக்கினான் கம்பீரமாக. பிறகு தனது புரவியைத் தூண்டினான் முன் நடக்க. புரவி கம்பீர நடை நடந்தது. தம்பியின் புரவியும் குறிஞ்சியின் புரவியும் உடன் நடந்தன. படைகள் பின் நடந்தன.

## அத்தியாயம் 63

# குறிஞ்சியின் தூது

பாண்டியப் படைகளைப் பரலியின் முன்பிருந்த மலையின் மேற்பகுதிக் காட்டில் கொண்டுபோய் நிறுத்த வீரபாண்டியன் உத்தேசித்திருந்த காலத்திட்டம் ஒன்றரை நாள்தானென்றாலும் உண்மையில் படைகள் அந்த இடத்தை அடைய இரண்டு நாட்கள் முழுதாகப் பிடித்தன. ஏற்கனவே வணிகர் வண்டிகளும், படைகளும் சென்ற பாதை வழியாகச் செல்லாமல் அந்தப் பாதையிலிருந்து நன்றாகக் கிழக்கே தள்ளி மலையின் கரடுமுரடான இடங்களிலும் காடுகளுக்குள்ளும் வீரபாண்டியன் படையை அழைத்துச் சென்றதால் அவன் வகுத்திருந்த பயணக் காலத்திட்டம் பலிக்கவில்லை. தவிர அடர்ந்த காடுகளில் அவன் படையுடன் சென்ற பத்து பயங்கரப் பொறிகளும் புகமுடியாது போகவே அவற்றைச் சில சமயம் மலைச்சரிவில் கீழிருந்த பாதை வழியாகவும், சிலசமயம் மேலிருந்த இடைவெளிகளுக்குள்ளும் இழுத்து வரவேண்டியதாயிற்று. படையின் புரவிப்பிரிவும் சிறிது கஷ்டத்துடனேயே நகர்ந்தது. புரவிகள் குத்தான கற்களிலும் செங்குத்தான பாறைகளிலும் நடக்கவேண்டியிருந்ததால் பயணம் கஷ்டமாகவே இருந்தது. குதிரைகள் சில சமயம் கால் இடறியும், சில சமயம் வழுக்குப் பாறையில் கால் சறுக்கியும் சிரமப்பட்டு நடந்தன. இருப்பினும் துணிவுள்ள படைத்தலைவனாலும், எதையும் லட்சியம் செய்யாத மன்னனாலும் நடத்தப்பட்டதால் அத்தனை கஷ்டத்திலும் ஆரம்ப அணிவகுப்பு கலையாமல் நகர்ந்தது பாண்டியன் படை. பயணம் செய்த இரண்டு நாட்களில் இரண்டு முறைதான் படையைத் தங்க அனுமதித்தான்



வீரபாண்டியன். அந்த இரு முறையும் அரை ஜாம நேரமே அனுமதித்தான், உணவு தயார் செய்து உண்பதற்கும் இளைப்பாறுவதற்கும். அப்படித் தேவைக்கு மிக முக்கிய மான அவகாசத்திற்குள் உணவை முடித்துக்கொண்ட படை வீரர்கள் மிகுந்த குதூகலத்துடனேயே பயணத்தைத் துவக்கினார்கள். இத்தனைக்கும் மன்னனோ, இளவரசனோ அதிகமாக இளைப்பாறியதாகத் தெரியவில்லை. உணவருந்தினார்களோ என்னவோ அதையும் நிர்ணயிக்க முடியவில்லை உபதலைவர்களால். அவர்கள் அவகாச மளித்த அரை ஜாமம் முடிவதற்குள், படைவீரர் சித்தப்படுவதற்குள் அரச சகோதரர் இருவரும் தங்கள் புரவிகளில் சித்தமாக அமர்ந்திருந்தார்கள். இப்படி அல்லும் பகலும் இளைப்பாறாமல் படைகளை வெகு லாகவமாக நடத்திவந்த பாண்டிய சகோதரர்கள் பரலியை அடைய அரைக்காதம் இருக்கையிலேயே சற்று நின்றார்கள்.

அவர்கள் நின்ற காரணத்தைப் புரிந்துகொண்ட குறிஞ்சி வீரபாண்டியனை நோக்கி, "இளவரசே! உத்தரவா?" என்று வினவினாள். இளவரசன் தலையசைத்துப் பக்கத்திலிருந்த ஒரு வீரனுக்கு சைகை செய்ய சிறிய கொம்பு ஒன்று லேசாக ஊதப்பட்டது. அதை ஊதியதும் குறிஞ்சிக்குப் பின் வந்து கொண்டிருந்த சிறு படையொன்று மொத்தப் படையிலிருந்து மெள்ளப் பிரிந்தது. அதை நோக்கிய குறிஞ்சி மன்னனை நோக்கினாள். மன்னன் வீரபாண்டியனை நோக்கினான். வீரபாண்டியன் கூறினான்: "குறிஞ்சி! சந்தேகப்படாதே. நான் சொன்னபடி சகலமும் நடக்கும். ஆகவே நீயும் நான் சொன்னபடி செய். நீ சேர மன்னனிடம் முழு உண்மையைக் கூறலாம். அப்படிக் கூறுவதால் சேரநாட்டுக் குடிமகளான நீ உனது கடமையைச் செய்தவளாவாய். உன்னை மீறிப் போர் நிகழ்ந்தால் அதற்கு நீ பொறுப்பாளி யல்ல" என்று.

குறிஞ்சி வீரபாண்டியனுக்குத் தலை வணங்கிப் புரவியை சரிவில் இறக்கி சற்றுக் கீழேயிருந்த சாதாரணப்

பாறையை நோக்கிச் சென்றாள். சாதாரண உடை அணிந்த ஆயிரம் வீரர் கொண்ட காலாட்படை அவளைப் பின்பற்றிச் சென்றது. பண்பட்ட மலைப் பாதையை அடைந்ததும் குறிஞ்சி புரவியிலிருந்து இறங்கி புரவியைக் காட்டுக்குள் ஓட்டிவிட்டாள். பிறகு தானும் நடந்துசென்றாள். அந்தப் பாதையில் சுமார் அரைஜாமம் பயணம் செய்ததும் கடற்கரையை நோக்கித் திரும்பிய கிளைப்பாதையொன்றில் திரும்பி நடந்தாள். ஆயிரம் வீரர்களும் அவளைப் பின்பற்றினர். மெள்ள மெள்ள பரலியின் கடற்கரையை அடுத்திருந்த வடக்கு வாசலும் கண்ணுக்கெதிரே எழுந்தது. அதை அடுத்திருந்த பாதையிலும், கடற்கரையோரத்திலுமிருந்த கும்பலும் கண்ணுக்கெதிரே விரிந்தது. அதை நோக்கிக்கொண்டு சற்று நேரம் நின்ற குறிஞ்சி தனது வீரர்களை நோக்கி, "உம் சித்தப்படுங்கள்," என்றாள். வீரர்கள் தங்கள் தோள்களி லிருந்த மூட்டைகளை இறுக்கி வேறு உடைகள் உடுத்திக் கொண்டார்கள். ஏற்கெனவே அணிந்திருந்த ஆடைகளைத் திரும்பக் கட்டி மூட்டைகளாக முதுகிலும் தலையிலும் கைகளிலும் பலபடி தாங்கிக் கொண்டார்கள். அப்படி அசுதிகளாக மாறிவிட்ட அந்த ஆயிரவருடன் குறிஞ்சியும் கலந்து கொண்டாள். பிறகு அந்தக் கூட்டம் குழம்பிக் கலைந்து தடுமாறிக்கொண்டு பரலியின் கடற்கரைப் பாதையை அடைந்து வடக்கு வாயிலை நோக்கிச் சென்றது.

அது வடக்கு வாயிலை அடைவதற்கு முன்பே நடந்த நிகழ்ச்சிகள் குறிஞ்சிக்கே வியப்பை ஊட்டின. அவர்கள் வாயிலுக்குச் சற்று தூரத்திலிருந்தபோதே சேரர் காவல் படையொன்று அவர்களைச் சந்தித்தது. "யார் நீங்கள்?" என்ற கேள்வி காவற்படை தலைவனிடமிருந்து எழுந்தது. "பாண்டிய மன்னனால் வெளியேற்றப்பட்ட குடிமக்கள்," என்றான் குறிஞ்சியுடன் வந்தவர்களில் ஒருவன்.

"நீங்கள் ஒற்றர்கள் அல்லவென்பதற்கு என்ன அத்தாட்சி?" என்று தலைவன் வினவினான்.



இந்தச் சமயத்தில் கூட்டத்தை விலக்கிக்கொண்டு வெளி வந்த குறிஞ்சி, "இதோ நானிருக்கிறேன் அத்தாட்சி," என்றாள்.

தலைவன் அவளைப் பார்த்ததும் பிரமித்தான். பிறகு கூட்டத்தில் ஒருவனைக் கேட்டான், "இவள் யார் தெரியுமா!" என்று.

"தெரியாது. வழியில் எங்களுடன் சேர்ந்து கொண்டாள். எங்களைப்போல் ஒருத்தியாகத்தான் இருக்க வேண்டும்," என்றான் கூட்டத்திலிருந்தவன்.

தலைவன் பதிலேதும் சொல்லவில்லை அவனுக்கு. தன் வீரனொருவனைப் பார்த்து, "இந்தக் கூட்டத்தை மற்ற மக்களோடு சேர்த்துவிடு. இந்த வேவுகாரியைப் பிடித்து அரசரிடம் கொண்டு போ," என்றான். அவன் சொற்படி நடந்தது. வீரர் இருவர் அவளை அணுகி, "உம், நட" என்று அதட்டி மன்னன் சன்னிதானத்துக்கு அழைத்துச் சென்றனர். அப்படிச் செல்லும்போதே பின்னால் கண்ணைச் செலுத்திய குறிஞ்சி தனது வீரர்கள் கடற்கரைக் கூட்டத்தை நோக்கி விரட்டப்படுவதைக் கண்டாள்.

அவள் மனம் பிரமிப்பில் ஆழ்ந்திருந்தது. அங்கு நடந்த ஒவ்வொன்றையும் முன்னதாக ஊகித்துச் சொல்லி யிருந்தான் வீரபாண்டியன். "குறிஞ்சி! நீ திடீரென்று காணாமற் போன பிறகு சேரன் உன்னைப் பிடிக்க உத்தரவு பிறப்பித்திருப்பான். பரலியின் வடக்கு வாயிலுக்கு முன்பாக நீ சிறை செய்து மன்னனிடம் கொண்டு செல்லப்படுவாய். நீ சிறை செய்யப்பட்டதும் மற்ற வீரர்கள் கடற்கரைப் பெருங் கூட்டத்துடன் சேர்க்கப்படுவார்கள். ஆகையால் நீ சிறைப்பட்டபின் பாண்டியர் பக்கம் உன் பணி தீர்ந்து விடுகிறது. பிறகு நீ உனது நாட்டுக்கு உன் கடமையைச் செய்," என்று சொல்லியிருந்தான்.

அதைப்பற்றி நினைத்துக்கொண்டே அவள் மன்னனை அடைந்ததால் மன்னன் அவளை நோக்கிப் புன்சிரிப்புக் கொண்டபோதும் அவள் அதைக் கவனித்தாளில்லை. அவன், "யார்? விஜயவர்மன் மகளா!

மீண்டும் பணிபுரிய வந்திருக்கிறாயா?" என்று இகழ்ச்சியுடன் வினவியபோதும் அவள் கவலை கொண்டாளில்லை. கவலை முழுவதும் பரலியின் கதியை நோக்கியிருந்தது.

ஆகவே மன்னனைக் கவலை தோய்ந்த முகத்துடன் நோக்கிய குறிஞ்சி, "ஆம் மன்னவா! பணிபுரியவே வந்திருக்கிறேன்," என்றாள்.

"இம்முறை என்ன பணியோ?" என்று கேட்டான் சேர மன்னன்.

"வேவுகாரியின் பணி," என்றாள் குறிஞ்சி.

"பாண்டியனிடம் சென்றபோது அது முடிந்து விடவில்லை?" இம்முறை ஏளனம் ஒலித்தது வீரரவியின் குரலில்.

"இல்லை. இப்பொழுதுதான் முடிகிறது. சேரநாட்டில்தான் என் பணியும் முடியும். உயிரும் முடியும்," என்றாள் குறிஞ்சி.

வீரரவியின் இதழ்களில் இகழ்ச்சி நகை மறைந்து குரூரப் புன்முறுவல் மண்டியது. "இரண்டாவது பகுதி சரி..." என்றான் மெல்ல.

"இரண்டாவது பகுதியா?"

"ஆம்; உயிரைப்பற்றிச் சொன்னாயே அது."

"ஓகோ அதுவா! அது பற்றிக் கவலையில்லை மன்னவா! பரலியின் ஆயிரக்கணக்கான மக்கள் அழியும்போது இந்தக் குறிஞ்சி அவர்களில் ஒருத்திதானே?" என்ற குறிஞ்சியின் தொண்டையை அபரிமிதமான துக்கம் அடைத்துக் கொண்டது.

வீரரவி அவள் துக்கத்தைக் கவனித்தான். அவள் துக்கம் வெறும் பாசாங்கு அல்லவென்று புரிந்தது அவன் நுண்ணிய அறிவுக்கு. "சொல் குறிஞ்சி! உன் கதையைச் சொல். பிறகு வழங்குகிறேன் நீதியை," என்றான் வீரரவி.

"குருநாதரையும், வரவழையுங்கள்," என்றாள் குறிஞ்சி.

"அவரெதற்கு?"



"நான் சொல்லுவதற்கு ஒரு சாட்சி வேண்டும்!"

"எதற்குச் சாட்சி?"

"நான் என் கடமையைச் செய்துவிட்டேன். கடைசி வரை சேர நாட்டுக்குச் சேவை செய்தே உயிர் விட்டேன் என்பதை மக்களுக்குச் சொல்வதற்கு." இதைச் சொன்ன குறிஞ்சி மன்னனை ஏறெடுத்து நன்றாய் நோக்கினாள்.

வீரரவியின் கண்கள் அவள் கண்களைச் சந்தித்தன. அவற்றிலிருந்த ஏதோ ஓர் அபரிமித சக்தி அவனையும் ஈர்த்திருக்க வேண்டும். ஆகவே காவலனொருவனை அழைத்து. "குருநாதரை சிறையிலிருந்து அழைத்து வா" என்றான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் அரண்மனைச் சிறையிலிருந்து அழைத்து வரப்பட்ட குருநாதரின் முன்பு தலை வணங்கி நின்ற குறிஞ்சி, "குருநாதரே! பரலி அழிந்து விடும் போலிருக்கிறது. அழிவை நீங்கள்தான் தடுக்க வேண்டும்," என்று நெஞ்சம் குமுற, உதடுகள் துடிக்க, சொற்களில் சோகம் சொட்ட, வீரபாண்டியன் சிருஷ்டித்திருக்கும் பயங்கர ஆயுதங்கள் பற்றி விளக்கினாள்.

## அத்தியாயம் 64

# சகுனம்

இடங்கணிப் பொறியும், எரிமுகப் பேரம்பும் இணைந்த பயங்கர ஆயுத சிருஷ்டியைப்பற்றி விளக்கமாகக் கூறினாள் குறிஞ்சி வீரரவி உதயமார்த்தாண்டவர்மனுக்கு. அம்மாதிரி அழிவு ஆயுதங்கள் பத்து பரலிமாநகரின் கிழக்கு வாயிலுக்கெதிரேயுள்ள காட்டில் மறைத்து நிறுத்தப் பட்டிருப்பதைப் பற்றியும் எடுத்துரைத்தாள் அந்த ஏந்திழை. மூன்று வாசல்களுக்கும் முன்பாகப் பாண்டியன் படைகள் பகிர்ந்து நிற்குமென்றும் விளக்கந் தந்தாள் விஜயவர்மன் மகள். தான் பாண்டியப் பாசறைக்குச் சென்றது முதல் திரும்பி வந்தது வரை நடந்த அனைத்தையும் ஒளிவு மறைவில்லாமல் கூறினாள் பணிப்பெண்.

அதைக் கேட்ட வீரரவி வெகு நேரம் சிந்தனையின் வசப்பட்டு உட்கார்ந்திருந்தான். அத்தனை பயங்கர ஆயுதங்களைப் பற்றியும் பாண்டியர் முற்றுகை ஏற்பாடு களைப்பற்றியும் பணிப்பெண் சொல்லக் கேட்ட பின்பும் அவன் முகத்தில் எள்ளளவும் கவலை தோன்றவில்லை சித்தம் சிந்தனையில் தீவிரமாக லயித்துவிட்டதைக் குறிக்கும் ஆழ்ந்த பார்வையே கண்களில் விரவிக் கிடந்தது. நீண்ட நேர சிந்தனைக்குப் பிறகு பரதபட்டனை நோக்கிய சேரமன்னன், "குருநாதரே! குறிஞ்சி கூறிவிட்டாள் பாண்டியன் ஏற்பாடுகளைப்பற்றி, பயங்கர ஆயுதத்தைப் பற்றி. நீர் என்ன நினைக்கிறீர் தலைநகர் நிலைபற்றி?" என்று வினவினான் சர்வசாதாரணமாக.

"பரலியின்கதி அதோகதி என்று நினைக்கிறேன்" என்றான் குருநாதன் கவலை அதிகமாகப் பாய்ந்து கிடந்த தன் குரலில்.



வீரரவியின் இதழ்களில் லேசாகப் புன்முறுவல் படர்ந்தது. "பரலியில் இருபதினாயிரம் படைவீரர் இருக் கிறார்கள்."என்று சுட்டிக் காட்டினான் சேரமன்னன்.

"ஆம். பாண்டியப் படையைவிட நான்கு மடங்கு பெரிது," என்று ஒப்புக்கொண்டான் குருநாதன்.

"சேரர் தலைநகரின் கோட்டை யவனர்களால் நிர்மாணிக்கப்பட்டது. கோட்டைக் கதவுகள் பெருங்கதவு கள், வைரம் பாய்ந்த மரங்களால் செய்யப்பட்டவை. பெருமரங்களின் இடியையும் தாங்கவல்லவை," இந்த இரண்டாவது பலத்தையும் சுட்டிக் காட்டினான் சேர மன்னன் புன்சிரிப்புடன்

"உண்மை" என்றான் குருநாதன்.

"எல்லாவற்றுக்கும் மேலாக ஒன்றிருக்கிறது" என்றான் மன்னன் மீண்டும்.

"அது தெரியும் எனக்கு" என்றான் குருநாதன்.

"சொல்லும் பார்ப்போம்" என்று அலட்சியமாகக் கேட்டான் மன்னன்.

"உன் பேரறிவு" என்று சலிப்புடன் கூறினான் குருநாதன்.

வீரரவி தலையை அசைத்தான் மகிழ்ச்சியுடன். "நன்றாக ஊகித்துவிட்டீர் குருநாதரே" என்று சிலாகிக்க வும் செய்தான்.

குருநாதன் இதழ்களில் விரிந்த இளநகையில் வெறுப்பு மண்டிக் கிடந்தது. "சிலருக்கு அது கிடையாது" என்று பட்டன் உதடுகள் உதிர்த்த சொற்களிலும் வெறுப்பு நன்றாக ஒலித்தது.

"எனக்கு ஊகம் இல்லையென்கிறீரா?" மன்னன் கேள்வி சற்றே சூடேறியிருந்தது.

"நான் சொல்லத் தேவையில்லை" என்றான் குருநாதன்.

"ஏன்?"

"நிகழ்ச்சிகளே அதை நிருபிக்கின்றன."

"எந்த நிகழ்ச்சிகள்!"

"சில நாட்களாக இங்கு ஏற்பட்டுள்ள நிகழ்ச்சிகள். உதாரணமாக சொந்த ஊகமிருப்பவர் பிறர் ஊகத்தால் பயனடைவதில்லை."

மன்னன் முகம் அப்பொழுதும் பார்வைக்கு சாதாரணமாயிருந்தாலும் அவன் சொற்களில் மட்டும் கடுமை லேசாகத் தெரிந்தது. "யார் ஊகத்தால் யார் பயனடைந்தது?" என்று வினவினான் மன்னன்.

"பரலியின் பிரதான வாயிலுக்கெதிரே காட்டை யழித்து இடைவெளி ஏற்படுத்தினால் எதிரியின் தாக்குதல் எளிதல்ல என்று ஊகித்தது நான். கடற்படையை மேற்குத் திக்கில் அரணாக நிற்கச் செய்து அவற்றின் மீது விற்பொறி வேற்பொறிகளை ஏற்றச்சொன்னது நான். பரலியின் வட கிழக்கிலிருந்து சாரி சாரியாக வந்து தெற்கே அனுப்பப் பட்டு வந்த மக்களை வடக்கு வாயிலுக்கெதிரேயுள்ள கடலோரப் பாதையில் நிராயுதபாணிகளாக நிறுத்தி வீர பாண்டியன் அவ்வழி வருவதைத் தடுத்ததும் நான். இவற்றால் பயனடைந்தது யாரென்று புரியவில்லை," என்ற குருநாதன் லேசாக நகைத்தான்.

"ஏன் தெரியவில்லை? நான்தான் பயனடைந்தேன். அதைச் சொல்லிவிடுவதுதானே!" என்று கேட்டான் மன்னன்.

"சொல்ல இஷ்டப்படவில்லை நான்" என்றான் குருநாதன்.

"ஏன்?" சினத்துடன் எழுந்தது வீரரவியின் கேள்வி.

"நான் செய்த ஏற்பாடுகளால் பயனடைந்திருக்கிறாய் தற்காலிகமாக. ஆனால் அந்தப் பயனின் பூர்த்தி வெற்றியி லிருக்கிறது" என்றான் குருநாதன்.

வீரரவி தனது ஆசனத்திலிருந்து எழுந்து குருநாதன் அருகில் வந்து, "குருநாதரே! வெற்றி என் கையிலிருக்கிறது" என்று வேகத்துடன் ஒரு கையால் இன்னொரு கையை அடித்துக் காட்டினான்.

"பொறுத்துப் பார்ப்போம்," என்றான் பரதபட்டன்.



"பொறுத்துப் பார்க்க அவசியமில்லை. சொல்வதைக் கேளும் குருநாதரே! வீரபாண்டியன் எதிர்பார்க்கிறபடி விற்பொறிகள் அனைத்தும் கோட்டையின் பிரதான வாயில் மீதில்லை" என்றான் மெள்ள வீரரவி.

"அங்கில்லையா?"

"இல்லை. கோட்டைச் சுவர்மீது பாதிப் பொறிகளே இருக்கின்றன. மீதிப் பொறிகளை சுவரிலிருந்து கீழே இறக்கிப் பத்தடி தள்ளி ஒவ்வொரு வாயிலுக்கெதிரிலும் நிறுத்தி யிருக்கிறேன். பாண்டியன் அவன் எரிமுகப் பேரம்பை வீசியதும் தடதடவென்று புரவிப்படையுடன் பிரதான கோட்டை வாசலில் வர இருக்கிறான். வந்து எரியும் கோட்டைக் கதவை இடித்துத் தள்ளி உள்ளே புகப் பார்க்கிறான். கதவை அவன் இடிக்க அவசியமில்லை. கதவு தானாகத் திறக்கும். திறந்ததும் விற்பொறிகளும் வேற் பொறிகளும் இயங்கும். சாதாரண நிலையில் அல்ல. நேரே குதிரை வீரர்கள் மார்புகளை நோக்கி இயங்கும். நமது கிழக்குப் பெருவாயிலில் ஏககாலத்தில் ஆயிரம் வீரர்கள் நுழையலாம். அந்த ஆயிரம் வீரரையும் நோக்கி அம்புகளும் வேல்களும் கண்ணிமைக்கும் நேரத்தில் பறக்கும்; பெரும் நாசம் அங்கு விளையும். அதே சமயத்தில் தெற்கு வடக்கு வாயில்கள் திறக்கும். அங்கும் பொறிகள் காத்து நிற்கும் பாண்டியனுக்கு. ஒவ்வொரு வாயிலிலும் காலபாசங்களைப் போல் காத்திருக்கும் எனது பொறிகள். அவற்றுக்குப் பின்புறம் எனது படைப்பிரிவுகள் நிற்கும். ஒவ்வொரு வாயிலுக்கும் வெவ்வேறு பிரிவு. ஒரு வாயிலில் புரவிப்படை, இன்னொரு வாயிலில் காலாட்படை, மற்று மொரு வாயிலில் யானைப்படை. மேற்கில்தான் கடற்படை இப்படி நிற்க உத்தரவிட்டிருக்கிறேன்," என்று சொற்களை அழுத்தமாகவும் உறுதியுடனும் உதிர்த்தான் சேரமன்னன். அத்துடன் குறிஞ்சியையும் நோக்கி ஒரு வார்த்தை சொன்னான், "குறிஞ்சி! உன்னுடன் வரும் எந்தக் கூட்டத் தையும் தனித்துத் தேக்கி வைக்கும்படி உத்தரவிட்டிருக் கிறேன். இத்தனை நேரம் உனது நண்பர்கள் சிறை செய்யப்பட்டிருப்பார்கள்" என்று கூறினான்.

பரதபட்டனும், குறிஞ்சியும் வியப்பு நிரம்பிய கண்களுடன் மன்னனை நோக்கினார்கள். குறிஞ்சி மட்டும் வாயைத் திறந்து சொன்னாள், "என்னுடன் வந்த கூட்டத்தை மற்ற மக்களுடன் கலக்க உத்தரவிட்டானே காவலர் தலைவன்" என்று.

"அது உனக்காகச் சொல்லப்பட்டது குறிஞ்சி" என்ற சேரமன்னன் குருநாதனை நோக்கி, "குருநாதரே! உமக்குப் பாண்டியர் வசம் இருக்கும் பரிவை நான் அறிவேன். ஆனால் இம்முறை பாண்டியர் அழிவது திண்ணம்" என்று திட்டவட்டமாகக் கூறினான்.

பரதபட்டன் மன்னனை நன்றாக ஏறெடுத்து நோக்கினான், "அவர்களை அழித்த பின்பு தெரிவி மன்னவா" என்று மெல்லக் கூறினான்.

"ஏன் அழிக்க முடியாதென்று நினைக்கிறீரா? என் சக்தியில் உமக்கு நம்பிக்கையில்லையா?" என்றான் சேரன்.

"அழிப்பதில் உமக்கு நிகர் யார் இருக்க முடியும்?" என்று பதிலிறுத்தான் பரதபட்டன்.

"அந்த விஷயத்தில் நீங்களும் சளைத்தவரல்லவே குருநாதரே" என்று வீரரவி கூறினான் விஷமத்துடன்.

"நானா!"

"ஆமாம்."

"நான் அழிப்பவனா!"

"ஆம். இந்திரபானுவின் முகத்தை அழிக்கவில்லை? அதைவிட ஈவிரக்கங்கெட்ட செயல் என்ன இருக்க முடியும் குருநாதரே? அதைவிட அவன் உயிரை அழித்திருக்கலாமே."

இதைக் கேட்ட குருநாதன் இளநகை கூட்டினான் இதழ்களில். "மன்னவா! சற்று முன்பு உன் ஊகத்தின் சக்தியைப் பறை சாற்றினாயல்லவா? அதைச் சற்று உபயோகித்துப்பார்," என்றார் இகழ்ச்சி குரலில் ஒலிக்க.

"ஊகத்துக்கு என்ன இருக்கிறது?" என்று வினவினான் மன்னன்.



"நிரம்ப இருக்கிறது. சரி அதைப்பற்றி என்ன இப்பொழுது? அது தனிப்பட்டவன் கதை. பரலியின் கதையைக் கவனிப்போம்," என்ற பரதபட்டன் கேட்டான், "மன்னவா! இந்தப் போர் அவசியமா?" என்று.

"ஏன் அவசியமில்லை? பாண்டியர்படை நமது வாயிலில் நிற்கவில்லை?" என்று வினவினான் வீரரவி.

"நிற்கிறது. இருப்பினும் போரைத் தவிர்க்க எனக்கு ஒருமுறை சந்தர்ப்பம் கொடு," என்று இறைஞ்சினான் பரதபட்டன்.

"உமக்கா!"

"ஆம்."

"கொடுத்தால் என்ன செய்வீர்?"

"பாண்டிய மன்னனிடம் மன்றாடிக் கேட்பேன் அழிவைத் தவிர்க்கும்படி."

"வேறென்ன கேட்பீர்?"

"பரலிமீது அந்தப் புதுக் கணைகளை ஏவவேண்டாமென்று கேட்பேன்.

வீரரவி அறையில் இரண்டு முறை சிங்கம்போல் நடந்தான்! பிறகு சட்டென்று நின்று குருநாதனை நோக்கிக் கூறினான். "பரசுராம நாட்டின் மன்னன் பல குற்றங்களைச் செய்திருக்கலாம். கோழையாகி எதிரி வாயிலில் நிற்கும் சமயத்தில் அவனிடம் சமாதானத்தை யாசிக்கும் குற்றத்தைச் செய்ய இஷ்டப்படவில்லை. போர் நாளை பகலில் துவங்கும். கதிரவன் சாட்சியில் தாக்குதலைத் துவக்குகிறேன். குருநாதரே, பரலிமன்னன் செய்யக் கூடியதை நாளை பாரும். பாண்டியரின் பேரழிவை உமது கண்களால் காணும்," என்று இரைந்து கூறினான் வீரரவி. அதே சமயத்தில் பிரதான கோட்டை வாயிலில் முரசு மிகப் பலமாக ஒலித்தது. "சகுனத்தைப் பார்த்திரா குருநாதரே?" என்றான் மன்னன் குதூகலத்துடன்.

"சகுனம் யாருக்கு நல்லது என்பதுதான் புரியவில்லை," என்று பதில் கூறினான் பரதபட்டன்.

## அத்தியாயம் 65

# தென்புறத் தாக்குதல்

முரசொலித்த காரணம் சேரமன்னன், பரதபட்டன் இருவருக்குமே தெரிந்திருந்தாலும் அதன் சகுனம் யாருக்கு நல்லது என்பதில் இருவருக்கும் கருத்து மாறுபாடு நேர் எதிராயிருந்தது. பாண்டிய மன்னன் தூது அனுப்பியிருக்கிறானென்பதை முரசு அறிவித்தது. அது முழங்கிய சமயம் தனது வெற்றியையும் அறிவிப்பதாக வீரரவி நினைத்தான். ஆனால் பரதபட்டன் அது பரலியின் அழிவுக்கு முன்னறிவிப்பு என நினைத்து ஆசுவாசப் பெருமூச்சு விட்டான். கூட நின்றிருந்த குறிஞ்சியும் ஏதும் சொல்ல வகையில்லாமல் கற்சிலையென நின்றிருந்தாள். தனது படை பலத்தையும் போர் ஏற்பாடுகளையும் எண்ணியதால் எதிரியை வெகு அலட்சியமாக எண்ணிய வீரரவி மீண்டும் சொன்னான் குருநாதனை நோக்கி, "சகுனம் யாருக்கு நல்லது என்பதை நாளை மாலைக்குள் அறிவீர்கள் குருநாதரே!" என்று.

குருநாதனின் வேதனை நிரம்பிய கண்கள் மன்னனை ஏறிட்டு நோக்கின. "அந்தப் பாவம் இந்த வயோதிகனுக்கு இருக்கத்தான் செய்கிறது," என்று கூறிய குருநாதன் மன்னனின் அறையைவிட்டு வெளியேறத் திரும்பினான். அவனைத் தனது கையை உயர்த்தித் தடை செய்த வீரரவி "சற்றுப் பொறும் குருநாதரே! பாண்டியன் தூதையும், என் பதிலையும் கேட்டுச் செல்லும்," என்று கூறி அவனையும் ஓர் ஆசனத்தில் அமரச் செய்தான். பிறகு காவலனொருவனை விளித்து பாண்டிய தூதனைத் தன்னிடம் தாமதமின்றி அழைத்து வரும்படிக்கு உத்தரவிட்டான்.



அவன் வருவதற்குள் சேனாதிபதியையும், ராமவர்மனையும் வரவழைக்கவும் காவலரை ஏவினான்.

இத்தனை படாடோபத்துடன், தனது சேனாதிபதி உபசேனாதிபதி குருநாதன் முன்னிலையில், சேரமன்னன் பாண்டியதூதனை வரவேற்றாலும் தூது அத்தனை படாடோபமாகவோ பிரபலமாகவோ இல்லை. வந்த தூதனும் மிகுந்த அலட்சியத்துடன் சேரமன்னனை ஏறெடுத்து நோக்கித் தன்னை பாண்டிய உபசேனாதிபதிகளில் ஒருவனாக அறிமுகப் படுத்திக் கொண்டான். அவன் கண்கள் ஒரு விநாடி குறிஞ்சியை நோக்கின. பிறகு மன்னன்மீதே நிலைத்தன. சொற்கள் பட்டுக் கத்தரித்தாற் போல் பிசிறு ஏதுமின்றிச் சுடச்சுட வந்தன. "சேரமன்னரே! பரலீசரே! முதலாம் ஜடாவர்மனான சுந்தரபாண்டியத் தேவர், மீனாட்சி தேவியின் அருட்செல்வர் தாங்கள் துராக்ருதமாகத் தூக்கி வந்த அவர் மகளையும், அபகரித்த முத்துக் குவியல்களையும் உடனடியாக ஒப்படைக்கும்படி கேட்கிறார். இல்லையேல் உடனடியாகப் போர் துவக்கி இந்தப் பரலியையும், பரலியோடு உங்களையும் அழித்து விடுவதாகவும் தெரிவிக்கச் சொன்னார். நீங்கள் விரும்புவது அழிவா, அமைதியா என்றும் வினவச் சொன்னார்," என்ற வாசகத்தை ஏதோ மந்திரத்தை உச்சரிப்பவன்போல் தெளிவாகவும், பயபக்தியுடனும் வெளியிட்டான் பாண்டிய உபதளபதி.

சேரன் இதழ்களில் குரூரப் புன்முறுவலொன்று படர்ந்தது. "மீனைக் கண்டு வில்லும் அம்பும் அஞ்சுவதில்லையெனப் பாண்டியனிடம் சொல்லுங்கள் உபசேனாதிபதி" என்றான் வீரரவி அந்தப் புன்முறுவலின் ஊடே.

அவன் எதைக் குறிக்கிறானென்பதைப் பாண்டிய உபசேனாதிபதி உணர்ந்து கொண்டான் சந்தேகத்துக்கு இடமின்றி. மீனென பாண்டியர் கொடியையும் வில் அம்பு என சேரர் இலச்சினையையும் மன்னன் குறிப்பிடுகிறானென்பதைப் புரிந்து கொண்ட உபசேனாதிபதியும் லேசாக

நகைத்தான். தன் முன் அவன் நகைத்த துணிவைக் கண்டு வியந்த சேரமன்னன் வியப்புத் திருமுன்பு, "அப்படியானால் வில்லையும் அம்பையும் கண்டு மீனும் அஞ்சாது மன்னவா! காரணம் தெரியுமா?" என்று வினவினான்.

"என்ன காரணம்?" என்று வினவினான் வீரரவி தூதன் துணிவைக் கண்டு, முன்னிலும் அதிக வியப்புடன்.

"வில் அம்புகளால் மீனுக்கு எப்பொழுதும் அபாய மில்லை. அம்பெய்து மீனைப் பிடிப்பவர் இல்லை" என்று சுட்டிக் காட்டினான் தூதன்.

"உண்மை தூதவரே! ஆனால் மீனிருக்க வேண்டிய இடம் நீரில், தரையிலல்ல. தரையில் வந்தால் அது துள்ளித் துள்ளி மாண்டுவிடும்," என்று கூறிய சேரன் தனது புத்தியை நினைத்துப் பெருமிதங் கொண்டான்.

"உண்மை மன்னவா! இதைப் பாண்டிய சகோதரர் களிடம் அவசியம் சொல்கிறேன்" என்ற தூதன் கேட்டான், "தங்கள் பதில் போரா, சமாதானமா?" என்று.

"போர். சந்தேகம் வேண்டாம். நாளைப் பகலில் எனது படைகள் போர் துவக்கும். நீங்களாகத் துவங்கா விட்டால்," என்று இறுதியாகச் சொன்ன சேரன் தூதனை அழைத்துச் செல்லுமாறு காவலருக்கு உத்தரவிட்டான். காவலர் அணுகுமுன்பே தூதன் மன்னனுக்கு முதுகு காட்டித் திரும்பிச் சென்றான். தூதன் திமிரையும் திமிருடன் கூடிய நடையையும் கண்ட சேரன் பரத பட்டனை நோக்கினான். பரதபட்டன் கண்கள் சுரணையிழந்து கிடந்தன. பெருமூச்சு விட்டு பரதபட்டன் மன்னன் அறையைவிட்டுச் சிறையை நோக்கிச் சென்றான். குறிஞ்சி மட்டும் நின்றிருந்தாள் அறையில். சேனாதிபதியும் உபசேனாதிபதியும் சென்ற பின்பும் அவள் அறையைவிட்டு அகலவில்லை.

வீரரவி அவளை ஏறிட்டு நோக்கினான். "ஏன் குறிஞ்சி! நீ மட்டும் ஏன் நிற்கிறாய்?" என்று வினவவும் செய்தான்.

"மன்னவா!" என்று மெல்ல அழைத்தாள் குறிஞ்சி.



அவள் ஏதோ சொல்லப் பிரியப்படுகிறாளென்பதை அறிந்த வீரரவி கேட்டான், "சொல் குறிஞ்சி," என்று.

"பெரும் விபரீதம் பரலிக்கு ஏற்படப் போகிறது மன்னவா!" என்றாள் குறிஞ்சி துக்கம் தொண்டையை அடைக்க.

"எதுவும் நேராது குறிஞ்சி" என்றான் சேரன் திட்ட வட்டமாக.

"எப்படித் திட்டமாகச் சொல்கிறீர்கள் மன்னவா?"

சேரன் சிறிது சிந்தித்தான், "குறிஞ்சி! வீரபாண்டி யனை உனக்குத் தெரியுமல்லவா..." என்று கேட்கவும் செய்தான்.

"நன்றாகத் தெரியும்."

"அவன் போர் முறை எப்படி?"

"மிகத் தந்திரமானது."

"சிங்கணனுடன் செய்த போர்?"

"முழுதும் தந்திரம்."

"சொன்ன இடத்தில் தாக்கினானா கோட்டாற்றுக் கரையில்?"

"இல்லை."

"சிங்கணன் எதிர்பாராத இடங்களில் தாக்கினான். எதிரியின் மலைப்பைத் தனது வெற்றிக்கு அஸ்திவாரமாக அமைத்துக் கொண்டான்."

"ஆம்."

"அதுதான் அவன் போர்முறை குறிஞ்சி! உன்னிடம் அவன் சொல்லியனுப்பியது போல் நேரிடையாகத் தாக்க மாட்டான். கிழக்கு வாசலுக்கெதிரே அவனும் வர மாட்டான். அவன் அண்ணனும் வரமாட்டான். எதிர் பாராத இடத்தில் தாக்குதல் ஏற்படும். ஆகவே அவனை எல்லா இடங்களிலும் நான் எதிர்பார்க்கிறேன். இந்தத் தலைநகரில் நான்கு வாயில்களிலும் பலமாக பாதுகாப்பு இருக்கிறது. பாண்டியன் எந்த இடத்தில் தோன்றினாலும் அவனை எதிர்க்க ஏற்பாடு இருக்கிறது. தவிர குருநாதர்

சிருஷ்டித்த படை வளையங்களையும் நான் உடைக்க வில்லை. அவன் எங்கு உள் நுழைய எத்தனித்தாலும் விற்பொறிகள் அழிக்க முயலும். அவற்றால் முடியா விட்டால் அவன் உள்ளே நுழைந்தபின் பல வளையங் களாக நிற்கும் படைப்பகுதி ஒவ்வொன்றையும் அவன் உடைத்து நுழைய வேண்டியிருக்கும். பெரும் மந்திரவாதியா யிருந்தாலொழிய என் அணிவகுப்பிலிருந்து வீரபாண்டியன் மீளமுடியாது. ஆகையால் பயத்தை விடு," என்று கூறினான் சேரமன்னன்.

குறிஞ்சி வாயைப் பிளந்துகொண்டு பிரமித்து நின்றாள். உண்மையில் சேரன் படைவகுப்புப் பிரமாதமா யிருந்தது. அவன் இணையற்ற படைத்தலைவன் என்பதை அது பறைசாற்றியது. இருப்பினும் குறிஞ்சியின் பயம் போகவில்லை. வீரபாண்டியனின் அசுரக் கணைகள் அவள் கண்முன்பு எழுந்தன. 'அவற்றிலிருந்து பரலி எப்படித் தப்பமுடியும்?' என்று உள்ளுக்குள் எண்ணினாள்.

அவள் எண்ணத்தைச் சேரனும் புரிந்து கொண்டிருக்க வேண்டும், ஆகவே சொன்னான் அவன்: "குறிஞ்சி! அந்தப் பயங்கர ஆயுதங்களைப்பற்றிக் கவலைப் படாதே. பாண்டிய சகோதரர்கள் எனக்குப் பகைவர் களானாலும் அவர்களைப் பற்றி ஒரு விஷயம் நான் திட்டமாகச் சொல்ல முடியும். பாமர மக்களை ஒருநாளும் அவர்கள் அழிக்கமாட்டார்கள். கணைகளை வைத்திருந் தாலும் அவசியமானாலொழிய அவற்றை ஏவமாட்டார்கள் பாமர மக்கள்மீது. போர் வீரர்மீது படைப் பிரிவுகள்மீது ஏவலாம். ஆனால் படைப் பிரிவுகள் இருக்குமிடம் தனிப்பட பரலியில் இல்லை" என்று.

குறிஞ்சி அவனை வியப்பு நிரம்பிய விழிகளுடன் நோக்கினாள். "உங்களுக்குப் பாண்டிய சகோதர்களிடம் இத்தனை மதிப்பா?" என்று வினவவும் செய்தாள் வியப்பு குரலில் துள்ளி விளையாட.

"ஆம்."

"பின் ஏன் போர் செய்கிறீர்கள் மன்னவா?"



"என் அரசை நிலைநிறுத்திக்கொள்ள. நான் முத்தை அபகரித்ததாகச் சொல்லவில்லையா பாண்டியன்?"

"ஆம்."

"ஏன் அதைச் செய்தேன்? சேரன் கள்வனா?"

"மன்னவா!"

"கொற்கையிலேயே முத்துப் பெட்டிகளைக் கைப் பற்றினேன் பாண்டிய வணிகனிடமிருந்து. முத்து வாணி பத்தின் பிறப்பிடமான கொற்கையையும் கைப்பற்ற முயன்றேன். முத்து ஆசையாலல்ல. நில ஆசையாலுமல்ல. பாண்டியன் படை திரட்டுவதாகக் கேள்விபட்டேன். நான் மட்டுமல்ல, போசளரும் கேள்விப்பட்டார்கள். பாண்டியர் தலையெடுத்தால் முதலில் சேரநாடு தாக்கப்படும் என்பது தெளிவு. வரலாறு அதைத் தெளிவாகச் சொல்லுகிறது. பாண்டியர் தலையெடுத்தபோதெல்லாம் சேரநாட்டைத் தான் தாக்கியிருக்கிறார்கள். இம்முறை அவர்களிடமிருந்து சேரநாட்டைக் காக்க உறுதி கொண்டேன். படையைத் திரட்டவிட்டு அவர்களை எதிர்ப்பதை விட படைத் திரட்டலையே தடுக்க முயன்றேன். இதற்கு சிங்கள மன்னரும், போசள மன்னரும் ஒப்புக்கொண்டார்கள். ஆகவே முதலில் முத்தைக் கைப்பற்றினேன். வேவு பார்த்து அதைத் தடுக்க வந்த வீரபாண்டியனையும், பாண்டியன் மகளையும் சிறை செய்ய முயன்றேன்; அது முடியாது போகவே, பாண்டியர் மகளைக் கைப்பற்றினேன். அப்பொழுதும் திருமணத்தால் சேரநாட்டைப் பாண்டிய ரிடமிருந்து காப்பாற்ற எண்ணினேன். அதற்குப் பாண்டியன் மகளும் இசையவில்லை. பத்தினித் தெய்வத்தின் நாடான இதில் எனக்குப் பலத்த எதிர்ப்புமிருந்தது. அவளை அவள் காதலனுடன் சிங்களம் கடத்தினேன். ஆகவே போர் வந்து விட்டது. இனி பழைய நிகழ்ச்சிகளை சிந்தித்துப் பயனில்லை. போரைப் பற்றிச் சிந்திக்க வேண்டும்," என்றான் மன்னன்.

குறிஞ்சி மன்னன் சொன்னதைக் கேட்டுப் பிரமித்து நின்றாள். மன்னன் செய்த விஷயங்கள், கையாண்ட

முறைகள் தவறாயிருந்தாலும் இவன் சேரநாட்டைக் காக்கவே இத்தனையும் செய்திருக்கிறானென்பதை அறிந்ததும் அவள் நெஞ்சு அவன்பால் பெரிதும் இளகியது. இறுதியாக, "மன்னா!" என்று அழைத்தாள் மெதுவாக.

"என்ன குறிஞ்சி?"

"நாளைப் போரில் தந்திரந்தான் பலிக்கும் என்று நம்புகிறீர்களா?"

"ஆம்."

"சொன்னபடி பாண்டிய சகோதரர் நேரில் கிழக்கு வாயிலைத் தாக்கமாட்டார்களென்று நினைக்கிறீர்களா?"

"ஆம்."

"பிறகு எங்கு தாக்குவார்களென்று எதிர்பார்க்கிறீர்கள்?"

"தெற்கு வாயிலில் யானைப்படை இருக்குமிடத்தில்."

"ஏன்?"

"யானைப்படைகளைத் தாக்கி வேலெறிந்தால் அவை பிளிறி அலறி ஓடும். இதனால் பெரும் குழப்பம் ஏற்படும். நமது அணிவகுப்புக் குலையும். அந்தக் குழப்பத்தில் பாண்டியன் உள்ளே நுழைவான்."

குறிஞ்சியின் வியப்பு உச்ச நிலைக்குச் சென்றது. வீர பாண்டியனை எத்தனை நன்றாக சேரமன்னன் எடை போட்டிருக்கிறானென்று எண்ணிப் பார்த்தாள். அதனால் பெருமிதத்துடன் மன்னனை நோக்கினாள். "உங்கள் திட்டம் மிகச் சரி. வீரபாண்டியனைச் சரியாக எடை போட்டிருக்கிறீர்கள். இருப்பினும் எனக்குப் பெரும் சந்தேகமாயிருக்கிறது. தாங்கள் எண்ணியபடி அவர் சிக்குவரா?" என்று கூறவும் செய்தாள்.

ஆனால் வீரரவியின் ஊகந்தான் சரியாயிருந்தது. மறு நாள் போர் துவங்கியபோது பரலியின் தென்புறத்தையே தாக்கினான் வீரபாண்டியன். அதுவும் பகிரங்கமாகப் பட்டப்பகலில் எல்லோர் கண்முன்பாகவும் தாக்கினான். தாக்கி உள்ளே புகுந்தான்.

## அத்தியாயம் 66

# படையெனும் புயல்

வீரரவி ஊகித்தபடியே வீரபாண்டியன் பரலிமா நகரின் தென்புற வாயிலைத் தாக்கிய செய்தி பேரதிர்ச்சியைத் தந்தது பணிமகள் குறிஞ்சிக்கு. மறுநாள் துவங்கவிருந்த போரை நேரடியாகப் பார்க்கச் சேரனிடம் அனுமதி கேட்டுப் போர் முரசுகள் முழங்கியதும் சிறையினின்று வெளிப்பட்டு அரண்மனையின் மேல் உப்பரிகையில் நின்ற பரதபட்டனுக்கு அது அதிர்ச்சியையும் வியப்பையும் ஒருங்கே அளித்தது. அவ்விருவருக்கும் மட்டுமல்ல அந்த அதிர்ச்சி ஏற்பட்டது. முதல்நாள் தனது போர்த்திட்டத்தை வீரபாண்டியன் பாண்டிய மன்னன் பாசறையில் மற்ற உப்தளபதிகளுக்கு முன்பு விவரித்த போது அவர்களுக்கும் அத்தகைய அதிர்ச்சியே ஏற்பட்டது.

பாசறையின் நடுவே தரையில் செருகப்பட்டிருந்த ஈட்டியின் முனையில் பெருஞ்சுடர் விட்டிருந்த பந்தத்தின் வெளிச்சத்தில் தரையில் குத்திட்டு உட்கார்ந்துகொண்டிருந்த வீரபாண்டியன், தன்னைப்போலவே தனது பக்கத்தில் உட்கார்ந்திருந்த சுந்தரபாண்டியனுக்கும், இருவருக்கும் எதிரே அரைச்சக்கர வளையமாக ஒற்றைக்கால், மண்டியிட்டு உட்கார்ந்திருந்த உபதலைவர்களுக்கும் தனது போர்த்திட்டத்தை விவரிக்கத் தரையில் தனது ஆள்காட்டி விரல் நுனியால் பல கோடுகளை இழுத்தான். பல இடங்களில் விரல் நுனியை அழுத்திச் சுற்றி லேசாகக் குழிகளையும் மணலில் சிருஷ்டித்தான். அது மலைப்பகுதி யானதால் அவர்கள் இருந்த ஒரு பாறையின் ஒரு பகுதி கால வெள்ளத்தில் மணலாகித் தரை தட்டியிருந்தாலும் மணலெல்லாம் முறுக்கு மணலாயிருந்தபடியால் வீர

பாண்டியன் கோடு இழுத்தபோதும், குழிகளைச் சிருஷ்டித்தபோதும் விரலை நன்றாக அறுக்கவே செய்தது. அதைப்பற்றிச் சிறிதும் சிந்தியாமலே வீரபாண்டியன் விளக்கினான் போர்த்திட்டத்தை. "அண்ணா! நாளை சரியாக நடுப்பகலில் நான் நமது படையின் தென்புறப் பிரிவின் உபதளபதியுடன் ஆயிரம் வீரர்களுடன் தெற்கு வாயிலில் கதவுகளை உடைத்து உள்ளே நுழைந்ததும் நீங்கள் அதே பகுதியில் அந்த வாயிலையும் தள்ளி தெற்குத்திக்கு நோக்கி நமது புதுகணைகளில் ஒன்றை அனுப்புங்கள். கால் ஜாமம் இடைவெளி கொடுத்து இன்னோர் உபதளபதியை இன்னோர் ஆயிரம் வீரர்களுடன் அதே வாயில் வழியாக உள் நுழையச் சொல்லுங்கள்..." என்று கூறி அண்ணனைப் பார்த்தான்.

ஜடாவர்மன் சிங்கவிழிகள் தம்பியை ஏறெடுத்துப் பார்க்கவுமில்லை. அவன் விழிகளைச் சந்திக்கவுமில்லை. தரையில் தம்பி இழுத்த கோடுகளையும் புள்ளிகளையும் பார்த்துக் கொண்டிருந்தன. ஓர் உபதலைவன் மட்டும் சந்தேகம் கேட்டான். "நாம் தென்புற வாயிலில் இறங்கும் போது கோட்டை மீதுள்ள விற்பொறிகளும் வேற்பொறிகளும் வாளாவிருக்குமா? தவிர கோட்டைச் சுவரை அடுத்துள்ள காடும் அழிக்கப்பட்டிருப்பதால் மலையில் இறங்கும் நம்மை விற்பொறிகளும் வேற்பொறிகளுமே அழித்துவிடுமே," என்று.

வீரபாண்டியன் உபதலைவனை நோக்கிச் சொன்னான். "சேரனுடைய குருநாதர் ஏற்பாடு அதுதான். இது இன்னும் அப்படியே இருந்தால் நாம் எந்த வாயிலையும் நேரிடையாக அணுக முடியாது. நல்ல வேளையாக வீரரவி அவற்றில் பாதிக்கு மேல் கீழே இறக்கிவிட்டான். நம்மை எதிர்கொள்ளச் சில விற்பொறிகள் இருக்கின்றன. ஆனால், அவற்றையும் ஏமாற்றி நாம் தெற்கு வாசலை அடையலாம்," என்று.

"என்ன! விற்பொறிகளைப் பாதிக்குமேல் கோட்டைச் சுவரிலிருந்து சேரன் இறக்கிவிட்டானா?" என்று வினவினான் இன்னோர் உபதளபதி.



"ஆம். கோட்டை நிலையை அறியத்தான் காட்டின் ஓரமே இன்று பகல் என் புரவியில் சென்றேன். மலைக் காட்டுக்கும் கோட்டைச் சுவருக்கும் இடையேயுள்ள இடை வெளியைத் திறந்த வெளியாக்கவே காடு வெட்டப் பட்டது. நமது சாதாரண விற்பொறிகள் காட்டு முகப்பிலிருந்து இயங்கினால் கோட்டைக்குள் வாளிகள் விழாதிருக்கவே அந்தத் தந்திரத்தைக் குருநாதர் சிருஷ்டித்தார். நமது வாளி கோட்டைக்குள் போகாதென்றால் கோட்டையிலுள்ள வாளிகளும் காட்டை அணுக முடியாதல்லவா?" என்று வினவினான் வீரபாண்டியன் பதிலுக்கு.

"ஆம், ஆம்," என்று பல உபதலைவர்கள் ஆமோதித் தார்கள்.

"அப்பொழுது பொறியின் வாளிகள் காட்டை அணுக முடியாதென்றால் மலைச்சரிவில் வேகமாக வரும் படையைத் தாக்கப் பொறிகள் கோட்டை மதிளின் முகப்புக்குக் கொண்டு வரவேண்டும். அவற்றின் மூக்குகள் இடையிலுள்ள திறந்த வெளியை நோக்கித் துருத்திக் கொண்டிருக்க வேண்டும். அப்படித் துருத்திக் கொண்டு மிருக்கின்றன. தென்புற வாயிலின்மீதும் அதை அடுத்தும் அத்தகைய மூக்குகள் மூன்றைத்தான் பார்த்தேன். ஆகவே மீதி கீழே இருக்க வேண்டும்..." என்றான் வீரபாண்டியன்.

"கீழேயா? எதற்கு?" என்றான் உபதலைவர்களில் ஒருவன்.

"கோட்டைக் கதவை உடைத்து நுழையும் நம்மை எதிர்க்க. கதவு திறந்ததும் பொறிகள் நம்மை நோக்கித் தயாராகியிருக்கும் நம்மை நமனுலகு அனுப்ப" என்ற வீரபாண்டியன் புன்முறுவலுடன் உபதலைவர்ளை நோக்கினான்

உபதலைவர்கள் பிரமை பிடித்து உட்கார்ந்திருந்தனர். வீரபாண்டியன் வேண்டுமென்றே மரண வாயிலில் நுழைவதாகத் தோன்றியது அவர்களுக்கு. ஆகவே பதிலேதும் கேட்கவில்லை அவர்கள். வீரபாண்டியனே மேலும் சொன்னான்; "உபதலைவர்களே! எதிரியின் தற்காப்பு

பலமாகத்தானிருக்கிறது. அதுவும் வீரரவி பெரும் வீரன். போரைக் கண்டு அஞ்சாதவன். தந்திரத்தில் அவனுக்கிணை யாரும் கிடையாது. ஆனால் ஒரு பலவீனம் அவனிடம் இருக்கிறது. அவன் வஞ்சகன். யோசனையெல்லாம் குறுக்கு யோசனை. ஆகையால்தான் நம்மை உள்ளே இழுத்து அழிக்கப் பார்க்கிறான். கோட்டைப் பொறிகளைக் கீழே இறக்கிவிட்டால் நாம் துணிவுடன் இறங்கித் தாக்குவோ மென்றும், அப்பொழுது நம்மை உள்ளே விட்டுக் கீழேயிருக்கும் பொறிகளால் அழித்து விடலாமென்றும் திட்டமிட்டிருக்கிறான். அப்படியே ஒரு வாயிலில் பொறிகளை மீறி உள்ளே நுழைந்தாலும் அடுத்த வாயில் படைகளை நம்மீது திருப்பி நம்மையும் வெளியிலுள்ள படையையும் அவன் துண்டித்து விடலாம். பிறகு உள்ளிருக்கும் நமது படையை அழித்து வெளியிலுள்ள மீதிப் படையின்மீதும் தனது பெரும் படையை ஏவலாம். இதனால் அவன் ஒரே சமயத்தில் சமாளிக்கக்கூடிய படை சிறு படையாகிறது. தவிர நமது படையும் இரண்டு படுகிறது..." என்று சொல்லிக் கொண்டே போன வீர பாண்டியனை அதுவரை பேசாமலிருந்த சுந்தர பாண்டியன் இடைமறித்து வினவினான். "தம்பி! எதிரி நமது படைகளை இரண்டாக்கத் திட்டமிட்டிருக்கிறான். நீ இந்தக் கோடுகளின்படி ஐந்தாகப் பிளந்திருக்கிறாயே!' என்று.

வீரபாண்டியன் அண்ணனை ஏறெடுத்து நோக்கி, "ஆம் அண்ணா படைகள் ஐந்து பிரிவு, ஆனால் தாக்கப் போவது ஒரே படையாக,'' என்று தரையிலிருந்து இன்னுமிரு கோடுகளைச் சுட்டிக் காட்டினான்.

சுந்தரபாண்டியன் கண்கள் பளிச்சிட்டன. "ஆம், ஆம்" என்ற ஆமோதிப்புச் சொற்களும் அவனிடமிருந்து வெளிவந்தன. அந்தச் சொற்களில் உற்சாகமும் இருந்தது.

சுந்தரபாண்டியன் சுட்டிக்காட்டிய கோடுகளையும், வீரபாண்டியன் அளித்த விளக்கத்தையும் உபதலைவர் களும் ஓரளவு புரிந்துகொண்டாலும் வீரபாண்டியன்



திட்டத்தில் ஆபத்து மிக அதிகமென்றும் நினைத்தார்கள். அது வெற்றியடைவதிலுள்ள பல கஷ்டங்கள் அவர்கள் கண்முன்பு தோன்றின. அவர்கள் சந்தேகத்தை முகங்களி லிருந்தே அறிந்து வீரபாண்டியன் சொன்னான், "வீரர்களே! ஆபத்தில்லாமல் போரில்லை. ஆனால் நமக்கு இப் பொழுது ஆபத்துக் குறைவு. குருநாதன் சிருஷ்டித்திருந்த ஆபத்தைச் சேரன் குறைத்துவிட்டான். என்னை அவன் நாளைக்குக் கிழக்கு வாயிலில் எதிர்பார்க்கவில்லை. தெற்கு வாயிலில் எதிர்பார்க்கிறான். நான் கிழக்கு வாயிலென்று சொன்னால் அது தெற்கு வாயிலாகத்தான் இருக்க முடியுமென்றும், அங்கு யானைப் படை இருப்பதால் அதைக் குழப்பி அதனால் ஏற்படும் சந்தர்ப் பத்தைத் தான் உபயோகப் படுத்திக் கொள்வேனென்றும் நினைக்கிறான்" என்று.

"என்ன, அங்கு யானைப்படை இருக்கிறதா?" என்று வினவினான் ஓர் உபதலைவன்.

"ஆம். அப்படித்தான் கூத்தன் செய்தி அனுப்பியிருக் கிறான்" என்றான் வீரபாண்டியன்.

"அப்படியானால் வீரரவி எதிர்ப்பார்ப்பது போலவே தாங்கள் நடந்து கொள்ளப் போகிறீர்களா?" என்று வினவினான் உபதலைவர்களில் ஒருவன்.

"ஆம்." வீரபாண்டியன் குரல் திட்டமாயிருந்தது.

"ஏன்?' எதிரி திட்டப்படி நடப்பது நமக்கு எப்படி அனுகூலம்?" என்று வினவினான் மற்றோர் உபதளபதி.

"வீரரவியின் திட்டம் கோட்டாற்றுக் கரையை யொட்டி அமைக்கப்பட்டிருக்கிறது. வடக்குப் புறத்தைத் தாக்கும்படி சிங்கணனிடம் சொல்லிவிட்டு தெற்குப் புறத்தில் நாம் தயாராயிருக்கவில்லையா அங்கு?" என்று வினவினான் வீரபாண்டியன்.

"ஆம்," என்றான் ஓர் உபதளபதி.

"வீரரவியின் பலவீனம் அதில்தானிருக்கிறது. அவன் திட்டம் முழுவதும் கோட்டாற்றுக்கரைப் போரை அடி யொற்றியதாக இருக்கும். ராமவர்மன் அங்கு நடந்ததை

விளக்கியிருக்கிறான். அதை வைத்துத் திட்டம் தயாரிக்கிறான் சேரன். கோட்டாற்றுக்கரையில் நான் விற்பொறிகளைக் கோட்டையின் கீழ்த்தளத்தில் இறக்கி உள்ளே நுழைந்த ராமவர்மன் படையை அழித்தேன். அதையொட்டிப் பொறிகளைத் தரையிலேயே இறக்கிவிட்டான் சேரமன்னன், நாம் உள்ளே நுழைந்ததும் எதிர்கொள்ள. ஆகவே நாம் இம்முறை நேர் எதிர் வழியொன்றைக் கையாளப் போகிறோம். நாளை இரவுக்குள் சேரன் புரிந்து கொள்வான். பாண்டியன்படை அவ்வப்பொழுது இடத்துக்கும், சமயத்துக்கும், பலத்துக்கும் தகுந்தவாறு மாறும் என்பதை" என்று கூறி வீரபாண்டியன் அத்துடன் விவாதத்தை முடித்து "நானும் தென்புறப் படைப்பிரிவின் உபதளபதியும் தெற்கு வாசல்மீது இறங்குவோம் ஆயிரம் வீரருடன். நாங்கள் வாயிலினுள் நுழைந்ததும் தெற்கு வாயிலுக்குச் சற்றுத் தள்ளி தெற்கு நோக்கி ஊருக்குள் ஒரு பயங்கரக் கணை அனுப்பப்படும். கால் ஜாமத்திற்கெல்லாம், இன்னுமோர் ஆயிரம் பேர் கொண்ட படை அதே தெற்கு வாசலை நோக்கி விரைந்து வந்து உள் நுழையும். அடுத்த கால் ஜாமம் கழித்து மன்னர் மீதி மூவாயிரம் வீரருடன் முரசு கொட்டி வடபுற வாயிலை நோக்கிக் காட்டின் ஊடே செல்லுவார். அவர் செல்வது நகர மக்களுக்கு நன்றாகத் தெரியும்படி. போர்க் கோஷமும் முரசொலிகளும் இருக்கவேண்டும். வடபுறவாயிலுக்கு நேரில் சென்றதும் அங்கு இறங்காமல் திரும்பக் கிழக்கு வாயிலுக்குவந்து அந்த வாயில் முன்பு சூறாவளி வேகத்துடன் இறங்குவார். உள்ளே நுழைந்ததும் நமது படைகள் ஆங்காங்கு சேரன் வைத்திருக்கும் முரசுகளை அழிக்கட்டும்" என்று கூறினான்.

உபதலைவனை அத்துடன் அனுப்பிவிட்ட வீரபாண்டியன் அண்ணனுடன் நீண்ட நேரம் போர் நுணுக்கங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தான். பிறகு நிம்மதியாக சகோதரரிருவரும் உறங்கச் சென்றனர்.

மறுநாள் காலையில் தென்புறத்திலிருந்த படைப் பிரிவை அடைந்த வீரபாண்டியன் உபதலைவனிடம் கூறினான். "உபதளபதி! நாம் சரியாக நடுப்பகலில் தெற்கு வாயிலை நோக்கி இறங்குகிறோம். இறங்கும்போது வீரர்கள் வழக்கபடி வாட்களைச் சுழற்ற வேண்டாம். வேலெறிய வேண்டாம். புரவிகளின் முதுகுகளில் நன்றாகப் படுத்துக் கொண்டு வெகுவேகத்தில் இறங்கவேண்டும். புரவிமீது அம்பு விழுந்து புரவி ஓடி வரட்டும். எப்படியும் தெற்கு வாயிலை அடையட்டும். கதவுகளை இடிக்கும் பெரிய மரத்தூண் வண்டிகள் வேகமான புரவிகளில் அமைக்கப் பட்டு முன்னால் சரிவில் தள்ளிவிடப்படும். நாம் தெற்கு வாயிலை அடையும் போது அந்த மரத் தண்டுகள் அங்கிருக்க வேண்டும். புரிகிறதா!"

புரிகிறதென்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான் உபதளபதி. வீரபாண்டியன் சரியாக நடுப் பகலில் மலைச்சரிவில் தன் படையின் முகப்பில் தனது சாமபல்நிறப் புரவிமீதமர்ந்து நின்றான். பகலவன் உச்சிக்கு வந்தான். பாண்டிய முரசு ஒன்று லேசாக ஒலித்தது. பாண்டிய இளவலின் சாம்பல் நிறப் புரவி வாயிலை நோக்கி ராட்சஸ வேகத்தில் இறங்கியது. அதை அடுத்துப் பெரும் புயல்போல் இறங்கியது உபதலைவன் பின்னாலிருந்த படை. ஆயிரம் புரவிகளின் குளம்பொலிகள் தடதடவென பரவிமீது இடி இறங்குவதுபோல் ஒலித்தன. சேரன் முரசுகள் ஒலித்தன. கோட்டைச் சுவர்மீதிருந்த மூன்று விற்பொறிகள் இயங்கி அம்பு மழையும் பொழிந்தன. ஆனால் அந்த புரவிப்படை வருவது நிற்கவில்லை. அடர்த்தியாக சுவர்போல் வெகு வேகத்துடன் இறங்கியது. வீரபாண்டியன் படை. அதன் எண்ணத்தை தெற்குவாசல் வீரர் உணருமுன்பு வாயிற்கதவுகள் படு தூளாயின. உள்ளே புகுந்தது புரவிச் சூறாவளி. இதை அரண்மனை உப்பரிகையிலிருந்து பார்த்த பரதபட்டன் பக்கத்திலிருந்த குறிஞ்சியின் பக்கம் திரும்பிப் பெருமூச்சு விட்டான்.

## அத்தியாயம் 67

# மண்ணில் கிடந்த மாவீரன்

**வீ**ரபாண்டியன் ஆயிரம் வீரர்கொண்ட புரவிப் படையுடன், புரவிகள்மீது படுத்தவண்ணமே புரவிகளை வெகு வேகத்தில் ஓட்டிய ஆயிரம் பேருடன், மலைச்சரிவில் இறங்கியதைப் பார்த்த உடனேயே புரிந்து கொண்டான் பரதபட்டன். முற்றும் எதிர்பாராத, போர் முறையைப் பாண்டிய இளவல் கையாளுகிறானென்பதை. "புரவிகளின் முதுகில் வீரர் படுத்தால், அவர்கள் மார்புக்கு வேலையோ அம்பையே குறிவைக்க முடியாது. மாண்டால் குதிரைகள் தான் மாயும். வீரர்கள் மாளமாட்டார்கள்" என்றான் பரத பட்டன் குறிஞ்சியை நோக்கி. அசுரவேகத்தில் வீரபாண்டியன் தெற்குக் கோட்டை வாசலின்மீது இறங்கியதையும் அவனைத் தொடர்ந்து உருண்டு வந்த மரத்தண்டு வண்டி தென்புற வாயிற்கதவுகளை வேகமாக இடித்துத்தகர்த்ததையும் கண்ட பரதபட்டன் அடுத்து அவன் என்ன செய்யப் போகிறானென்பதை யோசிக்கும்முன்பு பிரமிக்கத்தக்க நிகழ்ச்சிகள் நடந்தன. வீரபாண்டியனும் அவன் ஆயிரம் வீரரும் கோட்டை வாயில், திறந்ததும் புரவிகளை விட்டுக் குதித்தனர். யவனரின் நீள இரும்புக் கேடயங்களை ஏந்தித் தலையிலிருந்து கால்வரை மறைத்துக்கொண்டு வாளேந்திப் போரிட்டுக்கொண்டே விற்பொறிகளையும் வேற்பொறிகளையும் அணுகியதால், விற்பொறிக் கணைகள் அந்த இரும்புக் கேடயங்கள் முன்பு பயனற்றதாயின. இரும்புக் கேடயங்கள்மீது விழுந்த அம்புகளும் வேல்களும் இரும்பின் சம்பந்தத்தால் 'கிளாங்' 'கிளாங்'கென்று பேரொலிகளைக் கிளப்பினவேயொழிய பெருவினையேதும் விளைவிக்க வில்லை. இந்த நேர் எதிர்ப்பை, அதுவும் புரவிப் படை



கர்லாட்படையாகும் விந்தையை, எதிர்பாராத சேர வீரர்கள் பொறிகளைக் கைவிட்டுப் பின்னால் சற்று எட்ட இருந்த யானைப்படைக்காகப் பின்னடைந்தார்கள். வீர பாண்டியன் அந்த யானைப்படைமீது சேரன் பொறிகளைத் திருப்புமாறு உபதளபதியை ஏவினான். அடுத்த விநாடி வில்லம்புகளாலும் வேல்களாலும் தாக்கப்பட்ட யானைப் படை பல வழிகளில் திரும்பி ஓடலாயிற்று. யானைகளின் பெரிய அலறல் வானைப் பிளந்தது. அத்துடன் அம்பாரியிலிருந்து மாண்டு விழுந்த உபதலைவர்களின் வீர மரண கோஷங்களும் பெரிதாகக் கேட்டன. பொறிகளை உபதலைவன் இயக்கி அதேசமயத்தில் வீரபாண்டியன் வாளைப் பெரிதாக உயர்த்தி ஆட்டியதும் சாம்பல் நிறப். புரவி அவனை நோக்கி ஓடிவந்தது. அதன்மீது தாவி ஏறிய வீரபாண்டியன் தனது முரசுகளில் ஒன்றை ஒலிக்கச் செய்யவே பொறிகளை இயக்கிய வீரர்கள் பொறிகளைக் கைவிட்டு பின்னடைந்து ப்ழையபடி புரவிகளில் தாவினார்கள். தரைப்படை மீண்டும் புரவிப்படையாக மாறுவதைத் தடை செய்ய யானைப்படையால் இயலாது போயிற்று. யானைகள் சிதறியோடியது பெரும் நாசத்தை சேர வீரர்களுக்கும், சொற்ப நாசத்தை பாண்டிய வீரர்களுக்கும் அளித்ததால், பாண்டிய வீரர் மீண்டும் புரவியேறுவதும் அப்படிக் கஷ்டமான அலுவலாயில்லை. புரவிப் படை மீண்டும் துரிதத்தில் அணிவகுத்துக் கொண்டதைத் தடுக்க சேரன் காலாட்படை முயன்றபோது வீரபாண்டியன் போர் அரங்கத்தை விட்டுத் தனது படையை வெகுவேகத்தில் செலுத்தித் தென்புறக் கடலோரப் பாதையை அடுத்த காட்டுக்குள் நுழைந்து விட்டான்.

பாண்டியப்படை வந்த வேகத்தில் நகரத்தின் கடலோரக் காட்டுக்குள் மறைந்து விட்டதைக் கண்டதும் அந்தக் காட்டை நோக்கிச் சேரன் தெற்கு வாசல் படையில் ஒரு ப்குதியும், கிழக்கு வாசல் புரவிப்படையின் ஒரு பிரிவும் நகர்ந்தன. இன்னோர் ஆயிரம் வீரர் கொண்ட புரவிப்படை வீரபாண்டியன் படையைப் போலவே சூறாவளியென

மலைச்சரிவில் இறங்கியது. அதைச் சேரன் புரவிப்படை எதிர் கொண்டது. வந்த அந்த ஆயிரவர்கள் மலைச்சரிவில் வந்ததால் அவர்கள் வேகம் அதிகமாயிருந்தது. அவர்கள் அளித்த போரும் உக்கிரமாயிருந்தது எதிர்த்த சேரன் புரவிப்படை மீது வெகு உக்கிரத்துடன் விழுந்த அந்தப் புரவிப்படை பெரும் சேதம் விளைவித்துக் கொண்டே கிழக்குவாயிலை நோக்கி நகர்ந்தது.

உப்பரிகை மேலிருந்து இதைக் கண்ட குறிஞ்சி கேட்டாள்: "குருநாதரே! இதோ இன்னோர் ஆயிரம் வீரர்கள் கிழக்கு வாயிலை நோக்கி வருகிறார்கள். முதலில் வந்த வீரபாண்டியனின் ஆயிரம் வீரர்கள் கடலோரக் காட்டுக்குள் மறைந்து விட்டார்கள். இது என்ன போர் முறை?" என்று வினவினாள்.

குருநாதன் சொன்னான்: "குறிஞ்சி! வீரபாண்டியன் எனது ஏற்பாடுகளைக் குலைத்துவிட்டான். காட்டுக்குள் அவன் ஆயிரம் வீரர்கள் சென்று இந்த அரண்மனைப் பக்கம் வருவார்கள். முத்துக்குமரியையும், இந்திர பானுவையும் கொண்டு சென்ற பாதை அது. எதிரிகள் மலைக் காட்டிலிருப்பதையே நினைத்துக் கொண்டு படைப் பிரிவுகளைக் கோட்டை மதிளை அணைத்தே நிறுத்தியிருக் கிறான் வீரரவி. முரசுகள் ஒலித்தால் உள் வளையங்கள் நகரில் ஏற்படும் பாண்டியனை நெருக்க. ஆனால் அதோ பார் கிழக்கு நோக்கி நகரும் பாண்டியன் படை முரசுகளை அழிக்கிறது" என்று மேலும் கூறினான் குருநாதன் "நான் படைகளைப் பிரித்து நிறுத்தி பாண்டியப் படைகள் உள் நுழைந்ததும் இணைந்து பல வளையங்களை சிருஷ்டிக்க முரசுகளை அமைத்தேன். இப்பொழுது எதிரி முரசுகளை அழிக்கிறான். அது மட்டுமல்ல. கடலோரப் பாதை வழியாக வீரபாண்டியன் கிழக்கு வாயிலுக்கு வருவான். அதோ கிழக்கு வாயிலை நோக்கி நகரும் படைக்கும் வீரபாண்டியன் பின் வருவதால் அவன் படைக்கும் இடையில் வீரரவியின் பிரதானப் படை சிக்கிக் கொள்ளும்..."



இந்த வாசகத்தைக் குருநாதன் முடிக்கு முன்பே பெரும் கணையொன்று தென்புறத்தில் மலைச்சரிவில் வண்டியில் உருண்டு வந்தது. உருண்ட வேகத்தில் அதிலிருந்த பேரம்பு எரிமுகத்துடன் தெற்கு வாசலைத் தள்ளி அப்புறம் சீறிச் சென்றது. திடீரென இறங்கிய கல்லிடுகூடை கோட்டைச் சுவரைத் தாண்டி தீப்பந்தமாரி பொழிந்தது. தெற்கு வாயிலுக்கப்பால் பல இடங்களில் தீப்பிடித்தது. அதைக் கண்ட பரதபட்டன், "நன்று நன்று" என்றான்.

"என்ன நன்று?" என்றாள் குறிஞ்சி.

"மக்களில்லாத இடத்தில் கணைகளை எறிகிறான் பாண்டியன். கணை செல்லுமிடத்தில் காடுதான் இருக்கிறது. காடுதான் தீப்படித்துக்கொள்ளும்?" என்றான் பட்டன்.

"இது எதற்கு?" என்று கேட்டாள் குறிஞ்சி.

அடுத்த அரை நாழிகையில் அதற்கு விடை கிடைத்தது. தீயைக் கண்ட சேரன் படைவீரர் அத்தீயை நோக்கி ஓடினர். பெரும் குழப்பம் அந்தப் பகுதியில் நிலவியது. அந்தக் குழப்பம் கிழக்கு வாசலையும் பிடித்துக் கொண்டது. எங்கும் மக்கள் சிதறி ஓடினார்கள். அணிவகுத்த படைக்கு முரசு அறிவிப்பு இல்லாததால் அதுவும் கலைந்தது. அதே சமயத்தில் காட்டில் சுந்தரபாண்டியன் முரசுகள் ஒலித்தன. ஒலித்துக் கொண்டே வடபுறம் சென்றன.

கிழக்கு வாயிலில் நின்று கொண்டிருந்த வீரரவி வடக்கு வாயிலுக்குப் பாதிப் படையைத் திருப்பினான். அது வடக்கு வாயிலை அடைவதற்கும் சுந்தர பாண்டியன் முரசு கொட்டாமல் காட்டு வழியே திருப்பிக் கிழக்கு வாயிலை நோக்கி இறங்குவதற்கும் நேரம் சரியாயிருந்தது. சுந்தரபாண்டியன் பயங்கர வேகத்தில் கிழக்கு வாயிலின்மீது இறங்கினான். வீரபாண்டியன் கபட முறைகளை, தந்திர வழிகளை அவன் கையாளவில்லை. தன் படையின் முகப்பில் பெரும் இரும்புக் கவசம்

தலையிலிருந்து கால்வரையில் பளபளக்கக் கையில் பெருவேலைத் தாங்கிக் கொண்டு இறங்கினான். அவனைத் தொடர்ந்து ஆயிரம் புரவிவீரரும் மன்னனைப்போலவே இரும்புக் கவசமணிந்து இருந்தனர். அப்படி இறங்கிய இரும்புச் சுவரில் சில இடங்களைச் சேரன் கோட்டைவிற் பொறிகள் உடைத்தாலும், அந்தப் படை, உடைந்த இடங்களில் கண்ணிமைக்கும் நேரத்தில் ஒன்று கூடிப் பெரும் சுவரென இறங்கியது கிழக்கு வாயில்மீது.

பெரும் மரத்தண்டுகள் மோதின. வாயில்மீது, திறந்த வாயிலில் இறக்கப்பட்டிருந்த பொறிகளை வீரரவி இயக்க முடியவில்லை. அந்தப் பொறிகள் முதலில் கதவை நோக்கி யிருந்தாலும், தெற்கிலிருந்து வந்த வீரபாண்டியன் படைப் பிரிவை நோக்கித் திருப்பப்பட்டதால் நேரிடைப் போரே சாத்தியமாயிற்று வீரரவிக்கு.

கணக்காகத் திட்டமிடப்பட்ட அந்தப் போர் முறை பெரும் பிரமிப்பளித்தது பரதபட்டனுக்கு. வீரபாண்டியன் ஒரு படைப் பிரிவுடன் இறங்கி தெற்கு வாயிலில் புகுந்து கடலோரப் பாதைக்குச் சென்றுவிட்டது, பிறகு மற்றொரு படை தெற்கு வாயிலில் நுழைந்து போரிட்டுக் கிழக்கு வாயிலை அணுகியது, அதை எதிர்கொள்ள பொறிகளைத் திருப்பிய சமயத்தில் சுந்தரபாண்டியன் உள்ளே புகுந்து நேரிடைப் போரில் இறங்கியது - இவையனைத்தையும் தொகுத்துப் பார்த்த பரதபட்டன் பிரமித்தான். "இனி போர் இன்று விளக்கு வைக்கும் நேரத்தில் முடிந்துவிடும்" என்றான் குறிஞ்சியை நோக்கி. கிழக்கு வாயில் போர் உக்கிரமாக நடந்து கொண்டிருந்தது. விளக்கு வைப்பதற்குள் வீரபாண்டியன் கிழக்கு வாயிற்படையின் பின்புறத்தில் தோன்றினான். சுந்தரபாண்டியனுக்கும் வீரபாண்டியனுக்கும் இடையில், வீரரவி தலைமையில் போரிட்ட கிழக்கு வாயிற்படை சிக்கிக் கொண்டது. தெற்கிலிருந்து வந்த பாண்டியப்படை வீரரவியை விலாவில் குத்தியது.

போர் பயங்கரமாக நடந்தது. வீரரவி கையில் வாளும் வேலும் மாறி மாறி ஏந்திப் போரிட்டான். அவன் வாளுக்



கும் வேலுக்கும் பாண்டிய வீரர் பலர் பலியாயினர். இருப்பினும் பாண்டியர் மிக உக்கிரமாகத் தாக்கினர். தவிர பாண்டியர்களின் பயங்கரக் கணையொன்று தெற்கில் சென்றது போல கிழக்கு வாயிலிலிருந்து சிறிது தள்ளி வடக்கில் விழுந்து தீயைக் கிளப்பியது. இந்த இடமும் வெறும் காடு என்பதைப் புரிந்துகொண்ட வீரரவி அது அங்கு எய்யப்பட்டதன் காரணத்தைப் புரிந்து கொண்டான். அந்தத் தீ கிழக்கு வாயிற்படையிலிருந்து வடக்கு வாயிற்படையைக் கத்தரித்து விட்டதென்பதைப் புரிந்து கொண்ட வீரரவி சுந்தரபாண்டியனை நோக்கித் தன் புரவியைச் செலுத்தினான்.

எங்கும் வீரகோஷங்கள், விழுந்த வீரர்களின் மரணக் கூச்சல்கள், காயமடைந்து துடித்த புரவிகளின் கனைப்பு ஓலங்கள், ஆயுதங்கள் உராயும் ஒலிகள், இவற்றால் சிருஷ்டிக்கப்பட்ட பயங்கரச் சூழ்நிலையில் பாண்டியப் படைகளின் ஊடே சுந்தரபாண்டியனை நோக்கிப் புரவியைச் செலுத்தினான் வீரரவி. அவனைக் கண்ட சுந்தரபாண்டியனும் தனது வீரர்களை விலக்கிக்கொண்டு வீரரவியை நோக்கி வந்தான். அவ்விருவரும் மோதுவதற்குள் பின்னாலிருந்து வந்த வீரபாண்டியன் கூவினான், "அண்ணா! விலகுங்கள், இது என் போர்" என்று.

சுந்தரபாண்டியன் வீரரவி இருவருமே வீரபாண்டியனை நோக்கினர். வீர பாண்டியனைச் சுமந்து வந்த அந்தச் சாம்பல் நிறப் புரவி பல வீரர்களைக் காலால் உதைத்துக் கொண்டு அம்புபோல் பாய்ந்து வந்தது. அடுத்த சில நிமிடங்களில் வீரரவியின் வாளும் வீரபாண்டியன்வாளும் மோதி விட்டன. வீரரவி மிக வீரத்துடன் போரிட்டான். அவன் வாள் பலவிதமாகச் சுழன்று. பலமுறைதாக்கியது. தாக்கிய ஒவ்வொரு முறையும் வீரபாண்டியன் கழுத்தை நோக்கி வந்தது. ஒரு முறை கழுத்தை லேசாகக் கீறவும் செய்தது. அந்தக் கீறல் பட்டவுடன் வீரபாண்டியன் கண்கள் கழுகுக் கண்களாயின. உடல் இரும்பாயிற்று. முகம் விகாரப்பட்டது. தனது வாளை அண்ணனை நோக்கி எறிய

அண்ணன் அதைப் பிடித்துக் கொண்டான். அடுத்த விநாடி அவன் இடையிலிருந்த தங்கக் கோடரி கனவேகத்தில் கையில் தெரிந்தது. “சேரமன்னா! இந்தா, இது உனக்குத் தெரியும்” என்று கூறிக் கோடரியைக் கண்ணிமைக்கும் நேரத்தில் வீசிவிட்டான் வீரபாண்டியன். அந்தக் கோடரி சேரன் மார்புக் கவசத்தையும் பிளந்து உள்ளே பாய்ந்து விட வீரரவி புரவியில் தள்ளாடினான் ஒரு விநாடி. பிறகு புரவியில் சாய்ந்தான். சுந்தரபாண்டியன் வெற்றி முரசுகளை முழங்கத் தனது வாளை உயர்த்தி ஆட்டினான். வெற்றி முரசுகள் முழங்கின. அதை உப்பரிகையிலிருந்து கேட்ட பரதபட்டன், “வா குறிஞ்சி,” என்று அவளை அழைத்துக் கொண்டு உப்பரிகையிலிருந்து இறங்கி ஓடினான். அந்தச் சமயத்தில் மேலைக்கடலில் கப்பல்கள் பல எரிந்ததன. அந்த ஜ்வாலை தென்புறக் காட்டுத் தீயுடனும் வடபுறக் காட்டுத் தீயுடனும் சேர்ந்து பரவியே எரிவது போன்ற பிரமையை ஏற்படுத்தியது. அதை யெல்லாம் பார்த்துத் துன்பப் பெருமூச்செறிந்து ஓடினான் பரதபட்டன். கிழக்கு வாயிலில் மெல்லப் போர் அடங்கிக் கொண்டிருந்தது. பந்தங்கள் சுற்றிலும் வீரர்கள் பிடித்திருக்க இடையேயிருந்த வட்டத்துக்குள், எந்த மண்ணில் பிறந்தானோ, எந்த மண்ணை ஆண்டதால் பரலீசன் எனப் பெயர் பெற்றானோ, அதே மண்ணில் மார்பில் காயமுற்று விழுந்து கிடந்தான் வீரரவி உதயமார்த்தாண்டவர்மன்.

## அத்தியாயம் 68

# பிறவிக் குணம்

மார்பில் மரணகாயமுற்று மண்ணில் மல்லாந்து கிடந்த அந்த நேரத்திலும், மன்னனான வீரரவியின் வதனத்தில் மந்தஹாசம் லேசாக மண்டிக் கிடந்தது. வழக்கமாக அவன் முகத்தில் இருக்கும் விஷமச் சாயையும், இதழ்களில் துளிர்க்கும் காமப் புன்முறுவலும் அந்த நேரத்திலும் இருக்கவே செய்தது. அவன் மண்ணில் கிடந்ததும் புரவியிலிருந்து விழுந்த வேகத்தில் அவன் தலைக்கவசம் தெறித்து அப்பால் கிடந்ததுமே அவன் தோல்வியைச் சுட்டிக் காட்டினவே யொழிய அவன் முகத்தில் அத்தகைய குறி ஏதும் தெரியவில்லை. அப்பொழுதும் வாளை இறுகப் பிடித்திருந்த கை போர்ச் சன்னத்தை மன்னன் இழக்க வில்லை என்பதை பலமாக அறிவுறுத்தியது. சுந்தர பாண்டியன் வெற்றி முரசு முழங்கியதால் ஆங்காங்கிருந்த படைப் பிரிவுகள் தொடர்ந்து முரசையும் சங்கங்களையும் ஊதியதன் விளைவாக அந்தக் கிழக்கு வாயிலில் ஏற்பட்ட ஒலிகள்கூட வீரரவியின் வீரத்துக்குச் சான்று கூறுவன போலிருந்தது. அப்படி வீழ்ச்சியிலும் கம்பீரமாயிருந்த வீரரவியைப் பாண்டிய சகோதரர் இருவரும் வெறித்துப் பார்த்துக் கொண்டு நின்றனர். நீண்டநேரம். பிறகு வீரபாண்டியன் சேரமன்னன் பக்கத்தில் மண்டியிட்டு உட்கார்ந்து அவன் மார்பில் புதைந்து கிடந்த தனது பொற்கோடரியைப் பிடுங்கத் தனது கையைக் கொண்டு சென்றான். “நில்!” என்ற அதட்டலான குரல் அவன் கையைத் தேக்கியது. வீரபாண்டியன் உட்கார்ந்த வண்ணமே தனது கண்களை ஏறெடுத்து அதிகாரச் சொல் வந்த திசையை நோக்கினான்.

சுந்ததரபாண்டியன் கண்களும் அந்தத் திசையை நோக்கின. வீரரவியின் தலைப்பக்கத்திலிருந்த வீரர்களை விலக்கிக் கொண்டு பரதபட்டன் உள்ளே நுழைந்தான். அவனைத் தொடர்ந்து அந்த வீரர் வளையத்துள் குறிஞ்சியும் நுழைந்தாள்.

பரதபட்டனின் சின்னஞ்சிறு கண்கள் பந்தங்களின் ஒளியில் நன்றாகத் தீட்டப்பட்ட வேல்களின் நுனிகள்போல் பளிச்சிட்டதைப் பாண்டிய சகோதரர் இருவரும் கண்டனர். நிர்ப்பயமாக எவரையும் லட்சியம் செய்யாத களை முகமெங்கும் விரவிக் கிடக்கப் பரதபட்டன் மெள்ள சேரமன்னனை அணுகி வந்தான். சற்று நேரம் மன்னன் முகத்தைக் கூர்ந்து கவனித்துக் கொண்டு நின்றான். அடுத்து அவன் கண்கள் வீரபாண்டியன் பொற்கோடரிமீது ஒரு விநாடி நிலைத்தது. பிறகு பரதபட்டன் வீரபாண்டியனை நோக்கிக் கூறினான் உணர்ச்சியற்ற குரலில், "எழுந்திரு வீரபாண்டியா! உன் அலுவல் முடிந்து விட்டது!" என்று.

வீரபாண்டியன் அப்பொழுதும் மண்டியிட்ட நிலையிலிருந்து எழுந்திருக்கவில்லை. பரதபட்டன் மீது தனது கழுகுக் கண்களை நாட்டினான். எதிரே நின்றவன் வயது, தோற்றம் இவற்றிலிருந்தே அவன் பரதபட்டன் என்பதைப் புரிந்து கொண்டான். அவன் தனக்கெப்படி உத்தரவிட முடியும் என்ற கோபத்தால், "நீ யார் எனக்கு உத்தரவிட?" என்று சீறினான்.

பரதபட்டன் கண்களில் துளிர்த்தது, கோபமல்ல. பெரும் பரிதாபம் அவனை ஆட்கொண்டது. "வெற்றியில் அடக்கத்தைக் காட்டுபவன்தான் வீரன், பதட்டத்தைக் காட்டுபவன் பதிதன், படுகளத்தில் வீழ்ந்துவிட்ட எதிரியிடம் வீரத்தைக் காட்டும் நிலைக்கோ அவனை அவமானப்படுத்தும் நிலைக்கோ பாண்டியர் வீரம் இழந்து விடவில்லையென்று நினைக்கிறேன்" என்று பரதபட்டன் சற்று எட்ட நின்றிருந்த ஜடாவர்மனை நோக்கினான்.

எழுந்திரு தம்பி! உனக்கு உத்தரவிடுபவர் குருநாதராயிருக்க வேண்டும்," என்றான் சுந்தரபாண்டியன் நிதானமான குரலில்.



வெற்றியிலும் நிதானத்தைக் காட்டிக் கொண்டு அமைதியான சமயத்தில் பார்க்கும் சிங்கத்தின் பார்வையுடன் நின்றுகொண்டிருந்த பாண்டிய மன்னனுக்குத் தலை தாழ்த்திய பரதபட்டன் சேரமன்னனை நோக்கி மண்டியிட்டு உட்கார்ந்தான். வீரரவியின் கண்களை விரித்துப் பார்த்தான். நாசியில் கையை வைத்துப் பார்த்தான். பிறகு மார்பில் இருந்த கோடரியைக் கவனித்தான். வீரரவியின் இரும்புக் கவசத்தைப் பிளந்துகொண்டு கோடரி மார்பில் புதைந்துவிட்டதைக் காண வியப்புற்ற பரதபட்டன் அந்த வியப்புக் கண்களால் வீரபாண்டியனை நோக்கி, "நன்று வீர பாண்டியா! நன்று! பெருவீரன் நீ. இரும்புக் கவசத்தை உடைக்கும் அளவுக்கு வேகத்துடன் கோடரி வீச வல்லவன் தமிழகத்தில் நீ ஒருவன்தானென்று நினைக்கிறேன்" என்று பாராட்டினான். பிறகு பாண்டிய மன்னனை நோக்கி, "மன்னவா! பாண்டிய வீரம் போரை வென்றது. பாண்டியர் தர்மம் இனி என்ன செய்யப் போகின்றது?" என்று வினவினான்.

"குருநாதர் தர்மம் தெரிந்தவர் எனக் கேள்விப் பட்டிருக்கிறேன். ஆகவே அடுத்து ஆக வேண்டியதை நீங்களே நிர்ணயிக்கலாம்" என்றான் சுந்தரப்பாண்டியன்.

"நன்றி மன்னா! உன் அடக்கத்துக்கு நன்றி! உன்னைத் தென்னவன் என்றழைக்கிறார்கள் புலவர்கள். இந்த நிதானமும், மேம்பாடும் உன்னைத் தென்னகம் முழுவதையும் ஆளவைக்கும்" என்று சுந்தரபாண்டியனை நோக்கிக் கூறிய பரதபட்டன் பக்கத்திலிருந்த வீரனை அழைத்து, "சேரர் சேனாதிபதியை அழைத்துவா! ஆங்காங்கு போர் நிறுத்தத்துக்கு ஏற்பாடு செய்" என்றான்.

வீரன் செல்ல அவசியமில்லாது போயிற்று. சேனாதிபதியே வீரர்களை விலக்கிக்கொண்டு வீரர் வளையத்துக்குள் வந்து மண்ணில் கிடந்த மன்னனைக் கண்டு மண்டியிட்டான். பிறகு எழுந்து, "குருநாதரே! போரை நிறுத்த ராமவர்மனை அனுப்பிவிட்டேன். மன்னரை எடுத்துச் செல்ல அரண்மனை அலங்காரம்

ரதம்...'' என்று மேலும் ஏதோ பேசப் போன சேனாதிபதியைத் தடுத்த பரதபட்டன், "அலங்கார ரதம் வேண்டாம். மன்னன் இறக்க இன்னும் ஒரு ஜாமம் பிடிக்கும்" என்றான்.

பேரதிர்ச்சி அங்கிருந்தவரை ஊடுருவிச் சென்றது. "என்ன வீரரவி இறக்கவில்லையா?'' என்ற கேள்வி பாண்டிய சகோதரர் இருவரிடமிருந்தும் ஏககாலத்தில் எழுந்தது.

''இல்லை. இறக்கவில்லை. ஆனால் இறப்பது திண்ணம், மிஞ்சினால் இன்னும் ஒரு ஜாமம் உயிருடன் இருக்கலாம்," என்றான் பரதபட்டன்.

"அப்படியானால் மன்னனை அரண்மனை எடுத்துச் செல்வோம்" என்ற சேனாதிபதி வீரர்களை அழைக்கக் கையைத் தட்ட முயன்றான்.

பரதபட்டன் குரல் கடுமையுடன் ஒலித்தது. "யாரும் தேவையில்லை'' என்று கூறிவிட்டு வீரபாண்டியனை நோக்கிய பரதபட்டன் கேட்டான், "வீரபாண்டியா! மன்னனை உன்னால் அசையாமல் தூக்கமுடியுமா?'' என்று.

'முடியும்' என்பதற்கு அறிகுறியாகத் தலையை ஆட்டினான் வீரபாண்டியன்.

"எடுத்து என் கைகளில் கொடு" என்று உத்தர விட்டான் பரதபட்டன்.

இது மேலும் அதிர்ச்சியைத் தந்தது பாண்டிய சகோதரர்களுக்கு. "குருநாதரே! உங்களால் வீரரவியை..." என்ற சுந்தரபாண்டியனைக் கைதேக்கி நிறுத்திய குருநாதன் "உம்'' என்ற ஒலி மூலமே உத்தரவிட்டான் வீர பாண்டியனுக்கு.

வீரபாண்டியன் வீரரவியின் கழுத்துக்கடியிலும் இடுப் புக்கடியிலும் தனது கைகளைக் கொடுத்துத் தூக்கினான் வீரரவியை. மன்னனைப் பரதபட்டன் தனது கைகளில் தூங்கி அவனை அசையாமல் தாங்கியவண்ணம் அரண் மனையை நோக்கி நடக்கலானான். பரதபட்டன்



போவதைக் கவனித்த சுந்தரபாண்டியன், "தம்பி! நீயும் உடன் செல். போரை முழுவதும் நிறுத்த ஏற்பாடுகளைச் செய்துவிட்டு நான் வருகிறேன்" என்று உத்தரவிட வீர பாண்டியனும் அரண்மனை நோக்கிச் சென்றான்.

மன்னனை அரண்மனையிலிருந்து அவனது அந்தரங்க அறைப் பஞ்சணையில் படுக்க வைத்த பரதபட்டன் தனது மந்திர தண்டத்தைச் சிறையிலிருந்து வரவழைத்து அதன் பிடியைத் திருகிக் கழற்றி உள்ளிருந்த கூரிய கத்தியை எடுத்தான். பிறகு மன்னன் மார்புக் கவசத்தை லேசாகக் கத்தியால் அசைத்துக் கோடரியுடன் சேர்த்தே கழற்றினான். வீரரவியின் மார்பிலிருந்து குபுகுபு வென்று கிளம்பிய ரத்தத்தில் கையிலிருந்த பச்சிலையைக் கசக்கிப் பிழிந்து ஒரு துணியையும் வைத்து அழுத்திக் கட்டினான். பிறகு கசக்கிய அந்தப் பச்சிலையை நாசியிடம் நீட்டினான். வீரரவியின் கண்கள் மெல்லத் திறந்தன. அவன் வாயில் குறிஞ்சியைக் கொண்டு மதுவையும் புகட்டினான் குருநாதன்.

வீரரவியின் கண்கள் அக்கம்பக்கத்தில் நின்ற முகங் களைக் கவனித்தன. அவன் இரு ராணிகளும் நீர் நிரம்பிய விழிகளுடன் அருகில் நின்றிருக்க அவன் காலடியில் வீர பாண்டியன் நின்றிருந்தான். குருநாதன் மஞ்சத்தில் வலப் புறத்தில் அவன் இடைக்கருகே நின்றிருந்தான். அவன் பக்கத்திலிருந்த குறிஞ்சியின் கண்களில் நீர் நிரம்பிக் கிடந்தது. அறையில் மௌனம் நிலவியது. பயங்கர மௌனம் அது. அந்தப் பயங்கரத்தை அறையின் பெரு விளக்குக்கூட அன்று அதிகப்படுத்திக் கொண்டிருந்தது. சுற்றி நின்றோரையும் விளக்கையுங் கூடப் பார்த்த வீரரவி மெள்ள முறுவல் கொண்டான். பிறகு உதடுகளைத் திறந்து "இன்னும் எத்தனை நேரம், குருநாதரே!" என்று மெள்ள வினவினான்.

"ஒரு ஜாமம். அதிலும் சிறிது ஓடிவிட்டது," என்றான் குருநாதன்.

"நான் வீரனா குருநாதரே?" என்ற மற்றொரு கேள்வியைத் தொடுத்தான் வீரரவி சற்றுப் பெருமூச்சு விட்டுக் கொண்டே.

"அதில் சந்தேகமில்லை மன்னா!" என்றான் குருநாதன்.

வீரரவி தனது இரண்டு ராணிகளையும் சுட்டிக் காட்டினான். "வீரர்களின் மகிஷிகள் வீர மரணத்தைக் கண்டு கண்ணீர் வடிப்பதுண்டா?" என்று வினவவும் செய்தான். அவன் இதழ்களில் இகழ்ச்சி மண்டியது. வீர பாண்டியனை நோக்கிக் கேட்டான் பிறகு, "நீ என்ன சொல்கிறாய் வீரபாண்டியா?" என்று.

"உன் வீரத்துக்கு உன் மார்பிலிருந்து எடுக்கப்பட்ட என் கோடரி அத்தாட்சி சேரமன்னா! ரணகளத்தில் போராடி எதிரி கையால் வீழ்கிறவன் வீரனாயிருக்காமல் வேறு எப்படியிருக்க முடியும்?" என்று வினவினான் வீர பாண்டியன் சற்றே உணர்ச்சி தொனித்த குரலில்.

வீரரவியின் முகத்தில் சாந்தி நிலவியது. அத்துடன் மீண்டும் அந்தப் பழைய விஷமப் புன்முறுவல் உதடுகளில் துளிர்த்தது. "வீரபாண்டியா! இந்தப் போர் இத்துடன் நிற்காது. போசளத்திலும், சிங்களத்திலும் தொடரும். நானில்லாவிட்டாலும் போர் இருக்கும்," என்றான் தனது ஜன்ம வைரியை நோக்கி.

வீரபாண்டியன் பதிலேதும் சொல்லவில்லை. அவனை அனுதாபத்துடன் நோக்கினான். அந்த அனுதாபம் வீரரவியின் முகத்தில் சற்றுக் கோபத்தைப் படர விட்டது. "வீரபாண்டியா! கொற்கையில் தொடங்கிய கதை பரலியில் முடியவில்லை. எந்த முத்தைக் கைப்பற்ற நீ கொற்கை வந்தாயோ, அந்த முத்து உன் கைக்கெட்டாத தூரத்திலிருக்கிறது. எந்த முத்துக்குமரிக்காக நீ இந்தப் பரலியைக் கொளுத்தினாயோ அந்த முத்துக்குமரியையும் நீ திரும்பப் பெறமுடியாது. போரை வென்றாய் வீர பாண்டியா! போரின் பலன் உனக்குக் கிட்டாது." இதைச்



சிரமப்பட்டுச் சிரமப்பட்டுச் சொன்ன வீரரவியின் கண்கள் திடீரென அறையின் ஒரு மூலையில் நிலைத்தன. அவற்றில் வியப்புப் படர்ந்தன. "நீ! நீ!" என்ற சொற்கள் அவன் வாயிலிருந்து எழுந்தன. அவன் சொற்களைத் தொடர்ந்து அறைமூலையிலிருந்த உருவம் அவனை நோக்கி நகர்ந்தது. "நான் இறந்து விட்டேனா? இது கனவா?" என்றான் வீரரவி.

"நீ இறக்கவில்லை மன்னா! இது கனவும் அல்ல" என்று கூறிக்கொண்டே இந்திரபானு மன்னனை அணுகி வந்தான். அவன் முகத்தைக் கண்ட வீரரவியின் கண்கள் மட்டுமல்ல. குறிஞ்சியின் கண்களிலும் வியப்பு மிதமிஞ்சித் தெரிந்தது.

இந்திரபானுவின் முகத்தில் அந்த விபரீதத் தழும்புகளைக் காணோம். பயங்கர விகாரத்தைக் காணோம். சுட்ட புண்ணின் குழிகளைக் காணோம். அவன் முகம் பழைய சுந்தரமுகமாயிருந்தது. கண்கள் விஷமச் சிரிப்பைக் கக்கின. "குருநாதர்! ஏமாற்றி விட்டார்... நானே கடைசியில் பார்த்தேனே" என்று வீரரவி தட்டுத் தடுமாறிப் பேசினான்.

குருநாதன் சொன்னான்: "சேரமன்னா! உன்னை நான் ஏமாற்றவில்லை. கடைசியாக நீ பார்த்தது அவன் முகம் பழைய நிலைக்குத் திரும்புமுன்பிருந்த நிலை. பச்சிலைச் சாறும் தன்வந்திரிக் குழம்பும் முகத்தில் ஊறி விட்டதாலிருந்த செயற்கைத் தோற்றம். ஒரு நாள் பொறுத்து உண்மையைப் புரிந்து கொண்டிருப்பாய். உன் கண்களை மறைத்தது ஒன்று அவசரம், இன்னொன்று உன் தயாள குணம்," என்று. "நீ இந்திரபானுவைப் பார்த்ததும் 'இவனை விடுதலை செய்து விடுங்கள்' என்றாய். அவன் பட்டுக் கவசம் போட்டுக் கொண்டது முகவிகாரத்தை மறைக்க என்று நினைத்தாய். இரண்டும் தவறு மன்னா. நீ அவனைச் சுதந்திரமாக உலாவவிட்டதும் தவறு. பட்டுக் கவசத்தை நீக்கி அவன் நிலை காணாததும் தவறு. மூன்றாவது தவறும் ஒன்று உண்டு. இவனை முத்துக் குமரியுடன் சிங்களத்துக்கு அனுப்பியதும் தவறு" என்றும் கூறினான் குருநாதன்.

"மூன்றாவது தவறல்ல குருநாதரே!" என்றான் இந்திர பானு.

"ஏன்?" என்று கேட்டான் குருநாதன்.

"நான் சிங்களம் செல்லவில்லை."

"அப்படியானால் நீ சென்ற மரக்கலம்..."

"என்னுடையது."

"உன்னுடையதா?"

"பல நாட்களாக அது நகரத்தின் பின்புறத்தில் நின்றிருந்தது. நகரத்துள்ளும் ஒற்றர் கூட்டம் இருக்கிறதல்லவா...?"

"ஆம். ஆம். இருந்தது."

"அதை உபயோகித்து மரக்கலத்தைக் கைப்பற்றினேன். மாலுமிகள் அடித்தளச் சிறையிலிருந்தார்கள். இருப்பினும் அந்த மரக்கலத்தின் தலைவனை மட்டும் வைத்துக் கொண்டேன் எனது உதவிக்கு. மன்னன் எங்களை அந்த மரக்கலத்துக்கு அனுப்புவதற்கு இரண்டு நாட்களுக்கு முன்பே அது என் கைவசமிருந்தது. அதை..."

"அதை?"

"சிங்களம் நோக்கி ஒரு நாள் செலுத்தினேன். பிறகு தலைநகரின் கண்ணுக்குப் படாமல் தூரத்தில் நிறுத்தினேன். முரசுகள் காதில் விழும் தூரத்தில் நானிருந்தேன்."

இந்திரபானுவின் சொற்கள் சுரீல்சுரீலென வீரரவியின் இதயத்தில் தைத்தன. "முத்துக்குமரியின் முத்துப்பெட்டிகளெல்லாம் என்னிடம் பத்திரமாயிருக்கின்றன" என்ற இந்திரபானுவின் சொற்களைக் கேட்டு, "துரோகி" என்ற பேரொலி கிளப்பினான். வீரரவி தனது சக்தியை மீறி.

"இப்படி என்னை அழைப்பது எல்லோருக்கும் வழக்கமாகி விட்டது. ஒருமுறை முத்துக்குமரிகூட இப்படித்தான் அழைத்தாள் என்னை, கொட்டுந்தளத்தில் உங்களிடம் சேர்த்தபோது" என்றான் இந்திரபானு வீரரவியை நோக்கி.



அதைக் கேட்ட பின்பு முதன் முதலாக வீரரவியின் கண்களில் தோல்விக் குறி தெரிந்தது. "இப்பொழுது தோற்றுவிட்டேன் குருநாதரே!" என்றான் அவன் சுவாசம் பெரிதாக வாங்க.

பரதபட்டன் பதில் கூறவில்லை. மன்னன் நாடியைப் பிடித்துப் பார்த்துவிட்டு மற்றவர்களை அமைதியுடன் இருக்கும்படி கையமர்த்தினான். வீரரவி வீரமரணத்தை எய்திக் கொண்டிருந்தான் மெள்ள மெள்ள. அந்தச் சமயத்தில் அவன் கடையிதழ்களில் காமமும் விஷமமும் கலந்த சாயை விரிந்து கிடந்தது. "பிறவிக்குணம் யாரையும் விடுவதில்லை கடைசிவரை," என்று முணுமுணுத்தான் பரதபட்டன்.

## அத்தியாயம் 69

# மூன்றாவது முத்திரை

பரலியின் வீழ்ச்சியோடு கூற்றத்தின்வாய் வீழ்ந்த வீர ரவியின் கொற்றத்தை ஏற்கவோ, பெற்ற வெற்றியைக் கொண்டாடவோ காத்திராமலே பாண்டியநாடு சென்றான் முதலாம் ஜடாவர்மன் சுந்தரபாண்டியன். வீரரவி வீர மரணமெய்திய மறுநாளே சேரநாட்டு மந்திரிப் பிரதானி களைக் கொலு மண்டபத்திற்கு வரவழைத்த பாண்டிய மன்னன் வீரரவியின் துக்கத்தை முறைப்படி ஒரு வாரம் கொண்டாடும்படி உத்தரவிட்டான். "பாண்டிய நாட்டு இளவரசன் இன்னுமிரண்டு நாள் இங்கிருந்து நகரையும் சுற்றுப்புறத்தையும் கட்டுதிட்டத்துக்குக் கொண்டு வருவான். பிறகு இந்நகரின் நிர்வாகம் இளவரசனின் உதவித் தலைவனான இந்திரபானுவிடம் ஒப்படைக்கப் படும். நீங்களெல்லோரும் சேர நாட்டில் இனிமேலாவது அமைதி நிலவ ஒத்துழைப்பீர்களென்று நினைக்கிறேன்" என்று அறிவித்தான். அத்துடன்கூறினான், "சேரநாட்டு மக்களிடம் எனக்கு எந்தவித விரோதமுமில்லை. சேரமன்னான வீரரவியின் மரணமோ பரலியின் வீழ்ச்சியோ எனக்கு மகிழ்ச்சியளிக்கவில்லை. உள்ள மூவேந்தரும் பரஸ்பரம் வெட்டி மடிவதில் பொருளில்லை. இருப்பினும் காலகதியை, வரலாற்று வெள்ளத்தைத் தடை செய்யத் தனிமனிதனாலோ தனி அரசனாலோ முடிவ தில்லை. அத்தகைய பெருவெள்ளத்தின் நட்டநடுவில், பிரவாகத்தின் பெருவேகத்தினிடையில் இன்று தமிழர்கள் இருக்கிறார்கள். அந்த வெள்ளத்தில் நீந்திக் கரையேற வெளிச் சக்திகளின் விபரீதத்திலிருந்து தமிழ்ப் பெரு மக்களை, அவர்கள் பொருட் செல்வத்தை, அருட்



செல்வத்தை கலைச்செல்வத்தை ஆகிய அனைத்தையும் காக்க வேண்டியிருக்கிறது. அதற்காகப் பாண்டியநாடு எழுந்திருக்கிறது. ஒரு சமயம் இந்தப் பணி சேரரிடத்தில் இருந்தது. பிறகு சோழரிடம் மாறியது. இப்பொழுது பாண்டிய நாட்டிடம் மாறியிருக்கிறது. பாரதம் இதுவரை காணாத தமிழ்ப் பேரரசைப் பாண்டியநாடு நிறுவும். அதற்கு நீங்கள் உதவுவீர்களென்று எதிர்பார்க்கிறேன். இது சோழநாடு, இது பாண்டியநாடு, இது சேரநாடு என்பதை மறவுங்கள். தமிழினத்தின் சக்திப் பெருக்கென்பது பொதுப்பட்ட ஒன்று என்று நினையுங்கள். நம்து சாம்ராஜ்யம் வெகு விரைவில் விரிவுதை நீங்கள் பார்ப்பீர்கள்," என்று மிகக் கம்பீரமான குரலில் அறிவித்தான் ஜடாவர்மன் அன்று. அடுத்த மூன்று ஜாமங்களுக்கெல்லாம் புறப்பட்டான் மதுரை நோக்கி.

மன்னனாக சேரநாட்டின் முன்பு தோன்றிய ஜடா வர்மன் சக்கரவர்த்தியாகத் திரும்பினான் கூடல் மாநகர் நோக்கி. வெற்றித் தாரைகள் முழங்க மீன் கொடி யொன்றைப் புரவி வீரனொருவன் முன்னால் தாங்கிச் செல்ல தனது படையின் ஒரு பகுதியுடன் புறப்பட்டான் சங்கம் வளர்த்த அந்தத் தங்க நகர் நோக்கி. மன்னன் புறப்படுவதற்கு முன்பு அவனைத் தனி அறையில் சந்தித்த வீரபாண்டியன் கேட்டான், "முத்துக்குமரிக்குத்தான் இனி அலுவல் இல்லையே. அழைத்துச் செல்கிறீர்களா? அவளை மதுரைக்கு?" என்று.

ஜடாவர்மன் கண்கள் "ஏன் அலுவலில்லை?" என்று கேட்டு இந்திரபானுவை நோக்கிச் சற்று தள்ளி நின்றிருந்த முத்துக்குமரியையும் நோக்கின.

"யாரை வேவு பார்க்க வேண்டும் அவள்?" என்றான் வீரபாண்டியன் வேண்டுமென்றே.

"இந்திரபானுவை வேவு பார்க்கட்டும். அவனும் வெளிநாட்டவன்தானே. கூடியவரையில் அவனைக் கண் காணிக்கச் சொல்," என்ற ஜடாவர்மன் சிரித்தான் பெரிதாக.

## அத்தியாயம் 69

# மூன்றாவது முத்திரை

பரலியின் வீழ்ச்சியோடு கூற்றத்தின்வாய் வீழ்ந்த வீரரவியின் கொற்றத்தை ஏற்கவோ, பெற்ற வெற்றியைக் கொண்டாடவோ காத்திராமலே பாண்டியநாடு சென்றான் முதலாம் ஜடாவர்மன் சுந்தரபாண்டியன். வீரரவி வீர மரணமெய்திய மறுநாளே சேரநாட்டு மந்திரிப் பிரதானிகளைக் கொலு மண்டபத்திற்கு வரவழைத்த பாண்டிய மன்னன் வீரரவியின் துக்கத்தை முறைப்படி ஒரு வாரம் கொண்டாடும்படி உத்தரவிட்டான். "பாண்டிய நாட்டு இளவரசன் இன்னுமிரண்டு நாள் இங்கிருந்து நகரையும் சுற்றுப்புறத்தையும் கட்டுதிட்டத்துக்குக் கொண்டு வருவான். பிறகு இந்நகரின் நிர்வாகம் இளவரசனின் உதவித் தலைவனான இந்திரபானுவிடம் ஒப்படைக்கப் படும். நீங்களெல்லோரும் சேர நாட்டில் இனிமேலாவது அமைதி நிலவ ஒத்துழைப்பீர்களென்று நினைக்கிறேன்" என்று அறிவித்தான். அத்துடன்கூறினான், "சேரநாட்டு மக்களிடம் எனக்கு எந்தவித விரோதமுமில்லை. சேரமன்னான வீரரவியின் மரணமோ பரலியின் வீழ்ச்சியோ எனக்கு மகிழ்ச்சியளிக்கவில்லை. உள்ள மூவேந்தரும் பரஸ்பரம் வெட்டி மடிவதில் பொருளில்லை. இருப்பினும் காலகதியை, வரலாற்று வெள்ளத்தைத் தடை செய்யத் தனிமனிதனாலோ தனி அரசனாலோ முடிவதில்லை. அத்தகைய பெருவெள்ளத்தின் நட்டநடுவில், பிரவாகத்தின் பெருவேகத்தினிடையில் இன்று தமிழர்கள் இருக்கிறார்கள். அந்த வெள்ளத்தில் நீந்திக் கரையேற வெளிச் சக்திகளின் விபரீதத்திலிருந்து தமிழ்ப் பெருமக்களை, அவர்கள் பொருட் செல்வத்தை, அருட்



செல்வத்தை கலைச்செல்வத்தை ஆகிய அனைத்தையும் காக்க வேண்டியிருக்கிறது. அதற்காகப் பாண்டியநாடு எழுந்திருக்கிறது. ஒரு சமயம் இந்தப் பணி சேரரிடத்தில் இருந்தது. பிறகு சோழரிடம் மாறியது. இப்பொழுது பாண்டிய நாட்டிடம் மாறியிருக்கிறது. பாரதம் இதுவரை காணாத தமிழ்ப் பேரரசைப் பாண்டியநாடு நிறுவும். அதற்கு நீங்கள் உதவுவீர்களென்று எதிர்பார்க்கிறேன். இது சோழநாடு, இது பாண்டியநாடு, இது சேரநாடு என்பதை மறவுங்கள். தமிழினத்தின் சக்திப் பெருக்கென்பது பொதுப்பட்ட ஒன்று என்று நினையுங்கள். நமது சாம்ராஜ்யம் வெகு விரைவில் விரிவுதை நீங்கள் பார்ப்பீர்கள்," என்று மிகக் கம்பீரமான குரலில் அறிவித்தான் ஜடாவர்மன் அன்று. அடுத்த மூன்று ஜாமங்களுக்கெல்லாம் புறப்பட்டான் மதுரை நோக்கி.

மன்னனாக சேரநாட்டின் முன்பு தோன்றிய ஜடாவர்மன் சக்கரவர்த்தியாகத் திரும்பினான் கூடல் மாநகர் நோக்கி. வெற்றித் தாரைகள் முழங்க மீன் கொடியொன்றைப் புரவி வீரனொருவன் முன்னால் தாங்கிச் செல்ல தனது படையின் ஒரு பகுதியுடன் புறப்பட்டான் சங்கம் வளர்த்த அந்தத் தங்க நகர் நோக்கி. மன்னன் புறப்படுவதற்கு முன்பு அவனைத் தனி அறையில் சந்தித்த வீரபாண்டியன் கேட்டான், "முத்துக்குமரிக்குத்தான் இனி அலுவல் இல்லையே. அழைத்துச் செல்கிறீர்களா? அவளை மதுரைக்கு?" என்று.

ஜடாவர்மன் கண்கள் "ஏன் அலுவலில்லை?" என்று கேட்டு இந்திரபானுவை நோக்கிச் சற்று தள்ளி நின்றிருந்த முத்துக்குமரியையும் நோக்கின.

"யாரை வேவு பார்க்க வேண்டும் அவள்?" என்றான் வீரபாண்டியன் வேண்டுமென்றே.

"இந்திரபானுவை வேவு பார்க்கட்டும். அவனும் வெளிநாட்டவன்தானே. கூடியவரையில் அவனைக் கண்காணிக்கச் சொல்," என்ற ஜடாவர்மன் சிரித்தான் பெரிதாக.

"அவர்கள் திருமணத்தை நடத்திவிடட்டுமா?" என்று வினவினான் வீரபாண்டியன்.

"இப்பொழுது பாண்டியகுலத்தில் சாதாரணத் திருமணம் நின்றுவிட்டது, காந்தருவம் வலுத்து வருகிறது. யாருக்கு எப்படி எங்கே திருணம் நடக்கிறது என்பது தெரிவதில்லை. பெரியவர்கள் காட்டும் பாதையும் ஒழுங்காயில்லை" என்று கூறித் தம்பியை நோக்கிப் பாண்டியன் ஜடாவர்மன் மிகப் பெரிதாக நகைத்தான். அதனால் சங்கடப்பட்ட வீரபாண்டியன், இந்திரபானு முத்துக்குமரி மூவரிடமும் விடைபெற்றுக் கொண்டு தலைநகர் நோக்கிக் கிளம்பிச் சென்றான்.

சேர மன்னனின் வீர மரணத்தையொட்டிய துக்க நாட்கள் சென்றதும், இந்திரபானுவுக்கும் முத்துக்குமரிக்கும் பரதபட்டனைக் கொண்டே திருமணம் நடத்தி சேரர் தலை நகரை இந்திரபானுவிடம் ஒப்படைத்துக் கிளம்பினான் வீர பாண்டியன், பரலி விட்டு. இந்திரபானுவுக்குத் துணையாக சுந்தர பாண்டியன் அழைத்துச் சென்றதுபோக மீதியிருந்த படையையும், உபயோகிக்காத தனது பயங்கர ஆயுதங்கள் எட்டையும் விட்டுச் சென்றான்.

இந்திரபானு நகரத்தை வெகு திறமையுடன் நிர்வகித் தான். பழுதுபட்ட கடற்படையையும் பழுதுபார்க்க ஏற்பாடு செய்தான். நகரத்தில் மீண்டும் கலை செழிக்கவும் மக்கள் மகிழவும் திட்டங்களை வகுத்தான். இந்திர பானுவின் திருமணம் முடிந்த அன்றே தனது குடிலையும், அதிலிருந்த கிருஷ்ண சர்ப்பத்தையும் நோக்கிச் சென்றுவிட்ட . பரதபட்டனை அடிக்கடி நாடி, அவன் யோசனையுடன் பல காரியங்களைச் செய்து மக்கள் துயர் துடைத்தான். பரதபட்டனிடம் நேரிடையாகப் போக முடியாதபோது கூத்தனையும் சாத்தனையும் அனுப்பி னான்.

இத்தனையும் அவன் முத்துக்குமரி சிறையிருந்த அந்தப்புரக் கடைப்பகுதி அறையிலிருந்துகொண்டே செய்தான். அதை அவன் அரசியல் அறையாகவும் நிறுவிக் கொண்ட அன்றிரவு வெகு கோபத்துடன் கேட்டாள் முத்துக்குமரி, "ஏன் அரசியலுக்கு அந்தப்புரந்தான் இடமா?" என்று.



"ஆம்" என்றான் இந்திரபானு.

"ஏன்" என்று வினவினாள் முத்துக்குமரி.

"இது சேரநாடு என்பது ஒரு காரணம்..."

"அதனால்..."

"இங்கு பெண்வழி அரசுதான் உண்டு."

"உம், உம்... இன்னொரு காரணம்."

"நான் மணந்திருப்பது ஒரு வேவுகாரியை. வேவுத் தொழிலும் அரசியல் சம்பந்தப்பட்டது..." என்று கூறிய இந்திரபானு அவளை ஏறெடுத்துநோக்கினான். அன்று அவள் திருமண நாள். இரவு ஏறிவிட்ட சமயம் அது. அப்பொழுது தான் கஷ்டமளித்த பட்டாடைகளையும் பெரும் ஆபரணங்களையும் துறந்து அவன் முன் நின்றிருந்தாள்.

அந்தச் சமயத்திலும் அவள் எழில் அவன் கண்களைப் பறித்தது. அவள் கமலக் கண்களில் தெரிந்த கோபம்கூட அவளுக்கு இணையிலா அழகை அளித்தி ருந்தது. "நான் வேவு காரியானால் என்னை ஏன் மணந்தீர்கள்?" என்று வினவினாள் பாண்டியன் மகள்.

"பாண்டிய மன்னர் உத்தரவு. கீழ்ப்படிய வேண்டியது உபதலைவன் கடமை," என்றான் இந்திரபானு.

"அதை முன்னிட்டுத்தான் அன்று அதோ அந்த உள் ளறையில் என்னைத் தொட்டுத் தூக்கினீர்களாக்கும்."

"ஆம்."

"இப்பொழுதும் அம்மாதிரி கட்டளை இருக் கிறதோ?"

"இருக்கிறது," என்று கூறிக்கொண்ட அவளைத் தனது கையில் அலட்சியமாகத் தூக்கிக்கொண்டு உள்ளறைத் திரையை நோக்கிச் சென்றான் இந்திரபானு.

"எங்கே கொண்டு போகிறீர்கள்?" என்று பொய்த் திமிறல் திமிறினாள் அவள்.

"அலுவலிருப்பதாகப் பாண்டிய மன்னர் சொல்லவில்லை?" என்று கேட்டு நகைத்தான் இந்திரபானு. அவன் கண்கள் வழக்கமான விஷமத்தைவிட அதிகச் சிரிப்பைக் கொட்டின. அடுத்த விநாடி உள்ளறைத் திரை விலகி மூடியது.

* * *

இது நடந்த மூன்றாம் நாள் வீரபாண்டியன் தன்னந்தனியாகக் கொற்கையின் பொருநையாற்றங்கரையில் நின்று அக்கரைக் காட்டையும் அதைத் தாண்டித் தெரிந்த கோட்டையையும் ஏறெடுத்து நோக்கினான். அன்றும் முழு மதி வான்வெளியில் தவழ்ந்து கொண்டிருந்தான். ஆனால் இரவு அதிகம் ஓடிவிட்ட நேரமல்ல அது. இருப்பினும் அவனுக்குப் பின்னிருந்த முத்தங்காடியின் இரைச்சல் பலமாயிருந்தது. ஏதோ புதுமரக்கலங்கள் வந்ததன் காரணமாக வியாபாரக் கூட்டமும் காவலர் எச்சரிக்கையும் மிதமிஞ்சி இருந்தன. வீரபாண்டியன் எண்ணங்கள் இரண்டு மாதங்களுக்கு முன்பு ஓடின. அதனால் அவன் முகத்தில் மகிழ்ச்சி ரேகை மிதமிஞ்சிப் படர்ந்தது.

வெற்றி சூடி வந்த அவனை வரவேற்க யாரும் வரவில்லை. எந்த அறிவிப்புமில்லாமல் யாரும் தொடராமலே வந்தான் அவன் கொற்கைக்கு. ஆகவே வெற்றிக் கொண்டாட்டமோ களிவெறியோ ஏதுமில்லை கொற்கையில். கொண்டாட்டங்கள் அடங்கிவிட்ட காலம் அது. ஆகவே தன்னிந்தனியே தனது சாம்பல் நிறப் புரவியின் கடிவாளத்தைக் கையில் பிடித்த வண்ணம் பொருநைக் கரையில் இறங்கி அக்கரை நோக்கிச் சென்றான். அன்று அவன் ஆற்றைத் தாண்டுவதில்தான் எத்தனை மாறுபாடு! அவனைக் கண்டு அஞ்சியோடிய அஞ்சுகமில்லை, காட்டிலே கொலைகாரனில்லை, காட்டையடுத்த மேட்டிலே குறுவாள் பட்டு அவன் கிடக்கவும் இல்லையே!



எந்த இடைஞ்சலும் தேக்கமும் இல்லாத பயணம் அது. ஆனால் இளநங்கையைக் காணும் ஏக்கத்துடன் அவன் கோட்டைக்குச் சென்றான். அவன் வந்ததும் பெரும் பரபரப்பு ஏற்பட்டது கோட்டையில். வாணாதித்தர் ஓடிவந்து மருமகனை வரவேற்றார். இளநங்கை மட்டும் அவனை வரவேற்கவில்லை. அவன் உணவையும் தோழியே பரிமாறினாள். கடைசியில் பள்ளியறைக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்த பின்புதான் அவன் அவளைக் காண முடிந்தது.

அவள் தனது பஞ்சணையில் சாய்ந்திருந்தாள். வீரபாண்டியன் கதவைத் தாளிட்டு அவளருகில் பஞ்சணையில் உட்கார்ந்தபோதும் அவள் பேசவில்லை. அவள் கையொன்றை எடுத்து அவன் தன் கையுடன் இணைத்துக் கொண்டபோதும் வாளாவிருந்தாள் வாணாதித்தன் மகள். இன்னொரு கையால் முகத்தைத் திருப்பி, "கோபமா இளநங்கை?" என்று வினவினான் வீரபாண்டியன்.

அதற்கும் அவள் பதில் சொல்லவில்லை. அவள் விழிகளில் கோபம் பொங்கிக் கொண்டிருந்தது. "என்னை எதுவும் கேட்கவேண்டாம்," என்றாள் சிறிது நேரத்திற்குப் பிறகு.

"வேறு யாரைக் கேட்பது?"

"குறிஞ்சியைக் கேளுங்கள்."

"அவள் இப்பொழுது முத்துக்குமரியின் பணிமகளாயிருக்கிறாளே."

"உங்களுக்கு மீண்டும் பணிமகளாக்கிக்கொள்ளலாமே. அவள் சொல்லைக் கேட்டுத்தானே என்னை இங்கு அனுப்பி விட்டீர்கள்?"

அன்று காட்டில் பல்லக்கைத் துறந்து புரவிமீது தாவி ஏறி வந்த இளநங்கையின் கோபம் தீரவில்லையென்பதைப் புரிந்துகொண்ட வீரபாண்டியன் தனது இரு கைகளையும் அவள் இடைக்குக் கீழே கொடுத்து அவளைச் சற்றே தூக்கினான். தூக்கிய வேகத்தில் உடலுடன் உடல் தாக்கிய

நேரத்தில் சொன்னான்: "இளநங்கை, உன் நிலை அப்படியிருந்தது. அதற்காக அவளைக் கோபித்து என்ன பயன்?" என்று.

"என்ன நிலை?" கோபம் தணியாமலே கேட்டாள் இளநங்கை.

"கொற்கை முத்திரையை நீயே தாங்கும் நிலை," என்ற வீரபாண்டியன் கரங்கள் அவளை இறுக்கின.

அந்த நிலையில் அவள் கோபம் சற்றுத் தணிந்தது. அவன் உணர்ச்சி வேகம் அவளை ஆட்கொண்டது. "இதோ இருக்கிறது உங்கள் முத்திரை" என்று விரலில் அணிந்திருந்த ராஜமுத்திரை மோதிரத்தைக் காட்டினாள் இளநங்கை.

வீரபாண்டியன் ஒரு கையை விடுவித்துக்கொண்டு, "இது ஒன்று போதுமா?" அந்த முத்திரைமோதிரத்தைப் பற்றி இரண்டு விரல்களால் நெருடினான்.

"ஏன் இன்னொரு முத்திரையும் கொடுத்திருக்கிறீர்களே?" என்ற அவள் தனது கண்களை அவன் கண்களுடன் உறவாட விட்டாள். அவள் முகத்தில் கோபம் மறைந்து சற்றே வெட்கத்தின் சாயை படர்ந்தது.

"இன்னொரு முத்திரையா?" என்று ஏதும் அறியாதது போல் வினவினான் வீரபாண்டியன்.

"ஆம், இதோ" என்று கூறிய இளநங்கை தன் கை மோதிரத்தைப் பிடித்திருந்த அவன் கையை எடுத்துக் கொண்டு போய் தனது வயிற்றில் வைத்தாள்.

வீரபாண்டியன் கை அந்த இடத்தில் நீண்டநேரம் நிலைத்துக் கிடந்தது. வாய் சொற்களை இழந்து கிடந்தது. வீரனான அவன் கண்களில் பெருமிதமும் காதலும் பொங்கி வழிந்தன. அந்தப் புருஷன் சங்கடத்தைக் கண்ட இளநங்கையின் இதழ்கள் இளநகை கொண்டன. 'வேகத்தில் விளைவு தெரிவதில்லை புருஷர்களுக்கு. தெரிந்த பின் தைரியமும் இருப்பதில்லை,' என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்டாள்.



வீரபாண்டியன் இதயத்தில் உணர்ச்சிகள் பொங்கி வழிந்தன. அந்த உணர்ச்சியில் அவள் நிலையைக்கூட மறந்தான் அவன். பரவியின் எல்லைக் காட்டுப் பர்ணசாலைக்கும் அந்த இரவுக்கும் இடை புகுந்த காலத் தடையின் மடை நீங்கிவிடவே வெள்ளமெனப் பாய்ந்தன அவன் உணர்ச்சிகள். அந்த உணர்ச்சி வேகத்தில் அசைந்தன அவன் உதடுகள். கண்கள் எதிரே எழுந்த அழகு உச்சிகளில் நிலைத்தன. "மூன்றாவது முத்திரை வேண்டுமா இளநங்கை?" என்று கேட்டன அவன் உதடுகள் மெள்ள.

"மூன்றாவது முத்திரையா?" வியப்பு அவள் கேள்வியில் ஒலித்தது.

"ஆம்," என்று கூறிய அவன் இதழ்கள் அந்த முத்திரையைப் பொறிக்க அவள் இதழ்களை நோக்கிச் சென்றன.

**முற்றும்**